உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

திருவாரூர்

வைத்தியநாததேசிகர்

இயற்றிய

# இலக்கணவிளக்கம்

## மூலமும் உரையும்.

இஃது

யாழ்ப்பாணம்

சி. வை. தாமோதரம்பிள்ளையால்

பலதேசப்பிரதிரூபங்களைக்கொண்டு பரிசோதித்து

மதுரைஜில்லா போடிநாயக்கனூர் ஜமீன்தார்

ம-ள-ள-ஸ்ரீ

திருமலைபோடயகாமராசயபாண்டிய

நாயக்கர் துரையவர்களின்

காருண்யோபகாரதிரவியசகாயத்தினால்

சென்னபட்டணம்:

வித்தியாநுபாலனயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

விரோதிஸு புரட்டாதிமீ.

இதன்விலை ரூபா-ரு.

## ஆசிரியர் சிறப்பு.

"ஐம்பதின்மர்சங்கத்தாராகிவிடாரோநாற்பத்
தொன்பதின்மரென்றேயுரைப்பாரோ— இம்பர்புகழ்
வன்மீகநாதனருள்வைத்தியநாதன்புடவி
தன்மீதங்நாட்சரித்தக்கால்."

கவிவீரராகவமுதலியார்.

உ

கணபதி துணை.

# இலக்கணவிளக்கப்பதிப்புரை.



திங்க டங்கிய செஞ்சடை முடியினன் றிருத்தாட்
பங்க யங்கயி லாயநா தனைமுனிப் பழிச்சிச்
சங்க மங்களத் தமிழ்முத்துக் குமாரன்றண் மலர்ப்பா
தங்கள் வங்கமாத் தமிழ்க்கட லிடைப்படி குவனே.

முத்தமிழ் வாணர்தம்
வித்தக வடியிணை
சித்தமெய் மொழிகளில்
வைத்து வாழ்குவனே.

பூமிசைத் தென்மலைப் புங்கவன் புகன்ற-சீர்மிகும் அகத்தியம் பார்மிசை இறந்துபட்டதாதலின், அன்னோன் மாணுக்கர் பன்னிருவருட் தலைமைபெற்ற திரணதூமாக்கினியென்னும் இயற்பெயரினையுடைய தொல்காப்பியமகாரிஷி அவ்வகத்தியகத்தின்வழித் தந்தருளிய தொல்காப்பியமே மதுரைக்கடைச்சங்கத்தார் காலந்தொட்டு ஐயாயிரவருஷமாகத் தமிழுக்கு ஆதாரமான பேரிலக்கணமாயுள்ளது. அது மிக ஆழியதோர் கடலனையது. ஆதலாற் கற்றுவல்லோர்க்கன்றி மற்றையோர் அறிதற்கு அரியதாயிற்று. அதுகொண்டு சிறுவர்முதலியோர் இலக்கணம்பயிறற்கு உபயோகமாகப் பவணந்தியாதியோர் பலரும் நன்னூல் சின்னூல் காரிகையென்றின்னன சிற்றிலக்கணநூல்கள் பல செய்வாராயினர். அவை பெரும்பாலுந் தமிழ் நன்கறிதற்கு இன்றியமையாத ஐந்து இலக்கணங்களையும் முற்றக்கூறுது ஒன்றுென்று ஒன்றிரண்டு- மாத்திரம் உணர்த்தாநின்றன. சிறுபான்மை வீரசோழியம் போன்றன ஐந்தும் எடுத்துக்கூறினவேனும் மிகச்சுருங்கியவாய்க் கற்போர்க்கு வேண்டிய அளவு

இலக்கணஞானங் கொடாமையிற் பெரும்பயன் தருவனவல்லவாயின. இவ்விருதிறத்தனவும் போலாது பஞ்சலக்ஷணமும் மாணுக்கர்க்குப் போதுமான அளவு செறிந்தது இலக்கணவிளக்கமொன்றே. இதன்மகிமை இதற்குச் சான்றோரால் வழங்கிவருங் "குட்டித்தொல்காப்பியம்" என்னும் பெயரானே இனிது விளங்கும்.

இந்நூல் மூலமும் உரையுமாகச் செய்தவர், மன்னார்குடித் தாலூகாவிலுள்ள ஆதித்தேச்சரத்திற்கு அணித்தான திருக்களரில் இப்பொழுது அதிவயோதிபராயிருக்கின்ற ஸ்ரீமத் சூரியமூர்த்திதேசிகரைத் தமக்கு ஆறுவது சந்ததியாக உடையவரும், இற்றைக்கு உ௱ வருஷத்தின்முன் சத்தவிடங்கத் திவ்வியக்ஷேத்திரங்களில் முதன்மையுடைத்தாகிய திருவாரூரின்கண், அவ்வூர் அபிஷேகத்தர் மரபிற் சிறப்புற்றோங்கிய ஸ்ரீவன்மீகநாததேசிகர் குமாரருமாகிய வைத்தியநாததேசிகர். இராமநாதபுரத்தில் கசுஅ௫-ம் ஆண்டுமுதல் களஉரு-ம் ஆண்டுவரையும் அரசுபுரிந்த இரகுநாத சேதுபதியின் சமஸ்தானவித்துவானை படிக்காசுப்புலவர் இந்நூலாசிரியரிடங் கல்விகற்றவராதலானுஞ், சற்றேறக்குறைய கஅ௦ வருஷத்தின்முன் நன்னூல் விருத்தியுரை இயற்றிய சங்கரநமச்சிவாயப்புலவரது இயற்றமிழாசிரியராகிய சாமிநாததேசிகர் இவர்காலத்துச் சிறுவயதினராயிருந்தமையானும், இவர்காலம் இற்றைக்கு உ௱ வருஷத்தின் முன்னென்பது போதரும்.

நூற்கு உரையும் பாயிரமும் அணியியலிற் சொல்லணிச்சூத்திரங்களும் வைத்தியநாததேசிகருடைய புதல்வர் ஐவருள் மூத்தவராகிய சதாசிவதேசிகரால் இயற்றப்பட்டன எனக் கூறுவாருமுளர். ஆயினும் ஆசிரியரை நேரிலே பார்த்து அறிந்தவரும் மகாவித்துவானுமாகிய ஸ்ரீகைலாசபரம்பரைத் திருவாவடுதுறை ஈசானதேசிகசுவாமிகள் தமது இலக்கணக்கொத்தில் ஒருரைச்சூத்திரத்தினகத்துத் தாமே தமது நூற்கு உரையியற்றியதற்கு மேற்கோளாக "என்கண் காணத்—திருவாரூரிற் றிருக்கூட்டத்திற்—றமிழ்க்கிலக்கா

கிய வைத்தியநாத—னிலக்கணவிளக்கம் வகுத்துரையெழு தினன்" எனக் கூறுமாற்றானும், "பொருளணி சொல்லணி யெனவலங் கார—மிருவகை நெறியா னியலு மென்ப." என நிறுத்திப்புகுந்து பொருளணி உணர்த்திய ஆசிரியர் நிறுத்த முறையானே சொல்லணியும் ஒருவாறுவது உணர்த் தாதொழியாராகலானுஞ், சதாசிவதேசிகர் சொல்லணிச்சூ த்திரங்களுட் சிலவும் பாயிரமும் மாத்திரமே செய்தவரென் றும் இலக்கணவிளக்கம் மூலமும் உரையுமாகவே ஆசிரிய ரால் இயற்றப்பட்டதென்றுங் கொள்வதே தகுதி. சொல்ல ணியகத்துத் தந்தையார் சூத்திரமிவை மைந்தனார் சூத்திர மிவையெனப் பகுத்தறிய ஏதியாதுங் காண்கிலேம்.

இந்நூற் பாட்டியல் வைத்தியநாததேசிகர் இயற்றிய தன்று. யாப்பிலக்கணஞ் செய்தார் பிறரனேகர்போல இவ ரும் அதனாற் பெரும்பயனின்றென்று கூறுதொழிந்தனர் போலும். ஆயினும் அஃதில்லாததோர் குறைவை அவரது இரண்டாவது புத்திரராகிய தியாகராசதேசிகர் நிவிர்த்தி செய்தனர். பாட்டியல் செய்தார் தியாகராசதேசிகரென்பது நூற்பாயிரம் புனைந்தருளிய சதாசிவதேசிகர் குமாரர் தியா கராசதேசிகர் எழுதிய பதிகச்செய்யுளான் அறிக. இதனாற் பாட்டியலுடையார் தமது நூலுக்குத் தாமே பதிகம்பாடின வரல்லரென்பதூஉம் ஒரேபெயரினராயினும் இருவரும் வே றென்பதூஉம் பதிகத்தார்க்குப் பாட்டியலுடையார் சிறிய தந்தையென்பதூஉம் உணர்க.

நமதாசிரியர் வமிசம் முன்னும் பின்னும் பலதலைமு றையாகப் பேர்பெற்ற வித்துவான்களாற் சிறப்புற்றதோர் வமிசமேயாம். வைத்தியநாததேசிகர் தந்தையாகிய வன்மீ கநாத தேசிகர் தமது பாவன்மையாற் பரிசுபெற்ற சூனாம் பேட்டை மானியமும் உப்பளமும் நாளதுவரைக்கும் அவர் சந்ததியார் அனுபவித்துவருகின்றார்கள். வைத்தியநாததே சிகர் கல்வித்திறமைக்கு இந்நூலின் வேறு சான்று வேண் டா. அவர் மலையாளத்திராசாவின் பேரிற் சிலபிரபந்தம்

பாடி அவ்வரசனூற் கிராமங்களுஞ் சன்மானங்களும் அளிக்கப்பெற்றதும், அவை அரங்கேற்றிய ஞான்று

ஓதும்பிரபந்தங்களொருகோடிநிமிஷத்துரைக்கும்பிரசண்டவாக்கி
உத்தண்டவமிர்தரசசித்திரவித்தாரகவியுபயகவிராசராசன்
போதும்பசுந்தமிழ்ப்பலகையுங்குடிபுகப்புலமகளொனுங்குமாரி
புதுநலந்தனை நுகர்ந்தவனுநீயாகிலுன்புலமையைவழுத்தவசமோ
காதுங்கடுங்கொலைப்பாகடுங்கடதடக்களியானையரசவெள்ளங்
களிசுவைப்பரணிமடலந்தாதிதூதுலாக்காதல்செயவோதவல்லாய்
மோதுந்தனிக்கொற்றவாயிலாய்மூதண்டமுழுதும்பரந்தசீர்த்தி
முருகுகமழ்தருகமலைவருவைத்தியநாதகுரு முத்தமிழ்க்கவிராசனே.

என அவ்வரசசபையாராற் துதிக்கப்பட்டதும் உலகறியாததல்ல. இந்நூலன்றிப் பல பிரபந்தங்களும் அவரால் இயற்றப்பட்டுள்ளன. மேலும் இவர்கல்வித்திறமையை அவர்காலத்து வித்துவான்களில் ஒருவராகிய கவிவீரராகவமுதலியார் சொல்லிய

"ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடா ரோநாற்பத்
தொன்பதின்ம ரென்றே யுரைப்பாரோ—இம்பர்புகழ்
வன்மீக நாதனருள் வைத்தியநா தன்புடவி
தன்மீதங் நாட்சரித்தக் கால்."

என்னும் வெண்பா நன்கு புலப்படுத்தும்.

அவர் மாணுக்கரில் ஒருவராகிய படிக்காசுப்புலவர் ஒருகாற் செம்மற்பட்டிக் காடுவழியாகத் தமது குருபுத்திரர் சதாசிவநாவலரைக் காணவந்தபோது அச்சதாசிவதேசிகர் மாணுக்கர்சிலர் வனத்திற் தூதுளங்காய் பறிக்கையிற் காரிகையைப் பாராயணஞ் செய்து கொண்டிருந்த சத்தத்தைக் கேட்டு வியப்புற்று வந்து

"கூடுஞ்சபையிற் கவிவாரணங்களைக் கோளரிபோற்
சாடுஞ்சதாசிவ சற்குருவேமுன்னுன் றந்தைதம்மாற்
பாடும்புலவர்க ளானேமின்றிச்செம்மற் பட்டியெங்குங்
காடுஞ்செடியுமென்னே தமிழ்க்காரிகை கற்றதுவே."

என்று கொண்டாடினர்.

பாட்டியல் செய்த தியாகராசதேசிகர் இன்னோர் இளவலென்பது முன்னர்ச் சொன்னோம். இவர் தம்பி சிதம்பரதேசிகர் சிவஞான சித்தியாருக்கு ஓர் சிறந்த பொழிப்புரை செய்திருக்கின்றனர்.

சதாசிவதேசிகர் மகன், பதிகச்செய்யுள் பாடிய தியாகராசதேசிகர் திருமுல்லைவாயிற்புராணம், தேவையந்தாதி, காழியந்தாதி முதலியன இயற்றி இராமநாதபுரத்தில் மந்திரியாயிருந்த தாமோதரம்பிள்ளையினாற் சூரியகோட்டைக்கிராமம் பரிசுபெற்றும், விஜய அருணாசல வணங்காமுடியார்பேரிற் கோவையும் உலாவும் பாடித் தண்டிகைவரிசையும் மரவனேந்தல் முதலிய மூன்றுகிராமமும் பரிசு பெற்றும் மிகச் சிறப்புற்றிருந்தனர்.

இவர்குமாரர் சதாசிவதேசிகர் அவர்காலத்திற் ஸ்ரீகைலாசபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்தில் எழுந்தருளியிருந்த மகாசந்நிதானத்தின்முன் கேட்டோர் யாவரும் அதிசயிப்ப ஒரு பெரும்வித்வப்பிரசங்கஞ் செய்தபோது ஆண்டிருந்த இலக்கணம் அம்பலவாணத்தம்பிரானால்

"வன்மீக நாதன் வரத்தா லவதரித்த
வன்மீக நாதன் மரபினோன்—வன்மீகர்
தாமோர் தமிழுருவாய்ச் சார்ந்த சதாசிவனை
யாமோ புகழவல்லே மீண்டு."

எனத்துதித்து மதிக்கப் பெற்றவர். இவர்புத்திரனாகிய வன்மீகநாததேசிகருடைய பிள்ளையே இப்பொழுது திருக்களரில் இருக்கும் ஸ்ரீமத் சூரியமூர்த்திதேசிகர். இவ்வருஷம் இவர்க்கு எஎ வயதும் இவர் தனயன் ஸ்ரீசண்முகதேசிகருக்கு நஎ வயதும் நடக்கின்றது. இவர்களும் இருபெயரும் தமிழ்நன்குகற்ற வித்துவான்களாகவே இருக்கின்றார்கள். ஒருகால் அவ்வூர் மிராசுதார் ஸ்ரீ சீநிவாசமுதலியார் பெருமையைக் குறிப்பிட்டுத்

"தேடிநிதி யங்கொடுக்குஞ் செல்வரைப்பார்த் தெள்ளளவும்
பாடிப் படிக்கப் படியாதே—நீடுபுகழ்

வாச மலர்த்தடஞ்சூழ் வண்களர்வாழ் வாஞ்சீநி
வாச னெனச்சொன்ன வாய்."

என்று துதித்தவர் இச்சூரியமூர்த்தி தேசிகரேயாம்.

படிக்காசுப்புலவர் இந்நூலாசிரியர்க்கு மாணுக்கராகவே, இராமநாதபுரத்தில் கசுஅரு-ம் ஆண்டுவரையும் அரசாண்ட சேதுபதிபேரால் ஒருதுறைக்கோவை பாடிய அமிர்தகவிராயருங் கவிவீரராகவமுதலியாரை ஒப்ப இந்நூலாசிரியரோடு ஒருகாலத்தவரென்று கொள்ளல் தவறுகாது.

முதலில் இவர் நன்னூலிற்குச் சைனமுனிவருரை தக்க உரையல்லவென்று கண்டு தாமோர் உரையெழுதுவாராயினர். பின்னர் அதிற் பல இடங்களில் நன்னூலாரோடு தம்மதம் மாறுபட்டமையால் இந்நூலை இயற்றத் தொடங்கினர். அவ்வாறியற்றுவான்புகுந்தவர் நன்னூல்போல எழுத்துச்சொல்லிரண்டோடும் முடியாது உலகிற்குப் பெரும்பயன்பட ஐந்திலக்கணமும் முற்றுப்பெறச் செய்தனர். முற்றுப்பெற்றுமென்? அச்சின்வாய்த் தோற்றுமையாற் கற்போர்க்குக் கிடைத்தற்கரிதாகி அதனால் அடையற்பால தாம் பயனை உலகம் பெறுமற் போகத்தக்கதாய் வந்துவிட்டது. இதனை உணர்ந்தே அடியேன் இப்பொழுது அதனை அச்சிட்டுப் பிரசுரஞ் செய்யத் தலையிட்டனன்.

அச்சின்வாய்த்தோற்றுமலும் பரிபாலனம் அடையாமலும் இருக்கும் நூல்கள் எத்துணைச்சீக்கிரம் இறந்துவிடுகின்றனவென்பதற்குச், சொற்பகாலத்திற்கு முன்னர் உதித்த இந்நூலின் கடைசி இயல்களுக்குத் தமிழ்நாட்டிலே பிரதிகள் அகப்படாமையும், எங்கெங்குந்தேடியும் யாதுமுயற்சிசெய்தும் பாட்டியலுக்கு இரண்டுபிரதிமாத்திரம் அகப்பட்டதுஞ் சான்றுபகரும். சில சில இடங்களில் அகப்பட்ட பொருளதிகாரப்பிரதிகள் அவிழ்த்துப்பார்ப்பதற்கும் உபயோகமில்லாத தசையடைந்துவிட்டன.

இந்நூல் உலகிற் தோற்றிய காலமுதல், நூற்றைம்பது இருநூறு வருஷமாக, நன்னூல் முதலிய ஏனைய சிற்றிலக்

கணங்களெல்லாம் பயிற்சி குன்ற, இதுவே தலையெடுத்துவந்தது. பதினேழாஞ் சகாப்தம் முதல் இற்றைக்கு ஐம்பதறுபது வருஷத்திற்குமுன்வரைக்குஞ் சென்னை, காஞ்சி, புதுவ்வை, தஞ்சை, மதுரை, திருநெல்வேலி, யாழ்ப்பாணமென்றின்னோரன்ன தமிழ்த்தேசங்களில் இலக்கணங்கற்போர் பெரும்பாலும் ஓதிவந்ததும் இதுவே.

இஃது இவ்வாறு பிரசித்தியடைந்து வருகையில், ஸ்ரீகைலாசபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தார், சோழநாட்டிற் றமது ஆதீனமரபினையொத்ததுஞ் சந்தானகுரவர்வழித் தோன்றியது மாயினும், பலகாலும் பலவிஷயங்களில் தம்மோடு முரணிய தருமபுராதீன சம்பந்தம் இதற்கு ஓரோவழியுண்மைபற்றி இதன் மகிமையைக் குறைக்க நினைந்தோ, அல்லது நன்னூலின் பண்டைக்கொள்கையான் அதன்மேற் பச்சாத்தாபங்கொண்டோ, நன்னூலை மேன்மைப்படுத்த எண்ணி, அதற்குத் தமதாதீனத்துச் சங்கரநமச்சிவாயப்புலவரால் ஒருவிருத்தியுரை எழுதுவித்தும், நன்னூலினகத்தும் அதன் சமணவுரையினகத்தும் முன்னரில்லாத பலவிதிவிலக்குகளை உரையிற்கோடலாற் புணர்ப்பித்தும், இன்னும் அவ்வுரை சிறக்கும்படி சம்ஸ்கிருத திரவிடக் கடல்கள் முழுதுண்டு தேக்கிய ஸ்ரீ சிவஞானமுனிவராற் றிருத்திப் புத்தம்புத்துரை எழுதுவித்தும், அதுவும்போதாதெனக்கண்டு அம்முனிவரரால் இலக்கணவிளக்கச் சூறாவளியென்று ஓர் அநியாயகண்டனம் இயற்றுவித்தும் இந்நூலை நசிக்க முயல்வாராயினர். சமணர்காலத்தின் பின்னர்த், தான் தோன்றிய காலமுதற் றென்னடெங்குந் தமிழ்க்கல்வியை விர்த்திசெய்வதிலுஞ் சைவசமயத்தை வளர்ப்பதிலும் முதன்மை பெற்றோங்கிய இவ்வாதீனத்தாருக்கு இஃதென்ஞான்றும் ஒரு களங்கமேயாம். "திருவாரூரிற்றிருக்கூட்டத்திற்—றமிழ்க்கிலக்காகியவைத்தியநாதன்" என ஆசிரியர் தமிழ்வல்லமையைப் புகழ்ந்த ஈசானதேசிகரும் "முன்னூ லொழியப் பின்னூல் பலவினு—ணன்னூ லார்தமக் கெந்நூ லாரு—மிணையோ வென்னுந் துணிவே மன்னுக" என நன்னூலையே புகழ்ந்

தது தமதாதீனவைராக்கியமென்றே கோடற்பாலதோ, அன்றேல் அவர் வைத்தியநாத தேசிகர் இந்நூலை மூலமும் உரையுமாகச் செய்துகொண்டிருந்ததைக் கண்டது மாத்திரமன்றி நூலைப் பார்த்தறிந்தவரல்லரோ அறிகிலேம்.

ஸ்ரீகச்சியப்ப சுவாமிகள் திருத்தணிகையிற் கந்தப்பையர் முதலியோருக்குத் தமிழ் கற்பிக்கையிற் தம்மாணுக்கர்கள் இலக்கியப்பயிற்சிக்காகச் சீவகசிந்தாமணியைப் பாராட்டியது கண்ணுற்றபோது தம்பாலெழுந்த சமயாபிமானத்தானன்றோ அதற்கிணையாகச் சைவ இலக்கியமொன்று நிலைபெறும்படி தணிகைப்புராணத்தைச் செய்தருளினர்!

பரசமயநூலை வாசித்தபோது அதிலோதிய பொருளை மெய்யென மயங்கி மகிழ்ந்த அநபாய சோழனை இடித்துரைத்துக் கண்டித்த அருண்மொழித்தேவர் போலாகாது சுவாமிகள் ஈண்டுச் சொற்சுவை பொருட்சுவைகளின்மேற் தம்மாணுக்கர் மனஞ் செலுத்திய இடத்தன்றோ பரிதாபமடைந்தனர்? பின்னை அபிஷேகத்தர் மரபிலுதித்துச் சுத்தசித்தாந்த சைவசமயியாய்ச் சைவசமயாசாரியராய் எழுந்தருளிய இந்நூலாசிரியர் இயற்றியநூலும் உரையுஞ் சிறப்புடையனவாகவும், பஞ்சலக்ஷணமும் பொருந்திக் கற்போர்க்கு மிக்க பயன் தருவனவாகவும் இருக்க,அதனை விரோதித்துப், பாற்கடலிலுள்ள மீன்கள் அப்பாலைவிரும்பாது வேறுபலவற்றை இச்சித்தல் போல,இரண்டிலக்கணமாத்திரமுடைத்தாய்ச் சமணுசிரியராற் செய்யப்பட்டுள்ள நன்னூலைச் சிறப்பிக்கமுயன்றது திருவாவடுதுறை யாதீனத்தார்க்குத் தகுந்த செய்கையன்றென்பது சைவசமயாபிமானமுடையோர் அனைவராலும் ஒப்புக் கொள்ளற்பாலதேயாம்.

சகலசற்குணமும் எல்லாக்கல்விச்சிறப்புமுடையராய் வீற்றிருந்து இப்பொழுது அடைந்துபோன பரமதயாளுவாகிய ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகமூர்த்திகள் இவ்வாறு தமது ஆதீனத்தார் செய்தது தப்பென்று நேரிலே ஒத்துக் கொண்டதுமன்றி, இலக்கணவிளக்கம் அச்சில்வெளிப்படு

மாயின் மீளவும் முன்னைச்சிறப்பு அடையாமற்போகாதென்றுசொல்லி, அதனை எவ்வாற்றானும் அச்சிடுவிக்கவேண்டுமென்று அடியேற்குக் கட்டளையிட்டருளியது. மேலுஞ் சிறுக்காப்பியங்களில் ஒன்றாகிய சூளாமணி இப்பொழுது எங்ஙனுங் கிடைத்தற்கு அரிதாகி இறந்துபோகுந் தசையடைந்திருத்தலால் அதையும் அச்சிடுவித்தல் உலகிற்குபயோகமாகுமென உத்தரவுசெய்தது. இஃது இலக்கணவிளக்கம் அச்சில் வெளிப்படும்போது நன்னூற்பயிற்சி சிதைவுறுமென்னும் நிச்சயத்தாற் சமணர்க்குச் செய்ததோர் நஷ்டபரிகாரம்போலும். யான் அப்பணிகளைச் சிரமேற்கொண்டு

"குறிப்பினாலரியகுரவரெண்ணமதுகூறுமுன்புரிகுணத்தினேன்,பொறுப்பனேவடிகள்புவியிலென்னையொருபொருளெனக்கொடுபுகன்றநூல், சிறப்புறப்பிழைதிருத்தியச்சில்வெளிசெய்தொரோர்பிரதிதேவரீர், நறைப்பெருஞ்சரணநளினசந்நிதியினல்கிடாதினியென்னாளினே."

என விண்ணப்பஞ் செய்தனன். உடனே மடத்திலிருந்த இலக்கணவிளக்கப் பிரதிகள் யாவுஞ், சூளாமணி மகாலிங்கையர் பிரதியொன்று தமது மடத்திலிருந்ததும் என்கைவசம் அனுப்பி, வழக்கப்பிரகாரம் மடத்திற்காக வாங்கும் பிரதிகளின் கிரயத்தோடு இந்நூல் ஒவ்வொன்றிற்கு ௧00 ரூபா உபகாரமுங் கொடுப்பதாக அனுக்கிரகித்தது. சுவாமிகளது சிவதசையில் இவை இரண்டன் பதிப்பும் முற்றுப்பெறாதது அடியேற்கோர் பெரும் விசனமே. ஆயினும் இவை விரைவில் அச்சாகிவருவதைச் சுவாமிகள் அறிந்திருந்தது என் மனதிற்கு ஓர் ஆறுதலாம்.

இந்நூல் அச்சில்வராமையே அதன் பயிற்சி இஞ்ஞான்றுக் குன்றுவதற்குக் காரணமென்பது முன்பே கலித்தொகைப் பதிப்புரையிலும் "சூறாவளி மாறாய் மோதியென்? "சூத்திரவிருத்திவான் ஆர்த்ததிர்த் திடித்தென்? கன்னது "ரோண சயித்திரதர் என்னதுரோகம் இயைத்திடினுந் 'தே "ரொன்று கிடையாத குறையன்றோ களத்தவிந்தான் சி

"றுவன்? அச்சுவாகனங் கிடையாத குறையன்றோ இலக்க "ணவிளக்கம் மடங்கியது?" எனக் குறித்திருக்கின்றேன்.

இங்ஙனம் இதனைப் பாராட்டுதலாற் தவத்தாற் தூய ராய் முக்குணங்களையுங் கடந்து இறைவனருள்பெற்றுள்ளா ரது நூல்களோடொத்த பெருஞ்சிறப்பினையுடையதென்று சொல்கின்றேனல்லேன். சிற்றறிவினோர் இயற்றும் எந்தநூ லினுந் தப்பில்லாமற்போகாது. இலக்கணவிளக்கமுடையார் மதங்களுள்ளுஞ் சில கற்றுவல்லோரால் அங்கீகரிக்கத் தகா தனவுள. ஆயினுந் தாரதம்மியச் சிறப்பானும் ஐந்திலக்கண மும் உடைமையானும் பின்னூலெவற்றினும் இதன்மாட்சி பெரிதெனக் கொள்க.

இலக்கணவிளக்கச் சூறாவளியை ஓர் அநியாயகண் டனமென்று யான் கூறியதை ஈண்டுத் தாபிக்கப்புகின் மிக விரியும். அஃது அன்ன இயல்பினதென்பது நடுவு நிலைமை குன்றாது அதனைவாசிப்போர் அனைவர்க்கும் புலப்படும். ஆயினும் அநியாயமென்றோர் குற்றமேற்றியபின் அதற்குச் சில உதாரணமாவது காட்டாமற்போதல் சரியன்றென்று உட்கொண்டு, அங்குமிங்குந்தேடியெடாமற் சூறாவளியில் முதன்முதற்சொல்லியவற்றையே சொற்றமுறைப்படி எடுத் துக்கொண்டு அவை சிவஞானயோகீசுவரர் உணர்த்திய வாறு நமதாசிரியர்மேற் போந்த குற்றமல்லவென்பதை மாத் திரம் இங்ஙனங் காட்டுகின்றேன். காட்டுமுன் அடியேன் சொல்லவேண்டியதொன்று உளது.

அகத்திய முனிவர் வரத்தினுற் தோன்றித், தென் மொழி வடமொழிக்கடல்களின் நிலைகண்டுணர்ந்து, முன் னும் பின்னுந் தமக்கிணையின்றி வீறித், தமிழிலுள்ள நூற்க ளுக்கெல்லாஞ் சிரோரத்தினமாய்ச் சொலியாநிற்கும் மகா பாடியத்தை அருளிச்செய்த யோகீஸ்வரரது பேரறிவு இம யாசலமொப்பது. எளியேன் சிற்றறிவு அதன்முன் ஒரு பூதூளிபோல்வது. அன்னோர், தப்பை ஒப்பென்று தாபிக் கவும், ஒப்பைத்தப்பென்று வாதிக்கவும் வல்லர். அஃது

அவர் காஞ்சிபுரத்து வைஷ்ணவ வித்துவான்கள் கொண்ட இறுமாப்பை ஒழித்தற்பொருட்டு, அவர்கள் தலைமேற் கொண்ட இராமாயணத்து நாந்திச்செய்யுளை முதலிற் பங்கப் படுத்திப், பின்னர் அதனையே அவர்கள் தலைவணங்கித் தம்பிழையைப் பொறுத்தருள்கவென்று வேண்டிய பொழுது சரியென்று நாட்டியதனுன் விளங்கும். ஆதலால் இன்னோரன்ன பெருஞ்சிறப்பினரை எதிர்த்து இலக்கிய இலக்கணப் படைக்கலங்கள் தாங்கி அவர் சூறுவளியை மாறுயழிக்கப் புகுந்தேனென்றுகொள்ளன்மின். அவரும் அவர் மரபினோரும் உவந்துபாராட்டிய நன்னூற்கு இந்நூல் இழிவுடையதன்றென்னும் மாத்திரையே யான் சொல்லலாயினேனென்க.

க. "முன்னர்ப் பாயிரத்தை வைத்து இது பாயிரமென் "று உரைத்துப் பின்னர் அது கேட்ட மாணுக்கர்க்கு நூலு "ரைப்பான் தொடங்கினுர், இப்பாயிரம் உரைக்க வேண் "டுவதென்னை என்னுங் கடா நிகழ்தற்கு இடனுளதாய "வழி, இவ்விவ்வேதுக்களான் முன்னர்ப் பாயிரம் உரைக்க "வேண்டுமென்று இறுத்தல் அமையும். அவ்வாறன்றி இயை "புமின்றித் 'திருவிளங்கிய மாநகரம்' முதலாக எடுத்து "ரைக்கும் உத்தரஞ் செப்புவழூவும் மற்றொன்று விரித்தலு "மாய் முடியுமென்க." என்றார். "வலம்புரிமுத்திற் குலம் புரிபிறப்பும்" என்று தலையிட்ட ஆத்திரையன் பேராசிரியன் எந்தப் பாயிரத்தை முன்னர் வைத்து இது பாயிரமென்று உரைத்துப் போந்தனன்? ஆண்டு யாண்டையோ கடா நிகழ்ந்ததும் விடையிறுத்ததும் அமையப்பெற்றது?

"முகவுரை பதிகம்" என்றற்றொடக்கத்துப் பொதுப் பாயிரமுதலியன கூறிய நன்னூலார் "மாடக்குச்சித்திரமும்" என ஈற்றிலே கூறியதனை இந்நூலார் முதலிலே எடுத்து உரைத்ததுதானு ஒருதவறுயிற்று? இது குற்றமாமாயின் நன்னூலாரும் "முகவுரை பதிகம்" என்னுஞ் சூத்திரங் கூறற்குமுன்னர்த் தன்பாயிரத்தைவைத்து இஃதியாது? இதன்பெயரென்னை என்று கடாநிகழ்தற்கு இடனுயவ

ழியன்றே அச்சுத்திரஞ்செய்தல்வேண்டும்! அவ்வாறின்றி "முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்—புறவுரை தந் துரை புனைந்துரை பாயிரம்" எனச்சொற்றது செப்புவழு வும் மற்றொன்று விரித்தலுமாகுமே. இதனைக் குற்றமென்று தெரிக்கப்புகுந்ததே குற்றமாமென்றொழிக.

உ. "அவயவமாகிய பாயிரத்துள் அவயவியாகிய நூல் "அடங்காதென்றார், அவற்றியல்பு உணராமையின்." என்ற னர். இதற்கு விடை "இன்னும் 'நூனுதல் பொருளைத் "தன்னகத்தடக்கி' என்பதனைத் தழீஇயினாராகலின், நூலி "யல்புபாயிரத்துள் அடங்காதென்றல் அவர்க்குங் கருத்தன் "றென மறுக்க." என்னும் அவரது சொந்த வாய்மொழியே யாமெனக் கூறுக. நூல் குணியும் நூலியல்பு குணமுமாக லின், நூல்வேறு நூலியல்புவேறென்றொழிக. ஆதலாற் பல அவயவங்களை உடையதோர் அவயவி அவற்றொன்றில் அ டங்காதாகுதல் பொருத்தமுடைத்தென்றும் அடங்குமென் பார் கூற்றிற்குப் பொருள் வேறென்றுங் கூறிவிடுக்க.

ங. "எழுத்ததிகாரம் என்புழி அதிகாரம் முறைமை "யென்றார். அதிகாரமென்னும் வடசொற்கு அது பொரு "ளன்மை தொல்காப்பிய விருத்தியிற் கூறியவாற்றான் அறிக." எனச்சொற்றனர். இதற்குவிடை "அதிகாரம் முறைமை" எனவே உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினி யார் முதலியோர் கொண்டனரென்க. மேலும் இப்பொருள் வடமொழியிலும் உண்மை சம்ஸ்கிருத அகராதிகளிற் கூறிக்கிடத்தலான் அறிக.

ச. "மலைமக ளொருபான் மணந்துல களித்த—தலை "வனை வணங்கிச் சாற்றுவ னெழுத்தே." என்னும் எழுத்த திகாரத் தற்சிறப்புப்பாயிரத்தில் நான்கு குற்றம் பாரித்து, முதலாவது "மலைமகளென்பது மலையும் மகளெனவும் அமங்க "லப்பொருள்தந்து 'தொகையார் பொருள்பலவாய்த் தோன் "ற'லின்" மலை தன் மங்கலப் "பயன் குறித்துவாராமை யறிக." என்றார். நன்னூலார் எடுத்தாண்ட "பூமலி" என்

பது இலைநிறைந்த என்றும் இடம் அகன்ற என்றும் பொருள் தரத்தக்கதாகலாற் "தொகையார் பொருள்பலவாய்த் தோன்ற" இடமில்லையா? "நீடாழியுலகம்" என்று மங்கலம் வகுத்த வில்லிபுத்தூராழ்வாரை அது நீள் தாழி எனவும் பகுக்கக் கிடந்ததென்று குற்றப்படுத்தல் பொருந்துமா? அன்றியுந் தாமே ஒருகால் உவந்ததோர் மங்கலமொழியைப் பிறர் கொண்டக்காற் குற்றமென்றது பேரற்புதமே. மேலுந் தம்மரபினோர் அனைவருக்கும் அங்கீகாரமான சிவதருமோத்தரத்தில்

"மலைக்குமகள்பெற்றமகனைக்கயமுகத்தனைமனத்தெழுதியா
னலற்பிணிபிறப்பறவணுக்களையகத்தியமுனிக்கருளினு
னுலப்பில்கருணைக்கடலுருத்திரனுருத்தனிலுதித்தகுமர
னிலக்குமியலைக்கலியிளைக்கவுமுரைப்பனுலகிட்டமுறவே."

என மறைஞானசம்பந்தநாயனர் எடுத்தாண்ட மங்கலமொழியை அமங்கலப்படுத்தல் தன் தாயை வேசியென்று ஏசுதல்போலும். இரண்டாவது "மணந்து" என்றதும் ஒருகுற்றம்; என்னை! இஃது ஈண்டு "இந்நூல் நின்று நிலவுதல் "வேண்டியென்றூர்க்கு" மறுதலையாகப் பொருளதிகாரத்தில் "உமையுரு வுருமடுத்தென்றது இந்நூல் நின்று நிலவாது "இறுதல் வேண்டி எனப் பொருள் தருதலின்." என்றூர். "ஏனையவற்றிற்கும் ஏற்குமாறு பொருள் விரித்துரைக்க" என்று ஆசிரியர் கூறினூராக, இவரை ஏலாமாறு பொருள் கொள்ளச் சொன்னதுயாரோ? மூன்றுவது "உறுபொருள் "முதலிய எல்லாவற்றிற்கும் உரிய வேந்தனை உல்குபொ "ருட்கு உரிய வேந்தனென்றல் அவன் இறைமைக்கு ஏலா "தவாறுபோல ஐந்தொழிற்கும் உரிய தலைவனை உலகளித்த தலைவனென்பது தலையன்மையின்" உலகளித்த தலைவனென்றது குற்றம் என்றூர். எழுத்ததிகாரத்தில் "உலகளித்த தலைவன்" எனவுஞ் சொல்லதிகாரத்தில் "உலகு புரந்தருளும் அமைவன்" எனவும், பொருளதிகாரத்தில் "உலகினைப்பொழிக்கும் இமையவன்" எனவும் . ஆசிரியர் இறைவன் முத்தொழிலுங் கூறிய புகுந்தாராகலின் ஈண்டுப்பட்ட

குற்றமென்னே? ஆன்றோர் ஆங்காங்குக் கூறிய கடவுள் வணக்கத்திற் கடவுளின் தலைமை அனைத்தும் ஒருங்கு சொல்லாது இரண்டொரு குணமாத்திரையே விதந்து தலைமை கூறுவது பெருவழக்கேயாம். முனிவரர் இஃது உணராதவரா? இதனாற் "குற்றமே தெரிவார் குறுமாமுனி— சொற்ற பாவினும் ஓர்குறை சொல்லுவர்" என்பதற்குத் தம்மை இலக்கியமாக்கினாரன்றோ! நான்காவது "வணங்குதல் சி "றப்புவினையாவதல்லது பொதுவினையாகாமையின் வணங்கி "யென்பது" குற்றமென்றனர். "மனமொழிமெய்களின் வணங்குது மகிழ்ந்தே என்புழி ஒப்புமைபற்றிக் கூறியதே யாம்" எனத் தாமே கூறும் இவர் "மனத்தாற் துணிவு "தோன்ற நினைத்தலும் மொழியாற் பணிவுதோன்ற வாழ்த்த "லுந் தலையாற் தணிவு தோன்ற இறைஞ்சலும் அடங்கப் "பொதுப்படவணங்கி" என்று கூறிய ஆசிரியர்மேற் குற்றஞ் சொல்வதென்னை? சிருஷ்டியுந் திதியுஞ் சங்காரத்தில் ஒடுங்குவதாற் சங்காரத்திற்கு முதன்மை கூறுஞ் சுத்தசைவசித்தாந்த சாகரமாகிய யோகீஸ்வரர் நினைத்தலுந் துதித்தலுஞ் சேர்ந்து அந்தர்ப்பித்து நடைபெறும் வணக்கத்திற்கு முதன்மைகொடுப்பதே முறையாகும். வில் வணக்கந் தீது குறிப்பதுபோலச் சொல்வணக்கம் நன்மை குறிக்குமே. ஆதியில் வளைதற் பொருளிற் பிறந்த வணக்கம் ஒப்புமையால் இப்போது மனம்வாக்குக்காயம் மூன்றற்குஞ் செல்லுமென்று கொள்க.

ரு. "எண்பெயர் முறைபிறப்பு" என்னுஞ் சூத்திரத்தில் "எண்ணுதற்கும் பெயர் கருவியாதலின் அதனை முற்கூ "றுதது முறையன்று. எண்ணும் முறையும் போல்வனவற் "றால் ஒருபயனின்மையின், அவற்றை வகையுட் சேர்த்துக் "கருவிசெய்தல் பயனில் கூற்றுமாறறிக. போலியெழுத் "தென ஒன்றில்லையென்பது தொல்காப்பிய முதற்சூத்திர "விருத்தியுட் காண்க" என்று மூன்று குற்றமேற்றினர். இஃது இலக்கணவிளக்கச்சூறாவளியன்று நன்னூற் கருப்பைப்படையோடு சார்தற்பாலதென்றுவிடுக்க.

சிவஞானமுனிவரர் தெரித்த குற்றங்களின் இலக்ஷணம் எத்தன்மைய என்பதற்கு மேலே காட்டிய ஐந்து உதாரணமும் போதுமாதலின் இவ்வளவில் நிறுத்துதும்.

இன்னோரன்ன குதர்க்கங்களான் இலக்கணவிளக்கம் எட்டுணையுந் தாழ்வடையாது தமிழ்நாடெங்கும் பரவி வருகையிற், திருத்தணிகைச் சரவணப்பெருமாளையர் நன்னூற்கோர் காண்டிகையுரை செய்து அச்சிற் பதிப்பித்தனர். பின்னர் அது மாணவர்கட்கு இலேசில் அகப்படற்பாலதாயினமையின் அதனையே யாவரும் வாங்கிப் படிப்பாராயினர். அதனால் அதன் விருத்தியுரையையும் யாழ்ப்பாணம் நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலரவர்கள் அச்சிட்டு யாவர்கைக்கும் எளிதில் அகப்படச்செய்தார்கள். இனி ஐந்திலக்கணமுஞ் செறிந்த இலக்கணவிளக்கத்தையே தமிழ் மாணாக்கரனைவரும் ஆவலோடுவாங்கிப் படிப்பாரென்று நம்புகின்றேன்.

சூத்திரங்களைப் பாடம் பண்ணுவோர் ஒருபொருளிற் பலசூத்திரத்தை நெட்டுருப் பண்ணுதல் வீண்காலக் கழிவென்று கொண்டு இலக்கணாசிரியர்கள் தத்தம் முதனூற் சூத்திரங்களையே தமக்கு வேண்டிய விகற்பத்தோடு எடுத்தாளுதல் பெருவழக்காதலின், இந்நூலாரும் பெரும்பாலுங் கற்போர்க்கு உபகாரமாகத் தமது காலத்தின் முன்னுள்ள சூத்திரங்களையே கூடியவரையும் வைத்துக்கொண்டனர்.

கலித்தொகை வீரசோழியங்களின் பதிப்புரைகளிற் தமிழைக்குறித்து யான் எழுதியவற்றிற் சிலவிஷயங்களுக்கு மாறுகக் கண்டனங்களெழுதினோர் இருவர் உளர். அக்கண்டனங்களை நிராகரிக்க வேண்டுமென்று எனது இஷ்டர்கள் பலர் கேட்டுக்கொண்டாலும் அவைகள் உலோகோபகாரங் கருதியும் உண்மையை ஆராய்ந்தறிய வேண்டுமென்று அவாவியும் எழுந்த வாதம்போல எனக்குத் தோற்றுமையால் யான் அவற்றைக்குறித்து யாதும் எழுதிற்றிலேன்.

இவருள் ஒருவர் ஸ்ரீமத் சபாபதிநாவலருடைய ஞானாமிர்தபத்திரிகாசிரியர். இவர் தாமோதரம்பிள்ளையெனத் தன்

பெயர் கைச்சாத்திட்டு அப்பத்திரிகையின் தமிழ்நடைக் கெல்லாந் தானே உத்தரவாதியென்று விக்கியாபனஞ் செய்தவர், பின்னர்க் கலியாணசுந்தரப்பெயர்கொண்டெழுந்து, யான் தாமோதரம்பிள்ளையென என்பெயரெழுதல் தவறென்றும் அது தாமோதரப்பிள்ளை என்றிருத்தல் வேண்டுமென்றுங் கிளம்புகின்றார். அப்படிப்பட்டவரோடு யாது வாதம் புரிவது? தன்பெயர் எழுதுதற்கே இன்னுங் கற்றுக் கொண்டிருக்கின்றார்போலும். இவரை எதிர்த்தல் "வென்றாலுந் தோற்றாலும் வசையேயன்றோ"? இக்காலத்துப் புலவர் பெருமானென யாவருங் கொண்டாடுந் திரிசிரபுரம் மீனாக்ஷிசுந்தரம்பிள்ளையவர்கள்,இராமநாதபுரம் வித்துவான் பொன்னுசாமித்தேவரவர்கள், நவீனபவணந்தி எனச் சிறப்புப்பெயர் விளங்கிய ஐயம்பிள்ளை உபாத்தியாயரவர்கள், திருமயிலை வித்துவான் சண்முகம்பிள்ளையவர்களென்று இன்னோரெல்லாந் தம்பெயர் வல்லொற்றுமிகாமல் எழுதுபவராயின் யான் தாமோதரம்பிள்ளையென்று எழுதுதலும் விலக்காகுமன்றிக் குற்றமாகாதே. விதிவிலக்கு இரண்டும் உணர்ந்தாரன்றோ குற்றங் காட்டற்கு உரியராவர்? அப்பசுவாமிகளையும் அப்பச்சுவாமிகளாக்குவாரென்றஞ்சுகின்றேன். யான் சாதித்த மௌனத்தை என் இஷ்டர்கள் மன்னிக்க.

மற்றவர் தஞ்சைஜனமித்திரனிற் றோன்றித் தூஷணப் படைகொண்டு ஒரு சிறுச்சண்டைசெய்ய முயன்றனர்போலும். இன்னோரன்னோரோடு சண்டைசெய்தற்கு யான் அருகனல்லேன். இவர் யான் வீரசோழியப்பதிப்புரையிற் தமிழ் என்னும் மொழி "எவ்வாறாயினும் ஆகுக." அது "தென்மொழிக்குத் தென்சொல்லாகிய பெயரேயாமெனக்கொள்க" என்று கூறியதனால் மொழியின் உற்பவத்தைக் குறித்து எனக்கு அதிக வாதமில்லையென்றும் அது திரவிடமென்னும் வடமொழியினின்று வாராததோர் தென்மொழியென்று சாதிப்பதே என் கருத்தென்றும் உணர்வாராக.

இன்னோர் போலாது ம-ா-ா-ஸ்ரீ கோ. ஸ்ரீநிவாசராகவாசாரியாரவர்கள் தாம் எழுதிய நாலடியார் நூல்வரலாற்

தில் "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்—பால்கடு கங் கோவை பழமொழி" என்பவற்றுள் "ஐந்திணை அகப் பொருட்டுறைத்தாய் ஐம்பது செய்யுளான் மாறன்பொறைய னார் இயற்றியது ஓர் நூலாகக், கீழ்க்கணக்குத்தொகை பதி னெட்டாயதெவ்வாறோ?" என யான் கொண்ட * கொள்கை மாற, "ஐந்திணை என்றது திணைகளைப் பற்றிச் சொல்லும் ஐந்து நூல்கள்" எனக் கூறி, ஐந்திணையைம்பது ஐந்திணை யெழுபது திணைமொழியைம்பது திணைமாலைநூற்றைம்பது இந்நான்கும் அவ்வைந்திணையைச் சேர்ந்தனவென்றும் இ வை போன்றது இன்னும் ஒன்று இருத்தல்வேண்டு மென் றுஞ் சொற்றனர். கலித்தொகைப் பதிப்புரை எழுதியபின் னர் மேற்கண்ட நான்குநூல்கள் எனக்கும் அகப்பட்டன. ஐந்திணை விஷயத்தில் யான் கூறிய கூற்றுச் சரியன்றென்று ஒத்துக்கொள்வதுமன்றி ஆசாரியாரவர்கட்கு என் வந்தன முங் கூறுகின்றேன். பிறர் சிலரொப்பக் கோவையைத் திருச்சிற்றம்பலக்கோவை என்று கொள்ளாது யான்சொல் லியதுபோல ஆசாரக்கோவை என்று இவர்கள் உரையிட் டது சாலவும் பொருத்தமுடைத்தேயாம்.

முப்பால் தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரது பொய்யாமொழித் தமிழ்வேதமாகிய திருக்குறளல்லவென் பதற்கு யான் கூறிய நியாயங்களை முற்றச் சீர்தூக்கி ஆரா யாது "ஆலும் வேலும் பல்லுக் குறுதி—நாலு மிரண்டுஞ் சொல்லுக் குறுதி" என்னும் பிற்றைநாண் மொழியைச் சங் கத்தார் காலத்து முதுமொழிபோற் கொண்டது ஆசாரி யார் பால் ஒரு தவறென்றே இன்னும் வற்புறுத்துகின்றேன். கோவை திருக்கோவையாராகாது ஆசாரக்கோவையாயினாற் போல முப்பாலும் நாயனார் தமிழ்வேதமாகாது நமது கைக்கு இன்னும் அகப்படாத பின்னொரு சிறு நூலேயாதல் வேண் டுமென்பது என்துணிவுமாத்திரமன்று. இதுவிஷயத்தில் யான்கண்டு பேசிய பலமடாதிபதிகள் வித்துவான்கட்கும் இஃதொப்பென்றறிக.

* கலித்தொகைப்பதிப்புரை கஎ-ம் பக்கம்.

இஃதெழுதியபின்னர், ஸ்ரீ திரு. த. கனகசுந்தரம்பிள்ளையவர்கள் தமக்கு அகப்பட்டதோர் மிகப் பழைய கீழ்க்கணக்குச் சுவடியில், "நாலடிநான்மணி" என்னுஞ் செய்யுள் அதிகஞ் சிதைவுபட்டுக் கிடப்பதில், ஐந்திணை என்பதற்கு ஐந்திணையைம்பது ஐந்திணையெழுபது திணைமொழியைம்பது திணைமாலைநூற்றைம்பது என்னும் நான்குமே உரையிற் குறிக்கப்பட்டிருக்கின்றனவென்றும், முப்பால் என்பதன் உரை நாயனுர் திருக்குறளை ஒருவாற்றானுஞ் சுட்டாது முப்பாலென்றே கூறப்பட்டிருக்கின்றதென்றுங், கைந்நிலையென்பது அப்பெயரான் உரையோடு உள்ளதோர் தனிநூலாகக் கண்டிருக்கிறதென்றும் எழுதியறிவித்தனர். இஃது என் கூற்றை நன்கு வற்புறுத்துகின்றது. இதனுல் "நானற்பதைந்திணை" என்றதில் நாலென்னும் அடையை நாற்பது ஐந்திணை என்னும் இரண்டனேடும் ஒட்டி நானற்பது நாலைந்திணையென்று கோடல்வேண்டுமென்றும், ஐந்திணை, யான் கூறியவாறு ஒருநூலுமன்று, ஆசாரியாரவர்கள் கூறுமாறு ஐந்துநூலுமன்று ஐந்திணைப்பொருள் உணர்த்திய நான்கு நூல்களென்று கொள்ளத்தக்கதென்றுஞ் சொல்ல ஏதுவாகின்றது. அங்ஙனமாயின் முப்பாலென்றது ஒரேநூலாகவும், இன்னிலைசொல்லென்றது இன்னிலை இன்சொல்என இரண்டுநூல்களாகாது காஞ்சிக்கு விசேஷணமாகவுங், கைந்நிலையென்றது வேறொரு தனிநூலாகவுங் கொள்ளல் தகும். இவ்வாறு கொள்ளிற் "கைந்நிலையோடாங்கீழ்க் கணக்கு" என்று ஈற்றடிப்பாடந் திரிதல் வேண்டும். எட்டுத்தொகை பதினெண் கீழ்க்கணக்குக்களுள் இன்னும் அச்சிற் தோற்றாதன தேடி வெளிப்படுத்தும் நோக்கமாகச், சிலநாட்களுள், மதுரை திருநெல்வேலி கோயமுத்தூர் முதலிய தேசங்களுக்கு ஓர் யாத்திரை செய்ய உத்தேசித்திருக்கின்றேன். அவ்வாறு போய்த் திரும்பியபின் இதுவிஷயத்தைப்பற்றி மறுபடியும் எழுதுவேன்.

மாணவர்கள் தமிழ் இலக்கணம் ஐந்தும் எவ்வாற்றானும் ஓதி உணர்தல் வேண்டுமென்னும் விருப்பம் மிக்குளே

ஞதலானும், அவர்களுட் பெரும்பான்மையோர் அதிக செல்வரல்லராதலானும், வித்தியாசாலைகளிற் தமிழ்கற்கும் மாணாக்கர்கள் உரு பெயருக்குக் குறையாமல் ஒருங்குசேர்ந்து தமது பாடசாலைத்தலைவர் மூலமாக நேரே என்னிடமிருந்து அழைப்பிப்பின் இப்புத்தகம் அவர்களுக்கு அரைவிலையாகக் கொடுக்கப்படும்.

உலோகோபகாரமுந் தமிழ்ப்பரிபாலனமுங் கருதி இந்நூலை அச்சிடும்படி திரவியசகாயஞ்செய்து அடியேனை ஆதரித்த போடிநாயக்கனூர் ஜமீன்தார் ஸ்ரீ திருமலைபோடய காமராசபாண்டியநாயக்கர் துரையவர்களுக்குப் பெருங்கடமைப்பட்டுளேன். துரையவர்கள் வாய்மொழி தவறாது நிறைவேறச்செய்ய உடன்பட்டிருக்கும் அவர் தேவியராதியானோர்க்கு மிகவும் வந்தனங் கூறுகின்றேன்.

எடுத்தமுயற்சியில் யான் தளர்வடையாவண்ணம் அடிக்கடி என்னை உற்சாகப்படுத்திக்கொண்டிருக்குந் தொண்டமான் புதுக்கோட்டை இளவரசு ராஜா ஸ்ரீ பாலசுப்பிரமணிய ரகுநாததொண்டமான்துரையவர்கள், பிரதிகாவலர் கௌரவ அ. சேஷையசாஸ்திரிகள், மைசூர் நியாயாதிபதி கௌரவ அ. இராமச்சந்திரையரவர்கள் முதலிய கனவான்களுக்குந் தென்றேசப்பிரதிகள் தேடியழைப்பித்துத் தருவதில் அதிக பிரயாசை வகித்துக்கொள்ளும் மாஜி திருநெல்வேலி நீதிபதி ம - ள - ள - ஸ்ரீ திரு. கனகசபைமுதலியாரவர்கட்கும், இவ்வேலை விரைவில் நடைபெறும்படி வேண்டிய ஒத்தாசைகள் செய்யும் ஸ்ரீமத் ந. க. சதாசிவப்பிள்ளையவர்கள் ம - ள - ள - ஸ்ரீ திரு. த. கனகசுந்தரம்பிள்ளையவர்களென்றிவர்களுக்கும் நன்றிசொல்லுகின்றேன்.

என்முயற்சிக்கு ஸ்ரீகைலாசபரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்துச் சற்குருநாதசுவாமிகளாயிருந்து அடைந்துபோன ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணியதேசிகமூர்த்திகள் செய்துவந்ததுபோலவும், இப்பொழுது ஷை சுவாமிகள் பட்டத்திற்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்தி

கள் செய்துவருவதுபோலவும், மற்றைத் தமிழ்நாட்டு ஆதீனங்களில் ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் மகாசந்நிதானங்கள் கைகொடுத்து வருவார்களாயின் இன்னும் பல பண்டைக்காலத்துத் தமிழ்நூல்களை எடுத்துப் பரிசோதித்துப் பிரசுரிப்பதில் அதிக ஊக்கம் உடையவனாவேன்.

சென்னைப் பாடசாலைக் கிரந்த சுதேசபாஷாவித்தியா பரிபாலன சபையார் எனக்குச் செய்துவருஞ் சகாயம் யான் ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

தொண்டமான் புதுக்கோட்டை
விரோதிஹூ ஐப்பசிமீ } சி. வை. தா.

## விளம்பரம்.

☞ இதன் அடியிற் குறித்த புத்தகங்கள் சென்னபட்டணத்தில் வித்தியாநுபாலனயந்திரசாலையில் ந. க. சதாசிவப்பிள்ளையவர்களிடத்துங், கலாரத்நாகர அச்சுக்கூடத்தில் ஊ. புஷ்பரதச்செட்டியாரவர்களிடத்துஞ், சிதம்பரத்திற் சைவப்பிரகாசவித்தியாசாலை விசாரணைக்கருத்தர் க. பொன்னுசாமிப்பிள்ளையவர்களிடத்தும், யாழ்ப்பாணத்திற் சுன்னாகம் அ. குமாரசாமிப்பிள்ளையவர்களிடத்துந், தஞ்சாவூரிற் புத்தகவியாபாரம் தா. திருவேங்கடபிள்ளையவர்களிடத்தும் வாங்கிக்கொள்ளலாம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| தொல்காப்பியம், சொல்லதிகாரம், சேனாவரையம் ... | உ | 0 |
| ஷை பொருளதிகாரம், நச்சினார்க்கினியம்... | சு | 0 |
| நல்லந்துவனார் கலித்தொகை ... ... ... | ரு | அ |
| தணிகைப்புராணம் ... ... ... | ரு | 0 |
| வீரசோழியம் ... ... ... | க | அ |
| இறையனாரகப்பொருள் ... ... ... | க | அ |
| இலக்கணவிளக்கம் ... ... ... | ௫ | 0 |
| சூளாமணி ... ... ... | க | அ |

உ

கணபதி துணை.

# இலக்கணவிளக்கம்.

## பாயிரம்.

### பொதுப்பாயிரம்.

#### க-வது. பொதுப்பாயிரத்திலக்கணம்.

திரு விளங்கிய மாநகரத்திற்கு உரு விளங்கிய வாயின் மாடங்கள்போலவுங், கற்றுவல்ல கணவற்குக் கற்புடை மனையாள் போலவுந், தலையமைந்த யானைக்கு வினையமைந்த பாகன்போலவும், அளப்பரிய ஆகாயத்திற்கு விளக்கமாகிய திங்களும் ஞாயிறும் போலவும், நூற்கு இன்றியமையாச் சிறப்பிற்றாகலானும்; கொழுச் சென்றவழித் துன்னூசி இனிது செல்லுமாறுபோலப் பருப்பொருட்டாகிய பாயிரங் கேட்டார்க்கு நுண்பொருட்டாகிய நூல் இனிது விளங்குமென்பவாகலானும்; அது கேளாக்காற் குன்றுமுட்டிய குரீஇப்போலவுங் குறிச்சி புக்க மான்போலவும் மாணாக்கன் இடர்ப்படுமாகலானும்; "ஆயிர முகத்தா னகன்ற தாயினும்— பாயிர மில்லது பனுவ லன்றே." என்பவாகலானும்; எந்நூல் உரைப்பினும் அந்நூற்குப் "பாயிரமுரைத் துரைக்க" என்பது மரபு.

அப்பாயிரம் பொதுவுஞ் சிறப்புமென இருவகைத்து, "பாயிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே." என்பவாகலின். ஈவோன் றன்மை முதலியன தன்னால் உரைக்கப்படும் நூற்கே உரியவன்றி எல்லா நூன்முகத்தும் உரைக்கப்படுதலின் அவற்றை உணர்த்தும பாயிரம் பொதுவெனவும், ஆக்கியோன்பெயர் முதலியன தன்னால் உரைக்கப்படும் நூற்கே உரியவாய் அவ்வொரு நூன்முகத்துமே உரைக்கப்படுதலின் அவற்றை உணர்த்தும் பாயிரஞ் சிறப்பெனவுமாயிற்றென்க.

அவற்றுட் பொதுப்பாயிரம் ஈவோன்றன்மையும் ஈதலியற்கையுங் கொள்வோன்றன்மையுங் கோடன்மரபுமென நான்குவகைத்து, "ஈவோன் றன்மை யீத லியற்கை—கொள்வோன் றன்மை கோடன் மரபென—வீரிரண் டென்ப பொதுவின் றொகையே." என்பவாகலின். "நூலே நுவல்வோ னுவலுந் திறனே—கொள்வோன் கோடற் கூற்றா மைந்து—மெல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்" என்பதோர் சூத்திரம்பற்றி ஐந்தென்பாருமுளர். அஃதிலக்கணமன்று. அவயவமாகிய பாயிரத்துள் அவயவியாகிய நூல் அடங்காமையின். "நூலி னியல்பே நுவலி னோரிரு—பாயிரந் தோற்றி" என்பவாகலானும் நூன்முகம் முதலிய குறிகளானும் அஃததற்கு அவயவமாதல் அறிக.

இனி ஈவோர் கற்கப்படுவோருங் கற்கப்படாதோருமென இருவகையர், "கற்கப் படுவோர் படாதோ ரென்றா—வெனவிரு வகைய ரீவோ ரென்ப." என்பவாகலின். அவ்விருதிறத்தாரையுங் "குலனரு டெய்வங் கொள்கை மேன்மை—கலைபயி றெளிவு கட்டுரை வன்மை—நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியு—முலகிய லறிவோ டுயர்குண மினையவு—மமைபவ னூலுரை யாசிரி யன்னே." எனவுந், "தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்—பருவ முயற்சி யளவிற் பயத்தலு—மருவிய நன்னில மாண்பா கும்மே." எனவும், "அளக்க லாகா வளவும் பொருளுந்—துளக்க லாகா நிலையுந் தோற்றமும்—வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே." எனவும், "ஐயந் திரப் பொருளை யுணர்த்தலு—மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே." எனவும், "மங்கல மாகி யின்றி யமையா—தியாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்—பொழுதின் முகமலர் வுடையது பூவே." எனவும், ஒதிய இவற்றானும்; "மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பு—மழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலுங்—கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை—முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையு—முடையோ ரிலரா சிரிய ராகுதலே." எனவும், "பெய்த முறையன்றிப் பிறழ வுடன்றருஞ்—செய்தி கழற்பெய் குடத்தின் சீரே." எனவுந், "தானே தரக்கொளி னன்றித் தன்பான்—மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை." எனவும், "அரிதிற் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்—கெளிதீ வில்லது பருத்திக் குண்டிகை." எனவும், "பல்வகை யுதவி வழிபடு பண்பி—னல்லோ ரொழித் தல்லோர்க் களிக்குமுடத் தெங்கே." எனவும், ஒதிய இவற்றானும் முறையே காண்க.

இனி ஈதலியற்கை; "ஈத லியல்பே யியம்புங் காலைக்—காலமு மிடனும் வாலிதி னோக்கிச்—சிறந்துழி யிருந்துதன் றெய்வம் வாழ்த்தி—யுரைக்கப் படும்பொரு ளுள்ளத் தமைத்துப்—பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப்—பழிப்பில் பல்லுரை பயின்ற நாவினன்—விரையான் வெகுளான் விரும்பிமுக மலர்ந்து—கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்—கோட்டமின் மனத்தினூல் கொடுத்த லென்ப." எனவும், "பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப்—பழிப்பில் சூத்திரம் பன்னனான்கே." எனவும், அவற்றுட் "பாடங் கண்ணழி வுதாரண மென்றிவை—நாடித் திரிபில வாகுதல் பொழிப்பே." எனவுந், "தன்னூன் மருங்கினும் பிறநூன் மருங்கினுந்—துன்னிய கடாவின் புறந்தோன்றும் விகற்பம்—பன்னிய வகல மென்மனார் புலவர்." எனவும், "ஏது வினுங்கவை துடைத்த னுட்பம்." எனவுந், "துடைத்துக் கொள் பொருளை யெச்ச மென்ப." எனவும், ஓதிய இவற்றான் அறிக.

இனிக் கொள்வோருங் கற்பிக்கப்படுவோருங் கற்பிக்கப்படாதோருமென இருவகையர், "கற்பிக்கப் படுவோர் படாதோரென்று—வெனவிரு வகைய ரேற்போ ரென்ப." என்பவாகலின். அவ்விருதிறத்தாரையுந் "தன்மக னாசான் மகனே மன்மகன்—பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே—யுரைகோ ளாளனெனவெடுத் தோதிய—வறுவகை யவரு ளொருவ ராகிச்—செவ்விதிற் றெரிதன் மெய்யுறக் காண்ட—லுரைபல கேட்ட லுறுபெருங் காத—றெய்வத்தின் மதித்த றிரிபோன் றின்மை—யன்னங் கிளியே நன்னிற நெய்யரி—யானை யானே றென்றிவை போற—லுடைய ராகி நடையறிந் தொழுகுநர்—கற்பிக் கப்படுங் கடப்பாட் டாரே." எனவும், "பாலு நீரும் பாற்படப் பிரித்த—லன்னத் தியல்பென வறிந்தனர் கொளலே." எனவுங், "கிளந்தவா கிளத்தல் கிளியின தியல்பே." எனவும், "எந்நிறந் தோய்தற்கு மேற்ப தாத—னன்னிறத் தியல்பென நாடினர் கொளலே." எனவும், "நல்லவை யகத்திட்டு நவைபுறத் திடுவது—நெய்யரி மாண்பென நினைதல் வேண்டும்." எனவுங், "குழூவுபடூஉப் புறந்தருதல் குஞ்சரத் தியல்பே." எனவும், "பிறந்த வொலியின் பெற்றியோர்ந் துணர்தல்—சிறந்த வானேற்றின் செய்தி யென்ப." எனவும், ஓதிய இவற்றானுங்; "களிமடி மானி காமி கள்வன்—பிணிய னேழை பிணக்கன் சினத்தன்—றுயில்வோன் மந்தன் றொன்னூற் கஞ்சித்—தடுமா றுளத்தன் றறுகணன் பாவி—படிறன் பொச்சாப்பன் பலகா னகுவோன்—மொழிவ துணராதான் முன்னிருந்து காய்வோன்—

றிருகு மனத்தோன் றீயதே யோர்ப்போன்—குரங்கெறி விளங்கா யெருமை யாடே—தோணி யன்ன கோணிலை யாளர்—கற்பிக் கப் படாக் கடப்பாட் டோரே." எனவுங், "கல்லா லெறிந்து கருது பயன் கொள்வோன்—குரங்கெறி விளங்கா யாமெனக் கூறுவர்." எனவும், "விலங்கி வீழ்ந்து வெண்ணீ ருழக்கிக்—கலங்கல்செய் தருந்தல் காரா மேற்றே." எனவும், "ஒன்றிடை யார வுறினுங் குளகு—சென்றுசென் றருந்தல் யாட்டின் சீரே." எனவும், "நீரிடை யன்றி நிலத்திடை யோடாச் சீருடையதுவே தோணி யென்ப." எனவும், ஓதிய இவற்றானும் முறையே காண்க.

இனிக் கோடன் மரபு: "கோடன் மரபு கூறுங் காலைப்—பொழுதொடு சென்று வழிபடன் முனியான்—முன்னும் பின்னு மிரவினும் பகலினு—மகலா னாகி யன்பொடு கெழீஇக்—குணத் தொடு பழகிக் குறிப்பின் வழிநின்—றாசற வுணர்ந்தோன் வாவென வந்தாங்—கிருவென விருந்தே டவிழென வவிழ்த்துச்—சொல்லெ னச் சொல்லிச் செல்லெனச் சென்று—பருகுவ னன்ன வார்வத்த னாகிச்—சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்—செவிவா யாக நெஞ்சுகள னாகக்—கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத் துப்—போற்றிக் கோட லதுவதன் பண்பே." எனவும், "அழலி னீங்கா னணுகா னஞ்சி—நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமொ—டெத்திற மாசா னுவக்கு மத்திற—மறத்திற் றிரியாப் படர்ச்சி வழி பாடே." எனவும், "நூல்போற் றுதலே நுவலின் வழக்கறிதல்—பாடம் போற்றல் கேட்டவை நினைத்த—லாசாற் சார்ந்தவை யமை வரக் கேட்ட—லம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்—வினா தல் வினாயவை விடுத்த லென்றிவை—கடனாக் கோட லென்மனார் புலவர்." எனவும், "ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பிற்—பெருக நூலிற் பிழைபா டிலனே—முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கு—மாசா னுரைத்த தமைவரக் கொளினுங்—காற்கூ றல்லது பற்றல னாகு—மவ்வினை யாளரொடு பயில்வகை யொரு பாற்—செவ்விதி னுரைப்ப வவ்விரு பாலு—மையற நிரம்பு மாண் பின வாகும்." எனவும், ஓதிய இவற்றான் அறிக.

இன்னுங் கற்கப்படுவோர் கற்பிக்கப்படுவோரென்னும் அவ் விருதிறத்தாரையும் "வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்—வான்யா றன்ன தூய்மையும் வான்யாறு—நிலம்படர்ந் தன்ன நலம் பட ரொழுக்கமுந்—திங்க ளன்ன கல்வியுந் திங்களொடு—ஞாயி றன்ன வாய்மையும் யாவது—மஃகா வன்பும் வெஃகா வுள்ளமுந்—துலைநா வன்ன சமனிலை யுளப்பட—வெண்வகை யுறப்பின ராகித்

திண்ணிதின்—வேளாண் வாழ்க்கையுந் தாஅ ளாண்மையு—மூல கிய லறிதலு நிலைஇய தோற்றமும்—பொறையு நிறையும் பொச் சாப் பின்மையு—மறிவு முருவு மாற்றலும் புகழுஞ்—சொற்பொரு ளுணர்த்துஞ் சொல்ல் வன்மையுங்—கற்போர் நெஞ்சங் காமுறப் படுதலு—மின்னோ ரன்ன தொன்னெறி மரபினர்—பன்னருஞ் சிறப்பி னல்லாசிரிய—ரறனே பொருட்பய னின்பென மூன்றின்— றிறனறி பனுவல் செப்புங் காலை—முன்னர்க் கூறிய வெண்வகை யுறுப்பினு—ளேற்பன வுடைய ராகிப் பாற்படச்—சொல்லிய பொருண்மை சொல்லியாங் குணர்தலுஞ்—சொல்லிய பொரு ளொடு சூழ்ந்துநன் குணர்தலுந்—தன்னோ ரன்னோர்க்குத் தான் பயப் படுதலுஞ்—செய்ந்நன்றி யறிதலுந் தீச்சார் பின்மையு—மடி தடு மாற்ற மானம் பொச்சாப்புக்—கடுநோய் சீற்றங் களவே காம—மென்றிவை யின்மையுஞ் சென்றுவழி படுதலு—மறத்துறை வழாமையுங் குறிப்பறிந் தொழுகலுங்—கேட்டவை நினைத்தலும் பாடம் போற்றலு—மீட்டவை வினவலும் விடுத்தலு முரைத் தலு—முடைய ராகி நடையறிந் தியலுநர்—நன்மா ணாக்க ரென்ப மண்மிசைத்—தொன்னூற் புலமைத் துணிபுணர் வோரே." என்ப தனுன் முறையே காண்க.

இன்னும் இதன் எதிர்மறைமுகத்தாற் கற்கப்படாதோர் கற்பி க்கப்படாதோரென்னும் அவ்விருதிறத்தாரையும் முறையேகாண்க.

பொதுப்பாயிரத்திலக்கணம் முற்றிற்று.



## உ-வது. சிறப்புப்பாயிரத்திலக்கணம்.

இனித், தன்னால் உரைக்கப்படும் நூற்கு இன்றியமையாத சிறப்புப்பாயிரம் ஆக்கியோன்பெயரும் வழியும் எல்லையும் நூற்பெ யரும் யாப்பும் நுதலியபொருளுங் கேட்போரும் பயனுங் காலமுங் களனுங் காரணமுமெனப் பதினொருவகைத்து, "ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை—நூற்பெயர் யாப்பே நுதலிய பொரு ளே—கேட்போர் பயனே யென்றிவை யெட்டொடுங்—காலங் களனே காரண மென்றிம்—மூன்று முளப்பட முடிந்த பதி னொன்றுஞ்—சிறப்பின் றொகையெனத் தேறல் வேண்டும்." என்பவாகலின்.

இனிச் சிறப்புப்பாயிரத்திலக்கணஞ் செப்புமாறு: "பாயிரத் திலக்கணம் பகருங் காலை—நூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கி—யாசிரிய மானும் வெண்பா வானு—மருவிய வகையா

னுவறல் வேண்டும்." இதனான் அறிக. நூல்செய்தான் பாயிரஞ்செய்யிற் தன்னைப் புகழ்ந்தானும், "தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினுந்—தான்றற் புகழ்த றகுதி யன்றே." என்பவாகலின். அங்ஙனம் புகழ்தல் ஆகாமையின் அப்பாயிரஞ் செய்வார் இவரென்பதூஉந் தன்னைப் புகழும் இடன் இவ்விடனென்பதூஉந் "தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்— றன்மா ணாக்கன் றகுமுரை யாளனென்—றின்னோர் பாயிர மியம்புதல் கடனே." எனவும், "மன்னுடை மன்றத் தோலைத் தூக்கினுந்—தன்னுடை யாற்ற லுணரா ரிடையினு—மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினுந் தன்னை மறுதலை பழித்த காலையுந்—தன்னைப் புகழ்தலுந் தகும் புல வோர்க்கே." எனவும், வருவனவற்றான் முறையே காண்க.

அவருள் இந்நூற்பாயிரஞ்செய்தார் தன்மாணாக்கராகிய தன் புதல்வர் சதாசிவநாவலரென உணர்க.

சிறப்புப்பாயிரத்திலக்கணம் முற்றிற்று.



பொதுப்பாயிரம் முற்றுப்பெற்றது.



## சிறப்புப்பாயிரம்.



கடல்விளிம் புடுத்த கண்ணகன் ஞாலந்
தடரும்வல் லிருடுரந் தனைத்தையும் விளக்கும்
பல்கதிர்ப் பரிதியிற் பரம்பர னருளா
லுள்ளகத் திருள்கடந் துறுபொரு ளவற்றையும்
பாற்படத் தொகுத்த பதினெண் மொழியுளு
மேற்கடல் கீழ்க்கடல் வேங்கடங் குமரி
யாகிய வெல்லையு ளருந்தமிட் பௌவத்
தெழுத்துமுதன் மூன்றையும் யாவருந் தெரியத்
தொகைவகை விரியிற் பகருக வென்று
வேதியர் திலகன் விரவலர் கோளரி
மாதைய ரதிபன் வரகுண மேரு
கல்விக் கெல்லை கருணைக் காகரம்
பெருமான் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய
திருமா லுலகஞ் செவ்விதிற் புரக்கு

மேதகு புகழ்த்திரு வேங்கட நாத
னோதின னாக வுவகைமீ தூர
முன்னோர் நூலின் முடிபு நோக்கிச்
சொல்லும் பொருளு மொல்வன தழீஇப்
பல்சுவைக் கரும்பி னொருவட் டேய்ப்ப
விலக்கண விளக்கமென் றொருபெயர் நிறீஇப்
புலப்படுத் தியலுறப் பொருளவிரித் துரைத்தனன்
பவத்தொகை யகற்றுந் தவத்தின் வரம்பானோன்
பன்மீ னுப்பட் பான்மதி போல
வன்மீக நாத மாதவன் வரத்தா
லந்த ணூருர் வந்தருள் செல்வன்
வலம்புரி யொருமுத் தன்ன
நலம்புரி வைத்திய நாத தேசிகனே.

இதன்பொருள். கடலினைத் தன்மருங்கிடத்தே சூழ்ந்த இடம் அகன்ற உலகின்கண்ணே செறிந்த கடிதாகிய இருளை ஓட்டி நிலநீர்முதலிய எல்லாப் பொருளையும் விளக்கும் பலகிரணங்களு டைய ஞாயிறுபோல எவற்றிற்கும் மேலான இறைவன்றனது அருளினாலே உள்ளத்திடத்து அவிச்சையை அகற்றி உறுதி பயக் கும் அறமுதலிய பொருளெல்லாவற்றையும் பகுதிப்பட விளக்கிய பதினெட்டுமொழியுள்ளுங் குடகடலுங் குணகடலும் வடவேங்கட மும் தென்குமரியுமாகிய நான்கெல்லைக்குள் வழங்கும் அரிய தமி ழாகிய கடலிடத்து உளவாகிய எழுத்துஞ் சொல்லும் பொருளுமா கிய மூன்றனையும் எல்லாரும் ஆராய்ந்தறியும்பொருட்டுத் தொகை யானும் வகையானும் விரியானுங் கூறுவாயாகவென்று அந்தண ருட் திலகம்போலச் சிறந்தோன் குறுகலர்க்கோர் சிங்கவேறொப் பான் மாதையென்னும் மாநகரத்துள்ளார்க்குத் தலைவன் நற்குண ங்களெல்லாந் திரண்டதொரு மேருக்குன்றங் கல்வியாகிய கடலுக் கோர் வரம்பாயுள்ளான் அருளினுக்குப் பிறப்பிடமாயினோன் பெரு மாளென்னும் வேதியன் உண்மைத்தவத்தினாற் பெற்ற பேறெனை உலகத்தார் வாழ்த்த உதயஞ்செய்த திருமால் உலகத்தையெல் லாம் நீதிகோடாமற் காத்தருளுகின்ற தலைமைபூண்ட புகழைப்பொ ருந்திய திருவேங்கடநாதனென்னும் இயற்பெயரினையுடையோன் அருளிச்செய்தனனாக மகிழ்ச்சி மேன்மேற் கிளைப்ப முன்னோர் கூறிய நூல்களினுடைய முடிபினை ஐயந்திரிபற ஆராய்ந்து அவ ரோதிய சூத்திரத்துள்ளும் அவற்றின்பொருளுள்ளும் ஈண்டைக்குப்

பொருந்துவனவற்றை அணைத்துக்கொண்டு பலவாகிய சுவையை யுடைய கரும்பினின்றும் உளதாகிய ஒரு சருக்கரைக்கட்டிபோல இலக்கணவிளக்கமென்று ஒரு பெயரை நிலைநிறுத்தி விளக்கி உண்மையுற எழுத்துமுதலிய மூன்றுபொருளையுந் தெளியக்கூறினான் பிறவித்துன்பம் முழுதையும் போக்குந் தவத்திற்கோர் அணையாயினேன் தாரகாகணங்களின் நடுவண் விளங்கும் வெண்டிங்கள் போல வன்மீகநாதனென்னும் பெரிய தவத்தினையுடையோன் வரத்தினாற் திருவாரூரில் உதயஞ்செய்த திருவாளன் வலம்புரிச் சங்கம் ஈன்ற தனிமுத்தம் போன்ற நல்லொழுக்கங்களை மேற்கொண்டு செலுத்தும் வைத்தியநாதனென்னும் இயற்பெயரை யுடைய குரவன் என்றவாறு.

வைத்தியநாதனெனவே ஆக்கியோன்பெயரும், முன்னோர் நூலின் முடிபு நோக்கியெனவே வழியும், மேற்கடல் கீழ்க்கடல் வேங்கடங் குமரியாகிய எல்லையினெனவே எல்லையும், இலக்கண விளக்கமென்றொருபெயர் நிறீஇயெனவே நூற்பெயருந், தொகை வகைவிரியிற் பகருகவென்றுவெனவே யாப்பும், எழுத்து முதன் மூன்றையுமெனவே நுதலியபொருளும், யாவருந் தெரியவெனவே பயனும், மேதகுபுகழ்த் திருவேங்கடநாதனேதினைஃவெனவே காரணமும், அவன்காலத்தெனவும், அவன் அவைக்களத்தென வும் அவன் அவையுள்ளார் கேட்டோரெனவுங், காலமுங்களனுங் கேட்டோருமாகிய பதினொருவகையும் இச்சிறப்புப்பாயிரத்துட் போந்தவாறுணர்க.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



பாயிரம் முற்றுப்பெற்றது.



உ

கணபதி துணை.

# இலக்கணவிளக்கம்.

முதலாவது

## எழுத்ததிகாரம்.

### க-வது எழுத்தியல்.

க. மலைமக ளொருபான் மணந்துல களித்த
தலைவனை வணங்கிச் சாற்றுவ னெழுத்தே.

என்பது சூத்திரம். இவ்வதிகாரம் எழுத்துணர்த்தினமையான் எழுத்ததிகாரமென்னும் பெயர்த்து. எழுத்தையுணர்த்திய அதிகாரமென விரிக்க. எழுத்தென்றது அதன் இலக்கணத்தை. அதிகாரமென்றது முறைமை. இவ்வதிகாரத்துள் ஐவகை ஒத்தினான் எழுத்திலக்கணம் உணர்த்துகின்றார், அவற்றுள் இம்முதலோத்து மொழியாக்கமும் அம்மொழிகள் தம்மோடும் உருபோடும் புணர்வுழித் தோன்றுஞ் செய்கையும்போலன்றித் தனித்தும் மொழிப்படுத்தும் எழுத்தின்கட் கிடப்பனவாகக் கூறும் எண் பெயர் முதலிய பத்திலக்கணமும் உணர்த்திற்றாகலான் எழுத்தியலென்னும் பெயர்த்து. இதனுள் இத்தலைச்சூத்திரங் கூறத்தொடங்கிய பொருள் இனிது முடியும்பொருட்டு வணக்கமும் அதனான் முடிபெய்தும் பொருளும் உணர்த்துவதாகிய சிறப்புப்பாயிரங்கூறுகின்றது.

இதன்பொருள். மலையரசன் மகளாகிய உமாதேவியைத் தனதொரு கூற்றின்கண்ணே கலந்து உலகத்தைப் படைத்த இறைவனைத்தொழுது யான்கூறுவன் எழுத்திலக்கணத்தை என்றவாறு.

மலையென்பது மங்கலமொழியாதலின் முதற்கண் மங்கலங் கூறுதன் மரபெனக்கருதி மலையென்றும், இந்நூல் நின்று நிலவுதல்

வேண்டி மலைமகளொருபான் மணந்தென்றும், மலரோன்செயலும் இவன்செயலென்பார் உலகளித்தவென்றும், யாவர்க்கும் உயர்ந் தோனென்பார் தலைவனென்றும், "மனமொழி மெய்களின் வணங் குது மகிழ்ந்தே" என்பவாகலின் மனத்தாற் றுணிவுதோன்ற நினைத் தலும் மொழியாற் பணிவுதோன்ற வாழ்த்தலுந் தலையாற் றணிவு தோன்ற இறைஞ்சலும் அடங்கப் பொதுப்படவணங்கியென்றும், அவ்வாறு வணங்கியோனல் யாதும் முடிபெய்துதலிற் சாற்றுவ னென்றும், ஆகுபெயரான் எழுத்திலக்கணத்தை எழுத்தென்றுங் கூறினர். மகளையென்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக் கது, சூத்திரமுஞ் செய்யுளாகலின். (௧)

௨. எண்பெயர் முறைபிறப் புருவளவு முதலீ
றிடைநிலை போலியொடு பதம்புணர் புளப்பட
வாறிரு பகுதித் ததுவென மொழிப.

இது மேற்கூறுவலென்ற எழுத்திலக்கணம் இனைத்துவகை யான் உணர்த்தப்படுமென்று அதுபடும் பாகுபாடு தொகுத்தமொ ழியான் வகுத்துக்கூறுகின்றது.

இ - ள். எழுத்து இனைத்தென்கின்ற எண்ணும் இன்னபெ யரினவென்கின்ற பெயரும் இன்னமுறையினவென்கின்ற முறை யும் இன்னபிறப்பினவென்கின்ற பிறப்பும் இன்னவடிவினவென் கின்ற வடிவும் இன்ன அளவினவென்கின்ற அளவும் மொழிக்கு முதனிற்பன இவையென்கின்ற முதனிலையும் இறுதிநிற்பன இவை யென்கின்ற இறுதிநிலையும் இடைநிற்பன இவையென்கின்ற மயக் கமுஞ் சிலவெழுத்துக்கள்கூடிச் சிலவெழுத்துக்கள்போல இசைக் குமது கொள்ளற்கவென விலக்கும் எழுத்துப்போலியுமாகிய பத் தனோடு அவ்வெழுத்தானாகிய மொழியும் அம்மொழி தம்மோடும் உருபோடும் புணரும் புணர்ச்சியுமாகிய இரண்டுங் கூடப் பன் னிருவகையினையுடைத்தாம் மேற்கூறவலென்ற எழுத்திலக்கண மென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

உருவென்றது ஈண்டு வரிவடிவை. அது மனத்தானுணரும் நுண்ணுணர்வில்லோரும் உணர்தற்பொருட்டு வட்டஞ் சதுரம் முதலிய வடிவிற்றாக வேறுவேறெழுதப்பட்டுக் கட்புலனாயே நிற் பது. கட்புலனாகாது கருத்துப்பொருளாயே நிற்கும் ஏனைவடிவுந் தன்மையும் முதனூலாசிரியனே உணருமாகலின் ஏனையோரால் உணர்தலரிது. அவ்வடிவு ஆராயுங்காலத்துக் குழலகத்திற்கூறிற் குழல்வடிவுங் குடத்தகத்திற் கூறிற் குடவடிவும் வெள்ளிடையிற்

கூறின் எல்லாத்திசையும் நீர்த்தரங்கம்போலவும் பெற்றபெற்றவடிவே தமக்கு வடிவாமென்றுணர்க. எழுத்துக்களது குறைவுங் கூட்டமும் பிரிவும் இனமும் ஒன்றுபலவாதலுந் திரிந்ததன்றிரிபு அதுவென்றலும் பிறிதென்றலும் அதுவும்பிறிதுமென்றலும் நிலையிற்றென்றலும் நிலையாதென்றலும் நிலையிற்றும்நிலையாதுமென்றலுமாகிய இன்னோரன்ன பலவகையான் உணர்த்துவாருமுளர். அவற்றுட் திரிந்ததன்றிரிபு அதுவும்பிறிதுமென்றலும் நிலையிற்றும்நிலையாதுமென்றலுமாகிய இந்நயம்பற்றி இவர் இலக்கணங்கூறாமையின் இவையொழித்து ஏனையவெல்லாம் இப்பன்னிருபகுதியுள் அடங்கும். அவையடங்குமிடத்து எழுத்துக்களது குறைவுங் கூட்டமும் பிரிவுஞ் சார்பிற்றோற்றத்தும் இனம் பெயருள்ளும் முறையுள்ளும் ஒழிந்தனவெல்லாம் புணர்ச்சிக்கண்ணும் அடங்கும். அஃது ஆங்காங்குணர்க. (உ)

ந. மொழிக்கா ரணமா நாதகா ரியவொலி
யெழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.

இது மேலெழுத்தென்றது இன்னதென்பதூஉம் அதன்பகுதியும் உணர்த்துகின்றது.

இ - ள். மொழிக்கு முதற்காரணமாகியும் நாதத்தினது காரியமாகியும் வரும் ஓசை எழுத்தெனப்படும். அவ்வெழுத்து முதலெழுத்துஞ் சார்பெழுத்துமென இருபகுதியையுடைத்தாம். எ - று.

எழுத்தோசை காரணமாமாறும் மொழி அதன் காரியமாமாறும் நாதங் காரணமாமாறும் எழுத்தோசை அதன்காரியமாமாறும் பதவியலுள்ளும் பிறப்பியலுள்ளும் முறையே காண்க. கடலொலி சங்கொலி முரசு வீணை இலதை முதலிய ஒலிகள் எழுத்தெனப்படா, அவை மொழிக்குக் காரணமாகாமையின். (ந)

ச. உயிரு முடம்புமென முதலிரு வகைத்தவற்
றுயிரீ ராறுமெய் மூவா றென்ப
வம்முப் பானு மதனது விரியே.

இது மேற் றொகையான் ஒன்றாகக் கூறிய முதலெழுத்திற்கு வகையும் விரியுங் கூறுகின்றது.

இ - ள். உயிரும் ஒற்றுமென முதலெழுத்து இருபகுதியையுடைத்தென்றும் அவ்விரண்டினுள் உயிர் பன்னிரண்டென்றும்

மெய் பதினெட்டென்றும் அவ்விரண்டன்பகுதியாகிய முப்பதெழுத்தும் முதலெழுத்தினது விரியாமென்றுங் கூறுவர் ஆசிரியர். எ-று.

ரு. குற்றிய லிகரங் குற்றிய லுகர
மாய்தமோ டுயிர்மெ யீரள பையௌ
மஃகான் குறுக்க முள்ளுறுத் தொன்பதுஞ்
சார்பின் பால வென்மனு ரவற்று
ளுயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுயி ரளபே
ழொற்றளபு பதினென் ஞென்றொன் றேனைய
வாயிரு நூற்றெண் ணைந்துமதன் விரியே.

இது மேற் தொகையான் ஒன்றாகக் கூறிய சார்பெழுத்திற்கு வகையும் விரியுங் கூறுகின்றது.

இ-ள். குற்றியலிகரமுங் குற்றியலுகரமும் ஆய்தமுமாகிய மூன்றனோடு உயிர்மெய்யும் உயிரளபெடையும் ஒற்றளபெடையும் ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும் மகரக்குறுக்கமுமாகிய ஆறனையுந் தலைப்பெய்தலான் அவ்வொன்பதெழுத்துஞ் சார்பெழுத்தின் திறத்தவாயினவென்றும் அவ்வொன்பதனுள் உயிர்மெய் இருநூற்றொருபத்தாறென்றும் உயிரளபெடை ஏழென்றும் ஒற்றளபெடை பதினொன்றென்றும் ஒழிந்த ஆறும் ஓரோவொன்றொன்றென்றும் அவ்வொன்பதன்பகுதியாகிய இருநூற்றுநாற்பதும் அச்சார்பெழுத்தினது விரியாமென்றுங் கூறுவர் ஆசிரியர். எ - று.

இவை இங்ஙனமாதல் தத்தம் விதிச்சூத்திரங்களுட் காண்க. எனவே, எழுத்தெனத் தொகையான் ஒன்றும் முதலெழுத்துஞ் சார்பெழுத்துமென வகையான் இரண்டும் அவ்விரண்டன்பகுதியுங்கூட்ட விரியாற் தமிழெழுத்து இருநூற்றெழுபதுமாமென உய்த்துணர்க.

"எழுத்தெனப் படுப,வகரமுத—னகர விறுவாய் முப்பஃதென்ப—சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே." "அவைதாங் குற்றிய லிகரங் குற்றிய லுகர— மாய்த மென்ற—முப்பாற் புள்ளியு மெழுத்தோ ரன்ன" என இவ்வாறு முதல்சார்பென வகுத்துக் கொண்டவற்றுள் இவைமூன்றுஞ் சார்பெழுத்தென்ற ஆசிரியர் தொல்காப்பியனாரும் ஏனையாறனையும் பின்னரொருவாற்றாற் தழுவுதலானும் மூன்றுவதோர் பகுதியின்றுதலானும் முதலெழுத்தாந்

தன்மை இவற்றிற்கு இன்மையானுஞ் சார்பிற் றோன்றுதலானும் இவ்வாறனையும் அவற்றொடு தலைப்பெய்து ஒன்பதுஞ் சார்பின்பா லவென்றார் இந்நூலுடையாரென்றுணர்க.

அற்றேல் ஆசிரியர் செய்யுளியலுட்கூறிய ஒற்றளபெடையை இவர் ஈண்டுக்கூறியதென்னையெனின், அவர் எதிரதுபோற்றி ஐகாரக்குறுக்கம் முதலியவற்றை எழுத்தோத்தினுள் உரைத்தாங்கு உரைத்ததென்க.

ஆய்தக்குறுக்கமொன்று உளதென்றும் அதனோடுகூடச் சார் பெழுத்துப் பத்தாமென்றும் அதன்விரித்தொகை முந்நூற்றறுபத் தொன்பதாமென்றுங் கூறுவாரும் உளராலோவெனின், "குறிய தன் முன்ன ராய்தப் புள்ளி—யுயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே." என ஒருமொழிக்கண்வரும் ஆய்தங்கூறி "ஈறியன் மருங்கினு மிசைமை தோன்றும்." என நிலைமொழியீறு வருமொ ழிமுதலொடு புணர்ந்துநடக்குமிடத்துங் கஃறீது முஃடீது எனத் தன் அரைமாத்திரையே இசைக்குந்தன்மை தோன்றுமென ஆசிரி யர்தொல்காப்பியனார் அதனைப் புணர்மொழிக்கண்வரும் ஆய்தமா கக் கூறினமையான் ஆய்தக்குறுக்கமொன்று இன்றெனவும் இன் றாகவே சார்பெழுத்துப் பத்தாமென்றல் பொருந்தாதெனவும் உயிர் மெய்யொழித்து ஏனையவெல்லாம் இடவேற்றுமையானன்றி எழுத் துவேற்றுமையான் அங்ஙனம் பல்காமையிற் சார்பெழுத்து முந் நூற்றறுபத்தொன்பதாமென்றல் நிரம்பாதெனவும் மறுக்க. இன் னும் இடையொற்றுக்கள் டகரறகரங்களோடு தொடராமைக்கு அவர் மெய்ம்மயக்கங் கூறிய சூத்திரங்களே கரியாகலிற் குற்றி கரக் குற்றுகரங்கட்கு அவ்விடவேற்றுமையுஞ் சாலாமையறிக.

சூ. அகர முதலவீ ராறுமுயி ரவற்றுள்
அஇ உஎ ஒக்குறில் ஆஈ
ஊஏ ஐஓ ஔநெடில் அஇ
உஇவை மொழிமுதல் வரிற்சுட் டெய்யா
முதலு மாவோ விறுதியு மேயிரு
வழியும் வினாவென வழங்கு மென்ப.

நிறுத்தமுறையானே பெயர்கூறுவனவற்றுள் இஃது உயிர் பெறும் பெயர்வேற்றுமை கூறுகின்றது.

இ - ள். அகரமாகிய முதலையுடைய பன்னீரெழுத்தும் உயி ரென்றும் பன்னிரண்டனுள் அ இ உ எ ஒ என்கின்ற ஐந்துங்

குறிலென்றும் ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்கின்ற ஏழும் நெடிலென்றுங் குற்றெழுத்துள் அ இ உ என்கின்ற இம்மூன்றும் மொழிமுதற்கட் சுட்டிப்பொருளுணர்த்திவரிற் சுட்டென்றும் எகரமும் யகரவாகாரமும் மொழிமுதற்கண்ணும் நெட்டெழுத்துள் ஆகார ஓகாரங்கள் ஈற்றின்கண்ணும் ஏகாரம் முதலினும் ஈற்றினும் வினப்பொருளுணர்த்திவரின் வினவென்றும் பெயர்பெற்று நடக்குமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

இது தொகைவகைவிரிபடச் செய்கின்ற நூலாகலானும் பொருளொப்புமையானும் உயிர்மெய்யும் உடன்கூறினர்.

மொழிமுதலீறுகளின் வரினெனப் பொதுப்படக் கூறியவதனன் இவை தத்தங்குறிப்பிற் பொருள்செய்த இடைச்சொற்களாய் ஒருமொழியைச் சார்ந்தும் அதற்குறுப்பாயும் ஏற்றபெற்றி வருமெனக் கொள்க.

வரலாறு; அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் அவன் இவன் உவன் எப்பொருள் எவன் யா யாவன் உண்கா உண்கோ உண்கே ஏவன் எனவரும். பிறவும் அன்ன.

மொழிமுதற்கட் தனித்துவரிற் சுட்டென்றாரும் உளராலோவெனின், "சுட்டுவகரம்" எனவுஞ், "சுட்டின்முன்னாய்தம்" எனவும், உறுப்பாய்வருவனவற்றையுஞ் சுட்டென்று அவர்தாமே ஆளுதலானும் ஆசிரியர் தொல்காப்பியனாரும் "அஇ உஅம் மூன்றுஞ் சுட்டு" எனப் பொதுப்படக்கூறிச் "சுட்டுமுதலுகரம்" எனவுஞ், "சுட்டுமுத லாகிய வையெ னிறுதி" எனவும், பிறாண்டும் உறுப்பாய் வருவனவற்றையுஞ் "சுட்டின் முன்னர் ஞநமத் தோன்றின்" எனவுஞ், "சுட்டி னியற்கை" எனவும், பிறாண்டுஞ் சார்ந்துவருவனவற்றையுஞ் சுட்டென்றாளுதலானும் அவர்க்கது கருத்தன்றென்க. (சு)

எ. ககர முதலமூ வாறுமெய் யவற்றுட்
கசட தபற வல்லெழுத்து மெல்லெழுத்து
ஙஞண நமன விடையெழுத் துணரின்
யரல வழள வென்மனுர் புலவர்.

இது மெய்பெறும் பெயர்வேற்றுமை கூறுகின்றது.

இ - ள். ககரமாகிய முதலையுடைய பதினெட்டெழுத்தினை யும் மெய்யென்றும் அப்பதினெட்டனுட் கசடதபறவென்னும் ஆறனையும் வல்லெழுத்தென்றும் ஙஞணநமனவென்னும் ஆறனையும் மெல்லெழுத்தென்றும் யரலவழளவென்னும் ஆறனையும் இடையெழுத்தென்றும் பெயரிட்டு ஆள்வர் அறிவுடையோர் பெயர்நிலைமையை ஆராயுமிடத்து. எ - று.

உணரினென்றதனான் முதல் சார்பு குற்றியலிகரங் குற்றியலுகரம் ஆய்தமென்றற்றொடக்கத்துப் பெயர்களும் ஆவி உடம்பு உறுப்பு ஒற்று உடல் புள்ளி அஃகேனங் தனிநிலையென்றற்றொடக்கத்துப் பரியாயநாமங்களும் ஏகார ஓகாரங்கள் வினாப்பொருளுணர்த்திவரின் வினாவெனப் பெயர்பெறுதலேயன்றிப் பிரிநிலை முதலிய பொருளுணர்த்திவரிற் பிரிநிலைமுதலிய பெயர்பெறுதலும் ஒழியிசைமுதலியபொருளுணர்த்திவரின் ஒழியிசைமுதலியபெயர் பெறுதலும் இவைவருதல் பெரும்பான்மையும் ஈற்றின்கண்ணே யெனவுங் கொள்க. இன்னும் அஆமுதலிய அஆமுதலியபெயர் பெறுதலும் உயிர்மெய்யாகியகாலத்தும் உயிர்மெய் குறில் நெடில் வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத்து எனப் பெயர்பெறுதலுந் தனியெழுத்திற்கேலாது வல்லினம் மெல்லினம் இடையினம் எனத் தொகுதிபற்றிவரும் பெயர்களுங் கொள்க.

இக்குறிகள் ஆட்சியுங் காரணமும் நோக்கி ஒன்றற்குரியவாயும் பலவற்றிற்குரியவாயும் வருமெனக்கொள்க. பலவற்றிற்குரியவாயும் வருமென்றலின் அப்பலவும் ஓரினமாதலும் பெற்றாம். இவற்றையாளுமாறு ஆங்காங்குணர்க.

உயிர்போல மெய்களை இயக்குதலான் உயிரென்றுந், தமக்கினமாகி ஈரளபிசைக்கும் நெட்டெழுத்துக்களை நோக்கத் தாங்குறியவாய் ஓரளபிசைத்தலாற் குறிலென்றுந், தமக்கினமாகி ஓரளபிசைக்குங் குற்றெழுத்துக்களை நோக்கத் தாம் நெடியவாய் ஈரளபிசைத்தலான் நெடிலென்றுஞ், சுட்டுப்பொருளுணர்த்தலாற் சுட்டென்றும், வினாப்பொருளுணர்த்தலான் வினாவென்றும், மெய்போல உயிரான் இயங்குதலான் மெய்யென்றும், மெல்லெழுத்தையும் இடையெழுத்தையும் நோக்கத் தாம் வல்லென்றிசைத்தலானும் வல்லென்ற தலைவழியாற் பிறத்தலானும் வல்லெழுத்தென்றும், வல்லெழுத்தையும் இடையெழுத்தையும் நோக்கத் தாம் மெல்லென்றிசைத்தலானும் மெல்லென்ற மூக்குவழியாற் பிறத்தலானும் மெல்லெழுத்தென்றும், மெல்லெழுத்தையும் வல்லெழுத்

தையும் நோக்கத் தாம் இடைநிகரவாயொலித்தலானும் இடைநி கர்த்தாய மிடற்றுவழியாற் பிறத்தலானும் இடையெழுத்தென்றுந், தம்மால் இயலுஞ் சார்பெழுத்திற்குக் காரணமாகி முதனிற்றலான் முதலெழுத்தென்றும், அவையே தம்மொடு தாஞ்சார்ந்தும் இடஞ் சார்ந்தும் பற்றுக்கோடுசார்ந்துந் தோன்றலாற் சார்பெழுத்தென் றும், ஓரளபிசைக்கும் இகர உகரங்குறுகி அரையளபாயிசைத்த லாற் குற்றியலிகரங் குற்றியலுகரமென்றும், அடுப்புக்கூட்டுப் போல ஆய்தவடிவிற்றாக எழுதப்படுதலான் ஆய்தமென்றும், உயி ரும்மெய்யுங்கூடி ஒலித்தலான் உயிர்மெய்யென்றும், உயிரளபெ டுத்தலான் உயிரளபெடையென்றும், ஒற்றளபெடுத்தலான் ஒற்றள பெடையென்றும், ஈரளபிசைக்கும் ஐகார ஒளகாரங் குறுகி ஓரள பிசைத்தலான் ஐகாரக்குறுக்கம் ஒளகாரக்குறுக்கமென்றும், அரை யளபிசைக்கும் மகரங்குறுகிக் காலளபிசைத்தலான் மகரக்குறுக்க மென்றும், அ ஆ என்பன அ ஆ என இசைத்தலான் அஆ என்றுங் காரணக்குறியாயினவாறுணர்க. பிறவும் அன்ன.

ஐகார ஒளகாரங்கள் குறிய எழுத்தின் நெடியவாதற்குக் குற் றெழுத்தாகிய இனந் தமக்கின்றேனும் அளவொப்புமையான் நெடி லாமெனக்கொள்க. மெய் குற்றெழுத்திற்குறுகி அரையளபிசைக்கு மேனுங் குற்றெழுத்தெனப்பெறா ஓரளபிசைக்கும் மெய் தமக்கின மாக இன்மையின். (எ)

அ. தோற்ற மளபு செய்கை பொருள்வடி
வேற்றன வொத்தலி னேற்புடை யினத்தினுஞ்
சிறப்பினு நெறிப்படச் செறிந்தீண் டம்முத
னடத்த றானே முறையெனல் வேண்டும்.

இது நிறுத்தமுறையானே முறைகூறுகின்றது.

இ - ள். இடனும் முயற்சியுமாகிய பிறப்பும் மாத்திரையும் புணர்ச்சிக்கப்பட்டுஞ் செய்கையும் பொருளும் வடிவுமாகிய இவற் றுட் பொருந்தியன ஒத்தலான் ஒன்றற்கொன்று பொருத்தமுடைய இனத்தினானுஞ் சிறப்பினானும் ஒழுங்குபட ஒன்றன்பின்னர் ஒன்று இயைந்து நெடுங்கணக்கினுள் அகரமுதலாக நடத்தறானே நூலுள் ளும் முறையென்று சொல்லுதலை விரும்பும் ஆசிரியன். எ - று.

நெறிப்பட என்றதனாற் தம்மிற் சேர்ந்துவருஞ் சொற்கள் பலவாதலுஞ் சந்தவின்பத்திற்கு இயைபுடைமையும் இன்றேரன்

னபிறவும் இனமாதற்கும் இனமாதற்கு இயைபுடையன முறையாதற்குங் கருவியாமெனக்கொள்க. முறைக்கு ஏதுச்செய்வார் போன்று இனம் அடைத்தலுஞ்செய்தாரென்பதூஉமாயிற்று. ஒப்புழி முழுதொத்தலும் ஒருபுடையொத்தலும் ஓர்ந்துணர்க.

வரலாறு; அஆக்கள் பிறப்பானுஞ் செய்கையானும் அங்கு ஆங்கு என்னும் பொருளானும் வடிவானும், இஈக்கள் பிறப்பானுஞ் செய்கையானும் இங்கு ஈங்கு என்னும் பொருளானும், உஊக்கள் பிறப்பானுஞ் செய்கையானும் உங்கு ஊங்கு என்னும் பொருளானும் வடிவானும், எஏக்கள் பிறப்பானுஞ் செய்கையானும் எவன் ஏவன் என்னும் பொருளானும் வடிவானும், ஒஓக்கள் பிறப்பானுஞ் செய்கையானும் வடிவானும் ஒத்து ஓரினமாயின. இன்னும் இவை அளபெடுப்புழி நெட்டெழுத்தோடு குற்றெழுத்திற்கு ஓசை இசையுமாற்றானும் ஓரினமாமென்றுணர்க. குற்றெழுத்துக்களை முன்னாகக் கூறி அவற்றிற்கு இனமொத்த நெட்டெழுத்துக்களை அவற்றின் பின்னாகக் கூறினார், ஒருமாத்திரைகூறியே இரண்டுமாத்திரை கூறவேண்டுதலின். அன்றி இரண்டை முற்கூறின் ஆகாது, ஒன்று நின்று அதனோடு பின்னரும் ஒன்று கூடியே இரண்டாவதன்றி இரண்டென்பதொன்று இன்றாகலின். இதனான் ஒன்றுதான் பல கூடியே எண்விரிந்ததென்றுணர்க. கஙக்களுஞ் சஞக்களும் டணக்களுந் தநக்களும் பமக்களும் முயற்சியானும் மாத்திரையானுஞ் செய்கையானும், யரக்கள் இடத்தானும் மாத்திரையானுஞ் செய்கையானும், லவக்கள் இடத்தானும் மாத்திரையானுங் கல்வலிது சொல்வலிது என்றாற்போலத் தம்மிற் சேர்ந்துவருஞ் சொற்கள் பலவாதலானும், ழளக்கள் இடத்தானும் மாத்திரையானும் இடையெழுத்து யரலவழள என்றாற் சந்தவின்பத்திற்கு இயைபாதலானும், றனக்கள் முயற்சியானும் மாத்திரையானுஞ் செய்கையானும் ஒத்து ஓரினமாயின.

இனி முறைவருமாறு; "அகர முதல வெழுத்தெல்லா மாதி— பகவன் முதற்றே யுலகு." எனத் திருவள்ளுவனார் உவமைகூறிய வாற்றானுங் கண்ணன் எழுத்துக்களுள் அகரமாய் நின்றேன்யான் என உண்மைகூறியவாற்றானும் இறைவன் எல்லாப்பொருளின்கண்ணுங் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்குமாறு எல்லார்க்குமொப்ப முடிந்தாற்போல அகரமும் எல்லாவெழுத்தின்கண்ணுங் கலந்து அவற்றின் தன்மையாயே நிற்குமென்பது சான்றோர்க்கெல்லாம் ஒப்பமுடிந்ததாகலான் அச்சிறப்பு நோக்கி எல்லாவெழுத்திற்கும் முன்னர் அகரமும் அதற்கினமாதலின் அதன்பின்

னர் ஆகாரமும், பிறப்புஞ் செய்கையுஞ் சுட்டுப்பொருட்டாதலும் அகரத்தோடு அளவும் ஒத்தலின் அவற்றின்பின்னர் இகரமும் அதற் கினமாதலின் அதன்பின்னர் ஈகாரமும், இடமுஞ் செய்கையுஞ் சுட்டுப்பொருட்டாதலும் இசரத்தோடு அளவும் ஒத்தலின் அவற் றின்பின்னர் உகரமும் அதற்கினமாகலின் அதன்பின்னர் ஊகார மும், இடமுஞ்செய்கையும் உகரத்தோடு அளவும் ஒத்தலின் அவற் றின்பின்னர் எகரமும் அதற்கினமாதலின் அதன்பின்னர் ஏகா ரமும், பிறப்புஞ் செய்கையும் ஏகாரத்தோடுஅளவும் ஒத்தலிற் றனக்கினமாகிய குற்றெழுத்தின்றேனும் அவற்றின்பின்னர் ஐகா ரமும், இடனுஞ் செய்கையும் ஒத்தலின் அதன்பின்னர் ஒகர மும் அதற்கினமாதலின் அதன்பின்னர் ஓகாரமும், பிறப்புஞ் செய் கையும் வடிவும் ஓகாரத்தோடு அளவும் ஒத்தலிற் றனக்கினமா கிய குற்றெழுத்தின்றேனும் அவற்றின்பின்னர் ஔகாரமுந் தம் முள் இயைய வைக்கப்பட்டன. முதனாவும் முதலண்ணமும் உறப் பிறத்தலான் மெய்களின்முன்னர்க் ககரமும், அதற்கினமா தலின் அதன்பின்னர் ஙகரமும், இடைநாவும் இடையண்ணமும் உறப் பிறத்தலானும் அளவானுங் ககரத்தோடு இடமொத்தலா னும் அவற்றின்பின்னர்ச் சகரமும், அதற்கினமாதலின் அதன்பின் னர் ஞகரமும், நுனிநாவும் நுனியண்ணமும் உறப் பிறத்தலானும் அளவானுஞ் சகரத்தோடு இடமொத்தலானும் அவற்றின்பின்னர் டகரமும், அதற்கினமாதலின் அதன்பின்னர் ணகரமும்,நுனிநாவும் அண்பன்முதலும் உறப் பிறத்தலானும் அளவானும் டகரத்தோடு இடமொத்தலானும் அவற்றின்பின்னர்த் தகரமும், அதற்கினம ாதலின் அதன்பின்னர் நகரமும், இதழியையப் பிறத்தலானும் அளவானுந் தகரத்தோடு இடமொத்தலானும் அவற்றின்பின்னர்ப் பகரமும் அதற்கினமாதலின் அதன்பின்னர் மகரமுந் தம்முள் இயைய வைக்கப்பட்டன. வல்லெழுத்துக்களை முன்னாகக் கூறி அவற்றிற்கினமொத்த மெல்லெழுத்துக்களை அவற்றின் பின்னாகக் கூறி இடையெழுத்தாறனையும் அவற்றின் பின்னாகக் கூறினார், வல் லெழுத்துள் நான்கும் மெல்லெழுத்துள் மூன்றும் இடையெழுத் துள் இரண்டும் மொழிக்கு முதலாதல் நோக்கியென்றுணர்க. உயிர்கள்போல மிடற்றுப் பிறந்த வளி கண்ணுற்றடையப் பிறத்த லான் இடையெழுத்துக்களுண் முன்னர் யகரமும், அதற்கினமாத லின் அதன்பின்னர் ரகரமும், இடமும் அளவும் ஒத்தலானுஞ் சந்த வின்பத்திற்கு இயைபுடைமையானும் அவற்றின்பின்னர் லகரமும், அதற்கினமாதலின் அதன்பின்னர் வகரமும், இடமும் அளவும் லகரத்தோடு முயற்சியும் ஒத்தலானும் சந்தவின்பத்திற்கு இயை

புடைமையானும் அவற்றின்பின்னர் ழகரமும், அதற்கினமாதலின் அதன்பின்னர் ளகரமும், அளவானும் ழகாரம்போலத் தமிழெழுத்தாகலானும் அவற்றின்பின்னர் றகரமும், அதற்கினமாதலின் அதன்பின்னர் னகரமும் தம்முள் இயைய வைக்கப்பட்டன. றகரனகரங்களை வல்லினமெல்லினங்களைச் சாரவையாது இறுதிக்கண்வைத்தார் இவை தமிழெழுத்தென்பது அறிவித்தற்கும் னகரம் வீடுபேற்றிற்குரிய ஆண்மகனையுணர்த்துஞ் சிறப்பானுமென்றுணர்க. தோற்றம் முதலிய ஒத்தல் அவ்வவ்வதிகாரத்துட் காண்க. ஈண்டுக் காட்டிய ஏதுக்களேயன்றிப் பிறவருவன உளவேனுங் கொள்க. சார்பெழுத்துக்களுள் ஆய்தம் அகர ஆகாரங்கள்போல அங்காந்து கூறும் முயற்சியாற் பிறத்தலானும் உயிரேறுது ஓசைவிகாரமாய் நிற்பதொன்றேனும் எழுத்தியல் தழா ஓசைபோலக் கொள்ளினுங் கொள்ளற்க, எழுத்தேயாமென்று ஒற்றின்பாற் படுத்தற்குப் புள்ளியெனப் பெயர்பெறுதலானும், உயிரும் ஒற்றுமாகிய இரண்டற்கும் இடையேவைக்கப்பட்டது. ஒழிந்த சார்பெழுத்துக்கள் தத்தம் முதலெழுத்துக்களோடு ஒத்தமுறையே முறையாக முறைபெற்றுநடக்குமென்றுணர்க. ஐகாரத்திற்கு இகரமும் ஒளகாரத்திற்கு உகரமும் இனமென்றுரும் உளராலோவெனின், அவர்கூறிய இனம்பற்றி முறைபெருமையானும் "குன்றிசைமொழிவயி னின்றிசை நிறைக்கு—நெட்டெழுத் திம்ப ரொத்தகுற் றெழுத்தே." எனக் கூறிய ஆசிரியர் தொல்காப்பியனார் ஒத்தகுற்றெழுத்தில்லாத ஐகார ஒளகாரங்கட்கு இசைநிறைப்பன யாவையென ஆசங்கித்து "ஐஒள வென்னு மாயீ ரெழுத்திற்—கிகர வுகர மிசைநிறை வாகும்." எனக் கூறியதன்றி இனமாமெனக் கூறாமையானும் அது முறையன்றென மறுக்க. (அ)

கூ. உயிருமுப் புதாவனி ஞதை முச்சி
மிடறுர மூக்குற் றிதழ்நாப் பல்லணத்
தடைந்து பின்ன ரவற்றது வினையான்
வேறுவே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.

நிறுத்தமுறையானே பிறப்பு உணர்த்துவனவற்றுள் இஃது அதன் பொதுவியல்பு உணர்த்துகின்றது.

இ-ள். உயிர்க்கிழவனது முயற்சியான் எழுகின்ற உதானனென்னுங் காற்றுல் நாதந் தலையும் மிடறும் நெஞ்சும் மூக்குமென்னும் இந்நான்குநிலைக்களத்துஞ் சென்று பொருந்தி இதழும் நாவும் பல்லும் அண்ணமுமென்னும் இந்நால்வகை உறுப்புக்களை

யுஞ் சார்ந்து பின்னர் அவற்றது புடைபெயர்ச்சியான் வேறுவேறு வகைப்பட்டு எழுத்தோசையாய்ச் செவிப்புலனாக வெளிப்படுதல் எழுத்துக்களது பிறப்பாம். எ - று.

வேறுவேறுவகைப்பட்டு எழுத்தோசையாய்ச் செவிப்புலனாக வெளிப்படுதல் எழுத்துக்களது பிறப்பாமெனவே, பரை பைசந்தி மத்திமை வைகரி என்னும் நால்வகை வாக்கினுள் அகத்தெழுவனவாகிய பரைமுதன் மூன்றனையும் ஒழித்தெழுந்து புறத்திசைப்பதாகிய வைகரிவாக்கினையே ஈண்டிவர் எழுத்துக்களது பிறப்பாமென்றாரென்பதூஉம் பெற்றாம். அவற்றின் விகற்பமெல்லாஞ் சைவாகமத்தானுணர்க. "எல்லா வெழுத்தும் வெளிப்படக் கிளந்து—சொல்லிய பள்ளி யெழுதரு வளியிற்—பிறப்பொடு விடுவழி யுறழ்ச்சி வாரத்—தகத்தெழு வளியிசை யரிறப நாடி—யளவிற் கோட லந்தணர் மறைத்தே—யஃதிவ ணுவலா தெழுந்துபுறத் திசைக்கு—மெய்தெரி வளியிசை யளவுநுவன் றிசினே." என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாருமெனக்கொள்க. முற்கு வீளை முதலியனவும் முயற்சியானுமேனும் மொழிக்காரணமாகிய எழுத்தோசையாய்ப் புலப்படாமையின் ஈண்டைக்கு ஏலாவெனக்கொள்க. (௯)

க0. அவ்வழி யாவி யிடைமிட றுச்சி
வன்மை மென்மைமூக் கிசையிற் றோன்றும்.

இது முதலெழுத்துக்கள் இந்நிலைக்களங்களில் நிலைபெறும் ஓசையாற் பிறக்குமென்று அவற்றது பொதுப்பிறவி கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய நிலைக்களங்களுட் பன்னீருயிரும் இடையெழுத்தாறும் மிடற்றின்கண்ணும் வல்லெழுத்தாறுந் தலையின்கண்ணும் மெல்லெழுத்தாறும் மூக்கின்கண்ணும் நிலைபெற்றிசைக்கும் ஓசையாற் பிறக்கும். எ - று. (க0)

கக. அவற்றுண் முயற்சியுள் அஆ வங்காந்
திஈ எஏ ஐகா னதனோ
டண்பன் முதனா விளிம்புற உஊ
ஒஓ ஔகா னிதழ்குவிந் தியலும்.

இது மேற் பொதுப்பிறவி கூறிய முதலெழுத்துக்களுள் உயிர்கள் இம்முயற்சிகளாற் பிறக்குமென அவற்றது சிறப்புப்பிறவி கூறுகின்றது.

இ - ள். மேற் பொதுப்பிறவி கூறிய முதலெழுத்துக்களுள் அகர ஆகாரங்கள் முன்னர்க்கூறிய நால்வகைமுயற்சியுள் அங்காந்து கூறும் முயற்சியானும், இகர ஈகார எகர ஏகார ஐகாரங்கள் அவ்வங்காந்துகூறும் முயற்சியோடு அண்பல்லும் அடிநாவிளிம்பும் உறக்கூறும் முயற்சியானும், உகர ஊகார ஒகர ஓகார ஔகாரங்கள் இதழ்குவிந்துகூறும் முயற்சியானும் பிறக்கும். எ - று. அன்னவாதல் கூறிக்காண்க.

அண்பல் வினைத்தொகையாய் நாவிளிம்பு அணுகுதற்குக்காரணமாகிய பல்லென்று அதற்கோர் பெயராயிற்று, தந்து புணர்ந்துரைத்தலென்னும் உத்தியான். அவற்றுள் முயற்சியுள் என்பதனை மேலும் வருவிக்க. (கச)

கஉ. முதலிடை நுனிநா வண்ணமுற முறையிற்
கஙவும் சஞவும் டணவு மண்ப
லடிநா முடியுறத் தநவு மீகீ
ழிதழுறப் பகார மகார மிரண்டு
மண்ணஞ் சேர்ந்த மிடற்றெழு வளியிசை
கண்ணுற் றடைய யகாரமு மண்ண
நுனிநா வருட ரழவு மண்பன்
முதலு மண்ணமு முறையினு விளிம்பு
வீங்கி யொற்றவும் வருடவும் லளவு
மேற்பல் லிதழுற வகாரமு மண்ண
நுனிநா வொற்ற றனவுந் தோன்றும்.

இது மேற் பொதுப்பிறவி கூறிய முதலெழுத்துக்களுண் மெய்கள் இம்முயற்சியாற் பிறக்குமென அவற்றது சிறப்புப்பிறவி கூறுகின்றது.

இ - ள். முதனாவும் முதலண்ணமும் இடைநாவும் இடையண்ணமும் நுனிநாவும் நுனியண்ணமுஞ் செறியக்கூறும் முயற்சியான் முறையானே ககர ஙகரங்களுஞ் சகரஞகரங்களும் டகர ணகரங்களும், அண்பன்முதலும் நாவினதுநுனியுஞ் செறியக்கூறும் முயற்சியால் தகரநகரங்களும், மேலிதழுங் கீழிதழுஞ் செறியக்கூறும் முயற்சியாற் பகரமகரங்களாகிய இரண்டும், அண்ணத்தைப்பொருந்திய மிடற்றின்கண்ணே நிலைபெற்று எழாநின்ற காற்

ருனுய ஓசை அவ்வண்ணத்தை அணைந்து உரலாணியிட்டாற்போலச் செறியக்கூறும் முயற்சியால் யகரமும், அண்ணத்தை நாநுனி தடவக்கூறும் முயற்சியால் ரகரழகரங்களும், அண்பல்லடியையும் அண்ணத்தையும் முறையானே நாவிளிம்பு தடித்துத் தீண்டவுந் தடவவுங் கூறும் முயற்சியால் லகரளகரங்களும், மேற்பல்லுங் கீழிதழும் இயையக்கூறும் முயற்சியால் வகரமும், அண்ணத்தை நாவினது நுனி மேனோக்கிச்சென்றுதீண்டக் கூறும் முயற்சியால் றகரனகரங்களும் பிறக்கும். எ - று.

உயிர்மெய்யாகக் கூறினுந் தனிமெய்யாகச் சேக்கை வேங்கை என மொழிப்படுத்து அன்னவாதல் கூறிக்காண்க. பிறவும் அன்ன.

ஈண்டு மிடற்றெழுவளியிசை என்றது அனுவாதம். "அஃகிநாவடியண முறயத் தோன்றும்." என்ருர் அதன் இயல்பு உணராமை; மெய்பொய்யெனக் கூறிக்காண்க. (கஉ)

கஙு. ஆய்தநெஞ் சோசையி னங்காந் தியலுஞ்
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய.

இது சார்பெழுத்துக்கள் இந்நிலைக்களங்களின் நிலைபெறும் ஓசையானும் இம்முயற்சியானும் பிறக்குமென அவற்றின் பொதுவுஞ் சிறப்புமாகிய இருகூற்றுப்பிறவியுங் கூறுகின்றது.

இ - ள். ஆய்தவெழுத்து நெஞ்சின்கண் நிலைபெற்றொலிக்கும் ஓசையானும் அங்காந்து கூறும் முயற்சியானும் பிறக்கும். சார்ந்துவருவனவாகிய ஒழிந்த எழுத்துக்களின்பிறவியுந் தத்தம் முதலெழுத்துக்களின் பிறவியையொக்கும். எ - று. அன்னவாதல் கூறிக்காண்க. (கஙு)

கச. தத்தந் திரிபே சிறிய வென்ப.

இது மேலனவற்றிற்கோர் புறனடைகூறுகின்றது.

இ - ள். ஒவ்வொரு தானங்களுட் பிறக்கின்ற எழுத்துக்களைக் கூட்டிக் கூறினேமாயினும் நுண்ணுணர்வான் ஆராயுமிடத்துத் தம்முடைய வேறுபாடுகள் சிறியவாகவுடையவென்று கூறுவர் புலவர் அவ்வேறுபாடுகள் அறிந்துகொள்க. எ - று.

அவை எடுத்தல் படுத்தல் நலிதல் விலங்கல் என்றவாற்றானுந் தலையிசை மிடற்றிசை நெஞ்சிசை மூக்கிசை என்றவாற்றானும் பிறவாற்றானும் வேறுபடுதல். ஐ விலங்கலுடையது. (கச)

௩௫. யகரம் வரக்குற ளுத்தப வருஉ
மிகரமு மியாவி னிகரமுங் குறிய.

இது மேற்பிறவிகூறப்பட்ட சார்பெழுத்துக்களுக்குச் சார்ந்துவரும் இயல்பும் ஓர்பிறவியாதலின் அப்பிறவி கூறுகின்றவற்றுள் இஃது இடனும் பற்றுக்கோடுஞ் சார்ந்து குற்றியலிகரமாமாறு கூறுகின்றது.

இ - ள். யகரமுதன்மொழி வருமொழியாய்வந்து புணர நிலைமொழிக்குற்றுகரவெழுத்துக் கெட ஆண்டுவரும் இகரமும் முன்னிலையசைச்சொல்லாய்வரும் மியாவென்னும் இடைச்சொல்லின் மகரத்தையூர்ந்துநின்ற இகரமுங் குற்றியலிகரமாம். எ - று.

எனவே, புணர்மொழியகத்தும் ஒருமொழியகத்தும் வருமென்பதாயிற்று.

உ-ம். நாகியாது எஃகியாது வரகியாது கொக்கியாது குரங்கியாது தெள்கியாது எனவுங், கேண்மியா எனவும், வரும். பிறவும் அன்ன. இங்ஙனம்வரும் புணர்மொழியும் ஒருமொழியும் இடம். இகரஞ்சார்ந்த வல்லெழுத்தும் மகரமும் பற்றுக்கோடு. வல்லெழுத்தும் மகரம்போல யகரமும் இகரங்குறுகுதற்கோர் சார்பு. (௩௫)

௩௬. நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகர
மஃகு மென்மனு ராயுங் காலே.

இஃது இடனும் பற்றுக்கோடுஞ் சார்ந்து குற்றியலுகரமாமாறு கூறுகின்றது.

இ - ள். நெட்டெழுத்தின்பின்னும் ஆய்தமும் உயிரும் வல்லெழுத்தும் மெல்லெழுத்தும் இடையெழுத்துமென்று இவை தொடர்ந்த மொழியீற்றின்கண்ணும் நின்ற வல்லெழுத்துக்களை யூர்ந்துநின்ற உகரந் தன் அளவிற் சுருங்குமென்று கூறுவர் ஆசிரியர் ஆராயுமிடத்து. எ - று.

வேற்றுமைநயம்பற்றி உயிர்த்தொடர்மொழியென்றார். தொடர்மொழியிறுதிவன்மையென நிலத்ததகலம்போல ஒன்றியற்கிழமைப்பட்டுநின்றது அம்மொழியிற்றீர்ந்து அவை நில்லாமையின். வன்மையெனப் பொதுப்படக்கூறுதலானே ஆறனையுந் தொடரவேண்டுமென்னும் யாப்புறவின்றி ஏற்றபெற்றி தொடருமெனக்

கொள்க. இடையொற்ருறும் வல்லொற்றுட் சிலவற்ருேடன்றி ஆருேடும் மயங்காமையின்.

உ-ம். நாகு எஃகு வரகு கொக்கு குரங்கு தெள்கு எனவரும். பிறவும் அன்ன. இவ் அறுவகைமொழியும் இடம். ஈற்றுவல்லெழுத்துப் பற்றுக்கோடு.

ஆயுங்காலேயென்ற இலேசான் ஈரொற்றுத் தொடர்மொழி இடைத்தொடராகா எனவும், ஈர்க்கு மொய்ம்பு என வன்ருெடரும் மென்ருெடருமாமெனவும், நுந்தையென்னும் முறைப்பெயர் மருங்கின் ஒற்றிய நகரமிசை நகரமூர்ந்துநின்ற உகரங் குற்றியலுகரமாமெனவும், வல்லொற்றுத்தொடர்மொழிக்குற்றுகரம் வல்லெழுத்துவருவழிச் செக்குக்கணை சுக்குக்கொடு எனத் தன் அரைமாத்திரையினுங் குறுகுமெனவுங் கொள்க. இஃது அங்ஙனங் குறுகியவாறு குரங்குகடிதென்பது முதலியவற்ருேடு படுத்துச் செவிகருவியாக வுணர்க. இதற்கு வல்லொற்றுத்தொடர்மொழியும் வல்லெழுத்துவரும்வழியும் இடம். ஈற்றுவல்லெழுத்துப் பற்றுக்கோடு. நுந்தையுகரத்திற்கு முறைப்பெயர் இடம். நகரம் பற்றுக்கோடு. "நெடிலே குறிலிணை குறினெடி லென்றிவை—யொற்ருெடு வருதலொடு குற்ருெற் றிறுதியென்—றேழ்குற் றுகரக் கிடனென மொழிப." என ஏழிடங்கொள்வார்க்குப் பிண்ணாக்கு சுண்ணாம்பு முதலியனவும் ஆய்தந்தொடர்ந்தனவும் அடங்காமையும் அவ்வேழும் இவ்வாறனுள் அடங்குமாறும் அறிக.

செவ்வெண்ணாக எண்ணுது நெடிலோடெனப் பிரித்தார் அதனீற்றுக்கணின்ற உகரம் ஈரெழுத்தொருமொழிக் குற்றுகரமென்பது அறிவித்தற்கு. எனவே, கீடாது குறுகாது வடாது தெணுது முதலிய மொழியிறுதியுகரம் உயிர்த்தொடர்மொழிக் குற்றுகரமாவதல்லது நெடிலிறுதிக்கணின்ற குற்றுகரமாகாதெனவும், நெட்டெழுத்திறுதி தொடர்மொழியிறுதி எனவே அது இது முதலிய ஈரெழுத்தொருமொழியீற்றுகரம் நெட்டெழுத்திறுதியுந் தொடர்மொழியிறுதியும் அன்மையின் முற்றுகரமாவதல்லது ஈரெழுத்தொருமொழிக்குற்றுகரமும் உயிர்த்தொடர்மொழிக்குற்றுகரமும் ஆகாதெனவுங் கொள்க.

ஓரெழுத்தொருமொழி தொடர்மொழி என மொழிநிலை இரண்டென்ருர்க்கு அவையுந் தொடர்மொழியிறுதிக் குற்றுகரமாவான் செல்லுமாறு அறிக.

சந்தனக்கோல் குறுகினுற் பிரப்பங்கோலாகாது சந்தனக்கோலே யாமாறுபோல உயிரின் குறுக்கமும் உயிரேயாமேனும், புணர்ச்சிவேற்றுமையானும் பொருள்வேற்றுமையானுஞ் சீருந் தளையுஞ் சிதையுமிடத்து அலகுபெறுமையானுங் குற்றிகரக் குற்றுகரங்கள் சார்பெழுத்தென உயிரின் வேறுயின. (கசு)

கஎ. குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
யுயிரொடு புணர்ந்தவல் லாறன் மிசைத்தே.

இஃது இடஞ்சார்ந்து ஆய்தம்வருமாறு கூறுகின்றது.

இ - ள். ஆய்தமாகிய ஒற்றுக் குற்றெழுத்தின்முன்னர்த்தாய் உயிரோடுகூடிய வல்லெழுத்து ஆறன்மேலிடத்ததாய்வரும். எ-று.

உ-ம். எஃகு கஃசு கஃடு கஃது கஃபு கஃறு எனவும், அஃகம் அஃகாமை அஃகி எனவும் வரும். குறியதன்முன்னரும் வல்லெழுத்துமிசையும் இடம். கஃறீது முஃடீது அஃகடிய இருபஃது என ஈறியன் மருங்கின் வருவனவும் இப்பெற்றியிற் றீர்ந்து வாராமையின் அவற்றையும் ஈண்டே அடக்கி ஆய்தம் புணர்மொழிக்கண் வருதற்கும் இதுவே விதியாகக் கொள்க. "விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாத—ரிலஃஃகு முத்தி னினம்." எனக் குறிலிணைக்கீழும் வருமாலோவெனின் அஃது அன்ன இயல்பிற்றன்றி ஓசைநிறைத்தற்பொருட்டு ஒற்றில்வழி ஒற்றாய் வந்ததென்க. கஃறீது முஃடீது என்பனவற்றை மெய்பிறிதாகிய புணர்ச்சியென்றதனானும் ஈண்டுப் புள்ளியென்றதனானும் இதனையும் உடன்கூட்டி ஒற்றளபெடை பதினொன்றென்றதனானும் ஒற்றின்பாற்படுமேனும் உயிர் ஏறுது ஓசைவிகாரமாய் இடம்பற்றி நிகழ்வதொன்றுகலின் ஆய்தஞ் சார்பெழுத்தென ஒற்றின்வேறுயிற்று. (கஎ)

கஅ. புள்ளி யில்லா வெல்லா மெய்யு
மவ்வொடு முன்னுரு வாகியு மேனை
யுயிரொடு திரிந்து மேறிய வுயிரி
னள்வா யதனுரு வடக்கிமுந் துயிர்த்த
லுயிர்மெய் யென்மனு ருணர்ந்திசி னோரே.

இது தம்மொடு தாஞ்சார்ந்து உயிர்மெய்யாமாறு கூறுகின்றது.

இ - ள். புள்ளியில்லாதனவாய்ப் பதினெட்டுமெய்யும் அகரத்தோடு கூடித் தம் முன்னைவடிவே வடிவாகியும் ஒழிந்த உயிர்க

ளோடு கூடி அவ்வடிவு வேறுபட்டுந் தம்மை ஊர்ந்த உயிரின் அளவே தமக்கு அளவாய் அவ்வுயிரின்வடிவைத் தம்முள்ளே கரந்து தாம் முன்னாக ஒலித்தலை உயிர்மெய்யென்று கூறுவர் அறிந்தோர். எ - று.

எனவே உயிர்மெய் பன்னிரு பதினெட்டு இருநூற்றொருபத் தாறாயினவாறு பெற்றாம்.

முன்னுருவாகி உயிர்த்தல் க ங ய எனக் காண்க. உருவுதிரிந்துயிர்த்தல் கா ஙா எனப் புள்ளிபெற்றுங் கி கீ என மேல்விலங்கு பெற்றுங் கு கூ எனக் கீழ்விலங்குபெற்றுங் கெ கே எனக் கோடு பெற்றுங் கொ கோ எனப் புள்ளியுங் கோடும் உடன்பெற்றும் வருமெனக்காண்க. பிறவும் அன்ன.

அருகே பெற்ற புள்ளியை இக்காலத்தார் காலாக எழுதுப. உயிரும் மெய்யுங் கூட்ட ஒலிக்குங்கால் உருவுதிரிந்துந் திரியாதும் ஒலிக்குமெனக் கூறியதன்றி உயிர்மெய்க்கு வடிவு கூறப் புகுந்தாரல்லர், அது "தொல்லை வடிவின வெல்லா வெழுத்தும்." என மேற்கூறுபவாகலின்.

உயிரோடு கூடியவழிப் புள்ளியின்றி வருமெனவே புணர்ச்சியிடத்து "மெய்யுயிர் நீங்கிற் றன்னுரு வாகும்" என்பதூஉம் பெறப்பட்டது. தன்னுருவாதல் தான் முன்னர்ப் பெற்றுநின்ற புள்ளி பெற்று ஆலிலை என்பது ஆல் இலை எனநிற்றல். ஏறிய உயிரின் அளவாதல் நீர் தனித்து அளந்துழியும் நாழியாய், அரைநாழியுப் பிற் கலந்துழியும் நாழியாய், மிகாத பெற்றிபோல, ஒருமாத்திரையும் இரண்டுமாத்திரையுமுடைய உயிரும் அரைமாத்திரையுடைய மெய்யுங் கூடியவழியும் ஒன்றரைமாத்திரையும் இரண்டரைமாத்திரையுமாகாது ஒருமாத்திரையும் இரண்டுமாத்திரையுமாயே ஒலித்தல்.

அதனுரு அடக்கியெனவே அ என்புழி நின்ற குறியும் ஒன்றென்னும் எண்ணுங் க என்புழியும், ஆ என்புழி நின்ற குறியும் ஒன்றென்னும் எண்ணுங் கா என்புழியும் ஒத்து மாத்திரைபோல வெளிப்பட்டு நிற்குமென்பதாயிற்று. "மெய்யோ டியையினு முயிரிய றிரியா" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க. இய லென்றது அளவுங் குறியும் எண்ணுமென உணர்க.

முந்துயிர்த்தலெனவே, "மெய்யின் வழிய துயிர்தோன்று நிலையே." என்பதூஉம் பெற்றாம். இவ்வாற்றான் மாத்திரைகொள்

ளுங்கால் உப்பும் நீரும்போல ஒன்றேயாய் நிற்றலும், வேறுபடுத்துக் காணுங்கால் விரலும் விரலுஞ் சேரநின்றாற்போல வேறாய் நிற்றலும் பெற்றாம்.

நீர் உப்பின் குணமாயவாறுபோல உயிர் மெய்யின்குணமேயாய் வன்மை மென்மை இடைமை எய்திநிற்றலுங்கொள்க. இங்ஙனங்கூறியவாற்றாற் க ங ய எனக் கூட்டமும் பிரிவும் மூவகை ஓசையும் உடையவாதல் காண்க.

இவ்வாற்றான் உயிர்மெய்யென்பதனை ஒற்றுமைநயங்கொள்வுழி உம்மைத்தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகவும், வேற்றுமைநயங்கொள்வுழி உம்மைத்தொகையாகவுங் கொள்க. உயிரும் மெய்யுங் கூடுகின்ற கூட்டத்தினை எல்லாமெய்யுமென மெய்மேல்வைத்துக் கூறியது அது முன்னர்க் கூறப்படுதல் நோக்கிப்போலும். இங்ஙனம் வருதலான் உயிர்மெய் சார்பெழுத்தென முதலெழுத்தின் வேறாயிற்று. (கஅ)

கக. இசைகெடின் மொழிமுத லிடைகடை நெடில்வழித்
தத்த மொத்த குற்றெழுத் தோடள
பெழூஉ மையௌ இஉ என்னு
மாயீ ரெழுத்தோ டளபெழு மென்ப.

இது தம்மொடு தாஞ் சார்ந்தும் இடஞ் சார்ந்தும் உயிரளபெடையாமாறு கூறுகின்றது.

இ - ள். வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் அளபெடுத்துக் கூறாக்கால் ஓசை குன்றுவதாயின் அவ்வோசை குன்றும் மொழியின் முதலிடையிறுதிகளில் நின்ற நெட்டெழுத்துக்கள் தமக்குப் பின்னாக நின்ற, தமக்குத் தமக்கு இனமொத்த, குற்றெழுத்துக்களோடு கூடி அவ்வோசை நிறைவதாக மிக்கொலிக்கும்: தமக்கு இனமில்லாத ஐகார ஔகாரங்கள் ஈகார ஊகாரங்கட்கு இனமாகிய இகர உகரமென்று கூறப்படும் அவ்விரண்டெழுத்தோடு நிரனிறையாகக் கூடி மிக்கொலிக்குமென்று கூறுவர் ஆசிரியர். எ-று.

வரலாறு; வாஅகை ஈஇகை ஊஉகம் பேஎகன் தைஇயல் தோஒரை மௌஉவல் எனவரும். பிறவும் அன்ன.

தனிநிலையளபெடை வேண்டிற்றிலர், அது நெட்டெழுத்தோரெழுத்தொருமொழியாய் முதனிலையளபெடையாய்த்தான் இறுதி

நிலையளபெடையாய்த்தான் அடங்குதலின். அற்றேல், "தனிநிலை முதனிலை யிடைநிலை யீறெனா—நால்வகைப் படூஉமள பாய்வரு மிடனே." என்னும் முன்னோர்மதத்தோடு முரணும்பிறவெனின் முரணாது; "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்—திரிபுவே றுடையது புடைநூ லாகும்." என்பவாகலின்.

குற்றெழுத்தோடெனா வரையாது கூறலின் ஓசை நிரம்பாவி டிற் சிறுபான்மை ஈரெழுத்தோடு கூடியும் அளபெழுமெனக் கொள்க; "செய்யுட்க ளோசை சிதையுங்கா லீரளபு—மையப்பா டின்றி யணையுமாம்." என மாபுராணத்துக் கூறலின்.

வரலாறு; "செரு அஅய் வாழிய நெஞ்சு." எனவும், "இலா அஅர்க் கில்லைத் தமர்." எனவும், வரும். இவை ஈரெழுத்தோடு கூடாக்கால் ஆசிரியத்தளைதட்டுச் செப்பலோசை கெடுமோறு உணர்க. அளபெடையல்லாத ஓசைகளெல்லாம் இசையோசையா கலின் அவற்றை "ஆவியுமொற்றும்" என்பதனாற்கூறுப. ஒற்றள பெடைக்கும் இவ்வுரைகொள்க. கோட்டுநூறும் மஞ்சளுங் கூடி யவழிப் பிறந்த செவ்வண்ணம்போல நெடிலுங் குறிலுங் கூடிய கூட்டத்திற் பிறந்து பின் பிளவுபடாது ஒலிக்கின்றதொன்றாகலா னும், எள் ஆட்டியவழியல்லது எண்ணெய் புலப்படாவாறுபோல நெடிலுங் குறிலுங் கூடிய கூட்டத்தல்லது புலப்படாது நிற்ப தொன்றாகலானும், அதுதான் இயற்கையளபெடையுஞ் செய்யுட் குப் புலவர் செய்துகொண்ட செயற்கையளபெடையுமாய் அலகு பெறுதும் பெற்றும் நிற்பதொன்றாகலானும் உயிரளபெடை சார் பெழுத்தென உயிரின் வேறாயிற்று.

நெட்டெழுத்தே அளபெழுமென்பாருமுளர். அவர் அதன் பெற்றி அறிந்திலர்போலும். "மாத்திரை வகையாற் றளைதம கெடா நிலை—யாப்பழி யாமையென் றளபெடை வேண்டும்." என்பது தமிழ்நடையாகலின் யாப்பழியாது தளையறுப்புழி ஓரெழுத்தினை யே இரண்டுமாத்திரையும் ஒருமாத்திரையுமாகப் பிரித்து அசைத்து அதனாற் சீர்செய்து தளையறுத்தல் பொருந்தாமையின். அன்றியும் ஈண்டு அளவுகுறியாய் நிற்குமென்ற குற்றெழுத்துக்களைக் "குற்றுயி ரளபி னீறாம்" என மேல் மொழிக்கு ஈறாய்நிற்குமென்று கூறுப வாகலானும் அவர்க்கு அது கருத்தன்றென்க. (௧௯)

உ0. ஙஞண நமன வயலள வாய்தங்
குறிலிணை குறிற்கீழ் மொழியிடை யிறுதியி
னளபெழு மவற்றோ டாயுங் காலே.

இது தம்மொடு தாஞ் சார்ந்தும் இடஞ் சார்ந்தும் ஒற்றளபெடையாமாறு கூறுகின்றது.

இ - ள். ங ஞ ண ந ம ன வ ய ல ள ஆய்தம் என்னும் பதினோரொற்றுங், குறிலிணைக்கீழுங் குறிற்கீழும், அளபெடுத்துக் கூறுங்கால் ஓசை குன்றுவதாயின், அவ்வோசை குன்றும் மொழியிடையினும் ஈற்றினும் நின்ற அப்பதினோரொற்றோடுங் கூடி அவ்வோசை நிறைவதாக மிக்கொலிக்கும் ஆராயுமிடத்து. எ - று.

மேல் "இசைகெடின்" என்றதனை ஈண்டுங் கூட்டுக.

வரலாறு;—அரங்ங்கம் முரஞ்ஞ்சு முரண்ண்டு பருந்ந்து அரும்ம்பு முரன்ன்று குரவ்வ்வை அரய்ய்யர் குரல்ல்கள் திரள்ள்கள் வரஃஃகு எனவும், மங்ங்கலம் மஞ்ஞ்சு மண்ண்ணு பந்ந்து அம்ம்பு மின்ன்னு தெவ்வ்வர் வெய்ய்யர் செல்ல்க கொள்ள்க எஃஃகு எனவும், "அரண்ண்கொண்ட வடுதோளினர்." "வலம்ம்பட்ட வாள்வயவர்." "பகல்லன்ன பண்புரையீர்" "திரள்ள்சேனை செலநீக்கி" எனவும், "கண்ண்டண்ணெனக் கண்டுங்கேட்டும்" "தம்ம்படையைத் தாநோக்கி" "மின்ன்னன்ன வேல்விளக்கி" "இவ்வ்வுலகை யினிதாண்டு செய்ய்தொழிலிற் செயனோக்கி" "கல்ல்லன்னவன்னெஞ்சிற் கொள்ள்ளென்று கொடுக்கலராய்" எனவும் வரும். பிறவும் அன்ன.

ஙகர ஆய்தங்கள் மொழிக்கு ஈறாகாமையின் ஈண்டும் ஈற்றில் வந்து அளபெழாவெனக்கொள்க.

ஆயுங்காலையென்றதனாற் புணர்மொழிக்கண் ஈறாகாத ஙகர ஆய்தங்களுங் "கலங்ங்கொண்டகன்மார்பா" எனவுங் கஃஃறீது முஃஃடீது அஃஃகடிய எனவுஞ் செயற்கையொற்று அளபெடுத்தலும், இன்னும் ஒற்றின்றியும் இசைகெடின் "அம்பொரைந்துடைய்யகாம னையனென்ன வந்தண—னம்புநீர ரல்லர்நன்கு ரங்குநீர ராயினுந்—தங்குரவ்வர் தாங்கொடுப்பி னெஞ்சுநேர்ந்து தாழ்வர்தாம்—பொங்கரவ்வ வல்குலாரெ னப்புகன்று சொல்லினான்." எனவும் அரய்யர் குரவ்வை வரஃகு விலஃகு இலஃகு எனவும் ஒற்றையுண்டாக்கலும், அதனானும் ஓசைநிரம்பாவிடின் அரய்ய்யர் குரவ்வ்வை வரஃஃகு "விலஃஃகி வீங்கிரு ளோட்டுமே மாத—
ரிலஃஃகு முத்தி னினம்." என அளபெடுத்தலுங் கொள்க; "மைதீரொற்—றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு—குன்றுமே லொற்றளபுங் கொள்." என்பவாகலின். ஒருமாத்திரையாய்

அலகுபெறுதலானும் பிறவாற்றானும் ஒற்றளபெடை சார்பெழுத்தென ஒற்றின் வேறாயிற்று. (உ௦)

உக. தற்சுட் டளபொழி யைமூ வழியு
நையு மௌவு முதலற் றாகும்.

இஃது இடஞ்சார்ந்து ஐகார ஔகாரக்குறுக்கங்களாமாறு கூறுகின்றது.

இ - ள். தன்னைச்சுட்டுதற்கண்ணும் அளபெடுத்தற்கண்ணும் அல்லாதவழி வந்த ஐகாரம் மொழிமுதலிடைகடையென்னும் மூன்றிடத்துங் குறுகும்; அவ்வாறு வரும் ஔகாரமும் மொழிமுதற்கட் குறுகும். எ - று.

வரலாறு;—ஐப்பசி மைப்புறம் இடையன் தினை எனவும் ஔவை கௌவை எனவும் வரும். கை பை மை கௌ வௌ என்பனவும் பொருளைச்சுட்டியவழிக் குறுகுமெனக்கொள்க. இங்ஙனம் அளவுகுறுகலானுஞ் சீருந்தளையுஞ் சிதையுமிடத்து அலகுபெறாமையானும் ஐகார ஔகாரக்குறுக்கங்கள் சார்பெழுத்தென உயிரின் வேறாயின. (உக)

உஉ. லளமெய் திரிந்த னணமுனும் வருமொழி
வகார மிசையு மகாரங் குறுகும்.

இஃது இடஞ்சார்ந்து மகரக்குறுக்கமாமாறு கூறுகின்றது.

இ - ள். லகரளகரங்கள் திரிந்த னகரணகரங்கள் முன்னும் வருமொழிமுதற்கணின்ற வகரத்தின்மேலும் மகரங் குறுகும். எ-று.

எனவே, ஒருமொழிக்கண்ணும் புணர்மொழிக்கண்ணுங் குறுகுமென்பதாயிற்று.

உ - ம். "சென்றூற் கழியொருவன் கைப்பற்ற வந்நூலை—முந்நூலாக் கொள்வானும் போன்ம்." எனவும், "பசுப்போல்வார் முற்பட்டாற் பாற்பட்ட சான்றோர்—முசுப்போல முள்காந் திருப்பர்—பசுத்தான்—வெருளினு மெல்லாம் வெருளுமஃ தன்றி—மருளினு மெல்லா மருண்ம்." எனவும், வரும்வண்ணக்கன் எனவும் முறையே காண்க. திரிதல் யாண்டுப்பெற்றாமெனின், அதுவும் அனுவாதமுகத்தான் ஈண்டேபெற்றாமென்க.

இங்ஙனம் அளவுகுறுகலான் மகரக்குறுக்கஞ் சார்பெழுத்தென மெய்யின் வேறாயிற்று. (உஉ)

௨௩. தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து மெகர வொகரமெய் புள்ளி

இது நிறுத்தமுறையானே வடிவுகூறுகின்றது.

இ - ள். இவ்வெழுத்து இவ்வடிவிற்றென யாம் எழுத்துக்களுக்கு வடிவுகூறுமிடத்து எல்லா எழுத்துக்களும் நெடுங்கணக்கினுள் எழுதப்பட்டுவருகின்ற பழைய வடிவே வடிவாகவுடையனவாம். ஆயினும் அங்ஙனம் வருமிடத்து எகரமும் ஒகரமும் மெய்களும் மேற்புள்ளிபெற்றுநிற்கும். எ - று.

புள்ளியுந் தொல்லைவடிவேயாயினும் எகரஏகாரங்கட்கும் ஒகரஓகாரங்கட்குந் தனிமெய்யுயிர்மெய்கட்கும் வடிவொப்புமை கண்டு அவ்வொப்புமைமேல் வேற்றுமைசெய்யும்பொருட்டு அவற்றிற்கு முன்னோர் பின்னர்ப் புள்ளியிட்டு எழுதுகவென்றாரென்பார், 'ஆண்டெய்தும்' என்றார். தொல்லைவடிவினவாதல் நெடுங்கணக்கினுட் காண்க. எ͘ரி எரி ஒ͘ளி ஒளி கெ͘ண்டை கெழல் கொ͘ண்டல் கொடை உல்கு உலகு என எகரமும் ஒகரமுந் தனிமெய்யும் புள்ளியெய்திநின்றவாறு காண்க. (௨௩)

௨௪. நெடிலிரண் டையௌக் குறுக்கங் குறிலொன்
றாய்தமொற் றிய்யுக் குறுமை யரைகுறண்
மஃகான் கான்மாத் திரைபெறு மதுதான்
கண்ணிமை நொடியென நுண்ணியோ ருரைப்ப.

இது நிறுத்தமுறையானே எழுத்துக்களது மாத்திரையும் மாத்திரைக்கு அளவுங் கூறுகின்றது.

இ - ள். நெட்டெழுத்துக்கள் ஓரோவொன்று இரண்டுமாத்திரையும் ஐகாரஔகாரக்குறுக்கங்களுங் குற்றெழுத்துக்களும் ஓரோவொன்று ஒருமாத்திரையும் ஆய்தமும் ஒற்றுக்களுங் குற்றிகரக் குற்றுகரங்களும் ஓரோவொன்று அரைமாத்திரையும் மகரக் குறுக்கங் கான்மாத்திரையும் பெற்று ஒலிக்கும்; அம்மாத்திரைக்கு அளவுதான் கண்ணிமையெனவுங் கைந்நொடியெனவும் நுண்ணிதாக நூலிலக்கணத்தை உணர்ந்த ஆசிரியர் கூறுவர். எ - று.

நெடிற்குங் குறிற்கும் ஒற்றிற்கும் மாத்திரை கூறவே, அவை கூடி ஒலிக்கும் உயிரளபெடை மூன்றுமாத்திரையும் நான்குமாத்திரையும், ஒற்றளபெடை ஒருமாத்திரையும், ஏறிய உயிரின் அளவே

உயிர்மெய்க்கும் அளவெனக் கூறலின் அவை ஒருமாத்திரையும் இரண்டுமாத்திரையும் பெறுமென்பதூஉம் பெற்ரும்.

வல்லொற்றுத்தொடர்மொழிக்குற்றுகரம் வல்லெழுத்து வருவழித் தன் அரைமாத்திரையிற் குறுகுமெனக் கோடலின் அது கால்மாத்திரைபெறுதல் உரையிற்கொள்க.

கண்ணிமை கைந்நொடியென்னும் பலபொருளொருசொற்கள் ஈண்டுத் தொழின்மேலும் ஓசைமேலும் முறையேநின்றன. தன் குறிப்பின்றி நிகழ்தலின் இமை முற்கூறப்பட்டது. எண்ணியளத்தல் எடுத்தளத்தல் முகந்தளத்தல் பெய்தளத்தல் நீட்டியளத்தல் சார்த்தியளத்தல் தெறித்தளத்தல் என்னும் எழுவகையளவையுள் இது சார்த்தியளத்தலாம்.

கண்ணிமைக்கும் நொடிக்கும் அளவாராயின் வரம்பின்றி ஓடுமெனக்கருதி நுண்ணியோருரைப்பவென முடிந்ததுகாட்டலென்னும் உத்திகூறினர்; ஆணைகூறலுமாம். எனவே, எழுத்திற்கே அளவுகூறி நாழுழக்குக்கொண்டது நாழியென்றற்போல இஃதித்துணைகொண்டது மாத்திரையென மாத்திரைக்கு அளவுகூறிற்றிலர். இயற்கைமகன் குறிப்பினன்றி இரண்டிமையும் ஒருகாற் கூடி நீங்கிய காலக்கழிவும் அ எனப்பிறந்த ஓசையது தோற்றக்கேட்டுக் காலக்கழிவும் ஒக்கும். இக்கண்ணிமையினது பாகம் மெய்க்கும் அதன் பாகம் மகரக்குறுக்கத்திற்கும் இக்கண்ணிமை இரட்டிவருதல் நெடிற்கும் அது மூன்றும் நான்குமாய்வருதல் உயிரளபெடைக்கும் ஒன்றுவருதல் ஒற்றளபெடைக்குங் கொள்க. பிறவும் அன்ன. நொடித்தற்ருெழிலிற் பிறந்த ஓசைக்கும் இவ்வுரைகொள்க. (உச)

உரு. ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலு
மேவு மிசைவிளி பண்டமாற் ருதியின்.

இஃது எழுத்துக்கள் முற்கூறிய மாத்திரையின்மிக்கு இசைக்கவும்பெறுமென்பதூஉம் அங்ஙனம் மிக்கு இசைக்கும் இடம் இவையென்பதூஉங் கூறுகின்றது.

இ - ள். உயிரும் ஒற்றுமென்னும் இருகூற்றெழுத்துந் தமக்குச் சொல்லிய மாத்திரைகளைக் கடந்து ஒலித்தலையும்பொருந்தும்; அங்ஙனம் பொருந்தி இசைத்தல் இசையும் விளியும் பண்டமாற்றும் முதலியவற்றின்கண்ணும். எ - று.

ஆதியென்றதனல் நாவலும் முறையீடும் புலம்புங் குறிப்பிசைமுதலியவுங் கொள்க. நாவல் உழவர் நெல்லரிதொழுவரை

விளித்சல். அது "சாவ லுழவர் கடுங்களத்துப் போரேறி—நாவ லோஒஒ வென்றழைக்கு நாளோதை—மாவலவன்—கொல்யானை மேலிருந்து கூற்றிசைத்தாற் போலுமே—நல்யானைக் கோக்கிள்ளி நாடு." இதனான் அறிக. "கஂஂஂஂ றென்னுங் கல்லத ரத்தஞ்— சுஂஂஂஂ றென்னுந் தண்டோட்டுப் பெண்ணை." என்றாற்போல் வன குறிப்பிசை. பிறவும் வந்துழிக் காண்க.

உயிர் பன்னிரண்டுமோத்திரையும் ஒற்றுப் பதினொருமாத்திரையும் நீளுமென்பர் இசைநூலார். அது வந்துழிக் காண்க. (௨௫)

௨௬. பன்னீ ருயிருங் கதந பமவெனு
மாவைந் தெழுத்தொடு சவஞய வுளப்பட
வவ்வொன் பானுயிர் மெய்யு மொழிமுதல்.

இது நிறுத்தமுறையானே மொழிக்கு முதல் நிற்கும் எழுத்துக்கள் இவையெனப் பொதுவகையாற் கூறுகின்றது.

இ - ள். பன்னிரண்டு உயிரெழுத்துங் கதநபம என்று கூறப்படும் ஐந்தெழுத்தோடு சவஞய என்னும் நான்கெழுத்துங் கூட அவ்வொன்பதாகிய உயிரோடுகூடிய மெய்யுமாகிய இருபத்தோரெழுத்தும் மொழிக்கு முதலாவனவாம். எ - று.

ஈண்டு உயிர்மெய்யென்றது வேற்றுமைநயங் கருதிற்று. மேல் இவற்றுட் சிலவற்றைப் பிரித்து இவ்வொற்று இவ்வுயிரோடு கூடி முதலாமென்றலின் ஐந்தும் நான்குமாகப் பிரித்துக் கூட்டியதூஉம் முறைபிறழவைத்ததூஉம் பொதுவகையான் எல்லாவுயிரோடுஞ் சிறப்புவகையாற் சிலவுயிரோடுங் கூடி முதலாதல் நோக்கியென்க.

உ-ம். அடை ஆடை இலை ஈயம் உரல் ஊர்தி எழு ஏணி ஐவனம் ஒளி ஓக்கம் ஔவியம் எனவுங், கலை காரி கிளி கீரி குடி கூடு கெண்டை கேழல் கைதை கொண்டல் கோதை கௌவை எனவுந், தந்தை தாடி தித்தி தீமை துணி தூணி தெற்றி தேன் தையல் தொண்டை தோடு தௌவை எனவும், நந்து நாரை நிலம் நீந்து நுகம் நூல் நெய்தல் நேர்ச்சி நைவளம் நொச்சி நோக்கம் நௌவி எனவும், படை பாடி பிடி பீடு புகழ் பூமி பெட்டை பேடை பைதல் பொன் போதகம் பௌவம் எனவும், மடி மாலை மிடறு மீளி முலை மூப்பு மெலிவு மேனி மையல் மொழி மோத்தை

மௌவல் எனவும் வரும். இவை பொதுவகையாற் போந்தன. ஏனைய மேற்கூறுப. (௨௬)

௨௭. ஐஔ வலவொடு சகாரமும் உஊ
ஒஓ வலவொடு வகாரமும் ஆஎ
ஒவ்வொடு ஞகாரமு மாவொடு யகாரமு
முதலுமென் மனார் முறையுணர்ந் தோரே.

இஃது அவற்றுட் சிலவற்றிற்கு வரையறுத்து எய்துவிக்கின்றது.

இ - ள். ஐகார ஔகாரங்கள் ஒழிந்து நின்ற பத்து உயிரோடுங் கூடிச் சகரமும், உகர ஊகார ஒகரஓகாரங்கள் ஒழிந்து நின்ற எட்டு உயிரோடுங் கூடி வகரமும், ஆகார எகர ஒகரங்களோடு கூடி ஞகரமும், ஆகாரத்தோடு கூடி யகரமும் மொழிக்கு முதலாமென்று கூறுவர் இலக்கணங்களை அறிந்தோர். எ - று.

உ-ம். சட்டி சாந்து சினம் சீற்றம் சுரும்பு சூரல் செக்கு சேவல் சொல் சோறு எனவும், வளை வாளி விளை வீடு வெள்ளி வேர் வையம் வௌவுதல் எனவும், ஞாலம் ஞெண்டு ஞொள்கிற்று எனவும், யானை எனவும் வரும்.

சையம் சௌரியம் யவனர் யுத்தி யூபம் யோகம் யௌவனம் எனவும், "ஞமலி தந்த மனவுச்சூ லுடும்பின்." எனவும், ஞழியிற்று எனவும் விலக்கியனவும் வருமாலோவெனின், அவை முறையானே ஆரியச்சிதைவெனவுந் திசைச்சொலெனவும் இழிவழக்கெனவும் மறுக்க. இவற்றான் மொழிக்கு முதலாம் எழுத்துக்கள் பொதுவுஞ் சிறப்புமாம் இருவகையானுந் தொண்ணூற்றுநான்காமென்று அறிக.

"சுட்டியா வெகர வினாவழி யவ்வை—யொட்டி ஙவ்வு முதலா கும்மே" என்றாரும் உளராலோவெனின் முதலாவன இவை ஈறாவன இவையென ஈண்டுக் கருவிசெய்தது மேல் நிலைமொழியீறு வருமொழிமுதலோடு இயையப் புணர்க்கும்பொருட்டன்றே? அவ்வாறு புணர்த்தற்கு இயைபில்லாத ஙகரமும் அங்ஙனம் இங்ஙனம் உங்ஙனம் யாங்ஙனம் எங்ஙனம் என இவ்வாறு மொழிக்கு முதலாமென்றல் பயனில்கூற்றாமென மறுக்க. அன்றியும், அங்கு ஆங்கு யாண்டு யாண்டையது அன்ன என்ன என்றாற்போலும்

இவ்வொற்றுக்களும் மொழிக்கு முதலாமென்னல் வேண்டுதலான் அவர்க்கும் அது கருத்தன்றென்க. (௨௭)

௨௮. ஆவி ஞணநமன யரல வழளமெய்
சாயு முகரநா லாறு மீறே.

இது நிறுத்தமுறையானே மொழியிறுதிக்கண் நிற்கும் எழுத்து இவையெனப் பொதுவகையாற் கூறுகின்றது.

இ - ள். பன்னிரண்டு உயிரும் ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் பதினோரொற்றுங் குற்றியலுகரமுமான இருபத்துநான்கெழுத்தும் மொழிக்கு ஈறுவனவாம். எ - று.

ஞகரம் ஈற்று வையாது மகரத்தோடு வைத்தது வழக்குப்பயிற்சியும் மயக்க இயையும் நோக்கியென்க. குற்றுகரத்தை வேறெடுத்து ஓதினார் புணர்ச்சிவேறுபாட்டான். (௨௮)

௨௯. குற்று யிரளபி னீறு மெகர
மெய்யொ டேலாதொந் நவ்வொ டாமௌக்
ககர வகரமோ டாகு மென்ப.

இது மேலைச்சூத்திரத்தாற் றாமே நின்று ஈறுதல் எய்தியதனை விலக்கி அளபெடுப்புழி ஈறுமென்றலிற் குற்றுயிர்க்குப் பொதுவிதி மாற்றிச் சிறப்புவிதியும், எகரம் மெய்யோடேலாதெனவே ஏனையுயிர்கள் தாமே நின்றும் அளபெடுப்புழி நின்றும் ஈறுதலேயன்றி மெய்யோடு கூடி ஈறுமென்பதூஉம், ஒந்நவ்வொடாம் ஒளக்ககர வகரமோடாகுமென இவற்றை விதந்தோதவே விதவாதனவெல்லாம் அங்ஙனம் ஈறுங்காற் தமக்கேற்ற மெய்களோடு கூடி ஈறுமென்பதூஉம் பெறப்படுதலின் எல்லா உயிர்க்கும் பொதுவிதிமேற் சிறப்புவிதியுங் கூறுகின்றது.

இ - ள். குற்றுயிரைந்தும் அளபெடுப்புழி ஈறுமென்றும், எகரம் மெய்யோடு கூடி ஈறாகாதென்றும் ஒகரம் நகரமொன்றுடனே கூடி ஈறுமென்றும், ஒளகாரங் ககரவகரங்களோடு கூடி ஈறுமென்றுங் கூறுவர் ஆசிரியர். எ - று.

இவற்றால், நெட்டெழுத்து ஏழுந் தாமே நின்றுங், குற்றெழுத்து ஐந்தும் அளபெடுப்புழிநின்றும், எகர ஒகர ஒளகாரங்கள் ஒழிந்துநின்ற ஒன்பது உயிருந் தமக்கு ஏற்ற மெய்களோடு கூடி-

நின்றும் ஈறுமென்பது போந்ததேனும், உரையிற்கோடலான் ஒள காரந் தானே நின்று ஈறுகாதெனவும் ஙகரத்தோடு பன்னிரண்டு உயிரும் ஞகரத்தோடு ஏகாரமும் நகரத்தோடு உகரஊகாரமும் வகரத்தோடு ஊகாரமுங் கூடி ஈறுகாவெனவுங் கொள்க.

உ-ம். ஆ ஈ ஊ ஏ ஐ ஓ எனவும், ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஓஒ எனவும், வருக புகா வீக்கி புகீ செகு புகூ ஈங்கே மங்கை எங்கோ கௌ எனவும், உச உசா விசி மூசீ முசு மூசூ செச்சை சோ என வும், உரிஞ உரிஞா உரிஞி உரிஞீ உரிஞு உரிஞூ மஞ்ஞை உரிஞோ எனவுங், கட கடா மடி மடீ மடு மடூ பட்டை எனவும், மண்ண மண்ணு கண்ணி உணீ கணு நண்ணூ பண்ணை எனவும், அந்த அதா பதி வதீ அது கைதூ தந்தை அந்தோ எனவும், பொருந பொருநா நீ நை நொ நோ எனவும், தப துப்பா நம்பி நம்பீ தபு பூ தும்பை போ எனவுங், கம மா அம்மி மீ செம்மு கொண்மூ யாமை வம்மோ எனவுஞ், செய காயா கொய்யூ ஐயை ஐயோ என வும், வர தாரா பரி குரீ கரு வெரூ நாரை எனவுஞ், சில பலா வலி வலீ வலு கொல்லூ வல்லே கலை எனவும், உவ உவா செவ்வி ஒருவீ கதவு வே வை வெள எனவுந், தொழ விழா நாழி வழீ மழு எழூ தாழை எனவும், உள உள்ளா வெள்ளி குளீ உளு எள்ளு களை எனவும், கற்ற கற்றா உறி உறீ மறு மறூ கற்றை எற்றோ எனவுங், நன கனு வன்னி துனீ முன்னு துன்னூ என்னே அன்னை அன்னோ எனவும், உரிஞ் மண் பொருந் திரும் பொன் வேய் வேர் வேல் தெவ் வீழ் வேள் எனவும், நாகு எனவும், வரும். பிறவும் அன்ன.

உயிரோடு கூடி மெய்முதலாமென்றும் மெய்யோடு கூடி உயிரீறுமென்றும் வேற்றுமைநயம்பற்றிக் கூறலின் மெய்ம்முதன் மொழியென்றும் உயிரீற்றுமொழியென்றும் ஆவதல்லது ஒற்றுமை நயம்பற்றி உயிர்மெய்முதலென்றும் உயிர்மெய்யீறென்றும் வழங் கப்படாவென்பது தானேபோதரும். போதவே, "மெய்யீ றெல் லாம் புள்ளியொடு நிலையல்." என்பதனான் மொழிக்கு முதலாயவை யெல்லாம் புள்ளியிழந்து உயிரேறி நிற்குமென்பதூஉம் "உயிர் மெய் யீறு முயிரீற் றியற்றே." என்பதூஉம் ஈண்டே பெற்றாம். தாமேயும் அளபெடுப்புழியும் மெய்யோடுகூடியும் வரும் உயிரீறு நூற்றறுபத்துமூன்றும் மெய்யீறு பதினொன்றுங் குற்றுகரவீறு ஒன் றுமாகப் பொதுவகையானுஞ் சிறப்புவகையானும் ஈறு நூற்றெழு பத்தைந்தாம். அவற்றுள் உதாரணங் காணாதன இருபத்திரண்டு. அவையும் வந்துழிக் காண்க. (௨௯)

௯0. ணகர விறுதி யஃறிணைப் பெயருண்
மகரமொடு மயங்கி வருனவு முளவே.

இஃது ஒரீறு ஒரீற்றோடு மயங்கிவருமென்கின்றது.

இ - ள். ணகரவீற்றஃறிணைப்பெயருட் சில ணகரவீறு மகர வீற்றஃறிணைப்பெயரின் மகரவீற்றோடு மயங்கிவருவனவும் உளம யங்காதனவும் உள, புணரியலுள் அவை அறிந்து புணர்க்க. எ-று.

ஏற்புழிக்கோடலாற் பெயரென்றது ஈண்டுத் தொடர்மொழி யென்றே கோடும்; "மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த— ணகரத் தொடர்மொழி யொன்பஃ தென்ப—புகரறக் கிளந்த வஃ றிணை மேன." என்பவாகலின்.

வரலாறு; நிலன் நிலம், கலன் கலம் இத்தொடக்கத்தன மயங்குவன. எகின் செகின் பயின் குயின் அழன் புழன் விழன் கடான் வயான் இத்தொடக்கத்தன மயங்காதன எனக் காண்க. ணகர இறுதி மகர இறுதியோடு மயங்குமென்றலின் வட்டம் குட்டம் இத்தொடக்கத்து மகரவீறுகள் மயங்காவென்க. பிறவும் அன்ன. இதனை இடைநிலைப்பாற் படுத்தி அதனைச் சார வைப்பா ரும் உளர். அது பொருந்தாது; இறுதிநிலைப்பாற்படுவதோர் மயக்கமாதலின். (௯0)

௯௧. கசதப வொழித்த வீரேழன் கூட்ட
மெய்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்
டாகு முயிர்மெய் மயக்கள வின்றவை
தேருங் காலை மொழியிடைச் சிவணும்.

இது நிறுத்த முறையானே பொதுவகையான் மெய்மயக்க மும் உடனிலைமயக்கமுமாமாறும் அவற்றது எண்ணும் வரையறை யின்றிமயங்குவனவும் அவைமயங்கும் இடமும் உணர்த்துகின்றது.

இ - ள். மெய்பதினெட்டனுட் கசதப என்னும் நான்கி னையும் ஒழித்த பதின்குமெய்களினது மயக்கம் மெய்மயக்கமாம். ரகரழகரங்களை ஒழித்த பதினாறுமெய்களினது மயக்கம் உடனிலை மயக்கமாம். உயிர்மெய் உயிர்மெய்யோடுந் தனிமெய்யோடும் மயங் கும் மயக்கத்திற்கு வரையறை இன்றாம். அம்மயக்கநிலைகள் ஆரா யுங்காலத்து மொழியிடையே பொருந்திநிற்கும். எ - று.

கூட்டமென்பதனை ஈரெட்டென்பதனோடும் மயக்கமென்ப தனை உடனிலையென்பதனோடுங் கூட்டுக.

தன்முன்னர்த் தான் உடனின்று மயங்குவது உடனிலைமயக்கமெனவே தன்முன்னர்ப் பிறமெய் நின்று மயங்குவது மெய்ம்மயக்கமென்பதாயிற்று. அது வருஞ்சூத்திரத்தானும் உணர்க.

தெருங்காலை என்றதனால் இவ்விருகூற்று மயக்கமுந் தனிமெய்முன் உயிர்மெய்நின்று மயங்குமெனவும் உயிர்மெய்முன் உயிர்மெய்யுந் தனிமெய்யும் மயங்குமெனவுந் தனியுயிர்முன் உயிர்மெய்யுந் தனிமெய்யும் மயங்குமெனவும் அதற்கும் உயிர்மெய்மயக்கம்போல வரையறை இன்றெனவுங் கொள்க. இன்னும் அதனானே உயிர்மெய்மயக்கமும் உயிர்மயக்கமுந் தொடர்மொழிக்கண்ணன்றிக் கரு மழு எனவும், கார் காழ் எனவும், அளை உளை எனவும், ஆர் ஊர் எனவும், ஈரெழுத்தொருமொழிக்கண்ணும் மயங்குவனவும் இன்னோரன்ன பிறவாற்றான் மயங்குவனவும் புணர்மொழியிடை மயங்குவனவுங் கொள்க. புணர்மொழியிடையும் மயங்குமெனவே மேற்கூறும் புணர்மொழிச் செய்கையெல்லாந் தலையாய அறிவினோர் நோக்க ஒருவாற்றாற் கூறியவாறாயிற்றென்பதூஉம் பெறுதும். சிறப்புவகையான் மேல் வரைந்தோதும் மெய்ம்மயக்கம் ஒழித்து ஈண்டுப் பொதுவகையான் முடிந்தவற்றிற்கு உதாரணங் காட்டுதும்.

வரலாறு; காக்கை எங்ஙனம் பச்சை மஞ்ஞை பட்டை மண்ணை தத்தை வெந்நெய் அப்பை அம்மி வெய்யர் எல்லி எவ்வி கொள்ளி கொற்றி கன்னி எனவும், கருவி துணங்கை எனவும், ஆவணி ஆம்பல் எனவும் வரும். பிறவும் அன்ன. (௩௧)

௩௨. ஙம்முன் கவ்வும் வம்முன் யவ்வு
ஞநமுன் னினமும் யகரமும் டறமுன்
கசபவும் ணனமுன் னினமுங் கசஞப
மயவவு மம்முன் பயவவும் யரழமுன்
மொழிமுதன் மெய்யும் லளமுன் கசப
வயவு நின்று மயங்கு மென்ப.

இது மேற் பொதுவகையாற் கூறிய மெய்ம்மயக்கத்தினைச் சிறப்புவகையான் வரைந்து கூறுகின்றது.

இ - ள். கங்குல் என ஙகரமுன்னர்க் ககரமும்; தெவ்யாது என வகரமுன்னர் யகரமும்; மஞ்சு உரிஞ்யாது எனவும், பந்து வெரிந்யாது எனவும், ஞகரநகரங்களின்முன்னர் முறையே சகர

ந்தகரங்களும் யகரமும்; கட்க கட்சி கட்ப எனவும், கற்க முயற்சி கற்ப எனவும், டகரறகரங்களின்முன்னர்க் ககரசகரபகரங்களும்; வண்டு எண்கு வெண்சாந்து வெண்ஞாண் பண்பு வண்மை மண்யாறு எண்வட்டு எனவும், கன்று புன்கு புன்செய் மென்ஞாண் அன்பு வன்மை பொன்யாது பொன்வலிது எனவும், ணகரனகரங்களின்முன்னர் முறையே டகரறகரங்களுங் ககரசகரஞகரபகரமகரயகரவகரங்களுங்; கம்பு திரும்யாது நிலம்வலிது என மகரமுன்னர்ப் பகரயகரவகரங்களும்; ஆய்க ஆய்தல் ஆய்நர் ஆய்பவை வாய்மை எய்சிலை தெய்வம் பாய்ஞெகிழி எனவும், ஆர்க ஆர்தல் ஆர்நர் ஆர்பவை நேர்மை வார்சிலை சேர்வது நேர்ஞெகிழி போர்யானை எனவும், ஆழ்க ஆழ்தல் ஆழ்நர் ஆழ்பவை கீழ்மை வாழ்சேரி வாழ்வது வாழ்ஞெண்டு வீழ்யானை எனவும், யகரரகரழகரங்களின்முன்னர்க் ககரதகரநகரபகரமகரசகரவகரஞகரயகரங்களுஞ்; செல்க வல்சி செல்ப செல்வம் கொல்யானை எனவும், கொள்க நீள்சினை கொள்ப கள்வன் வெள்யாறு எனவும், லகரளகரங்களின்முன்னர்க் ககரசகரபகரவகரயகரங்களும் நின்று மயங்குமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

யரழமுன்னர் மொழிமுதன்மெய்யும் என்றாரேனுஞ் செய்யாறு என யகரமுன்னர் யகரம் மயங்குதல் உடனிலைமயக்கமாதலின் அஃதொழித்து ஏற்புழிக்கோடலான் ஏனையகோடும். (௩௨)

௩௩. யரழவொற் றின்முன் கசதப ஙஞநம
வீரொற் றாம்ரழத் தனிக்குறி லணையா.

இஃது ஈரொற்று உடனிலையாமாறும் வரையறையின்றி மயங்குவனவற்றுட் சிலவற்றிற்கு வரையறையுங் கூறுகின்றது.

இ - ள். ய ர ழ என்னும் மூன்றுமெய்முன்னருங் க ச த ப ங ஞ ந ம என்னும் எட்டொற்றும் வந்து ஈரொற்றுடனிற்கும். ரகர ழகரம் என்னும் இரண்டொற்றேடும் பிறிதோர் எழுத்தையுஞ் சாராது தனியேநின்ற குற்றெழுத்துக்கள் மயங்கா. எ - று.

ஒற்றேடு மயங்காதெனவே உயிர்மெய்யோடு கரு மழு எனவும், தனிக்குறிலெனவே குறிலிணை புகர் புகழ் எனவும், நெடில் கார் காழ் எனவும், மேலைப் பொதுவிதியான் மயங்குமெனக் கொள்க.

வரலாறு; வேய்க்க வாய்ச்சி பாய்த்தல் வாய்ப்பு காய்ங்கனி வேய்ஞ்சினை காய்ந்தனம் காய்ம்புறம் எனவும், பீர்க்கு நேர்ச்சி

வார்த்தல் ஆர்ப்பு நேர்ங்கல் நேர்ஞ்சிலை நேர்ந்தலை நேர்ம்புறம் எனவும், வாழ்க்கை தாழ்ச்சி தாழ்த்தல் தாழ்ப்பு தாழ்ங்குலை தாழ்ஞ்சினை வாழ்ந்தனம் வீழ்ம்படை எனவும் வரும். பிறவும் அன்ன. ஆகாதனவற்றிற்கு உதாரணம் இன்று. (ருரு)

ருச. லளமெய் திரிந்த னணவொடு மகார
மீரொற் றாகுஞ் செய்யு ளுள்ளே.

இது செய்யுட்கண் ஈரொற்று உடனிலைமயக்கமாமாறு கூறுகின்றது.

இ - ள். லகரளகரவொற்றுக்கள் திரிந்த னகரணகரவொற்றுக்களோடு கூட மகரவொற்று ஈரொற்றுடனிலையாஞ் செய்யுளகத்து. எ - று.

வரலாறு; "எம்மொடு தம்மைப் பொரூஉங்காற் பொன்றொடு—கூவிளம் பூத்தது போன்ம்." எனவும், "வெயிலியல் வெஞ்சுர மையநீ யேகின்—மயிலியன் மாதர் மருண்ம்." எனவும் வரும்.

ருரு. தம்மர பிசைப்பின் முதலீ றிடைநிலை
யம்மர பில்லவு மாமென மொழிப.

இது முதலீறிடைநிலை ஆகாதனவும் ஒரோவழி ஆமென்கின்றது.

இ - ள். தம்மியல்பைச் சொல்லுமிடத்து மொழிக்கு முதலாகாதனவும் ஈறாகாதனவும் இடையாகாதனவும் முதலீறிடைகளில் நிற்றற்குரியவென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

வரலாறு; ஙக்களைந்தார் டப்பெரிது எனவும், செக்களைந்தார் சொப்பெரிது எனவும், "அவற்றுள், லளஃகான் முன்னர்" "வல்லெழுத் தியையின் டகார மாகும்." எனவும், முறையே முதலும் ஈறும் இடைநிலையுமாயினவாறு காண்க. பிறவும் அன்ன. தம்மர பிசைப்பின் அம்மரபில்லவுமாமெனவே, அக் குறிது கக் களைந்தார் எனவும், ஆ நெடிது கா நன்று எனவும், "டறலள வென்னும் புள்ளி முன்னர்க்—கசப வென்னு மூவெழுத் துரிய." "மஃகான் புள்ளிமுன் வவ்வுந் தோன்றும்" எனவும், அம்மரபுள்ளன முதலுமீறுமிடைநிலையுமாதல் கூறவேண்டாவாயிற்று. (ருகு)

நசு. அம்மு னிகரம் யகர மென்றிவை
யெய்தி னையொத் திசைக்கு மவ்வோ
டுவ்வும் வவ்வு மௌவோ ரன்ன
விகர யகர மிறுதி விரவும்
புகரின் றுணர்ந்தோர் வரைந்தனர் போற்றல்.

இது நிறுத்தமுறையானே சில எழுத்துக்கள் கூடிச் சில எழுத்துக்கள்போல இசைக்கும், அது கொள்ளற்க என விலக்கும் எழுத்துப்போலி கூறுகின்றது.

இ - ள். அகரத்தின்முன்னர் இகரமும் யகரமுமென்று கூறப்பட்ட இரண்டெழுத்தும் பொருந்திநிற்பின் ஐகாரம்போல இசைக்கும்; அகரத்தோடு உகரமும் வகரமும் பொருந்திநிற்பின் ஔகாரம்போல இசைக்கும்; இகரமும் யகரமும் அவ்வீற்றுமொழிகளின் இறுதிக்கண் ஒன்றன்பின் ஒன்று ஓசைவிரவி நிற்கும்; குற்றமின்றி எழுத்திலக்கணத்தை அறிந்தோர் அவ்விகாரங்களைக் கொள்ளாது கடிந்து பாதுகாக்க. எ - று.

**வ**ரலாறு; ஐவனமென்பது அஇவனம் அய்வனம் எனவும், ஔவையென்பது அஉவை அவ்வை எனவும், ஆளி ஞாளி என்பன ஆளிய் ஞாளிய் எனவும், ஆய் நாய் என்பன ஆய்இ நாய்இ எனவும், வரும். இவை கடிதல்வேண்டுமென்றறியாதார் இவற்றைக் கொள்ளற்பாலதாம் போலியென மயங்குப. (நசு)

நஎ. நெட்டுயிர் காரமு மையௌக் கானு
மிருமைக் குறிலோ டிவற்றொடு கரமுமா
மின்ன சாரியைபெறாஉ மெவ்வழி யானு
மெய்யி னியக்க மகரமொடு சிவணும்.

இது மேலிலக்கணங் கூறப்பட்ட அவ்வெழுத்துக்கள் வழங்குதற்கு வருஞ் சாரியை கூறுகின்றது.

இ - ள். நெட்டெழுத்து எழுங் காரமும் ஐகாரஔகாரங்கள் அதுவன்றிக் கானும் உயிர்க்குறிலும் உயிர்மெய்க்குறிலும் மெய்களுங் காரம் கான்களுடனே கரமும் ஆகின்ற இத்தன்மையையுடைய சாரியைபெற்று நடக்கும். சாரியை பெற்ற இடத்தும் பெறாத இடத்தும் ஒற்றுக்களது இயக்கம் அகரத்தோடு பொருந்தி இயங்கும். எ - று.

அன் ஆன் முதலிய மொழிச்சாரியையும் உடைமையின் இவை எழுத்துச்சாரியையென்பார் இன்னசாரியையென்றூர்.

வரலாறு; ஆகாரம் ஈகாரம் எனவும், ஐகான் ஔகான் எனவும், அகாரம் இகாரம் எனவும், அஃகான் இஃகான் எனவும், அகரம் இகரம் எனவும், ககாரம் சகாரம் எனவும், கஃகான் மஃகான் எனவும், ககரம் சகரம் எனவும் வரும். பிறவும் அன்ன. "வகார மிசையு மகாரங் குறுகும்" எனவும், "மகரத் தொடர்மொழி மயங்குதல் வரைந்த" எனவும், "வஃகான் மெய்கெடச் சுட்டுமுத லைமுன்" எனவும், சாரியைபெற்றவிடத்தும் "அம்மி னிறுதி கசதக் காலைத்—தன்மெய் திரிந்து ஙஞந வாகும்" எனச் சாரியைபெறுத இடத்தும் மெய்யினியக்கம் அகரமொடு சிவணியவாறு காண்க.

இன்னும் உரையிற்கோடலான் ஆன் ஏன் ஓன் முதலிய சாரியை பெறுதலும் ஐகார ஔகாரங்கள் ஒழிந்தவற்றின்கட் கான்வருங்காலை ஆய்தம் வருதலுஞ் சாரியை பெறவேண்டுமென்னும் யாப்புறவின்றி "ஆ ஏ ஓ அம்மூன்றும் வினு" "அ இ உ அம் மூன்றுஞ் சுட்டு" என்றூற்போல வாளாகூறுதலுங் கொள்க. (கஎ)

முதலாவது எழுத்தியல் முற்றிற்று.



## உ-வது பதவியல்.

கஅ. எழுத்தே தனித்து மிணைந்துந் தொடர்ந்தும்
பதமாம் பொருடரி னதுபகாப் பதம்பகு
பதமென வாயிரு பகுதித் தென்ப.

என்பதுசூத்திரம். நிறுத்தமுறையானே பதங்களது இயல்பு உணர்த்திற்றூகலான் இவ்வோத்துப் பதவியலென்னும்பெயர்த்து. மேல் எழுத்துணர்த்தி அவ்வெழுத்தினுனும் பதங்களது இயல்பு உணர்த்திற்றூகலான் மேல் ஒத்தினேடு இயைபுடைத்தாயிற்று. இதனுள் இத்தலைச்சூத்திரம் மொழியாக்கமும் அதன் பகுதியும் உணர்த்துகின்றது.

இ - ள். மேற்கூறிய இலக்கணங்களை எய்திநின்ற எழுத்துக்கள் தாமே தனித்து ஓரெழுத்தாகியும் இணைந்து ஈரெழுத்தாகியும் இரண்டனை இறந்து தொடர்ந்து பலவெழுத்தாகியும் நின்று பொருளை விளக்குமெனின் அவ்வெழுத்துக்கள் மொழியெனப்

படும். அங்ஙனம் எழுத்தானாகிய மொழிதான் பகாப்பதமும் பகுபதமுமென அவ்விரண்டு கூற்றதாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

மேற்கூறிய இலக்கணங்களை எய்திநின்ற எழுத்தே மொழியாமென்றலின் "மொழிப்படுத் திசைப்பினுந் தெரிந்துவே றிசைப்பினு—மெழுத்திய றிரியா" என்பதூஉம் பெற்றாம். பெறவே, அஃகல் அ எனவும், ஆல் ஆ எனவும், கடல் க எனவும், கால் கா எனவும், மொழிக்கட்படுத்துச் சொல்லினுந் தெரிந்துகொண்டு வேறே சொல்லினும் உயிரும் மெய்யுமாகிய எழுத்துக்கள் பெருக்கச் சுருக்கமுடையனபோன்று இசைப்பினுந் தத்தம் மாத்திரையியல்பிற் றிரியாவாகி வருமெனக்கொள்க. இன்னும் எடுத்தல் படுத்தல்முதலிய ஓசை வேற்றுமைக்கண்ணும் எழுத்தியல் திரியாவென்பதூஉங் கொள்க.

ஈரெழுத்தொருமொழியும் ஓதினார் சில பல என்னுந் தமிழ்வழக்குநோக்கி. "ஓரெழுத் தொருமொழி யீரெழுத் தொருமொழி—யிரண்டிறந் திசைக்குந் தொடர்மொழி யுளப்பட—மூன்றே மொழிநிலை தோன்றிய நெறியே" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாருமென்க.

பொருடரிற் பதமாம் எனவே தாராதவழி எழுத்தாந்தன்மையுந் தந்தவழி மொழியாந்தன்மையும் எய்திநிற்றல் பெற்றாம்; "தன்னை யுணர்த்தி னெழுத்தாம் பிறபொருளைச்—சுட்டிதற் கண்ணேயாஞ் சொல்." என்பவாகலின்.

ஆ, கா, ஓரெழுத்தொருமொழி. மணி, கூனி, ஈரெழுத்தொருமொழி. அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத்திரட்டாதி எனவும், கூனன், குழையன், பொருப்பன், அம்பலவன், அம்பலத்தான், அம்பலத்தினன், உத்திரட்டாதியான் எனவும் வருவன தொடர்மொழி. பிறவும் அன்ன. தொடருங்காற் பகாப்பதம் மூன்றெழுத்துமுதல் ஏழெழுத்தீறாகவும் பகுபதம் மூன்றெழுத்துமுதல் ஒன்பதெழுத்தீறாகவுந் தொடருமெனக்கொள்க. எழுந்திருத்தல் எழுந்திருக்கின்றான் எனவும், பொருத்துவித்தல் பொருத்துவிக்கின்றனன் எனவும், சிறுபான்மை மிக்குத் தொடர்வனவுங்கொள்க. "சேரமான் யானைக்கட்சேஎய் மாந்தரஞ்சேரலிரும்பொறை" இத்தொடக்கத்து ஒட்டுப்பெயர்கட்கு வரையறையில்லையென்க.

ஒற்றுங் குற்றுகரமும் எழுத்தென்னப்படாவெனச் செய்யுளியலுட் கூறினமைபற்றிக் கால் மால் கல் வில் நாகு தெள்கு

எஃகு கொக்கு கோங்கு என்பனவற்றை ஓரெழுத்தொருமொழி யென்றுஞ் சாத்தன் கொற்றன் வரகு குரங்கு என்பனவற்றை ஈரெழுத்தொருமொழியென்றுங் கூறின், ஆகாது. என்னை? செய்யுட்கண் இசைபற்றி அவை எண்ணப்படாவெனவும் மொழியாக்கத்தின்கட் பொருள்பற்றி எண்ணப்படுமெனவுங் கருதி "நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி." "குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே." எனவும், "ஈரெழுத் தொருமொழி யுயிர்த் தொட ரிடைத்தொட—ராய்தத் தொடர்மொழி வன்றொடர் மென்றொட—ராயிரு மூன்றே யுகரங் குறுகிடன்" எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் ஓதலின். (க)

நகூ. நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி
குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே.

இது மேற்கூறிய மூவகைமொழியுள் ஓரெழுத்தொருமொழி இவ்வெழுத்துக்களான் ஆகுமென்கின்றது.

இ - ள். நெட்டெழுத்தாகிய ஏழும் ஓரெழுத்தானுகும் ஒரு மொழியாம்; குற்றெழுத்தாகிய ஐந்தும் ஓரெழுத்தாய்நின்று ஒரு மொழியாய் நிறைதலில; இவற்றுட் சில நிறைக்கும். எ - று.

ஏழுமென்னும் முற்றும்மை தொகுத்து ஈற்றசை ஏகாரம் விரித்தார். ஐந்துமென்னும் முற்றும்மை ஈண்டு எச்சமாய்நின்றது. ஈண்டு நெட்டெழுத்தென்றது உயிரையும் உயிர்மெய்யையும். குற்றெழுத்தென்றது உயிர்மெய்யுட் சிலவற்றையெனக்கொள்க.

வரலாறு; ஆ ஈ ஊ ஏ ஐ ஓ எனவும், கா தீ பூ சே தை சோ கௌ எனவும், து நொ எனவும் வரும். பிறவும் அன்ன. ஔகாரம் உயிர்மெய்க்கண்ணல்லது வாராது. ஊ, இறைச்சி; ஓ, மதகு நீர் தாங்கு பலகை; சோ, அரண்; உகர ஒகரங்கள் து நொ என மெய்யோடு கூடியல்லது வாராமையானும், ஒகரம் ஒழிந்த ஏனை நான்குயிரும் அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் எப்பொருள் என இடைச்சொல்லாய்ப் பெயரைச்சார்ந்துநின்று சுட்டுப் பொருளும் வினாப்பொருளும் உணர்த்துவதல்லது தனித்துநின்று உணர்த்துதலாற்றாமையானுங் குற்றெழுத்தைந்தும் மொழிநிறை பில என்றார். 'நெட்டெழுத் தேழே யோரெழுத் தொருமொழி— குற்றெழுத் தைந்து மொழிநிறை பிலவே.' என்றாரேனும் ஓரெழுத்தொருமொழி நெட்டெழுத்தேழானுங் குற்றெழுத்துட் சிலவற்றானும் ஆகுமென்பது கருத்தாகக்கொள்க. அங்ஙனங் கொள்ளவே

வினை இருவகைமொழியும் உயிர் ஒற்று உயிர்மெய்களான் ஏற்ற பெற்றியாகுமெனக் கோடும். (உ)

சO. பகாஅப் பதம்பகாஅப் பண்பிற் பயின்று
பெயர்வினை யிடையுரி யெனநால் வகைத்தே.

இது நிறுத்தமுறையானே பகாப்பதத்தினது இயல்பும் அதன் பகுதியும் உணர்த்துகின்றது.

இ - ள். பகாப்பதம் பகுக்கப்படாத இயல்பின்கண்ணே மிக்குச்சென்று பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமென நான்கு திறத்தினையுடைத்தாய்வரும். எ - று.

வரலாறு; ஆடூஉ மகடூஉ யானை குதிரை சோறு கூழ் உயிர் உடம்பு தீ நீர் எனவும், வான் நிலம் அகம் புறம் எனவும், யாண்டு வேனில் பங்குனி ஆதிரை பகல் இரா காலை மாலை நெருநல் இன்று எனவும், கண் செவி கை கால் கோடு தளிர் பூ காய் எனவும், செம்மை கருமை நெடுமை குறுமை சிவப்பு கறுப்பு வட்டம் சதுரம் எனவும், உணல் தினல் செலவு வரவு கூத்து பாட்டு எனவும், இத்தொடக்கத்துப் பொருளாதி அறுவகைப்பொருளையும் உணர்த்துவனவெல்லாம் பெயர்ப்பகாப்பதம். எல்லாம் பொருளென்றற்கு ஒரோவழி உரிமையுடைமையின் அக்கருத்தானீண்டுப் பண்புந் தொழிலும் பொருளெனப்பட்டன. நட வா உண் தின் இத்தொடக்கத்தன வினைப்பகாப்பதம். மன் மற்று அம்ம இத்தொடக்கத்தன இடைப்பகாப்பதம். சால உறு தவ இத்தொடக்கத்தன உரிப்பகாப்பதம். பிறவும் அன்ன. பகாப்பதம் பகுக்கப்படாத இயல்பின் கண்ணே மிக்குச்செல்லுமெனவே அவன் அவள் அவர் தமன் தமள் தமர் என்றாற்போல்வன ஈறு பகுக்கப்படினும் பகுதி வேறுபொருட் படாமையின் அங்ஙனம் வரும் இயல்பின்கண்ணுஞ் சாத்தையுடையான் சாத்தன் கொற்றையுடையான் கொற்றன் என்றாற்போல்வன ஈறுபகுக்கப்பட்டுப் பகுதி வேறு பொருட்படினுஞ் சாத்தன் கொற்றன் என இடுகுறிமாத்திரையாயே நிற்பின் அவ்வாறு நிற்கும் இயல்பின்கண்ணுங் கங்கைகொண்டசோழபுரம் சோழனலங்கிள்ளி பாண்டியன்பல்யாகசாலை முதுகுடுமிப்பெருவழுதி என்றாற்போல்வன நிலைமொழி வருமொழியாகப் பகுக்கப்பட்டுப் பலபொருளுணர்த்தினுந் தொன்றுதொட்டு ஒருபிண்டமாய ஒருபொருளையே யுணர்த்திநிற்றலின் அங்ஙனம் நிற்கும் இயல்பின்கண்ணுஞ் சிறுவரவிற்றாய் நடக்குமெனக்கொள்க. இன்னுஞ் சாத்தன் சாத்தி முடவன் முடத்தி என்றாற்போலும் விரவுப்பெயர்கள் பகுதிவிகுதி

யாய்ப் பகுக்கப்படினும் விகுதிவகையான் உயர்திணையொருமை யேயன்றி அஃறிணையொருமையும் உணர்த்துமென்றற்கு ஒத்திலா மையான் உயர்திணையோடு அஃறிணை விரவிவரும் விரவுப்பெயர்க் கண்ணும் பகாப்பதஞ் சிறுவரவிற்றாக நடக்குமெனக்கொள்க. (௩)

சக. பகுபதம் பகுக்கும் பண்பிற் றாகி
வினையே வினைப்பெய ரெனவிரு பாற்றே.

இது பகுபதத்தினது இயல்பும் அதன் பகுதியும் உணர்த்து கின்றது.

இ - ள். மேற்கூறிய பகுபதம் பகுதி விகுதி முதலியவாகப் பகுக்கப்படும் இயல்பினையுடைத்தாகி வினையும் வினைப்பெயரு மென இரண்டுவகையினையுடைத்தாம். எ - று.

ஈண்டு வினையைமுற்கூறினார், அது காரணமாகவரும் பெய ரென்பது அறிவித்தற்கு. வினையென்றது ஈண்டுத் தெரிநிலைவினை முற்றுங் குறிப்புவினைமுற்றும். சிறுபான்மை பெயரெச்ச வினை யெச்சங்களும் உடன்கோடலும் ஒன்று. இவற்றின் இயல்பெல் லாம் மேலைச் சொல்லோத்தினுட் காண்க.

நடந்தான் நடக்கின்றான் நடப்பான் எனவுங், குழையன் நிலத்தன் வேனிலான் தோளான் செய்யன் ஊணன் எனவும், முறையே முக்காலமுங் காட்டும் வினைமுற்றுப்பகுபதமும் பொரு ளாதி ஆறுங் காரணமாகத் தோன்றும் வினைக்குறிப்புமுற்றுப்பகு பதமும் வந்தவாறு காண்க. பிறவும் அன்ன. இவற்றையே படுத் துக்கூறி இருவகை வினைப்பெயர்க்கும் உதாரணமாமாறு காண்க. நடந்தவன் நடக்கின்றவன் நடப்பவன் செய்யவன் கரியவன் என் றாற்போலும் வினை வினைக்குறிப்புப் பெயர்ப்பகுபதமும் ஈண்டே அடக்கிக்கொள்க. (௪)

சஉ. பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்த்தது முடித்தனர் கொளலே.

இது மேற்கூறிய பகுபதத்தினை இக்கருவிகளான் முடிக்க என்கின்றது.

இ - ள். பகுதிமுதலிய ஆறனுள்ளும் ஈண்டைக்கு ஏற்பன இவையெனக் கருதிக் கொணர்ந்து கூட்டி மேற்கூறிய பகுபதத்தினை முடித்துக்கொள்க. எ - று.

இவற்றுட் பகுதி பெரும்பாலும் வேறுபடாது முதற்கண் நிற்பது; விகுதி வேறுபட்டு இறுதிக்கண் நிற்பது; இடைநிலை பெரும்பாலும் இனையது இத்துணையது என்று அளத்தற்கு அரிய தாய்ப் பதமுடிப்புழிக் காலமும் பொருண்மையுங் காட்டி ஆண்டே காணப்படுவது; சாரியை அன் ஆன் முதலாக எடுத்தோதப்பட்டு எல்லாப்புணர்ச்சிக்கும் பொதுவாய்ச் சிறுபான்மை பொருணிலைக்கு உதவிசெய்து பெரும்பாலும் இன்னொலியே பயனாக வருவது; சந்தி இன்னது வந்தால் இன்னது இன்னதாமெனப் புணர்வுழித் தோன்றுஞ் செய்கை; விகாரஞ் செய்யுட்டொடையும் பதத்துள் அடிப்பாடும் ஒலியுங் காரணமாக வலித்தல் மெலித்தல் முதலாக ஆக்குவது. இஃது இடைநிலை முதலியவற்றான் முடியாதவழி வருவது. ஏற்பன எனவே ஒன்றற்கே இவை ஆறும் வரவேண்டுமென்னும் யாப்புறவில்லையென்பதூஉம் பெற்றாம். (ரு)

சஙு. நட வா மடி சீ விடு கூ வேவை
நொப்போ வெளவுரி னுண்பொருந் திருந்தின்
றேய்பார் செல்வவ் வாழ்கே ளஃகென்
றின்னவை முதல வெல்லா வினையுந்
தெரிநிலை வினையின் முதனிலை யாகும்.

பகுபதம் முடித்தற்கு உரிய கருவிகள் ஆறனுட் பின்னைய மூன்றும் மேற் புணரியலுட் பெறப்படுதலின் அவை யொழித்து எனைய கூறுவனவற்றுள் இது நிறுத்தமுறையானே இயற்றும் வினைமுதலும் ஏவும் வினைமுதலுமென்னும் இருவகை வினைமுதலினுள் இயற்றும் வினைமுதலான் நிகழ்த்தப்படுந் தெரிநிலைவினைமுற்றுப்பகுபதத்திற்கு உரிய பகுதி கூறுகின்றது.

இ - ள். நடவென்பது முதல் அஃகென்பது ஈறாகக்கிடந்த இவ்வியல்பினவற்றை முதலாகவுடையவாய் இவ்வாறு வரும் எல்லாவினைச்சொற்களும் இயற்றும்வினைமுதலான் நிகழ்த்தப்படுந் தெரிநிலைவினைமுற்றுப் பகுபதத்தினுடைய பகுதிகளாம். எ - று.

இயல்பு உயிரும் ஒற்றுங் குற்றுகரமுமாகிய இருபத்துமூன் றீற்றவாகிப் படித்தவோசையான் அச்செய்கைமேற் பெயர்த்தன்

மைப்பட்டு வினைமாத்திரையே உணர்த்திநிற்குந்தன்மை. குற்றுகரத்தை வேறுபிரித்ததனாற் போக்கு பாய்ச்சு ஊட்டு நடத்து எழுப்பு தீற்று இத்தொடக்கத்து வாய்பாட்டான் வருவனவுங்கொள்க. "ஏவல் வினைமுதற் றெரிநிலை வினையின்—மேவரு பகுதி" என வருஞ் சூத்திரத்துட் பெறப்படுதலின் ஈண்டு இயற்றும்வினைமுதற் றெரிநிலைவினையின்பகுதியே கூறிற்றென்பதுபெற்றாம். இவ்வாறு நின்ற முதனிலைகளை வடநூலார் தாது என்ப.

இவற்றாற் பகுபதம் வருமாறு; நடந்தான் வந்தான் மடிந்தான் சீத்தான் விட்டான் கூவினான் வெந்தான் வைத்தான் நொந்தான் போயினான் வெளவினான் எனவும், உரிஞினான் உண்டான் பொருநினான் திருமினான் தின்றான் தேய்த்தான் பார்த்தான் சென்றான் வவ்வினான் வாழ்ந்தான் கேட்டான் எனவும், அஃகினான் போக்கினான் பாய்ச்சினான் ஊட்டினான் நடத்தினான் எழுப்பினான் தீற்றினான் எனவும் வரும். பிறவும் அன்ன. (சூ)

சச. முன்ன ரோதிய முதனிலை யிறுதியின்
விப்பி யென்பவற் றொப்பது தனிவரி
னேவல் வினைமுதற் றெரிநிலை வினையின்
மேவரு பகுதி யாமென மொழிப.

இஃது ஏவல்வினைமுதலான் நிகழ்த்தப்படுந் தெரிநிலைவினை முற்றுப்பகுபதத்திற்கு உரிய பகுதி கூறுகின்றது.

இ - ள். உயிரீறு பதினொன்றும் ஒற்றீறு பதினொன்றுந் தன்வினையும் பிறவினையுமாகிய இருவகைக் குற்றுகரவீறு ஒன்றுமாகிய இருபத்துமூன்று ஈற்றவாகிய இவ்வியல்பினவற்றை முதலாகவுடையவாய் அவ்வாறு வரும் மேற்கூறிய பகுதிகளின் இறுதிக்கண் வகர இகரமும் பகர இகரமுமாகிய இரண்டனுள் ஏற்பது தனியே வந்து இசையுமாயின் அவற்றை ஏவல்வினைமுதலான் நிகழ்த்தப்படுந் தெரிநிலைவினைமுற்றுப்பகுபதத்தினுடைய பொருந்திய பகுதிகளாமென்று கூறுவர் அறிந்தோர். எ - று.

இவற்றாற் பகுபதம் வருமாறு:—நடப்பித்தான் வருவித்தான் மடிவித்தான் சீப்பித்தான் விடுவித்தான் கூவுவித்தான் வேவித்தான் வைப்பித்தான் நோவித்தான் போவித்தான் வெளவுவித்தான் எனவும், உரிஞுவித்தான் உண்பித்தான் பொருநுவித்தான் திருமுவித்தான் தின்பித்தான் தேய்ப்பித்தான் பார்ப்பித்தான் செல்வித்தான் வவ்வுவித்தான் வாழ்வித்தான் கேட்பித்தான் எனவும், அஃகு

வித்தான் போக்குவித்தான் பாய்ச்சுவித்தான் ஊட்டுவித்தான் நடத்துவித்தான் எழுப்புவித்தான் திற்றுவித்தான் எனவும் வரும். பிறவும் அன்ன.

இவ்விருசூத்திரத்தானுங் கூறிய பகுதிகள் பெயரெச்ச வினையெச்சங்கட்கும் நடந்தான் வந்தான் முதலிய வினைமுற்றுப்பெயர் கட்கும் பகுதியாமாறு உணர்க. நடந்தவன் வந்தவன் நடத்தல் வருதல் முதலிய வினைப்பெயர்க்கும் இவை பகுதியாமாறு உரையிற்கொள்க.

இனி இவ்வாறன்றி எடுத்தலோசையான் முன்னிலையேவ லொருமை வினைமுற்றுப்பகாப்பதங்களாகிய நட நடப்பி என்றாற் போல்வனவே பகுதியாமென்றும், நடப்பிப்பி வருவிப்பி நடத்து விப்பியென இவை இணைந்துவருமெனக்கூறியவற்றை இருமடி யேவற்பகாப்பதமென்றும், அவை நடப்பிப்பித்தான் வருவிப்பித் தான் நடத்துவிப்பித்தான் என்றாற்போல்வனவற்றிற்குப் பகுதியா மென்றுங் கூறுவாரும் உளர். அவ்வாறு கூறுவார்க்கும் அவை பகு தியாங்கால் அப்பொருண்மையிற் றிரிந்து படுத்தலோசையான் அச் செய்கை மேற் பெயர்த்தன்மைப்பட்டு வினைமாத்திரையே உணர்த் திநிற்குமெனக் கூறவேண்டுதலான், முன்னிலையேவல்வினைமுற் றுப்பகாப்பதங்கள் பகுதியாகாவென்றும்,இருகாலேவுதல் கூறியது கூறலாமாகலின் அவை இழிவழக்கென்றும்;அப்பகுதிகளாற் பிறந்த பகுபதங்களும் அவ்வியல்பினவாமென்றும் மறுக்க. (எ)

சரு. பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலே
குறிப்பு வினையி னெறிப்படு முதனிலை.

இது குறிப்புவினைமுற்றுப்பகுபதத்திற்கு உரிய பகுதிகள் இவை என்கின்றது.

இ - ள். பொருளும் இடமுங் காலமும் உறுப்பும் பண்புந் தொழிலுமாகிய ஆறுங் குறிப்புவினைமுற்றுப்பகுபதத்தினுடைய ஒழுங்குபட்ட பகுதிகளாம். எ - று.

பொருண்முதன்மூன்றும் முதலுஞ் சினைமுதன்மூன்றுஞ் சினையுமாய் இவ்வாறு இவ்வாறும் இருவகையாகியும் அடங்கு மென்பது அறிவித்தற்கு இம்முறை வைத்தார். பண்பாவன கரு செய் முதலியன.

இவற்றுற் பகுபதம் வருமாறு;—குழையன் நிலத்தன் வேனிலான் தோளான் கரியன் ஊணன் எனவரும். பிறவும் அன்ன. வினைக்குறிப்புப்பெயர்க்கு இவை ஆறும் முதனிலையாமாறும் பெயரெச்சவினையெச்சக் குறிப்புவினைகட்கு இவற்றுள் ஏற்பன முதனிலையாமாறும் உய்த்துணர்க. கரியவன் செய்யவன் கருமை செம்மை முதலியபண்புப்பெயர்க்கும் இவைபகுதியாமாறு உரையிற்கொள்க.

நெறிப்படுமுதனிலையென்றதனுற் கருமையன் செம்மையன் "பொருத்தமின்மையேன் பொய்மையுண்மையேன்" எனவும், வலைச்சி புலைச்சி எனவும், கறுப்பன் சிவப்பன் அளியன் அன்பன் எனவும் வரும் பண்புப்பகுபதங்கட்குக் கருமை செம்மை இன்மை உண்மைமுதலிய பண்புப்பெயர்களும் வலைமை புலைமை முதலிய சாதிப்பண்பு உணரநிற்கும் பெயர்களுங் கறுப்பு சிவப்பு அளி அன்பு முதலிய பல்வேறுவகைப்பட்ட பண்புப்பெயர்களும் நெறிப்படவாராது உடைப்பொருணீரவாகி வரும் முதனிலையாகக்கொள்க. இன்னும் அதனுனே வினை வினைக்குறிப்புக்களும் வினைப்பெயருமாகிய பகுபதங்களின் பகுதிகளுட் சில மிக்குஞ் சில திரிந்துஞ் சில ஈறுகெட்டும் இவ்வாறு நெறிப்படவாராது வருவனவுங் கொள்க.

வரலாறு;—வாவென்பகுதி வந்தான் வருகின்றுன் என்புழிக் குறைந்துந் திரிந்தும் வந்தது; கொள்ளென்பகுதி கொண்டான் கோடு கோடும் என்புழி ளகாரம் ணகாரமாகியுங் கெட்டும் நீண்டும் வந்தது; கொல் செல் வெல் என்னும் பகுதிகள் கொன்றுன் சென்றுன் வென்றுன் சோறு கோறும் சேறு சேறும் வேறு வேறும் என்புழி லகாரம் னகாரமாகியுங் கெட்டும் நீண்டும் வந்தன; வலைமை புலைமை குயமை பனவு கணவாளம் சேமாறல் கைவாரங்கோடல் நாளோதல் நூலோதல் திருவின்மை அறிவின்மை என்னும் பகுதிகள் வலைச்சி புலைச்சி குயத்தி பனத்தி கணவாட்டி சேமாறி கைவாரி.நாளோதி நூலோதி திருவிலி அறிவிலி என்புழி ஏற்றவாறு ஈறுகெட்டுவந்தன. வெள்ளாண்மை என்னும் பகுதி வேளாட்டி என்புழிக் கெட்டுந் திரிந்தும் வந்தது. பிறவும் அன்ன.

இனி இவ்வாறன்றிச் "செம்மை சிறுமை சேய்மை தீமை—வெம்மை புதுமை மென்மை மேன்மை—திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர—ின்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே. என" க்கூறி இவையே பகுதியாமென்றும் இவை விகுதி பதமென்பனவற்றேடு புணருங்கால் "ஈறுபோத லிடையுகர மிய்யாத—லாதிநீட

டியகர மையாத—றன்னொற் றிரட்டன் முன்னின்ற மெய்திரித—லினமிக லினையவும் பண்பிற் கியல்பே" எனக்கூறி இவ்வாறு செய்கைப்படுமென்றுங் கூறுவாரும் உளராலோவெனின், உடைப்பொருளவாகிய செம்மையன் கருமையன் முதலியவற்றிற்கல்லது இன்னனென்னும் பொருளவாகிய செய்யன் கரியன் முதலியவற்றிற்குப் பகுதியாகாமையிற் செம்மை சிறுமை முதலியன பகுதியாகாவெனவும், விகுதிப்புணர்ச்சிக்கட் குழையன் என்பதுபோலச் செம்மையன் கருமையன் எனப் புணர்வதல்லது ஈறு கெடாதாகலானும் வலைச்சி புலைச்சி முதலியன கெடுதல் "விளம்பிய பகுதிவே றாதலும் விதியே." என அவர் கூறியவாற்றான் அமையுமாகலானும் பதப்புணர்ச்சிக்கட் கருங்குதிரையென்பது கருமையாகிய குதிரையென விரியாமையிற் கருவென்னும் பண்பல்லது கருமையென்னும் பண்புப்பெயர்நின்று புணராமையானும் அது நின்று புணருங்காற் கருமைக்குதிரையெனப் புணர்வதல்லது கருங்குதிரையெனப் புணராமையானும் அச்செய்கை எய்தாதெனவும் மறுக்க. (அ)

சசு. அன்ன னள்ளா ளர்ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்னே னல்லோ
டம்மா மெம்மே மோமொ டும்மூர்
கடதற ஐயா யிம்மி னிர்ஈர்
கயர வாலேல் காணும் பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே.

இது நிறுத்தமுறையானே வினை வினைக்குறிப்பு முற்றுப் பகுபதத்திற்கும் வினைப்பெயர்ப் பகுபதத்திற்கும் உரிய விகுதிகள் இவையென்கின்றது.

இ-ள். அன்னென்பது முதல் உம்மென்பது ஈறாகக் கிடந்த முப்பத்தொன்பதும் அவைபோல்வனபிறவும் வினை வினைக்குறிப்பு முற்றுப் பகுபதங்களினுடைய விகுதிகளாம்; வினைப்பெயர்ப் பகுபதத்தின்கண்ணுஞ் சில விகுதிகளாம். எ-று.

பகுபதமுடித்தற்குக் கருவியாந்துணையே ஈண்டுக்கூறவேண்டுதலின் இவை திணை பால் இடங்கட்கு உரியவாமாறு கூறிற்றிலர். அது மேற் சொல்லோத்தினுட் கூறுப.

வரலாறு;—நடந்தனன் நடந்தான் நடந்தனள் நடந்தாள் நடந்தனர் நடந்தார் உண்ப உண்பார் நடந்தன நடவா உண்கு உண்டு

வருது சேறு நடந்தனென் நடந்தேன் நடப்பல் நடப்பம் நடப்பாம் நடப்பெம் நடப்பேம் நடப்போம் உண்குும் உண்டும் வருதும் சேறும் நடந்தனை நடந்தாய் நடத்தி நடமின் நடந்தனிர் நடந்திர் வாழ்க வாழிய வாழியர் "மரீஇயதொரால்" அழேல் சொல்லிக் காண் உண்ணும் எனவரும். வினைக்குறிப்பின்கண்ணும் இவற்றுள் ஏற்பன வருவித்துக் குழையன் குழையான் எனக் காண்க. பிற வும் அன்ன.

இவற்றுள் வேறுவினைக்கு உரியனவுஞ் சிலவுள. அவை பத்து. அவற்றை எழுத்தொப்புமைபற்றிச் சூத்திரம் பல்காமைப்பொருட்டு ஈண்டுத் தொகுத்தார். அவை சொல்லோத்தினுள் எடுத்துக் கூறுப.

அவை வருமாறு; அன்னீறு கூறுவன் எனத் தன்மைக்கண் ணும், மாரீறு "நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே." எனக் காண்கவென்னும் வியங்கோட்கு எதிர்மறைக்கண்ணும், டுவ்வீறுமு தன்மூன்றுங் குண்டுகட்டு வந்தது போயிற்று என அஃறிணையொ ருமைப்படர்க்கைக்கண்ணும், அல்லீறு "மகனெனல் மக்கட் பதடி யெனல்." என வியங்கோளிடத்து மறையின்கண்ணும் உடன்பா ட்டின்கண்ணும் உண்ணல் என முன்னிலையேவலொருமைமுற் றின்கண்ணும், மையீறு "அஞ்சாமை யஞ்சுவ தொன்றின்" என வியங்கோள்மறையின்கண்ணும், இகர ஈறு நடப்பி வருவியெனச் செய்வியென்னும் முன்னிலையேவற்பொருண்மை முற்றின்கண் ணும், அலீறு மருல் என முன்னிலையேவலொருமை முற்றின்கண் ணும் உம்மீறு "வாழ்தல் வேண்டுமிவண் வரைந்த வைகல்" என வியங்கோட்கண்ணும் உண்ணும் தின்னும் என முன்னிலையேவற் பன்மைமுற்றின்கண்ணும் வரும். இன்னும் பிறவற்றின்கண்ணும் வருமேனும் வந்துழிக் காண்க.

இனி வினைப்பெயர்க்கண்ணும் இவற்றுட்சில விகுதியாமாறு வந்தவன் வந்தான் எனவும், வில்லவன் வில்லான் எனவும் காண்க. பிறவும் அன்ன.

பிறவுமென்றதனாற் பெயரெச்ச வினையெச்ச விகுதிவாய்பா டும் ஓர்ந்துணர்க. (கூ)

சஎ. கடதற வொற்றின் னைம்பான் மூவிடத்
திறந்த காலந் தருந்தொழி லிடைநிலை.

நிறுத்தமுறையானே இடைநிலை கூறுவனவற்றுள் இஃது இறந்தகாலங்காட்டும் வினைமுற்றுப் பகுபதங்களின் இடைநிலைகள் கூறுகின்றது.

இ - ள். கடதற என்னும் நான்குமெய்களும் இன்னுமாகிய ஐந்தும் ஐம்பான்மூவிடத்தும் இறந்தகாலங் காட்டுந் தெரிநிலைவினைமுற்றுப்பகுபதங்களின் இடைநிலைகளாம். எ - று.

ககரம் முதனிலையெழுத்தாயுந் தகரம் முதனிலையெழுத்தாகாதும் ஏனையிரண்டும் முதனிலையெழுத்தாயும் அதற்கினமாயும் அடுத்துவரும்.

வரலாறு;—நக்கான் நக்காள் நக்கார் நக்கது நக்கன நக்கேன் நக்கேம் நக்காய் நக்கீர் எனவும், விட்டான் விட்டாள் விட்டார் விட்டது விட்டன விட்டேன் விட்டேம் விட்டாய் விட்டீர் எனவும், உண்டான் உண்டாள் உண்டார் உண்டது உண்டன உண்டேன் உண்டேம் உண்டாய் உண்டீர் எனவும், உரைத்தான் உரைத்தாள் உரைத்தார் உரைத்தது உரைத்தன உரைத்தேன் உரைத்தேம் உரைத்தாய் உரைத்தீர் எனவும், உற்றான் உற்றாள் உற்றார் உற்றது உற்றன உற்றேன் உற்றேம் உற்றாய் உற்றீர் எனவும், தின்றான் தின்றாள் தின்றார் தின்றது தின்றன தின்றேன் தின்றேம் தின்றாய் தின்றீர் எனவும், உறங்கினான் உறங்கினாள் உறங்கினார் உறங்கிற்று உறங்கின உறங்கினேன் உறங்கினேம் உறங்கினாய் உறங்கினீர் எனவும் வரும்.

உரையிற்கோடலான் நக்கிலன் நக்கினனல்லன் நக்கிலான் நக்கானல்லன் உண்டிலன் உண்டனனல்லன் உண்டிலான் உண்டானல்லான் உரைத்திலன் உரைத்தனனல்லன் உரைத்திலான் உரைத்தானல்லான் தின்றிலன் தின்றனனல்லன் தின்றிலான் தின்றானல்லான் உறங்கிலன் உறங்கினனல்லன் உறங்கிலான் உறங்கினானல்லான் என மறைக்கண் இவ்விடைநிலைகள் வேறுசில எழுத்துக்களோடு கூடி இறந்தகாலங் காட்டுமெனவும், எஞ்சியது தப்பியது போயது போய என யகரமும் போயன என அன்னும் போனான் போனது என னகரமுஞ் சிறுபான்மை இறந்தகாலங் காட்டுமெனவுங்கொள்க. பிறவும் அன்ன. (௪0)

௪அ. ஆநின்று கின்று கிறுமூ விடத்து
மைம்பா னிகழ்பொழு தறைவினை யிடைநிலை.

இது நிகழ்காலங்காட்டும் வினைமுற்றுப்பகுபத இடைநிலைகள் கூறுகின்றது.

இ-ள். ஆநின்றுங் கின்றுங் கிறுவுமாகிய மூன்றும் மூவிடத்தும் வரும் ஐம்பாற்கண்ணும் நிகழ்காலங்காட்டுந் தெரிநிலைவினைமுற்றுப்பகுபத இடைநிலைகளாம். எ-று.

புதியனபுணர்த்தலுமென்பதனாற் கிறுவும் உடனோதினார்.

வரலாறு;—உண்ணாநின்றான் உண்கின்றான் உண்கிறான் என வரும். ஏனைப்பால் இடங்கடோறும் ஒட்டுக.

உரையிற்கோடலான் உண்ணாநின்றிலன் உண்ணாநின்றனனல்லன் உண்ணாநின்றிலான் உண்ணாநின்றானல்லான் உண்கின்றிலன் உண்கின்றனனல்லன் உண்கின்றிலான் உண்கின்றானல்லான் என மறைக்கண் ஆநின்று கின்றென்னும் இடைநிலைகள் வேறுசில எழுத்துக்களோடு கூடி நிகழ்காலங்காட்டுமெனவும், உண்ணாகிடந்தான் உண்ணாவிருந்தான் எனக் கிடவும் இருவும் "உரைக்கிற்றி நன்றுமன் னிதுநாடாய் கூறி" என றகரமுங் "கானங்கடத்திரெனக்கேட்பின்" எனத் தகரமும் உண்பல் வருவல் உண்ணாநிற்பல் எனவும் "கூடநீர் நின்றபெற்றி கண்டிப்பா னேக்குவேற்கு" உண்பேற்கு எனவும் முறையே வினைவினைப்பெயர்க்கண் வகரபகரங்களுஞ் சிறுபான்மை நிகழ்காலங் காட்டுமெனவுங் கொள்க. பிறவும் அன்ன. (௧௧)

௪௯. பவ்வ மூவிடத் தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில.

இஃது எதிர்காலங்காட்டும் வினைமுற்றுப்பகுபத இடைநிலைகள் இவையெனவும் இவ்விடைநிலைகளைச் சில வினைமுற்றுப்பகுபதங்கள் ஏலாவெனவுங்கூறுகின்றது.

இ-ள். பகரவகரங்களாகிய இரண்டொற்றும் மூவிடத்து ஐம்பால்களினும் எதிர்காலங்காட்டுந் தெரிநிலைவினைமுற்றுப்பகுபத இடைநிலைகளாம். இம்முக்காலமுங்காட்டும் இடைநிலைகளைச் சில வினைப்பகுபதங்கள் ஏலாவுமாம். எ-று.

வரலாறு;—உண்பன் உறங்குவன் எனவரும். ஏனைப் பாலிடங்கள் தோறும் ஒட்டுக. நடப்பி வருவி நடத்துவி எனச்செய்வி என்னும் பொருண்மைக்கண் வரும் முன்னிலையேவலொருமை வினைமுற்றுப்பகுபதங்களும் இவ்விடைநிலை பெற்றவாறுகாண்க.

உரையிற்கோடலான் உண்பானல்லன் ஓதுவானல்லன் என மறைக்கண் இவ்விடைநிலைகள் வேறுசில எழுத்துக்களோடு கூடி எதிர்காலங்காட்டுமெனவும் "அந்த ணாளனை நருகம் யாமே" "பாடு கம் வாவாழி தோழி" "ஐய சிறிதென்னை யூக்கி" உண்டி "ஈதன் மாட் டொத்தி பெரும" உரைத்தி தின்றி எனக் கடதறக்களுஞ் சிறு பான்மை எதிர்காலங் காட்டுமெனவுங் கொள்க. பிறவும் அன்ன. ()

ருO. குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ
டும்மூர் கடதற விறுதியும் பம்மார்
மின்னெ னீறும் வியங்கோட் பகுதியு
மேவலு மறையு மெண்பன வெதிர்வுஞ்
செய்யுகிகழ் பெதிர்வு மெய்பெறத் தருஉ
மிடைநிலை யேலா தென்மனார் புலவர்.

இது மேற் காலங்காட்டும் இடைநிலைகளைச் சிலவினைமுற் றுப்பகுபதங்கள் ஏலாவென்கின்றார் அவை இவையென்பதூஉம் அவை இக்காலங் காட்டுமென்பதூஉங் கூறுகின்றது.

இ-ள். குடுதுறுவென்னுங் குற்றியலுகரவீற்று உண்கு உண்டு வருது சேறு முதலிய தன்மையொருமை வினைமுற்றுக்க ளும், உம்மென்னும் இறுதியிடைச்சொல்லின் உகரமேறிய கும் டும் தும் றும் என்னுமிவ்வீற்று உண்கும் உண்டும் வருதும் சேறும் முதலிய தன்மைப்பன்மை வினைமுற்றுக்களும், பகர உயிர்மெய்யும் மாரும் என்னும் இவ்வீற்று உரினுப உண்ப கொண்மார் முதலிய உயர்திணைப்பன்மை வினைமுற்றுக்களும், மின்னென்னும் ஈற்று உண்மின் உரினுமின் முதலிய முன்னிலைப்பன்மை வினைமுற் றுக்களும், வியங்கோட்டிறத்துவருங் கவ்வும் யவ்வும் ரவ்வும் அல்லும் ஆலும் மாரும் உம்மும் மையும் என்னும் இவ்வீற்றுச் செல்க வாழிய வாழியர் "மகனெனல் மக்கட் பதடியெனல்" "மரீஇயதொரால்" "காணன்மாரெமரே" "வாழ்தல் வேண்டுமி வண் வரைந்த வைகல்" "அஞ்சாமை யஞ்சுவ தொன்றின்" முத லிய வியங்கோண்முற்றுக்களும், ஏவற்றிறத்துவரும் உண்ணும் தின் னும் முதலிய முன்னிலையேவற்பன்மை வினைமுற்றுக்களும், அல் லும் ஆலும் ஏலும் காணும் என்னும் இவ்வீற்று உண்ணல் மருல் அழேல் சொல்லிக்காண் முதலிய முன்னிலையேவலொருமை வினை முற்றுக்களும், உண்ணலன் உண்ணேன் முதலிய எதிர்மறைவினை முற்றுக்களும் எனச் சொல்லப்படுவனவாகிய பகுபதங்களெல்லாம்

எதிர்காலமுஞ்; செய்யுமென்னும் வாய்பாட்டான் வரும் உண்ணும் தின்னும் முதலிய வினைமுற்றுப்பகுபதங்கள் நிகழ்கால எதிர்காலங்களும்; இடைநிலையேலாது பொருள்பெறக்காட்டுமென்று கூறுவர் அறிந்தோர். எ - று.

பகுதியென்றதனை ஏவலோடுங்கூட்டுக.

உண்ணநிற்ப எனப் பல்வீற்றுயர்திணைப்பன்மை வினைமுற்று நிகழ்காலமும்உண் டிலன் உண்ணாநின்றிலன் முதலிய எதிர்மறை வினைமுற்றுக்கள் முறையே இறந்தகாலமும் நிகழ்காலமுங் காட்டும் பிறவெனின் அவை இடைநிலைபெற்று அவற்றாற் காலங்காட்டின; ஈண்டு ஓதியன இடைநிலைபெறாது காலங்காட்டின என்க.

மெய்பெற என்றதனாற் "கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்" "தொல்லது விளைந்தென நிலம்வளங் காப்பினும்" எனப் பொழிந்துவிளைந்து என்னுந் துவ்வீற்றுத் தன்மையொருமைவினைமுற்றுக்கள் இறந்தகாலமுஞ் "சிறுகண் யானையொடு பெருந்தேரெய்தி யாமிவ ணின்றும் வருதும்" எனத் தும்மீற்றுத் தன்மைப்பன்மைவினைமுற்று நிகழ்காலமுஞ் சிறுபான்மை காட்டுமெனவுங்கொள்க.

இன்னும் அதனானே ஈண்டு ஓதியகாலத்திற் பிறழ்ந்துவருவன உளவாயின் அவையும் இவ்விடைநிலையேலாப் பெயரெச்சவினையெச்சங்களும் என்மனார் என்றிசினோர் முதலிய வினைத்திரிசொற்களுங் காலங்காட்டும் இயல்பு அறிந்து முடித்துக்கொள்க.

இன்னும் அதனானே வினைக்குறிப்புமுற்றுப் பகுபதங்கள் இடைநிலைவகையானும் ஈற்றுவகையானுமன்றிக் குறிப்பானே ஏற்றவாறு முக்காலமும் நட வா முதலிய முன்னிலையேவலொருமை வினைப்பகாப்பதங்கள் எதிர்காலமுங் காட்டுமெனவுங் கொள்க. ஈண்டுச் சொல்லாதொழிந்த இவற்றின் விகற்பமெல்லாம் மேற் சொல்லோத்தினுள் வினையியலுட் காண்க.

இனி இவ்வாறன்றி "றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவுந்— தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு—கழிவுங் கவ்வொ டெதிர்வுமின் னேவல்—வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தஞ்—செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வு—மெதிர்மறை மும்மையுமேற்கு மீங்கே." எனக் கூறுவாரும் உளர். காலங்காட்டுவனவாகப் பின்னுள்ளோர் எடுத்தோதிய எழுத்துக்கள் தம்முண் மயங்கி

யும் வருதலின் அதுபற்றிக் காலங்காட்டும் எழுத்துக்களை ஆசிரியர் தொல்காப்பியனார் எடுத்தோதாராயினாரேனும் இடைநிலைவகை யானும் இறுதிநிலைவகையானுங் காட்டுதுமெனக் காலங்காட்டிய புகுந்த உரையாசிரியரை உள்ளிட்டோரால் அவ்வாறு கூறப்படா மையான் அஃது இலக்கணமன்றெனமறுக்க. (கங)

ருக. இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலிற்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைக்குறிப் பிடைநிலை யென்னல் வேண்டும்.

இது வினைக்குறிப்புமுற்றுப் பகுபத இடைநிலை கூறுகின்றது.

இ - ள் முற்காலத்திற் கண்டதாகிய இலக்கியத்திற்கு இலக் கணங்கூறலின் ஈண்டு முடிக்கலுறும்பதத்தின் பகுதியையும் விகுதி யையும் பிரித்து வேறு இடைநின்றதனை வினைக்குறிப்புமுற்றுப்பகு பதத்தின் இடைநிலையெனச்சொல்லுதலைவிரும்பும் ஆசிரியன். எ-று.

இவை காலங்காட்டாது வாளாநிற்பினும் இடைநிற்றலான் இடைநிலையாமென்பார் இடைநிலையென்னல்வேண்டுமென்றார்.

வரலாறு;—கச்சினன் நாட்டினன் ஐயாண்டினன் தோளி னன் அருளினன் வரவினன் எனவரும். பிறவும் அன்ன. இன் ஈண் டுச் சாரியையன்று, இடைநிலை, உறங்கினான் என்புழிப்போல. (கச)

ருஉ. விளம்பிய விடைநிலை வினைப்பெயர்க் கண்ணு
மேற்பன கோட லியல்பென மொழிப.

இது வினை வினைக்குறிப்புப்பெயர்ப் பகுபதங்கட்கு இடைநி லையாமாறு மாட்டெறிந்து உணர்த்துகின்றது.

இ - ள். மேல் வினை வினைக்குறிப்புமுற்றுப் பகுபதங்களுக்கு ஓதிய இடைநிலைகள் அவ்விருபெயரிடத்தும் பொருந்துவன கொ ணர்ந்து முடித்தல் இயல்பாமென்று கூறுவர் புலவர். எ - று.

வரலாறு;—நக்கான் விட்டான் உரைத்தான் உற்றான் பருகி னான் எனவும், நடவாநின்றான் நடக்கின்றான் நடக்கிறான் எனவும், உண்பான் உறங்குவான் எனவும், கச்சினன் கழலினன் எனவும் வரும். இவற்றைப் படுத்துக்கூறுக. உண்டவன் உரைத்தவன் உண்ணாநின்றவன் உண்பவன் முதலிய வினைப்பெயர்கள் இவ்வி

டைநிலை பெற்றவாறும், வானவன் மீனவன் வில்லவன் எல்லவன் கதிரவன் கரியவன் முதலிய வவ்வென்னும் இடைநிலை பெற்றவாறுஞ், சேரமான் கட்டிமான் முதலிய மகர இடைநிலை பெற்றவாறும், வலைச்சி பனத்தி மலையாட்டி முதலிய முறையே சகர தகர டகர இடைநிலை பெற்றவாறுஞ் செட்டிச்சி தச்சிச்சி முதலிய இச்சென்னும் இடைநிலை பெற்றவாறுங் காண்க. பிறவும் அன்ன.

இனி ஈண்டு ஓதிய பகுதி முதலிய மூன்றனும் மேற் புணரியலுள் ஓதப்படுஞ் சாரியை முதலிய மூன்றனும் பகுபதம் முடிக்குமாறு:—நடந்தான் என்னும் உயர்திணை ஆண்பால் ஒருமைப் படர்க்கை இறந்தகால இயற்றும் வினைமுதல்வினைமுற்றுப்பகுபதம் முடிப்புழி நடத்தலைச் செய்தானென்னுந் தொழில் தோன்ற "நடவா" என்பதனான் நடவென்னும் அகரவீற்றுப்பகுதியை முதல்வைத்து, அதன்மீதே "அன்ஆன்" என்பதனான் உயர்திணை ஆண்பால் ஒருமைப் படர்க்கை உணர்த்தும் ஆன் என்னும் விகுதியை நிறுவிக், "கடதறவொற்றின்" என்பதனாற் பகுதிவிகுதிக் கிடையே இறந்தகாலங் காட்டுந் தகர இடைநிலையை வருவித்து, "இயல்பினும் விதியினும்" என்பதனான் மிகுத்து, "வலித்தல் மெலித்தல்" என்பதனான் அதனை மெலித்துப், "புள்ளி யீற்றுமுன் னுயிர்தனித் தியலாது" என்பதனான் இடைநிலைத்தகரவொற்றின் மீதே விகுதி ஆகாரத்தை ஏற்றி, ஒருமொழியாக்கி, நடந்தானென முடிக்க. நடந்தது என்னும் அஃறிணை ஒருமைப் படர்க்கை இறந்தகால இயற்றும் வினைமுதல்வினைமுற்றுப்பகுபதம் முடிப்புழித் துவ்விகுதியும் அகரச்சாரியையும், நடந்தேன் என்னும் விரவுத்திணைத் தன்மை ஒருமை இறந்தகால இயற்றும்வினைமுதல்வினைமுற்றுப்பகுபதம் முடிப்புழி ஏன் என்னும் விகுதியும், நடந்தாய் என்னும் விரவுத்திணை முன்னிலை ஒருமை இறந்தகால இயற்றும் வினைமுதல்வினைமுற்றுப்பகுபதம் முடிப்புழி ஆயென்னும் விகுதியுங் கொடுத்து முன்முடித்தாங்கு முடிக்க. இவ்வாறே இயற்றும் வினைமுதற் தெரிநிலைவினைமுற்றுப்பகுபதங்களெல்லாம் ஏற்றபெற்றி அறிந்து முடித்துக்கொள்க. நடப்பித்தான் என்னும் உயர்திணை ஆண்பால் ஒருமைப்படர்க்கை இறந்தகால ஏவல்வினைமுதல்வினைமுற்றுப்பகுபதம் முடிப்புழி நடப்பித்தலைச்செய்தானென்னுந் தொழில் தோன்ற முன்னரோதிய "முதனிலை யிறுதியின்" என்பதனானே நடப்பியென்னும் பகுதியை முதல்வைத்து, முன்முடித்தாங்கு முடிக்க. பிறவும் அன்ன. கச்சினன் என்னும் உயர்திணை ஆண்பால் ஒருமைப் படர்க்கைக் குறிப்பான் முக்காலமுங் கோ

டற்கு உரிய வினைக்குறிப்புமுற்றுப்பகுபதம் முடிப்புழிப் பண்டு இதுபொழுது நாளை என முறையே இப்பொருளையுடையனாயிருத் தலைச் செய்தான் செய்கின்றான் செய்வானென்பவற்றுள் ஏற்ப தொரு காலங் குறிப்பாற் றோன்றப் "பொருளிடங்காலம்" என்ப தனாற் கச்சு என்னும் பகுதியைமுதல்வைத்து அதன்மீதே அன் என்னும் விகுதியை நிறுவி, "இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்" என்பதனான் இன் இடைநிலை வருவித்துக், "குற்றிய லுகரத் திறுதி முன்னும்" என்பதனானும் "புள்ளி யீற்றுமுன்" என் பதனானுங் குற்றுகரத்தின்மீதே இடைநிலை இகரத்தையும் னகர வொற்றின்மீதே விகுதி அகரத்தையும் ஏற்றி, ஒருமொழியாக்கிக் கச்சினன் என முடிக்க. இவ்வாறே குறிப்புவினைமுற்றுப் பகுபதங் களெல்லாம் ஏற்றபெற்றி அறிந்து முடித்துக்கொள்க. உண்டான் உண்டவன் கரியான் கரியவன் முதலிய வினை வினைக்குறிப்புமுற் றுப்பெயர்களைமுறையே இத்தொழிலைச்செய்தவன் இன்னனாயி ருந்தவனென்னுந் தொழின்மையும் பொருண்மையுந்தோன்ற மு டித்துக்கொள்க. இன்னும் பனவன் அரசன் வாணிகன் உழவன் கணக்கன் வலையன் தச்சன் வண்ணான் கணவாளன் எனவும், பனத்தி அரசி வாணிச்சி உழத்தி கணக்கச்சி தச்சிச்சி வண்ணாத்தி கணவாட்டி எனவும் வரும் இத்தொடக்கத்துக் குறிப்புவினைமுற் றுப்பெயர்ப்பகுபதங்களை இன்ன குலத்தாரென்னும் பொருண்மை தோன்ற முடித்துக்கொள்க. இன்னோரன்ன பிறவாற்றான் வரும் பகுபதங்களையும் இதுவே நிலனாக முடித்துக்கொள்க. (சரு)

இரண்டாவது பதவியல்முற்றிற்று.



## ங-வது உயிரீற்றுப்புணரியல்.

ருங. மெய்யுயிர் முதலீ றாமிரு பதங்களுந்
தம்மொடும் பிறவொடு மல்வழி வேற்றுமைப்
பொருளிற் பொருந்துழி நிலைவரு மொழிக
ளியல்பொடு விகாரத் தியைவது புணர்ப்பே.

என்பது சூத்திரம். நிறுத்தமுறையானே பதங்கள் தம்மோ டும் உருபோடும் புணருமாறு கூறுவான் புகுந்தவற்றுள் இவ் வோத்து உயிரீற்றுப்பதம் நின்று வருமொழி வன்கணத்தோடுஞ் சிறுபான்மை ஏனைக்கணங்களோடும் புணருமாறு உணர்த்தினமை யின் உயிரீற்றுப்புணரியலென்னும் பெயர்த்து. பொதுவகையாற்

புணரும் இயல்பும் விரிந்த சூத்திரப்பொருளவன்றித் தொக்குப்புணரும் இயல்புங் குற்றுகரவீற்றுச்சொற்கள் நின்று புணரும் இயல்பும் உணர்த்துதலோடு இயைபுநீக்காது தன்னோடு இயைபின்மை மாத்திரைநீக்கித் தலைமைபற்றி வந்து அடுத்த உயிரீறுபுணர்தலென்னும் விசேடத்தான் விசேடிக்கப்படுதலின் இக்குறி தலைமைபற்றிய வழக்கு, ஆ நீண்டு குற்றிபோல. மேற் பதங்களாமாறு உணர்த்தி ஈண்டு அவை தம்மிற் புணருமாறு உணர்த்தினமையின் மேலோத்தினோடு இயைபுடைத்தாயிற்று. இதனுள் இத்தலைச்சூத்திரம் பொதுவகையாற் புணருமாறு கூறுகின்றது.

இ - ள். மெய்முதலாயும் உயிர்முதலாயும் மெய்யீறாயும் உயிரீறாயும் உள்ள பகாப்பதங்களும் பகுபதங்களுந் தம்மோடுதாம்வந்தும் பிறவற்றோடுவந்தும் அல்வழிப்பொருளினானுதல் வேற்றுமைப்பொருளினானுதல் புணருமிடத்து நிலைமொழியது ஈற்றெழுத்தும் வருமொழியது முதலெழுத்தும் இயல்பாகியும் விகாரமாகியும் பொருந்துவது முன்னர்க்கூறிய புணர்ச்சியுட் தம்மோடு தாம்புணரும் புணர்ச்சியாம். எ - று.

மெய்யை முற்கூறினார் இயல்பும் விகாரமுமாகிய இருகூற்று நால்வகைப் புணர்ச்சியும் மெய்க்கண் நிகழுமாறு உயிர்க்கண் நிகழாவென்றற்கு. வட்டப்பலகை தமிழ்ப்பிள்ளை நின்கை ஆன்கன்று என்றாற்போல விதிவகையான் எய்திய உயிரொற்றிறுதிகளும் புணர்ச்சியெய்தல் ஈண்டுக் கோடும். மேல் இவற்றையும் விரிவஞ்சிப் பிறிதென்னும் நயம்பற்றி இயற்கையானின்ற உயிரொற்றிறுதிகளுள் அடக்கிச் செய்கைசெய்பவாகலின் ஈண்டு இருபதங்களும் என்றன அவற்றின் திறனாகிய பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுஞ் சிறுபான்மை இடைச்சொல்லும் உரிச்சொல்லுமெனக்கொள்க.

அவை மெய்யும் உயிரும் முதலும் ஈறுமாய் வருமாறு:— மரம் இலை எனவும், ஆல் விள எனவும், வந்தான் உண்டன எனவும், உண்டான் வந்தன எனவும், மன் அம்ம எனவும், அந்தில் மற்று எனவும், மல்லல் உறு எனவும், மால் தவ எனவும் முறையேகாண்க.

அவை தம்மோடும் பிறவோடும் வருமாறு:—ஆல் வீழ்ந்தது என மெய்யிறுசொன்முன் மெய்முதன்மொழி வருதலும், ஆவுண்டு என உயிரிறுசொன்முன் உயிர்முதன்மொழி வருதலும், ஆலிலை என மெய்யிறுசொன்முன் உயிர்முதன்மொழி வருதலும், ஆவெ

ளிது என உயிரிறுசொன்முன் மெய்முதன்மொழி வருதலுஞ், சாத்தன்கை எனப் பெயர்ச்சொல்லோடு பெயர்ச்சொல்வருதலும், வந்தான் போயினான் என வினைச்சொல்லோடு வினைச்சொல் வருதலும், சாத்தனுண்டான் எனப் பெயர்ச்சொல்லோடு வினைச்சொல் வருதலும், வந்தான்சாத்தன் என வினைச்சொல்லோடு பெயர்ச்சொல் வருதலும் "அதுமற்றம்மதானே" என இடைச்சொல்லோடு இடைச்சொல் வருதலுங், "கொம்மைக் குழகாடுங் கோல வரைமார்ப" என உரிச்சொல்லோடு உரிச்சொல் வருதலும், "அதுகொரூழி காம நோயே" எனவும் "மல்லன்மார் படுத்தனன் புல்லுமாறெவனோ" எனவும் அவற்றோடு பிறவருதலுமாம்.

நிலைவருமொழிகளென்றது ஈண்டு ஆகுபெயர். நிலைவருமொழிகளெனப் பொதுப்படக்கூறிய அதனாற் சாத்தன்வந்தான் வந்தான்சாத்தன் என நிறுத்த சொல்லும் அதனை முடித்தலைக்குறித்து வருஞ் சொல்லுமாய் வருதலும்; அங்ஙனம் வருங்கால் அவை பதினாயிரத்தொன்று ஆயிரத்தொருபஃது பதினாயிரத்தொருபஃது என முறையே நிலைமொழி அடையடுத்தும் வருமொழி அடையடுத்தும் இருமொழியும் அடையடுத்தும் வருதலும்; முன்றில் மீகண் என இலக்கணத்தோடு பொருந்தியுஞ் சோணாடு பாண்டிநாடு என இலக்கணத்தோடு பொருந்தாதும் மரூஉச்சொற்களாய் வருதலுங்; "கருங்கா லோமைக் காண்பின் பெருஞ்சினை" எனவும் "இரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்—பரலவ லடைய விரலை தெறிப்ப" எனவும் "தெய்வ மால்வரைத் திருமுனி யருளால்" எனவும் முறையே, ஓமைச்சினை, மருப்பினிரலை, தெய்வவரையென்று ஒட்டி, ஓமையினது சினை, மருப்பினையுடைய இரலை, தெய்வத்தன்மையையுடைய வரையெனப் பொருள் தருகின்றன காண்பு பரல் மால் என்பவற்றோடும் ஒட்டினாற்போன்று ஒட்டி, மிக்குந் திரிந்துங் கெட்டும், நிறுத்தசொல்லுங் குறித்துவருகிளவியுமாய்ப் பொருளியைபின்றி வருதலுங்கொள்க. இவற்றுள் நிறுத்தசொல்லுங் குறித்துவருகிளவியுமாய் வருதல் நிலையிற்றென்றலாம், நிறுத்தசொல்லுங் குறித்துவருகிளவியுமாய்ப் பொருளியைபின்றி வருதல் நிலையாதென்றலாமென்று உணர்க. விளவினைக்குறைத்தான் விளவினதுகோடு என்புழிச் சாரியையும் உருபும் நிறுத்தசொல்லாயே நிற்கும். இயல்பாய் இயைதல் பொன்மணி புகழழகிது ஒளிமணி என முன்னின்ற பெற்றியின் வேறுபடாமை இயைதல்; விகாரமாய் இயைதல் அப்பெற்றியின் வேறுபட்டு இயைதல். விகாரத்தியைவதெனப் பொதுப்படக் கூறிய அதனானே ஒன்றேயன்றி நிலப்பனை பனங்

காய் என "ஒருபுணர்க் கிரண்டு மூன்று முறப்பெறும்" எனவுங் கொள்க. இயல்பு ஒருதன்மைத்தாகலின் அஃதொழித்து விகாரக் கூறுபாடு மேற்கூறுப.

நிலைமொழியது ஈற்றெழுத்து முன் பிறந்து கெட்டுப்போக வருமொழியின் முதலெழுத்துப் பின் பிறந்து கெட்டமையின் முறையிற் பிறந்து நின்று கெடுவன ஒருங்குநின்றுபுணருமாறின் மையிற் புணர்ச்சியென்பதொன்றின்றாம்; பிறவெனின், அச்சொற் களைக் கூறுகின்றோருங் கேட்கின்றோரும் அவ்வோசை இடையற வுபடாமை உள்ளத்தின்கண்ணே உணர்வராகலின் அவ்வோசை கேடின்றி உள்ளத்தின்கண் நிலைபெற்றுப் புணர்ந்தனவேயாம். ஆகவே, பின் கண்கூடாகப் புணர்கின்ற புணர்ச்சியும் முடிந்தன வேயாமென்க. (க)

ருச. ஐம்முத லாறு தழுவுதொடர் வேற்றுமை
செவ்விதி னிலையு மெழுவாய் விளிமுற்
றிடையுரி யெச்சமடுக் குவமை யும்மை
தழுவுதொட ரல்வழிச் சந்தி யென்ப.

இது மேல் அல்வழி வேற்றுமை என்றார் அவை இவையென் கின்றது.

இ - ள். ஐயும் ஆனுங் குவ்வும் இன்னும் அதுவுங் கண்ணும் என்னும் ஆறு உருபுகளும் விரிந்துந் தொக்குந் தமக்கு ஏற்ற பெய ரோடும் வினையோடும் புணரும்புணர்ச்சி வேற்றுமைப்புணர்ச்சியா மென்றும், வெளிப்படநிலைபெறும் எழுவாயும் விளியுந் தெரிநிலை வினையுங்குறிப்புவினையுமாகிய முற்றுச்சொற்களும் இடைச்சொல் லும் உரிச்சொல்லும் பெயரெச்சமும்வினையெச்சமுமாகிய எச்சச் சொற்களும் விரைவாதியின்வரும் அடுக்கும் உவமைத்தொகை யும் உம்மைத்தொகையுந் தமக்கு ஏற்ற பெயரோடும் வினையோ டும் புணரும்புணர்ச்சி அல்வழிப்புணர்ச்சியாமென்றுங் கூறுவர் ஆசிரியர். எ - று.

நிலைமொழி வருமொழியாய் நின்று புணர்ச்சி எய்தாமையான் ஈண்டைக்கு ஏலாத தோன்றா எழுவாயை நீக்குதற்குச் செவ்விதி னிலையும் எழுவாயென்றார். வேற்றுமையல்லாதது அல்வழியென் பது அறிவித்தற்கு ஈண்டு அல்வழி முற்கூறாராயினார். சொல்லோத் தினுள் வேற்றுமையெனப்படும் எழுவாயும் விளியும் ஈண்டு அல்வ ழியென்றல் மலைவாம்பிறவெனின், ஆண்டு அவை ஐமுதலிய வேற்

றுமைபோலப் பொருள்வேறுபடுத்தல் ஒப்புமைபற்றி அவற்றோடு உடனெண்ணப்பட்டு வேற்றுமையெனப்படும், ஈண்டு முற்றுச் சொற்கள் முதலியனபோலப் புணர்ச்சிக்கட் செய்கை ஒப்புமை பற்றி இவற்றோடு உடனெண்ணப்பட்டு அல்வழியெனப்படும் ஆகலின் மலைவாகாதென்க.

உ-ம். குடத்தைவனைந்தான் குழையையுடையான் எனவும், அகத்தியனாற்றமிழுரைக்கப்பட்டது வேலானெறிந்தான் எனவும், அந்தணர்க்காவைக்கொடுத்தான் மாணுக்கர்க்குநூற்பொருளுரைத்தான் எனவும், ஊரிற்றீர்ந்தான் காக்கையிற்கரிதுகளம்பழம் எனவும், யானையதுகோடு சாத்தனதுதோட்டம் எனவும், குன்றத்துக் கட்குவடு பனையின்கணன்றில் எனவும்; நிலங்கடந்தான் குழைக்காது எனவும், தாய்மூவர் பொற்குடம் எனவும், கருப்புவேலி கடிசூத்திரப்பொன் எனவும், வரைபாய்தல் கருவூர்க்கிழக்கு எனவும், கொற்றனுணர்வு சாத்தன்புத்தகம் எனவும், மன்றப்பெண்ணை மாரிமா எனவும், முறையே இரண்டாவதுமுதல் ஆறும் விரிந்துந் தொக்கும் வேற்றுமைப்புணர்ச்சி வந்தவாறு காண்க. ஆகிடந்தது ஆவாம்பல எனவும், நம்பிவாராய் கோவேகூருய் எனவும், வந்தான்சாத்தன் பாய்ந்ததுபுலி எனவுங், குழையன்கொற்றன் குண்டுகட்டெருமை எனவும், இனிமற்றென்றுரை "அணங்குகொலாய் மயில் கொல்லோ கனங்குழை" எனவும், "கனிபேதையே நயனில் கூற்றம்" "வெயில்புறந்தரூஉ மின்னலியக்கத்து" எனவும், ஓதிய பார்ப்பான் ஓதும்பார்ப்பான் எனவும், உண்டுவந்தான் ஓடிவந்தான் எனவும், "கொன்னூர் துஞ்சினும் படைபடை யென்றஞ்சி" "வந்தது வந்தது கூற்று" எனவும், புலிப்பாய்த்துள் மழைவண்கை எனவும், உவாப்பதினான்கு புலிவிற்கெண்டை எனவும், முறையே எழுவாய்முதலிய எழும் விரிந்தும் உவமையும் உம்மையுந் தொக்கும் அல்வழிப்புணர்ச்சி வந்தவாறு காண்க. பிறவும் அன்ன.

இவற்றுடன் வினைத்தொகை பண்புத்தொகை அன்மொழித் தொகை என்பனவற்றையும் எடுத்து ஓதாராயினர் என்னையெனின், வினைத்தொகையும் பண்புத்தொகையும் அல்வழிப்பொருளவாயினும் பிரித்தவழி முறையே முக்காலமும் உணர்த்துந் தன்மையவாயும் ஐம்பாலும் உணர்த்துந் தன்மையவாயும் நிற்குந் தத்தந் தொகைப்பொருள் சிதைதலிற் பிரிக்கப்படாமையாற் பிரிவிலொட்டுக்களாமாகலின், ஈண்டு நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாது மருவின்பாத்தியவாய்க் கொல்யானை அரிவாள் ஆட

ரங்கு செல்செலவு புணர்பொழுது செய்குன்று எனவும், கருங்குதிரை நெடுங்கோல் பாசிலை பைங்கண் சேதா எனவும் வருவன போலவும் முடிந்தாங்கு முடியுமாகலானும்; அன்மொழித்தொகை வேற்றுமைத்தொகைமுதலிய ஐவகைநிலைக்களங்களினும் பிறந்து பொற்றொடி பவளவாய் திரிதாடி வெள்ளாடை தகரஞாழல் என ஒருசொன்னீர்மைத்தாய்ப் பெயர்த்தன்மையெய்திப் "பொற்றொடி தந்தபுனைமடல்" எனப் பயனிலையோடு புணர்ந்துழி எழுவாயாயுஞ் "சுடர்த்தொடீகேளாய்" என முடிக்குஞ்சொல்லோடு புணர்ந்துழி விளியாயும் அல்வழிப்புணர்ச்சியாதலுந், தகரஞாழல்பூசினாள் தகரஞாழலைப்பூசினாளென வேற்றுமையுருபு தொக்கும் விரிந்தும் முடிக்குஞ்சொல்லோடு புணர்ந்துழி வேற்றுமைப்புணர்ச்சியாதலுமுடையவாதலானும் ஓதாராயினாரென்க.

எச்சத்தை முற்றினைச் சாரக் கூறுத முறையகூற்றினானே வட்டப்பலகை சாரைப்பாம்பு என்பனபோலும் இருபெயரொட்டுப்பண்புத்தொகைகள் அல்வழிப்பொருளவாய்ப் புணர்ச்சியெய்தல் கொள்க. (௨)

௫௫. வேற்றுமை வழிய பெயர்புணர் நிலையே.

இது மேல் "ஐம்முதலாறுந் தழுவுதொடர்வேற்றுமை" யாமென வரையாதுகூறினமையின் "மெய்யுயிர்முதலீ ரூமிருபதங்களு" மென்பதனாற்பெற்ற பெயர்முதலிய நான்கும் ஐம்முதலாறும் விரியவுந் தொகவும் வருந் தொடர்ச்சி வேற்றுமைப்புணர்ச்சியாமெனப் பெறுமன்றே? அதனைவிலக்கி வேற்றுமை பெயர்வழிய என்கின்றது.

இ - ள். வேற்றுமைகள் பெயரின்பின்னிடத்தனவாம் அவற்றொடு புணரும் நிலைமைக்கண். எ - று.

பெயரென்றது உயர்திணைப்பெயரும் அஃறிணைப்பெயரும் விரவுப்பெயருஞ் சிறுபான்மை வினைப்பெயரும் உரிப்பெயருமெனக்கொள்க.

உ-ம். நம்பியை நம்பியொடு நம்பிக்கு நம்பியின் நம்பியது நம்பிகண் எனவும், அதனை அதனொடு எனவும், சாத்தனை சாத்தனொடு எனவும், உண்டானை உண்டானொடு எனவும், நளியை நளியொடு எனவும் முறையேகாண்க. பிறவும் அன்ன. (௩)

௫௬. விகாரமொற் றுயிருயிர்மெய் சாரியை மிகுதல்
திரிதல் கெடுத லெனவெழு வகைத்தே.

இது முன்னர்க் கூறிய விகாரம் இத்துணைத்தென்கின்றது.

இ - ள். மேற்கூறிய விகாரப்புணர்ச்சி மெய்யும் உயிரும் உயிர்மெய்யுமாகிய எழுத்துஞ் சாரியையுந் தோன்றலும் வடிவுவேறுபடுதலுங் கெடுதலுமென மூன்றுகூற்றினையுடைத்தாம். எ - று.

ஏற்புழிக்கோடலான் எழுத்துஞ் சாரியையும் இம்மூன்றும் எய்தவேண்டுமென்னும் யாப்புறவின்றி ஏற்றபெற்றி வருமெனக் கொள்க.

வரலாறு;—மலைத்தலை ஏளக்கொட்டில் தமிழக்கூத்து உரிய நெய் மகவின்கை எனவும், மட்குடம் அறுபது மரவேர் பல்சாத்து அங்கை எனவும் வரும். பிறவும் அன்ன. (ச)

ருஎ. வலித்தன் மெலித்த னீட்டல் குறுக்கல்
விரித்த றொகுத்தலும் வருஞ்செய்யுள் வேண்டுழி.

இது செய்யுள்விகாரங் கூறுகின்றது.

இ - ள். மெல்லொற்றைவல்லொற்றாக்கலும் வல்லொற்றை மெல்லொற்றாக்கலுங் குற்றெழுத்தைநீட்டலும் நெட்டெழுத்தைக் குறுக்கலுஞ் சந்தம் நிரம்புதற்கு ஒருசொல்லை விரித்தலுஞ் சந்தம் அளவாதற்கு ஒருசொல்லைத் தொகுத்தலுமாகிய அறுவகை விகாரமுஞ் செய்யுட்கண் வேண்டுழி வரும். எ - று.

இவை ஆறும் புணர்ச்சிவிகாரம்போல இன்னுழிவருமென வரையறுக்கப்படா, செய்யுட்செய்யுஞ்சான்றோர் அணிபெறச் செய்யுட்கண் வருவித்துழி வருமென்பார் வேண்டுழிவருமென்றார்.

வரலாறு;—"முத்தைவரூஉங்காலந்தோன்றின்" எனவும், "குன்றியலுகரத்திறுதியாகும்" எனவும், "போத்தந்தார்புல்லறிவினார்" எனவும், "திருத்தார்நன்றென்றேன்றியேன்" எனவும்; "தண்ணந்துறைவர்தகவிலர்" எனவும், "ஐந்தவித்தானாற்றல்" எனவும், முறையேகாண்க. பிறவும் அன்ன. (ரு)

ருஅ. ஒருமொழி மூவழிக் குறைதலு மனைத்தே.

இதுவும் அது.

இ - ள். ஒருசொல்லின் முதலிடைகடையென்னும் மூன்றனுள் இச்சொல் இவ்வழிக் குறைப்பினும் நிறைந்துநிற்பதுபோன்று

பொருளை விளக்கும் என்பதை அறிந்து செய்யுளின்பம்பெறச் செய்வான் குறைக்க அங்ஙனம் வருங் குறைதல்விகாரமுஞ் செய்யுட்கண்வேண்டுழி வரும். எ - று.

“மரையிதழ்புரையுமஞ்செஞ்சீறடி” எனவும், “வேதினவெரிநி னோதிமுதுபோத்து” எனவும், “நீலுண்டுகிலிகைகடுப்ப” எனவும், முறையே மூவிடத்துங் குறைந்தவாறும் பிறண்டுகுறைதற்கு ஏலாதவாறும் அங்ஙனங் குறைந்தனவாயினுந் தாமரை ஓந்தி நீலமென உரைத்த சொற்பொருள்களைத் தந்தவாறுங் காண்க. “கண்டிரண்முத்தங்கொண்டுவந்து” என்புழி வந்ததென்னும் வினையுஞ் “சான்றோரென்பிலர்தோழி” என்புழி என்பாரிலரென்னும் வினையுங் குறைந்துவந்தன. வினைச்சொல் இங்ஙனங் குறைதல் சிறுபான்மையெனக் கொள்க. இஃது ஒருசொல்லின்கட் சிறிதுநிற்பச் சிறிதுகெடுத்தலாதலின் முழுதுங்கெடுத்தலாகிய தொகுக்கும்வழித் தொகுத்தலின்வேறுதலறிக.

புணர்ச்சிவிகாரமன்றி யாப்பிற்கே உரிய இவற்றையும் ஈண்டுக்கூறினார் விகாரம் அதிகாரப்பட்டமையானும் பகுபதமுடித்தற்குச் சிறுபான்மை வேண்டுதலானும் யாப்பிற்கே உரிய பிறவும் இவ்வோத்துட் கூறுதலானும் விரித்தல் தோன்றலாகவும் வலித்தலும் மெலித்தலும் நீட்டலுங் குறக்கலுந் திரிபாகவுந் தொகுத்தலும் மூவிடத்துக்குறைதலுங் கெடுதலாகவும் அடக்கிச் செய்யுள்விகாரமும் மூன்றென அமையுமென்பது போதற்குமென்க. (௬)

௫௬. அன்னு னின்ன லற்றிற் றத்தந்
தம்நம் நும்மே அஉ ஐகுன
வின்ன பிறவுஞ் சாரியை மொழியே.

மூவகைவிகாரமும் எய்துதற்கு உரிய இரண்டனுள் எழுத்துக்கூறுபாடு எழுத்தியலுட் பெறப்படுதலின் இஃது எஞ்சிநின்ற சாரியை இவையென்கின்றது.

இ - ள். அன்னும் ஆனும் இன்னும் அல்லும் அற்றும் இற்றும் அத்தும் அம்மும் தம்மும் நம்மும் நும்மும் ஏயும் அவ்வும் உவ்வும் ஐயும் குவ்வும் னவ்வுமாகிய பதினேழும் அவைபோல்வன பிறவும் மேற்கூறிய சாரியையிடைச்சொல்லாம். எ - று.

பிற ஆவன உம்மும் ஞான்றுங் கெழுவும் முதலியனவாம். ஆனுருபிற்கும் ஆன்சாரியைக்கும் இன்னுருபிற்கும் இன்சாரியைக்

கும் வேற்றுமை சாரியையாயின் உருபேற்றலும் உருபாயின் ஏலாமையுமென்க. மகத்துக்கை என்புழித் தகரவொற்றுந் தகரவுகரமும் வருமென்னில் இருளத்துக்கொண்டான் என்புழி அத்தென வேண்டுதலின் ஆண்டும் அத்து நின்றே கெட்டதெனக்கோடும். வேறாகநின்ற இருமொழியுந் தம்மிற் சார்தற்பொருட்டு இயைந்து நிற்றலிற் சாரியையாயிற்று.

வரலாறு;—ஒன்றன்கூட்டம் ஒருபாற்கு வண்டின்கால் பூநறுந்தொடையல்சூடி பலவற்றை பதிற்றுப்பத்து மரத்திலே புளியங்காய் எல்லார்தம்மையும் எல்லார்நம்மையும் எல்லீர்நும்மையும் கலனேதூணி குன்றக்கூகை சாத்தனுக்கு மூன்றனைக்குழவி ஆடிக்குக்கொண்டான் ஆன்கன்று என முறையே காண்க. பிறவும் வந்துழிக் கண்டுகொள்க. (எ)

கூ0. அத்தி னகர மகரமுனை யில்லை.

இது முற்கூறியவற்றுள் அத்துச்சாரியை முதலெழுத்துக் கெடுமென்கின்றது.

இ - ள். அத்துச்சாரியையின் அகரம் இயல்பானும் விதியானும் நின்ற அகரவீற்றுமுன்னர்க் கெடும். எ - று.

வரலாறு;—மகத்துக்கை கலத்துக்குறை என முறையே காண்க. உரையிற்கோடலான் அதவத்துக்கண் எனச் சிறுபான்மை கெடாதெனவும், அண்ணாத்தேரி திட்டாத்துக்குளம் என ஆகாரத்தின் முன்னருங் கெடுமெனவும் விளவின்வீழ்பழம் பலாவின் வீழ்பழம் என இன்னுருபு இன்சாரியை பெறுதெனவும், பாம்பினிற்கடிது தேள் என வழக்கின்கண்ணுங் "கற்பினின்வழாஅ நற்பலவுதவி" எனச் செய்யுட்கண்ணுஞ் சிறுபான்மை பெறுமெனவுங் கொள்க. (அ)

கூக. பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகு
மனையவை தெரித லறிவோர் கடனே.

இது சாரியை வரும் இடனுந் திறனுங் கூறுகின்றது.

இ - ள். நிலைமொழிமுன்னர் விகுதியும் பதமும் உருபும் வந்து புணருமிடத்து இடையே ஒன்றும் இரண்டுஞ் சாரியை வருதலும் வாராதொழிதலும் இருவகையுமொப்ப நிற்றலும் பொருந்தும்; அந்

தன்மையவற்றை ஒட்டுதற்கு ஒழுகியவழக்கொடும் விரிந்தநூலொடும் படுத்தி எடுத்தோத்தானும் இலேசானும் புறனடையானும் உரையானுங் கூறுபட ஆராய்ந்தறிதல் அறிவுடையோர்க்கு முறைமையாம். எ - று.

விகுதிப் புணர்ச்சிக்கண் உண்டது ஊரது என்றாற்போல்வன வரவேண்டியேநின்றன; வெற்பன் பொருப்பன் என்றாற்போல்வன வேண்டாது நின்றன; வருவன வருவ உண்பன உண்ப என்றாற்போல்வன இருவகையுமொப்பநின்றன. பதப்புணர்ச்சிக்கட் பலவற்றுக்கோடு சிலவற்றுக்கோடு என்றாற்போல்வன வரவேண்டியே நின்றன; அத்திக்காய் அகத்திக்காய் என்றாற்போல்வன வேண்டாதுநின்றன; விளவின்கோடு விளங்கோடு அதவின்கோடு அதங்கோடு என்றாற்போல்வன இருவகையு மொப்பநின்றன. உருபுபுணர்ச்சிக்கண் மரத்தை மரத்தோடு அவற்றை அவற்றோடு என்றாற்போல்வன வரவேண்டியேநின்றன; நம்பியை நம்பியோடு கொற்றனை கொற்றனொடு என்றாற்போல்வன வேண்டாதுநின்றன; மண்ணினை மண்ணை வேயினை வேயை என்றாற்போல்வன இருவகையுமொப்ப நின்றன. பூவினொடுவிரிந்தகூந்தல் பூவொடுவிரிந்த கூந்தல் இவையும் அன்ன. அவையிற்றிற்கு இவையிற்றிற்கு என்றாற்போல்வன பலவும் வந்தன. பிறவும் வந்துழிக் காண்க.

இடையேவருமென வரைந்துகூறாது பொதுப்பட வருதலுமென்றமையின் எல்லாவற்றையும் எல்லார்நம்மையும் எல்லாவற்றுக்கோடும் எல்லாநங்கையும் என உருபின்பின்னரும் பொருட்பின்னரும் உம்முச்சாரியை வருமெனக்கொள்க. (கூ)

கூஉ. எழுத்தோ ரன்ன பொருடெரி புணர்ச்சி
யிசையிற் றிரித னிலைஇய பண்பே.

இஃது எழுத்துக்கள் ஒன்று பலவாமென எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். எழுத்து ஒருதன்மையவான பொருள்விளங்கநிற்கும் புணர்மொழிகள் எடுத்தல் படுத்தல் முதலிய ஓசைவேற்றுமையாற் புணர்ச்சி வேறுபடுதல் நிலைபெற்றகுணம். எ - று.

செம்பொன்பதின்றொடி செம்பருத்தி குறும்பரம்பு நாகன்றேவன்போத்து தாமரைக்கணியார் குன்றேறுமா என இவை இசையிற் றிரிந்தன. (சo)

௬௩. அவைதாம், முன்னப் பொருள புணர்ச்சி வாயி
னின்ன வென்னு மெழுத்துக்கட னிலவே.

இது மேலதற்கு ஓர் புறனடை கூறுகின்றது.

இ - ள். பல பொருட்குப் பொதுவென்ற புணர்மொழிக டாங் குறிப்பான் உணரும் பொருண்மையினையுடையனவாம்; புணர்ச்சியிடத்து இத்தன்மையவென்னும் எழுத்துமுறைமையை யுடையனவல்ல. எ - று.

செம்பொன்பதின்றொடி என்றவழிப் பொன்னாராய்ச்சியுள் வழிப் பொன்னென்றுஞ் செம்பாராய்ச்சியுள்வழிச் செம்பென்றுங் குறிப்பான் உணரப்பட்டது. இசையிற் றிரிதல் ஒலியெழுத்திற்கெனவும் எழுத்துக்கடனிலவென்றது வரிவடிவிற்கெனவுங் கொள்க.

௬௪. புள்ளி யீற்றுமுன் னுயிர்தனித் தியலாது
மெய்யொடு சிவணு மவ்வியல் கெடுத்தே.

இது புள்ளியீற்றுமுன் உயிர்முதன்மொழிவரிற் புணருமாறு கூறுகின்றது.

இ - ள். புள்ளியீற்றுச் சொன்முன்வந்த உயிர்முதன்மொழி யின் உயிர் தனித்து நடவாது, அப்புள்ளியோடு கூடும், தான் தனித்துநின்ற அவ்வியல்பினைக் கெடுத்து. எ - று.

எனவே, நீரோடு கூடிய பால்போல நின்றதென்று ஒற்றுமை கூறினாரென்பதாயிற்று.

வரலாறு;—பாலரிது பாலாழி ஆலிலை பொருளீட்டம் வானுலகு வானூடு வேலெறிந்தான் வேலேற்றான் பொருளையம் பொருளொன்று நாணொடிற்று சொல்லெளவியம் எனவரும். பிறவும் அன்ன. அதனை அதனொடு நாடுரி என விதிவகையானெய்திய புள்ளிமுன்னும் இவ்விதிகொள்க. (௪௨)

௬௫. குற்றிய லுகரத் திறுதி முன்னு
மற்றென மொழிப யவ்வரி னிகரந்
தெற்றென வருஉமது முற்றத் தோன்றாது.

இது குற்றியலுகர ஈற்றுமுன் உயிர்முதன்மொழியும் யகர முதன்மொழியும் வரிற் புணருமாறு கூறுகின்றது.

இ - ள். குற்றியலுகர ஈற்றுமுன்னும் வந்த உயிர்முதன்மொழியின் உயிர் தனித்து நடவாது, அக்குற்றியலுகரத்தோடு கூடுங்கால், தான் தனித்துநின்ற அவ்வியல்பினைக் கெடுத்தென்றும், அதன்முன் யகரமுதன்மொழி வரின் இகரந் தெளியத்தோன்றுமென்றும், அக்குற்றுகரம் முடியத் தோன்றாதென்றுங் கூறுவர் ஆசிரியர். எ - று.

வரலாறு;—நாகு எஃகு வரகு கொக்கு குரங்கு தெள்கு என நிறுத்தி, அரிது யாது என வருவித்துக் காண்க. பிறவும் அன்ன.

நாகரிதென்புழி முன்னர்க் குற்றுகரவோசையும் பின்னர் உயிரோசையும் பெற்று அவ்விரண்டுங் கூடிநின்றல்லது அப்பொருளுணர்த்தலாகாமையின் உயிரேறுங்காற் குற்றுகரங் கெட்டுப் போக நின்ற ஒற்றின்மேல் உயிர் ஏறிற்றென்றல் பொருந்தாதென்க. யகரம் வரிற் குற்றுகரம் இகரமாய்த் திரியுமென்னாது உகரங்கெட ஓர் இகரந் தோன்றுமென்றார், "யகரம் வரும்வழி யிகரங் குறுகு முகரக் கிளவி துவரத் தோன்றாது" என்பவாகலின். அங்ஙனந் தோன்றிய இகரங் குறுகல் "யகரம் வரக்குற ளுத்தப வருஉ" மென்பதனாற் பெறுதும். முற்ற என்றார் அறுவகையீற்றின்கண்ணும் உகரங் கெடுமென்றற்கு. தெற்றென என்றதனால் அதனை அதனோடு இதனை இதனோடு கதவழகிது கனவழகிது கதவியாது கனவியாது என ஒரோவழி உயிர்முதன்மொழி வருங்கால் முற்றுகரங் கெடநின்ற ஒற்றின்மேல் உயிர் ஏறி முடிதலும் யகரமுதன்மொழி வருங்காற் குற்றுகரவீறு முடிந்தாங்கு முடிதலுங் கொள்க. (கரு)

௬௬. தனிக்குறின் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது; உயிர் ஏற இடங்கொடுத்தலேயன்றி இரட்டித்தும் நிற்குமென்றலின்.

இ - ள். பிறிதொன்றனைச் சாராது தனியேநின்ற குற்றெழுத்தின்முன் நின்ற ஒற்று உயிர்வரின் இரட்டித்துநிற்கும். எ - று.

வரலாறு;—மண் கம் பொன் நெய் கல் தெவ் புள் என நிறுத்தி, அழகிது ஆன்றது இயைந்தது எனவும், அமைவு ஆக்கம் இன்மை எனவும் வருவித்து, அவ்வாறாதல் காண்க. பிறவும் அன்ன.

௬எ. தன்னொழி மெய்முன் யவ்வரி னிகரந்
துன்னு மென்று துணிநரு முளரே.

இது யகரம் ஒழிந்த மெய்முன் யகரம்வந்து புணர்வழிப் படுஞ் செய்கை கூறுகின்றது.

இ - ள். தன்னையொழிந்துநின்ற பத்துமெய்முன்னும் யகர முதன்மொழி வரின் ஓர் இகரந்தோன்றுமென்று துணிவாரும் உளர். எ - று.

உம்மையாற் துணியாதார் பலரென்க.

வரலாறு;—உரிஞ் மண் வெரிந் பொன் போர் கல் தெவ் சேழ் தாள் என நிறுத்தி, யானை யாது என வருவித்து, அவ்வாறு தல் காண்க. பிறவும் அன்ன. உரிஞ்யானை மண்யானை என இகரம் பெறுமையுங் கொள்க. (கரு)

சூஅ. இஈ ஐவழி யவ்வு மேனை
யுயிர்வழி வவ்வு மேமுனிவ் விருமையு
முயிர்வரி னுடம்படு மெய்யென் றுதல்
வரைவின் றென்மனார் மதிக்குங் காலே.

இஃது உயிரீற்றுமொழிமுன் உயிர்முதன்மொழி வந்து புணருமாறு கூறுகின்றது.

இ - ள். இகர ஈகார ஐகாரங்களின்பின்னர் யகரமும் ஒழிந்த உயிர்களின்பின்னர் வகரமும் அவற்றுள் ஏகாரத்தின்பின்னர் யகர வகரமும் உயிர்முதன்மொழி வந்தால் உடம்படுமெய்யென்று பெயரவாய்த் தோன்றுதலை நீக்குதலின்றென்று கூறுவர் ஆசிரியர் ஆராயுமிடத்து. எ - று.

வரலாறு;—மணி தீ மலை அழகிது எனவும், விள பலா கடு பூ அடைந்தது "ஓஒ வுவம னுறழ்வின்றி யொத்ததே" சோ கௌ அடைந்தது ஆடிற்று இழைந்தது எனவும், மணியழகு விளவழகு மாவடி மாவாட்டம் எனவும், "ஏஎயிவளொருத்திபேடியோவென் றார்" "ஏவாடல்காண்க" எனவும் வரும். பிறவும் அன்ன.

மதிக்குங்காலை என்றதனால் அளபெடுப்புழிவரும் எகரமுன்னரும் ஏகாரத்தின்முன்போல உண்டேஎயிகல் என யகரமுஞ் சேஎவடைந்தது என வகரமுஞ் சிறுபான்மை புள்ளியீற்றுமுன்னும் "விண்வத்துக்கொட்கும்வண்ணத்தமரர்" என வகரமுந் தோன்றுதல் கொள்க. "நீழ்கழன்மறவர்செல்வுழிச்செல்க" என்பது வினைத்தொகையென மறுக்க. வரைவின்றென்மனார் என்றதனால் உடம்படுமெய்பெறுதல் ஒருதலையன்றாய்க் கிளி அரிது மூங்கா இல்லை எனப் பெறுமையுங்கொள்க. (கசூ)

சூகூ. எண்மூ வெழுத்தீற் றெவ்வகை மொழிக்கு
முன்வரு ஞநமய வக்க ளியல்புங்
குறில்வழி யத்தனி யைநொது முன்மெலி
மிகலுமாம் ணளலன வழிநத் திரியு
மெல்லெழுத் தியற்கை யுறழினும் வரையார்
நன்மதி நாட்டத் தென்மனூர் புலவர்.

தொக்குப்புணரும் இயல்புணர்த்துவனவற்றுள் இஃது எல்லாவீற்று எவ்வகைச் சொன்முன்னும் வரும் மென்கணமும் இடைக்கணமும் இருவழியும் முடியும் முடிபு தொகுத்துக் கூறுகின்றது.

இ - ள். மேல் ஈருமென்ற இருபத்துநாலு எழுத்தையும் இறுதியாகவுடைய பெயர் வினை இடை உரியென்னும் நான்கு சொன்முன்னும் வரும் ஞகார நகார மகார யகார வகாரங்கள் இயல்பாய்முடியுமென்றுங், குற்றெழுத்தின்பின் நின்ற யகாரமும் ஓரெழுத்தொருமொழியான ஐகாரமும் நொவ்வுந் துவ்வுமான இவற்றின்முன்னர் ஞகார நகார மகாரங்கள் இயல்பாதலேயன்றி மிகுதலுமாமென்றும், ணகார ளகார லகார னகாரங்களின்பின் வரும் நகாரந் திரிந்து முடியுமென்றும், மெல்லெழுத்தினது இயல்பு ஒருகால் இயல்பாயும் ஒருகால் மிக்கும் இவ்வாறு உறழ்ந்துமுடியினும் நீக்கார் நல்லறிவான் ஆராயும் பக்கத்தென்றுங் கூறுவர் அறிந்தோர். எ - று.

வரையாது கூறினமையின் இம்முடிபுகள் அல்வழி வேற்றுமையாம் இருவழியுங்கொள்க.

வரலாறு;—விள பலா கிளி தீ கடு பூ ஏ எ சே பனை ஓ ஒ சோ கௌ உரிஞ் மண் பொருந் மரம் பொன் வேய் வேர் வேல் தெவ் யாழ் வாள் வரகு என நிறுத்தி, ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை எனவும் வருவித்து, அஃறிணைப்பெயர்முன்னும்; நம்பிஅவன் நங்கை அவள் என நிறுத்தி, ஞான்றான் நீண்டான் மாண்டான் யாவன் வலியன் எனவும், ஞான்றாள் நீண்டாள் மாண்டாள் யாவள் வலியள் எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை எனவும் வருவித்து,உயர்திணைப்பெயர்முன்னுஞ்;சாத்தி கொற்றி சாத்தன் கொற்றன் என நிறுத்தி,ஞான்றாள் நீண்டாள் மாண்டாள் யாவள் வலியள் எனவும், ஞான்றான் நீண்டான் மாண்டான் யாவன் வலியன் என

வும், ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வன்மை எனவும் வருவித்து விரவுப்பெயர்முன் னும் இருவழியும் இயல்பாயினவாறு காண்க. சோவுக்கு ஞொள் கிற்று நீட்டித்தது ஞொள்கல் நீட்டிப்பு எனவும், கௌவுக்கு ஞெகிழ்ந்தது நீட்டித்தது ஞெகிழ்ச்சி நீட்டிப்பு எனவும் ஒட்டுக. பிறவும் பொருள் தருதற்கு ஏற்பன அறிந்து ஒட்டுக. மலர்ந்தஞா லம் விரிந்தநூல் உயர்ந்தமலை வடிந்தயாறு துரந்தவாளி எனவும், வந்தனர்ஞாட்பின் வகுத்தனர்நூலோர் மலைந்தனர்மறவர் புணர்ந்த னர்யாழோர் தணந்தனர்வயவர் எனவும் வினைச்சொன்முன்னும்; நிலனென நீரென தீயென வளியென எனவும், கொன்முனையிர வூர் கொன்வரல்வாடை எனவும் இடைச்சொன்முன்னுந்; தடம ருப்பெருமை கடிநுனைப்பகழி "வறிதுவடக்கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி" எனவும், "மல்லன்மார்படுத்தனன்புல்லுமாறெவனோ" "தெள்ளறறழீஇயவார்மணலடைகரை" "பையுண்மாலைப்பழுமரம் படரிய" எனவும் உரிச்சொன்முன்னும் இயல்பாயினவாறு காண்க. பிறவும் அன்ன. "ணளலனவழிநத்திரியும்" என்றலின் அத்திரிபு ஈண்டுக் கொள்ளற்க. உரிஞுஞான்றது பொருநுஞான்றது மண்ணு ஞான்றது வேன்ஞான்றது வாண்ஞான்றது மரமாண்டது வே யாது என நிலைமொழியீறு விகாரப்படுதலென்னை எனக் கடாவற்க, ஈண்டு வருமொழியியல்பாமென்றலின். மெய்ஞ்ஞானம் நூல் மாண் டது எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி எனவும், கைஞ்ஞெரிந்தது நீண்டது மறித்தது எனவும், ஞெரித்தார் நீட்டினர் மறித்தார் என வும், இருவழியும் மிக்கன. நொஞ்ஞெள்ளா துஞ்ஞெள்ளா நாகா மாடா என இவை வினையாகலின் அல்வழிக்கண் மிக்கன. இவை நலிந்து கூறப்பிறத்தலான் இயல்பாதலே வலியுடைத்தென்பார் மிகலுமாமென்றார். நகரத்திரிபு மேற்காட்டுதும். கதிர்ஞெரி கதிர்ஞ் ஞெரி இதழ்ஞெரி இதழ்ஞ்ஞெரி நுனி முரி எனவும், பூஞெரி பூஞ்ஞெரி நுனி முரி எனவும், காய்ஞெரி காய்ஞ்ஞெரி நுனி முரி எனவும் உறழ்ந்தன உம்மையான் இயல்பாதலே வலியுடைத் தென்க. நன்மதிகாட்டத்தென்றதனுன் இவ்வுறழ்ச்சிமுடிபு பெரும் பான்மையுந் தொடர்மொழிக்கேயெனவும் ஏனையிருமொழிக்குஞ் சிறுபான்மை வருமெனவும் ணகாரனகாரங்களின்முன் வந்த யாவும் ஞாவும் முதலாகிய வினைச்சொற்கள் ஒரு வினை வந்த தன்மையை ஒக்குமெனவுங் கொள்க. அவற்றுள் "மெல்லெழுத் தியற்கை யுற ழினும் வரையார்—சொல்லிய தொடர்மொழி யிறுதி யான" என வும், "ணனவென் புள்ளிமுன் யாவு ஞாவும்—வினையோ ரனைய வென்மனார் புலவர்" எனவும் கூறுபவாகலின் "மண் யாத்த

கோட்ட மழகளிறுதோன்றுமே" "மண்ஞாத்த கோட்ட மழக ளிறுதோன்றுமே" எனவும், பொன்யாத்ததார்ப்புரவிபரிக்குமே" "பொன்ஞாத்ததார்ப்புரவிபரிக்குமே" எனவும் வரும். இன்னும் இவ்விலேசானே மண்ஞான்றதென ஞாச்சென்றவழி யாச்செல் லாமையும் யாச் சென்றவழி ஞாச்சேறலுங்கொள்க. இதுவும் புண ரியலொழிபாய்க் கருவிப்பாற்படும். (கன)

எ௦. ணளமுன் டணவும் லனமுன் றனவு
மாகுந் தநக்க ளாயுங் காலே.

இது வருமொழித்திரிபு கூறுகின்றது.

இ - ள். ணகரளகரங்களின்முன்னர்த் தகரநகரங்கள் வரின் டகரணகரங்களாயும் லகரனகரங்களின்முன்னர் அவை வரின் றகரனகரங்களாயுந் திரிந்து முடியும் ஆராயுங்காலத்து. எ - று.

ஆயுங்காலேயென்றதனுல் புணர்வுழி நிரனிறைகொள்ளாது நிலைமொழியொன்றுடனே வருமொழியிரண்டும் புணருமெனவுந் திரிவுழி நிரனிறைவகையானே தகரம் டகரறகரங்களும் நகரம் ணகரனகரங்களுமாய்த் திரியுமெனவுங் கொள்க.

வரலாறு;—மண்டீது மண்ணன்று முஃடீது முண்ணன்று; கஃறீது கன்னன்று பொன்றீது பொன்னன்று என வரும்.

நிலைமொழியீற்று லகரளகரங்கள் திரியினுந் "திரிந்ததன்றி ரிபது" என்னும் நயத்தால் வருமொழித் தகர நகரந் திரியுமென்க. ணளலனவழிநத் திரியுமென நகரம் அதிகாரப்பட்டமையின் ஒப் புமைபற்றித் தகரத்திரிபும் உடன்கூறினுர். (கஅ)

எக. பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெ
வலிவரி னியல்பா மவற்றீற் றுயிர்முன் [ய்
வன்மை மிகாசில விகாரமா முயர்திணை.

இஃது ஒற்றீற்று விரவுப்பெயரும் உயர்திணைப்பெயரும் வன் கணத்தோடு புணருமாறும் வன்கணம் உயிரீற்று அவ்விருபெய ரோடும் புணருமாறுங் கூறுகின்றது.

இ - ள். பொதுப்பெயரீற்றின்கண்ணும் உயர்திணைப்பெயரீற் றின்கண்ணும் நின்ற ஒற்றுக்கள் வல்லினமுதன்மொழி வரின் இயல்பாய்முடியும்; அவ்விருபெயரீற்றின்கண்ணும் நின்ற உயிர்

முன் வரும் வல்லெழுத்துக்கள் மிகாது இயல்பாயும் முடியும்; அவ்வாறன்றி உயர்திணைப்பெயருட் சிலபெயர் விகாரமாகியும் முடியும். எ - று.

இறந்ததுதழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. வரைந்துகூறுமையின் இருவழியுங் கொள்க. ஈற்றுமெய்யென்றும் முன்னென்றும் பகுத்தோதியது யாண்டும் நிலைமொழி வருமொழிச் செய்கைகள் தெரிந்தறிந்துகோடற்கெனக் கொள்க.

சாத்தன் கொற்றன் எனவும், சாத்தி கொற்றி எனவும் நிறுத்திக், குறியன் சிறியன் தீயன் பெரியன் எனவும், குறியள் சிறியள் தீயள் பெரியள் எனவும், குறிது சிறிது தீது பெரிது எனவும், கை செவி தலை புறம் எனவும் ஏற்பன வருவித்து, இருவழியும் விரவுப் பெயரீற்றுமெய் வன்மை வர இயல்பாயவாறும் அவ்வுயிரீற்றுப் பெயர்முன் வருமொழிவல்லெழுத்து மிகாதவாறுங் காண்க. அவன் நமன் ஆய் அவர் அவள் எனவும், நம்பி விடலை தோழி நங்கை எனவும் நிறுத்திக், குறியன் சிறியன் தீயன் பெரியன் எனவும், குறியர் சிறியர் தீயர் பெரியர் எனவும், குறியள் சிறியள் தீயள் பெரியள் எனவும், கை செவி தலை புறம் எனவும் ஏற்பன வருவித்து, இருவழியும் உயர்திணைப்பெயரீற்றுமெய் வன்மை வர இயல்பாயவாறும் அவ்வுயிரீற்றுப்பெயர்முன் வருமொழிவல்லெழுத்து மிகாதவாறுங் காண்க. பிறவும் அன்ன. பார்ப்பனக்கன்னி குமரிபிள்ளை சேரி தோட்டம் என ஈற்றயல் குறுகி அகரச்சாரியைபெற்று வருமொழிவல்லெழுத்து மிக்குங்; கபிலபரணர் என ஈறுகெட்டு வருமொழி வல்லெழுத்து இயல்பாயும்; பல்சங்கத்தார் பல்சான்றோர் என ரகரவீறும் அதன் அயல் நின்ற அகரமுங் கெட்டு ஈற்றுமெய் இயல்பாயும்; ஆசிவகப்பள்ளி நிக்கந்தக்கோட்டம் ஈழவக்கத்தி வாணிகத்தெரு அரசக்கன்னி வேட்டுவக்குமரி கோலிகக்கருவி வண்ணாப்பண்டி என ஈறுகெட்டு வருமொழிவல்லெழுத்து மிக்குங்; குமரகோட்டம் குமரக்கோட்டம் பிரமகோட்டம் பிரமக்கோட்டம் வாசுதேவகோட்டம் வாசுதேவக்கோட்டம் என ஈறுகெட்டு வருமொழிவல்லெழுத்து உறழ்ந்தும்; ஆடூஉக்குறியன் சிறியன் தீயன் பெரியன் எனவும், மகடூஉக்குறியள் சிறியள் தீயள் பெரியள் எனவும், வேற்றுமைக்கண் ஆடூஉக்கை மகடூஉக்கை செவி தலை புறம் எனவும், எட்டிப்பூ காவிதிப்பூ நம்பிப்பூ நம்பிப்பேறு எனவும், நம்பிக்கொல்லன் நம்பிச்சான்றோன் நம்பித்துணை நம்பிப்பிள்ளை செட்டிக்கூத்தன் சாத்தன் தேவன் பூதன் எனவும், நங்கைப்பெண் நங்கைச்சானி எனவும், உயர்திணைப்பெயருட் சில விகாரமேற்றவாறு

காண்க. பிறவும் அன்ன. எட்டி காவிதி என்பன தேயவழக்காகிய சிறப்புப்பெயர், எட்டிமரம் அன்று; அஃது "எட்டிக்குமரனிருந் தோன்றன்னை" என்பதனால் உணர்க. இவை எட்டியதுபூ எட்டிக்குப்பூ காவிதியதுபூ காவிதிக்குப்பூ என விரியும். ஈற்றுமெய் இயல்பாமெனவே, வருமொழிவல்லெழுத்துச் சாத்தன் குறியன் குறிது தாய்குறியள் குறிது நீர்குறியீர் எனவும், அவன்குறியன் அவள்குறியள் அவர்குறியர் எனவும் இயல்பாயும்; மகன்றாய்க்கலாம் செரு துறத்தல் பகைத்தல் என நிலைமொழிக்கு அடையாய் முன்வந்த மகனது பகைவினையைப் பின்னாக ஒருவன் கூறுமிடத்து மிக்குந் தமக்கேற்ற பெற்றி முடியுமெனக் கொள்க. மகன்றாய்க்கலாமென்பது மகன் தாயொடுகலாய்த்த கலாமென விரியும். ஏனையவற்றிற்கும் ஏற்பன உருபு விரிக்க. தோன்றறீயன் அவன்றீயன் ஆண்டீயன் பெண்டீயள் வேடீயன் அவடீயள் தீமை எனவருமொழித்தகரந் திரிந்தன மேலைச்சூத்திரத்தான் முடிந்தன.

பொதுப்பெயர் உயர்திணைப்பெயர்களென்ற முறையலகூற்றானே உயர்திணைவினைச்சொல்லும் இவ்வாறே இயல்பாய் முடியுமெனக் கொள்க.

வரலாறு;—உண்டான் உறங்கினான் எனவும், உண்டாள் உறங்கினாள் எனவும், உண்டார் உறங்கினார் எனவும், உண்ப ஓதுப எனவும் நிறுத்திக், கொற்றன் சாத்தன் தேவன் பூதன் எனவும், கொற்றி சாத்தி தெரிவை பெதும்பை எனவும், கற்றார் சான்றார் தக்கார் பார்ப்பார் எனவும், ஏற்பன வருவித்துக் காண்க. பிறவும் அன்ன.

இன்னும் இம்முறையலகூற்றானே விரவுப்பெயர் உயர்திணைப்பெயர் உயர்திணைவினை என்னும் இவற்றின் முடிபுவேறுபாடெல்லாம் மேல்முடித்தும். அஃது ஆங்காங்கு உணர்க. (கசா)

எஉ. விளிநிலைக் கிளவியு மவற்றோ ரன்ன.

இது விளிப்பெயர் வன்கணத்தோடு புணருமாறு கூறுகின்றது.

இ - ள். விளியாய்நிற்றலையுடைய உயிரீறும் ஒற்றீறுமாகிய உயர்திணைப்பெயரும் விரவுப்பெயரும் உயிரும்புள்ளியும் இறுதியாகிய உயர்திணையியற்பெயரும் விரவுத்திணையியற்பெயரும்போல உயிரீற்றுமுன் வல்லெழுத்து வந்துழி அவ்வல்லெழுத்து இயல்பா

யும் ஒற்றீறு வல்லெழுத்து வந்துழி இயல்பாயும் அங்ஙனம் இயல்பா தலேயன்றிச் சில விகாரமாகியும் முடியும். எ - று.

நிலையென்ற மிகையானே இவ்விருவீற்று அஃறிணைவிளிப் பெயரும் அவைபோல இயல்பாகியுஞ் சிறுபான்மை விகாரமாகியும் முடியுமெனக்கொள்க.

வரலாறு;—ஊர ஊரா நம்பி நம்பீ வேந்து வேந்தே நங்கை எனவும், நம்பன் நங்காய் கடவுள் ஏந்தல் மார்தர் எனவும் நிறுத்திக், கூறாய் சொல்லாய் தாராய் போதாய் எனவும், கூறீர் சொல்லீர் தாரீர் போதீர் எனவும் ஏற்பன வருவித்து, உயர்திணைவிளிப்பெயர் இயல்பாயவாறுஞ்; சாத்த சாத்தா சாத்தி சாத்தீ பூண்டு பூண்டே தந்தை எனவும், ஆண் பெண் சாத்தன் தூங்கல் தாய் மகள் எனவும் நிறுத்திக், கூறாய் சொல்லாய் தாராய் போதாய் என வருவித்து, விரவுத்திணைவிளிப்பெயர் இயல்பாயவாறுந், தும்பி தும்பீ வண்டு வண்டே வாடை எனவும், கண் அலவன் பேய் சூர் வேல் யாழ் வாள் எனவும் நிறுத்திக், கொடியை சிறியை தீயை பெரியை என வருவித்து, அஃறிணைவிளிப்பெயர் இயல்பாயவாறும்; ஆஉக்கூறாய் மகடேக்கூறாய் எனவும், ஏந்தறீயை கடவுடீயை எனவும், பிணக்கூறாய் அழிதூக்கூறாய் எனவும், தூங்கறீயை மகடீயை எனவும், விளக்கொடியை புறாக்கொடியை மூசுக்கொடியை எனவும், கற்றீயை முட்டீயை கடறீயை நெஞ்சுடீயை மனங்கொடியை எனவும், மூவகைவிளிப்பெயரும் விகாரம் ஏற்றவாறுங் காண்க. பிறவும் அன்ன. திரிந்துங் கெட்டுந் தோன்றியும் இயல்பாயும் அயல் திரிந்தும் விளியேற்று நிற்பதொன்றாதலின் இயற்பெயர் மாத்திரையாய் நிற்பனவற்றுள் அடங்காமையின் இவற்றை விளிநிலைக்கிளவியுமவற்றோரன்ன என அவற்றோடு மாட்டெறிந்தாரெனக்கொள்க. (உ0)

எ௩. உயிரும் புள்ளியு மிறுதி யாகிய
முன்னிலை வினையே யேவ லென்றிவை
யியல்பா குநவு முறழா குநவுமென்
றாயீ ரியல வல்லெழுத்து வரினே.

இது முன்னின்றான் தொழில் உணர்த்துவனவும் அவனைத் தொழிற்படுத்துவனவுமாகிய முன்னிலைவிரவுவினைச்சொற்கள் வன்கணத்தோடு முடியும் முடிபுகூறுகின்றது.

இ - ள். உயிரும் ஒற்றும் ஈறாக வந்த முன்னிலைவினையும் ஏவல் வினையுமென்ற இம்மொழிகள் இயல்பாய்முடிவனவும் உறழ்ந்து

முடிவனவுமென இவ்விரண்டியல்பினையுடைய வல்லெழுத்துமுத லாகிய மொழிவரின். எ - று.

வரலாறு;—உண்டி தின்றி உண்டனை தின்றனை உண்டாய் தின்றாய் கொற்றா சாத்தா தேவா பூதா எனவும், உண்டனிர் தின்றனிர் கொற்றரே சாத்தரே தேவரே பூதரே எனவும், இவை முன்னிலைவினை இயல்பாயின. உறழ்ச்சி வந்துழிக்காண்க. கொணா எறிவிடு உண் தின் கொற்றா சாத்தா தேவா பூதா எனவும், உண்மின் தின்மின் கொற்றரே சாத்தரே தேவரே பூதரே எனவும், ஏவல்வினை இயல்பாயின. நடகொற்றா நடக்கொற்றா ஈர்கொற்றா ஈர்க்கொற்றா சாத்தா தேவா பூதா என ஏவல்வினை உறழ்ந்தன. பிறவும் வந்துழிக்காண்க. நில்கொற்றா நிற்கொற்றா எனத் திரிந்துந் திரியாதும் உறழ்ந்தனவும் உறழாதனவுமென்னும் பொதுவகையான் முடிக்க. (௬௧)

எச. ஔவென வரூஉ முயிரிறு சொல்லு
ஞநமவ வென்னும் புள்ளி யிறுதியுங்
குற்றிய லுகரத் திறுதியு முளப்பட
முற்றத் தோன்று முன்னைய முடிபே
யுகரம் பெறூஉ மாவயி னான.

இஃது ஒருசாரன்வற்றிற்கு எய்தியது விலக்கி எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். ஔ என வருகின்ற உயிரீற்றுச்சொல்லும் ஞ ந ம வ என்று சொல்லப்படும் புள்ளியீற்றுச்சொல்லுங் குற்றியலுகரத்தை இறுதியிலேயுடைய சொல்லுங் கூட முன்னர்க்கூறிய இயல்பும் உறழ்ச்சியுமாகிய முடிபு முற்றத்தோன்ற முடியா நிலைமொழியீறு உகரம்பெற்று உறழ்ந்து முடியும். எ - று.

ஏற்புழிக்கோடலாற் சொல்லென்றது ஈண்டு ஏவல்வினை மேற்றாயிற்று.

உ-ம். கௌவுகொற்றா கௌவுக்கொற்றா வௌவுகொற்றா வௌவுக்கொற்றா உரிஞுகொற்றா உரிஞுக்கொற்றா பொருநு கொற்றா பொருநுக்கொற்றா திருமுகொற்றா திருமுக்கொற்றா தெவ்வுகொற்றா தெவ்வுக்கொற்றா கூட்டுகொற்றா கூட்டுக்கொற்றா சாத்தா தேவா பூதா என வரும். ஒன்றெனமுடித்தலான் துக் கொற்றா நொக்கொற்றா கைதூக்கொற்றா சாத்தா தேவா பூதா என இவ்வுயிரீற்று ஏவல்வினைச்சொற்கள் மிக்கேமுடிதலும் மண்ணு

கொற்ரு மண்ணுக்கொற்ரு பன்னுகொற்ரு பன்னுக்கொற்ரு உள்ளுகொற்ரு உள்ளுக்கொற்ரு கொல்லுகொற்ரு கொல்லுக் கொற்ரு சாத்தா தேவா பூதா என இப்புள்ளியீற்றேவல்வினைச் சொற்கள் உகரம்பெற்று உறழ்ந்துமுடிதலுங் கொள்க. (உஉ)

எரு. மெல்லெழுத்துமிகுவழிவலிப்பொடுதோன்றலு
வல்லெழுத்துமிகுவழிமெலிப்பொடுதோன்றலு [ம்
மியற்கை மருங்கின் மிகற்கை தோன்றலு
முயிர்மிக வருவழி யுயிர்கெட வருதலுஞ்
சாரியை யுள்வழிச் சாரியை கெடுதலுஞ்
சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையலுஞ்
சாரியை யியற்கை யுறழத் தோன்றலு
முயர்திணை மருங்கி னொழியாது வருதலு
மஃறிணை விரவுப்பெயர்க் கவ்விய னிலையலு
மெய்பிறி தாகிடத் தியற்கை யாதலு
மன்ன பிறவுந் தன்னியன் மருங்கின்
மெய்பெறக் கிளந்து பொருள்வரைந் திசைக்கு
மைகார வேற்றுமைத் திரிபென மொழிப.

இது மேல் உயிரீற்றிற்கும் புள்ளியீற்றிற்கும் வேற்றுமைக் கட் கூறும் முடிவு பெருதுநிற்கும் இரண்டாம் வேற்றுமைமுடிபு வேறுபாடு தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். விளங்குறைத்தான் என மெல்லெழுத்து மிகுமிடத்து விளக்குறைத்தான் என வல்லெழுத்து மிகுதலும் மரக்குறைத்தான் என வல்லெழுத்து மிகுமிடத்து மரங்குறைத்தான் என மெல்லெ ழுத்து மிகுதலும் தாய்கொலை என இயல்பாய் வருமிடத்துத் தாய்க் கொலை என மிகுதலும் பலாஅக்குறைத்தான் தழூஉக்கொணர்ந் தான் ஏஎக்கட்டினன் என உயிர்மிக வருமிடத்துப் பலாக்குறைத் தான் தழூக்கொணர்ந்தான் ஏக்கட்டினன் என உயிர்கெடவருதலும் வண்டின்கொணர்ந்தான் எனச் சாரியைப் பேறுள்ளவிடத்து வண்டு கொணர்ந்தான் எனச் சாரியைகெட்டு நிற்றலும் வண்டின்கொணர்ந் தான் எனச் சாரியைப்பேறுள்ளவிடத்து வண்டினைக்கொணர்ந்தா னெனச் சாரியையோடு தன்னுருபுநிற்றலுஞ் சாரியைபெறுவன பெ ருது இயல்பாகிநின்றவிடத்துப்புளிகுறைத்தான் புளிக்குறைத்தான் பனைதடிந்தான் பனைத்தடிந்தான் பூல்குறைத்தான் பூற்குறைத்தான்

என மிக்குந் திரிந்தும் உறழ்ச்சியாகத் தோன்றுதலும் உயர்திணைக் கண் நம்பியைக்கொணர்ந்தான் நங்கையைக்கொணர்ந்தான் எனத் தொகாதேநிற்றலும் ஒழியாதுவருதலுமென்றதனுன் ஆடூஉவறி சொல் மகடூஉவறிசொல் ஒன்னார்த்தெறலும் என ஒழிந்தும் வருத லும் உயர்திணையோடு அஃறிணை விரவும் விரவுப்பெயர் கொற்ற னைக்கொணர்ந்தான் என உருபு தொகாதேநிற்றலும் அவ்வியனிலை யலுமென்றதனுன் மகற்பெற்றேன் என விரவுப்பெயர்க்கண்ணுந் தொகுதலும் பொற்கொணர்ந்தான் மட்கொணர்ந்தான் என மெய் பிறிதாகுமிடத்து அங்ஙனமாகாது பொன்கொணர்ந்தான் மண்கொ ணர்ந்தான். என இயற்கையாய்வருதலும் அவைபோல்வனபிறவுந் தன்னைநோக்கித் திரிபுநடக்குமிடத்துப் பொருள்பெற எடுத்து ஓதப்பட்டு ஏனைவேற்றுமைப்பொருட்புணர்ச்சியது முடிபினைத் தான் நீக்கி வேறுமுடிபிற்றாய்நின்று ஒலிக்கும் இரண்டாம்வேற் றுமையது வேறுபட்ட புணர்ச்சியென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

அவைபோல்வன பிற ஆவன; "எக்கண்டுபேருங்காலையாழ நின் கற்கெழுசிறுகுடி" "நப்புணர்வில்லா நயனில்லோர்நட்பு" என நெடுமுதல் குறுகும் விரவுப்பெயர்கள் மெல்லெழுத்துப்பெறு தற்கு உரியன வல்லெழுத்துப்பெறுதலுங் கழிகுறைத்தான் திணைபி ளந்தான் மயிர்குறைத்தான் தற்கொண்டான் செறுத்தான் புகழ்ந் தான் எனவியல்பாதலுந் திரிதலும் முதலியவெனக் கொள்க. மெய் பெற என்றதனானே சாரியை உள்வழித் தன்னுருபு நிலையாது செய்யுட்கண் "மறங்கடிந்தவருங்கற்பின்" "சில்சொல்லிற்பல்கூந் தல்" என வருவனவும் பிறவற்றின்கண் மைகொணர்ந்தான் மைக் கொணர்ந்தான் வில்கோள் விற்கோள் என உறழ்ந்துமுடிவனவுங் கொள்க. இனி இவ்வாறு திரியாது கடுக்குறைத்தான் செப்புக் கொணர்ந்தான் என்றாற்போலப் பொதுமுடிபே தனக்கும் முடி பாக முடிவனவுங் கொள்க. "தம்மிறுகியதொழின்மொழிவரினே" என்பதனைச் சாரவைத்தமையான் வினைவந்துழியே இங்ஙனம் பெரும்பான்மை திரிவதெனக்கொள்க. இனித் தன்னினமுடித்த லென்பதனுன் வரைபாய்வருடை என்றாற்போல ஏழாவதற்கும் வினையோடு முடிபுழித் திரிதல்கொள்க. (உ௩)

எசு. புள்ளியு முயிரு மாயிறு சொன்முன்
றம்மி னுகிய தொழின்மொழி வரினே
வல்லினம் விகற்பமு மியல்புமா வனவுள.

இது மேல் உயிரீற்றிற்கும் புள்ளியீற்றிற்கும் வேற்றுமைக் கட் கூறும் முடிபு பெறாதுநிற்கும் மூன்றும்வேற்றுமைமுடிபு கூறுகின்றது.

இ-ள். ஒற்றாகியும் உயிராகியும் ஈறாய்நின்ற நிலைமொழி முன்னர் அந்நிலைமொழிப்பொருளான மூன்றாவதன் பொருளாகிய வினைமுதற்பொருள்கள் தம்மான் உளவாகிய தொழிற்சொல் வரு மாயின் புணர்ச்சிக்கண் மேல் வேற்றுமைப்புணர்ச்சியிடத்து மிகு மெனக் கூறும் வல்லெழுத்து மிகாது உறழ்ந்து முடிவனவும் இயல் பாய்முடிவனவும் உள. எ - று.

சூர்கோட்பட்டான் சூர்க்கோட்பட்டான் வளிகோட்பட் டான் வளிக்கோட்பட்டான் சாரப்பட்டான் தீண்டப்பட்டான் பாயப்பட்டான் என இவையுறழ்ந்தன. நாய்கோட்பட்டான் புலி கோட்பட்டான் சாரப்பட்டான் தீண்டப்பட்டான் பாயப்பட்டான் என இவை இயல்பாயின. பிறவும் அன்ன.

புள்ளியும் உயிருமென்ற முறையலகூற்றானே பேஎய்கோட் பட்டான் பேஎய்க்கோட்பட்டான் என்னுமுறழ்ச்சியுள் எகரப்பே றும் பாம்புகோட்பட்டான் பாப்புகோட்பட்டான் பாம்புக்கோட் பட்டான் பாப்புக்கோட்பட்டான் என்னும் உறழ்ச்சியுள் நிலைமொ ழியொற்றுத் திரிதலுந் திரியாமையுங்கொள்க. இவ்விறுதிகள் நாய்க் கால் தேர்க்கால் கிளிக்கால் என ஆண்டு வேற்றுமைக்கண் வல்லெ ழுத்து மிகுமாறு காண்க. (உச)

எஎ. வேற்றுமை யல்வழி இ ஐ யென்னு
மீற்றுப்பெயர்க் கிளவி மூவகை நிலைய
வவைதா, மியல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவு
முறழா குநவு மென்மனார் புலவர்.

இஃது இகரவீற்றுப்பெயர்க்கும் ஐகாரவீற்றுப்பெயர்க்கும் அல்வழிமுடிபு கூறுகின்றது.

இ-ள். வேற்றுமையல்லாதவிடத்து இ ஐ என்னும் ஈற்றையு டைய பெயர்ச்சொற்கள் மூவகையாகிய முடிபுநிலைமையுடைய. அம்முடிபையுடைய சொற்கடாம் இயல்பாய் முடிவனவும் வல்லெ ழுத்து மிக்கு முடிவனவும் உறழ்ச்சியாய் முடிவனவுமென்று கூறு வர் புலவர். எ - று.

உ-ம். பருத்திகுறிது காரைகுறிது சிறிது தீது பெரிது என இவை இயல்பாய்முடிந்தன. மாசித்திங்கள் அலிக்கொற்றன் காவிக் கண் சித்திரைத்திங்கள் புலைக்கொற்றன் குவளைக்கண் என இவை மிக்குமுடிந்தன. கிளிகுறிது கிளிக்குறிது தினைகுறிது தினைக்குறிது என இவை உறழ்ந்துமுடிந்தன. பிறவும் அன்ன.

பெயர்க்கிளவியெனவே பெயரல்லாத இவ்விரண்டீற்றுவினைச் சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் மேல் முடிப்பாம்.

நிலையென்ற மிகையானே இயல்பானும் விதியானும் நின்ற ஐகாரவீற்று இலையென்னும் வினைக்குறிப்புமுற்றுச்சொற்கு உறழ்ச்சிமுடிபு கொள்க. (௨௫)

எஅ. உயிரும் புள்ளியு மிறுதி யாகி
யளவு நிறையு மெண்ணுஞ் சுட்டி
யுளவெனப் பட்ட வெல்லாச் சொல்லுந்
தத்தங் கிளவி தம்மகப் பட்ட
முத்தை வரூஉங் காலந் தோன்றி
னொத்த தென்ப ஏயென் சாரியை.

இஃது அளவும் நிறையும் எண்ணுமாகிய பெயர்கள் அல்வழிக் கட் டம்மிற் புணருமாறு கூறுகின்றது.

இ-ள். உயிரும் புள்ளியுந் தமக்கீறாய அளவையும் நிறையையும் எண்ணையுங் கருதி வருவன உளவென்று ஆசிரியர் கூறப்பட்ட எல்லாச்சொற்களுந் தத்தமக்கு இனமாகிய சொற்களாய்த் தம்மிற் குறைந்தசொற்கள் தம்முன்னே வருங்காலந் தோன்றுமாயிற் பொருந்திற்றென்பார் ஆசிரியர்தாம் ஏயென்சாரியைபெற்று முடிதலை. எ - று.

முந்தை முத்தையென விகாரமாயிற்று.

வரலாறு;—நாழியேயாழாக்கு உழக்கேயாழாக்கு கலனே பதக்கு எனவும், தொடியேகஃசு கழஞ்சேகுன்றி கொள்ளேயை யவி எனவும், ஒன்றேகால் காலேகாணி காணியேமுந்திரிகை எனவும் முறையே அளவுப்பெயரும் நிறைப்பெயரும் எண்ணுப்பெயருந் தம்முன்னர்த் தம்மிற் குறைந்தன வந்துழி ஏகாரம்பெற்றவாறு காண்க.

இனி உயிரீறு புள்ளியீறென்ற மிகையானே குறுணிநானாழி ஐநாழியுழக்கு என ஏயென்சாரியைபெறுது வருவனவுங் கொள்க. இன்னும் அதனானே உழக்கரை செவிட்டரை மூவுழக்கரை கலவரை எனவும், கழஞ்சரை கழஞ்சரை தொடியரை கொள்ளரை எனவும், ஒன்றரை பத்தரை எனவும், ஏயென்சாரியை பெறுதனவும்; உரிக்குறை கலக்குறை எனவும், தொடிக்குறை கொட்குறை எனவும், காணிக்குறை காற்குறை எனவும் ஏயென்சாரியை பெறுது வேற்றுமைமுடிபெய்துவனவும்; உழக்கின்குறை ஆழாக்கின்குறை எனவும், கழஞ்சின்குறை கஃசின்குறை எனவும், ஒன்றின்குறை பத்தின்குறை எனவும் வேற்றுமைமுடிபு எய்தாது இன்பெறுவனவுங்; கலத்துக்குறை என அத்துப்பெற்று முடிவனூஉம்; பனையின்குறை காவின்குறை என இன்பெறுவனவும்; பனைக்குறை காக்குறை எனச் சிறுபான்மை இன்பெறுது வேற்றுமைமுடிபு எய்துவனவுந்; தூணிப்பதக்கு எனவும், இருதூணிப்பதக்கு முத்தூணிப்பதக்கு எனவும் ஏயென்சாரியை பெறுது வேற்றுமைமுடிபு எய்துவனவுந்; தூணித்தூணி தொடித்தொடி காணிக்காணி எனத் தம் முன்னர்த் தாம் வந்து வல்லெழுத்துப் பெறுவனவுந்; தூணிக்குத்தூணி இருதூணிக்கிருதூணி எனக் குச்சாரியை பெறுவனவுங் கொள்க. உரிக்கூறு தொடிக்கூறு காணிக்கூறு தூணிக்கொள் கலக்கொள் சாமை தோரை பயறு எனப் பொருட்பெயரோடு புணர்வழி வேற்றுமைமுடிபெய்தின மேற்கூறும் ஈற்றுப் பொது விதியானே முடியுமெனக்கொள்க. உழக்கரை உரிக்குறை உழக்கின்குறை கலத்துக்குறை பனையின்குறை காவின்குறை பனைக்குறை காக்குறை தூணிப்பதக்கு என்றற்றொடக்கத்தன உம்மைத்தொகை. உரிக்குறை உரியுங் குறையும் என விரிந்துழி உரியும் உழக்குமெனப் பொருடரும். ஏனையவற்றிற்கும் ஏற்குமாறு பொருளுரைத்துக்கொள்க.

தூணிக்கொள் என்றாற்போல்வன பண்புத்தொகை. உழக்கின்குறை என்றற்றொடக்கத்தன வேற்றுமைக்கண்ணுயின் உழக்கிற்குறை என நிற்கும். கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் உழக்கு எனவும், கழஞ்சு சீரகம் தொடி பலம் நிறை மா அரை அந்தை எனவும், அளவுப்பெயர்க்கும் நிறைப்பெயர்க்கும் முதலாவன இவ்வொன்பதெழுத்தென உணர்க. உகரமுதனிறைப்பெயர் வந்துழிக் காண்க. "அளவிற்கு நிறையிற்கு மொழி முதலாகி—யுளவெனப் பட்ட வொன்பதிற் றெழுத்தே—யவைதாங், கசதப வென்று நமவ வென்று—அகர வுகரமோ டவையெனமொ

ழிப்'' என்பவாகலின. சிறுபான்மை இம்மி இடா என்றாற்போல்வனவுங் கொள்க. எண்ணுப்பெயர்க்கு வரையறையின்று. (உசு)

எக. உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகர வுயிர்மெய்யா மேற்பன வரினே.

இது நாழியென்னும் அளவுப்பெயர்க்கு வருமொழி ஒன்றனோடு எய்தியது விலக்கிப் பிறிதுவிதியும் உரியென்னும் அளவுப்பெயர்க்கு எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

இ - ள். உரியென்னும் அளவுப்பெயர் வருமொழியாய் வருங்காலத்து நாழியென்னும் நிலைமொழியளவுப்பெயரின் இறுதியில் நின்ற ஈற்றுயிர்மெய் கெட அங்ஙனங் கெட்டுழி டகரவொற்றுத் தோன்றும்; உரியென்னும் அளவுப்பெயர்முன் ஏற்றமொழி வரின் யகரவுயிர்மெய் வரும். எ - று.

வரலாறு;—நாடுரி எனவும், உரியகொள் சாமை தோரை பயறு மிளகு வரகு உப்பு எனவும், வரும். ஏற்பன என்றதனான் உரியரிசி உரியெண்ணெய் முதலாயின மிகாதெனக் கொள்க. வருமொழி முற்கூறிய அதனான் டகாரம் மிகாது நாவுரியென்னும் முடிபுங் கொள்க. (உஎ)

அ0. எகர வினாமுச் சுட்டின் முன்ன
ருயிரும் யகரமு மெய்தின் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீடலும் யகார நிலவலு நெறியே.

இது வினாவுஞ் சுட்டுமாகிய உயிரீற்றிடைச்சொற்கள் நாற்கணத்தோடும் புணருமாறு தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். எகரவினா முன்னும் அகரமுதலிய மூவகைச்சுட்டுக்கள் முன்னும் உயிர்முதன்மொழியும் யகரமுதன்மொழியும் வந்தால் வகரமும் ஏனைய வந்துழி வந்தவையுஞ் செய்யுட்கட் சுட்டு நீண்டிசைத்தலும் அங்ஙனம் நீண்டிசைத்தவழி யகரம் மிகுதலும் முறைமை. எ - று.

உ-ம். எவ்வடை அவ்வடை இவ்வடை உவ்வடை ஆடை இலை ஈயம் உரல் ஊர்தி எழு ஏணி ஐயம் ஒழுக்கம் ஓடை ஔவியம் எனவும், எவ்யாழ் அவ்யாழ் இவ்யாழ் உவ்யாழ் எனவும், எக்

கொற்றன் அக்கொற்றன் இக்கொற்றன் உக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் ஞாண் நூல் மணி வளை எனவும், ஆவயினான ஈவயினான ஊவயினான எனவும், "ஆயிரு திணையி னிசைக்குமன சொல்லே" எனவும் வரும். வருமொழி வரையாது கூறினமையின் இம்முடிபு நாற்கணத்தோடுஞ் சென்றதேனும் நெறியென்றதனான் வன்கணம் வந்துழி நீடாதெனவும் நீடல் ஒருதலையன்றெனவும் உயிர்க்கணம் வந்துழியே யகரந் தோன்றுமெனவுங் கொள்க. இன்னும் அதனானே "கள்வனேவல்லன்கணவனென்காற்சிலம்பு—கொள்ளும்வினைப்பொருட்டாற்கொன்றாரேயீதொன்று" என இது என்னுஞ் சுட்டுமுதல் உகரவீற்றுப்பெயரின் இகரம் நீடலுங்கொள்க. இந்நீட்சி இருமொழிப்புணர்ச்சிக்கண் வருதலின் நீட்டும்வழி நீட்டலாகாமை உணர்க. பிறவும் அன்ன. (உஅ)

அக. ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
யவ்வன் மெய்வரி னுவ்வுறு நவ்வுக்
கவ்வு மாகும் வேற்றுமைக் கென்ப
செவ்விதி னவ்விய றெரியுங் காலே.

இஃது ஒருசார்த்தொழிற்பெயர் வன்கணத்தோடும் மென்கணத்தோடும் இடைக்கணத்து வகரத்தோடும் புணருமாறு தொகுத்துணர்த்துகின்றது.

இ - ள். ஞகரமும் ணகரமும் நகரமும் மகரமும் லகரமும் வகரமும் ளகரமும் னகரமுமாகிய எட்டு ஒற்றுக்களும் ஈறாக வருந் தொழிற்பெயர்கள் யகரம் ஒழிந்த எட்டு ஒற்றுக்களையும் முதலாகவுடைய மொழிகள் வருமொழியாய்வரின் இருவழிக்கண்ணும் உகரம்பெற்று முடியும். அவற்றுள், நகரவீற்றுத்தொழிற்பெயர்க்கு உகரமேயன்றி அகரமுமாம் வேற்றுமைக்கண்ணென்று கூறுவர் ஆசிரியர் செவ்விதாக அவ்விலக்கணத்தை ஆராயுங்காலத்து. எ-று.

உ-ம். உரிஞுக்கடிது மண்ணுக்கடிது பொருநுக்கடிது செம்முக்கடிது புல்லுக்கடிது தெவ்வுக்கடிது துள்ளுக்கடிது துன்னுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும், பொருநக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும். இம்முதனிலைத் தொழிற்பெயர்கட்கு உரிஞுதல் மண்ணுதல் பொருநுதல் செம்முதல் புல்லுதல் தெவ்வுதல் துள்ளுதல் துன்னுதல் எனப் பொருளுரைக்க. பொருநுதல் பொருந்துதல்.

"செவ்விதினவ்வியறெரியுங்காலே" என்றதனால் முரணென்னுந்தொழிற்பெயர் உகரம்பெறாது முரட்கடுமை சேனை தானை பறை எனவும், ஞெகிட்சி நீட்சி மாட்சி வலிமை எனவும், முரண் கடிது சிறிது தீது பெரிது ஞெகிழ்ந்தது நீண்டது மாண்டது வலிது எனவும் இருவழியும் உகரம்பெறாது ணகரவீற்றுப் பொது விதியான் முடிதலும், அவ்வீற்றுத்தொழிற்பெயரல்லனவும் வெண்ணுக்கரை எனவும், "கனைகுரல்கடுப்பப்பண்ணுப்பெயர்த்து" எனவும் உகரம்பெறுதலும், வெரிந் என்னுஞ் சினைப்பெயரும் பொருந் என்னுஞ் சாதிப்பெயரும் வெருநுக்கடிது பொருநுக்கடிது என அல்வழிக்கண் உகரம்பெறுதலும், வெரிநக்கடுமை பொருநக்கடுமை என வேற்றுமைக்கண் அகரம்பெறுதலும், "உய்வல்யானைவெரிநுச் சென்றனன்" பொருநுக்கடுமை எனச் சிறுபான்மை உகரம்பெறுதலும், வெரிநெனிறுதி கெடுதலுங், கெட்ட இடத்து வெரிங்குறை வெரிக்குறை செய்கை தலைபுறம் என வருமொழிக்கு இனமான மெல்லெழுத்துப்பெறுதலும் வல்லெழுத்து மிக்குமுடிதலும், உரிஞின்குறை பொருநின்குறை வெரிநின்குறை எனச் சாரியைபெறுதலுங், கன்னல்கடிது பின்னல்கடிது ஆடல்கடிது பாடல்கடிது நாட்டங்கடிது ஆட்டங்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், கன்னற்கடுமை பின்னற்கடுமை ஆடற்கடுமை பாடற்கடுமை நாட்டக்கடுமை ஆட்டக்கடுமை செய்கை தலை புறம் ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் முதனிலைத் தொழிற்பெயரல்லாத லகர மகர ஈற்றுத் தொழிற்பெயர்கள் உகரம் பெறாது தமக்கு ஏற்ற ஈற்றுப் பொதுவிதியான் முடிதலுங், கொள்கடிது கொட்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், கொள்கடுமை கொட்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் இருவழியும் முதனிலைத்தொழிற்பெயரல்லாத ளகரவீற்றுத்தொழிற்பெயர் உகரம்பெறாது தமக்கேற்ற செய்கைபெறுதலும், ஒளகார ஈற்றுத் தொழிற்பெயர் கௌவுக்கடிது வெளவுக்கடிது கடுமை என இருவழியும் உகரம்பெறுதலுங் கொள்க. "உய்வல்யானைவெரிநுச்சென்றனன்" என்பதனை யானையினது முதுகின்மேற் சென்றனனென விரிக்க. (உ௬)

அஉ. இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன்
வல்லெழுத் தியையி னவ்வெழுத்து மிகுமே.

இனி உயிரொற்றிறுதிகளைத் தனித்தனி எடுத்து முடிப்பார் விரிவஞ்சி ஒருவாற்றாற் தொகுத்துணர்த்துவனவற்றுள் இஃது

உயிரீற்றுச்சொன்முன் வன்கணம் புணருமாறு தொகுத்துணர்த்துகின்றது.

இ - ள். இயற்கையானுஞ் செயற்கையானும் நிலைபெற்ற உயிரீற்றுச்சொன்முன்னர் வல்லெழுத்துமுதன்மொழி வருமொழியாய் வந்து புணரின் அவ்வருமொழிமுதற்கண் நின்ற வல்லொற்றுக்கள் மிக்குமுடியும் இருவழியும். எ - று.

வட்டக்கல் சதுரப்பாறை என்றாற்போல ஒற்றீறொழித்து உயிரீறாக்கிக்கொள்வதூஉந், தாழக்கோல் தமிழப்பள்ளி என்றாற்போல இடையே எய்துவித்து உயிரீறாக்கிக்கொள்வதூஉம் எனச் செயற்கையீறு இருவகைத்து. அவை அங்ஙனம் ஆக்கிக்கொள்வுழி வல்லெழுத்து மிகுமாறு ஆங்காங்கு உணர்க. சொல்லென்றது ஈண்டு அஃறிணைப்பெயருஞ் சிறுபான்மை அத்திணைவினையும் விரவுவினையும் இடைச்சொல்லும் உரிச்சொல்லுமெனக் கொள்க. உயிரொருமையாற் குற்றுகரமும் உருபுயிரும் ஈண்டே அடங்கும். அங்ஙனம் அடங்குமென்பது கருத்தாதல் "வன்றொடரல்லனமுன்மிகாவல்வழி" என்றற் றொடக்கத்தனவற்றானும் "மூன்றனுருபினுமாறனுருபினும்" என்பதனானும் ஈண்டு எய்தியதனை விலக்குதலான் அறிக.

வரலாறு;—விளக்குறிது அதக்குறிது சிறிது தீது பெரிது எனவும், இருவிளக்கொற்றன் சாத்தன் தேவன் பூதன் எனவும், அகரவீற்றுப்பெயர்முன் இருவழியும் மிக்கன. இருவிளவென்பது ஓரூர், இருவிளவின்கட் கொற்றனென விரியும். உணக்கொண்டான் புலிபோலக்கொண்டான் கண்டெனக்கொண்டான் ஆங்கக்கொண்டான் சாலக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என அகரவீற்று வினைச்சொன்முன்னும் இடைச்சொன்முன்னும் உரிச்சொன்முன்னும் முறையே மிக்கன. புலிபோல என்பது ஒன்றனோடு பொருவப்படுதல் நோக்கி இடைச்சொல்லெனப்பட்டதேனும் போலென்னும் இடைச்சொல்லடியாகத் தோன்றிய வினையெச்சக்குறிப்பாதலும் எனவென்பது இருசொல்லையும் இயைவிக்கின்ற நிலைமையான் இடைச்சொல்லெனப்பட்டதேனுஞ் செய்து செய்யூ முதலியபோலச் செய்தெனவெனீறெனை வினையெச்சமாய் அவற்றோடு உடனெண்ணப்படுதலும் பற்றி வினையெச்சத்துள் அடக்கிமுடித்தாம். இவ்வாங்கவென்னும் உரையசையிடைச்சொல் ஏழனுருபின் பொருள்பட வந்ததல்லாமை "ஆங்க வென்னு முரையசைக் கிளவியும்—ஞாங்கர்க் கிளந்த வல்லெழுத்து மிகுமே"

என்பதனான் அறிக. தாராக்கடிது மூங்காக்கடிது சிறிது தீது பெரிது எனவும், கால் செவி தலை புறம் எனவும் ஆகாரவீற்றுப்பெயர்முன் இருவழியும் மிக்கன. உண்ணாக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், உண்ணாக்குதிரை செந்நாய் தகர் பன்றி எனவும், "உயிருறுப் புயிர்மெய் தனிநிலை யெனாஅக்—குறி னெடி லளபெடை மூவின மெனாஅ" எனவும், உசாக்கடிது வயாக்கடிது சிறிது தீது பெரிது எனவும் ஆகாரவீற்று வினைச்சொன்முன்னும் இடைச்சொன்முன்னும் உரிச்சொன்முன்னும் முறையே மிக்கன. உசாக்கடுமை வயாக்கடுமை சிறுமை தீமை பெருமை என இவை பெயர்த்தன்மைப்பட்டுழி வேற்றுமைக்கண் மிகுமாறுங்காண்க. இகரவீற்றுப்பெயர்க்கு அல்வழிமுடிபு முன்னர்க் கூறிப்போந்தமையின் ஈண்டு ஏனையவற்றிற்கே இம்முடிபுகோடும். தேடிக்கொண்டான் வந்தவழிக்கொண்டான் எனவும், இனிக்கொண்டான் அணிக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், கடிக்கமலம் சண்பகம் தாமரை பங்கயம் எனவும், இகரவீற்று வினைச்சொல்லும் இப்பொழுதெனவும் அணிய இடத்தெனவும் முறையே காலமும் இடமும் உணர்த்தும் இடைச்சொற்களும் உரிச்சொல்லும் முறையே மிக்கன. கிளிக்கால் சிறகு தலை புறம் என இகரவீற்றுப்பெயர்முன் வேற்றுமைக்கண் மிக்கன. கிளிகுறுமை கிளிக்குறுமை எனக் குணம்பற்றி வந்த உறழ்ச்சிமுடிபும் பனியத்துக்கொண்டான் பனியிற்கொண்டான் எனப் பனியென்னுங் காலப்பெயர் அத்தும் இன்னும் பெறுதலும் புறனடையாற்கொள்க. ஈக்கடிது சிறிது தீது பெரிது எனவும், கால் சிறகு தலை புறம் எனவும், ஈகாரவீற்றுப் பெயர்முன் இருவழியும் மிக்கன. தழீஇக்கொண்டான் நிறீஇக் கொண்டான் என்றாற்போல்வன இகரவீறென்க. கடுக்குறிது சிறிது தீது பெரிது எனவும், காய் செதிள் தோல் பூ எனவும், உகரவீற்றுப்பெயர்முன் இருவழியும் மிக்கன. கொண்மூக்கடிது சிறிது தீது பெரிது எனவும், குழாம் செலவு தோற்றம் மறைவு எனவும் ஊகாரவீற்றுப்பெயர்முன் இருவழியும் மிக்கன. உண்ணூக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என ஊகாரவீற்று வினைச்சொன்முன் மிக்கன. ஏக்கடிது சிறிது தீது பெரிது எனவும், ஏஎக்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் ஏகாரவீற்றுப்பெயர்முன் இருவழியும் மிக்கன. வேற்றுமைக்கண் எகரப்பேறு புறனடையாற் கொள்க. ஐகாரவீற்றுப்பெயர்க்கு அல்வழிமுடிபு மேற்கூறிப்போந்தமையின் ஈண்டு ஏனையவற்றிற்கே இம்முடிபு கோடும். ஒல்லைக்கொண்டான் வல்லைக்கொண்டான் வந்தக்கடைக் கொண்டான் கூறாமைக்குறித்தான் வந்தபின்னைக்கொண்டான்

வருமுன்னைக்கொண்டான் சென்றான் தந்தான் போயினான் என வும், மற்றைத்தெரு எனவும், பனைத்தோள் எனவும் ஐகாரவீற்று வினைச்சொன்முன்னும் இடைச்சொன்முன்னும் உரிச்சொன்முன் னும் முறையே மிக்கன. யானைக்கோடு செவி தலை புறம் என ஐகா ரவீற்றுப்பெயர்முன் வேற்றுமைக்கண் மிக்கன. உழைங்கோடு என மெல்லெழுத்துப்பெறுதலுங் கலங்கோடு கலைக்கோடு என உறழ்தலும் புறனடையாற்கொள்க. ஒக்கடிது கோக்கடிது சோக் கடிது சிறிது தீது பெரிது எனவும், ஓஒக்கடுமை கோஒக்கடுமை சோஒக்கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் ஒகாரவீற்றுப் பெயர்முன் இருவழியும் மிக்கன. வேற்றுமைக்கண் ஒகரப்பேறு புறனடையாற்கொள்க. கௌஉக்கடிது சிறிது தீது பெரிது என வும், கடுமை சிறுமை தீமை பெருமை எனவும் ஔகாரவீற்றுப் பெயர்முன் இருவழியும் மிக்கன. உகரப்பேறு அதிகாரப்புறன டையாற்கொள்க. கொக்குக்கடிது சிறிது தீது பெரிது எனவும், கால் சிறகு தலை புறம் எனவும், குற்றுகரவீற்றுப்பெயர்முன் இருவ ழியும் மிக்கன. அடித்துக்கொண்டான் சென்றவிடத்துக்கொண் டான் சென்றான் தந்தான் போயினான் எனக் குற்றுகரவீற்றுவி னைச்சொன்முன் மிக்கன. "புணர்தருசெல்வந்தருபாக்குச்சென் றான்" என்பதும் அது. மற்றுக்கொள் செல் தா போ எனவும் அதிர்ப்புக்கடிது சிறிது தீது பெரிது எனவும் குற்றுகரவீற்றிடைச் சொன்முன்னும் உரிச்சொன்முன்னும் முறையே மிக்கன. அதிர்ப் புக்கடுமை எனப் பெயர்த்தன்மைப்பட்டுழி வேற்றுமைக்கண் மிகு மாறுங் காண்க. யானையைக்கொணர்ந்தான் சேர்த்தான் தடுத் தான் பிடித்தான் எனவும், ஊர்க்குக்கொண்டான் சென்றான் தந் தான் போயினான் எனவும் உயிரீற்றுருபின்முன் மிக்கன. ஈண் டுக் காட்டாதொழிந்தனவும் வந்தவழிக்கண்டு இதுவே நிலனாக முடித்துக்கொள்க. (௩௦)

அ௩. மெல்லெழுத்து மிகுநவும் வல்லெழுத்து மிகுந
மம்மிடை வருநவு முறழ்ச்சி யெய்துநவு [வு
மென்றிருநால் வகைய மரப்பெய ரன்னவை
வேற்றுமை மருங்கிற் போற்றல் வேண்டும்.

இஃது உயிரீற்று மரப்பெயர்கட்கு ஒருவழி எய்தாதது எய்து வித்தலும் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

இ - ள். மெல்லெழுத்து மிக்கு முடிவனவும்; வல்லெழுத்து மிக்கு முடிவனவும்; அம்முச்சாரியை இடையே பெற்று முடிவன

வும்; ஒருகால் மெல்லெழுத்துப் பெற்றும் ஒருகால் வல்லெழுத்துப் பெற்றும், ஒருகால் மெல்லெழுத்துப் பெற்றும் ஒருகால் அம்முச் சாரியை பெற்றும் ஒருகால் அம்முச்சாரியை பெறாது வல்லெழுத்துப் பெற்றும் இவ்வாற்றான் உறழ்ச்சிமுடிபு எய்துவனவுமென ஒரு நால்வகையினை உடையவாம் மரப்பெயர்கள். அவ்வியல்பினையுடையவற்றை விரிந்தநூல்களில் எடுத்தோத்தானும் இலேசானுங் கூறியவாறு நோக்கி வேற்றுமைப்புணர்ச்சிக்கட் பாதுகாத்தறிக. எ - று.

வல்லெழுத்துமிகுதியுங் கூறினார் ஐயம் அகற்றுதற்கு. விளங்கோடு அதங்கோடு மாங்கோடு காயாங்கோடு சேங்கோடு விசைங்கோடு ஞெமைங்கோடு நமைங்கோடு அமைங்கோடு உடைங்கோடு செதிள் தோல் பூ என இவை மெல்லெழுத்து மிக்கன. ஏற்புழிக் கோடலான் இனமெல்லெழுத்தே மிகுதல் கொள்க. மேலும் வாளா மெல்லெழுத்தென்புழியெல்லாம் ஏற்புழிக்கோடலான் இன மெல்லெழுத்தே கொள்க. பலாஅக்காய் அத்திக்காய் அகத்திக்காய் ஆத்திக்காய் கடுக்காய் இலந்தைக்காய் கொன்றைக்காய் புன்னைக் காய் செதிள் தோல் பூ என இவை வல்லெழுத்துமிக்கன. புளியங் கோடு அரையங்கோடு தேக்கங்கோடு குருந்தங்கோடு புன்கங் கோடு வேப்பங்கோடு கடப்பங்கோடு செதிள் தோல் பூ என இவை அம்முப்பெற்றன. யாஅங்கோடு யாஅக்கோடு பிடாஅங்கோடு பிடாஅக்கோடு தளாஅங்கோடு தளாஅக்கோடு செதிள் தோல் பூ என இவை மெல்லெழுத்துப்பெற்றும் வல்லெழுத்துப்பெற்றும் உறழ்ந்தன. உதிங்கோடு உதியங்கோடு ஒடுங்கோடு ஒடுவங்கோடு செதிள் தோல் பூ என இவை மெல்லெழுத்துப்பெற்றும் அம்முப் பெற்றும் உறழ்ந்தன. புன்னையங்கானல் புன்னைக்கானல் முல்லையந்தொடையல் முல்லைத்தொடையல் மனையங்கோல் மனைக்கோல் என இவை அம்முப்பெற்றும் பெறாது வல்லெழுத்துப்பெற்றும் உறழ்ந்தன. பிறவும் அன்ன. உதி இக்காலத்து ஒதியென மருவிற்று.

போற்றல்வேண்டும் என்றதனானே "புளிங்காய்வேட்கைத் தன்று" எனவும், புளிம்பழம் எனவும் அம்முப்பெறாது சிறுபான்மை மெல்லெழுத்துமிகுதலும், கமுகங்காய் தெங்கங்காய் ஈச்சங்காய் பயற்றங்காய் சீழகம்புல் என்றாற்போலும் புல்லினையும் மரமென அடக்கி அம்முக்கொடுத்தலும் "யாணர்க்கோங்கின்குவிமுகை" எனவும், "காய்மாண்டதெங்கின்பழம்" எனவும் இன்பெறுதலும், பிற வாறு வருவன உளவேல் அவையும் ஏற்குமாறு முடித்துக்கொள்க. இவற்றுள் அகரம்பெறுவன புறனடையான் முடிக்க. (௬க)

அச. பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வு
மட்டுறி னைகெட் டாவு மாம்பிற.

இஃது ஒன்றற்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

இ - ள். பனையென்னுஞ் சொன்முன்னர்க் கொடியென்னுஞ் சொல்வரிற் பனைக்கொடியென வருமொழிவல்லெழுத்து மிக்குமுடிதலும், ஏனை வல்லெழுத்துமுதன்மொழி வரிற் பனங்காய் செறும்பு தூண் பழம் என ஐகாரங் கெட்டு அம்முப்பெற்றுமுடிதலும், திரள் என்னுஞ் சொல்வரின் ஒருகாற் பனந்திரள் என ஐகாரங் கெட்டு அம்முப்பெற்று முடிதலும், பனைத்திரளென ஒருகால் ஐகாரங்கெட்டு அம்முப்பெறாது வல்லெழுத்து மிக்குமுடிதலும், அட்டென்னுஞ் சொல் வருமொழியாய் வந்து ஒன்றுமாயிற் பனாஅட்டு என ஐகாரங் கெட்டு அவ்விடத்து ஓர் ஆகாரந்தோன்றி ஐகாரங் கெடநின்ற னகரவொற்றின்மேல் ஏறிமுடிதலுமாம். எ - று.

பிறவென்றதனானே ஆவிரங்காய் தூதுணங்காய் வழுதுணங்காய் தில்லங்காய் பாவட்டங்காய் தாழங்காய் செதிள் தோல் பூ எனவும், ஓலம்போழ் எனவும் வருவனவும் அவைபோல்வன பிறவும் ஐகாரங் கெட்டு அம்முப்பெற்றுமுடிதல் கொள்க. பனைக்கொடியென்பதற்கு இரண்டாவதும் மூன்றாவதும் பனாஅட்டு என்பதற்கு மூன்றாவதும் ஆறாவதும் விரியும். (௫௨)

அடு. சாவ வென்னுஞ் செயவெ னெச்சத்
திறுதி வகரங் கெடுதலு முரித்தே.

இஃது ஓர் அகரவீற்றுவினைச்சொற்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். சாவவென்று சொல்லப்படுஞ் செயவெனெச்சத்திறுதிக்கண் நின்ற அகரமும் அதனாற் பற்றப்பட்ட வகரமுங் கெட்டு நிற்றலும் கெடாதுநிற்றலும் உரித்து. எ - று.

உ-ம். "கோட்டிடைச்சாக்குத்தினான்" சாவக்குத்தினான் சீறினான் தகர்த்தான் புடைத்தான் ஞான்றான் நீண்டான் மாண்டான் யாத்தான் வீழ்ந்தான் அடைந்தான் எனவரும். நிலைமொழித்தொழிலாதலான் இயல்புகணத்திற்கும் இவ்விதிகொள்க. இந்நிகரனவாய் மேல்வருவனவற்றிற்கும் ஈது ஒக்கும். (௫௩)

அசு. செய்யிய வென்னும்வினை யெச்சம் பலவகைப்
பெயரி னெச்சமுற் றூறனுருபே
யஃறிணைப் பன்மை யம்மமுன் னியல்பே.

இஃது அகரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்குகின்றது.

இ - ள். செய்யியவென்னும் வாய்பாட்டான்வரும் வினையெச்சமும் வினையுங் குறிப்பும் எதிர்மறையும் பற்றிவரும் பெயரெச்சமும் அஃறிணைவினைமுற்றும் வினைக்குறிப்புமுற்றும் ஆறனுருபும் அஃறிணைப்பன்மைப்பெயரும் அம்மவென்னும் உரையசையிடைச் சொல்லுமாகிய அகரவீற்று இவ்வாறுவகைச் சொற்கண்முன்னரும் வருமொழிவல்லெழுத்து இயல்பாய்முடியும். எ - று.

இதன் முதலீறுகளில் அகரவீற்றுமொழிகளை வைத்தமையான் இடைநின்றனவும் அகரவீறேயாமெனவும் அஃறிணைப்பன்மை வேற்றுமைக்கண் அத்துப்பெற்றுமுடிதல் மேல் மாட்டேற்றாற் பெறப்படுதலின் ஈண்டு இயல்பென்றது அல்வழிக்கண்ணே யெனவுங் கொள்க.

உ-ம். உண்ணியகொண்டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், உண்டகுதிரை உண்ணாநின்றகுதிரை பொன்னன்ன குதிரை பொன்போன்றகுதிரை பொன்னனையகுதிரை பொன்னிகர்த்தகுதிரை பொன்னொத்தகுதிரை அன்னகுதிரை இன்னகுதிரை என்னகுதிரை பெரியகுதிரை சிறியகுதிரை செய்யகுதிரை இனியகுதிரை தண்ணியகுதிரை நல்லகுதிரை உண்ணாதகுதிரை ஓடாதகுதிரை செந்நாய் தகர் பன்றி எனவும், உண்டனகுதிரை கரியனகுதிரை செந்நாய் தகர் பன்றி எனவும், சாத்தனகுதிரை செந்நாய் தகர் பன்றி எனவும், பலகுதிரை சில்குதிரை செந்நாய் தகர் பன்றி எனவும், அம்மகொற்றா சாத்தா தேவா பூதா எனவும் முறையே காண்க. எவற்றினுஞ் சிறப்புடைய அஃறிணைப்பன்மையை முற்கூறாமையான் அம்மாகொற்றா என நீண்டுழியும் இயல்பாதலும் வடசடல் வடதலை என்றாற்போலும் விதியகரவீற்றுப்பெயர் முன் இயல்பாதலுங் கொள்க. (ருச)

அஎ. வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
யேகலு முரித்தஃ தேகினு மியல்பே.

இஃது எய்தாதது எய்துவித்தலும் எய்தியது இகந்துபடாமைக்காத்தலும் நுதலிற்று.

இ - ள். வாழியவென்னும் வியங்கோண்முற்றின் ஈற்றுயிர்மெய் கெடுதலும் உரித்து; அது கெட்டு இகரவீறாய் நின்றாலும் முற்கூறிய இயல்பேயாம். எ - று.

உம்மையாற் கெடாமையே வலியுடைத்து.

வரலாறு;—வாழிகொற்றா வாழியகொற்றா சாத்தா தேவா பூதா மன்னா வளவா யாழா அரசா எனவரும். (நரு)

அஅ. பலசில வெனுமிவை தம்முன் றாம்வரி
னியல்பு மிகலு மகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரி
னகரம் விகற்ப மாகலு முளபிற.

இஃது எய்தியது இகந்துபடாமைக்காத்தலும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

இ - ள். பலவென்றுஞ் சிலவென்றுஞ் சொல்லப்படும் இவ்விருசொல்லுந் தம்முன்னர்த் தாம்வந்து புணரின் இயல்பாதலும் மிக்குமுடிதலும் அகரங்கெட லகரம் றகரவொற்றாய்த் திரிதலும் இவற்றின்முன்னர்ப் பிறமொழியனைத்தும் வரின் அகரம் நிற்றலும் நீங்கலும் உளவாம். எ - று.

உ-ம். பலபல சிலசில எனவும், பலப்பல சிலச்சில எனவும், பற்பலகொண்டார் சிற்சிலவித்தி எனவும், பலகலை பல்கலை சிலகலை சில்கலை சேனை தானை படை நாள் மலர் யானை வேள்வி அணி எனவும் முறையே காண்க. பிறவென்ற மிகையானே பல்பல சில்சில என அகரங் கெட லகரம் றகரமாகாமையும் "பலாஅஞ்சிலாமென் மனார்புலவர்" எனச் செய்யுட்கண் ஒரோவழிப் பலவென்பதன் முன்னர்ச் சிலவென்பது வந்துழி இறுதி அகரம் நீண்டு ஓர் அகரமும் மகரவொற்றும் பெற்று முடிதலுங்கொள்க. இதன் சொன்னிலை பலசிலவென்னுஞ் செவ்வெண். (நகூ)

அகூ. அல்வழி யாமா மியாமுற் றிறுதி
யாவினா விவற்றுமுன் வல்லெழுத் தியல்பே.

இஃது ஆகாரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்குகின்றது.

இ - ள். அல்வழிப்புணர்ச்சிக்கண் ஆவும் மாவுமென்னும் இருபெயரும் ஏவல்குறித்த உரையசையாகிய மியாவென்னும் இடைச்சொல்லும் அஃறிணையெதிர்மறைப்பன்மைமுற்றுந் தன்றொழிலுரைப்பதன் ஈற்றுவினாவும் யாவினாவுமாகிய ஆகார ஈற்று இவ்வறுவகைச் சொன்முன்னரும் வருமொழிவல்லெழுத்து மிகாது இயல்பாய்முடியும். எ - று.

வரலாறு;—ஆகுறிது மாகுறிது சிறிது தீது பெரிது எனவும், கேண்மியாகொற்றா சாத்தா தேவா பூதா எனவும், உண்ணாகுதிரை செந்நாய் தகர் பன்றி எனவும், உண்காகொற்றா சாத்தா தேவா பூதா எனவும், யாகுறிய சிறிய தீய பெரிய எனவும் முறையே காண்க. (௩௭)

கூ0. குறியதன் கீழாக் குறுகலு மதனோ
டுகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்.

இஃது ஆகார ஈற்றுட் சிலவற்றிற்குச் செய்யுண்முடிபு கூறுகின்றது.

இ - ள். குற்றெழுத்தின்கீழ் நின்ற ஆகாரங் குறுகிநிற்றலும் அங்ஙனங் குறுகலுடனே இறுதிக்கண் உகரம்பெறுதலும் அவ்விரண்டுமின்றி இயல்பாதலுமாகிய இம்மூன்றுவிதியும் பொருந்தும் இருவழியுஞ் செய்யுளகத்து. எ - று.

உ-ம். "சுறமறிவனதுறையெல்லாம்" "இறவீன்பனவில்லெலாம்" "நிலவிரிகானல்வாய்நின்று" எனவும், "இரவழங்குசிறுநெறி" எனவும், "முழவுமாதொலைச்சியபைநிணப்பிளவைப்—பிணவுநாய்முடுக்கியதடியொடுவிரைஇ" எனவும், "இறவுப்புறத்தன்னபிணர்படுதடவுமுதல்" "சுறவுக்கோட்டன்னமுள்ளிலைத்தாழை" "புறவுப்புறத்தன்னபுன்காயுமாய்காய்" எனவும், "நிலாவணங்குவெண்மணன்மேனின்று" எனவும், "நிலாச்சுறவினம்பொன்போன்றன" எனவும், இருவழியும் முறையே காண்க. "நறவங்கண்ணிநற்போர்ச்செம்பியன்" "குரவநீடியகொன்றையங்கானல்" என்பன ஆகாரங் குறுகியவழி அம்முப்பெற்றன. 'சுறவுயர்கொடி' 'அரவணிகொடி' 'முழவுறழ்தோள்' என்றாற்போல்வன ஆகாரங்குறுகியவழி உகரம்பெறாது உடம்படுமெய் பெற்றன. (௩௮)

கூக. அன்றி யின்றியென் வினையெஞ் சிகரந்
தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.

இஃது இகரவீற்றுட் சிலவற்றிற்குச் செய்யுண்முடிபு கூறுகின்றது.

இ - ள். அன்றியெனவும் இன்றியெனவுஞ் சொல்லப்படும் வினையெச்சக்குறிப்புச்சொற்களினது ஈற்றிகரஞ் செய்யுளகத்து உகரமாகி வந்தால் அவ்வழி வருமொழிவல்லெழுத்து இயல்பாய் முடியும். எ - று.

எஞ்சென்பது ஈண்டுமுதனிலைத்தொழிற்பெயர். வரினெனவே உகரமாதல் ஒருதலையன்றெனவும் ஆகாதவழி மிகுமெனவுங்கொள்க.

உ - ம். "வாளன்றுபிடியாவன்கணுடவர்—நாளன்றுபோகிப் புள்ளிடைதட்பப்—பதனன்றுபுக்குத் திறனன்றுமொழியினு—மிடனன்றுதுறத்தல்வள்ளியோரே" எனவும், "உப்பின்று—புற்கையுண்கமாகொற்கையோனே" எனவும், அறிவின்றிக்கொடுத்தான் சென்றான் தந்தான் போயினான் எனவும் முறையேகாண்க. (௩௯)

கூஉ. சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். மரமன்றிச் சுவைப்புளியை உணர்த்திநின்ற புளியென்னும் பெயர்முன் வல்லெழுத்துவரின் அவ்வல்லெழுத்தேயன்றி அவற்றிற்கு இனமான மெல்லெழுத்து மிகவும் பெறும். எ-று.

உ-ம். புளிங்கறி புளிக்கறி சோறு தயிர் பாளிதம் எனவரும். பாளிதம் பாற்சோறு. இகரவீற்றுப்பெயர்க்கு அல்வழிமுடிபு மேற்கூறுதலின் இம்முடிபு வேற்றுமைக்கண்ணதெனத் தானேபோதரும். இவற்றிற்கு இரண்டனுருபு விரிக்க. (௪0)

கூ௩. பவ்வீ யல்வழி யியல்பு மீமுன்
னியல்பும் வலிமெலி மிகலுமாம் வேற்றுமை.

இஃது ஈகாரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கலும் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

இ - ள். பகரத்தோடு கூடிய ஈகாரவிற்று இடக்கர்ப்பெயர் முன் வருமொழிவல்லெழுத்து அல்வழிக்கண் இயல்பாதலும் ஓரிடத்தினை வரைந்துணர்த்தும் மேல் என்பதன் திரிபாகிய மீயென்னும் மரூஉச்சொன்முன் இயல்பாதலும் மிகுதலும் வருமொழிவல்லெழுத்துக்கு இனமான மெல்லெழுத்து மிகுதலும் உளவாம் வேற்றுமைக்கண். எ - று.

வரலாறு;—பீகுறிது சிறிது தீது பெரிது எனவும், மீகண் செவி தலை புறம் எனவும், மீக்கோள் மீப்பா எனவும், மீங்குழி மீந்தோல் எனவும் முறையேகாண்க. மீகண்ணென்பது மேலிடத்துக் கண்ணென விரியும். பிறவும் அன்ன.

நீயென்பது விரவுப்பெயராதலிற் "பொதுப்பெயருயர்திணைப் பெயர்களீற்றுமெய்" என்பதனுன் முடியும். (சக)

கூச. ஆமுன் பகரவீக் குறுகுமவ் வழியும்
வல்லெழுத் தியற்கை யல்வழியான.

இஃது எய்தாதது எய்துவித்தலும் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

இ - ள். ஆவென்பதன்முன்னர் வருமொழியாய் வந்த இடக்கர்ப்பெயரினது பகரத்தோடு கூடிநின்ற ஈகாரம் இகரமாய்க் குறுகும்; அங்ஙனம் குறுகியவழியும் வருமொழிவல்லெழுத்து இயல்பாய் முடியும் அல்வழிக்கண். எ - று.

வரலாறு;—ஆப்பி எனவும், ஆப்பிகுறிது சிறிது தீது பெரிது எனவும் குறுக்கமும் இயல்பும் முறையேகாண்க.

அல்வழிக்கண் இயல்பாமெனவே வேற்றுமைக்கண் ஆப்பிக் குளிர்ச்சி செறிவு திரட்சி பொலிவு எனப் பொதுவிதியான் மிக்கு முடியுமெனக் கொள்க. அல்வழியென வேண்டாகூறிய அதனானே குறுக்கம் வேற்றுமைக்கண்ணேயெனக் கொள்க. ஆப்பியரியதென் றற்போல வருமொழியோடு புணர்வழிக் குறுகுமென்பாரும் உளர். "ஆன்முன் வரூஉ மீகார பகரந்—தான்மிகத் தோன்றிக் குறுகலு முரித்தே" என ஆசிரியர் தொல்காப்பியனார் இக்குறுக்கம் நிலைமொழிநோக்கி வந்ததாக ஆகாரவீற்றுட் கூறினமையானும் உரையாசிரியரை உள்ளிட்டோரெல்லாம் அதற்கு உதாரணம் ஆப்பியென்றே காட்டினமையானும் அது மரபன்றென மறுக்க. ஆப்பி ஆவினதுபீ என விரியும். (சஉ)

கூரு. எண்ணி னிறுதியுஞ் சுட்டுமுத லிறுதியு
நண்ணிய வுகரமுன் னியல்பா மதுச்சொலீ
றன்று வருகாலை யாவா குதலு
மைவரு காலை மெய்வரைந்து கெடுதலுஞ்
செய்யுண் மருங்கி னுரித்தென மொழிப.

இஃது உகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கலும் ஒன்றற்கு எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

இ - ள். எண்ணுப்பெயரீற்றினுஞ் சுட்டெழுத்தினை முதலாகவுடைய பெயரீற்றினும் நின்ற உகரத்தின்முன்னர் வருமொழிவல்லெழுத்துமிகாது இயல்பாய்முடியும்; அதுவென்னுஞ் சொல்லீற்றுஉகரம் அன்றென்னும் வினைக்குறிப்புச்சொல் வருமொழியாய் வருங்காலத்து அவ்வுகரம் ஆகாரமாய்த் திரிந்து முடிதலும், ஐயென்னுஞ் சாரியையிடைச்சொல் வருங்காலத்து அவ்வுகரந் தான் ஊர்ந்த மெய்யையொழித்துக் கெட்டுமுடிதலுஞ் செய்யுளகத்து உரித்து. எ - று.

ஒருகாசு சின்னம் துலாம் பலம் எனவும், அது இது உது குறிது சிறிது தீது பெரிது எனவும், "அதாஅன்றென்பவெண்பா யாப்பே" எனவும், அதைமற்றம்ம எனவும் வரும்.

சிறப்புடைய சுட்டுப்பெயரை முற்கூறுத முறையலகூற்றானே சுட்டீறு இயல்பாதல் அல்வழிக்கண்ணேயெனவும் இதாஅன்றம்ம உதாஅன்றம்ம என ஏனைச்சுட்டுப்பெயரிறுதியுந் திரிதலும் இதைமற்றம்ம உதைமற்றம்ம என ஐகாரம் பெறுதலும் அதன்று இதன்று உதன்று என ஏறிமுடிதலும் உதுக்காண் என வல்லெழுத்து மிகுதலும் "எழூஉத்தாங்கியகதவ மமலைத்தவர்—குழூஉக்களிற்றுக்குறும்புடைத்தலின்" எனவும், "பழூஉப்பல்லன்னபருவுகிர்ப் பாவடி" எனவும் உகரம் நீண்டு ஓர் உகரம் பெறுதலும் பிறவுங் கொள்க. (சஙு)

கூசு. பூப்பெயர் முன்னின் மெல்லெழுத்து மிகுதலும்
போற்றல் வேண்டும் வேற்றுமைக் கண்ணே.

இஃது ஊகார ஈற்றுள் ஒன்றற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

இ - ள். பூவென்னும் ஊகார ஈற்றுப்பெயர்முன்னர் வரும் வல்லெழுத்து மிகுதலேயன்றி அவற்றிற்கு இனமாகிய மெல்லெழுத்து மிகுதலையும் விரும்பும் ஆசிரியன் வேற்றுமைப்பொருட் புணர்ச்சியிடத்து. எ - று.

வரலாறு;—பூக்கொடி பூங்கொடி சோலை தாமம் பந்து என வரும். போற்றல்வேண்டும் என்றதனானே மெல்லெழுத்துப்பேறே சிறப்புடைத்தெனக்கொள்க. (சுசு)

கூஎ. தேற்றமுஞ் சிறப்பு மல்வழி யான
வெகர வொகரம் பெயர்க்கீ றாகா
முன்னிலை மொழிய வென்மனார் புலவர்.

இஃது எகர ஒகரங்கள் ஈறுமிடம் உணர்த்துகின்றது.

இ - ள். தெளிவுபொருளுஞ் சிறப்புப்பொருளும் அல்லாத வேற்றுமைப்பொருண்மையிடத்து அளபெடுத்துக் கூறுதலின் உளவாகிய எகர ஒகரங்கள் பெயர்க்கீறாய் வாரா, வினைக்கு ஈறாய் வரும். அதுதான் தன்மையினும் படர்க்கையினும் வாரா, முன்னிலைச்சொல்லிடத்தனவாமென்று கூறுவர் புலவர். எ - று.

எனவே தெளிவுபொருளினுஞ் சிறப்புப்பொருளினும் வந்து பெயர்க்கு ஈறும் இடைச்சொல்லாகிய எகர ஒகரங்கள் மூன்றிடத்திற்கும் உரியவாமென்பது பெற்றாம்.

வரலாறு;—எஎக்கொற்றா ஒஒக்கொற்றா சாத்தா தேவா பூதா எனவரும். இவை ஈண்டு முறையே எனக்கு ஒரு கருமம் பணி எனவும், இங்ஙனஞ் செய்கின்றதனை ஒழி எனவும் முன்னிலையேவற் பொருளவாய் வந்தன. இவற்றிற்கு வல்லெழுத்துப்பேறு "இயல்பினும்விதியினும்" என்பதனாற் பெற்றாம். (சுரு)

கூஅ. தேற்ற வெகரமுஞ் சிறப்பி னொவ்வு
மேற்கூ றியற்கை வல்லெழுத்து மிகா.

இது மேல் மூன்றிடத்திற்கும் உரியவாய் வருமென்ற எகர ஒகர ஈற்றிற்கு எய்தியது விலக்குகின்றது.

இ - ள். தேற்றப்பொருண்மைக்கண் வரும் எகார ஈற்று இடைச்சொல் அளபெடுப்புழி வரும் எகர ஈற்றுமுன்னுஞ் சிறப்புப் பொருண்மைக்கண் வரும் ஒகார ஈற்று இடைச்சொல் அளபெடுப்

புழி வரும் ஒகர ஈற்றுமுன்னும் மேற்கூறிய அதிகாரவல்லெழுத்து மிகாது இயல்பாய்முடியும். எ - று.

வரலாறு;—யானேஎகொண்டேன் நீயேஎகொண்டாய் அவனேஎகொண்டான் எனவும், யானோஒகொடியேன் நீயோஒகொடியை அவனோஒகொடியன் எனவும் வரும்.

இயற்கையென்றதனானே ஏனை ஏகார ஓகார ஈற்று இடைச்சொற்கள் செய்யுள் அழிய வந்தவிடத்து அளபெடுப்புழி வரும் எகர ஒகரவீற்றுக்கண்ணும் இயல்பாதல்கொள்க. அவைபோல இவை அளபெடுத்தல் ஒருதலையன்மையின் இலேசினாற் றழீஇயினாரென்க.

கூகூ. இடைச்சொல் லேயோ முன்வரி னியல்பே.

இஃது ஏகார ஓகார ஈற்று இடைச்சொற்கட்கு எய்தியது விலக்குகின்றது.

இ - ள். இடைச்சொல்லாய்வரும் ஏகாரஓகாரங்கள் முன்னர் வல்லெழுத்து வந்தால் மிகாது இயல்பாய் முடியும். எ - று.

ஈண்டு இடைச்சொல்லென்றன தேற்றமுஞ் சிறப்பும் ஒழிந்தவற்றினை. என்னை? அவை அளபெடுத்து எகரஒகர ஈறாயேநிற்றலின்.

வரலாறு;—நீயேகொண்டாய் இதுவினா. காலேகையே இஃதெண். அவருள் இவனேகொண்டான் இதுபிரிநிலை. யானேகொண்டேன் இஃதெதிர்மறை. "கழியேசிறுகுரனெய்தல்பாடோவாதே" இஃதீற்றசை. கொளலோகொண்டான் இஃதொழியிசை. நீயோகொண்டாய் இதுவினா. யானோகொண்டேன் இஃதெதிர்மறை. அவனோபோனான் இதுகழிவு. "யானோதேறேனவர் பொய்வழங்கலரே" இதுபிரிநிலை. பத்தோபதினொன்றோ புற்றோபுதலோ இவையையம். "குன்றுறழ்ந்தகளிறென்கோ கொய்யுளைமாவென்கோ" இவையெண். "காணியவம்மினோகங்குலதுநிலையே" இஃதசைநிலை. இவை இயல்பாயவாறுகாண்க. (சஎ)

க00. வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி.

இது குற்றுகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது.

இ - ள். வன்றொடரொழிந்த ஐவகைக் குற்றுகர ஈற்றுமுன்னும் வரும் வல்லெழுத்து மிக்குமுடியா அல்வழிக்கண். எ - று.

உ-ம். நாகுகடிது எஃகுகடிது வரகுகடிது குரங்குகடிது தெள்குகடிது சிறிது தீது பெரிது எனவரும். (சஅ)

௧0௧. இடைத்தொட ராய்தத் தொடரொற் றிடையின்
மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.

இதுவும் அது.

இ-ள். இடைத்தொடர்மொழிக் குற்றுகர ஈற்றுமுன்னும் ஆய்தத்தொடர்மொழிக் குற்றுகர ஈற்றுமுன்னும் ஒற்றிடையேமிகாத ஈரெழுத்தொருமொழிக் குற்றுகர ஈற்றுமுன்னும் உயிர்த்தொடர்மொழிக் குற்றுகர ஈற்றுமுன்னும் வரும் வல்லெழுத்து இயல்பாய்முடியும் வேற்றுமைக்கண். எ-று.

உ-ம். தெள்குகால் சிறை தலை புறம் எனவும், எஃகு கடுமை சிறுமை தீமை பெருமை எனவும், நாகுகால் செவி தலை புறம் எனவும், வரகுகதிர் சோறு தாள் பதர் எனவும் முறையேகாண்க. (சகூ)

௧0௨. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுட்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

இது குற்றுகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ-ள். ஈரெழுத்தொருமொழியீற்றினும் உயிர்த்தொடர்மொழியீற்றினும் உகரம் பற்றுக்கோடாய்நின்ற வல்லெழுத்தாறனுள் டகாரறகாரமாகிய இரண்டொற்றும் இடைக்கண் மிகும் வேற்றுமைக்கட் பெரும்பாலும். எ-று.

உ-ம். யாட்டுக்கால் பாற்றுக்கால் முருட்டுக்கால் முயிற்றுக்கால் செவி தலை புறம் ஞாற்சி நிறம் மயிர் யாப்பு வலிமை அடி எனவரும். கயிற்றுப்புறம் வயிற்றுத்தீ இவையும் அன்ன. பெரும்பாலும் மிகுமெனவே, "வேலியாயிரம்விளையுட்டாகக்—காவிரிபுரக்குநாடுகிழவோனே" "கறைமிடறணியலுமணிந்தன்றக்கறை" எனச் சிறுபான்மை வேற்றுமைக்கண் மிகாமையும், காட்டரண் ஏற்றேனம் குருட்டுக்கோழி திருட்டுப்புலையன் சாட்டுக்காணம் வறட்டாடு குருட்டெருது களிற்றுப்பன்றி வெளிற்றுப்பனை எயிற்றுப் பல் எனச் சிறுபான்மை அல்வழிக்கண் மிகுதலும், வெருக்குக்கண் எருத்துக்கால் எனச் சிறுபான்மை பிறமெய் மிகுதலுங்கொள்க. (ரு0)

க0ௗ. மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற்
றம்மின வன்றொட ராகா மன்னே.

இதுவும் அது.

இ - ள். மெல்லொற்றுத்தொடர்மொழிக் குற்றுகர ஈற்று மொழிகளுட் சில மொழிகளே வேற்றுமைக்கட் டமக்கு இனமான வல்லொற்றுத்தொடர்மொழியாகாதன; ஆவனபல. எ - று.

உ-ம். குரக்குக்கால் ஞாற்சி நிணம் முகம் விரல் உகிர் எனவும், கழச்சுக்கோல் எட்குக்குட்டி மருத்துப்பை பாப்புத்தோல் எற்புக்காடு சிலப்பதிகாரம் எனவும் வரும். ஞெண்டுக்கால் பந்துத்திரட்சி பறம்பிற்பாரி குறும்பிற்சான்றோர் என்றாற்போல்வன வன்றொடராகாதன. மன்னே என்றதனனே குரக்கடி குரங்கின்கால் பாப்புத்தோல் பாம்பின்றோல் என ஒன்றுதானே ஓரிடத்துத்திரிந்தும் ஓரிடத்துத்திரியாதும் வருதலுங் கொள்க. இன்னும் அதனனே அற்புத்தளை அன்பினாற்செய்ததளை என வேற்றுமையாதலேயன்றி அன்பாகியதளையென அல்வழியுமாதலின் அல்வழியுந் திரிதல் கொள்க. (௫௧)

க0௪. ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே.

இதுவும் அது.

இ - ள். ஐகாரத்தைத் தம்மீற்றிலே பெற வருங் குற்றுகரமும் உள. எ - று.

உ-ம். பண்டைக்கூத்தன் சாத்தன் தேவன் பூதன் எனவும், மன்றைத்தூதை பானை எனவும் வரும். ஓராட்டையானை ஐயாட்டையெருது எனத் திரிந்தும் அன்றைக்கூத்தர் அற்றைக்கூத்தர் என உறழ்ந்தும் வருமெனவுங் கொள்க. (௫௨)

க0௫. திசையொடு திசையும் பிறவுஞ் சேரி
னிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாய்த் திரிதலு மாம்பிற.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ - ள். திசைப்பெயரோடு திசைப்பெயரும் பிறமொழியும் வந்து புணருமிடத்து நிலைமொழியீற்றுயிர்மெய்யும் அதன்மேனின்ற

ககரவொற்றுங் கெடுதலும் நகரவொற்று ணகரலகரங்களாய்த் திரிதலும் பொருந்தும். எ - று.

பிறவென்றதனனே திசையோடு திசை புணருங்கால் நிலைமொழி பெருந்திசையெனவும் வருமொழி கோணத்திசையெனவும், நிலைமொழியாய் நிற்பனவும் வடக்குந் தெற்குமேயெனவுந், தெற்கென்பதன் றகரம் ணகரமாயும் மேற்கென்பதன் றகரம் லகரமாயுந் திரியுமெனவும், மேற்றிசையென்றற்போல்வன திரியாவெனவும், வருமொழித் தகரந் திரியுமெனவும், ழகரத்து அகரங் கெட்டு முதல் நீண்டேவருமெனவும்,பெருந்திசையோடு பெருந்திசை புணர்வுழி ஏயென்சாரியை வருமெனவுங் கொள்க.

வரலாறு;—வடகிழக்கு வடமேற்கு தென்கிழக்கு தென்மேற்கு எனவும், வடசடல் வடசுரம் வடதலை வடபால் "வடவேங்கடந்தென்குமரி" தென்சுரம் தென்றலை தென்பால் மேல்கடல் மேல்பால் குடகடல் குடபால் குணகடல் குணபால் கீழ்கரை கீழ்சார் எனவும், தெற்கேவடக்கு வடக்கேதெற்கு மேற்கேகிழக்கு கிழக்கேமேற்கு எனவும் வரும். தெற்கேவடக்கு முதலியன உம்மைத்தொகை. தெற்குவடக்கு வடக்குத்தெற்கு கிழக்குமேற்கு மேற்குக்கிழக்கு என ஏகாரம்பெறாது பெரும்பான்மை பொதுவிதி பெறுதலுங் கீழைக்குளம் மேலைக்குளம் கீழைச்சேரி மேலைச்சேரி என ஐகாரம் பெறுதலும் அவ்விலேசானே கொள்க. (௫௬)

க0௩. எண்ணிறை யளவும் பிறவு மெய்தி
னொன்று முதலெட் டீறா மெண்ணுண்
முதலீ ரெண்முத னீளுமூன் றாறு
குறுகு மாறல் லவற்றினீற் றுயிர்மெய்
யேகு மேற்புழி யென்மனார் புலவர்.

இது குற்றுகர ஈற்று எண்ணுப்பெயர் எண்முதலிய பெயரோடு புணருமாறு கூறுகின்றது.

இ - ள். எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பொருட்பெயரும் வருமொழியாய் வந்து புணரின் நிலைமொழியாய் நின்ற ஒன்றுமுதல் எட்டீறாகிய எழுவகையெண்களுள் முதற்கணின்ற ஒன்றும் இரண்டும் முதலுயிர்நீண்டும் மூன்றும் ஆறும் நெடிமுதல் குறுகியும் ஆறல்லாத அறுவகையெண்களின் ஈற்றுநின்ற உயிர்மெய் கெட்டும் முடியும் பொருந்துமிடத்தென்று கூறுவர் அறிவுடையோர். எ - று.

நாற்கணத்தோடும் இவ்வாறே முடியவேண்டுமென்னும் யாப்புறவில்லைத் தமக்கேற்ற பெற்றி முடியுமென்பார் ஏற்புழி என்றார். எண்ணிறையளவும்பிறவுமெய்தின் என்பதனை மேல் ஐந்துசூத்திரத்தோடும் ஏற்புழி என்பதனை இப்பொருண்மையதிகாரம் முற்றுமளவும் உய்த்துரைக்க.

வரலாறு;—அறுபஃதுகோடி காணி கால் நூறு நூறாயிரம் நான்கு மூன்று முந்திரிகை முக்கால் ஆயிரம் எனவும், கழஞ்சு சீரகம் தொடி பலம் மஞ்சாடி எனவும், கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி எனவும், கல் சுனை துடி பறை ஞாண் நூல் மணி யாழ் வட்டு எனவும் வன்கணமுதலிய முக்கணமும் ஆயிரமும் வர ஆறு நெடுமுதல்குறுகித் தனக்கேற்றபெற்றி முடிந்தது. ஒழிந்தவற்றிற்கு உதாரணம் மேற்காட்டுதும். ஏற்புழி என்பதனானே ஆறு கோடி கழஞ்சு கலம் கல் என நெடுமுதல் குறுகாது குற்றுகர ஈற்றுப் பொதுவிதியானேமுடிதலும், ஆறென்று இரண்டு ஐந்து ஆறு ஏழ் எட்டு ஒன்பது எடை அகல் உழக்கு அகம் ஆகம் என உயிர்க்கணத்தோடு புணருங்கால் ஈண்டுக் கூறிய சிறப்புவிதி ஏலாது மேலைப் பொதுவிதியானே முடிதலும், ஒன்றுமுதல் எட்டீறும் எண்ணுள் இரண்டுமுதலியன இரண்டுகோடி மூன்றுகோடி நான்குகோடி ஐந்துகோடி எட்டுக்கோடி கழஞ்சு கலம் கல் என்றற்றொடக்கத்தனவற்றோடு புணருமிடத்து முன்னர்க் கூறுஞ் சிறப்புவிதியேலாது குற்றுகர ஈற்றுப் பொதுவிதியான் முடிதலும், "ஒன்றுதேரிஞ் ஞொருவன்கூற்றமே" எனச் சிறுபான்மை ஒன்றும் அங்ஙனம் முடிதலுங் கொள்க. ஏழென்பது ஒற்றீறாகலின் மெய்யீற்றுப்புணரியலுள் முடிப்பாம். ஆசிரியர் தொல்காப்பியனாரும் ழகரவீற்றுள் முடிப்பர். (ருச)

கoஎ. ஒன்றன் புள்ளி ரகர மாக
விரண்ட னொற்றுயி ரேகவுவ் வருமே.

இது மேலனவற்றுட் சிலவற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். எண்முதலிய பெயர் வருமிடத்து ஒன்றென்னும் எண்ணிடைநின்ற னகரவொற்று ரகரவொற்றாய்த் திரிய இரண்டென்னும் எண்ணிடைநின்ற ணகரவொற்றும் ரகாரமிசைநின்ற அகரவுயிருங் கெட அவ்விரண்டெண்ணின் ரகாரத்துமேலும் உகரம் வந்து புணரும் ஏற்குமிடத்து. எ - று.

வரலாறு;—ஒருபஃது இருபஃது கழஞ்சு கலம் கல் எனவு ரும். ஏற்புழி என்றதனுனே ஓராயிரம் இராயிரம் எனவும் ஓராயி ரம் ஈராயிரம் எனவும் ஆயிரம்வந்துழி உகரம்பெறுது முதலுயிர் நீடாதும் நீண்டும், ஓரொன்று ஈரொன்று இடை உழக்கு இலை என உயிர்க்கணம்வந்துழி உகரம்பெறுது முதலுயிர்நீண்டும், ஒருயானை இருயானையென முடிதலேயன்றி ஓர்யானை ஈர்யானையென யகரம் வந்துழி உகரம்பெறுது நீண்டுமுடிதலுங் கொள்க. (ருரு)

கOஅ. மூன்றனுறுப் பழிவும் வந்தது மாகும்.

இதுவும் அது.

இ - ள். எண்முதலியன வருமிடத்து மூன்றென்னும் எண் ணிடைநின்ற னகரவொற்றுக் கெடுதலும் வருமொற்ருய்த் திரித லும் பொருந்தும் ஏற்குமிடத்து. எ - று.

வரலாறு;—மூவொன்று எடை ஆசை என உயிர்க்கணம்வந் துழி ஈற்றுயிர்மெய்யும் மேல்நின்ற ஒற்றுங் கெட்டும், முப்பஃது களஞ்சு கலம் கல் நான்கு மஞ்சாடி நாழி நூல் என வன்க ணமும் மென்கணமும் வந்துழி ஈற்றுயிர்மெய்கெட்டு மேல் நின்ற ஒற்று வருமொற்ருயும், முவ்வட்டி மூவட்டி முவ்வட்டு மூவட்டு என வகரம் வந்துழி ஈற்றுயிர்மெய் கெட்டு மேல் நின்ற ஒற்று வரு மொற்ருய்த் திரிந்தும் நெடுமுதல்குறுகியும் ஒற்றும் உயிர்மெய்யுங் கெட்டு நெடுமுதல்குறுகாதும், முவ்வாயிரம் மூவாயிரம் முவ்வகல் மூவகல் முவ்வாழாக்கு மூவாழாக்கு முவ்வுழக்கு மூவுழக்கு என ஆயிரம் அகல் ஆழாக்கு உழக்கு வந்துழி ஒற்றும் உயிர்மெய்யுங் கெட்டு நெடுமுதல்குறுகியுங் குறுகாதுந் தனக்கேற்றபெற்றி முடிந் தவாறு காண்க. மூவ்யாழ் மூவ்யானை என யகரம் வந்துழி மூன்ற னுறுப்பு வருமொற்ருகாது வகரவொற்ருதலும் மூழக்கு மூழாக்கு என்னும் மரூஉமுடிவும் புறனடையாற் கொள்க. (ருசு)

கOகூ. நான்கன் மெய்யே லறவா கும்மே.

இதுவும் அது.

இ - ள். எண்முதலிய நான்கும் வருமிடத்து நான்கென்னும் எண்ணிடைநின்ற னகரவொற்று லகரமும் றகரமுமாய்த் திரியும் ஏற்குமிடத்து. எ - று.

வரலாறு;—நாலொன்று எடை உழக்கு அடி எனவும் வட்டி வட்டு யானை எனவம் உயிர்க்கணமும் இடைக்கணமும் வந்துழி

ஈற்றுயிர்மெய் கெட்டு மேல் நின்ற னகரவொற்று லகரவொற்றாய்த் திரிந்தும், நாற்பஃது கழஞ்சு கலம் கல் என வன்கணம் வந்துழி ஈற்றுயிர்மெய் கெட்டு மேல் நின்ற னகரவொற்று றகரவொற்றாய்த் திரிந்தும், நானூறு நான்முந்திரிகை நானாழி நான்மண்டை நான் ஞாண் நானூல் நான்மணி என மென்கணம் வந்துழி ஈற்றுயிர் மெய் கெட்டுந் தனக்கேற்றபெற்றி முடிந்தவாறு காண்க. (ருஎ)

கக௦. ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்.

இதுவும் அது.

இ - ள். எண்முதலிய வருமிடத்து ஐந்தென்னும் எண்ணிடைநின்ற நகரவொற்று வருமொற்றாயும் அதற்கினமாயுங் கெட்டும் முடியும் ஏற்குமிடத்து. எ - று.

வரலாறு;—ஐம்மூன்று ஐம்மஞ்சாடி ஐம்மண்டை ஐம்மணி ஐஞ்ஞாண் ஐந்நூறு ஐந்நாழி ஐந்நூல் என மென்கணம் வந்துழி ஈற்றுயிர்மெய்கெட்டு மேல்நின்ற நகரவொற்று வருமொற்றாய்த் திரிந்தும், ஐம்பஃது ஐங்கழஞ்சு ஐங்கலம் ஐங்கல் என வன்கணம் வந்துழி மேலைப் பொதுவிதியான் ஈற்றுயிர்மெய் கெட்டு மேல்நின்ற நகரவொற்று வருமொற்றிற்கு இனமாய்த்திரிந்தும், ஐயொன்று எடை ஆழாக்கு அம்பு என உயிர்க்கணம்வந்துழி ஒற்றும் உயிர் மெய்யுங்கெட்டும், ஐவட்டி ஐவ்வட்டி ஐவண்ணம் ஐவ்வண்ணம் ஐயாறு ஐய்யாறு என இடைக்கணம் வந்துழி ஒற்றும் உயிர்மெய் யுங்கெட்டும் உயிர்மெய்கெட்டு ஒற்று வருமொற்றாய்த்திரிந்துந் தனக்கு ஏற்றபெற்றி முடிந்தவாறுகாண்க. (ருஅ)

கசக. எட்ட னொற்றே ணகார மாகும்.

இதுவும் அது.

இ - ள். எண்முதலிய வருமிடத்து எட்டென்னும் எண்ணிடைநின்ற டகரவொற்று ணகரவொற்றாய்த் திரிந்துமுடியும் ஏற்குமிடத்து. எ - று.

வரலாறு;—எண்பஃது கோடி காணி கால் நூறு நூறாயிரம் நான்கு மூன்று முந்திரிகை முக்கால் ஒன்று இரண்டு ஐந்து ஆறு ஏழ் எட்டு ஒன்பது ஆயிரம் எனவும், கழஞ்சு சீரகம் தொடி பலம் மஞ்சாடி எடை எனவும், கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி அகல் ஆழாக்கு உழக்கு எனவும், கல் சுனை துடி பறை

ஞாண் நூல் மணி யாழ் வட்டு அசும் ஆகம் எனவும் நாற்கணமும் வந்துழி ஈற்றுயிர்மெய்கெட்டு மேனின்ற டகரவொற்று ணகர வொற்றாய்த் திரிந்து தனக்கு ஏற்றபெற்றி முடிந்தவாறு காண்க. ()

கசஉ. ஒன்பா னொடு பத்து நூறு மொன்றி
னென்றிய விரண்டு மூறு மாயிரமு
மென்று திரிய விறுதிய கெடுவழி
நின்ற னகர நிரலே ணளவா
யிரட்ட வொகரமிசைத் தகர மொற்றும்.

இஃது ஒன்பதென்னும் எண்முன்னர்ப் பத்தும் நூறும் வந்து புணர்வுழிப் படுஞ் செய்கைகூறுகின்றது.

இ - ள். ஒன்பதென்னும் எண்முன்னர்ப் பத்தும் நூறும் வந்து புணரின் அப்பத்தும் நூறும் நிரனிறைவகையானே ஊறென்றும் ஆயிரமென்றுந் திரிய, நிலைமொழியாய்நின்ற ஒன்பதன் இறுதிக் கண்ணவாகிய குற்றுகரமும் அதன்மேனின்ற அகரமுந் தம்மாற் பற்றப்பட்ட மெய்யோடுங் கெடுமிடத்து அவற்றின்மேனின்ற னகர வொற்று முறையே பத்தின் திரிபாகிய ஊறு வந்துபுணருமிடத்து ணகரவொற்றாய் இரட்டித்தும் நூறின் திரிபாகிய ஆயிரம் வந்துபு ணருமிடத்து ளகரவொற்றாய் இரட்டித்தும் நிற்ப, நிலைமொழி ஒகரவுயிர்மேல் ஒரு தகரம் ஒற்றாய்வந்து நிற்கும். எ - று.

வரலாறு;—தொண்ணூறு தொள்ளாயிரம் என வரும். வருமொழிச்செய்தியை முற்கூறியவதனானே ஒற்றிரட்டாது தொளாயிரம் எனவருதலுங் கொள்க.

இவ்வெழுத்து இவ்வெழுத்தாய்த் திரியுமென்னாது ஊறாகியும் ஆயிரமாகியுந் திரியுமென்றாரேனும் "ஒன்பா னொகரமிசைத் தகர மொற்று—முந்தை யொற்றே ணகார மிரட்டும்—பத்தென் கிளவி யாய்த பகரங்கெட—நிற்றல் வேண்டு மூகாரக் கிளவி—யொற்றிய தகரம் றகர மாகும்" எனவும், "ஒன்பான் முதனிலை முந்துகிளந் தற்றே—முந்தை யொற்றே ளகார மிரட்டு—நூறென் கிளவி நகார மெய்கெட—வூவா வாகு மியற்கைத் தென்ப—வாயிடை வருத லிகார ரகார—மீறுமெய் கெடுத்து மகர மொற்றும்" எனவும் ஆசிரியர்தொல்காப்பியனார் கூறியவாற்றானே அவற்றின் திரிபினை வேறுவேறு பகுத்துக்காண்க.

இவ்வாறே மேலும் விரிவஞ்சி யான் யாம் நீ நீர் என்பன என் எம் நின் நும்மாமெனக் கூறுப. "ஒன்பானொடு பத்து நூறு மொன்றின்—முன்னதி னேனைய முரணி யொவ்வொடு—தகர நிறீஇப்பஃ தகற்றி னவ்வை—நிரலே ணளவாய்த் திரிப்பது நெறியே" எனச் சூத்திரஞ்செய்யின் முரணுதலான் உளவாகிய நூறும் ஆயிரமும் வந்து புணர்ந்து தொண்ணூறுந் தொள்ளாயிரமுமென முடிந்துழி அவை ஒன்பதுபத்து ஒன்பதுநூறு எனப் பொருடராது தொள்ளாயிரம் ஒன்பதிநாயிரம் எனப் பொருடருமாதலின் வழுவாமென்க. (கூ0)

ககங. ஒன்றுமுத லெட்டீற் றெண்முனர்ப் பத்தி
னிடையொற் றேக லாய்த மாக
லெனவிரு விதியு மேற்கு மென்ப.

இது வருமொழி ஒன்றின் செய்தி கூறுகின்றது.

இ - ள். ஒன்றுமுதலாக எட்டீறாகக் கிடந்த எழுவகை எண்களின்முன்னர் வரும் பத்தென்னும் எண்ணிடைநின்ற தகரவொற்று ஒருகாற் கெடுதலும் ஒருகால் ஆய்தமாகத் திரிதலுமென்னும் இவ்விருசெய்கையும் பொருந்துமென்று சொல்லுவர் ஆசிரியர். எ - று.

வரலாறு;—ஒருபது ஒருபஃது இருபது இருபஃது முப்பது முப்பஃது நாற்பது நாற்பஃது ஐம்பது ஐம்பஃது அறுபது அறுபஃது எண்பது எண்பஃது எனவரும். (கூக)

ககச. ஒருப தொருபஃ தாதியென் றூதி
யொன்பது மவையூர் பிறவு மெய்திற்
கெடுதலுந் திரிதலு மில்லென மொழிப.

இது மேலனவற்றிற்கு எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது.

இ - ள். மேற்கூறியவாற்றான் முடிந்துநின்ற ஒருபது ஒருபஃது முதலிய இருகூற்று எழுதிறத்து எண்ணுப்பெயர்கள் ஒன்று முதல் ஒன்பது எண்ணும் அவையூர்ந்த பிறவும் வந்து புணரின் இடைநின்ற தகரவொற்று முன்னர்க்கூறியவாற்றாற் கெடுதலும் ஆய்தமாய்த் திரிதலுமின்றி இயல்பாய் முடியுமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

வரலாறு;—ஒருபத்தொன்று இருபத்தொன்று ஒருபத்தொரு கோடி கழஞ்சு கலம் காதம் என ஒன்பதின்காறும் ஒட்டுக. பிறவும் அன்ன. இவை நூற்றொருபத்தொன்று நூறாயிரத்தொருபத்தொன்று என வருமாறும் உணர்க. (௬௨)

௧௧௫. ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி
யெண்ணிறை யளவும் பிறவரிற் பத்தி
னீற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்று
மேற்ப தேற்கு மொன்பது மினைத்தே.

இது சில எண்ணுப்பெயரோடு சில எண்ணுதி நாற்பெயரும் வந்து புணருமாறு கூறுகின்றது.

இ-ள் ஒன்றுமுதலிய பத்தும் ஆயிரமுங் கோடியுமாகிய எண்ணுப்பெயரும் நிறைப்பெயரும் அளவுப்பெயரும் பொருட்பெயரும் வருமொழியாய்வந்து புணரிற் பத்தினது ஈற்றுயிர்மெய்யைக் கெடுத்து இன்னுதல் இற்றுதல் ஆண்டைக்கேற்பதொன்று வரும்; ஒன்பதன்முன் இவை வந்தாலும் இவ்விரண்டனுள் ஒன்று ஆண்டு வரும். எ-று.

ஒருபுடைச்சேறலென்னும் உத்தியான் ஒன்பது ஈறுகெடாது சாரியை பெறுதலே கொள்க. இரண்டுமென முடித்தலின் ஈண்டு ஏனையவே வருவிக்க. எண்ணுப்பெயர் வந்துழிப் பதினொன்று பதிற்றொன்று மூன்று நான்கு ஐந்து ஆறு ஏழ் எட்டு கோடியென ஈறு கெட்டு இன்னும் இற்றும் பெற்றும் பதினாயிரம் என ஈறுகெட்டு இன்பெற்றும் பதிற்றொன்பது பதிற்றுப்பத்து என ஈறுகெட்டு இற்றுப்பெற்றும், நிறைப்பெயர் வந்துழிப் பதின்கழஞ்சு பதிற்றுக் கழஞ்சு சீரகம் தொடி பலம் மஞ்சாடி என ஈறுகெட்டு இன்னும் இற்றும் பெற்றும் பதிற்றெடையென ஈறுகெட்டு இற்றுப்பெற்றும், அளவுப்பெயர் வந்துழிப் பதின்கலம் பதிற்றுக்கலம் சாடி தூதை பானை நாழி மண்டை வட்டி என ஈறுகெட்டு இன்னும் இற்றும் பெற்றும் பதிற்றுக்கலம் ஆழாக்கு உழக்கு என ஈறுகெட்டு இற்றுப் பெற்றும், பொருட்பெயர் வந்துழிப் பதின்றிங்கள் பதிற்றுத்திங்கள் மடங்கு என ஈறுகெட்டு இன்னும் இற்றும் பெற்றும் பதிற்றுவேலி யாண்டு முழம் அடுக்கு இதழ் என ஈறுகெட்டு இற்றுப்பெற்றுந் தனக்கேற்றபெற்றி முடிந்தவாறு காண்க. ஒருபதினாயிரம் ஒருபதின்கழஞ்சு ஒருபதிற்றுக்கலம் ஒருபதிற்றுவேலி என அடையடுத்துவருமாறுங் காண்க. ஒன்பதின்கோடி ஒன்பதிற்றுக்கோடி

கழஞ்சு துலாம் கலம் என ஈறுகெடாது இன்னும் இற்றும் பெற்றும், ஒன்பதினுயிரம் என இன்பெற்றும்,ஒன்பதிற்றென்று எடை அகல் உழக்கு தடக்கை வேலி யாண்டு எழுத்து என இற்றுப்பெற்றும், ஒன்பதுந் தனக்கேற்ற பெற்றி முடிந்தவாறு காண்க. ஏற்புழி என்பதனானே பத்தொன்பது கழஞ்சு சாடி இதழ் எனச் சாரியை பெறுது குற்றுகர ஈற்றுப் பொதுவிதியானே முடிதலுங்கொள்க. பிறவும் அன்ன. (சுரு)

ககசு. இரண்டு முன்வரிற் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட வொற்றுனவ் வாகு மென்ப.

இது பத்தின்முன்னர் இரண்டு வந்து புணர்வுழிப் படுஞ் செய்கை கூறுகின்றது.

இ - ள். இரண்டென்னும் எண் பத்தென்னும் எண்முன்னர் வந்து புணரின் இதன் ஈற்றுயிர்மெய் கெட மேல் நின்ற தகர வொற்று னகரவொற்றாய்த் திரிந்து முடியும். எ - று.

வரலாறு;—பன்னிரண்டு என வரும். (சுச)

ககஎ. ஒன்ப தொழித்தவெண் ணொன்பது மிரட்டின்
முன்னதின் முன்னல வோட வுயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகனெறி.

இஃது ஒன்றுமுதலிய பத்து எண்ணுள் எட்டு எண் இரட்டித்துழிப் படுஞ்செய்கை கூறுகின்றது.

இ - ள். ஒன்பதென்னும் எண் ஒன்றனையும் ஒழித்து நின்ற ஒன்றுமுதற் பத்தீருன எட்டெண்ணுந் தம்முன்னர்த் தாம்வந்து புணரின், நிலைமொழியின் முதலெழுத்து ஒன்று நிற்க, அல்லன வெல்லாங் கெட, உயிர்முதலான எண் வந்து புணரின் வகர வொற்றும் மெய்முதலான எண் வந்து புணரின் வந்த மெய்களும் இடையே மிக்குமுடிதல் வரலாற்றுமுறைமை. எ - று.

வரலாறு;—ஒவ்வொன்று இவ்விரண்டு மும்மூன்று நந்நான்கு எனவரும். பிறவும் அன்ன. நெறியென்ற மிகையானே, மூன்று நான்கு ஆறு என்பனவற்றிற்குக் குறுக்கமும், பத்துப்பத்து பத்து பத்து என்னும் விகற்பமும், நானுன்கு நன்னான்கு என்னுந் திரிபும், ஐயைந்து ஐவ்வைந்து என்னும் உறழ்ச்சியும், ஒரோவொன்று கழக் கழஞ்சு கலக்கலம் என்றற்றொடக்கத்து முடிவுங்கொள்க. எண்

பெயரோடு எண்முதலிய புணருமிடத்து, ஈண்டுக்கூறிய சிறப்பு விதியன்றித் தனிக்குறின்முன்னொற்றுயிர்வரினிரட்டலும் வருநத் திரிந்தபின்மாய்வும் உடம்படுமெய்பெறுதலும் முதலிய பொதுவிதி யும் ஏற்புழிக் கொணர்ந்து முடித்துக்கொள்க. ஒவ்வொன்று அவ் வாறு என்றாற்போல்வனவற்று வகரம் உடம்படுமெய்யன்மை இவ் விரண்டென்பதனான் அறிக.

நூற்றொன்று நூற்றுப்பத்து நூற்றுத்தொண்ணூறு நூற்றி தழ்த்தாமரை நூற்றுக்கான்மண்டபம் இருநூற்றொன்று இருநூற் றொருபது இருநூற்றுக்கலம் சாடி தூதை பானை கழஞ்சு தொடி என்றற்றொடக்கத்தனவெல்லாங் குற்றுகர ஈற்றுப் பொதுவிதி யானே முடித்துக்கொள்க. (சுரு)

ககஅ. மூன்ற னுருபினு மாற னுருபினும்
வல்லெழுத்து மிகுத லில்லென மொழிப.

இஃது உருபுயிரீற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கு கின்றது.

இ - ள். ஒடு ஓடு என்னும் மூன்றனுருபோடு தொடர்ந்த சொல்லின்முன்னும் அது ஆது என்னும் ஆறனுருபோடு தொடர்ந்த சொல்லின்முன்னும் அதிகாரவல்லெழுத்துப் பெறாது இயல்பாய் முடியுமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

வரலாறு;—சாத்தனொடுகொண்டான் சாத்தனோடுகொண் டான் சென்றான் தந்தான் போயினான் எனவும், சாத்தனதுகை சாத்தனாதுகை செவி தலை புறம் எனவும் வரும். (சுசு)

மூன்றாவது உயிரீற்றுப்புணரியல் முற்றிற்று.



## ச-வது மெய்யீற்றுப்புணரியல்.

கககூ. ணனவல் லினம்வரட் டறவும் பிறவரி
னியல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே.

என்பது சூத்திரம். இவ்வோத்து மெய்யீற்றுப்பதம் நின்று வருமொழி வன்கணத்தோடுஞ் சிறுபான்மை ஏனைக்கணங்களோ டும் புணருமாறு ஒருவாற்றாற் தொகுத்துணர்த்தினமையின் மெய் யீற்றுப்புணரியலென்னும் பெயர்த்து. மேல் உயிரீற்றுப்பதம் புண

ருமாறு உணர்த்தி இதனுள் மெய்யீற்றுப்பதம் புணருமாறு உணர்த்தினமையின் மேலோத்திேனாடு இயைபுடைத்தாயிற்று. இதனுள் இத்தலைச்சூத்திரம் ணகார னகார ஈறு புணருமாறு கூறுகின்றது.

இ - ள். ணகார னகார ஈறுகள் வல்லெழுத்துவந்தால் முறையே ணகாரம் டகாரமாகவும் னகாரம் றகாரமாகவுந் திரிந்தும், மென்கணமும் இடைக்கணமும் வந்தால் இயல்பாயும் முடியும் வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண்; அல்வழிப்புணர்ச்சிக்கண் முக்கணமும் வந்தாலும் இயல்பாய் முடியும். எ - று.

வரலாறு;—மட்குடம் பொற்குடம் சாடி தூதை பானை எனவும், ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வலிமை எனவும், மண்கடிது பொன்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது எனவும் முறையே காண்க. (க)

கஉ௦. குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.

இஃது அவற்றுள் ஒருசாரனவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ - ள். குற்றெழுத்தினைச் சாராது ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்த ணகார னகார ஈறுகள் வருமொழிமுதற்கண் நின்ற நகாரந் திரிந்த இடத்துப் பொருந்துங் கெடுதலை. எ - று.

வரலாறு;—பாண் பரண் பைம்பூண் மணிப்பூண் பைங்கண் பசுங்கண் நன்று எனவும் நன்மை எனவும், வான் வயான் வலியன் அலவன் கலுழன் செம்பொன் பசும்பொன் நன்று எனவும் நன்மை எனவும் வரும். தானீண்டான் நீண்டது யானீண்டனன் என்றாற் போல்வன "பொதுப்பெயருயர்திணை" என்னுஞ் சூத்திரத்து முறையலகூற்றானே முடியும். (உ)

கஉக. சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி
யியல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே.

இது ணகரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ - ள். சாதிபற்றியுந் திரள்பற்றியும் வரும் பெயர்களும் பரண்கவணென்னுந் தனிப்பெயர்களுமாகிய இவற்றின் இறுதி

ணகாரம் வன்கணம் வரிற் றிரியாது வேற்றுமைக்கண்ணும் இயல்பாய் முடியும். வரையறைப்பொருண்மை உணர்த்தாது ஓர் உணவை உணர்த்திநிற்கும் எண்ணென்னும் பெயரும் சாணென்னும் அளவுப்பெயரும் வன்கணம் வரின் இயல்பாகாது டகாரமாய்த் திரிந்து முடிதலும் பெறும் அல்வழிக்கண்ணும். எ - று.

வரலாறு;—பாண்குடி உமண்குடி சேரி தோட்டம் பாடி எனவும், அமண்குடி சேரி தோட்டம் பாடி எனவும், பரண்கால் கவண்கால் எனவும், எட்கடிது சிறிது தீது பெரிது எனவும், சாட்கோல் எனவும் முறையே காண்க. உம்மையான் எண்கடிது சாண்கோல் என இயல்பாதலே வலியுடைத்தென்க. பிறவென்ற மிகையானே கண்கடுமை அட்டேண்டுழனி என்றற் றொடக்கத்து இயல்பும், முரண்கடுமை முரட்கடுமை என்றற் றொடக்கத்து உறழ்வும், மண்ணங்கட்டி எனவும் ஆணமாக்கிளவி ஆணங்கோடு செதிள் தோல் பூ நார் இலை எனவுந் திரியாது அம்முப்பெறுதலும், விண்ணெனவரூஉங் காயப்பெயர் செய்யுளிடத்துத் தொழிற்சொல் வருங்காலத்து விண்வத்துக்கொட்கும் வண்ணத்தமரர் எனத் திரியாது அத்துப்பெற்றும் "விண்குத்துநீள்வரைவெற்பகளைபவோ" எனப் பெறாதும் வருவனவும், வெண்ணுக்கரை "கணைகுரல்கடுப்பப்பண்ணுப்பெயர்த்து" எண்ணுப்பேறு என உகரம்பெறுதலும், இன்னோரன்ன பிறவுங் கொள்க. ஆண்கை பெண்கை செவி தலை புறம் எனவும், கடிது சிறிது தீது பெரிது எனவும் இருவழியும் இயல்பாதல் "பொதுப்பெயருயர்திணைப்பெயர்களீற்றுமெய் வலிவரினியல்பாம்" என்பதனானும் மண்கை புண்கை என்றாற்போல்வன இரண்டாம்வேற்றுமைத் திரிபானும் முடியும். (௩)

கஉஉ. ணஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகா
னடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.

இது னகார ஈற்றுள் ஒன்றற்கு எய்தியதுவிலக்கலும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

இ - ள். னகார ஈற்றுச் சாதிப்பெயர் திரியாது இயல்பாதலும் அகரம் பெறுதலுமாகிய இருதிறனும் பொருந்தும் வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கண். எ - று.

வரலாறு;—எயின்குடி சேரி தோட்டம் பாடி எனவும், எயினக்கன்னி சிறுவன் தலைவன் பிள்ளை ஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு

வலிமை ஆட்சி எனவும் முறையே காண்க. சாதிப்பெயருங் குழூஉப்பெயரும் உயர்திணைப் பெயராகாது அஃறிணைப்பெயராய் நிற்றலின் ஈண்டு முடித்தார். (ச)

கஉரு. மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.

இது னகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ - ள். மீன் என்னுஞ்சொல் இறுதினகரம் றகரவொற்றோடு உறழ்ந்துமுடியும் வேற்றுமைக்கண் வல்லெழுத்துவரின். எ - று.

உ-ம். மீன்கண் மீற்கண் சினை தலை புறம் எனவரும். (ரு)

கஉசு. தேனென் கிளவி வல்லெழுத் தியையின்
மேனிலை யொத்தலு மீறுபோய் வலிமெலி
மிகுதலு மெலிவரி னிறுதியோ டுறழ்தலு
மிடைவரி னியல்பு மாம்பிற வுயிர்வரி
னொற்றுமிகு தகரமொடு நிற்றலு முரித்தே.

இது னகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

இ - ள். தேன் என்னுஞ்சொல் வல்லெழுத்து முதன்மொழி வருமொழியாய்வரின் மீனென்பதற்கு மேற்கூறிய திரிபுறழ்ச்சிநிலை ஒத்து முடிதலும் ஈற்றெழுத்துக் கெட்டு வல்லெழுத்து மிக்குமுடிதலும் மெல்லெழுத்து மிக்குமுடிதலும், மெல்லெழுத்து முதன்மொழிவரின் நிலைமொழியிறுதி னகரவொற்றோடு கெடுதலுங் கெடாமையுமாகி உறழ்ந்து முடிதலும், இடையெழுத்து முதன்மொழிவரின் இயல்பாதலும் பொருந்தும்; உயிர்முதன்மொழி வரிற் பிறிதுமொரு தகர ஒற்று உடன்மிகுந்த தகரத்தோடு நின்றுமுடிதலும் உரித்து. உம்மையாற் பிறசாரியைபெற்று முடிதலும் இயல்பாய் முடிதலும் உரித்து. எ - று.

தேன்குடம் தேற்குடம் சாடி தூதை பானை எனவும், தேக்குடம் தேங்குடம் சாடி தூதை பானை எனவும், தேன்ஞெரி தேஞெரி நுனி முரி எனவும், தேன் யாப்பு வலிமை எனவும், தேத்திறல் தேனினிறல் தேனிறல் அடை ஈ எனவும் முறையே காண்க.

பிற என்றதனானே ஒற்றுமிகு தகரமொடு நிற்புழி ஈறுகெடுதலும், தேஞெரி தேஞ்ஞெரி நுனி முரி என னகரங்கெட்டுத் தத்தம்

மெல்லெழுத்து மிக்கும் மிகாதும் உறழ்தலும், அலவன் கலுழன் வலியன் கண் செவி தலை புறம் எனவும் கான்கோழி கரை எனவும் திரியாமையும், வரிற்கொள்ளும் செல்லும் தரும் போம் என வினையெச்சத்திறுதி திரிதலும், "அதுமற்கொண்கன்றேரே" "காப்பும் பூண்டிசிற்கடையும்போகல்" என மன் சின் என்னும் அசைநிலையிடைச்சொற்களிறுதி திரிதலும், எகினங்கோடு செதிள் தோல் பூ என எகினமரப்பெயர் அம்முப்பெறுதலும், இன்னோரன்ன பிறவுங் கொள்க. வெள்ளாளன் என நின்றதனை அன்கெடுத்துப் பிரித்து ளகர ஒற்றினை ணகர ஒற்றாக்கி வெள்ளாண்குமரி பிள்ளை மாந்தர் வாழ்க்கை ஒழுக்கம் என முடிவதும் இன்னோரன்ன பிறவுஞ் "சில விகாரமாமுயர்திணை" என்பதனான் முடியும். தேக்கடிது தேங்கடிது என அல்வழிக்கண்ணும் இம்முடிபு எய்துமென்பாரும் உளர். "னஃகான்கிளைப்பெயர்" எனவும், "மீன்றவ்வொடுபொரூஉம்" எனவும் மேனின்ற அதிகாரத்தான் இம்முடிபுகள் வேற்றுமைக்கண்ண என்றே கோடும். (சு)

கஉடு. மரமல் லெகின்மொழி யியல்பு மகர
மருவ வலிமெலி மிகலு மாகும்.

இது னகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கலும் எய்தாதது எய்துவித்தலும் நுதலிற்று.

இ - ள். மரமல்லாத அன்னத்தை உணர்த்தி நின்ற எகின் என்னுஞ்சொல் வல்லெழுத்துவரின் வேற்றுமைக்கண் இயல்பாதலும் அகரம்பெற்று இருவழியும் வல்லெழுத்து மிக்குமுடிதலும் மெல்லெழுத்து மிக்குமுடிதலும் பொருந்தும். எ - று.

உ-ம். எகின்கால் சிறகு தலை புறம் எனவும், சேவல் பேடை எனவும், எகினக்கால் எகினங்கால் சிறகு தலை புறம் சேவல் பேடை எனவும், எகினக்கடிது எகினங்கடிது சிறிது தீது பெரிது சேவல் பேடை எனவும் முறையே காண்க. எகின்சேவல் எகின்பேடை என்பன ஆறும் வேற்றுமைத்தொகையும் இருபெயரொட்டுப் பண்புத்தொகையுமாம் என்றுணர்க. வருமொழி வரையாமையின் எகினஞாற்சி நீட்சி மாட்சி யாப்பு வலிமை அடைவு எனவும், ஞான்றது நீண்டது மாண்டது யாது வலிது அடைந்தது எனவும், இயல்புகணத்திற்கும் அகரப்பேறு கொள்க. (எ)

கஉசு. குயினென் கிளவி யியற்கை யாகும்.

இது னகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்குகின்றது.

இ - ள். குயின் என்னுஞ்சொல் வேற்றுமைக்கட் பொதுவி தியானெய்திய திரிபு எய்தாது இயல்பாய்முடியும். எ - று.

குயின்குழாம் செலவு தோற்றம் பறை எனவரும். குயின் மேகம்; வினையுமாம். ஊன் கடுமை சிறுமை தீமை பெருமை என வேற்றுமைக்கட் திரியாது இயல்பாதல் ஊ என்பது னகரச்சாரி யைபெற்று ஊன் என நின்றதாகலின். அஃது "இடையுரிவட சொலினியம்பியகொளாதவும்" எனபதனான் முடியும். (அ)

கஉஎ. மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
வேற்றுமை யாயிற் கன்னவ் வேற்று
வல்லெழுத்துப் பெறுதல் வரைநிலை யின்றே
பொருளொடு புணருங் காலை யான.

இது னகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ - ள். மின்னும் பின்னும் பன்னுங் கன்னுமாகிய இந் நான்கு சொல்லும் இருவழியும் னகர ஈற்றுத் தொழிற்பெயர்போல உகரம் பெற்று முடியும். வேற்றுமைப்பொருட்புணர்ச்சியாயின், அவற்றுட் கன்னென்னுஞ்சொல் அகரம் பெற்று வல்லெழுத்து மிக்கு முடிதலை நீக்கும் நிலைமை இன்று, பொருட்பெயரோடு புண ருங்காலத்து. எ - று.

உ-ம். மின்னுக்கடிது பின்னுக்கடிது பன்னுக்கடிது கன் னுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும், கன்னக்குடம் சாடி தூதை பானை என வும் வரும். "இயல்பினும்விதியினும்" என்பதனான் வல்லெழுத்துப் பெறுமேனும் "வல்லெழுத்துப் பெறுதல் வரைநிலை யின்று" என வேண்டா கூறியவதனாற் குணத்தோடு புணருங் காலத்துஞ் சிறு பான்மை கன்னக்கடுமை என அகரமும் வல்லெழுத்தும் பெற்று முடிதலும் கன்னங்கடுமை என அகரமும் மெல்லெழுத்தும் பெற்று முடிதலும் அல்வழிக்கண்ணும் கன்னங்கடிது என அகரமும் மெல் லெழுத்தும் பெற்று முடிதலும் கன்னஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும், ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், இருவ ழியும் மென்கணமும் இடைக்கணத்து வகரமும் வந்துழியும் அக

ரம்பெற்று முடிதலுங்கொள்க. பொருளொடுபுணருங்காலை அகரம் பெற்றுமுடியும் எனவே வேற்றுமைக்கட் கன் உகரம் பெற்றுமுடிதல் குணத்தொடுபுணருங்காலை என்பதூஉம் பெற்ரும். தொழினிலைக்கண் அன்றி வேறுபொருள் உணரநின்றவழியும் இம்முடிபெய்துமென்பார் "தொழிற்பெயரனைய" என்ருர். மின் மின்னுதற் தொழிலும் "மின்னுநிமிர்ந்தன்ன" என்புழி ஒரு பொருளும் உணர்த்தும். பிறவும் அன்ன. "பொன்னகர்வரைப்பிற்கன்னந்தூக்கி" என்பது மகரவீற்றுப்பொருட்பெயர். (கூ)

கஉஅ. அழனே யிறுதி கெடும்வேற் றுமைக்கே.

இது னகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வருக்கின்றது.

இ - ள். அழன் என்னுஞ் சொல் ஈற்றுனகரங் கெட்டு முடியும் வேற்றுமைக்கண். எ - று.

உ-ம். அழக்குடம் சாடி தூதை பானை எனவரும். அழக்குடம் பிணக்குடம்.

தன் என் என்பவற்று இறுதி னகரந் தன்பகை தற்பகை என்பகை எற்பகை என உறழ்தலும், நீயென்னும் ஈகார ஈற்றுப் பெயர் நின் என நின்றவழி நின்பகை என இயல்பாதலும், "பொ‹துப்பெயருயர்திணைப்பெயர்களீற்றுமெய்" என்னுஞ் சூத்திரத்தான் முடியும். (சுO)

கஉகூ. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாய்த் திரிபவு மாம்பிற.

இது முறையானே மகர ஈறு நாற்கணத்தோடும் இருவழியும் புணருமாறு கூறுகின்றது.

இ - ள். மகர ஈற்று மொழிகள் நாற்கணமும்வர இருவழியும் இறுதி மகரவொற்றுக் கெட்டு உயிரீறுபோல வல்லெழுத்துவரின் அவை மிக்கும், ஏனை இரண்டினமும் வர அவை இயல்பாயும், உயிர்வரின் உடம்படுமெய்பெற்றும் முடிவனவும், வல்லெழுத்து வரின் ஈறுகெடாது அவற்றிற்கு இனமான மெல்லெழுத்துக்களாய்த் திரிந்துமுடிவனவும் உளவாம் இருவழியும். எ - று.

வருமொழிவரையாமையின் நாற்கணமும்வரக்கேடுபெற்ரும்.

உ-ம். மரக்கோடு செதிள் தோல் பூ ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை ஆட்டம் எனவும், வட்டக்கல் சுனை தாழி பாறை ஞான்றது நீண்டது மாண்டது வலை அடி ஆடி எனவும் இருவழியும் நாற்கணமும் வர ஈறுகெட்டு உயிரீறு போன்று முடிந்தன. முண்டகக்கோதை எனவும், கலக்கொள் சுக்கு தோரை பயறு எனவும், வேழக்கரும்பு நீலக்கண் வட்டத்தடுக்கு சதுரத்தண்டு ஆய்தப்புள்ளி மரஞான்றது மரநீண்டது நிலநீர் அகரமுதல பவழ வாய் ஆய்தவுலக்கை எனவும் வருவனவும் அன்ன. இல்லங்கோடு செதிள் தோல் எனவும், மரங்குறிது சிறிது தீது எனவும், இருவழியும் வல்லெழுத்துவரத்திரிந்து முடிந்தன. பிற என்ற மிகையானே இல்லம்பூ "புலம்புக்கனனேபுல்லணற்காளை" "கலம்பெறு கண்ணுளரொக்கற்றலைவ" எனவும், மரம்பெரிது "இலம்படுபுலவரேற்றகைநிறைய" "இலம்பாடுநாணுத்தரும்" எனவும் இருவழியும் பகரம் வந்துழிக் கேடுந்திரிபுமின்றி இயல்பாதலுங்கொள்க. (கக)

கஙo. வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வு
மல்வழி யுயிரிடை வரினியல் பும்முள.

இது வேற்றுமைக்கண் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலும் அல்வழிக்கண் எய்தியது விலக்கலும் நுதலிற்று.

இ-ள். வேற்றுமைக்கண் வல்லெழுத்துவரின் ஈறுகெட்டு வல்லெழுத்து மிக்கும் மெல்லெழுத்துமிக்கும் உறழ்ந்தும் அல்வழிக்கண் உயிர்க்கணமும் இடைக்கணமும் வரின் ஈறுகெடாது இயல்பாயும்முடியும் மகர ஈற்று மொழிகளுஞ் சில உளவாம். எ-று.

வரலாறு;—குளக்கரை குளங்கரை என வேற்றுமைக்கண் ஈறுகெட்டு உறழ்ந்தது. இதுபோல ஒத்தவுறழ்ச்சியதன்றிக் குளச்சேறு குளஞ்சேறு தாது எனவரும் உறழ்ச்சியுஞ் சண்பகக்கோடு சண்பகங்கோடு எனச் செய்யுட்கண்வரும் உறழ்ச்சியுங் கொள்க. மரமடைந்தது ஆடிற்று யாது வலிது என இஃது உயிர்க்கணமும் இடைக்கணமும் வர அல்வழிக்கண் ஈறுகெடாது இயல்பாய் முடிந்தது. (கஉ)

கஙக. அகமுனர்ச் செவிகை வரினிடை யனகெடும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ-ள். அகமென்னுஞ் சொல்முன்னர்ச் செவி கை என்னுஞ் சொற்கள் வரின் நிலைமொழி இடை நின்ற உயிரும்மெய்யுங் கெட்டு முன்போல வன்மைக்கு இனமாய்த் திரிந்து முடியும். எ-று.

உ-ம். "அஞ்செவிநிறைய மந்திரமோதி" எனவும், "அங்கை யுணெல்லியதன்பயன்" எனவும் வரும். செவி கை என்ற முறை யலகூற்ருனே அகஞ்செவி அகங்கை எனக் கெடாமையுங்கொள்க. இவை பண்புத்தொகை. (கரு)

கரு உ. ஈமுங், கம்மு முருமுந் தொழிற்பெயர் மானு
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

இது மகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ - ள். ஈமுங் கம்மும் உருமும் ஆகிய மூன்று பொருட்பெயரும் முற்கூறிய தொழிற்பெயர்போல உகரம்பெற்று வன்மை மிக்கும் மென்மையும் வகரமும் வர இயல்பாயும் இருவழியும் முடியும். அவற்றுள் ஈமுங் கம்மும் வேற்றுமைக்கண் உகரம் பெறுதலேயன்றி அகரமும்பெற்று அவ்வாறு முடியும். எ - று.

உ-ம். ஈமுக்கடிது கம்முக்கடிது உருமுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும், ஈமக்குடம் கம்மக்குடம் சாடி தூதை பானை ஞாற்சி நெருப்பு மாட்சி விறகு எனவும் முறையே காண்க. பெரும்பாலும் உகரப் பேறு குணவேற்றுமைக்கண்ணும் அகரப்பேறு பொருட்புணர்ச்சிக் கண்ணுங்கொள்க. ஈம் சுடுகாடு. கம் தொழில். உரும் இடி.

அம்மு தம்மு நம்மு எனச் சாரியையிடைச்சொலுகரம் பெற்று முடிதலும், மரவடி குளவாம்பல் என முடிவது வருமொழி முதற்கண் நின்ற அகரமும் ஆகாரமும் நிலைமொழியீற்று மகரமுங் கெட்டு ரகாரளகாரங்களின்மேனின்ற அகரம் ஆகாரமாய் மராடி குளாம்பல் என முடிதலுங் ககரவகரங்கள் வந்துழியும் ஈறுகெட்டு ஈற்றுமிசை அகரம் நீண்டு கோணுகோணம் கோணுவட்டம் என முடிதலும், வருமொழி வல்லெழுத்து மிகாமையும், மேலைச் சூத்திரத்துப் பிற என்ற மிகையானே முடித்துக் கொள்க. இவற்றிற்கு உள்ளென்னும் பொருள்பட வந்த கண்ணெனுருபு விரிக்க. நுஞ்ஞாண் தஞ்ஞாண் எஞ்ஞாண் நஞ்ஞாண் நூல் என நும் தம் எம் நம் என்பனவற்றிறுதி வருமொழி ஞநக்களாய்த் திரிதலைப் "பொதுப் பெயருயர்திணைப் பெயர்களீற்றுமெய்" என்னுஞ் சூத்திரத்து முறையலகூற்ருனே முடித்துக்கொள்க. (கச)

கஙங. யரழ முன்னர்க் கசதப வல்வழி
யியல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல்.

இது யகர ரகர ழகர ஈறுகள் வன்கணத்தோடு புணருமாறு கூறுகின்றது.

இ - ள். யகர ரகர ழகர ஈற்றுச் சொற்கள்முன் வருமொழி முதற்கணின்ற கசதபக்கள் அல்வழிக்கண் இயல்பாயும் மிக்கும் முடிதலும் வேற்றுமைக்கண் மேல்வந்த வல்லெழுத்து மிக்குந் தன் இனமெல்லெழுத்தோடு உறழ்ந்தும் முடிதலும் விதியாம். எ - று.

வரலாறு;—நாய் நீர் யாழ் குறிது சிறிது தீது பெரிது எனவும், மெய்க்கடவுள் பொய்ச்சொல் மெய்த்தெய்வம் எய்ப்பன்றி பார்க்கன்னி தார்ச்சேனை சூர்த்தெய்வம் கார்ப்பருவம் தாழ்க்கோல் கூழ்ச்சோறு வீழ்த்தூணம் பூழ்ப்புள் எனவும் அல்வழிக்கண் முறையே இயல்பாயும் மிக்கும் முடிந்தன. தகர்க்குட்டி புகர்ப்போத்து என்றாற்போல்வன பண்புத்தொகை கருதின் அவையுங் கொள்க. நாய்க்கால் செவி தலை புறம் தேர்க்கால் செலவு தலை புறம் பூழ்க்கால் சிறகு தலை புறம் எனவும், வேய்க்குறை வேய்ங்குறை வேர்க்குறை வேர்ங்குறை வீழ்க்குறை வீழ்ங்குறை செய்கை தலை புறம் எனவும் வேற்றுமைக்கண் முறையே மிக்கும் உறழ்ந்தும் முடிந்தன. பாழ்க்கிணறு பாழ்ங்கிணறு சேரி தோட்டம் பாடி இதுவும் அது. பாழினுட்கிணறு என விரியும். மேலென்ற மிகையானே "வாய்புகுவதனினுங்கால்பெரிதுகடுக்கும்" "தூங்குதோற்றுதியவள் ளுகிர்தாவின்" என வேற்றுமைக்கண் இயல்பாதலும் வேய்கடிது வேய்க்கடிது வேர்குறிது வேர்க்குறிது வீழ்குறிது வீழ்க்குறிது சிறிது தீது பெரிது என அல்வழிக்கண் உறழ்தலும் ஆர்ங்கோடு வெதிர்ங்கோடு சார்ங்கோடு பீர்ங்கொடி செதிள் தோல் பூ என வேற்றுமைக்கண் மெல்லெழுத்து மிகுதலும் "ஆரங்கண்ணியடு போர்ச்சோழர்" என ஆர் அம்முப்பெறுதலும் "மாரிப்பீரத்தலர் சிலகொண்டு" எனவும் பீரங்கொடி எனவும் பீர் அத்துப் பெறுதலும் அம்முப் பெறுதலுந் துவரங்கோடு எனத் துவர் அம்முப்பெறுதலுஞ் சார்க்காழ் எனச் சார் காழொடு புணர்வுழி வல்லெழுத்து மிகுதலுங் குமிழ்ங்கோடு குமிழங்கோடு மகிழ்ங்கோடு மகிழங்கோடு என ழவ்வீற்று மரப்பெயர் மெல்லெழுத்தும் அம்மும் பெற்றுறழ்தலுந் தாழப்பாவை என அல்வழிக்கண் அகரம் பெறுதலும் இன்

னோரன்ன பிறவுங் கொள்க. இன்னும் அதனானே யகர ஈறு யக ரத்தின் முன்னர் வேயாது வேயாப்பு என இருவழியுங் கெடுத லுங் கொள்க. (கரு)

கருச. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். தமிழ் என்னுஞ் சொல் வேற்றுமைக்கண் வல்லெ ழுத்து மிகுதலேயன்றி அகரமும் பெற்று முடியும்; தாழ் என்னுஞ் சொல்லுங் கோல் என்னுஞ் சொல் வந்து புணரிற் தமிழ் என்னுஞ் சொல்போல வேற்றுமைக்கண் வல்லெழுத்து மிகுதலேயன்றி அக ரமும் பெற்று முடியும். எ - று.

உ-ம். தமிழக்கூத்து சேரி தோட்டம் பள்ளி நாடு வரை அரசு எனவும், தாழக்கோல் எனவும் முறையே காண்க. உம்மையாற் தமிழ்க்கூத்து தாழ்க்கோல் என அகரம்பெறாது வல்லெழுத்து மிகு தலே வலியுடைத்து. இவை தமிழையுடைய கூத்து தாழைத்தி றக்குங்கோல் என விரியும். (கசு)

கருரு. கீழின்முன் வன்மை விகற்பமு மாகும்.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ - ள். கீழ் என்னுஞ் சொல்முன்னர் வல்லெழுத்து ஒரு கால் மிக்கும் ஒருகால் மிகாதும் உறழ்ந்து முடியும். எ - று.

அதிகாரத்தான் இம்முடிபு வேற்றுமைக்கண்ணதெனக் கொள்க.

உ-ம். கீழ்க்குளம் கீழ்குளம் சேரி தோட்டம் பாடி எனவரும்.

கருசு. ஏழென் கிளவி யாறிய னிலையு
முகரம் வருத லாவயி னான.

இஃது ஏழ் என்னும் எண்ணுப்பெயர் எண்முதலிய நாற்பெய ரோடு புணருமாறு கூறுகின்றது.

இ - ள். ஏழ் என்னும் எண்ணுப்பெயர் எண்முதலியவற் றோடு புணர்வுழி ஆறு என்னும் எண்ணுப்பெயர்போல ஏற்புழி

நெடுமுதல் குறுகும் இயல்பின்கண் நிலைபெற்றுமுடியும். அவ்வழி ஏற்புழி உகரம் வந்து புணர்தலுமாம். எ - று.

**வ**ரலாறு;—எழுமூன்று கழஞ்சு கலம் கடல் என நெடுமுதல் குறுகி உகரம்பெற்றும் எழாயிரம் ஏழாயிரம் என உகரம்பெறாது நெடுமுதல் குறுகியுங் குறுகாதும் ஏழொன்று ஏழ்தாமரை ஏழ்நூறாயிரம் ஏழ்வெள்ளம் ஏழாம்பல் ஏழ்கல் என இயல்பாயுந் தனக்கு ஏற்றபெற்றி முடிந்தவாறு காண்க. (கஅ)

கநஎ. லளவேற் றுமையிற் றடவு மல்வழி
யவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி
மேவி னணவு மிடைவரி னியல்பு
மாகு மிருவழி யானு மென்ப.

இது லகார ளகார ஈறுகள் இருவழியும் முக்கணத்தோடும் புணருமாறு கூறுகின்றது.

இ - ள். லகார ளகார ஈறுகள் வன்கணம் வரின் வேற்றுமைக்கண் முறையே றகார டகாரங்களாய்த் திரிதலும் அல்வழிக்கட் டந்திரிபு வல்லெழுத்திேனாடு உறழ்தலும் பொருந்தும்; மெல்லெழுத்து வந்து புணரின் முறையே னகார ணகாரங்களாய்த் திரிதலும் இடையெழுத்து வரின் இயல்பாதலும் பொருந்தும் இருவழிக்கண்ணும் என்று கூறுவர் ஆசிரியர். எ - று.

உ-ம். கற்குறை முட்குறை சிறை தலை புறம் எனவும், கல்குறிது கற்குறிது முள்கடிது முட்கடிது சிறிது தீது பெரிது எனவும், கன்ஞெரி முண்ஞெரி நுனி முரி எனவும், கன்ஞெரிந்தது முண்ஞெரிந்தது நீண்டது மாண்டது எனவும், கல்யாப்பு முள்யாப்பு வலிமை எனவும், கல்யாது முள்யாது வலிது எனவும் முறையே காண்க. ஏற்புழிக் கோடலான் கற்றீது முட்டீது எனக் குறியதன் இறுதியும் பெயர்ச்சொற் றொகுமாறு "பேசுவெஞ்சொற்றீதென் றேவிடு" புழுங்கற்றேரை எனத் தொடர்மொழி இறுதியும் அல்வழிக்கண்ணுந் தகரம் வருவழி உறழாது திரிதலே கொள்க; லகார ளகாரங்களோடு தகரம் மயங்குதல் ஏலாமையின். (கக)

கநஅ. குறில்வழி லளத்தவ் வணையி னாய்த
மாகவும் பெறூஉ மல்வழி யானே.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். குற்றெழுத்தின்பின் நின்ற லகார ளகாரங்கள் தகர முதன்மொழி வந்து புணரின் றகர டகரங்களாய்த் திரிதலேயன்றி ஆய்தமாய்த் திரியவும் பெறும் அல்வழிக்கண். எ - று.

உ-ம். கற்றீது கஃறீது முட்டீது முஃடீது எனவரும். (உ௦)

கஙக. குறில்செறி யாலள வல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரி
னியல்புந் திரிவு மாவன வுளபிற.

இஃது எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ - ள். குற்றெழுத்தினைச் சாராது ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்த லகார ளகாரங்கள் அல்வழிக்கண் வருமொழித் தகரந் திரிந்தபின்னர்க் கெடுதலும் இருவழியும் வருமொழி நகரந் திரிந்தபின்னர்க் கெடுதலும் வல்லெழுத்து வரின் அல்வழிக்கண் உறழாது இயல்பாதலுந் திரிதலும் வேற்றுமைக்கட் திரியாது இயல்பாதலும் பொருந்துவனவுள. எ - று.

உ-ம். வேறீது விரறீது ஆரறீது கருங்கொறீது எனவும், வாடீது தேடீது பொருடீது நெஞ்சுடீது எனவும்,வேனன்று குரனன்று குழனன்று செங்கனன்று பைம்புனனன்று எனவும், வாணன்று நாணன்று பொருணன்று நெஞ்சுணன்று எனவும், நன்மை எனவும், பால்கடிது தோள்கடிது சிறிது தீது பெரிது எனவும், புழுங்கற்கறி சோறு பயறு அழுங்கற்காய் சோறு போர் சழுங்கற்கூரை ஆரற்சுவர் புழற்காலாம்பல் புலிவிற்கெண்டை வந்தாற்கொள்ளும் வந்தக்காற்கொள்ளும் செல்லும் போம் எனவும், "ஏனல்காவலிவளுமல்லள்" "ஏனல்காவலாயின்ளெனவே" "அணில்வரிக்கொடுங்காய்—வாள்போழ்ந்தட்டகழன்மறவர்" "செல்வுழிச்செல்கெனவாள்போழ்ந்தடக்கலுமுய்ந்தனர்மாதோ" எனவும் முறையே காண்க. ளகரம் அல்வழிக்கண் உறழாது திரிந்துமுடிதல் வந்துழிக் காண்க. பிறவென்ற மிகையானே கல்குறுமை கற்குறுமை முள்குறுமை முட்குறுமை கொள்கடுமை கொட்கடுமை வாள்கடுமை வாட்கடுமை எனக் குணவேற்றுமைக்கண் உறழ்தலும், வேறீது வேற்றீது வாடீது வாட்டீது என நெடியதனிறுதி அல்வழிக்கட் கெட்டுந் திரிந்தும் உறழ்தலும், விழன்காடு சேறு தாள் புறம் என லகாரம் வேற்றுமைக்கண் றகாரமாகாது னகாரமாய்த் திரிதலும், நூற்கடல் நூல்சில என அல்வழிக்கண் உறழாது ஓரிடத்துத் திரிதலும்

ஓரிடத்துத் திரியாமையும், முன்றிலவாழ்வு முன்றிலயரசு ஒருநாளைக்குழவி ஒருதிங்களைக்குழவி என ளகார ஈறு ஐகாரம் பெறுதலும், பூலங்கோடு உதளங்கோடு எனவும் வெயிலத்துக்கொண்டான் வெயிலிற்கொண்டான் இருளத்துக்கொண்டான் இருளிற்கொண்டான் எனவும் முறையே வேற்றுமைக்கட் திரியாது அம்முப்பெறுதலும் அத்துப்பெறுதலும் இன்பெறுதலும், இன்னோரன்ன பிறவுங் கொள்க. மக்கட்கை செவி தலை புறம் எனப் பெரும்பான்மை மக்கள் உடம்பு உயிர்நீங்கிக் கிடந்த காலத்தும் மக்கட்பண்பு எனச் சிறுபான்மை அங்ஙனமல்லாத காலத்துந் திரிதல் "சிலவிகாரமாமுயர்திணை" என்பதனான் முடியும். (உக)

**கச௦. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லு மல்லது கிளப்பினும் வேற்றுமை யியல.**

இதுவுமது.

இ - ள். நெல் செல் கொல் சொல் என்னும் இந்நான்குசொல்லும் அல்வழியைச் சொல்லுமிடத்துந் தாம் வேற்றுமை முடிபின் இயல்பினவாய் லகாரம் றகாரமாய்த் திரிந்து முடியும். எ - று.

உம்மை சிறப்பு.

உ-ம். நெற்காய்த்தது செற்கடிது கொற்கடிது சொற்கடிது சிறிது தீது பெரிது எனவரும். (உஉ)

**கசக. வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும் பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.**

இதுவுமது.

இ - ள். வல் என்னுஞ் சொல் இருவழியுந் தொழிற்பெயர் இயல்பிற்றாய் உகரம் பெற்று முடியும். பலகை என்னுஞ் சொல்லும் நாய் என்னுஞ் சொல்லும் வருமொழியாய் வரினும் உம்மையாற் பிறசொற்கள் வரினும் வேற்றுமைக்கண் அகரமும் பெற்று முடியும். உம்மையான் உகரமும் பெற்று முடியும். எ - று.

உ-ம். வல்லுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும், வல்லப்பலகை வல்லநாய் எனவும், வல்லக்கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும், வல்லுப்பலகை வல்லுநாய் எனவும் முறையே காண்க. (உரு)

கசஉ. இல்லெ னின்மைச் சொற்கை யடைய
வன்மை விகற்பமு மாகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும்.

இது லகார ஈற்றுள் ஒன்றற்கு எய்தாதது எய்துவித்தலும் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும் நுதலிற்று.

இ - ள். இல் என்று சொல்லப்படும் ஒருபொருளினது இல்லாமையை உணர்த்தி நிற்கும் லகர ஈற்று வினைக்குறிப்புமுற்றுச் சொற்கு ஐகாரம் இறுதிவர வல்லொற்று ஒருகால் மிக்கும் ஒருகால் மிகாதும் உறழ்ந்து முடிதலும் ஆகாரம் இறுதிவர அதனோடு வல்லொற்று மிக்குமுடிதலும் அவ்விருதிறனுமின்றி இயல்பாய் முடிதலும் பொருந்தும். எ - று.

உரையுளே உணர்த்தி நிற்கும் இல் என்னும் லகர ஈற்று இடப்பெயரின் நீக்குதற்கு 'இல்லென்சொல்' என்றொழியாது 'இல்லெ னின்மைச்சொல்' என்றும் ஒருபொருளினது இல்லாமையை உணர்த்தி நிற்கும் இல்லை என்னும் ஐகார ஈற்று வினைக்குறிப்புமுற்றுச்சொல்லின் நீக்குதற்கு 'இன்மைச்சொல்' என்றொழியாது 'இல்லெனின்மைச்சொல்' என்றுங் கூறினார்.

**வ**ரலாறு;—இல்லைக்கல் இல்லைகல் இல்லாக்கல் இல்கல் சுனை துடி பறை என முறையேகாண்க. விதியுயிரீறும் ஐகார ஈற்றுமுன் உறழ்ந்தும் ஆகார ஈற்றுமுன் மிக்கும் முடியுமேனும் நிலைமொழிச் செய்தி கூறுவார் விளங்குதற் பொருட்டு வருமொழிச் செய்தியும் உடன்கூறினார். இயல்புயிரீறும் விதியுயிரீறும் எழுத்தொப்புமையான் ஒன்றுபோலத் தோன்றி ஒருமுடிபு எய்திற்றேனும், ஓசை வேறுபாட்டான் வேறுபட நிற்பதொன்றாகலின் இல்லைக்கல் இல்லைகல் இல்லாக்கல் எனவரும். இயல்புயிரீற்று முடிபும் இவ்வாறு வரும் விதியுயிரீற்று முடிபும் ஓசைவேறுபாட்டான் வேறுபடுமாறு இயல்புயிரீற்று முடிபிற்கு ஒலி ஊன்றாது ஒருதிரண்மையாக ஓசை ஒற்றுமைப்படச் சொல்லுதலும் விதியுயிரீற்று முடிபிற்கு ஒலி ஊன்றி ஓசை இடையறவு படச் சொல்லுதலும் என்று உணர்க. இன்னும் இல்கல் என்னும் முற்றுச்சொன்முடிவும் அவ்வாறு வரும் பண்புத்தொகை முடிவும் இவ்வாறே வேறுபடுத்து உணர்க. இங்ஙனம் முடித்தல் ஆசிரியர் தொல்காப்பியனாருக்குங் கருத்தென்பது "இல்லென் கிளவி" என்னுஞ் சூத்திரத்து உரையாசிரியர் உரையான் உணர்க. இனி இல் என்பதன் முடிபாக இங்ஙனம் புணர்த்த சொல்லை

யன்றி இல்லை என ஐகார ஈறாய் நிற்பதோர்சொல் இன்றெனவும் இல்குணம் இல்லாக்கொற்றன் என்றாற்போலும் இல் என்பதன் முடிபாகிய இவற்றை இல் என்னும் வினைக்குறிப்பு முதனிலை அடியாகத் தோன்றிய பெயரெச்சமறை தொக்கும் விரிந்தும் நின்றன என்றும் உரைகூறுவாரும் உளர். அவர்க்கு அது கருத்தன்மை "முன்னிலை வியங்கோள்" என்னுஞ் சூத்திரத்துள் யானில்லை யானு நீயுமில்லை என்றாற்போல வருமொழியோடு புணராமல் அவர் சொல் லோத்தினுட் காட்டிய உதாரணங்களே இல் என்பதன் முடிபன்றி இல்லை என இயல்பாகவே நிற்கும் ஐகார ஈற்றுச் சொல்லும் ஒன்று உளது என்பதற்குச் சான்றாகலானும், இன்மை செப்பல் என்ப தற்கு இல்லை என்னாது இன்மை செப்பல் என்பதனால் இல்லை என் பதும் இல் என்பதும் என இரண்டாயிற்றென்று உரையாசிரியர் சேனாவரையரை உள்ளிட்ட தொல்லாசிரியரெல்லாம் உரைகூறிய வாற்றானும், "அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்—பெருக்கத் திற் றீர்ந்தாரு மில்" என்றாற்போலச் சான்றோர் செய்யுட்கண் அவ் விருசொல்லும் பயின்று வருதலானும், பெயரெச்சமறை தொக்கும் விரிந்தும் நின்றதேல் அவற்றிற்கு இம்முடிபு ஈண்டுக்கூறல் வேண்டா மையானும் அறிக. அன்றியும் அன்மைமுதலியவற்றையும் இவ்வாறு புணர்க்கவேண்டுதலானும் அவர்க்கு அது கருத்தன்றென உணர்க.()

கசா. புள்ளும் வள்ளுந் தொழிற்பெயரு மானும்.

இஃது எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். புள் என்னும் பெயர்ச்சொல்லும் வள் என்னும் பெயர்ச்சொல்லும் இருவழிக்கண்ணும் ளகர ஈற்றுத் தொழிற்பெயரைப்போல, வன்கணமும் மென்கணமும் இடைக்கணத்து வகரமும் வர, உகரம் பெற்றும் முடியும். எ - று.

வரலாறு;—புள்ளுக்கடிது வள்ளுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும் வரும். புள்கடிது புட்கடிது வள்கடிது வட்கடிது எனவும், புட்கடுமை வட்கடுமை எனவும், புண்ஞான்றது வண்ஞான்றது எனவும், புண் ஞாற்சி வண்ஞாற்சி எனவும் உம்மையாற் பொதுவிதிபெறுத லுங் கொள்க. (உ௫)

கசச. சுட்டு வகரமு மினமுற முறையே
யாய்தமு மென்மையு மியல்புமா மல்வழி.

இது வகர ஈறு அல்வழிக்கட் புணருமாறு கூறுகின்றது.

இ-ள். சுட்டெழுத்தினை முதலாகவுடைய வகர ஈற்றுப்பெயர்மூன்றும் மூவினமும் வந்து புணர முறையானே ஈற்றுவகரம் ஆய்தமும் வந்த மெல்லெழுத்தும் இயல்புமாம் அல்வழிக்கண். எ-று.

உ-ம். அஃகடிய இஃகடிய உஃகடிய சிறிய தீய பெரிய எனவும், அஞ்ஞாண் இஞ்ஞாண் உஞ்ஞாண் நூல் மணி எனவும், அவ்யாழ் இவ்யாழ் உவ்யாழ் வட்டு எனவும் முறையேகாண்க. இவ்வழக்கு இக்காலத்து அரிய. (உசு)

கசரு. தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.

இது வகர ஈற்று உரிச்சொலொன்று இருவழியும் புணருமாறு கூறுகின்றது.

இ-ள். தெவ்வென்னுஞ் சொல்லீற்று வகரந் தொழிற்பெயரின் இயல்பிற்றாய் வன்கணமும் மென்கணமும் இடைக்கணத்து வகரமும் வர இருவழியும் உகரம்பெற்று முடியும்; மென்கணத்து மகரம் வரின் ஈற்று வகரம் மகரமுமாம். எ-று.

உ-ம். தெவ்வுக்கடிது சிறிது தீது பெரிது ஞான்றது நீண்டது மாண்டது வலிது எனவும், கடுமை சிறுமை தீமை பெருமை ஞாற்சி நீட்சி மாட்சி வலிமை எனவும், தெம்மாண்டது தெம்மாட்சி எனவும் முறையே காண்க. உம்மையான் உகரப்பேறே வலியுடைத்து. உரையிற்கோடலாற் தெம்முனை தெம்மன்னர் என்புழி மகரவொற்றாயே நிற்றல்கொள்க. (உஎ)

கசசு. உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.

இஃது இன்னுமொருவாற்றான் உயிரும் ஒற்றுமாகிய இருதிறத்து ஈற்று வேற்றுமைப்பொருட்புணர்ச்சியை உருபுபுணர்ச்சியோடு மாட்டெறிந்து உணர்த்துகின்றது.

இ-ள். மேல் உருபுபுணர்ச்சிக்கண் முடியும் முடிபெல்லாம் ஈண்டு அவ்வுருபின் பொருளாகிய வேற்றுமைப்புணர்ச்சிக்கண்ணும் ஒத்து முடியும், எ-று.

மேல் உருபுபுணர்ச்சிக்கண் "எல்லா வீற்றுஞ் சொல்லுங் காலை—வேற்றுமை யுருபிற் கின்னே சாரியை" என்றார் ஈண்டும் அவ்வாறே விளவின்கோடு மூங்காவின்கால் கிளியின்கால் தீயின்க

டுமை எருவின்குறுமை கொண்மூவின்குழாம் சேவின்கால் தினையின்கதிர் சோவின்புறம் கௌவின்கடுமை எனவும், உரிஞின்குறை வெண்ணின்கரை பொருநின்குறை திருமின்குறை பொன்னின்குடம் வேயின்புறம் வேரின்புறம் கல்லின்கடுமை தெவ்வின்கடுமை யாழின்கோடு முள்ளின்கூர்மை எனவும், நாகின்கால் வரகின்கதிர் எனவும் இன்சாரியை பெற்றும்; உருபுபுணர்ச்சிக்கண் "பல்லவை நுதலிய வகர விறுபெய—ரற்றொடு சிவணு மெச்ச மின்றே,, என்றார் ஈண்டும் அவ்வாறே கரியவற்றுக்கோடு உள்ளவற்றுக்கோடு இல்லவற்றுக்கோடு பல்லவற்றுக்கோடு சில்லவற்றுக்கோடு உளவற்றுக்கோடு இலவற்றுக்கோடு பலவற்றுக்கோடு சிலவற்றுக்கோடு என அற்றுப்பெற்றும்; இன்சாரியையன்றி ஆ மா கோ ஊ என்பன னகரமும் பெற்று முடியுமென்றார் ஈண்டும் அவ்வாறே ஆன்கோடு மான்கோடு கோன்குணம் ஊன்குறை சுவை என னகரம்பெற்றும்; "எல்லாமென்ப திழிதிணை யாயி—னற்றோ டுருபின் மேலும் முறுமே—யன்றே னம்மிடை யடைந்தற் றாகும்" என்றார் ஈண்டும் அவ்வாறே எல்லாவற்றுக்கோடும் எல்லாநங்கையும் என எல்லா மென்னும் விரவுப்பெயர் அஃறிணையானகாலை இடையே அற்றுச் சாரியையும் பொருளின்பின்னே உம்மும் உயர்திணையானகாலை இடையே நம்முச்சாரியையும் பொருளின்பின்னே உம்மும் பெற்றும்; "எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை—தள்ளி நிரலே தம்நும் சாரப்—புல்லு முருபின் பின்ன ரும்மே" என்றார் ஈண்டும் அவ்வாறே எல்லார்தங்கையும் எல்லீர்நுங்கையும் என எல்லாரு மென்னும் படர்க்கைப்பெயரின் உம்மும் எல்லீருமென்னும் முன்னிலைப்பெயரின் உம்முங் கெட்டு முறையே தம்முச்சாரியையும் நும்முச்சாரியையும் இடையேவரப் பொருளின்பின்னே உம்முச்சாரியை பெற்றுந்; "தான்றா நாமுதல் குறுகும் யான்யா—நீநீ ரென்னெம் நின்னும் மாம்பிற" என்றார் ஈண்டும் அவ்வாறே தன்கை தங்கை நங்கை என்கை எங்கை நின்கை நுங்கை எனத் தன் தம் நம் என் எம் நின் நும் எனவும், உரையிற்கோடலால் உன்கை உங்கை எனவும்; "வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே" என்றார் ஈண்டும் அவ்வாறே அவற்றுக்கோடு இவற்றுக்கோடு உவற்றுக்கோடு என அற்றுப்பெற்றுங் குற்றொற்றிரட்டாதும்; "யாத னிறுதியுஞ் சுட்டுமுத லாகிய—வாய்த விறுதியு மன்னொடு சிவணு—மாய்தங் கெடுதலாவயி னான" என்றார் ஈண்டும் அவ்வாறே யாதன்கோடு அதன்கோடு இதன்கோடு உதன்கோடு என முறையே அன்பெற்றும் ஆய்தங்கெட்டும்; யாவென்னும் ஆகார ஈற்று வினைப்பெயர் அற்றுப்பெறுமென்றார் ஈண்டும் அவ்வாறே யாவற்றுக்கோடு என அற்றுப்பெற்

றும்; அது இது உது என்னும் முற்றுகர ஈற்றுச் சுட்டுப்பெயர்கள் அன்பெறுமென்றார் ஈண்டும் அவ்வாறே அதன்கோடு இதன்கோடு உதன்கோடு என அன்பெற்றும்; அவை இவை உவை என்னும் ஐகார ஈற்றுச் சுட்டுப்பெயர்கள் அற்றுப்பெற்று ஐகாரங் கெட்டுங் கெடாதும் வருமென்றார் ஈண்டும் அவ்வாறே அவையற்றுக்கோடு அவற்றுக்கோடு இவையற்றுக்கோடு இவற்றுக்கோடு உவையற்றுக் கோடு உவற்றுக்கோடு எனவும்; யாவையென்னும் ஐகார ஈற்று வினப்பெயர் ஐகாரங்கெட்டு அற்றுப்பெறுமென்றார் ஈண்டும் அவ்வாறே யாவற்றுக்கோடு எனவும்; கரியவை நெடியவை என்றற்றொடக்கத்து ஐகார ஈற்றுப் பண்புகொள்பெயர்களும் அம்முடிபு எய்துமென்றார் ஈண்டும் அவ்வாறே கரியவற்றுக்கோடு நெடியவற்றுக் கோடு எனவும்; கரியேமென்னும் மகர ஈற்றுத் தன்மைப்பெயர் நம்மும் உம்மும் பெறுமென்றார் ஈண்டும் அவ்வாறே கரியேநங்கையும் எனவும்; கரியார் கரியீரென்னும் ரகார ஈற்றுப்படர்க்கைப்பெயரும் முன்னிலைப்பெயரும் முறையே தம்மும் உம்மும் நும்மும் உம்மும் பெறுமென்றார் ஈண்டும் அவ்வாறே கரியார்தங்கையும் கரியீர்நுங்கையும் எனவும்; எல்லாருமென்னும் படர்க்கைப்பெயர் "எல்லார்க்குமெல்லாநிகழ்பவை" எனத் தம்முப்பெறாதும் வருமென்றார் ஈண்டும் அவ்வாறே எல்லார்கையும் எனவும்; எவனென்னும் னகர ஈற்று வினப்பெயர் அன்கெட்டு அற்றுப்பெற்றும் அன்னோடு அற்றின் அகரமுங்கெட்டும் முடியுமென்றார் ஈண்டும் அவ்வாறே எவற்றுக்கோடு எற்றுக்கோடு எனவும்; எகினென்னும் னகர ஈறு இன்னேயன்றி அத்தும் ஏழென்னும் ழகர ஈறுங் குற்றுகர ஈறும் அன்னும் பெறுமென்றார் ஈண்டும் அவ்வாறே எகினத்துக்கால் ஏழன்காயம் கரியதன்கோடு எனவும் முடியும். இன்னோரன்ன பிறவும் இவ்வாறே முடித்துக்கொள்க. (உஅ)

கஉஎ. இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலியு மரூஉவும் பொருந்திய வாற்றிற்
கியையப் புணர்ப்பது யாவர்க்கு நெறியே.

இது புணரியல் ஓத்துக்களுட் கூறிய முடிபு எய்தாதனவற்றிற்கும் முடிபு கூறாதனவற்றிற்கும் ஒருவாற்றான் முடிபுகூறுகின்றது.

இ - ள். இடைச்சொல்லினும் உரிச்சொல்லினும் வடசொல்லினும் மேலைப் புணரியல் ஓத்துக்களுட் கூறிய முடிபு பெறாதனவும் போலிமொழிகளும் மரூஉமொழிகளும் இருவகைவழக்கினும் நடக்கும் முறைமையறிந்து அதற்குப் பொருந்துமாறு புணர்த்தல் கற்றுவல்லோரெல்லார்க்கும் முறைமையாம். எ - று.

**வ**ரலாறு;—"மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை" என அகர ஈற்று இடைச்சொல் வல்லெழுத்துமிகாது இயல்பாயும், ஆன்கன்று மான்கன்று ஊன்குறை வண்டின்கால் தேரின்செலவு யாழின்புறம் என னகர ஈற்று இடைச்சொற்கள் திரியாது இயல்பாயுங், கமஞ் சூல் தடஞ்செவி தடந்தோள் என அகர ஈற்று உரிச்சொல் மெல் லெழுத்துமிக்கும், மழகளிறு உறுகால் என இயல்பாயும், அளிகுலம் வயிரகடகம் தனதடம் என வடசொற்கள் இயல்பாயும் முடிந்தன. இன்முன் முன்றில், படைமுன் முன்படை, கண்மீ மீகண், பொது வில் பொதியில், வேட்கைநீர் வேணீர், வேட்கையவா வேணவா என்றாற்போலும் போலிமொழிகளும் அருமருந்தன்னான் அருமந் தான், கிழங்கன்னபழஞ்சோறு கிழங்கம்பழஞ்சோறு, குணக்குள் ளது குணாது தெற்குள்ளது தெனாது குடக்குள்ளது குடாது வடக் குள்ளது வடாது சோழனாடு சோணாடு பாண்டியனாடு பாண்டிநாடு மலையமானாடு மலாடு தஞ்சாவூர் தஞ்சை பனையூர் பனைசை சேந்த மங்கலம் சேந்தை ஆற்றூர் ஆறை கப்பிதந்தை கப்பிந்தை சென்னி தந்தை சென்னிந்தை சாத்தன்றந்தை சாத்தந்தை ஆதன்றந்தை ஆந்தை பூதன்றந்தை பூந்தை அவர்யாவர் அவர்யார் அதுயாது அது யாவது என்றாற்போலும் மரூஉமொழிகளுங் கண் விண்ணவிணைத் தது விணவிணைத்தது ஆடை வெள்ளவிளர்த்தது வெளவிளர்த்தது கடல் ஒல்லவொலித்தது ஒல்லொலித்தது என முறையே "உயிரும் புள்ளியும் இறுதியாகிக்—குறிப்பினும் பண்பினும் இசையினுந் தோன்றி—நெறிப்படவாராக் குறைச்சொற்கிளவியும்" கரும்பார்ப் பான் கரும்பார்ப்பனி கரும்பார்ப்பார் கருங்குதிரை கருங்குதிரை கள் என "உயர்திணை யஃறிணை யாயிரு மருங்கி—னைம்பா லறியும் பண்புதொகு மொழியும்" அடுகளிறு கொல்யானை எனச் "செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்—மெய்யொருங் கியலுந் தொழி றொகு மொழியும்" அவ்வனைத்து அன்றியனைத்து எனவும் இவ்வ ணந்தல் இந்தவனந்தல் எனவும் இன்னோரன்ன பிறவுமான மரூஉ மொழிகளுந் தமக்கேற்றபெற்றிமுடிந்தன. பிறவும் இவ்வாறே மே லைப்புணரியல் ஒத்துக்களுட் கூறிய முடிபெய்தாதனவற்றிற்கும் முடி புகூறாதனவற்றிற்கும் இயைந்தவாறு இதுவே ஒத்தாக முடித்துக் கொள்க. காரா பேரா பாசிழை பாசடை பைங்கண் பைந்தார் சேதா என்றாற்போலும் பண்புத்தொகை முடிபு வேறுபாடுகளும் மேற்கூறி யனபோல உலகத்து மருவி நடந்த வழக்கினது பகுதியைத் தமக்கு இலக்கணமாக உடையனவேயாமென்று உணர்க. (உகூ)

நான்காவது மெய்யீற்றுப்புணரியல் முற்றிற்று.



## ரு-வது உருபுபுணரியல்.

கசஅ. உருபினும் பொருண்முடி பொக்குமன் பயின்றே.

என்பது சூத்திரம். பதங்களோடு உருபு புணரும் இயல்பு உணர்த்தினமையின் இவ்வோத்து உருபுபுணரியலென்னும் பெயர்த்து. மேற்பதத்தோடு பதம்புணருமாறு உணர்த்தி ஈண்டு அதனோடு உருபு புணருமாறு உணர்த்தலின் மேலோத்தினோடு இயைபுடைத்தாயிற்று. இதனுள் இத்தலைச்சூத்திரம் உருபுபுணரும் முறைமை மாட்டெறிந்து உணர்த்துகின்றது.

இ - ள். உயிரும் ஒற்றும் முதலாகிய வேற்றுமையுருபுகள் மேற்கூறியவாற்றான் உயர்திணைப்பெயர்முதலிய எல்லாப்பெயர்க்கும் பின்னாக வந்து புணரும் புணர்ச்சிக்கண்ணும் முற்கூறிப்போந்த வேற்றுமைப்பொருட் புணர்ச்சிமுடிபினை ஒத்துப் பெரும்பாலும் முடியும். எ - று.

வரலாறு;—நம்பியை நம்பியொடு நம்பியின் நம்பியது எனவும், கிளியை கிளியொடு கிளியின் கிளியது எனவும், சாத்தியை சாத்தியொடு சாத்தியின் சாத்தியது எனவும், நம்பிக்கு நம்பிகண் எனவும், கிளிக்கு கிளிகண் எனவும், சாத்திக்கு சாத்திகண் எனவும், உயிரீற்றுப்பெயர்களோடு உயிர்முதலுருபுகளும் ஒற்றுமுதலுருபுகளும் வந்து மேலை வேற்றுமைப்பொருட்புணர்ச்சியை ஒத்து, உடம்படுமெய்பெற்றும் உயிரேறியும் வல்லெழுத்துமிக்கும் இயல்பாயும் முடிந்தவாறுகாண்க. உயர்திணைப்பெயர்முன்னும் விரவுப்பெயர்முன்னும் மிகுதி முறையே "சிலவிகாரமாமுயர்திணை" என்றதனானும் பொதுப்பெயருயர்திணைப்பெயர்களென்ற முறையலகூற்றானுங்கொள்க. அவனை அவனொடு அவனின் அவனது எனவும், பொன்னை பொன்னொடு பொன்னின் பொன்னது எனவும், சாத்தனை சாத்தனொடு சாத்தனின் சாத்தனது எனவும், அவற்கு அவன்கண் எனவும், பொற்கு பொன்கண் எனவும், சாத்தற்கு சாத்தன்கண் எனவும், ஒற்றீற்றுப்பெயர்களோடு உயிர்முதலுருபுகளும் ஒற்றுமுதலுருபுகளும் வந்து மேலை வேற்றுமைப்பொருட்புணர்ச்சியினை ஒத்து உயிரேறியுந் தனிக்குறின்முன்னொற்றிரட்டித்துந் திரிந்தும் இயல்பாயும் முடிந்தவாறுகாண்க. உயர்திணைப்பெயர்முன்னும் விரவுப்பெயர்முன்னும் னகரந்திரிதற்கு முன்னுரைத்தாங்கு உரைக்க. பிறவும் இவ்வாறே உய்த்துணர்க. பொருட்புணர்ச்சிக்கட் புளியங்கோடு அரையங்கோடு என்றாற்போல உருபுப்புணர்ச்சிக்கண்ணும் அம்முப்பெறுவன பெறாது புளிக்கு புளிக்கண் அரைக்கு

அரைக்கண் என முடிவன பெரும்பாலும் ஒக்குமெனவே சிறுபான்மை ஒவ்வாதனவும் உளவென முடித்துக்கொள்க. இங்ஙனம் புணர்ந்த வேற்றுமையுருபுகளை நிலைமொழியாக நிறுத்தி ஈண்டே வருமொழிகளோடு புணர்ப்பாருமுளர், விளவினை விளவினது என்புழிச் சாரியையும் உருபும் நிறுத்தசொல்லாயே நிற்குமெனக் கோடலின். விளவினைக் குறைத்தான் மலையொடுபொருதமால்யானை மத்திகையாற்புடைத்தான் சாத்தற்குக்கொடுத்தான் காக்கையிற்கரிது களம்பழம் காக்கையதுபலி இத்தொடக்கத்தனவெல்லாம் மேலைப்புணரியலோத்துக்களுள்ளே நிலைமொழியாக நிறுத்தி வருமொழியோடு புணர்க்கப்பட்டு இவ்வாறு முடியுமன்றே? அங்ஙனம் முடிவனவற்றை நிலைமொழியாக நிறுத்தி ஈண்டு வருமொழியோடு புணர்த்தல் கூறியது கூறலாமெனமறுக்க. (க)

கசகூ. எல்லா வீற்றுஞ் சொல்லுங் காலை.
வேற்றுமை யுருபிற் கின்னே சாரியை.

இனி மாட்டேற்றானன்றி விதந்தோதுவான்புகுந்தவற்றுள் இது பொதுவகையான் வேற்றுமையுருபுகட்கு வருஞ் சாரியை இதுவென்கின்றது.

இ - ள். உயிரும் ஒற்றுமாகிய எல்லா ஈற்றுப்பெயர்களின் முன்னும் வேற்றுமையுருபுகட்கு இடையே வருஞ் சாரியை இன் சாரியையாஞ் சொல்லுங்காலத்து. எ - று.

வரலாறு;—விள பலா கிளி தீ கடு பூ சே தினை சோ வௌ எனவும், உரிஞ் மண் பொருந் திரும் பொன் வேய் நார் கல் தெவ் யாழ் முள் எனவும், நாகு வரகு எனவும் நிறுத்தி இன்னுருபு ஒழித்து ஏனையைந்துருபும் வருவித்து இன்சாரியை கொடுத்து விளவினை விளவினொடு என்றாற்போலப் பிறவற்றோடும் ஒட்டிக் காண்க. பிறவும் அன்ன. (உ)

கரு0. பல்லவை நுதலிய வகர விறுபெய
ரற்றொடு சிவண லெச்ச மின்றே.

இஃது அகர ஈற்றுள் ஒருசாரனவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ - ள். பன்மைப்பொருளினைக் கருதின பெயர்களின் இறுதிநின்ற அகரம் அற்றுச்சாரியையோடு பொருந்துதலை ஒழிதலில்லை. எ - று.

**வ**ரலாறு; கரிய உள்ள இல்ல பல்ல சில்ல உள இல பல சில என நிறுத்தி உருபுவருவித்து அற்றுக்கொடுத்துக் கரியவற்றை கரியவற்றொடு கரியவற்றுக்கு கரியவற்றின் கரியவற்றது கரியவற்றுக்கண் என்றாற்போலப் பிறவற்றோடும் ஒட்டுக. (௯)

கருக. ஆமா கோனவ் வணையவும் பெறுமே.

இஃது ஆகார ஈற்றுட் சிலவற்றிற்கும் ஓகார ஈற்றுள் ஒன்றற்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். ஆவும் மாவுங் கோவும் இன்னேயன்றி னகரச்சாரியைபெற்று முடியவும்பெறும். எ - று.

ஆவுடனே ஓதினமையான் மாவென்றது விலங்குமாவென்றேகொள்க. ஒன்றெனமுடித்தலான் ஊ என்பதற்கும் னகரங்கொடுக்க.

**வ**ரலாறு;—ஆனை ஆனொடு மானை மானொடு கோனை கோனொடு ஊனை ஊனொடு எனப் பிறவற்றோடும் ஒட்டுக. உம்மையான் ஆவினை மாவினை கோவினை எனப் பொதுவிதி பெறுதலும் உரையிற் கோடலான் ஊனை ஊனினை என னகரமும் இன்னும் பெறுதலுங் கொள்க. "ஒன்றாகநின்றகோவினையடர்க்கவந்த" எனச் செய்யுளகத்துங் காண்க. "ஆனநெய்தெளித்துநானநீவி" என ஆன் அகரம்பெறுதல் புறனடையாற்கொள்க. (௪)

கருஉ. எல்லா மென்ப திழிதிணை யாயி
னற்றோ டுருபின் மேலும் முறுமே
யன்றே னம்மிடை யடைந்தற் றாகும்.

இது மகர ஈற்றுள் ஒன்றற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ - ள். எல்லாமென்னும் விரவுப்பெயர் அஃறிணைப் பெயராயின் இடையே அற்றுச்சாரியையும் உருபின்பின்னே உம்முச்சாரியையும் பெற்றுமுடியும்; உயர்திணைப்பெயராயின் இடையே நம்முச்சாரியையும் உருபின்பின்னே முன்போல் உம்முச்சாரியையும் பெற்றுமுடியும். எ - று.

**வ**ரலாறு;—எல்லாவற்றையும் எல்லாவற்றோடும் எனவும், எல்லாநம்மையும் எல்லாநம்மோடும் எனவும் வரும். பிறவற்றோடும்

இவ்வாறே ஒட்டுக. உயர்திணையாயவழி அவற்றிற்கு எல்லாரையும் எல்லாரோடும் எனப் பொருளுரைக்க. (ரு)

கருந. எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லு முருபின் பின்ன ரும்மே.

இது மகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ - ள். எல்லாருமென்னும் படர்க்கைப்பெயரும் எல்லீருமென்னும் முன்னிலைப்பெயருமாகிய இவற்றின் ஈற்றுநின்ற உம்மையைப்போக்கி முறையே தம்முச்சாரியையும் நும்முச்சாரியையும் இடையேவர உருபின்பின்னே உம்முச்சாரியைவந்து புணரும். எ - று.

வரலாறு;—எல்லார்தம்மையும் எல்லார்தம்மோடும் எனவும், எல்லீர்நும்மையும் எல்லீர்நும்மோடும் எனவும் வரும். பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. (சா)

கருச. தான்றா நாமுதல் குறுகும் யான்யாம்
நீநீ ரென்னெம் நின்னும் மாம்பிற
குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல.

இது னகர மகர ரகர ஈகார ஈற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ - ள். தான் தாம் நாம் என்னும் மூன்றுபெயரும் முறையே தன்னென்றுந் தம்மென்றும் நம்மென்றும் நெடுமுதல்குறுகும்: யான் யாம் நீ நீர் என்னும் நான்குபெயரும் முறையே என்னென்றும் எம்மென்றும் நின்னென்றும் நும்மென்றுந் திரியும்; அங்ஙனந் திரிந்தவழி நான்கனுருபு புணருமிடத்து இடையே அகரச்சாரியை வரும்; இம்மொழிகளோடு நான்கனுருபும் ஆறனுருபும் புணருமிடத்துக் குற்றொற்று இரட்டா. எ - று.

இவ்வெழுத்து இவ்வெழுத்தாய்த் திரியுமென்னாது யான் யாம் நீ நீரென்பன முறையே என் எம் நின் நும் ஆமென்றாரேனும், "ஆ எய்யாகும் யாமெ னிறுதி—யாவயின் யகரமெய் கெடுதல் வேண்டும்" என்பன முதலாக ஆசிரியர் தொல்காப்பியனார் கூறியவாற்றானும் நும்மென்பதற்கு ஏற்ற பெற்றியானும் அவற்றின் திரிபினை வேறுவேறு பகுத்துக்காண்க.

வரலாறு;—தன்னை தன்னோடு தனக்கு தனது எனவும், தம்மை தம்மோடு தமக்கு தமது எனவும், நம்மை நம்மோடு நமக்கு நமது எனவும், என்னை என்னோடு எனக்கு எனது எனவும், எம்மை எம்மோடு எமக்கு எமது எனவும், நின்னை நின்னோடு நினக்கு நினது எனவும், நும்மை நும்மோடு நுமக்கு நுமது எனவும் வரும். பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. பிறவென்றதனானே நீயென்பது உன்னென்றும் நீரென்பது உம்மென்றுந் திரிதல்கொள்க. (எ)

கருரு. வவ்விறு சுட்டிற் கற்றுறல் வழியே.

இது வகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்துயதுவிலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.

இ - ள். வகர ஈற்று மூவகைச்சுட்டுப்பெயர்க்கும் அற்றுச்சாரியைபெறுதல் நெறி. எ - று.

வரலாறு;—அவற்றை அவற்றோடு இவற்றை இவற்றோடு உவற்றை உவற்றோடு எனவரும். பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டிக்கொள்க. வழியென்றதனாற் குற்றொற்று இரட்டாமை கொள்க.

கருசு. யாத னிறுதியுஞ் சுட்டுமுத லாகிய
வாய்த விறுதியு மன்னொடு சிவணு
மாய்தங் கெடுத லாவயி னான.

இது குற்றுகர ஈற்றுட் சிலவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.

இ - ள். யாதென வரூஉங் குற்றுகர ஈறுஞ் சுட்டெழுத்தினை முதலாகவுடைய ஆய்தத்தொடர்மொழிக் குற்றுகர ஈறும் அன்சாரியையோடு பொருந்தும்; அவ்விடத்து இடைநின்ற ஆய்தங்கெடும். எ - று.

வரலாறு;—யாதனை யாதனோடு எனவும், அதனை அதனோடு இதனை இதனோடு உதனை உதனோடு எனவும் வரும். பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. (அ)

கருஎ. ஒன்று முதலெட் டளவா மெண்ணூர்
பத்தின்முன் னன்வரிற் பவ்வொற் றொழியமே
லெல்லா மோடு மொன்பது மிற்றே.

இது குற்றுகர ஈற்று எண்ணுப்பெயருட் சிலவற்றிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி வருக்கின்றது.

இ - ள். ஒன்று முதலாக எட்டு இறுதியாக நின்ற எண்ணுப் பெயர்களின்மேல் வந்து பஃதெனவும் பதுவெனவும் முடிந்துநின்ற பத்தென்னும் எண்ணுப்பெயர் முன்னர் ஆன்சாரியைவரிற் பகரவொற்று நிற்க ஏனையவெல்லாங் கெடும். ஒன்பதன்முன்னர் ஆன்வரினும் இவ்வாறுகெடும் உருபுபுணர்வழி. எ - று.

**வ**ரலாறு;—ஒருபானை ஒருபானோடு எனவும், ஒன்பானை ஒன்பானோடு எனவும் வரும். பிறவற்றோடும் இவ்வாறே ஒட்டுக. மேற் "பல்லவைநுதலிய வகரவிறுபெய ரற்றொடுசிவணல்" என்றொழியாது எச்சமின்றேயென்ற மிகையானே இன்பெறுவன பெறுது விளவை பலாவை என்றாற்போல முடிதலும், மகத்தை நிலாத்தை எனப் பிறசாரியை பெறுதலும், விளவத்துக்கண் பலாவத்துக்கண் என அகர ஆகார ஈற்று மரப்பெயர்கள் ஏழனுருபோடு புணர்வழி அத்துப்பெறுதலும், யாவென்னும் ஆகார ஈற்று வினுப்பெயர் யாவற்றை யாவற்றோடு என அற்றுப்பெற்றே முடிதலும், அது இது உது என்னும் முற்றுகர ஈற்றுச் சுட்டுப்பெயர்கள் அதனை அதனோடு இதனை இதனோடு உதனை உதனோடு என அன்பெற்றே முடிதலும், அவை இவை உவை என்னும் ஐகார ஈற்றுச் சுட்டுப்பெயர்கள் அவையற்றை அவற்றை இவையற்றை இவற்றை உவையற்றை உவற்றை என அற்றுப்பெற்று ஐகாரங்கெடாதுங் கெட்டும் முடிதலும், யாவை என்னும் ஐகார ஈற்றுவினுப்பெயர் யாவற்றை யாவற்றோடு என ஐகாரங்கெட்டு அற்றுப்பெற்று முடிதலுங், கரியவை நெடியவை என்றற்றொடக்கத்து ஐகார ஈற்றுப் பண்புகொள் பெயர்களுங் கரியவற்றை நெடியவற்றை என அம்முடிபு பெறலும், மகர ஈற்றுப்பெயருட் சில மரத்தை மரத்தோடு நுகத்தை நுகத்தோடு என அத்துப்பெற்றே முடிதலுங், கரியேநம்மையும் என மகர ஈற்றுத்தன்மைப்பெயர் நம்மும் உம்முங் கரியார்தம்மையும் கரியீர் நும்மையும் என ரகர ஈற்றுப் படர்க்கைப்பெயரும் முன்னிலைப் பெயரும் முறையே தம்மும் உம்மும் நும்மும் உம்மும் பெற்றுமுடிதலும், எல்லாருமென்னும் படர்க்கைப்பெயர் "எல்லார்க்குமெல்லா நிகழ்பவை" எனத் தம்முப்பெறாதும் வருதலும், அழன் புழன் என்னும் னகர ஈற்றுப்பெயர்கள் இன்னேயன்றி அழத்தை புழத்தை என அத்துப்பெற்று னகரங்கெட்டு முடிதலும், எவனென்னும் னகர ஈற்று வினுப்பெயர் எவற்றை எவற்றோடு என அன்கெட்டு அற்றுப்பெற்றுமுடிதலும், எற்றை எற்றோடு என அன்னோடு அற்

றின் அகரமுங் கெட்டுமுடிதலும், எகினென்னும் னகர ஈற்றுப்பெயர் இன்னேயன்றி எகினத்தை என அத்துப்பெற்று முடிதலும், ஏழென்னும் ழகர ஈற்று எண்ணுப்பெயரும் பூழ் யாழ் என்றற்றொடக்கத்து ழகர ஈற்றுப் பொருட்பெயரும் இன்னேயன்றி ஏழனை ஏழனொடு பூழனை பூழனொடு யாழனை யாழனொடு என அன்பெறுதலுங், குற்றுகர ஈற்றுட் சில "வழக்கத்தாற்பாட்டாராய்ந்தார்" எனவும் கரியதனை கரியதனொடு எனவும் முறையே அத்தும் அன்னும் பெறுதலுங், குற்றுகர ஈற்று எண்ணுப்பெயர்கள் இன்னேயன்றி ஒன்றனை இரண்டனை என அன்பெற்றும் ஒருபஃது ஒருபது முதலியன ஆன்பெறாது ஒருபஃதனை ஒருபதனை எனவும் ஒருபஃதினை ஒருபதினை எனவும் ஒருபஃதை ஒருபதை எனவும் அன்பெறுதலும் இன்பெறுதலும் பெறாமையுங், குற்றுகர ஈற்றுத் திசைப்பெயர்கள் ஏழனுருபோடு புணர்வுழி இன்பெறாது வடக்கண் கிழக்கண் மேற்கண் தெற்கண் என ஈற்றுயிர்மெய் கெட்டு முடிதலும், இன்னோரன்ன பிறவுங் கொள்க. யா யாவை முதலியன யாவற்றை யாவற்றை என ஒருநிகரனவாய் முடிந்தனவேனும் நிலைமொழி வேறுபாட்டான் வேறென்றே கோடும். (௧0)

கருஅ. இதற்கிது முடிபென் றெஞ்சா தியாவும்
விதிப்பள வின்மையின் விதித்தவற் றியலான்
வகுத்துரை யாதவும் வகுத்தனர் கொளலே.

இஃது அதிகாரப் புறனடை கூறுகின்றது.

இ - ள். இவ்வெழுத்தோத்தினுள் விதித்தற்கு உரியனவற்றையெல்லாம் விதந்து இதனுக்கு இது முடிபென்று ஒழியாது எல்லாவற்றையும் விதிக்கத் தொடங்கின் வரம்பின்றி ஓடுதலான் எடுத்தோத்தானும் இலேசானும் உரையானும் விதித்துப் போந்தவற்றின் இயல்பைப்பற்றி அதனானே திறப்படக் கூறாதனவற்றையுந் திறப்படக் கூறிக் கற்றுவல்லோர் அமைத்துக்கொள்க. எ - று.

வரலாறு;—உவாஅப்பதினான்கு இராஅப்பகல் இராஅவழுதுணங்காய் என ஆகார ஈறு அகரம்பெறுதலும், பொன்னங்கட்டி கானங்கோழி என னகரவீறு அம்முப்பெறுதலும், பதினேழு என ஏழ் உகரம்பெறுதலும்; அதினை அவையிற்றிற்கு விளவினுக்கு விண்ணுக்கு பல்லுக்கு என முறையே அன்னேயன்றி இன்பெறுதலும் இற்றும் இன்னும் பெறுதலும் இன்னும் உகரமும் பெறுதலும் உகரம்பெறுதலும், வேயாது வேயாப்பு என்றாற்போல்வன ஈறுகெடுதலும், இன்னோரன்ன பிறவும் ஈண்டே அமைத்துமுடித்துக்கொள்க.

இன்னும் இதனானே உண்டென்னுஞ்சொல் தொழிலொழிய உண்மையென்னும் பண்பு உணர நிற்குமிடத்துப் பகரமுதன்மொழி வந்தால் உள்பொருள் எனக் குற்றுகரம் மெய்யொடுங் கெட்டு மேல் நின்ற ணகரவொற்று ளகரவொற்றாய்த்திரிதலும் உண்டுபொருளென இயல்பாதலும் ஏனையவல்லெழுத்தும் இயல்புகணமும்வந்தால் உண்டு காணம் சோறு தகர் ஞாண் நூல் மணி யாழ் வட்டு அடை ஆடை எனக் கேடுந்திரிபுமின்றி இயல்பாய்முடிதலுங் கொள்க. உள்பொருளென்பது பண்புத்தொகைமுடிபன்றேவெனின் அஃது ஓசையொற்றுமைபடச்சொல்லும்வழியதுபோலும், இஃது ஓசை இடையறவுபடச் சொல்லும் வழியதுபோலுமென்க.

இவ்வெழுத்தோத்தினுட் கூறிய இலக்கணங்களெல்லாங் கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும். அவற்றுட் கருவி புறப்புறக்கருவியும் புறக்கருவியும் அகப்புறக்கருவியும் அகக்கருவியுமென நால்வகைத்து. எண்பெயர்முதலியன புறப்புறக்கருவி. பதவியல் புறக்கருவி. "மெய்யுயிர்முதலீறாமிருபதங்களும்" என்றாற்போல்வன அகப்புறக்கருவி. "எகரஒகரம்பெயர்க்கீறாகா" என்றாற்போல்வன அகக்கருவி.

இனிச்செய்கையும் புறப்புறச்செய்கையும் புறச்செய்கையும் அகப்புறச்செய்கையும் அகச்செய்கையும் என நால்வகைத்து. "இ ஈ ஐவழியவ்வும்" என்றாற்போல்வன புறப்புறச்செய்கை. "லனமுன்றனவும்" என்றாற்போல்வன புறச்செய்கை. "ஞணநமலவளன வொற்றிறுதொழிற்பெயர்" என்றாற்போல்வன அகப்புறச்செய்கை. "இயல்பினும்விதியினுநின்றவுயிர்முன்" என்றாற்போல இன்ன ஈறு இன்னவாறு முடியுமெனச் செய்கை கூறுவனவெல்லாம் அகச்செய்கை. இவையெல்லாம் ஓர்ந்து உணர்க. (கக)

ஐந்தாவது உருபுபுணரியல் முற்றிற்று.



முதலாவது

எழுத்ததிகாரம் முற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

# இலக்கணவிளக்கம்.

இரண்டாவது

## சொல்லதிகாரம்.

### க-வது பெயரியல்.

கருகூ. உமையவ ளொடுகலந் துலகுபுரந் தருளு
மமைவன தடிபணிந் தறைகுவன் சொல்லே.

என்பதுசூத்திரம். இவ்வதிகாரம் மேற்பாயிரத்துள் "எழுத்து முதன்மூன்றையும்" என நிறுத்தமுறையானே எழுத்துணர்த்திச் சொல்லுணர்த்துகின்றாராதலிற் சொல்லதிகாரமென்னும் பெயர்த்து. சொல்லையுணர்த்திய அதிகாரமென விரிக்க. சொல்லென்றது அதன் இலக்கணம். அதிகாரமென்றது முறைமை. சொல்லாவது ஓரெழுத்தானும் ஈரெழுத்தானும் இரண்டிறந்து இசைக்கும் பலவெழுத்தானும் ஆக்கப்பட்டுப் பொருளையுந் தன்னையும் ஒருவன் உணர்தற்குக் கருவியாம் ஓசையாகலின் மேலதிகாரத்தோடு இயைபுடைத்தாயிற்று. இவ்வதிகாரத்துள் ஐவகையோத்தினுற் சொல்லிலக்கணம் உணர்த்துகின்றார். அவற்றுள் இம்முதலோத்துப் பெயர்ச்சொற்களது இயல்பு உணர்த்திற்றாகலாற் பெயரியலென்னும் பெயர்த்து. சிறுபான்மை ஏனையிலக்கணங்களையும் உணர்த்திற்றேனும் பெயரியலென்றது பன்மைபற்றிய வழக்கு. தலைமைபற்றிய வழக்கெனினும் அமையும். இதனுள் இத்தலைச்சூத்திரங் கூறத்தொடங்கிய பொருள் இனிதுமுடியும்பொருட்டு வணக்கமும் அதனுன் முடிபெய்தும்பொருளும் உணர்த்துவதாகிய சிறப்புப்பாயிரங் கூறுகின்றது.

இ - ள். உமாதேவியோடு பொருந்தி உலகத்தைக்காத்து நிலைபெறச்செய்யும் இறைவனது தாளை வணங்கி யான் சொல்லுவன் சொல்லிலக்கணத்தை. எ - று.

மாயோன்செயலும் இவன்செயலென்பார் உலகுபுரந்தருளு மென்றும் ஆகுபெயராற் சொல்லிலக்கணத்தைச் சொல்லென் றுங்கூறினர். ஏனையவற்றிற்கும் ஏற்குமாறு "மலைமகளொருபால்" என்னுஞ் சூத்திரத்திற்கு உரைத்தாங்குப் பொருள் விரித்து உரைத்துக்கொள்க. (க)

கசூO. தனிமொழி தொடர்மொழி யெனவிரு வகைத்தா
யிருதிணை யைம்பாற் பொருளையுந் தன்னையு
மூவகை யிடத்தும் வழக்கொடு செய்யுளின்
வெளிப்படை குறிப்பின் விரிப்பது சொல்லே.

இது சொல்லின் கூறுபாடும் அது பொருளுணர்த்தும் இயல் பும் உணர்த்திய முகத்தான் மேற்கூறுவலென்றசொற்குப் பொது இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். தனிமொழியுந் தொடர்மொழியுமென இரண்டு கூற றதாய் இருதிணையும் அவற்றின் பகுதியாகின்ற ஐம்பாலுமாகிய பொருளையுந் தன்னையும் மூன்றிடத்தினும் வழக்கின்கண்ணுஞ் செய்யுட்கண்ணுஞ் சொன்மாத்திரத்தான் விளக்கி வேறுநிற்கும் வெளிப்படையானும் அவ்வாறன்றிச் சொல்லோடுகூடிய குறிப் பான் விளக்கி வேறுநிற்குங் குறிப்பானும் விளக்குவது யான் முன் னர்ச் சொல்லுவலென்ற சொல்லாவது. எ - று.

எனவே, உயர்திணைச்சொல் அஃறிணைச்சொல் ஆண்பாற் சொல் பெண்பாற்சொல் பலர்பாற்சொல் ஒன்றறிசொல் பலவறி சொல் தன்மைச்சொல் முன்னிலைச்சொல் படர்க்கைச்சொல் வழக் குச்சொல் செய்யுட்சொல் வெளிப்படைச்சொல் குறிப்புச்சொல் எனவும், உயிர்ப்பொருள் உயிரில்பொருள் இயங்கியற்பொருள் நிலை யியற்பொருள் எனவும், காட்சிப்பொருள் கருத்துப்பொருள் முதற் பொருள் சினைப்பொருள் இயற்கைப்பொருள் செயற்கைப்பொருள் வழக்குப்பொருள் செய்யுட்பொருள் எனவும் பகுத்துரைக்கப்படுஞ் சொல்லும் பொருளும் முறையே தனிமொழியுந் தொடர்மொழியு மாகவும் இருதிணையும் ஐம்பாலுமாகவும் அடங்குதலிற் தனிமொழி தொடர்மொழியெனவும் இருதிணை ஐம்பாற் பொருளையுமெனவுங் கூறினர். இவற்றிற்கு உதாரணந் தத்தம் விதிச்சூத்திரங்களுட்பெ றப்படும். சொல் தன்னையுணர்த்துமாறு கடியென்கிளவி புனிறென் கிளவியென வரும். பிறவும் அன்ன. "வயிர வூசியு மயன்வினை யிரும்புஞ்—செயிரறு பொன்னைச் செம்மைசெய்யாணியுந்—தமக்

கமை கருவியுந் தாமா மவைபோ—லுரைத்திற முணர்த்தலு முரை யது தொழிலே" என்றார் ஆசிரியரகத்தியனாருமென்றுணர்க. முயற் கோடு யாமைமயிர்க்கம்பலம் என்றாற்போல்வனவும் பொருள்விளக் கியனவேயாம். என்னை? அவையும் பொய்ப்பொருள் விளக்கலின்.()

கசுக. தனிமொழி சமய வாற்றலாற் றனித்துந்
தொடர்மொழி யவாய்நிலை தகுதி யண்மையிற்
றொகைநிலை தொகாநிலை யாயிரு வகையாற்
றொடர்ந்தும் பொருளைத் தோற்றுவ தியல்பே.

இது மேற்கூறிய தனிமொழியுந் தொடர்மொழியும் பொருள் விளக்குமாறு கூறுகின்றது.

இ - ள். தனிமொழி சங்கேதவலியாற் தனித்துநின்றுந் தொடர்மொழி அவாய்நிலையானுந் தகுதியானும் அண்மையானுந் தொகைநிலைவகையானுந் தொகாநிலைவகையானுந் தொடர்ந்துநின்றும் பொருளைவிளக்குதலைச்செய்வது அவற்றிற்கு இலக்கணமாம். எ-று.

உ-ம். மரம் உண்டான் மற்று நனி எனவும், ஆவைக்கொணு வெளிதைக்கொலான் எனவும், நீரானனை எனவும், ஆற்றங்கரைக்க ணைந்துகனிகளுளவாகின்றன எனவும் முறையே காண்க. (ந)

கசுஉ. உயர்திணை யென்மனார் மக்கட் சுட்டே
யஃறிணை யென்மனா ரவரல பிறவே.

இது மேல் இருதிணையென்றார் அவை இவையென்கின்றது.

இ - ள். உயர்திணையென்று கூறுவர் தொல்லாசிரியர் மக்கட் சுட்டினை, அம்மக்கட்சுட்டல்லாத பிறபொருளை அஃறிணையென்று கூறுவர் தொல்லாசிரியர். எ - று.

மக்கட்சுட்டென்பது பண்புத்தொகைநிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. ஈண்டு மக்களென்றது ஆகுபெயரான் மக்கட் சுட்டை உணர்த்திநின்றது. அங்ஙனம் உணர்த்தவே மக்கட்சுட் டாகிய சுட்டு யாதன்கண் நிகழும் அது மக்கட்சுட்டென விரியும். அவரலவென்று ஒழியாது பிறவென்றார் உயிருள்ளனவும் இல் லனவுமாகிய அஃறிணை இருகூறும் அடங்குதற்கு. ஏகாரம் இரண் டும் ஈற்றசை. உயர்திணையென்பது இறந்தகால வினைத்தொகை. அஃறிணையென்பது பண்புத்தொகை. அவை முறையே உயர்ந்ததி ணையெனவும் அத்திணையல்லவாகியதிணையெனவும் விரியும். திணை

யென்பது ஒழுக்கம். அஃது ஆகுபெயரான் அவ்வொழுக்கத்தை நிகழ்த்தும் பொருண்மேல் நின்றது. (ச)

கசரு. ஆண்பெண் பலரென முப்பாற் றுயர்திணை.

இது மேல் ஐம்பாலென்றவற்றுள் உயர்திணை இத்துணைப் பால் உடைத்து என்கின்றது.

இ - ள். ஆண்பாலும் பெண்பாலும் பலர்பாலுமென்னும் இம் மூன்று பாலையும் உடைத்து உயர்திணை. எ - று.

அறிவுமுதலாயினவற்முன் ஆண்மகன் சிறந்தமையின் ஆண் பால் முற்கூறப்பட்டது. ஆண்பன்மையும் பெண்பன்மையும் இவ்வி ருபாலுந் தொக்க பன்மையுமன்றிப் பன்மையென வேறின்மையிற் பலர்பால் பிற்கூறப்பட்டது. இம்மூவகைப் பன்மையும் வந்தார் சென்முரென்னும் ஓரீற்றுவாய்பாடேகொண்டு முடிதலின் பலர்பா லென ஒன்முயடங்கின. (ரு)

கசசா. ஒன்றே பலவென் றிருபாற் றஃறிணை.

இஃது அஃறிணை இத்துணைப்பால் உடைத்து என்கின்றது.

இ - ள். ஒருமைப்பாலும் பன்மைப்பாலுமென்று இருபகுதி யை உடைத்து அஃறிணை. எ - று.

ஆண்பெண்ணென்பன அஃறிணைக்கும் உளவேனும் அவ்வி ரண்டற்கும் வந்ததென்பதல்லது வழக்கினுள் வேறு வாய்பாடின் மையின் ஆண்பால் பெண்பாலென்னும் வழக்கு உயர்திணைக்கே யன்றி அஃறிணைக்கின்று. (சா)

கசாஎ. தெய்வமும் பேடுமா மவ்விரு பகுதியு
மிவ்வென வறியுமந் தந்தமக் கிலவே
யுயர்திணை மருங்கிற் பால்பிரிந் திசைக்கும்.

இஃது ஐயம் அறுத்தல் நுதலிற்று. மேற்றொகையுள் ஒழிந்த தெய்வத்திணையும் வகையுள் ஒழிந்த பேட்டினையும் இவ்வாமு மென்றலின்.

இ - ள். தெய்வமும் பேடுமாகிய அவ்விருவகையும் இவையெ னத் தம்பொருளினை வேறு அறிய நிற்கும் ஈற்றெழுத்தினைத் தமக்கு

உடையவல்லவாயினும் உயர்திணையிடத்திற்கு உரிய பாலாய் வேறுபட்டு இசைக்கும். எ - று.

பேடெனப் பொதுப்படக்கூறியவதனானே பெண் அவாய் ஆண்டன்மை திரிந்ததூஉம் ஆண் அவாய்ப் பெண்டன்மை திரிந்ததூஉமென அஃது இருவகைப்படும். பால் வேறுபட்டு இசைத்தலாவது தாம் உயர்திணைப்பொருளவாய் ஆண்பாற்கு உரிய ஈற்றானும் பெண்பாற்கு உரிய ஈற்றானும் பலர்பாற்கு உரிய ஈற்றானும் இசைத்தலாம். அந்தந் தமக்கிலவென்ற மிகையானே நரகர் அலி மகண்மா முதலியவற்றையும் இம்மூவீற்றுள் ஏற்பதொன்றனான் முடித்தலும் மக்கட்டன்மை நிரம்பாமையிற் பேட்டினை அஃறிணைவாய்பாட்டான் இசைத்தலுங் கொள்க.

வரலாறு;—தேவன்வந்தான் தேவிவந்தாள் தேவர்வந்தார் எனவும், பேடன்வந்தான் பேடிவந்தாள் பேடர்வந்தார் எனவும், நரகன்வந்தான் நரகிவந்தாள் நரகர்வந்தார் எனவும், அலிவந்தான் அலியர்வந்தார் எனவும், மகண்மாவந்தாள் எனவும், பேடுவந்தது பேடுகள்வந்தன எனவும் வரும். தேவன்மார் தேவர்கள் தேவியர் தேவிமார் தேவிகள் பேடன்மார் பேடர்கள் பேடியர் பேடிமார் பேடிகள் என்றாற்போல்வனவுங் கொள்க. (எ)

கசாகூ. தன்மை முன்னிலை படர்க்கைமூ விடனே.

இது மேல் மூவிடமென்றன இவையென்கின்றது.

இ - ள். தன்மையும் முன்னிலையும் படர்க்கையுமென்னும் இவை மூவிடமாவன. எ - று.

உள்ளுதற்பொருட்டாகிய படரென்னும் உரிச்சொல் ஈண்டுப் படர்க்கையென ஈறுதிரிந்துநின்றது. (அ)

கசாள. படர்க்கை வினைமுற்று நாமங் குறிப்பிற்
பெறப்படுந் திணைபா லனைத்து மேனை
யிடத்தவற் றொருமைப் பன்மைப் பாலே.

இது முன்னர்க்கூறிய இடம்பற்றி நிகழுஞ் சொற்களான் விளங்கும் பாலுந் திணையுந் தொகுத்துணர்த்துகின்றது.

இ - ள். படர்க்கைமுற்றுவினையானும் படர்க்கைப்பெயரானுஞ் சொல்லுவான்குறிப்பானும் இருதிணையும் ஐம்பாலும் அறி

யப்படுந் தன்மை முன்னிலை வினைமுற்றானும் பெயரானும் ஒருமைப் பாலும் பன்மைப்பாலும் அறியப்படும். எ - று.

தன்மை முன்னிலை வினைமுற்றுப்பெயர்களால் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் அறியப்படுமெனவே தன்மைமுன்னிலைகள் இருதிணைக்கும் பொதுவாய்நிற்றல் பெற்றாம்.

உ-ம். உண்டான் உண்டாள் உண்டார் உண்டது உண்டன எனவும், அவன் அவள் அவர் அது அவை எனவும், படர்க்கைமுற்றுவினையானும் படர்க்கைப்பெயரானுந் திணையும் பாலும் விளங்கின. இருதிணைக்கும் ஆண்பால் பெண்பால்களுக்கும் பொதுவாய் நிற்கும் நீ நீர் என்பன நீவருதலான் அறிவுபெற்றேன் நீர் வருதலான் ஆசாரம்பெற்றேன் என்றக்கால் உயர்திணையென்பதூஉம் ஆண்பாலென்பதூஉம் நீவருதலான் முல்லையரும்பின நீர்தொக்குநிற்றலான் உடம்பாயிற்று என்றக்கால் மழையென்பதூஉம் ஐம்பூதமென்பதூஉங் குறிப்பான்விளங்கின. இருபாற்கும் பொதுவாய்நிற்கும் ஒருவரென்பதூஉம் ஒருவரான் அரிய தவம்பெற்றேன் என்றக்கால் ஆண்பாலென்பதூஉம் ஒருவரான் அரிய மடல்பெற்றேன் என்றக்காற் பெண்பாலென்பதூஉங் குறிப்பான் விளங்கின. அறிவும் ஆசாரமும் பெண்பாலாற் பெறலாகாவோவெனின் ஆகா. "நுண்ணறிவுடையோர் நூலொடுபழகினும்—பெண்ணறிவென்பது பெரும்பேதைமைத்தே" என்பவாகலின். உண்டேன் உண்டேம் உண்டாய் உண்டீர் எனவும், யான் யாம் நீ நீர் எனவும், தன்மைமுன்னிலை வினைமுற்றானும் பெயரானும் ஒருமைப்பாலும் பன்மைப்பாலும் விளங்கின. பிறவும் அன்ன. வினையை முற்கூறினார் பெயராற் றிணைபால் அறிதல் சிறுபான்மைத்தென்பது அறிவித்தற்கு. (கூ)

கசூஅ. இலக்கண முடைய திலக்கணப் போலி
மரூஉவென் றாகு மூவகை யியல்பு
மிடக்க ரடக்கன் மங்கலங் குழூஉக்குறி
யெனுமுத் தகுதியோ டாறும் வழக்கியல்.

இது மேல் வழக்கென்றதன் வகையுந் தொகையுங் கூறுகின்றது.

இ - ள். இலக்கணநெறியால் வருவதூஉம் இலக்கணமின்றேனும் அஃது உடையதுபோல அடிப்பட்ட சான்றோரால் வழங்கப் பட்டு வருவதூஉம் இலக்கணத்திற் சிதைந்து ஒருகாரணமின்றி

வழங்கற்பாடேபற்றி மரூஉமுடிபிற்ருய்வருவதூஉமென இம்மூவகையான் வரும் இயல்புவழக்கு நன்மக்களிடைக் கூறத்தகாத சொல்லை அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டாற் கூறுவதூஉந் தகுதிநோக்கி மங்கலமரபாற் கூறுவதூஉம் ஒவ்வொரு குழுவினுள்ளார் தத்தங் குறியாக இட்டுக் கூறுவதூஉமென இம்மூவகையான் வருந் தகுதிவழக்கினேடு கூட அறுவகைப்படும் வழக்குநெறி. எ-று.

நிலம் நீர் தீ வளி விசும்பு என்ருற்போல்வன இலக்கணமுடையன. இன்முன் முன்றில் கோவில் கோயில் பொதுவில் பொதியில் கண்மீ மீகண் என்ருற்போல்வன இலக்கணப்போலி. அருமருந்தன்ஞன் அருமந்தான் சோழன்நாடு சோணுடு பாண்டியன்நாடு பாண்டிநாடு என்ருற்போலச் சிதைந்து வருவனவும் வெள்யாடு வெண்களமர் கருங்களமர் என்ருற்போலப் பண்புகுறியாது சாதிப்பெயராய் வருவனவுங் குடத்துள்ளும் பிறகலத்துள்ளும் இருந்த நீரைச் சிறிதென்ஞது சிலவென்ருற்போல்வனவும் மரூஉ. “ஆமுன் வரூஉ மீகாரபகரம்” எனவும், கண்கழீஇவருதும் கான்மேனீர்பெய்துவருதும் கருமுகமந்தி செம்பினேற்றை “புலிநின் றிறந்தநீரலீரத்து” எனவும் வருவனவெல்லாம் இடக்கரடக்கல். இடக்கர் அவையலகிளவியென்பன ஒருபொருட்கிளவி. ஈகாரபகாரமென்பதுபோலக் கண்கழுவுதல் முதலாயின அவையலகிளவியைக் கிடந்தவாறு கூருது பிறிதோராற்ருற் கிளந்தனவல்லவெனினும் அவையலகிளவிப்பொருண்மையை உணர்த்தலின் ஒற்றுமைநயத்தான் அவையும் அவையலகிளவியைப் பிறிதோராற்ருற் கூறிய வாய்பாடாகவே கொள்ளப்படுமென்க. செத்தாரைத் துஞ்சினரென்றலுஞ் சுடுகாட்டை நன்காடென்றலும் ஓலையைத் திருமுகமென்றலுங் கெட்டதனைப் பெருகிற்றென்றலும் இவைபோல்வனவெல்லாம் மங்கலமரபினன் வருவன. பொற்கொல்லர் பொன்னைப்பறியென்றலும் வண்ணக்கர் காணத்தை நீலமென்றலும் ஆனைப்பாகர் ஆடையைக் காரையென்றலும் இவைபோல்வனவெல்லாங் குழூஉக்குறி. முன்னையமூன்றும் ஒருகாரணமின்றி இயல்பாய்வருதலின் இயல்புவழக்கென்றும் பின்னையமூன்றும் உயர்ந்தோரும் இழிந்தோரும் இவ்வாறு உரைப்பது தக்கதென்று குறித்து வழங்கலிற் தகுதிவழக்கென்றும் ஆயின.

இலக்கணப்போலி அடிப்பாட்டிற் திரிக்கப்படாது முன்றிலெனவே சொல்லப்படும்; மரூஉ இலக்கணத்தானுஞ் சிதைவர்னும் முறையே அருமருந்தன்ஞனெனவும் அருமந்தானெனவுஞ் சொல்லப்படும்; இவை இரண்டிற்குந் தம்முள்வேற்றுமை. மங்கலமொழி

அவையலகிளவிபோல மறைத்தவாய்பாட்டானே சொல்லவேண்டு மென்னும் யாப்புறவின்றிச் செத்தாரென இலக்கணவாய்பாட்டானுந் தகவு நோக்கித் துஞ்சினாரென மறைத்தவாய்பாட்டானுஞ் சொல்லப்படும். இவை இரண்டற்குந் தம்முள்வேற்றுமை. அற்றேல் "மெழுகுமாப்பிகண்கலுழ்நீரானே" எனவும் "ஆப்பிநீரெங்குந்தெளித்துச்சிறுகாலை" எனவும் யானையிலண்டம் யாட்டுப்பிழுக்கை எனவும் இடக்கர்வாய்பாட்டானும் வழங்கப்படுமாலோவெனின் "மறைக்குங் காலை மரீஇய தொரால்" என்பவாகலின் இங்ஙிகரன மேற்கூறிட்டு மருவி வழங்கலின் அமைவுடையவென்க: "பகல்கான்றெழுதரும்பல்கதிர்ப்பரிதி" என்புழிக் கான்றென்னும் இடக்கர் அணிகுறித்துப் பிறிதோர்பொருள்மேல் நிற்றலின் மறைக்கப்படாமையுந் தன்பொருள்மேல் நின்றுழியே மறைக்கப்படுதலும் உரித்தெனக்கொள்க. வெள்யாடுமுதலியவற்றை மங்கலமொழியென்பாரும் உளர். அவை தகுதிநோக்காது வழங்கற்பாடேபற்றி வருதலின் மரூஉவாவதல்லது மங்கலமொழியாகாமை உணர்க.(கO)

கசுகூ பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல
சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்
வல்லோ ரணிபெறச் செய்வது செய்யுள்.

இது மேற் செய்யுளென்றதன் இயல்புகூறுகின்றது.

இ - ள். நரம்புமுதலிய தாதுக்களான் உயிர்க்கு இடனாக இயற்றப்பட்ட உடம்புபோல "இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென் —றனைத்தே செய்யு ளீட்டச் சொல்லே" என்பவாகலின் அந்நால்வகைச் சொற்களாற் பொருட்கு இடனாக அறிவினாற் கற்றுவல்லோர் அலங்காரம்பெறச் செய்வது செய்யுளாம். எ - று.

சொல்லும் எழுத்தாற்பெறப்படுதலின் எழுத்துச்சொற்பொருளணி நான்கினானும் இயல்வது செய்யுளாயிற்று. ஆகவே, இவ்வைந்துந் தம்முள் ஒன்றையின்றி அமையாவென்பதூஉம் பெற்றாம்.

வரலாறு;—"வருங்குன்றமொன்றுரித்தோன் றில்லையம்பலவன் மலயத்—திருங்குன்றவாணரிளங்கொடியே யிடரெய்தலெம்மூர்ப்—பருங்குன்றமாளிகை நுண்களபத்தொளிபாயநும்மூர்க்—கருங்குன்றம்வெண்ணிறக்கஞ்சுகமேய்க்குங்கனங்குழையே." எனவரும்.

கஎ0. ஆகுபெயர் வினைக்குறிப் பன்மொழி விகார
முதறொகை தகுதி குறிப்போ டின்னவுங்
குறிப்பிற் றருமொழி யல்லன வெளிப்படை.

இது மேல் வெளிப்படை குறிப்பென்றன இவையென்று அவற்றின் இயல்பு கூறுகின்றது.

இ - ள். ஆகுபெயர்முதலியனவும் இவைபோல்வன பிறவுமாகிய சொற்கள் சொன்மாத்திரத்தாற் பொருளை விளக்காது சொல்லோடு கூடிய குறிப்பாற் பொருளை விளக்குஞ் சொற்களாம். இத் தன்மையன அன்றி வரும் எல்லாச்சொற்களுஞ் சொன்மாத்திரத் தாற் பொருளை விளக்கும் வெளிப்படைச்சொற்களாம். எ - று.

உ-ம். கடுத்தின்றான் புளித்தின்றான் என ஆகுபெயர் அவற்றது காயாகிய பிறிதுபொருளையுங் கரியன் செய்யன் என வினைக்குறிப்புமுற்று அவற்றது வினையாகிய இன்னனாயிருந்தானென்பதனையும் "பொற்றொடிதந்தபுனைமடல்" "அறற்கூந்தற்கில்லையருள்" என அன்மொழித்தொகைச்சொற்கள் அவற்றையுடையாளையும் "மரைமலர்குவிகமொடிகலியவங்கை" "வேதின்வெரிநினோதிமுதுபோத்து" "நீனிறப்பெருங்கடல்பாடெழுந்தொலிப்ப" என விகாரச்சொற்கள் முறையே தாமரை ஓந்தி நீலம் என்பனவற்றையுங் "குன்றாவிளையுளுயிர்நிலந்துன்புற்றுத்—தாவென்றிரப்பாடன்கை" "அறத்தாறிதுவெனவெள்ளைக்கிழிபு" என ஒருசொல்லின் முதனிற்கும் எழுத்து மாத்திரமே விதந்ததூஉம் ஒருபாட்டின் முதனிற்குஞ் சொல்மாத்திரமே விதந்ததூஉம் முறையே குரலும் விளரியும் உழையுந் துத்தமுந் தாரமும் இளியுங் கைக்கிளையுமாகிய சொற்களையும் "அறத்தாறிதுவெனவேண்டாசிவிகை—பொறுத்தானோடூர்ந்தானிடை" என்னும் பாட்டையும் "அலங்குளைப்புரவியைவரொடுசினைஇ" என ஐவரென்னுந் தொகைச்சொல் அறமகன்முதலிய ஐவரையும் "புலிநின்றிறந்தநீரலீரத்து" திருமுகம் பறி எனத் தகுதிவழக்குமூன்றும் முறையே இடக்கர்வாய்பாட்டான் உணரும் நீரையும் ஓலையையும் பொன்னையும் ஒருவரானறிவுபெற்றேன் கற்கறிக்கநன்கட்டாய் எனக் குறிப்புச்சொற்கள் முறையே ஆண்பாலையுந் தீங்கட்டாய் என்பதனையும் சொன்மாத்திரத்தான் அன்றிச் சொல்லோடு கூடிய குறிப்பான் விளக்கியவாறு காண்க. "இளைதாக முண்மரங் கொல்க களைநர்—கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்னுந் தொடர்மொழி நிலைபெற்றாற் களையலுறிற் களையலுற்றாரை அவர்தாங் கொல்வர் அதனாற் றீயாரை அவர் நிலைபெறாக் காலத்தே களைக என்னும்

பொருளை விளக்குதலுங் குறிப்பிற் தோன்றுதலாம். அணியிலக்கணங் கூறுகின்றார் இன்னோரன்னவற்றைப் பிறிதுமொழிதலென்பதோர் அணியென்ப.

இனி இன்னபிறவாவன "நாவலொடுபெயரியபொலம்" "திங்கள்விரவியபெயரினன்" என்றாற்போல்வன; சாம்பூநதம் புத்திசேனனென்பனவற்றைக் குறிப்பான் விளக்கிநிற்றலின்.

இனி வெளிப்படைச்சொல் அவன் இவன் உவன் வந்தான் சென்றான் என முறையே பொருளையும் பொருளது புடைபெயர்ச்சியையுஞ் சொல்மாத்திரத்தான் விளக்கியவாறு காண்க. அடுநறா பறவாக்குழவி பாயாவேங்கை என்றாற்போல்வனவும் அன்ன; பிழியினையுங் கானமல்லிகையினையும் வேங்கைமரத்தையும் பொதுமையினீக்கி முறையே விளக்கிநிற்றலின். பிறவும் அன்ன. (கஉ)

கஎக. அதுவே, யியற்சொற் றிரிசொல் லியல்பிற் பெ
யெனவிரண் டாகு மிடையுரி யடுத்து [யர்வினை
நான்குமாந் திசைவட சொல்லணு காவழி.

இது மேல் அவ்வாற்றாற் பகுத்த சொல் இவ்வாற்றான் இத்துணையாமென்கின்றது.

இ - ள். மேற் கூறப்பட்ட சொல்லே இயற்சொல்லுந் திரிசொல்லுமாகிய இரண்டன் தன்மையானே கூறுபடும் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமென இரண்டாம், இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாகிய இரண்டுங் கூட நான்குவகைத்துமாந், திசைச்சொல்லும் ஆரியச்சொல்லுங் கூடாத இடத்து. எ - று.

இங்ஙனங் கூறிய அதனாற் போந்தது பெயரியற்சொல் பெயர்த்திரிசொல் வினையியற்சொல் வினைத்திரிசொல் இடையியற்சொல் இடைத்திரிசொல் உரியியற்சொல் உரித்திரிசொல் என எண்வகைத்தாந் தமிழ்நாட்டிற்கு உரிய சொல் என்பதாம். அற்றேல் அடுத்து நான்குமாமென்னாது ஒன்றாக ஓத அமையும் பிறவெனின், பெயர்ச்சொற் பொருளை விளக்குதலானும் வினைச்சொற் பொருளது புடைபெயர்ச்சியை விளக்குதலானும் அவற்றை முன் ஓதி இடைச்சொல் அவ்விரண்டற்கும் விகுதி வேற்றுமை உவமை சாரியை உருபுகளாகியுஞ் சில பெயர்வினைகளாகியும் வருதலானுந் தெரிநிலை தேற்றம் முதலிய பொருண்மை விளக்குதலானும் உரிச்சொல்லும் ஒருவாற்றாற் பெயரேயெனினும் பொருளைவிளக்கலும் பெரும்பான்

மையும் உருபேற்றலும் இன்றிச் சில வினைபோல வரலானும் இவற்றை அவற்றின்பின் ஓதினாரென்க. அல்லதூஉம் இவை பெயர்வினைபோல இலக்கணம் முற்றும் ஒருதலையாக ஏற்றுத் திணை பாலிடங்களை விளக்கித் தனி நடவா ஆகலானும் வேறு ஓதவேண்டு மென்பது. திசைவடசொல் அணுகாவழியெனவே இப்பகுதிப்படு வது தமிழ்நாட்டிற்கு உரிய சொல்லென்பதூஉம் அவையும் ஈண்டு அணுகப்பெறுமென்பதூஉம் அணுகுதல் ஒருதலையன்மையின் அவற்றிற்கு இலக்கணம் ஈண்டுக் கூறாரென்பதூஉமாயிற்று. (கங)

களஉ. செந்தமி ழாகித் திரியா தியார்க்குந்
தன்பொருள் விளக்குந் தன்மைய தியற்சொல்.

இது மேல் இயற்சொலென்றதன் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். செந்தமிழ்நிலத்தின்கண்ணே வழங்குஞ் செவ்விய தமிழ்ச்சொல்லாய்ச் சொல்லானும் பொருளானுந் திரிபின்றி அச் செந்தமிழ்நிலத்தார்க்கும் ஏனைக் கொடுந்தமிழ்நிலத்தார்க்கும் ஒப் பத் தனது பொருளினை விளக்கும் இயல்பையுடையது இயற் சொல்லாம். எ - று.

இயல்பாகியசொல் இயற்சொல்லென்க. அவை நிலம் நீர் தீ வளி சோறு கூழ் பால் மக்கள் மரம் தெங்கு கமுகு என்றாற்போல் வன எனக்கொள்க. செந்தமிழ்நிலமாவது வைகையாற்றின் வடக் கும் மருதயாற்றின் தெற்குங் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம். (கச)

களங. ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியு
மிருபாற் றென்ப திரிசொற் கிளவி.

இது மேற் திரிசொல்லென்றதன் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். அவ்வியற்சொல் திரிந்த திரிசொல்லாகிய சொல்லே ஒருபொருள்குறித்துவரும் பலசொல்லாகியும் பலபொருள்குறித்து வரும் ஒருசொல்லாகியும் இருவகைப்படுமென்று கூறுவர் ஆசி ரியர். எ - று.

அவ்வியற்சொல் திரிந்த திரிசொல்லினது திரிபாவது உறுப் புத்திரிதலும் முழுவதூஉந்திரிதலுமென இருவகைத்து. கிள்ளை மஞ் ஞை என்பன உறுப்புத் திரிந்தன, தத்தை பிணிமுகம் என்பன முழுவதூஉந் திரிந்தன. வெற்பு விலங்கல் விண்டு என்பன ஒருபொ

ருள்குறித்த வேறுபெயர்த்திரிசொல். இயங்கினன் ஏகினன் என்பன ஒருவினைகுறித்த வேறுவினைத்திரிசொல். உண்கே உண்கோ என்பன வினவொருளுமைகுறித்த வேறிடைத்திரிசொல். சால உறு தவ என்பன மிகுதியொருபைகுறித்த வேறுரித்திரிசொல். உந்தியென்பது கொப்பூழுந் தேர்த்தட்டும் யாழ்ப்பத்தலுறுப்புங் கான்யாறும் உணர்த்தலின் வேறுபொருள்குறித்த ஒருபெயர்த்திரிசொல். துஞ்சினரென்பது உறங்கினரையும் நிலைபெற்றாரையும் உணர்த்தலான் வேறுவினைகுறித்த ஒருவினைத்திரிசொல். கொன் என்பது பயமின்மை காலம் பெருமையென்பனவற்றை உணர்த்தலான் வேறுபொருள்குறித்த ஓரிடைத்திரிசொல். கடி என்பது காப்பு கூர்மை முதலியவற்றை உணர்த்தலான் வேறுபொருள்குறித்த ஓருரித்திரிசொல். பிறவும் அன்ன. (கரு)

கஎச. செந்தமிழ் நிலஞ்சேர் பன்னிரு நிலத்தினு
மொன்பதிற் றிரண்டினிற் றமிழொழி நிலத்தினுந்
தங்குறிப் பினவே திசைச்சொ லென்ப.

இது, நிறுத்தமுறையானே இயற்சொல்லுந் திரிசொல்லும் உணர்த்தி, அவற்றின் பகுதியாய் இடைநின்ற பெயர் வினை இடை உரி நான்கினையும் மேல் உணர்த்திய நிறீஇ, எஞ்சிய இரண்டனுட் திசைச்சொல்லாமாறு உணர்த்துகின்றது.

இ - ள். செந்தமிழ்நாட்டைச் சூழ்ந்த கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டின்கண்ணும் பதினெண்ணிலத்துள் இருவகைத்தமிழாம் ஒருமொழிநிலத்தை ஒழிந்த மற்றைப் பதினேழ் நிலத்தின்கண்ணுந் தத்தங் குறிப்பினான் வழங்குவனவற்றைத் திசைச்சொல்லென்று சொல்லுவர் ஆசிரியர். எ - று.

செந்தமிழ்நாட்டைச் சூழ்ந்த கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனையுந் "தென்பாண்டிகுட்டங்குடங்கற்காவேண்பூழி—பன்றியருவாவதன்வடக்கு—நன்றாய—சீதமலாடுபுனனாடுசெந்தமிழ்சே—ரேதமில்பன்னிருநாட்டெண்" இதனான் அறிக. இவற்றுட் தென்பாண்டிநாட்டார் ஆவினைப்பெற்றமென்றுங் குட்டநாட்டார் தாயைத் தள்ளையென்றுங் குடநாட்டார் தந்தையை அச்சனென்றுங் கற்கா நாட்டார் வஞ்சரைக் கையரென்றும் வேணாட்டார் தோட்டத்தைக் கிழாரென்றும் பூழிநாட்டார் சிறுகுளத்தைப் பாழியென்றும் அருவாநாட்டார் செய்யைச் செறுவென்றும் அருவாவடதலையார் புளியை எகினமென்றுஞ் சீதநாட்டார் தோழனை எலுவனென்றும் வழங்குப. பிறவும் வந்துழிக் காண்க.

இனி இவற்றைச் சூழ்ந்த தமிழொழி பதினேழ்நிலத்தினையுஞ் "சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துளுக்குடகங்—கொங்கணங் கன்னடங் கொல்லந் தெலுங்கங் கலிங்கம் வங்கங்—கங்கமகதங் கவுடங் கடாரங் கடுங்குசலந்—தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதினேழ் புவி தாமிவையே." இதனான் அறிக. அருணம் காம்போசம் ஈழம் கூவிளம் பல்லவம் அங்கம் என்றற்றொடக்கத்தனவும் இவற்றின் பரியாயமும் இவற்றின்பகுதியுமாய் இவற்றுள்ளே அடங்குமென்க. அந்தோவென்பது சிங்களச்சொல். கரைய சிக்க குளிரவென்பன கருநடச்சொல். எருத்தைப் பாண்டிலென்பது தெலுங்குச்சொல். மாமரத்தைக் கொக்கென்பது துளுவச்சொல். ஒழிந்த சொற்களும் வந்துழிக் காண்க. (கசு)

களரு. பொதுவெழுத் தானுஞ் சிறப்பெழுத் தானு
மீரெழுத் தானு மியைவன வடசொல்.

இது மேல் வடசொல்லென்றதன் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொதுவாகிய எழுத்தானும் ஆரியத்திற்கே உரிய எழுத்தானும் அவ்விரண்டனானும் ஆக்கப்பட்டு ஈண்டைக்கு ஏற்ற பெற்றியாய்த் திரிந்து பொருந்துவன வடசொல்லாம். எ - று.

பொது எழுத்தாவன அச்சு என்று வழங்கும் உயிர் பதினாறனுள் இடையினன்கும் ஈற்றிலிரண்டும் ஒழித்து ஒழிந்தபத்தும் அல் என்று வழங்கும் மெய் முப்பத்தேழனுட் கசடதப என்னும் ஐந்து வருக்கங்களின் இடைக்கண் உரப்பியும் எடுத்துங் கனைத்துஞ் சொல்லப்பட்ட பதினைந்தும் ஒழித்து ஒழிந்த அவ்வருக்கங்களின் முதலினும் ஈற்றினும் நின்ற பத்தும் யரலவள என்னும் ஐந்துமாகிய இருபத்தைந்துமாம். சிறப்பெழுத்தாவன உயிருள் ஒழிந்த ஆறும் ஐந்துவருக்கங்களின் ஒழிந்த பதினைந்தும் முப்பதாம் மெய்முதல் நான்கும் முப்பத்தைந்தாம் மெய்முதல் மூன்றுமாகிய இருபத்தெட்டுமாம்.

**வ**ரலாறு;—வாரி மேரு குங்குமம் மணி மானம் மீனம் வீரம் வேணு காரணம் காரியம் நிமித்தம் காரகம் என்றாற்போல்வன அடிப்பட்ட சான்றோர் செய்யுட்கண் இயைந்து வந்தன. கமலம் அமலம் மூலம் கோபம் ஞானம் ஞேயம் தமாலம் தாரம் திலகம் நாமம் யானம் யோனி உற்பலம் என்றாற்போல்வன அவரோடு ஒருதன்மையர் செய்யுட்கண் இயைந்துவந்தன. இவ்விருவகைமொ

ழியும் பொதுவெழுத்தான் இயன்றன. "அரமியவியலகத்தியம்பும்" "தசநான்கெய்தியவிணைமருஞேன்ருள்" "வாதிகையன்னகவைக் கதிர்றைஞ்சிக்—கடுந்தேரிராமனுடன்புணர்சீதையை" "பேதையல்லமேதையங்குறுமகள்" "தைப்பமைசருமத்து" என்ருற்போல்வன அடிப்பட்ட சான்ருேர்செய்யுட்கண் இயைந்து வந்தன. தந்திரம் சூத்திரம் விருத்தி அருத்தாபத்தி உத்தி என்ருற்போல்வன நூலுள் இயைந்து வந்தன. பங்கயம் இடபம் விசயம் இருடி களம் மேகம் பந்தம் மயானம் விடம் துங்கம் பலம் பாரம் சற்சரை சாதி சித்தி சாதனம் அயன் அரி அரன் அருகன் ஆரம் சிங்கம் மோகம் தாமம் பக்கம் சூலம் சதம் போதகம் போதம் சத்தம் சலம் போகம் யோகம் வந்தனே வேலை சாலை மாலை உவமை வனிதை புரி மேதினி குமரி நதி அரங்கம் இயக்கன் உலோபம் உலோகம் நிருத்தம் கீதம் வாச்சியம் வச்சிரம் அருத்தம் கருமம் கருப்பம் காப்பியம் பருப்பதம் என்ருற்போல்வன அவரோடு ஒருதன்மையர் செய்யுட்கண் இயைந்து வந்தன. இவையெல்லாம் பொதுவுஞ் சிறப்புமாம் ஈரெழுத்தானுஞ் சிறப்பெழுத்தானும் இயற்றப்பட்டு ஆரியச்சிதைவாய்த் திரிந்து ஏற்கும் எழுத்துக்களான் மருவிவந்தன. பிறவும் அன்ன.

ஒன்றெனமுடித்தலான் நட்டம் கண்ணன் என்ருற்போலும் பாகதச்சிதைவாய் மருவிவந்தனவுங் கொள்க.

இவ்வாரியச்சொல் ஒருநிலத்திற்கே உரித்தன்றிப் பதினெண்ணிலத்திற்கும் விண்ணிற்கும் புவனதிக்கும் பொதுவாய்வருதலிற் திசைச்சொல்லுள் அடங்காமையான் வேறுகூறினர். அற்றேல் வடசொல்லென்றது என்னையெனின் ஆண்டு வழக்குப்பயிற்சி நோக்கியென்க. இவ்வெழுத்து இவ்வெழுத்தாய்த் திரிந்து வருமென வரையறுத்து ஓதப்புகின் அவ்வரையறையிற் பிறழ்ந்தும் வருதலின் அங்ஙனம் ஓதாது 'இயைவனவடசொல்' என்ருர். "வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ—யெழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே" "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" என்ருர் ஆசிரியர் தொல்காப்பியனுருமென்க. (கஎ)

கஎசு. பெயரெனப் படுபவை தெரியுங் காலை
யிடுகுறி காரண மரபோ டாக்கந்
தொடர்ந்து தொழிலல காலந் தோற்று
வேற்றுமைக் கிடனுய்த் திணைபா லிடத்தொன்
றேற்பவும் பொதுவு மாகிப் பாற்படப்
பொருள்புலப் படுப்பன வென்மனுர் புலவர்.

இவ்வதிகாரத்துட் சொல்லிலக்கணம் உணர்த்துவான்புகுந்து ஒருவகையாற் சொல்லாவது இவ்வியல்பிற்றென்பது தோன்ற அதன் பகுதியும் அஃது உணர்த்தும் பொருளும் அப்பொருட்கூறும் அவற்றை உணர்த்தும் இடமும் உணர்த்தும் பகுதியும் உரைத்துப் பின்னும் அச்சொல்லையே பெயர்முதலாக வகுத்துக்கூறிப் பின்னர் விரித்துக்கூறுவான் தொடங்கினவற்றுள் இது பெயரது பொது விதியும் அதன் பகுதியுங் கூறுகின்றது.

இ - ள். பெயரென்று கூறப்படுவன இத்தன்மையவென்று அவற்றின் இயல்பு ஆராயுமிடத்துப் பிறிதோர் நிமித்தமின்றி வழங்குதற் பயத்தவாய் இதற்கு இது குறியென்று இட்டு வழங்கிவருதலையும் இவ்வியல்பிற்று இதுவென்று ஓர்நிமித்தம்பற்றி வருதலையும் மரபுபற்றி வருதலையும் ஒன்றன்பெயரை அதற்கு இயைபுடைய பிறிதொன்றற்கு ஆக்கும் ஆக்கம்பற்றி வருதலையும் பற்றி வினையான் வருவனவே காலத்தை விளக்க ஒழிந்தன காலத்தை விளக்காதனவாகி எட்டு வேற்றுமையுஞ் சார்தற்கு இடனாய் இருதிணை ஐம்பால் மூவிடங்களின் ஒன்றற்கு உரியவும் பலவற்றிற்கு உரியவுமாகிப் பகுதிப்படப்பொருளை விளக்குவனவாகிய சொற்களாமென்று சொல்லுவர் அறிவுடையோர். எ - று.

பெயரென்றது பொருள். அஃது ஈண்டு ஆகுபெயரான் அதனை உணர்த்துஞ்சொல் மேல் நின்றது.

வரலாறு;—நிலம் நீர் சோறு கூழ் என்றாற்போல்வன இடுகுறியாய்வந்தன. குழையன் நிலத்தன் கரியன் என்றாற்போல்வன காரணக்குறியாய் வந்தன. பாகன் இடையன் என்றாற்போல்வன மரபுபற்றி வந்தன. தெங்கு கமுகு என்றாற்போல்வன ஆக்கம்பற்றி வந்தன. உண்டான் தின்றான் என்றாற்போல்வன காலங்காட்டிப் படுத்தலோசையான் வினைமுதல் மேல் நின்ற வினைப்பெயர். உண்டவன் உண்ணுமவன் என்றாற்போல்வன காலங்காட்டி ஓசைவேறுபாட்டானன்றித் தாமே வினைமுதல்மேல் நின்ற வினைப்பெயர். "கொலைவர்கொடுமரந்தேய்த்தார்" அவனேறிற்றுக்குதிரை என்றாற்போல்வன காலங்காட்டிப் படுத்தலோசையாற் செயப்படுபொருண்மேல் நின்ற வினைப்பெயர். யான்சொன்னவன் உண்பவைநாழி என்றாற்போல்வன காலங்காட்டி ஓசைவேறுபாட்டானன்றித் தாமே செயப்படுபொருள்மேல் நின்ற வினைப்பெயர். உண்டல் தின்றல் என்றாற்போல்வன காலங்காட்டாது புடைபெயர்ச்சிமாத்திரமே உணர்த்தி நிற்கும் வினைப்பெயர். பூசல் வேட்டை என்றாற்

போல்வன காலங்காட்டலும் புடைபெயர்ச்சி உணர்த்தலுமின்றி நிற்கும் வினைப்பெயர். பிறவாற்ரான் வருவன உளவேல் அவையுங் கொள்க. ஏனைவிகற்பமெல்லாம் மேற் பெறப்படும். (கஅ)

களஎ. அவற்றுட், கிளையெண் குழூஉமுதற் பல்பொரு
ளூர்வா னகம்புறன் முதல நிலன்யாண் [டிணைதே
டிருது மதிநா ளாதிக் காலந்
தோள்குழன் மார்புகண் காது முதலுறுப்
பளவறி வொப்பு வடிவு நிறங்கதி
சாதி குடிசிறப் பாதிப் பல்குண
மோத லீத லாதிப் பல்வினை
யிவற்றொடு சுட்டு வினாப்பிற மற்றை
யுற்றனவ் வீறு நம்பி யாடூஉ
விடலை கோவேள் குரிசி றோன்ற
லின்னன வாண்பெய ராகு மென்ப.

மேல் ஒன்றற்கு ஏற்பவும் என்றவற்றுள் இஃது ஆண்பாற்கு உரிய பெயராமாறு கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய பெயர்களுள் நால்வகைக் கிளையும் எண்ணுங் குழுவும் முதலிய பல்பொருளும் ஐந்திணையுந் தேயமும் ஊரும் வானும் அகமும் புறமும் முதலிய நிலனும் யாண்டும் பருவமுந் திங்களும் நாளும் முதலிய காலமுந் தோளுங் குழலும் மார்புங் கண்ணுங் காதும் முதலிய உறுப்பும் அளவும் அறிவும் ஒப்பும் வடிவும் நிறனுங் கதியுஞ் சாதியுங் குடியுஞ் சிறப்பும் முதலிய பண்பும் ஓதலும் ஈதலும் முதலிய பலதொழிலுமாகிய இவ்வறுவகையினையுஞ் சுட்டினையும் வினாவினையும் பிறவென்பதனையும் மற்றையென்பதனையும் பொருந்திவரும் னகர ஈற்றுப் பெயர்களும் நம்பி ஆடூஉ விடலை கோ வேள் குரிசில் தோன்றல் என்னுந் தம்மை உணர நின்ற பெயர் ஏழும் இவைபோல்வன பிறவுமாகிய பெயர்களும் ஆண்பாற்கு உரிய பெயர்களாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

ஆண்பாலெனவே உயர்திணையென்பதூஉம் ஒருமையென்பதூஉந் தாமே விளங்கும். மேல்வருவனவற்றிற்கும் இவ்வுரை கொள்க.

வரலாறு;—தமன் நமன் நுமன் எமன் எனவரும் இத்திறத்தன நான்குங் கிளைப்பெயர். தம்மான் நம்மான் நும்மான் எம்மான்

இவையும் அன்ன. ஒருவனென்பது எண்ணியற்பெயர். அவையத்தான் அத்திகோசத்தான் என்றாற்போல்வன குழூஉப்பெயர். இளந்துணை மகார் தம்மிற் கூடிவிளையாடல் குறித்த பொழுதைக்குத் தாமே படைத்து இட்டுக்கொண்டது. பட்டிபுத்திரன் கங்கமாத்திரன் என்றாற்போலுங் கூடிவருவழக்கின் ஆடியற்பெயரும் அன்ன. பொருளன் பொன்னன் முடியன் என்றாற்போல்வன பொருட்பெயர். இவையெல்லாம் பொருள்பற்றி வந்தன. வெற்பன் பொருப்பன் சிலம்பன் கானவன் குறவன் எனவும் எயினன் மறவன் எனவும் நாடன் பொதுவன் அண்டன் ஆயன் எனவும் மகிழ்நன் ஊரன் விளைஞன் களமன் எனவும் சேர்ப்பன் துறைவன் பரதன் நுளையன் எனவும் அருவாளன் சோழியன் எனவும் அம்பர்கிழான் பேரூர்கிழான் கருவூரான் கூடலான் உறையூரான் எனவும் வானன் அகத்தான் புறத்தான் எனவும் வரும் இத்திறத்தனவெல்லாம் இடம்பற்றி வந்த இடப்பெயர். ஈராட்டையான் மூவாட்டையான் எனவும் வேனிலான் காரான் எனவும் தையான் மாசியான் எனவும் ஆதிரையான் ஓணத்தான் எனவும் நெருநலான் இற்றையான் எனவும் வரும் இத்திறத்தனவெல்லாங் காலம்பற்றிவந்த காலப்பெயர். திணிதோளான் சுரிகுழலான் வரைமார்பான் செங்கண்ணன் அலைகாதான் என்றாற்போல்வனவெல்லாஞ் சினைபற்றி வந்த சினைப்பெயர். பெரியான் சிறியான் எனவும் அறிவன் புலவன் எனவும் பொன்னொப்பான் மணியொப்பான் எனவும் கூனன் குறளன் எனவும் கரியான் செய்யான் எனவும் மகன் மானுடன் தேவன் நாகன் எனவும் அந்தணன் அரசன் வணிகன் வேளாளன் எனவும் சேரன் சோழன் பாண்டியன் மலையமான் கட்டிமான் எனவும் ஆசிரியன் படைத்தலைவன் சேனாவரையன் எனவும் வரும் இத்திறத்தனவெல்லாங் குணம்பற்றிவந்த பண்புப்பெயர். ஓதுவான் ஈவான் உண்பான் உறங்குவான் எனவும் ஊணன் தீனன் எனவும் தச்சன் கொல்லன் கணக்கன் பிணக்கன் எனவும் வரும் இத்திறத்தனவெல்லாந் தொழில்பற்றி வந்த தொழிற்பெயர். அவன் இவன் உவன் எனவும் அன்னன் அனையன் எனவும் வரும் இத்திறத்தனவெல்லாஞ் சுட்டு அடுத்துவந்த சுட்டுப்பெயர். எவன் ஏவன் யாவன் என்றாற்போல்வனவெல்லாம் வினா அடுத்துவந்த வினாப்பெயர். பிறன் மற்றையன் என இவை இடைச்சொற்களாகிய பிற. மற்றை அடுத்து வந்த பெயர். நம்பி ஆடூஉ விடலை கோ வேள் குரிசில் தோன்றல் என்பன தனிப்பெயர். இன்னனவென்றதனானே ஆண்மகன் ஏனாதி காவிதி எட்டி வில்லி வாளி குடுமி சென்னி கிள்ளி வழுதி செட்டி கோற்றந்தை சேய் ஏந்தல் செம்மல் அண்ணல் ஆண்டையான் ஆங்கணன்

ஆயிடையான் என்றாற்போல்வனவுங் கொள்க. அந்தணன் முதலியன ஒரோவழிப் பாம்புமுதலாயினவற்றையும் உணர்த்துமன்றே? அவ்வழி அஃறிணைப்பெயராமேனும் உயர்திணை ஆண்பாலுணர்த்தல் பெரும்பான்மையாகலிற் சாதிப்பெயராகக் கூறினர். (கசு)

களஅ. கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவுந்
தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

இது பெண்பாற்கு உரிய பெயராமாறு கூறுகின்றது.

இ - ள். மேற் கிளைமுதலாகக் கூறப்பட்ட பொருட்பகுதிகளுள் ளகர ஒற்றிற்கும் இகரத்திற்கும் பொருந்திய ஈற்றான் வருவனவுந் தோழி செவிலி மகடூஉ நங்கை தையல் என்னுந் தம்மை உணரநின்ற பெயர் ஐந்துடனே இவைபோல்வன பிறவும் பெண்பாற்கு உரிய பெயர்களாம். எ - று.

ஏற்ற ஈற்றவுமென்றார் ளவ்வொற்று ஏற்பனவும் இகரம் ஏற்பனவும் இரண்டும் ஏற்பனவும் இரண்டும் ஏலாதனவும் உள என்றற்கு.

வரலாறு;—தமள் நமள் நுமள் எமள் எனவும் தம்மாள் நம்மாள் நும்மாள் எம்மாள் எனவும் அவையத்தாள் அத்திகோசத்தாள் எனவும் பொருளாள் பொன்னாள் முடியாள் எனவும் இவ்வாறே ணகர ஈற்றை ளகர ஈறாக ஏற்பன அறிந்தொட்டுக. ஒருத்தி குறத்தி எயிற்றி மறத்தி ஆய்ச்சி உழத்தி பரத்தி அருவாட்டி சோழிச்சி பேரூர்கிழத்தி அம்பர்கிழத்தி பழையனூருடைச்சி அரசுருடைச்சி மானுடத்தி தேவி நாகி பார்ப்பனி அரசி வாணிச்சி வெள்ளாடிச்சி படைத்தலைவி சேனாவரசி கணக்கிச்சி தச்சிச்சி என்றாற்போல்வன இகரம் ஏற்றன. திணிதோளாள் திணிதோளி சுரிகுழலாள் சுரிகுழலி கூனள் கூனி என்றாற்போல்வன அவ்விருவகையும் ஏற்றன. வெற்பன் பொருப்பன் என்றாற்போல்வன அவ்விருவகையும் ஏலாதன. தோழிமுதலிய ஐந்துந் தனிப்பெயர்.

இன்னன என்றதனானே பெண்டாட்டி பெண்மகள் மகள் பெண்டு இருளை பாங்கி பேதை பெதும்பை முதலியனவும் நாலுவ

ரையிறந்து புறத்து விளையாடும் பருவத்துப் பெண்மகன் எனவருவதூஉம் பிறவுங்கொள்க. "ஊரார்பெண்டெனமொழிகவென்னை" "நின்—பெண்டெனப்பிறர்கூறும்பழிமாறப்பெறுகிற்பின்" எனச் செய்யுட்கண்ணும் பெண்டு வருமாறு காண்க. (உ0)

களகூ. கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவுங்
கள்ளெ னீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி யாகும்.

இது பலர்பாற்கு உரிய பெயராமாறு கூறுகின்றது.

இ - ள். மேற் கிளைமுதலாகக் கூறப்பட்ட பொருட்பகுதிகளைப் பொருந்திவரும் ரகார ஒற்றை ஈறாக உடைய சொற்களும் அவற்றுட் கள்ளென்னும் விகுதியை ஈறாக உடைய சொற்களின் ஈண்டைக்குப் பொருந்துவனவும் இவைபோல்வன பிறவும் பலர்பாற்கு உரிய பெயரின் திறனும். எ - று.

வரலாறு;—தமர் நமர் நுமர் எமர் ஒருவர் இருவர் முப்பத்துமூவர் என னகர ஈற்றை ரகர ஈறாக்கிக் காண்க. அடிகள் முனிகள் மனுக்கள் கோக்கள் வேள்கள் விடலைகள் வில்லிகள் வாளிகள் கணிகள் மடந்தைகள் பரத்தைகள் உழத்திகள் மறத்திகள் என்றாற்போல்வன கள்ளீற்றுள் ஈண்டைக்கு ஏற்பன. பிற என்றதனானே மாந்தர் மக்கள் மகார் சிறார் எல்லாரும் தந்தையர் தாயர் பெருங்காலர் பெருந்தோளர் பட்டிபுத்திரர் கங்கமாத்திரர் பெண்டிர் பெண்டுகள் மடந்தையர் உழத்தியர் வேளிர் என்றாற்போல்வன பிறவுங் கொள்க. "வெறியுறுகமழ் கண்ணி வேந்தர் கட்காயினும்" எனவும் "பிறந்தவர்களெல்லாம்" எனவும் வருவனவெல்லாவற்றிற்கும் ரகர ஒற்றுங் கள்ளென்விகுதியும் ஒருங்குநிற்பினும் ரகார ஒற்றே பால்விளக்கலின் ஏனைக் கள்ளீறு இசைநிறைத்து நின்றதேயாம். மேல் இவ்வாறு வருவனவற்றிற்கெல்லாம் இவ்வுரைகொள்க. (உக)

கஅ0. வினவுஞ் சுட்டுஞ் சுட்டுமுத லாய்தமும்
பொருண்முத லாறுந் தொடருந் துவ்வீ
றென்றெனெண் ணின்னன வொன்றன் பெயரே.

இஃது அஃறிணையொருமைப்பெயராமாறு கூறுகின்றது.

இ - ள். வினவெழுத்துக்களையுஞ் சுட்டெழுத்துக்களையுஞ் சுட்டெழுத்துக்களை முதலாகவுடைய ஆய்தவெழுத்தையும் பொருண்

ஆயிடையான் என்றாற்போல்வனவுங் கொள்க. அந்தணன் முதலி யன ஒரோவழிப் பாம்புமுதலாயினவற்றையும் உணர்த்துமன்றே? அவ்வழி அஃறிணைப்பெயராமேனும் உயர்திணை ஆண்பாலுணர்த் தல் பெரும்பான்மையாகலிற் சாதிப்பெயராகக் கூறினர். (கக)

களஅ. கிளைமுத லாகக் கிளந்த பொருள்களுள்
ளவ்வொற் றிகரக் கேற்ற வீற்றவுந்
தோழி செவிலி மகடூஉ நங்கை
தையலோ டின்னன பெண்பாற் பெயரே.

இது பெண்பாற்கு உரிய பெயராமாறு கூறுகின்றது.

இ - ள். மேற் கிளைமுதலாகக் கூறப்பட்ட பொருட்பகுதிக ளுள் ளகர ஒற்றிற்கும் இகரத்திற்கும் பொருந்திய ஈற்றான் வரு வனவுந் தோழி செவிலி மகடூஉ நங்கை தையல் என்னுந் தம்மை உணரநின்ற பெயர் ஐந்துடனே இவைபோல்வன பிறவும் பெண் பாற்கு உரிய பெயர்களாம். எ - று.

ஏற்ற ஈற்றவுமென்றார் ளவ்வொற்று ஏற்பனவும் இகரம் ஏற் பனவும் இரண்டும் ஏற்பனவும் இரண்டும் ஏலாதனவும் உள என்றற்கு.

வரலாறு;—தமள் நமள் நுமள் எமள் எனவும் தம்மாள் நம் மாள் நும்மாள் எம்மாள் எனவும் அவையத்தாள் அத்திகோசத்தாள் எனவும் பொருளாள் பொன்னாள் முடியாள் எனவும் இவ்வாறே ளகர ஈற்றை ளகர ஈறாக ஏற்பன அறிந்தொட்டுக. ஒருத்தி குறத்தி எயிற்றி மறத்தி ஆய்ச்சி உழத்தி பரத்தி அருவாட்டி சோழிச்சி பே ரூர்கிழத்தி அம்பர்கிழத்தி பழையனூருடைச்சி அரசூருடைச்சி மானுடத்தி தேவி நாகி பார்ப்பனி அரசி வாணிச்சி வெள்ளாடிச்சி படைத்தலைவி சேனாவரசி கணக்கிச்சி தச்சிச்சி என்றாற்போல்வன இகரம் ஏற்றன. திணிதோளாள் திணிதோளி சுரிகுழலாள் சுரிகு ழலி கூனாள் கூனி என்றாற்போல்வன அவ்விருவகையும் ஏற்றன. வெற்பன் பொருப்பன் என்றாற்போல்வன அவ்விருவகையும் ஏலா தன. தோழிமுதலிய ஐந்துந் தனிப்பெயர்.

இன்னன என்றதனானே பெண்டாட்டி பெண்மகள் மகள் பெண்டு இருளை பாங்கி பேதை பெதும்பை முதலியனவும் நானுவ

ரையிறந்து புறத்து விளையாடும் பருவத்துப் பெண்மகன் எனவருவ தூஉம் பிறவுங்கொள்க. "ஊரார்பெண்டெனமொழிகவென்னை" "நின்—பெண்டெனப்பிறர்கூறும்பழிமாறப்பெறுகிற்பின்" எனச் செய்யுட்கண்ணும் பெண்டு வருமாறு காண்க. (உ0)

களகூ. கிளந்த கிளைமுத லுற்றரவ் வீற்றவுங்
கள்ளொ னீற்றி னேற்பவும் பிறவும்
பல்லோர் பெயரின் பகுதி யாகும்.

இது பலர்பாற்கு உரிய பெயராமாறு கூறுகின்றது.

இ - ள். மேற் கிளைமுதலாகக் கூறப்பட்ட பொருட்பகுதிக ளைப் பொருந்திவரும் ரகார ஒற்றை ஈருக உடைய சொற்களும் அவற்றுட் கள்ளென்னும் விகுதியை ஈருக உடைய சொற்களின் ஈண்டைக்குப் பொருந்துவனவும் இவைபோல்வன பிறவும் பல பாற்கு உரிய பெயரின் திறனும். எ - று.

வ்ரலாறு;—தமர் நமர் நுமர் எமர் ஒருவர் இருவர் முப்பத்துமூ வர் என னகர ஈற்றை ரகர ஈருக்கிக் காண்க. அடிகள் முனிகள் மனுக்கள் கோக்கள் வேள்கள் விடலைகள் வில்லிகள் வாளிகள் கணிகள் மடந்தைகள் பரத்தைகள் உழத்திகள் மறத்திகள் என்ருற் போல்வன கள்ளீற்றுள் ஈண்டைக்கு ஏற்பன. பிற என்றதனுனே மாந்தர் மக்கள் மகார் சிருர் எல்லாரும் தந்தையர் தாயர் பெருங்கா லர் பெருந்தோளர் பட்டிபுத்திரர் கங்கமாத்திரர் பெண்டிர் பெண்டு கள் மடந்தையர் உழத்தியர் வேளிர் என்ருற்போல்வன பிறவுந் கொள்க. "வெறியுறுகமழ் கண்ணி வேந்தர் கட்காயினும்" எனவும் "பிறந்தவர்களெல்லாம்" எனவும் வருவனவெல்லாவற்றிற்கும் ரகர ஒற்றுங் கள்ளென்விகுதியும் ஒருங்குநிற்பினும் ரகார ஒற்றே பால்வி ளக்கலின் ஏனைக் கள்ளீறு இசைநிறைத்து நின்றதேயாம். மேல் இவ்வாறு வருவனவற்றிற்கெல்லாம் இவ்வுரைகொள்க. (உக)

கஅ0. வினவுஞ் சுட்டுஞ் சுட்டுமுத லாய்தமும்
பொருண்முத லாறுந் தொடருந் துவ்வீ
ருென்றனெண் ணின்னன வொன்றன் பெயரே.

இஃது அஃறிணையொருமைப்பெயராமாறு கூறுகின்றது.

இ - ள். வினவெழுத்துக்களையுஞ் சுட்டெழுத்துக்களையுஞ் சுட்டெழுத்துக்களை முதலாகவுடைய ஆய்தவெழுத்தையும் பொருண்

முதலாறனையும்பற்றிவருந் துவ்வீற்றுச்சொற்களும் ஒன்றென எண்ணப்படும் பொருண்மேல் நிற்கும் ஒன்றென்னுஞ் சொல்லும் அவைபோல்வனபிறவும் அஃறிணையொருமைப் பெயர்களாம். எ - று.

வரலாறு;—ஏது எது யாது எனவும் அது இது உது எனவும் அஃது இஃது உஃது எனவும் குழையது புறத்தது மூலத்தது கோட்டது கரியது ஊணது எனவும் ஒன்று எனவும் வரும். இன்னன என்றதனுனே பிறிது மற்றையது உள்ளது இல்லது என்றூற்போல்வன பிறவுங்கொள்க. (௨௨)

கஅக. முன்ன ரவ்வொடு வருவை யவ்வுஞ்
சுட்டிறு வவ்வுங் கள்ளிறு மொழியு
மொன்ற லெண்ணு முள்ள வில்ல
பல்ல சில்ல வுளவில பலசில
வென்பவும் பிறவும் பலவின் பெயரே.

இஃது அஃறிணைப்பன்மைப்பெயராமாறு கூறுகின்றது.

இ - ள். மேல் அஃறிணையொருமைக்கு ஓதிய பொருண்மைக்கண் ஏற்பனபற்றி வரும் வகர ஐகார ஈற்றுச்சொற்களும் அகர ஈற்றுச்சொற்களுஞ் சுட்டெழுத்துக்களைப்பொருந்திய வகர ஈற்றுச்சொற்களுங் கள்ளென்னும் விகுதியை ஈறாகவுடைய சொற்களும் ஒன்றனை ஒழித்த ஏனை எண்ணப்படும் பொருண்மேல் நிற்குஞ்சொற்களும் உள்ள என்பதுமுதலிய எட்டும் இவைபோல்வன பிறவும் அஃறிணைப்பன்மைப்பாற்கு உரிய பெயர்களாம். எ - று.

வரலாறு;—ஏவை எவை யாவை அவை இவை உவை நெடியவை குறியவை கரியவை செய்யவை நல்லவை தீயவை எனவும் குழையன குழைய புறத்தன புறத்த மூலத்தன மூலத்த கோட்டன கோட்ட கரியன கரிய ஊணன ஊண எனவும் அவ் இவ் உவ் எனவும் ஆக்கள் குதிரைகள் தெங்குகள் கடல்கள் மலைகள் எனவும் இரண்டு பத்து நூறு ஆயிரம் எனவும் உள்ள இல்ல பல்ல சில்ல உள இல பல சில எனவும் வரும். பிற என்றதனுனே யாபல்லவை சில்லவை உள்ளவை இல்லவை உள்ளன இல்லன பிற மற்றைய மற்றையன என்றூற்போல்வனவுங் கொள்க. (௨௩)

கஅ௨. பால்பகா வஃறிணைப் பெயர்கள்பாற் பொதுவுமைய.

இஃது அஃறிணையியற்பெயர்க்கு ஆவதோர் இயல்பு கூறுகின்றது.

இ - ள். கள்ளோடு சிவணுமையிற் பால்வரையறைப்படாது நின்ற அஃறிணையியற்பெயர்கள் அத்திணை இருபாற்கும் பொது வாய்நிற்றலை உடைய. எ - று.

வரலாறு;—ஆவந்தது வந்தன குதிரைவந்தது வந்தன ஆவொன்று பல குதிரையொன்று பல எனவரும். (உச)

கஅரு. முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்குஞ்
சினைமுதற் பெயரொரு நான்குமுறை யிரண்டுந்
தன்மை நான்கு முன்னிலை யைந்து
மெல்லாந் தாந்தா னின்னவும் பொதுப்பெயர்.

நிறுத்தமுறையானே ஒன்றற்கு ஏற்பன கூறிப் பொதுப்பெயர் கூறுவனவற்றுள் இஃது அதன் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

இ - ள். சாத்தன் சாத்தி கோதை யானை என்றாற்போல வழங்குதற்பயத்தவாய நிமித்தமின்றிப் பொருள்பற்றி வரும் இடுகுறிப்பெயராகிய முதற்பெயர்வகை நான்கும் முடவன் முடத்தி செவியிலி நெடுங்கழுத்தல் என்றாற்போலச் சினையுடைமையாகிய நிமித்தம் பற்றி முதன்மேல் வருஞ் சினைப்பெயர்வகை நான்கும் முடக்கொற்றன் முடக்கொற்றி கொடும்புறமருதி பெருங்கால்யானை என்றாற்போலச் சினைப்பெயரோடு தொடர்ந்தல்லது பொருளுணர்த்தாது வருஞ் சினைமுதற்பெயர்வகை நான்குந் தந்தைதாய் என்றாற்போலப் பிறவியான் ஒருவரோடு ஒருவற்கு உளதாம் இயைபுபற்றி வரும் பெயராகிய முறையுடைப்பொருண்மேல் வரும் முறைப்பெயர்வகை இரண்டும் யான் நான் யாம் நாம் எனவருந் தன்மைப்பெயர்வகை நான்கும் எல்லீரும் நீயிர் நீவிர் நீர் நீ எனவரும் முன்னிலைப்பெயர் வகை ஐந்தும் எல்லாம் எனவும் தாம் எனவும் தான் எனவும் விதந்தோதப்பட்ட பெயர்வகை மூன்றுமாகிய இருபத்தாறுபெயரும் இவைபோல்வன பிறவும் விரவுப்பெயர்களாம். எ - று.

இவைபோல்வன பிறவாவன மக குழவி என்றாற்போல்வனவுங் காடன் காடி நாடன் நாடி தரையன் திரையன் என்றாற்போல்வனவும் முதியானெனப் பிராயம்பற்றியுஞ் சுமையனெனத் தொழில்பற்றியும் வருவனபோல்வனவும் பிறவுமாம். (உரு)

கஅச. ஆண்மை பெண்மை யொருமை பன்மையி
னுமங் நான்மைக ளாண்பெண் ணவற்றுள்
முறைப்பெய ரிரண்டா மென்மனார் புலவர்.

இது மேற் தொகைப்படுத்துரைத்த பெயர்களை வகைப்படுத்து உரைக்கின்றது.

இ - ள். ஆண்மை முதலிய நால்வகையானே மேற்கூறிய முதற்பெயர் முதலாகிய மூன்றும் ஒவ்வொன்று அங்ஙனங் கூறிய நான்காதற் தன்மையைப் பொருந்தும்; ஆணும் பெண்ணுமாகிய இருவகையானே முறைப்பெயர் இரண்டாதற் தன்மையைப் பொருந்துமென்று கூறுவர் அறிந்தோர். எ - று.

வரலாறு;—ஆண்மைமுதற்பெயர் பெண்மைமுதற்பெயர் ஒருமைமுதற்பெயர் பன்மைமுதற்பெயர் எனவும் ஆண்மைச்சினைப்பெயர் பெண்மைச்சினைப்பெயர் ஒருமைச்சினைப்பெயர் பன்மைச்சினைப்பெயர் எனவும் ஆண்மைச்சினைமுதற்பெயர் பெண்மைச்சினைமுதற்பெயர் ஒருமைச்சினைமுதற்பெயர் பன்மைச்சினைமுதற்பெயர் எனவும் ஆண்மைமுறைப்பெயர் பெண்மைமுறைப்பெயர் எனவும் வரும். (உசு)

கஅரு. அவற்று, ளொன்றே யிருதிணைத் தன்பா லேற்கும்
பன்மை சுட்டிய பெயரலங் கடையே.

இது மேற்கூறிய பெயர் பதினான்கனுட் பன்மைசுட்டிய பெயர் ஒழித்து ஒழிந்தவை இருதிணையும்பற்றிப் பால் உணர்த்துமாறு கூறுகின்றது.

இ - ள். ஆண்மைசுட்டிய பெயர்நான்கும் பெண்மைசுட்டிய பெயர்நான்கும் ஒருமைசுட்டிய பெயர்மூன்றும் பன்மைசுட்டியபெயர்மூன்றுமாகிய பெயர் பதினான்கனுள் ஒருபெயரே இருதிணையிடத்துந் தான் உணர்த்தற்கு உரிய பால்களை உணர்த்தும் பன்மைசுட்டிய பெயர்மூன்றும் அல்லாத இடத்து. எ - று.

வரலாறு;—சாத்தன்வந்தது வந்தான் முடவன்வந்தது வந்தான் முடக்கொற்றன்வந்தது வந்தான் தந்தைவந்தது வந்தான் என ஆண்மைசுட்டிய பெயர்நான்கும் அஃறிணை ஆண் ஒன்றனையும் உயர்திணை ஒருவனையுஞ், சாத்திவந்தது வந்தாள் முடத்திவந்தது வந்தாள் முடக்கொற்றிவந்தது வந்தாள் தாய்வந்தது வந்தாள் எனப்

பெண்மைசுட்டிய பெயர்நான்கும் அஃறிணைப் பெண் ஒன்றனையும் உயர்திணை ஒருத்தியையுங், கோதைவந்தது வந்தான் வந்தாள் செவியிலிவந்தது வந்தான் வந்தாள் கொடும்புறமருதிவந்தது வந்தான் வந்தாள் என ஒருமைசுட்டிய பெயர்மூன்றும் அஃறிணையொருமையினையும் உயர்திணையொருமையினையும் உணர்த்தியவாறு காண்க. முடஞ் சினையது விகாரமாதலிற் சினையாயிற்று. நுந்தை எந்தை என்பனவும் ஆய் யாய் என்பனவும் முறையே ஆண்மை முறைப்பெயராயும் பெண்மைமுறைப்பெயராயும் வருமெனக்கொள்க. தம்பி நும்பி எம்பி தங்கை நுங்கை எங்கை என்பனவும் அவ்விருகூற்று முறைப்பெயருள் அடங்கும். (உஎ)

கஅசு. பன்மை சுட்டிய வெல்லாப் பெயரு
மொன்றே பலவே யொருவ ரென்னு
மென்றிப் பாற்கு மோரன் னவ்வே.

இது பன்மைப்பெயர் இருதிணையும்பற்றிப் பால் உணர்த்துமாறு கூறுகின்றது.

இ - ள். பன்மைசுட்டிய மூன்றுபெயரும் அஃறிணையொருமையும் அத்திணைப்பன்மையும் உயர்திணையொருமையுமென்று சொல்லப்படும் மூன்றுபாற்கும் ஒத்த உரிமைய. எ - று.

வரலாறு;—யானைவந்தது வந்தன வந்தான் வந்தாள் எனவும் நெடுங்கழுத்தல்வந்தது வந்தன வந்தான் வந்தாள் எனவும் பெருங்கால்யானைவந்தது வந்தன வந்தான் வந்தாள் எனவும் வரும். பன்மைசுட்டியபெயரென்றது ஒருமைசுட்டுதலோடு இயைபுநீக்காது தன்னோடு இயைபின்மைமாத்திரம் நீக்கித் தலைமைபற்றிவந்து அடுத்த பன்மைசுட்டுதலென்னும் விசேடத்தான் விசேடிக்கப்பட்டுத் தலைமைபற்றிய வழக்காய் நின்றது. ஆதீண்டுகுற்றியென்றது மேதிமுதலியன தீண்டுதலோடு இயைபுநீக்காது தன்னோடு இயைபின்மைமாத்திரம் நீக்கித் தலைமைபற்றிவந்து அடுத்த ஆதீண்டுதலென்னும் விசேடத்தான் விசேடிக்கப்பட்டுத் தலைமைபற்றிய வழக்காய் நின்றாற்போலப் பன்மைசுட்டுதற்குத் தலைமை ஆண்மைசுட்டிய பெயர்முதலிய மூன்றனும் ஒருகாற் சுட்டப்படும் ஒன்றும் ஒருவரும்போலாது இப்பெயரானே சுட்டப்படும் உரிமையுடைமையாற் கொள்க. பலபால்களையுஞ் சுட்டிநிற்றலிற் பன்மைசுட்டிய பெயரென்றாராலோவெனின் ஒருமைப்பெயர் முதலியனவும் பலபால்களையுஞ் சுட்டிநிற்றலின் அவற்றையும் பன்மைசுட்டிய பெயரெனல் வேண்டுமாகலின் ஆகாவென மறுக்க. (உஅ)

கஅஎ. தன்மை யானு னான முன்னிலை
எல்லீரு நீயிர் நீவிர் நீர்நீ
யல்லன படர்க்கை யெல்லா மெனல்பொது.

இது மேற் தன்மை நான்கும் முன்னிலை ஐந்துமென்றார் அவை இவையென்பதூஉம் ஏனைப்பெயர்கள் இவ்விடத்தனவா மென்பதூஉம் உணர்த்துகின்றது.

இ - ள். மேற் கூறிப்போந்த தன்மைப்பெயர் நான்காவன யானென்பதூஉம் நானென்பதூஉம் யாமென்பதூஉம் நாமென்ப தூஉமாம். முன்னிலைப்பெயர் ஐந்தாவன எல்லீருமென்பதூஉம் நீயி ரென்பதூஉம் நீவிரென்பதூஉம் நீரென்பதூஉம் நீயென்பதூஉ மாம். இவையொழித்து ஒழிந்த பெயர்களெல்லாம் படர்க்கையிடத் திற்கு உரியனவாம். அவற்றுள் எல்லாமென்பது மூன்றிடத்திற்கும் உரித்தாம். எ - று.

"பேய்ந்த மந்தி கிளிபூவை பேசுதலா—ருகுமே தன்மை பொது" என்பவாகலிற் தன்மையும் விரவுப்பெயராயிற்று.

"நுமரெங்குந்தீதின்றி நும்மையான்காப்பே—னமரெங்குநா டி யரும்பிணந்தின்பேன்—புனரங்கியென்பதென் புல்லியமெய்ப் பெயர்—நமரங்காள்பேணுமி னன்கென்றதுவே" எனவும் "மூன் றைந்தின்மூன்றிட்ட மொய்கொள்கணங்களுட்—டோன்றலம்பூத மென் றேற்றந்திரியல்" எனவும். "ஈங்குநீயெம்மைநோக்கி யென் செய்தியெமக்குவாணு—ணீங்கினசிறிதுநிற்பிற்காண்டியானீயுமென் னத்—தூங்கித்தான் றுளங்கிமந்திதொழுத்தையென் செய்வதென் று—தாங்குபுதழுவிக்கொண்டு தன்னைத்தான்பழித்ததன்றே." என வும் "பூவையுங்கிளியுங்கேட்டுப் புழைமுகம்வைத்துநோக்கிக்—கா வலன்மடந்தைநெஞ்சங் கற்கொலோவிரும்புகொல்லோ—யாவது முருகாதென்றுந் தவறிலனருளுஞ்செம்பொற்—பாவையென்றிரத் துமென்ற பறவைகடம்முட்டாமே." எனவும் வருஞ் செய்யுட்க ளான் அவைபேசியவாறு காண்க. (உக)

கஅஅ. வினையின் பெயரே படர்க்கை வினையா
லணையும் பெயரே யாண்டு மாகும்.

இது வினையின்பெயர்க்கு எய்தியது இகந்துபடாமைக்காத்த லும் வினையாலணையும்பெயர்க்கு எய்தியது விலக்கலும் நுதலிற்று.

இ - ள். வினையினதுபெயரே படர்க்கையிடத்திற்கு உரித்தாம். வினையாற் பிறிதொன்றற்கு எய்தியபெயர் மூன்றிடத்திற்கும் உரித்தாம். எ - று.

வரலாறு;—உணல் தினல் செலவு வரவு என்றாற்போல்வன வினையின்பெயராய் அவ்வப் புடைபெயர்ச்சி உணர்த்திப் படர்க்கைக்கு உரியவாய்நின்றன. பூசல் வேட்டை கூத்து என்றாற்போல்வன வினையின்பெயராய்ப் புடைபெயர்ச்சி உணர்த்தாது நின்றன. இவையும் அன்ன. வந்தான் வந்தாள் வந்தேன் வந்தேம் வந்தாய் வந்தீர் என்றாற்போல்வன வினையாலணையும்பெயராய்ப் பிறிதுபொருள் உணர்த்தி மூன்றிடத்திற்கும் உரியவாய்நின்றன. இவை பெயராயினபொழுது உருபேற்றலும் வினையாயினபொழுது பெயர் கொண்டு முடிதலுந் தம்முள்வேறுபாடென்று உணர்க. வந்தவன் சென்றவன் என்றாற்போல்வனவும் வினையாலணையும்பெயரேயாம். பிறவும் அன்ன. (௬௦)

கஅகூ. தான்யா னினீ யொருமை பன்மைதாம்
யாம்நா மெலாமெலீர் நீயிர்நீர் நீவிர்.

இது தான்யானென்பன முதலிய பெயர் பன்னிரண்டும் பாற்கு உரியவாமாறு கூறுகின்றது.

இ - ள். தான் யான் நான் நீ என்னும் நால்வகைப்பெயரும் ஒருவன் ஒருத்தி ஒன்றென்பனவற்றிற்கெல்லாம் பொதுவாகிய ஒருமைப்பாற்கு உரியனவாம். ஒழிந்த எண்வகைப்பெயரும் பல்லோர்க்கும் பலவற்றிற்கும் பொதுவாகிய பன்மைப்பாற்கு உரியனவாம். எ - று.

வரலாறு;—தான்வந்தான் வந்தாள் வந்தது எனவும் யான்வந்தேன் நான்வந்தேன் எனவும் நீவந்தாய் எனவும் தாம்வந்தார் வந்தன எனவும் யாம்வந்தேம் நாம்வந்தேம் எனவும் எல்லாம்வந்தேம் வந்தீர் வந்தார் வந்தன எனவும் எல்லீரும்வந்தீர் நீயிர்வந்தீர் நீர்வந்தீர் நீவிர்வந்தீர் எனவும் வரும். "மேனியெல்லாம்பசலையாயிற்று" என ஒருமை உணர்த்திநின்றது எஞ்சாப்பொருட்டாயதோர் உரிச்சொல். (௬க)

ககூ0. ஒருவ னொருத்திப் பெயர்மே லெண்ணில.

இது மேற்கூறிய எண்ணியற்பெயருள் ஒருசாரனவற்றிற்கு எய்தியது விலக்குகின்றது.

இ - ள். உயர்திணையாண்பாற்பெயரும் பெண்பாற்பெயரும் எண்ணடியாகத்தோன்றுங்காலத்து ஒன்றென்பது அடியாக ஒருவன் ஒருத்தியெனத் தோன்றுவதல்லது அதன்மேல் நின்ற இரண்டு முதலிய எண்ணடியாக இருவன் இருத்தியெனத் தோன்றுதல் உளவாகா. எ - று. (௯௨)

ககூக. ஒருவ ரென்ப துயரிரு பாற்றாய்ப்
பன்மையொடு முடியும் பாங்கிற் றென்ப.

இது மேற்கூறிய பல்லோர்பெயரின்பகுதியாய் நின்ற ஒருவரென்னும் பெயரின் இயல்பும் அதன் முடிபுங் கூறுகின்றது.

இ - ள். மேற் கூறிப்போந்த எண்ணியற்பெயருள் ஒருவரென்று சொல்லப்படும்பெயர் உயர்சொல்லாய் உயர்திணைப்பாலுள் ஒருபாால் உணர்த்தாது ஒருவன் ஒருத்தியென்னும் இருபாற்கும் பொதுவாய்ப் பன்மைச்சொல்லோடு முடியும் உரிமையுடைத்து. எ - று.

எனவே தான் காட்டுகின்ற பொருண்மைக்கு ஏற்ப ஒருமைச் சொல்லோடு முடியாது ரகர ஈற்றதாய்நின்ற சொற்றன்மைக்கு ஏற்ப ஒருவர்வந்தார் ஒருவர் அவர் எனப் பன்மைச்சொல்லோடு முடியுமெனப் பால்பற்றிய மரபுவழு அமைத்தவாறாயிற்று. உயர்திணை இருபாற்கும் பொதுவாய் நிற்றலின் ஈண்டுக் கூறினர். இனிப் பாங்கிற்றென்ற மிகையானே சாத்தனார்வந்தார் முடவனார்வந்தார் முடத்தாமக்கண்ணியார்வந்தார் தந்தையார்வந்தார் என்றாற்போலும் ஆரீற்று விரவுப்பெயருங் கிளியார்வந்தார் நரியார்வந்தார் என்றாற் போலும் அஃறிணை இருபாற்கும் உரிய ஆரீற்றுச் சாதிப்பெயரும் நம்பியார்வந்தார் நங்கையார்வந்தார் இறையனார்வந்தார் அகத்தியனார்வந்தார் தொல்காப்பியனார்வந்தார் என்றாற்போலுஞ் சிறுபான்மை ஆரீற்றுயர்திணைப்பெயரும் பன்மைச்சொல்லோடு முடியுமெனவும் ஆரீறு உயர்த்தற்பொருட்டாய் வருமெனவும் அதுதானே தாம்வந்தார்தொண்டனாரெனச் சிறுபான்மை இழித்தற்குறிப்பிற்றாயும் வருமெனவுங் "கடுவன் முதுமகன் கல்லா மூலற்கு—வதுவை வந்தவன்பறழ்க் குமரி" என்புழிக் கடுவன் மூலன் குமரி என்பன முறையே உயர்திணையாண்பால் உணர்த்தும் அன் ஈறும் பெண்பால் உணர்த்தும் இகர ஈறும்பற்றி வருதலின் விரவுப்பெயராமன்றே ஆயினும் அவை ஈண்டுப் பொருட்கு உபகாரப்படுங் கருப்பொருளை உணர்த்திநிற்றலின் உயர்திணையை உணர்த்தாது அஃறிணையே உணர்த்துமெனவும் பொருள்வகையானன்றி இந்நிலத்து இப்பொ

ருள் இப்பெயரான் வழங்கப்படுமெனத் திணைவகையான் உரிமை பூண்டு கருப்பொருள் உணர்த்திநிற்குஞ் "செருமிகுமுன்பிற்கூர்வேற் காளை" "திருந்துவேல்விடலை" என்றற் தொடக்கத்து விரவுப்பெயர்கள் இருதிணையும் உணர்த்துமேனும் உயர்திணையே உணர்த்துமெனவுங் கொள்க. காளை விடலை என்பன உயர்திணைப்பெயரன்றேயெனின் ஓர் எருத்தையுங் காளை விடலை என்பவாகலின் விரவுப்பெயரெனவே படுமென்பது. இன்னும் அம்மிகையானே எல்லாமென்பது இருதிணைப் பன்மைக்கும் ஒத்த உரிமைத்தேனும் உயர்திணையிடத்து வருங்கால் அத்திணைத் தன்மைப்பன்மைக்கட் பெரும்பான்மையுங் "கண்டனிரெல்லாங்கதுமெனவாங்கே—பண்டறியாதீர்போலநோக்குதிர்" எனவும் "ஊடினீரெல்லாமுருவிலான் றன்னாணை—கூடினீ ரென்று குயில்சாற்ற" எனவும் முன்னிலைப் பன்மைக்கண்ணும் "நெறிதாழிருங்கூந்தனின்பெண்டிரெல்லாஞ்—சிறுபாகராக" எனப் படர்க்கைப்பன்மைக்கண்ணுஞ் சிறுபான்மை வருமெனவும் இன்னனவென்றதனாற் றழீஇக்கொண்ட பெண்மகனென்பது பெண்மகன்வந்தாள் பெண்மகன் இவள் என ஈறுபற்றி ஆடூஉவிற்கு ஏற்ற முடிபுகொள்ளாது பொருண்மைபற்றி மகடூஉவிற்கு ஏற்ற முடிபுகோடலுங் கொள்க. சாத்தன் கொற்றன் என்றற் தொடக்கத்து ஒருமைப்பெயர் நின்று ஆரைக்கிளவியை ஏற்றுச் சாத்தனார் கொற்றனாரென நிற்றலின் இவை ஒருவரென்னும் ஒருவரை உயர்த்திக்கூறும் பன்மைக்கிளவியின்வேறாதலும் அலவன் களவன் என்றற் தொடக்கத்தன கடுவன் மூலன் என்றற் தொடக்கத்தனபோல விரவுப்பெயராய் நின்று உயர்திணை உணர்த்தாது அஃறிணை உணர்த்துவன அன்மையின் அவை சாதிப்பெயரேயாய் அஃறிணையே உணர்த்திநிற்றலின் ஈண்டு அமைக்கவேண்டுவதின்றெனவும் உணர்க. (ருரு)

கசுஉ. பொருண்முத லாறோ டளவைசொற் றானி
காரணங் காரியங் கருத்த னதியு
ளொன்றன் பெயரா னதற்கியை பிறிதைத்
தொன்முறை யுரைப்பன வாகு பெயரே.

இது மேல் ஆக்கம்பற்றி வரும் ஆகுபெயர் என்றதன் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். பொருண்முதலாகிய ஆறனுடனே அளவையுஞ் சொல்லுந் தானியுங் காரணமுங் காரியமுங் கருத்தாவும் முதலியனவற்றுள் ஒன்றன்பெயரானே விடாதாக விட்டதாக யாதானும் ஒரு

வாற்றான் அதனுக்கு இயைபுடைய பிறிதொன்றனைத் தொன்று தொட்டு வருமுறையாற் கூறுவன ஆகுபெயராம். எ - று.

வரலாறு;—கடுத்தின்றான் புளித்தின்றான் "தாமரைபுரையுங் காமர்சேவடி" "ஆம்பனாறுந்தேம்பொதிகிளவி" என்றாற்போல்வன முதற்பொருளை உணர்த்தும் பொருட்பெயரான் அவற்றின் ஒருவழி யுறுப்பாகிய சினைப்பொருளைக் கூறின. குழிப்பாடிநேரிது இப்பட்டுச்சீனம் என்றாற்போல்வன இடப்பெயரான் அவ்விடத்து நிகழ் பொருளைக் கூறின. காரறுத்தது கூதிர்வீசும் கார்த்திகைபூத்தது என்றாற்போல்வன காலப்பெயரான் அக்காலத்தின்கண் உளவாகிய பைங்கூழையுங் காற்றையுந் தோன்றியையுங் கூறின. இலைநட்டுவாழும் பூநட்டுவாழும் என்றாற்போல்வன சினைப்பெயரான் அவ்வம் முதற்பொருளைக் கூறின. "நெறிநீரிருங்கழிநீலமுஞ்சூடாள்" இச் செறுவட்டம் என்றாற்போல்வன பண்புப்பெயரான் அப்பண்புடைப் பொருளைக் கூறின. ஊண்கொடுத்தார் "எழுத்தறியத்தீருமிழிதகைமை" "பெருஞ்செய்ந்நெல்லின் பாட்டின்பொருளைப்—பரவிப்பல்கால்" என்றாற்போல்வன தொழிற்பெயரான் அவ்வத்தொழிலுற்றுநின்ற பொருளைக் கூறின. இஃதோரேறு இஃதோர்குத்து என்றாற்போல்வனவும் அன்ன, அவ்வத்தொழிலான் ஆகிய வடுக்களை உணர்த்தி நின்றமையின். இப்பொன்றொடி இவ்வெள்ளிதுலாம் இந்நெற்பதக்கு இப்பயறுதூணி இம்மனையொருகோல் என்றாற் போல்வன எடுத்தல் முகத்தல் முதலிய அளவுப்பெயரான் அங்ஙனம் அளக்கப்படும் பொருளைக் கூறின. அளக்கப்பட்ட பொருட்கட் கிடக்கும் இவ்வரையறைக் குணப்பெயர் பண்புப்பெயருள் அடங்குமேனும் விளங்குதற்பொருட்டு வேறு கூறினார். ஒன்று துலாம் நாழி உழக்கு ஆழாக்கு கோல் என்பன அவ்வளவுகருவிகளை உணர்த்தின் இயற்பெயராம், இம்மணியொன்று இப்பொன்றுலாம் இப்பானாழி இந்நெய்யுழக்கு இவ்வெண்ணெயாழாக்கு இம்மனையொருகோல் என அவ்வக் கருவிகளான் அளக்கப்படும் பொருளை உணர்த்தின் ஆகுபெயராம் என்பாரும் உளராலோவெனின், அக்கருவிகளும் இயற்பெயரானன்றி இவ்வரையறைக் குணப்பெயரான் உணர்த்தப்படுதலின் ஆகுபெயராய் இவற்றுள்ளே அடங்குவதல்லது வேறெனப்படாவென மறுக்க. அளவையெனப் பொதுப்படக் கூறினாரேனும் ஏற்புழிக்கோடலான் நிறைப்பெயர்முதலியனவே கொள்க. என்னை? பொன்னை நிறுத்துப்பார்த்தும் நெல்லை அளந்து பார்த்தும் மனையை அளந்துபார்த்தும் பின்னர் அவற்றிற்கு அப்பெயர்கூறப்படுதலின் அவை ஆகுபெயராதற்கு ஏற்புடைமையும் ஒன்

றென்னும் எண்ணுப்பெயரான் அவ்வெண்ணைப்படும் பொருளைக் கூறுவதற்குமுன்னும் அப்பொருள் ஒன்றேயாய் நிற்றலின் எண்ணுப் பெயர் ஆகுபெயராதற்கு ஏற்புடைத்தாகாமையும் உடைமையின். இவ்வதிகாரமெழுத்து இவ்வதிகாரஞ்சொல் இவ்வதிகாரம்பொருள் என்றாற்போல்வன எழுத்துச்சொற்பொருளென்னுஞ் சொற்களான் அவற்றிற்கு இலக்கணங்கூறிய அதிகாரங்களைக் கூறின. விளக்குமுரிந்தது நெஞ்சுநொந்தது நிருதிமேலெழுந்தது என்றாற்போல்வன தானம்பற்றிநிகழுஞ் சுடரும் உணர்வுந் தெய்வமுமாகிய தானிகளின் பெயராற் பிழம்பும் உறுப்புந் திசையுமாகிய தானங்களைக் கூறின. இக்குடம்பொன் இத்தூண்வெள்ளி இவ்வாடைபஞ்சு எனவும் இஃதோரம்பு இஃதோர்வேல் எனவும் யாழ்கேட்டான் குழல் கேட்டான் எனவும் வரும் இத்திறத்தனவெல்லாங் காரணப்பெயர்களான் முறையே அக்காரணங்களானாகிய குடம் முதலியவற்றையும் வடிவினையும் ஓசையினையுங் கூறின. இப்பொன்கடிசூத்திரம் இப்பஞ்சாடை இந்நெல்லவல் இக்காணஞ்சோறு என்றாற்போல்வன காரியப்பெயரான் அவ்வக்காரணங்களைக் கூறின. இவ்வாடை கோலிகன் இவ்வாடைசாலிகன் என்றாற்போல்வன வினைமுதற்பெயரான் அவரான் இயற்றப்பட்ட பொருளைக் கூறின. அகத்தியம் தொல்காப்பியம் கபிலம் என்றாற்போல்வனவும் அன்ன. இவை ஈறுதிரிதல் உரையிற்கொள்க.

இனி ஆதியென்றதனனே, யானை பாவை என்றாற் தொடக்கத்து உவமைப்பெயரான் யானைவந்தான் பாவைவந்தாளென உவமிக்கப்படும் பொருளைக்கூறுவனவும் இற்றைஞான்றுதிரை இற்றைஞான்றோணம் என்றற் தொடக்கத்து நாண்மீனின்பெயரான் அந்நாளைக் கூறுவனவும் பொற்றொடியென்னும் இருபெயரொட்டாற் பொன்னுந் தொடியுமன்றி அணிந்தாளைக் கூறுவனவும் அவை போல்வன பிறவும் ஆகுபெயராமெனக்கொள்க. இது மேல் அன்மொழித்தொகையெனக் கூறப்படுதலின் ஈண்டுக் கூறவேண்டாவெனின், நன்றுசொன்னாய்! ஆகுபெயர்க்கும் அன்மொழித்தொகைக்குந் தம்பொருள் உணர்த்தாது பிறிதுபொருள் உணர்த்திநிற்றல் இலக்கணமென்றலின் அவை இரண்டும் வேறன்மையான் ஓரிடத்துக் கூற அமையுமேனும் இயற்பெயரும் ஆகுபெயருமெனப் பெயர் இரண்டாய் அடங்குமென்றவழிப் பொற்றொடிவந்தாள் என்பதனை இருபெயரொட்டாகுபெயராகவுந் தொகையாரென்றவழி அதனை அன்மொழித்தொகையாகவுங் கூறவேண்டுதலான் ஈரிடத்துங் கூற வேண்டுமென்க. இஃது ஆசிரியர் தொல்காப்பியனார்க்குங் கருத்தா

தல் சேனவரையருரையான் உணர்க. இக்கருத்தேபற்றியன்றே "அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை" என்றவழிப் பரிமேலழகருங் கனங்குழையென்றதனை ஆகுபெயரென்றதூஉ மென்க. அற்றேல், மக்கட்சுட்டென்றவழி,மக்களாகியசுட்டு மக்கட் சுட்டு, சுட்டு, நன்குமதிப்பு; அஃது ஆகுபெயராய் மக்கட்பொருளை உணர்த்தும்; உணர்த்தவே, மக்கட்சுட்டென்பது பிறிதுபொருள் உணர்த்தாது அம்மக்களையே உணர்த்திநிற்றலானும், பொற்றொடி யென்பது பொன்னுந்தொடியுமன்றி அணிந்தாளெனப் பிறிதுபொ ருள் உணர்த்திநிற்றலானும், இருபெயரொட்டாகுபெயரும் வேறே அன்மொழித்தொகையும் வேறேயெனக்கொண்டு, ஈண்டு மக்கட்சுட் டென்பதனை இருபெயரொட்டாகுபெயர்க்கு உதாரணமாக்கி, ஆண் டுப் பொற்றொடியென்பதனை அன்மொழித்தொகைக்கு உதாரண மாக்கிற் படும் இழுக்கென்னையெனின்: மக்கட்சுட்டே இருபெய ரொட்டாகுபெயராய் அச்சுட்டு மக்களை உணர்த்திற்றேல், மக்க ளாகிய மக்களென்று வருவதல்லது ஒன்றையொன்று விசேடித்து இன்னது இதுவென வாராமையின் மக்கட்சுட்டே இருபெய ரொட்டாகாமையின் இருபெயரொட்டாகுபெயராமாறு யாண்டை யதென்பதாம்.

கடுத்தின்றான் புளித்தின்றான் என்றாற்போல்வன விடாது நின்று ஒருவாற்றான் இயைபுடைய பிறிதொன்றனை உணர்த்திநின் றன. குழிப்பாடிநேரிது இப்பட்டுச்சீனம் என்றாற்போல்வன விட்டு நின்று ஒருவாற்றான் இயைபுடைய பிறிதொன்றனை உணர்த்திநின் றன. பிறவும் அன்ன. (கசு)

கசுரு. ஏற்கு மெவ்வகைப் பெயர்க்குமீ றாய்ப்பொருள்
வேற்றுமை செய்வன வேழென மொழிப
விளிகொள் வதன்கண் விளியலங் கடையே.

மேல் வேற்றுமைக்கிடனையெனப் பெயர்க்கு இலக்கணமாகக் கூறிப்போந்த வேற்றுமைகளை விரித்துக்கூறுவான் தொடங்கினவற் றுள் இஃது அவை நிற்கும் இடனும் அவற்றின் பொது இலக்கண மும் அவை இத்துணையென்பதூஉம் உணர்த்துகின்றது.

இ - ள். தம்மை ஏற்றுக்கோடற்கு உரிய எப்பகுதிப்பட்ட பெயர்க்கும் இறுதிக்கண்ணவாய்ப் பெயர்ப்பொருளை வேறுபடுத்தும் வேற்றுமைகள் ஏழாமென்று கூறுவர், விளியேற்கும் பெயர்க்கண் ணதாகிய விளியோடு கூடாத இடத்து; அதனோடு கூட எட்டென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

ஏற்குமெனவே, ஏலாதனவும் உளவாயின. அவை மேலே கூறுப. எவ்வகைப்பெயர்க்குமென்றதனானே உயர்திணைப்பெயரும் அஃறிணைப்பெயரும் விரவுப்பெயரும் வினைப்பெயரும் யானைக் கோடு மதிமுகம் கொல்யானை கருங்குதிரை உவாப்பதினான்கு பொற்றொடி என்றாற்போலப் பெயரோடு பெயர் தொக்கனவும் பெயர்த்தன்மை எய்திநின்ற இடைச்சொல்லும் உரிச்சொல்லுமாகிய எல்லாப்பெயருங் கொள்க. ஈறாயெனப் பொதுப்படக்கூறினாரேனும் இக்காட்டுட்புக்காரெல்லாங் கூறைகோட்பட்டார் என்றவழிக் கூறைகோட்படுதல் கடவுளரை ஒழித்து ஏனையோர்மேற்றாயினாற்போலப் பெயர்வேற்றுமை பெயர்க்கு ஈறாதலை ஒழித்து ஏனை வேற்றுமைகளின் மேற்றாமெனவும் அவ்விடைச்சொல் விகுதியிடைச்சொற்போல உறுப்பாகாது தாமென வேறு உணரப்பட்டுச் சாத்தனை சாத்தனால் சாத்தற்கு சாத்தனின் சாத்தனது சாத்தன்கண் என இறுதிநிற்குமெனவுங் கொள்க. செயப்படுபொருள் முதலியனவாகப் பெயர்ப்பொருளை வேறுபடுத்து உணர்த்தலின் வேற்றுமையாயின. செயப்படுபொருள் முதலியனவற்றின் வேறுபடுத்துப் பொருள்மாத்திரம் உணர்த்தலின் எழுவாயும் வேற்றுமையாயிற்று. பிறிதோர் இடைச்சொல்லை ஏலாது தானே திரிந்தும் இயல்பாயும் நிற்கும் பெயரது இறுதி விளியென்பார் 'விளிகொள்வதன் கண்விளி' என்றார். எனவே, விளியென்பது பெயருமன்று, அதனின் வேறுமன்றாயிற்று. 'ஏழெனமொழிப' எனப் பிறர்மதங்கூறி விளியொடு கூட எட்டெனத் தந்துணிபு உரைத்தார். "ஏழியன் முறைய தெதிர்முக வேற்றுமை—வேறெென விளம்பான் பெயரது விகாரமென்—றோதிய புலவனு முளனொரு வகையா—னிந்திர னெட்டாம் வேற்றுமை யென்றனன்" என்றார் ஆசிரியர் அகத்தியனாருமென்க. (டுரு)

கககூச. பெயரே ஐஆல் குஇன் அதுகண்
விளியென் றாகு மவற்றின் பெயர்முறை.

இஃது அவற்றின் பெயரும் முறையும் உணர்த்துகின்றது.

இ - ள். பெயரும் ஐயும் ஆலுங் குவ்வும் இன்னும் அதுவுங் கண்ணும் விளியுமென்று கூறப்படும் அவற்றின் பெயரும் அவற்றின் கிடக்கைமுறையும். எ - று.

ஈண்டுக் கூறிய பெயர்களேயன்றி எழுவாய் இரண்டாவது மூன்றாவது நான்காவது ஐந்தாவது ஆறாவது ஏழாவது எட்டாவது என இவை வேறுவேறு பெயர்பெறுமாறு மேலே கூறுப. சாத்தன்

குடத்தைக் கையால்வளைந்து கொற்றற்குக் கொடுத்தான் என வேண்டுதலின் இங்ஙனங் கிடத்தல் கிடக்கைமுறையாயிற்றென்பது. பிறவும் அன்ன. (ரு௬)

ககூடு. ஆற னுருபு மேற்குமவ் வுருபே.

இஃது எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். பெயரேயன்றி ஆறனுருபும் அவ்வுருபுகளை ஏற்கும். எ - று.

வரலாறு;—சாத்தனதனை சாத்தனதனால் சாத்தனதற்கு சாத்தனதனின் சாத்தனதனது சாத்தனதன்கண் எனவரும். ஏற்புழிக் கோடலான் எழுவாயும் விளியும் ஒழித்து ஏனையவே கொள்க. பெயரோடு இதற்கு வேற்றுமை உருபு ஏற்புழியுந் தன் இருகிழமைப்பொருளினுந் திரிபின்றிநிற்றலாம். பெயர்வேற்றுமையும் ஏனையுருபுகளையும் ஏற்குமால் அஃது ஒழித்ததென்னையெனின் அஃது ஏனையுருபுகளை ஏலாமை மேற் பெறப்படும். (ரு௭)

ககூசு. நீயிர் நீவிர் நா னெழுவா யலபெறா.

இஃது எய்தியது ஒருமருங்கு மறுக்கின்றது.

இ - ள். நீயிரென்பதூஉம் நீவிரென்பதூஉம் நானென்பதூஉமாகிய மூன்றுபெயரும் எழுவாய்வேற்றுமையை ஏற்றலேயன்றி ஏனையுருபுகளை ஏற்றுநில்லா. எ - று. (ரு௮)

ககஎ. அவற்று, ளெழுவா யுருபு திரிவில் பெயரே
வினைபெயர் வினுக்கொள லதன்பய னிலையே.

இது நிறுத்தமுறையானே எழுவாய்வேற்றுமையது உருபும் அதன் பயனிலையுங் கூறுகின்றது.

இ - ள். மேற் கூறிப்போந்த வேற்றுமை எட்டனுள் முதல் வேற்றுமையாவது திரிபில்லாத பெயரேயாம்; வினையையும் பெயரையும் வினாவையுங் கோடல் அதற்குப் பயனிலையாம். எ - று.

திரிபில்லாமையாவது உருபும் விளியும் ஏலாது, ஆ அவன் என்றாற்போல நிற்றலாம். ஆகவே எழுவாய்வேற்றுமையுருபாவது பெயர்ச்சொல் மூவகைப்பட்ட பயனிலையுந் தன்கட் தோன்ற நிற்கும் நிலைமையென்பதாயிற்று. முடிக்குஞ் சொற்பொருள் அத்தொ

டர்மொழிக்குப் பொருணிலையாகலிற் பயனிலையென்றார். வினையெனவே வினையும் வினைக்குறிப்புந் தழுவுதலாற் "பொருண்மை சுட்டல் வியங்கோள் வருதல்—வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்—பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்—றன்றி யனைத்தும் பெயர்ப் பயனிலையே" என்ற ஆறும் இவரும் நேர்ந்தாரென்பதாம். "வினைநிலை யுரைத்தலும் வினாவிற் கேற்றலும்—பெயர்கொள வருதலும் பெயர்ப்பய னிலையே" என்ற ஆசிரியர் அகத்தியனார்க்கும் இதுவே உடன்பாடென்க.

பொருண்மைசுட்டல் ஆவுண்டு எனப் பண்பு முதலாயின சுட்டாது உண்மையே சுட்டலாம்; வியங்கோள்வருதல் ஆசெல்க எனத் தான் ஏவலைக்கொள்ள வருதலாம்; வினைநிலையுரைத்தல் ஆகிடந்தது எனத் தன்வினைநிலையைச் சொல்ல வருதலாம்; பண்புகொளவருதல் ஆகரிது என வருதலாம். வினைக்குறிப்பாதல் ஒப்புமையான் ஆவில்லை ஆவல்ல என்னுந் தொடக்கத்துக் குணப்பொருள அல்லா வினைக்குறிப்போடு தொடர்தலுங்கொள்க. இவையெல்லாம் வினைப்பாற்பட்டன. வினாவிற்கேற்றல் அஃதியாது அஃதெவன் என வினாச்சொல்லோடு தொடர்தலாம்; பெயர்கொளவருதல் ஆவாயிரம் ஆவாம்பல் ஆவெள்ளம் என முடிக்கப்படுஞ்சொல்லாகாது முடிக்குஞ்சொல்லாயே வருதலாம். பிறவும் அன்ன. (ரு௧)

௧௯அ. எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி
யவ்விய னிலையல் செவ்வி தென்ப.

இஃது எய்தாதது எய்துவிக்கின்றது, எழுவாய்வேற்றுமை வெளிப்படத்தோன்றிப் பயனிலைகோடலேயன்றித் தோன்றாதுநின்றும் பயனிலைகொள்ளுமென்றலின்.

இ - ள். மூன்றிடத்துப்பெயருஞ் செவிப்புலனாகத்தோன்றி நின்று பயனிலைகோடல் செவ்விதென்பர் ஆசிரியர். எ - று.

எனவே, அவ்வாறு தோன்றாதுநின்று பயனிலைகோடலும் உண்டு, அது செவ்விதன்று என்றவாறாம். பெயரென்றது ஈண்டு எழுவாயை.

கருவூர்க்குச்செல்லாயோ சாத்தா என்றவழிச் செல்வல் எனவும் யான்யாதுசெய்வல் என்றவழி இதுசெய் எனவும் இவன்யாவன் என்றவழிப் படைத்தலைவன் எனவுஞ் செப்பியவழி, யான் நீ இவன் என்னும் எழுவாய் வெளிப்படாதுநின்று செல்வல் இதுசெய் படைத்தலைவன் என்னும் பயனிலைகொண்டவாறு கண்டுகொள்க.

செல்வல் இதுசெய் என்னுந் தன்மை முன்னிலை வினைகளான் யான் நீ என்பனவற்றின் பொருளும் உணரப்படுதலின் யான் செல்வல் நீயிதுசெய் எனப் பெயர் வெளிப்படுதல் பயமின்றாயினும் வழக்குவலியுடைத்தாகலின் அவ்வாறு வருதல் பயமின்றெனப்படாதென்பது விளக்கிய 'எவ்வயிற்பெயரும்' என்றாரென்பது. அவ்வியலான் நிலையலென விரியும் பயனிலைக்கு இருமையும் ஓதாது எழுவாய்க்கே ஓதுதலிற் பயனிலை வெளிப்பட்டேநிற்குமென்பதாயிற்று.

கக௯. இரண்டா வதனுரு பையே யதன்பொரு
ளியற்றவுந் திரிக்கவு மெய்தவும் படூஉந்
திறத்தவும் பிறவுமாஞ் செயப்படு பொருளே.

இது நிறுத்தமுறையானே இரண்டாம்வேற்றுமையது உருபும் பொருளும் உணர்த்துகின்றது.

இ - ள். இரண்டாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு உருபு ஐயென்பதாம்; அதன்பொருள் முன் இல்லதனை உண்டாக்கவும் முன் உள்ளதனை வேறுபடுக்கவும் இவ்விருவகையுமின்றி எய்தவும் படூஉம் பகுதியனவும் அவ்வாற்றானன்றிப் பிறவாற்றான் வரும் பகுதியனவுமாகிய செயப்படுபொருளாம். எ - று.

செயப்படுபொருளாவது ஒரு வினைமுதல் செய்யுந் தொழிலினை உறுவது. இயற்றப்படுவதும் வேறுபடுக்கப்படுவதும் எய்தப்படுவதுமெனச் செயப்படும்பொருளை மூன்றாகத் தொகுத்தாரேனும், வகுத்துக்கூறுமிடத்து இயற்றப்படுவதொரு தன்மைத்தாகலின் அஃது ஒன்றும், வேறுபடுக்கப்படுவது எட்டும், எய்தப்படுவது தொழிலுறுவதுந் தொழிற்பயனுறுவதுமாகப் பத்தொன்பதும், ஆக இருபத்தெட்டுவகையவாம் என்பது உரையிற்கொள்க.

வரலாறு;—எயிலையிழைத்தான் இஃதியற்றப்படுவது. குடத்தைவனைந்தானென்பதும் அது. கிளியையோப்பும் பொருளையிழக்கும் நாணையறுக்கும் மரத்தைக்குறைக்கும் நெல்லைத்தொகுக்கும் வேலியைப்பிரிக்கும் அறத்தையாக்கும் நாட்டைச்சிதைக்கும் என வரும் ஓப்புமுதலிய இவ்வெட்டும் வேறுபடுக்கப்படுவன. இவற்றிற்கு வேறுபாடு முறையே ஒருதொழில் உறுவிக்கப்பட்டுத் தானே போதலுந் தொழிற்பயனுற்றமாத்திரையாய் ஒருவன் கொண்டுபோகப்போதலும் சிறிதிழவாமல் வேறுபடுத்தலுஞ் சிறிதிழக்க வேறுபடுத்தலும் விரித்ததுதொகுத்தலும் தொகுத்ததுவிரித்தலும் மிகுத்தலுங் கெடுத்தலுமாம். குறைத்தற்குப் பெருமையைச்சுருக்குதலு

மாம். ஊரைக்காக்கும் தந்தையையொக்கும் தேரையூரும் குரிசி லைப்புகழும் நாட்டைப்பழிக்கும் புதல்வனைப்பெறும் மனைவியைக் காதலிக்கும் பகைவரைவெகுளும் செற்றாரைச்செறும் நட்டாரையு வக்கும் நூலைக்கற்கும் பொன்னைநிறுக்கும் அரிசியையளக்கும் அடைக்காயையெண்ணும் ஊரைச்சாரும் நெறியைச்செல்லும் குதி ரைக்கன்றும் கணையைநோக்கும் கள்வரையஞ்சும் எனவருங் காப்பு முதலிய இப்பத்தொன்பதும் எய்தப்படுவன. இவை தாந்தொழிலு றுவனவுந் தொழிற்பயனுறுவனவுமாகி வரும் வேறுபாடும் உணர்க. வெகுடலுஞ் செறலுங் கொலைப்பொருளவாயவழி வேறுபடுக்கப்படு வனவாம். செறல் வெகுளியது காரியம், உவத்தல் காதலது காரியம். இனிச் சோற்றைக்குழைத்தான் எனச் செய்வான் கருத்து இல்வழி நிகழுஞ்செயப்படுபொருளுஞ் சாத்தன் தன்னைக்குத்தினான் எனச் செய்வானுஞ் செயப்படுபொருளுந் தானேயாய்நிற்பனவுங் கொள்க. பிறவென்றதனானே பகைவரைப்பணித்தான் சோற்றையட்டான் குழையையுடையன் பொருளையிலன் என்றாற்போல்வனவுங் கொ ள்க. எயிலையிழைத்தான் என்றவழி எயிலென்பது இழைத்தற்றொ ழிலையுற்று நின்றாற்போலக், குழையையுடையன் என்றவழிக் குழையென்பதோர் தொழிலுற்று நில்லாமையிற் செயப்படுபொரு ளாமாறென்னையெனின், அஃதும் உடையனெனக் கருதுதற்றொ ழிலையுற்று நின்றமையிற் செயப்படுபொருளேயாமென்பது. காப்பு முதலாயின பொருள்பற்றி நின்றமையான் ஊரைப்புரக்கும் தே ரைச்செலுத்தும் என்பனபோல்வன எல்லாங்கொள்க. (சுக)

௨00. மூன்றா வதனுரு பாலா னொடு
கருவி கருத்தா வுடனிகழ் வதன்பொருள்.

இது மூன்றாம்வேற்றுமையது உருபும் பொருளும் உணர்த் துகின்றது.

இ - ள். மூன்றாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற வேற்று மைக்கு உருபு ஆலும் ஆனும் ஒடும் ஓடும் என்பனவாம். அதன் பொருள் கருவியுங் கருத்தாவும் உடனிகழ்ச்சியுமாம். எ - று.

மேல் ஆலொன்றையும் இதற்கு உருபாகச் சொல்லி ஈண்டு உருபுநான்கென்றல் மலைவாம் பிறவெனின், ஆண்டுப் பெயரும் முறையுங் காட்டுதல்மாத்திரைக்கு வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் பயின்று வருவதனைச் சொன்னார், ஈண்டு அவ்வேற்றுமைக்கு வரும் உருபெல்லாம் எடுத்து ஓதினாராகலான் ஆகாதென்க.

இக்கடாவிடை இங்ஙனம் மேல்வருவனவற்றிற்கும் உய்த்துரைக்க.

"ஆறு மானு மோடு மொடுவுஞ்—சாலு மூன்றும் வேற்றுமைத்தனுவே—செய்வோன் காரணஞ் செயத்தகு கருவி—யெய்திய தொழின்முத லியைபுட னதன்பொருள்" என்றார் ஆசிரியர் அகத்தியனருமென்க. அற்றேல் அவர் பொருளாக்தென்றமையின் மூன்றென்றல் நிரம்பாதெனின், அற்றன்று; காரணத்தையுங் கருவியையும் இயற்றுதற்கருத்தாவையும் ஏவுதற்கருத்தாவையும் பொதுப்பட முறையே கருவி கருத்தா என்றமையின் இவரும் அவ்வைந்தும் நேர்ந்தாரென்பது. பொருட்பன்மைபற்றிக் கருவியை முற்கூறினார்.

கருத்தாவெனினும் வினைமுதலெனினும் ஒக்கும். வினைமுதலாவது கருவிமுதலாயின காரணங்களைத் தொழிற்படுத்துவது. அதுதான் இயற்றும் வினைமுதலும் ஏவும்வினைமுதலுமென இருவகைப்படும். கருவி காரணம் ஏது நிமித்தமென்பன தம்முள் வேறுபாடுடையவேனும் ஒத்தபொருளினவேயாம். கருவியாவது வினைமுதற்றொழிற்பயனைச் செயப்படுபொருட்கண் உய்ப்பது. அதுதான் காரகக்கருவியும் ஞாபகக்கருவியுமென இருவகைப்படும். காரகமாவது தொழிலை இயற்றுவிப்பது. ஞாபகமாவது அறிவிப்பது. காரணம் முதற்காரணமுந் துணைக்காரணமுமென இருவகைப்படும். முதற்காரணமாவது காரியத்தோடு ஒற்றுமையுடையது. துணைக்காரணமாவது முதற்காரணத்துக்குத் துணையாய் அது காரியப்படுங்காறும் உடனிகழ்வது.

தச்சனால் இயற்றப்பட்ட வையம், அகத்தியனால் உரைக்கப்பட்டதமிழ் என்பனபோல்வன இயற்றும்வினைமுதல். அரசனால் இயற்றப்பட்ட தேவகுலம், தேவராற் தரப்பட்ட திரு என்பன போல்வன ஏவும்வினைமுதல். மண்ணான் இயன்ற குடம், பொன்னான் இயன்ற பணி என்பனபோல்வன முதற்காரணம். இவை ஒன்றால் ஒன்று பண்ணப்படுதலென்னும் பொருள. கோலான் இயன்ற குடம், வேலான் இயன்ற வடு என்பனபோல்வன துணைக்காரணம். இவையெல்லாம் ஏதுப்பொருளவாய் நின்ற காரகக்கருவி. உணர்வினால் உணர்ந்தான், அறிவினால் அறிந்தான் என்பனபோல்வன முதற்காரணம். புகையினால் அறிந்தான், ஒளியினால் உணர்ந்தான், முயற்சியிற்பிறத்தலான் ஒலிநிலையாதென்பது உணர்ந்தான் என்பனபோல்வன துணைக்காரணம். இவையெல்லாம் ஏதுப்பொருளவாய்நின்ற ஞாபகக்கருவி. கொடியொடுதுவக்குண்டான், ஊசி

யொடுகுயின்ற தூசும்பட்டும் என்பனபோல்வன உடனிகழ்ச்சி, கொடி சாத்தனைத் தொழிலுறுவிக்குங்கால் அக்கொடி அவனை நீங்கா உடனிகழ்ச்சியை விளக்குதலானும், ஊசி சாத்தன்றொழிற் பயனைத் தூசிலும் பட்டிலும் உய்க்குங்கால் அவ்வூசி அவற்றைநீங்கா உடனிகழ்ச்சியை விளக்குதலானும் இவை முறையே வினைமுதற் பொருள்மேலுங் கருவிப்பொருள்மேலும் வந்தன. இங்ஙனம் வரவே, கருவி கருத்தா எனவே அடங்குதலின் உடனிகழ்வென வேறு கூறவேண்டாவெனினும் அது மிகுந்துகாட்டலின் வேறுகூறினர் போலும் என்பது. இக்கருத்தேபற்றியன்றே "வினைமுதல் கருவி யணைமுதற் றதுவே" என்ற ஆசிரியர் தொல்காப்பியனாரும் மீட்டு உடனிகழ்வு கூறியதூஉமென்பது. இவையெல்லாம் ஆனுருபானும் ஆனுருபானும் ஒடுவுருபானும் வந்தன.

"உலகத்தோடொட்டவொழுகல்" எனவும் "நாவீற்றிருந்தபு லமாமகளோடுநன்பொற்—பூவீற்றிருந்த திருமாமகள் புல்லநாளும்" எனவும் வருவன எல்லாம் ஓடுருபான் வந்தன.

**வா**யாற்றக்கதுவாய்ச்சி அறிவானமைந்தசான்றோர் என்பன போல ஒன்றொன்று தகுதலென்னுங் கருவிப்பொருண்மைக்கண்ணும், நாயாற்கோட்பட்டான் சாத்தனன்முடியுமிக்கருமம் என்பன போல ஒன்றொன்று தொழிலுறுதலென்னும் வினைமுதற்பொருண்மைக்கண்ணும், வாணிகத்தானாயினான் என்பதுபோல ஒன்றொன்றாதலென்னுங் காரக ஏதுப்பொருண்மைக்கண்ணுங், காணத்தாற்கொண்ட அரிசி என்பதுபோல ஒன்றொன்றைக் கோடலென்னுங் கருவிப்பொருண்மைக்கண்ணும், எண்ணோடுவிராய அரிசி என்பதுபோல ஒன்றனோடொன்று மயங்குதலென்னும் உடனிகழ்ச்சிப்பொருண்மைக்கண்ணும், ஆசிரியனோடு மாணாக்கன்வந்தான் என்பதுபோல ஒன்றனோடொன்று இயைந்து ஒருவினையாதலென்னும் உடனிகழ்ச்சிப்பொருண்மைக்கண்ணும், மலையொடுபொருத மால்யானை என்பதுபோல ஒன்றனோடொன்று இயைந்து வேறுவினையாதலென்னும் உடனிகழ்ச்சிப்பொருண்மைக்கண்ணும், (பொருதல் யானைக்கல்லது மலைக்கின்மையின் வேறுவினையாயிற்று.) பொன்னோடிரும்பனையர் நின்னோடுபிறர் என்பதுபோல ஒன்றனோடொன்று இயைந்து ஒப்பல்லா ஒப்பினை உரைத்தலென்னும் உடனிகழ்ச்சிப்பொருண்மைக்கண்ணும், (பொன்னோடு இரும்பை உவமித்தலை ஒப்பர் நின்னோடு பிறரை உவமிக்குமிடத்து என்பதாம்.) கண்ணாற்கொத்தை காலான்முடவன் என்பனபோலச் சினைவிகாரத்தை முதன்மேல் ஏற்றிக்கூறும் பொருண்மைக்கண்ணும்,

மதியோடொக்குமுகம் என்பதுபோல ஒப்பின்கண்ணுஞ், சூலொடுகெழுதைபாரஞ்சுமந்தது என்பதுபோலக் கட்புலனுகா ஒருவினைக்கண்ணும் வரும் வேறுபாடும் அறிக.

"தூங்குகையானோங்குநடைய" "உறழ்மணியானுயர்மருப்பின" என்பனபோல்வன எல்லாம் ஆன் ஒடுவாயின. பிறவும் அன்ன.

உ0க. நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டுமுறையாதியி னிதற்கிதெனல்பொருளே.

இது நான்காம்வேற்றுமையது உருபும் பொருளும் உணர்த்துகின்றது.

இ - ள். நான்காம் எண்ணுமுறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு உருபு குவ்வென்பதாம்; அதன்பொருள் அந்தணர்க்கு ஆவைக்கொடுத்தான் "இரப்போர்க்குத் தேர்வீசும் வண்கையவன்" என்பனபோல ஒன்றற்கொன்றைக் கொடுத்தலும், அவற்குப்பகை இவன் அவற்குமாற்றான் இவன் மக்கட்குப்பகை வெகுளி என்பனபோல ஒன்றற்கொன்று பகையாதலும், நாகர்க்குப் பலிநேர்ந்தார் சாத்தற்கு மகள் உடம்பட்டார் என்பனபோல ஒன்றற்கொன்றை மேற்கொடுப்பதாக உடம்படுதலும், அவற்குத் தக்காள் இவள் அறத்திற்குத் தக்கது அருள் என்பனபோல ஒன்றற்கொன்று தகுதலுங், கடிசூத்திரத்துக்குப்பொன் அவனுக்குநெல் என்பனபோல உருபேற்கும்பொருள் தானேயாய்த் திரிதலுங், கூழிற்குக்குற்றேவல் செய்யும் கூலிக்குக்கூறையொலிக்கும் என்பனபோல ஒன்றனை மேற்பெறுதல் காரணமாக ஒருதொழில் நிகழ்த்தலுஞ், சாத்தற்குமகன் கொற்றிக்குமகள் என்பனபோல ஒன்றற்கொன்று முறையாதலும் முதலிய பொருண்மைக்கண் இதற்கு இது என்பதுபட நிற்றலாம். எ - று.

ஆதியென்றதனானே மாணுக்கற்கு அறிவுகொடுத்தான் என்பதுபோலக் கொடுப்பான்பொருளாய்க் கொள்வான்கட் செல்லாது ஆண்டுத்தோன்றுதலும் மாணுக்கற்கு நூற்பொருள் உரைத்தான் என்பதுபோலக் கொடைப்பொருள்குறித்த சொல்லானன்றிப் பிறவாய்பாட்டாற் கூறுதலுமாகிய கொடைப்பொருண்மைக்கண்ணும் "அல்லவைசெய்வார்க்கறங்கூற்றம்" பிணிக்குமருந்து. கள்வர்க்குத் தள்ளும் உயிர்நிலை என்பனபோலப் பகைமை தோன்றநிற்கும் பொருண்மைக்கண்ணும், "உற்றூர்க் குரியர் பொற்றொடி மகளிர்"

"அருங்கலமுல்லகின்பிக்கவரசர்க்கேயுரிய" "செல்வர்க்கேசெல்வந்த கைத்து" என்பனபோலத் தகுதிதோன்றநிற்கும் பொருண்மைக் கண்ணும், கரும்பிற்குவேலி மயிரிற்கெண்ணெய் உயிரிற்குண்டி என்பனபோல ஒன்றற்கொன்று உபகாரப்படுதற்கண்ணும், சாத்தற்குக் கூறுகொற்றன் என்பதுபோலப் பொதுவாகிய பொருளைக் கூறுபடுத்தற்கண்ணும், கைக்கியாப்புடையதுகடகம் "உண்டிவெய்யோர்க்குறும்பிணியெளிது" என்பனபோல ஒன்றற்கொன்று பொருத்தமுடைத்தாதற்கண்ணும், அவற்குநட்டான் அவற்குத்தமன் என்பனபோல ஒன்றற்கொன்று நட்பாதற்கண்ணும், நட்டார்க்குக்காதலன் புதல்வர்க்கன்புறும் என்பனபோல ஒன்றற்கொன்று காதலுடைத்தாதற்கண்ணும், வடுகரசர்க்குச்சிறந்தார்சோழியவரசர் கற்பார்க்குச் சிறந்ததுசெவி என்பனபோல ஒன்றற்கொன்று சிறத்தலென்னும் பொருண்மைக்கண்ணும் வருவன எல்லாங் கொள்க. இன்னும் இதனானே அரசர்க்கமைச்சன் நமக்குநல்லன் "நிலத்துக்கணியென்பநெல்லுங்கரும்பும்" "போர்க்குப்புணைமன்" "மனைக்குப்பாழ்வாணுதலின்மை" "அந்தணர்நூற்குமறத்திற்குமாதியாய்" "பல்லுக்குத் தோற்றபனிமுல்லை" "ஊர்க்குமணித்தேபொய்கைபொய்கைக்குச்—சேய்த்துமன்றேசிறுகான்யாறே" இச்சொற்குப்பொருளிது அவற்குச்சோறுண்டு நினக்குவலியான் அவ்வூர்க்கிவ்வூர்காதம் "நட்டார்க்குத்தோற்றலைநாணுதோன்" என்பனபோல இதற்கு இதுவென்பது பட வருவன பிறவுங்கொள்க. (சரு)

உ0உ. ஐந்தா வதற்குரு பின்னு மில்லு
நீங்கலொப் பொல்லை யேதுப் பொருள்வயி
னிதனினிற் றிதுவென வரலதன் பொருளே.

இஃது ஐந்தாம்வேற்றுமையது உருபும் பொருளும் உணர்த்துகின்றது.

இ - ள். ஐந்தாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு உருபு இன்னும் இல்லுமாகிய இரண்டுமாம்; நீக்கமும் பொரூஉவும் எல்லையும் ஏதுவுமாகிய நால்வகைப்பொருண்மைக்கண்ணும் இப்பொருளின் இத்தன்மைத்தாயிருக்கும் இப்பொருளென்னும் பொருண்மைத்தாய் வருதல் அதன்பொருளாம். எ - று.

உ-ம். ஊரினீங்கினுனுணன் தமரிற்றீர்ந்தான்சாத்தன் வரையின்வீழருவி "தலையினிழிந்த மயிரனையர்மாந்தர்—நிலையினிழிந்தக்கடை" காமத்திற்பற்றுவிட்டான்காவலன் என்பனபோல்வன நீக்

கம். பொரூஉ உறழ்பொரூஉவும் உவமப்பொரூஉவுமென இருவகைப்படும். உறழ்தல் ஒன்றினொன்றைமிகுத்தல். காக்கையிற்கரிது களம்பழம் என வண்ணம் பற்றியும் இதனின்வட்டமிது என வடிவு பற்றியும் இதனினெடிதிது என அளவுபற்றியும் இதனிற்றீவிதிது எனச் சுவைபற்றியும் இதனிற்றண்ணிதிது எனத் தண்மைபற்றியும் இதனின்வெய்திது என வெம்மைபற்றியும் இதனினன்றிது என நன்மைபற்றியும் இதனிற்றீதிது எனத் தீமைபற்றியும் இதனிற்சிறிதிது எனச் சிறுமைபற்றியும் இதனிற்பெரிதிது எனப் பெருமைபற்றியும் இதனின்வலிதிது என வலிமைபற்றியும் இதனின்மெலிதிது என மென்மைபற்றியும் இதனிற்கடிதிது எனக் கடுமைபற்றியும் இதனின்முதிதிது என முதுமைபற்றியும் இதனினிளைதிது என இளமைபற்றியும் இதனிற்சிறந்ததிது எனச் சிறப்புப்பற்றியும் இதனினிழிந்ததிது என இழிவுபற்றியும் இதனிற்புதிதிது எனப் புதுமைபற்றியும் இதனிற்பழைதிது எனப் பழைமைபற்றியும் இவனினிலனிவன் என இன்மைபற்றியும் இவனினுடையனிவன் என உடைமைபற்றியும் இதனினுறுமிது என நாற்றம்பற்றியும் இதனிற்பலவிவை எனப் பன்மைபற்றியும் இதனிற்சிலவிவை எனச் சின்மைபற்றியும் வருவனபோல்வன எல்லாம் பொரூஉ. இவற்றிற்கு இருவகைப்பொரூஉவும் விரிக்க. வண்ணம் வெண்மை கருமை முதலாயின; வடிவு வட்டஞ் சதுரம் முதலாயின; அளவு நெடுமை குறுமை முதலாயின; சுவை கைப்புப் புளிப்பு முதலாயின; நாற்றம் நறுநாற்றந் தீநாற்றம் முதலாயின.

கருவூரின்கிழக்கிது இதனினூங்கிது என்பனபோல்வன எல்லை; கள்ளரினஞ்சுமிவன் வாணிகத்தினுயினுனிவன் "கோட்டிற் செய்நகொடிஞ்சிநெடுந்தேர்" என்பனபோல்வன ஏது. அவனினளியனிவன் அதனிற்சேய்த்திது இகழ்ச்சியிற்கெட்டானிவன் மகிழ்ச்சியின்மைந்துற்றானிவன் என வருவனபோல்வன பிறவும் அன்ன.

இத்திறத்தனவெல்லாம் இதனினிற்றிதுவென வந்தவாறு கண்டுகொள்க. காக்கையிற்கரிதுகளம்பழம் என்றவழி இதனினென்பது காக்கையினென்பது, இற்றென்பது கரிதென்பது, இதுவென்பது களம்பழமென்பது. பிறவும் அன்ன. இவ்வுதாரணங்களுள் இற்றென்னும் வினைக்குறிப்பானன்றிப் பிறவாய்பாட்டான் வந்தனவும் அப்பொருள்பட நிற்றலான் இற்றென்றலேயாமென்பது. இவ்வாறே இல்லுருபோடும் ஒட்டுக. (சுச)

உ0௫. ஆறனுருமைக் கதுவு மாதுவும்
பன்மைக் கவ்வு முருபாம் பண்புறுப்

பொன்றன் கூட்டம் பலவி னீட்டந்
திரிபி னுக்க மாந்தற் கிழமையிற்
பொருளிடங் காலமாம் பிறிதின் கிழமையி
னித்னதிது வெனவரூஉ மதனது பொருளே.

இஃது ஆறும்வேற்றுமையுருபும் பொருளும் உணர்த்து கின்றது.

இ-ள். ஆறும் எண்ணுமுறைமைக்கண் நின்ற வேற்றுமை யது ஒருமைப்பொருண்மைக்கு அதுவென்பதும் ஆதுவென்பதும் பன்மைப்பொருண்மைக்கு அகாரமும் உருபாம்; பண்பும் உறுப்பும் ஒன்றுபலகுழீஇயதும் வேறுபலகுழீஇயதும் ஒன்றுதிரிந்து ஒன்றாத லுமாகிய தன்னோடு ஒற்றுமையுடைய பொருளான்வந்த தற்கிழ மைக்கண்ணும் பொருளும் நிலனுங் காலமுமாகிய தன்னின்வேறாய் நின்ற பொருளான்வந்த பிறிதின்கிழமைக்கண்ணும் இப்பொருளி னுடையது இப்பொருளென்பதுபட வரும் அதனது பொருள்.எ-று.

ஈண்டுத் தன்னென்றது உருபேற்கும் பொருளை.

"ஆற னுருபே யதுவா தவ்வும்—வேறொன் றுரியதைத் தனக்குரி யதையென—விருபாற் கிழமையின் மருவுற வருமே—யைம்பா லுரிமையு மான்றதற் கிழமை'' என்றார் ஆசிரியர் அகத்திய ஞருமெனக்கொள்க.

பண்பின்கிழமையெனினும் ஒன்றியற்கிழமையெனினும் ஒக் கும். அதுதான் சாத்தனது இயற்கை நிலத்தது அகலம் என்பன போல வரும், இயற்கைக்கிழமையுஞ் சாத்தனது நிலைமை சாத்த னது இல்லாமை என்பனபோல வரும் நிலைமைக்கிழமையுமென இருவகைப்படும்.

உறுப்பாவது ஒருபொருளினது ஏகதேசம். அவ்வுறுப்பின்கி ழமைதான் யானையது கோடு புலியது உகிர் என்பனபோல்வன. ஒன்றுபலகுழீஇயது எள்ளது குப்பை கொள்ளது குவியல் என்பன போல்வன. வேறுபலகுழீஇயது படையது குழாம் மணியது தொ குதி என்பனபோல்வன. திரிபினுக்கமெனினும் மெய்திரிந்தாயதெ னினும் ஒக்கும். அதுதான் சிறிதுதிரிவதூஉம் முழுவதுந்திரிவதூஉ மென இருவகைப்படும். அவற்றுட் சிறிதுதிரிவதுதான் சாத்தனது செயற்கை சாத்தனதுகற்றறிவு என்பனபோல வருஞ் செயற்கைக் கிழமையும், அரசனதுமுதுமை அரசனதுமுதிர்வு என்பனபோல வரும் முதுமைக்கிழமையுஞ், சாத்தனதுதொழில் சாத்தனதுசெ

லவு என்பனபோல வரும் வினைக்கிழமையுமென மூவகைப்படும். முதுமை பிறிதோர் காரணம்பற்ருது காலம்பற்றி ஒருதலையாக அப்பொருட்கட் தோன்றும் பருவமாகலிற் செயற்கையுள் அடங்காதென்க. சாத்தனதொப்பு தொகையதுவிரி பொருளதுகேடு சொல்லதுபொருள் இவையும் அன்ன. முழுவதுந்திரிவது எள்ளதுசாந்து கோட்டதுநூறு என்பனபோல்வன. இத்திறத்தன வெல்லாந் தற்கிழமை. இனிப்பிறிதின்கிழமை மூன்றனுட் பொருட்பிறிதின்கிழமைதான் சாத்தனதுடைமை சாத்தானதுதோட்டம் என்பனபோல வரும் உடைமைக்கிழமையும், மறியதுதாய் மறியது தந்தை என்பன்போல வரும் முறைக்கிழமையும், இசையதுகருவி, வனைகலத்தததிகிரி என்பனபோல வருங் கருவிக்கிழமையும், அவனதுதுணை அவனதிணங்கு என்பனபோல வருந் துணைக்கிழமையும், நிலத்ததொற்றிக்கலம் சாத்தனதுவிலைத்தீட்டு என்பன போல வருங் கலக்கிழமையும், (கலமாவது ஓலை. இஃது இருபொருட்கு உரிமையுடைமையின் உடைமையின்வேருயிற்று.) ஒற்றியதுமுதல் ஒற்றியதுபொருள் என்பனபோல வரும் முதற்கிழமையுங், கபிலரதுபாட்டு என்பதுபோல வருஞ் செய்யுட்கிழமையும், (பாரியதுபாட்டு எனவும்படுதலின் இதுவும் இருபொருட்கு உரித்து. பாணரதுபாட்டியலென்பதும் அது.) காட்டதியானை என்பதுபோல வரும் வாழ்ச்சிக்கிழமையுமென எண்வகைப்படும். இனி இடப்பிறிதின்கிழமைதான் முருகனதுகுறிஞ்சிநிலம் என்பதுபோல வருங் கிழமைக்கிழமையும், யானையதுகாடு என்பதுபோலவரும் வாழ்ச்சிக் கிழமையுமென இருவகைப்படும். இனிக் காலப்பிறிதின்கிழமைதான் வெள்ளியதாட்சி என்பதுபோல வருங் கிழமைக்கிழமைத் தாய் நிற்கும். "தனதுவெள்வேல் யானைவளவன் கொல்லிமிமிசை" என்பதுபோல ஆதுருபுஞ் சாத்தனவாடை என்பதுபோல அகாரவுருபும் வந்தனகாண்க. பிறவும் அன்ன. பெரும்பான்மைபற்றி இதனதிது என்ருரேனும் பன்மைக்கண் இதனவிவை என்பதுபடவருதல்கொள்க. (சடு)

உ0ச. ஏழ னுருபு கண்ணே யதன்பொருள்
வினைசெய் யிடத்தி னிலத்திற் காலத்தி
னனைவகைக் குறிப்பிற் ரேன்றலா மன்றியுங்
கண்கால் புறமக முள்ளுழை கீழ்மேல்
பின்சா ரயல்புடை தேவகை யெனாஅ
முன்னிடை கடைதலை வலமிட மெனாஅ
வன்ன பிறவும் மதன்பால வென்மனார்.

இஃது ஏழாம்வேற்றுமையது உருபும் பொருளும் உணர்த்துகின்றது.

இ - ள். ஏழாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு உருபு கண்ணென்பதாம்; அதனது பொருள் வினைசெய்யாநிற்றலாகிய இடத்தின்கண்ணும் நிலமாகிய இடத்தின்கண்ணுங் காலமாகிய இடத்தின்கண்ணுமென அம்மூவகைக்குறிப்பின்கண்ணுந் தோன்றலாம்; அன்றியுங் கண் முதலாக இடம் ஈறாகச் சொல்லப்பட்ட பத்தொன்பது பொருளும் அவைபோல்வன பிறவும் ஏழாவதன் திறத்தன என்றுகூறுவர் ஆசிரியர். எ - று.

எனவே, இடமாகக் குறிக்கப்படாதவழி அப்பெயர்க்கண் வேற்றுமை தோன்றாதென்பதாம். தன்னினமுடித்தலென்பதனால் ஏனைவேற்றுமைச்சொற்களும் அவ்வப்பொருட்குறிப்பு இல்வழி அவ்வப்பெயர்க்கண் வாராமைகொள்க.

வரலாறு;—தட்டுப்புடைக்கண்வந்தான் மாடத்தின்கணிருந்தான் கூதிர்க்கண்வந்தான் எனவரும்.

இனிக் கண்ணென்னும் பொருளாவது "கண்ணின்றுகூறுதலாற்றானவனுயினான்" எனவும் "கண்ணகன்ஞாலம்" எனவும் கண்ணென்னும் இடைச்சொல்லான் உணர்த்தப்படும் இடப்பொருண்மை. தேவகையென்பது திசைக்கூறு. கண் கால் புறம் அகம் என்பனவற்றது பொருள்வேற்றுமை வழக்குநோக்கி உணர்ந்துகொள்க. கண்ணின்றுசொல்லியானை என்கணின்றிவைசொல்லற்பாலையல்லை என்றும் ஊர்க்காற்செய்யை ஊர்க்கட்செய் என்றும் ஊர்ப்புறத்துநின்றமரத்தை ஊர்க்கண்மரமென்றும் எயிலகத்துப்புக்கானை எயிற்கட்புக்கான் என்றும் இல்லுளிருந்தானை இல்லின்கணிருந்தான் என்றும் அரசனுழையிருந்தானை அரசன்கணிருந்தான் என்றும் ஆலின்கீழ்க்கிடந்த ஆவை ஆலின்கட்கிடந்தது என்றும் மரத்தின்மேலிருந்த குரங்கை மரத்தின்கணிருந்தது என்றும் ஏர்ப்பின்சென்றானை ஏர்க்கட்சென்றான் என்றும் காட்டுச்சாரோடுவதனைக் காட்டின்கண்ணோடுவது என்றும் உறையூர்க்கயனின்ற சிராப்பள்ளிக்குன்றினை உறையூர்க்கட்குன்று என்றும் எயிற்புடைநின்றாரை எயிற்கணின்றார் என்றும் வடபால்வேங்கடந் தென்பாற்குமரி என்பனவற்றை வடக்கண்வேங்கடந் தெற்கட்குமரி என்றும் புலிமுன்பட்டானைப் புலிக்கட்பட்டான் என்றும் நூலின் இடையுங் கடையுந் தலையும் நின்ற மங்கலத்தை நூற்கண்மங்கலம் என்றும் கைவலத்துள்ளதனைக் கைக்கண்ணுள்ளது என்றும் தன்னிடத்து நிகழ்வதனைத் தன்

கணிகழ்வது என்றும் அவ்விடப்பொருள்பற்றி ஏழாம்வேற்றுமை வந்தவாறு கண்டுகொள்க. ஏனுவென்பது எண்ணிடைச்சொல்.

அன்னபிறவும் என்றதனாற் பொருட்கணுணர்வு என்கணன்புடையன் மலர்க்கணுற்றம் ஆகாயத்துக்கட்பருந்து என்னுந் தொடக்கத்தன கொள்க.

இனிக் கண் கால் முதலியவற்றை உருபென்பாரும் உளராலோவெனின், உருபாயின் ஊர்ப்புறத்திருந்தான் ஊரகத்திருந்தான் கைவலத்துள்ளதுகொடுக்கும் எனப் புறம் அகம் வலம் என்பனவற்றுவழி அத்துச்சாரியைகொடுத்து உதாரணங்காட்டல் பொருந்தாமையானும் அவை வேறு வேறுபட்ட இடப்பொருளவாகிய பெயராய்நிற்றலல்லது பெயர்ப்பொருளை ஐ ஒடு கு இன் அது போல வேறுபடுத்துந் தன்மையவாய உருபுகளாய் நிற்றலின்மையானும் உருபாகாவென்க. இவற்றைப் பொருளென்றலே ஆசிரியர் தொல்காப்பியனார்க்குங் கருத்தென்பது சேனவரையருரையான் உணர்க. வாய் வயின் பாடு அளை முதலியன இடப்பொருளவாகிய பெயராய் நிற்றலல்லது பெயர்ப்பொருளை வேறுபடுத்துந் தன்மையவாய் நிற்றலின்மையின் அவையும் ஏழனுருபாகாமையுங் கண் கால் முதலியனபோலத் தம்முட் பொருள்வேறுபாடு உடைய அன்மையின் இவ்விடப் பொருள்பற்றிக் கண்ணென்னுருபு வாராமையும் உணர்க. (சசு)

௨0ரு. எட்ட னுருபே யெய்துபெய ரீற்றின்
றிரிபு குன்றன் மிகுத லியல்பயற்
றிரிபு மாம்பொருள் படர்க்கை யோரைத்
தன்முக மாகத் தானழைப் பதுவே.

இஃது எட்டாம்வேற்றுமையது உருபும் பொருளும் உணர்த்துகின்றது.

இ-ள். எட்டாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற வேற்றுமைக்கு உருபு விளியேற்கும் பெயரின் இறுதி திரிதலுங் கெடுதலும் மிகுதலும் இயல்பாதலும் ஈற்றயல் நின்றதன் திரிபுமாம்; அதன்பொருள் படர்க்கையிடத்தாரை ஒருவன் தனக்கு எதிர்முகமாக விளித்தலாம். எ - று.

எய்துபெயரெனவே, எய்தாப்பெயரும் உளவென்பதாயிற்று. அவை மேற்கூறுப. படர்க்கையிடத்தாரெனவே ஏனையிடத்தார் ஈண்டே விலக்கப்பட்டாரென்பதூஉம் பெற்றாம். படர்க்கையோ

ரை என்றாரேனும் "ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்—வருவன தாமே வழக்கென மொழிப" என்பவாகலின் அவ்விடத்து ஐம்பாலுங்கொள்க. இயல்பாய விளியுருபிற்கும் பெயருருபிற்கும் வடிவான் வேற்றுமையின்றேனும் பொருளான் உளதெனக்கொள்க. தாமென்பது சந்தவின்பப்பொருட்டு வந்தது. (சஎ)

உ0சு. இஉ ஊவோ டையோ னளரல
யவ்வீற் றுயர்திணை யோரவல் லிவற்றொடு
ணஃகா னுவீ றாகும் பொதுப்பெயர்
மெய்யுயி ரனைத்தீற் றஃறிணை விளிப்பன
வொல்வழி யறிதல் வழக்கத் தான.

இது மேல் எய்துபெயரென்றார் அவை இவையெனத் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். இகர உகர ஊகார ஐகார ஓகாரங்களும் னகர ளகர ரகர லகர யகரங்களுமாகிய பத்து ஈற்று உயர்திணைப்பெயர்களும் இவற்றுள் ஓகாரமும் ரகாரமுமாகிய இரண்டனையும் ஒழித்துநின்ற எட்டொடே ணகாரமும் ஆகாரமுமாகிய பத்து ஈற்று விரவுப்பெயர்களும் ஒற்றும் உயிருமாகிய எல்லா ஈற்று அஃறிணைப்பெயர்களும் விளியேற்பனவாம். அங்ஙனம் விளியேற்றற்குப் பொருந்தும் இடம் அறிக வழக்கிடத்து. எ - று.

முன்னிலையாக்கலுஞ் சொல்வழிப்படுத்தலும் வேண்டுழியென்பார் ஒல்வழியென்றார். இன்னும் அதனானே உகரங் குற்றுகரமெனவும் முற்றுகரமுஞ் சிறுபான்மை விளியேற்குமெனவுங் கொள்க. ஏனை ஈற்றுப் பெயர்கள் விளிகொள்ளாவென்பது தானே போதருமென்க. (சஅ)

உ0எ. இம்முப் பெயர்க்க ணியல்பு மேயு
மிகர நீட்சியு முருபா மன்னே.

இது மூவகைப்பெயர்க்கும் பொதுவாகிய விளியுருபு தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். மேல் விளியேற்பன இவையென வரைந்தோதப்பட்ட உயர்திணைப்பெயர் விரவுப்பெயர் அஃறிணைப்பெயரென்னும் மூவகைப்பெயர்க்கண்ணும் இயல்பாதலும் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிகுதலும் இகர ஈறு ஈகாரமாய்த் திரிதலும் விளிவேற்றுமைக்கு உருபுகளாம். எ - று.

வரலாறு;—நம்பிவாழி வேந்துவாழி திருவாழி ஆடூஉவாழி நங்கைவாழி கோவாழி என உயிரீற்று உயர்திணைப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின. கணி கணியே, வேந்து வேந்தே, திரு திருவே, ஆடூஉ ஆடூஉவே, கோ கோவே என உயிரீற்று உயர்திணைப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன. நம்பி நம்பீ, தோழி தோழீ என இகர ஈற்று உயர்திணைப்பெயர்கள் ஈகாரமாய்த் திரிந்தன. னகர ஈற்று உயர்திணைப்பெயருள் "நம்பன்சிறிதேயிடைதந்திதுகேட்க" என அன்னீறுஞ் சேரமான் மலையமான் என ஆனீறும் அண்மைக்கண் இயல்பாயின. "படிவ வுண்டிப் பார்ப்பான் மகனே" என முறைமைசுட்டாமகனுந் "தென்னவனே தேர்வேந்தே தேறுநீர்க் கூடலார்—மன்னவனே மார்பின் மறு" என அன்னீறுந் தம்முன் தம்முனே என உன்னீறும் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன. கடவுள்வாழி அடிகள்கூறீர் கோமாள்கூறாய் கடியாள்கூறாய் "ஆவுமானியற்பார்ப்பனமாக்களு*** மெம்மம்புகடிது விடுதும் நும்மரண் சேர்மின்" என ளகர ஈற்றுயர்திணைப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின. "அகவன்மகளேயகவன்மகளே" என முறைமைசுட்டாமகளென்னும் ளகர ஈற்று உயர்திணைப்பெயர் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கது. மாந்தர்கூறீர் சான்றோர்கூறீர் கேளிர்வாழி "பெண்டிரும்பிணியுடையீரு*** நும்மரண்சேர்மின்" என ரகர ஈற்று உயர்திணைப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின. இறையவர் இறையவரே வந்தவர் வந்தவரே கரியவர் கரியவரே என ரகர ஈற்று உயர்திணைப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன. குரிசில்கூறாய் தோன்றல் கூறாய் ஆண்பால்கூறாய் பெண்பால்கூறாய் என லகர ஈற்று உயர்திணைப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின. திருமாலே தோன்றலே "குருசிலேயெம்மையுள்ளாய்" என லகர ஈற்று உயர்திணைப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன. ஆய்வாழி என யகர ஈற்று உயர்திணைப்பெயர் அண்மைக்கண் இயல்பாயிற்று. ஆயேகூறாய் என யகர ஈற்று உயர்திணைப்பெயர் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கது. பிணாவாராய் சாத்திகூறாய் பூண்டுகூறாய் அழிதூவாராய் தந்தைதாராய் அன்னையருளாய் என உயிரீற்று விரவுப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின. பிணாவேகூறாய் பூண்டேகூறாய் என உயிரீற்று விரவுப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன. சாத்தி சாத்தீ எய்பி எய்பீ என இகர ஈற்று விரவுப்பெயர்கள் ஈகாரமாய்த் திரிந்தன. ஆண்வாழி பெண்வாழி சாத்தன்வாழி மகள்வாழி தூங்கல்வாழி தாய்வாழி என ஒற்றீற்று விரவுப்பெயர்கள் அண்மைக்கண் இயல்பாயின. ஆண் ஆணே பெண்

பெண்ணே மகன் மகனே மருமகன் மருமகனே மகள் மகளே மருமகள் மருமகளே தூங்கல் தூங்கலே கூந்தல் கூந்தலே தாய் தாயே என ஒற்றீற்று விரவுப்பெயர்கள் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன. நெஞ்சம்வருந்தினை வாழியநெஞ்சம் எனவும் "குருகு கருங்கால்வெண் குரு கொன்று கேண்மதி" எனவும் ஒற்றீற்று அஃறிணைப்பெயரும் உயிரீற்று அஃறிணைப்பெயரும் அண்மைக்கண் இயல்பாயின. இதண் இதணே புனம் புனமே மான் மானே வேய் வேயே கார் காரே குயில் குயிலே புள் புள்ளே எனவும் விள விளவே நிலா நிலாவே கிளி கிளியே வீ வீயே குருந்து குருந்தே பூ பூவே சே சேவே கழை கழையே எனவும் ஒற்றீற்று அஃறிணைப்பெயர்களும் உயிரீற்று அஃறிணைப்பெயர்களும் பிறிது வந்து அடைதலாய் ஏகாரம் மிக்கன. மந்தி மந்தீ தும்பி தும்பீ என இகர ஈற்று அஃறிணைப்பெயர்களின் ஈறு ஈகாரமாய்த் திரிந்தன. பிறவும் அன்ன.

மன்னென்றமிகையானே ஐகார ஈற்று உயர்திணைப்பெயர் பிறிது வந்து அடைதலாய் ஏகாரம் ஏலாதனவும் அஃறிணைப்பெயர் அன்மொழித்தொகையாய்த்தான் ஆகுபெயராய்த்தான் உயர்திணைக்கண்வந்துழி உயர்திணைப்பெயராய்ச் சுடர்த்தொடி "சுடர்த்தொடீகேளாய்" என இகர ஈறு ஈகாரமாய்த் திரிந்துந் தாழ்குழல் தாழ்குழலே எனப் பிறிதுவந்து அடைதலாய் ஏகாரம் மிக்கும் விளியேற்றலுந் தோழீஇஇஇ தோழீஇஇஇஇ எனத் தொழில்செய்கின்றவளேயென்னும் பொருட்டாய் நிற்பதோர் இகர ஈற்று அளபெடைப்பெயரும் உழாஅஅன் கிழாஅஅன் என னகர ஈற்று அளபெடைப்பெயருங் கோஒஒள் என ளகர ஈற்று அளபெடைப்பெயருஞ் சிறுஅஅர் மகாஅஅர் என ரகர ஈற்று அளபெடைப்பெயரும் மாஅஅல் என லகர ஈற்று அளபெடைப்பெயரும் இயல்பாய் விளியேற்றலும் நம்முன் நம்முனா என உன்னீறு ஆகாரம் மிகுதலும் அம்மசாத்தா என்புழிச் சாத்தா என்பதே எதிர்முகமாக்குமாயினும் அம்ம என்னும் இடைச்சொல்லும் எதிர்முகமாக்குதலே குறித்துநிற்றலின் அதுவும் அம்மாசாத்தா என இறுதி திரிந்து விளியேற்றலும் இவ்வாறுவருவன பிறவுங்கொள்க. இவ்வளபெடைப்பெயர்கள் செய்யுளுட் குறைந்துவந்தன சந்த இன்பநோக்கி விகாரத்தான் வந்தனவென்க. (உக)

உ0அ. ஐயிறு பொதுப்பெயர்க் காயு மாவு
முருபா மல்லவற் றுயு மாகும்.

இஃது ஐகார ஈற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். ஐகார ஈற்றுப் பொதுப்பெயர்க்கு அவ்வைகாரம் ஆயாயும் ஆவாயுந் திரிந்து விளியேற்றலும் உயர்திணை அஃறிணைப் பெயர்க்கு அஃது ஆயாய் ஈறுதிரிந்து விளியேற்றலும் உருபாம். எ - று.

வரலாறு;—அன்னை அன்னாய் "அன்னா வன்னா வலந்தேனெழுந்திராய்" அத்தை அத்தாய் அத்தா எனவும் நங்கை நங்காய் மடந்தை மடந்தாய் எனவும் "சிறுமீன் கவுட்கொண்ட செந்தூவி நாராய்" "கொன்றாய் குருந்தே கொடிமுல்லாய் வாடினீர்" எனவும் வரும்.()

உ0௯. ஒருசார் னவ்வீற் றுயர்திணைப் பெயர்க்க
ணளபீ றழிவய னீட்சி யதனோ
டுறு போத லவற்றோ டோவுற
வீறழிந் தோவுற லிறுதியவ் வாத
லதனோ டயறிரிந் தேயுற வீறழிந்
தயலே யாதலும் விளியுரு பாகும்.

இஃது னகர ஈற்று உயர்திணைப்பெயர்கட்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். னகர ஈற்று உயர்திணைப்பெயருட் சில சேரமான் சேரமாஅன் மலையமான் மலையமாஅன் அம்பர்கிழான் அம்பர்கிழாஅன் வல்லங்கிழான் வல்லங்கிழாஅன் எனச் செய்மைக்கண் அளபெடுத்தலுஞ், சில துறைவன் துறைவ ஊரன் ஊர என அன்னீறு அண்மைக்கண் ஈறுகெடுதலுஞ், சில நம்பன் நம்பான் எம்பெருமன் எம்பெருமான் என அன்னீறு ஈற்றயல் நீடலுஞ், சில துறைவன் துறைவா ஊரன் ஊரா சோழன் சோழா என அன்னீறு அயல் நீண்டு ஈறுகெடுதலுஞ், (ஏடாவென்பது படர்க்கைப்பெயராகாது தோழன் முன்னிலைப்பெயராயே தோழாவென்னும் பொருட்டாய் நிற்பதொன்றாகலின் ஈண்டைக்கு ஏலாதென்க.) சில ஐயன் ஐயாவோ அன்பன் அன்பாவோ என அன்னீறு புலம்பின்கண் ஈறழிந்து அயல் நீண்டு பிறிதுவந்தடைதலாய் ஓகாரம் மிகுதலுஞ், சில திரையன் திரையவோ ஐயன் ஐயவோ என அன்னீறு புலம்பின்கண் ஈறழிந்து பிறிதுவந்தடைதலாய் ஓகாரம் மிகுதலுஞ், சில வந்தான் வந்தாய் சென்றான் சென்றாய் என ஆனீறு இறுதி யகாரவொற்றாயுஞ், சில வாயிலான் வாயிலோயே என ஆனீறுங் கிழவன் "பெருங்கால்வைப்பினா

டுகிழவோயே'' மாயன் மாயோயே என அன்னீறும் அயல் திரிந்து இறுதி யகரவொற்றாய் ஏகாரம் மிகுதலுஞ், சில ஐயன் "ஐயேயெ மக்கீங்கருள்'' முருகன் "மடவைமன்ற வாழியமுருகே'' என அன்னீறு ஈறழிந்து அயலில் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம். எ-று.

பிறவும் அன்ன.

ஒருசாரென்பதனை விளியதிகாரமுடிவளவும் உய்த்துரைக்க.()

உகO. ளஃகா னுயர்பெயர்க் களபய னீட்சி
யிறுதி ளகரம் யவ்வொற் றாத
லயலி லகரமே யாதலும் விளித்தனு.

இது ளகார ஈற்று உயர்திணைப்பெயர்கட்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். ளகார ஈற்று உயர்திணைப்பெயருட் சில "மேவார்த் தொலைத்தவிறன்மிகுவேஎள்'' எனச் செய்மைக்கண் அளபெடுத்தலுஞ், சில குழையள் குழையாள் அணியள் அணியாள் மக்கள் மக்காள் என அள்ளீற்று அயல் நீடலுஞ், சில குழையாள் குழையாய் உண்டாள் உண்டாய் என ஆளீற்று இறுதிளகரம் யகரவொற்றாய்த் திரிதலுஞ், சில "தலைமீதுகொள்வமடிகேள்'' என ஈற்றயலில் அகரம் ஏகாரமாதலும் விளியுருபாம். எ - று.

பிறவும் அன்ன.

"துறந்துள்ளாரவரெனத்துனிகொள்ளலெல்லாந்'' என ஈறழிந்தும் விளியேற்கும் என்பாரும் உளராலோவெனின் அது படர்க்கைப்பெயராகாது தோழிமுன்னிலைப்பெயராயே தோழீ என்னும் பொருட்டாய்நிற்பதொன்றாகலின் ஈண்டைக்கு ஏலாதென்க. (௫உ)

உகக. ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ லீற்றய
லகர மீஈ யாதலாண் டையா
வீயாத லதனோ டேயுற லீற்றே
மிக்கயல் யாக்கெட் டதனய னீட
லீற்றி னேவுற லிவையுமீண் டுருபே.

இது ரகார ஈற்று உயர்திணைப்பெயர்கட்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். ரகார ஈற்று உயர்திணைப்பெயருட் சில உழுநர் உழுஅர் செழுநர் செழுஅர் எனச் சேய்மைக்கண் அளபெடுத்தலுஞ், சில தெவ்வர் "என்னைமுன்னில்லன்மின்றெவ்விர்" என ஈற்றயல் அகரம் இகரமாதலுஞ், சில வேந்தர் வேந்திர் நாய்கர் நாய்கிர் என அஃது ஈகாரமாதலுஞ், சில பார்ப்பார் பார்ப்பீர் சான்றார் சான்றீர் கரியார் கரியீர் என ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாதலுஞ், சில பல்சான்றார் பல்சான்றீரே சீவகசாமியார் சீவகசாமியீரே என அதனுடனே ஏகாரம் மிகுதலுஞ், சில தோழியார் தோழீரே தொழும்பியார் தொழும்பீரே என ஈற்றயல் யாக்கெட்டு அதன் அயல் இகரம் ஈகாரமாய் ஏகாரம் மிகுதலுஞ், சில பெண்டிர் பெண்டிரோ என இர் ஈறு புலம்பின்கண் ஓகாரம் மிகுதலுமாகிய இவையும் விளியுருபாம். எ - று.

பிறவும் அன்ன.

ஈண்டென்ற மிகையானே கடல் கழி சாத்தி கொற்றி என்றற் றொடக்கத்து ஒருசாரனவற்றைக் கடலார் கழியார் சாத்தியார் கொற்றியார் எனச் சிறப்பித்து உயர்திணைவாய்பாட்டான் வழங்குழி அவையுங் கடலீரே கழியீரே சாத்தீரே கொற்றீரே என்றற் றொடக்கத்துத் திரிபேற்றலும் பிறவாற்றான் வருந் திரிபுவேறுபாடுகளுங் கொள்க. (ருங)

உகஉ. லகாரவீற் றுயர்பெயர்க் கயனீ டிதலும்
யகார வீற்றிற் களபுமா முருபே.

இது லகார யகார ஈற்று உயர்திணைப்பெயர்கட்கு எய்தியதன் மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். லகார யகார ஈற்று உயர்திணைப்பெயர்களுட் சில முறையானே ஏந்தல் ஏந்தால் தோன்றல் தோன்றால் குரிசில் குரிசீல் என லகார ஈறு ஈற்றயல் நீடலும் "விளங்கு மணிக்கொடும் பூணஅய் நின்னுட்—டிளம்பிடி யொருகூல் பத்தி னும்மே" என யகார ஈறு சேய்மைக்கண் அளபெடுத்தலும் விளியுருபாம். எ - று.

பிறவும் அன்ன. (ருச)

உகங. ணவ்வீற் றுயர்திணை யல்லிரு பெயர்க்கண்
ணிறுதி யழிவது நேடைய னீட்சி.

இது னகார ஈற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். னகார ஈற்று அஃறிணைப்பெயருள்ளும் விரவுப்பெயருள்ளுஞ் சில முறையானே அலவன் "கொடுந்தாளலவகுறையாயிரப்பம்" எனவும் சாத்தன் சாத்தகேள் எனவும் ஈறுகெடுதலும் இகலன் "இகலுபுகுதிக்குமிகலா" அலவன் "கண்டல்சேரளைசேரலவா" கலுழன் "கடும்பறைக்கலுழா" எனவும் சாத்தன் சாத்தா கொற்றன் கொற்றா எனவும் ஈறுகெடுதலுடனே ஈற்றயல் நீடலும் விளியுருபாம். எ - று.

பிறவும் அன்ன. முன்னர் விளியுருபாமென்றதனை ஈண்டும் உய்த்துரைக்க. (ருரு)

உகச. லளவீற் றஃறிணைப் பெயர்பொதுப் பெயர்க்க
ணீற்றய னீட்சியு முருபா கும்மே.

இது லகார ளகார ஈற்று அஃறிணைப்பெயர்க்கும் விரவுப்பெயர்க்கும் எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். லகார ளகார ஈற்று அஃறிணைப்பெயருள்ளும் விரவுப்பெயருள்ளுஞ் சில முயல் "திங்களுட் டோன்றி யிருந்த குறுமுயால்" கிளிகள் கிளிகாள் எனவும் கூந்தல் கூந்தால் மக்கள் மக்காள் எனவும் ஈற்றயல் நீடலும் விளியுருபாம். எ - று.

பிறவும் அன்ன. (ருசா)

உகரு. அண்மையி னியல்புமீ றழிவுஞ் சேய்மையி
னளவும் புலம்பி னோவு மாகும்.

இது முன்னர்க் கூறிப்போந்த இயல்புமுதலாயின இன்னுழியாம் என்கின்றது.

இ - ள். அண்மைக்கண் இயல்பாதலும் ஈறுகெடுதலுஞ் சேய்மைக்கண் அளபெழுதலும் புலம்பின்கண் ஓகாரம் மிகுதலும் விளியுருபாம். எ - று.

நம்பி நம்பீஇ சாத்தி சாத்தீஇ தும்பி தும்பீஇ என இகர ஈறு சேய்மைக்கண் அளபெழுந்தன. ஒழிந்தவற்றிற்கு உதாரணம் முன்னர்க் காட்டினவேயாம். (ருஎ)

உகசா. தநநு எஎன் னவைமுத லாகித்
தன்மை குறித்த னளரவெ னிறுதியும்

விஞச்சுட் டெனுமவை முதல வாகி
யைம்பால் குறித்த வைவகை யிறுதியு
மன்ன பிறவுந் தாமுந் தானு
மின்மை வேண்டும் விளியொடு கொளலே.

இது மேல் விளியேற்குமெனக் கூறிப்போந்த இறுதியவற்றுள் ளும் இவ்வீற்றுப்பெயர்கள் விளியேலா என்கின்றது.

இ - ள். த ந நு என்னும் உயிர்மெய்யையும் எ என்னும் உயிரையும் முதலாகவுடையவாய் ஒருவனது கிளைமைப்பொருண்மையைக் குறித்துநின்ற ன ள ர என்னும் மூவகைப்புள்ளியையும் இறுதியாகவுடைய பெயர்களும் விஞவெழுத்துக்களையுஞ் சுட்டெழுத்துக்களையும் முதலாகவுடையவாகி ஐம்பாலையுங் குறித்துநின்ற ஐவகை இறுதியையும் இறுதியாகவுடைய பெயர்களும் அவைபோல்வன பிறபெயர்களுந் தாம் தான் என்னும்பெயர்களும் மேல் விளியேற்குமெனப் போந்த பெயரோடு கோடலையின்றிநிற்றலை வேண்டும் ஆசிரியன். எ - று.

வரலாறு;—தமன் தமள் தமர் நமன் நமள் நமர் நுமன் நுமள் நுமர் எமன் எமள் எமர் தம்மான் தம்மாள் தம்மார் நம்மான் நம்மாள் நம்மார் நும்மான் நும்மாள் நும்மார் எம்மான் எம்மாள் எம்மார் எனவும், எவன் எவள் எவர் எது எவை ஏவன் ஏவள் ஏவர் ஏது ஏவை யாவன் யாவள் யாவர் யாது யாவை எனவும், அவன் அவள் அவர் அது அவை இவன் இவள் இவர் இது இவை உவன் உவள் உவர் உது உவை எனவும், தாம் தான் எனவும் வரும்.

அன்னபிறவும் என்றதஞனே மற்றையான் மற்றையாள் மற்றையார் மற்றையது மற்றையவை பிறன் பிறள் பிறர் என்பன போல்வனவுங் கொள்க.

வேண்டும் என்றதஞனே "எம்மானே தோன்றிஞ யெம்மை யொழித்தியோ" எனச் சிறுபான்மை விளியோடு கோடலுந் தமர் முதலாயின கள்ளென்னும் இடைச்சொல்லோடு கூடியவழி ளகர ஈறுபோல ஈற்றயல் நீண்டு தமர்காள் எமர்காள் எனவும் நமரங்காள் எனவும் பெயர்த்திரிசொல்லாய்த் திரிந்துநின்று விளியோடு கோடலுங்கொள்க. (ருஅ)

உகள. பொருண்மயங் குதலு முருபுமயங் குதலுந்
தெரிநிலை யுடைய வேற்றுமைக் கண்ணே.

இது மேற்கூறிப்போந்த வேற்றுமைகட்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். பொருள்மயங்குதலும் உருபுமயங்குதலுமாகிய இருகூற்று மயக்கமும் ஆராய்ந்தறியும் இடனுடைய வேற்றுமையிடத்து. எ - று.

உரியவை உரிய என்பார் தெரிநிலையுடைய என்றார். (ருக)

உகஅ. அவற்றுட், பொருளின் மயக்கம் பிறிதொன்றன்
தன்பொருள்விடாது தலைமயங்குதலே. [பொருளொடு

இது பொருள்மயக்கமாமாறு கூறுகின்றது.

இ - ள். அவ்விருகூற்று மயக்கத்துட் பொருளின்மயக்கமாவது பிறிதோர் வேற்றுமையுருபின் பொருளோடு பிறிதோர் வேற்றுமையுருபு தன்பொருளிற் றிராது அப்பொருணிலைக்களத்துச் சென்று மயங்குதலாம். எ - று. (சூ௦)

உகக. உருபின் மயக்கமோ ருருபின் பொருளொடு
தன்பொருள் விடுத்துத் தலைமயங் குதலே.

இஃது உருபு மயக்கமாமாறு கூறுகின்றது.

இ - ள். உருபின்மயக்கமாவது பிறிதொரு வேற்றுமையுருபின் பொருளோடு பிறிதொரு வேற்றுமையுருபு தன்பொருளிற் றீர்ந்து அப்பொருணிலைக்களத்துச் சென்று மயங்குதலாம். எ - று.

உஉ0. அவ்விரு திறனுஞ் செவ்விதி னுடி
யிவ்வென வறித லியல்புணர்ந் தோரே.

இது மேலனவற்றிற்கு ஓர் புறனடை கூறுகின்றது.

இ - ள். அவ்விருகூற்று மயக்கத்தையும் முறையானே ஆராய்ந்து இவையென அறிக இலக்கணங்களை அறிந்தோர். எ - று.

இவ்வென அறிதலாவது கோட்டைக்குறைத்தான் குதிரைக் கன்றினன் நெறியைச்சென்றான் என இரண்டாவதன் பொருளாகிய குறைத்தல் முதலாயின பொருட்கட் கோட்டின்கட்குறைத்தான் குதின்கட்கன்றினன் நெறிக்கட்சென்றான் எனக் குறைத்தல் முதலியவற்றிற்குக் கோடுமுதலாயின இடனுமாகலிற் தன்பொரு

ளிற் றீராது ஏழாவது மயங்கிற்றெனவும், "இவளைக்கொள்ளுமிவ் வணி" என இரண்டாவதன் பொருட்கண் 'இவட்குக்கொள்ளுமிவ் வணி' எனவும், அவனாற்செயத்தகுமக்காரியம் என வரும் மூன்றாவ தன்பொருட்கண் அவற்குச்செயத்தகுமக்காரியம் எனவும், கருவூரின் கிழக்கு சாத்தனினெடியன் மனைவாழ்க்கையிற்பற்றுவிட்டான் ஊ ரிற்றீர்ந்தான் என வரும் ஐந்தாவதன் பொருட்கட் கருவூர்க்குக்கி ழக்கு சாத்தற்குநெடியன் மனைவாழ்க்கைக்குப் பற்றுவிட்டான் ஊர்க்குத்தீர்ந்தான் எனவும், யானையதுகோடுகூரிது ஆவின்கன்றுக ரிது என வரும் ஆறாவதன் பொருட்கண் யானைக்குக்கோடுகூரிது ஆவிற்குக்கன்றுகரிது எனவும், காலைக்கண்வரும் என வரும் ஏழா வதன் பொருட்கட் காலைக்குவரும் எனவும், இதற்கு இதுவென் பது பட வருந் தன்பொருளிற்றீராது நான்காவது மயங்கிற்றெனவும், மணலுளீன்ற எனவரும் ஏழாவதன்பொருட்கட் "கிளையரிநாணற்கி ழங்குமணற்கீன்ற—முளையோ ரன்ன முள்ளெயிற் றுத்துவர் வாய்' எனவும், கொக்கினின்றும் ஒழிந்த எனவரும் ஐந்தாவதன் பொ ருட்கட் "கொக்கினுக்கொழிந்ததீம்பழங்கொக்கின்" எனவும் தம் பொருளிற்றீர்ந்து நான்காவது மயங்கிற்றெனவும் அறிதலாம். பிறவும் அன்ன.

தொக்குழி மயங்குவனவும் உள. அவை மேற்கூறுப.

பொருண்மயக்கந் தன்பொருளிற் றீராது மயங்குதலின் உருபு ஏற்ற சொல்லும் உருபு நோக்கிய சொல்லுந் தம்முள் இயை படையனவாமாகலின் அத்தொடர்ப்பொருள் அவ்வேற்றுமையுரு பின் பொருளாவான் சேறலான் அதனைச் சார்ந்து அதன்பொருளா மென்பதூஉம் உருபுமயக்கந் தன்பொருளிற் றீர்ந்து மயங்குதலின் உருபு ஏற்ற சொல்லும் உருபு நோக்கிய சொல்லுந் தம்முள் இயைபு டையனவல்லவாமாகலின் அத்தொடர்ப்பொருள் அவ்வேற்றுமையு ருபின் பொருளாவான் செல்லாமையான் அதன் பொருளாகாது தான்செல்லும் பக்கத்து வேற்றுமையுருபினைச் சார்ந்து அதன்பொ ருளாமென்பதூஉந் தாமே விளங்குமென்று உணர்க. (சுஉ)

உஉக. முதன்முனை வரிற்கண் சினைமுன் வருதலு
மதுமுதற் காகிற் சினைக்கை யாதலு
மினையவை பிறவு நினைதல் வேண்டும்.

இது வேற்றுமையுருபு ஏற்புழிப் படுவதோர் வரையறையும் வேற்றுமைப்பகுதிக்கு ஏற்பதோர் புறனடையும் உணர்த்துகின்றது.

இ - ள். முதற்சொல்லுஞ் சினைச்சொல்லுமாகத் தொடர்ந்த வழி முதற்சொற்கண் இரண்டாவது வரின் ஏழாவது சினைச்சொற் கண் வருதலும் ஆறுவது முதற்சொற்கண் வரிற் சினைச்சொற்கண் இரண்டாவது வருதலும் இத்தன்மையன பிறவும் ஆராய்ந்து அறி தலை விரும்பும் ஆசிரியன். எ - று.

வரலாறு;—யானையைக்கோட்டின்கட்குறைத்தான் எனவும் யானையதுகோட்டைக்குறைத்தான் எனவும் வரும்.

இனி, இனையவைபிறவும் என்றதனுனே யானையைக்கோட் டைக்குறைத்தான் என ஈரிடத்தும் இரண்டாவதே வருதலும் இவ் வாறே மணியைநிறத்தின்கட்கெடுத்தான் மணியதுநிறத்தைக்கெடுத் தான் மணியைநிறத்தைக்கெடுத்தான் எனப் பண்புபற்றிவருதலுந் தலைமகனைச்செலவின்கணழுங்குவித்தல் தலைமகனதுசெலவைய ழுங்குவித்தல் தலைமகனைச்செலவையழுங்குவித்தல் எனத் தொழில் பற்றி வருதலுஞ் சாத்தனைநூலையோதுவித்தான் யாற்றைநீரைவி லக்கினுன் எனப் பொருட்டொடர்ச்சிபற்றி வருதலும் அரசனோடி ளையர்வந்தார் ஆசிரியனோடுமாணுக்கர்வந்தார் என உயர்பொருளும் இழிபொருளும்பற்றி மயங்கிவந்துழி ஒருவினையொடுச்சொல் உயர் பின்வழித்தாகலும் நம்பிமகன் நங்கைகணவன் என்னுந் தொகை களை விரிப்புழி நம்பிக்குமகன் நங்கைக்குக்கணவன் என "அது வென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயி—னதுவெ னுருபுகெ டக் குகரம் வருதலும்" பிறவாற்றுன் வருவனவுங் கொள்க. (சுஉ)

உஉஉ. முதலிவை சினையிவை யெனவே றுளவில
வுரைப்போர் குறிப்பின வற்றே பிண்டமும்.

இது முதல் சினைகளை ஆராயுமுகத்தான் ஐயம் அறுத்தலும் பல பொருட்டொகுதியை உணர்த்தும் பெயர்க்கும் அவற்றின் இயல்பு எற்பித்தலும் நுதலிற்று.

இ - ள். முதற்பொருள் இவை சினைப்பொருள் இவை எனத் தம்முள் வேறுவேறு பொருளாகா; சொல்லுவாரது குறிப்பின்வழி யவாய் முதலாயவையே சினையுமாய்ச் சினையாயவையே முதலுமாய் நிற்கும் பிண்டப்பொருண்மையை உணர்த்தும் பெயரும் அவ்வியல் பிற்றுய் முதலுஞ் சினையுமாக வழங்கப்பட்டு முதற்கு இரண்டாவது வரிற் சினைக்கு ஏழாவது வருதலுஞ் சிறுபான்மை இரண்டாவது வருதலும் முதற்கு ஆறுவது வரிற் சினைக்கு இரண்டாவது வருத லும் பொருந்தும். எ - று.

முதலென்னப்பட்டது தானே தன்னைப் பிறிதொன்றற்கு ஏக தேசமாக நோக்கிச் சினையெனக் குறித்தவழிப் படையதியானை எனச் சினையுஞ் சினையெனப்பட்டது தானே தன்கண் ஏகதேசத்தை நோக்கி முதலெனக் குறித்தவழிக் கோட்டதுநுனி என முதலுமாமென்பார் 'உரைப்போர்குறிப்பின்' என்றார். கோட்டைநுனிக் கட்குறைத்தான் கோட்டைநுனியைக்குறைத்தான் கோட்டதுநுனியைக்குறைத்தான் என முதற்கு ஓதப்பட்ட உருபு சினைக்கண்ணும் வந்ததாலென்று ஐயுற்றாற்குக் கருத்துவகையாற் கோடென்பதூஉம் ஆண்டு முதலாய்நிற்றலின் முதற்கு ஓதிய உருபே முதற்கண் வந்ததென ஐயமகற்றியவாறு காண்க. குப்பையைத்தலைக்கட்சிதறினான் குப்பையைத்தலையைச்சிதறினான் குப்பையதுதலையைச்சிதறினான் என வரும். இது வேறுபல குழீஇ யகாடுமுதலியவற்றிற்கும் ஒக்கும். பிண்டமும் முதலுஞ்சினையுமாகலின் வேறு கூறவேண்டாவெனின், குப்பையென்புழித் தொக்க பல்பொருளல்லது அவற்றின் வேறாயவற்றின் இயன்று தான் ஒன்றெனப்படும் பொருளின்மையிற் தொல்லாசிரியர் அதனை முதலென்றுவேண்டார் அது மேற்றொட்டு வழங்கிவரும் மரூஉவென்பது அறிவித்தற்கு வேறு கூறினாரென்க. (கூசு)

உஉரு. ஐயான் குச் செய்யுட் கவ்வு மாகு
மாகா வஃறிணைக் கானல் லாதன.

இஃது அவ்வேற்றுமையுருபுகளுட் சில உருபுகள் செய்யுளுட் திரியவும் பெறுமென்கின்றது.

இ - ள். ஐயும் ஆனுங் குவ்வும் ஆகிய மூன்று உருபுஞ் செய்யுளிடத்து அகரமாய்த் திரிந்து நிற்கவும் பெறும், அஃறிணையிடத்தாயின் ஆனுருபன்றி ஐயுங் குவ்வுந் திரியா. எ - று.

'ஆகாவஃறிணைக்கானல்லாதன' எனவே மூன்றும் உயர்திணைக்கண்ணுமென்பது தானேபோதருமென்க. அவ்வாகுமெனப் பொதுப்படக் கூறிய அதனான் ஐகாரம் அகரமாய்த் திரிதலும் ஆன் அகரம் பெறுதலுங் குவ்வீறு அகரமாய்த் திரிதலும் ஆமெனக் கொள்க.

வரலாறு;—காவலோனை என்பது "காவலோனக்களிறஞ்சும்மே" எனவும், புலவரான் என்பது "புரைதீர்கேள்விப்புலவரான" எனவும், ஆசிரியர்க்கு என்பது "கடிநிலையின்றேயாசிரியர்க்க" எனவும், அஃறிணைக்கட் புள்ளினான் என்பது புள்ளினான எனவும்

வரும். உம்மை எதிர்மறையாகலின் இவ்வாறு திரிதல் சிறுபான்மை யெனக்கொள்க. (௬ரு)

உ௨௪. எல்லை யின்னு மதுவும் பெயர்கொளு
மல்ல வினைகொளு நான்கே ழிருமையும்
புல்லும் பெரும்பா லுமென்மனார் புலவர்

இஃது உருபு ஏற்ற சொற்கு முடிபுகூறுகின்றது.

இ - ள். எல்லைப்பொருண்மைக்கண் வரும் இன்னுருபும் அது வெனுருபும் பெயரைக்கொண்டு முடியும், இவையல்லவாகிய உருபு கள் முற்றும் எச்சமுமாகிய வினையைக்கொண்டு முடியும், அவற்றுள் நான்கனுருபும் ஏழனுருபும் பெயரும் வினையுங் கொண்டு முடியும் பெரும்பாலுமெனச் சொல்லுவர் அறிவுடையோர். எ - று.

'எல்லையின்னுமதுவும்பெயர்கொளும்' என்றாரேனும் இன்னு ருபு முதலிய உருபுகளை ஏற்ற சொற்களே அவ்வாறு முடிவனவெ னக் கொள்க; என்னை? ஐமுதலிய ஆறும் இடைச்சொல்லாய் ஒன்றை விசேடித்துநிற்றலல்லது பிறிதொன்றான் முடியுந் தன்மை அவற்றிற்கு இன்மையின்.

எழுவாய்வேற்றுமைக்கு ஆண்டே முடிபுகூறினமையானும், எட்டாவது படர்க்கையிடத்தாரை முன்னிலையிடத்தாராக்கும் வே றுபாடுடைமையின் வேறொரு வேற்றுமையாக வேண்டியதல்லது பெயரது விகாரமாய்ப் பெயராய் அடங்குந் தன்மையும் உடைத்தா தலான் நம்பிகூறாய் என்றவழி அது நீகூறாயெனப் பெயர்வேற்று மையை ஒத்துப் பயனிலைகொள்ளுமாகலானும், ஈண்டு இரண்டா வது முதல் ஆறுருபும் ஏற்றசொற்களுக்கே இம்முடிபு கூறியதெனக் கொள்க. பெரும்பாலுமென்றதனான் வினைகொள்வன வினையுங் குறிப்பும்பற்றிய பெயர்கோடலுங் கொள்க. உதாரணம் முற்காட் டினவே கொள்க. சாத்தனதுவந்தது சாத்தனதுநன்று என ஆறா வது வினையுங் குறிப்புங் கொள்ளுமென்பாரும் உளராலோவெ னின், அஃது ஆறனுருபேற்ற பெயரன்று குறிப்புவினைமுற்றுப்பெ யராமென மறுக்க. (௬௬)

உ௨௫. வேற்றுமைப் பொருளை விரிக்குங் காலை
யீற்றுநின் றியலுந் தொகைவயிற் பிரிந்து
பல்லா றாகப் பொருள்புணர்ந் திசைக்கு
மெல்லாச் சொல்லு முரிய வென்ப.

இது வேற்றுமைத்தொகையை விரிப்புழி வரும் வேறுபாடு அன்மொழித்தொகையை விரிப்புழி வரும் வேறுபாட்டோடு ஒக்கு மென்கின்றது.

இ - ள். வேற்றுமைத்தொகையை விரிக்குமிடத்து வேற்றுமையேயன்றி, அன்மொழித்தொகையை விரிப்புழிப் பல்லாற்றான் அன்மொழிப்பொருளோடு புணர்ந்துவரும் எல்லாச்சொல்லும் விரிக்கப்படும். எ - று.

உருபு தொகப் பொருள் நிற்றலின் வேற்றுமைத்தொகையை வேற்றுமைப்பொருளென்றார். அன்மொழித்தொகை வேற்றுமைத் தொகை முதலாகிய தொகை இறுதிநின்று இயறலின் 'ஈற்றுநின்றிய லுந்தொகை' என்றார். ஈற்றுநின்று இயலுந் தொகைவயிற் பிரிந்து பல்லாறகப் பொருள்புணர்ந்து இசைக்கும் எல்லாச்சொல்லும் விரித்தற்கு உரியவாமாறுபோல, வேற்றுமைத்தொகையை விரிக்குங்காலும் பல்லாறகப் பொருள்புணர்ந்து இசைக்கும் எல்லாச்சொல்லும் விரித்தற்கு உரியவா மென்பார், 'ஈற்றுநின்று இயலுந் தொகைவயிற் பிரிந்து பல்லாறகப் பொருள்புணர்ந்திசைக்கு மெல்லாச்சொல்லு முரிய'என்று உபசரித்தார்.பொற்றொடி தாழ்குழல் மட்காரணம் என்னும் அன்மொழித்தொகைகளை விரிப்புழிப் பொற்றொடியணிந்தாள் தாழ்குழலுடையாள் மண்ணாகியகாரணத்தானியன்றது என வரும் அணிதலும் உடைமையும் இயறலும், பொற்றொடியரிவை கருங்குழற்பேதை மட்குடம் என்னும் வேற்றுமைத்தொகைகளை விரிப்புழியும் பொற்றொடியை அணிந்த அரிவை கருங்குழலையுடையபேதை மண்ணானியன்றகுடம் என வந்தவாறு கண்டுகொள்க. 'பொருள்புணர்ந்திசைக்கும்' எனவே,இருதொகைக்கண்ணும் ஒருவாய்பாட்டானன்றிப் பொருள் சிதையாமல் உணர்த்துதற்கு ஏற்ற வாய்பாடெல்லாவற்றானும் வருமென்பதாம். அவ்வாறுதல் மேற்காட்டினவற்றுட் கண்டுகொள்க. அன்மொழித்தொகையிற் சொற்பெய்துவிரித்தல் யாண்டுப்பெற்றுமெனின், அதுவும் அனுவாதமுகத்தான் ஈண்டே பெற்றுமென்க. (சுஎ)

உஉசு. வினையே செய்வது செயப்படு பொருளே
நிலனே காலங் கருவி யென்றா
வின்னதற் கிதுபய னாக வென்னு
மன்ன மரபி னிரண்டொடுந் தொகைஇ
யாயெட் டென்ப தொழின்முத னிலையே
யவைதாம், வழங்கியன் மருங்கிற் குன்றுவ குன்றும்.

இது தொழிற்கு முன்னிற்குங் காரணங்கள் இத்துணை யென்று உணர்த்தியமுகத்தான் மேற்கூறிப் போந்த வேற்றுமைப் பொருள்களை ஈண்டுத் தொகுத்துக்கூறுகின்றது.

இ - ள். வினையும் வினைமுதலுஞ் செயப்படுபொருளும் நில முங் காலமுங் கருவியுமாகிய ஆறும் இன்னதற்காக இது பயனாக வென்று சொல்லப்படும் இரண்டொடுந் தொக்குத் தொழிலது முத னிலை எட்டாமென்றும் அவைதாம் எல்லாத்தொழிற்கும் எட்டும் வருமென்னும் யாப்புறவு இல்லை வழக்கின்கட் குன்றத்தகுவன குன் றிவருமென்றுஞ் சொல்லுவர் ஆசிரியர். எ - று.

தொழின்முதனிலையென்றது தொழிலதுகாரணத்தை; காரி யத்தின் முதனிற்றலின் முதனிலையாயிற்று. காரணமெனினும் கார கமெனினும் ஒக்கும்.

வனைந்தானென்றவழி வனைதற்றொழிலும் வனைதற்கருத்தா வும் வனையப்பட்டகுடமும் வனைதற்கிடமாகியநிலமும் அத்தொழி னிகழுங்காலமும் அதற்குக்கருவியாகிய திகிரிமுதலாயினவும் வனை யப்பட்டகுடத்தைக் கொள்வானும் வனைந்ததனாலும்பயனுமாகிய எட்டும் பற்றி அத்தொழினிகழ்ந்தவாறு கண்டுகொள்க. வனைவித் தானென்பதற்கும் இவையொக்கும். இனிக் குழையனென்றவழி உடையனெனக் கருதுதற்றொழிலுங் கருதுதற்கருத்தாவுங் கருதப் பட்டகுழையும் பிறவும்பற்றி அக்கருத்து நிகழ்ந்தவாறு காண்க.

அஃதேற் தொழிலின்வேறாயது காரகமாகலின் வனைதற்றொ ழிற்கு அத்தொழிலுங் காரகமாமாறென்னையெனின், வனைந்தா னென்பது வனைதலைச்செய்தானென்னும் பொருட்டாகலிற் செய் தற்கு வனைதல் செயப்படுபொருணீர்மைத்தாய்க் காரகமாமென்பது. அற்றாகலினன்றே கொளலோகொண்டானென்பது இரண்டாம் வேற்றுமைத்தொடராயிற்றென்பது.

இன்னதற்காக இதுபயனாக என்னும் இரண்டும் அருகியல் லது வாராமையின் 'அன்னமரபினிரண்டொடும்' எனப் பிரித்துக் கூறினார்.

குன்றத்தகுவன ஆவன செயப்படுபொருளும் ஏற்பதும் பயனு மாம். கொடியாடிற்று வளிவழங்கிற்று என்புழிச் செயப்படுபொரு ளும் ஏற்பதும் பயனுமாகிய முதனிலை இல்லையாயினும் மொழிந்தன வற்றான் ஆடுதலும் வழங்குதலுமாகிய தொழில் நிகழ்ந்தவாறு கண்டு கொள்க.

இவ்வாறு தொழின்முதனிலை எட்டெனவே ஏவல்வினைமுதலையும் இயற்றும்வினைமுதலையுஞ் செய்வதெனவுஞ் செயப்படுபொருணீர்மைத்தாகிய வினையப்படுவெது முதலியவற்றையும் இயற்றப்படுவதனையும் வேறுபடுக்கப்படுவதனையும் எய்தப்படுவதனையும் முறையே வினையென்றுஞ் செயப்படுபொருளென்றும் முதற்காரணமுந் துணைக்காரணமும் நிமித்தகாரணமும் பற்றிப் பல்வேறுவகைப்பட்டு வரும் மூன்றாவதன்பொருளையும் ஐந்தாவதன்பொருளையுங் கருவியென்றும் பொருண்முதலிய அறுவகையிடத்தினையும் நிலனென்றுங் காலமென்றும் நான்காவதன்பொருளெல்லாவற்றையும் இன்னதற்காக இதுபயனாகவென்றும் ஈண்டு மேற்கூறிப் போந்த வேற்றுமைப்பொருளையெல்லாந் தொகுத்துக்கூறினாரென்பதூஉமாயிற்றென்று உணர்க.

இங்ஙனம் ஈண்டுத் தொகுத்ததனாற் பயன் "செய்வதாதி" எனவும் "செயப்படுபொருளைச்செய்ததுபோல" எனவும் மேல்வரும் வினைக்கு இலக்கணங்கூறுதலும் பிறவுமாமெனவுங் 'குன்றுவகுன்றும்' என்பதனாற் பயன் எல்லாத்தொழிற்கும் முதனிலையெட்டுங் குன்றாதுவருமோ சிலதொழிற்குச் சிலகுன்றிவருமோ என்னும் ஐயம் நீக்குதலுஞ் செயப்படுபொருள்குன்றிய வினையை உணர்த்துஞ் சொல் இரண்டாவதனோடு இயையாதெனப் பெறுதலுமாம். (சுஅ)

முதலாவது பெயரியல் முற்றிற்று.



## உ-வது. வினையியல்.

உஉஎ. வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றிப்
பொருட்புடை பெயர்ச்சி புலப்படுப் பதுவே.

என்பது சூத்திரம். நிறுத்தமுறையானே வினையிலக்கணம் உணர்த்தினமையின் இவ்வோத்து வினையியலென்னும் பெயர்த்து. இதனுள் இத்தலைச்சூத்திரம் வினைச்சொற்கெல்லாம் பொது இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். மேற் கூறிப்போந்த வினைச்சொல்லென்று சொல்லப்படுவது வேற்றுமையோடு பொருந்தாது ஆராயுங்காற் காலத்தோடு கூடப் புலப்பட்டுப் பொருளது புடைபெயர்ச்சியை விளக்குவதாம். எ - று.

ஈண்டு வேற்றுமையென்றது உருபை.

உ-ம். உண்டனன் உண்ணாநின்றனன் உண்பன் எனவும் பண்டுகரியனாயிருந்தனன் இதுபொழுது கரியனாயிருக்கின்றனன் நாளைக்கரியனாயிருப்பன் எனவும் வேற்றுமைகொள்ளாது காலமொடுதோன்றிப் பொருளது புடைபெயர்ச்சியை விளக்கியவாறுகாண்க. வேற்றுமைகொள்ளாதென்றது காலமொடுதோன்றியென்னிற் றொழிற்பெயருங், காலமொடுதோன்றியென்றது வேற்றுமைகொள்ளாதெனின் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் வினைச்சொல் லாவான் செல்லுமாகலான் அவற்றை நீக்குதற்கும், அவாய்நிலை தோன்றியவழித் தோன்றும் ஏனைக் காரகங்கள்போலாது காலம் உடன்றோன்றுமென்பது அறிவித்தற்கும், வினைச்சொல்லுள் வெளிப்படக் காலம் விளக்காதனவும் உள அவையும் ஆராயுங்காற் குறிப்பாற் காலம் விளக்குதலையுடையவென்றற்கும் 'வேற்றுமை கொள்ளாது நினையுங்காலைக் காலமொடு தோன்றி' என்றாரென்க.()

உஉஅ. முன்ன ரிசைத்த முதனிலை யவற்றா
னின்ன வினைச்சொ லியலுத லுடைத்தே.

இது முற்கூறியவினைச்சொல் அங்ஙனந் தோன்றுங்கால் இம் முதனிலையடியாகத் தோன்றுமென்கின்றது.

இ-ள். மேல் எழுத்தோத்துட் கூறிய முதனிலைகளான் இத் தன்மையையுடைய வினைச்சொற் பிறத்தலையுடைத்தாம். எ-று.

முதனிலைகளாவன நட வா முதலாயினவும் நடப்பி வருவி முதலாயினவும் பொருளிடங்காலம் முதலாயினவும் பிறவுமாம். இத் தன்மையென்றது வேற்றுமைகொள்ளாமை முதலிய தன்மை.

வரலாறு;—நடந்தான் நடக்கின்றான் நடப்பான் எனவும் நடப்பித்தான் நடப்பியாநின்றான் நடப்பிப்பான் எனவும் தெரிநிலை வினையின் முதனிலைகளானும் கச்சினன் கழலினன் எனவும் இல்லத்தன் புறத்தன் எனவும் மூவாட்டையான் ஐயாட்டையான் எனவும் கண்ணன் தோளன் எனவும் கரியன் செய்யன் எனவும் துணங்கையன் கூத்தன் எனவும் குறிப்புவினையின் முதனிலைகளானுந் தோன்றியவாறு காண்க. பொன்னன்னன் புலிபோல்வன் என ஒப்பு உணர்த்துவனவும், எப்பொருளுமல்லனிறைவன் எனப் பண்பு உணர்த்தியும் அவைதாம் இவையல்ல எனக் குறிப்பு உணர்த்தியும் ஆவுண்டு என உண்மை உணர்த்தியும் எவ்வுயிர்க்கண்ணுமிறைவனுளன் எனப் பண்பு உணர்த்தியும் மாற்றருந்துப்பின் மாற்றோர்பாச

றையுளன் எனக் குறிப்பு உணர்த்தியும் பொய்யர் நெஞ்சிற்புனித னிலன் எனப் பண்பு உணர்த்தியும் மாற்றோர்பாசறையிலன் எனக் குறிப்பு உணர்த்தியுங் குழையிலன் கச்சிலன் என உடைமைக்கும றையாயும் மெய்வலியன் எனப் பண்பு உணர்த்தியுஞ் சொல்வல் லன் எனக் குறிப்பு உணர்த்தியும் வருவனவும், நல்லன் தீயன் உடையன் என வருவனவும் இவைபோல்வன பிறவும் ஈண்டுக் குணத்தின் பகுதியாயே அடங்குமெனக் கொள்க. ஏனைத் திணைபா லிடங்கடோறும் ஏற்குமாறு ஒட்டுக.

உண்மையாவது பொருள்கட்குக் கேடுபிறந்தக்காலுந் தனக் குக்கேடு இன்றித் தான் ஒன்றேயாய்ப் பல்வகைப்பட்ட பொருடோ றும் நிற்பது. பண்பாவது ஒருபொருள் தோன்றுங் காலத்து உடன் தோன்றி அது கெடுந்துணையும் நிற்பது. குறிப்பாவது ஒருபொ ருட்குப் பின்றோன்றிச் சிறிதுபொழுது நிகழ்வது. (உ)

உஉகூ. அவைதா, முற்றும் பெயர்வினை யெச்சமு மாகி யொன்றற் குரியவும் பொதுவு மாகும்.

இது முற்கூறிப் போந்த வினைச்சொற்கடாம் இத்துணைப் பகுதிய என்கின்றது.

இ - ள். வேற்றுமைகொள்ளாது வெளிப்படையானுங் குறிப் பானுங் காலமொடு தோன்றி அங்ஙனந் தோன்றுங்கால் நட வா முதலிய முதனிலையடியாகத் தோன்றிப் பொருளது புடைபெயர்ச் சியை விளக்கிநிற்குமென மேற் கூறிப்போந்த வினைச்சொற்கடாம் முற்றுவினைச்சொல்லும் பெயரெச்சவினைச்சொல்லும் வினையெச்ச வினைச்சொல்லுமென மூன்று திறத்தவாய் இருதிணை ஐம்பான் மூவிடங்களுள் ஒன்றற்கு உரியனவும் பலவற்றிற்கு உரியனவுமாய் வரும். எ - று.

முற்றுச்சொற்கும் எச்சத்திற்கும் வேற்றுமை யாதோவெ னின் பிறிதொருசொல்லோடு இயையாது தாமே தொடராதற்கு ஏற்கும் வினைச்சொல் முற்றாம்; பிறிதோர் சொற்பற்றியல்லது நிற்ற லாற்றா வினைச்சொல் எச்சமாம்; இவை தம்முள் வேற்றுமையெ ன்க. அஃதேல், உண்டானென்பது சாத்தனென்னும் பெயர் அவா வியன்றே நிற்பது? தாமே தொடராமென்றது என்னையெனின், அற் றன்று, உண்டான்சாத்தனென்றவழி எற்றையென்னும் அவாய் நிலைக்கட் சோற்றையென்பது வந்து இயைந்தாற்போல உண்டா னென்றவழி யாரென்னும் அவாய்நிலைக்கட் சாத்தனென்பது வந்து

இயைதலல்லது, அப்பெயர்பற்றியல்லது நிற்றலாற்று நிலைமைத் தன்று அச்சொல்லென்பது. இவ்வேற்றுமை விளங்குதற்கன்றே தொல்லாசிரியரெல்லாரும் முற்றுச்சொல்லென்றும் எச்சமென்றும் அவற்றிற்கு இப்பெயர் கொடுத்ததூஉமென்க. (௩)

உ௩0. மற்றுச்சொ னோக்கா மரபின வனைத்து
முற்றி நிற்பன முற்றியன் மொழியவை
யெத்திறத் தானும் பெயர்முடி பினவே.

இது முற் கூறிப்போந்த மூவகைவினைச்சொல்லுள் முற்றுவினைச்சொற்கு இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். பிறிதொரு சொல்லோடு இயையாது தாமே தொடராதற்கு ஏற்கும் இயல்பையுடையனவாய் முற்கூறிப்போந்த வேற்றுமைகொள்ளாமை முதலிய பொது இலக்கணங்களை ஏற்றுநிற்றலேயன்றி, மேற் கூறக்கடவ திணைபாலிடங்கள் முழுதையும் முடிய விளக்கிக் குறைவுபடாது நிற்பன முற்றும் இயல்பையுடைய முற்றுவினைச்சொற்களாம். அத்தன்மையவாகிய முற்றுவினைச்சொற்கடாம் எவ்வாற்றானும் பெயரோடு முடியும். எ - று.

உ - ம். வந்தான்வழுதி கரியன்மால் எனவரும். இனி எத்திறத்தானுமென்றதனானே "கந்தருவவழக்கமென்மனார்புலவர்" என வெளிப்பட்டவழியினும் "அகரமுதனகரவிறுவாய்முப்பஃதென்ப" என வெளிப்படாதவழியினும் பெயர்முடிபாமெனக் கொள்க. "எவ்வயிற் பெயரும் வெளிப்படத்தோன்றி" என்றதனானே வெளிப்படாதுநிற்றலும் பெறப்பட்டமையின் ஈண்டுக் கூறல்வேண்டாவெனின், ஆண்டு முடிக்கப்படும் பெயர் வெளிப்படாதுநிற்றலுமுடைத்தென்றார், இது முடிக்கும் பெயராகலின் ஆண்டு அடங்காதென்பது.

அஃதேல் முற்றிநிற்றலாவது மற்றுச்சொன்னோக்காமையாகலின் முற்றிற்றேல் அது பெயர் அவாய்நில்லாது, பெயர் அவாவிற்றேல் முற்றுச்சொல்லெனப்படாது, அதனான் முற்றுச்சொற் பெயர் கொளுமென்றல் மாறுகொளக்கூறலாமெனின், அற்றன்று, உண்டான்சாத்தனென்பது எற்றையென்னும் அவாய்நிலைக்கட் சோற்றையென்பதனோடு இயைந்தாற்போல உண்டானென்பது யாரென்னும் அவாய்நிலைக்கட் சாத்தனென்பதனோடு இயைவதல்லது அவாய்நிலையில்வழி உண்டானெனத் தான் தொடராய் நிற்றல் முற்கூறிப் போந்தாமென்பது.

அஃதேற் சாத்தனென்னும் பெயர்சோற்றையென்பதுபோல அவாய்நிற்றலை உள்வழி வருவதாயின் 'எத்திறத்தானும் பெயர்முடி

பினவே' என விதந்தோதல் வேண்டாம் பிறவெனின், நன்றுசொன்னுய், அவாய்நிற்றலை உள்வழி வருவது அவ்விரண்டற்கும் ஒக்குமேனும், உண்டானென்றவழி உண்டற்ருெழிலாற் செயப்படுபொருள் உய்த்துணர்ந்து பின் அதன் வேறுபாடு உணரச் சோற்றையென்பது வந்தியைவதல்லது சொற்கேட்டதுணையான் எற்றையெனக் கேட்பான் செயப்படுபொருள் வேறுபாடு அறிவதாக அவாவாமையிற் சோற்றையென்பது வருதல் ஒருதலையன்று. இனி உண்டானென்னுஞ் சொல்லாற் பொதுவகையான் வினைமுதல் உணர்ந்து கேட்பான் அதன் வேறுபாடு அறிய அவாவுதலிற் சாத்தனென்பது வருதல் ஒருதலை. ஆதலான் அச்சிறப்பு நோக்கி விதந்தோதினுரென்பது. (ச)

உஙக. ஒருவன்முத லைந்தையும் படர்க்கை யிடத்து
மொருமைப் பன்மையைத் தன்மைமுன் னிலையினு
முக்கா லத்தினு முரண முறையே
மூவைந் திருமூன் ருருய் முற்று
வினைப்பத மொன்றே மூவொன் பானும்.

இது முற் கூறிப்போந்த முற்றுவினைச்சொற்கு வகையும் விரியுங் கூறுகின்றது.

இ - ள். ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பலவென்னும் ஐம்பாலையும் படர்க்கையிடத்தும் ஒருமைபன்மைப்பால்களைத் தன்மையிடத்தும் முன்னிலையிடத்தும் ஏறிட்டு முக்காலங்களானும் உறழ முறையே படர்க்கைவினைமுற்றுப் பதினைந்துந் தன்மைவினைமுற்று ஆறும் முன்னிலைவினைமுற்று ஆறுமாக வினைமுற்றுச்சொல் ஒன்றே இருபத்தேழு திறனும். எ - று. (ரு)

உஙஉ. அன்னு னிறுமொழி யாண்பாற் படர்க்கையும்
அள்ளா ளிறுமொழி பெண்பாற் படர்க்கையும்
அர்ஆர் பவ்வூ ரகார மாரீற்ற
பல்லோர் படர்க்கையும் பகருமன் னவற்றுண்
மாரைக் கிளவி வினையொடு முடியினு
மேலைக் கிளவியொடு வேறுபா டின்றே.

நிறுத்தமுறையானே முற்றுவினையை விரித்து உணர்த்துவான் தொடங்கினவற்றுள் இஃது உயர்திணை முப்பாற் படர்க்கை வினைமுற்ருமாறு கூறுகின்றது.

இ - ள். அன்னும் ஆனுமாகிய இருவகை விகுதியையும் ஈருகவுடைய வினை வினைக்குறிப்புமொழிகள் உயர்திணையாண்பாற்படர்க்கையினையும் அள்ளும் ஆளுமாகிய இருவகை விகுதியையும் ஈருகவுடைய வினை வினைக்குறிப்புமொழிகள் உயர்திணைப்பெண்பாற்படர்க்கையினையும் அர்ரும் ஆரும் பகரத்தையேறிய அகரமும் மாருமாகிய நால்வகை விகுதியையும் ஈருகவுடைய வினை வினைக்குறிப்புமொழிகள் உயர்திணைப்பல்லோர்படர்க்கையினையும் விளக்கும். அத்தன்மையவாகிய வினைமுற்றுச்சொற்களுள் மாரீற்றுத் தெரிநிலைவினைமுற்றுச்சொல் வினைகொண்டு முடியுமாயினும் முற்கூறிய பல்லோர்படர்க்கைவினைமுற்ருேடு ஒக்கும். வினைகோடலான் முற்று எச்சமாய்த் திரிந்ததெனப்படாது வினையோடல்லது பெயரோடு அது முடியாமையின். எ - று.

ஆண்பால் பெண்பால் பல்லோர்பாலெனவே திணை உயர்திணையென்பதூஉம் பெற்ரும். மேற் பதவியலுட் கூறிய இடைநிலைவகையானே அன் முதலிய ஆறும் மூன்றுகாலமும்பற்றி வரும். ஈற்றுவகையானே பகர ஈறும் மாரீறும் எதிர்காலம்பற்றி வரும். அங்ஙனம் வருவழி அன்னீறு இறந்தகாலம்பற்றி வருங்காற் புக்கனன் உண்டனன் உரைத்தனன் தின்றனன் என இடைநிலைக் கடதற எழுத்துக்களின்முன் அன்பெற்றும் அஞ்சினன் கலக்கினன் எனவும் உரிஞினன் நண்ணினன் பொருநினன் திருமினன் துன்னினன் எனவும் போயினன் சேரினன் சொல்லினன் வவ்வினன் துள்ளினன் எனவும் குற்றுகரமும் ஙகரம் ஒழிந்த மெல்லெழுத்துக்களும் ழகரம் ஒழிந்த இடையெழுத்துக்களுமாகிய ஏனை எழுத்துக்களின் முன் அன்பெருது இடைநிலை இன்னே பெற்றும்வரும். இனி அது நிகழ்காலம்பற்றி வருங்கால் உண்ணுநின்றனன் உண்கின்றனன் எனவும் உண்ணுகிடந்தனன் உண்ணுவிருந்தனன் எனவும் ஆநின்று கின்றென்னும் இடைநிலைகளின்முன்னுஞ் சிறுபான்மை கிட இரு என்பனவற்றின்முன்னும் அன்பெற்றும் வரும். இனி இஃது எதிர்காலத்துவருங்கால் அன்பெருது இடைநிலைப்பகரவகரங்களேபெற்றும் வகரம் ஏற்புழிக் குகரமும் உகரமும் அடுத்தும் உண்பன் உரைப்பன் செல்வன் போவன் அஞ்சுவன் மொழிகுவன் உரிஞுவன் எனவரும். பிறவும் அன்ன. இனி ஆனீறு புக்கான் உண்டான் உரைத்தான் தின்ருன் அஞ்சினுன் கலக்கினுன் உரிஞினுன் போயினுன் போனுன் எனவும் உண்ணுநின்ருன் உண்கின்ருன் உண்கிருன் உண்ணுகிடந்தான் உண்ணுவிருந்தான் எனவும் உண்பான் உரைப்பான் செல்வான் போவான் அஞ்சுவான் கலக்குவான்

மொழிகுவான் உரினுவான் எனவும் அன் பெறுது முறையே முக் காலமுங் காட்டும் இடைநிலைகளே பெற்றுவரும்.

இனி அள்ளீறும் ஆளீறும் அர்ரீறும் ஆரீறும் முறையே அன் னீற்ருேடும் ஆனீற்ருேடும் ஒத்துப் புக்கனள் புக்காள் புக்கனர் புக் கார் எனவரும். பிறவும் அன்ன. இனிப் பகர ஈறு உண்ப உரினுப என உகரம்பெறுதும் பெற்றும் மாரீறு "எள்ளுமார்வந்தாரேயீங்கு" என உகரம்பெற்றும் ஆர்த்தார் கொண்மார் வந்தார் எனப் பெறு தும் வரும். பிறவும் அன்ன. உண்டிலன் உண்ணுநின்றிலன் உண் ணலன் முதலிய இவற்றின் மறைவாய்பாடும் அறிக. இனி வினை யொடு முடியுமென்ற மாரீற்றுச்சொற் "பீடின்று பெருகிய திரு விற்—பாடின் மன்னரைப் பாடன்மா ரெமரே" "படரட வருந் திய—நோய்மலி வருத்தங் காணன்மா ரெமரே" எனப் பெயரொடு முடிந்ததாலெனின், இவை பாடுக காண்க என்னும் வியங்கோட்கு எதிர்மறையாய்ப் படாதொழிக காணுதொழிக என ஏவற்பொருள வாய் நின்றன; மாரீறல்லவென்க. அல்லதூஉம் பாடுவார் காண்பார் என்பன சில வியங்கோள்முற்றென்றுகொண்டு அவற்றிற்கு எதிர்ம றையாய்ப் பாடாதொழிவார் காணுதொழிவார் என ஏவற்பொருள வாய் நின்றன என்றலும் ஒன்று. அன்றி மாரீருமாகில் இங்ஙனம் ஏவற்பொருண்மையை உணர்த்துமாறில்லையென்க. இனிக் கரியன் கரியான் கரியள் கரியாள் கரியர் கரியார் என வினைக்குறிப்பு வந்தன காண்க. பிறவும் அன்ன. (சா)

## உ௲௲. யாரென் வினுவினைக் குறிப்புயர் முப்பால்.

இஃது உயர்திணைவினைக்குறிப்பினுள் ஒன்றற்குப் பால்வகை யாற் பொதுமை கூறுகின்றது.

இ - ள். யாரென்னும் வினுப்பொருளை உணர்த்தும் வினைக் குறிப்புமுற்றுச்சொல் உயர்திணைமருங்கின் மூன்றுபாற்கும் உரி த்து. எ - று.

முப்பாற்கும் உரித்தென்பார் முப்பாலென்ருர் சொல்லொடு பொருட்கு ஒற்றுமையுண்மையான். இழியிருபாலென்பதற்கும் இவ் வுரைகொள்க.

வரலாறு;—அவன்யார் அவள்யார் அவர்யார் எனவரும். "ஊதைகூட் டுண்ணு முகுபனி யாமத்தெங்—கோதைகூட் டுண் ணிய தான்யார்மன்—போதெலாந்—தாதோடு தாழுந்தார்க் கச்சி

ஊநாடன்—றாதோடு வாராத வண்டு.'' என்புழி வண்டுதான்யார் என அஃறிணைக்கண்ணுஞ் சிறுபான்மை வருதல் உரையிற் கொள்க. திணைவழுவமைதியென்றலும் ஒன்று. (எ)

உகச. துறுடுக் குற்றிய லுகர வீற்ற
வொன்றன் படர்க்கையும் அஆ வீற்ற
பலவின் படர்க்கையும் பகருமன் னவற்றுட்
டுவ்விறு கிளவி குறிப்பிற் கேற்றலு
மாவீ றெதிர்மறைக் காகலு முரிய.

இஃது அஃறிணை இருபாற் படர்க்கைவினைமுற்றுமாறு கூறுகின்றது.

இ - ள். தறட என்னும் ஒற்றுக்களை ஏறிநின்ற குற்றியலுகரத்தினை ஈறாகவுடைய வினை வினைக்குறிப்புமுற்றுச்சொற்கள் அஃறிணையொருமைப்படர்க்கையினையும், அகரமும் ஆகாரமுமாகிய இருவிகுதியையுடைய வினை வினைக்குறிப்புமுற்றுச்சொற்கள் அஃறிணைப்பன்மைப்படர்க்கையினையும் விளக்கும்; அத்தன்மையவாகிய வினைமுற்றுச்சொற்களுள் டுவ்விகுதியை இறுதியாகவுடைய வினைச்சொற் குறிப்புப்பொருண்மையை விளக்குதற்கு ஏற்புடைத்தாதலும், ஆகார ஈற்றுவினைச்சொல் எதிர்மறைத்தொழிற்பொருண்மையை விளக்குதற்கு ஏற்புடைத்தாதலும் உரியவாம். எ - று.

மேற் பதவியலுட்கூறிய இடைநிலைவகையானே தகர உகரம் மூன்றுகாலத்திற்கும் உரித்து. றகர உகரம் இறந்தகாலத்திற்கு உரித்து. அவற்றுள் தகர உகரம் இறந்தகாலம்பற்றி வருங்கால் புக்கது உண்டது வந்தது சென்றது உறங்கினது எனக் கடதறக்களும் இன்னும் என்னும் இடைநிலைகளின்முன் அகரம்பெற்றும், எஞ்சியது தப்பியது கலக்கியது எனவும் உரிஞியது நண்ணியது எனவும் போயது போனது எனவும் ஏனை எழுத்துக்களின்முன் முறையே இகரமும் யகர உயிர்மெய்யும் பெற்றும் யகர உயிர்மெய்யே பெற்றும் னகர உயிர்மெய்யே பெற்றும் வரும். இனி நிகழ்காலம்பற்றி வருங்கால் நடவாநின்றது நடக்கின்றது என ஆநின்று கின்று என்னும் இடைநிலைகளின்முன் அகரம்பெற்று வரும். இனி எதிர்காலம்பற்றி வருங்கால் நடப்பது வருவது எனப் பகர வகர இடைநிலைகளின்முன் அகரம் பெற்று வரும். இனி றகர உகரம் புக்கன்று உண்டன்று வந்தன்று சென்றன்று எனக் கடதற என்னும் இடைநிலைகளின்முன் அன்பெற்றுங், கூயின்று கூயிற்று உறங்கின்று

உறங்கிற்று என இன்னிடைநிலைபெற்று அது திரியாதுந் திரிந்தும் வரும். புக்கின்று உண்டின்று வந்தின்று சென்றின்று என்பன எதிர்மறுத்தலை உணர்த்தும் இல்லது லகரம் னகரமாய்த் திரிந்து நின்ற எதிர்மறைவினை. அவை எதிர்மறைவினையாதல் புக்கிலன் உண்டிலன் வந்திலன் சென்றிலன் என்பனபோலும் ஏனைப்பாற் சொல்லான் அறிக.

இது தாலிகளைந்தன்றுமிலனோ வியந்தன்றுமிலனோ இழிந்தன்றுமிலனோ என உயர்திணைக்கண்ணும் வந்ததாலெனின், அவை களைந்தான் வியந்தான் இழிந்தான் என்பனவற்றிற்கு மறையாய்க் களைந்திலன் வியந்திலன் இழிந்திலன் என நிற்கின்றவை களைந்தன்றுமிலன் வியந்தன்றுமிலன் இழிந்தன்றுமிலன் என முற்றுவினைத் திரிசொல்லாய் நின்றன.

இனி வினைக்குறிப்பின்கண் மூன்றுகாலத்திற்கும் உரியவாய்க் குழையது நிலத்தது மூவாட்டையது வெண்கோட்டது கரிது நடைத்து எனத் துவ்வீறுங், குழையிற்று மேற்று வைகற்று மருப்பிற்று வடிவிற்று செலவிற்று என றுவ்வீறுங், குண்டுகட்டு குறுந்தாட்டு என டுவ்வீறும் வரும்.

இனி அகர ஈறு மூன்றுகாலமும்பற்றி வரும். அவற்றுள் இறந்தகாலம்பற்றிவருங்காற் தொக்கன தொக்க உண்டன உண்ட வந்தன வந்த சென்றன சென்ற எனக் கடதற என்னும் இடைநிலையெழுத்துக்களின்முன் அன் சாரியை பெற்றும் பெறாதும், எஞ்சின தப்பின எனவும் உரிஞின நண்ணின பொருநின திருமின துன்னின எனவும் போயின சேரின சொல்லின வவ்வின துள்ளின எனவும் குற்றுகரத்தின்முன்னும் ஙகாரம் ஒழிந்த மெல்லெழுத்துக்களின்முன்னும் ழகாரம் ஒழிந்த இடையெழுத்துக்களின்முன்னும் இடைநிலை இன்பெற்றும், போயன என அன்னிடைநிலை பெற்றும், போய என யகர இடைநிலை பெற்றும், போன என னகர இடைநிலை பெற்றும் வரும். இனி நிகழ்காலம்பற்றி வருங்கால் உண்ணாநின்றன உண்ணாநின்ற உண்கின்றன உண்கின்ற என ஆநின்று கின்று என்னும் இடைநிலைகளின்முன் அன்சாரியை பெற்றும் பெறாதும் வரும். இனி எதிர்காலம்பற்றி வருங்கால் உண்பன உண்ப வருவன வருவ எனப் பகர வகர இடைநிலை எழுத்துக்களின்முன் அன் பெற்றும் பெறாதும் வரும். உரிஞுவன உரிஞுவ உண்குவன உண்குவ என முதனிலையிறுதிக்கண் உகரம் பெற்றுங் ககர உகரம்பெற்றும் வருதலும் ஏற்புழிக்கொள்க.

இனி ஆகாரம் உண்ணு தின்னு எனக் கால எழுத்துப்பெறாது எதிர்காலத்துப் பயின்றுவரும்.

இனி அகர ஈறு வினைக்குறிப்பின்கண் மூன்றுகாலத்திற்கும் உரித்தாய்க் குழையன குழைய நிலத்தன நிலத்த மூவாட்டையன மூவாட்டைய வெண்கோட்டன வெண்கோட்ட கரியன கரிய நடையன நடைய என அன்பெற்றும் பெறாதும் வரும்.

இனி வகர ஈறும் ஓதுப. அஃது ஈண்டு அகர ஈற்றுள் அடங்கும்.

இன்று இல கோடுடைத்து கோடுடைய அதுவன்று அவை யல்ல உளது உள பொன்னன்னது பொன்னன்ன என்பனபோல ஒருமை உணர்த்துவனவும் பன்மை உணர்த்துவனவுமாகிய வினைக் குறிப்புமுற்றுக்களும் இவற்றுள்ளே அடங்குமாறு அறிந்து அடக் கிக்கொள்க. வந்திலது வந்ில என்பனமுதலியவற்றின் மறைவாய் பாடும் அறிக. ஒன்றன்படர்க்கை பலவின்படர்க்கையெனவே அஃ றிணையாமென்பதூஉம் பெற்றாம். (அ)

உ௩டு. எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்.

இஃது அஃறிணைவினைக்குறிப்பினுள் ஒன்றற்குப் பால்வகை யாற் பொதுமை கூறுகின்றது.

இ - ள். எவனென்னும் வினாப்பொருளை உணர்த்தும் வினைக் குறிப்புமுற்றுச்சொல் அஃறிணைமருங்கின் இருபாற்கும் உரித்து எ - று.

வரலாறு;—அஃதெவன் அவை எவன் என வரும். நுமக்கிவ னெவனுமென உயர்திணைக்கண்ணும் வருமாலோவெனின், ஆண்டு அது முறைபற்றி நிற்றலின் அஃறிணைக்கண்வந்ததெனவே படு மென்பது. அஃதேல் நுமக்கிவன் என்ன முறையனுமென்பதல்லது என்னமுறையாமென்பது பொருந்தாதெனின் என்னமுறையென் பது ஆண்டு முறைமேனில்லாது ஒற்றுமைநயத்தான் முறையுடை யான்மேல் நிற்றலிற் பொருந்துமென்க. படுத்தலோசையான் எவ னென்பதுபெயருமாம்; அஃது இக்காலத்து என்னென்றும் என்னை யென்றும் மருவிற்று. (க)

உ௩சு. தன்மை முன்னிலை வியங்கோள் வேறுண்
டின்மை செய்யு மிவற்றொடு ரெச்சமும்

பிரிவு வேறுபடூஉஞ் செய்திய வாகி
யிருதிணைச் சொற்குமோ ரன்ன வுரிமைய.

நிறுத்தமுறையானே விரவுவினை உணர்த்துவனவற்றுள் இஃது அதன் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

இ - ள். தன் தொழில் உணர்த்துவதாகிய தன்மைவினை வினைக்குறிப்புமுற்றுச்சொற்களுந் தனக்கு எதிர்முகமாகநின்ற பொருளின் தொழில் உணர்த்துவதாகிய முன்னிலைவினை வினைக்குறிப்புமுற்றுச்சொற்களும் ஏவற்பொருண்மையைக் கொண்டு நிற்பதாகிய வியங்கோட்டெரிநிலைவினைமுற்றுச்சொற்களும் வேறுபாடுதன்னை உணர்த்துவதாகிய வேறென்னும் வினைக்குறிப்புமுற்றுச்சொல்லும் ஒருபொருளினது உண்மை உணர்த்துவதாகிய உண்டென்னும் வினைக்குறிப்புமுற்றுச்சொல்லும் ஒருபொருளினது இல்லாமை உணத்துவனவாகிய இல்லை இல் என்னும் இருகூற்று வினைக்குறிப்புமுற்றுச்சொற்களுஞ் செய்யுமென்னும் வாய்பாடுபற்றி வரும் உம்மீற்றுத் தெரிநிலைவினைமுற்றுச்சொல்லுமாகிய இவ்வெட்டோடு பெயராகிய ஒழிபையுடைய பெயரெச்சவினை வினைக்குறிப்புச் சொற்களும் வினையாகிய ஒழிபையுடைய வினையெச்சவினை வினைக்குறிப்புச்சொற்களுமாகிய இவ்வடைவின்கண் இன்ன வினைச்சொற்களெல்லாம் பொதுமையிற் பிரிந்து ஒருகால் உயர்திணையை உணர்த்தியும் ஒருகால் அஃறிணையை உணர்த்தியும் வேறுபடுந் தொழிலையுடையவாய் இருதிணையும் உணர்த்துஞ் சொல்லாதற்கும் ஒத்த உரிமையவாம். எ - று.

வாழ்த்தல் முதலிய பிறபொருளும் உடைத்தாகலான் வியங்கோளென்றது மிகுதிநோக்கிச்சென்ற குறி. செய்யுமென்னும் வாய்பாட்டான் உண்ணும் தின்னும் என்னுந் தொடக்கத்தனவெல்லாந் தழுவப்பட்டன, எல்லாத்தொழிலுஞ் செய்தல் வேறுபாடாகலிற் பொதுவாகிய செய்தல் எல்லாத்தொழிலையும் அகப்படுத்தி நிற்றலான். அவை பொதுவுஞ் சிறப்பும் அல்லவேல் என்செயாநின்றானென்று வினயவழி உண்ணாநின்றானெனச் செப்புதல் இயையாதாமென்க. இது செய்த செய்து முதலியவற்றிற்கும் ஒக்கும். இருதிணைக்கும் பொதுவாயதோர் பொருளின்மையான் அதனான் நிகழும் விரவுத்தொழிலென்பது ஒன்று இன்றாலெனின், அவ்விரவுத்தொழிலைக் கூறுகின்றவன் அதனை நிகழ்த்திய வினைமுதல் உயர்திணை அஃறிணையென்பது உணர்ந்தே கூறுமாயினும் பால்காட்டும் ஈறின்மை காரணத்தாற் கேட்டோன் உணர்வு இருதிணைவினைமுதன்மே

னும் ஒருங்கு சேறலின் அவ்வினைமுதற்பொருண்மையான் நிகழும் விரவுத்தொழிலும் உளதாயிற்றென்க. (கo)

உகஎ. குடுதுறு வென்னுங் குன்றிய லுகரமோ
டல்லன் னென்னே னருகு மீற்ற
விருதிணை முக்கூற் றொருமைத் தன்மையு
மம்மா மீற்ற முன்னிலை யாரையு
மெம்மே மோமிவை படர்க்கை யாரையு
மும்மூர் கடதற விருபா லாரையுந்
தன்னொடு படுக்குந் தன்மைப் பன்மையும்
பாற்பட வுணர்த்துதும் பகுதிய விரண்டனுட்
செய்கெ னொருமையுஞ் செய்குமென் பன்மையும்
வினையொடு முடியினும் விளம்பிய முற்றே.

நிறுத்தமுறையானே இது தன்மையொருமையும் பன்மையுங் கூறுகின்றது.

இ - ள். கடதறக்களை ஊர்ந்த குற்றியலுகர ஈறும் அல் அன் என் ஏன் என்னும் ஈறுமாகிய எண்வகையீற்றினையும் ஈறாகவுடைய மொழிகள் இருதிணைக்கண்ணும் உளவாகிய ஒருவனொருத்தியொன்றென்னும் மூவகையொருமைத்தன்மையினையும் அம்மும் ஆமுமாகிய ஈற்றையுடைய வினை வினைக்குறிப்புமொழிகள் முன் நின்றாரைத் தன்னோடு உளப்படுக்குந் தன்மைப்பன்மையினையும் எம்மும் ஏமும் ஓமுமாகிய ஈற்றையுடைய வினை வினைக்குறிப்புமொழிகள் படர்க்கையாரைத் தன்னோடு உளப்படுக்குந் தன்மைப்பன்மையினையும் உம்மென்னும் இடைச்சொல்லின் உகரத்தை ஊர்ந்துவருங் கும்மும் டும்முந் தும்மும் றும்முமாகிய ஈற்றையுடைய வினைகள் அவ்விருதிறத்தாரையும் ஒருங்கேயுந் தனித்தனியேயுந் தன்னோடு உளப்படுத்துந் தன்மைப்பன்மையினையும் பகுதிப்பட விளக்கும். அங்ஙனங் கூறிய பகுதியையுடைய ஒருமையும் பன்மையுமாகிய தன்மைவினைமுற்றுச்சொற்களுட் செய்கென்னும் வாய்பாட்டான் வருந் தன்மையொருமைவினைமுற்றுஞ் செய்குமென்னும் வாய்பாட்டான் வரும் உளப்பாட்டுத்தன்மைப்பன்மைவினைமுற்றும் பெயரோடு முடியாது வினைகொண்டு முடியும். அவ்வாறு முடியுமாயினும் முற்றுச்சொல்லாதலிற் திரியாது முற்கூறிய முற்றுச்சொல்லேயாம். எ - று.

மேற் பதவியலுட் கூறிய ஈற்றுவகையானே உண்கு உண்டு வருது சேறு எனவும் உரினுகு திருமுகு எனவும் வருங் குற்றுகர

ஈற்றுத் தன்மையொருமைமுற்றுச்சொல்லும் இடைநிலைவகையா னே உண்பல் வருவல் எனவரும் அல்லீற்றுத் தன்மையொருமை முற்றுச்சொல்லுங் கூறுவன் என வரும் அன்னீற்றுத் தன்மையொ ருமைமுற்றுச்சொல்லும் எதிர்காலம்பற்றி வரும் என்னீறும் ஏனீ றும் இடைநிலைவகையானே மூன்றுகாலமும் பற்றி வரும். அவற் றுள் என்னீறு இறப்பும் நிகழ்வும்பற்றி வருங்காற் புக்கனென் உண் ணுநின்றனென் என உயர்திணையாண்பாற்படர்க்கை அன்னீற் றோடு ஒத்து இடைநிலைகளின்முன் அன்பெற்றுவரும். ஏனையவற் றோடும் ஒட்டுக. இனி எதிர்காலம்பற்றி வருங்கால் உண்பென் உண்குவென் வருவென் வருகுவென் என முதனிலையெழுத்தின் முன் குகரம்பெறுதும் பெற்றும் இடைநிலைபெற்றுவரும். இனி ஏனீறு இறப்பினும் நிகழ்வினும் புக்கனேன் புக்கேன் உண்ணுநின் றனேன் உண்ணுநின்றேன் என அன்பெற்றும் பெறுதும் எதிர்வின் கண் உண்பேன் உண்குவேன் உரிஞுவேன் எனக் குகரமும் உகர மும்பெறுதும் பெற்றும் இடைநிலைபெற்றுவரும். ஏனையவற்றோ டும் ஒட்டுக. அம் ஆம் எம் ஏம் ஓம் என்பன இடைநிலைவகையானே மூன்றுகாலமும் ஈற்றுவகையானே உம்மூர் கடதற எதிர்காலமும் பற்றி வரும். அங்ஙனம் வருங்கால் யானும் நீயும் புக்கனம் புக்காம், யானும் அவனும் புக்கனெம் புக்கெம், யானும் அவனும் புக்கனேம் புக்கேம் புக்கனோம் புக்கோம் எனவும், யானும் நீயும் உண்ணுநின்ற னம் உண்ணுநின்றாம், யானும் அவனும் உண்ணுநின்றனெம் உண் ணுநின்றெம், யானும் அவனும் உண்ணுநின்றனேம் உண்ணுநின் றேம் உண்ணுநின்றனோம் உண்ணுநின்றோம் எனவும்; யானும் நீயும் உண்பம் உரிஞுவம் உண்குவம் உண்பாம் உரிஞுவாம் உண்கு வாம், யானும் அவனும் உண்பெம் உரிஞுவெம் உண்குவெம் உண் பேம் உரிஞுவேம் உண்குவேம் உண்போம் உரிஞுவோம் உண்கு வோம் எனவும்; யானும் நீயும் அவனும் உண்கும் உண்டும் வருதும் சேறும் உரிஞுதும் திருமுதும் எனவும் வரும். இவை அன்பெறும் விகற்பமும் உகரமுங் குகரமும் பெறுதலும் முற்கூறியவாறே காண்க. ஏனையவற்றோடும் ஒட்டுக.

இனிப் பாற்பட என்றதனானே அம் ஆம் என்பன தமராயவ ழிப் படர்க்கையாரையும் உளப்படுத்தல்கொள்க. தன்மை இருதி ணைக்கும் பொதுவாதல் விரவுப்பெயர் உரைத்தவழி உரைத்தாம். அதனானே "யானுமென் னெஃகமுஞ் சாறு மவனுடைய—யானைக் குந் தானைக்கும் போர்" என்புழி றும்மீறு அஃறிணைப்படர்க்கையை உளப்படுத்தல் வழுவமைதியன்று ஈண்டைக்கு வழாநிலையேயா மென்க. "இலனென்றுதீயவைசெய்யற்கசெய்யி—னிலனாகுமற்றும்

பெயர்த்து" என்பவாகலிற் தனித்தன்மைக்கண் அன்விகுதியும் வழக்குப்பயிற்சியான் உளப்பாட்டுத்தன்மைக்கண் ஓம்விகுதியும் உடனோதினார். தன்மைக்கு ஒருமையல்லது இன்மையிற் தன்மைப்பன்மையாவது தன்னோடு பிறரை உளப்படுத்ததேயாமென்பார் 'தன்னொடுபடுக்குந்தன்மைப்பன்மை' என்றார். இனிக் கரியன் கரியென் கரியேன் எனவும் கரியம் கரியெம் கரியேம் கரியோம் எனவும் வினைக்குறிப்புவந்தன காண்க. பிறவற்றோடும் ஒட்டுக.

காண்குவந்தேன் காண்கும்வந்தேம் எனச் செய்கெனொருமையுஞ் செய்குமென்பன்மையும் வினைகொண்டுமுடிந்தவாறு காண்க.

"பெயர்த்தனென்முயங்கயான்" எனவும் "சேர்ந்தனைசென்மோபூந்தார்மார்ப" எனவும் "மோயினளுயிர்த்தகாலை" எனவும் வினைமுற்றுச்சொற்கள் வினைகொள்ளுங்கால் முற்றுச்சொல்லாதலிற் திரிந்து வினையெச்சமாமாறுபோல வினையெச்சமாகாது முற்றேயாமென்பார் 'வினையொடுமுடியினும்விளம்பியமுற்றே' என்றார். இருசாரனவும் பெயர்கொள்ளாது வினைகொண்டவழிச் செய்கெனொருமையுஞ் செய்குமென் பன்மையுந் திரியாவென்றும் ஏனைய திரியுமென்றுங் கூறிய கருத்தென்னையெனின், நன்றுசொன்னாய் காண்குவந்தேன் காண்கும்வந்தேம் என்றவழி அவை வினையெச்சமாய்த் திரிந்தனவாயிற் செய்தெனெச்சத்திற்கு ஏலாமையிற் செயவெனெச்சமாய்த் திரியுமெனல்வேண்டும். வேண்டவே, செயவெனெச்சத்திற்கு உரிய வினைமுதல்வினையும் பிறவினையுங் கொள்வான் செல்லும். வினைமுதல்வினை அல்லது கொள்ளாமையிற் செயவெனெச்சமாய்த் திரியுமெனல் பொருந்தாது, பிறிதொராறின்மையின் முற்றுச்சொல்லாயே நின்றனவெனப்படுமென்க. செய்கென்பது "நோகோயானே" எனச் சிறுபான்மை பெயர்கோடல் உரையிற்கொள்க. உண்டிலன் உண்டிலம் முதலிய இவற்றின் மறைவாய்பாடும் அறிக. (கக)

உஙஅ. ஐயா யிகர வீற்ற மூன்று
மேவலின் வரூஉ மெல்லா வீற்றோ
டல்லா லேல்கா ணென்னு மீற்றவு
முப்பா லொருமை முன்னிலை வினையு
மிர்ஈ ரீற்ற விரண்டு மிருதிணைப்
பன்மை முன்னிலையு மின்னு மீற்ற
வன்னவற் றேவலு மாமென மொழிப.

இது முறையானே முன்னிலையொருமைவினையும் பன்மைவினையுங் கூறுகின்றது.

இ - ள். ஐயும் ஆயும் இகரமுமாகிய ஈற்றையுடைய மூவகைச் சொற்களும் ஏவற்பொருண்மைக்கண் வரும் இருபத்துமூவகை ஈற்றோடு அல் ஆல் ஏல் காண் என்னும் நான்கு ஈற்றையுமுடைய சொற்களும் உயர்திணையாண்பாலொருமையும் பெண்பாலொருமையும் அஃறிணையொருமையும் உணர்த்தும் முன்னிலைவினை வினைக்குறிப்புமுற்றுக்களும், இர் ஈர் என்னும் இருவகையீற்றையுடைய சொற்களும் உயர்திணைக்கட் பல்லோரையும் அஃறிணைக்கட் பலவற்றையும் உணர்த்தும் முன்னிலைவினை வினைக்குறிப்புமுற்றுக்களும், மின்னும் உம்முமாகிய ஈற்றையுடைய சொற்கள் அவ்விருதிணை ஏவலையும் உணர்த்தும் பன்மைவினைமுற்றுமாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

**வ**ரலாறு;—உண்டனை உண்ணுநின்றனை உண்பை எனவும் உண்டாய் உண்ணுநின்றாய் உண்பாய் எனவும் ஐகார ஈறும் ஆயீறும் மூன்றுகாலமும்பற்றி வரும். ஏனையவற்றோடும் ஒட்டுக. "ஐய சிறிதென்னையூக்கி" உண்டி "ஈதன்மாட்டொத்திபெரும" உரைத்தி தின்றி போறி என இகர ஈறு கடதறக்களையூர்ந்து எதிர்காலம்பற்றி வரும். "பிரிந்திறைசூழாதி" என இதன்மறையுங் காண்க. "உரைக்கிற்றிநன்றுமன்னிதுநாடாய்கூறி" எனச் சிறுபான்மை நிகழ்வும் பற்றி வரும். உண்ணுநிற்றி என்பது எதிர்காலத்திற்பிறந்த நிகழ்காலம். நடப்பி வருவி எனச் செய்வியென்னேவல் முன்னிலைவினை இகர ஈறு பகரவகரங்களையூர்ந்து எதிர்காலம்பற்றி வரும். உண்டிலை உண்டிலாய் முதலிய இவற்றின் மறைவிகற்பமும் அறிக. நட வா மடி சீ விடு கூ வே வை நொ போ வெள உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு போக்கு என ஏவலின்வரூஉம் எல்லா ஈற்றவும் உண்ணல் மறால் அழேல் சொல்லிக்காண் எனவரும் அல் ஆல் ஏல் காண் என்னும் ஈற்றையுடைய முன்னிலைமுற்றுக்களும் ஈற்றுவகையானே எதிர்காலம்பற்றி வரும். முன்னின்றான் தொழில் உணர்த்துவனவேயன்றி அவனைத் தொழிற்படுத்துவனவும் எதிர்முகமாதலொப்புமையான் முன்னிலையாயின. செய்வியெனீற்றிற்கும் மின்னீற்றிற்கும் உம்மீற்றிற்கும் ஈதொக்கும். உண்டனிர் உண்ணுநின்றனிர் உண்பிர் உண்குவிர் எனவும் உண்டீர் உண்ணுநின்றீர் உண்பீர் உண்குவீர் எனவும் இடைநிலைவகையானே இர் ஈரென்பன மூன்றுகாலமும் உண்மின் உரிஞுமின் எனவும் உண்ணும் உரையும் கேளும் எனவும் ஈற்றுவகையானே

பின்னீறும் உம்மீறும் எதிர்காலம்பற்றி வரும். ஏனையவற்றோடும் ஒட்டுக. உண்டிலிர் உண்டிலீர் உண்ணன்மின் என இவற்றின் மறைவிகற்பமும் அறிக. கரியை கரியாய் கரியிர் கரியீர் என வினைக் குறிப்பு வந்தன காண்க. பிறவும் அன்ன. (கஉ)

உ௩௬. கயவொடு ரவ்வொற் றல்ஆல் உம்மார்
ஐகா னீற்ற வியங்கோண் முற்றவை
யெய்து மிடம்பா லெங்கு மென்ப.

இது வியங்கோண்முற்று உணர்த்துகின்றது.

இ - ள். அகர உயிரோடுகூடிய ககரயகரங்களும் ரகாரவொற்றும் அல்லும் ஆலும் உம்மும் மாரும் ஐயுமாகிய எண்வகைவிகுதியையும் ஈறாகவுடைய சொற்கள் வியங்கோட் தெரிநிலைவினைமுற்றுச் சொற்களாம்; அம்முற்றுச்சொற்கள் ஐம்பால் மூவிடங்களினுஞ் செல்லுமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

வரலாறு;—அவன்செல்க அவள்செல்க அவர்செல்க அது செல்க அவைசெல்க என உயர்ந்தான் இழிந்தானை இன்னதுசெய்க என விதித்தற்பொருண்மைக்கண்ணும், அவன்வாழ்க அவள்வாழ்க அவர்வாழ்க அதுவாழ்க அவைவாழ்க எனவும் "அமிழ்தமுண்கநம்மயில்லியலாட்டி" "அருளிலர் கொடாமை வல்லராகுக" "வெல்கவாழி நின்வென்றி வார்கழல்" "செல்க தீயன சிறக்கநின் புகழே," எனவும் "பெறுக தில்லம் மயானே" "மடவமாக மடந்தை நாமே" எனவும் வாழ்த்துதற்பொருண்மைக்கண்ணும், "யானும்நின்னோடுடனுறைக" எனவும் "கடாவுகபாகநின்கால்வனெடுந்தேர்" "கேட்டிதுமறக்கநம்பி" யாவருங்கேட்க எனவும் வேண்டிக்கோடற்பொருண்மைக்கண்ணும் அகரத்தோடுகூடிய ககர ஈறும், அவன்வாழிய அவள்வாழிய அவர்வாழிய அதுவாழிய அவைவாழிய "யான்வாழுநாளுமெம்பாணன்வாழிய" "மன்னியபெருமநீணிலமிசையானே" என வாழ்த்துதற்பொருண்மைக்கண் அகரத்தோடு கூடிய யகர ஈறும், "வாழியர்நெக்கின்றிநீலியரோவத்தை" நீவாழியர் நின்றந்தைதாய்வாழியர் என வாழ்த்துதற்பொருண்மைக்கண் ரகார ஈறும் "வழாஅலோம்பல்" இற்றெனக்கிளத்தல் ஆக்கமொடுகூறல் என அல்லீறும் "மரீஇயதொரால்" என ஆலீறும் விதித்தற்கண்ணும் "வாழ்தல்வேண்டிமிவண்வரைந்தவைகல்" என உம்மீறும் "பீடின்றுபெருகியதிருவிற்—பாடின்மன்னரைப்பாடன்மாரெமரே" "நோய்மலி வருத்தங் காணன்மாரெமரே" என மாரீறும் வாழ்த்துதற்பொருண்மைக்கண்ணும்

"அஞ்சாமையஞ்சாமையஞ்சுவதொன்றின்" என விதித்தற்கண் ஐகார ஈறும் வந்தன. "பயனில்சொற்பாராட்டுவானைமகனெனன்-மக்கட்பதடியெனல்" என அல்லீறு விதித்தற்கண் மறையும் உடம்பாடுமாய் வருதலும் உணர்க. நாடாகொன்றோ காடாகொன்றோ அவலாகொன்றோ மிசையாகொன்றோ என்பனவற்றையும் நாடேயாக காடேயாக அவலேயாக மிசையேயாக என இதன்பாற் படுத்துக. இவற்றுள் ஏவல் கண்ணுதது இதுவென்று உணர்க. (கரு)

உசO. வேறின்மை யுண்டைம் பான்மூ விடத்தன.

இது வேறுமுதலியன மூன்றிற்கும் பால் இட உரிமை கூறுகின்றது.

இ - ள். வேறென்பதூஉம் இன்மையென்னுஞ் சொல்லான் உணர்த்தப்படும் இல்லை இல் என்னுஞ் சொற்களும் உண்டென்பதூஉம் ஐம்பான்மூவிடத்திற்கும் உரிய வினைக்குறிப்புமுற்றுக்களாம். எ - று.

வரலாறு;—அவன்வேறு அவள்வேறு அவர்வேறு அதுவேறு அவைவேறு யான்வேறு யாம்வேறு நீவேறு நீயிர்வேறு எனவும் அவனில்லை அவளில்லை அவரில்லை அதுவில்லை அவையில்லை யானில்லை யாமில்லை நீயில்லை நீயிரில்லை எனவும் "பிறன்கடை நின்றாரிற் பேதையாரில்" "வழியெஞ்சலெஞ்ஞான்றுமில்" எனவும் அவனுண்டு அவளுண்டு அவருண்டு அதுவுண்டு அவையுண்டு யானுண்டு யாமுண்டு நீயுண்டு நீயிருண்டு எனவும் வரும். "யாரு மில்லைத் தானே கள்வன்—றானவன் பொய்ப்பின் யானெவன் செய்கோ—தினைத் தாளன்ன சிறுபசுங் கால—வொழுகுநீ ராரல் பார்க்கும்—குருகு முண்டு தான் மணந்த ஞான்றே" என்புழிக் குருகென்பது இயற்பெயராகலின் அதன்கட் பன்மையொடு காலவென்பது இயைந்து காலனவாகிய குருகுகளென நின்று அஃது உண்டென்னும் பொதுவினைகொண்டதென்றாற் படும் இழுக்கின்றேனுங் கள்வன் தானொருவனுமே வேறுசிலர் ஆண்டில்லையென்று கூறுகின்றாள் இரைதேரும் மனக்குறிப்புடைமையிற் கேளாது சிறிதுகேட்டதாயினுங்கொலைசூழ் குருகாதலிற் கூறுவதுஞ் செய்யாது இத்தன்மைத்தாயதொரு குருகும் உண்டென்று கூறுதலிற் காலகுருகென்பதனைப் பன்மையொருமை வழுவமைப்பென்றே கொள்ளவேண்டுதலான் உண்டென்பது ஆண்டு அஃறிணையொருமை உணர்த்திநின்றதல்லது யாண்டும் அஃறிணையொருமையே உணர்த்திநிற்கு

மெனக் கூறவேண்டுவதில்லையென்க. அல்லது அங்ஙனங் கூறவேண்டிற்றேல் "நாவுண்டு நீயுண்டு நாமந் தரித்தோதப்—பாவுண்டு நெஞ்சே பயமுண்டோ—பூவுண்டு—வண்டுறங்குஞ் சோலை மதிலரங்கத் தேயுலகை—யுண்டுறங்கு வாளொருவ னுண்டு" எனவும் "பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டுகொல்—கொண்ட கொழுந ருறு குறை தாங்குறூஉம்—பெண்டிரு முண்டுகொல் பெண்டிரு முண்டு கொல்—சான்றோரு முண்டுகொல் சான்றோரு முண்டுகொ—லீன்ற குழவி யெடுத்து வளர்க்குறூஉஞ்—சான்றோரு முண்டுகொல் சான்றோரு முண்டுகொல்" எனவும் வருவன முடியாமையுணர்க. (கச)

உசக. பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையிற்
செல்லா தாகுஞ் செய்யுமென் முற்றே.

இது செய்யுமென்னும் முற்றுச்சொற்குப் பால் இட உரிமை கூறுகின்றது.

இ - ள். பல்லோர்படர்க்கைக்கண்ணும் முன்னிலைக்கண்ணுந் தன்மைக்கண்ணும் பொருந்தாது ஒருவன்படர்க்கைக்கண்ணும் ஒருத்திபடர்க்கைக்கண்ணும் ஒன்றன்படர்க்கைக்கண்ணும் பலவற்றின்படர்க்கைக்கண்ணும் பொருந்துஞ் செய்யுமென்னும் முற்றுச்சொல். எ - று.

உ-ம். அவன்வரும் அவள்வரும் அதுவரும் அவைவரும் எனவரும். (கரு)

உசஉ. பெயரெஞ்சு கிளவியும் வினையெஞ்சு கிளவியுந்
தேருங் காலை பான்மூ விடத்தன
வவைதாம், பிறிதொடியைந் தல்லது நிற்றலாற் றாக்
குறைபட நிலைஇயுங் கொள்கைய வென்ப. [து

இது பெயரெச்ச வினையெச்சங்கட்குப் பால் இட உரிமையும் முற்றோடு அவற்றிடை வேற்றுமையுங் கூறுகின்றது.

இ - ள். பெயரெச்சமாகிய வினை வினைக்குறிப்புச்சொல்லும் வினையெச்சமாகிய வினை வினைக்குறிப்புச்சொல்லும் ஆராயுமிடத்து ஐம்பான்மூவிடத்திற்கும் உரியனவாம்; அங்ஙனம் உரியனவாகிய எச்சங்கள் தாம் பிறிதோர்சொற்பற்றியல்லது நிற்றலாற்றாது குறைபடநிற்குங் கோட்பாட்டினை உடையனவாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

மற்றுச்சொல் நோக்குதலான் மற்றுச்சொல் நோக்கா முற்றுச்சொலின் வேறுபட்டு எச்சமாய்நிற்குமென்பார் 'குறைபடநிலை இயும்' என்றார். எனவே, பெயரோடியைந்தல்லது நிற்றலாற்றாத எச்சச்சொல் பெயரெஞ்சுகிளவியெனவும் வினையோடியைந்தல்லது நிற்றலாற்றாத எச்சச்சொல் வினையெஞ்சுகிளவியெனவும் விரியுமென்பதூஉமாயிற்று.

வரலாறு;—அவனுண்டவூண் அவளுண்டவூண் அவருண்டவூண் அதுவுண்டவூண் அவையுண்டவூண் யானுண்டவூண் யாமுண்டவூண் நீயுண்டவூண் நீயிருண்டவூண் எனவும் அவனுண்கின்றவூண் அவளுண்கின்றவூண் அவருண்கின்றவூண் அதுவுண்கின்றவூண் அவையுண்கின்றவூண் யானுண்கின்றவூண் யாமுண்கின்றவூண் நீயுண்கின்றவூண் நீயிருண்கின்றவூண் எனவும் அவனுண்ணுமூண் அவளுண்ணுமூண் அவருண்ணுமூண் அதுவுண்ணுமூண அவையுண்ணுமூண் யானுண்ணுமூண் யாமுண்ணுமூண் நீயுண்ணுமூண் நீயிருண்ணுமூண் எனவும் உண்டுவந்தான் வந்தாள் வந்தார் வந்தது வந்தன வந்தேன் வந்தேம் வந்தாய் வந்தீர் எனவும் பெயரெச்சமும் வினையெச்சமும் முறையானே பெயரோடும் வினையோடும் இயைந்து ஐம்பான்மூவிடங்கட்கும் உரியவாயினவாறு காண்க. (௧௬)

உ௪௫. அவற்றுட், செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
செய்வ தாதி யறுபொருட் பெயரொடு
முடியு முறையது பெயரெச் சம்மே.

இது பெயரெச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது, இத்துணைவாய்பாட்டான் நிகழுமெனவும் இத்துணைப் பொருட்பகுதிபற்றிவரும் பெயர்களான் முடியுமெனவுங் கூறுகின்றமையின்.

இ - ள். முற்கூறிய எச்சங்கள் இரண்டனுட் செய்த செய்கின்ற செய்யுமென்னும் முறையே முக்காலமுங் காட்டும் வாய்பாட்டாற் புலப்பட்டுத் தொழின்முதனிலையெட்டனுள் இன்னதற்காக இதுபயனாக என்னும் இரண்டும் ஒழித்து வினைமுதன்முதலாயின வினை அறுவகைப்பொருள்களையும் உணர்த்தும் பெயர்களோடு முடியும் இயல்பினையுடையது பெயரெச்சவினைச்சொல்லாம். எ - று.

வரலாறு;—ஆடியகூத்தன் வென்றவேல் புக்கஇல் போயினபோக்கு வந்தநாள் உண்டசோறு எனவும் ஆடுகின்றகூத்தன் வெல்கின்றவேல் புகுகின்றஇல் போகின்றபோக்கு வருகின்றநாள்

உண்கின்றசோறு எனவும் ஓதும்பார்ப்பான் வனையுங்கோல் வாழுமில் உண்ணும் ஊண் துயிலுங்காலம் கற்கும்நூல் எனவும் வினைமுதற்பொருளுங் கருவிப்பொருளும் நிலப்பொருளும் வினைப்பொருளுங் காலப்பொருளுஞ் செயப்படுபொருளுமாகிய பொருட்பகுதியாறனையும் பற்றி வரும் பெயர்ச்சொற்களோடு முடிந்தவாறு காண்க. இவற்றிற்குச் செய்யாநின்ற எனவும் செய்யாநிற்கும் எனவும் வரும் வாய்பாட்டு வேற்றுமை ஒன்றெனமுடித்தலாற் கொள்க.

முடியுமென்னுது முடியுமுறையதென்ற மிகையானே அவனுண்ட ஊணென்முற்போல வினைமுதற்பொருட்பெயர் முன்வந்தே ஏனைய பின்வருமெனவும் வினைமுதற்பொருள் பெயராயின் ஆடிய கூத்தனென்முற்போல அப்பெயர்பின்வருமெனவுங் கொள்க.

"மற்றிந்நோய் தீரு மருந்தருளா யொண்டொடி" என்புழி நோய்தீர்தற்கேதுவாகிய மருந்தென்னும் ஏதுப்பொருண்மை கருவிக்கண் அடங்கும். தேரோடும்புறங்காணேனுயினென் நிலம்பூத்தமரம் என்பனபோல்வனவும் அன்ன. "நின்முகங்காணுமருந்தினேன்" என்புழிக் காட்சியைமருந்தென்றதாதலிற் காணுமருந்தென்பதூஉம் "பொச்சாவாக்கருவியாற்போற்றிச்செயின்" என்புழிப் பொச்சாவாமையைக் கருவியென்றதாகலிற் பொச்சாவாக்கருவியென்பதூஉம் வினைக்கண் அடங்கும். ஆறுசென்றவியரென்புழி வியர் ஆறுசேறலான் வந்த காரியமாகலிற் செயப்படுபொருட்கண் அடங்கும். ஆர்களிறுமிதித்தநீர் எள்ளாட்டியஎண்ணெய் உண்டஎச்சில் என்பனபோல்வனவும் அன்ன.

நூற்றநூலானியன்றகலிங்கம் பூத்தபூவானியன்றகண்ணி என்பனவும் ஒற்றுமைநயத்தானே நூற்றகலிங்கம் "சுண்டுசுனை பூத்தவண்டுபடுகண்ணி" எனப் பொருட்பெயர்கொண்டனவேயாம். "நூலாக்கலிங்கம்வாலரைக்கொளீஇ" என்பது பெயரெச்ச எதிர்மறை. இதுவும் அவ்வியல்பிற்று.

உம்மையை எச்சவும்மையாக்கிச் செய்வதாதி அறுபொருட்பெயருமேயன்றி அரசனுற்கொடுத்தபார்ப்பான் கொடுக்கின்றபார்ப்பான் கொடுக்கும்பார்ப்பான் எனவும் ஆடையொலித்தகூலி ஒலிக்கின்றகூலி ஒலிக்குங்கூலி எனவும் ஒத்த உரிமையனவன்றிச் சிறுபான்மை இன்னதற்காக இதுபயனுக என்பனபற்றிவரும் பெயருங் கொள்க. இன்னும் பழம் உதிர்ந்தகோடு உதிர்கின்றகோடு உதிருங்கோடு எனச் சிறுபான்மை தீர்தற்பொருண்மைபற்றிவரும் பெயருங்கொள்க.

இனிச் செய்த என்பதன்குறிப்பாய் இன்ன அன்ன என்ன கரிய செய்ய பெரிய என வருவனவுங் காண்க. "இன்னதன்மையின ருமையின்" எனவும் "அன்னதன்மையினறிந்தியாரே" எனவும் "என்னகிளவியும்பண்பின்றொகையே" எனவும் கரியமால் நெடுங் கண் எனவும் செய்யகோலினுய் எனவும் "பெரியகேழலட்டபேழ் வாயேற்றை" எனவும் பிறுண்டும் வந்தவாறுகாண்க. (கஎ)

உசச. செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலுஞ்
செய்யுளு ளும்முந் தாதலு முற்றே
லுயிரு முயிர்மெய்யு மேகலு மாம்பிற.

இது செய்யுமென்னும் வாய்பாட்டான்வரும் உம்மீற்றுப் பெயரெச்சத்திற்கும் முற்றிற்கும் எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். செய்யுமென்னும் பெயரெச்சத்து இறுதியுயிர்மெய் கெடுதலுஞ் செய்யுளிடத்து உம்மீறு உந்தெனத் திரிதலும் முற்று மாயின் ஈற்றுயிர்கெடுதலும் ஈற்றுயிர்மெய்கெடுதலுமாகிய இவ்விதி கள் பெறுதலும் பிறவுமாம். எ - று.

உம்மையாற் பெறுதல் ஒருதலையன்றெனக்கொள்க. "வாம்பு ரவி வழுதியொடெம்மிடை" "ஆன்போம்புழை" என வாவும்புரவி போகும்புழை என்பன உயிர்மெய்கெட்டு நின்றன. மகரவொற்று நிற்றலான் இவை வினைத்தொகையாகாவென்க. "திரைமிசைப்பா யுந்து" "நீர்க்கோழிகூப்பெயர்க்குந்து" என பாயுகும் பெயர்க்கும் என் பன உம்மீறு உந்தாய்த்திரிந்தன. "சாரனாடவென்றோழியுங்கலுழ் மே" "அம்பலூருமவனொடுமொழிமே" என முறையே கலுழுமே மொழியுமே என்பன ஈற்றுயிர்கெட்டும் ஈற்றுயிர்மெய்கெட்டும் நின் றன. பிறவும் அன்ன.

இனிப் பிற என்றதனானே செய்யுமென்னும் உம் ஈற்று முன் னிலைப்பன்மைமுற்றும் இவ்வாறுகெடுதலுங்கொள்க. "மாமறைமாக் கள்வருகுலங்கேண்மோ" "முதுமறை யந்தணிர் முன்னிய துரை மோ" என முறையே கேளுமோ உரையுமோ என்பன ஈற்றுயிர் கெட்டும் ஈற்றுயிர்மெய்கெட்டும் நின்றன. மகர ஈறு "மவ்வீறொற் றழிந்துயிரீறொப்பவும்" என்பதனாற்கெட்டது. இவை மணிமேக லையுட்கண்டன. (கஅ)

உசரு. செய்து செய்யூ முதல வாய்பாட்டிற்
றன்வினை பிறவினை யாயிரு வினையொடு
முடியு முறையது வினையெச் சம்மே.

இது வினையெச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது; இத்துணைவாய்பாட்டான் நிகழுமெனவும் இவ்வினைச் சொற்களான் முடியுமெனவுங் கூறுகின்றமையின்.

இ - ள். செய்து செய்யூ முதலிய வாய்பாட்டாற் புலப்பட்டுத் தன்னை நிகழ்த்திய வினைமுதலான் நிகழ்ந்த வினையும் பிறவற்றின் வினையுமாகிய அவ்விருவகை வினையோடும் முடியும் இயல்பினையுடையது வினையெச்சச்சொல்லாம். எ - று. (கக)

உசகூ. செய்து செய்யூச் செய்யாச் செய்பு
செய்தெனச் செயச்செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
வைந்தொன் றாறுமுக் காலமுறை தருமே.

இது முன்னர் வினையெச்சஞ் செய்து செய்யூ முதலிய வாய்பாடுபற்றி வருமென்றார், அவை இவையென்பதூஉம் அவற்றாற் புலப்படுங்காலம் இவையென்பதூஉங் கூறுகின்றது.

இ - ள். உகரமும் ஊகாரமும் ஆகாரமும் புகரமும் எனவும் அகரமும் இன்னும் இயவும் இயருமாகிய இறுதியிடைச்சொற்களான் வேறுபட்ட செய்யென்னும்வாய்பாடுபெற்றிவருஞ் செய்தென்பதுமுதலிய ஒன்பதும் வான் பான் பாக்கு ஆகிய இறுதியிடைச் சொற்களான் வேறுபட்ட செய்யென்னும்வாய்பாடுபெற்றிவருஞ் செய்வான் செய்பான் செய்பாக்கு என்னும் மூன்றும் இவைபோல்வன பிறவும் வினையெச்சத்திறத்தனவாம். நிறுத்தமுறையானே முதற்கண் நின்ற ஐந்தும் இடைக்கண் நின்ற ஒன்றும் இறுதிக்கண் நின்ற ஆறும் இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமும் புலப்படுத்துநிற்கும். எ - று.

**வா**ன் பான் பாக்கு என்னும் இடைச்சொல்லிறுதிவினைச் சொல்லை ஆகுபெயரான் வான்பான்பாக்கென்றார்.

இவற்றுள் உகர ஈறு நக்கு உண்டு வந்து சென்று எனக் கடதறக்களை ஊர்ந்து இறந்தகாலம்பற்றி வரும். ஊகார ஈறும் ஆகார ஈறும் உண்ணூவந்தான் தின்னூவந்தான் "படுமகன் கிடக்கை காணூ—வீன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே" எனவும் உண்ணு வந்தான் "கல்லாக்கழிப்பர்தலையாயார்நல்லவை—துவ்வாக்கழிப்பரிடைகள்" எனவும் பின்வருந்தொழிற்கு இடையின்றி விரைவு உணர்த்தி முன்வருந்தொழின்மேல் இறந்தகாலம்பற்றி வரும். பகர

வுகரம் "பல்கால் வாக்குபு தரத்தர வருத்தம் விடவார வுண்டு" "புல ராப் பச்சிலை யிடையிடுபு தொடுத்த" என இறந்தகாலம்பற்றி வரும். உரிஞுபு என உகரமும் கற்குபு எனக் குகரமும் ஏற்றவழிப் பெறு தல்கொள்க. எனவென்பது சோலைபுக்கெனவெப்பநீங்கிற்று உண் டெனப்பசிகெட்டது உரைத்தெனவுணர்ந்தான் மருந்துதின்றெனப் பிணிநீங்கிற்று என முடிக்குஞ்சொல்லான் உணரப்படுந்தொழிற் குத் தன்முதனிலைத்தொழில் காரணமாய் விரைவு உணர்த்திக் கட தறக்களை ஊர்ந்து இறந்தகாலம்பற்றி வரும். எஞ்சியென உரிஞி யென என ஏனையெழுத்தோடும் வருமாறு அறிந்து ஒட்டிக்கொள்க. அகரம் ஞாயிறுபடவந்தான் என இதுநிகழாநிற்கவந்தானென்னும் பொருட்டாய் நிகழ்காலம்பற்றிவரும். வாழச்செய்தநல்வினையென்ப தூஉம் அது. இன் மழைபெய்யிற்குளநிறையும் மெய்யுணரின்வீடெ ளிதாம் எனக் காரணப்பொருட்டாய் எதிர்காலம்பற்றி வரும். நடப் பின் உரைப்பின் என ஏற்றவழிப் பகரம்பெற்று வருதலுங் கொள்க. இய இயர் என்பன உண்ணிய தின்னிய உண்ணியர் தின்னியர் என எதிர்காலம்பற்றி வரும். போகிய போகியர் என ஏற்றவழிக் குகரம் பெற்றுவருதலுங் கொள்க. வான்பான்பாக்கென்பன முறையே "கொல்வான்கொடித்தானைகொண்டெழுந்தான்" எனவும் "அலைப் பான்பிறிதுயிரையாக்கலுங்குற்றம்" எனவும் "புணர்தருசெல்வந்த ருபாக்குச்சென்றான்" எனவும் எதிர்காலம்பற்றி வரும்.

இனி இவைபோல்வன பிறவாவன;—உணற்குவந்தான் என எதிர்காலம்பற்றி வருங் குகர ஈற்றுச்சொல்லும், நீர்பொய்கூறியபின் மெய்கூறுவார்யார் என இறந்தகாலமும் நீயிவ்வாறுகூறுகின்றபின் னுரைப்பதுண்டோ என நிகழ்காலமும்பற்றி வரும் பின்னீற்றுச் சொல்லும், மருந்துதின்னுமுன்னோய்தீர்ந்தது என இறந்தகாலம் பற்றி வரும் முன்னீற்றுச்சொல்லும், "வலனுகவினையென் றுவணங் கிநாம்விடுத்தக்கால்" என இறந்தகாலமும் "அகன்றவர்திறத்தினிநா டுங்கால்" என நிகழ்காலமும்பற்றி வருங் காலீற்றுச்சொல்லுந், "தொ டர்கூரத்துவ்வாமைவந்தக்கடை" என இறந்தகாலம்பற்றி வருங் கடையீற்றுச்சொல்லும், "விடுவழி விடுவழிச் சென்றாங் கவர்— தொடுவழித் தொடுவழி நீங்கின்றாற் பசப்பே" என இறந்தகாலமும் "அவ ளாடுவழி யாடுவழி யகலேன் மனனே" என நிகழ்காலமும் உரைக்கும்வழியுரைக்கும்வழி என எதிர்காலமும்பற்றி வரும் வழி யீற்றுச்சொல்லுங், "களையுநர்—கைகொல்லுங்காழ்த்தவிடத்து"என இறந்தகாலமும் உரைக்குமிடத்து என நிகழ்காலமும் எதிர்காலமும் பற்றி வரும் இடத்தீற்றுச்சொல்லுமாகிய இவ்வறுவகை ஈற்றுச் சொல்லுமெனக்கொள்க.

இன்னும் அதனானே "விருந்தின்றியுண்டபகலும்" என வரும் இன்றியும், "நாளன்றுபோகி" என வரும் அன்றியும், "நாணு நட்பு மில்லோர்த் தேரின்—யானல தில்லை யிவ்வுலகத் தானே" என வரும் அல்லதும், "நுணங்கியகேள்வியரல்லால்" எனவரும் அல்லாலும், "அவாவுண்டேலுண்டாஞ்சிறிது" என வரும் ஏலும், "அவனெள்ளுமேனும்வரும்" எனவரும் ஏனும் வினையெச்சக்குறிப்புக்களாமெனக் கொள்க. "ஒன்றானுந்தீச்சொல்" என்புழி ஆயினுமென்பது ஆனுமெனக் குறைந்துநின்றது. உண்டான் உண்டவனென்னும் வினைப்பெயர்கள் உண்டாற்கு உண்டவற்கு என நான்கனுருபு ஏற்றுழிச் செயற்கு என்னும் எச்சப்பொருடரும் மயக்கமின்மையும் உணலென்னும் வினைப்பெயர் குகரம் அடுத்துழி உண்டலைச்செய்தற்கென்னும் பொருடந்து எச்சப்பொருட்டாயே நிற்றலின் வினைப்பெயர் நான்கனுருபு ஏற்றுநின்றதென்னும் மயக்கம் உணற்கென்பதற்கு இன்மையும் உணர்க. எற்றுக்குவந்தான் என்பது எக்காரியஞ் செய்தற்குவந்தானென்னும் பொருட்டாய் அவ்வெச்சவினைக்குறிப்பாய்நிற்கும். எவற்றுக்கென்பதும் அது. இவையும் இன்னவென்பதனாற் கொள்க. பின்முதலிய ஆறனையுங் காலம்பற்றிவருமென்றது கூதிர்போயபின்வந்தான் எனவும் நின்றவிடத்துநின்றான் எனவும் பின்முதலியன பெயரெச்சத்தோடு வந்துழிக் காலம்பற்றாமையினென்றுணர்க. இவற்றைச் செய்தவென்னுங் காலம்பற்றிய இடப்பொருளுருபாய் அடங்குமென்னுமோவெனின், என்னும்; வினை வேற்றுமையுருபேலாமையின்.

இனிப் பிற என்றதனானே உகரங் கடதறக்களை ஊர்ந்து இயல்பாய்நிற்றலேயன்றி எஞ்சி உரிஞி ஓடி எனவும் ஆய் போய் எனவும் ஏனையெழுத்துக்களை ஊர்ந்து இகரமாய்த்திரிந்தும் நெட்டெழுத்தீற்றின் முதனிலைமுன்னர் யகரம்வரத் தான்கெட்டும் இறந்தகாலம்பற்றி வருமெனவுங் கொள்க. சினைஇ உரைஇ இரீஇ உடீஇ பாய் தாய் ஆய் என்பனவோவெனின் அவை செய்யுள்முடிபென்க. ஆகி போகி ஓடி மலர்த்தி ஆற்றி என்புழி முதனிலை குற்றுகர ஈருதலின் ஏனையெழுத்தாதல் அறிக. கடதற என்பன குற்றுகரத்தோடு வரும் இடமுந் தனிமெய்யாய் வரும் இடமுந் தெரிந்து உணர்க. உரிஞி ஓடி என்பனவற்றை இகர ஈறென்றும் ஆய் போய் என்பனவற்றை யகர ஈறென்றுங் கொள்ளாது உகர ஈற்றின் திரிபென்றது கடதற ஊர்ந்து உகர ஈறு வினைக்கட் பயின்று வருதலானும், எதிர்மறையெச்சமெல்லாம் பெரும்பான்மையும் உகரவீறாயல்லது வாராமையானும், அவ்விகர யகர ஈறுகளுஞ் செய்தென்னும்

வாசகத்தைத் தந்தே நிற்றலானும், உகரம் இயல்பாக, இகரமும் யகரமும் அதன் திரிபென்றலே முறைமையாமென்று உணர்தற்கெனக் கொள்க. இன்னும் அதனானே "ஓடாநின்றுபோயினான்" எனவும் "அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்—பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பருதி" எனவும் "தளிபெறு தண்புலத்துத் தலைப்பெயற் கரும்பீன்று—முளிமுதற் பொதுளிய முட்புறப் பிடவமும்" எனவும் உகர ஈறு சிறுபான்மை நிகழ்காலம்பற்றி வருதலும், புகர ஈறு "நகுபுவந்தான்" என்புழி நகாநின்றுவந்தானென்றும் "வாடுபுவனப்போடி" என்புழி வாடாநின்று வனப்போடி" என்றும் முடிக்குஞ்சொல்லான் உணரப்படுந்தொழிலோடு உடனிகழ்ந்து நிகழ்காலம்பற்றி வருதலும், அகர ஈறு மழைபெய்யக்குளநிறைந்தது எனக் காரணப்பொருட்டாயுங் குளநிறையமழைபெய்தது எனக் காரியப்பொருட்டாயும் இறந்தகாலம்பற்றியும் உண்ணவந்தானெனத் தற்பொருட்டாய் எதிர்காலம்பற்றியும் வருதலுந், தலைவன்பிரிந்துவருந்தினாள் "மாஅல் யானையொடு மறவர் மயங்கித்—தூறதர்ப் பட்ட வாறுமயங் கருஞ்சுரம்" "வானின் றுலகம் வழங்கி வருதலால்" எனவும் "நமதுநலனுகர்வான்யாம்விரும்புதும்" கற்பானூல்செய்தான் புணர்தருசெல்வந்தருபாக்குயாம்விரும்புதும் எனவும் உகர ஈறாயும் வான்பான்பாக்கீறாயுந் திரிதலுங் கொள்க. உரைப்ப உரைக்க என இதற்கு ஏற்புழிப் பகரமுங் ககரமும் வரும். இது மறைக்கட் "கூறாமற் குறித்ததன் மேற் செல்லுங் கடுங்கூளி" என அல்லீறாயுங் "கூறாமை நோக்கிக் குறிப்பறிவான்" என மகர ஐகார ஈறாயும் வருதலும், இன்னீறு "நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே" என உம்மீறாயும் "அற்றாலளவறிந்துண்க" என ஆலீறாயுந் திரிதலுங் கொள்க. அகர ஈறும் இன்னீறும் இயல்பாதற்கும் உகர ஈறும் வான்பான்பாக்கீறும் உம்மீறும் ஆலீறும் அவற்றின் திரிபாதற்கும் மேல் உகர ஈற்றிற்கு உரைத்தாங்கு உரைக்க.

இன்னும் அதனானே ஓடிவந்தான் விரைந்துபோயினான் எனவும் "வெய்ய சிறிய மிழற்றுஞ் செவ்வாய்" எனவும் "செவ்வன் றெரிகற்பான் புதுவத னியன்றவணி" எனவும் தம்மைமுடிக்கும் வினைக்கட்கிடந்த தொழிலானும் பண்பானுங் குறிப்பானும் உணர்த்தித் தெரிநிலைவினையுங் குறிப்புவினையுமாய் முடிக்குஞ்சொல்லை விசேடித்தலும் பிறவும் பின் பின்னர் பின்னை எனவும் முன் முன்னர் முன்னை எனவும் திரிதலுங் கொள்க. (உ0)

உசஎ. அவற்றுள், முதலி னான்கு மீற்றின் மூன்றும் வினைமுதல் கொள்ளும் பிறவுமேற் கும்பிற.

இஃது இன்னும் வினையெச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது; "தன்வினை பிறவினை யாயிரு வினையொடு— முடியு முறையது வினையெச் சம்மே" எனப் பொதுவகையான் எய் துவித்ததனை ஈண்டுச் சிறப்புவகையான் எய்துவிக்கின்றமையின்.

இ - ள். முற்கூறிய பன்னிரண்டனுள் முதற்கண் நின்ற செய்து செய்யூ செய்யா செய்பு என்னும் நான்கும் ஈற்றின்கண் நின்ற செய்வான் செய்பான் செய்பாக்கென்னும் மூன்றுந் தம்மை நிகழ்த்தின கருத்தாவினது வினையைக்கொண்டு முடியும். பிறகருத் தாவினது வினையையும் உம்மையாற் தம்மைநிகழ்த்தின கருத் தாவினது வினையையுங்கொண்டு முடியும் ஏனை ஐவகை எச்சங் களும். எ - று.

உ-ம். உண்டுவந்தான் வந்துதோன்றினன் "எண்ணித்துணிக கருமம்" "பரீஇயுயிர்செகுக்கும்" "ஐவரொடுசினைஇநிலந்தலைக்கொ ண்ட" எனவும் உண்ணூவந்தான் "நிலம்புடையூவெழுதருவலம்படு குஞ்சரம்" எனவும் உண்ணுவந்தான் "நிலங்கிளையாநாணிநின்றோ ணிலை"எனவும் உண்குபுவந்தான் "தெரிபுதெரிபுகுத்தினவேறு" என வும்"கொல்வான்கொடித்தானைகொண்டெழுந்தான்""திருவிற்றன் மாரிகற்பான்றுவலைநாட்செய்ததேபோல்" எனவும் "புணர்தருசெல வந்தருபாக்குச்சென்றான்" எனவும் முதலினான்கும் ஈற்றின்மூன் றும் வினைமுதல்வினைகொண்டு முடிந்தவாறுகாண்க. வினைமுதல்வி னையை வினைமுதலென்றார் ஆகுபெயரான். "மழைபெய்தெனப் புகழ்பெற்றது" "காந்தளஞ் சிலம்பிற் சிறுகுடி பசித்தெனக்— கடுங்கண் யானைக் கோடுநொடுத் துண்ணும்" எனவும் மழைபெய்தெ னமரங்குழைத்தது "கோவாவாரம் வீழ்ந்தெனக்குளிர்கொண்டு— பேஏநாறுந்தாழ்நீர்ப்பணிச்சுனை" எனவும் மழைபெய்யப்புகழ்பெற் றது "கொள்ளக்குறைபடாஅக்கூழுடைவியனகர்" எனவும் மழை பெய்யமரங்குழைத்தது "மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து— நோக்கக் குழையும் விருந்து" எனவும் மழைபெய்யிற்புகழ்பெறும் "தாம்வேண்டினல்குவர்காதலர்" எனவும் மழைபெய்யிற்குளநிறை யும் "யாம்வேண்டிற்கௌவையெடுக்குமிவ்வூர்" எனவும் மழைபெய் யியமுழங்கும் "காணியவாவாழிதோழி" எனவும் மழைபெய்யிய வான்பழிச்சுதும் "மாணிழை யரிவை காணிய வொருநாட்—பூணக மாகநின் புனைமணி நெடுந்தேர்" எனவும் மழைபெய்யியரெழுந் தது "பகலையுணியர்வேண்டும்" எனவும் மழைபெய்யியர்பலிகொடுத் தனர் "கொற்கைச் செழியர் கொங்கர்ப் பணியியர்—பழையன

வேல் வாய்த்தன" எனவும் ஏனையைந்தும் வினைமுதல்வினையும் பிற வினையுங் கொண்டு முடிந்தவாறுகாண்க.

இனி மழைபெய்தற்குமுழங்கும் மழைபெய்தற்குக்கடவுள் வாழ்த்துதும் எனவும் இறந்தபின்னிளமைவாராது கணவனினி துண்டபின்காதலிமுகமலர்ந்தது எனவும் கடுத்தின்றுமுன்றுவர்த் தது மருந்துதின்றுமுன்னோய்தீர்ந்தது எனவும் உரைத்தக்காலுரை பல்கும் "வலனாக வினையென்று வணங்கிநாம் விடுத்தக்கா—லொளி யிழாய் நமக்கவர் வருதுமென் றுரைத்ததை" எனவும் நல்வினைதா னுற்றக்கடையுதவும் நல்வினைதானுற்றக்கடைத்தீவினைவாரா என வும் நல்வினைதானுற்றவழியுதவும் நல்வினைதானுற்றவழித்தீவினை வாரா எனவும் நல்வினைதானுற்றவிடத்துதவும் நல்வினைதானுற்றவி டத்துத்தீவினைவாரா எனவும் இன்ன என்பதனாற் றழீஇயவையும் வினைமுதல்வினையும் பிறவினையுங் கொண்டு முடிதல் ஒன்றெனமு டித்தலாற் கொள்க. (உக)

உசஅ. சினைவினை முதலொடும் பிறவினை பிறவினை முதலொடு முடிதலு முன்னினர் கொளலே.

இது வினைமுதல்வினைகொண்டு முடியுமென்ற முதனூன்கற் கும் ஆவதோர் புறனடை கூறுகின்றது; ஏனையவற்றிற்கு இவ்வாறு அமைதிகூறவேண்டாமையின்.

இ - ள். சினைப்பொருள்பற்றித்தோன்றிய வினையெச்சம் அச் சினைவினையான் முடிதலேயன்றி முதல்வினையோடு முடிதலுஞ் சினைவினையேயன்றி முதல்வினையுந் தமக்கு உரிய வினைமுதல்வி னையோடு முடிதலேயன்றிப் பிறவினைமுதல்வினையோடு முடிதலும் ஆராய்ந்து அமைத்துக்கொள்க. எ - று.

உ-ம். கையற்றுவீழ்ந்தான் கண்ணொந்துகிடந்தான் வயிறு நொந்துகிடந்தான் "கண்டுயின்றுமுன்றிற்போகாமுதிர்வினள்" "பா யுந் தாளொற்றித் தப்பிவீழ்ந்தார் தறிவலைமானிற் பட்டார்" எனவும் கையிறுவீழ்ந்தான் கண்வலியூக்கிடந்தான் எனவும் கையிறாவீழ்ந் தான் கண்வலியாக்கிடந்தான் எனவும் கையிறுபுவீழ்ந்தான் வயிறு குத்துபுகிடந்தான் எனவும் காரணகாரியப்பொருளவாயும் "அகன மர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து—நல்விருந் தோம்புவா னில்" "காமன்கணையொடுகண்சிவந்துபுலர்ந்தாள்"எனச் சிறுபான்மைகார ணகாரியப்பொருளவல்லவாயுஞ் சினைவினை முதல்வினையோடும் ஞா யிறுபட்டுவந்தான் "உரற்கால்யானையொடித்துண்டெஞ்சியயா—

விரிநிழற்றுஞ்சுஞ்செந்நாயேற்றை" எனவும் ஞாயிறுபடூஉவந்தான் எனவும் ஞாயிறுபடாவந்தான் எனவும் ஞாயிறுபடுபுவந்தான் எனவும் முதல்வினை தமக்குரிய வினைமுதல்வினையானன்றிப் பிறவினைமுதல்வினையோடு முடிந்தவாறுகாண்க. தலைவன்பிரிந்துவருந்தினுள் "மாஅல் யானையொடு மறவர் மயங்கித்—தூறதர்ப் பட்ட வாறுமயங் கருஞ்சுரம்" "வானின்றுலகம்வழங்கிவருதலால்" எனவும் நமதுநலனுகர்வான்யாம்விரும்புதும் கற்பானூல்செய்தான் செல்வந்தருபாக்குயாம்விரும்புதும் எனவும் பிறவினைகொண்டு முடிந்தனவோவெனின், அவை காரணகாரியப்பொருட்டாய் இறந்தகாலம் உணர்த்துஞ் செயவெனெச்சமுந் தற்பொருட்டாய் எதிர்காலம் உணர்த்துஞ் செயவெனெச்சமும் மேலைச்சூத்திரத்துப் பிறவென்ற மிகையானே முறையே செய்தெனெச்சமாயுஞ் செய்வான் செய்பான் செய்பாக்கு என்னும் எச்சங்களாயுந் திரிந்துநின்றுழியே பிறவினைகொண்டன எனப்படுமென்க.

அற்றேல் ஞாயிறுபட்டுவந்தான் "உரற்கால்யானையொடித்துண்டெஞ்சியயா" என்பன முதலியவற்றையுஞ் செயவெனெச்சத்திரிபென்றாற் படும் இழுக்கென்னையோவெனின் பிறவினைகொண்டனவாயினுஞ் செய்தெனெச்சத்திற்கு உரிய இறந்தகாலம் உணர்த்தலிற் செய்தெனெச்சமேயாவதல்லது ஏனைக்காலத்திற்கு உரிய செயவெனெச்சத்தின் திரிபெனப்படாவென்க.

அஃதேல் மழைபெய்யமரங்குழைத்ததெனச் செயவெனெச்சத்து இறந்தகாலமும் உரித்தாலெனின், அது காரணகாரியப்பொருட்டாயவழியல்லது செயவெனெச்சம் இறந்தகாலம் உணர்த்தாதென்க. எனவே, ஞாயிறுபடுதலும் ஒடித்துண்டலும் வருதற்கும் எஞ்சுதற்குங் காரணமன்மையின் ஆண்டு இறந்தகாலம் உணர்த்தாமையிற் செய்தெனெச்சமாயே நின்று தமக்கு உரிய இறந்தகாலம் உணர்த்தினவெனப்படுமென்பதாயிற்று. ஞாயிறுபட்டுவந்தான் என்பது ஞாயிறுபட்டபின்வந்தானென இறந்தகாலமும் ஞாயிறுபடவந்தானென்பது ஞாயிறுபடாநிற்கவந்தானென நிகழ்காலமும் உணர்த்துதல் வழக்குநோக்கி உணர்க. தன்வினைகோடற்கு உரியன பிறவினைகொண்டு முடியுமாயினும் முதலொடு சினைக்கு ஒற்றுமையுண்மையின் முதல்வினையுந் தன்வினையேயாமாகலானுந், தமக்கு உரிய இறந்தகாலமே உணர்த்திநிற்றலாற் செயவெனெச்சத்திரிபாகாது செய்தெனெச்சமுதலியனவேயாமென்பது அவற்றிற்கு இயல்பாமாகலானும், வழுவெனக் களையப்படாவென்று ஆராய்ந்து அமைத்துக் கொள்க என்பார் முன்னினர்கொளலேயென்றார்.

இ - ள். தெரிநிலைவினைமுற்றுத் திரிந்து வினையெச்சமாகி வருதலுங் குறிப்புவினைமுற்றுத் திரிந்து வினையெச்சமாகி வருதலும் பெயரெச்சமாகி வருதலுஞ் சிறுபான்மை உள. எ - று.

உ-ம். "காணுன் கழிந்தவைகலு முண்டென் ரெருநாள்" "மோயினளுயிர்த்தகாலை" "முகந்தனர்கொடுப்ப" "விளிப்பது பயிலுங் குறும்பர் துந்துபியொடு" "எருவை நுண்டாது குடைவன வாடி" எனவும் "பெயர்த்தனென்முயங்கயான்" "மக்களு ளிரட்டையாய் மாறினம் பிறந்தியாம்" எனவும் "சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப" "கருங்கோட் டின்னிய மியக்கினிர் கழிமின்" எனவும் ஐம்பான்மூவிடத்துந் தெரிநிலைவினைமுற்றுக்கள் திரிந்து வினையெச்சமாயினவாறு காண்க. "வரிபுனைவில்ல னொருகணை தெரிந்து கொண்டு" "அளிநிலை பெறூஅ தமரியமுகத்தள்—விளிநிலை கொள்ளாள்" "உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து" "விழுமிதுகழிவதாயினும்" "நிலமிசைப் புரளுங் கையவெய் துயிர்த்து" எனவும் "துணையி னெஞ்சினேன் றுயருழந் தினையேன்" "நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சி" எனவும் "நீர்வார்கண்ணைநீயிவணொழிய" "வெள்வேல் வலத்தினிர் பொருடரல் வேட்கையி னுள்ளினிர்" எனவும் "வெந்துப்பினன்விறல்வழுதியொடு" "அஞ்சாயல ளாயிழை முன்" "கடற் ருனையர் கழல் வேந்தரை" "பெருவரை மிசையது நெடுவெள் ளருவி" "புன்ரு ளோமைய சுரனிறந் தோரே" எனவும் "பெருவேட்கையேனெற்பிரிந்து" "கண்புரை காதலே மெம்முள்ளான்" எனவும் "உலங்கொடோளினையொருநின்ருல்" "வினைவேட்கையீர்வீரர்வம்மின்" எனவும் ஐம்பான்மூவிடத்துங் குறிப்புவினைமுற்றுக்கள் திரிந்து வினையெச்சக்குறிப்பும் பெயரெச்சக்குறிப்புமாயினவாறு காண்க. இவ்வாறு பெயர்ப்படாதனவே இங்ஙனந் திரிந்து வருவனவாமெனக் கொள்க. பிறவும் அன்ன.

முற்றுச்சொற் றிரிந்து எச்சமாமென்ளுது எச்சமே முற்ருய்த் திரியுமென்று ஓதிற் படும் இழுக்கு என்னையெனின், இருதிணை ஐம்பான் மூவிடத்திற்கும் பொதுவாகிய வினைநிகழ்ச்சியன்றே எச்சமாவன? அவை அவ்வாறன்றி முற்றுச்சொற்கு ஓதிய ஈற்றவாய் இருதிணையைம்பான்மூவிடமும் உணர்த்தலின் முற்றுச்சொல்லே எச்சமாய்த் திரிந்தன எனப்படும். எச்சம் முற்ருய்த்திரிந்தன எனப்படா. ஆதலான் அவ்வாறு ஓதினுரென்க. அவ்வாறன்றி வினைகோடன்மாத்திரத்தான் வினையெச்சமெனின் மாரீறும் வினையொடுமுடியும் வேற்றுமையும் பிறவும் வினையெச்சமாவான் செல்லுமாகலானும், அல்லதூஉங் "கண்ணியன்வில்லினன்" எனவரும் வினைக்

குறிப்பு முற்றாய்த்திரிதற்கு ஏற்பதோர் எச்சமின்மையானும் அஃது இலக்கணமன்றென்க. இஃது ஆசிரியர் தொல்காப்பியனார்க்குங் கருத்தாதல் சேனாவரையருரையான் உணர்க. இக்கருத்தேபற்றி யன்றே "எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்" என் புழி எண்பதத்தானென்பதனைப் பரிமேலழகரும் முற்றுவினையெச்ச மென்றதூஉமென்க. (உச)

இரண்டாவது வினையியல் முற்றிற்று.



## ௩-வது இடைச்சொல்லியல்.

உ௫க. வேற்றுமை வினைசா ரியையொப் புருபுக
டத்தம் பொருள் விசைநிறை யசைநிலை
யித்திற மேழிற் றனித்திய லின்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் னோரிடத்
தொன்றும் பலவும்வந் தொன்றுவ திடைச்சொல்.

என்பது சூத்திரம். நிறுத்தமுறையானே இடைச்சொல்லியல் உணர்த்துகின்றமையின் இவ்வோத்து இடைச்சொல்லியலென்னும் பெயர்த்து. இதனுள் இத்தலைச்சூத்திரம் அதன்பாகுபாடும் அதனி யல்புங் கூறுகின்றது.

இ - ள். செயப்படுபொருள் முதலாகிய வேற்றுமைப்பொருட் கண் உருபென்னுங் குறியவாய் வருவனவும், வினைப்பகுபதங்களைப் பிரித்து முடிக்குமிடத்துக் காலங் காட்டுங் கடதற முதலிய இடைநி லையுருபாயுந் திணையும் பாலும் இடமுங் காட்டும் அன் ஆன் முதலிய இறுதிநிலையுருபாயும் வரும் வினையுருபுகளும், இருமொழி தம்மிற் புணருமிடத்து அவற்றின் பொருணிலைக்கு உதவிசெய்து பெரும்பா லும் இன்னொலியே பயனாக வரும் அன் ஆன் முதலிய சாரியையுரு புகளும், ஒப்புமைப்பொருண்மையை உணர்த்திவரும் போல மான முதலிய உவமவுருபுகளுந், தமதுதமது குறிப்பினாலே பிரிநிலை முத லிய பொருளை உணர்த்திநிற்கும் ஏ ஓ முதலியனவும், வேறுபொருள் உணர்த்தாது செய்யுட்கண் இசைநிறைத்தலே பொருளாக வரும் ஏ ஓ முதலியனவுந், தமக்கோர் பொருளின்றித் தாஞ் சார்ந்த பெயர் வினைகளை அசையச்செய்யும் நிலைமையவாய் வரும் மியா இக முத லியனவுமாகிய இவ்வகையேழானே தனித்துநடத்தலின்றி "அது மன்" "அதுமற்றம்மதானே" எனவும் கொன்னூர் ஒஓஒஒ பெரியன்

எனவும் வருகதில் எனவும் வருகதில்லம்ம எனவும் ஓஒதந்தார் "ஏஎஎ யம்பன் மொழிந்தனள் யாயே" எனவும் பெயரின்கண் ணும் வினையின்கண்ணும் பின்னூனும் முன்னூனும் ஓரிடத்து ஒன் ருனும் பலவானும் வந்து பொருந்திநிற்பது மேல் நிறுத்திய இடைச் சொல்லாம். எ - று.

பின்னும் முன்னும் நிற்குமேனும் இடைநிற்றலும் இடைநிற் றல் பெரும்பான்மையென்பதூஉம் பெறுதற்கு இடைச்சொலென் ருர். தனித்தியலின்றியெனப் பொதுப்படக் கூறிய அதனற் சாரப் படுஞ் சொல்லின் வேருய் வருதலேயன்றி 'உண்டான்' என்றிசி ஞேர் அருங்குரைத்து என உறுப்பாய்வருதலுங் கொள்க. வருவ தென்றது வந்தொன்றுவதென்ற மிகையானே "உடனுயிர்போருக தில்ல" என ஈறுதிரிதலும் "மன்னைச்சொல்லே" "கொன்னைச்சொ ல்லே" எனத் தம்மையுணரநின்றவழியும் ஈறுதிரிதலும் "னகாரை முன்னர்" என எழுத்துச்சாரியை ஈறுதிரிதலுங் கொள்க.

இனி ஒன்றெனமுடித்தலான் வேற்றுமைப்பொருட்கண் உரு பென்னுங் குறியவாய் வருவனவேயன்றி வேற்றுமைப்பொருள வாய் வருவன பிறவுங்கொள்க. அவையாவன "கண்ணகன்ஞா லம்" "ஊர்க்கானிவந்தபொதும்பர்" என ஏழாவதன்பொருளவாய் வருங் கண் கால் முதலியவும் "அனையையாகன்மாறே" "சிறந் தோன்பெயரன்பிறந்தமாறே" "முறையுளிகோலோச்சுமன்னவன்" என மூன்ருவதன்பொருளவாய் வரும் மாறு உளி என்பவும் பிறவு மாம். "மந்திர விதியின் மரபுளி வழாஅ—வந்தணர் வேள்வி" என உளி ஐந்தாவதன் பொருட்டாயும் வரும். "கூருய்தோழியான்வா ழுமாறே" என்புழி வாழுமாற்றையென இரண்டாவதுவிரிதலின் அது மாறன்று, ஆறென்பது வாழுநெறியையென இரண்டாவது விரிந்துநின்றதாமென்க. இவ்வாறு வருவனவற்றைப் பகுதிப்பொ ருள்விகுதியென்பாரும் உளர்.

இன்னும் அதனனே வினையுருபென்ருரேனும் உண்டவன் உண்டவள் நம்பி நங்கை என வருந் தொழிற்பெயரும் பெயர்ப்பெய ரும் முதலியனவும் இவ்விடைச்சொற்பெற்று வருதல்கொள்க. சாரியை பொருணிலைக்கு உதவுதலாவது எல்லாவற்றையுமென்புழி அற்றுச்சாரியை நிலைமொழிப்பொருள் இருதிணைக்கும் பொதுவாயி னும் அஃறிணையென்பதுபட வருதலும் எல்லாநம்மையுமென்புழி நம்முச்சாரியை அப்பொருள் உயர்திணைத்தன்மைப்பன்மையென்ப துபட வருதலுமாம். ஒழிந்தனவுந் தாஞ் சார்ந்துவரும் மொழிப்பொ ருட்கு உபகாரமுடையவாமாறு ஓர்ந்து உணர்க.

இன்னும் அதனானே காரங் கரம் முதலிய எழுத்துச்சாரியை யுங் கொள்க.

இவ்விடைச்சொற்றிறம் ஏழனுள் முன்னையமூன்றும் முன்னர் உணர்த்தப்பட்டமையானும் உவமவுருபு மேல் உணர்த்தப்படுத லானும் ஒழிந்த மூன்றும் இவ்வோத்தினகத்து உணர்த்தப்படு மென்று உணர்க. குறிப்பென ஒன்று கூட்டித் திறம் எட்டென்பாரும் உளராலோவெனின், அது 'தத்தம்பொருள' என்பதனுள் அடங்குதல் "வினைபெயர்குறிப்பிசை"என்பதனாற் பெறப்படுதலின் மிகைபடக்கூறலென மறுக்க. (க)

உ௫உ. தேற்றம் வினாவெண் பிரிநிலை யெதிர்மறை
யீற்றசை யெனவா றேகா ரம்மே.

இது தத்தங் குறிப்புப்பொருள் செய்வனவற்றுள் ஏகாரம் பெரும்பான்மை பொருள்படுமாறுஞ் சிறுபான்மை அசையாமாறுங் கூறுகின்றது.

இ - ள். "உண்டேஎமறுமை" என வருந் தெளிவுபொருண்மையும் நீயேகொண்டாய் என வரும் வினாப்பொருண்மையும் நிலனேநீரேதீயேவளியே என வரும் எண்ணுப்பொருண்மையும் அவருள் இவனேகள்வன் என வரும் பிரிநிலைப்பொருண்மையும் யானே கொண்டேன் என வரும் எதிர்மறைப்பொருண்மையும் என்னும் ஐவகைப்பொருண்மைக்கண்ணுங் "கடல்போற் றோன்றல் காடிறந் தோரே" எனச் செய்யுளிறுதியின் அசைநிலையாதற்கண்ணும் வருவனவென அறுவகைப்படும் ஏகார இடைச்சொல். எ - று. (உ)

உ௫௩. ஒழியிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவுபிரிப் பசைநிலை யெனவெட் டோவே.

இதுவும் அது.

இ - ள். ஒழியிசைமுதலாகப் பிரிநிலையீறாகக் கிடந்த பொருணிலையும் அசைநிலையுமெனச் சொல்லப்பட்ட எட்டுவகையினையும் பற்றி நிகழும் ஓகார இடைச்சொல். எ - று.

உ-ம். கொளலோகொண்டான் என்பது கொண்டுய்யப்போகலாயினான் அல்லன் என்பது முதலிய ஒழியிசைநோக்கி நிற்றலின் ஒழியிசையோகாரம். சாத்தனுண்டானோ என்பது வினாவோகாரம். ஒஒபெரியன் என்பது பெருமைமிகுதியுணர்த்தலிற் சிறப்போகாரம்.

"ஓஒவுவமையுறழ்வின்றியொத்ததே" என்பதும் அது. யானேகொள்வேன் என்பது கொள்ளேனென்னும் எதிர்மறைகுறித்து நிற்றலின் எதிர்மறையோகாரம். "திருமகளோ வல்ல—ளரமகளோ வல்ல ளிவள்யார்" என்பது தெரிதற்கண்வருதலிற் தெரிநிலையோகாரம். "நைத லின்றி நல்லறஞ்செய் கின்றிலா ரோஒ தமக்கோ ருறுதி யுணராரோ" என்பது கழிந்ததற்கு இரங்கலிற் கழிவோகாரம். "நீங்கினளோவென்பூங்கணுளே" என்பதும் அது. "யானோதேறேனவர் பொய்வழங்கலரே" என்பது தேறுவார் பிறரிற் பிரித்தலிற் பிரிநிலையோகாரம். "சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ" என்பது பொருள்குறியாமையின் அசைநிலையோகாரம். "காணியவம்மினோ கங்குல துநிலையே" என்பதும் அது. (௩)

உ௫௪. தெளிவி னேவுஞ் சிறப்பி னோவு
மளபி னெடுத்த விசைய வென்ப.

இது முற்கூறிய ஏகாரத்துள் ஒன்றற்கும் ஓகாரத்துள் ஒன்றற்குஞ் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். தெளிவின்கண்வரும் ஏகாரமுஞ் சிறப்பின்கண்வரும் ஓகாரமும் அளவான் மிக்க இசையையுடைய என்று சொல்லுவர் ஆசிரியர். எ - று.

அளபெடையான் வந்தன மேற்காட்டப்பட்டவற்றுள்ளும் பிறவுங் கண்டுகொள்க. (௪)

உ௫௫. வினைபெயர் குறிப்பிசை பண்பெண் ணாறினு
மெனவெனு மொழிவரு மென்று மற்றே.

இஃது எனவும் என்றும் பொருள்படுமாறு கூறுகின்றது.

இ - ள். வினைப்பொருள் முதலிய ஆறுபொருண்மைக்கண்ணும் எனவென்னும் இடைச்சொல் வந்து இயையும்; என்றென்னும் இடைச்சொல்லும் அவ்வாறு பொருண்மைக்கண்ணும் எனவென்பதுபோல வந்து இயையும். எ - று.

உ-ம். "கார்வருமெனக்கருதிநொந்தாள்" என்பது வினைப்பொருண்மை. "மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்" என்பதும் அது. "அழுக்காறெனவொருபாவி" என்பது பெயர்ப்பொருண்மை. துண்ணெனத்துடித்ததுமனம் என்பது குறிப்புப்பொருண்மை. ஒல்லென ஒலித்தது என்பது இசைப்பொருண்மை. வெள்ளெனவெளுத்

தது என்பது பண்புப்பொருண்மை. நிலனென நீரெனத் தீயென வளியென வானெனப் பூதங்க ளைந்து என்பது எண்ணுப்பொருண் மை. "கடலெனக் காற்றெனக் கடுங்கட் கூற்றென—வுடல்சின வுருமென வூழித் தீயென" என்பதும் அது.

இனி என்று வருமாறு;—"நரைவருமென்றெண்ணி" எனவும் "பாரியென்றொருவனுளன்" எனவும் விண்ணென்றுவிணைத்தது எனவும் "ஒல்லென் றொலிக்கு மொலிப்புன லூரற்கு" எனவும் பச் சென்றுபசுத்தது எனவும் நிலனென்று நீரென்று தீயென்று வளி யென்று வானென்று பூதங்க ளைந்து எனவும் அவ்வாறும் வரும். ()

உருசு. எதிர்மறை சிறப்பெண் ணெச்சமுற் றையந் தெரிநிலை யாக்க மெனவெட் டும்மே.

இதுவும் அது.

இ - ள். எதிர்மறைப்பொருண்மை முதலாக ஆக்கப்பொருண் மை ஈறாகக் கிடந்த பொருள்வகை எட்டனையும் பற்றி நிகழும் உம் மையிடைச்சொல். எ - று.

உ-ம். சாத்தன்வருதற்குமுரியன் என்பது வாராமைக்கும், உரி யனென எதிர்மறையை ஒழிபாக உடைத்தாய் நிற்றலின் எதிர்மறை யும்மை. இஃது எச்சத்தின்பாற் படுமேனும் பிறிதோர்பொருளைத் தழுவாது ஒருபொருளின் வினையை மறுத்தலின் எதிர்மறையென அதனின் வேறாயிற்று. சிறப்பும்மை உயர்வுசிறப்பும் இழிவுசிறப்பு மென இருவகைத்து. "குறவருமருளுங்குன்றத்துப்படினே" என் பது குன்றத்து மயங்காது இயங்குதற்கட் குறவர் சிறந்தமையின் உயர்வுசிறப்பும்மை. இவ்வூர்ப்பூசையும் புலாறின்னாது என்பது புலால் தின்னும் இழிவின்கட் பூசை சிறந்தமையின் இழிவுசிறப் பும்மை. நிலனுநீருந்தீயும்வளியுமாகாயமுமெனப் பூதமைந்து என் பது எண்ணும்மை. எச்சவும்மை இறந்ததுதழீஇயதும் எதிரதுதழீஇ யதுமென இருவகைத்து. கொற்றனும்வந்தான் என்பது முன் சாத் தனும் வந்தானென்பதனைத் தழுவுதலின் இறந்ததுதழீஇயவெச்ச வும்மை. சாத்தனும்வந்தானென்பது பின் கொற்றனும் வந்தானென் பதனைத் தழுவிநிற்றலின் எதிரதுதழீஇயவெச்சவும்மை. இனி இவ்வி ரண்டனையும் எதிர்காலந்தழீஇயின ஆக்கி இன்றுசாத்தனும்வரும் நாளைக்கொற்றனும்வரும் என எதிரதுதழீஇயின என்றலுமாம். இன் னும் இவ்வெச்சந்தானே யான் கருவூர்க்குச்செல்வலென்றூர்க்கு யானும் அவ்வூர்க்குப் போதுவல் என முழுவதுந்தழுவுவதூஉம் அவ்

வாறு கூறினார்க்கு யானும் உறையூர்க்குப் போதுவல் என ஒருபு டைத்தழுவுவதூஉமென இருவகைத்தாம். தமிழ்நாட்டுமூவேந்த ரும்வந்தார் என்பது எஞ்சாப்பொருட்டாய் நிற்றலின் முற்றும்மை. "ஒன், றிரப்பான்போ லிழிவந்துஞ் சொல்லு முலகம்—புரப்பான் போல்வதோர் மதுகையு முடையன்—வல்லாரை வழிப்பட்டொன் றறிந்தான் போல—நல்லோர்கட் டோன்று மடக்கமு முடைய—னில்லோர் புன்க ணீகையிற் றணிக்க—வல்லான் போல்வதோர் வண்மையு முடைய—னன்றுமொருவன்" என்புழி இன்னனென் று துணியாமைக்கண் வருதலின் இவை ஐயவும்மை. "இருநில மடி தோய்தலிற் றிருமகளு மல்ல—ளரமகளு மல்ல ளிவள்யா ராகும்" என்பன ஆராய்தற்கண் வருதலிற் றெரிநிலையும்மை. திருமகளோ அரமகளோ என்னாது அவரைநீக்குதலின் ஐயவும்மையின் வேறு தல் அறிக. நெடியனும்வலியனுமாயினான் என்பன ஆக்கங்குறித்து நிற்றலின் ஆக்கவும்மை.

இஃது "அஃறிணை விரவுப்பெய ரியல்புமா ருளவே" எனப் பண்புபற்றியும் வரும். "செப்பே வழீஇயினும் வரைநிலை யின்றே" என்பதூஉம் வழுவை இலக்கணமாக்கிக்கோடல் குறித்தமையின் அதன்பாற்படும். (௯)

உ௫௭. முற்றும்மை யொரோவழி யெச்சமு மாகும்.

இஃது ஒருமை பிறிதோரும்மைப்பொருளுந் தருமென வழு வமைக்கின்றது.

இ-ள். முற்றும்மை தன்முடிபாகிய வினையைச் சார்ந்த தொ கை உணரநிற்கும் பெயரிடத்து எச்சவும்மைப்பொருட்டுமாம்.எ-று.

உ-ம். பத்துங்கொடால் அனைத்துங்கொடால் என்புழி முற் றும்மைப்பொருள் உணர்த்தாது சில எஞ்சக்கொடு என்னும் பொ ருள் உணர்த்திநின்றவாறு காண்க. தன்முடிபாகிய வினை கொடா லென்பது, அதனைச் சார்ந்த தொகை உணரநிற்கும் பெயர் பத்தும் அனைத்தும் என்பன. எச்சமுமாகுமெனவே, எச்சப்பொருண்மை குறியாதுநிற்றலே பெரும்பான்மையென்பதாம். ஏற்புழிக்கோட லான் எச்சப்படுவது எதிர்மறைவினைக்கண்ணென்று கொள்க. பத் துங்கொடு என்பது பிறவுங்கொடு என்பதுபட நிற்றலின் விதிவி னைக்கண்ணும் எச்சங்குறிக்குமென்பாரும் உளர். இப்பொழுது பத் துங்கொடு என்பது கருத்தாயின் இப்பொழுது பத்துக்கொடு என உம்மையின்றியும் பொருள்பெறப்படும். பத்துங்கொடு பிறவுங் கொடு என்பது கருத்தாயின் அஃது எச்சவும்மையாமாகலின் ஈண்

டைக்கு எய்தாதது. அதனான் அது பொருத்தமின்றென்க. எல்லாரும்வந்திலர் எல்லாம்வந்தில என்புழிச் சிலர்வந்தார் சிலவந்தன எனச் சிறுபான்மை எச்சங்குறித்து நிற்றலின் உம்மையிடைச்சொல்லேயன்றி எஞ்சாப்பொருளவாகிய பொருட்பெயர்களும் இவ்விதிபெறுதல் அதிகாரப்புறனடையாற் கொள்க. (எ)

உருஅ. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாகிற்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

இஃது எச்சவும்மைக்கட் சொல்லுதல்வகைமை கூறுகின்றது.

இ - ள். எச்சவும்மையாற் றழுவப்படும் எஞ்சுபொருட்கிளவி உம்மையில்சொல்லாயின் அவ்வும்மையில்சொல்லை அவ்வும்மைத் தொடர்க்குப் பின்சொல்லாது முன்சொல்லுக. எ - று.

வரலாறு;—சாத்தன்வந்தான் கொற்றனும்வந்தான் எனவரும். "அடகுபுலால் பாகு பாளிதமு முண்ணான்—கடல் போலுங் கல்வியன்" என்பதும் அது. கொற்றனும்வந்தான் சாத்தன்வந்தான் எனப் பிற்படக்கிளப்பின் முற்கூறியதனை விலக்குவதுபோன்று பொருள்கொள்ளாமை கண்டுகொள்க. உம்மையடாதே தானே நிற்றலிற் செஞ்சொலென்றார். செஞ்சொலாயின் முற்படக்கிளக்கவெனவே எஞ்சுபொருட்கிளவி உம்மையொடு வரிற் பிற்படக் கிளக்க என்றவாறும். (அ)

உருகூ. என்று வெனவொ டெண்ணுக்குறித் தியலும்.

இஃது என்றுமுதலிய இடைச்சொற்கள் இப்பொருண்மை குறித்து வரும் என்கின்றது.

இ - ள். என்றுவும் எனவும் ஒடுவுமாகிய மூன்றிடைச்சொல்லும் எண்ணுப்பொருண்மையைக் கருதிநடக்கும். எ - று.

நிலனென்று நீரென்று எனவும் நிலனென நீரென எனவும் நிலனொடு நீரொடு எனவும் வரும். (கூ)

உகூ0. பெயர்ச்செவ் வெண்ணே யென்று வெனவெண்
ணுன்குந் தொகைபெறு மும்மை யென்றெனவொ
டிந்நான் கெண்ணுமஃ தின்றியு மியலும்.

இஃது எண்ணிடைச்சொற்கட்கு எய்தியதோர் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். இடைச்சொல்லானன்றிப் பெயரான் எண்ணப்படுஞ் செவ்வெண்ணினிறுதியும் ஏகாரமும் என்றாவும் எனாவுமாகிய இடைச்சொற்களான் எண்ணப்படுஞ் சொற்கள் இறுதியுமாகிய நான்கு இறுதியுந் தொகைபெற்றே நடக்கும். உம்மும் என்றும் எனவும் ஒடுவுமாகிய இடைச்சொற்களான் எண்ணப்படும் இந்நான்கு சொற்களின் இறுதியுந் தொகைபெற்றும் பெறாதும் நடக்கும். எ - று.

உ-ம். நிலநீரிரண்டும் எனவும் நிலனேநீரேயிரண்டும் எனவும் நிலனென்றாநீரென்றாவிரண்டும் எனவும் நிலனெனாநீரெனாவிரண்டும் எனவும் இவைநான்குந் தொகைபெற்றன. "உயர்திணைக் குரிமையு மஃறிணைக் குரிமையு—மாயிரு திணைக்குமோ ரன்ன வுரிமையு—மம்மூ வுருபின தோன்ற லாறே" எனவும் "இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றி" எனவும் நிலனென்றுநீரென்றுதீயென்றுவளியென்றுநான்கும் எனவும் "உடலென் றுயிரென் றின்றியமையா" எனவும் நிலனெனநீரெனத்தீயெனவளியெனநான்கும் எனவும் உடலெனவுயிரெனவின்றியமையா எனவும் நிலனொடுநீரொடுதீயொடுவளியொடுநான்கும் எனவும் நிலனொடுநீரொடுதீயொடுவளியொடுபொருந்தி எனவும் இவை நான்குந் தொகைபெற்றும் பெறாதும் வந்தன. தொகையெனப் பொதுப்படக் கூறிய அதனானே எண்ணுப்பெயரேயன்றி அனைத்தும் எல்லாம் என்னுந் தொடக்கத்தனவுங் கொள்க. செவ்வெண்ணிடைச்சொலன்றாயினும் எண்ணுதலுந் தொகைபெறுதலுமாகிய ஒப்புமையான் ஈண்டுக் கூறினார். அஃது எண்ணுதல் புறனடையாற் கொள்க. "குன்றி கோபங் கொடிவிடு பவள—மொண்செங் காந்த ளொக்கு நின்னிறம்" எனச் செவ்வெண்டொகை பெறாதும் வருமாலோவெனின், அது தொகுக்கும்வழித் தொகுத்தலாற் றொக்குநின்றதென்க. பிறவும் அன்ன. ()

உகூக. என்று மெனவு மொடுவுந் தோன்றி
யொன்றுவழி யுடைய வெண்ணினுட் பிரிந்தே.

இஃது எண்ணிடைச்சொல்லுட் சிலவற்றிற்கு ஆவதோர் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். என்றும் எனவும் ஒடுவும் என்பன ஒருவழித் தோன்றி எண்ணினுட் பிறவழியும் பிரிந்துசென்று ஒன்றும் இடமுடைய. எ - று.

உ-ம். "வினைபகை யென்றிரண்டி னெச்சம்" எனவும் "கண்ணிமைநொடியென" எனவும் "பொருள்கருவி காலம் வினையி

டனு டைந்தும்" எனவும் அவை ஒருவழிநின்று வினையென்று எனவும் கண்ணிமையென எனவும் பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு எனவும் நின்ற இடத்துப் பிரிந்து பிறவழிச்சென்று ஒன்றியவாறு காண்க. ஒன்றுவழியுடைய என்றதனாற் சொற்றொறும் நிற்றலே பெரும்பான்மையென்பதாம். சொற்றொறும் நின்ற எண் இக்காலத்து அரிய. (௧௧)

௨௬௨. வினையொடு வரினுமெண் ணினைய வேற்பன.

இஃது எண்ணிடைச்சொற்கள் வினைச்சொற்கண்ணும் வருமென்கின்றது.

இ - ள். வினையொடுவந்து நிற்பினும் எண்ணிடைச்சொற்கள் முற்கூறிய இயல்பினவாய்த் தொகைபெற்றும் பெறாதும் வருவனவாம் பொருந்துவன. எ - று.

உ-ம். உண்டுந்தின்றும்பாடியும்வந்தான் எனவும் உண்ணவெனத்தின்னவெனப்பாடவெனவந்தான் எனவும் "மண்டில மழுங்க மலைநிறங் கிளர—வண்டினம் மலர்பரந் தூத மிசைய—கண்டற் கானங் குருகின மொலிப்ப" எனவும் வரும். பிறவும் வினையொடு வருவனவுளவேற் காண்க.

உம்மையாற் பெயரொடுவருதலே பெரும்பான்மையென்பதாம். ஏற்பன என்றதனானே முற்றும்பெயரெச்சமும்பற்றி வாரா எனவும் வினையெச்சத்தோடும் ஏற்பனவற்றோடல்லது வாரா எனவும் ஆண்டுத் தொகைபெறுதல் சிறுபான்மையெனவுங்கொள்க. சாத்தன்வந்தான் கொற்றன்வந்தான் வேடன்வந்தான் மூவரும்வந்தமையாற் கலியாணம் பொலிந்ததெனச் செவ்வெண் தொகைபெற்று வந்ததாலெனின், அவை எழுவாயும் பயனிலையுமாய் அமைந்து மாறுதலின் எண்ணப்படாமையானும் மூவருமென்பது சாத்தன்முதலாயினோர் தொகையாகலானும் அவைபொருந்தாவென்க. (௧௨)

௨௬௩. கழிவே யாக்க மொழியிசை யசைநிலை
யெனநான் கென்ப மன்னைச் சொல்லே.

இது மன்னென்னும் இடைச்சொற் பெரும்பான்மை பொருள் படுமாறுஞ் சிறுபான்மை அசைநிலையாமாறுங் கூறுகின்றது.

இ - ள். கழிவுகுறித்து நிற்பதும் ஆக்கங்குறித்து நிற்பதும் ஒழியிசைப்பொருண்மைகுறித்து நிற்பதும் அசைநிலையாய் நிதுபற்

மென நான்குவகையினையுடைத்தென்று சொல்லுவர் ஆசிரியர் மன்னென்னும் இடைச்சொல்லை. எ - று.

உ-ம். "சிறியகட்பெறினேயெமக்கீயுமன்னே" என்புழி மன் இனி அது கழிந்ததென்னும் பொருள்குறித்து நின்றது. "பண்டுகாடுமன்" என்புழி மன் இன்று கயல்பிறழும் வயலாயிற்று என ஆக்கங்குறித்து நின்றது. "கூரியதோர்வாண்மன்" என்புழி மன் திட்பமின்றாயினுமென எச்சமாய் ஒழிந்த சொற்பொருண்மைகுறித்து நின்றது. "அதுமற்கொண்கன்றேரே" என்புழி மன் அசைநிலையாய் நின்றது. "மன்னுமாதர் பெருங்கற்பென் றறிந்தேன்வாழி காவேரி" என மிகுதிகுறித்தும் "மன்னு வுலகத்து மன்னியது புரிமே" என நிலைபேறு குறித்தும் வருமென்பாரும் உளராலோவெனின் அவை வினைச்சொல்லாய் நிற்றலின் ஈண்டைக்கு எய்தாவென்க. (கங)

உ௬௪. விழைவே கால மொழியிசை தில்லே.

இது தில்லென்னும் இடைச்சொற் பொருள்படுமாறு கூறுகின்றது.

இ - ள். விழைவுகுறித்து நிற்பதுங் காலங்குறித்து நிற்பதும் ஆண்டு ஒழிந்துநின்ற சொற்பொருள் குறித்து நிற்பதுமென மூன்று வகையினையுடைத்துத் தில்லென்னும் இடைச்சொல். எ - று.

உ-ம். "வார்ந்தி லங்கும் வையெயிற்றுச் சின்மொழி—யரிவையைப் பெறுகதில் லம்ம யானே" என்புழிப் பெறுதற்கண் உளதாகிய விருப்பங் குறித்து நின்றது. "பெற்றாங்கறிகதில்லம்மவிவ்வூரே" என்புழிப் பெற்றகாலத்து அறிகவெனக் காலங்குறித்து நின்றது. "வருகதில்லம்மவெஞ்சேரிசேர" என்புழி வந்தக்கால் அது செய்வலென்னும் ஒழியிசைப்பொருள் குறித்துநின்றது. இடம் வரையறுத்தோதாமையின் மூன்றிடத்தும் வருதல் எய்திற்றேனும் ஏற்புழிக்கோடலான் விழைவின்கண் வருவழித் தன்மைக்கண்ணல்லது வாராதெனக்கொள்க. என்னை? "விழைவின் றில்லைதன்னிடத்தியலும்" என்பவாகலின். (கச)

உ௬௫. அச்சம் பயமிலி காலம் பெருமையென்
றப்பா லான்கே கொன்னைச் சொல்லே.

இது கொன்னென்னும் இடைச்சொற் பொருள்படுமாறு கூறுகின்றது.

இ - ள். அச்சப்பொருள் குறிப்பதும் பயமின்மைப்பொருள் குறிப்பதுங் காலப்பொருள் குறிப்பதும் பெருமைப்பொருள் குறிப்பதுமென்று கூறப்பட்ட அக்கூற்று நான்கேயாங் கொன்னென்னும் இடைச்சொல். எ - று.

உ-ம். "கொன்முனை யிரவூர் போலச்—சிலவா குகநீ துஞ்சுநா ளே" என்புழி அஞ்சிவாழும் ஊரென அச்சமுங் "கொன்னேகழிந் தன்றிளமையும்" என்புழிப் பயமின்றிக் கழிந்ததெனவுங் "கொன் வரல்வாடை" என்புழிக் காதலர் நீங்கியகாலம் அறிந்து வருதலையு டைய வாடையெனக் காலமுங் "கொன்னூர் துஞ்சினும் யாந் துஞ் சலமே" என்புழிப் பேரூர் துஞ்சினுமெனப் பெருமையுங் குறித்துநின்றவாறு காண்க. (கரு)

உசுசு. மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை.

இது மற்றென்பது பொருள்படுமாறும் அசைநிலையாமாறுங் கூறுகின்றது.

இ - ள். மற்றென்னும் இடைச்சொல் முன்சொல்கின்றது ஒழிய இனி அது வேறென்னும் பொருண்மைகுறித்தலும் அசைநிலையாதலும் உடைத்து. எ - று.

உ-ம். "இனிமற்றொன்றுரை" எனத் தொழிலும் "மற்றறிவா நல்வினை யாமிளையம்" எனக் காலமும் "மற்றுங் கூடு மனைமடி துயி லே" என இடமும் பற்றி வரும். "அதுமற்றவலங்கொள்ளாது" என்பது அசைநிலை.கட்டுரையிடையும் மற்றோ என அசைநிலையாய் வரும். "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று—சூழினுந் தான் முந் துறும்" என்புழிப் பிறிதென்னும் பொருள்பற்றி வந்ததென்பா ரும் உளராலோவெனின், வினைமாற்றோடு இதனிடைவேற்றுமை யின்மையிற் பொருந்தாதென மறுக்க. (கசு)

உசுஎ. எற்றென் கிளவி யிறந்த பொருட்டே.

இஃது எற்றென்னும் இடைச்சொல் பொருள்படுமாறு கூறு கின்றது.

இ - ள். எற்றென்னும் இடைச்சொல் ஒன்றனிடத்துநின்றும் ஒன்றுபோயிற்றென்னும் பொருளை உணர்த்துதலை உடைத்து. எ-று.

உ-ம். "எற்றெனுடம்பினெழினலம்" என்புழி என் நலம் இழந் ததென்கின்றது. "எற்றேற்ற மில்லாருள் யானேற்ற மில்லாதேன்"

என்பதூஉம் இதுபொழுது துணிவில்லாருட் துணிவில்லாதேன் யானென்று துணிவிறந்ததென்பது பட நின்றது. (௧௭)

உ௬அ. மற்றைய தென்பது சுட்டிய தற்கினம்.

இது மற்றையதென்பது பொருள்படுமாறு கூறுகின்றது.

இ - ள். மற்றையதென்னும் பெயர்க்கு முதனிலையாய் வரும் மற்றையென்னும் ஐகார ஈற்றிடைச்சொல் ஒருவன் முன்னர்க் கருதப்பட்ட பொருளொழிய அதன் இனப்பொருளைக் குறித்து நிற்கும். எ - று.

வரலாறு;—ஆடைகொணர்ந்தவழி அவ்வாடை வேண்டாதான் மற்றையதுகொணு என்னும். அஃது அச்சுட்டிய ஆடையொழித்து அதற்கு இனமாகிய பிற ஆடைகுறித்து நின்றவாறு காண்க. பெரும்பான்மையும் முதனிலையாய் நின்றல்லது அவ்விடைச்சொற் பொருள்விளக்காமையின், மற்றையதென்பது என்றார். சிறுபான்மை மற்றையாடையெனத் தானேயும் வரும். அஃது அவன் என்னுந் தொடக்கத்தனவும் இடைச்சொன் முதனிலையாய பெயர்.(௧அ)

உ௬௯. கொல்லே யைய மசைநிலைக் கூற்றே.

இது கொல்லென்பது பொருள்படுமாறும் அசைநிலையாமாறுங் கூறுகின்றது.

இ - ள். கொல்லென்னும் இடைச்சொல் ஐயப்பொருண்மை குறித்துநிற்றலும் அசைநிலையாதலும் என்னும் இருபகுதித்தாம். எ - று.

உ-ம். குற்றிகொல்லோ மகன்கொல்லோ என்புழி ஒன்றுந் துணியாமையின் ஐயத்துக்கண் வந்தது. "பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்—வருவர்கொல் வயங்கிழாய்" என்புழி அசைநிலையாய் வந்தது. (௧௯)

உ௭0. மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்.

இது மன்றவென்பது பொருள்படுமாறு கூறுகின்றது.

இ - ள். மன்றவென்னும் இடைச்சொல் தெளிவுபொருண்மையை உணர்த்தும். எ - று.

உ-ம். "கடவு ளாயினு மாக—மடவை மன்ற வாழிய முருகே" எனவரும். மடவையேயென்றவாறும். (உ0)

உ௭௧. தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே.

இதுவும் அது.

இ - ள். தஞ்சமென்னும் இடைச்சொல் எளிமைப்பொருண்மையை உடைத்து. எ - று.

உ-ம். "முரசுகெழுதாயத்தரசேதஞ்சம்" என்புழி அரசுகொடுத்தல் எளிதென எளிமைப்பொருள் உணர்த்தியவாறு காண்க. ()

உ௭உ. ஒடுவுந் தெய்யவு மிசைநிறை மொழியே.

இஃது இசைநிறையாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒடுவென்பதுந் தெய்யவென்பதும் இசைநிறையிடைச்சொல்லாம். எ - று.

உ-ம். "முதைப்புனங் கொன்ற வார்கலி யுழவர்—விதைக்குறுவட்டி போதொடு பொதுள" எனவும் "சொல்லேன் றெய்ய நின்னொடு பெயர்ந்தே" எனவும் வரும். (உஉ)

உ௭௩. அந்தி லாங்க வசைநிலை யவற்று
ளந்தி லிடப்பொருட் டாகலு முரித்தே.

இஃது அசைநிலையாமாறும் பொருள்படுமாறுங் கூறுகின்றது.

இ - ள். அந்திலும் ஆங்கவுமாகிய இரண்டு இடைச்சொல்லும் அசைநிலையாம். அவற்றுள் அந்தில் இடப்பொருளைக் குறித்து நிற்றற்கும் உரித்து. எ - று.

உ-ம். "அந்திற்கழலினன்கச்சினன்" "ஆங்கக்குயிலு மயிலுங்காட்டிக்—கேசவனைவிடுத்துப் போக்கியோளே" எனவும் "வருமே—சேயிழையந்திற் கொழுநற்காணிய" எனவும் வரும். அசைநிலையெனவும் இடமெனவும் பொதுப்படக் கூறினரேனும் ஏற்புழிக் கோடலான் ஆங்க அசைநிலையாதல் கட்டுரைக்கண்ணெனவும் அந்தில் ஆங்கென்னும் இடப்பொருள் குறித்து வருமெனவுங் கொள்க.

உ௭௪. அம்மகேட் பித்தலு மசைநிலையு மாகும்.

இதுவும் அது.

இ - ள். அம்மவென்னும் இடைச்சொல் ஒருவனை ஒருவன் ஒன்று கேளென்று கேட்பித்தற்கண் வருதலும் அசைநிலையாய் வருதலும் பொருந்தும். எ - று.

உ-ம். "அம்மவாழிதோழி" எனவும் "செயநின்ற பண்ணினுட் செவிசுவை கொள்ளாமை—நயநின்ற பொருள் கெடப் புரியறு நரம்பினும்—பயனின்று மன்றம்ம காமம்" எனவும் வரும்.

மியாய் இக முதலாய அசைநிலைகள் ஒருபொருள் உணர்த்தா வாயினும் முன்னிலைக்கண்ணல்லது வாராமையின் அவ்விடம் உணர் விக்குமாறுபோல அம்மவென்பதூஉம் ஒருபொருள் உணர்த்தாதா யினும் ஒன்றனைக் கேட்பிக்குமிடத்தல்லது வாராமையான் அப்பொ ருள் உணர்விக்குமென்பது விளக்கிய கேட்பித்தலென்றார். (உசு)

## உஎரு. மாவென் கிளவி வியங்கோ ளசைச்சொல்.

இஃது அசைநிலையாமாறு கூறுகின்றது.

இ - ள். மாவென்னும் இடைச்சொல் வியங்கோளைச் சார்ந்து அசைநிலையாய் வரும். எ - று.

உ-ம். "புற்கை யுண்கமா கொற்கை யோனே" என வரும். சிறுபான்மை "ஓர்கமா தோழியவர் தேர்மணிக் குரலே" என முன் னிலையசைச்சொல்லாயும் "ஒக்கல்வாழ்க்கைதட்குமாகாலே" என முன்னிலையன்றி அசைச்சொல்லாயும் வருதல் "அவ்வச்சொல் லிற்கு" என்னும் பொருட்புறனடையாற் கொள்க. (உரு)

## உஎசு. மியாயிக மோமதி யத்தை யித்தை
## வாழிய மாள வியாழமுன் னிலையசை.

இது முன்னிலை அசைநிலையாமாறு கூறுகின்றது.

இ - ள். மியா முதலிய பத்திடைச்சொல்லும் முன்னிலைமொ ழியைச் சார்ந்துவரும் அசைச்சொல்லாம். எ - று.

உ - ம். கேண்மியா "சிலையன் செழுந்தழையன் சென்மியா வென்று—மலையகலான் வாடி வரும்" என மியாவுங் "கண்பனி யாற்றிக வென்றி தோழி" என இகவுங் "காமஞ் செப்பாது கண் டது மொழிமோ" என மோவும் "உரைமதி வாழியோ வலவ" "சென்மதி பெருமநிற் றகைக்குநர் யாரே" என மதியுஞ் "செலிய ரத்தைநின்வெகுளி" என அத்தையும் "வேய்நரல் விடரக நீயொன் று பாடித்தை" என இத்தையுங் "காணிய வாழிய மலைச்சாரல்" என வாழியவுஞ் "சிறிது தவிர்ந்தீக மாளநின் பரிசில ருய்ம்மார்" என மாளவுஞ் "செழுந்தே ரோட்டியும் வென்றீ" என ஈகாரமும் "நீயே, செய்வினை மருங்கிற் செலவயர்ந் தியாழநின்—கைபுனை

வல்வி னூர் தியே" என யாழவும் முன்னிலையசைநிலையாய் வந்தவாறு காண்க. (உ௬௬)

உஎஎ. யாகா பிறபிறக் கரோபோ மாதிகுஞ்
சின்குரை யோரும் போலு மிருந்திட்
டன்றுந் தாந்தா னென்னு லென்ப
வன்ன பிறவு மசைநிலை மொழியே.

இஃது அசைநிலையாமாறு கூறுகின்றது.

இ - ள். யா முதலிய இருபத்தோர் இடைச்சொல்லும் அவைபோல்வன பிறவுந் தாஞ் சார்ந்த சொல்லை அசைத்துநிற்குஞ் சொல்லாம். எ - று.

உ-ம். "யாபன்னிருவர்மாணுக்கரகத்தியனுர்க்கு" என யாவும் "அறநிழ லெனக் கொண்டாய் நின்குடை யக்குடைப்—புறநிழற் பட்டாளோ விவளிவட் காண்டிகா" எனக் காவும் "யாஞ்சில வரிசை வேண்டினே மாகத்—தான்பிற வரிசை யறிதலிற் றன்னுந்தூக்கி" எனப் பிறவும் "நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய" எனப் பிறக்கும் "நோதக விருங்குயி லாலுமரோ" என அரோவும் "எரியினன்ன செந்தலை யன்றில்—பிரியின் வாழா தென்போ தெய்ய" எனப் போவும் "விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சே" என மாதுங் "கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே" என இகுமுங் "கண்ணும் படுமோ வென்றிசின் யானே" எனச் சின்னும் "பல்குரைத் துன்பங்கள் சென்று படும்" எனக் குரையும் "அஞ்சுவ தோரு மறனே யொருவனை—வஞ்சிப்ப தோரு மவா" என ஓரும் "மங்கல மென்பதோ ரூருண்டு போலும்" எனப் போலும் "ஓராற்று லென்கண் ணிமைபொருந்த வந்நிலையே—கூரார்வேன் மாறனெங் கைப்பற்ற—வோரா—நனவென் றெழுந்திருந்தே னல்வினையொன் றில்லேன்—கனவுமிழந் திருந்த வாறு" என இருந்தும் "நெஞ்சம் பிளந்திட்டு நேரார் நடுவட்டன்—வஞ்சினம் வாய்த்தானும் போன்ம்" என இட்டுந் "தேவாதி தேவ னவன்சேவடி சேர்து மன்றே" என அன்றும் "பணியுமா மென்றும் பெருமை சிறுமை—யணியுமாந் தன்னை வியந்து" என ஆமுந் "தகைமிகு குழைதந்தார் தாவில்சீர்த் தம்மடிகண்—முகைமிகு மலர்க்கண்ணி" எனத் தம்முஞ் "சாந்துய ரெவ்வ முழந்துறு தண்புன—னீந்தியோர் மாண்பினி தொன்றலி னீதான்" எனத் தானும் "அறிவார் யாரஃ திறுவுழி யிறுகென" என எனவும் "ஈங்காயினவா லென்றிசின்

யானே" என ஆனுங் "குரைபுனற் கன்னி கொண்டிழிந்த தென் பவே" என என்பவும் அசைநிலையாய் வந்தவாறு காண்க.

இனிப் பிறவும் என்றதனானே "தண்ணென்றிசினே" "பெருந்துறைப் புனலேகா தன்னமா நீமற்றிசினே" என இசினுங் "தேனைமாரியன்னான்" "ஊனையுண்டருகும்" என ஐகாரமும் "நெருப்பழற் சேர்ந்தக்கா னேயம் போல்வதூஉ—மெரிப்பச்சுட் டெவ்வநோயாக்கும்" எனப் போல்வதுஞ் சிறுபான்மை அசைநிலையாதலும், ஒருவன் யானின்னேனென்றானும் நீயின்னையென்றானும் அவனின்னனென்றானுங் கூறியவழிக் கேட்டான் ஆக ஆக ஆகல் ஆகல் என்னும் இவை உடம்படாமைக்கண்ணும் ஆதரமில்வழியும், ஒருவன் ஒன்று உரைப்பக்கேட்டான் என்பது என்பது என்னும் அது நன்குரைத்தற்கண்ணும் பிறண்டுந் தனித்துநில்லாது இரட்டித்துப் பிரிவிலசைநிலையாதலுங் கொள்க. இன்னும் அதனானே போலும் போல்வதென்பன உரையசைக்கண்ண எனவுங் கொள்க. (உஎ)

உஎஅ. அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென
மெய்பெறக் கிளந்த வியல வாயினும்
வினையினும் பெயரினு நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினுந் தெரிந்தனர் கொளலே.

இது முன்னர்க் கூறியவற்றிற்குப் பொருள்பற்றி வருவதோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். மேற்கூறப்பட்ட இடைச்சொற்கள் "அவ்வச் சொல்லிற் கவையவை பொருள்" என நிலைபெறச் சொல்லப்பட்ட இயல்பையுடையனவாயினும் வினையொடும் பெயரொடும் ஆராய்ந்து உணரத் தோன்றி வேறுபொருளவாயும் அசைநிலையாயும் இசைநிறையாயுந் திரிந்துவரினும் ஆராய்ந்துகொள்க. எ - று.

எனவே, கூறியமுறையாய் வருதலே பெரும்பான்மையென்றும் வேறுபட வருதல் சிறுபான்மையென்றுஞ் சொல்லியவாறாம். வினையொடும் பெயரொடுமென்றது அவை வேறுபொருள என்று உணர்தற்குச் சார்புகூறியவாறு. ஏகார இடைச்சொல் "ஏஎயிவளொருத்தி பேடியோ வென்றார்" என இழிபுபொருண்மைக்கண் வருதலும் "ஏஎஇஃ தொத்த னாணிலன் றன்னொடு" என இசைநிறையாதலும் "ஏஎயென்சொல்லியது" என அசைநிலையாதலும் "வாடா வள்ளியங் காடிறந் தோரே" எனச் செய்யுளீற்றின்கண்ணேயன்றி ஈற்றசை செய்யுளிடையும் வருதலுங் "கடல்போ றோன்

றல் காடிறந்தோரே" எனச் செய்யுளிடத்து ஈற்றினின்று இசைக்கும் ஏயெனிறுதி கூற்றுவயின் ஓர் அளபாதலும் ஓகார இடைச்சொல் குற்றியோமகனோ என ஐயப்பொருண்மைக்கண்ணுங் "கலக்கொண்டன் கள்ளென்கோ காழ்கொற்றன் சூடேன்கோ" என எண்ணுதற்கண்ணும் என்வென்பது "ஊரெனப்படுவது றையூர்" எனச் சிறப்பின்கண்ணும் வருதலுந் தஞ்சக்கிளவி அவர்நமக்குத் தஞ்சமல்லர் எனப் பற்றல்லரென வருதலுங் குரையென்னும் இடைச்சொல் அசைநிலையாதலேயன்றி "அளிதோ தானேயதுபெறலருங் குரைத்தே" என இசைநிறையாதலும் இன் சாரியையாதலேயன்றிக் "காப்பி னொப்பி னூர்தியி னிழையின்" என அசைநிலையாதலும் இவ்வாறு பிறவாற்றாற் திரிந்து வருவனவுளவேல் அவையும் ஈண்டே அமைத்துக்கொள்க.

"ஏ எயிவ ளொருத்தி பேடியோ வென்றார்" என்பதனை இசைநிறையென்பாரும் உளர். பொருள் உணர்த்திநிற்றலின் அங்ஙனமாகாமை அறிக.

செய்யுளின்பநோக்கி வினையினும் பெயரினுமென்றார். (உ௮)

உ௭௬. கிளந்த வல்ல வன்ன பிறவுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே.

இது சொற்பற்றி வருவதோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்டனவன்றி அவைபோல்வன பிறவரினும் அவற்றையுங் கிளந்த சொல்லின் இயல்பான் உணர்ந்து கொள்க. எ - று.

கிளந்தவற்றையும் இன்னவென்று அறிவது வழக்கினுட் சார்பும் இடமுங் குறிப்பும் பற்றியன்றே? அதனாற் கிளவாதவற்றையும் அவ்வாறு சார்பும் இடமுங் குறிப்பும்பற்றி இஃது அசைநிலை இஃது இசைநிறை இது குறிப்பால் இன்னபொருள் உணர்த்துமென்று ஆணையானன்றி உணர்ந்துகொள்க என்பார் 'கிளந்தவற்றியலானுணர்ந்தனர்கொளலே' என்றார்.

"குன்றுதொ றாடலு நின்றதன் பண்பே" எனத் தொறுத் தான் சார்ந்த மொழிப்பொருட்குப் பன்மையும் இடமும் உணர்த்தி நிற்றலும் அதுதான் "நாடோறு நாடி முறைசெய்யா மன்னவ—னாடோறு நாடு கெடும்" என நீண்டுநிற்றலும் ஆவென்பது வியப்புள்வழியும் மறுத்தலுள்வழியும் ஆ அம்மா அம்மா என இரக்கமுள்வழி

யும் பொருள் உணர்த்தலும் பொள்ளெனப் பொம்மெனக் கதுமென என்பனபோல்வன விரைவுங் ஞொம்மென என்பது பெருக்கமென்னுங் குறிப்பும் முறையே உணர்த்தலும் "ஔஔ வொருவன் றவஞ்செய்த வாறு" என்றவழியும் ஒருதொழில் செய்வானை ஔஔ இனிச்சாலும் என்றவழியும் ஔகாரம் பிரிவிலசைநிலையாய்ச் சொல்லுவான் குறிப்பிற்குத் தகும் ஓசைவேறுபாட்டான் முறையே சிறப்பும் மாறுபாடும் புலப்படுத்தலும் ஔஉ ஒருவன் இரவலர்க்கீந்தவாறு ஔஉ இனிவெகுளல் எனவும் ஔ அவன்முயலுமாறு ஔ இனித்தட்டுப்புடையல் எனவும் முறையே அதுதான் அளபெடுத்தலும் அளபெடாதும் வந்தவழியுஞ் சிறப்பும் மாறுபாடும் புலப்படுத்தலும் இனி ஓகாரமும் ஓஒ ஒருவன்றவஞ்செய்தவாறு ஓஒ இனிச்சாலும் ஓஒ ஒருவன் இரவலர்க்கீந்தவாறு ஓஒ இனிவெகுளல் எனவும் ஓ அவன்முயலுமாறு ஓ இனித்தட்டுப்புடையல் எனவும் முறையே பிரிவிலசைநிலையாயும் அளபெடுத்தும் அளபெடாதும் வந்தவழியும் அங்ஙனம் பொருட்புலப்படுத்தலும் அவை பிற பொருள்படுமாறும் ஒருவன் ஒன்று உரைத்தவழி நன்றே நன்றே அன்றே அன்றே என அடுக்கி அதற்கு ஒவ்வாமைக்குறிப்பு உணர்த்தலும் அன்றே என்பது அடுக்காது அவனன்றேயென நின்றவழித் தெளிவுமுதலாகிய பிறபொருளும்படுதலும் அந்தோ அன்னோ என்பன அடுக்கியும் அடுக்காதும் இரங்கற்குறிப்பு உணர்த்தலும் அதோ அதோ அச்சோ அச்சோ ஒக்கும் ஒக்கும் என்பன இரங்கற் குறிப்பு உணர்த்தலும் "அன்னுவலமருமாருயிரும்" என அன்னு இரங்கற்குறிப்பு உணர்த்தலும் "அஆவிழந்தானென்றெண்ணப்படும்" என்பதூஉம் அப்பொருள்படுதலும் மேல் எழுத்தோத்தினுட் கூறிய அக்கொற்றன் அவன் முதலியவும் ஆங்கு ஈங்கு என அவை நீண்டுவந்தனவும் யாவன் எப்பொருள் உண்கா எவன் என்பனவும் முறையே சுட்டுப்பொருளும் வினப்பொருளும் உணர்த்திநிற்றலும் ஆன் ஏன் ஓன் இத்தொடக்கத்து எழுத்துச்சாரியையும் எடுத்தோதாதன பிறவுங் கொள்க.

இனி ஆரென்னும் இடைச்சொல் "பெயரி னாகிய தொகையுமா ருளவே" என உம்மைமுன்னரும் "எல்லா வுயிரொடுஞ் செல்லுமார் முதலே" என உம்மீற்றுவினைமுன்னரும் அசைநிலையாய் வருதலும் "மலைநிலம் பூவே துலாக்கோலென் றின்னர்" எனவும் "தோற்ற மிசையே நாற்றஞ் சுவையே—யுறலோ டாங்கைம் புலனென மொழிப" எனவும் சொற்றொறும் வாராது எண்ணேகாரம் இடையிட்டுவரினும் எண்ணுதற்பொருட்டாதலுஞ் சாத்தனும்வந்தான் கொற்றன் இனிவரலும் உரியன் என எச்சவும்மை நின்றவழி எஞ்சுபொருட்கிளவியாம் எதிர்மறையும்மைத்தொடர் வந்து தம்முள்

மயங்குதலில எனவும் "பாட்டுங் கோட்டியு மறியாப் பயமி—றேக்கு மரம்போ னீடிய வொருவன்" எனவும் "இசையினுங் குறிப்பினும் பண்பினுந் தோன்றி" எனவும் உம்மை எண்ணின்கண் இரண்டாவதும் ஏழாவதுந் தொகுமெனவுந் தொகுதல் வரையப்படாதெனவும் ஏனையெண்ணின்கண் வரையப்படுமெனவுங் கொள்க. இவ்வாறு பிற வருவன உளவேல் அவையும் இப்புறனடையானே அமைத்துக்கொள்க. (உகூ)

மூன்றாவது இடைச்சொல்லியல் முற்றிற்று.



## ச-வது. உரிச்சொல்லியல்.

உஅ0. குறிப்பும் பண்பு மிசையுந் தோற்றிப்
பெயரும் வினையும் போன்றவை யிரண்டற்கு
மடியு மாகி யவற்றேற் புழிநின்
றொருபொருட் குரிமையும் பலபொருட் குரிமையு
முடைய வாகி யுணரா தவற்றை
யுணர்ந்தவை சார்த்தி யுணர்வன வுரிச்சொல்.

என்பது சூத்திரம். நிறுத்தமுறையானே உரிச்சொற்களது இயல்பு உணர்த்திற்றாகலான் இவ்வோத்து உரிச்சொல்லியலென்னும் பெயர்த்து. இதனுள் இத்தலைச்சூத்திரம் உரிச்சொற்கெல்லாம் பொது இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். குறிப்பும் பண்பும் இசையுமாகிய மூன்றுபொருண்மையும் உணர்த்திப் பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லும்போலத் தம்மைக் காட்டி அவ்விருகூற்றுமொழிக்கும் முதனிலையுமாய் அவற்றின்கண் முன்னாகப் பின்னாகத் தாம் நிற்றற்கு உரிய நிலைக்களங்களினின்று பலசொல் ஒருபொருட்கு உரியவாதலையும் ஒருசொல் ஒருபொருட்கு உரித்தாதலேயன்றிப் பலபொருட்கு உரித்தாதலையும் உடையவாகிப் பெயர்வினைபோல ஈறுபற்றிப் பொருளுணர்த்தலாகாமையிற் பயிற்சியின்மையாற் கேட்போனாற் பொருளுணரப்படாத சொற்களைப் பயிற்சியுண்மையாற் பொருளுணரப்பட்ட சொற்களோடு சார்த்தி உணரப்படுவன முற்கூறிப்போந்த உரிச்சொற்களாம். எ - று.

குறிப்புப் பரப்புடைமையின் முற்கூறினார். குறிப்பு மனத்தாற் குறித்து உணரப்படுவது. பண்பு பொறியான் உணரப்படுங் குணம்.

குறிப்பும் இசையும் பண்பின் பகுதியாய் அதன்கண் அடங்குமே னும் விளங்குதற் பொருட்டு வேறுகூறினர்.

உ-ம். கறுப்பு சிவப்பு என்பன போல்வன பெயர்ப்போலி. உறு தவ என்பன போல்வன வினைப்போலி. துவைத்தல் சிலைத்தல் என்பன போல்வன பெயர்க்கு முதனிலையாயின. துவைக்கும் சிலைக் கும் என்பன போல்வன வினைக்கு முதனிலையாயின. உறுபுகழ் நனி பேதை என்பன போல்வன பெயர்முன் நின்றன. நனிசொற்ருன் தவச்சென்ருன் என்பன போல்வன வினைமுன் நின்றன. "திரிகாய விடத் தேரொடு காருடைபோகி" "கயலற லெதிரக் கடும்புனல் சாஅய்" என்பன போல்வன பெயர்ப்பின் நின்றன. "மணங்கமழ் வியன்மார்ப னணங்கிய செல்லல்" "வெயில்புறந் தரூஉ மின்ன லியக்கத்து" என்பன போல்வன வினைப்பின் நின்றன. உறு தவ என்பன போல்வன பலசொல் ஒருபொருட்கு உரியவாயின. கடி நனி என்பன போல்வன ஒருசொற் பலபொருட்கு உரிய வாயின. பிறவும் அன்ன. பொருட்கு உரியவாகிய குறிப்பு முதலி யவற்றை உணர்த்திநிற்றலில் உரிச்சொல்லாயிற்று. இவ்வாறன்றிப் பெரும்பாலுஞ் செய்யுட்கு உரித்தாய்வருதலின் உரிச்சொல்லா யிற்றென்பாரும் உளர். (க)

உ௮௧. உறுதவ நனியென வரூஉ மூன்று
மிகுதி செய்யும் பொருள வாகலுஞ்
செல்ல லின்ன லின்னுமை செப்பலு
மலமர றெருமரல் சுழற்சி சாற்றலு
மழவுங் குழவு மிளமைக் கேற்றலுங்
கூர்ப்புங் கழிவு முள்ளது சிறத்தலுங்
கதழ்வுந் துனைவும் விரைவு காட்டலு
மதிர்வும் விதுப்பு நடுக்கஞ் செய்தலுங்
கெடவரல் பண்ணை விளையாட் டுணர்த்தலு
நம்பு மேவு நசையின வாகலு
மோய்த லாய்த னிழத்தல் சாய்த
லுள்ளத நுணுக்க முணரக் காட்டலும்
பிணையும் பேணும் பெட்பின வாகலும்
பையுளுஞ் சிறுமையு நோய்கூ றுதலும்
வெறுப்பு முறப்புஞ் செறிவினை விளம்பலு
மிலம்பா டொற்கம் வறுமை செப்பலு

ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தலை யுரைத்தலும்
பேரா முருமென வரூஉங் கிளவி
யாமுறை மூன்று மச்சங் கூறலுங்
கறுப்புஞ் சிவப்பும் வெகுளி சுட்டலும்
பாவும் பழிச்சும் வழுத்தின்குறிப் புணர்த்தலும்
வரன்முறை யென்மனுர் மரபுணர்ந் தோரே.

இது நிறுத்த முறையானே குறிப்புணர்த்துவனவற்றுட் தாம் பலவாய்நின்று ஒருபொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் இவை யென்கின்றது.

இ - ள். "உறுபுனறந்துலகூட்டி" எனவும் "ஈயாது வீயுமு யிர்தவப் பலவே". எனவும் "வந்துநனி வருந்தினை வாழிய நெஞ் சே" எனவும் உறுவெனத் தவவென நனியென வரும் மூன்றுரிச் சொற்களும் மிகுதியென்னும் உரிச்சொற்காட்டுங் குறிப்புப்பொ ருளை உடையவாகலும் "மணங்கமழ் வியன்மார்ப னணங்கிய செல் லல்" எனவும் "வெயில்புறந்தரூஉ மின்னலியக்கத்து" எனவும் செல் லலும் இன்னலுமாகிய இரண்டுரிச்சொற்களும் இன்னாமையென் னும் உரிச்சொலுணர்த்துங் குறிப்புப்பொருள் உணர்த்தலும் "அலம ரலாயம்" எனவும் "தெருமர லுள்ளமொ டன்னை துஞ்சாள்" என வும் அலமரலுந் தெருமரலுமாகிய இரண்டுரிச்சொற்களும் மனத்தடு மாற்றமாகிய சுழற்சியென்னும் உரிச்சொல்லுணர்த்துங் குறிப்பு உணர்த்தலும் "வரைபுரைமழகளிறு" எனவும் "குழக்கன்று" என வும் மழவுங் குழவுமாகிய இரண்டுரிச்சொற்களும் இளமையென் னும் உரிச்சொல்லுணர்த்துங் குறிப்பு உணர்த்தற்குப் பொருந்துத லும் "இயங்கா வையத்து வள்ளியோர் நசைஇத் துனிகூ ரெவ்வ மொடு" எனவும் "சினனே காமங் கழிகண் ணோட்டம்" எனவும் கூர்ப்புங் கழிவுமாகிய இரண்டும் முன் சிறவாது உள்ளதொன்று சிறத்தலாகிய குறிப்பு உணர்த்தலுங் "கதழ்பரிநெடுந்தேர்" எனவும் 'துனைபரி துரக்குந் துஞ்சாச் செலவின்" எனவும் கதழ்வுந் துனை வுமாகிய இரண்டும் விரைவென்னுங் குறிப்பு உணர்த்தலும் "அதிர வருவதோர்நோய்" எனவும் "விதுப்புற வறியா வேமக் காப்பினை" எனவும் அதிர்வும் விதுப்புமாகிய இரண்டும் நடுக்கமாகிய குறிப்பு உணர்த்தலுங் "கெடவரலாயமொடு" எனவும் "பண்ணைத் தோன் றியவெண்ணான்கு பொருளும்" எனவும் கெடவரலும் பண்ணையும் விளையாட்டுக்கருத்தாகிய குறிப்பு உணர்த்தலும் "நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி" எனவும் "பேரிசை நவிரமேஎவுங் காரியுண்டி"

எனவும் நம்பும் ஏவுமாகிய இரண்டும் நசையென்னுங் குறிப்பினை உடையவாதலும் "வேனி லுழந்த வறிதுயங் கோய்களிறு" எனவும் "பாய்ந்தாய்ந்ததானை" எனவும் "நிழத்த யானை மேய்புலம் படாஅ" எனவும் "கயலறலெதிரக்கடும்புனல்சாஅய்" எனவும் ஓய்தலும் ஆய்தலும் நிழத்தலுஞ் சாய்தலுமாகிய நான்குரிச்சொற்களு முன் நுணுகாது உள்ளதொன்று நுணுகுதற் குறிப்பினை அறிய உணர்த்தலும் "அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும்" எனவும் "அமரர்ப் பேணியு மாகுதி யருத்தியும்" எனவும் பிணையும் பேணு மாகிய இரண்டுரிச்சொற்களும் பெட்பின்பொருளாகிய புறந்தருத லென்னுங் குறிப்பினை உடையவாதலும் "பையுண் மாலைப் பழும ரம் படரிய" எனவும் "சிறுமை யுறுப செய்பறி யலரே" எனவும் பையுளுஞ் சிறுமையுமாகிய இரண்டும் நோயென்னுங் குறிப்பு உணர்த்தலும் "வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" எனவும் "உறந்த விஞ்சி யுயர்நிலை மாடத்து" எனவும் வெறுப்பும் உறப்புமா கிய இரண்டுஞ் செறிவென்னுங் குறிப்பினை உணர்த்தலும் "இலம் பாடுநாணுத்தரும்" எனவும் "ஒக்கலொற்கஞ்சொலிய" எனவும் இலம்பாடும் ஒற்கமுமாகிய இரண்டும் வறுமையென்னுங் குறிப்பினை உணர்த்தலுங் "கருமணன் ஞெமிரிய திருநகர் முற்றத்து" எனவும் "புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந் திழிதர" எனவும் ஞெமிர்தலும் பாய்தலுமாகிய இரண்டும் பரத்தலாகிய குறிப்பினை உணர்த்தலும் "மின்ற மார்த்த பேமுதிர் கடவுள்" எனவும் "நாநல்லார்க் கெதிர் பட வுமிழ்ந்தே" எனவும் "உருமில்சுற்றமொடு" எனவும் பேமும் நாமும் உருமுமென்று சொல்ல வருகின்ற கிளவியாகிய அம்முறை மையினையுடைய மூன்று உரிச்சொற்களும் அச்சமாகிய குறிப்பு உணர்த்தலும் "நிற்கறுப்பதோரருங்கடிமுனையன்" எனவும் "நீசி வந் திறுத்த நீர்கழி பாக்கம்" எனவும் கறுப்புஞ் சிவப்புமாகிய இரண் டும் வெகுளியாகிய குறிப்பு உணர்த்தலுங் "கல்லே பரவி னல் லது—நெல்லுகுத்துப் பரவுங் கடவுளு மிலவே" எனவும் "செறி வளை விறலியர் கைதொழூஉப் பழிச்சி—வறிதுநெறியொரீஇ" என வும் பரவும் பழிச்சுமாகிய இரண்டும் வழுத்துதலாகிய உரிச்சொல் லின் குறிப்பு உணர்த்தலும் வரலாற்றுமுறைமையென்று கூறுவர் உரிச்சொற்கள் பொருளுணர்த்துந் தன்மையை அறிந்தோர். எ-று.

இலமென்னும் உரிச்சொற் பெரும்பான்மையும் பாடென்னுந் தொழில்பற்றியல்லது வாராமையின் இலம்பாடென்றூர். (உ)

உஅஉ. ஏற்ற நினைவுந் துணிவு மியம்பலும்
விறப்பே செறிவும் வெருவலும் விளக்கலும்

பணையே பிழைத்தலும் பெருத்தலு மிசைத்தலும்
படரே யுள்ளலுஞ் செலவுஞ் சொல்லலுந்
தாவே வலியும் வருத்தமுந் தழுவலுஞ்
செழுமை வளனுங் கொழுப்புஞ் செப்பலும்
விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையு
நனவே களனு மகலமுஞ் செய்தலு
மதவே மடனும் வலியு மன்றி
மிகுதியும் வனப்பு மொருவழி விளக்கலுங்
கடியென் கிளவி வரைவே கூர்மை
காப்பே புதுமை விரைவே விளக்க
மிகுதி சிறப்பே யச்சமுந் தேற்றே
டையமுங் கரிப்பு மணமு மறைதலு
முறையென மொழிப முறையுணர்ந் தோரே.

இது குறிப்பு உணர்த்துவனவற்றுட் தாம் ஒன்றாய் நின்று பல பொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் இவையென்கின்றது.

இ-ள். "கானலஞ் சிலம்பன் கொடுமை யேற்றி" எனவும் "ஏற்றமிலாட்டியென்னேமுற்றாள்" எனவும் ஏற்றமென்னும் உரிச்சொல் நினைவுந் துணிவுமாகிய குறிப்பு உணர்த்தலும் "விறந்த காப்பொடுண் ணின்று வலியுறுத்து" எனவும் "அவலெறி யுலக்கைப் பாடுவிறந் தயல" எனவும் விறப்பென்னும் உரிச்சொல் செறிவும் வெருவலுமாகிய குறிப்பு உணர்த்தலும் "அமர்க்கணுமா னருநிற முழ்காது—பணைத்துவீழ் பகழிப் போக்கு நினைந்து காண்" எனவும் "வேய்மருள் பணைத்தோ ணெகிழச்சேய் நாட்டு" எனவும் பணையென்னும் உரிச்சொற் பிழைத்தலும் பெருத்தலுமாகிய குறிப்பு உணர்த்தலும் "வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி" எனவும் "கறவைகன்றுவயிற்படர" எனவும் படரென்னும் உரிச்சொல் உள்ளுதலுஞ் செலவுமாகிய குறிப்பு உணர்த்தலுந் "தாவினன்பொன்றைஇயபாவை" எனவும் "கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றென" எனவும் தாவென்னும் உரிச்சொல் வலியும் வருத்தமுமாகிய குறிப்பு உணர்த்தலுஞ் "செழுஞ்செய்நெல்லின்" எனவும் "செழுந்தடி தின்ற செந்நா யேற்றை" எனவும் செழுமையென்னும் உரிச்சொல் வளனுங் கொழுப்புமாகிய குறிப்பு உணர்த்தலும் "விழுமியோர்க் காண்டொறுஞ் செய்வர் சிறப்பு" எனவும் "வேற்றுமையில்லா விழுத்திணைப் பிறந்து—வீற்றிருந் தோரை யெண்ணுங்

காலை" எனவும் "நின்னுறுவிழுமங்களைந்தோன்" எனவும் விழுமமென்னும் உரிச்சொல் சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையுமாகிய குறிப்பு உணர்த்தலும் "நனவுப்புகுவிறலியிற்றோன்றுநாடன்" எனவும் "நனந்தலையுலகம்வளைஇய" எனவும் நனவென்னும் உரிச்சொல் களனும் அகலமுமாகிய குறிப்பு உணர்த்தலும் "பதவு மேய்ந்த மதவுநடை நல்லான்" எனவும் "கயிறிடுகதச்சேப்போன்மதமிக்கு" எனவும் மதவென்னும் உரிச்சொல் மடனும் வலியுமாகிய குறிப்பு உணர்த்தலேயன்றி "மதவிடை" எனவும் "மாதர் வாண்முக மதைஇய நோக்கே" எனவும் உள்ளமிகுதியும் வனப்புமாகிய குறிப்புஞ் சிறுபான்மை உணர்த்தலுங் கடியென்னும் உரிச்சொற் "கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு" என வரைவுங் "கடி நுனைப்பகழி" எனக் கூர்மையுங் "கடிமரந்தடியுமோசை" எனக் காவலுங் "கடியூண் கடவுட் கிட்ட செழுங்குரல்" எனப் புதுமையுங் "கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்" என விரைவுங் "கடும்பகன்ஞாயிறு" என விளக்கமுங் "கடுங்கா லொற்றலிற் சுடர்சிறந் துருத்து" என மிகுதியுங் "கடு நட்பு" எனச் சிறப்புங் "கடியுருமீனுறிக்கடிப்புச்சேர்பு" என அச்சமுங் "கொடுஞ்சுழிப் புகார்த் தெய்வ நோக்கிக்—கடுஞ்சூ டருகுவனினக்கே கானலின்" எனப் புறத்தன்றித் தெய்வமுதலாயினவற்றின்முன் நின்று தெளிவித்தலுமாகிய குறிப்போடுகூடச் சிறுபான்மை "கடுத்தன ளல்லளோ வன்னை" என ஐயமாகிய குறிப்புங் "கடிமிளகுதின்றகல்லாமந்தி" எனக் கரிப்புங் "கடிநாறுபூந்துணர்" என மணமுமாகிய பண்பும் உணர்த்தலும் வரலாற்றுமுறைமையென்று சொல்லுவர் உரிச்சொற்கள் பொருளுணர்த்தும் முறைமையை உணர்ந்தோர். எ - று.

மேற் பண்பு உணர்த்துதற்குத் தோற்றுவாய் செய்வார் கரிப்பும் மணமுமாகிய பண்பும் உடன்கூறினர். (௩)

உ௮௩. குருவுங் கெழுவு நிறனா குதலு
நொசிவு நுழைவு நுணங்கு நுண்மைப்
பொருள வாகலும் பொருந்து மென்ப.

இது நிறுத்தமுறையானே பண்பு உணர்த்துவனவற்றுட் தாம் பலவாய் நின்று ஒருபொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் இவையென்கின்றது.

இ - ள். "குருமணித்தாலி" எனவும் "நறுஞ்சாந்து புலர்ந்த கேழ்கிள ரகலம்" எனவும் குருவுங் கெழுவுமாகிய இரண்டு உரிச்சொற்களும் நிறனென்னும் பண்பு உணர்த்தலும் "நொசிபடு மருங்

குற் கசிவுறக் கைதொழா" எனவும் "இழைமருங் கறியா நுழைநூற் கலிங்கம்" எனவும் "நுணங்குதுகினுடக்கம்போல" எனவும் நொசிவும் நுழைவும் நுணங்குமாகிய மூன்றும் நுண்மையாகிய பண்பு உணர்த்தலும் பொருந்துமென்று கூறுவர் ஆசிரியர். எ - று. (௪)

உ௮௪. வார்தல் போக லொழுகன் மூன்று
நேர்வு நெடுமையு நிலவக் காட்டலுந்
தடவே பெருமையுங் கோட்டமுஞ் சாற்றலுங்
கயவே பெருமையு மென்மையுங் கருதலு
நளியே பெருமையுஞ் செறிவு நவிற்றலு
மியல்பென மொழிப வியல்புணர்ந் தோரே.

இது பண்புணர்த்துவனவற்றுட் தாம் ஒன்றாய் நின்று பல பொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் இவையென்கின்றது.

இ - ள். "வார்ந்திலங்கும்வையெயிற்றுச் சின்மொழியரிவையை" எனவும் "தெள்ளற றதீஇய வார்மண லடைகரை" எனவும் "போகுகொடிமருங்குல்"எனவும்"திரிகாயவிடத்தேரொடுகாருடைபோகி" எனவும் "ஒழுகுகொடிமருங்குல்" எனவும் "மால்வரையொழுகியவாழை" எனவும் வார்தலும் போகலும் ஒழுகலுமாகிய உரிச்சொற்கள் நேர்மையும் நெடுமையுமாகிய பண்பு உணர்த்தலும் "வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் குட்டுவன்" எனவும் "தடமரும்பெருமை" எனவும் தடவென்னும் உரிச்சொல் பெருமையுங் கோட்டமுமாகிய பண்பு உணர்த்தலும் "இரும்பிடி கன்றொடு விரைஇக் கயவாய்ப்—பெருங்கை யானை" என்வும் "கயந்தலைமடப்பிடி" எனவும் கயவென்னும் உரிச்சொற் பெருமையும் மென்மையுமாகிய பண்பு உணர்த்தலும் "நளிமலைநாடன்" எனவும் "சிலைப்புவல் லேற்றின்றலைக்கை தந்துநீ—நளிந்தனை வருத லுடன்றன ளாகி"எனவும் நளியென்னும் உரிச்சொற் பெருமையுஞ் செறிவுமாகிய பண்பு உணர்த்தலும் இயல்பென்று சொல்லுவர் இலக்கணங்களை அறிந்தோர். எ - று. (௫)

உ௮௫. கம்பலை சும்மை யரவங் கண்ணலுந்
துவைத்தல் சிலைத்த லியம்பலிசை சுட்டலு
மூரிய வென்மனா ருணர்ந்திசி னோரே.

இது நிறுத்தமுறையானே இசை உணர்த்துவனவற்றுட் தாம் பலவாய் நின்று ஒருபொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் இவையென்கின்றது.

இ - ள். "களிறுகவர்கம்பலைபோல" எனவும் "துனிமழை தோயுந் தண்பரங் குன்றிற்—கலிகொள் சும்மை யொலிகொ ளாயம்" எனவும் கம்பலையுஞ் சும்மையுமாகிய இரண்டு உரிச்சொற்களும் அரவமாகிய இசைப்பொருண்மையை உணர்த்தலும் "முரசுகடிப் பிகுப்பவும் வரிவளை துவைப்பவும்" எனவும் "ஆமாநல்லே றுசிலைப்ப" எனவும் "கடிமரந் தடியு மோசை தன்னூர்—நெடுமதில் வரைப்பிற் கடிமனை யியம்ப" எனவும் துவைத்தலுஞ் சிலைத்தலும் இயம்பலுமாகிய உரிச்சொற்கள் மூன்றும் இசையென்னும் இசைப்பொருண்மை உணர்த்தலும் உரியவென்று கூறுவர் அறிந்தோர். எ - று. (சு)

உஅசு. கலியே யரவமுஞ் செருக்குங் காட்டலு
மழுங்க லரவமு மிரக்கமுங் கேடு
மிரங்க லிசையுங் கழிந்தபொருட் டாகலுஞ்
சிவணு மென்மனார் தெளிந்திசி னோரே.

இது நிறுத்தமுறையானே தாம் ஒன்றாய் நின்று பலபொருள் உணர்த்தும் உரிச்சொற்கள் இவையென்கின்றது.

இ - ள். "கலிகொ ளாய மலிதொகு பெடுத்த" எனவும் "கலிகொள் சும்மை யொலிகொ ளாயம்" எனவும் கலியென்னும் உரிச்சொல் அரவமாகிய இசைப்பொருண்மையுஞ் செருக்காகிய குறிப்புப்பொருண்மையும் உணர்த்தலையும் "உயவுப் புணர்ந்தன்றிவ் வழுங்க லூரே" எனவும் "பழங்கண் ணோட்ட முதலிய—வழுங்கினெனல்லனோ வயர்ந்தனன் மன்னே" எனவும் "குணனழுங்கக் குற்றமுழைநின்று கூறுஞ் சிறியவர்கட்கு" எனவும் அழுங்கலென்னும் உரிச்சொல் அரவமாகிய இசைப்பொருண்மையும் இரக்கமுங் கேடுமாகிய குறிப்புப்பொருண்மையும் உணர்த்தலும் "எறிரங் கிருளிடையிரவினிற் பதம்பெறான்" எனவும் "செய்திரங்கா வினைச் சேண்விளங்கும் புகழ்" எனவும் இரங்கலென்னும் உரிச்சொல் இசைப்பொருளும் ஒருபொருளது கழிவாற்பிறந்த வருத்தமாகிய குறிப்புப்பொருளும் உணர்த்தலும் பொருந்துமென்று கூறுவர் அறிந்தோர். எ-று.

இசையன்றிக் குறிப்பு உணர்த்தினும் பலபொருட்டாதல்பற்றிக் குறிப்பும் உடனோதினர். (எ)

உஅஎ. மெய்பெறக் கிளந்த வுரிச்சொ லெல்லா
முன்னும் பின்னும் வருபவை நாடி

யொத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த
றத்த மரபிற் றோன்றுமன் பொருளே.

இஃது உரிச்சொன்மாட்டு நிகழ்வதோர் ஐயம் அகற்று கின்றது.

இ - ள். இச்சொல் இப்பொருட்கு உரித்தென மேற்கூறப் பட்ட உரிச்சொல் எல்லாவற்றையும் அவற்றின் முன்னும் பின்னும் வரும் மொழிகளை ஆராய்ந்து அம்மொழிகளுட் தமக்குப் பொருந் தும் மொழியோடு கூட்டிப் பொருளுணர்த்துக. அவ்வாறு உணர்த் தவே வரலாற்றுமுறைமையாற் தத்தமக்கு உரிய பொருள் விளங் கித்தோன்றும். எ - று.

இஃது என்சொல்லியவாறோவெனின்;—"உறு தவ நனி என வரூஉம் மூன்று—மிகுதி செய்யும் பொருள வென்ப" எனவும் "செல்லல் இன்னல் இன்னாமையே" எனவும் ஓதியவழி அவை பயின்ற சொல்லன்மையான் இவை மிகுதியும் இன்னாமையும் உணர்த்துமென்று ஆசிரியன் ஆணையாற் கொள்வதல்லது வரலாற்று முறைமையாற் பொருள் உணர்த்தப்படாவோ என்று ஐயுறுவார்க்கு "உறுகால்" "தவப்பல" "நனி சேய்த்து" எனவும் "மணங்கமழ் வியன்மார்ப னணங்கிய செல்லல்" எனவும் முன்னும் பின்னும் வருஞ் சொல் நாடி அவற்றுள் இச்சொல்லோடு இவ்வுரிச்சொல் இயையுமென்று கடைப்பிடிக்கத் தாம் புணர்த்த சொற்கு ஏற்ற பொ ருள் விளங்குதலின், உரிச்சொல்லும் வரலாற்றுமுறைமையாற் பொருள் உணர்த்துமென்பது பெறப்படுமென ஐயம் அகற்றியவா றெனக் கொள்க. வரலாற்றுமுறைமையாற் பொருளுணர்த்தாவா யிற் குழூவின்வந்த குறிநிலைவழக்குப்போல இயற்சொல்லெனப்ப டாவாமென்பது. (அ)

உ௲அ. கூறிய கிளவிப் பொருணிலை யல்ல
வேறுபிற தோன்றினு மவற்றொடு கொளலே.

இது முற்கூறிப்போந்த உரிச்சொற்கு ஆவதோர் பொருட்புற னடை கூறுகின்றது.

இ - ள். முன்னும் பின்னும் வருபவை நாடியவழி, முற்கூறிய உரிச்சொற்களின் பொருணிலைமையல்லாத வேறுபொருள் தோன் றுமாயினும் முற்கூறப்பட்டனவற்றோடு அவற்றையும் உரிச்சொல் லாகக் கொள்க. எ - று.

"தாவாதவில்லைவினைகளும்" என்புழித் தா கேடும் "நுணங்குகொடிமின்" என்புழி நுணங்கு நுடக்கமும் உணர்த்தியவாறு காண்க. பிறவும் அன்ன. (கூ)

உஅகூ. எழுத்துப் பிரிந்திசைத்த லிவணியல் பின்றே.

இஃது உரிச்சொற்கு எழுத்துப்பிரிந்து இசைத்தலின்றென ஐயம் அகற்றுகின்றது.

இ - ள். முதனிலையும் இறுதிநிலையுமாக எழுத்துக்கள் பிரிந்து வேறு வேறு பொருள் உணர்த்துதல் உரிச்சொலிடத்து இயல்புடைத்தன்று. எ - று.

பிரிந்திசைத்தல் இவணியல்பின்றெனவே, திரிந்திசைத்தல் இவண் இயல்புடைத்தென்பதூஉம் பிரிந்திசைத்தல் பிருண்டு இயல்புடைத்தென்பதூஉங் கொள்க. உரிச்சொல் எழுத்துத் திரிந்திசைத்தன "நனந்தலையுலகம்" எனவும் "பதவுமேய்ந்த மதவுநடை நல்லான்" எனவும் வருவன போல்வன. பிறவும் அன்ன.

எழுத்துப்பிரிந்திசைத்தன நடந்தான் நடந்தாள் என்பன போலும் வினைச்சொல்லுந் தமன் தமள் என்பன போலும் ஒட்டுப் பெயருமாம். அவை முறையே வினையியலுள்ளும் பெயரியலுள்ளுங் கூறிப்போந்தன. பிரிதலும் பிரியாமையுந் தாமாகப் பொருளுணர்த்துவனவற்றிற்கேயாகலிற் கூறைகோட்படுதல் கடவுளர்க்கு எய்தாதவாறுபோல, இடைச்சொற்கு இவ்வாராய்ச்சி எய்தாமை அறிக. தவ நனி என்னுந் தொடக்கத்தன குறிப்புவினையெச்சம்போலப் பொருளுணர்த்தலின், அவைபோலப் பிரிக்கப்படுஞ் சொல்லோ என்று ஐயுறுமையை அமைத்து அகற்றியவாறு இச்சூத்திரத்திற்குக் கருத்தாதல் அறிக. (கo)

உகூo. அன்ன பிறவுங் கிளந்த வல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉ
முரிச்சொ லெல்லாம் பொருட்குறை கூட்ட
வியன்ற மருங்கி னினைத்தென வறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்
தோம்படை யாணையிற் கிளந்தவற் றியலாற்
பாங்குற வுணர்த லென்மனார் புலவர்.

இஃது உரிச்சொற்கு ஆவதோர் சொற்புறனடை கூறுகின்றது.

இ - ள். சொல்லப்பட்டனவேயன்றி அவைபோல்வன பிறவு மாய் ஈறுபற்றி உணர்த்தற்கு அடங்காது புலவாற்ருனும் பரந்துவ ரும் உரிச்சொலெல்லாம் பொருளைச் சொல்லின்றி அமையாக் குறைபாடு தீரப் பொருளை அதனோடு கூட்டி உணர்த்தக் குறிப்பும் பண்பும் இசையும் பற்றித் தாம் இயன்ற நிலத்து இத்துணையென வரையறுத்து உணரும் எல்லை தமக்கின்மையான் எஞ்சாமற் கிளத் தல் அரிதாகலின் அவற்றை அறிதற்கு ஓதிய வழிகளைச் சோராமல் மிகவுங் கடைப்பிடித்துப் பாதுகாவலாகிய ஆணையிற் கிளந்தவற்றி யல்பானே அவற்றையும் பகுதியுற உணர்கவென்று சொல்லுவர் புலவர் ஆதலால் யானும் அவ்வாறே கூறினேன். எ - று.

ஆதலால் யானும் அவ்வாறே கூறினேனென்பது குறிப்பெச் சம். எனவே, "பெயரும் வினையும் போன்று" எனவும் "முன்னும் பின்னும் வருபவை நாடி" எனவும் யான் கூறிய நெறியைச் சோரா மற் கடைப்பிடித்து "எச்சொல்லாயினும் பொருள் வேறுகிளத்தல்" எனவும் "ஒத்த மொழியாற் புணர்த்தன ருணர்த்த—றத்த மரபிற் ருேன்றுமன் பொருளே" எனவும் என்னுற் தரப்பட்ட பாதுகாவ லாணையாற் "கிளந்தவற் றியலாற் பாங்குற வுணர்க" என்பது இதன்கருத்தாயிற்று. உரிச்சொல்லெல்லாங் கூட்ட வரம்பு தமக் கின்மையிற் கடைப்பிடித்து இயல்பானே இவற்றை உணர்க என வினைமுடிபுசெய்க.

"உருகெழு ஞாயிற் ருெண்கதிர் மிசைந்த" என உரு உட்கும் "புரைய மன்ற புரையோர் கேண்மை" எனவும் "புரைதீர் கேள் விப் புலவ ரான" எனவும் புரை முறையே உயர்வுங் குற்றமும் "மல்லன்மார் படுத்தனம் புல்லுமா றெவனோ" என மல்லல் வள னும் "ஏகல் லடுக்கத் திருளைச் சிலம்பின்" என ஏ பெருக்கமும் "விசும்புகந் தாடா திரைதேர்ந் துண்ணுது" என உகப்பு உயர்வும் "உவந்துவந்—தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇ" என உவப்பு உவகையும் "பயவாக்—களரனையர் கல்லா தவர்" எனப் பயப்பு பய னையும் "வளமலி யுறுக்கு முளமி லாளரோ—டியைந்த கேண்மை யில்லா கியரோ" என இயைபு கூட்டமும். "வயக்கஞ்சால்சீர்த்தி" எனச் சீர்த்தி மிகுபுகழும் "இரவரன்மாலையனே" என மாலை இயல் புந் "துணையிற் றீர்ந்த கடுங்கண் யானை" எனத் தீர்தல் விடலும் "பழுதுகழிவாழ்நாள்" எனப் பழுது பயமின்மையும் "மண்முழு தாண்டநின் முன்னோர் போல" என முழுது எஞ்சாமையும் "வம்பு மாரியைக் காரென மதித்தே" என வம்பு நிலையின்மையும் "மாதர் கொண் மாநோக்கின் மடநல்லாய்" என மாதர் காதலும் "புலிப்பற்

கோத்த புலம்புமணித் தாலி” எனப் புலம்பு தனிமையும் “ஆரியர் துவன்றிய பேரிசை யிமையம்” எனத் துவன்றல் நிறைவுங் “கோடு பல முரஞ்சிய கோளி யாலத்து” என முரஞ்சல் முதிர்வும் “பெரு வரை யடுக்கம் பொற்பச் சூர்மகள்” எனப் பொற்பு பொலிவும் “வறி துவடக் கிறைஞ்சிய சீர்சால் வெள்ளி” என வறிது சிறிதும் “எய்யா மை யல்லை நீயும் வருந்துதி” என எய்யாமை அறியாமையும் “நன்று மரிதுற் றனையாற் பெரும” என நன்று பெரிதும் “நீர்தெவு நிரைத் தொழுவர்” எனத் தெவு கொள்ளுதலுந் “தெவ்வுப்புலஞ் சிதைய வெய்கணை சிதறி” எனத் தெவ்வு பகையுங் “கழுமிய ஞாட்பினுண் மைந்திழந் தாரிட்ட” எனவுங் “கழும முடித்துக் கண்கூடு கூழை” எனவும் முறையே கழுமம் மயக்கமுந் திரட்சியுங் “கருவி வானங் கதழுறை சிதறி” எனக் கருவி பலவற்றதுகூட்டமுங் “கார்கோண் முகந்த கமஞ்சூன் மாமழை” எனக் கமம் நிறைவும் “அரிமயிர்த் தி ரண்முன்கை” என அரி ஐமையுங் “கவவுக்கடுங்குரையள் காமர் வனப்பினள்” எனக் கவவு அகத்திடுதலுங் “கவர்நடைப்புரவி” என வுங்“கொள்ளை மாந்த ருண்ணுது கவரும்”எனவுங் கவர்வு விருப்புங் கைக்கொள்ளுதலுஞ் “சேர்ந்து செறிகுறங்கின்” எனச் சேர் திரட் சியும் “இருங்கல்—வியலறைக் கிடத்தி வயிறு தின்று” என வியல் அகலமுந் “துன்னருந் துப்பின் வயமான் ஞேன்றல்” என வய வலியுந் “துயவுற்றேம்யாமாக” எனத் துயவு அறிவின்றிரிவும் “பருந் திருந் துயாவிளி பயிற்றும்” என உயா வருத்தமும் “உசாத்துணை” என உசா சூழ்ச்சியும் “வயாவும் வருத்தமு மீன்றக்கா ளோவும்”— என வயா கருப்பந்தங்கி வருத்தமுற்று நுகரப்படும் பொருண்மேற் செல்லும் வேட்கையினது பெருக்கமும் “புனிற்றுப்பாய்ந்தெனக்க லங்கி” எனப் புனிறு ஈன்றணிமையும்“வித்தொடு சென்ற வட்டிபற் பல—மீனொடு பெயரும் யாண ரூர”என யாணர் வாரி புதிதாகப்படுத லும் “அகனமர்ந்துசெய்யாளுறையும்” என அமர்தல் மேவலும் “யா ண-துபசலையென்றனளே” என யாண் கவினும்“ஐதேகாமம்யானே” என ஐ வியப்புஞ் “சேற்றுநில முனைஇய செங்கட் காரான்” என முனைவு முனிவும் “வைந்நுனைப் பகழி மூழ்கலிற் றலைசாய்த்து” என வை கூர்மையுஞ் “சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சிவலன் வளையூ” என எறுழ் வலியும் இருமை கருமையும் பெருமையுமாகிய குறிப் புப்பொருண்மை உணர்த்திநின்ற உரிச்சொற்கள். “மையில் வாண் முகம் பசப்பூ ரும்மே” எனப் பசப்பு நிறனும் “மயிற்சாயன்மகள் வேண்டி”எனச் சாயல் மென்மையும் “ஏமவெங் காம மியைவ தாயி னும்” என வெம்மை விரும்புதலுங் “கண்ணே நோக்கி வாளிழந் தனவே” என வாள் ஒளியுமாகிய பண்புப்பொருண்மை உணர்த்தி

நின்ற உரிச்சொற்கள். "வாயிற் றேன்றி யாழிசையூப் புக்கு" என இசை இசைப்பொருண்மை உணர்த்திநின்ற உரிச்சொல். "வெளிப் படு சொல்லே கிளத்தல் வேண்டா—வெளிப்படவாரா வுரிச்சொன் மேன" என்பவாகலின், வெளிப்பட்ட உரிச்சொற்களைக் கிளந்தத னாற் பயனின்மையின், அவற்றை ஒழித்து, வெளிப்படாதனவற்றுள் இவைபோல்வன பிறவருவன உளவேல் அவற்றையும் இப்புறனை டையானே எடுத்தோதி ஈண்டே அமைத்துக்கொள்க. (கக)

உகக. பொருட்குப்பொரு டெரியி னதுவரம் பின்றே.

இஃது உணராதவற்றை உணர்ந்தவை சார்த்திப் பொருள் உணர்த்துங்காற் படும் முறைமை கூறுகின்றது.

இ - ள். ஒருசொல்லை ஒருசொல்லாற் பொருள் உணர்த்திய வழி அப்பொருள் உணர்த்த வந்த சொற்கும் பொருள்யாதெனப் பொருட்குப் பொருள் தெரியுமாயின், மேல் வருவனவற்றிற்கெல் லாம் ஈது ஒத்தலின், அவ்வினு இறைவரம்பின்றி ஓடும்; அதனுற் பொருட்குப் பொருள் தெரியற்க. எ - று.

ஒருசொற்குப் பொருள் உரைப்பது பிறிதோர் சொல்லா னன்றே? அச்சொற்பொருளும் அறியாதானை உணர்த்துமாறென்னை யெனின், அது வருகின்ற சூத்திரத்தாற் பெறப்படும். (கஉ)

உகஉ. பொருட்குத் திரிபில்லை யுணர்த்த வல்லின்.

இ - ள். உறுகாலென்புழி உறு என்னுஞ் சொற்குப் பொரு ளாகிய மிகுதி என்பதன் பொருளும் அறியாத மடவோனுயின், அவ் வாறு ஒருபொருட்கிளவி கொணர்ந்து உணர்த்தல் உறுது கடுங்கா லதுவலிகண்டாய் உறுவென்பதற்குப் பொருளென்று தொடர்மொ ழிகூறியானுங் கடுங்காலுள்வழிக்காட்டியானும் மாணுக்கன் உண ரும் வாயிலறிந்து உணர்த்தல் வல்லனுயின் அப்பொருள் திரிவுப டாமல் அவனுணரும். எ - று.

அவ்வாற்றுனும் உணர்தலாற்றுதானை உணர்த்துமாறென்னை யெனின் அதற்கன்றே வருஞ் சூத்திரம் எழுந்ததென்பது. (கந)

உகந. உணர்ச்சி வாயி லுணர்வோர் வலித்தே.

இ - ள். வெளிப்படத் தொடர்மொழி கூறியானும் பொரு ளைக் காட்டியானும் உணர்த்தவும் உணராதானை உணர்த்தும் வாயி லில்லை, உணர்ச்சியது வாயில் உணர்வோரது உணர்வை வலியாக உடைத்தாகலான். எ - று.

யாதானும் ஓர் ஆற்றான் உணருந் தன்மை அவற்கில்லையாயின் அவனை உணர்த்தற்பாலனல்லன் என்பதாம். (௧௪)

உ௯௪. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.

இது மொழிப்பொருள் உணர்த்துதற்குக் காரணம் உண்டென்கின்றது.

இ - ள். உறு தவ முதலாயின சொற்கு மிகுதி முதலாயின பொருளாதல் வரலாற்றுமுறைமையாற் கொள்வதல்லது அவை அப்பொருளவாதற்குக் காரணம் விளங்கத்தோன்றா. எ - று.

பொருளொடுசொற்கு இயைபு இயற்கையாகலான் அவ்வியற்கையாகிய இயைபாற் சொற் பொருள் உணர்த்துமென்ப. ஒருசாரார் பிற காரணத்தானும் உணர்த்துமென்ப. அவற்றுள் மெய்ம்மையாகிய காரணம் ஆசிரியர்க்குப் புலனாவதல்லது நம்மனோர்க்குப் புலனாகாமையின் மொழிப்பொருட்காரணம் இல்லையென்னாது 'விழிப்பத்தோன்றா' என்றார். அக்காரணம் பொதுவகையான் ஒன்றாயினுஞ்,சொற்றொறும் உண்மையிற் சிறப்புவகையாற் பலவாமாகலின் விழிப்பத்தோன்றாவெனப் பன்மையாற் கூறினார்.

உரிச்சொற்பற்றி ஓதினாரேனும் "பொருட்குப்பொருடெரியினதுவரம் பின்றே" என்பது முதல் இச்சூத்திரங்காறுங் கூறிய விதிகளெல்லாம் ஏனைச்சொற்களுக்கும் ஒக்குமென்பது கருத்தாகக் கொள்க; மேற் பொது இலக்கணங் கூறும் பொதுவியலைச் சாரவைத்தமையானென்க. (௧௫)

நான்காவது உரிச்சொல்லியல் முற்றிற்று.



## ௫-வது பொதுவியல்.

உ௯௫. திணையே பாலிடம் பொழுது வினாவிறை
மரபா மேழும் வழாஅ லோம்பல்.

என்பது சூத்திரம். இது வழுவற்க எனவும் வழீஇயமைக எனவுங் காத்து வழுக்களைந்து சொற்களை அமைத்துக்கோடலும் முற்கூறிய நால்வகை ஓத்தினுள்ளுங் கூறுதற்கு இடமின்றி எஞ்சிநின்றனவுமாகிய சொல்லிலக்கணங்கள் எல்லாவற்றையுந் தொகுத்து ஒருங்கு உணர்த்தலின் இவ்வோத்துப் பொதுவியலென்னும் பெ

யர்த்தாயிற்று. இதனானே மேலோத்தினோடு இதற்கு இயைபுடைமையும் விளங்கும். இதனுள் இத்தலைச்சூத்திரம் வழுவற்கவெனக் காத்தலும் வழுவியமைகவெனக் காத்தலுமென்னும் இரண்டனுள் வழுவற்கவெனக் காக்கின்றது.

இ - ள். திணையென்பது முதல் மரபென்பது ஈறாகக் கிடந்த ஏழனையும் வழுவாமற் போற்றுக. எ - று.

உ-ம். அவனுண்டான் அவளுண்டாள் அவருண்டார் அதுவுண்டது அவையுண்டன யானுண்டேன் யாமுண்டேம் நீயுண்டாய் நீயிருண்டீர் எனவும் உண்டானவன் உண்டாளவள் உண்டாரவர் உண்டதது உண்டனவவை உண்டேன்யான் உண்டேம்யாம் உண்டாய்நீ உண்டீர்நீயிர் எனவும் திணையும் பாலும் இடனும், நெருநலுண்டேன் இன்றுண்ணாநின்றேன் நாளையுண்பேன் எனவும் உண்டேனெருநல் உண்ணாநின்றேனின்று உண்பேனாளை எனவும் காலமும், உயிரெத்தன்மைத்தென வினாவும், உணர்தற்றன்மைத்தென இறையும், யானைமேய்ப்பான்பாகன் யாடுமேய்ப்பானிடையன் என மரபும் வழுவாமற் தத்தம் மரபினால் வந்தவாறு காண்க. வழாஅலோம்பலெனவே வழுவுதலும் உளவென்பதூஉம், அவ்வழு அமைக்கப்படாதென்பதூஉம், அவ்வழுவும் அவனுண்டது அவனுண்டன அவளுண்டது அவளுண்டன அவருண்டது அவருண்டன அதுவுண்டான் அவையுண்டான் அதுவுண்டாள் அவையுண்டாள் அதுவுண்டார் அவையுண்டார் எனவும் உண்டானது உண்டானவை உண்டாளது உண்டாளவை உண்டாரது உண்டாரவை உண்டதவன் உண்டனவவன் உண்டதவள் உண்டனவவள் உண்டதவர் உண்டனவவர் எனவும் ஒருதிணைச்சொல் ஏனைத்திணைச்சொல்லோடு முடியுந் திணைவழுவும், அவனுண்டாள் அவனுண்டார் அவளுண்டான் அவளுண்டார் அவருண்டான் அவருண்டாள் அதுவுண்டன அவையுண்டது எனவும் உண்டானவள் உண்டானவர் உண்டாளவன் உண்டாளவர் உண்டாரவன் உண்டாரவள் உண்டதவை உண்டனவது எனவும் ஒருபாற்சொல் அத்திணைக்கண் ஏனைப்பாற்சொல்லோடு முடியும் பால்வழுவும், யானுண்டான் யானுண்டாய் உண்டான்யான் உண்டாயான் என்பனபோல ஓரிடச்சொல் ஓரிடச்சொல்லோடு முடியும் இடவழுவும், நாளைஉண்டான் உண்ணும்நெருநல் என்பனபோல ஒருகாலச்சொல் ஒருகாலச்சொல்லோடு முடியுங் காலவழுவும், ஒருவிரல் காட்டிச் சிறிதோபெரிதோ கறக்கின்ற எருமை பாலோசினையோ என்பனபோல வினவப்படாத பொருள்பற்றிவரும் வினாவழுவுங், கடம்பூர்க்குவழியாதோ என

இடம்பூணியென்னுவின்கன்று கருவூர்க்குவழியாதோ எனப் பரு நூல்பன்னிருதொடி என்பனபோல வினவுதற்கு இறையாகாச் செப்புவழுவும், யானைமேய்ப்பானை இடையனென்றும் யாடுமேய்ப் பானைப் பாகனென்றும் பிறிதோர் காரணம்பற்றாது ஒருபொருட்கு உரிய வழக்கு ஒருபொருண்மேற் சென்றதெனப்படும் மரபு வழுவும் என எழுவகையாமென்பதூஉம் பெற்றாம். பிறவும் அன்ன. (க)

உசுசு. திணைமயக் குற்ற வையப் பொருளையும்
பான்மயக் குற்ற வையப் பொருளையு
முருவே பன்மை யஃறிணைப் பிரிப்பி
னறைதலுந் துணிந்துழி யன்மையல் லாமை
மறுப்பதன் மருங்கினு மற்றத னிடத்துந்
திறப்படச் சுட்டலுஞ் செவ்விய வென்ப.

இஃது உயர்திணையாக அஃறிணையாக ஆண்பாலாக பெண்பா லாக ஒன்றாக பலவாக யாதானும் ஒன்றாகற்பாலதனை அதற்கு உரிய சிறப்புச்சொல்லாற் சொல்லாது இருதிறத்துஞ் சேறற்கு உரிய பொதுச்சொல்லாற் சொல்லுதல் வழுவாமாயினும் ஐயப்பொருள் மேற் சொல் நிகழ்த்துமாறு உணர்த்திய முகத்தான் அமைகவெனத் திணைவழு அமைத்தலும் பால்வழு அமைத்தலுந் துணிந்தவழி அன் மைக்கிளவி ஒருபொருள் ஒருபொருளன்றாந் தன்மையைச் சுட்டி நிற்குந் திறனுங் கூறுகின்றது.

இ - ள். திணை துணியாத ஐயப்பொருளையுந் திணை துணிந்து பால் துணியாத ஐயப்பொருளையும் உருவும் பன்மையும், ஒருமை யும் பன்மையுமாகப் பிரிக்கப்படும் அஃறிணைப் பொதுவுமாகிய ஐயப்புலப் பொதுச்சொற்களாற் கூறலுந் திணைபால் துணிந்தவழி அன்மைச்சொல் ஒருபொருள் ஒருபொருளன்றாந் தன்மையை மறுக்கப்படும் பொருள்மேலுந் தழுவப்படும் பொருள்மேலும் முறை யே மறுக்கப்படுதலுந் தழுவப்படுதலுமாகிய முகத்தாற் கூறுபடச் சுட்டிநிற்றலும் வழுவாகா; வழுவமைதியை உடையனவாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

ஐயப்பொருளாவது சிறப்பியல்பாற் தோன்றாது பொதுவியல் பாற் தோன்றியது. ஏற்புழிக்கோடலாற் திணையையத்துக்கண் உரு வும் உயர்திணைப்பாலையத்துக்கண் உருவும் அத்திணைப்பன்மையும் அஃறிணைப்பாலையத்துக்கண் அத்திணைப்பன்மையும் பொதுப்பெயு ரும் ஐயப்புலப் பொதுச்சொல்லாதலும், பால்மயக்குற்ற ஐயப்பொ

ருளெனப் பொதுப்படக் கூறிய அதனுற் றிணையோடு ஆண்மை பெண்மை துணிந்த பன்மையொருமைப்பாலையமும் அதற்கும் அத்திணைப்பன்மைச்சொல் ஐயப்புலப் பொதுச்சொல்லாதலுங் கொள்க. "கண்டுபோன் மயங்கு மையக் கிளவி—நின்ருேர் வருவோ ரென்று சொன் னிகழக்—காணு வையமும் பல்லோர் படர்க்கை" என்பது அகத்தியம் ஆகலின் உருபென்ருரேனும் உருபின்பொருளவாகிய வடிவு பிழம்பு பிண்டமென்னுந் தொடக்கத்தனவுங் கொள்க.

குற்றிகொல்லோ மகன்கொல்லோ இதோ தோன்ருநின்றவுருவு எனவும் ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டிகொல்லோ இதோ தோன்ருநின்ற உருவு எனவும் ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டிகொல்லோ இதோ தோன்ருநின்ற இவர் எனவும் ஒன்றுகொல்லோ பலகொல்லோ செய்புக்கன எனவும் ஒன்றுகொல்லோ பலகொல்லோ செய்புக்கபெற்றம் எனவும் ஒருவன்கொல்லோ பலர்கொல்லோ கறவை உய்த்த கள்வர் எனவும் ஒருத்திகொல்லோ பலர்கொல்லோ இக்குருக்கத்திநீழல் வண்டல் அயர்ந்தார் எனவும் திணையைத்துக்கண்ணும் பாலையத்துக்கண்ணும் உருவுமுதலாயின ஐயப்புலப் பொதுச்சொற்களாய் வந்தவாறு காண்க. மகனென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகாற் குற்றிகொல்லோ என்றும் ஐயஞ் சென்றமையிற் குற்றியன்றென அதனை மறுத்து மகனென்றுங், குற்றியென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகால் மகன் கொல்லோ என்றும் ஐயஞ்சென்றமையின் மகனல்லனென அதனை மறுத்துக் குற்றியென்றும், ஆண்மகனென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகாற் பெண்டாட்டிகொல்லோ என்றும் ஐயஞ் சென்றமையிற் பெண்டாட்டியல்லளென அதனை மறுத்து ஆண்மகனென்றும், பெண்டாட்டியென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகால் ஆண்மகன்கொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையின் ஆண்மகனல்லனென அதனைமறுத்துப் பெண்டாட்டியென்றும், ஒன்றென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகாற் பலகொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையிற் பலவல்லவென்று அதனைமறுத்து ஒன்றென்றும். பலவென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகால் ஒன்றுகொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையின் ஒன்றன்றென அதனை மறுத்துப் பலவென்றும் அன்மைச்சொல்லானது மறுக்கப்படும் பொருண்மேல் ஒருபொருள் ஒருபொருளன்ருந் தன்மையைச் சுட்டிநின்றவாறும், மகனென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகால் மகன் கொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையிற் குற்றியல்லனென்று அதனைத் தழீஇக்கொண்டு மகனென்றுங், குற்றியென்று

துணிந்தவழித் துணியுமுன் ஒருகாற் குற்றிகொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையின் மகனன்றெனை அதனைத் தழீஇக்கொண்டு குற்றியென்றும், ஆண்மகனென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகால் ஆண்மகன்கொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையிற் பெண்டாட்டியல்லனென அதனைத் தழீஇக்கொண்டு ஆண்மகனென்றும், பெண்டாட்டியென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகாற் பெண்டாட்டிகொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையின் ஆண்மகனல்லளென்று அதனைத் தழீஇக்கொண்டு பெண்டாட்டியென்றும், ஒன்றென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகால் ஒன்றுகொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையிற் பலவன்றென அதனைத் தழீஇக்கொண்டு ஒன்றென்றும், பலவென்று துணிந்தவழித் துணியுமுன் ஒருகாற் பலகொல்லோவென்றும் ஐயஞ்சென்றமையின் ஒன்றல்லவென்று அதனைத் தழீஇக்கொண்டு பலவென்றும், அன்மைச்சொல்லானது தழுவப்படும் பொருள்மேல் ஒருபொருள் ஒருபொருளன்ருந்தன்மையைச் சுட்டிநின்றவாறுங் காண்க. குற்றியன்று மகனென்றவழி மகனென்பது நின்று வற்றுமெனின் எச்சமாய்நின்ற இவனென்னும் பெயரெழுவாய்க்கு அது பயனிலையாய் நிற்றலின் நின்றுவற்றுவது யாண்டையதென்க. அல்லனவற்றிற்கும் இவ்வாறே முடித்துக்கொள்க. இனிக் குற்றியல்லன் மகனென்புழிக் குற்றியென்பதல்லனென்னுஞ் சொல்லோடு இயைந்தவாறென்னையெனின், இவ்வுருவு குற்றியாமென்றவழி ஆமென்பதனேடு குற்றியென்பதும் எழுவாயாய் இயைந்தாற்போலக் குற்றியல்லனென்புழி ஆமென்பதன் எதிர்மறையாகிய அன்மைக்கிளவியோடுங் குற்றியென்பது எழுவாயாய் நின்றே இயையுமென்க. எழுவாயாய் இயைதலினன்றே யான் நீயல்லேனென்புழி நீயென்பது வேற்றுமைக்கேற்ற செய்கை பெருது நின்றதென்க. இனித் திணையையத்துக்கண் மகனென்று துணிந்த வழி இவ்வுருக் குற்றியன்று மகனென்றும் இவ்வுருக் குற்றியல்லள் மகனென்றும் பாலையத்துக்கண் ஆண்மகனென்று துணிந்தவழி இவ்வுருப் பெண்டாட்டியல்லள் இவ்வுருப் பெண்டாட்டியல்லன் இவர் பெண்டாட்டியல்லள் இவர் பெண்டாட்டியல்லன் ஆண்மகனென்றும் பெண்டாட்டியென்று துணிந்தவழி இவ்வுரு ஆண்மகனல்லன் இவ்வுரு ஆண்மகனல்லள் இவர் ஆண்மகனல்லன் இவர் ஆண்மகனல்லள் பெண்டாட்டியென்றும் ஒன்றென்று துணிந்தவழிச் செய்புக்கன பலவன்று ஒன்றென்றும் உருவுமுதலிய ஐயப்புலப் பொதுச்சொற்கள் கூட்டியே பொருண்முடிக்க வேண்டுதலின் அவ்வாறு கூட்டிமுடிப்புழி உருவுமுதலாயின அல்லன் அல்லள் அன்று என்பனவற்ருேடு முடியாவாம் பிற

வெனின், அற்றன்று; ஐயுற்றவழியல்லது துணிந்தவழியும் ஐயப்பு லப்பொதுச்சொற்களைக் கூட்டிப் பொருண்முடிக்கவேண்டுமென்பத தற்கு ஓத்தில்லாமையான் அங்ஙனங் கூட்டி முடித்தல் ஒருதலையன்மையான் ஏற்புழியல்லது யாண்டுங் கூட்டிமுடிக்க வேண்டுமென்னும் யாப்புறவின்மையான் அது கடாவன்றென மறுக்க. குற்றிகொல்லோ மகன்கொல்லோ ஆண்மகன்கொல்லோ பெண்டாட்டிகொல்லோ என்புழி ஐயக்கருத்துத் திணைமேலும் பால்மேலுமன்றி மகனுருவுகொல்லோ ஆண்மகனுருவுகொல்லோ பெண்டாட்டியுருவுகொல்லோ என உருவின்மேற்றேயாகலானும் பன்மையும் அஃறிணைப்பிரிப்பும் ஒருகாற் சொல்லுதற்கண் ஒருபால்மேல் நில்லாது இருபால்மேல் நிற்றலானும் ஐயப்பொருண்மேற் சொல் நிகழ்த்துமாறு உணர்த்தியமுகத்தான் வழுவமைதியாயினவாறு காண்க. இவ்வாறு ஐயப்பொருண்மேற் சொல் நிகழ்த்துதலுந் துணிந்துழி அன்மைக்கிளவி அன்மைத்தன்மையைச் சுட்டுதலும் ஆசிரியர் தொல்காப்பியனார்க்குங் கருத்தாதல் சேனாவரையருரையான் உணர்க.(உ)

உகூஎ. உயர்திணை தொடர்ந்த பொருண்முத லாறு
மதனொடு சார்த்தி னத்திணை முடிபின.

இது திணைவழுக் காக்கின்றது.

இ - ள். யாதானும் ஓர் இயைபுபற்றி உயர்திணையோடு தொடர்ந்துநின்ற பொருள் முதலிய ஆறும் அவ்வியைபினான் அவ்வுயர்திணையோடு ஒன்றுபடுத்தி முடிக்குங்கால் அவ்வுயர் திணைமுடிபினை உடையவாய் முடியும். எ - று.

எனவே, வேறுபடுத்தி முடிக்குங்காற் தமக்கு உரிய அஃறிணைமுடிபானே முடியும் என்பதாயிற்று.

நம்பிபொன்பெரியன் இல்லம்பெரியன் வாழ்நாள்பெரியன் நங்கைமூக்குநல்லள் நிறங்கரியள் கவவுக்கடியள் என முறையே பொருண் முதல் ஆறும் உயர்திணைமுடிபான் முடிந்தவாறு காண்க. இனித்தமக்கு உரிய அஃறிணைமுடிபான் முடியுமாறு, நம்பிக்குப் பொன்பெரிது இல்லம்பெரிது வாழ்நாள்பெரிது நங்கைக்குமூக்கு நன்று நிறங்கரிது கவவுக்கடிது என வரும். பிறவும் அன்ன.

பொருண்முதலாறுமெனப் பொதுப்படக்கூறிய அதனானே கண்ணல்லள் தோணல்லள் முலைநல்லள் புருவநல்லள் காதுநல்லள் எனவும் கண்ணொந்தாள் தோணொந்தாள் முலைநொந்தாள் புருவநொந்தாள் காதுநொந்தாள் எனவும் கண்ணல்லர் தோணல்லர் முலை

நல்லர் புருவநல்லர் காதுநல்லர் எனவும் கண்ணொந்தார் தோளொந்தார் முலைநொந்தார் புருவநொந்தார் காதுநொந்தார் எனவும் கண்ணுந் தோளும் முலையும் பிறவும் "பன்மை சுட்டிய சினைநிலைக்கிளவி—பன்மைகூறுங் கடப்பாடில" வாய் முதற்பொருள் ஒன்றாயின் ஒருமையானும் பலவாயிற் பன்மையானும் முடிதலுங்கொள்க. கோடுகூரிதுகளிறு குளம்புகூரிதுகுதிரை என அஃறிணைப் பன்மைச் சினைப்பெயர் நின்று முதல்வினையாகிய ஒருமையான் முடிந்தனவும் ஒன்றெனமுடித்தலாற் கொள்க. உடைப்பொருளும் உடையானும் இடமும் இடத்துநிகழ்பொருளுங் காலமுங் காலத்தியலும்பொருளும் அவயவமும் அவயவியுங் குணமுங் குணியும் வினையும் வினைமுதலுமாகிய இயைபுடைமையான் அதுபற்றி உடைப்பொருண்முதலியவற்றின் இயல்பை உடையான் முதலிய பொருண்மேலேற்றி அவற்றின் வினையான் முடிப்பினும் அமையுமெனத் திணைவழுவமைத்தவாறாயிற்று. (௬)

உகூஅ. திணைவிர வெண்ணுப்பெயர் சிறப்பினு மிகவினு
மிழிபினு மொருமுடி பெய்து மென்ப.

இதுவும் அது.

இ - ள். திணைவிராயெண்ணிய எண்ணுப்பெயர்கள் தலைமையானும் பன்மையானும் இழிபானும் ஒன்றுபற்றி அதற்கேற்ற ஒருமுடிபான் முடியுமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

உ-ம். "அங்கண்விசும்பி னகனிலாப் பாரிக்குந்—திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கண்—மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து—தேய்வ ரொருமா சுறின்." இது திணைவிராயெண்ணித் தலைமைபற்றி உயர்திணையான் முடிந்தது. "பழியஞ்சான் வாழும் பசுவு மழிவின்றற்—கொண்ட வருந்தவம் விட்டானுங்—கொண்டிருந்—தில்லஞ்சி வாழுமெருது மிவர்மூவர்—நெல்லுண்டநெஞ்சிற்கோர் நோய்." இதுவும் அது, விட்டானென்பது உயர்திணைவாசகமாய் ஏனைப் பசுவினும் எருத்தினுஞ் சிறந்தமையின். "வேந்தன் பெரும்பதி மண்ணுண் மாந்த—ரீங்கிம் மூவ ரிதற்குரியோரே" எனவும் "தன்பான் மனையா ளயலான்றலைக் கண்டு பின்னு—மின்பா லடிசிற் கிவர்கின்றகைப் பேடிபோலா—நன்பால் பசுவே துறந்தார்பெண்டிர் பாலர் பார்ப்பா—ரென்பாரை யோம்பேனெனின்யானவ னாகவென்றான்" எனவும் "பார்ப்பா ரறவோர் பசுப்பத் தினிப்பெண்டிர்—மூத்தோர் குழவி யெனுமிவரைக் கைவிட்டுத்—தீத்திறத்தார் பக்கமே செல்கென்று" எனவும் "பார்ப்பார்

தவரே சுமந்தார் பிணிப்பட்டார்-மூத்தாரிளையார் பசுப்பெண்டி ரென்றிவர்கட்—காற்றவழிவிலங்கி னூரே பிறப்பிடைப்—போற்றி யெனப்படுவார்" எனவும் இவை திணைவிராயெண்ணிப் பன்மைபற்றி உயர்திணையான் முடிந்தன. "நசைதர வந்தோர் நசைபிறக் கொழிய—வசைபட வாழ்ந்தோர் பலர்கொல் புரையினற்—பனுவனூல் வேதத்தருஞ்சீர்த் திப்பெருங்-கண்ணுறை நெய்ம்மலி யாகுதி பொங்கப்—பன்மாண் வீயாச் சிறப்பின் வேள்வி—முற்றி யூப நட்ட வியன் களம்—பலகொல் யாபல கொல்லோ பெரும" எனவும் "தொல்லை நால்வகைத் தோழருந் தூமணி நெடுந்தேர்—மல்லற் றம்பியு மாமனு மதுவிரி கமழ்தார்ச்—செல்வன் றாதையுஞ் செழுநக ரொடுவள நாடும்—வல்லை தொக்கது வளங்கெழு கோயிலு ளொருங்கே" எனவும் இவை திணைவிராயெண்ணித் தலைமைபற்றி அஃறிணையான் முடிந்தன. "கோலஞ்சி வாழுங் குடியுங் குடிதழீஇ—யாலம் வீழ் போலு மமைச்சனும்—வேலின்—கடைமணிபோற் றிண்ணியான் காப்புமிம் மூன்றும்—படைவேந்தன் பற்று விடல்" எனவும் "எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தெய்வ—முச்சந் தலையோடிவையென்ப யாவருந்—திட்பத்தாற் றீண்டாப் பொருள்" எனவும் "கடுஞ்சினத்த கொல்களிறுங் கதழ்பரிய கலிமாவு—நெடுங்கொடிய நிமிர்தேரு நெஞ்சுடைய புகன்மறவருமென—நான்குடன் மாண்டதாயினும்" எனவும் இவை திணைவிராயெண்ணிப் பன்மைபற்றி அஃறிணையான் முடிந்தன. "வடுக ரருவாளர் வான்கருநாட்ர்—சுடுகாடு பேயெருமை யென்றிவையாறுங்—குறுகா ரறிவுடையார்" எனவும் "மூர்க்கனு முதலையுங் கொண்டது விடா" எனவும் இவை திணைவிராயெண்ணி இழிபுபற்றி அஃறிணையான் முடிந்தன. இருதிணைப்பெயரும் விராய்வந்து ஒருதிணைச்சொல்லான் முடிதல் வழுவாயினுந் தலைமைமுதலாயின பற்றி முடிதலான் அமைகவெனத் திணைவழு அமைத்தவாறாயிற்று. "பாணன் பறையன் றுடியன் கடம்பனென்—றிந்நான் கல்லது குடியு மில்லை" எனத் திணைவிரவாது உயர்திணையான் எண்ணி அஃறிணையான்முடிந்த இவ்வழுயாண்டு அமைக்கப்படுமோவெனின், பாணன்முதலாயினரைக் குடியென்று சுட்டியவழிக் குடிக்கேற்ற தொகைகொடுத்தல் வழுவன்மையான் அமைத்தல் யாண்டையதென்க. "தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம் மான்றேரு—மெம்மை நினையாது விட்டனரேல் விட்டகல்க—வம்மெல் லிணர்தோ யடம்புகா ளன்னங்கா—ணம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால்" எனவும் "யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித்—தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்—றேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரி

வானேற்—கானும் புள்ளுங் கைதையுமெல்லாங் கரியன்றே” எனவும் தலைமைப்பொருளையும் தலைமையில்பொருளையும் விராயெண்ணித் தலைமைப்பொருட்கு வினைகொடுப்பவே தலைமையில்பொருளும் உடன்முடிந்தனவாவதோர் முறைமைபற்றி வருவனவும் ஈண்டு ஒன்றெனமுடித்தலான் அமைத்துக்கொள்க. “தானுந்தன் புரவியுந் தோன்று நின்றனன்” எபதும் அது. (ச)

உ௯௯. உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினு
மிழிப்பினுஞ் சொன்னேக் கினுந்திணை பாலவை
வழுக்கினும் வழுவெனை வரையா ரென்ப.

இது திணைவழுவமைதியும் பால்வழுவமைதியுங் கூறுகின்றது.

இ - ள். ஒன்றனை உவந்துகூறுதற்கண்ணும் உயர்த்திக்கூறுதற்கண்ணுஞ் சிறப்பித்துக்கூறுதற்கண்ணுஞ் செறுத்துக்கூறுதற்கண்ணும் இழித்துக்கூறுதற்கண்ணும் பொருளைநோக்காது சொல்லின் இயல்பை நோக்குதற்கண்ணுஞ் சொல்லானன்றிச் சொல்லுவான் குறிப்பொடுபடுத்து வேறுவேறு உணரப்படுந் திணையும் பாலுமாகிய அவ்விரண்டும் மயங்கிவரினும் வழுவென்று கடியார் அமைத்துக்கொள்வர் ஆசிரியர். எ - று.

ஒருவனை என்யானைவந்தது போயிற்று “என்-போர்யானைவந்திகவீங்கு” எனவும் ஒருத்தியை என்பாவைவந்தது போயிற்று எனவும் ஒரெருத்தினை என்றந்தைவந்தான் போயினன் எனவும் ஒராவினை எம்மன்னைவந்தாள் போயினள் “கொடுங்கோற் கோவலர் பின்னின்றுய்த்தா—லின்னே வருகுவர் தாயர்” எனவும் முறையே உயர்திணை அஃறிணையாகியும் அஃறிணை உயர்திணையாகியும் ஒப்புமைகருதாது உவப்பின்கட் திணைமயங்கிவந்தன. “தேமலரங்கட்டிருவேபுகுதக” என ஒப்பின்றி ஆண்பால் பெண்பாலாக உவப்பின்கட் பால்மயங்கி வந்தது. கன்னிஞாழல் கன்னியெயில் எனவும் ஒரெருத்தை நம்பி எனவும் ஒருகிளியை நங்கை எனவும் அஃறிணை உயர்திணையாகி உயர்ச்சிக்கட் திணைமயங்கி வந்தன. ஒருவனையும் ஒருத்தியையும் இவர்வந்தார் போயினர் எனவும் ஒருவனையும் ஒருத்தியையும் ஒன்றனையும் நீர்வந்தீர் போயினீர் எனவும் ஒருவன்றான் ஒருத்திதான் ஒன்றுதான் யாம்வந்தேம் போயினேம் எனவும் “இரவின்வருவானைப் புல்லலுறுமென்மனனே தோழா” எனவும் “தாயாகித் தலையளிக்குந் தண்டுறை யூரகேள்” எனவும் ஒருமைப்பால் பன்மைப்பாலாகவும் பெண்பால் ஆண்பாலாகவும் ஆண்பால் பெண்பாலாகவும் உயர்ச்சிக்கட் பால்மயங்கி வந்தன. வழக்கினகத்துப் பெ

ருங்கொற்றன் பெருஞ்சாத்தன் என அடைசேர் மொழி இல்குணம் அடுத்து உயர்த்துக்கூறலும் ஈண்டே அமைத்துக்கொள்க. கண்போலச்சிறந்தானை என்கண்வந்தது எனவும் உயிர்போலச்சிறந்தானை என்னுயிர்வந்தது "ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்—போல வருமெம் முயிர்" எனவும் உயர்திணை அஃறிணையாய்ச் சிறப்பின்கட் திணைமயங்கி வந்தன. "மன்னனுயிர்த்தேமலர்தலையுலகம்" எனவும் "உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்—றப்பாலுாற் கூற்றே மருந்து" எனவும் "தம்பொரு ளென்ப தம்மக்களவர்பொரு—டந்தம் வினையான் வரும்" எனவும் வருவனவெல்லாம் ஈண்டே அமைத்துக்கொள்க. பொறியறைவந்தது போயிற்று எனவும் கெழியிலிவந்தது போயிற்று எனவும் பொய்ச்சீத்தை வந்தது போயிற்று எனவும் உயர்திணை அஃறிணையாய்ச் செறலின்கட் திணைமயங்கிவந்தன. "எனைத்துணைய ராயினு மென்னுந் தினைத்துணையுந்—தேரான் பிறனில் புகல்" எனவும் "அவர்நமக்—கன்னையுமத்தரு மல்லரோ தோழி—புல்லிய தெவனோ வன்பிலங் கடையே" எனவும் பன்மைப்பால் ஒருமைப்பாலாயும் ஆண்பால் பெண்பாலாயுஞ் செறலின்கட் பால் மயங்கிவந்தன. "ஏவவுஞ் செய்கலான் றான்றேரா னவ்வுயிர்—போஒ மளவுமோர் நோய்" எனவும் "இரவெதிர் கொள்ளா விருகாற் பசுவே" எனவும் உயர்திணை அஃறிணையாய் இழிபின்கட் திணைமயங்கி வந்தன. இழிபின்கட் பால் மயங்கிவந்தன வந்துழிக் காண்க. குடிமைநன்று ஆண்மைநன்று இளமைபோயிற்று மூப்புவந்தது அடிமைநன்று வன்மைநன்று விருந்துவந்தது குழூநன்று பெண்மைநன்று அரசுவந்தது வேந்துவந்தது வேள்வந்தது குரிசில்வந்தது அமைச்சுவந்தது புரோசுவந்தது மகவந்தது குழவிவந்தது அலிவந்தது அழிதூவந்தது குருடுதீது முடந்தீது பெருவிறல்வந்தது அருந்திறல்வந்தது எனவும் உலகம்பசித்தது உயிர்போயிற்று உடம்புநுணுகிற்று யாக்கைதீது இவற்குக் காலமாயிற்று தெய்வஞ்செய்தது வினைவிளைந்தது விதிவலிது பூதம்புடைத்தது ஞாயிறுபட்டது திங்களெழுந்தது மதிநிறைந்தது சொன்னன்று பொழுதுநன்று கனலிகடுகிற்று வெள்ளியெழுந்தது வியாழன்நன்று எனவும் முறையே பண்புடைப்பொருளையும் மக்களையுந் தெய்வத்தையும் உணர்த்திநிற்கும் உயர்திணை அஃறிணையாய்ச் சொல்லியல்புபற்றித் திணைமயங்கி வந்தன. இக்குடிமை ஆண்மை முதலியவெல்லாம் உயர்திணைப்பொருளை உணர்த்திநின்றனவேனும் அச்சொற்கள் அஃறிணைவாசகமாதலின் அவற்றிற்கேற்ப அஃறிணைமுடிபு கொள்ளுமென்பார் சொன்னோக்கினுமென்றார். உலகம் உயிர் உடம்பு என்பன ஈண்டு மக்களை உணர்த்திநின்றன. என்னை?

உயர்திணைமுடிபு கொள்ளாவென விலக்கற்படுவன அவையேயாக லானும் அன்றியும் அறஞ்செய்து துறக்கம்புக்கான் உயிர்நீத்தொரு மகன்கிடந்தான் என உயர்திணைக்கேற்ற முடிபுகோடலானுமென்க. குடிமை ஆண்மைமுதலியன இருதிணைக்கண்ணுஞ் சேறன் மாலைய, உலகம் உயிர் உடம்புமுதலியன அனனவல்லவாம்; இவை தம் முள்வேற்றுமை. அவ்வேறுபாடும் உணர்க. உலகமென்பது இடத் தையும் ஆகுபெயரான் இடத்துநிகழ்பொருளாகிய மக்கட்டொகுதி யையும் உணர்த்துமாகலான் இருதிணைக்கண்ணுஞ் சென்றதன்றோ வெனின், அற்றன்று; வடநூலுள் உலகமென்பது இருபொருட்கும் உரித்தாக ஓதப்பட்டமையான் மக்கட்டொகுதியை உணர்த்தும் வழியும் உரியபெயரேயாகலான் ஆகுபெயரன்று. அதனால் ஒரு சொல் இருபொருட்கண்ணுஞ் சென்றதெனப்படாது இருபொருட் கும் உரிமையுடைமையான் இருசொல்லெனவேபடுமென்பது. வே றுபொருள் உணர்த்தலின் வேறுசொல்லாதலே துணிவாயினும் பல பொருளொருசொல் என்புழி எழுத்தொப்புமைபற்றி ஒருசொல் லென்றார். குடிமைநல்லன் ஆண்மைநல்லன் என ஈறுதிரியாது நின்றாங்குநின்று குடிமை ஆண்மை முதலியன உயர்திணைமுடிபு கொண்டவழியும் உலகர்பசித்தார் காலன்கொண்டான் என ஈறு திரிதற்கேற்பன ஈறுதிரிந்து வாய்பாடு வேறுபட்டு உயர்திணைமுடிபு கொண்டவழியும் வழுவின்மையின் வழாநிலையாகலான் ஈண்டைக்கு எய்தாவென்க. இந்நிகரனவாய்த் திணைபால் வழுவி வருவன உள வேல் அவற்றிற்கெல்லாம் இதுவே ஓத்தாக அமைத்துக்கொள்க.(ரு)

கூ00. ஒருமை பன்மையும் பன்மை யொருமையு
மோரிடம் பிறவிடந் தழுவலு முளவே.

இது முற்கூறிய உவப்புமுதலானவற்றானன்றி வேறோராற் றாற் பால்வழுவும் இடவழுவும் அமைக்கின்றது.

இ - ள். ஒருமைச்சொற் பன்மையும் பன்மைச்சொல் ஒருமை யும் ஓரிடத்திற்கு உரியசொல் பிற இடந்தழுவிநிற்றலும் உள; அவ்விடங்கள் அறிந்து அமைத்துக்கொள்க. எ - று.

"அஃதைதந்தை அண்ணல்யானை யடுபோர்ச் சோழர்" என வும் "ஏவலிளையர் தாய்வயிறு கரிப்ப" எனவும் முறையே ஒருமைச் சொற் பன்மைதழுவியும் பன்மைச்சொல் ஒருமைதழுவியும் வந் தன. அங்ஙனம் வருதல் வழுவாயினுஞ் சோழரெல்லாரும் அஃ தைக்குத் தந்தையர்முறையராதலிற் தந்தையென்னும் ஒருமை

சோழரென்னும் பன்மையோடு தனித்தனிசென்று கூடுதலானும் ஒருவற்கு ஒருத்தி தாயாந்தன்மையான் இளையரென்னும் பன்மை தாயென்னும் ஒருமையொடு தனித்தனி சென்றுகூடுதலானும் அமைக்கவென அமைத்தவாறென்பதாம். நீர்பரந்தன பால்சுரந் தன எனவும் சோறுமாண்டது படைவந்தது கண்சிவந்தது முலை வீங்கிற்று "இருநோக் கிவளுண்க ணுள்ளது" "உள்ளியதெல்லா முடனெய்தும்" நாடெல்லாம்வாழ்ந்தது ஊரெல்லாம்வாழ்ந்தது எனவும் அஃறிணைக்கண் மயங்கிவருவனவுங் கொள்க. எல்லாமென் பது "மேனியெல்லாம் பசலையாயிற்று" என்பதுபோல எஞ்சாப் பொருட்டாயதோர் உரிச்சொல்லாய்நிற்பின் வழாநிலையாம். இனி "இரண்டனுட் கூர்ங்கோட்ட சுடர்வேல்" என்புழி இரண்டனு ளென ஒன்றைவகுத்தமையாற் கூர்ங்கோட்டதென ஒருமையாகற் பாலது கோட்ட எனப் பன்மையாய் நிற்றலும் "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி—பன்மையொடு முடியினும் வரைநிலை யின் றே—யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்" என்பதனாற் கூத்தராற்றுப்படையுட் "கலம்பெறு கண்ணுள ரொக்கற் றலைவ" என்புழித் தலைவ என்கின்ற ஒருமைச்சொல் முடிவுழி "இரும்பெய ரொக்கலொடு பதமிகப் பெறுகுவீர்" என்னும் பன்மையொடு முடிந் ததூஉம் ஈண்டு இதனானே அமைத்துக்கொள்க.

இன்னும் இதனானே நம்பிமார்வந்தார் நங்கைமார்வந்தார் அன் னைமார்வந்தார் எனவும் நங்கைமீர்கேண்மின் பாவைமீர்கேண்மின் அன்னைமீர்கேண்மின் எனவும் ஒருமைப்பெயர் அடுத்துநின்று மாரீ றும் மீரீறும் பன்மை உணர்த்தலுங் கொள்க. யானெம்மூர்புகுவன் நீநும்மூர்புகுவை என்பனபோல்வன யான்புகுவன் நீபுகுவை என ஒருமையொடு முடிந்துநிற்ப எம்மூர் நும்மூர் என்பன வேறோர்முடி பாய் நிற்றலின் வழாநிலையாம். "மன்றமராத்தபேமுதிர்கடவுள்" என் புழி மராத்தகடவுளென்பது பகுதிப்பொருள் விகுதிபெற்று நின்றது. இவைபோல்வனவன்றி முன்னர்க்காட்டிய உதாரணங்கள்போல மயங்கிவருவன உளவேல் அவற்றையும் இச்சூத்திரத்தானே அமைத்துக்கொள்க. "என்னீ ரறியாதீர் போல விவைகூறி—னின் னீர வல்ல நெடுந்தகாய்" எனவும் "இறப்பத் துணிந்தனிர் கேண் மின் மற்றறைஇய" எனவும் வருவனபோல்வன எல்லாம் மேலைச் சூத்திரத்தானே அமையும். சாத்தன்றாயிவைசெய்வலோ எனவும் "கல்வி யென்னும் வல்லான் சிறாஅ—னெல்வே னல்லனது வாயா குதலே" எனவும் "நில்லாது பெயர்ந்த பல்லோ ருள்ளு—மென்னை யே குறித்த நோக்கமொடு" எனவும் இவை தன்மை படர்க்கைதழீஇ யின. "எம்பியையீங்குப்பெற்றே னென்னெனக்கரியதென்றான்"

இது முன்னிலை படர்க்கைதழீஇயிற்று. அங்ஙனஞ் சொல்லப்படு வானோ பெருஞ்சாத்தன்றந்தை அங்ஙனஞ் சொல்லப்படுவாளோ பெருஞ்சாத்தன்றாய் எனத் தம்மைப் பிறர்போலக் கூறுங் கருத்தினாற்கூறப்படும் படர்க்கைச்சொற்கள் தன்மைதழுவுதலும் நீயோ அவனோ யாரிதுசெய்தார் யானோ அவனோ யாரிதுசெய்தார் யானோ நீயோ யாரிதுசெய்தார் அவனோ நீயோ யானோ யாரிதுசெய்தார் என விரவி ஓரிடம் பிறவிடந் தழுவுதலும் ஈண்டே அமைத்துக் கொள்க. பிறவும் அன்ன. (௬)

௩௰௧. தரல்வரல் கொடைசெல லெனவிவை நான்கு
மொருமூ விடத்திற்கு முரியவ னவற்றுட்
டரல்வர றன்மைமுன் னிலையையு மேனைய
வேனை யிடத்தையு மெய்து மென்ப.

இஃது இடம்வழுவற்கவெனக் காத்தலும் வழுவியமைகவெ னக் காத்தலும் நுதலிற்று.

இ - ள். தரலும் வரலுங் கொடையுஞ் செலவுமென்று கூறப் பட்ட இந்நான்கு வினைச்சொல்லுந் தன்மை முன்னிலை படர்க்கை யென்னும் ஒரு மூவிடத்திற்கும் உரியனவாம்; அவ்வியல்பினவற் றுட் தரலும் வரலுந் தன்மையையும் முன்னிலையையும், ஒழிந்த கொடையுஞ் செலவும் படர்க்கையினையுஞ் சென்று பொருந்து மென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

இதனுள் ஈங்கு முதலாயின தன்மைக்கண்ணும் ஆங்குமுதலா யின படர்க்கைக்கண்ணும் அடக்கப்பட்டன. வினைச்சொல் மூன்றி டத்திற்கும் உரியவாதல் வினையியலுட் பெறப்பட்டமையான் ஈண் டுக் கூறல்வேண்டாவெனின், ஆண்டுப் பாலுணர்த்தும் ஈற்றான் இடத்திற்கு உரிமைகூறினர். ஈண்டு ஈற்றானன்றித் தரல் முதலா யின முதனிலைதாமே இடங்குறித்து நிற்றலுடைமையான் இவ்வே றுபாடு ஆண்டுப் பெறப்படாமையின் ஈண்டுக்கூறினரென்பது. போ தல் புகுதலென்னுந் தொடக்கத்தனவும் இக்காலத்துச் சில இடங் களிற் பயின்றுவருமாயினும் இந்நிகரனவன்றி ஏனையவெல்லாம் மூன்றிடத்திற்கும் பொதுவாகலின் இடஞ் சுட்டும் முதனிலை இவை நான்குமென இவற்றையே வரைந்தோதினரென்க.

உ-ம். எனக்குத்தந்தான் நினக்குத்தந்தான் என்னுழைவந் தான் நின்னுழைவந்தான் எனவும் ஈங்குவந்தான் எனவும் அவற்குக்

கொடுத்தான் அவன்கட்சென்ருன் எனவும் ஆங்குச்சென்ருன் என வும் ஈற்ருனன்றித் தரப்படும்பொருளும் வரவுதொழிலுங் கொடைப் பொருளுஞ் செலவுதொழிலுந் தன்கண்ணும் முன்னின்ருன்கண் ணும் படர்க்கைக்கண்ணுஞ் சென்று உற்றன. பொதுவிதியான் மூன் றிடத்திற்கும் வரையின்றி ஆமெனவுங் கொள்ளவைத்தமையானே "பெருவிற லமரற்கு வென்றி தந்த—புன்றரு பசுங்காய் தின்றதன் றப்பிற்கு" எனவும் "தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது" என வும் சாந்துகொடு எனவும் "அரிமல ரார்ந்தக ணம்மா வரிவை—திரு முகமுந் திங்களுஞ் சேத்துத்—தெருமந்து—வையத்தும் வானத் துஞ் செல்லா தணங்கரசி—யையத்து நின்ற தரா." எனவும் தன் மைமுன்னிலைக்கு உரிய தரலும் வரலும் படர்க்கையிடத்தும் படர்க் கைக்கு உரிய கொடைச்சொல் தன்னைப் பிறனொருவன்போலக் கூறுங் கருத்துவகையாற் தன்னிடத்தும் செலவுதொழில் ஈங்கென் பதுபடநின்ற வையத்திடத்துஞ் சென்று மயங்குதலுங் கொள்க. உயர்ந்தான் தான் ஏற்பானுகச் சொல்லாது கொடுவென்ப் படர்க்கை வாய்பாட்டாற் சொல்லும்; ஆண்டுத் தன்னையே பிறன்போலக் குறி த்தானுகலிற் தன்னிடத்தேயாமென வழுவமைத்தவாருமென்பது. இனி உயர்ந்தான் தமரொருவனைக் காட்டி இவற்குக் கொடுவென் னும்; என்று உரைப்பின் ஆண்டுப் படர்க்கைச்சொற் படர்க்கைச் சொல்லோடு இயைதலான் வழுவின்மையின் அமைக்கவேண்டா வாம். அதனுன் அஃது உதாரணமன்றென்க. அற்றேற் கொடுவென் பது கொடுப்பதோர் பொருளை ஏற்றற்கு உரிய நான்கனுருபு வந்தால் அதனை முடித்தற்கு வந்த சொல்லாதலின் அவற்கு இவற்கு உவற்கு என்னுஞ் சொற்களை அவாய் அவற்றைமுடித்தே நிற்றல்வேண்டும். வேண்டவே அவற்குக்கொடு என்பதும் அவ்வியல்பிற்றன்ருவெ னின் அன்றென்க. என்னை? தன்னைப் பிறனொருவன்போலக் கூறுங் கருத்துவகையான் எனக்குக்கொடுவென்பதுபட நின்றமையின்.(எ)

௩0௨. வினைக்கிட நீரது கால மதுதா
னிறப்புநிகழ் பெதிர்பென் றிருமூ வகைத்தே.

இது வழாஅலோம்பலென மேற்கூறிப் போந்த காலமாவது இன்னதென்பதூஉம் இத்துணைத்தென்பதூஉங் கூறுகின்றது.

இ - ள். தொழினிகழ்ச்சிக்கு இடமாதற்றன்மையையுடை யது காலமென்பதாம். அக்காலந்தான் தொழிலது கழிவுபற்றிய தூஉந் தொழிறொடங்கப்பட்டு முற்றுப்பெருத நிலைமைபற்றிய

தூஉந் தொழில் பிறவாமைபற்றியதூஉம் என்று ஒருமூன்று திறத் தினை உடைத்தாம். எ - று.

வரலாறு;—பண்டுண்டான் இன்றுண்ணாநின்றான் நாளையுண் பான் எனவரும். தொழிலாவது பொருளது புடைபெயர்ச்சியாக லின் ஒருகணம் நிற்பதல்லது இரண்டுகணம் நில்லாமையின் நிகழ்ச்சி யென்பதொன்று அதற்கில்லையாயினும் உண்டல் தின்றல் வரு தலெனப் பஃறொழிற்றொகுதியை ஒருதொழிலாகக் கோடலான் உண்ணாநின்றான் தின்னாநின்றான் வாராநின்றானென நிகழ்ச்சியுமு டைத்தாகலின் அதுபற்றிவரும் நிகழ்காலமும் உளதாயிற்றென்பது. நிகழ்காலமொன்றுமே உளதென்பாரும் "இறப்புமெதிர்வும்" என இரண்டென்பாரும் "இறப்புநிகழ்பெதிர்பு" என மூன்றென்பாரும் எனப் பலபகுதியர் ஆசிரியர். அவருள் மூன்றென்பார் மதம்பற்றி மூவகைத்தே எனத் தேற்றேகாரங் கொடுத்தார். (அ)

௩௦௩. முக்கா லத்தினு மொத்தியல் பொருளைச்
செப்புவர் நிகழுங் காலத் தானே.

இது நிகழ்காலச்சொல் ஏனைக்காலங்களையும் உணர்த்துமென வழுவமைக்கின்றது.

இ - ள். மூன்றுகாலத்தினும் ஒருதன்மையவாய் நிகழும் பொருள்களின் வினையைச் சொல்லுவர் சான்றோர் நிகழ்காலச் சொல்லானே. எ - று.

நிகழ்காலச்சொல்லென்றாரேனும் இறந்தகாலத்தையும் எதிர் காலத்தையும் அகப்படுத்தி மூன்றுகாலத்திற்கும் பொதுவாய் நிற் குஞ் செய்யுமென்னும் முற்றும் எச்சமுமே கொள்க.

மலைநிற்கும் தீச்சுடும் ஞாயிறியங்கும் திங்களியங்கும் எனவும் "வெங்கதிர்க் கனலியொடு மதிவலந் திரிதரும்—தண்கடல் வரைப் பின்" எனவும் வரும். பிறவும் அன்ன. தீச்சுடுமென்றாற் பண்டும் இன்றும் மேலுஞ் சுடுமென்பதனை ஒப்பவிளக்கியவாறு காண்க. இதனானே ஏனை நிகழ்காலச்சொற்கள் ஏலாமை உணர்க. (௯)

௩௦௪. விரைவினு மிகவினு மியல்பினுந் தெளிவினு
மன்னவை யல்வழி யானுமுக் காலமு
மேற்புழி மயங்கு மென்மனார் புலவர்.

இஃது எதிர்வும் நிகழ்வும் இறப்பொடு மயங்குமெனவும் இறப் பும் எதிர்வும் நிகழ்வொடு மயங்குமெனவும் எதிர்வு இறப்பொடும்

நிகழ்வொடும் மயங்குமெனவும் இறப்பும் எதிர்வும் நிகழ்வும் ஏனைய வற்றோடுந் தம்முள் மயங்குமெனவும் வழுவமைக்கின்றது.

இ - ள். விரைவுபொருண்மையையுடைய வினைச்சொற்கண்ணும், இருவினைகள் பலவற்றுள்ளுஞ் சிறந்த இருவினைக்கண்ணவாகிய தவஞ்செய்தல் தாயைக்கோறல் முதலிய வினைச்சொல்லை நோக்கி அம்மிக்கதனது திரிபின்றிப்பயக்கும் பண்பைக்குறித்து வருஞ் சுவர்க்கம்புகுதல் நிரயம்புகுதல் முதலிய வினைமுதல்வினைச்சொற்கண்ணும், வழங்கலாற்றான் இஃது இப்பெற்றித்தென அப்பெற்றியான் ஒருதலையாக அறிந்திருந்த இயல்புபொருண்மைக்கண்ணே நிகழும் வினைச்சொற்கண்ணும், இதுநிகழின் இதுநிகழுமென நூனெறியாற் றெளியப்படுந் தெளிவுபொருண்மைக்கண்ணே நிகழும் வினைச்சொற்கண்ணும், விரைவுமுதலிய அத்தன்மையையுடைய பொருண்மையைக்குறியாது வருமிடத்தும், மூன்றுகாலங்களும் பொருந்துமிடத்து மயங்குமென்று கூறுவர் அறிந்தோர். எ - று.

மூன்றுகாலமுந் தம்முள் மயங்குமென்றாரேனும் ஏற்புழி யென்றதனானே, சோறுபாணித்தவழி உண்ணுதிருந்தானைப் போகல்வேண்டுங் குறையுடையனொருவன் இன்னும் உண்டிலையோ என்றவழித் தொழில் இறந்ததின்றேனுங் குறிப்பான் இறந்தனவாகக் கருதி உண்டேன்போந்தேன் எனவும் உண்ணுநின்றானை அவ்வாறு கூறியவழியும் இதோ உண்டேன்போந்தேன் எனவும் விரைவுபற்றி எதிர்வும் நிகழ்வும் இறப்பொடு மயங்குமெனவும், யாவன் தவஞ்செய்தான் அவன் சுவர்க்கம் புகும் யாவன் தாயைக்கொன்றான் அவன் நிரயம் புகும் எனவும் ஒருவன் தவஞ்செய்யிற் சுவர்க்கம்புகும் தாயைக்கொல்லின் நிரயம்புகும் எனவும் சுட்டி ஒருவர்பெயர்கொள்ளாது இங்ஙனம் பொதுவகையாற்கூறியவழி மிகுதிபற்றி இறப்பும் எதிர்வும் நிகழ்வொடு மயங்குமெனவும், இக்காட்டிற்போகிற் கூறைகோட்படுவனெனற்பாலது கூறைகோட்பட்டான் படுகின்றான் எனவும் எறும்பு முட்டைகொண்டுதிட்டையேறியது கண்டுழி மழைபெய்வதாமென்னுது மழைபெய்தது மழைபெய்கின்றது எனவும் முறையே இயல்புந் தெளிவும்பற்றி எதிர்வு இறப்போடும் நிகழ்வோடும் மயங்குமெனவும், இவர் பண்டு இப்பொழிலகத்து விளையாடுவர் எனவும் நாளையவன்வாளொடுவெகுண்டுவந்தான் பின் நீ என்செய்குவை எனவும் இவள் பண்டு இப்பொழிலகத்து விளையாடும் எனவும் நாளைவரும் எனவும் விரைவுமுதலிய பொருண்மைகுறியாது முறையே இறப்பும் எதிர்வும், எதிர்வும் இறப்பும், இறப்பும் நிகழ்வும், எதிர்வும் நிகழ்வும் மயங்குமெனவுங் கொள்க.

"வாராக் காலத்து நிகழுங் காலத்து—மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி—யிறந்த காலத்துக் குறிப்பொடு கிளத்தல்—விரைந்த பொருள வென்மனார் புலவர்" எனவும் "மிக்கதன் மருங்கின் வினைச்சொற் சுட்டி—யப்பண்பு குறித்த வினைமுதற் கிளவி—செய்வ தில்வழி நிகழுங் காலத்து—மெய்பெறத் தோன்றும் பொருட்டா கும்மே" எனவும் "வாராக் காலத்து வினைச்சொற் கிளவி—யிறப்பினு நிகழ்வினுஞ் சிறப்பத் தோன்று—மியற்கையுந் தெளிவுங் கிளக்குங் காலை" எனவும் "இறப்பே யெதிர்வே யாயிரு காலமுஞ்—சிறப்பத் தோன்று மயங்குமொழிக் கிளவி" எனவும் "ஏனைக் காலமு மயங்குதல் வரையார்" எனவும் வருவன ஒத்தாகலின் நீயுண்டுவருவாய் உழுதுவருவாய் என இறந்தகாலவினையெச்சம் நின்று முடிக்குஞ்சொல்லின் எதிர்காலத்தோடு மயங்கிவருதலும் ஈண்டேயமைத்துக்கொள்க. பிறவும் அன்ன.

யாவனொருவனெனப் பொதுவகையாற் கூறுது சுட்டி ஒருவர் பெயர்கொண்டவழிச் சாத்தன் தவஞ்செய்து துறக்கம்புக்கான் தவஞ்செய்யிற் துறக்கம்புகும் என ஏனைக்காலங்களாற் கூறப்படுதலிற் சுட்டி ஒருவர்பெயர்கொள்ளாதவழியே மயங்குமென்பது பெற்றும். தவஞ்செய்தான் சுவர்க்கம்புகும் தாயைக்கொன்றுன் நிரயம்புகும் என்பன போல்வன இயல்பாக தெளிவாக ஒன்றனுள் அடங்குமெனின், இயல்புந் தெளிவுந் தெய்வத்தானுக பிறிதொன்றுனுக திரிதலுமுடையவாகலானும் அவைபோல இவை திரிபிலவாகலானும் இறந்தகாலத்தாற் கூறப்படாமையானும் அவற்றுள் அடங்காவென்க. யாம் பண்டு விளையாடுங் கா இது என்றுற்போல்வனவற்றை இயல்புள் அடக்குவாரும் உளர். அவை இயல்புபற்றி மயங்காமைக்கு யாம் இயல்புபற்றிமயங்குவனவற்றிற்குக் காட்டிய உதாரணங்களே சான்றுதல் அறிக. (௧௦)

௩௦௫. அறிய லுறவுவெளிப் படுப்பது வினுவஃ
தறியாமை யைய மறிவு கொடைகொள
லேவலின் வரூஉ மிவ்விரு மூன்றனுட்
கடைநிலை நான்கு முதனிலை யனைய.

இது வழாஅலோம்பலென மேற்கூறிப்போந்த வினுவாவது இன்னதென்பதூஉம் இத்துணைத்தென்பதூஉம் அதன் வழுவமைதியும் உணர்த்துகின்றது.

இ - ள். அறியலுறவு வெளிப்படுப்பதாகிய சொல் வினுவென்பதாம். அதுதான் அறியாமையும் ஐயமும் அறிபொருளுங் கொடுத்

தலுங் கொள்ளுதலும் ஏவலுமாகிய இவற்றின்கண் வெளிப்படும். அங்ஙனம் வெளிப்படும் இவ்வறுவகை வினவுள்ளும் இறுதிக்கண் நின்ற நான்கும் முதற்கண் நின்ற இரண்டனோடு ஒக்கும். எ - று.

அறியான்வினா உயிரெத்தன்மைத்தென வினவுவது. ஒருபுடையானும் அறியப்படாத பொருள் வினவப்படாமையிற் பொதுவகையான் அறியப்பட்டுச் சிறப்புவகையான் அறியப்படாமை நோக்கி அறியான்வினாவாயிற்று. ஐயவினாக் குற்றியோமகனோ தோன்றுகின்ற உருவென வினவுவது. அறிபொருள்வினா அறியப்பட்டபொருளையே வேறு அறிவும் அறிவுறுத்தலும் முதலிய பயன் நோக்கி அவ்வாய்பாட்டின் ஒன்றான் வினவுவது. கொடுத்தற்கண்வரும் வினாச் சாத்தனுக்கு ஆடையில்லையோ என வினவுவது. கோடற்கண்வரும் வினா மணியுளவோ வயிரமுளவோ என வினவுவது. ஏவற்கண் வரும் வினாச் சாத்தா உண்டாயோ என வினவுவது. பிறவும் அன்ன. கடைநிலைநான்கும் அறியலுறவுவெளிப்படுப்பன அன்மையின் வழுவாமாயினும் வினாவாய்பாட்டான் வினவப்படுதல் நோக்கி அமைக்கப்படுதலின் வழாநிலையாகிய முதனிலையனைய என்றார். அறிபொருள்வினாவின்கண்ணே அறிவொப்புக்காண்டலும் ஐயம் அறுத்தலும் அவன் அறிவு தான் கோடலும் மெய்யவற்குக் காட்டலும் அடங்கும். இனிக் கொடைமுதலிய மூன்றனையும் இதன்கண்ணே அடக்கி வினா மூன்றென்பாரும் உளர். (௩௧)

௩௦௬. யாதெவ னென்னு மாயிரு கிளவியு
மறியாப் பொருள்வயிற் செறியத் தோன்றும்.

இது வினாச்சொற்களுட் சிலவற்றிற்குப் பொருள்பற்றி வரையறை கூறுகின்றது.

இ - ள். யாது எவனென்னும் அவ்விரண்டு சொல்லும் அறியாப்பொருளிடத்து வினவாய் யாப்புறத்தோன்றும். எ - று.

இச்சொற்குப் பொருள்யாது? இச்சொற்குப் பொருளெவன்? என வரும். ஈண்டும் அறியாப்பொருளென்றதற்கு மேலுரைத்தாங்கு உரைக்க. இக்காலத்து எவனென்பது என்னென்றும் என்னையென்றும் மருவிவழங்கும்.

**யா** யாவை யாவன் யாவள் யாவர் யார் யாண்டு யாங்கு என்னுந் தொடக்கத்தன திணையும் பாலும் இடமும் முதலாகிய சிறப்புவகையானுஞ் சிறிது அறியப்பட்ட பொருளவாகலின் அவை

அறியாப்பொருள்வயிற் செறியத்தோன்றுமையின் இவற்றையே விதந்து அறியாப்பொருள்வயிற் செறியத்தோன்றும் என்றார். இவையுந் திணையும் பாலுங் குறித்துவருதலிற் சிறப்புவகையானும் அறியப்பட்ட பொருளவன்றேவெனின், இச்சொற்குப் பொருள் யாது? இச்சொற்குப்பொருளெவன்? என்று வினயவழி, வினவுகின்றான் அஃறிணையொருமையும் பொதுமையுந் துணிந்து அவற்றின்பகுதி அறிதற்கு வினவாது பொதுவகையான் வினவுதலும், இறுப்பானும் பொதுவகையான் வினயினனென்று உணர்தலும் வழக்கினகத்து அவ்விருவரது குறிப்பொடுபடுத்து உணர்க. (கஉ)

ஙOஎ. அவற்றுள், யாதென வரூஉம் வினவின் கிளவி
யறிந்த பொருள்வயி னையந் தீர்தற்குத்
தெரிந்த கிளவி யாதலு முரித்தே.

இஃது அவற்றுள் ஒன்று அறிந்தவழியும் வருமென்கின்றது.

இ - ள். முற்கூறப்பட்ட இரண்டனுள் யாதென்னும் வினச்சொல் அறியாப்பொருள்வின ஆதலேயன்றி அறிந்தபொருட்கண் ஐயம் நீக்குதற்கு ஆராய்ந்த சொல்லாதலும் உரித்து. எ - று.

உ-ம். இம்மரங்களுட் கருங்காலி யாது? நம்மெருதைந்தனுட் கெட்ட எருது யாது? எனவரும். நமருள் யாவர்போயினார்? அவற்றுள் எவ்வெருது கெட்டது? எனப் பிறவும் அறிந்தபொருள்வயின் ஐயந்தீர்தற்குத் தெரிந்த கிளவியாய் வருதலின் அவையும் ஈண்டே அமைக்கற்பாலவெனின், அவை அறிந்தபொருள்வயின் ஐயந்தீர்தற்கல்லது யாண்டும் வாராமையின் ஈண்டு அமைக்கப்படாவென்பது.

ஙOஅ. வினய பொருளறி வுறுப்பது செப்பது
செவ்வ னிறையு மிறைபயப் பதுவு
மெனவிரு வகைத்தா மவற்றுளிறை பயப்பது
வினவெதிர் வினதலு மேவலு மறுத்தலு
முற்ற துரைத்தலு முறுவது கூறலு
நேர்தலுஞ் சொற்றொகுத் திறுத்தலு மென்னத்
தேரி னேரேழ் திறனுடைத் தென்ப.

இது வழாஅலோம்பலென மேற் கூறிப்போந்த இறையாவது இன்னதென்பதூஉம் இத்துணைத்தென்பதூஉம் அதன் வழுவமைதியுங் கூறுகின்றது.

இ - ள். வினய பொருளை அறிவுறுப்பதாகிய சொல் இறை யென்பதாம். அது செவ்வனிறையும் இறைபயப்பதுமென இரண்டு பகுதியையுடைத்தாம். அவற்றுள் இறைபயப்பது வினவெதிர் வின தலும் ஏவுதலும் மறுத்தலும் உற்றதுரைத்தலும் உறுவதுகூறலும் உடம்படுதலுஞ் சொற்றொகுத்திறுத்தலுமென ஆராயுங்காலத்து ஓரேழ்வகையினை உடைத்தாமென்று கூறுவர் அறிந்தோர். எ - று.

உ-ம். உயிர் எத்தன்மைத்து? என்று வினயவழி உணர்தற்றன் மைத்தென்றும், இச்சொற்குப்பொருள்யாது? கருவூர்க்குவழியாது? என்று வினயவழி இதுவென்றுஞ், சாத்தா உண்டியோ? என்று வினயவழி உண்ணேனென்றும் உண்பலென்றும், இங்ஙனஞ் செவ் வனே இறுப்பனவெல்லாஞ் செவ்வனிறையாம்; இனி இவ்வாறன் றிச் சாத்தா உண்டாயோ? என்று வினயவழி உண்ணேனோ? என் றும் நீயுண் என்றும் வயிறு குத்துகின்றது என்றும் வயிறுகுத்திற்று என்றும் வயிறுகுத்தும் என்றும் பசித்தேன் பொழுதாயிற்று என் றும், பயறுளவோவணிகீர்? என்று வினயவழி உழுந்தல்லதில்லை இத்துணைப்பயறல்லதில்லை என்றும் இங்ஙனம் இறுப்பனவெல்லாம் ஒருவாற்றான் உண்பல் உண்ணேன் இல்லை என்பன பயத்தலான் இறைபயப்பனவாம். உண்பல் உண்ணேன் இல்லை எனச் செவ்வனே இறாது தான் ஒன்றை வினவுவான்போன்றும் ஒருவனை ஏவுவான் போன்றும் உறாநின்றதனையும் உற்றதனையும் உறுவதனையும் உடம் படுதற்கு இயைவனவற்றையும் உரைப்பான்போன்றுஞ் சொல்லைத் தொகுப்பான் பிறிதொருபொருளைக் கூறுவான்போன்றும் இறுத்த லாற் செப்புவழுவாயினும் வினயபொருளை ஒருவாற்றான் அறிவு றுத்தலின் அமைந்தவாறு காண்க. செப்பு உத்தரமென்பதனோடு ஒருபொருட்கிளவியாகலின் வினயபொருளை அறிவுறுத்தலே செப் பிற்கு இலக்கணமாமென்க.

அற்றேற் குமரியாடிப்போந்தேன் ஒருபிடிசோறுதம்மின் என வினவின்றி நிகழ்ந்தசொல் யாண்டு அடங்குமெனிற், தேரினென் றதனுனே அறியலுறுதலை உணர்த்தாது ஒன்றனை அறிவுறுத்து நிற் றலிற் செப்பின்பாற்படும் என்க. மறுத்தலைப் பயப்பதனை மறுத்த லென்றும் நேர்தலைப் பயப்பதனை நேர்தலென்றுங் கூறினர் ஆகு பெயரான் என்பது. (கசு

கூ0கூ. செப்பினும் வினவினுஞ் சினைமுதற் கிளவிக்
கப்பொரு ளாகு முறழ்துணைப் பொருளே.

இது செப்புவழாநிலைக்கண்ணும் வினுவழாநிலைக்கண்ணும் பொருளாராய்ச்சியுள்வழி வழுவற்க என்கின்றது.

இ - ள். செப்புவழாநிலைக்கண்ணும் வினுவழாநிலைக்கண்ணுஞ் சினைக்கிளவிக்கும் முதற்கிளவிக்கும் உறழ்பொருளுந் துணைப்பொருளும் அவ்வப்பொருளுக்கு அவ்வப்பொருளேயாம். எ - று.

எனவே, சினையும் முதலுந் தம்முள் மயங்கிவருதல் வழுவென்பதாயிற்று. உறழ்பொருளாவது ஒப்புமைகூறாது மாறுபடக் கூறப்படுவது. துணைப்பொருளாவது ஒப்புமைகூறப்படுவது.

உ-ம். இவள்கண்ணின் இவள்கண்பெரிய நும்மரசனின் எம்மரசன் முறைசெய்யும் எனவும், இவள்கண்ணின் இவள்கண்பெரியவோ? எம்மரசனின் நும்மரசன் முறைசெய்யுமோ? எனவும், இவள் கண் ஒக்கும் இவள்கண் எம்மரசனை ஒக்கும் நும்மரசன் எனவும், இவள்கண் ஒக்குமோ இவள்கண்? எம்மரசனை ஒக்குமோ நும்மரசன்? எனவும் வரும். "கோலினுந் தண்ணிய தடமென் றோளே" எனவும் "துளிதலைத் தலைஇய தளிரன் னோளே" எனவும் மயங்கி வந்தன வழுவாம்பிறவெனின், அவை செய்யுள்பற்றி வரும் உவம வழுவாகலின் ஈண்டைக்கு எய்தாவென்க. இம்மகள்கண் நல்லவோ கயல் நல்லவோ? என வழக்கின்கண்ணும் மயங்கிவருமாலோவெனின், உண்மையுணர்தற்கு வினுயதன்றி ஐயவுவமைவாய்பாட்டாற் கண்ணைப் புனைந்துரைத்தல் கருத்தாகலின் அன்னவையெல்லாம் உரையென்னுஞ் செய்யுளாமென்க. தன்னினமுடித்தலென்பதனுற் பொன்னுந் துகிரும் முத்தும் மணியுமென எண்ணுங்காலும் இனமாய பொருளே எண்ணப்படுமென்பது கொள்க. (கரு)

கசo. இல்ல தல்ல தில்லதனு னில்லெனி
னப்பொரு ளல்லாப் பிறிதுபொருள் கூறியு
மப்பொருள் கூறி யகற்றி னப்பொருளினைச்
சுட்டியு மாற்றுவர் சொற்சுருங் குதற்கே.

இது சொற்சுருக்குத்திறுத்தலுமென முற்கூறப்பட்ட செப்பிலக்கணங் கூறுகின்றது.

இ - ள். தன்னுழை இல்லாத பொருளையல்லது இல்லையென்னும் வாய்பாட்டான் இல்லையெனல் உறுவராயின் வினுயபொருள் தன்னையே கூறாது அப்பொருளல்லாத பிறிதுபொருளைக் கூறியும், பிறிதுபொருளைக் கூறாது அப்பொருள் தன்னையே கூறி இல்லையெ

னல் உறுவராயின் அப்பொருளைச் சுட்டியும், இல்லையென்றுகூறி மறுப்பர் வினயதன் புறத்துச் சொற்பல்காமற்பொருட்டு. எ - று.

உ-ம். பயறுளவோ வணிகீர்? என்று வினயவழி உழுந்தல்ல தில்லை கொள்ளல்லதில்லை எனவும் இப்பயறல்லதில்லை இவையல்ல தில்லை எனவும் தன்னுழை இல்லதனையல்லது இல்லென்னும் வாய் பாட்டான் இல்லையென்பான் பிறிதுபொருள்கூறியுஞ் சுட்டிக்கூறி யும் மறுத்தவாறு காண்க.

தன்னினமுடித்தலென்பதனுற் பசும்பயறல்லதில்லை பெரும்ப யறல்லதில்லை எனக் கிளந்துகூறுதலுங் கொள்க. இவையல்லதில்லை யென்புழி முன்னர்க்கிடந்த பயறு காட்டி இவையென்ருகலின் அது பொருளொடுபுணராச் சுட்டுப்பெயராயினும் பொருள்வேறுப டாது இப்பயறெனப் பொருளோடு புணர்ந்த சுட்டுப்பெயரேயா மெனக் கொள்க. அல்லதில்லதனுனில்லெனின் அப்பொருள்பற்றி ஓதினுராகலின் அல்லதில்லெனும் வாய்பாடேயன்றி உழுந்தன்றி யில்லை கொள்ளன்றியில்லை என்பனபோல அப்பொருள்படுவன வெல்லாங்கொள்க.

அப்பொருளல்லாப் பிறிதுபொருள்கூறியுமெனப் பொதுப்ப டக் கூறினுரேனும் பயற்ருன் முடிக்குங் குறையும் உழுந்தான் முடி தலிற் பயறுளவோ என்று வினயவழி உழுந்தல்லதில்லை கொள் ளல்லதில்லை என அதற்கு இனமாகிய பிறிதுபொருளைக் கூறி இல் லென்பதே இயைபுடைத்தெனக் கொள்க. அன்றியும் பாம்புணிக்க ருங்கல்லும் பயறும் விற்பாெனுருவனுழைச்சென்று பயறுளவோ என்றவழிப் பாம்புணிக்கருங்கல்லல்லதில்லை என்ருற்படும் இழுக் கின்மையின் இனப்பொருள்கூருது பாம்புணிக்கருங்கல்லல்லதில் லை எனப் பிறிதுபொருள்கூறினும் இழுக்கின்றெனலுமொன்று. பயறுளவோ என்று வினயவழிப் பயறில்லையென்றல் செவ்வனி றையாகலின் வழுவின்மையான் அங்ஙனம் இருது பிறிதுபொருள் கூறியுஞ் சுட்டிக்கூறியும் இறுத்தலல்லது இல்லென்னும் வாசகத் தாற் சொற்ருெருக்கத்திறுப்பான் இறுத்தலே என்று உணர்க. இவ் வாறு சொற்ருெருக்கத்திறுத்தல் ஆசிரியர் தொல்காப்பியனுர்க்குங் கருத்தென்பது சேனுவரையருரையான் உணர்க. (கசு)

நகக. எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.

இது முற்கூறிப்போந்த மரபாவது இத்தன்மைத்தென்று அதன் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். யாதொருபொருளை யாதொருசொல்லான் யாதொரு நெறியாற் கல்வியால் நிறைந்த தொல்லாசிரியர் ஐம்பெருங்காப்பியம் எண்பெருந்தொகை பத்துப்பாட்டுப் பதினெண்கீழ்க்கணக்கு முதலிய இலக்கியங்களுள்ளும் விரிந்த இலக்கணநூலுள்ளும் வழக்கத்துங் கூறினர் அப்பொருளை அச்சொல்லான் அந்நெறியாற் கூறுதல் முற்கூறிப்போந்த மரபிற்கு இலக்கணமாம். எ - று.

எனவே, தனிமொழி சமயவாற்றலாற் பொருள் உணர்த்துமென்றதனை வலியுறுத்திற்றென்பதூஉமாயிற்று. உதாரணம் முன்னர்க்காட்டினும். (கஎ)

ருகஉ. பொருண்முத லாறு மடைசேர் மொழியின
முள்ளதற் குரித்தில் லதற்கு மொரோவழி.

இது விசேடிக்குஞ்சொல் இனமுள்ளதற்குக் கொடுத்தல் அதுவதன் பொதுமையினீக்கி விசேடித்தலின் மரபாமாகலான் உரித்தென்றும், இனமில்லதற்குக் கொடுத்தல் அதுவதன் பொதுமையினீக்கி விசேடித்தலின்றாயினுஞ் செய்யுட்கண் அணியாயும் வழக்கின்கட் பட்டாங்குபடவும் நிற்றலிற் சிறுபான்மை உரித்தென்றும் மரபுவழாநிலையும் மரபுவழுவமைதியுங் கூறுகின்றது.

இ - ள். பொருள் முதலாகிய ஆறனையும் அடையாக அடுத்து வருஞ் சொல் இனப்பொருளைச் சுட்டி அவற்றினின்றும் விசேடிக்கப்படும் பொருட்கு உரித்தாம், அங்ஙனம் விசேடிக்கப்படாத பொருட்கும் ஓரோவிடத்து உரித்தாம் இருவகை வழக்கின் கண்ணும். எ - று.

உ-ம். "பொருட்பெண்டிர்பொய்ம்மைமுயக்கம்" "கான்யாற்றடைகரை" "முந்நாட் பிறையின் முனியாது வளர்ந்தது" "கலவமாமயிலெருத்திற் கடிமல ரவிழ்ந்தன காயா" "சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்" "ஆடுபாம் பெனப்புடை யகன்ற வல்குன்மேல்" எனவும் நெய்க்குடம் குளநெல் கார்த்திகைவிளக்கு பூந்தோடு கருங்குவளை குறுங்கூலி எனவும் "பொற்கோட் டிமயமும் பொதியிலும் போன்றே" "வடவேங்கடந் தென்குமரி" "வேனிற் கோங்கின் பூம்பொகுட் டன்ன" "சிறகர் வண்டு செவ்வழி பாட" "செஞ்ஞாயிற்றுணிலவு வேண்டினும் வெண்டிங்களுள்வெயில் வேண்டினும்" கோட்சுறா எனவும் உப்பளம் ஊர்மன்று சிறுகாலை காலி

மாடு செம்போத்து தோய்தயிர் எனவும் செய்யுட்கண்ணும் வழக்கின்கண்ணும் முறையே பொருண் முதல் ஆறும் அடைசேர்மொழி இனமுள்ளதற்கும் ஒரோவழி இனமில்லதற்கும் உரித்தாயவாறு காண்க. பிறவும் அன்ன. (கஅ)

௩கக. இயற்கைப் பொருளை யிற்றெனக் கிளத்தலுஞ்
செயற்கைப் பொருளை யாக்கமொடு கூறலு
மாக்கங் காரண முதற்றே யாகலு
மாக்கங் காரண மின்றியும் வழக்கிடைப்
போக்கின் றுதலும் போற்றினர் கொளலே.

இஃது இயற்கைப்பொருள்மேலுஞ் செயற்கைப்பொருள்மேலுஞ் சொல் நிகழ்த்தும் மரபு கூறுகின்றது.

இ-ள். தன் இயல்பிற் திரியாதுநின்ற பொருளை அதன் இயல்பு கூறுங்கால் ஆக்கமுங் காரணமுங் கொடாது இவ்வியல்பிற்றெனச் சொல்லுதலுங், காரணத்தாற் தன்மை திரிந்த பொருளை அதன் திரிபு கூறுங்கால் ஆக்கங் கொடுத்துச் சொல்லுதலும், அங்ஙனஞ் சொல்லுங்கால் அவ்வாக்கச்சொற்றான் காரணச்சொல்லை முன்னாக உடைத்தாதலுங், காரணம் முதற்றெனப்பட்ட ஆக்கச்சொற் காரணமின்றி வரினும் வழக்கிடத்துக் குற்றமின்றாகலும் பாதுகாத்து அறிந்துகொள்க. எ-று.

இயல்பு, பொருட்குப்பின் தோன்றாது உடனிகழுந்தன்மை.

உ-ம். நிலம்வலிது நீர்தண்ணிது தீவெய்து வளியுளரும் உயிருணரும் எனவும், கடுக்கலந்த கைபிழியெண்ணெய் பெற்றமையான் மயிர் நல்லவாயின,எருப்பெய்து இளங்களை கட்டு நீர்கால் யாத்தமையாற் பைங்கூழ் நல்லவாயின, நீர்கலத்தலான் நிலம் மெலிதாயிற்று, தீச்சார்தலான் நீர் வெய்தாயிற்று எனவும் மயிர்நல்லவாயின பயிர் நல்லவாயின நிலம்மெலிதாயிற்று நீர்வெய்தாயிற்று எனவும் வரும்.

இற்றென்பது வினைக்குறிப்புவாய்பாடாயினும் உளரும் உணருமென்னுந் தெரிநிலைவினையும் இற்றென்னும் பொருள்பட நிற்றலின் இற்றெனக்கிளத்தலேயாமென்பது. சேற்றுநிலம் மிதித்து வன்னிலம் மிதித்தான் நிலம்வலிதாயிற்று என்றவழி மெலிதாயது வலிதாய் வேறுபட்டதென ஆக்கம் வேறுபாடு குறித்துநிற்றலிற் செயற்கைப்பொருள் ஆக்கமொடுவந்ததாமல்லது இயற்கைப்பொருள் ஆக்கமொடு வந்ததன்றாம். ஆக்கங் காரணமின்றியும் வழக்கிடைப் போக்

கின்றெனவே செய்யுளிடத்து ஆக்கமுங் காரணமும் பெற்றேவரும் என்பதாயிற்று. "வருமழைய வாய்க்கொள்ளும் வாடாச்சீர் வண்கைக்—கருமுருகன் சூடிய கண்ணி—திருநுதா—லின்றென் குரற்கூந்தற் பெய்தமையாற் பண்டைத்தன்—சாயல வாயின தோள்" என இது காரணமும் ஆக்கமும் பெற்றது. உம்மை எதிர்மறையாகலான் வழக்கிடத்துங் காரணங்கொடுத்துச் சொல்லுதலே வலியுடைத்தென்பது. "அரியகானஞ் சென்றோர்க்—கெளியவாகிய தடமென்றோளே" எனவும் "நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு—நல்லவாஞ் செல்வஞ் செயற்கு" எனவும் செயற்கைப்பொருள் செய்யுளிடத்துக் காரணமின்றியுங் "தெரிகணை யெஃகந் திறந்தவா யெல்லாங்—குருதி படிந்துண்ட காக—முருவிழந்து—குக்கிற் புறத்த சிரல்வாய செங்கண்மா—றப்பியா ரட்ட களத்து" என ஆக்கமின்றிக் காரணம் அடுத்தும் மயிர்நல்ல பயிர்நல்ல என ஆக்கமுங் காரணமும் இன்றியும் வந்தனவாலெனின், முறையே களவுகாலத்தரியன கற்புக்காலத்து எளியவாயின என்பது கருத்தாகலின் அக்காலங் காரணமென்பது பெறப்படுதலானும் ஊழானென்பது அதிகாரத்தாற் பெறப்படுதலானுங் காரணமின்றி வந்ததெனப்படாதெனவுங் "குக்கிற்புறத்தசிரல்வாய" என்புழி ஆக்கம் விகாரத்தாற் றொக்குநின்றதாகலின் ஆக்கமின்றி வந்ததெனப்படாதெனவும் மயிர்நல்ல பயிர்நல்ல என்புழி அந்நன்மை பொருட்குப்பின் தோன்றுது உடன்றோன்றிற்றேல் இயற்கையாம் அவ்வாறன்றி முன் தீயவாய்ப் பின் நல்லவாயினவழி அத்தீமை காணுதான் மயிர்நல்ல பயிர்நல்ல எனினும் இழுக்கின்றாகலான் ஆக்கமுங் காரணமுமின்றி வந்ததெனப்படாதெனவும் மறுக்க. இவ்வாறு செயற்கைப்பொருள்மேற் சொல் நிகழ்த்துதலே மரபென்பது ஆசிரியர் தொல்காப்பியனார்க்குங் கருத்தாதல் எடுத்தோத்தானுஞ் சேனாவரையரை உள்ளிட்ட உரையாசிரியருரையானும் உணர்க. அவ்வாறு உணராதார் "காரண முதலாவாக்கம் பெற்றுங்—காரண மின்றி யாக்கம் பெற்று—மாக்க மின்றிக் காரண மடுத்து—மிருமையு மின்றியு மியலுஞ் செயும்பொருள்" எனத் தாம் வேண்டியவாறே கூறுப. (கக)

௩கச. அடைசினை முதன்முறை யடைதலு மீரடை
முதலோ டாதலும் வழக்கிய லீரடை
சினையொடு செறிதலு மயங்கலுஞ் செயுட்கே.

இஃது அடையுஞ் சினையும் முதலுந் தம்முட் தொடரும்வழிப் படுவதோர் மரபுகூறுகின்றது.

இ - ள். பண்புச்சொல்லுஞ் சினைச்சொல்லும் முதற்சொல்லும் இங்ஙனங் கூறப்பட்ட முறையே தொடர்தலும் இரண்டு பண்புச்சொல் முதற்சொல்லோடு தொடர்தலும் வழக்கினிடத்து மரபாம். இரண்டு பண்புச்சொற் சினைச்சொல்லோடு தொடர்தலும் பிறவாறு மயங்கித்தொடர்தலுஞ் செய்யுளிடத்து மரபாம். எ - று.

**வ**ரலாறு;—செங்காலுரை நெட்டிலைத்தெங்கு பெருந்தலைச் சாத்தன் எனவும் சிறுகருகாக்கை இளம்பெருங்கூத்தன் எனவும் "சிறுபைந் தூவியிற் செயிரறச் செய்த" "கருநெடுங் கண்டரு காமநோயே"எனவும்"கவிசெந் தாழைக் குவிபுறத் திருந்த—செவிசெஞ் சேவலும் பொருவலும் வெருவா—வாய்வன் காக்கையுங் கூகையுங் கூடி" எனவும் "பெருந்தோட் சிறுநுசுப்பிற் பேரமர்க்கட் பேதை" எனவும் வரும். பிறவும் அன்ன. (உ0)

௬௧௫. இனைத்தென் றறிபொரு ளுலகி னிலாப்பொருள்
விளைப்படு தொகுதிக் கண்ணும் பொருண்முத
லவற்றொடு படுத்தற் கண்ணு முறையே
முற்று மெச்சமு மாயி ரும்மையுந்
தெற்றெனப் பெறுதல் செவ்வி தென்ப.

இது வரையறையுடைய பொருள்மேலும் உலகத்தில்லாத பொருள்மேலுஞ் சொல் நிகழ்த்துழிப் படுவதோர் மரபுகூறுகின்றது.

இ - ள். கேட்போரான் இத்துணையென்று அறியப்பட்ட பொருள்முதலிய அறுவகைப்பொருள்களும் உலகத்தில்லாத பொருள்களும் முடிக்குஞ்சொல்லோடு படுந் தொகுதிப்பெயர்க்கண்ணும், பொருளும் இடமுங் காலமும் முதலியவற்றோடு படுத்திக் கூறுதற் கண்ணும் முறையே முற்றும் எச்சமுமாகிய அவ்விரண்டு உம்மையுந் தெளியப்பெறுதல் மரபென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

**த**மிழ்நாட்டுமூவேந்தரும்வந்தார் உலகமூன்றுமொருங்குணர்ந்தான் காலமூன்றுங்கண்டான் கண்ணிரண்டுஞ்சிவந்தான் சுவையாறுமுடைத்திவ்வடிசில் கதியைந்துமுடைத்திக்குதிரை எனவும் "உறற்பால நீக்க லுறுவர்க்கு மாகா" பவளக்கோட்டுநீலயானை சாதவாகனன்கோயிலுள்ளுமில்லை குருடுகொண்டல்பகலுமில்லை எனவும் முறையே இனைத்தென்றறிபொருள் முற்றும்மையும் உலகினிலாப் பொருள் எச்சவும்மையும் பெற்றவாறு காண்க. பிறவும் அன்ன.

இனைத்தென்றறிபொருளெனவே முன்னறியப்படாக்காற் தமிழ்நாட்டிற்கு வேந்தர்மூவர் எனவும் பொருண்முதலவற்றோடு படுத்தற்கண்ணெனவே அவற்றொடுபடுத்தாதவழிப் பவளக்கோட்டு நீலயானையில்லை எனவும் உம்மைபெறாதும் வருமென்பதாம். "நான் மறை முதல்வர் வந்தார்" ஐந்தலைநாகமுடன்றது என்புழி இனைத் தென்றறிபொருளாயினும் வினைப்படுதொகுதியன்மையின் உம்மை பெறாவாயின. அஃதேற் "பன்னிரு கையும் பாற்பட வியற்றி" என் புழியுந் தொகுதிப்பெயர் வினையோடு தொடராது கையென்பத னோடு ஒட்டிநிற்றலின் வினைப்படுதொகுதியன்றாகலான் உம்மை வேண்டாபிறவெனின், அங்ஙனம் ஒட்டிநின்றதாயினும் நான்மறை முதல்வர் ஐந்தலைநாகமென்பன போலாது இருசொல்லும் ஒருபொ ருள்மேல் வருதலிற் கையென்பதனோடு ஒட்டியியைந்த இயற்றி யென்னும்வினை தொகுதிப்பெயரோடும் இயைந்ததாம், அதனான் அது வினைப்படுதொகுதியாமாகலின் உம்மைவேண்டுமென்க. அற் றேற் கண்ணிரண்டுங்குருடு எருதிரண்டும்மூரி எனப் பெயர்கொண்ட வழி உம்மைபெறுமாறென்னையெனின், பெயராக வினையாக முடி க்குஞ்சொல்லொடு படுதலே ஈண்டு வினைப்படுதலாகலின் அவையும் வினைப்படுதொகுதியாமென்க. "இருதோ டோழர்பற்ற" எனவும் "ஒண்குழை யொன்றொல்கி யெருத்தலைப்ப" எனவும் உம்மையின் றிவந்தன உம்மை செய்யுள்விகாரத்தாற் தொக்குநின்றன எனப் படுமென்பதாம். (உக)

௩௧௧. படர்க்கைமுப் பெயரோ டணையிற் சுட்டுப்
பெயர்பின் வரும்வினை யெனிற்பெயர்க் கெங்கு
மருவும் வழக்கிடைச் செய்யுட் கேற்புழி.

இஃது ஒருபொருளுணர்த்தும் இருபெயரிடத்து வழுவற்கவெ னவும் வழுவியமைகவெனவுங் காக்கின்றது.

இ - ள். படர்க்கையிடத்தவாகிய உயர்திணைப்பெயரும் அஃ றிணைப்பெயரும் விரவுப்பெயருமாகிய மூன்றுபெயரோடுஞ் சுட்டுப் பெயர் தொடர்ந்துவருமாயின், அங்ஙனம் வருமிடத்து ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் பிறிதுவினைகொண்டு முடியுமாயிற், சுட்டுப்பெயர் அம்மூவகைப்பெயர்க்கும் பின்னாகவரும்; அவ்வாறு முடியாது பெயர்கொண்டு முடியுமாயின், அம்முடிபிற்கு முன்னும் பின்னும் வரும்; வழக்கிடத்து: செய்யுளிடத்து இவ்வரையறை யின்றி முன்னும் பின்னும் வரும். எ - று.

ஏற்புழிக் கோடலான் அம்மூவகைப் பெயர்களின் பின்னிற் றற்கு உரிய அகரச்சுட்டே கொள்க.

உ-ம். நம்பிவந்தான் அவற்குச்சோறுகொடுக்க. நங்கைவந் தாள் அவட்குப்பூக்கொடுக்க எனவும் எருதுவந்தது அதற்குப்புல்லி டுக குதிரைவந்தது அதற்குமுதிரைகொடுக்க எனவும் சாத்தன்வந் தான் அவற்குச்சோறுகொடுக்க சாத்திவந்தாள் அவட்குப்பூக்கொ டுக்க முடவன்வந்தான் அவற்குச்சோறுகொடுக்க முடத்திவந்தாள் அவட்குப்பூக்கொடுக்க எனவும் நம்பி அவன் அவன் நம்பி நங்கை அவள் அவள் நங்கை எனவும் எருதுஅது அது எருது குதிரை அது அதுகுதிரை எனவும் சாத்தன் அவன் சாத்தன் அது அவன்சாத்தன் அதுசாத்தன் சாத்தி அவள் சாத்தி அது அவள்சாத்தி அதுசாத்தி என வும் முறையேகாண்க. அவன்வந்தான் நம்பிக்குச்சோறுகொடுக்கவெ னின், அவனும் நம்பியும்வேறாய் அவன்வருந்துணையும் நம்பி சோறு பெறாதிருந்தானாவான்செல்லுமாகலின் அங்ஙனங்கூறற்க என மரபு வழுவற்க என்றவாறாமென்பது. "அவனணங்கு நோய்செய்தா னாயி ழாய்வேலன்—விறன்மிகுதார்ச் சேந்தன்பேர் வாழ்த்தி—முகன மர்ந்—தன்னை யலர்கடப்பந் தாரணியி னென்னைகொல்—பின்னைய தன்கண் விளைவு" எனச் செய்யுட்கட் சுட்டுப்பெயர் முன்வந்தது. பின்வருதல் வந்துழிக்காண்க. சேந்தன் இயற்பெயர். செய்யுளாக லின் அமைகவென வழுவமைத்தவாறாமென்பது. பெயர்கொண்டு முடிவுழி வழுவின்மையின் அதற்கு வழுவமைத்தலின்று. பெயர்க்கு எங்கும் வருமென வழு வற்கவென்றவாறாமென்பது.

இனிச், சாத்தன்கையெழுதுமாறுவல்லன் அதனாற்றந்தையு வக்கும், சாத்திசாந்தரைக்குமாறுவல்லள் அதனாற்கொண்டானுவக் கும் எனச் சுட்டு முதலாகிய காரணக்கிளவியுஞ்; சாத்தன்வந்தான் அஃதரசர்க்குத்துப்பாயிற்று, கிழவன்பிரிந்தான் அதனைக் கிழத்தியு ணர்ந்திலள் எனக் காரணமின்றித் தொடர்மொழிப்பொருளைச் சுட் டிவருஞ் சுட்டுப்பெயருந் தன்னினமுடித்தலாற் சுட்டுப்பெயர் இயற் கையிற் செறியத்தோன்றுதல் கொள்க. சுட்டுமுதலாகிய காரணக் கிளவி உருபன்று, உருபு ஏற்ற சுட்டுப்பெயரோடு ஒருதன்மைத் தாகிய இடைச்சொல்; என்னை? அது பிளவுபடாது ஒன்றுபட்டு இசைத்தலின். (உஉ)

நகஎ. திணைநிலஞ் சாதி குடியே யுடைமை
தவந்தொழில் கல்வி சினைகுணஞ் சிறப்போ
டியற்பெய ரேற்றிடிற் பின்வர லியல்பே.

இஃது ஒருபொருளுணர்த்தும் இருபெயர் வழுவற்கவெனக் காக்கின்றது.

இ - ள். திணைப்பெயர் முதலிய பெயர்வகை பதினொன்றுடனே இயற்பெயர் பொருந்திவருமாயின் அஃது ஏனைப்பெயர்களுக்குப் பின்னே வருதல் மரபு. எ - று.

ஈண்டுச் சிறப்பென்றது மன்னர் முதலாயினாராற் பெறும் வரிசை.

வரலாறு;—குன்றவன்குறவன் அருவாளனழகன் பார்ப்பான் பாராயணன் சேரமான்சேரலாதான் ஊர்கிழானோணன் முனிவனகத்தியன் நாடகிநம்பி தெய்வப்புலவன்றிருவள்ளுவன் குருடன் கொற்றன் மெய்யன்மேற்றிசைநின்றான் ஏனாதிநல்லுதடன் என வரும். பிறவும் அன்ன. இங்ஙனம் வருதல் ஏற்புழிக்கோடலான் ஒன்றனை ஒன்று கொள்ளாது இரண்டும் வந்தான் சென்றான் என்றாற்போல வினைக்கு ஒருங்கு இயலுங்காலத்தெனக்கொள்க. திருவிரவாசிரியன்; மாந்தக்கொங்கேனாதி என இயற்பெயர்முன் வந்தனவாலெனின் அவை தொகைச்சொல்லாதலான் அவற்றின்கண்ணதன்று இவ்வாராய்ச்சியென்க. ஆண்டு இயற்பெயர் முன்னிற்றல் பண்புத்தொகை ஆராய்ச்சிக்கட்பெறுதும். (உகூ)

ங்கஅ. ஒருபொருள் குறித்த வேறுபெயர்க் கிளவி
தொழில்வேறு கிளப்பி னொன்றிட னிலவே.

இஃது ஒருபொருள் உணர்த்தும் பலபெயரிடத்து மரபுவழுவற்க எனக் காக்கின்றது.

இ - ள். ஒருபொருளைக்குறித்து வந்த பலபெயர்ச்சொற்கள் ஒருதொழிலே முடிபாகக் கூறாது பெயர்தோறும் வேறாகிய தொழில்களைக் கொடுத்து முடிப்பின் ஒருபொருளவாய் ஒன்றுதலில. எ - று.

ஆசிரியன் பேரூர்கிழான் செயிற்றியன் இளங்கண்ணன் சாத்தன்வந்தான் என்னாது ஆசிரியன்வந்தான் பேரூர்கிழானுண்டான் செயிற்றியன்சென்றானென வேறுவேறு முடிக்குஞ்சொற் கொடுப்பின் வந்தானும் உண்டானுஞ் சென்றானும் ஒருவனாகாது வேறாய்த் தோன்றியவாறு காண்க. "எந்தைவருகவெம் பெருமான்வருக—மைந்தன்வருக மதலைவருக" எனவும் "மின்றோய் வரைகொன்ற வேலோன் புகுதக—வின்றேன் கமழ்தா ரியக்கன் புகுதக—வென்றோன் புகுதக வீரன் புகுதக—வென்றே நகர மெதிர்கொண் டது

வே" எனவும் வரும் இங்ஙிகரனவெல்லாங் காதல் முதலாயின பற்றி ஒருதொழில் பலகால் வந்ததல்லது வேற்றுத்தொழிலன்மையான் ஒருதொழில்கிளத்தலேயாம் என்பது. (உச)

ருகக. வேறுவினைப் பல்பொரு டழீஇய பொதுச்சொலும்
வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்.

இதுவும் ஓர் மரபுவழுவற்க எனக் காக்கின்றது; வேறுவினைப் பொதுச்சொற்களையும் வேறுவினைப்பொருள்களைப் பொதுச்சொல் லாற் கூறாது பிரித்து எண்ணும் இடத்தும் ஒருசார்க்கு உரிய வினை யாற் சொல்லினும் எண்ணினும் வழுவாமாகலின் இவை பொதுச் சொல்லாற் சொல்லவும் எண்ணவும்படும் என்றலின்.

இ - ள். வேறுபட்ட வினையையுடைய பலபொருள்களையும் ஒருங்கு தழுவிநிற்கும் பொதுச்சொற்களும், வேறுபட்ட வினையை யுடைய பொருள்களைப் பொதுச்சொல்லாற் கூறாது பிரித்து எண் ணுமிடத்தும், அவற்றுள் யாதானும் ஒன்றற்கு உரிய வினையாற் கூறப்படாது, அவற்றையெல்லாம் உள்ளடக்கிநிற்கும் பொதுவினை யாற் கூறப்படும். எ - று.

அடிசிலென்பது உண்பன தின்பன நக்குவன பருகுவனவற் றிற்கும் அணியென்பது கட்டுவன கவிப்பன செறிப்பன பூண்பன வற்றிற்கும் இயமென்பது கொட்டுவன ஊதுவன எழுப்புவனவற்றிற் கும் படையென்பது எய்வன எறிவன வெட்டுவன குத்துவனவற் றிற்கும் பொதுவாகலின் அடிசில் அயின்றார் மிசைந்தார் கைதொட் டார் எனவும் அணி அணிந்தார் மெய்ப்படுத்தார் எனவும் இயம் இயம்பினார் படுத்தார் எனவும் படைவழங்கினார் தொட்டார் எனவும் சோறுங்கறியும் அயின்றார் எனவும் யாழுங்குழலும் இயம்பினார் எனவும் பொதுவினையாற் கூறப்பட்டவாறு காண்க. அடிசிறின்றார் பருகினார் எனவும் அணி கவித்தார் பூண்டார் எனவும் இயங் கொட் டினார் ஊதினார் எனவும் படை எறிந்தார் எய்தார் எனவும் சோறுங் கறியுந் தின்றார் எனவும் யாழுங்குழலும் ஊதினார் எனவும் ஒரு சார்க்கு உரிய வினையாற் கூறின் மரபுவழுவாமென்பது. அஃதேல் "ஊன்றுவை கறிசோ றுண்டுவருந்துந் தொழிலல்லது" என்புழி உண்டென்பது ஒன்றற்கே உரிய வினையாகலின் வழுவாம்பிறவெ னின், உண்டலென்பது உண்பன தின்பன பிரித்துக்கூறும்வழிச் சிறப்புவினையாம், பசிப்பிணிதீர நுகரப்படும்பொருளெல்லாம் உண வெனப்படுமாகலாற் பொதுவினையுமாம், அதனான் அது வழுவாகா தென்க. இன்னும் "உண்டற் குரிய வல்லாப் பொருளை—யுண்டன

போலக் கூறலு மரபே" என்னும் பொருளியற்சூத்திரத்தானும் உண்டற்றொழில் பொதுவினையுமாதல் உணர்க. கறியொழித்து ஏனையவற்றிற்கெல்லாம் உண்டற்றொழில் உரித்தாகலிற் பன்மை பற்றிக் கூறினாரெனினும் அமையும். "அறுசுவை யடிசி லணியிழை தருதலி—னுறுவயி றூர வோம்பாது தின்று" என்பது இழித்தற்கண் வருதலின் வழுவன்று. மிசைதல் அயிறல் என்பனவற்றைச் சிறப்பு வினையென்பாரும் உளர். (உ௫)

௲௨௦. வினைவேறு படூஉம் பலபொரு ளொருசொல்
பலபொரு ளொருசொற் பணிப்பர்சிறப் பெடுத்தே.

இது பலபொருளொருசொற்கண் ஆவதோர் மரபுவழுக் காக்கின்றது, குறித்தபொருள் விளங்காமைக் கூறல் மரபன்மையின் விளங்கக்கூறுக என்றலான்.

இ - ள். வினைமுதலியபற்றி அவற்றான் வேறுபடாத பலபொருளொருசொல்லை இன்னதிதுவெனச் சிறப்பான் எடுத்துக் கூறுவர் புலவர். எ - று.

எனவே, வினைமுதலியவற்றான் வேறுபடும் பலபொருளொரு சொல்லை அவற்றான் வேறுபடக் கூறுவர் என்பதூஉமாயிற்று. மா என்பது ஒருசார்விலங்கிற்கும் ஒருமரத்திற்கும் வண்டிற்கும் பொது. குருகு என்பது ஓர்பறவைக்கும் உலைமூக்கிற்கும் வளைக்கும் பொது. மாப்பூத்தது எனவும் இம்மாவயிரம் வெளிறு எனவும் மாவும் மருதும் ஓங்கின எனவும் "கவசம் புக்குநின்று மாகொணா" எனவும் முறையே ஒருபொருட்கே சிறந்த வினையானும் பெயரானும் இனத்தானும் மரமென்பதூஉஞ் சார்பாற் குதிரையென்பதூஉம் விளங்கின. ஏனையவும் அன்ன. இனி அவற்றான் வேறுபடாதன மாமரம்வீழ்ந்தது விலங்குமாவீழ்ந்தது எனவரும்.

ஒருசாதிக்கண் அணைந்த சாதி இனம். அங்ஙனமன்றி ஒருவாற்றான் இயைபுடையது சார்பு.

"கழிப்பூக் குற்றுக் கானல் வைகி" என்பனபோலச் சிலபொருளை ஒழித்துச் சிலபொருண்மேல் நிற்றல் உரையிற்கொள்க. "மாமறுத்தமலர்மார்பு" என்றவழித் திருவென்பது இடத்தான் விளங்கிற்றென்பாரும் உளர். அது மறுத்தல் என்னும் வினையான் விளங்குமென மறுக்க. (உ௬)

௲௨௧. குறித்தோன் கூற்றந் தெரித்துமொழி கிளவி.

இதுவும் ஓர் மரபுவழூக் காக்கின்றது.

இ - ள். ஒருபொருள் வேறுபடக் குறித்தோன் கூற்றுற்றல் முதலாயினவற்றான் விளங்காதாயின் அப்பொருளைத் தெரிவித்துச் சொல்லுஞ் சொல்லாகக் கூறுக. எ - று.

"கலந்தது போல வருமே யிலங்கருவி—யன்பன் மலைப் பெய்த நீர்" எனத் தெரித்துமொழியாக்கால் வழுவாமாகலின் "அரி தாரச் சாந்தங் கலந்தது போல—வருகெழத் தோன்றி வருமே—மு ருகுறழு—மன்பன் மலைப்பெய்த நீர்" எனத் தெரித்துமொழிக என்ப தாம். வடநூலார் இதனை நேயமென்ப. "ஊட்டியன்ன வொண்ட ளிர்ச் செயலை" என்புழி இன்னதனையென்று தெரித்துமொழியா மையின் வழுவாம்பிறவெனின், உவமையென்னும் அலங்காரமா யினன்றே இன்னதொன்றனை என்னல் வேண்டுவது. செயலையந்த ளிரினது செய்யாத நிறத்தைச் செய்ததுபோலுங் கருத்தினனுகக் கூறலிற் பிறிதோர் அலங்காரமாம். அதனுன் அது கடாவன்றென்க. "படுத்துவைத் தன்ன பாறை மருங்கி—னெடுத்து நிறுத்தன்ன விட் டருஞ் சிறுநெறி" என்றாற்போல்வனவெல்லாம் அவ்வலங்காரம் பற்றி வந்தன. "பல்லார்தோ டோய்ந்து வருதலாற் பூம்பொய்கை— நல்வய லூரநின் றார்புலால்—புல்லெருக்க—மாசின் மணிப்பூணெம் மைந்தன் மலைந்தமையாற்—காதற்றாய் நாறு மெமக்கு" எனக் குவ ளை புலால் நாறுதற்கும் எருக்கங்கண்ணி நறிதாதற்குங் காரணங் கூறுது "ஒல்லேங் குவளை புலாஅன்மகன் மார்பிற்—புல்லெருக்கங் கண்ணி நறிது" என வாளாகூறின் வழுவாம்பிறவெனின், புதல்வற் பயந்த பூங்குழன்மடந்தை பரத்தையிற் பிரிந்துவந்த கிழவனெடு புலந்து உரைக்கின்றாளாகலிற் குவளை புலாஅறுதற்கு அவன் தவறு காரணமென்பதூஉம் எருக்கங்கண்ணி நறிதாதற்கு மகிழ்நன்செய்த துனி கூர் வெப்பம் முகிழ்நகைமுகத்தாற் தணிக்கும் புதல்வன்மேல் ஒருகாலைக்கொருகாற் பெருகும் அன்பு காரணமென்பதூஉம் பெறப் படுமாதலின் வழுவாகாதென்க.

மீக்கூற்றம் என்புழிப்போலக் கூற்றுக்கூற்றமென நின்றது. ()

நஉஉ. எடுத்த மொழியினஞ் செப்பலு முரித்தே.

இதுவும் ஓர் மரபுவழூக் காக்கின்றது; ஒருதொடர் ஒருபொ ருள் உணர்த்தியமையாது வேறொருபொருளுங் குறித்துநிற்றல் முவவாயினும் அமைக்க என்றலின்.

இ - ள். இனமாகிய பலபொருட்கண் ஒன்றனைவாங்கிக் கூறியவழி அச்சொற் றன்பொருட்கினமாகிய பிறபொருளைக் குறிப்பான் உணர்த்தலும், உம்மையான் உணர்த்தாமையும் உரித்து. எ - று.

வரலாறு;—அறஞ்செய்தான் துறக்கம்புகும் இழிவறிந்துண்பான் இன்பமெய்தும் எனவரும். இவை சொல்லுவார்க்கு இனப்பொருளியல்பு உரைக்குங் குறிப்பு உள்வழி மறஞ்செய்தான் துறக்கம்புகான் கழிபேரிரையான் இன்பமெய்தான் என இனஞ்செப்புதலும் அக்குறிப்பில்வழி இனஞ்செப்பாமையுங் காண்க. எடுத்தபொருளை உணர்த்தும் மொழியை எடுத்தமொழியென்றும் இனனல்பொருளினீக்குதற்கு இனமென்றுங்கூறினார். ஆவாழ்க அந்தணர்வாழ்க என்பன இனஞ்செப்பாதன என்றும் மேலைச்சேரிக்கோழி அலைத்தது எனக் கீழைச்சேரிக்கோழி அலைப்புண்டதெனவும், குடங்கொண்டான்வீழ்ந்தான் எனக் குடம்வீழ்ந்ததெனவும் வருவன இனஞ்செப்புவனவென்றுங் கூறுவாரும் உளர். அற்றன்று. ஆவாழ்க அந்தணர்வாழ்க என்புழிச் சொல்லுவான் ஒழிந்த விலங்கும் மக்களுஞ் சாக என்னுங் கருத்தினனாயின் அவையும் இனஞ்செப்புவன அன்றோ என்றுங்; கீழைச்சேரிக்கோழி அலைப்புண்டலின்றி மேலைச்சேரிக்கோழி அலைத்தல் அமையாமையானுங் குடம்வீழ்தலின்றிக் குடங்கொண்டான் வீழ்தல் அமையாமையானுங், கீழைச்சேரிக்கோழி அலைப்புண்டலுங் குடம்வீழ்தலுஞ் சொல்லானன்றி இன்றியமையாமையாகிய பொருளாற்றலாற் பெறப்படுமாகலின் ஈண்டைக்கெய்தா, இது சொல்லாராய்ச்சியாகலானென்றும் மறுக்க. இன்னோரன்ன சொல்லாற்றலாற் பெறப்பட்டதாமென்பது. (உ௮)

௩௨௩. ஒருபெயர்ப் பொதுச்சொ லுள்பொரு ளொழியத்
தெரிபுவேறு கிளத்த றலைமையும் பன்மையு
முயர்திணை மருங்கினு மஃறிணை மருங்கினும்.

இஃது ஒரு பெயர்ப்பொதுச்சொற்கண்ணதோர் மரபுவழுக் காக்கின்றது.

இ - ள். உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் ஒருபெயராய்ப் பலபொருட்கும் பொதுவாகிய சொல்லைப் பிற உள்பொருளொழியத் தெரிந்துகொண்டு பொதுமையின் வேறாகச் சொல்லுக தலைமையானும் பன்மையானும். எ - று.

தெரிபு என்பதன் செயப்படுபொருள் தலைமையும் பன்மையும்.

பிறரும் வாழ்வாருளரேனும் பார்ப்பனச்சேரியென்றல் உயர் திணைக்கட் தலைமைபற்றிய வழக்கு. எயினர்நாடென்பது அத்தி ணைக்கட் பன்மைபற்றியவழக்கு. பிற புல்லும் மரமும் உளவே னுங் கமுகந்தோட்டமென்றல் அஃறிணைக்கட் தலைமைபற்றிய வழக்கு. ஒடுவங்காடென்றல் அத்திணைக்கட் பன்மைபற்றிய வழக்கு. பார்ப்பார் பலராயினுங் கமுகு பலவாயினும் அவைதாமே பன்மைபற்றிய வழக்காம்.

பலபொருளொருசொல்லின் நீக்குதற்குஒருபெயரென்றார்.

ஒன்றெனமுடித்தலான் அரசர்பெருந்தெரு வெண்குடைப் பெருவிறல் வயிரகடகம் ஆதீண்டுகுற்றி ஆனதர் எருத்தில் என்னும் பொதுச்சொல் அல்லனவுங் கொள்க.

பலகுடியுஞ் சேர்ந்திருப்பது சேரி. பலபொருளுந் தொக்கது தோட்டம். உள்ளபொருளெல்லாங் கூறாது ஒன்றனை எடுத்துக் கூறுதல் மரபன்றாயினும் பொதுச்சொன்மேலும் ஒன்றெனமுடித்த லால் பொதுச்சொலல்லனவற்றின்மேலுஞ் சொல் நிகழ்த்துமாறு உணர்த்தியமுகத்தான் அமைக்க என மரபுவழு அமைத்தவாறென் பது. எனவே, இயைபின்மை நீக்கிய விசேடமும் பிறிதினியைபு நீக்கிய விசேடமுமாகிய இருவகைவிசேடங்களுள் செங்குவளைமுத லியவை கருங்குவளைமுதலியவற்றோடு இயைபுநீக்குதலிற் பிறிதினி யைபுநீக்கிய விசேடமாம். அது பண்புத்தொகை உரைப்புழிப் பெ றப்படுதலின் இஃது இயைபின்மைநீக்கிய விசேடங் கூறிப்போந்த வாறுமாயிற்றென்பதூஉம் பெற்றாம். என்னை? கமுகந்தோட்ட மென்புழிப் பிற புல் மரம் முதலியவற்றோடு இயைபுநீக்காது கமு கோடு இயைபின்மைமாத்திரை நீக்கிக் கமுகினையுடைத்து இத் தோட்டமென்பதுபட நிற்றலின். பிறவும் அன்ன.

வடநூலார் இயைபின்மைநீக்குதலை அயோகவிவச்சேதமென் றும் பிறிதினியைபுநீக்குதலை அந்யோகவிவச்சேதமென்றுங் கூறுப.

௩உச. பெயரினுந் தொழிலினும் பிரிபவை யெல்லா
மயங்கல் கூடா வழக்குவழிப் பட்டன.

இஃது இருதிணையிருபாற்கும் பொதுவாகிய பெயர்க்கண்ண தோர் மரபுவழுக் காக்கின்றது.

இ - ள். உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் பெயரி னானும் வினையினானும் பொதுமையிற்பிரிந்து ஆண்மைக்கும் பெண்

மைக்கும் உரியவாய் வருவனவெல்லாம் வழுவாகா, வழக்கின்கண் அடிப்பட்டனவாகலான். எ - று.

உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் என்பது அதிகாரத்தான்வந்தது.

வரலாறு;—"தொடியோர்—கொய்குழை யரும்பிய குமரிஞாழல்" என்பது உயர்திணைக்கட் பெயரிற்பிரிந்த ஆணொழிமிகுசொல். வடுகரசர் ஆயிரமக்களுடையர் என்பது பெயரிற்பிரிந்த பெண்ணொழிமிகுசொல். இவர் இல்வாழ்க்கைப்பட்டார் என்பது தொழிலிற்பிரிந்த ஆணொழிமிகுசொல். இவர்கட்டிலேறினூர் என்பது தொழிலிற்பிரிந்த பெண்ணொழிமிகுசொல். நம்பிநூறெருமையுடையன் என்பது அஃறிணைக்கட் பெயரிற்பிரிந்த ஆணொழிமிகுசொல். நம்மரசன் ஆயிரம்யானையுடையன் என்பது பெயரிற்பிரிந்த பெண்ணொழிமிகுசொல். தொடிசெறித்தலும் மக்கட்டன்மையும் இல்வாழ்க்கைப்படுதலுங் கட்டிலேறுதலும் எருமைத்தன்மையும் யானைத்தன்மையும் ஒழிக்கப்படும் பொருட்கும் உண்மையாற் பொதுவாய் நிற்கற்பாலன ஒருபாற்கு உரியவாய்நிற்றலின் மரபுவழு அமைத்தவாறாயிற்றென்பது. பிறசொல்லாற் பிரிவன "வினைபெயரினஞ்சார்பு" என்பது முதலியவற்றான் ஓதப்படுதலானும் ஆண்டு வழுவின்மையானும் ஈண்டுத் தாமே பிரிவன கொள்க. தம்மாற் தாம் பிரியுமென்பார் பெய்ரினுந் தொழிலினுமென்றார். பெய்ர்க்கண்ணும் வினைக்கண்ணுந் தாமே பிரிவனவெனினும் அமையும். அஃறிணைக்கட் தொழிலிற்பிரிந்தன உளவேல் வந்துழிக்காண்க.

இனி யானையோடிற்றென்பது தொழிலிற்பிரிந்த பெண்ணொழிமிகுசொற்கும் யானைநடந்ததென்பது தொழிலிற்பிரிந்த ஆணொழிமிகுசொற்குங் காட்டலுமொன்று. இனி இன்றிவ்வூர்ப்பெற்றமெல்லாம் அறங்கறக்கும், உழவொழிந்தன என்பனபோல்வன காட்டுவாரும் உளர். பெற்றமென்னும் பொதுப்பெயர் கறத்தலும் உழுதலுமாகிய சிறப்புவினையாற் பொதுமைநீங்குதலின் வழுவின்மையான் ஈண்டைக்கு எய்தாவென மறுக்க. (௩0)

௩உ௫. இரட்டைக் கிளவி யிரட்டிற்பிரிந் திசையா.

இஃது உரிச்சொற்கண் மரபுவழுக் காக்கின்றது.

இ - ள். இரட்டித்துநின்று பொருளுணர்த்துஞ் சொற்கள் இரட்டித்துநிற்றலிற் பிரிந்துநில்லா. எ - று.

கொறுகொறுத்தார் மொறுமொறுத்தார் எனக் குறிப்புப்பற்றியுங் குறுகுறுத்தது கறுகறுத்தது எனப் பண்புபற்றியுஞ் சுருசுருத்தது மொடுமொடுத்தது என இசைபற்றியும் இரட்டித்துப் பிரியாது நின்றன. இவை குறுத்ததுகுறுத்தது என ஒருசொல் முழுவதும் இருமுறை வாராமையின் அடுக்காகா. இவை மக்களிரட்டையும் விலங்கிரட்டையும்போல வேற்றுமையின்றி இலையிரட்டையும் பூவிரட்டையும்போல ஒற்றுமையும் வேற்றுமையும் உடையவாம். குறுவென்னுஞ்சொல் அடுத்துக் குறுத்ததென்பது மிகுதியுணர்த்திற்றேற் குறுவென்பது யாண்டும் மிகுதியுணர்த்தல்வேண்டும் அஃதுணர்த்தாமையின் இரண்டும் ஒருசொல்லேயாயிற்று. இரட்டித்து நின்று பொருளுணர்த்துவனவற்றைப் பிரித்து வழங்கல் மரபன்மையின் மரபுவழுக் காத்தவாறாயிற்று. (கூக)

கூஉசு. பெயர்வினை யிடத்து னளரய வீற்றய
லாவோ வாகலுஞ் செய்யுளு ளுரித்தே.

இத்துணையும் வழுவற்கெனவும் வழீஇயமைக்கவெனவுங் காத்து வழுக்களைந்து சொற்களை அமைத்துக்கொண்டு இனி முற்கூறிய நால்வகை ஓத்தினுள்ளுங் கூறுதற்கு இடமின்றி எஞ்சிநின்றன கூறுவான் புகுந்தனவற்றுள் இது செய்யுளிடத்துப் பெயர்வினை பற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது.

இ-ள். பெயர்வினைகளின் ஈற்றினின்ற னகரளகரரகரயகரங்களின் அயலாகாரம் ஓகாரமாகவும் பெறுஞ் செய்யுட்கண். எ-று.

“வில்லோன் காலன கழலே” “தொடியோள் மெல்லடி மேலவுஞ் சிலம்பே” “நல்லோர் யார்கொ லளியர் தாமே” “வேய்பயில் பழுவ முன்னி யோரே” “கன்னிநல் லூர மகிழ்நர்க்கென்—னிழைநெகிழ் பருவரல் செப்பா தோயே” எனவும் “வினவிநிற்றந் தோனே” “நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே” “பாசிலை—வாடா வள்ளியங் காடிறந் தோரே” “வந்தோய் மன்ற தெண்கடற் சேர்ப்ப” எனவும் ஆகாரம் ஓகாரமாயவாறு காண்க. ஏற்புழிக்கோடலாற் சேரமான் மலையமான் உண்ணான் உறங்கான் என்னுந்தொடக்கத்தன திரியா எனவும், ஆ ஈறுதிரிதல் பெரும்பான்மையும் உயர்திணைக்கண் வந்தவழியெனவுங் கொள்க.

இனி ஒன்றெனமுடித்தலாற் “பழமுதிர் சோலை மலைகிழ வோனே” என அகரந் திரிதலுங் கொள்க.

பிறவும் வந்துழிக்காண்க. (கூஉ)

௩உஎ. எதிர்மறுத்து மொழியினும் பொருணிலை திரியா
வுருவும் பெயர்வினை யெச்சமு மென்ப.

இது வேற்றுமைச்சொற்கண்ணும் பெயரெச்ச வினையெச்ச வினைச்சொற்கண்ணும் முறையே வழுவமைத்தலும் எய்தாதது எய்துவித்தலும்பற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். விதிமுகத்தாற் கூறாது எதிர்மறுத்துக்கூறினும் பொருணிலை திரியாவாம் வேற்றுமைச்சொல்லும் பெயரெச்சவினைச்சொல்லும் வினையெச்சவினைச்சொல்லுமென்று கூறுவர் ஆசிரியர். எ-று.

உ-ம். மரத்தைக்குறையான் வேலானெறியான் எனவும் ஓதாப் பார்ப்பான் வனையாக்கோல் உண்ணுவில்லம் உண்ணுவூண் உண்ணுக்காலம் உண்ணுச்சோறு எனவும் உண்ணுதுவந்தான் உண்ணுமைக்குப்போயினுள் எனவும் வரும். உண்ணு என்பது உண்ட உண்கின்ற உண்ணுமென்னும் மூன்றற்கும் எதிர்மறையாம். உண்ணுத என்பதும் அது. உண்ணுதென்பது உண்டு உண்ணூ உண்குபு என்பனவற்றிற்கு எதிர்மறை. உண்ணுமைக்கென்பது உண்ணியர் உண்ணிய உணற்கு என்பனவற்றிற்கும் உண்ண எனச் செயற்கென்பதுபட வருஞ் செயவெனெச்சத்திற்கும் எதிர்மறையாம். உண்ணுமை உண்ணுமல் என்பனவும் அதற்கு எதிர்மறையாம். பிறவும் எதிர்மறைவாய்பாடுளவேற் கொள்க. குறையான் எறியான் என்றவழி வினைநிகழாமையின் மரமும் வேலுஞ் செயப்படுபொருளுங் கருவியுமெனப்படாவாயினும் எதிர்மறைவினையும் விதிவினையோடு ஒக்குமென்பது நூன்முடிபாகலான் ஆண்டு வந்த உருபுஞ் செயப்படுபொருள் முதலாயினவற்றின்மேல் வந்தன எனப்படுமென வழுவமைத்தவாறுஞ், செய்த செய்கின்ற செய்யும் எனவும் செய்து செய்யூ செய்பு எனவும் பெயரெச்சமும் வினையெச்சமும் விதிவாய்பாட்டான் ஓதப்பட்டமையின் ஆண்டுச் செய்யா செய்யாது என்னும் எதிர்மறைவாய்பாட்டு அடங்காமையின் அவை எச்சமாதல் பெறப்பட்டின்ருதலால் அவையும் அவ்வெச்சப்பொருண்மையிற் திரியாது பெயரும் வினையுங் கொள்ளுமென எய்தாதது எய்துவித்தவாறும் ஓர்ந்து உணர்க. உண்டிலன் உண்ணுநின்றிலன் உண்ணலன் உண்ணுன் என்னுந் தொடக்கத்து முற்றுச்சொல்லும் எதிர்மறுத்து நிற்குமாதலிற் பொருணிலைதிரியாதென அதற்கு ஓதாராயினுர் என்னையெனின், விதிவினைக்கும் எதிர்மறைவினைக்கும் பொதுவாக ஈறுபற்றி ஓதியதல்லது விதிப்பொருளவாகிய வாய்பாடுபற்றி ஓதாமையின், ஆண்டுக் கட்டுரை இல்லையென்க. (௩௩)

கூஉஅ. உருபுதொடர்ந் தடுக்கிய வேற்றுமைக் கிளவி
பொருள்சென் மருங்கி னொருசொலான் முடிதலு
முற்றியன் மொழியும் பெயரெஞ்சு கிளவியுந்
தத்தங் கிளவி யடுக்குந வரினும்
பன்முறை யானும் வினையெஞ்சு கிளவி
சொன்முறை முடியா தடுக்குந வரினு
முன்னது முடிய முடிதலு மரபே.

இது வேற்றுமைக்கண்ணும் வினைச்சொற்கண்ணும் வழுவமைதிபற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். பல உருபுந் தம்முட் தொடர்ந்து அடுக்கிவந்த வேற்றுமைச்சொற்களெல்லாம் முடிக்குஞ்சொல் ஒன்றனாற் பொருள் செல்லும் இடத்து அவ்வொன்றனன் முற்றுப்பெற்று நடத்தலும் முற்றுவினைச்சொல்லும் பெயரெச்சவினைச்சொல்லுந் தத்தஞ் சொற்கள் பலவடுக்கி வரினும் ஒருவாய்பாட்டானும் மற்றப் பலவாய்பாட்டானும் வினையெச்சவினைச்சொற்கள் அவ்வச்சொற்கள் முறையான் முடியாது அடுக்கிவரினும் முன்னின்ற சொல் முடிய ஏனையவும் பொருள் முடிந்தனவாகலும் இலக்கணமாம். எ - று.

ஈண்டு வேற்றுமைக்கிளவியென்றது வேற்றுமையுருபை இறுதியாகவுடைய சொல்லை. பொருள்சென்மருங்கினென்பதனையுஞ் சொன்முறைமுடியாதென்பதனையும் ஏனையவற்றோடுய்த்துரைக்க.

வரலாறு;—"என்னொடு நின்னொடுஞ் சூழாது" எனவும் "அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்—நின்றது மன்னவன் கோல்" எனவும் வேற்றுமைக்கிளவியும் உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன் எனவும் "நல்ல னறிவுடையன்—செவ்வியன் சான்றோர் மகன்" எனவும் தத்தங்கிளவியாற் தெரிநிலைமுற்றுங் குறிப்புமுற்றும் "நெல்லரியுமிருந்தொழுவர்" என்னும் புறத்தொகைப்பாட்டினுட் "தெண்கடற் றிரைமிசைப் பாயுந்து***தண்குரவைச் சீர்தூங்குந்து***எல்வளை மகளிர் தலைக்கை தரூஉந்து***மிழலை" எனச் செய்யுமென்னும் பெயரெச்சமும் உண்டுதின்றோடிப்பாடிவந்தான் எனவும் உண்டுபெருகூத்தின்குபுவந்தான் எனவும் ஒருவாய்பாட்டானும் பலவாய்பாட்டானும் வினையெச்சமுஞ் சொன்முறை முடியாது அடுக்கிவந்து பொருள்சென்மருங்கின் ஒருசொல்லான் முடிந்தவாறு காண்க. இவற்றுட் செய்யுமென்னும் பெயரெச்சம் அடுக்கி மிழலையென்னும் ஒருபெயர்கொண்டு முடிந்துழித் தாங்கா வினையு

ணல்லூர்க்கெழீஇய என்னும் பெயரெச்சம் இடைநிலையாய் வந்தது. சாத்தன்றாயைக்காதலன், நாய்தேவனுயிற்று என்புழித், தாயை தேவன் என்பன காதலன் ஆயிற்று என்னும் பயனிலைக்கு அடையாய் நின்றாற்போலக், கோட்டை நுனிக்கட்குறைத்தான், தினையிற்கிளியைக்கடியும் என்புழி நுனிக்கட் கிளியை என்பன குறைத்தான் கடியும் என்னும் முடிக்குஞ்சொல்லிற்கு அடையாய் நின்றன ஆகலான் அவை அடுக்கன்மையின் அவை உதாரணமாகாமை உணர்க. யானையது கோட்டை நுனிக்கட் பொருட்கு வாளாற் குறைத்தான் என்பதூஉம் அது. இனிக் "கட்கினியாள் காதலன் காதல் வகைபுனைவா—ளுட்குடையா ளூர்நா ணியல்பினு—ளுட்கி—யிடனறிந்தூடி யினிதி னுணரு—மடமொழி மாதராள் பெண்" எனவும் "காலார் கழலார் கடுஞ்சிலையார் கைக்கொண்ட—வேலார் வெருவந்த தோற்றத்தார்—காலன்—கிளர்ந்தாலும் போல்வார் கிணைப்பூசல் கேட்டே—யுளர்ந்தார் நிரைபெயர்வு முண்டு" எனவும் வருவனவற்றை ஓர் உருபு அடுக்கித் தமக்கேற்ற ஒருபெயரும் வினையும் இறுதி வர முடிந்தன என்பாரும் உளர். அவை முறையே முற்றெச்சங்கள் அடுக்கி உணரும் மடமொழிமாதராள் எனவும் உளர்ந்தார் எனவும் வரும் பயனிலைகட்கு அடையாய் நிற்றலான் அன்னவும் இன்னவென மறுக்க.

'குழையைச்சாத்தனதுகள்ளரினென்கண் என இவ்வாறு தொடர்ந்து வருவனவற்றை நீக்குதற்கு உருபுதொடர்ந்து அடுக்கிய என்றும் நீதந்த சோற்றையுங் கூறையையும் உண்டு உடுத்து இருந்தோம் எனவும் உண்டுதின்றுமழைபெய்யக்குளநிறையும் எனவும் வரும் இன்னோரன்னுழி முடிக்குஞ் சொல் ஒன்றனுன் முடியாமையினுன் அவற்றை நீக்குதற்குப் பொருள்சென்மருங்கு என்றுங் கூறினார். சொற்றொறுமியையாது முடிக்குஞ்சொல் ஒன்றனுன் முடிதல் வழுவாயினும் பொருள்சென்மருங்கின் அமையுமென்றலின் வழுவமைத்தவாறாயிற்று. (நசு)

நஉகூ. உருபு முற்றீ ரெச்சங் கொள்ளும்
பெயர்வினை யிடைப்பிற வரலுமா மேற்பன.

இது முடிவனவற்றை முடிப்பன முடிப்புழி வழுவமைதிபற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது; என்னை? ஒட்டிநிற்றற்கு உரிய அவ்விரண்டற்கும் இடையே பிறசொல் வருதல் வழுவாயினும் முடிக்குஞ்சொல்லோடு இயைபுடையன வரின் அமையுமென்றலின்.

இ - ள். உருபு ஏற்ற சொற்களும் முற்றுவினைச்சொற்களும் பெயரெச்சவினையெச்சச்சொற்களுந் தாந்தாங் கொண்டுமுடியும் பெயர்ச்சொற்கும் வினைச்சொற்கும் இடையே பிறசொற்கள் வருதலும் பொருந்தும் பொருந்துவன வரின். எ - று.

சாத்தனுண்டுவந்தான் அறத்தையரசன்விரும்பினான் வாளான் மருவாரைமாயவெட்டினான் தேவர்க்குச்செல்வம்வேண்டிச்சிறப்பெடுத்தான் மலையினின்றுருண்டுவீழ்ந்தான் சாத்தனதித்தடக்கையானை ஊர்க்கணுயர்ந்தவொளிமாடம் சாத்தாகூத்தர்க்குக்கூறைகொடு எனவும் உண்டான்வந்தசாத்தன் "பாடினான்றேவகீதம் பண்ணினுக்கரசன்" "அழுதாட்டமாகவணங்கிழையே" எனவும் செவ்வியன்சான்றோர்மகன் எனவும் கொன்றகாட்டுள்யானை கொல்கின்ற காட்டுள்யானை கொல்லுங்காட்டுள்யானை கவளங்கொள்ளாக்களித்த யானை எனவும் உழுதுசாத்தன்வந்தான் உழுதேரோடுவந்தான் உழுதோடிவந்தான் எனவும் வரும். பிறவும் அன்ன.

ஏற்பன வருமெனவே ஏலாதன வரப்பெறாதென்பதாம். ஏலாதன ஆவன ஒருதலையாக எச்சத்தோடு இயைந்துநில்லாது நின்ற சொல்லொடுந் தாமே இயைந்து பொருட்படுப்பன என்க. உண்டு விருந்தொடுவந்தான் "வல்லமெறிந்தநல்லிளங்கோசர்தந்தை—மல்லல்யானைப்பெருவழுதி" என்றவழி விருந்தொடு உண்டென வினையெச்சத்தோடு இயைதலிற் பொருள் கவர்க்கும்; வல்லம் எறிதல் நல்லிளங்கோசர்க்கும் ஏற்குமாகலின் ஆண்டுப் பொருள் கவர்க்கும். அன்ன ஏலாதனவாம். பிறவும் அன்ன. (கரு)

**ககo. இறுதி யியின்வரூஉ மெச்சப் பெயர்வினை**
**முதல்வயின் வருவன வருதலு முறையே.**

இது வழுவற்க எனக் காத்தலும் வழுவியமைக்க எனக்காத்தலுமாகிய முறைமைபற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது. என்னை? ஒன்றனது அவாய்நிலையை முடித்தற்கு வருஞ் சொல் பின்வருதல் மரபாகலின் வழுவற்க எனவும் முன்வருதல் மரபன்மையின் வழுவாயினும் முடித்தற்கு உரியன வரின் அமைவுடைய எனவுங் கூறலின்.

இ - ள். உருபு ஏற்ற சொற்கும் முற்றுச்சொற்கும் பெயரெச்ச வினையெச்சச்சொற்கும் எச்சமாய் அவற்றின் அவாய்நிலையை முடித்தற்கு வரும் பெயரும் வினையும் இறுதிக்கண்வரும். அவற்றது அவாய்நிலையை முடித்தற்கு உரியன முதற்கண்வருதலும் வழுவாகாது இலக்கணமாம். எ - று.

உ-ம். சாத்தன்வந்தான் நிலத்தைக்கடந்தான் சாத்தனொடுவந் தான் சாத்தற்குக்கொடுத்தான் சாத்தனின்வலியன் சாத்தனதாடை குன்றத்துக்கணிருந்தான் சாத்தாவா எனவும் வந்தான்வழுதி கரி யன்மால் எனவும் உண்டசாத்தன் எனவும் உண்டுவந்தான் எனவும் வந்தான்சாத்தன் கடந்தானிலத்தை வந்தான்சாத்தனொடு கொடுத் தான்சாத்தற்கு வலியன்சாத்தனின் இருந்தான்குன்றத்து வாசாத்தா எனவும் வழுதிவந்தான் மால்கரியன் எனவும் வந்தானுண்டு "பன் னெடுங் காலமும் வாழியர்—பொன்னொடுங் தேரொடுந் தானையிற் பொலிந்தே" "எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்— திண்ணிய ராகப் பெறின்" எனவும் முறையே இறுதிக்கண்ணும் முதற்கண்ணும்வந்தன.

சாத்தனதாடை குன்றத்துக்கட்கூகை உண்டசாத்தன் என இறுதிக்கண் நின்றவழி அவற்றை முடித்துநின்றாற்போல ஆடை சாத்தனது கூகைகுன்றத்துக்கண் சாத்தனுண்ட என முதற்கண் ணின்றவழி அவற்றை முடித்துநில்லாமையின் இன்னோரன்ன மு தற்கண் நிற்றற்கு ஏலாமையான் 'வருவன வருதலு முறையே' என் றார். ஆறனுருபு ஏற்ற பெயர் சாத்தனதாடையென முடிக்குஞ்சொற் பின்வந்துழிப் பெயராயும் ஆடைசாத்தனது என முடிக்குஞ்சொல் முன்வந்துழி வினைக்குறிப்பாயும் நிற்றலுடைமையும் உணர்க. (ஙசா)

ஙஙக. ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகா விறுதி யான.

இஃது உருபின்கண்ணதாகிய வழுவமைதிபற்றி நிகழ்வதோர் ஒழிபுகூறுகின்றது. என்னை? தாம் நின்று தம்பொருள் உணர்த்தற் பாலன தொக்குநிற்றல் இலக்கணமன்மையின் வழுவாயினுந் தம் பொருள் உணர்த்தும் ஆற்றலுடையன அமைவுடையன என்றலின்.

இ-ள். ஐகாரவேற்றுமைப்பொருளுங் கண்ணென் வேற்று மைப்பொருளும் அல்லாத பிறபொருண்மேல் நின்ற உருபு தொடர் மொழியிறுதிக்கட் தொக்குநில்லா. எ-று.

எனவே ஏனைய இறுதிக்கட் தொகாது இடைக்கட் தொகு மென்பதூஉம் ஐயுங்கண்ணும் ஈரிடத்துந் தொகுமென்பதூஉம் பெற் றாம். இடைக்கட் தொகும் இயல்பு மேற்கூறுப. அற்றேல் இவற் றையும் அவற்றினைச் சாரக் கூறாது ஈண்டுக் கூறியது என்னை யெனின், கடந்தானிலம் இருந்தான்குன்றத்து என்பன ஒருங்கி சைத்து உருபேற்றலும் பயனிலைகோடலும் எய்துமாறிலவாய்ப் பக்

கிசைத்தலின் அவற்றின் வேறென்பது உணர்த்துதற்கு ஈண்டுக் கூறினரென்க.

**தா**ய்மூவர் அறங்கறக்கும் வரைபாய்தல் சாத்தன்புத்தகம் என இடைக்கட் தொக்குநின்ற மூன்றாவதுமுதலிய நான்கும் முறையே மூவர்தாய் கறக்குமறம் பாய்தல்வரை புத்தகஞ்சாத்தன் என இறுதிக்கட் தொகாமையுங் கடந்தானிலம் இருந்தான்குன்றத்து என முறையே ஐயுங் கண்ணும் இறுதிக்கட் தொக்கமையுங் காண்க. பிறவும் அன்ன. (௩௭)

௩௩௨. ஒருபாற் கிளவி யேனைப்பாற் கண்ணும்
வருவன தாமே வழக்கென மொழிப.

**இ**து பால்வகையான் உளதாகிய வழுவமைதிபற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது.

**இ** - ள். ஒருபாற்கு உரிய சொல்மேல் வைத்துக்கூறிய சொல் ஒழிந்தபாற்கண்ணும் வருதல் நெறியென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

**வ**ரலாறு;—நஞ்சுண்டான்சாம் என்பது ஒருபாற்கு உரிய சொல்லாயினும் நஞ்சுண்டான்சாம் நஞ்சுண்டாள்சாம் நஞ்சுண்டார் சாவர் நஞ்சுண்டதுசாம் நஞ்சுண்டனசாம் என ஏனைப்பாற்கும் உரித்தாய்வந்தவாறு காண்க. பார்ப்பான்கள்ளுண்ணான் என்றவழிக் கள்ளுண்ணாமை சாதிபற்றிச் செல்வதொன்றாகலிற் பார்ப்பனிக்கும் பார்ப்பார்க்குமல்லது பிறசாதியார்க்கும் அஃறிணைக்குஞ் செல்லாமையான் இன்னோரன்ன ஐம்பாற்கண்ணுஞ் செல்லாது சிலபான்மேற் சேறலும் இவ்வாற்றானன்றிப் பிறவாற்றான் வருவன பிறவும் உரையிற்கொள்க. ஒருபாற்கிளவி ஏனைப்பாற்கண்ணும் வருதல் வழுவாயினும் நஞ்சுண்டல் சாதற்குக் காரணமென்பான் ஒருபால் மேல்வைத்து நஞ்சுண்டான்சாமென்றுங் கள்ளுண்ணாமை சாதிபற்றி வரையப்படுவதொன்றென்பான் பார்ப்பான் கள்ளுண்ணானென்றுங் கூறியதல்லது ஆண்டுத் தோன்றும் ஆண்மையும் ஒருமையுஞ் சாதற்குங் கள்ளுண்ணாமைக்குங் காரணமென்னுங் கருத்தினன் அல்லன். அதனாற் சொல்லுவான்கருத்தோடு கூடிய பொருளாற்றலாற் சாதலுங் கள்ளுண்ணாமையும் ஏனைப்பாற்கும் ஒத்தலின் வழுவமைதியாயிற்று. பொருளாற்றலால் ஏனைப்பாற்கண்ணுஞ் சேறலின் இவ்விலக்கணம் பொருளியலுட் கூறற்பாற்றேயாயினுஞ் சொல்லொடு பொருட்கு ஒற்றுமையுடைமையான் ஈண்டுக் கூறினரெனக் கொள்க. (௩௮)

௩௩௩. பொதுப்பெயர் வினைகளின் பொதுமை நீக்கு
மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினை குறிப்பே.

இது பொதுவாகிய பெயர்வினைகளைப் பற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். திணைபாலிடங்கட்குப் பொதுவாய்நின்ற பெயர்வினைகளுடைய பொதுமையை நீக்கி ஒன்றற்கு உரியவாக்குந் தத்தம் மரபினுன் அவற்றின்மேல்வரும் படர்க்கைப்பெயரும் படர்க்கைமுற்றுவினையுஞ் சொல்லோடுகூடிய குறிப்பும். எ - று.

உ-ம். சாத்தனொருவன் சாத்தனொன்று எனவும் சாத்தன்வந்தான் சாத்தன்வந்தது எனவும் பொதுப்பெயரின் பொதுமையைத் தத்தம் மரபினுன் மேல்வருஞ் சிறப்புப்பெயர்வினைகள் நீக்கியவாறு காண்க. முடவன் முடக்கொற்றன் தந்தை முதலிய பிறவும் அன்ன. ஆவொன்று ஆபல ஆவந்தது ஆவந்தன எனவும் பால்பகா அஃறிணைப்பெயரின் பொதுமையைத் தத்தம் மரபினுன் மேல்வருஞ் சிறப்புப்பெயர் வினைகள் நீக்கியவாறு காண்க. வாழ்கமன்னவன் வேறவன் உண்டுசாதல் இல்லையவன் காணுமவன் உண்டசாத்தன் உண்டுவந்தான் எனப் பொதுவினைகளின் பொதுமையைத் தத்தம் மரபினுன் மேல்வருஞ் சிறப்புப் பெயர்வினைகள் நீக்கியவாறு காண்க. பிறவும் அன்ன. யான்வருதலான் ஆசாரம்பெற்ருய், யான்பற்றலான் உடம்புநுணுகிற்று எனவும்; நீவருதலான் ஆசாரம்பெற்றேன், நீவருதலான் முல்லையரும்பின எனவும் சொல்லோடு கூடிய குறிப்புப் பொதுமைநீக்கியவாறு காண்க. ஒருசாத்தன், ஒருவனும் ஒருத்தியானும் பலரானும் ஒன்ருனும் பலவானுந் தன்னுழைச் சென்றவழி நீவந்தாய் நீயிர்வந்திரென்னுமன்றே? ஆண்டு அது கேட்டான் இவன் இன்னபால் கருதிக் கூறினுனென்று உணர்தலும் ஒருவர் ஒருவரைச் சார்ந்து ஒழுகலாற்றின் என்றவழிச் சொல்லுவானேடு கேட்டான் இவன் ஒருமைகுறித்தானென்று உணர்தலும் பிறவும் இன்னனவே கொள்க.

இனி இடமுங் காலமும் பற்றிப் பால் விளக்கும் வழியும் அறிந்துகொள்க. 'சிறப்புப்பெயர்வினை' என்ருரேனுஞ் சிறுபான்மை நிகழ்காலம் உணர்த்துஞ் செய்யுமென்னும் பலர்வரைகிளவியாகிய பொதுவினையுஞ் சாத்தன்யாழெழூஉம் சாத்திசாந்தரைக்கும் என முறையே உயர்திணையொருவற்கும் ஒருத்திக்கும் எற்பித்தலுங் கொள்க. இனி யான்பாணன் யான்கடுவன் நீநம்பி நீசேவல் எனப்

பாணன் கடுவன் முதலாயின யான் நீ முதலியவற்றின் பொதுமையை நீக்கி நின்றன என்பாரும் உளராலோவெனின், அவை தத்தம் மரபின் மேல்வருஞ் சிறப்புப்பெயரல்லவாகலான் இடவழுவாமென்பதற்கு அவர் இடவழுவிற்குக் காட்டிய அவன்யான் சாத்தன்யான் முதலிய உதாரணங்களே கரியாகலிற் பொருந்தாதென மறுக்க. ()

௩௩௪. பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் முட்டுங் காலை
வேற்றுமை யுருபு முவம வுருபு
மும்மையுந் தம்மிடை யொழிய வொட்டியு [டியு
மொழிவதொன் றின்றி யொன்றொடொன் றொட்
மிரண்டும் பலவு மாகவொற் றுமைப்பட் [சொல்.
டொருசொலி னியல்வன தொகைநிலைத் தொடர்ச்

இது மேற் பொதுவகையாற் கூறப்பட்ட தொகைநிலைத்தொடர்மொழியியல்பு தொகுத்துக் கூறுவதாயதோர் ஒழிபு கூறுகின்றது.

இ-ள். பெயர்ச்சொலுடனே பெயர்ச்சொலும் வினைச்சொலும் வேற்றுமைப்பொருள் முதலிய பொருள்மேற் தம்முட் புணரும் இடத்து வேற்றுமையுருபும் உவமவுருபும் உம்முமாகிய இடைச்சொற்கள் தம்மிடையே புலப்படாது தொக்குநிற்பத் தாம் ஒன்றனோடொன்று சென்று இயைந்தும் அவ்வாறு தொக்குநிற்பது பிறிதொன்றின்றித் தாமே ஒன்றனோடொன்று சென்று இயைந்தும் இரண்டும் பலவுமாகப் பிளவுபடாது ஒருசொன்னீர்மைப்பட்டு ஒருசொல் நின்று தன்னைமுடிக்குஞ் சொற்களோடு முடியுமாறு போலத் தாமுந் தம்மை முடிக்குஞ்சொற்களோடு முடியுந் தொடர்மொழிகள் மேற்கூறிய தொகைநிலைத் தொடர்மொழிகளாம். எ-று.

எனவே இரண்டும் பலவுமாகிய சொற்கள் உருபும் உம்முந் தம்மிடையே தொக்குநிற்பத் தம்மிற் தாந் தொக்கு ஒருசொல் நடையவாய் முடிவனவும் இடையே தொக்குநிற்பன பிறிதொன்றின்றித் தம்மிற் தாமே தொக்கு ஒருசொல் நடையவாய் முடிவனவுமெனத் தொகைநிலைத்தொடர்ச்சொல் இருவகைப்படுமென்பதூஉமாயிற்று. வேற்றுமையுருபு ஐ ஒடு முதலியவாக முன்னர்க் கூறப்பட்டனவாம். உவமவுருபு அன்ன ஏய்ப்ப முதலியவாகப் பின்னர் அணியியலுட் கூறப்படுவனவாம்.

**வரலாறு**;—யானைக்கோடு என்பது பெயரோடு பெயர்தொக்க இருமொழித்தொடர். நிலங்கடந்தான் என்பது பெயரோடு வினை தொக்க இருமொழித்தொடர். இவை ஒருசொல் நடையவாய் யானைக்கோடுகூரிது எனப் பயனிலைகொண்டும் யானைக்கோட்டைக் குறைத்தான் என உருபு ஏற்றும் நிலங்கடந்தான்சாத்தனெனப் பயனிலைகொண்டும் முடிந்தவாறு காண்க. உரிச்சொற்கிளவி கற்சுனைக்குவளையிதழ் துடியிடைநெடுங்கட்டுணைமுலைப்பொற்றொடி என்பன பன்மொழித்தொடர். இவை ஒருசொல் நடையவாய் உரிச்சொற்கிளவிவிரிக்குங்காலை எனவும் கற்சுனைக்குவளையிதழ்நறிது எனவும் துடியிடைநெடுங்கட்டுணைமுலைப்பொற்றொடிவந்தாள் எனவும் மேல் வந்து முடிப்பனவற்றோடு முடிந்தவாறு காண்க.

இனி உரையிற்கோடலாற் றொகையல்லாத தொடர்மொழிகளினும் ஒருசொல் நடையவாய் முடிவன உள எனக்கொள்க. அவை யானைகோடுகூரிது இரும்புபொன்னுயிற்று மன்றுபாடவிந்தது மக்களையுயர்திணையென்ப எனவரும். பிறவும் அன்ன. வேற்றுமையுருபும் உவமவுருபும் உம்மையும் வினைச்சொலீறும் பண்புச்சொலீறுந் தொகுதலிற் றொகையாயின என்பாரும் அவ்வப்பொருள்மேல் இரண்டும் பலவுமாகிய சொற் பிளவுபடாது ஒற்றுமைப் படத் தம்முள் இயைதலிற் றொகையாயின என்பாரும் என இருதிறத்தர் ஆசிரியர். செய்தான்பொருள் இருந்தான்மாடத்து என உருபுதொக்கு ஒருசொன்னீர்மைப்படாதனவுந் தொகையாவான் சேறலின் அவற்றை நீக்குதற்கும் வேழக்கரும்பு கேழற்பன்றி என்புழித் தொக்கன இல்லையெனினுந் தொகையென வேண்டப்படுமாதலான் அவற்றைத் தழுவுதற்கும் உருபுமுதலாயின தொகுதலிற் றொகையென்பார்க்கும் ஒட்டியொருசொன்னீர்மைப்படுதலுந் தொகையிலக்கணமெனல்வேண்டும். அதனன் உருபுமுதலாயின தொகுதல் எல்லாத்தொகையினுஞ் செல்லாமையான் எல்லாத்தொகைக்கண்ணுஞ் செல்லும் ஒட்டியொருசொல்லாதலே தொகையிலக்கணமாய் முடிதலின் அதனையே தொகையிலக்கணமாகக் கூறினர். ஆசிரியர் தொல்காப்பியனார்க்கும் இதுவே துணிபென்பது சேனாவரையருரையான் உணர்க. (௪0)

௩௩௫. **வேற்றுமைத் தொகையுவ மத்தொகை வினைத்தொகை**
**பண்புத் தொகையும் மைத்தொகை யன்மொழித்** [தொகை
**தொகையெனக் கிளந்தவத் தொகையா றாகும்.**

இது மேல் இருவகைப்படுமெனப்பட்ட தொகைநிலைத் தொடர்மொழிக்குப் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

இ - ள். வேற்றுமையுருபுகள் தொக அவற்றின் பொருள் தொக்க தொகையும் உவமவுருபுகள் தொக அவற்றின் பொருள் தொக்க தொகையும் வினை பிறிதோர்சொல்லோடு தொக்க தொகையும் பண்பு பிறிதோர்சொல்லோடு தொக்க தொகையும் உம்மென்னும் இடைச்சொற் தொக அதன் பொருள் தொக்க தொகையும் அன்மொழிப்பொருள் தொக்க தொகையும் என மேற்கூறிய தொகைநிலைத்தொடர்மொழி ஆறும். எ - று.

ஈண்டு வினையென்றது வினைச்சொற்கும் வினைப்பெயர்க்கும் முதனிலையாய் உண் தின் செல் கொல் என வினைமாத்திரம் உணர்த்திநிற்பனவற்றை எனவும் பண்பென்றது கரியன் செய்யன் கருமை செம்மை முதலியவற்றிற்கெல்லாம் முதனிலையாய்க் கரு செய் எனப் பண்புமாத்திரம் உணர்த்திநிற்பனவற்றையெனவுங் கொள்க. அன்மொழியாவது தொக்கசொல் அல்லாத மொழி என்பதாம். (௪௧)

௩௬௬. அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல.

இது முறையானே வேற்றுமைத்தொகையாமாறு கூறுகின்றது.

இ - ள். முற்கூறிய தொகை ஆறனுள் வேற்றுமையுருபுகள் தொக அவற்றின் பொருள் தொக்க தொகைச்சொற்கள் அவ்வுருபுகள் தொக்கனவேனுந் தொகாதுநின்று அவ்வேற்றுமையுருபுத்தொடர்ப்பொருள் உணர்த்தியாங்கு உணர்த்தும் இயல்பினையுடையனவாம். எ - று.

எனவே, சாத்தனோடுவந்தானென்னும் பொருட்கட் சாத்தன் வந்தானெனவுஞ் சாத்தற்குக்கொடுத்தானென்னும் பொருட்கட் சாத்தன்கொடுத்தானெனவும் உருபுத்தொடர்ப்பொருள் உணர்த்தும் ஆற்றல் இல்லன தொகா; அவ்வாற்றலுடையனவே தொகுவன என்றவாறாயிற்று. இரண்டாம்வேற்றுமைத்தொகை முதலாக வேற்றுமைத்தொகை அறுவகைப்படும்.

உ-ம். நிலங்கடந்தான் குழைக்காது தாய்மூவர் பொற்குடம் கருப்புவேலி கடிசூத்திரப்பொன் வரைபாய்தல் கருவூர்க்கிழக்கு சாத்தன்புத்தகம் கொற்றனுணர்வு மன்றப்பெண்ணை மாரிமா எனவரும். இவை முறையானே நிலத்தைக்கடந்தான் குழையையுடையகாது தாயொடுமூவர் பொன்னானியன்றகுடம் கரும்பிற்குவேலி கடிசூத்தி

ரத்திற்குப்பொன் வரையினின்றுபாய்தல் கருவூரின்கிழக்கு சாத்தனதுபுத்தகம் கொற்றனதுஉணர்வு மன்றத்துக்கணிற்கும்பெண்ணை மாரிக்கண்ணுளதாம்மா என்னும் உருபுத்தொடர்ப்பொருளை இனிது விளக்கியவாறு காண்க. பிறவும் அன்ன.

இனி இவ்வாறன்றி "இரண்டு முதலா விடையா றுருபும்—வெளிப்பட லில்லது வேற்றுமைத் தொகையே" எனச் சூத்திரஞ் செய்யின் உருபுத்தொடர்ப்பொருள் உணர்த்தும் ஆற்றலில்லன தொகா அவ்வாற்றலுடையனவே தொகுவன என்னும் விசேடவிதி அதனாற் பெறப்படாமையானும் அதனாற் பெறப்பட்ட ஆறுருபென்பதூஉம் வெளிப்படலில்லதென்பதூஉம் பொதுவிதியாற் பெறப்படுதலானும் பொருந்தாதென மறுக்க. "உவம வுருபில துவமத் தொகையே" என்புழியும் இக்கடாவிடை உய்த்துரைக்க. (சஉ)

கூகூஎ. உவமத் தொகையே யுவம வியல.

இஃது உவமத்தொகையாமாறு கூறுகின்றது.

இ - ள். உவமவுருபுகள் தொக அவற்றின் பொருள் தொக்க தொகைச்சொற்கள் அவ்வுருபுகள் தொக்கனவேனுந் தொகாது நின்று அவ்வுவமவுருபுத் தொடர்ப்பொருள் உணர்த்தியாங்கு உணர்த்தும் இயல்பினையுடையவாம். எ - று.

எனவே புலியன்னசாத்தன் மயிலன்னமாதர் என்னும் பொருட்கட் புலிச்சாத்தன் மயின்மாதர் என உவமவுருபுத்தொடர்ப்பொருள் உணர்த்தும் ஆற்றலில்லன தொகா; அவ்வாற்றலுடையனவே தொகுவன என்றவாறாயிற்று.

உ-ம். புலிப்பாய்த்துள் மழைவண்கை துடிநடுவு பொன்மேனி எனவரும். இவை புலிப்பாய்த்துளையன்னபாய்த்துள் மழையை யொக்கும்வண்கை என விரிதலின் அவையெல்லாம் வேற்றுமைத் தொகையெனப்படும் அதனான் உவமத்தொகையென ஒன்றில்லை யெனின், அற்றன்று; சொல்லுவார்க்கு அது கருத்தாயின் அவை வேற்றுமைத்தொகையுமாம். அக்கருத்தானன்றிப் புலியன்னபாய்த்துள் பொன்மானும்மேனி என வேற்றுமையோடு இயைபில்லா உவமவுருபுத் தொடர்ப்பொருட்கட் தொக்கவழி உவமத்தொகையாவதல்லது வேற்றுமைத்தொகை ஆண்டின்மையின் வேற்றுமைத் தொகையாமாறு இல்லையென்க. (சகூ)

கூகூஅ. வினையின் றொகுதி காலத் தியலும்.

இது வினைத்தொகையாமாறு கூறுகின்றது.

இ - ள். முதனிலைவினை பிறிதோர்சொல்லோடு தொக்க தொகை காலத்தின்கண் நிகழும். எ - று.

**கா**லத்தியலுமெனப் பொதுவகையாற் கூறிய அதனுன் மூன்றுகாலமுங் கொள்க. தொகுதி காலத்தியலுமெனவே அவ்வினை விரிந்துநின்றவழித் தோன்ருது தொக்கவழித் தொகைமையாற்றலாற் காலந்தோன்றுமென்றவாருயிற்று.

உ-ம். கொல்யானை அரிவாள் ஆடரங்கு செல்செலவு புணர்பொழுது செய்குன்று எனவரும். காலம் உணர்த்தாது வினைமாத்திரம் உணர்த்தும் பெயர் செய்வதுமுதலாகிய பெயரோடு தொக்குழிக் காலமுணர்த்தியவாறு கண்டுகொள்க. காலம் உணர்த்துகின்றுழிப் பெயரெச்சப்பொருளவாய் நின்று உணர்த்துமென்பது ஈண்டு உரையிற்கொள்க. "செய்யுஞ் செய்த வென்னுங் கிளவியின்—மெய்யொருங் கியலுந் தொழிறொகு மொழியும்" என்பவாகலின் தொகைப் பொருளாகிய தாம் பிரிந்தவழிப் பெறப்படாமையின் இவற்றைப் பிரித்துப் புணராது "போலியு மருவும் பொருந்திய வாற்றிற்—கியையப் புணர்த்தல்" என்பதனுற் தழீஇனுர். பண்புத்தொகையும் பிரிவிலொட்டாகலின் அதற்கும் இவ்வுரை உய்த்துரைக்க. அதனுன் இவை தஞ்சொல்லான் விரிக்கப்படாமையிற் பிரிவிலொட்டாம். காலமுணர்த்துகின்றுழிப் பெயரெச்சப்பொருளவாய் நின்று உணர்த்துமெனவே பிறிதோர்சொல்லென்றது "செய்வதாதி யறுபொருட் பெயரும்" என்பது பெற்ருமெனக் கொள்க.

இனி இவ்வாறன்றிக் "காலங் கரந்தபெய ரெச்சம் வினைத்தொகை" எனக் கூறுவாரும் உளராலோவெனின், அற்றன்று; கொன்றயானையென்னும் பெயரெச்சங் காலங்கரந்து கொல்யானையென நின்றதேல் அங்ஙனந் தொக்குநின்றவழியுந் தனக்குரிய இறந்தகாலம் ஒன்றுமே உணர்த்திநிற்றல் வேண்டும். அங்ஙனம் நில்லாது முக்காலமும் ஒருங்கு உணர்த்தி நிற்றலானுங் கொன்றயானையென விரிந்தவழித் தொகைப்பொருளாகிய முக்காலமும் ஒருங்கு உணர்த்துந் தன்மை சிதைந்து இறந்தகாலம் ஒன்றுமே உணர்த்திநிற்றலானுங் கொல்லென்னும் முதனிலைவினை யானையென்னும் பெயரோடு தொக்க தொகைமையாற்றலான் அது முக்காலமும் ஒருங்கு உணர்த்திநிற்பதே வினைத்தொகையென்பது பொருத்தமுடைத்தென்க. கொல்கின்றயானை கொல்லும்யானை என்பனவும் அன்ன. (௬௪)

கூகூசு. வண்ணத்தின் வடிவி னளவிற் சுவையினென்
றன்ன பிறவு மதன்குண நுதலி
யின்ன திதுவென வரூஉ மியற்கை
யென்ன கிளவியும் பண்பின் றொகையே.

இது பண்புத்தொகையாமாறு கூறுகின்றது.

இ - ள். வண்ணம் முதலிய நான்கும் அவைபோல்வன பிறவு மாகிய குணம் அக்குணமுடையதன் குணத்தை நுதலிப் பின்தொக் கவழிக் குணச்சொற் குணமுடையதனை உணர்த்தலான் இன்னது இதுவென ஒன்றினையொன்று விசேடித்து இருசொல்லும் ஒருபொருள் மேல் வரும் இயல்பையுடைய எல்லாத்தொகைச்சொல்லும் பண்புத்தொகையாம். எ - று.

நுதலியென்னுஞ் சினைவினை வரூஉமென்னும் முதல்வினை யோடு முடிந்தது. இயற்கையென்றது, தொக்குழிப் பண்புடையத னைக்குறித்தல் அத்தொகைச்சொல்லது இயல்பென்பதல்லது காரணங் கூறப்படாதென்றவாறும். தொகைக்கண்ணல்லது அச்சொல் அப்பொருள் உணர்த்தாமையிற் பண்புத்தொகையும் வினைத்தொகைபோலப் பிரிக்கப்படாதாம்.

வரலாறு;—கருங்குதிரை என்பது வண்ணப்பண்பு. வட்டப்பலகை என்பது வடிவு. நெடுங்கோல் என்பது அளவு. தீங்கரும்பு என்பது சுவை. அன்னபிறவும் என்றதனுல் மெல்லிலை நல்லாடை நுண்ணூல் பராரை வெந்தீ தண்ணீர் நறும்பூ என்னுந் தொடக்கத் தனவுங்கொள்க. அவை கரியதாகியகுதிரை வட்டமாகியபலகை எனப் பண்புடைப்பொருளே குறித்தலான் இருசொல்லும் ஒருபொருளவாய் இன்னதிதுவென ஒன்றையொன்று பொதுமைநீக்கிய வாறு காண்க. பிறவும் அன்ன.

அஃதேற் கரியதாகியகுதிரை வட்டமாகியபலகை என்பன அத்தொகையின்விரியாகலிற் பண்புத்தொகை பிரிக்கப்படாதென் றது என்னையெனின், அற்றன்று; தொகைப்பொருள் உணர்த்துதற் குப் பிறசொற் கொணர்ந்து விரித்தலல்லது தன்சொல்லான் விரியா மையின் அவை விரியெனப்படா என்க. வடநூலாரும் பிரியாத்தொகையும் பிறசொல்லான் விரிக்கப்படுமெனப் பிறசொற் கொணர்ந்து விரிப்ப. விரிக்குங்காற் கரியகுதிரை கரிதாகியகுதிரை கரியதாகியகுதிரை என அத்தொகைப்பொருள் உணர்த்துவனவெல்லாவற்றானும்

விரிக்கப்படும். என்னகிளவியும் என்றதனாற் சாரைப்பாம்பு வேழக் கரும்பு கேழற்பன்றி எனப் பண்புதொகாது பெயர்தொக்கனவுந் தொகையாதல் கொள்க. இவற்றது சாரைமுதலாகிய நிலைமொழி பிரித்தவழியும் பொருள் உணர்த்தலின் இவற்றைப் பிரித்துப்புணர்த் தார். அஃதேற் பாம்பைச் சாரை விசேடித்தலல்லது சாரையைப் பாம்பு விசேடித்ததின்றாகலின் ஒன்றையொன்று பொதுமைநீக்கா மையாற் சாரைப்பாம்பு முதலாயின பண்புத்தொகையாயினவாறு என்னையெனின், நன்றுசொன்னாய்; விசேடிப்பதூஉம் விசேடிக்கப் படுவதூஉமாகிய இரண்டனுள் விசேடிப்பது விசேடியாக்கால் அது குற்றமாம்; விசேடிக்கப்படுவது விசேடித்ததின்றேனும் விசேடிக்கப் படுதலாகிய தன்மைக்கு இழுக்கின்மையான் விசேடியாது நிற்பினும் அமையுமென்க. இவ்வேறுபாடு பெறுதற்கன்றே இன்னதிதுவென வரூஉமெனப் பின்மொழியை விசேடிப்பதாகவும் முன்மொழியை விசேடிக்கப்படுவதாகவும் ஓதினாரென்க. அற்றேனுஞ் சாரையெ னவே குறித்தபொருள் விளக்கலிற் பாம்பென்பது மிகையாம்பிற வெனின், அற்றன்று; உலகவழக்காவது சூத்திரயாப்புப்போல மிகைச்சொற்படாமைச் சொல்லப்படுவதொன்றின்றித் தொன்று தொட்டுக் கேட்டார்க்குப் பொருள் இனிது விளங்க வழங்கப்பட்டு வருவதாகலின் அது கடாவன்றென்க.

உயர்சொற்கிளவி இடைச்சொற்கிளவி உரிச்சொற்கிளவி என் பனபோல்வனவும் அவ்வாற்றான் அமைவுடையவாயினுஞ் சூத்திர மாகலின் உயர்சொல் இடைச்சொல் உரிச்சொல் எனவே அமையுங்; கிளவியென்பது மிகையாமேனும், இன்னோரன்ன அமைவுடைய என்பது உணர்த்துதற்கு ஆசிரியர் அவ்வாறு ஓதலின் அமைவு டைத்தென்க.

இனி இவ்வாறன்றிப் "பண்பை விளக்கு மொழிதொக் கனவு— மொருபொருட் கிருபெயர் வந்தவுங் குணத்தொகை" எனக் கூறு வாரும் உளராலோவெனின், அற்றன்று; கருமைக்குதிரையென் பது மகர ஐகாரந் தொக்குக் கருங்குதிரையென நின்றதேல் அது கருமைக்குதிரையென விரிதல்வேண்டும். அங்ஙனம் விரிந்தவழி வேற்றுமைத்தொகை ஆவதல்லது பண்புத்தொகைவிரி ஆகாமை யின் வேற்றுமைத்தொகை நின்று பண்புத்தொகையாய்த் தொகு மாறு யாண்டும் இன்றாகலாற் கரு என்னும் முதனிலைப்பண்பு குதி ரைமுதலிய பெயரோடு தொக்க தொகைமையாற்றலான் இருதிணை மருங்கின் ஐம்பாற்பொருளையுஞ் சுட்டி இன்னதிதுவென ஒன்றனை யொன்று விசேடித்து இருசொல்லும் ஒருபொருள்மேல் வரும்

இயல்பையுடையனவே பண்புத்தொகையென்பது பொருத்தமுடைத்தென்க. (௬௫)

௩௪௦. இருபெயர் பலபெய ரளவின் பெயரே
யெண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
யெண்ணின் பெயரோ டவ்வறு கிளவியுங்
கண்ணிய நிலைத்தே யும்மைத் தொகையே.

இஃது உம்மைத்தொகையாமாறு கூறுகின்றது.

இ - ள். இருபெயர்முதலாகச் சொல்லப்பட்ட அவ்வறுவகைச் சொற்றிரளையுந் தனக்குச் சார்பாகக் குறித்துநிற்கும் உம்மென்னும் இடைச்சொற் றொக அதன்பொருள் தொக்க தொகை உம்மைத்தொகையாம். எ - று.

உ-ம். உவாப்பதினான்கு என்பது இருபெயராகிய உம்மைத் தொகை. புலிவிற்கெண்டை என்பது பலபெயராகிய உம்மைத் தொகை. தூணிப்பதக்கு என்பது அளவுப்பெயராகிய உம்மைத் தொகை. முப்பத்துமூவர் என்பது எண்ணியற்பெயராகிய உம்மைத் தொகை. தொடியரை என்பது நிறைப்பெயராகிய உம்மைத்தொகை. பதினைந்து என்பது எண்ணுப்பெயராகிய உம்மைத்தொகை. இனி அவை விரியுங்கால் உவாவும்பதினான்கும் புலியும்வில்லுங் கெண்டையும் தூணியும்பதக்கும் முப்பதின்மரும்மூவரும் தொடியும் அரையும் பத்தும்ஐந்தும் எனவிரியும்.

வேற்றுமைத்தொகை முதலாயின பலசொல்லாற் றொகுதல் சிறுபான்மை. அதனான் உம்மைத்தொகை இருசொல்லானும் பல சொல்லானும் ஒப்பத் தொகுமென்பது அறிவித்தற்கு இருபெயர் பலபெயர் என்றார். கற்சுனைக்குவளையிதழ் பெருந்தோட்பேதை எனப் பிறதொகையும் பெரும்பான்மையும் பலசொல்லாற் றொகுமாலோவெனின், அற்றன்று; கற்சுனைக்குவளை என்னுந்தொகை ஒரு சொல்லாய்ப் பின் இதழென்பதனோடு தொக்குக் கற்சுனைக்குவளையிதழென ஒன்றாயிற்று. பெருந்தோள் என்னுந்தொகை ஒருசொல்லாய்ப் பின் பேதையென்பதனோடு தொக்குப் பெருந்தோட்பேதையென ஒன்றாயிற்று. அவை இவ்வாற்றானல்லது தொகாமையின் இருசொற்றொகையேயாமென்க. புலிவிற்கெண்டை என்புழி மூன்றுபெயருந் தொகுமென்னாது முதற்பெயரொழித்து ஏனைய இரண்டுந் தம்முட் தொக்கு ஒருசொல்லாய்ப் பின் மற்றையதனோடுந் தொகுமெனின் மூன்றாவதற்கும் இரண்டாவதற்கும் ஓர் இயை

புவேறுபாடின்மையானும் இருதொகைப்படுத்தல் பலசெய்கைத்தா கலானும் அவை மூன்றுபெயரும் ஒருங்கு தொக்கனவெனவே படு மென்பது. அளவின்பெயர் முதலாயின இருபெயராயல்லது தொ கா என வரையறுத்தற்கு இருபெயர்பலபெயரென அடங்கினவற் றையே பெயர்த்துங்கூறினார். கலனே தூணிப்பதக்கு தொடியேகஃ சரை நூற்றுநாற்பத்துநான்கு என்புழித் தூணிப்பதக்கு கஃசரை நாற்பத்துநான்கு என்பன ஒருசொற்போல அளவுப்பெயரும் நிறைப் பெயரும் எண்ணுப்பெயருமாய் வழங்கப்பட்டுவருதலிற் கலமுந் தூணிப்பதக்குந் தொடியுங்கஃசரையும் நூறும்நாற்பத்துநான்கும் என இருமொழியாய் நின்று தொக்கனவென்பதே பொருத்தமுடை மை அறிக. உம்மைத்தொகை இன்னபொருள்பற்றித் தொகுமென் னாது அவ்வறுகிளவியுமெனச் சொல்லேபற்றி ஓதினாரேனும் ஏற்பு ழிக்கோடலானும் "உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே" என்பதனானும் எண்ணும்மைப்பொருட்கட் தொகுமென்பது பெறப் படும். எண்ணின்கண்வரும் இடைச்சொற் பலவேனுந் தொக்கு நிற்கும் ஆற்றலுடையது உம்மைப்பெயராகலான் உம்மைத்தொ கையாயிற்று. (சகூ)

௩சக. வேற்றுமை முதலிய வைந்தொகை மொழியினு
மீற்றுநின் றியலு மன்மொழித் தொகையே.

இஃது அன்மொழித்தொகையாமாறு கூறுகின்றது.

இ - ள். வேற்றுமைத்தொகை முதலாகிய ஐவகைத் தொகை மொழிக்கண்ணும் இறுதிச்சொற்கண்ணேநின்று நடக்கும் அன்மொ ழித்தொகை. எ - று.

வேற்றுமைத்தொகை முதலியன பட அச்சொற் தொக்கபின் அத்தொகை அன்மொழித்தொகையாகாமையிற் தொகுவதன்முன் அவற்றிற்கு நிலைக்களமாகிய சொற்பற்றி வருமென்பது விளக்கிய தொகையினுமென்னாது மொழியினுமென்றார். இறுதிச்சொற் படுத் தலோசையாற் பொருள்விளக்குமாறு வழக்கினுள்ளுஞ் செய்யுளுள் ளுங் காண்க.

வரலாறு;—பொற்றொடி பவளவாய் திரிதாடி வெள்ளாடை தகரஞாழல் என முறையே வேற்றுமைத்தொகை முதலிய ஐவகை நிலைக்களத்தும் பிறந்து அன்மொழித்தொகை வந்தவாறு காண்க. இனி இவை பொற்றொடிதொட்டாள் பவளம்போலும்வாயையுடை யாள் திரிந்ததாடியையுடையான் வெள்ளாடையையுடுத்தாள் தகர மும்ஞாழலுமாகியசாந்து எனவிரியும். பிறவும் அன்ன. (சஎ)

௩௪௨. முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
யெனுநான் கிடத்துஞ் சிறக்குந் தொகைப்பொருள்.

இது தொகைச்சொற் பொருணிலை கூறுகின்றது.

இ - ள். முன்மொழிமுதலிய நால்வகைமொழியிடத்துஞ் சிறந்துநிற்கும் மேற்கூறிய தொகைச்சொற் பொருள். எ - று.

சிறந்துநிற்றலாவது வினையோடு இயையுமாற்றான் மேற்பட்டுத் தோன்றுதல்.

வரலாறு;—வேங்கைப்பூ என்புழிப் பூ என்னும் முன்மொழிக்கட் பொருள்சிறந்தது. அது நறிதென்னும் வினையோடு இயையுமாற்றான் மேற்பட்டுத்தோன்றியவாறு கண்டுகொள்க. மேல்வருவனவற்றிற்கும் ஈது ஒக்கும். அடைகடல் என்புழி அடை என்னும் பின்மொழிக்கட்பொருள்சிறந்தது. முன் பின் என்பன காலவகையாற் தடுமாறிநிற்குமேனும் ஈண்டு இடமென்றதனான் இடவகையானே கொள்ளப்படுமெனக் கொள்க. கடல் அடைந்த இடமுங் கடலெனப்படுதலின் அடைகடல் என்பது அடையாகிய கடல் என இருபெயரொட்டுப் பண்புத்தொகையாம். இனி வரையறையின்மையாற் சிறுபான்மை முன்மொழி பின்மொழியாகத் தொக்கது ஓர் ஆரும்வேற்றுமைத்தொகையெனவும் அமையும். உவாப்பதினான்கு புலிவிற்கெண்டை என்புழித் தொக்க இருமொழிப்பன்மைக்கண்ணும் இரண்டிறந்தபன்மொழிப்பன்மைக்கண்ணும் பொருள்சிறந்தது. வெள்ளாடை என்புழித் தொக்க இருமொழிக்கண்ணுஞ் சிறவாது உடுத்தாளென்னும் புறமொழிக்கட் பொருள்சிறந்தது. பிறவும் அன்ன. (சஅ)

௩௪௩. உயர்திணை மருங்கி னும்மைத் தொகையே
பலர்சொன் னடைத்தென மொழிமனார் புலவர்.

இஃது உம்மைத்தொகைக்கண் ஆவதோர் வழூஉ அமைக்கின்றது.

இ - ள். உயர்திணைக்கண் வரும் உம்மைத்தொகையீறு பலரைச்சொல்லுஞ் சொல்லின் இறுதிபோலப் பன்மை உணர்த்தி நிற்குமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

வரலாறு;—கபிலன்பரணன் என்புழிக் கபிலனென்னும் னகர ஈறு சந்தியாற் கெட்டுக் கபிலபரணன் என நின்றவழி இரு

பெயராய் நின்றமையின் வந்தாரென்னும் பன்மையோடு முடியவே ண்டுதலான் ஆண்டு நின்ற ஒருமையீறு பன்மையோடு முடிதல் வழு வென்று கருதி னகர ஈறு ரகர ஈறாய் நிற்குமென வழுவமைத்தார். கல்லாடமாமூலப்பெருந்தலைச்சாத்தர் என்பனபோல்வனவும் அன் ன. உயர்திணைப்பெயரென்னாது மருங்கினென்றார்; உயர்திணைவி ரவுப்பெயரும் அடங்குதற்கு. (சக)

௩௪௪. தொக்குழி மயங்குந விரண்டு முதலே
யேழெல்லைப் பொருளின் மயங்கு மென்ப.

இது முற்கூறிய தொகைநிலைத்தொடர்மொழிகள் ஒருபொரு ளவாய் நிற்றலேயன்றிப் பலபொருளவாயும் நிற்குமென எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். தொகைநிலைத்தொடர்மொழிகள் முற்கூறியவாற்றாற் தொக்குநின்ற இடத்துப் பலபொருளவாய் மயங்கும் இயல்பினையு டையன இரண்டுமுதலாக ஏழீறாக நின்ற பொருள்மேல் மயங்கு மென்று சொல்லுவர் ஆசிரியர். எ - று.

**வ**ரலாறு;—திரையனூர் கடிப்பகை பொன்மணி கருப்பு வேலி உரைவிரி சொற்பொருள் என்பன முறையே, திரையனாற் செய்யப்பட்டவூர் திரையனதூர் எனவும் கடிக்குப்பகை கடியினது பகை கடியாகியபகை எனவும் பொன்னனையமணி பொன்னினைய மணி பொன்னின்கண்மணி பொன்னும்மணியும் எனவும் கரும்பிற் குவேலி கரும்பினதுவேலி கரும்பின்கண்வேலி கரும்பாற்செய்த வேலி கரும்பினிற்செய்தவேலி எனவும் உரையதுவிரி உரைக்கு விரி உரைக்கண்விரி உரையைவிரி உரைக்கும்விரி உரைவிரியு டையநூல் எனவும் சொல்லானறியப்படும்பொருள் சொல்லினறி யப்படும்பொருள் சொற்குப்பொருள் சொல்லதுபொருள் சொல் லும்பொருளும் சொல்லாகியபொருள் சொல்லின்கட்பொருள் என வும் இரண்டுபொருள்முதலாக ஏழுபொருள்காறும் இருமொழித் தொடர் மயங்கியவாறு காண்க. பிறவும் அன்ன. "வாளைமீனுள்ள றலைப்படல்" என்பது வாளைமீனை உள்ளல் தலைப்படல், வாளைமீன் உள்ளலைத் தலைப்படல் என இருபொருள் மயங்கிய பன்மொழித் தொடர். புலிகொல்யானை என்பது புலியைக்கொன்றயானை புலி யாற்கொல்லப்பட்டயானை புலியினிற்கொல்லப்பட்டயானை என மூன்றுபொருள் மயங்கிய பன்மொழித்தொடர். குரங்கெறிவிளங் காய் என்பது குரங்கான் எறியப்பட்ட விளங்காய், குரங்கின் எறி யப்பட்ட விளங்காய், குரங்கிற்கு எறிந்த விளங்காய், குரங்கை

எறிந்த விளங்காய் என நான்குபொருள் மயங்கிய பன்மொழித்தொடர். பிறவும் வந்துழிக் காண்க. (௫௦)

௩௪௫. முற்றீ ரெச்ச மெழுவாய் விளியே
யாறுரு பிடையுரி யடுக்கிவை தொகாநிலை.

இது முற்கூறிப்போந்த தொகாநிலைத்தொடர்மொழி இவையென்கின்றது.

இ - ள். தெரிநிலைமுற்றுங் குறிப்புமுற்றும் பெயரெச்சமும் வினையெச்சமும் எழுவாயும் விளியும் ஆறுருபுகளையும் ஏற்றசொற்களும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் அடுக்குமொழியுந் தத்தமக்கு உரிய மொழிகளோடு தொடரும் இவை முற்கூறிப்போந்த தொகாநிலைத்தொடர்மொழிகளாம். எ - று.

உ-ம். உண்டான்சாத்தன் குழையன்கொற்றன் உண்டசாத்தன் கரியகுதிரை உழுதுவந்தான் விருந்தின்றியுண்டபகலும் ஆவந்தது சாத்தாகேள் நிலத்தைக்கடந்தான் சாத்தனொடுவந்தான் சாத்தற்குக்கொடுத்தான் வரையினிழிந்தான் சாத்தனதாடை தட்டுப்புடைக்கட்சென்றான் "அதுகொ றோழி காம நோயே" நனிபேதையே நயனில்கூற்றம் பாம்புபாம்பு என முறையே காண்க. பிறவும் அன்ன. (௫௧)

௩௪௬. அசைநிலை பொருணிலை யிசைநிறைக் கொருசொல்
லிரண்டு மூன்றுநான் கெல்லைமுறை யடுக்கும்.

இது மேல் அடுக்கென்றதன் கூறுபாடும் அடுக்கும் வரம்புங் கூறுகின்றது.

இ - ள். அசைநிலைக்கண்ணும் விரைவுந் துணிவும் உடம்பாடும் ஒருதொழில் பலகால் நிகழ்தலும் வெகுளியும் உவகையும் அச்சமும் அவலமும் முதலிய பொருண்மைக்கண்ணும் இசைநிறைத்தற்பொருட்டும் ஒருசொல் இரண்டு மூன்று நான்கு எல்லையாகவே அடுக்கி வரப்பெறும். எ - று.

அசைநிலை இருமுறை அடுக்கும் என்றலின் அதற்குப் பேரெல்லையின்றெனவும் பொருணிலை மும்முறை அடுக்கும் என்றலின் அதற்குச் சிற்றெல்லை இரண்டும் பேரெல்லை மூன்றும் அடுக்குமெனவும் இசைநிறை நான்குமுறை அடுக்கும் என்றலின் அதற்குச் சிற்

றெல்லை இரண்டும் மூன்றும் பேரெல்லை நான்கும் அடுக்குமெனவுங் கொள்க.

உ-ம். மற்றேமற்றே அன்றேஅன்றே என்பன அசைநிலை. "வந்ததுவந்ததுகூற்று" என்பது விரைவு. அவன்அவன் என்பது துணிவு. வைதேன் வைதேன் என்பது உடம்பாடு. போம்போம் என்பது ஒருதொழில் பலகால் நிகழ்தல். ஏய் ஏய் என்பது வெகுளி. வருக வருக என்பது உவகை. படை படை என்பது அச்சம். உய்யேன் உய்யேன் என்பது அவலம். இவை பொருணிலை இருமுறை அடுக்கிவந்தன. தீ தீ தீ என்பது பொருணிலைக்கண் மும்முறை அடுக்கிவந்தது. இது விரைசொல்லடுக்கு. ஏனையவும் வந்துழிக் காண்க. "ஏஎஏஎ யம்பன் மொழிந்தனள் யாயே" "நல்குமே நல்குமே நல்குமே நாமகள்" "பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ" இவை இசைநிறை. பிறவும் அன்ன. (௫௨)

௩௪௭. வாரா மரபின வரக்கூ றுதலு
மென்னா மரபின வெனக்கூ றுதலு
மன்னவை யெல்லா மவற்றவற் றியல்பா
னின்ன வென்னுங் குறிப்புரை யாகும்.

இது மரபுவழுக் காப்பதாயதோர் ஒழிபு கூறுகின்றது.

இ-ள். வாரா இயல்பினவற்றை வருவனவாகச் சொல்லுதலும் என்னா இயல்பினவற்றை என்பனவாகக் கூறுதலுமாகிய அத்தன்மையன எல்லாம் அவ்வப்பொருள்களின் இயல்பான் இத்தன்மைய என்று சொல்லுங் குறிப்புமொழியாம். எ-று.

உ-ம். அந்நெறியீண்டுவந்துகிடந்தது அம்மலைவந்திதனோடு பொருந்திற்று எனவும் அவலவலென்கின்றனநெல் மழைமழையென்கின்றனபைங்கூழ் எனவும் வரும். இவை வரவுஞ் சொல்லுதலும் உணர்த்தாது இன்ன என்பதனைக் குறிப்பானுணர்த்தியவாறு காண்க.

அன்னவையெல்லாம் என்பதனான் இந்நெறி ஆண்டுச்சென்று கிடக்கும், இக்குன்று அக்குன்றோடு சென்று அணுகும், கடல் இத்துணை ஆழ்ந்து கிடக்கும், நிலம் இத்துணை அகன்று கிடக்கும் என்றற் றொடக்கத்தனவும் "பகையுமுவகையுங் கண்ணுரைக்கும்" "மாய்தலும் பிறத்தலும் வளர்ந்து வீங்கலுந்—தேய்தலு முடைமையைத் திங்கள் செப்புமால்" என்றற் றொடக்கத்தனவுங் கொள்க.

இன்னும் அதனானே "நன்னீரைவாழி யனிச்சமே" "கரவல மென்றோரைக் கண்ட தில்லையே" "இரவெலா நின்றுயா லீர்ங்க திர்த் திங்காள்" எனக் கேளாமரபினவற்றைக் கேட்பனபோலவும், நிலம் வல்லென்றது நீர்தண்ணென்றது "தன்னெஞ் சறிவது பொய் யற்க பொய்த்தபின்—றன்னெஞ்சே தன்னைச் சுடும்" "வண்சிறைப் பவளச் செவ்வாய்ப் பெடையன மடமை கூரத்—தண்கய நீருட் கண்டதன்னிழற் பிறிதென் றெண்ணிக்—கண்ட னங்கள்வ மற்றுன் காதலி தன்னை நீர்க்கீழ்ப்—பண்டைய மல்லம் வேண்டா படுக் கவென்றாடிற் றன்றே" "கருவிரற் செம்முக வெண்பற்சூன் மந்தி—பருவிரலாற் பைஞ்சுனைநீர் தூவிப்—பெருவரைமேற்—றேன்றே வர்க் கியுமலைநாட வாரலோ—வான்றேவர் கொட்கும் வழி" எனச் செய்யாமரபினவற்றைச் செய்வனபோலக் கூறலுங் கொள்க. பிறவும் அன்ன.

இனி வாராமரபினவற்றிற்கு மூலைவந்தன தலைவந்தன என்பன காட்டின் ஆண்டு வருதல் வளர்தற்பொருட்டாகலான் அவை ஈண்டைக்கு ஆகாவென்க. (௫௩)

௩௪அ. பெயர்வினை யெதிர்மறை பிரிப்பொழி யும்மை
யெனவெனுஞ் சொல்லொழி யேழொடுஞ் சொல்லிசை
குறிப்பெனுங் குறிப்பொழி யுளப்படத் தொகைஇ
யெஞ்சுபொருட் கிளவி யீரைந் தாகும்.

இது முற்கூறிப்போந்த எச்சச்சொற்களுக்கு முடிபு கூறுவான் அவற்றது பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துவதாயதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். பெயரெச்சமும் வினையெச்சமும் எதிர்மறையெச்சமும் பிரிநிலையெச்சமும் ஒழியிசையெச்சமும் உம்மையெச்சமும் எனவெனெச்சமுமாகிய சொல்லெச்சம் ஏழொடுஞ் சொல்லெச்சமும் இசையெச்சமுங் குறிப்பெச்சமுமாகிய குறிப்பெச்சம் மூன்றுங் கூடத் தொகுதலால் எஞ்சுபொருட்கிளவி பத்துவகைப்படும். எ-று.

சொல்லெச்சம் ஏழும் எஞ்சுபொருட்கிளவிகொண்டல்லது அமையாமையின் எச்சமாயின. குறிப்பெச்சம் மூன்றும் ஒருதொடர்க்கு ஒழிபாய் எச்சமாயின.

எஞ்சுபொருட்கிளவியெனினும் எச்சமெனினும் ஒக்கும்.

பெயரெச்சமும் வினையெச்சமும் முறையானே பெயரானும் வினையானும் முடிதலின் ஆகுபெயரான் அவற்றைப் பெயர் வினை என்றார்.

எச்சமாவன ஒருசார் பெயரும் வினையும் இடைச்சொல்லுமா கலிற் பெயரியல் முதலாயினவற்றுட் பத்தும் ஒருங்கு உணர்த்து தற்கு ஏலாமையின் ஈண்டுப் போதந்து கூறினர். (௫௪)

௩௪௧. அவற்றுண்,
முன்னவை யிரண்டுஞ் சொன்னவை யாகும்.

இஃது உரைத்தாமென்னும் உத்தி கூறுகின்றது.

இ - ள். முற்கூறிய எச்சங்களுட் பெயரெச்சமும் வினையெச் சமும் முன்னர் முடிபுகூறப்பட்டனவாம். எ - று.

அவையாவன "அவற்றுட், செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்—செய்வ தாதி வறுபொருட் பெயரொடு—முடியு முறை யது பெயரெச் சம்மே" எனவும் "வினையெஞ்சு கிளவிக்கு வினை யுங் குறிப்பு—நினையத் தோன்றிய முடிபா கும்மே—யாவயிற் குறிப் பே யாக்கமொடு வருமே" எனவும் முற்கூறிப்போந்தனவாமெனக் கொள்க. அற்றேல் ஈண்டு எச்சங்களோடு கூட்டி ஓதினமையாற் போந்ததென்னையெனின், சொல்லெச்சமுங் குறிப்பெச்சமுமென எச்சங்களைப் பகுத்தலின் ஆண்டுப்பெறப்படாத சொல்லெச்சமாதல் அவற்றிற்கும் எய்துவித்தலென்க. (௫௫)

௩௫0. எதிர்மறை யெச்ச மெதிர்மறை கோடலும்
பிரிநிலை யெச்சம் பிரிநிலை கோடலு
மொழியிசை யெச்ச மொழியிசை கோடலு
மும்மை யெச்ச மிருவீற் றானுந்
தன்வினை யொன்றிய முடிபா குதலு
மெனவெ னெச்சம் வினையொடு முடிதலு
மெஞ்சிய மூன்று மேல்வந்து முடிக்கு
மெஞ்சுபொருட் கிளவி யிலவா யவைதாந்
தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பலு
மியல்பென மொழிப வியல்புணர்ந் தோரே.

இஃது எனையவற்றிற்கு முடிபுகூறுகின்றது.

இ - ள். மாறுகோளெச்சமெனப்பட்ட ஏகாரவெதிர்மறையும் ஓகாரவெதிர்மறையும் உம்மையெதிர்மறையுமாகிய எதிர்மறையெச்சம் மூன்றும் எதிர்மறைப்பொருளை உணர்த்துஞ் சொல்லைக்கொண்டு முடிதலும் ஏகாரப்பிரிநிலையும் ஓகாரப்பிரிநிலையுமென்னும் பிரிநிலையெச்சம் இரண்டும் பிரிக்கப்படாத பொருளை உணர்த்துஞ் சொல்லைக்கொண்டு முடிதலும் மன்னுந் தில்லும் ஓகாரமுமாகிய ஒழியிசையெச்சம் மூன்றும் ஒழியிசைப்பொருளை உணர்த்துஞ் சொல்லைக்கொண்டு முடிதலும் எஞ்சுபொருட்கிளவியும் அவ்வெஞ்சுபொருட்கிளவியான் முடிவதுமாகிய உம்மையெச்சம் அவ்வேறுபாடு இரண்டின்கண்ணுந் தன்வினையும்மையோடு தொடர்ந்த சொற்குப் பொருந்திய முடிபாதலும் எனவெனெச்சம் வினையொடுமுடிதலும் ஒழிந்த சொல்லெச்சமும் இசையெச்சமுங் குறிப்பெச்சமுமாகிய குறிப்பெச்சம் மூன்றும் ஒழிந்த எச்சங்கள்போலத் தமக்குமேல் வேறாய்வந்து தம்மைமுடிக்கும் எஞ்சுபொருட்கிளவியையுடையவல்லவாய் அவைதாஞ் சொல்லுவார் குறிப்பான் எஞ்சிநின்றபொருளை உணர்த்துதலும் இலக்கணமென்று சொல்லுவர் இலக்கணங்களை உணர்ந்தோர். எ - று.

**வ**ரலாறு;—யானேகொள்வேன் யானோகள்வன் வரலுமுரியன் என்னும் எதிர்மறையெச்சங்கள் முறையானே கொள்ளேன் கள்ளேன் வாராமையுமுரியன் என்னும் எதிர்மறைப்பொருளை உணர்த்துஞ் சொல்லான்முடிந்தவாறு காண்க. தானேகொண்டான் தானோகொண்டான் என்னும் பிரிநிலையெச்சங்கள் பிறர்கொண்டிலரெனப் பிரிக்கப்பட்டபொருளை உணர்த்துஞ் சொல்லான் முடிந்தவாறு காண்க. அஃதேற் றானெனப்பட்டானன்றே ஆண்டுப் பிரிக்கப்பட்டான் பிறர்கொண்டிலரென்பது அவனை உணர்த்துஞ்சொல்லன்மையின் அவை பிரிநிலைகொண்டு முடிந்ததில்லையாலெனின், அற்றன்று; தானெனப்பட்டான் பிறரிற் பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்தும்வழிப் பிறரும் அவனிற் பிரிக்கப்பட்டமையான் அவை பிரிநிலைகொண்டனவேயாமென்க. தானேகொண்டான் தானோ கொண்டான் என்றவழித் தானே தானோ என்பன கொண்டானெனப் பிரிக்கப்பட்டபொருள் வினையினைக்கொண்டு முடிதலே பொருத்தமுடைத்தெனிற், தானேகொண்டான் தானோகொண்டான் எனத் தானென்னும் எழுவாய்வேற்றுமை கொண்டானென்னும் பயனிலைகொண்டன, ஏகார ஓகாரங்கள் பிரிவு உணர்த்தின, ஆண்டு எச்சமும் அவ்வெச்சத்தை முடிக்குஞ்சொல்லும் இன்மையின் அது பொருத்தமுடைத்தன்றென்க. "கூரியதோர்வாண்மன்" "வருகதில்

லம்மவெஞ்சேரிசேர" கொளலோகொண்டான் என்னும் ஒழியிசையெச்சங்கள் முறையானே திட்பமின்று, வந்தால் இன்னதுசெய்வல், கொண்டுய்யப்போமாறு அறிந்திலன் என்னும் ஒழியிசையான் முடிந்தவாறு காண்க. பிறவும் முடித்தற்கு ஏற்கும் ஒழியிசையும் அறிந்துகொள்க. சாத்தனும்வந்தான் கொற்றனும்வந்தான் என்னும் உம்மையெச்சங்கள் இரண்டும் வந்தானென்னும் ஒருவினைகொண்டவாறு காண்க. ஒன்றற்கு எய்தியதே ஏனையதற்கும் வருதலின் ஒருவினையென்றார். சாத்தனும் வந்தான் கொற்றனும் உண்டான் என வேறுவினை கொண்டவழி உம்மையெச்சமும் எஞ்சுபொருட்கிளவியும் இயையாமை உணர்க. அஃதேற்"பைம்புதல்வேங்கையுமொள்ளிணர்விரிந்தன—நெடுவெண்டிங்களுமூர்கொண்டன்றே" என வினை வேறுபட்டுழியுந் தம்முள் இயைந்தனவாலெனின், இணர்விரிதலும் ஊர்கோடலும் இரண்டும் மணஞ்செய்காலம் இதுவென்று உணர்த்துதலாகிய ஒருபொருள்குறித்துநின்றமையின் அவை ஒருவினைப் பாற்படுமென்பது. பிறவும் இவ்வாறு வருவன அறிந்து ஒருவினைப்பாற்படுத்துக.

எஞ்சுபொருட்கிளவி செஞ்சொலாயவழித் தன்வினைகோடல் ஈண்டு அடங்காமையான் அது தன்னினமுடித்தலாற்கொள்க. சாத்தன்வந்தான் கொற்றனும்வந்தான் எனவரும். உம்மையெச்சம் இருவீற்றும் என்றதனான் உம்மையெச்சத்திற்கு முடிபாகிய எஞ்சு பொருட்கிளவியும் உம்மையொடுவரின் எச்சமாமென்பதாம். அஃது எச்சமாங்கால் முன்னின்றது எஞ்சுபொருட்கிளவியாமென்பது. எதிர்மறையும்மை எதிர்மறையெச்சமாய் அடங்குதலின் ஈண்டு உம்மையெச்சமென்றது எச்சவும்மையேயாம்.

கொள்ளெனக்கொடுத்தான் துண்ணெனத்துடித்தான் ஒல்லென ஒலித்தது காரெனக்கறுத்தது என்னும் எனவெனெச்சங்கள் வினைகொண்டுமுடிந்தவாறு காண்க. செய்தென என்னும் வினையெச்சவென வினைகோடல் முற்கூறினார். எண்ணெனவும் பெயரெனவும் வினைகொள்ளா. இனி "என்றுமற்றே" என்பதனான் என்றென்பதூஉம் எனவென்பதுபோல நன்றென்றுகொண்டான் தீதென்றிகழ்ந்தான் என வினைகொண்டுமுடிதல்கொள்க.

'எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கு—மெஞ்சுபொருட் கிளவி யிலவா யவைதாந்—தத்தங் குறிப்பி னெச்சஞ் செப்பும்' என்றது அவ்வத்தொடர்க்குத் தாம் எச்சமாய்வந்து அவற்றது அவாய்நிலையை நீக்கலிற் பெயரெச்சமுதலாயின போலத் தம்மைமு

டிக்கும் பிறசொல்லைத் தாம் அவாய்நில்லா, அவை பிறசொல்லாகத் தாம் எச்சமாய் நிற்குமாகலின் என்பதாம்.

இவற்றிற்கு உதாரணங் காட்டுதும். அவற்றுட் சொல்லெச்சத்திற்கு உதாரணம் முன்னர்க்காட்டுதும். "தும்முச் செறுப்ப வழுதா னுமருள்ள—வென்னை மறத்திரோ வென்று" என்புழியும் "அந்தாமரை யன்னமே நின்னை யானகன் ருற்றுவனோ" என்புழியும் முறையானே நும்மோடு யாதும் இயைபில்லாத என்னையெனவும் உயிரினுஞ் சிறந்த நின்னையெனவும் "இருதலைப் புள்ளி னோருயிரேனுகிய யான்" என உவந்த தொடர்மொழிகள் எச்சமாய்நின்ற இசைப்பொருளை உணர்த்தலான் இசையெச்சமாயினவாறு காண்க. இவ் இசைவிகாரத்தை வடநூலார் காகு என்ப. "அகர முதல வெழுத்தெல்லா மாதி—பகவன் முதற்றே யுலகு" "அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்—றேறியார்க் குண்டோ தவறு" என்றவழியும் முறையானே அதுபோலவெனவும் நீத்தார்க்கே தவறு எனவும் வருவன எஞ்சிய இசைப்பொருளை உணர்த்தலான் இசையெச்சமாம். பிறவும் அன்ன.

"உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்—கண்டார் மகிழ்செய்த லின்று" என்புழியுங் "கண்ணுளார் காத லவராகக் கண்ணு—மெழுதேங் கரப்பாக் கறிந்து" என்புழியும் முறையானே மகிழ்செய்தற்கட் காமம் நறவினுஞ் சிறந்ததேயெனினும் இவள்குறிப்பு ஆராய்ந்தறியாமையின் யான் அது பெற்றிலேனெனவும் யான் இடையீடின்றிக்காண்கின்றவரைப் பிரிந்தாரென்று கருதுமாறென்னையெனவும் வந்த தொடர்மொழிகள் எச்சமாய் நின்ற குறிப்புப் பொருளை வெளிப்படுத்தலாற் குறிப்பெச்சமாயினவாறு காண்க. "பசப்பித்துச் சென்றாருடை யையோ வன்ன—நிறத்தையாற் பீர மலர்" "இளைதாக முண்மரங் கொல்க களையுநர்—கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்புழியும் முறையானே பசப்பித்துச் சென்றாரையாமுடையேம் எனவும் தீயாரைக்காலத்தாற்களைக எனவும் வந்த தொடர்மொழி எச்சமாய் நின்ற குறிப்புப்பொருளை வெளிப்படுத்தலாற் குறிப்பெச்சமாம். பிறவும் அன்ன.

அதுபோலவென்பதூஉந் தீயாரைக்காலத்தாற்களைகவென்பதூஉம் அணியியலுள் எடுத்துக்காட்டுவமமெனவும் பிறிதுமொழிதலெனவுங் கூறப்படுமோறும் உணர்க. குறிப்புப்பொருளேயன்றி எஞ்சிய பொருளுஞ் சொல்லுவான் குறிப்பொடுபடுத்து உணர்ந்து தமக்கு ஏற்றசொல்லான் உணர்த்தப்படுதலிற் குறிப்பான் எச்சஞ் செப்பல் மூன்றற்கும் ஒத்தவாறு அறிக. "சொல்லள வல்ல தெஞ்

சுத லின்றே'' என்பதனாற் சொல்லெச்சம் ஒருசொல்லாதல் பெறப் படுதலின் இவை தொடர்ச்சொல்லாமென்பது பெற்றாம். இசைப் பொருள் முதலிய குறிப்புப்பொருளைத் தும்முச்செறுத்தல் முதலிய தொடர்மொழிகளே உணர்த்தலான் எஞ்சுபொருள் எனப்படாவா யினும் அப்பொருள் பிறசொல்லானல்லது வெளிப்படாமை யின் அச்சொல் எச்சமாயின.

இனி இசையெச்சத்திற்கு ஒல்லென ஒலித்தது வயிறுமொடு மொடுத்தது என்பனவுங் குறிப்பெச்சத்திற்கு விண்ணெனவிணைத் தது கற்கறிக்கநன்கட்டாய் என்பனவுங் காட்டின் ஆகாது. என்னை? ஒல்லென ஒலித்தது விண்ணெனவிணைத்தது என இசையுங் குறிப் பும்பற்றி வருவனவற்றை எனவெனெச்சமென அடக்காது வேறு ஓதின், வெள்ளெனவெளுத்தது எனப்பண்புபற்றிவருவதனையும் வேறு ஓதல்வேண்டுதலானும் ஒலித்தது விணைத்தது என்பன தஞ் சொல்லெனப்படா, படினும் ஒல்லெனவோடிற்று விண்ணெனவீங் கிற்று எனப் பிறசொல்லானும் முடிதலின் எஞ்சுபொருட்கிளவியி லவாமென்றல் பொருந்தாமையானும் உண்ணவேண்டா என்பானொ ருவன் வயிறுமொடுமொடுத்ததென்றல் உற்றதுரைத்தலாகிய செப் புவழுவமைதியாகலானுந் திங்கட்டாயென்பது தொடர்ச்சொல்லன் மையாற் "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா—ரிறைவ னடி சேராதார்'' என்புழிச் சேர்ந்தாரென்பதுபோலச் சொன்மாத்தி ரம் எஞ்சிநிற்குஞ் சொல்லெச்சமாவதல்லது குறிப்பெச்சமாகாமை யானுமென்க.

இக்குறிப்பெச்சங்கள் மேல் "வெளிப்படை குறிப்பு" என்ற வற்றுட் குறிப்பிற் றோன்றலாய் அடங்குமெனின், ஆண்டுச் சொற் பாகுபாடு உணர்த்தினார்; ஈண்டுக் குறிப்பிற் றோன்றும் பொருளை வெளிப்படுத்தும் எச்சமாதலுடைமையான் எச்சமென்றாராகலின் ஆண்டு அடங்கா என்க. (ருசு)

கூருக. சொல்லெ னெச்ச முன்னும் பின்னுஞ்
சொல்லள வல்ல தெஞ்சுத லின்றே.

இது சொல்லெச்சத்திற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறு கின்றது.

இ - ள். சொல்லெச்சம் ஒருசொற்கு முன்னும் பின்னுஞ் சொல்மாத்திரம் எஞ்சுவதல்லது தொடராய் எஞ்சுதலின்று. எ - று.

வரலாறு;—"ஒருகண் சிறக்கணித் தாள்போல நகும்" என்புழி நோக்கியென்னுஞ் சொல்முன்னுங் "கல்கெழு கானவர் நல்குறூஉ மகண்—மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே"என்புழி எமக்கு என்னுஞ் சொல் பின்னும் எஞ்சிநின்றவாறு காண்க. "உயர்திணையென்மனார்" என்புழி ஆசிரியரென்பதூஉம் "பிறவிப் பெருங்கட னீந்துவர்" என்புழிச் சேர்ந்தாரென்பதூஉம் அன்ன. அற்றேல் அவை முறையானே என்மனார் நீந்துவர் என்னும் முற்றிற்கு முடிபாகலின், "எஞ்சிய மூன்றுமேல் வந்துமுடிக்கு மெஞ்சுபொருட் கிளவியில" என்பதனோடு மாறுகொள்ளுமெனின், அற்றன்று; அவை அவாய்நிலைக்கண் அவற்றோடு இயைவதல்லது அவாய்நிலையில்வழி இயையாமையின் எச்சமாய்வந்து இயைந்தனவேயாம், முடிபாய்வந்து இயைந்தனவல்ல என்க; "மற்றுச்சொன்னோக்கா மரபின வனைத்து—முற்றி நிற்பன முற்றியன் மொழியே" என்பவாகலின்.

இனி இச்சூத்திரத்தை நலிந்து வேறுவேறு பொருள் கூறுவாரும் உளர். அது பொருளன்மை சூத்திரக்கிடக்கைமுறைமை நோக்கி உணர்க.

இனிக் குறிப்பெச்சத்திற்கு ஈண்டுக் காட்டிய செய்யுளுதாரணங்கள் செய்யுளியலுட் கூறிய குறிப்பெச்சத்திற்கே உரிமையுடைமையின் அவற்றைக் காட்டுதல் அமைவுடைத்தன்றெனின், ஈண்டுக் கூறிய இலக்கணங்களை எய்திநின்ற எச்சங்களைப் பொருந்திய செய்யுட்கள் ஆண்டு எச்சமென்னும் உறுப்புநிகழ வந்த செய்யுளாம் என்றதுணையல்லது ஆண்டு எச்சங்களுக்கு வேறு இலக்கணங் கூறாமையின் இவை அவற்றினின்றும் வேறன்மையான் அமைவுடைத்தென்க. யாம் இங்ஙனங் கூறியதற்குச் "சொல்லொடுங் குறிப்பொடு முடிபுகொ ளியற்கை—புல்லிய கிளவி யெச்சமாகும்" என்னுஞ் செய்யுளியற் சூத்திரமே சான்றாதல் அறிக.

இனி இவ்வாறன்றி ஈண்டுக் கூறிய பெயரெச்சம் முதலிய பத்தெச்சங்களுக்கும் பிறவாற்றான் இலக்கணங் கூறுவாரும் உளர். அவையும் பெரும்பாலும் இவற்றுள்ளே அடங்குமாறும் பிறபகுதிப் படுமாறும் ஓர்ந்து உணர்க. (௩௭)

௩௯௨. தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை
நிகழுங் காலமொடு வாராக் காலமு
மிறந்த காலமொடு வாராக் காலமு
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

இது மேல் உம்மையெச்சத்திற்கு முடிபாமென்ற தன்வினை காலம் வேறுபடுதலும் படாமையும் உடைமையான் இன்னுழி இன்னவாற்றானல்லது வேறுபடாதென வரையறுக்கின்றது.

இ - ள். உம்மையெச்சத்தின்முன் எஞ்சுபொருட்கிளவி உம்மையில்சொல்லாய் வருங்கால் நிகழ்காலத்தோடு எதிர்காலமும் இறந்தகாலத்தோடு எதிர்காலமும் மயங்குதலை நீக்கார் அவ்வாறு மயங்கும் முறைமையான். எ - று.

'முறைநிலையான' என்றதனாற் கூறியமுறையானல்லது எதிர் காலம் முன்னிற்ப ஏனைக்காலம் பின்வந்து மயங்குதலில்லை என்பதாம்.

**வ**ரலாறு;—கூழுண்ணுநின்றான் சோறுமுண்பன் எனவும் கூழுண்டான் சோறுமுண்பன் எனவும் அவை கூறியமுறையானே மயங்கியவாறு காண்க.

இவற்றோடு இதுமயங்குதல் வரையாரெனவே இறந்தகாலத்தோடு நிகழ்காலமும் நிகழ்காலத்தோடு இறந்தகாலமும் வந்து மயங்குதல் வரையப்படுமென்பதாம். 'தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை' என்றதனான் உம்மையடுத்தசொல் வருங்கால் வேறுபாடு இன்றி இரண்டுசொல்லும் ஒருகாலத்தான்வரும் என்பதாயிற்று. ()

௩௫௩. செய்யா யென்னு முன்னிலை வினைச்சொற்
செய்யென் கிளவி யாகிட னுடைத்தே.

இஃது ஓசைவேறுபாட்டான் ஒருசொல் ஒருசொல்லாமென்பதோர் ஒழிபுகூறுகின்றது.

இ - ள். ஒருதொழில்வினை மேற்செய்யாயென்னும் மறையாகிய முன்னிலைவினைச்சொல் அத்தொழில்வினைச் செய்யென்னும் உடம்பாட்டு முன்னிலைவினைச்சொல்லாம் இடத்தினையுடைத்து. எ - று.

இடனுடைத்தென்றதனாற் பெரும்பான்மை மறையாய்வரும். உண்ணாய் ஓதாய் என்பன போல்வன வேண்டிக்கோடற்பொருண்மைக்கட் படுத்தலோசையாற் சிறுபான்மை உடம்பாட்டின்கண்ணும் வருமென்பதாயிற்று.

**வ**ரலாறு;—"அறியாய் வாழி பொறிவரிப் பூநுதல் யானையொடு" என்னும் அகப்பாட்டினுள் அறியாய் என்றது "காமங்

கலந்த காதல் ருண்டெனி—னன்று மன்னிது நாடாய் கூறி'' என்றதனோடு இயையுங்கால் அவனோடு கூட்டமுண்டெனின் அது மிகவும் நன்று, அதனை ஆராயாமற் கூறுகின்றாய், அதனை நின்மனத்தான் ஆராய்ந்துபாராயென வேண்டிக்கோடற்பொருண்மைக்கட் படுத்தலோசையான் முன்னிலையேவலுடன்பாட்டின்கண் வந்தவாறு காண்க. இனி வழக்கின்கண்ணும் இந்நாள் எம்மில்லத்து உண்ணாய், இப்பொழுதுசொல்லாய் எனவரும். பிறவும் அன்ன.

உண் தின் என்பன முதலிய முன்னிலையேவல் உயர்ந்தான் இழிந்தானை ஏவுதற்கண் வருவன, இவை அன்னவல்லவாமென்க, நீகலாய்த்திராது உண்ணுயென்ற பொருளை உண்ணென்றது தாராது ஏவற்பொருட்டாய் நின்றமையின். (௫௯)

௩௫௪. முன்னத்தி னுணருங் கிளவியு முளவே
யின்ன வென்னுஞ் சொன்முறை யான.

இஃது இன்னுழி இப்பொருள் இதனாற் தோன்றுமென்பதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். சொல்லானன்றிச் சொல்லுவான் குறிப்பாற் பொருள் உணரப்படுஞ் சொற்களும் உள. இப்பொருள் இத்தன்மைய என்று சொல்லுதற்கண். எ - று.

**வரலாறு;**—செஞ்செவி வெள்ளொக்கலர் என்புழி மணியும் பொன்னும் அணிந்த செவியென்றும் வெள்ளியது உடுத்த சுற்றமென்றுங் குறிப்பான் அறியப்பட்டவாறு காண்க. குழைகொண்டு கோழியெறியும் வாழ்க்கையர் என்புழி அன்ன பெருஞ்செல்வத்தாரென்பதூஉங் குறிப்பான் உணரப்படும். இது ''வெளிப்படை குறிப்பின்'' என்புழி அடங்குமெனின், ஆண்டுப் பொருணிலை இருவகைத்தென்பதல்லது இன்னுழி இப்பொருள் குறிப்பிற் தோன்றுமென்னும் வேறுபாடு பெறப்படாமையான் ஆண்டு அடங்காதென்க. (௬0)

௩௫௫. ஒருபொருட் பலபெயர் பிரிவில வரையார்.

இஃது ஒருசார் மரபுவழுவமைதி உணர்த்துவதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். ஒருபொருளைக் குறித்துவரும் பலபெயர்ப்பொருளின் நீங்காதனவாயினவற்றை ஒருபொருட்குப் பலபெயர்வந்தன என்று கடியார். எ - று.

உ-ம். "வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்—தையலா யின்றுநீ நல்கினை நல்காயேற்—கூடலார் கோவொடு நீயும் படுதி யே—நாடறியக் கௌவை யொருங்கு" எனவும் "கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்—வைகலு மேறும் வயக்களி றே—கைதொழுவல்—காலேக வண்ணனைக் கண்ணுரக் காண வெஞ்—சாலேகஞ் சார நட." எனவும்வரும், இவற்றுள் வையைக் கிழவன் கூடலார்கோ என்பன ஒருபொருளை வரைந்து உணர்த்திநி ன்றாற்போலக் காலேகவண்ணனென்பது சாந்துபூசினார்க்கெல்லாம் பொதுவாய்க் கூத்தப்பெருஞ்சேந்தனையே வரைந்து உணர்த்தாமை யின் அது பிரிவுடைமையாற் கடியப்படுமாலோவெனின், அற்றன்று; "நிலங்கிளையா—நாணி நின்றோ ணிலைகண்டியானும்—பேணினெ னல்லனோ மகிழ்நவானத்—தணங்கருங் கடவு ளன்னோணின்— மகன்றா யாதல் புரைவதா லெனவே" என்புழி "வானத் தணங் ருங் கடவு ளன்னோள்" என்பது மகளிர்க்கெல்லாம் பொதுவாய் நா ணிநின்றோளை வரைந்து உணர்த்தாதாயினுஞ் சொல்லுவான் குறிப் பான் அவளையே உணர்த்தினாற்போலக் காலேகவண்ணனென்பதும் பொதுவாயினுஞ் சொல்லுவான் குறிப்பாற் கூத்தப்பெருஞ்சேந்த னையே உணர்த்திப் பிரிவிலவாய் நிற்றலிற் கடியப்படாதென்க. "பொற்பூண் சுமந்த புணர்மென்முலைக் கோடுபோழ—நற்பூங் கழலா னிருதிங்க ணயந்த வாறுங்—கற்பா டழித்த கனமாமணித் தூண் செய் தோளான்—வெற்பூ டறுத்து விரைவின்னெறிக் கொண்ட வாறும்" என்பதும் அது. இவ்வாறே சான்றோர்செய்யுளிற் பயின் றுவருமாறும் உணர்க. (௬௧)

௩௫௬. ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ.

இதுவும் அது.

இ-ள். பொருள்வேறுபாடின்றி ஒருபொருளைக்குறித்து வ ரும் பலசொற்கள் அப்பொருளைச் சிறப்பித்தலின் வழுவென்று கடி யப்படா மரபென்று கொள்ளப்படும். எ-று.

உ-ம். "நிவந்தோங்குபெருமலை" எனவும் "துறுகன்மீமிசையு றுகண்" எனவும் வரும். பிறவும் அன்ன. (௬௨)

௩௫௭. செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே.

இது வினைச்சொற்பற்றி மரபுவழு அமைப்பதாயதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். செயப்படுபொருளைச் செய்தவினைமுதல்போலத் தொழிற்படச் சொல்லுதலும் வழக்கின்கண் இயலும் மரபு. எ - று.

வழக்கியன்மரபெனவே இலக்கணமன்று என்பதாயிற்று.

உ-ம். திண்ணைமெழுகிற்று கலங்கழீஇயிற்று எனவரும். திண்ணைமெழுகப்பட்டதென்று மன்னுகற்பாலது அவ்வாய்பாட்டானன்றி வினைமுதல்வாய்பாட்டான் வருதலும் வழக்கின் உண்மையான் அமைக்க என வினைச்சொற்பற்றி மரபுவழு அமைத்தவாறுகாண்க.

இங்ஙனம் வினைமுதல்வாய்பாட்டாற் கிளத்தலேயன்றி எளிதின் அடப்படுதல் நோக்கி அரிசி தானே அட்டதெனச் செயப்படுபொருளை வினைமுதலாகக் கூறுதலும் அடங்குதற்குத் 'தொழிற்படக்கிளத்தலும்' என்றார். இதனைக் கருமக்கருத்தனென்ப.

இனி ஒன்றெனமுடித்தலான் இவ்வாள்வெட்டும் எனக் கருவியைத்தானே செய்வதாகக் கூறுங் கருவிக்கருத்தனும் அரசன் எடுத்த ஆலயமென ஏவினானைக் கருத்தனாகக் கூறும் ஏவற்கருத்தனுங் கொள்க. (௬௩)

௩௫௮. முன்னிலை யேவன்முன் னீயு மேயு
மந்நிலை மரபின் மெய்யூர்ந்து வருமே.

இது முன்னிலையேவல்வினைச்சொற்பற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். முன்னிலையேவல்வினைச்சொன்முன்வரும் ஈகாரமும் ஏகாரமும் முன்னிலைச்சொற்கு ஏற்றமெய் ஊர்ந்துவரும். எ - று.

வரலாறு;—"சென்றீபெரும நிற்றகைக்குநர்யாரே" "அட்டிலோலை தொட்டனை நின்மே" என இவை முன்னிலைக்கு ஏற்ற மெய் ஊர்ந்து வந்தவாறு கண்டுகொள்க.

ஈகாரம் ஒன்றேயாகப் புக்கீ உண்டீ உரைத்தீ சென்றீ என முன்னிலைவினையீற்று வேறுபாட்டிற்கு ஏற்ப மெய் வேறுபட்டு வருதலான் 'அந்நிலைமரபின்மெய்' என்றார். ஏகாரம் மகரமூர்ந்தல்லது வாராது.

இவ்வெழுத்துப்பேறு புணர்ச்சிவிகாரமாகலின் ஈண்டுக் கூறற்பாற்றன்றெனின், அற்றன்று; முன்னிலையேவன்முன் ஈயும் ஏயும்

அச்சொல்லொடு ஒற்றுமைப்பட்டு நிற்றலான் நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையான் மெய்ப்புணர்ச்சிவிகாரம் எனப்படா என்க.

ஏ ஏ என்பது ஓர் இடைச்சொல்லென்பது அறிவித்தற்கு "இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே" என்பதனைச் சார ஈண்டுப் போதந்து கூறினர். (௬௪)

௩௫௯. இடைச்சொல் லெல்லாம் வேற்றுமைச் சொல்லே.

இஃது இடைச்சொற்பற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். இடைச்சொல்லெல்லாம் பிறிதோர் சொல்லை வேறுபடுக்குஞ் சொல்லாம். எ - று.

இஃது என்சொல்லியவாறோவெனின், பிறிதோர்சொல்லை வேறுபடுப்பனவும் பிறிதோர்சொல்லான் வேறுபடுக்கப்படுவனவும் எனச் சொல் இருவகைப்படும். பிறிதோர் சொல்லை வேறுபடுத்தலாவது விசேடித்தல். பிறிதோர்சொல்லான் வேறுபடுக்கப்படுதலாவது விசேடிக்கப்படுதல். இவை பொதுவகையான் எல்லாச்சொற்குங் கூறுமை எய்துமாகலின் இடைச்சொல்லெல்லாம் வேறுபடுக்குஞ் சொல்லாவதல்லது ஒருஞான்றும் வேறுபடுக்கப்படுஞ் சொல்லாகா என நியமித்ததாம். அவை அன்னவாதல் இடையியலுள் ஓதப்பட்ட இடைச்சொல்லெல்லாம் வழக்கினுள்ளுஞ் செய்யுளுள்ளும் வருவழிக் கண்டுகொள்க.

வேற்றுமைச்சொல் வேற்றுமை செய்யுஞ்சொல்லென விரியும். வேற்றுமையெனினும் வேறுபாடெனினும் ஒக்கும்.

இடைச்சொல்லெல்லாம் வேற்றுமைச்சொல்லாயினும் அவற்றுள் ஒருசாரனவற்றை வேற்றுமைச்சொல்லென்றார், சேற்றுட்தோன்றுவனவற்றுள் ஒருசாரனவற்றைப் பங்கயமென்றாற்போல என்பது. இதுவும் ஓர் நயமென்க. (௬௫)

௩௬௦. உரிச்சொன் மருங்கினு முரியவை யுரிய.

இஃது உரிச்சொற்பற்றி நிகழ்வதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். உரிச்சொல்லிடத்தும் வேறுபடுத்துஞ் சொல்லாதற்கும் உரியன உரியவாம் எல்லாமுரியவாகா. எ - று.

எனவே, உரிச்சொல்லுள் வேறுபடுத்தும் வேறுபடுக்கப்பட்டும் இருநிலைமையுமுடையவாய் வருவன பெரும்பான்மையென்பதாம். வேறுபடுப்பன உறு தவ நனி என்னுந் தொடக்கத்தன. இருநிலைமையுமுடையன குரு கெழு செல்லல் இன்னல் என்னுந் தொடக்கத்தன. உறுபொருள் தவப்பல நனிசெய்தது ஏகலடுக்கம் என இவை ஒன்றனை விசேடித்தல்லது வாராமையுங் குருமணி விளங்குகுரு கேழ்கிளரகலம் செங்கேழ் செல்லனோய் அருஞ்செல்லல் இன்னற்குறிப்பு பேரின்னல் என இவை ஒன்றனை விசேடித்தும் விசேடிக்கப்பட்டும் இருநிலைமையுமுடையவாய் வருமாறும் வழக்குஞ் செய்யுளும் நோக்கிக் கண்டுகொள்க. குருவிளங்கிற்று செல்லநீர் எனத் தாமே நின்று வினைகொள்வன விசேடிக்கப்படுந் தன்மையுடையவாகலின் விசேடிக்கப்படுஞ் சொல்லாம். பிறவும் விசேடித்தல்லது வாராதனவும் விசேடித்தும் விசேடியாதும் வருவனவும் வழக்குஞ் செய்யுளும் நோக்கி உணர்க.

வேறுபடுக்குஞ் சொல்லேயாவன இவையெனத் தொகுத்து உணர்த்துதற்கும் 'உரிச்சொன் மருங்கினு முரியவை யுரிய' எனச் சூத்திரஞ் சுருங்குதற்கும் இடைச்சொல்லோத்தினுள்ளும் உரிச்சொல்லோத்தினுள்ளும் வையாது இரண்டுசூத்திரத்தையும் ஈண்டு வைத்தார். (௬௬)

௩௬௧. யாற்றுநீர் மொழிமாற்று நிரனிறை விற்பூண்
டாப்பிசை யளைமறி பாப்புக்கொண்டுகூட்
டடிமறி மாற்றெனப் பொருள்கோ ளெட்டே.

இது முற்கூறிப்போந்த இயற்சொல் முதலிய நால்வகைச் சொற்களானும் ஈட்டப்படுஞ் செய்யுட்கு உரிய பொருள்கோளின் பெயரும் முறையுந் தொகையும் உணர்த்துகின்றது.

இ - ள். யாற்றுநீர்ப்பொருள்கோளும் மொழிமாற்றுப்பொருள்கோளும் நிரனிறைப்பொருள்கோளும் பூட்டுவிற்பொருள்கோளுந் தாப்பிசைப்பொருள்கோளும் அளைமறிபாப்புப்பொருள்கோளுங் கொண்டுகூட்டுப்பொருள்கோளும் அடிமறிமாற்றுப்பொருள்கோளுமெனப் பொருள்கோள் எட்டுவகைப்படும். எ - று.

இவையனைத்துங் காரணக்குறியென்று உணர்க. ஏனைய போல விகாரப்படாது இயல்பாகவே தம்முட்கூடிப் பொருள் அற்று வருதலின் யாற்றுநீர்ப்பொருள்கோள் முன்வைக்கப்பட்டது. ஏனையவற்றிற்குங் கிடக்கைமுறைமைக் காரணங் கண்டுகொள்க. (௬௭)

௩சூஉ. அவற்றுண்,
மற்றைய நோக்கா தடிதொறும் வான்பொரு
ளற்றற் றொழுகுமஃ தியாற்றுப் புனலே.

இது நிறுத்தமுறையானே யாற்றுநீர்ப்பொருள்கோளாமாறு உணர்த்துகின்றது.

இ - ள். மேற்கூறிய பொருள்கோள்வகை எட்டனுள் ஏனைய டிகளை நோக்காது அடிதொறும் பொருள் முடிபுபெற்று வருவது யாற்றுநீர்ப்பொருள்கோளாம். எ - று.

ஏனையபோல விகாரப்படாது இயல்பாகவே தம்முட்கூடிப் பொருள் அற்று வருதலின் வான்பொருளென்றார்.

உ-ம். "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்—விலைப் பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றஞ்—சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றங்—கொலைப்பாலுங் குற்றமே யாம்." (சூஅ)

௩சூ௩. ஏற்ற பொருளுக் கியையு மொழிகளை
மாற்றியோ ரடியுள் வழங்கன் மொழிமாற்றே.

இது நிறுத்தமுறையானே மொழிமாற்றுப்பொருள்கோளா மாறு கூறுகின்றது.

இ - ள். தாங்குறித்த பொருளிற்குப் பொருந்திய மொழி களை ஓரடியுள்ளே மாற்றிச்சொல்லுதல் மொழிமாற்றுப்பொருள் கோளாம். எ - று.

உ-ம். "சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய—யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப—கானக நாடன் சுனை" இதனுள் நின்ற வழி நிற்ப இயையாமையிற் சுரைமிதப்ப அம்மியாழ எனவும் யானைக்குநிலை முயற்குநீத்து எனவும் ஓரடியுள்ளே மாற்றிக் கூட்ட இயைந்தவாறு காண்க.

இதனைச் சுண்ணமொழிமாற்றென்று ஈரடியிடத்தே கொள்ளின் ஏனையடிகளுள்ளும் ஏனைப்பாக்களுள்ளும் வரப்பெறுமை யின் 'மாற்றி யோரடியுள் வழங்கன் மொழி மாற்று' என்றார். (சூகூ)

௩௯௪. பெயரும் வினையுமாஞ் சொல்லையும்பொருளையும்
வேறு நிரனிறீஇ முறையினு மெதிரினு
நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே.

இது நிறுத்தமுறையானே நிரணிறைப்பொருள்கோளாமாறு கூறுகின்றது.

இ - ள். பெயர்ச்சொல்லும் வினைச்சொல்லுமாகின்ற முடிக்கப்படுஞ் சொற்களையும் அவற்றை முடிக்குஞ்சொற்களையும் வேறு வேறு நிரல்பட நிறுத்தி முறையேயாதல் எதிரேயாதல் முடிக்கப்படுஞ் சொற்களையும் முடிக்குஞ் சொற்களையும் இயையுமாறுகூட்டிப் பொருள்கோடல் நிரனிறைப்பொருள்கோளாம். எ - று.

தொடர்மொழிப்பொருள் முடிக்குஞ்சொற்கண்ணதாகலான் அத்னைப் பொருளென்றார்.

பெயரும் வினையுமென்றதனாற் பெயர்ச்சொல்லான் வருவதூஉம் வினைச்சொல்லான் வருவதூஉம் அவ்விருசொல்லானும் வருவதூஉமென மூன்றாய், முறையினும் எதிரினும் என்றதனால் நிரல்பட நிற்கும் முறைநிரனிறையும் நிரல்படநில்லாது மயங்கிநிற்கும் எதிர்நிரனிறையுமென அவையே ஒரோவொன்று இரண்டிரண்டாமெனக் கொள்க.

உ-ம். "கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி—மதி பவள முத்த முகம்வாய் முறுவல்—பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்—வடிவினளே வஞ்சி மகள்" என்புழி முடிவனவும் முடிப்பனவுமாகிய பெயர்ச்சொற்கள் நிரல்பட வேறுவேறு நிற்றலிற் பெயர்முறைநிரனிறை. "மாசு போகவுங் காய்பசி நீங்கவுங்—கடிபுனன் மூழ்கி யடிசில் கைதொட்டு" என்புழி முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச்சொற்கள் நிரல்பட வேறுவேறு நிற்றலின் வினைமுறைநிரனிறை. "உடலு முடைந்தோடு மூழ்மலரும் பார்க்கும்—கடலிரு ளாம்பல் பாம்பென்ற—கெடலருஞ்சீர்த்—திங்க டிருமுகமாச் சேத்து"என்புழி முடிவனவாகிய பெயரும் முடிப்பனவாகிய வினையும் நிரல்பட வேறுவேறு நிற்றலிற் பொதுமுறைநிரனிறை "காதுசேர் தாழ்குழையாய் கன்னித் துறைச்சேர்ப்ப—போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய—நீதியான்—மண்ணமிழ்த மங்கையர் தோண் மாற்றாரை யேற்றார்க்கு—நுண்ணிய வாய பொருள்." இதுவும் அது. "களிறுங் கந்தும் போல நளிகடற்—கூம்புங் கலனுங்

தோன்றும்" என்புழி முடிவனவும் முடிப்பனவுமாகிய பெயர்ச்சொற்கள் நிரல்பட நில்லாது மயங்கிநிற்றலிற் பெயரெதிர்நிரனிறை. வினையெதிர்நிரனிறை வந்துழிக்காண்க. "ஆடவர்க ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்—பாடகமு மூரகமும் பஞ்சரமா—நீடியமாணின்று னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ—மன்றூர் கலிக்கச்சி மாண்பு" என்புழி நிரல்பட நில்லாது முடிவனவும் முடிப்பனவுமாகிய பெயர்ச்சொற்களும் வினைச்சொற்களும் மயங்கிநிற்றலிற் பொதுவெதிர்நிரனிறை. பிறவும் அன்ன.

இனி நெறியென்றதனானே "காமவிதி கண்முக மென்மருங்குல் செய்யவாய்—தோமி றுகடினி சொல்லமிர்தங்—தேமலர்க்—காந்தள் குரும்பை களப மடவாள்கை—யேந்திளங் கொங்கையெழில்" என்றாற்போலும் எழுத்துநிரனிறையும் "வெண்பா முதலாக வேதிய ராதியா—மண்பால் வகுத்த வருணமா—மொண்பா—வினங்கட்கு மிவ்வாறே யென்பவாற் றென்னூன்—மனந்திட்பக் கற்றோர் மகிழ்ந்து." என்றாற்போலுந் தொகைநிரனிறையும் பிறவாற்றான் வரும் நிரனிறைவிகற்பம் அனைத்துங் கொள்க. நிரனிறை நிரலேநிறுத்தும் வேறுபாடு உடைமையின் மொழிமாற்றின் வேறென்று உணர்க. (௭௦)

௩௬௫. எழுவா யிறுதி நிலைமொழி தம்முட்
பொருணோக் குடையது பூட்டுவில் லாகும்.

இது நிறுத்தமுறையானே பூட்டுவிற்பொருள்கோளாமாறு கூறுகின்றது.

இ - ள். செய்யுளின் முதலீறுகளில் நின்ற சொற்கள் தம்மிற் பொருள்குறித்து நிற்பது பூட்டுவிற்பொருள்கோளாம். எ - று.

உ-ம். "திறந்திடுமின் றீயவை பிற்காண்டு மாத—ரிறந்து படிற்பெரிதா மேத—முறந்தையர்கோன்—றண்ணார மார்பிற் றமிழ்நர் பெருமானைக்—கண்ணாரக் காணக் கதவு" எனவரும். (௭௧)

௩௬௬. இடைநிலை மொழியே யேனையீ ரிடத்து
நடந்து பொருளை நண்ணுத றாப்பிசை.

இது நிறுத்தமுறையானே தாப்பிசைப்பொருள்கோளாமாறு கூறுகின்றது.

இ - ள். செய்யுளினிடைநின்ற சொல் முதலினும் ஈற்றி னுஞ் சென்று பொருளை ஒட்டிநிற்பது தாப்பிசைப்பொருள்கோ ளாம். எ - று.

உ-ம். "உண்ணுமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண—வண்ணுத் தல் செய்யா தளறு" என்புழி ஊனென்று இடைநின்ற சொல் ஏனையீரிடத்துஞ் சென்று ஒட்டியவாறு காண்க. (எ௨)

௩௬௭. செய்யு ளிறுதி மொழியிடை முதலினு
மெய்திய பொருள்கோ ளளைமறி பாப்பே.

இது நிறுத்தமுறையானே அளைமறிபாப்புப்பொருள்கோளா மாறு கூறுகின்றது.

இ - ள். செய்யுள் ஈற்றினில் நின்ற சொல் இடையினும் முத லினுஞ் சென்று இயைந்த பொருள்கோள் அளைமறிபாப்புப்பொருள் கோளாம். எ - று.

உ-ம். "தாழ்ந்த வுணர்வினராய்த் தாளுடைந்து தண்டூன்றித் தளர்வார் தாமுஞ்—சூழ்ந்த வினையாக்கை சுடவிழிந்து நாற்கதியிற் சுழல்வார் தாமு—மூழ்ந்த பிணிநலிய முன்செய்த வினையென்றே முனிவார் தாமும்—வாழ்ந்த பொழுதினே வானெய்து நெறிமுன்னி முயலா தாரே" எனவரும். (எ௩)

௩௬௮. யாப்படி பலவினுங் கோப்புடை மொழிகளை
யேற்புழி யியைப்பது கொண்டு கூட்டே.

இது நிறுத்தமுறையானே கொண்டுகூட்டுப்பொருள்கோளா மாறு கூறுகின்றது.

இ - ள். செய்யுளது பல அடிகளுள்ளுங் கோவைப்படநின்ற சொற்களைப் பொருள் தருதற்குப் பொருந்தும்படி முன்னின்ற சொல்லைப் பின்னே கொண்டுவந்தும் பின்னின்ற சொல்லை முன் னே கொண்டுபோந்துங் கொளுவிப் பொருள்கொள்வது கொண்டு கூட்டுப்பொருள்கோளாம். எ - று.

உ-ம். "ஆலத்து மேல குவளை குளத்துள—வாலி னெடிய குரங்கு" என்புழியுந் "தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங் கூந்தல்—வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி—யஞ்ச னத் தன்ன பசலை தணிவாமே—வங்கத்திற் சென்றார் வரின்." என்

புழியும் "ஆரிய மன்னர் பறையி னெழுந்தியம்பும்—பாரி பறம்பின் மேற் றண்ணுமை—காரி—விறன்முள்ளூர் வேங்கைவீ தாஅனுந் தோளா—ணிறனுள்ளூ ருள்ள தலர்." என்புழியும் முறையானே ஆலத்துமேலகுரங்கு குளத்துளகுவளை என ஈரடியுள்ளும் அஞ்சனத்தன்னபைங்கூந்தல் தெங்கங்காய்போலத் திரண்டு உருண்ட வெண்கோழிமுட்டையுடைத்தன்ன பசலை எனவும் பாரிபறம்பின் மேற்றண்ணுமைதாஅனுந்தோளாள்நிறன் விறன்முள்ளூர்வேங்கைவீ உள்ளூருள்ளதாகிய அலர் ஆரியமன்னர் பறையின் எழுந்தியம்பும் எனவும் இரண்டிறந்த பல அடியினுள்ளும் நின்ற சொற்களைப் பொருள் தருதற்குப் பொருந்தும்படி முன்னும் பின்னும் கொள்வழியறிந்து கொளுவிப் பொருள்கொண்டவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன.

இது பல அடிகளினும் வருதலின் மொழிமாற்றுப்பொருள் கோளின் வேறாயிற்று. (௭௪)

௩௪௧. அடிமறிச் செய்தி யடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

இது நிறுத்தமுறையானே அடிமறிமாற்றுப்பொருள்கோளா மாறு கூறுகின்றது.

இ - ள். அடிமறிமாற்றுப்பொருள்கோளாவது சீர் நின்றாங்கு நிற்ப அடிகள் தத்தம் நிலையிற் திரிந்து ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று நிற்கும். எ - று.

எனவே, எல்லா அடியும் யாண்டுஞ் செல்லுமென்பதாம்.

உ-ம். "மாறாக் காதலர் மலைமறந் தனரே—யாறாக் கட்பனி வரலா னவே—வேறா மென்றோள் வளைநெகி ழும்மே—கூறாய் தோழியான் வாழு மாறே" எனவும் "சூரல் பம்பிய சிறுகான் யாறே—சூரர மகளி ராரணங் கினரே—சார னாட நீவரலாறே—வார லெனினே யானஞ் சுவலே" எனவும் சீர் நின்றாங்குநிற்பப் பொருள் சிதையாமல் எல்லா அடியுந் தடுமாறியவாறு கண்டு கொள்க. பெரும்பான்மையும் நாலடிச்செய்யுட்கணல்லது இப்பொருள்கோள் வாராதென்க.

"வாரலெனினேயானஞ்சுவலே" என்புழி அஞ்சுவலேயான் என இறுதிச்சீர் ஈற்றயற்சீர்வயிற்சென்று திரிதலிற் சீர்நிலைதிரியா

தென்றல் பொருந்தாதெனின், யான் அஞ்சுவலென நின்றாங்கு நிற்பவும்பொருள்செல்லுமாகலிற் திரிதலின்மையிற் பொருந்து மென்க.

இனி இவ்வாறன்றித் திரிந்துவருவன உளவேல் அவை புற னடையான் அமைத்துக்கொள்க, "பொருடெரி மருங்கி—னீற்றடி யிறுசீரெருத்து வயிற்றிரியுந்—தோற்றமும் வரையா ரடிமறி யான" என்பவாகலின்.

அஃதேற் பெரும்பான்மையும் யாப்பிற்கே உரியபொருள் கோள்களை ஈண்டுச் சொல்லவேண்டியதென்னையெனின், தொடர் மொழி அடிமறிமாற்றொழித்த ஏனை ஏழுபொருள்கோளும் பட வருதலின் ஈண்டுக் கூறினரென்க. "அறஞ்செய்தான் றுறக்கம் புகும்" "தாயைக்கொன்றானிரயம்புகும்" எனவும் அவர்தந்தசோ றுங்கூறையுமுண்டுடுத்திருந்தேம் இவளுமிவனுமுமையுமுருத்திர னும் எனவும் தந்தையைக்கண்டுதலையின்வணங்கினான் எனவும் முறையானே யாற்றுநீர்ப்பொருள்கோளும் நிரனிறைப்பொருள்கோ ளும் பூட்டுவிற்பொருள்கோளும்படத் தொடர்ந்தவாறு காண்க. பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க. (௭௫)

௩௭௦. பெயர்நிலைக் கிளவியி னாஅ குநவுந்
திசைநிலைக் கிளவியி னாஅ குநவுந்
தொன்னெறி மொழிவயி னாஅ குநவு
மெய்ந்நிலை மயக்கி னாஅ குநவு
மந்திரப் பொருள்வயி னாஅ குநவு
மன்றி யனைத்துங் கடப்பா டிலவே.

இதுவும் ஒருசார் வழுவமைதியாகிய ஒழிபு கூறுகின்றது.

இ - ள். பெயர்நிலைக்கிளவியினாஅகுநவுமென்பது பெயர்க்கண் நிலைபெற்ற சொல்லிடத்து ஒருதிணைப்பெயர் ஒருதிணைக்காய் வருவ னவும் என்றவாறு.

அவை ஒரெருத்தை நம்பியென்றும் ஒருகிளியை நங்கை யென்றும் வழங்குதலாம்.

திசைநிலைக்கிளவியினாஅகுநவும் என்பது திசைக்கண் நிலை பெற்றசொல்லிடத்துவாய்பாடு திரிந்து வருவனவும் என்றவாறு.

அவை புலியான் பூசையான் என்னுந் தொடக்கத்தனவாம்.

தொன்னெறிமொழிவயினுஅகுநவும் என்பது அடிப்பட்ட நெறியான் வழங்குதலுடைய முதுமொழியாகிய செய்யுள்வேறுபாட்டின்கண் இயையாதன இயைந்தனவாய் வருவனவும் என்றவாறு.

அவை "யாற்றுட் செத்த வெருமை யூர்க்குயவர்க் கிழுத்தல் கடன்" என்றது முதலாயின. குயவன்சுள்ளையின் எழுந்த புகையானாகிய மேகந் தந்த நீரான் எருமைசாதலிற் குயவற்கு இழுத்தல் கடனாயிற்றென்க. ஒருகாரணம் உள்ளதுபோலக் கூறுகின்றது உண்மைப்பொருளன்றி ஒருவன் இயைபின்றிக் கூறிய சொற்கு எடுத்துக்காட்டாகக்கூறப்படுதலின் இயையாதன இயைந்தனவாய் வருதலாயிற்று.

மெய்ந்நிலைமயக்கினுஅகுநவும் என்பது பொருண்மயக்காகிய பிரேளிகைச்செய்யுட்கட் டிணைமுதலாயின திரிந்து வருவனவும் என்றவாறு.

அவை, "எழுதுவரிக் கோலத்தா ரீவார்க் குரியார்—தொழுதிமைக் கண்ணணைந்த தோட்டார்—முழுதகலா—நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும்—பேணற் கமைந்தார் பெரிது." என்பது முதலாயினவாம். இச்செய்யுட்கட் புத்தகமென்னும்பொருண்மேற் டிணைதிரிந்தவாறு காண்க. பிறவும் அன்ன.

பிரேளிகையெனினும் பிசியெனினும் ஒக்கும்.

மந்திரப்பொருள்வயினுஅகுநவும் என்பது மந்திரத்தையுடைய தெய்வங்களிடத்தே அதற்குரியவல்லாத சொற்களாய்வருவனவும் என்றவாறு.

இதற்கு உதாரணம் மந்திரநூல்வல்லார்வாய்க் கேட்டு உணர்க.

'அன்றி யனைத்துங் கடப்பா டிலவே' என்பது ஆகிய அவ்வனைத்தும் வழங்கியவாறே கொள்வதல்லது இலக்கணத்தான் யாப்புறவுடையவல்ல என்றவாறு.

இனி இரட்டுறமொழிதலென்பதனாற் பெயர்நிலைக்கிளவியினுஅகுநவுந் திசைநிலைக்கிளவியினுஅகுநவுமென்பனவற்றிற்குமுறையானே தத்தம்பொருளுணர்த்தாது பெயர்ந்தநிலைமையையுடைய சொல்லான்வருஞ் செய்யுளும் திசைநிலையான் நிலைபெற்றபெயரான்

வருஞ் சொல்லுமெனப் பொருள்கூறி "ஒள்வாள் கறையடி யானைக் கல்ல—துறைகழிப் பறியா வேலோ னூரே" என்புழி வேலோனென்பதூஉஞ் "செழுந்தா மரையன்ன வாட்கண்ணன்" என்புழி வாட்கண்ணென்பதூஉம் வேலையுடையோனென்னும் பொருளும் வாளன்ன கண்ணென்னும் பொருளும் பெயர்ந்து ஒருபெயர்த்தன்மையவாய் நின்றனவுந் தென்னன் வடமன் எனத் திசையான் நிலைபெற்றபெயரான் வருவனவுங் கடப்பாடிலவென்று ஈண்டே அமைத்துக்கொள்க. (எ௬)

௩எக. பழையன கடிதலும் புதியன புணர்த்தலும்
வழுவல கால வகையி னானே.

இது நூல்பற்றி நிகழ்வதோர் வழுவமைதி கூறுகின்றது.

இ - ள். அக்காலத்து உண்மையாற் தொல்லாசிரியர் நூலுள் விதிக்கப்பட்டனவற்றுட் சில இக்காலத்து இன்மையான் அவற்றிற்கு யாம் இலக்கணங் கூறாது அவற்றை விடுதலும் அக்காலத்து இன்மையான் அந்நூலுள் விதிக்கப்படாதனவற்றுட் சில இக்காலத்து உண்மையான் அவற்றிற்கு யாம் இலக்கணங் கூறுதலும் முன்னோர் நூலின் முடிபுநோக்கி முறையானே குன்றக்கூறலும் மிகைபடக்கூறலுமாகிய குற்றமாகா, காலக்கூறுபாட்டான். எ - று.

உ-ம். கேட்டையென்றா நின்றையென்றா காத்தையென்றா கண்டையென்றா என்னுந் தொடக்கத்தன அக்காலத்து உண்மையின் அவற்றிற்குத் தொல்லாசிரியர் இலக்கணங் கூறினாராயினும் இக்காலத்து இன்மையான் விடுக்கப்பட்டன. சரி சமழ்ப்பு சட்டி சழக்கு என்னுந் தோடக்கத்தன அக்காலத்து இன்மையின் அவற்றிற்குத் தொல்லாசிரியர் இலக்கணங் கூறாராயினும் இக்காலத்து உண்மையான் இலக்கணங் கூறப்பட்டன. பிறவும்இவ்வாறேகாண்க.

௩எஉ. சொற்றொறு மிற்றிதன் பெற்றியென் றனைத்து
முற்ற மொழிகுறின் முடிவில வாகலிற்
சொற்றவற் றியலான் மற்றைய பிறவுந்
தெற்றென வுணர்த றெள்ளியோர் கடனே.

இஃது அதிகாரப்புறனடை கூறுகின்றது.

இ - ள். சொற்கடோறும் இத்தன்மையையுடைத்து இச்சொல்லினது இயல்பு என்று அவைமுழுதும் எஞ்சாமற் தனித்தனியே

எடுத்து இலக்கணங் கூறத் தொடங்கின் ஈறுகாண்டல் அரிதாகலின் ஈண்டு இலக்கணங் கூறிப்போந்த சொற்களது இயல்பானே இலக் கணங் கூறாத சொற்களையும் ஒப்பநோக்கி விளங்கி அறிதல் துணிவு டையோர் கடன். எ - று.

**வ**ரலாறு;—யானும் நீயும் அவனுஞ் செல்வேம் என ஏனையி டத்திற்கு உரிய சொற்களுந் தன்மையோடு இயைந்த வழித் தன் மையான் முடிந்தாற்போல அவனும் நீயுஞ் சென்மின் எனவும் "ஒண்டுவி நாராய்நின் சேவலு நீயுமாய்—வண்டூதும் பூங்கானல் வைகலுஞ் சேறிரால்" எனவும் படர்க்கைச்சொன் முன்னிலை யோடு இயைந்தவழி முன்னிலையான் முடிதலும் இந்நாழிக்கு இந் நாழி சிறிது பெரிது என உடனிற்கற்பாலவல்லாத சிறுபான்மை யும் பெரும்பான்மையும் உடனிற்றலும் வடுகக்கண்ணனென வல் லொற்று அடுத்தவழி வடுகநாட்டிற் பிறந்த கண்ணனெனவும் வடு கங்கண்ணனென மெல்லொற்று அடுத்தவழி வடுகற்குமகனாகிய கண்ணனெனவும் பொருள்படுதலும் "ஈதா கொடுவெனு மூன்று முறையே—யிழிந்தோ னொப்போன் மிக்கோ னிரப்புரை" ஆதற்கு உரிய மரபினவாகலும் "இவன்யா ரென்குவை யாயி னிவனே" என்னும் புறப்பாட்டினுள் இவனென்பது முன்னிலைப்படர்க்கை யாய் நிற்றலும் இன்னோரன்ன பிறவும் இப்புறனடையானே அமைத்துக்கொள்க என்பதாம். (எஅ)

ஐந்தாவது பொதுவியல் முற்றிற்று.



இரண்டாவது

# சொல்லதிகாரம் முற்றிற்று.



உ

திருச்சிற்றம்பலம்.

# இலக்கணவிளக்கம்.

மூன்றாவது

## பொருளதிகாரம்.

### க-வது அகத்திணையியல்.

௩௭௩. உமையுரு வுருமடுத் துலகிளைப் பொழிக்கு
மிமையவ னடிபணிந் தியம்புவன் பொருளே.

என்பது சூத்திரம். மேற் பாயிரத்துள் "எழுத்துமுதன்மூன்றையும்" என நிறுத்தமுறையானே எழுத்துஞ் சொல்லும் உணர்த்திப் பொருள் உணர்த்துகின்றாராகலின் இவ்வதிகாரம் பொருளதிகாரமென்னும் பெயர்த்து. பொருளை உணர்த்திய அதிகாரமென விரிக்க. பொருளென்றது அதன் இலக்கணம், அதிகாரமென்றது முறைமை. பொருளாவது மேல் உணர்த்திப்போந்த சொற்றொடர் கருவியாக உணரப்படுவதாகலின் மேல் அதிகாரத்தோடு இயைபுடைத்தாயிற்று. இவ்வதிகாரத்துள் ஐவகையோத்தினாற் பொருளிலக்கணம் உணர்த்துகின்றார். அவற்றுள் இம்முதலோத்து அகத்திணை இயல்பு உணர்த்திற்றாகலான் அகத்திணையியலென்னும் பெயர்த்து. அகமென்றது உள்ளம், திணையென்றது ஒழுக்கம், இயலென்றது இலக்கணம்; எனவே, அகத்திணையியலென்றது உள்ளத்தின்கண்ணே நிகழும் இன்பமாகிய ஒழுக்கத்தினது இலக்கணம் என்றவாறாயிற்றென்பது. இதனுள், இத்தலைச்சூத்திரங் கூறத்தொடங்கிய பொருள் இனிது முடியும்பொருட்டு வணக்கமும் அதனான் முடிபெய்தும் பொருளும் உணர்த்துவதாகிய சிறப்புப்பாயிரங் கூறுகின்றது.

இ - ள். உமாதேவியினது திருவுருவைத் தனது திருவுருவின்கண்ணே அடக்கி உலகத்து இளைப்பினை ஆற்றும் இறைவனது தாளை வணங்கி யான் சொல்லுவன் பொருளிலக்கணத்தை. எ - று.

ஈண்டு உலகமென்றது உலகினையும் உலகினுள்ள சீவான்மாக்களையும், ஆகுபெயராற் பொருளென்றது அதன் இலக்கணத்தையும் உணர்த்திநின்றன. ஏனையவற்றிற்கும் ஏற்குமாறு "மலைமகளொருபால்" என்னுஞ் சூத்திரத்திற்கு உரைத்தாங்குப் பொருள் விரித்து உரைத்துக்கொள்க. (க)

௩௭௪. போக்கறு மரபிற் பொருளெனப் படுவது
நோக்கரும் வீடு நுவற்சிசெல் லாமையி
னறம்பொரு ளின்ப மாகுமற் றதுவே
யகனும் புறனுமென் றாயிரு பாற்றாய்
வகைபட வந்த வணிநலந் தழீஇச்
செய்யு ளிடவயிற் புல்லிய நெறித்தே,

இது மேற் கூறுவலென்ற பொருளாவது விரித்துக்கூறும் உலகநடையானும் வேதநடையானும் இத்துணைப்பகுதிப்படுமெனவும் அதுவே தொகுத்துக்கூறுந் தமிழ்நடையான் இத்துணைப் பகுதிப்பட்டு இவ்வாறாகி இன்னுழிவிளங்கும் இயல்பிற்றெனவுங் கூறுகின்றது.

இ - ள். குற்றமற்ற இயல்பினையுடைய பொருளென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது, மனத்தான் நோக்குதற்கு எட்டாத வீடு துறவறமாகிய காரணவகையாற் கூறப்படுவதல்லது இலக்கணவகையாற் கூறுதற்கு எட்டாமையின், அதனை விடுத்து, விரித்துக்கூறும் உலகநடையானும் வேதநடையானும் அறமும் பொருளும் இன்பமுமென மூன்றுவகைப்படும். அங்ஙனம் விரித்துக்கூறப்படும் பொருளே தொகுத்துக்கூறுந் தமிழ்நடையான் அகப்பொருளும் புறப்பொருளுமென இரண்டுவகைத்தாய்க், குணமும் அலங்காரமுமெனக் கூறுபட வந்த அணியான் உளதாகிய சிறப்பினைப்பொருந்திச், செய்யுளிடத்தே சார்ந்து விளங்கும் இயல்பினையுடைத்தாம். எ - று.

அறமாவது மனுமுதலிய நூல்களின் விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலுமாம். அஃது ஒழுக்கம் வழக்குத் தண்டமென மூன்றுவகைப்படும். அவற்றுள் ஒழுக்கமாவது அந்தணர்முதலிய

வருணத்தார் தத்தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரியமுதலிய நிலைக ளில் நின்று அவற்றிற்கு ஓதிய அறங்களின் வழுவாது ஒழுகுதல். வழக்காவது ஒருபொருளைத் தனித்தனியே எனதெனதென்றிருப் பார் அது காரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்மேற் செல் வது. அது கடன்கோடல் முதலிய பதினெட்டுப் பதார்த்தத்ததாம். தண்டமாவது அவ்வொழுக்கநெறியினும் வழக்குநெறியினும் வழீஇ யினோரை அந்நெறிநிறுத்தற்பொருட்டு ஒப்பநாடி அதற்குத் தக வொறுத்தல்.

இனி இல்லறத்தின்வழிப்படுவனவாகிய பொருள் இன்பங்க ளுட் பொருளாவது அரசநீதி துணைக்காரணமாக ஈட்டப்படுவது. அது மணி பொன் நெல் முதலாயினவாம். இன்பமாவது பொருள் துணைக்காரணமாக ஒருகாலத்து ஒருபொருளான் ஐம்புலங்களும் நுகர்தற்சிறப்புடையதாம். அறம் இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும் பயத்தலானும், பொருள் இம்மை மறுமையென்னும் இரண்டனையும் பயத்தலானும், இன்பம் இம்மையொன்றனையே பயத்தலானும் இம்முறை வைத்தார். "சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு—மறத்துவழிப் படூஉந் தோற்றம் போல" என்றார் பிறரு மெனக் கொள்க. அகம் முதலாயினவற்றின் விகற்பமெல்லாம் மேலே கூறுபவாகலின் அவை ஆங்காங்கு உணர்க. (௨)

௩௭௫. அகமெனப் படுவது வகையொரு மூன்றனு
ளின்ப மென்னு மியல்பிற் றாகி
யகத்துநிக ழொழுக்க மாதல் வேண்டும்.

இது மேல் நிறுத்தமுறையானே அகப்பொருளாவது இன்ன தென அதன் இயல்பு கூறுகின்றது.

இ - ள். அகமென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது மேற்கூ றிப்போந்த அறமுதலாகிய மூவகைப்பொருள்களுள் இன்பமென் னும் இயல்பினையுடைத்தாகி உள்ளத்தின்கண்ணே நிகழும் ஒழுக்க மாதலை விரும்பும் ஆசிரியன். எ - று.

ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங் கூடுகின்ற கூட்டத்திற் பிறந்த இன்பம், அக்கூட்டத்தின்பின்னர், அவ்விருவரும் ஒருவர்க் கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாத தாய், யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொ ருளாகலின் அதனை அகமென்றார். எனவே, அகத்தே எழுகின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகுபெயராம். (௩)

௩௭௬. அதுவே கைக்கிளை யைந்திணை யேனைப்
பெருந்திணை யெனவெழு பெற்றித் தாகும்.

இது மேல் அகமெனப்பட்ட பொருட்கு வகையும் பெயருங் கூறுகின்றது.

இ - ள். மேல் அகப்பொருளெனக் கூறிப்போந்த அகத்திணை தான் கைக்கிளைத்திணையும் ஐந்திணையும் ஒழிந்த பெருந்திணையுமென ஏழியல்பினையுடைத்தாம். எ - று.

**கைக்**குடை கையேடு கைவாய்க்கால் எனப் பெருமையில்லா தனவற்றை வழங்குபவாகலிற் கையென்பது சிறுமைபற்றி வருவதோர் இடைச்சொல்லென்றுங் கிளையென்பது உறவென்றும் பொருள்கொண்டு, கைக்கிளையென்பதற்குப் பெருமையில்லாத தலைமக்கள் கிளைமையென்று பொருள்கூறுவாரும் உளர். அற்றன்று. மேற் கைக்கிளை ஒருதலைக்காமமென்பதற்கு இயைய, அதற்கு யாம் ஒருமருங்குபற்றிய கேண்மையென்றே பொருள்கூறுதும். ஐந்திணை ஐந்துதிறத்தனவாகிய ஒழுக்கம். அவையாமாறு மேற்கூறுப. எல்லாவற்றினும் பெரிதாகிய திணையாகலிற் பெருந்திணையாயிற்று. என்னை? எண்வகைமணத்தினுள்ளுங் கைக்கிளைமுதல் ஆறுதிணையும் நான்குமணம் பெறத் தான் ஒன்றுமே நான்குமணம் பெற்று நடத்தலானென்பது. (௪)

௩௭௭. **கைக்**கிளை யைந்திணை பெருந்திணை முறையே
ஒருதலைக் காமமு மன்புடைக் காமமும்
பொருந்தாக் காமமும் பொருந்துத லுடைய.

இது முற்கூறிய எழுவகைத்திணைக்கு உரிய காமப்பொருள் உணர்த்துகின்றது.

இ - ள். கைக்கிளையும் ஐந்திணையும் பெருந்திணையும் முறையானே ஒருதலைக்காமமும் ஒத்தகாமமும் ஒவ்வாக்காமமுமாகிய காமப் பகுதிகளைப் பொருந்துதலுடையனவாம். எ - று.

**எ**னவே, அகத்திணைவிகற்பமாகிய ஏழனுள்ளும் அகமெனச் சிறப்பித்துச் சொல்லப்படுவன ஐந்திணையே என்பதூஉம் ஏனையிருதிணையும் அத்துணைச் சிறப்புடையவல்ல என்பதூஉங் கூறியவாறாயிற்றென்பது. (௫)

௩௭அ. அவைதாம்,
புனைந்துரை யுலகிய லெனுந்திற மிரண்டினுந்
தொல்லியல் வழாமற் சொல்லப் படுமே.

இஃது எழுவகைத்திணையும் இத்துணைப்பகுதியான் இவ்வாறு கூறப்படுமென்கின்றது.

இ - ள். மேற் காமப்பகுதிக்கு உரிமைகூறிய அகத்திணை ஏழும் நாடகவழக்கும் உலகியல்வழக்குமென்னும் இருபகுதியானுஞ் சங்கம் மரீஇனுரை உள்ளிட்ட சான்றோர் பாடலுட் பயின்று தொன்றுதொட்டு வரும் இயல்பிற் றிரியாது கூறப்படும். எ - று.

ஈண்டு நாடகவழக்கென்றது, எவ்விடத்தும் எக்காலத்தும் ஒப்ப நிகழும் உலகியல்போலாது, உள்ளோன் தலைவனாக இல்லதுபுணர்த்தல் முதலாகப் புனைந்துரைவகையாற் கூறும் நாடக இலக்கணம் போல, யாதானும் ஓரோவழி ஒருசாரார்மாட்டு உலகியலான் நிகழும் ஒழுக்கத்தினை எல்லார்க்கும் பொதுவாக்கி, இடமுங் காலமும் நியமித்துக் கூறுஞ் செய்யுள்வழக்கென்றே கோடும். மற்று இல்லோன் தலைவனாக இல்லதுபுணர்க்கும் நாடகவழக்குப்போலப் புனைந்துரை வகையாற் கூறுவதென்னின், உலகியல் இன்றாம். இன்றாகவே, ஆகாயப்பூ நாறிற்றென்றுழி அது சூடக்கருதுவாருமின்றி மயங்கிக் கூறினாரென்று உலகம் இழித்திடப்படுமாறுபோல இழித்திடப்படுதலானும், இல்லதொன்று கேட்டார்க்கு மெய்ப்பாடு பிறந்து இன்பஞ்செய்யாதாகலானும், உடன்கூறிய உலகியல்வழக்கினை ஒழித்தல் வேண்டுமாகலானும் பொருந்தாதென்க.

அவ்வதாமெனப் பொதுப்படக்கூறினரேனுந் 'தொல்லியல் வழாமல்' என்றலின் இங்ஙனம் பயின்றுவருவது ஐந்திணையுமே ஆதலின் அவையே இவ்வாறு கூறப்படுமென்றும் ஏனைக் கைக்கிளையும் பெருந்திணையும் அங்ஙனம் பயின்றுவாராமையிற் சிறுபான்மை கூறப்படுமென்றும் உய்த்துணர்ந்துகொள்க.

வரலாறு;—"மனைநெடு வயலை வேழஞ் சுற்றுந்—துறைகெழூரன் கொடுமை நாணி—நல்ல னென்றும் யாமே—யல்ல னென்னுமென் றடமென் றோளே." இவ்வைங்குறுநூற்றுள் முதற்பொருள்முதலிய மூன்றுங் கூறலின் நாடகவழக்குந், தலைவனைத் தலைவி கொடுமைகூறல் உலகியலாகலின் உலகியல்வழக்கும் உடன்வந்தது. இவ்விரண்டுங் கூடிவருதலே புலனெறிவழக்கமெனப்படுமெனக்

கொள்க. புலனெறிவழக்கமெனினுஞ் செய்யுள்வழக்கமெனினும் ஒக்கும். "முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்—கழுவுறு கலிங் கங் கழாஅ துரீஇக்—குவளை யுண்கண் குய்ப்புகை கமழத்—தான் றுழந் தட்ட தீம்புளிப் பாக—ரினிதெனக் கணவ னுண்டலி—னுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே." இஃது உலகியல் வழக்கே வந்தது. பிறவும் அன்ன. (௬)

௩௭௧. குறிஞ்சி பாலை முல்லை மருத
நெய்த லைந்திணைக் கெய்திய பெயரே.

இது மேல் ஐந்திணையென்றவற்றின் பெயரும் முறையுங் கூறுகின்றது.

இ - ள். குறிஞ்சியும் பாலையும் முல்லையும் மருதமும் நெய்தலும் மேல் ஐந்திணையெனக் கூறிப்போந்தவற்றிற்குப் பொருந்திய பெயராம். எ - று.

முதற்பொருள் முதலிய மூன்றுங் கொண்டே இவ்வைந்திணையாமென மேற் கூறுபவாகலின் இவற்றிற்கு இப்பெயரும் முறையும் முறையானே கருப்பொருள்பற்றியும் உரிப்பொருள்பற்றியும் ஆயினபோலும் என்பது. அற்றேற் கருப்பொருள் பலவன்றே? அவற்றுட் குறிஞ்சிமுதலாயினவற்றாற் பெயர்பெற்றவாறு என்னையெனின், "கருங்கோற்குறிஞ்சி" எனவுங் "கோடுறு பல்காய் வாலிணர்ப் பாலை" எனவும் "முல்லையந்தண்பொழில்" எனவும் "மருதமாநீழல்" எனவும் "பாசடை நிவந்த கணைக்கா னெய்தல்" எனவுஞ் சான்றோரான் எடுத்துக் கூறப்படுதலின் அவற்றுள் அவை சிறத்தலானென்க. உரிப்பொருள்பற்றி முறையாயினவாறு மேல் உரிப்பொருள் உரைப்புழிக் காண்க. (௭)

௩௭௦. அவைதாம்,
முதற்பொருள் கருப்பொ ருரிப்பொரு ளெனமுறை
நுதற்பொருண் மூன்றினு நுவலப் படுமே.

இது மேற் குறியீடு எய்திய ஐந்திணையும் இப்பொருட்பகுதி பற்றித் திணையாமென்கின்றது.

இ - ள். மேற் குறிஞ்சிமுதலிய குறியீடு எய்திய ஐந்திணையும் முதற்பொருளுங் கருப்பொருளும் உரிப்பொருளுமென முறை

யானே பாடலுட் பயின்றவாற்றான் ஒன்றினொன்று சிறந்தமை கருதுதலுடைய பொருள்மூன்றானுந் திணையாதல் கருதப்படும். எ-று.

கருப்பொருள் தோற்றுதற்கும் உரிப்பொருள் நிகழ்தற்குங் காரணமாய் முதனிற்றலின் முதற்பொருளென்றும், அம்முதற்பொருளாற் தோன்றுதல்பற்றிக் கருப்பொருளென்றும், இவையிரண்டினுஞ் சிறந்து திணைக்கு உரித்தாய்நிற்றலின் உரிப்பொருளென்றும் ஆயின என்பது. ஒன்றினொன்று சிறத்தலாவது முதலிற்கருவுங் கருவினுரியுஞ் சிறந்து வருதலாம். உம்மையான் மூன்றானும் அவற்றுட் சிலவற்றானும் நுவலப்படுமெனக் கொள்க. உதாரணம் மேற்பெறப்படும். (அ)

௩அக. நிலமும் பொழுதுமென முதலிரு வகைத்தே.

இது நிறுத்தமுறையானே முதற்பொருள் இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ-ள். நிலமும் பொழுதுமென முதற்பொருள் இரண்டுகூற்றினையுடைத்தாம். எ-று. (க)

௩அ௨. வரையே சுரமே புறவே பழனந்
திரையே யவையவை சேர்தரு மிடனே
யெனவீ ரைந்து மியம்பிய நிலனவை
குறிஞ்சி முதலா வகனைந் திணைக்கு
முறுந்திற முறையா னிரண்டிரண் டுரிய.

இது மேற்கூறிய நிலனென்னும் முதற்பொருள் இத்துணைப்பகுதித்தென்பதூஉம் அப்பகுதிகளுள் இப்பகுதி இத்திணைக்கு உரித்தென்பதூஉங் கூறுகின்றது.

இ-ள். வரையுஞ் சுரமுங் காடும் பழனமுங் கடலும் அவ்வவற்றைச் சார்ந்த இடமுமாகிய பத்துவகையினையுடைத்தாம் முற்கூறிய நிலனென்னும் முதற்பொருள். அங்ஙனங் கூறப்பட்ட பகுதிகள் குறிஞ்சிமுதலாகிய நடுவண் ஐந்திணைக்கும் பொருந்தும் பகுதிக்கண் முறையானே இரண்டிரண்டு உரியனவாம். எ-று.

அவற்றுள் "நடுவ ணைந்திணை நடுவண தொழியப்—படுதிரை வையம் பாத்திய பண்பே" என்பவாகலின் பாலைத்திணைக்கு நிலங் கூறுதல் மலைவாம்பிறவெனின், மதுரைக்காஞ்சியுட் "பாலைசான்ற

சுரஞ்சேர்ந்த தொருசார்" என்பதனானும் பிறவாற்றானும் மலைவா காது அமைவுடைத்தென்க. (௧௦)

௩௮௩. பெரும்பொழு தென்றா சிறுபொழு தென்றா
விரண்டு கூற்ற தியம்பிய பொழுதே.

இது மேற்கூறிய பொழுதென்னும் முதற்பொருளின் பாகுபாடு உணர்த்துகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட பொழுதென்னும் முதற்பொருள் பெரும்பொழுதென்றுஞ் சிறுபொழுதென்றும் இரண்டுபகுதியினை உடைத்து. எ - று. (௧௧)

௩௮௪. காரே கூதிர் முன்பனி பின்பனி
சீரிள் வேனில் வேனி லென்றாங்
கிருமூன் று திறத்தது பெரும்பொழு தவைதா
மாவணி முதலா விரண்டிரண் டாக
வாடி யிறுதிய வாயுங் காலே.

இது நிறுத்தமுறையானே பெரும்பொழுது இப்பகுதித்து என்பதூஉம் அப்பகுதிகள் இக்காலவரையறைய என்பதூஉம் உணர்த்துகின்றது.

இ - ள். கார்முதலாக வேனிலீறாகச் சொல்லப்பட்ட ஆறுபகுதியினையுடைத்தாம் பெரும்பொழுது. அங்ஙனம் அறுவகைப்பட்ட பெரும்பொழுதுகடாங் கால உரிமை எய்திய ஞாயிற்றுக்கு உரிய சிங்க ஓரைமுதலாக இரண்டிரண்டு ஓரையாகத் தண்மதிக்கு உரிய கர்க்கடக ஓரையீறாக வந்து முடிவனவாம் ஆராயுங்காலத்து. எ-று.

௩௮௫. மாலை யாமம் வைகுறு வென்றா
காலை நண்பக லெற்பா டென்றா
வறுவகைத் தென்ப சிறுபொழு தவைதாம்
படுசுட ரமையந் தொடங்கி யையிரு
கடிகை யளவைய காணுங் காலே.

இது மேற்கூறிய சிறுபொழுது இப்பகுதித்து என்பதூஉம் அப்பகுதிகள் இத்துணைக் காலவரையறைய என்பதூஉங் கூறுகின்றது.

இ - ள். மாலையும் இடையாமமும் வைகுறுவுங் காலையும் நண்பகலும் எற்பாடுமென்ற ஆறுபகுதியினை உடைத்துச் சிறுபொழுதென்று கூறுவர் ஆசிரியர். அங்ஙனம் அறுவகைப்பட்ட சிறுபொழுதுகடாம் அத்தஞ்சென்று அடைந்த ஞாயிற்றினது அமையந்தொடங்கி ஒரோவொன்று பப்பத்து நாழிகையளவை உடையனவாம் ஆராயுங்காலத்து. எ - று.

உதயந் தொடங்கியதன்வழி உதயங்காறும் ஒருவாரமாமன்றே? அதனமையத்தைக் கால உரிமை எய்திய ஞாயிற்றின்மேல் ஏற்றிப் படுசுடரமையமென்றும், "வைகுறுவிடியன்மருதம்" என ஆசிரியர் தொல்காப்பியனூர் ஓதிய வைகுறுவிடியலென்பதற்குப் பொருள்காணுது அதனை ஒருபொழுதாகவுங்கொண்டார் "மாலை யாமம் வைகறை யெற்பாடு—காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்—கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும்" என்பார்மன், இனிச் செவியறிவுறுத்தலைச் "செவியறிவுறு" என்றாற்போல வைகுறுவை வைகுறுதலெனக்கொண்டு வைகுறுதலும் விடியலுமென்று உம்மைத்தொகையாக நோக்கிற் சிறுபொழுது அறுவகைத்தென்பார் காணுங்காலென்றுங் கூறினூர். எனவே, மாலையும் இடையாமமுங் கழியுந்துணையும் அக்கங்குல் வைகுறுதலை வைகுறு என்றாரென்பதாயிற்று. கங்குல் வைகிய இறுதியாதலை நோக்கி வைகறையென்வும் பாடம் ஓதுப. நாள்வெயிற்காலையை விடியலென்றார், "விடியல்வெங் கதிர்காயும் வேயம லகலறை" என்பவாகலின். "விடியல் வைகறை யிடூஉ மூரன்" என்றது விடியற்கு முன்னர்த்தாகிய வைகறையென உருபுதொக்கு முன்மொழிநிலையாலாயிற்று.

௩௮௬. அவற்றுட், கூதிர் யாம முன்பனி யென்றிவை
யோதிய குறிஞ்சிக் குரிய வாதலும்
வேனி னண்பகல் பின்பனி யென்றிவை
பான்மையி னுரிய பாலைக் கேற்றலு
மல்குகார் மாலை முல்லைக்கு வகுத்தலு
மருத நெய்த லென்றிவை யிரண்டற்கு
முரிய பெரும்பொழு தாறுடு முறையே
வைகுறு விடியன் மருதத்திற் குறுதலும்
வெய்யோன் பாடு நெய்தற்குச் சிறத்தலு
மெய்து மென்மனு ரியல்புணர்ந் தோரே.

இது மேற்கூறிய காலப்பகுதிகள் திணைக்கு உரியவாமாறு கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய காலமென்னும் முதற்பொருட்பகுதி பன்னிரண்டனுட் கூதிர்க்காலமும் இடையாமமும் முன்பனிக்காலமுமென்று கூறப்பட்ட காலப்பகுதிகள் மேற்கூறிய குறிஞ்சித்திணைக்குச் சிறந்தனவாதலும், வேனிற்காலமும் நண்பகலும் பின்பனிக்காலமுமென்று கூறப்பட்ட காலப்பகுதிகள் ஊழான் அடுத்த பாலைத்திணைக்குச் சிறந்தனவாதலுங், கருப்பொருள் பொலிதற்கு ஏதுவாகிய கார்காலமும் மாலையும் முல்லைத்திணைக்குச் சிறந்தனவாகக் கூறுதலும், மருதமும் நெய்தலுமென்று கூறப்பட்ட இருதிணைக்குஞ் சிறந்த பெரும்பொழுது ஆறும் முறையானே வைகுறுவும் விடியலும் மருதத்திணைக்குச் சிறந்தனவாதலும், எற்பாடு நெய்தற்றிணைக்குச் சிறந்தனவாதலும் பொருந்துமென்று கூறுவர் அகப்பொருளிலக்கணங்களை அறிந்தோர். எ - று.

கூதிர்வேனிலென்பனவற்றோடு முன்பனிபின்பனிகளைச் சாரக்கூறாது பிற்படக்கூறினார் இவை அவைபோலச் சிறந்தனவல்ல என்பது உணர்த்துதற்கென்க. (௧௪)

௩௮௭. ஆரணங் குயர்ந்தோ ரல்லோர் புள்விலங்
கூர்நீர் பூமர முணப்பறை யாழ்பண்
டொழிலெனக் கருவீ ரெழுவகைத் தாகும்.

இது நிறுத்தமுறையானே கருப்பொருள் இத்துணைப்பகுதித்து என்கின்றது.

இ - ள். தெய்வம்முதலாகத் தொழில் ஈறாகச் சொல்லப்பட்ட பதினான்குவகையினையுடைத்தாம் மேற்கூறிப்போந்த கருப்பொருள். எ - று. (௧௫)

௩௮௮. விறற்சேய் பொருப்பன் வெற்பன் சிலம்பன்
குறத்தி கொடிச்சி குறவர் கானவர்
குறத்தியர் கிளிமயின் மறப்புலி குடாவடி
கறையடி சீயஞ் சிறுகுடி யருவி
நறுஞ்சுனை வேங்கை குறிஞ்சி காந்த
ளாரந் தேக்ககி லசோக நாகம்
வேரலை வனந் தோரை யேனல்

கறங்கிசைத் தொண்டகங் குறிஞ்சியாழ் குறிஞ்சி
வெறிகோ ளைவனம் வித்தல் செறிகுரற்
பைந்தினை காத்தல் செந்தே னழித்தல்
செழுங்கிழங் ககழ்தன் முழங்கிவீ ழருவியொடு
கொழுஞ்சுனை யாடல் குறிஞ்சிக்கருப் பொருளே.

பொதுவகையாற் கூறிய கருப்பொருட்பகுதி பதினான்கினையுஞ் சிறப்புவகையாற் றிணைக்கு உரிமையெய்துவிப்பான் புகுந்தவற்றுள் இது முறையானே குறிஞ்சித்திணைக்கு உரிய கருப்பொருள் இவையென்கின்றது.

இ - ள். வெற்றியையுடைய முருகவேளாகிய தெய்வம் முதலாகச் சுனையாடலாகிய தொழில் ஈறுகச் சொல்லப்பட்ட பதினான்கு பகுதியுங் குறிஞ்சித்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம். எ - று.

௩௮௯. கன்னி விடலை காளை மீளி
யின்னகை யெயிற்றி யெயின ரெயிற்றியர்
மறவர் மறத்தியர் புறவுபருந் தெருவை
கழுகு செந்நாய் கல்கெழு குறும்பு
குழிவறுங் கூவல் குராஅ மராஅ
உழிஞை பாலை யோமை யிருப்பை
வழங்குகதிக் கொண்டன செழும்பதிக் கவர்ந்தன
பகைத்துடி பாலையாழ் பஞ்சுரம் வெஞ்சமம்
பகற்சூறை யாடல் பாலைக்கருப் பொருளே.

இது முறையானே பாலைத்திணைக்கு உரிய கருப்பொருள் இவையென்கின்றது.

இ - ள். சயமடந்தையாகிய தெய்வம் முதலாகச் சூறையாடலாகிய தொழில் ஈறுகச் சொல்லப்பட்ட பதினான்குபகுதியும் பாலைத்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம். எ - று. (௧௭)

௩௯௦. நெடுமால் குறும்பொறை நாடன் றோன்றல்
வடிவில் கற்பின் மனைவி கிழத்தி
யிடைய ரிடைச்சிய ராய ராய்ச்சியர்
கான வாரண மான்முயல் பாடி
குறுஞ்சுனை கான்யாறு குல்லை முல்லை

சிறங்கிளர் தோன்றி பிறங்கலர்ப் பிடவங்
கொன்றை காயா மன்றலங் குருந்தந்
தாற்றுக்கதிர் வரகொடு சாமை முதிரை
யேற்றுப்பறை முல்லை யாழ்சா தாரி
சாமை வரகு தாமுடன் வித்த
லவைகளை கட்ட லரிதல் கடாவிடல்
செவிகவர் கொன்றைத் தீங்குழ லூதன்
மூவின மேய்த்தல் சேவினந் தழுவல்
கழுமிய குரவையொடு கான்யா றென்றிவை
முழுதுட னுடன் முல்லைக்கருப் பொருளே.

இது முறையானே முல்லைத்திணைக்கு உரிய கருப்பொருள் இவையென்கின்றது.

இ - ள். நெடிய மாயோனாகிய தெய்வம் முதலாகக் கான்யாறு டலாகிய தொழில் ஈறுகச் சொல்லப்பட்ட பதினான்குபகுதியும் முல்லைத்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம். எ - று. (௧௨)

௩௧௧. இந்திர னூரன் பைந்தார் மகிழ்நன்
கெழுதகு கற்பிற் கிழத்தி மனைவி
யுழவ ருழத்தியர் கடையர் கடைச்சியர்
மழலை வண்டான மகன்றி றுரை
யன்னம் போதா ந்ன்னிறக் கம்புள்
குருகு தாரா வெருமை நீர்நாய்
பெருகிய சிறப்பிற் பேரூர் மூதூர்
யாறு மனைக்கிண றிலஞ்சி தாமரை
நாறிதழ்க் கழுநீர் நறுமலர்க் குவளை
காஞ்சி வஞ்சி பூஞ்சினை மருதஞ்
செந்நெல் வெண்ணெ லந்நெ லரிகிணை
மன்றன் முழவ மருதயாழ் மருத
மன்றணி விழாக்கோள் வயற்களை கட்ட
லரிதல் கடாவிட லகன்குளங் குடைதல்
வருபுன லாடன் மருதக்கருப் பொருளே.

இது முறையானே மருதத்திணைக்கு உரிய கருப்பொருள் இவையென்கின்றது.

இ - ள். இந்திரனாகிய தெய்வம் முதலாக யாறுடலாகிய தொழில் ஈறாகச் சொல்லப்பட்ட பதினான்குபகுதியும் மருதத்திணைக்குச் சிறந்த கருப்பொருளாம். எ - று. (கக)

ருகஉ. வருணன் சேர்ப்பன் விரிதிரைப் புலம்பன்
பருமவல்குற் பரத்தி நுளைச்சி
நுளையர் நுளைச்சியர் பரதர் பரத்திய
ரளவ ரளத்திய ரலைகடற் காக்கை
சுறவம் பாக்கம் பெறலரும் பட்டின
முவர்நீர்க் கேணி கவர்நீர் நெய்தல்
கண்டகக் கைதை முண்டக மடம்பு
கண்டல் புன்னை வண்டிமிர் ஞாழல்
புலவுமீ னுப்பு விலைகளிற் பெற்றன
நளிமீன் கோட்பறை நாவாய் பம்பை
விளரியாழ் செவ்வழி மீனுப்புப் படுத்த
லுணங்கவை விற்றன்மீ னுணக்கல்புள் ளோப்ப
னெடுங்கட லாட னெய்தற்கருப் பொருளே.

இது முறையானே நெய்தற்றிணைக்கு உரிய கருப்பொருள் இவையென்கின்றது.

இ - ள். வருணனாகிய தெய்வம் முதலாகக் கடலாடுதலாகிய தொழில் ஈறாகச் சொல்லப்பட்ட பதினான்குபகுதியும் நெய்தற்றிணைக்குச் சிறந்த கருப்பொருளாம். எ - று.

முறையானே ஐந்திணைக்கும் இங்ஙனம் எடுத்தோதிய பகுதி பதினான்கனுள் எடுத்தோதாதனவும் பாடலுட் பயின்று வருமேல் அவையுங்கொள்க. (உ0)

ருகங. புணர்தலும் பிரிதலு மிருத்தலு மூடலு
மிரங்கலு மிவற்றி னிமித்தமு மெனவாங்
கெய்திய வுரிப்பொரு ளையிரு வகைத்தவை
யோரிரண் டோரிரண் டுரைத்தவைந் திணைக்கு
நேரு மென்மனார் நெறியுணர்ந் தோரே.

இது நிறுத்தமுறையானே உரிப்பொருள் இத்துணைப்பகுதித்து என்பதூஉம் அப்பகுதிகள் தாம் இன்ன இன்ன திணைக்கு உரியவென்பதூஉம் உணர்த்துகின்றது.

இ - ள். புணர்தலும் பிரிதலும் இருத்தலும் ஊடலும் இரங்கலும் இவற்றின் நிமித்தமுமென மேற்கூறிப்போந்த உரிப்பொருள் பத்துவகையினை உடைத்தாம்; அவைதாம் முறையானே இரண்டிரண்டு முற்கூறிய ஐந்திணைக்குஞ் சிறந்தனவாமென்று கூறுவர் பாடல்சான்ற புலனெறிவழக்கினை உணர்ந்தோர். எ - று.

அகப்பொருளாவது புணர்ச்சியாகலானும் அஃது இருவர்க்கும் ஒப்ப நிகழ்தலானும் முன்னாப புணர்ச்சியும், புணர்ந்துழியல்லது பிரிவின்மையானும் அது தலைவன்கண்ணதாகிய சிறப்பானும் அதன்பின்னர்ப் பிரிவும், பிரிந்துழிக் கற்பாற் தலைவி ஆற்றியிருத்தல் வேண்டுதலின் அதன்பின்னர் இருத்தலும், பிரிவின்றிறனுகிய பரத்தையிற்பிரிந்துழித் தலைவன்றவறுநோக்கித் தலைவிகலாய்த்தல் இயல்பாகலானுங் காமத்திற்குச் சிறத்தலானும் அதன்பின்னர் ஊடலும், ஏனைப் பிரிவுநீட்டித்துழிக் காமங்கைமிக்கு அழுங்கல் இயல்பாகலின் அதன்பின்னர் இரங்கலும் வைக்கப்பட்டன.

"முதற்பொருள்கருப்பொருள்" என்பதுமுதற் "புணர்தலும் பிரிதலும்" என்பதீறுகக் கிடந்த சூத்திரங்களாற் போந்தன;—பொதுவகையான் முதற்பொருள் முதலிய மூன்றுங்கொண்டும் அவற்றுட் சிலகொண்டும் ஐந்திணையுமாமென்பதூஉஞ்; சிறப்புவகையான் வரையும் வரைசார்ந்த இடமுமாகிய நிலனும் இருள் தூங்கித் துளிமிகுதலானும் பனியானுஞ் சேறல் அரிதாகலானும் பானுட்கங்குலிற் பரந்துடன்வழங்காது மாவும்புள்ளுந் துணையுடன் இன்புற்று வதிதலிற் காமக்குறிப்புக் கழியவே பெருகுதலானுங் காவன்மிகுதிநோக்காதுவருந் தலைவனைக் குறிக்கண் எதிர்ப்பட்டுப் புணருங்காற் தலைவிக்கு இன்பம்பெருகுதலானுங் கூதிர்க்காலமும் அதனைத் தொடர்ந்த முன்பனிக்காலமும் அவற்றிடை இடையாமமுமென்னுங் காலமுமாகிய முதற்பொருளும், அந்நிலத்துவாழுங் குறவர்முதலாயினோர் குழீஇ வேண்டிய வேண்டியாங்கு எய்தும்பொருட்டு வெறியயர்பவாகலின் ஆண்டு வெளிப்படூஉம் முருகவேளும் முதற்பொருள்பற்றித் தோன்றும் ஏனைக்கருப்பொருளும், புணர்தலும் புணர்தனிமித்தமுமாகிய உரிப்பொருளும் ஒன்றற்கொன்று பொருத்தமுடையவாய்க் குறிஞ்சித்திணையைச் சிறப்பித்துநிற்றலின் அவை அதற்குச் சிறந்தன என்பதூஉஞ்; சுரமுஞ் சுரஞ்சார்ந்த இடனுமா

கிய நிலனுங் காலையும் மாலையும் நண்பகலன்ன கடுமைகூரச் சோலை தேம்பிக் கூவன்மாறி நீரும்நிழலுமின்றி நிலம் பயந்துறந்து புள்ளும் மாவும் புலம்புற்று இன்பமின்றித் துன்பம்பெருகுவதொரு காலமாதலின் இன்பத்திற்கு இடையூறாகிய பிரிவிற்கு முதிர்வேனிற்காலமும் அதனிடை நண்பகலுங் "தெள்ளறல் யாற்றுத் திரைமணலடைகரை—வண்டுவரி பாடத் தண்போ தலர்ந்து—தாதுந் தளிருமேதக்கத் துவன்றிப்—பல்பூஞ் சோலைப் பன்மலர் நாற்றமொடு—செவ்வித் தென்றற் ளெவ்வித் தாகிக்—குயில்கூக் குரலும் பயிலவதன் மேலு—நிலவுஞ் சாந்தும் பயில்வுறு முத்து—மின்பம் விளக்குமன்பொருள் பிறவும்—பண்டைய போலா தின்பம் மிகத்தரும்" இளவேனிற்காலத்துப் பொழில்விளையாடியும் புதுப்பூக் கொய்தும் அருவியாடியும் முன்னர் விளையாட்டின் நிகழ்ந்தமைபற்றிப் பிரிந்த கிழத்தி மெலிந்துரைக்குங் கிளவி பயின்றுவருதலானும் உடன்போக்கின்கண் அக்காலம் இன்பம்பயக்குமாதலானும் இளவேனிற்காலமும் அதனிடை நண்பகலும் அவ்வேனிலைத்தொடர்ந்த பின்பனிக்காலமும் அதனிடை நண்பகலுமென்னுங் காலமுமாகிய முதற்பொருளும், அந்நிலத்துவாழும் மறவர்முதலாயினோர் குழீஇ விறல்மேன்மேற்கிளைப்பப் பெறலரும் உயிர்ப்பலிபேணலின் ஆண்டு வெளிப்படூஉஞ் சயமடந்தையும் முதற்பொருள்பற்றித்தோன்றும் ஏனைக்கருப்பொருளும், பிரிதலும் பிரிதனிமித்தமுமாகிய உரிப்பொருளும்' ஒன்றற்கொன்று பொருத்தமுடையவாய்ப் பாலைத்திணையைச் சிறப்பித்துநிற்றலின் அவை அதற்குச் சிறந்தன என்பதூஉஉங்; காடுங் காடுசார்ந்த இடனுமாகிய நிலனும் வெப்பமுந் தட்பமு மிகாதிடை நிகர்த்ததாகி ஏவல்செய்துவரும் இளைஞருக்கு நீரும் நிழலும் பயத்தலானும் அராபதயிக்கு நீரும்நிழலும்பெறுதலிற் கவின்சிறந்து மாவும்புள்ளுந் துணையொடின்புற்று விளையாடுவனகண்டு வினைவயிற்பிரிந்து பாசறையினின்று விரைபரித்தேரூர்ந்து மீளுந் தலைவற்குக் காமக்குறிப்பு மிகுதலானுங் கார்காலமும் புல்லைமேய்ந்து கொல்லேற்றேடே புனிற்றாக் கன்றை நினைந்து மன்றிற்புகுதரவுந் தீங்குழலிசைப்பவும் பந்தர்முல்லை வந்து மணங்கஞற்றவும் வருகின்ற தலைவற்கும் இருந்த தலைவிக்குங் காமக்குறிப்புச் சிறத்தலின் அக்காலத்து மாலைப்பொழுதுமென்னுங் காலமுமாகிய முதற்பொருளும், அந்நிலத்துவாழுங் கோவலர்குழீஇ ஆகுதிபயக்கும் ஆபலகாக்கவெனக் குரவைதழீஇ மடைப்பலி கொடுத்தலின் ஆண்டு வெளிப்படூஉம் நெடுமாலும் முதற்பொருள்பற்றித் தோன்றும் ஏனைக்கருப்பொருளும், இருத்தலும் இருத்தனிமித்தமுமாகிய உரிப்பொருளும்ஒன்றற்கொன்று பொருத்தமுடையவாய முல்லைத்திணை

யைச் சிறப்பித்துநிற்றலின் அவை அதற்குச் சிறந்தன என்பதூஉம்; பழனமும் பழனஞ்சார்ந்த இடனுமாகிய நிலனும் பரத்தையிற்பிரிந்த தலைவன் ஆடலும் பாடலுங் கண்டுங்கேட்டும் பொழுதுகழிப்பிப் பிறர்க்குப் புலனாகாமை மீளுங் காலம் அதுவாகலானுந் தலைவிக்குங் கங்குல்யாமங் கழியாது நெஞ்சழிந்து ஆற்றாமைமிகுதலான ஊடலுணர்த்தற்கு எளிதாவதோர் உபகாரமுடைத்தாகலானும் வைகுறுவும் இனித் தலைவி விடியற்காலஞ் சிறுவரைத்தாகலின் அதனாற் பெறும்பயனின்றெனமுனிந்து வாயிலடைத்து ஊடனீட்டிப்பவே அவ்வைகுறுவழித் தோன்றிய விடியற்கண்ணும் இவன் மெய்வேறுபாடு விளங்கக்கண்டு வாயில்புகுத்தல் பயத்தலின் விடியலுமாகிய சிறுபொழுதும் பெரும்பொழுது ஆறுமென்னுங் காலமுமாகிய முதற்பொருளும், அந்நிலத்துவாழ்வோர் பலருங் குழீஇ ஊடலுங்கூடலுமாகிய காமச்சிறப்பு நிகழ்தற்கும் மழைவளந்தருதற்கும் விழாவெடுத்தலின் ஆண்டு வெளிப்படூஉம் ஆடலும் பாடலும் ஊடலும் உணர்த்தலும் உள்ளிட்ட இன்பவிளையாட்டு இனிது நுகரும் இமையோர்க்கும் இன்குரலெழிலிக்கும் இறைவனாகிய இந்திரனும் முதற்பொருள்பற்றித் தோன்றும் ஏனைக்கருப்பொருளும், ஊடலும் ஊடனிமித்தமுமாகிய உரிப்பொருளும் ஒன்றற்கொன்று பொருத்தமுடையவாய் மருதத்திணையைச் சிறப்பித்துநிற்றலின் அவை அதற்குச் சிறந்தனவெனபதூஉங்; கடலுங் கடல்சார்ந்த இடனுமாகிய நிலனும் வெஞ்சுடர் வெப்பந்தீரத் தண்ணறுஞ் சோலை தாழ்ந்து நிழற்செய்யவுந் தண்பதம் பட்ட தெண்கழி மேய்ந்து பல்வேறு வகைப் பட்ட புள்ளெல்லாங் குடம்பை நோக்கி யுடங்கு பெயரவும் புன்னை முதலிய பூவினாற்ற முன்னின்றுகளுற்றவும் நெடுந்திரை யழுவத்து நிலாக்கதிர் பரப்பவுங் காதல் கைமிக்குக் கடற்கானினுங் கானற்கானினுந் தன் நிறைகடந்து வேட்கைபுலப்பட உரைத்தலின் ஆண்டுக் காமக்குறிப்பு வெளிப்பட்டு இரங்கற்பொருள்சிறத்தலான் எற்பாடாகிய சிறுபொழுதும் பெரும்பொழுது ஆறுமென்னுங் காலமுமாகிய முதற்பொருளும், அந்நிலத்துவாழும் நுளையர்க்கு வலைவளந்தப்பின் ஆங்குவாழும் மகளிர் கிளையுடன்குழீஇச் சுறவுக்கொடி நாட்டிப் பரவுக்கடன் கொடுத்தலின் ஆண்டு வெளிப்படும் வருணனும் முதற்பொருள்பற்றித் தோன்றும் ஏனைக்கருப்பொருளும் இரங்கலும் இரங்கனிமித்தமுமாகிய உரிப்பொருளும் ஒன்றற்கொன்று பொருத்தமுடையவாய் நெய்தற்றிணையைச் சிறப்பித்துநிற்றலின் அவை அதற்குச் சிறந்தனவென்பதூஉம் ஆயினவென்க.

இனி இவற்றிற்கு முறையே உதாரணம்; "இளைபா ராட்டுங் கடுநடை வயக்களிறு—முளைதரு பூட்டி வேண்டுகுள கருந்த—வாணிற வுருவி னொளிறுபு மின்னிப்—பருவுறைப் பஃறுளி சிதறிவா னவின்று—பெருவரை நளிர்சிமை யதிர வட்டித்துப்—புயலே றுரைஇய வியலிரு ணடுநாள்—விறலிழைப் பொலிந்த காண்பின் சாயற்—றடைஇத் திரண்ட நின்றோள்சேர் பல்லதைப்—படாஅ வாகுமெங் கண்ணென நீயு—மிருண்மயங் கியாமத் தியவுக்கெட விலங்கி—வரிவயங் கிரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்—பெருமலை விடரகம் வரவரி தென்னாய்—வரவெளி தாக வெண்ணுதியதனா—னுண்ணிதிற் கூட்டிய படுமா ணாரந்—தண்ணிது கமழுநின்மார் பொருநா—ளடைய முயங்கே மாயின் யாமும்—விறலிழை நெகிழச் சாய்து மதுவே—யன்னை யறியினு மறிக வலர்வா—யம்பன் மூதூர் கேட்பினுங் கேட்க—வண்டிறை கொண்ட வெரிமரு டோன்றி—யொண்பூ வேங்கை கமழுந்—தண்பெருஞ் சாரற் பகல்வந் தீமே." இஃது இடத்துய்த்துப் பகற்குறிநேர்ந்த வாய்பாட்டானே வரைவுகடாயது: இம்மணிமிடைபவளத்தும், "வண்டுபடத் ததைந்த கண்ணி யொண்கழ—லுருவக் குதிரை மழவ ரோட்டிய—முருக னற்போர் நெடுவே ளாவி—யறுகோட் டியானை பொதுளி யாங்கட்—சிறுகா ரோடன் பயினொடு சேர்த்திய—கற்போற் பிரியல மென்ற சொற்றா—மறந்தனர் கொல்லோ தோழி சிறந்த—வேய்மருள் பணைத்தோ ணெகிழச் சேய்நாட்டுப்—பொலங்கல வெறுக்கை தருமார் நிலம்பக—வழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலி—னிழறேய்ந் துலறிய மரத்த வறைகாய்—பறுநீர்ப் பைஞ்சுனை யாமறப் புலர்தலி—னுகுநெற் பொரியும் வெம்மைய யாவரும்—வழங்குந ரின்மையின் வெளவுநர் மடியச்—சுரம்புல் லென்ற வாற்ற வலங்குசினை—நாரின் முருங்கை நவிரல் வான்பூச்—சூரலங் கடுவளி யெடுப்ப வாருற்—றுடைதிரைப் பிதிர்விற் பொங்கிமுன்—கடல்போ றோன்றல் காடிறந் தோரே." இது பிரிவிடையாற்றாது தோழிக்குக்கூறியது: இக்களிற்றியானைநிரையுள்ளும், "முல்லை வைநுதி தோன்ற வில்லமொடு—பைங்காற் கொன்றை மென்பிணியவிழ—விரும்பு திரித்தன்ன மாயிரு மருப்பிற்—பரலவ லடைய விரலை தெறிப்ப—மலர்ந்த ஞாலம் புலம்புபுறங் கொடுப்பக்—கருவி வானங் கதழுறை சிதறிக்—கார்செய் தன்றே கவின்பெறு கானங்—குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி—நரம்பார்ப் பன்ன வாங்குவள் பரியப்—பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த—தாதுண் பறவை பேதுற லஞ்சி—மணிநா வார்த்த மாண்வினைத் தேரி—

னுதுக்காண் டோன்றுங் குறும்பொறை நாடன்—கறங்கிசை விழவி னுறந்தைக் குணுது—நெடும்பெருங் குன்றத் தமன்ற காந்தட்—போ தவி ழலரி நாறு—மாய்தொடி யரிவைநின் மாணலம் படர்ந்தே.' இது குறித்தகாலம்வந்தது அவரும்வந்தாரென்று ஆற்றுவித்தது: இக்களிற்றியானைநிரையுள்ளுஞ், "சேற்றுநில முனைஇய செங்கட் காரா—வூர்மடி கங்குலி னொண்டளை பரிந்து—கூர்முள் வேலி கோட்டினி னீக்கி—நீர்முதிர் பழனத்து மீனுட னிரிய—வந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை—வண்டூது பனிமல ராரு மூர—யாரை யோநிற் புலக்கேம் வாருற்—றுறையிறந் தொளிருந் தாழிருங் கூந் தற்—பிறரு மொருத்தியை யெம்மனைத் தந்து—வதுவை யயர்ந் தனை யென்ப வஃதியாங்—கூறேம் வாழிய ரெந்தை செறுநர்—களிறுடை யிருஞ்சமந் ததைஇய நூறு—மொளிறுவாட் டானைக் கொற்கைச் செழியன்—பிண்ட நெல்லி னள்ளூ ரன்னவெம்—மொண்டொடி நெகிழினு நெகிழ்க—சென்றீ பெருமநிற் றகைக்கு நர் யாரே." இது வாயின்மறுத்தது: இக்களிற்றியானைநிரையுள் ளுங், "கானன் மாலைக் கழிப்பூக் கூம்ப—நீனிறப் பெருங்கடல் பாடெழுந் தொலிப்ப—மீனுர் குருகின் மென்பறைத் தொழுதி—குவையிரும் புன்னைக் குடம்பை சேர—வசைவண் டார்க்கு மல் குறுகாலைத்—தாழை தளரத் தூக்கி மாலை—யழிதக வந்த கொண் டலொடு கழிபடர்—காம நெஞ்சங் கையறு பிணையத்—துயரஞ் செய்துநம் மருளா ராயினு—மருஅ லியரோ வவருடைக் கேண் மை—யளியின் மையினவ ணுறைவு முனைஇ—வாரற்க தில்ல தோழி கழனி—வெண்ணெல் லரிநர் பின்றைத் ததும்புந்—தண் ணுமை வெரீஇய தடந்தா ளுரை—செறிமடை வயிரிற் பிளிற்றிப் பெண்ணை—யகமடற் சேக்குந் துறைவ—னின்றுயின் மார்பிற் சென்றவென் னெஞ்சே." இது பொருட்பிரிவிடைத் தோழிக்கு உரைத்தது: இக்களிற்றியானை நிரையுள்ளும் முறையானே குறிஞ்சி முதலிய ஐந்திணைக்கும் முதலுங் கருவும் வந்து உரிப்பொருளாற் சிறப்பெய்திமுடிந்தவாறு காண்க. பிறவும் அன்ன.

"நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா—லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற்—பிறையெதிர்ந்த—தாமரைபோல் வாண்முகத் துத் தாழ்குழலீர் காணீரோ—வேமரை போந்தன வீண்டு." இது மதியுடம்படுத்தது. முதற்பொருளின்றிவந்த குறிஞ்சி.

"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே—மலைய னொள்வேற் கண்ணி—முலையும் வாரா முதுக்குறைந் தனளே." இது நாணநாட்டம். முதலுங் கருவுமின்றி வந்த குறிஞ்சி.

"நாளு நாளு மாள்வினை யழுங்க—வில்லிருந்து மகிழ்வோர்க் கில்லையாற் புகழெ‌ன—வொண்பொருட் ககல்வர்நங் காதலர்—கண் பனி துடையினித் தோழிநீயே." இது வற்புறுத்தாற்றியது. உரிப் பொருளொன்றுமே வந்த பாலை.

"திருநகர் விளங்கு மாசில் கற்பி—னரிமதர் மழைக்கண் மாஅ யோளொடு—நின்னுடைக் கேண்மை யெவனோ முல்லை—யிரும்பல் கூந்த னாற்றமு—முருந்தேர் வெண்ப லொளியுநீ பெறவே." இது பொருளிற்பிரிந்தோன் சுரத்துநினைந்து உரைத்தது. முதற்பொருளின்றிவந்த முல்லை.

"கரந்தை விரைஇய தண்ணறுங் கண்ணி—யிளைய ரேவ வியங்குபரி கடைஇப்—பகைமுனை வலிக்குந் தேரொடு—வினைமுடித் தனர்நங் காத லோரே." இது வந்தாரென்றாற்றுவித்தது. முதலுங் கருவுமின்றிவந்த முல்லை.

"பூங்கொடி மருங்கி னெங்கை கேண்மை—முன்னும் பின்னு மாகி—யின்னும் பாண னெம்வயி னோனே." இது வாயின்மறுத்தது. உரிப்பொருளொன்றுமே வந்தமருதம்.

"அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப்—பூசல்வாயாப் புலம்புமனைக் கலங்கி—யேதின் மாக்களு நோவர் தோழி—யொன்று நோவா ரில்லைத்—தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே." இது கழிபடர். பேரானும் உரிப்பொருளானும் நெய்தலாயிற்று. பிறவும் அன்ன. (௨௧)

௩௯௪. முத்திறப் பொருளுந் தத்தந் திணையொடு
மரபின் வாராது மயங்கலு முரிய.

இது முதற்பொருள் முதலிய மூன்றற்குமாவதோர் புறனடை கூறுகின்றது, தமக்கு உரியதனோடன்றிப் பிறவற்றோடும் மயங்கு மென்றலின்.

இ - ள். முதல்கருவுரியென்னும் மூன்றுகூற்றவாகிய பொருளுந் தமக்குத் தமக்கு உரிய திணையொடு கூடி இலக்கணமுறையானே வாராது பிறவற்றிற்கு உரிய திணையொடு கூடி மயங்கிவருதலும் உரியவாம். எ - று.

மரபின்வாராதென்ற மிகையானே நிலமென்னும் முதற்பொருளொழித்து ஏனையவே மயங்கிவருமெனக் கொள்க.

உ-ம். "கருங்கால் வேங்கை வீயுகு துறுக—லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை—யெல்லி வருநர் களவிற்கு—நல்லையல்லை நெடுவெண் ணிலவே." என இக்குறுந்தொகையுட் பாலைக்கு உரிய வேனில் வந்ததூஉந், "தாமரைக் கண்ணியை தண்ணறுஞ் சாந்தினை—நேரிதழ்க் கோதையாள் செய்குறிநீவரின்—மணங்கமழ் நாற்றத்த மலைநின்று பலிபெறூஉ—மணங்கென வஞ்சுவர் சிறுகுடியோரே." என இப்பாட்டுள் மருதத்திணைக்குரிய தாமரைப்பூ வந்ததூஉம், "அறியே மல்லே மறிந்தன மாதோ—பொறிவரிச் சிறைய வண்டின மொய்ப்பச்—சாந்து நாறு நறியோள்—கூந்த றுறுநின் மார்பே தெய்யோ." எனப் புறத்தொழுக்கம் இன்றென்றாற்குத் தோழிகூறிய இவ்வைங்குறுநூற்றுள் ஊடல்வந்ததூஉம் முறையே குறிஞ்சித்திணையோடு முதற்பொருண்முதலிய மூன்றும் மயங்கிவந்தன. "அம்ம வாழி தோழி சிறியிலைக்—குறுஞ்சினை வேம்பி னறும்பழ முணீஇய—வாவ லுகக்கு மாலையு—மின்றுகொல் காதலர் சென்ற நாட்டே." என இவ்வைங்குறுநூற்றுள் முல்லைத்திணைக்கு உரிய மாலை வந்ததூஉம், "கன்மிசை மயிலாலக் கறங்கி யூரலர்தூற்றத்—தொன்னல நனிசாய நம்மையோ மறந்தைக்க—வொன்னார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற—வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்" என இப்பாலைக்கலியுட் குறிஞ்சித் திணைக்குரிய மயில்வந்ததூஉம், "உடையிவ ளுயிர்வாழா ணீநீப்பி னெனப்பல—விடைகொண்டியா மிரப்பவு மெமகொள்ளா யாயினை—கடைஇய வாற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை—யடையொடு வாடிய வணிமலர் தகைப்பன" என இப்பாலைக்கலியுள் மருதத்திணைக்குரிய பூவந்ததூஉம், "அன்னாய் வாழிவெண் டன்னை யென்றோழி—பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை—கொன்னே கடவுதியாயி னென்னதூஉ—மறிய வாகுமோ மற்றே—முறியிணர்க் கோங்கம் பயந்த மார்பே." என இவ்வேறுபாடு என்னென்ற செவிலிக்குத் தோழி பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடு நின்ற இதனுட் புணர்ச்சி வந்ததூஉம், "வண்சினைக் கோங்கின் றண்கமழ் படலை—யிருஞ்சிறை வண்டின் பெருங்கிளை மொய்ப்ப—நீநயந் துறையப் பட்டோள்—யாவ ளோவெம் மறையா தீமே." எனப் பரத்தையர்க்குப் பூவணிந்தமைகேட்ட தலைவி அஃதின்றென்றாற்குக் கூறிய இதனுள் ஊடல்வந்ததூஉம் முறையே பாலைத்திணையொடு முதற்பொருண்முதலிய மூன்றும் மயங்கிவந்தன. மழையில் வான மீனணிவு தன்ன—குழையமன் முசுண்டை வாலிய மலர—வரிவெண் கோடல் வாங்குகுலை வான்பூப்—பெரிய சூடிய கவர்தார்க் கோவல—ரெல்லுப்பெய லுழந்த பல்லா நிரையொடு—நீரகழ் கண்ணிய லூர்

வயிற் பெயர்தர—நனிசேட் பட்ட மாரி தளிசிறந்—தோதரு காட் டுநீர் தெருவுதொ ரொழுகப்—பேரிசை முழக்கமொடு சிறந்துநனி மயங்கிக்—கூதிர்நின் றன்றாற் பொழுதே காதலர்—நந்நிலை யறி யா ராயினுந் தந்நிலை—யறிந்தனர் கொல்லோ தாமே யோங்கு நடைக்—காய்சின யானை கங்குற் சூழ—வஞ்சுவர விறுத்த தானை—வெஞ்சின வேந்தன் பாசறை யோரே." எனத் தோழிக்குத் தலைவி கூறிய இம்மணிமிடைபவளத்துக் கூதிர்வந்தது.உம், "மங்குன் மாமழை விண்ணதிர்பு முழங்கித்—துள்ளுப் பெயல்கழிந்த பின் றைப் புகையுறப்—புள்ளி நுண் டுவலை பூவகை நிறையக்—காதலர்ப் பிரிந்த கையறு மகளிர்—நீர்வார் கண்ணிற் கருவிளை மலரத்—துய்த் தலைப் பூவின் புதலிவ ரீங்கை—நெய்த்தோய்த் தன்ன நீர்நனை யந் தளி—ரிருவகி ரிருளி னீரிய துயல்வர—வவரைப் பைம்பூப் பயில வகல்வயற்—கதிர்வார் காய்நெற் கட்கினி திறைஞ்சச்—சிதர்சினைத் தூங்குமற் சீர்வரை நாடர்—காய்சின வேந்தன் பாசறை நீடி—நந்நோ யறியா வறனி லாள—ரிந்நிலை களைய வருகுவர் கொல் லென—வானு தெறிதரும் வாடையொடு—நோனேன் றோழி யென் றனிமை யானே." எனப் பருவவரவின்கண் வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி கூறிய இம்மணிமிடை பவளத்துண் முன்பனி வந்ததூஉம் முல்லைத்திணையோடு மயங்கிவந்தன. "கருங்கோட் டெருமைச் செங்கட் புனிற்றாக்—காதற் குழவிக் கூறுமுலை மடுக்கு—நுந்தை நும்மூர் வருது—மொண்டொடி மடந்தை நின்னை யாம் பெறினே." என நின் தமர் வாராமையின் எமர்வரைவு நேர்ந் திலரென்று தோழி கூறக்கேட்ட தலைவன் தலைவிக்குக் கூறிய இவ் வைங்குறுநூற்றுட் குறிஞ்சித்திணைக்கு உரிய புணர்தல் மருதத்தி ணையோடு மயங்கிவந்ததது. "தொல்லூழி தடுமாறித் தொகல்வேண் டும் பருவத்தாற்—பல்வயி னுயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப் பான்போ—லெல்லுறு தெறுகதிர் மடங்கித்தன் கதிர்மாய—நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பி—னல்லது மலைந்திருந் தறநெறி நிறுக்கலா—மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர—வெல் லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை***பனியிருள் சூழ்தரப் பைதலஞ் சிறுகுழ—லினிவரி லுயருமற் பழியெனக் கலங்கிய—தனியவ ரிடும்பைகண் டினைதியோ வெம்போல—வினியசெய் தகன்றாரை யுடையை யோநீ" என இக்கலியுட் கங்குலும் மாலை யும் முன்பனியும் வந்ததூஉங் "கண்டிகு மல்லமோ கொண்கநின் கேளே—யொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென—வெல்லாங் குரு கை வினவு வோளே." என இவ்வைங்குறுநூற்றுட் பெதும்பைப் பருவத்தாளோர் தலைவியொடு வேட்கை நிகழ்ந்தமையைத் தலைவி

கூறித் தலைவன் குறிப்புணர்ந்ததூஉம் முறையே நெய்தற்றிணை யொடு முதலும் உரிப்பொருளும் மயங்கிவந்தன. ஒழிந்தனவும் இவ் வாறே மயங்குமாறு வந்துழிக்காண்க. (௨௨)

௩௬௫. ஒருதலைக் காமமு மொவ்வாக் காமமும்
விரவியும் வரூஉ மரபின வென்ப.

இஃது எய்தாதது எய்துவிக்கின்றது, கைக்கிளைபெருந்தி ணைக்கு உரிய உரிப்பொருளும் இவற்றோடு மயங்குமென்றலின்.

இ - ள். கைக்கிளைத்திணைக்கு உரிய ஒருதலைக்காமமென்னும் உரிப்பொருளும் பெருந்திணைக்கு உரிய பொருந்தாக்காமமென்னும் உரிப்பொருளுங் குறிஞ்சித்திணைமுதலிய ஐந்திணையோடும் மயங்கி யும் வரும் இயல்பையுடையனவென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

உ-ம். "ஊர்க்கானிவந்த" என்னுங் குறிஞ்சிக்கலியுள் "ஆய் தூவி யனமென வணிமயிற் பெடையெனத்—தூதுணும் புறவெனத் துதைந்தநின் னெழினல—மாதர்கொண் மானோக்கி மடநல்லாய் நிறகண்டார்ப்—பேதுறூஉ மென்பதை யறிதியோ வறியாயோ" எனக் குறிஞ்சித்திணையோடு கைக்கிளையும், "எழின்மருப் பெழில் வேழமிகுதரு கடாத்தாற்—றொழின்மாறித் தலைவைத்த தோட் டிகை நிமிர்ந்தாங்—கறிவுநம் மறிவாய்ந்த வடக்கமு நாணொடு—வறி தாகப் பிறரென்னை நகுபவு நகுபுடன்—மின்னவிர் நுடக்கமுங் கன வும்போன் மெய்காட்டி—யென்னெஞ்ச மென்னொடு நில்லாமை நனிவௌவித்—தன்னலங் கரந்தாளைத் தலைப்படுமா றெவன்கொல் லோ—மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை—யணிப்பூளை யா விரை யெருக்கொடு பிணித்தியாத்து—மல்லலூர் மறுகின்க ணிவட் பாடு மிஃதொத்த—னெல்லீருங் கேட்டீமி னென்று" இக்கலி யுள் நெய்தற்றிணையொடு பெருந்திணையும் மயங்கிவந்தன. ஒழிந் தனவற்றோடும் இவ்வாறே மயங்குமாறு வந்துழிக்காண்க. பிற வும் அன்ன. (௨௩)

௩௬௬. அளவி லின்பத் தைந்திணை மருங்கிற்
களவுகற் பெனவிரு கைகோள் வழங்கும்.

இது மேற்கூறிப்போந்த ஐந்திணைக்கு உரிய கைகோள்வரை யறை கூறுகின்றது.

இ - ள். வரம்பிலின்பத்தையுடைய ஐந்திணையிடத்துக் கள வுங் கற்புமென இரண்டொழுக்கம் நிகழும். எ - று. (௨௪)

௩௬௭. இயற்கைப் புணர்ச்சி யிடந்தலைப் பாடு
பாங்கற் கூட்டம் பாங்கியிற் கூட்டமென்
றுணர்த்திய களவிற் புணர்ச்சிநால் வகைத்தே.

இது நிறுத்தமுறையானே களவிற்புணரும் புணர்ச்சி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். இயற்கைப்புணர்ச்சியும் அப்புணர்ச்சி நிகழ்ந்த நிலக்களத்தைப் பின்னர்த் தலைப்பெய்து புணரும் புணர்ச்சியும் பாங்கனாற் புணரும் புணர்ச்சியும் பாங்கியாற் புணரும் புணர்ச்சியுமென முற்கூறிய களவென்னுங் கைகோளிற் புணர்ச்சி நான்குவகையினையுடைத்தாம். எ - று. (உ௫)

௩௬௮. மெய்க்கிளை யாழோர் வேண்டும் புணர்ச்சிமுன்
கைக்கிளை நிகழ்தல் கடனென மொழிப.

இஃது அசுரமும் இராக்கதமும் பைசாசமுமாகிய சிறப்பில்லாக் கைக்கிளைபோலன்றிக் காமஞ்சாலா இளமையோள்வயிற் கைக்கிளைபோலச் சிறந்த காமஞ்சான்ற இளமையோள்வயிற் கைக்கிளை இன்னுழி நிகழுமென்கின்றது.

இ - ள். பொருள்படு கிளைநரம்பினைப் பொருந்திய யாழினையுடைய கந்தருவர் விரும்பும் இயற்கைப்புணர்ச்சி முன் காட்சிமுதலாக மேற்கூறப்படும் நால்வகைக் குறிப்பிற்றாகிய கைக்கிளை நற்காமத்திற்கு இன்றியமையாமையின் வருதல் முறைமை. எ - று.

இது தலைவி வேட்கைக்குறிப்புத் தன்மேல் நிகழ்வதனைத் தலைவன் அறிவதற்குமுன்னே தன் காதல் மிகுதியாற் கூறுங் கூற்றதாகலிற் கைக்கிளையாயிற்று. இது தலைவற்கே உரியதென்பது "மடமானோக்கி" என்னுஞ் சூத்திரத்துக் கூறுதும்.

இவை புணர்ச்சிநிமித்தமாய்க் குறிஞ்சித்திணையாகாவோவெனின் காட்சிப்பின் தோன்றிய ஐயமுந் துணிவுங் குறிப்பறிதலும் நன்றெனக்கோடற்கும் அன்றெனக்கோடற்கும் பொதுவாகலின் அவை ஒருதலையாக நிமித்தமாகாவழி நிலைக்காட்சியே நிமித்தமாமென்று உணர்க. (உ௬)

௩௬௯. அதுவே, காமஞ் சான்ற விளமை யோள்வயிற்
குறிப்பறி காறுங் குறுகாது நின்று
குறிப்படு நெஞ்சொடு கூற லாகும்.

இது கைக்கிளையது இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிப்போந்த கைக்கிளையாவது காமம்நுகர்தற்கு அமைந்த இளமைப்பருவத்தாளாகிய தலைமகளிடத்து உண்டாகிய குறிப்பினைத் தான் அறியுமளவும் அவளைத் தலைமகன் அடாதுநின்று தன்வழித்தாகிய நெஞ்சினொடு சொல்லுதலாம். எ - று. (உஎ)

சoo. மறையோர் மன்னர் வணிகர் சூத்திரரெனு
மிறையோர் தத்தமக் கெய்துமற் றதுவே
மொழிந்தோர் நால்வரு மொழிந்தைந் நிலத்துறை
யிழிந்தோர் தம்மு ளுயர்ந்தோரு மெய்துப.

இது கைக்கிளைக்கு உரியார் இவரென்கின்றது.

இ - ள். மேற்கூறிய கைக்கிளை அந்தணரும் அரசரும் வணிகருஞ் சூத்திரருமென்னும் நால்வகை வருணத்துத் தலைமக்கள் தமக்குத் தமக்குப் பொருந்துவதாம். அக்கைக்கிளையை மேற்கூறிய நால்வகைத் தலைமக்களுமன்றி ஐவகைநிலத்தும் உறையும் நிலமக்களுட் தலைமக்களும் பெறுவர். எ - று.

உம்மை இழிவுசிறப்பாதலாற் சிறுபான்மைநோக்கி நின்றது.

சoக. தெய்வந் தன்னி னெய்தவுங் கிழத்தியி
னெய்தவும் படூஉ மியற்கைப் புணர்ச்சி.

இஃது இயற்கைப்புணர்ச்சி இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ - ள். மேற்கூறிய நால்வகைப் புணர்ச்சியுள்ளும் இயற்கைப்புணர்ச்சியாவது தெய்வத்தாற் பெறவுந் தலைமகளாற் பெறவும் படும். எ - று.

படும் என்பதனை இரண்டிடத்துங் கூட்டுக. (உகூ)

சoஉ. இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தி னெய்துழி
முயற்சி யின்றி முடிவ தாகும்.

இது மேற்கூறிய இயற்கைப்புணர்ச்சி இரண்டனுட் தெய்வப் புணர்ச்சியது இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். இயற்கைப்புணர்ச்சி தெய்வத்தாற் பெறுங்காலத்து முயற்சியின்றித் தானே முடிவதாம். எ - று.

எனவே, இயற்கைப்புணர்ச்சி தலைமகளாற் பெறுங்காலத்து முயற்சியானே முடிவதாமென்பதாயிற்று. (௩௦)

௪௦௩. உள்ளப் புணர்ச்சியு மெய்யுறு புணர்ச்சியுங்
கள்ளப் புணர்ச்சியுட் காதலர்க் குரிய.

இது மேற்கூறிப்போந்த களவிற்புணர்ச்சிக்கு எய்தியதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். உள்ளத்தாற் புணரும் புணர்ச்சியும் மெய்யுற்றுப் புணரும் புணர்ச்சியுமென்னும் இருகூற்றுப் புணர்ச்சியுங் களவென்னுங் கைகோளின்கட் புணரும் புணர்ச்சிக்கட் காதலையுடைய தலைவற்குந் தலைவிக்கும் உரியவாம். எ - று. (௩௧)

௪௦௪. பொருவிறந் தோர்க்குப் பெருமையு முரனு
நன்னுதற் கச்சமு நாணு மடனு
மன்னிய குணங்க ளாதலின் முன்ன
ருள்ளப் புணர்ச்சி யுரிய தாகும்.

மேற்கூறிய இருகூற்றுப்புணர்ச்சியுள் இஃது உள்ளப்புணர்ச்சி முன் நிகழ்தற்கு ஏது கூறுகின்றது.

இ - ள். நிகரில்லாத தலைமகற்குப் பெருமையும் உரனும், நன்னுதலை உடையளாகிய தலைமகட்கு அச்சமும் நாணும் மடனும் நிலைபெற்ற குணங்களாதலின் மேற்கூறிப்போந்த இருகூற்றுப்புணர்ச்சியுள்ளும் உள்ளப்புணர்ச்சி முன் நிகழ்தற்கு உரித்தாம். எ-று.

பெருமையாவது அறிவும் ஆற்றலும் புகழுங் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவமஞ்சுதலும் முதலியவற்றின் மேம்பாடு. உரனாவது கடைப்பிடியும் நிறையுங் கலங்காது துணிதலும் முதலியவற்றின் திண்மை. அச்சமாவது தன் அன்புகாரணத்தாற் றோன்றிய உட்கு. நாணாவது காமக்குறிப்பு நிகழ்ந்தவழிப் படுவதோர் உள்ளவொடுக்கம். மடமாவது செவிலியர் கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை.

இனி ஒன்றெனமுடித்தலாற் கண்டறியாதன கண்டுழி மனங்கொள்ளாத பயிர்ப்புஞ் செயத்தகுவது அறியாத பேதைமையும்

நிறுப்பதற்கு நெஞ்சு உண்டாம் நிறையுங் கொள்க. மடங் குடிப்பிறந்தோரது செய்கையதாகலின் அச்சமும் நாணும்போல மெய்யுறுபுணர்ச்சியை விலக்குவதாம்.

இவை இருவர்க்கும் மன்னிய குணங்களாகலின் மெய்யுறுபுணர்ச்சிக்கு உரியரல்லராயினும் இவ்விலக்கணத்திற் றிரியாது நின்றே மெய்யுறுபுணர்ச்சிக்கு உரியராவரென்பார், 'முன்னர் உள்ளப் புணர்ச்சி உரியதாகும்' என்றார். அங்ஙனமாதல் மேற்கூறுமாற்றானும் உணர்க. (௩௨)

௯௰௫. **கா**ட்சி வேட்கை யுள்ளுதன் மெலித
லாக்கஞ் செப்ப னுணுவரை யிறத்த
னோக்குவ வெல்லா மவையே போறன்
மறத்தன் மயக்கஞ் சாக்கா டென்ற
வையிரண் டவத்தையும் பெய்கழற் காளையும்
புகுமுகம் புரிதன் முதல வாகிக்
காட்சிமுதன் மூன்றையுங் கருதிநந் நான்கா
யாட்சியி னமைந்தவீ ராறுமெய்ப் பாடு
மருந்திள முறுவலும் பொருந்துத லுறினே
மெய்யுறு புணர்ச்சி யெய்துதற் குரித்தே.

இது மெய்யுறுபுணர்ச்சி நிகழுங்காலம் உணர்த்துகின்றது.

இ - ள். காண்டலும் பெறல்வேண்டுமென்னும் உள்ளநிகழ்ச்சியும் இடைவிடாது நினைத்தலும் அங்ஙனம் நினைத்தல் காரணமாக உடம்புவாடுதலும் வாடியபின் தன் நெஞ்சின் வருத்தம் மிகுகின்றபடியைப் பிறர்க்கு உரைத்தலும் நாணத்தின் எல்லையைக் கடத்தலுந் தன்னாற் காணப்பட்டனவெல்லாந் தான் கண்ட உறுப்புப்போலுதலும் பித்தாதலும் மோகித்தலும் இறந்துபடுதலுமெனக் கூறப்பட்ட பத்து அவத்தையும் ஒருங்குநிகழும் அளவாயிற் றலைமகனும் புகுமுகம்புரிதல் முதலியனவாகிக் காட்சிமுதலிய மூன்று அவத்தையினையும்பற்றி ஓரோவவத்தைக்கு நான்குநான்காய் ஆட்சியான் அமைவுபெற்ற பன்னிரண்டு மெய்ப்பாடுந் தலைமகளும் பொருந்துதலுற்றாலே அவ்விருவர்க்கும் மெய்யுறுபுணர்ச்சி பொருந்துதற்கு உரித்தாம். எ - று.

**நா**ன்காம் அவத்தை தொடங்கி ஆறாம் அவத்தைகாறும் பற்றிவரும் பாராட்டெடுத்தல் முதலாகக் கையறவுரைத்தல் ஈறாகக்

கிடந்த பன்னிரண்டு மெய்ப்பாடும் புணர்ச்சிப்பின்னர் நிகழ்வனவா கலானும் ஏழாம் அவத்தை தொடங்கிப் பத்தாம் அவத்தைகாறும் பற்றி வரும் மெய்ப்பாடெல்லாம் அகனைந்திணைக்காகாது பெருந்தி ணைப்பாற் படுவனவாகலானும் புகுமுகம்புரிதன் முதலிய பன்னி ரண்டு மெய்ப்பாடுமே ஈண்டைக்கு இயைவனவென்பார் 'ஆட்சி யின் அமைந்த' என்றார்.

வரலாறு;—"உள்ளிக் காண்பென் போல்வன் முள்ளெயிற்—றமிழ்த மூறுஞ் செவ்வாய்க் கமழகி—லார நாறு மறல்போற் கூந்தற்—பேரமர் மழைக்கட் கொடிச்சி—மூரன் முறுவலொடு மதைஇய நோக்கே." இஃது ஒருதலையுள்ளுதற்கும் "ஒண்டொடி யரிவை கொண்டன ணெஞ்சே—வண்டிமிர் பனித்துறைத் தொண் டி யாங்க—ணுரவுக் கடலொலி திரைபோல—விரவி நானுந் துயி லறி யேனே." இஃது ஆக்கஞ்செப்புதற்கு "காமம் விடுவொன் றோ நாண்விடு நன்னெஞ்சே—யானோ பொறேனிவ் விரண்டு." இது நாணுவரையிறத்தற்கும் "ஓங்குகெழிற் கொம்பர் நடுவி தெனப் புல்லுங்—காந்தட் கிவருங் கருவிளம் பூக்கொள்ளு—மாந்தளிர்க் கையிற் றடவரு மாமயில்—பூம்பொழி னோக்கிப் புகுவள் பின்செல் லுங்—தோளெனச் சென்று துளங்கொளி வேய்த்தோடு—நீள்க துப் பிஃதென நீரற லுட்புகும்" என்றாற்போல்வனநோக்குவவெல் லாம் அவையேபோறற்கும் உதாரணமாம். பிறவும் வந்தவழிக் காண்க. புகுமுகம்புரிதன் முதலியவற்றிற்குப் பொருளும் உதாரண மும் மெய்ப்பாடு கூறும்வழிப் பெறப்படும். அவை ஆண்டு உணர்க.

இனி, இவற்றின்வழித் தோன்றும் மெய்யுறுபுணர்ச்சிக்கு உதாரணம். "கோட லெதிர்முகைப் பசுவீ முல்லை—நாறிதழ்க் குவ ளையோ டிடையிடுபு விரைஇ—யைதுதொடை மாண்ட கோதை போல—நறிய நல்லோண் மேனி—முறியினும் வாயது முயங் கற்கு மினிதே." எனவரும். (௩௩)

௪0சூ. பகற்குறி யிரவுக் குறியெனும் பான்மைய
புகற்சியி னமைந்தோர் புணர்ச்சிநிக ழிடனவற்
றில்வரை யிகந்தது பகற்குறி யிரவுக்குறி
யில்வரை யிகவா வியல்பிற் றாகும்.

இது மேற்கூறிப்போந்த புணர்ச்சி நிகழும் இடம் இத்து ணைப் பகுதித்தெனவும் அப்பகுதிகள் இவ்வியல்பினவெனவுங் கூறுகின்றது.

இ - ள். பகற்குறியும் இரவுக்குறியுமென்னும் பகுதியையுடையவாம் அன்பான் அமைந்தோர் புணர்ச்சிநிகழும் இடங்கள். அவற்றுள் இல்லின் எல்லையைக் கடந்தது பகற்குறியாம், இரவுக்குறி அதனைக் கடவாத இயல்பினையுடைத்தாம். எ - று. (௩௪)

௪௦௭. ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றிருவகைத் தாகு
நிறைதரு காதன் மறையினிற் பிரிவே.

இது நிறுத்தமுறையானே களவென்னுங் கைகோளிடத்துப் பிரியும் பிரிவு இத்துணைப் பகுதித்தென்கின்றது.

இ - ள். ஒருவழித்தணத்தலும் வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதலுமென இரண்டுபகுதியினையுடைத்தாம் நிறைந்த காதலையுடைய களவின்கட்பிரியும் பிரிவு. எ - று.

அவற்றுள், ஒருவழித்தணத்தலாவது ஓர் ஊரின்கண்ணும் ஒருநாட்டின்கண்ணும் பிரிதல். வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதலாவது காடிடையிட்டும் நாடிடையிட்டும் பிரிதல். (௩௫)

௪௦௮. அவற்றுள்,
ஒருவழித் தணத்தற்குப் பருவங் கூறார்.

இஃது அப்பிரிவு இரண்டனுட் காலவரையறை கூறப்படாதது இதுவென்கின்றது.

இ - ள். மேற்கூறிய பிரிவு இரண்டனுள் ஒருவழித் தணத்தல் காடிடையிட்டும் நாடிடையிட்டும் பிரியப்படாமையின் அதற்குக் காலவரையறை சொல்லார் ஆசிரியர். எ - று. (௩௬)

௪௦௯. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலோ
ரிருதுவி னெல்லைத் தென்மனார் புலவர்.

இது காலவரையறை கூறப்படுவது இதுவென்கின்றது.

இ - ள். வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல் காடிடையிட்டும் நாடிடையிட்டும் பிரிதலின் அஃது இரண்டு திங்களின் வரம்பையுடைத்தென்று சொல்லுவர் அறிவுடையோர். எ-று. (௩௭)

௪௧௦. களவு வெளிப்படா முன்னும் பின்னும்
வினையு நெறித்தென விளம்பினர் வரைவே.

இது மேலைச்சூத்திரத்துட் தோற்றுவாய் செய்யப்பட்ட வரைவுநிகழும் இடங் கூறுகின்றது.

இ - ள். களவுவெளிப்படாமுன்னுங் களவுவெளிப்பட்டபின்னும் வரைவுநிகழும் நெறியினையுடைத்தாமென்று சொல்லுவர் அறிவுடையோர். எ - று.

வெளிப்படாமுன்னும் என்பதனால் வெளிப்பட்டபின்னுமெனத் தந்துரைக்கப்பட்டது. (௩௮)

௪௧௧. நான்குவகைப் புணர்வினுந் தான்றெருண்டு வரைதலும்
பாங்கனிற் பாங்கியிற் றெருளுற்று வரைதலுங்
களவுவெளிப் படாமுன் வரைத லாகும்.

இது களவுவெளிப்படாமுன் நிகழும் வரைவுக்கு இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட இயற்கைப்புணர்ச்சி முதலாகிய நான்குவகைப் புணர்ச்சிக்கண்ணுந் தலைமகன் தானே தெருண்டு வரைதலும் பாங்கனானுதல் பாங்கியானுதல் தெருட்டப்பட்டு வரைதலுமாகிய இவை களவுவெளிப்படாதமுன் வரைவாம். எ-று. (௩௧)

௪௧௨. உடன்போய் வரைதலு மீண்டு வரைதலு
முடன்போக் கிடையீ டுற்று வரைதலுங்
களவுவெளிப் பட்டபின் வரைத லாகும்.

இது களவுவெளிப்பட்டபின் நிகழும் வரைவுக்கு இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். புணர்ந்துடன்போய்த் தலைமகன் தன் ஊரின்கண்ணே வரைதலும் மீண்டுவந்து தம்மூரின்கண்ணே வரைதலும் உடன்போக்கிடையீடுற்றுத் தலைமகன் தலைமகள் தமரைவழிபட்டு வரைதலுமாகிய இவை களவுவெளிப்பட்டபின் வரைதலாம். எ-று.

௪௧௩. அவற்றுள்,
உடன்போய் வரைத லொருவகைத் தாகும்.

இஃது உடன்போய்வரைதலின் வகை உணர்த்துகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட மூவகை வரைவினுள் உடன் போய்த் தன் ஊரின்கண்ணே வரைதல் ஒருவகையினையுடைத் தாம். எ - று. (௪௧)

௪௧௪. அவண்மனை வரைதலுந் தன்மனை வரைதலு
மெனமீண்டு வரைத லிருவகைத் தாகும்.

இது மீண்டுவரைதலின் வகை உணர்த்துகின்றது.

இ - ள். தலைமகள் மனையின்கண்ணேவரைதலுந் தலைமகன் மனையின்கண்ணேவரைதலுமென இரண்டுவகையினையுடைத்தாம் உடன்போய் மீண்டு தம் ஊரின்கண்ணேவரைதல். எ - று. (௪௨)

௪௧௫. ஆற்றா றஞ்சினு மவன்வரைவு மறுப்பினும்
வேற்றுவரைவு நேரினுங் காப்புக் கைமிகினு
மாற்றுறத் தோன்று மறத்தொடு நிலையே.

இது மேற்கூறிய வரைவிற்கு நிமித்தங் கூறுகின்றது.

இ - ள். தலைமகன் வருவழி ஏதத்தினை அஞ்சிய இடத்துந் தமர் அவன் வரைவு எதிர்கொள்ளாத இடத்தும் பிறர்வரைவுநேரும் இடத்துங் காவல் கைமிகுந்த இடத்தும் நெறிப்படப் புலப்படும் அறத்தொடுநிலை. எ - று.

அறத்தொடுநிலை அறத்தோடு மாறுகொள்ளாத நிலை. (௪௩)

௪௧௬. தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும்
பாங்கி செவிலிக் கறத்தொடு நிற்குஞ்
செவிலி நற்றாய்க் கறத்தொடு நிற்கு
நற்றாய் தந்தை தன்னையர்க் கறத்தொடு
நிற்கு மென்ப நெறியுணர்ந் தோரே.

இஃது இவர் இவர்க்கு அறத்தொடுநிற்றற்குரியரென்கின்றது.

இ - ள். தலைவி முதலிய நால்வரும் பாங்கிமுதலாகிய நான்கு திறத்தார்க்கும் முறையே அறத்தொடுநிற்றற்கு உரியரென்று சொல்லுவர் அகப்பொருளிலக்கணம் அறிந்தோர். எ - று. (௪௪)

௪௧௭. ஒருபுண ரொழிந்தவற் றொருவழித் தணப்பவும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியவு

மிறைவனைச் செவிலி குறிவயிற் காணவு
மனைவயிற் செறிப்பவும் வருத்தங் கூரின்
வினவியக் கண்ணும் வினவாக் கண்ணு
மனநடைக் கிழத்தி யறத்தொடு நிற்கும்.

இது தலைவி அறத்தொடு நிற்குங் காலம் உணர்த்துகின்றது.

இ - ள். பாங்கியிற்கூட்டமாகிய ஒன்று நீங்கிய ஏனை இயற்கைப்புணர்ச்சி முதலாய மூன்று புணர்ச்சிக்கண்ணுந் தலைவன் ஒருவழித்தணத்தலானும் வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதலானுந் தலைவனைச் செவிலி குறியிடத்துக் காண்டலானும் மனையிடத்துச் செறித்தலானுந் தனக்கு வருத்தம் மிகுமாயிற் தன்னைப் பாங்கி வினவிய இடத்தும் வினவாத இடத்துந் தலைவி அவட்கு அறத்தொடுநிற்கும். எ - று.

பாங்கியென்பது அதிகாரத்தான் வந்தது. (௪௫)

௪௧௮. முன்னிலைப் புறமொழி முன்னிலை மொழிகளிற்
சின்மொழிப் பாங்கி செவிலிக் குணர்த்தும்.

இது பாங்கி அறத்தொடுநிற்குந் திறங் கூறுகின்றது.

இ - ள். முன்னிலைப்புறமொழியும் முன்னிலைமொழியுமாகிய இரண்டினும் பாங்கி செவிலிக்கு அறத்தொடுநிற்கும். எ - று. ()

௪௧௯. செவிலி நற்றாய்க்குக் கவலையின் றுணர்த்தும்.

இது செவிலி அறத்தொடுநிற்குந் திறங் கூறுகின்றது.

இ - ள். செவிலி அறத்தொடுநிற்குங் காலத்து நற்றாய்க்கு விளங்க அறிவிக்கும். எ - று. (௪௭)

௪௨௦. நற்றா யறத்தொடு நிற்குங் காலைக்
குரவனுந் தன்னையுங் குறிப்பி னுணர்ப.

இது நற்றாய் அறத்தொடுநிற்குந் திறங் கூறுகின்றது.

இ - ள். நற்றாய் அறத்தொடுநிற்குங் காலத்துச் சொல்லாடப் பெறாளாகலிற் தலைமகள் தந்தையுந் தன்னையும் அவள் குறிப்பினானே அறிவர். எ - று. (௪அ)

சஉக. பாங்கி தலைவியை வினவுஞ் செவிலி
பாங்கியை வினவும் பாங்கி தன்னையு
நற்றாய் தானும் வினவுஞ் செவிலியிற்
பொற்றொடிக் கிழத்தியை யுற்று நோக்கின்.

இஃது அறத்தொடுநிற்பார்க்கு வினாநிகழுமிடங் கூறுகின்றது.

இ - ள். தலைமகள்மாட்டு வேறுபாடு கண்டுழிப் பாங்கிமுதலாகிய மூவரும் இவ்வாறு வினவப்பெறுவர். எ - று.

'பாங்கி தன்னையு நற்றாய் தானும்' என்ற உம்மைகள் முறையே நற்றாய் செவிலியை வினவுதலும் பாங்கியைச் செவிலி வினவுதலுமன்றி என்னும் பொருள்பட நின்றன. இவ்வாறு நற்றாய வினவுவது செவிலியைப் போலத் தலைமகளை உற்றுப்பார்த்த இடத்தெனக்கொள்க. (சுக)

சஉஉ. ஆங்குடன் போயுழி யறத்தொடு நிற்ப
பாங்கியுஞ் செவிலியும் பயந்த தாயும்.

இஃது அறத்தொடுநிலை முறையானன்றி ஒருங்கு நிகழும் இடங் கூறுகின்றது.

இ - ள். தலைமகளுந் தலைமகனும் புணர்ந்துடன்போயகாலத்து அறத்தொடுநிற்பர் தோழியுஞ் செவிலியும் நற்றாயும். எ - று.

ஆங்கவென்னும் அசைநிலை ஈண்டு அகரந்தொக்கு நின்றது. ()

சஉரு. களவின் வழிவந்த கற்பும் பொற்பமை
களவின் வழிவராக் கற்புமென் றாங்கு
முற்படக் கிளந்த கற்பிரு வகைத்தே.

இது நிறுத்தமுறையானே கற்பின் பாகுபாடு கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிப்போந்த கற்புக் களவிற்புணர்ச்சிவழியான் வந்த கற்புங் களவிற் புணர்ச்சிவழியான் வாராக் கற்புமென இரண்டு பகுதியினையுடைத்தாம். எ - று.

களவின்வழிவந்த கற்பினை முற்கூறினார் அதனது சிறப்பு நோக்கி. (ருக)

௪௨௪. குரவரிற் புணர்ச்சி வாயிலிற் கூட்டமென்
றிருவகைத் தாகுங் கற்பிற் புணர்ச்சி.

இது கற்பிற்புணர்ச்சி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். கற்பென்னுங் கைகோளிடத்துப் புணரும் புணர்ச்சி குரவராற் புணரும் புணர்ச்சியும் வாயில்களாற் புணரும் புணர்ச்சியு மென இரண்டு பகுதியினையுடைத்து. எ - று.

குரவரிற்புணர்ச்சி வதுவைகூட்டிப் புணரும் புணர்ச்சி. வாயிலிற்கூட்டம் புலவிதீர்த்துப் புணரும் புணர்ச்சி. (௫௨)

௪௨௫. அவற்றுட்,
களவின் வழிவந்த கற்பிற் புணர்ச்சி
கிளைஞரி னெய்தாக் கேண்மையு முடைத்தே
யுடன்போய் வரைதலு முண்மை யான.

இது களவின்வழிவந்த கற்பிற்புணர்ச்சிக்கு எய்துவதோர் வேறுபாடு உணர்த்துகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட இருவகைக் கற்பினுள்ளும் களவின்வழிவந்த கற்பினுட் புணரும் புணர்ச்சி தலைமகள் சுற்றத்தாராற் பெறப்படாத கோட்பாட்டினையுமுடைத்தாம், புணர்ந்துடன் போய்த் தலைமகன் தன் ஊரின்கண்ணே வரைந்துகோடலும் உண்டாதலான். எ - று.

"கொடுப்பா ரின்றியுங் கரண முண்டே—புணர்ந்துடன் போன காலை யான" என்பவாகலின். (௫௩)

௪௨௬. மறையிற் புணர்ச்சியு மன்றற் புணர்ச்சியு
மிறைவற் கெய்தலுண் டிருவகைக் கற்பினும்.

இது தலைமகற்குக் கற்புக்காலத்து நிகழும் புணர்ச்சிவேறுபாடு கூறுகின்றது.

இ - ள். மேற்சொல்லிய இருவகைக் கற்பின்கண்ணுந் தலைமகற்குக் களவிற்புணர்ச்சியும் வதுவைப்புணர்ச்சியும் பொருந்துதலுண்டு. எ - று. (௫௪)

௪௨௭. காதற் பரத்தையர் காமக் கிழத்தியர்
பின்முறை வதுவைப் பெருங்குலக் கிழத்தியென்
றன்னவ ருரிய ரவையிரண் டற்கும்

இஃது அவ்விருவகைப் புணர்ச்சிக்கும் உரிய மகளிர் இவ ரென்கின்றது.

இ - ள். காதற்பரத்தையர் முதலாகிய மூவகையோருந் தலைமகன் அவ்வாறு புணரும் புணர்ச்சி இரண்டற்கும் உரியர். எ - று.

௪௨௮. அவருட்,
காதற் பரத்தையர் களவிற் குரியர்.

இது களவிற்கு உரிய மகளிர் இவரென்கின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட மூவகையோருள்ளுங் காதற்பரத்தையர் களவிற்புணர்ச்சிக்கு உரியர். எ - று. (௬௬)

௪௨௯. ஒழிந்தோர் மன்றற் புணர்ச்சிக் குரியர்.

இது வதுவைப்புணர்ச்சிக்கு உரிய மகளிர் இவரென்கின்றது.

இ - ள். காமக்கிழத்தியும் பின்முறைவதுவைப் பெருங்குலக் கிழத்தியுமாகிய இருதிறத்தோரும் வதுவைப்புணர்ச்சிக்கு உரியர். எ - று. (௬௭)

௪௩0. பரத்தையிற் பிரித லோதற்குப் படர்த
லருட்டகு காவலொடு தூதிற் ககற
லுதவிக் கேக னிதியிற் கிகத்தலென்
றுரைபெற்று கற்பிற் பிரிவறு வகைத்தே.

இது கற்பிற்பிரியும் பிரிவுவரையறை உணர்த்துகின்றது.

இ - ள். பரத்தையிற்பிரிதல் முதலாக நிதியிற்கிகத்தல் ஈறாக அறுவகையினையுடைத்தாங் கற்பின்கட் பிரியும் பிரிவு. எ - று. ()

௪௩௧. அயன்மனைப் பிரிவயற் சேரியி னகற்சி
புறநகர்ப் போக்கிவை புரவலற் குரிய
பரத்தையிற் பிரியும் பருவத் தான.

இது தலைமகன் பரத்தையிற் பிரியுங்காலத்து இவ்விடங்களிற் பிரியுமென்கின்றது.

இ - ள். அயல்மனை முதலிய மூன்றிடத்துப் பிரிவுந் தலைவற்கு உரியவாம் பரத்தையிற் பிரியுங்காலத்து. எ - று. (௫௯)

சஙஉ. கெழீஇய காமக் கிழத்தியர் பொருட்டாய்த்
தழீஇய வயன்மனைத் தலைவன் பிரியும்.

இது நிறுத்தமுறையானே அயல்மனைப் பிரிவுக்கு ஏது கூறுகின்றது.

இ - ள். பொருந்திய காமக்கிழத்தியர் காரணமாகத் தலைமகன் தோள் தோய்ந்த அயல்மனைக்கண்ணே பிரியும். எ - று. (௬௦)

சஙங. பின்னர் வரைந்த பெதும்பையும் பரத்தையு
மின்னியல் விழவு மேது வாக
வவனயற் சேரியி னகலு மென்ப.

இஃது அயற்சேரியிற் பிரிவுக்கு ஏது உணர்த்துகின்றது.

இ - ள். இரண்டாவது வரைந்துகொள்ளப்பட்ட பெதும்பைப்பருவக் கிழத்தியுங் காதற்பரத்தையும் விழவுங் காரணமாகத் தலைமகன் அயற்சேரியின்கண்ணே பிரியும். எ - று. (௬௧)

சஙச. விருந்தியற் பரத்தையைப் பெருந்தேர் மிசைக் [கொண்
டிளமரக் காவின் விளையா டற்கும்
புனலா டற்கும் புறநகர்ப் போகும்.

இது புறநகர்ப்போக்கிற்கு ஏது உணர்த்துகின்றது.

இ - ள். இளமரக்காவின்கண்ணே விளையாடுதல் காரணமாகவும் புனலாடுதல் காரணமாகவுந் தலைமகன் புதியளாகிய பரத்தையைத் தேர்மேல் ஏற்றிக்கொண்டு நகர்ப்புறத்திலே போம். எ - று.

புனலாடல் கூறவே, அதற்கு ஏதுவாகிய புதுப்புனல்வரவுங் கொள்ளப்படும். அதற்குச் செய்யுள்;—“ஏராடு சிந்துர விந்திர சாபமிறைஞ்சுநுதல்—வேராட நில விழிசிவப் பாட விளங்கிழையார்—தாராடு பைங்குழற் பின்னக மாடத் தழூஉஞ்சிவிறிப்—போராட வந்தது தண்புன லாடற் புரவலற்கே.” எனவரும். புனலாடற்குச் செய்யுள்;—“குருகோடு கம்புட் குலமிரிந் தார்ப்பக் கொடுந்திரைகூ—ழிருகோடு மள்ள ரெறிபறை யார்ப்ப விடுமணற்குன்—றருகோடு தண்புனல் வண்புன லூரனொ டாடுதற்கு—வருகோடி

யன்புடையா ரொருகோடி மடந்தையரே." எனவரும். இளமரக் காவின் விளையாடற்கு உதாரணம் வந்துழிக் காண்க. (௬௨)

௪௩௫. ஊட லவ்வழிக் கூடுங் கிழத்திக்கு.

இது தலைவிக்கு ஊடல் நிகழும் இடங்கூறுகின்றது.

இ - ள். அம்மூன்று பிரிவின்கண்ணுந் தலைமகட்கு ஊடல் பொருந்தும். எ - று. (௬௩)

௪௩௬. கொளைவல பாணன் பாடினி கூத்த
ரிளையோர் கண்டோ ரிருவகைப் பாங்கர்
பாகன் பாங்கி செவிலி யறிவர்
காமக் கிழத்தியர் காதற் புதல்வன்
விருந்தாற் றுமை யென்றிவை யூடன்
மருந்தாய்த் தீர்க்கும் வாயில்க டாமே.

இது மேற்சொல்லப்பட்ட வாயில்களாவன இவையென்கின்றது.

இ - ள். பாணன் முதலாக ஆற்றுமை ஈறுகச் சொல்லப்பட்ட இவையனைத்துந் தலைமகளூடலை மருந்தாய்த் தீர்க்கும் வாயில்களாம். எ - று. (௬௪)

௪௩௭. ஓதற் றொழிலுரித் துயர்ந்தோர் மூவர்க்கும்.

இஃது ஓதற்றொழிற்கு உரியதோர் சிறப்புணர்த்துகின்றது.

இ - ள். வேதமோதலென்னுந் தொழில் அந்தணர் அரசர் வணிகரென்கின்ற மூவர்க்கும் உரித்து. எ - று. (௬௫)

௪௩௮. அல்லாக் கல்வி யெல்லார்க்கு முரித்தே.

இஃது ஒழிந்த கல்வியது தன்மை உணர்த்துகின்றது.

இ - ள். வேதம் அல்லாத கல்வி நால்வர்க்கும் உரித்து. எ-று.

௪௩௯. படைக்கலம் பயிறலும் பகடுபிற வூர்தலு
முடைத்தொ ழிலவர்க்கென வுரைத்திசி னோரே.

இது நாவினுற் கற்குந் தொழிலல்லாத கல்வித்தொழிலுரிமை உணர்த்துகின்றது.

இ - ள். படைக்கலங்களைக் கற்றலும் யானையுந் தேருங் குதிரையும் முதலாயின ஊர்தலும் மூவர்க்கும் உடைமையாகிய தொழிலெனக் கூறினர் புலவர். எ - று.

பிறவென்றதனாற் தேருங் குதிரையும் முதலாயின கொள்ளப்பட்டன. பகடுபிற என்பது உம்மைத்தொகை. (௬௭)

௪௪௦. அறப்புறங் காவ னாடு காவலெனச்
சிறப்புறு காவற் றிறமிரு வகைத்தே.

இது காவற்பிரிவு இத்துணைத்தென்கின்றது.

இ - ள். அறப்புறங் காத்தற்குப் பிரியும் பிரிவும் நாடு காத்தற்குப் பிரியும் பிரிவுமென மேம்பாடுற்ற காவற்குப் பிரியும் பிரிவு இருவகையினையுடைத்து. எ - று. (௬௮)

௪௪௧. அவற்றுள்,
அறப்புறங் காவ லனைவர்க்கு முரித்தே.

இது நிறுத்தமுறையானே முன்னையதற்கு உரிமைகூறுகின்றது.

இ - ள். மேற்சொல்லிய இரண்டனுள் அறப்புறங் காத்தற்குப் பிரியும் பிரிவு அந்தணர் முதலிய நால்வர்க்கும் உரித்து. எ - று.

௪௪௨. மற்றைக் காவல் கொற்றவர்க் குரித்தே.

இது பின்னையதற்கு உரிமைகூறுகின்றது.

இ - ள். ஏனை நாடுகாத்தற்குப் பிரியும் பிரிவு அரசர்க்கு உரித்து. எ - று. (௭௦)

௪௪௩. வேத மாந்தர் வேந்தரென் றிருவர்க்குந்
தூது போதற் றொழிலுரித் தாகும்.

இது நிறுத்தமுறையானே தூதிற்குப் பிரியும் பிரிவுக்கு உரியார் இவரென்கின்றது.

இ - ள். அந்தணரும் அரசருமென்னும் இருதிறத்தார்க்குந் தூதுநிமித்தம் பிரியும் பிரிவுதொழில் உரித்து. எ - று.

வரலாறு;—"வயலைக் கொடியின் வாடிய மருங்கு—லுயவ லூர்திப் பயலைப் பார்ப்பா—னெல்லி வந்து நில்லாது புக்குச்—சொல்லிய சொல்லோ சிலவே யதற்கே—யேணியுஞ் சீப்பு மாற்றி-மாண்வினை யானையு மணிகளைந் தனவே." என்பதனானும், "மடந் தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சங்—கடந்தானை நூற்றுவர்பா னாற்றிசையும் போற்றத்—தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது—நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே—நாராய ணாவென்னா நாவென்ன நாவே." என்பதனானும் முறையே அவ்விருவர்க்குந் தூது நிமித்தம் பிரியும் பிரிவுதொழில் உரித்தாயவாறு காண்க. (எக)

சசச. சிறப்புப் பெயர்பெறிற் செப்பிய விரண்டு
முறற்குரி மரபின வொழிந்தோ ரிருவர்க்கும்.

இது மேலனவற்றிற்கோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். அரசனாற் சிறப்புப்பெயர் பெற்றாராயின் மேற்கூறிய நாடுகாவற்பிரிவுந் தூதிற்பிரிவும் பொருந்துதற்கு உரிய மரபினவாம் ஏனை வணிகருஞ் சூத்திரருமென்னும் இருதிறத்தார்க்கும். எ - று.

உரியமரபு உரிமரபென விகாரமாயிற்று. (எஉ)

சசரு. உதவி யந்தண ரொழிந்தோர்க் குரித்தே.

இது நிறுத்தமுறையானே உதவிநிமித்தம் பிரியும் பிரிவிற்கு உரியார் இவரென்கின்றது.

இ - ள். அரசர்க்குப் பகைவரான் ஊறுற்றுழி உதவிக்குப் பிரியும் பிரிவு அந்தணர் ஒழிந்த மூவர்க்கும் உரித்தாம். எ - று. (எ௩)

சசசு. பரத்தையிற் பிரிவும் பொருள்வயிற் பிரிவு-
மூரைத்த நால்வர்க்கு முரிய வாகும்.

இது நிறுத்தமுறையானே பரத்தையிற்பிரிவிற்கும் பொருள்வயிற்பிரிவிற்கும் உரியார் இவரென்கின்றது.

இ - ள். பரத்தையிற்பிரிவும் பொருள்வயிற்பிரிவுமாகிய இரண்டும் மேற்சொல்லப்பட்ட நால்வர்க்கும் உரியவாம். எ - று. (எச)

சசஎ. இழிந்தோர் தமக்கு மிவற்றுண்மேம் பட்டவை
யொழிந்தன வாமென மொழிந்தனர் புலவர்.

இது நிலமக்களுட் தலைமக்கட்கு உரியன கூறுகின்றது.

இ - ள். இவ்வறுவகைப் பிரிவுள்ளும் மேம்பட்டனவாகிய ஓதலும் நாடுகாவலுந் தூதுபோதலுமாகிய மூன்றும் ஒழித்து அல்லாதனவெல்லாம் ஒழிந்தோராகிய நிலமக்களுட் தலைமக்கட்கும் உரியவாமெனச் சொல்லுவர் அறிவோர். எ - று. (எரு)

சசஅ. கல்வி முதலா வெல்லா வினைக்குஞ்
சொல்லி யகறலுஞ் சொல்லா தகறலு
முரியன் கிழவோன் பெருமனைக் கிழத்திக்கு.

இது பிரியுந் தலைமகற்கு உரியதோர் இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். கல்விமுதலாகிய ஐந்துவினைக்குந் தலைமகன் தலைமகட்குச் சொல்லிப்பிரிதலுஞ் சொல்லாதுபிரிதலும் உரியன். எ - று.

சசகூ. சொல்லா தகலினுஞ் சொல்லும் பாங்கிக்கு.

இதுவுமது.

இ - ள். தலைமகன் தலைமகட்குச் சொல்லாது பிரியுமாயினுந் தோழிக்குச் சொல்லியே பிரியும். எ - று. (எஎ)

சரு௦. குறிப்பி னுணர்த்தும் பெறற்கருங் கிழத்திக்கு.

இதுவுமது.

இ - ள். தலைமகன் சொல்லாது பிரியுமாயினுங் குறிப்பினன் உணர்த்துந் தலைமகட்கு. எ - று. (எஅ)

சருக. காலிற் சேறலுங் கலத்திற் சேறலு
மூர்தியிற் சேறலு நீதி யாகும்.

இது பிரியுங் காலத்து நால்வர்க்கும் பொதுவாகியதோர் இயல்பு உணர்த்துகின்றது.

இ - ள். காலிற்சேறல் முதலாகிய மூன்றும் எல்லாப் பிரிவின் கண்ணும் எல்லார்க்கும் இயல்பாம். எ - று. (எகூ)

சருஉ. புலத்திற் சிறந்த புரிநூன் முதல்வற்குக்
கலத்திற் சேறல் கடனன் றென்ப.

இஃது அந்தணர்க்கு ஆகாததோர் இயல்புகூறுகின்றது.

இ - ள். காலிற்சேறல் முதலாகிய மூன்றனுள்ளுங் கலத்திற் சேறல் அறிவினன் மிக்க அந்தணர்க்கு முறைமையன்றென்று சொல்லுவர் புலவர். எ - று. (௮௦)

சு௫௩. வலனுயர் சிறப்பின் மற்றை மூவர்க்குங்
குலமட மாதரொடு கலமிசைச் சேறலும்
பாசறைச் சேறலும் பழுதென மொழிப.

இஃது அரசர்முதலாகிய மூவர்க்கும் ஆகாததோர் இயல்பு கூறுகின்றது.

இ - ள். குலமடமாதரோடு கூடக் கலமிசைச் சேறலும் பாசறைக்கட் சேறலுமாகிய இரண்டும் வெற்றியுயர் சிறப்பினையுடைய வேந்தர் முதலாகிய மூவர்க்குங் குற்றமெனச் சொல்லுவர் கற்றுவல்லோர். எ - று.

"மணமலி பூங்கானல் வருகலங்க ணோக்கிக்—கணவன்வரக் கல்லுருவ நீத்தாள்" எனவும், "பனியிருங் கங்குலுந் தமிய ணீந்தித்—தம்மூ ரோளே நன்னுத லியாமே—யிரவுத்துயின் மடிந்த தானை—யுரவுச்சின வேந்தன் பாசறை யோமே" எனவும் வருவன வற்றான் முறையே குலமடமாதரோடு கலமிசைச் செல்லாமையும் பாசறைக்கட் செல்லாமையும் அறிக.

குலமடமாதரோடு செல்லாரெனவே பரத்தையரோடு செல்வ ரென்பது பெற்றாம். "துயிலின்றி யாநீந்தத் தொழுவையம் புனலாடி—மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான்மன்னோ—வெயி லொளி யறியாத விரிமலர்த் தண்காவிற்—குயிலாலும் பொழுதெனக் கூறுந ருளராயின்" என்பதனாற் பரத்தையரோடு பாசறைக் கட் சென்றவாறு அறிக. ஏனையதுவந்துழிக் காண்க. (௮௧)

சு௫௪. ஓதன் முதலா வோதிய வைந்தினும்
பிரிவோ னழுங்கற்கு முரிய னாகும்.

இதுவுந் தலைமகற்குப் பிரிவிடத்து உரியதோர் வேறுபாடு கூறுகின்றது.

இ - ள். ஓதல்முதலாகச் சொல்லப்பட்ட ஐந்தின்கண்ணும் பிரியுந் தலைமகன் போதற்கேயன்றிப் போதாமைக்கும் உரியன். எ - று.

௪௫௫. இல்லத் தழுங்கலு மிடைச்சுரத் தழுங்கலு
மொல்லு மவற்கென வுரைத்திசி ஞேரே.

இதுவுமது.

இ - ள். பிரியக்கருதிய தலைமகன் இல்லின்கண்ணே செலவழுங்குதலும் இடைச்சுரத்தின்கண்ணே செலவழுங்குதலுமென இரண்டிற்கும் உரியனெனக் கூறுவர் புலவர். எ - று.

"புணரிற் புணராது பொருளே பொருள்வயிற்—பிரியிற் புணராது புணர்வே யாயிடைச்—செல்லினுஞ் செல்லா யாயினு—நல்லதற் குரியை வாழிய நெஞ்சே." எனவும், "தொழுது வணங்கி மணங்கமழ் தார்பெய்து தொய்யின்மெய்யி—லெழுதி முயங்கி மயங்கின மாக விருங்கயற்க—ணழுது சிவந்து பசந்தது நாமிங் ககலுவமேற்—பழுது சிறந்துவிடுந் தனியாவி பணிமொழிக்கே." எனவும், "சென்றே வினைமுற்றி மீளுவ தன்றெனிற் றேர்ந்திதனை—யன்றே தவிர்தலன் றோவறி வோர்தொழி லாரழற்றிண்—குன்றே நெருங்குங் கொடுஞ்சுரத் தென்னையுங் கொண்டுவந்து—நின்றே வருந்து நெஞ்சே யென்செய்வேனிந் நிலைதனக்கே." எனவும் இவை முறையே ஒருங்குவருதலுந் தனித்தனிவருதலுங் காண்க. (அ௩)

௪௫௬. தலைவி தன்னையுந் தன்மனந் தன்னையு
மலமர லொழித்தற் கழுங்குவ தல்லது
செலவத் தோன்றல் செல்லா னல்லன்.

இஃது எய்தியது விலக்குகின்றது.

இ - ள் இல்லத்துத் தலைமகளையுந் தன்னெஞ்சினையுந் தேற்றுதல் காரணமாகவும் இடைச்சுரத்துத் தன்னெஞ்சினைத் தேற்றுதல் காரணமாகவும் அழுங்குமாத்திரமல்லது தலைமகன் போகானல்லன். எ - று.

இல்லத்துத் தலைமகளைத் தேற்றியதற்குச் செய்யுள்;—"பொன்னினு மணியினும் போலும் யாழநின்—னன்னர் மேனியு நாறிருங் கதுப்பும்—போதும் பணையும் போலும் யாழநின்—மாத ருண்கணும் வனப்பின் றோளு—மிவைகாண் டோறு மகமெலிந் தியானு—மறநிலை பெற்றோ ரனையேன் றன்றலைப்—பொலந்தொடிப் புதல்வனும் பொய்தல்கற் றன்ன—வினையும் வேறு புலத்தின னினையின்—

யாதுநிற் பிரிகோ மடந்தை—காத ரூனுங் கடலினும் பெரிதே." என வரும். பிறவும் அன்ன. (௮௪)

சருள. அவற்றுள்,
ஓதற் பிரிவுடைத் தொருமூன் றியாண்டே.

இஃது ஓதற்பிரிவுக்குக் காலவரையறை உணர்த்துகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட பிரிவுள் ஓதற்குப் பிரியும்பிரிவு மூன்று யாண்டெல்லை உடைத்து. எ - று. (௮௫)

சருஅ. தூதிற் பிரிவுந் துணைவயிற் பிரிவும்
பொருள்வயிற் பிரிவு மோர்யாண் டுடைய.

இது தூதிற்பிரிவு முதலாய மூன்றுபிரிவிற்குங் காலவரை யறை உணர்த்துகின்றது.

இ - ள். தூதுகாரணமாகப் பிரியும் பிரிவுந் துணையிடமாகப் பிரியும் பிரிவும் பொருள்காரணமாகப் பிரியும் பிரிவும் ஓர்யாண்டின் எல்லையினையுடையவாம். எ - று.

பரத்தையிற்பிரிவுக்குங் காவற்பிரிவுக்குங் காலவரையறை கூறாராயினர், அவை காடிடையிட்டும் நாடிடையிட்டும் பிரியப் படாமையின். (௮௬)

சருகூ. பூத்த காலைப் புனையிழை மனைவியை
நீரா டியபின் னீரா று நாளுங்
கருவயிற் றுறூஉங் கால மாதலிற்
பிரியப் பெறூஅன் பரத்தையிற் பிரிவோன்.

இது பரத்தையிற் பிரியுந் தலைவற்கு உரியதோர் இயல்பு உணர்த்துகின்றது.

இ - ள். நீராடியபின் பன்னிருநாளுங் கரு வயிற்றின்கட் படுங் காலமாதலாற் பரத்தையிற்பிரியுந் தலைவன் அப்பன்னிருநா ளுந் தலைவியைப் பிரியப்பெறான் பூப்புநிகழுங் காலத்து. எ - று.

"தீண்டாநாண் முந்நாளு நோக்கார்நீ ராடியபி—னீரா று நாளு மிகவற்க வென்பதே—பேரறி வாளர் துணிவு."என்றார் பெரு வாயின்முள்ளியாரும் என்க. (௮௭)

௪௯௦. ஓதற் ககன்றோ னொழிந்திடை மீண்டு
போதற் கியையவும் புலம்பவும் பெறூஅன்.

இஃது ஓதற்குப்பிரியுந் தலைமகனால் நிகழ்த்துதற்காகாத செய்தி கூறுகின்றது.

இ - ள். ஓதற்குப்பிரிந்த தலைவன் ஏனையோர்போல அவ்வோ தலையொழிந்து இடையே மீண்டுவருதற்கு உடம்படவும் அவ்விடத்துத் தலைமகளை நினைந்து புலம்பவுந் தகான். எ - று. (௮௮)

௪௯௧. தூதுந் துணையு மேது வாகச்
சென்றோ னவ்வினை நின்றுநீட் டித்துழிப்
புலந்து பாசறைப் புலம்பவும் பெறுமே.

இது தூதுந் துணைமையுங் காரணமாகப் பிரிந்த தலைவற்காவதோர் வேறுபாடு கூறுகின்றது.

இ - ள். தூதுகாரணமாகவும் உதவி காரணமாகவும் பிரிந்த தலைவன் அத்தொழில்கள் அப்பிரிவிற்கு உரிய ஓர்யாண்டின்கண் முடியாது நீட்டித்தகாலத்துப் பாசறைக்கண்ணே இருந்து தலைவியைநினைத்து வெறுத்துப் புலம்புதல்செய்யவும் பெறும். எ - று.

உம்மையாற் புலம்பல் ஒருதலையன்றென்க. (௮௯)

௪௯௨. பூத்தமை சேடியிற் புரவலர்க் குணர்த்தலு
நீத்தமை பொறூஅது நின்றுகிழ வோனைப்
பழிக்குங் காமக் கிழத்தியைக் கழறலுங்
கிழவோற் கழறலும் வழிமுறை மனைவியைக்
கொழுநனோ டெவ்கெதிர் கோடலு மவனொடும்
பாங்கொடும் பரத்தையைப் பழித்தலு நீங்கிப்
புறநகர்க் கணவனொடு போகிச் செறிமலர்ச்
சோலையுங் காவு மாலையங் கழனியு
மாலைவெள் ளருவியு மலையுங் கானமுங்
கண்டுவிளை யாடலுங் கடும்புனல் யாறும்
வண்டிமிர் கமல வாவியுங் குளனு
மாடிவிளை யாடலுங் கூடுங் கிழத்திக்கு.

இது தலைவிக்குக் கற்புக்காலத்துக்கு உரிய ஒழுகலாறெல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். பூத்தமை சேடியிற் புரவலர்க்கு உணர்த்தல் முதலாகக் குளனுடல் ஈறுகச் சொல்லப்பட்டன எல்லாங் கற்புக்காலத்துத் தலைமகட்குப் பொருந்தும். எ - று.

கற்பென்பது அதிகாரத்தான் வந்தது.

இவற்றுட் தலைவி புனலாடற்குச் செய்யுள்:—"அடங்கா வசுரர் குலமறுத்தோ ரத்தி யூரர்வென்றி—மடங்காத நேமி வரதர்நன் னாட்டிற்றன் மைந்தனுடன்—முடங்காம லந்த மனைவியும் போய் முயன் றாரனுடன்—றடங்காவும் யாறுங் குளனுஞ்சென் றாடவுந் தக்கதுவே." எனவும், பரத்தையைப்பழித்தற்குச் செய்யுள்;—"முருக்கார் முளரியு முள்ளியு முண்டக மூரியரம்—பொருகா ரிரும்புங் கனகமும் பொன்பொங்கு தாரகையுங்—குருகார் குறுங்கழிக் கெண்டையு மீனங் குரிசிலுக்கு—வருகாத னல்கிய வெங்கையும் யானு மடந்தையரே." எனவும் வரும். ஏனையவற்றிற்கு உதாரணம் மேல்வந்துழிக் காண்க. (௧௦)

௪௩௩. வாயில் வேண்டலும் வாயினேர் வித்தலுஞ்
சேயிழை யூட றீர்த்தலும் போயுழி
யவணலந் தொலைவுகண் டழுங்கலு மவன்வயிற்
செல்ல விரும்பலுஞ் சென்றவற் குணர்த்தலுஞ்
சொல்லிய கூற்றெனச் சொல்லுங் கிழவோன்
வரவு மீண்டுவந் தரிவைக் குணர்த்தலு
மணிநலம் பெற்றமை யறியான் போன்றவட்
பணிவொடு வினுதலும் பாணற் குரிய.

இது மேற்கூறிப்போந்த வாயில்களுட் பாணற்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். வாயில்வேண்டல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் பாணற்கு உரியனவாம். எ - று. (௧௧)

௪௩௪. செலவிற் றேற்றலும் புலவியிற் றணித்தலும்
வாயில் வேண்டலும் வாயினேர் வித்தலுந்
தெரியிழை விறலிக் குரிய வாகும்.

இது விறலிக்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். செலவிற்றேற்றல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் விறலிக்கு உரியனவாம். எ - று. (௧௨)

௪௧௫. செல்வம் வாழ்த்தலு நல்லறிவு கொளுத்தலுங்
கலனணி புணர்த்தலுங் காமநுகர் புணர்த்தலும்
புலவிமுதிர் காலைப் புலங்கொள வேதுவிற்
றேற்றலுஞ் செய்மை செப்பலும் பாசறை
மேற்சென் றுரைத்தலு மீண்டுவர வுரைத்தலுங்
கூற்றரு மரபிற் கூத்தற் குரிய.

இது கூத்தற்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். செல்வம்வாழ்த்தல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாங் கூத்தற்கு உரியனவாம். எ - று. (௧௩)

௪௧௬. மடந்தையை வாயில் வேண்டலும் வாயி
லுடன்படுத் தலுமவ ளூட றீர்த்தலுங்
கொற்றவற் காத்தலுங் குற்றேவல் செய்தலுஞ்
சென்றுமுன் வரவு செப்பலு மவன்றிற
ஞென்றிகின் றுரைத்தலும் வினைமுடி புரைத்தலும்
வழியியல்பு கூறலும் வழியிடைக் கண்டன
மொழிதலு மிளையோர் தொழிலென மொழிப.

இஃது இளையோர்க்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். மடந்தையை வாயில்வேண்டல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் இளையோர்க்கு உரிய தொழில்களாமெனக் கூறுவர். எ - று. (௧௪)

௪௧௭. தீதுடைப் புலவி தீர்த்தலு மவன்வரல்
காதலிக் குரைத்தலுங் கண்டோர்க் குரிய.

இது கண்டோர்க்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். புலவிதீர்த்தல் முதலாகிய எல்லாங் கண்டோர்க்கு உரியனவாம். எ - று. (௬௫)

௪௬அ. இளமையும் யாக்கையும் வளமையு மேனவு
நிலையாத் தன்மை நிலையெடுத் துரைத்தலுஞ்
செலவழுங்கு வித்தலுஞ் செலவுடன் படுத்தலும்
பிறவு மெல்லா மறையோர்க் குரிய.

இஃது இருவகைப்பாங்கருட் பார்ப்பனப் பாங்கர்க்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். இளமைமுதலாயினவும் அவைபோல்வனபிறவும் நிலையாத இயல்பின் நிலைமையை எடுத்துக்கூறலுஞ் செலவழுங்குவித்தலுஞ் செலவுடன்படுத்தலும் பிறவும் எல்லாம் பார்ப்பனப் பாங்கர்க்கு உரியனவாம். எ - று. (௬௬)

௪௬௯. நன்மையி னிறுத்தலுந் தீமையி னகற்றலுஞ்
சொன்னவை பிறவுஞ் சூத்திரர்க் குரிய.

இது சூத்திரப்பாங்கர்க்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். நன்மையினிறுத்தலுந் தீமையின்விலக்கலும் மேற் கூறிப்போந்தன பிறவுஞ் சூத்திரப்பாங்கர்க்கு உரியனவாம். எ-று.

சொன்னவையும் பிறவுமென்க. பிறவாவன வாயில்வேண்டல் முதலாயின. (௬௭)

௪எ0. சேயிழைக் கிழத்தியை வாயில் வேண்டலும்
வாயினேர் வித்தலும் வயங்குதுனி தீர்த்தலும்
வினைமுடித் ததன்பின் வியன்பதி சேய்த்தென
வினைவோற் றேற்றலும் பாகற் கியல்பே.

இது பாகற்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். தலைமகளை வாயில்வேண்டல் முதலாகச் சொல்லப் பட்டன எல்லாம் பாகற்கு இயல்பாம். எ - று. (௬அ)

௪எக. பிரிவுழி விலக்கலும் பிரிவுடன் படுத்தலும்
பிரிவுழித் தேற்றலும் பிரிவுழி யழுங்கலும்
பிறவு முரிய விறைவனைப் பாங்கிக்கு.

இது பாங்கிக்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். பிரிவுழிக்கலங்கல் முதலாகச் சொல்லப்பட்டனவும் பிறவும் எல்லாம் பாங்கிக்கு உரியனவாம். எ - று.

பிறவாவன வாயில்வேண்டல் முதலாயின. (௯௯)

சஎ௨. முன்வரு நீதியு முயங்கியன் முறைமையும்
பின்வரும் பெற்றியும் பிறவு மெல்லாந்
தெற்றெனக் கூறல் செவிலித் தாய்க்கு
முற்ற வறிவர்க்கு முரிய வாகும்.

இது செவிலித்தாய்க்கும் அறிவர்க்கும் உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். முன்வருநீதி முதலாகச் சொல்லப்பட்டனவும் பிறவும் எல்லாந் தெளியச்சொல்லுதல் செவிலித்தாய்க்கும் பொருந்திய அறிவர்க்கும் உரியனவாம். எ - று.

பிறவாவன வாயில்வேண்டல் முதலாயின. (௧00)

சஎ௩. குடிப்பிறந் தோரை வடுப்படுத் துரைத்தலு
மனைவியைப் பழித்தலும் வாடா வூடலு
ளனையவட் கழறலு மனைவிக் கமைந்த
வொழுக்கமுங் காமக் கிழத்தியர்க் குரிய.

இது காமக்கிழத்தியர்க்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். குடிப்பிறந்தோரை வடுப்படுத்துரைத்தல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாங் காமக்கிழத்தியர்க்கு உரியனவாம். எ-று.

சஎச. கிழவோன் றன்னையுங் கிழத்தி தன்னையு
மிகழ்தலுந் தம்மைப் புகழ்தலு நிகழ்பொருள்
காத்தலும் பரத்தையர் கடனென மொழிப.

இது பரத்தையர்க்கு உரியன எல்லாந் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். தலைமகனையுந் தலைமகளையும் இகழ்தல் முதலாகச் சொல்லப்பட்டன எல்லாம் பரத்தையர் முறைமையென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

இவற்றுட் கிழவோற்பழித்தற்குச் செய்யுள்:—“கோடலஞ் செங்கைநல் லார்கொங்கை யேற்றமென் கோங்கினுடன்—பாடலங் காவும் பருமணற் குன்றும் பயின்றுநம்பா—லாடலும் பாடலுங் கண்டுகொண் டாடுவ தன்றியன்பி—னூடலுங் கூடலு முண்டுகொல்லோ பொய்கை யூரனுக்கே.” எனவும், தலைவியை இகழ்தற்குச் செய்யுள்;—“தேமே குவளையுஞ் செங்நெலுங் கன்னலுஞ் சேரநன்ன—ராமேய் கழனி யகன்புன லூர னகலமெல்லாம்—யாமே விரும்பின மென்றெம்மை யேசுவர் போலத்தம்மைத்—தாமே பழிப்பர் தலைவியர் தாமுந் தனம்படைத்தே.” எனவும்; பரத்தையர் தம்மைப்புகழ்தற்குச் செய்யுள்:—“அரியார் விழிவஞ்சி யாயமுந் தானு மகன்றுறைவாய்—விரியார் நறுந்தொடை மன்புறங் காப்பினு மென்புறமே—புரியாதொழிகுவ னேலழி யாத புகழ்படையாக்—கரியார் திருவிற் றரியா துடைகவென் கைச்சங்கமே.” எனவும்வரும். நிகழ்பொருள்காத்தற்கு உதாரணம் வந்துழிக் காண்க. ()

௭௭௫. பரத்தையர் காதற் பரத்தையைப் புகழ்தலுந்
தம்மை யிகழ்தலுந் தம்முளுங் கூறுப.

இது பரத்தையர்க்கு உரியதோர் வேறுபாடு கூறுகின்றது.

இ - ள். காதற்பரத்தையைப் புகழ்தலுந் தம்மை இகழ்தலுந் தம்முள்ளேயுங் கூறுவர் பரத்தையர். எ - று.

பரத்தையர் காதற்பரத்தையைப் புகழ்ந்து தம்மை இகழ்தற்குச் செய்யுள்;—“திணைகாணு நன்னிதி யன்ஞானைத் தன்வசஞ் செய்தவஞ்சி—துணைகாணு மாமுலைத் தோற்றங்கண் டீரந்தத் தோன்றலம்பொற்—பணைகாணுந் திண்புயம் புல்லாது வீணிற் பருத்தகொங்கை—யிணைகா ளுமக்கிந்த மேம்பா டுறுவ தியல்பல்லவே.” எனவரும். (௧0௩)

௭௭௬. இளையர் கிழவோற் கிரவும் பகலுங்
களைத லில்லாக் கவயம் போல்வார்.

இது மேற்கூறிப்போந்த இளையராவார் இவரென்கின்றது.

இ - ள். இளையராவார் தலைமகற்கு நீங்காக் கவசம்போலுந் தன்மையார் இரவும் பகலும். எ - று. (௧௦௪)

௩௭௭. இருவகைப் பாங்கரு மொருபெருங் குரிசிற்
கின்னுயிர்த் துணையா விருபெருங் குரவருந்
தன்வசப் படுத்த தகைமை யோரே.

இது பாங்கராவார் இவரென்கின்றது.

இ - ள். பார்ப்பனப் பாங்கருஞ் சூத்திரப் பாங்கருமென்னும் இருதிறத்தோருந் தலைமகற்கு இனிய உயிர்த்துணையாக அவன் தாயுந் தந்தையும் அவனை அடைக்கலமாகக் கொடுக்கப்பட்ட தன்மையோர். எ - று. (௧௦௫)

௩௭௮. தோழி செவிலி மகளாய்ச் சூழ்தலோ
டுசாத்துணை யாகி யசாத்தணி வித்தற்
குரிய காதன் மருவிய துணையே.

இது தோழியாவாள் இவளென்கின்றது.

இ - ள். தோழியென்பாள் செவிலிக்கு மகளாய் நன்மையுந் தீமையும் ஆராய்தலுடனே தலைமகட்கு உசாத்துணையாய் அவளது வருத்தந்தீர்த்தற்கு உரிய அன்புபொருந்திய துணையாம். எ - று. ()

௩௭௯. செவிலி நற்றாய் தோழி யாகி
யவல நீக்கி யறிவுமா சாரமுங்
கொளுத்தித் தலைவியை வளர்த்த தாயே.

இது செவிலியாவாள் இவளென்கின்றது.

இ - ள். செவிலியென்பாள் தலைமகளுடைய நற்றாய்க்குத் தோழியாய்த் தலைமகட்கு வருங் குற்றங்களைக் களைந்து நல்லறிவும் ஆசாரமுங் கொளுத்தித் தலைமகளை வளர்த்ததாய். எ - று. (௧௦௭)

௩௮௦. அறிவர் கிழவோன் கிழத்தியென் றிருவர்க்கு
முறுதி மொழிந்த வொருபெருங் குரவர்.

இது அறிவராவார் இவரென்கின்றது.

இ - ள். அறிவரென்பார் தலைமகற்குந் தலைமகட்கும் உறுதியைப் பயக்கும் உபதேசங்களைச் சொன்ன மேம்பட்ட குரவராவர். எ - று. (கoஅ)

சஅக. ஒருவன் றனக்கே யுரிமை பூண்டு
வருகுலப் பரத்தையர் மகளி ராகிக்
காமக்கு வரைந்தோர் காமக் கிழத்தியர்.

இது காமக்கிழத்தியராவார் இவரென்கின்றது.

இ - ள். காமக்கிழத்தியரென்பார் சேரிப்பரத்தையர்போலப் பலர்க்கும் உரியாரன்றி ஒருவற்கே உரிமைபூண்டுவரு குலப்பரத்தையர் மகளிராகிக் காமங் காரணமாகத் தலைமகனால் வரைந்து கொள்ளப்பட்டார். எ - று. (கoகூ)

சஅஉ. யாரையு நயவா வியல்பிற் சிறந்த
சேரிப் பரத்தையர் மகளி ராகிக்
காதலிற் புணர்வோர் காதற் பரத்தையர்.

இது காதற்பரத்தையராவார் இவரென்கின்றது.

இ - ள். காதற்பரத்தையரென்பார் யாவரையும் விரும்பாத இயல்பினான்மிக்க சேரிப்பரத்தையருடைய மகளிராய்த் தம்விருப்பினாற் தலைமகனோடு கூடுவார். எ - று. (ககo)

சஅங. அவருளும் வரைதற் குரியோ ருளரே.

இது காதற்பரத்தையர்க்கு உரியதோர் சிறப்பு உணர்த்துகின்றது.

இ - ள். காதற்பரத்தையருள்ளும் உளர் தலைமகனால் வரைந்துகோடற்கு உரியர். எ - று. (கக௧)

சஅச. மக்களொடு மகிழ்ந்து மனையறங் காத்து
மிக்க காம வேட்கை தீர்ந்துழித்
தலைவனுந் தலைவியுந் தம்பதி நீங்கித்
தொலைவில் சுற்றமொடு துறவறங் காப்பு.

இது தலைவனுந் தலைவியுந் துறவறங் காக்குங் காலம் உணர்த்துகின்றது.

இ - ள். மக்களோடு மகிழ்ந்து இல்லறத்தினைக் காத்துத் தமக்குப்பொருந்திய காமவேட்கையெல்லாந் தீர்ந்த காலத்துத் தலைமகனுந் தலைமகளுந் தம்மூரினீங்கி வனத்தின்கட் சென்று எல்லையில்லாச் சுற்றத்தாரோடுந் துறவறங் காப்பர். எ - று. (௧௧௨)

௪அரு. அன்பி னைந்திணைக் களவெனப் படுவ
தந்தண ரருமறை மன்ற லெட்டினுட்
கந்தருவ வழக்க மென்மனார் புலவர்.

மேற்கூறிப்போந்த கைகோளிரண்டினையும் விரித்து உணர்த்துவான் தொடங்கினவற்றுள் இது நிறுத்தமுறையானே களவென்னுங் கைகோளது இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். அன்பினுடைய ஐந்திணையுட் களவெனப்பட்ட கைகோளாவது பார்ப்பாரது அரிய வேதநூலிடத்து மகட்கோடலாறு எட்டனுட் கந்தருவநெறியோடு ஒப்பதென்று கூறுவர் அறிந்தோர். எ - று.

அன்பாவது "அடுமரந் துஞ்சுதோ ளாடவரு மாய்ந்த—படுமணிப் பைம்பூ ணவருந்—தடுமாறிக்—கண்ணெதிர்நோக் கொத்த வண் காரிகையிற் கைகலந்—துண்ணெகிழச் சேர்வதா மன்பு." என்பதனான் அறிக.

பிறர்க்கு உரித்தென்று இருமுதுகுரவராற் கொடையெதிர்ந்த தலைவியை அவர் கொடுப்பக் கொள்ளாது இருவருங் கரந்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டுப் புணர்ந்த களவாதலிற் பிறர்க்கு உரிய பொருளை மறையிற்கொண்டு கைகுறைக்கவுங் கால்குறைக்கவுங் கழுவேற்றவும் பட்டுப் பழியும் பாவமுமாக்கி நரகத்தின் உய்க்கும் ஏனை உலகத்துக் களவுபோலாது இது மேன்மக்களானும் புகழப்பட்டு ஞான ஒழுக்கத்தோடு ஒத்த இயல்பிற்றாய்த் துறக்கவீடுகளை முடிக்குமென்பார் அச்சிறப்புத் தோன்றக் 'களவெனப்படுவது' என்றார்; பிற ஊரினுஞ் சிறந்தது இவ்வூரென்பார், "ஊரெனப்படுவதுறையூர்" என்றாற்போல. அதனானே ஈண்டுக் களவென்றது வேதத்தை மறைநூலென்றதுபோல நின்றதாயிற்று.

வேதமாவன இருக்கு முதலியனவாம்.

மன்றல் எட்டாவன பிரமம் பிரசாபத்தியம் ஆரிடம் தெய்வம் காந்தருவம் அசுரம் இராக்கதம் பைசாசம் என்பனவாம். "அறநிலையொப்பே பொருள்கோ டெய்வம்—யாழோர் கூட்ட மரும்பொருள்

வினையே—யிராக்கதம் பேய்நிலை யென்றிக் கூறிய—மறையோர் மன்ற லெட்டிவை யவற்றுட்—டுறையமை நல்யாழ்த் துணைமை யோ ரியல்பிதன்—பொருண்மை யென்மனார் புலமை யோரே.'' என்பவாகலின். அவற்றுட் பிரமமாவது ஒத்தகோத்திரத்தானாய் நாற்பத்தெட்டியாண்டு பிரமசரியங் காத்தான் அவற்குப் பன்னீராட்டைப் பிராயத்தாளாய்ப் பூப்பு எய்தியவளைப் பெயர்த்து இரண்டாம் பூப்பு எய்தாமை அணிகலன் அணிந்து தானமாகக் கொடுப்பது; "கயலேர் மலருண்கண் கன்னிப்பூப் பெய்தி—யயல்பே ரணிகலன்கள் சேர்த்தி—யியலி—னிரலொத்த வந்தணற்கு நீரிற் கொடுத்தல்—பிரமமண மென்னும் பெயர்த்து.'' என்பவாகலின். பிரசாபத்தியமாவது மகட்கோடற்கு உரிய கோத்திரத்தார் கொடுத்த பரிசத்து இரட்டி தம் மகட்கு ஈந்து கொடுப்பது; "அரிமத ருண்கணுயிழை யெய்துதற்—குரியவன் கொடுத்த வொண்பொரு ளிரட்டி—திருவின் றந்தை திண்ணிதிற் சேர்த்தி—யரியதன் கிளையோடமைவரக் கொடுத்தல்—பிரித லில்லாப் பிரசா பத்தியம்.'' என்பவாகலின். ஆரிடமாவது தக்கோனொருவற்கு ஆவும் ஆனேறும் பொற்கோட்டுப் பொற்குளம்பினவாகச் செய்து அவற்றிடை நிறீஇப் பொன் அணிந்து, நீரும் இவைபோலப் பொலிந்து வாழ்வீரென நீரிற் கொடுப்பது; "தனக்கொத்த வொண்பொரு டன்மகளைச் சேர்த்தி—மனைக்கொத்த மாண்புடையாற் பேணி—யினக்கொத்த—வீரிடத்தாவை நிறீஇயிடை யீவதே—யாரிடத்தார் கண்டமண மாம்.'' என்பவாகலின். தெய்வமாவது பெருவேள்வி வேட்பிக்கின்றார் பலருள் ஒத்த ஒருவற்கு அவ்வேள்வித்தீமுன்னர்த் தக்கணையாகக் கொடுப்பது; "நீளி நெடுநகர் நெய்பெய்து பாரித்த—வேள்வி விளங்கழன் முன்னிறீஇக்—கேள்வியாற்—கைவைத்தாம் பூணுளைக் காமுற்றாற் கீவதே—தெய்வ மணத்தார் திறம்.'' என்பவாகலின். அசுரமாவது கொல்லேறுகோடல் திரிபன்றியெய்தல் வில்லேற்றுதல் முதலியன செய்து கோடல்; "முகையவிழ் கோதையை முள்ளெயிற் றரிவையைத்—தகைநலங் கருதுந் தருக்கினி ருளரெனி—னிவை யிவை செய்தாற் கெளியண்மற் றிவளெனத்—தொகைநிலை யுரைத்த பின்றைப் பகைவலித்—தன்னவை யாற்றிய வளவையிற்—றோன் னிலை யசுரந் துணிந்த வாறே.'' என்பவாகலின். இராக்கதமாவது தலைமகடன்னினுந் தமரினும் பெறாது வலிதிற்கொள்வது; "மலி பொற்பைம் பூணுளை மாலுற்ற மைந்தர்—வலிதிற்கொண் டாள்வதே யென்ப—வலிதிற்—பராக்கதஞ் செய்துழலும் பாழி நிமிர்தோ—ளிராக்கதத்தார் மன்ற லியல்பு.'' என்பவாகலின். பைசாசமாவது மூத்தோர் களித்தோர் துயின்றோர் புணர்ச்சியும் இழிந்தோளை

மணஞ்செய்தலும் ஆடைமாறுதலும் பிறவுமாம்; "எச்சார்க்கெளிய ரியைந்தகாவலர்—பொச்சாப் பெய்திய பொழுதுகொளமையத்து— மெய்ச்சார் பெய்திய மிருபுகழ் நண்பி—னுசாவார்க் குதவாக் கேண் மைப்—பிசாசர் பேணிய பெருமைசா லியல்பே." எனவும் "இடை மயக்கஞ் செய்யா வியல்பினி னீங்கி—யுடைமயக்கி யுட்கறுத்த லென்ப—வுடைய—துசாவார்க் குதவாத வூனிலா யாக்கைப்—பிசா சத்தார் கண்டமணப் பேறு." எனவுங் கூறுபவாகலின். இனிக் கந் தருவமாவது கந்தருவகுமாரருங் கன்னியருந் தம்முள் எதிர்ப்பட்டு இயைந்ததுபோலத் தலைவனுந் தலைவியும் எதிர்ப்பட்டுப் புணர்வது; "அதிர்ப்பில்லைபம் பூணுரு மாடவருந் தம்மு—ளெதிர்ப்பட்டுக் கண் டியைத லென்ப—கதிர்ப்பொன்யாழ்—முந்திருவர் கண்ட முனிவறு தண்காட்சிக்—கந்தருவர் கண்ட கலப்பு." என்பவாகலின். மாலை சூட்டல் யாதனுள் அடங்குமெனின் அதுவும் ஒத்த அன்பினராய் நிகழ்தலிற் கந்தருவப்பாற்படும். இவற்றுள் அசுரமுதலாகிய மூன் றுங் கைக்கிளைக்கு உரியவாம், பிரமமுதலாகிய நான்கும் பெருந்தி ணைக்கு உரியவாம்; "முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே— பின்னைய நான்கும் பெருந்திணை பெறுமே." என்பவாகலின். கள வொழுக்கம் பொதுவாகலின் நான்குவருணத்தார்க்கும் ஆயர்முதலி யோர்க்கும் உரித்து. வில்லேற்றுதல் முதலியன பெரும்பான்மை அரசர்க்கு உரித்து. அவற்றுள் ஏறுதழுவல் ஆயர்க்கே சிறந்தது. இராக்கதம் அந்தணரொழிந்தோர்க்கு உரித்து, வலிதிற்பற்றிப் புணர் தலின். அரசர்க்கும் இது பெருவரவிற்றன்று. பேய் இழிந்தோர்க் கே உரித்து. இக்களவொழுக்கம் வேதமுடிபென்பார், 'அந்தண ரரு மறை மன்ற லெட்டினுட்—கந்தருவ வழக்கம்' என்றார். கந்த ருவவழக்கத்தோடு ஒத்த வழக்கினைக் கந்தருவவழக்கமென்றது உபசாரவழக்கு. (௧௧௩)

௪அ௬. காட்சி யையந் துணிவுகுறிப் பறிவென
மாட்சியி னான்கு வகைத்தே கைக்கிளை.

இது மெய்க்கிளையாழோர் வேண்டும் புணர்ச்சிமுன் நிகழ்வ தாக மேற்கூறிய கைக்கிளைப்பகுதி கூறுகின்றது.

இ - ள். காட்சிமுதலாகச் சொல்லப்பட்ட மாட்சிமையுடைய நான்குவகையினையுடைத்து நற்காமத்திற்கு உரிய கைக்கிளை. எ-று.

௪அ௭. ஒன்றே வேறே யென்றிரு பால்வயி
னொன்றி யுயர்ந்த பால தாணையி

ஒத்த கிழவனுங் கிழத்தியுங் காண்ப
மிக்கோ னயினுங் கடிவரை யின்றே.

இது மேற்கூறிய கைக்கிளைப்பகுதியுள் நிறுத்தமுறையானே காட்சியது இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். உம்மைப்பிறப்பினுங் காமம் நுகர்ந்தார் இருவரையும் மறுபிறப்பினும் ஒன்றுவித்தலும் வேருக்கலுமாகிய இருவகை ஊழினுள் இருவரையும் ஒன்றுவித்து உயர்தற்கு ஏதுவாகிய ஊழினது ஆணையாலே மேற்கூறும் பிறப்பு முதலாயின பத்தும் ஒத்த தலைவனுந் தலைவியும் எதிர்ப்படுவர்; அவ்வாறு எவ்வாற்ருனும் ஒவ்வாது பிறப்புக் கல்வி பருவம் முதலிய சிலவற்ருற் தலைவன் மிகுந்தானு யினும் அம்மிகுதிபற்றிக் கடிதல் கடிதலின்று. எ - று.

எனவே, இவற்றுள் யாதொன்ருயினுந் தலைவி மிக்காளாயின் அம்மிகுதிபற்றி அவளைக் கடிதல் கடிதலுடைத்து என்றவாரும். உயர்ந்தபாலென்பது நோய்தீர்ந்தமருந்துபோல உயர்ந்ததன்மேற் செல்லும் மனநிகழ்ச்சிக்கு ஏதுவாயிருந்த பாலென ஏதுப்பொருட் டாய்நின்றது, அதனது ஆணையால் இழிந்ததன்மேற் சேறலின்ருகலின். கிழவன்கிழத்தியெனவே, பலபிறப்பினும் ஒருவர்க்கொருவர் உரிமைபூண்டு நின்றமையும் பெற்ரும். காண்பவெனப் பொதுப்படக் கூறிய அதனனே இருவர்க்கும் பொதுவாகிய ஒருநிலத்தும் ஒருவர்க்குச் சிறந்த வேற்றுநிலத்துங் காண்பரெனக் கொள்க. ஈண்டு நிலமென்றது அவ்வொழுக்கத்திற்குச் சிறந்த குறிஞ்சித்திணைக்கு உரிய வரையும் வரைசார்ந்த இடமுமெனக் கொள்க.

"இவனிவ ளைம்பால் பற்றவு மவளிவன்—புன்றலை யோரி வாங்குநள் பரியவுங்—காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா—தேதில் சிறுசெரு வுறுப மன்னே—நல்லைமன் றம்ம பாலே மெல்லியற்—றுணைமலர்ப் பிணைய லன்னவிவர்—மணமகி ழியற்கை காட்டி யோயே." இஃது ஒருநிலமென்றதாம். "இலங்குமருவித் திலங்கு மருவித்து—வானி னிலங்கு மருவித்தே தானுற்ற—குள்பேணுன் பொய்த்தான் மலை." என்புழிப் பொய்த்தவன் மலையும் இலங்கும் அருவித்தென வியந்துகூறித் தம்மலைக்கு நன்றி இயல்பென்றலின் இது வரை வேறென்பதாம். பிறவாறு வருவன உளவேல் அவையும் ஈண்டே அமைத்துக்கொள்க.

இக்களவொழுக்கங் கொடுப்போரும் அடுப்போரும் இன்றித் தாமே தனியிடத்து எதிர்ப்பட்டுப் புணருங் கந்தருவத்தோடு ஒக்கு

மென்றலின் இவரும் அவ்வாறு ஓரிடத்தும் வேறிடத்துங் காண்பு ழித் தனித்துக் காண்பரென்பதூஉம் பெற்றும். பெறவே, இருவ ரும் முட்டில்செல்வத்தராதலிற் தலைவனுங் * கறங்குங் கந்துகத் தேரேறிப்போத்துங் கடுங்கண்யானையுந் தறுகட்பன்றியுங் கரு வரையும் இருநிலனும் பெருவிசும்பும் அனையார் ஆளிமொய்ம்பின் அரிமான்றுப்பினர், பற்பன்னூறுயிரவர் கூர்வேலிளைஞர் தற்சூழ வேட்டைவிருப்பாற் செல்வானென்பது முடிந்தது. தலைவியும் உடன் பிறந்து உடன்வளர்ந்து நீர் உடனுடிச் சீர் உடன்பெருகி ஒல் உடனுட்டப் பால் உடனுண்டு பல் உடனெழுந்து சொல் உடன்கற்றுப் பழமையும் பயிற்சியும் பண்பும் நண்பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார் பற்பன்னூறுயிரவர் கண்ணும் மனமுங் கவரும் ஒண்ணுதன் மகளிர் தற்சூழத் தாரகைநடுவட் தண் மதிபோலப் பொழில்விளையாட்டு விருப்பாற் செல்வாளென்பது முடிந்தது. முடியவே, தனித்துக்காண்டன் முடியாதெனின், முடி யும்; என்னை? அவள் ஆயங்களும் பொழிலிடம் புகுதலும் விளை யாட்டுவிருப்பினால் ஒவ்வொருவரின் முன்னந் தழைவிழைந்தன கொடுத்துமென்றுங் கண்ணி தண்ணறுநாற்றத்தன செய்துமென் றும் போது மேதக்கன கொய்துமென்றும் மயிலொடு மாறுடுது மென்றுங் குயிலொடு மாறுகூறுதுமென்றும் அருவியாடி அஞ் சுனை குடைகுதுமென்றும் வாசமலர்க்கொடியினூசலாடுதுமென் றும் பரந்து அப்பாலார் இப்பாலாருள்ளாள்கொல்லோவென்றும் இப்பாலார் அப்பாலாருள்ளாள்கொல்லோ என்றும் இவ்வகை நினை த்துப் பிரிவரென்க. இவ்வகை தமியளாகப் பிரிவரோவெனின், எட்டியுஞ் சுட்டியுங் காட்டப்படுங் குலத்துள்ளாளல்லாளாதலா னும் பான்மை அவ்வகைத்தாதலானும் பிறவாறு நினையார் பிரி வரென்க. ஆயின் இவ்வகைப்பட்ட ஆயத்திடை மேனாட் பிரிந் தறியாதாள் தமியளாய்நிற்குமோவெனின், நிற்கும்; தான்பயின்ற இடமுந் தன்னுயத்தோடு ஒக்குமாதலானென்க. யாங்ஙனம் நிற்கு மோவெனின், சந்தனமுஞ் சண்பகமுந் தேமாவுந் தண்பலாவும் ஆசி ணியும் அசோகமுங் கோங்கமும் வேங்கையுங் குரவமும் விரிந்து, நாகமுந் திலகமும் நறவும் நந்தியும் மாதவியும் மல்லிகையும் மௌவ லொடு மணங்கமழ்ந்து,பாதிரியும் பரவைஞாழலும் பைங்கொன்றை யொடு பிணியவிழ்ந்து, பொரிப்புன்கும் புன்னுகமும் முருக்கினெடு முகைதிறந்து, வண்டறைந்து தேனூர்த்து வரிக்குயிலினம் வரிபாடச் சிறுதென்றல் இடைவிராய்த் தனியவரை முனிவுசெய்யும் பொழில் துன்றி, அவணதோர் மாணிக்கச்செய்குன்றின்மேல் விசும்புதுடைத்

* கற்கந்தும் எறிபோத்தும் எனவும் பாடம்.

துப் பசும்பொன்பூத்து வண்டு துவைப்பத் தண்டேன் துளிப்பதோர் வெறியுறும் நறுமலர்வேங்கை கண்டாள். கண்டு பெரியதோர் காதற் களிகூரத் தன் செம்மலர்ச்சீறடிமேற் சிலம்புகிடந்து சிலம்பு படைப்ப அம்மலரணிகொம்பர் நடைகற்பதென நடந்துசென்று நறு விய வேங்கை நாண்மலர்கொய்தாள். கொய்த இடத்து மரகதவி ளிம்படுத்த மாணிக்கச்சுனைமருங்கின் ஒரு மாதவி வல்லி மண்டபத் திற் போதுவேய்ந்த பூநாறுபொழில் நிழற்றக், கடிக்குருக்கத்திக் கொ டிப்பிடித்துத் தகடுபடு பசும்பொற்சிகரங்களின் முகடுதொறும் ஞான்று வந்து இழியும் மணியருவி பொன்கொழித்து மணிவரன்றி மாணிக்கத்தோடு வயிரம் உந்தி அணிகிளர் அருவி ஆடகப்பாறை மேல் அதிர்குரன் முரசின் இரட்ட, வண்டுந் தேனும் யாழ் முரல, வரிக்குயிலுங் கிளியும் பாடத், தண்டாது தவிசுபடப் போர்த்ததோர் பளிக்குப்பாறை மணித்தலத்துமிசை ஆலவட்டம் விரித்தாற்போலத் தன் கோலக்கலாபம் விரித்து இள ஞாயிற்றின் எதிர்கதிர் எறிப்ப ஓர் இளமயில் ஆடுவது கண்டு நின்றாளென்க. அப்பாற் தலைவனும் பற்பன்னூறாயிரவர் கூர்வேலிளைஞரொடு குளிர்மலைச்சாரல் வேட் டம்போய் விளையாடுகின்றான் ஆண்டெழுந்ததோர் கடமானின் பின்னோடிக் காவலிளைஞரைக் கையகன்று நெடுமான்றேரொடு பாகனை நிலவுமணற்கான் யாற்றில் நிற்கச்செய்து, தொடுகழல் அடி யதிரச் சுருளுறுகுஞ்சி பொன்னுணிற் பிணித்துக்கட்டிக் கமழ்நறுங் கண்ணிக்கண் வண்டு மணமயர, அஞ்சாந்தின் நறுநாற்றந் தண்பொ ழிலிடைப் பரந்து நாற, வரிசிலை எதிர்கணை ஏந்தி வடிவுகொண்ட காமன்போலச் சென்று அவள் நின்ற இரும்பொழில்புகும். அஃது யாங்கனமோவெனின், வடகடலிட்ட ஒருநுக ஒருதுளை தென்கட லிட்ட ஒருகழி சென்று கோத்தாற்போலவும் வெங்கதிர்க்கனலியுந் தண்கதிர்மதியமுந் தங்கதி வழுவித் தலைப்பெய்தாற்போலவும் புகு மென்க. அதனால் ஒருவர் ஒருவரைத் தலைப்பெய்து காண்பரென் பது. "அதுவே, தானே யவளே தமியர் காணக்—காமப் புணர்ச்சி யிருவயி னொத்தல்." என்றார் ஆசிரியர் இறையனாருமெனக்கொள்க.

இங்ஙனங் கூறிப்போந்த காட்சிக்குச் செய்யுள்;—"திருவளர் தாமரை சீர்வளர் காவிக ளீசர்தில்லைக்—குருவளர் பூங்குமிழ் கோங் குபைங் காந்தள்கொண் டோங்குதெய்வ—மருவளர் மாலையொர் வல்லியி னொல்கி யனநடைவாய்ந்—துருவளர்காமன்றன் வென்றிக் கொடிபோன் றொளிர்கின்றதே." எனவரும். இக்காட்சிக்கட் தலை வனைப்போலத் தலைவியும் அவனை வியந்துகூறுதல் வேண்டுமாலெ னின், அது புலனெறிவழக்கன்றென மறுக்க. (௧௧௫)

சஅஅ. பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
டுருவு நிறுத்த காம வாயி
னிறையே யருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த வொப்பினது வகையே.

மேல் ஒத்த கிழவனுங் கிழத்தியும் என்றார். இஃது அவ்வொப்பின் பாகுபாடு கூறுகின்றது.

இ - ள். ஒத்தபிறப்பு முதலிய பத்துவகையினையுடைய மேல் நெறிப்படக்கூறிய ஒப்பினது பாகுபாடு. எ - று.

பிறப்புக் குடிப்பிறத்தல்; குடிமை அதற்குத்தக்க ஒழுக்கமுடைமை; ஆண்மை ஆள்வினை; ஆண்டு பெண்மையும் ஆண்மையும் பிறக்கும் பன்னீராண்டும் பதினாறாண்டுமாகிய பருவம்; உருவு பெண்மைவடிவும் ஆண்மைவடிவும் பிறழ்ச்சியின்றி அமைந்த வனப்பு; நிறுத்தகாமவாயில் நிலைநிறுத்தப்பட்ட புணர்ச்சிக்கு வாயிலாகிய அன்பு; நிறை மறைபிறரறியாமை நெஞ்சினைநிறுத்தல்; அருள் பிறர்வருத்தத்துக்குப் பரியுங் கருணை; உணர்வு உலகியலாற் செய்யத்தகுவது அறிதல்; திருச் செல்வம். (ககசு)

சஅகூ. மடமா ணோக்கி வடிவுங் கண்ட
விடமுஞ் சிறந்துழி யெய்துவ தையம்.

இஃது ஐயநிகழும் இடம் உணர்த்தியமுகத்தான் அதன் இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். தலைமகள்வடிவும் அவளைத் தான்கண்ட இடமுஞ் சிறந்தகாலத்துத் தெய்வமோ மக்களுள் உள்ளாளோவென ஐயுறுவது யாம் மேற்கூறிய ஐயமாம். எ - று.

எனவே, அவை சிறப்புடையவல்லாக்காலத்து இழிபுசுட்டப்படுதலான் ஐயம் நிகழாதென்பதாம்; என்னை? "சிறந்துழி யையஞ் சிறந்த தென்ப—விறந்துழி யிழிபே சுட்ட லான" என்பவாகலின். அதற்குச் செய்யுள்:—"போதோ விசும்போ புனலோ பணிக ளது பதியோ—யாதோ வறிகுவ தேது மரிது யமன்விடுத்த—தூதோ வனங்கன் றுணையோ விணையிலி தொல்லைத்தில்லை—மாதோ மடமயிலோ வெனநின்றவர் வாழ்பதியே." எனவரும். ஏற்புழிக்கோடலான் இங்ஙனம் ஐயுறுதல் தலைவன்மேற்றே எனக்கொள்க. தலைவற்குத் தெய்வமோ என ஐயம் நிகழ்ந்தவழி அதனை நீக்கி நான்முத

லியவற்றாற் றெய்வமன்மை உணர்தற்கு அறிவுடையனாதலானுந் தலைவிக்கு முருகனோ இயக்கனோ என ஐயம் நிகழின் அதனை நீக்கி உணர்தற்குக் கருவியிலளாகலான் அவட்கு அச்சமேயன்றிக் காமக் குறிப்பு நிகழாதாகலானுமென்பது. (௧௧௭)

சக௦. எழுதிய வல்லியுந் தொழில்புனை கலனும்
வாடிய மலருங் கூடிய வண்டு
நடைபயி லடியும் புடைபெயர் கண்ணு
மச்சமும் பிறவு மவன்பா னிகழுங்
கச்சமி லையங் கடிவன வாகும்.

இஃது ஐயங்கடியுங் கருவி கூறுமுகத்தாற் றுணிவிலக்கணங் கூறுகின்றது.

இ - ள். முலையினுந் தோளினும் வரித்த தொய்யிற்கொடியும் ஒருவரால் இழைக்கப்பட்ட அணிகலன்களுங் கைக்கொண்டு மோந்து உயிர்த்தலானுஞ் சூடித்துவளுதலானும் வாடியபூவுந் தாதூ தப்படிந்த வண்டும் நிலந்தோய்ந்து நடத்தற்றொழிலோடு பயின்ற அடியும் பக்கத்தே பெயர்ந்து பிறழுங் கண்ணும் ஆண்மகனைக் கண்டுழி மனத்திற்பிறக்கும் அச்சமும் அவைபோல்வன பிறவும் மேல் அங்ஙனம் ஐயுற்ற தலைவன்மாட்டு நிகழாநின்ற எண்ணிலா ஐயங்களைப் போக்குவனவாம். எ - று.

பிறவாவன நிழலிடும் வியர்த்தலுங் கூறைமாசுணலும் முதலாயின. இவை தெய்வமகளிர்க்கு இல்லாதன ஆகலான் ஐயங்கடிவனவாயினவென்க.

இதற்குச்செய்யுள்;—"பாயும் விடையரன் றில்லையன்னாள்படைக் கண்ணிமைக்கும்—தோயு நிலத்தடி தூய்மலர் வாடுந் துயரமெய்தி—யாயு மனனே யணங்கல்ல ளம்மா முலைசுமந்து—தேயு மருங்குற் பெரும்பணைத் தோளிச் சிறுநுதலே." எனவரும். (௧௧௮)

சகக. அரிவை நாட்ட மகத்துநிகழ் வேட்கை
தெரிய வுணர்த்துங் குரிசிற் கென்ப.

இது குறிப்பறிதற்கு ஏதுக் கூறுமுகத்தான் அதற்கு இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். தலைமகள் கண்ணனது அவள் உள்ளத்து நிகழாநின்ற வேட்கையினை விளங்க அறிவிக்குந் தலைமகற்கு, அவன்

அவட்கு அவ்வாறு தன்குறிப்பினை விளங்க உணர்த்தல் உற்று நோக்கும் நோக்கிற்கு எதிர்நோக்கியென்று கூறுவர் ஆசிரியர். எ-று.

இக்குறிப்பறிதலே வழிநிலைக்காட்சியாய்ப் புகுமுகம்புரிதலெ ன்னும் மெய்ப்பாடு கூறியதூஉமாயிற்றென்பது. இதற்குச் செய் யுள்;—"நோக்கினு ணோக்கெதிர் நோக்குத ஞக்கணங்கு—தானைக் கொண் டன்ன துடைத்து." எனவரும். "அணியு மமிழ்துமென் னுவியு மாயவன் றில்லைச்சிந்தா—மணியும்ப ராரறி யாமறை யோ னடி வாழ்த்தலரிற்—பிணியு மதற்கு மருந்தும் பிறழப் பிறழுமின் னும்—பணியும் புரைமருங்குற் பெருந்தோளி படைக்கண்களே." இதுவும் அது.

இன்னும் மேல் "மாட்சி" என்ற மிகையானே துணிந்தவழி வியத்தலுங் குறிப்பறிந்தவழித் தெய்வத்தை மகிழ்ந்துரைத்தலும் அதன்வழித் தெய்வப்புணர்ச்சி துணிதலும் வரவும் பெறும். அவற் றுட் துணிந்தவழி வியத்தற்குச் செய்யுள்;—"அகல்கின்ற வல்குற் றடமது கொங்கை யவையவநீ—புகல்கின்ற தென்னைநெஞ் சுண் டே யிடையடை யார்புரங்க—ளிகல்குன்ற வில்லிற் செற் றோன் றில்லை யீசனெம் மானெதிர்ந்த—பகல்குன்றப் பல்லுகுத்தோன் பழ னம்மன்ன பல்வளைக்கே." எனவும், குறிப்பறிந்தவழித் தெய்வத்தை மகிழ்ந்துரைத்தற்குச் செய்யுள்;—"வளைபயில் கீழ்கட னின்றிட மேல்கடல் வானுகத்தின்—றுளைவழி நேர்கழி கோத்தெனத் தில் லைத்தொல் லோன்கயிலைக்—கிளைவயி னீக்கியிக் கெண்டையங் கண் ணியைக் கொண்டுதந்த—விளைவையல்லால் வியவே னயவேன் தெய்வமிக்கனவே." எனவும், தெய்வப்புணர்ச்சி துணிதற்குச் செய் யுள்;—"ஏழுடையான் பொழி லெட்டுடையான்புய மென்னை முன்னு—ளூழுடையான்புலி யூரன்ன பொன்னிவ் வுயர் பொழில் வாய்ச்—சூழுடையா யத்தை நீக்கும் விதிதுணை யாமனனே—யாழு டையார் மணங்கா ணணங்காய்வந் தகப்பட்டதே." எனவும் வரும். இவை ஒருதலைக்காமம் அல்லவேனும் புணர்ச்சிநிகழாமையிற் கைக் கிளைப்பாற்படும். (௧௧௧)

௪௯௨. இயற்கைப் புணர்ச்சி வன்புறை தெளிவே
பிரிவுழி மகிழ்ச்சி பிரிவுழிக் கலங்க
லிடந்தலைப் பாடு பாங்கற் கூட்டம்
பாங்கிமதி யுடம்பாடு பாங்கியிற் கூட்டம்
பாங்கமை பகற்குறி பகற்குறி யிடையீ

டிரவுக் குறியே யிரவுக்குறி யிடையீடு
வரைவு வேட்கை வரைவு கடாத
லொருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றுருபதி னேழுங்
களவிற் குரிய கிளவித் தொகையே.

இது களவென்னுங் கைகோளிற்கு உரிய கிளவித்தொகை இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ - ள். இயற்கைப்புணர்ச்சி முதலாக வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதல் ஈறாகச் சொல்லப்பட்ட பதினேழுங் களவென்னுங் கைகோளிற்கு உரிய கிளவிகளின் தொகையாம். எ-று.

சகூ௩. கலந்துழி மகிழ்தலு நலம்பா ராட்டலு
மேற்புற வணிதலு மென்னு மிம் மூன்றும்
போற்றிய தெய்வப் புணர்ச்சியின் விரியே.

நிறுத்தமுறையானே இயற்கைப்புணர்ச்சிக்குரிய வகையும் விரியுங் கூறுவனவற்றுள், இஃது அதன்பகுதியாக மேற்கூறிப் போந்த தெய்வப்புணர்ச்சிக்கு வகையின்றாகலின் அதன்விரி கூறுகின்றது.

இ - ள். தெய்வப்புணர்ச்சி துணிந்தபின் வேட்கை மிக, அதனால் அவன் இன்றியமையாமையிற் புணருமன்றே! புணர்ந்துழி அப்புணர்ச்சியின்பத்தை மகிழ்ந்துரைத்தலும், புணர்ச்சிதான் புணராதமுன் நின்ற வேட்கை புணர்ந்தபின்னும் மீதூர்தலான் அந்நலத்தைப் புகழ்ந்துரைத்தலும், புணர்ச்சியாற் சிதைந்தனவற்றைப் பண்டுபோலப் பொருந்த அணிதலுமென்னும் இம்மூன்று கிளவியும் மேற்போற்றப்பட்ட தெய்வப்புணர்ச்சியின் விரியாம். எ - று.

மேற் போற்றப்பட்டவாறென்னையெனின், “தெய்வந்தன்னி னெய்தவுங் கிழத்தியி—னெய்தவும் படூஉ மியற்கைப் புணர்ச்சி.” எனவும், “இயற்கைப் புணர்ச்சி தெய்வத்தி னெய்துழி—முயற்சி யின்றி முடிவ தாகும்.” எனவுங் கூறிப்போந்தமையாமென்க.

போற்றிய என்ற மிகையானே, இங்ஙனம் புணர்ச்சியின் பத்தை மகிழ்ந்துசொல்லக் கேட்ட தலைமகள் நாணம் மிக்குச் சொல்லாடாளன்றே! அவள் உறுப்புக்கண்டு சொற்கேட்க விரும்புதலும் அங்ஙனம் விரும்புதலான் அன்பு மீதூரப்பட்ட தலைமகன் இவள்

வாய்போல நாறும் ஆம்பல் மலர்கள் உளவோவென வண்டிற்கு உரைப்பானுய் அவ்விருப்பங்கூறிச் சொற்கேளாத அயர்வு நீங்குதலும் நலம்பாராட்டலின்பின் வரவும்பெறும்.

கலந்துழிமகிழ்தற்குச்செய்யுள்;—"சொற்பா லமுதிவள் யான் சுவை யென்னத் துணிந்திங்ஙனே—நற்பால் வினைத்தெய்வந் தந்தின்று நானிவ ளாம்பகுதிப்—பொற்பா ரறிவார் புலியூர்ப் புனிதன் பொதியில்வெற்பிற்—கற்பாவிய வரைவாய்க் கடிதொட்ட ளகவகத்தே." எனவும், நலம்பாராட்டற்குச் செய்யுள்;—"உணர்ந்தார்க் குணர்வரி யோன்றில்லைச் சிற்றம் பலத்தொருத்தன்—குணந்தான் வெளிப்பட்ட கொவ்வைச்செவ் வாயிற் கொடியிடைதோட்—புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்—மணந்தாழ் புரிகுழலா ளல்குல்போல வளர்கின்றதே." எனவும், சொற்கேட்க விரும்புதற்குச் செய்யுள்;—"அளவியையார்க்கு மறிவரியோன்றில்லை யம்பலம்போல்—வளவியவான்கொங்கை வாட்டங்கண்ணுதன் மாமதியின்—பிளவியன்மின்னிடை பேரமைதோளிது பெற்றியென்முற்—கிளவியையென்றோ வினிக்கிள்ளையார்வயிற் கேட்கின்றதே." எனவும், சொற்கேளாது அயர்வுநீங்கியதற்குச் செய்யுள்:—"கூம்பலங்கைத்தலத் தன்பரென்பூடுரு கக்குனிக்கும்—பாம்பலங்காரப் பரன்றில்லையம்பலம் பாடலரிற்—றேம்பலஞ்சிற்றிடை யீங்கிவடீங்கனி வாய்கமழு—மாம்பலம்போ துளவோ வளிகா ணும்மகன்பணையே." எனவும், ஏற்புறவணிதற்குச் செய்யுள்;—"தாசுங் கலையுந் தொலையா வழகெறிக் குந்தொடியும்—வாசங் கமழு மதுமல ரோதியும் வண்களபம்—பூசுங் கனதனம் பூணுமுத் தாரமும் பூங்குழையு—மாசும் பழுதில்பொன்னே பண்டுபோல வணிந்தனமே." எனவும்வரும். (கஉக)

சகூச. வேட்கை யுணர்த்தன் மறுத்த லுடன்படல்
கூட்டமென் றிறைவியிற் கூட்டநால் வகைத்தே.

இது நிறுத்தமுறையானே தலைவியிற்புணர்ச்சிவகை இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ-ள். வேட்கையுணர்த்தல் முதலாகக் கூட்டம் ஈறுகச் சொல்லப்பட்ட நான்குவகையினையுடைத்து தலைமகளாற் புணரும் புணர்ச்சி. எ-று. (கஉஉ)

சகூரு. இரந்துபின் னிற்றற் கெண்ணலு மிரந்து
பின்னிலை நிற்றலு முன்னிலை யாக்கலு

மெய்தொட்டுப் பயிறலும் பொய்பா ராட்டலு
மிடம்பெற்றுத் தழாலும் வழிபாடு மறுத்தலு
மிடையூறு கிளத்தலு நீடுநினைந் திரங்கலு
மறுத்தெதிர் கோடலும் வறிதுநகை தோற்றலு
முறுவற்குறிப் புணர்தலு முயங்குத லுறுத்தலும்
புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலும் பிறவு
முணர்த்திய தலைவியிற் புணர்ச்சியின் விரியே.

இது தலைவியிற்புணர்ச்சியின் விரி இத்துணைப்பகுதித் தென்கின்றது.

இ - ள். இரந்துபின்னிற்றற்கெண்ணல் முதலாகப் புகழ்தல் ஈறுகச் சொல்லப்பட்ட பதினைந்து கிளவியும் பிறவும் மேற்சொல்லப்பட்ட தலைமகளாற் புணரும் புணர்ச்சியின் விரியாம். எ - று.

'உணர்த்திய தலைவியிற்புணர்ச்சி' என்றதற்குப் "போற்றிய தெய்வப்புணர்ச்சி" என்றதற்கு உரைத்தாங்கு உரைக்க.

பிற என்றதனனே முன்னிலையாக்கலின்பின்னர் மருங்கணைதலும் புகழ்தற்குப்பின் ஏற்புறவணிதலும் வரவும் பெறும்.

இரந்து பின்னிற்றற்கெண்ணற்குச் செய்யுள்;—"மருந்திற் றீராது மணியி னுகா—தருந்தவ முயற்சியி னகறலு மரிதே—தான்செய் நோய்க்குத் தான்மருந் தாகிய—தேனிமிர் நறவின் றேறல் போல—நீதர வந்த நிறையழி துயரநின்—னாடுகொடி மருங்குனின் னருளி னல்லது—பிறிதிற் றீரா தென்பது பின்னின்—றறியக் கூறுக மெழுமோ நெஞ்சே—நாடுவிளங் கொண்புகழ் நடுதல் வேண்டித்தன்—னாடுமழைத் தடக்கை யறுத்துமுறை நிறுத்த-பொற்கை நறுந்தார்ப் புனைதேர்ப் பாண்டியன்—கொற்கையம் பெருந்துறைக் குனிதிரை தொகுத்த—விளங்குமுத் துறைக்கும் வெண்பற்—பன்மாண் சாயற் பரதவர் மகட்கே." எனவரும். ஆடு கொடிமருங்குலென்பது அண்மைவிளி. ஆடுகொடி மருங்குலாய் நீதரவந்த நிறையழிதுயரம் நின்னருளினல்லதெனப் பொருளுரைத்துக்கொள்க. இதனைத் தலைவன் தோழியையிரந்து பின்னிற்றற்கு இயைந்து கூறுதலாகவும் உரைப்ப. இரந்துபின்னிலைநிற்றற்குச் செய்யுள்;—"செறிவேழ வெஞ்சிலை வேடஞ்சை வாணன் றிருந்தலர்மே—லெறிவேலை வென்றகண் ணென்னுயிர்க் கேவி யிருண்டறல்போ—னெறிவே யலங்கன் முடித்தலை சாய்த்திங்ங னிற்பது

தா—னறிவே யறிந்த வுனக்கலர் மாளிகை யாரணங்கே." எனவும். முன்னிலையாக்கற்குச்செய்யுள்:—"வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்றென் மாறைவண்டு—கொழுதிய லார்செய் குழன்மடவீர்நுங்குற் றேவல்செய்து—தொழுதிய லாயத் தொகுதியொடாடிச் சுனைகுடையா—தெழுதிய பாவையைப்போ னின்றவாறென் னியம்புமினே." எனவும், மருங்கணைதற்குச்செய்யுள்;—"கோலத் தனிக்கொம்ப ரும்பர்புக் கஃதே குறைப்பவர்தஞ்—சீலத் தனகொங்கை தேற்றகி லேஞ்சிவன் றில்லையன்னு—ஞாலொத்த நேரிடை நொய்ம்மையெண் ணாதுநுண் பேடைசையாற்—சாலத்த காதுகண்டீர் வண்டுகொள் கொண்டை சார்வதுவே." எனவும், மெய்தொட்டுப்பயிறற்குச் செய்யுள்;—"உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்—கமிழ்தி னியன்றன தோள்" எனவும்வரும். "அளகந் திருத்தி மதிநுத னீவி யளியகற்றிப்—புளகஞ்செய் தோளிற் புரிவளை யேற்றிப் புதியதென்றற்—கிளகுங் கொழுந்தளிர் மெல்லடி தைவந்த வின்பமுறக்—களபஞ் செறிதனத்தாய் பெற்றவாவென் கரதலமே." இதுவும் அது. பொய்பாராட்டற்குச் செய்யுள்;-"மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்—காதலை வாழி மதி." எனவரும். "பருந்தொன்று கூரிலை வேற்படை வாணன் பரியளப்பூஞ்—செருந்தொன்று சோலைத்தென் மாறையன் னீர்செழுந் திங்களுங்கண்—முருந்தொன்று கோப முகங்கண்டு நாணி முயன்மறுத்தீர்—மருந்தொன்று தேடியன்றோ மகமேரு வலங்கொள்வதே." இதுவும் அது.இடம்பெற்றுத்தழாஅற்குச் செய்யுள்;—"மடைக்கண்டரளஞ் சொரிவையை நாடன்ன வையமொரு—குடைக்கண் டனிபுரப் பார்சொக்க நாயகர் கூடலன்னார்—கடைக்கண் கருணையுண்டாருமில் லாதபொற் காவுமுண்டு—புடைக்குந் தருண வனமுலையாமின்று புல்லுவமே." எனவும், வழிபாடுமறுத்தற்குச் செய்யுள்;—"அகலிடந் தாவிய வானோ னறிந்திறைஞ் சம்பலத்தி—னிகலிடந் தாவிடை யீசற் றொழாரினின் னற்கிடமா—யுகலிடந் தான்சென்றெனதுயிர் நையா வகையொதுங்கப்—புகலிடந்தா பொழில்வாயெழில்வாய்தரு பூங்கொடியே." எனவும்வரும். வழிபாடுமறுத்தல், இடம்பெற்றுத்தழுவியபின் தலைவி வேட்கைக்குறிப்புக்கண்டு தலைவன் சார்தலுற்றவழி அவள் அதற்கு உடம்படாது மறுத்தல். இடையூறுகிளத்தற்குச் செய்யுள்;—"தாழச்செய் தார்முடி தன்னடிக் கீழ்வைத் தவரைவிண்ணோர்—சூழச்செய் தானம் பலங்கை தொழாரினுள் ளந்துளங்கப்—போழச்செய் யாமல்வை வேற்கண் புதைத்துப்பொன் னேயென்னைநீ—வாழச்செய்தாய் சுற்று முற்றும்புதைநின்னை வாணுதலே." எனவும், நீடுநினைந்திரங்கற்குச் செய்யுள்;—

"காதன் மடந்தையர் கையகல் காலையு மெய்யகலா—மேதகு நாணு மெலியவன் ரேுவிழி போலுநெய்தற்—போதவிழ் மென் மலர்ப் புன்னையங் கானற் பொருந்துமிந்த—மாதவி பெற்ற மணிமே கலைநம்மை வாழ்விப்பதே." எனவும், மறுத்தெதிர்கோடற்குச் செய் யுள்;—"குருநாண் மலர்ப்பொழில் சூழ்தில்லைக் கூத்தனை யேத் தலர்போல்—வருநாள் பிறவற்க வாழிய ரோமற்றென் கண்மணி போன்—ருெருநாள் பிரியா துயிரிற் பழகி யுடன்வளர்ந்த—வருநா ணளிய தழல்சேர் மெழுகொத் தழிகின்றதே." எனவும், வறிதுந கைதோற்றற்குச் செய்யுள்;—"பூணுந் தரள நிரையவிர் தோற்ற மும் பூந்தளவின்—சேணுங் கமழு முகையுந் தகையுஞ் செழுஞ்சி லம்பிற்—காணுங் கலப மயினெடும் பீலியின் காலுஞ்சிந்தை— நாணுங் கெடவறிதே நகைத்தாண்மதி நன்னுதலே." எனவும், முறு வற்குறிப்புணர்தற்குச் செய்யுள்;—"முகைமொக்கு ளுள்ளது நாற் றம்போற் பேதை—நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு." எனவும், வரும். "மிகலே யொழியக் குறைவற நீடிய வெந்துயர்க்கோர்—புக லேது மின்றிப் புலம்பனெஞ் சேபொருந் தார்வருந்த—விகலே செயு மயி லன்னகண் ணுண்முகத் தெல்லியன்றிப்—பகலே நிலவு பவ ளத்துள் ளேவந்து பாரித்ததே." இதுவும் அது. முயங்குதலுறுத்தற் குச் செய்யுள்;—"வானக் கதிரவன் மண்ணக மாதை மணந்த தொக்கு—நானக் குழலியை நாணின்று பெற்றது நாவலர்க்குத்— தானக் களிறு தரும்புயல் வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்—கானக் கடிவரைவாய் விரைநாண்மலர்க் காவகத்தே." எனவும், புணர்ச்சி யின்மகிழ்தற்குச் செய்யுள்;—"கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு—மொண்டொடி கண்ணே யுள." எனவும், புகழ்தற் குச் செய்யுள்;—"திரண்மா மரகதச் செய்குன்று காளென்றுஞ் செவ்வனீர்—முரண்மா தவங்கண் முயன்றுசெய்தாலு முளரிமங் கை—சரண்மாறை வாணன் றமிழ்த்தஞ்சை நாட்டென் றனியு யிர்க்கோ—ரரண்மா னனையகண்ணாள் கொங்கைபோற லரிதுமக் கே." எனவும் வரும். ஏற்புறவணிதற்குச் செய்யுள்;—"தூசுங் கலை யும்" என மேற்காட்டியதனையே ஈண்டும் உய்த்துரைத்துக்கொள்க.

இவற்றுள் இரந்துபின்னிற்றற்கெண்ணல் முதலாக நீடுநினைந் திரங்கல் ஈறாகச் சொல்லப்பட்ட ஒன்பதனுள்ளும், வழிபாடுமறுத் தல் ஒன்று ஒழித்து அல்லாதன வேட்கையுணர்த்தற்கும், வழிபாடு மறுத்தலாகிய ஒன்றுந் தலைமகன் மறுத்தற்கும், மறுத்தெதிர்கோட லும் வறிதுநகைதோற்றலும் என்னும் இரண்டுந் தலைமகள் உடன் பாட்டிற்கும், முறுவற்குறிப்புணர்தலும் முயங்குதலுறுத்தலுமென்

னும் இரண்டுந் தலைமகன் உடன்பாட்டிற்கும், புணர்ச்சியின்மகிழ்தலும் புகழ்தலுமென்னும் இரண்டுந் தலைமகன் கூட்டத்திற்கும் உரியவாமெனக் கொள்க. (கஉரு)

சகசு. ஐயந் தீர்த்தல் பிரிவறி வுறுத்தலென்
றெய்திய வன்புறை யிருவகைத் தாகும்.

நிறுத்தமுறையானே வன்புறையுணர்த்துவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். ஐயந்தீர்த்தலும் பிரிவறிவுறுத்தலுமென மேற்கூறிய வன்புறை இரண்டு கூற்றினையுடைத்தாம். எ - று.

வன்புறை வற்புறுத்தல். (கஉச)

சகஎ. அணிந்துழி நாணிய துணர்ந்துதெளி வித்தலும்
பெருநயப் புரைத்தலுந் தெய்வத்திறம் பேசலும்
பிரியே னென்றலும் பிரிந்துவரு கென்றலு
மிடமணித் தென்றலு மென்றிவை யாறு
மடனறத் தெரிந்த வன்புறை விரியே.

இது வன்புறைவிரி இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ - ள். அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தல் முதலாக இடமணித்தென்றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறுந் தலைமகளது அறிவின்மைநீங்க ஆராய்ந்து கூறிய வன்புறையின் விரியாம். எ-று.

அணிந்துழிநாணியதுணர்ந்துதெளிவித்தற்குச் செய்யுள்;—“நாவியுங் காரகி லாவியுந் தோய்குழ ணுணியஞ்சேல்—வாவியுஞ் சோலையுஞ் சூழ்தஞ்சை வாணன்றென் மாறைவயற்—காவியுஞ் சேலுங் கமலமுங் காட்டுநின் கண்மலரு—மாவியும்போ லினியா ரணியாக வணிந்தனமே.” எனவும், பெருநயப்புரைத்தற்குச் செய்யுள்;—“கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி—காமஞ் செப்பாது கண்டது மொழிமோ—பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்—செறியெயிற் றரிவை கூந்தலி—னறியவு முளவோநீ யறியும்பூவே.” எனவும் வரும். இது குறுந்தொகை. தெய்வத்திறம்பேசற்குச் செய்யுள்;—“தேவரிற் பெற்றநஞ் செல்வக் கடிவடி வார்திருவே—யாவரிற் பெற்றினி யார்சிதைப் பாரிமை யாதமுக்கண்—மூவரிற் பெற்றவர் சிற்றம் பலமணி மொய்பொழில்வாய்ப்—பூவரிற் பெற்ற

குழலியென் வாடிப் புலம்புவதே.” எனவும், பிரியேனென்றற்குச் செய்யுள்;—“சிந்தாமணிதெண் கடலமு தந்தில்லை யானருளால்—வந்தா லிகழப் படுமே மடமான் விழிமயிலே—யந்தா மரையன்ன மேனின்னை யானகன் ருற்றுவனோ—சிந்தா குலமுற்றென்னை வென்னைவாட்டந் திருத்துவதே.” எனவும், பிரிந்துவருகென்றற்குச் செய்யுள்;—“தெளிவளர் வான்சிலை செங்கனி வெண்முத்தந் திங்களின்வாய்ந்—தளிவளர் வல்லியன் னாய்முன்னி யாடு பின் யானளவா—வொளிவளர் தில்லை யொருவன் கயிலை யுகு பெருந்தேன்—றுளிவளர் சாரற் கரந்துங்க னேவந்து தோன்றுவனே.” எனவும், இடமணித்தென்றற்குச் செய்யுள்;—“வருங் குன்ற மொன்றுரித் தோன்றில்லை யம்பல வன்மலயத்—திருங் குன்ற வாண ரிளங்கொடி யேயிட ரெய்தலெம்மூர்ப்—பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க்—கருங்குன்றம் வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங்குழையே.” எனவும் வரும். இவற்றுள் முன்னைய மூன்றும் ஐயந்தீர்த்தற்கும் ஏனைய பிரிவறிவுறுத்தற்கும் உரியவெனக் கொள்க.

மடனறத்தெரிந்தவென்ற மிகையானே தெய்வத்திறம் பேசிய பின்னர்ப் பருவரலுணர்தலும் அதன்பின்னர்ப் பிரிவச்சமும் அதன் பின்னர் இன்றியமையாமை எடுத்துரைத்தலும் பிரியேனென்றலின் பின்னர்த் தீராத்தேற்றமும் வரவும்பெறும். தீராத்தேற்றம் தீராதவாறு தேற்றுதல். பருவரலுணர்தற்குச் செய்யுள்;—“கறியுறு சாரற் களியுறு தோகைக் கணநடஞ்செய்—வெறியுறு சோலை விழைவுற நீடில் வெருவுறுமான்—மறியுறு செங்கண் மதுமலர்க் கோதை நொதுமலர்வந்—தறிவுறல் கூடுமென்றோ திருமேனி யழுங்குவதே.” எனவும், பிரிவச்சத்திற்குச் செய்யுள்:—நீங்கிற் சிறிது பொழுது நில்லாவுயிர் நேரிழைக்கின்—றீங்கிப்படி வைகி லெய்தும் பழிநமக் கென்று சிந்தித்—தோங்கற் சிலம்பிடை நின்றாசலாடி யுயங்குநம்மைத்—தாங்கத் தகுந்துணை யாதுகொல்லோ வென்றளி நெஞ்சமே.” எனவும், இன்றியமையாமையெடுத்துரைத்தற்குச் செய்யுள்;—“நீங்கரும் பொற்கழற் சிற்றம்பலவர் நெடு விசும்பும்—வாங்கிருந் தெண்கடல் வையமு மெய்தினும் யான்மறவேன்—தீங்கரும்பும் மமிர்துஞ் செழுந்தேனும் பொதிந்து செப்புங்—கோங்கரும்புந் தொலைத் தென்னையு மாட்கொண்ட கொங்கைகளே.” எனவும், தீராத்தேற்றத்திற்குச் செய்யுள்;—“மெல்லிய லரிவைநின் னல்லகம் புலம்ப—நிற்றுறந் தமைகுவ னாயி னெற்றுறந்—திரவலர் வாரா வைகல்—பலவாகுக யான் செலவுறு தகவே.” எனவும் வரும். இது குறுந்தொகை. (கஉரு)

௪௯௮. தலைவன் மாற்றந் தலைவி தேற்றந்
தெளிவா மென்ப தெளிந்திசி னோரே.

இது நிறுத்தமுறையானே தெளிவிற்கு வகையும் விரியும் இன்மையின் அதன் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். தலைமகன் சொல்லைத் தலைமகள் தெளிதலைத் தெளிதலென்று சொல்லுவர் புலவர். எ - று.

அதற்குச் செய்யுள்;—"எத்துந் தமதுரை தேறிநின் றேனை யிங் கேதனியே—வைத்தங் ககன்று மறந்துறை யார்வறி யோர்க வர—முத்துந் துகிரு மிரங்குந் தரங்க முகந்தெறிந்து—தத்தும் புனல் வையைசூழ் தஞ்சைவாணன் றமிழ்வெற்பரே." எனவரும்.

௪௯௯. செல்லுங் கிழத்தி செலவுகண் டுளத்தொடு
சொல்லலும் பாகனொடு சொல்லலு மிரண்டும்
பிரிவுழி மகிழ்ச்சியின் விரியெனக் கொளலே.

இது நிறுத்தமுறையானே பிரிவுழிமகிழ்ச்சிக்கு வகையின்மையின் அதன்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். அவ்வாறு அவ்விடத்து நீங்கித் தலைமகள் தன்னைக் காணுமற் தான் அவளைக்காண்பதோர் அணிமைக்கண் நின்ற தலைமகன் புணர்ச்சிக்களத்து நின்றும் போகாநின்ற தலைமகளது செலவு கண்டு தன் நெஞ்சொடு கூறலும் பாகனொடு கூறலுமாகிய இரண்டும் பிரிவுழிமகிழ்ச்சியின் விரியாமெனக் கொள்க. எ - று.

செல்லுங்கிழத்தி செலவுகண்டு உளத்தொடு சொல்லற்குச் செய்யுள்;—"காணு மரபின துயிரென மொழிவோர்—நாணிலர் மன்ற பொய்மொழிந் தனரே—யாஅங் காண்டுமெம் மரும்பெற லுயிரே—சொல்லு மாடு மென்மெல வியலுங்—கணைக்கா னுணு கிய நுசுப்பின்—மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே." எனவும், பாகனொடு சொல்லற்குச் செய்யுள்;—"தென்பார்த் திலகமன் றன்றஞ்சை வாணன்றென் மாறைமுந்நீர்—வன்பாத் திரண் முற்ற வண்டலின் மேல்வரு மேதமஞ்சி—முன்பார்த்தென் னெஞ்சம் வழிபார்த் தொதுங்க முறைமுறைதன்—பின்பார்த் தொதுங்கு தல்காண் வலவாவொரு பெண்ணணங்கே." எனவும் வரும். (௧௨௭)

௫௦௦. மருளுற் றுரைத்த றெருளுற் றுரைத்தலென்
றிருவகைத் தாகும் பிரிவுழிக் கலங்கல்.

இது பிரிவுழிக்கலங்கலின் வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். மருளுற்றுரைத்தலுந் தெருளுற்றுரைத்தலுமென இரண்டு வகையினையுடைத்தாம் பிரிவுழிக்கலங்கல். எ - று. (௧௨அ)

௫௦௧. ஆய வெள்ளம் வழிபடக் கண்டிது
மாயமோ வென்றலும் வாயில்பெற் றுய்தலும்
பண்புபா ராட்டலும் பயந்தோர்ப் பழிச்சலுங்
கண்படை பெறாது கங்குனோ தலுமெனு
மைந்தும் பிரிவுழிக் கலங்கல்விரி யாகும்.

இது பிரிவுழிக்கலங்கலின் விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். தலைமகளை ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோவென்றல் முதலாகக் கண்படைபெறாது கங்குனோதல் ஈறாகச் சொல்லப்பட்ட ஐந்தும் பிரிந்தவழிக்கலங்கலின் விரியாம். எ - று.

ஆயவெள்ளம்வழிபடக் கண்டிதுமாயமோவென்றற்குச் செய்யுள்;—"புணர்ப்போ னிலனும் விசும்பும் பொருப்புந்தண் பூங்கழலின்—றுணர்ப்போ தெனக்கணி யாக்குந்தொல் லோன்றில்லைச் சூழ்பொழில்வா—யிணர்ப்போ தணிகுழ லேழைதன் னீர்மையி நீர்மையென்றாற்—புணர்ப்போ கனவோ பிறிதோ வறியேன் புகுந்ததுவே." எனவும், வாயில்பெற்றுய்தற்குச் செய்யுள்;—"உயிரொன் றுளமுமொன் றொன்றே சிறப்பிவட் கென்னொடென்னப்—பயில்கின்ற சென்று செவியுற நீள்படைக் கண்கள்விண்வாய்ச்—செயிரொன்று முப்புரஞ் செற்றவன் றில்லைச்சிற் றம்பலத்துப்—பயில்கின்ற கூத்த னருளென லாகும் பணிமொழிக்கே." எனவும், பண்புபாராட்டற்குச் செய்யுள்;—"குன்ற நாடன் குன்றத்துக் குவாஅற்—பைஞ்சுனை பூத்த பகுவாய்க் குவளையு—மஞ்சி லோதி யசையியற் கொடிச்சி—கண்போன் மலர்த லரிதவ—டன்போல் சாயன் மஞ்ஞைக்கு மரிதே." எனவும், பயந்தோர்ப்பழிச்சற்குச் செய்யுள்;—"தூயசெந் தாமரைப் பொன்னையென் னாவித் துணையைத்தந்த—தாயருந் தந்தையுந் தாரணி மேலுந்தி தந்தவண்ண—லாயுவுந்தாதை யருளும் புராரி யழகெறிக்குந்—தேயுவு மிந்திரன் செல்வமுங்கூடிச் சிறக்கநின்றே." எனவும், கண்படைபெறாது கங்குனோதற்குச் செய்யுள்;—"மயில்போ லினியமென் சாயனல் லாருடன் வல்வினையேன்—றுயில்போன தின்னமுந் தோன்றவுங் காண்கிலன் சோலையிளங்—குயில்போன் மொழியவர் தங்குழல் போலி

ருள் கூர்ந்துகொற்ற—வயில்போன் மறஞ்செய்கண்போ லறநீளு மருங்கங்குலே." எனவும்வரும். இவற்றுள் ஆயவெள்ளம் வழிபடக் கண்டிதுமாயமோ வென்றல் மருளுற் றுரைத்தற்கும் ஏனையநான் குந் தெருளுற்றுரைத்தற்கும் உரிய.

இனி ஒன்றெனமுடித்தலாற் பிரிந்துழிக் கலங்கி நெஞ்சொடு கூறலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"இல்லோ னின்பங் காமுற் றாஅங்—கரிது வேட்டனையே நெஞ்சே காதலி—நல்ல ளா குத லறிந்தாங்—கரிய ளாகுத லறியா தோயே." எனவரும்.(கஉகூ)

ருoஉ. தெய்வந் தெளிதல் கூடல் விடுத்தலென்
றிவ்வோர் மூவகைத் திடந்தலைப் பாடே.

இது நிறுத்தமுறையானே இடந்தலைப்பாட்டின்வகை இத்து ணைத்தென்கின்றது.

இ - ள். தெய்வந்தெளிதலுங் கூடலும் விடுத்தலுமென இடந் தலைப்பாடு மூன்றுவகையினையுடைத்து. எ - று (கநo)

ருoங. தந்த தெய்வந் தருமெனச் சேறலு
முந்துறக் காண்டலு முயங்கலும் புகழ்தலு
முடன்புண ராயத் துய்த்தலு மென்னைவந்
திடந்தலைப் பாட்டி னிலக்கண விரியே.

இஃது இடந்தலைப்பாட்டின்விரி இத்துணைப்பகுதித்து என் கின்றது.

இ - ள். தந்ததெய்வந்தருமெனச்சேறல் முதலாக ஆயத்துய்த் தல் ஈறாக இடந்தலைப்பாட்டின் இலக்கணவிரி ஐந்தாம். எ - று.

தந்ததெய்வந்தருமெனச்சேறற்குச் செய்யுள்;-"என்னறிவால் வந்த தன்றிதுமுன்னுமின் னும்முயன்றூன்—மன்னெறிதந்த திருந் தன்றுதெய்வம் வருந்தனெஞ்சே—மின்னெறிசெஞ்சடைக் கூத்தப் பிரான்வியன் றில்லைமுந்நீர்—பொன்னெறிவார் துறைவாய்ச் செ ன்றுமின்றோய் பொழிலிடத்தே." எனவும், முந்துறக்காண்பதற்குச் செய்யுள்;—"நேயத்ததாய்நென்ன லென்னைப்புணர்ந்துநெஞ் சங்நெ கப்போ—யாயத்ததாயமிழ் தாயணங்காயர னம்பலம்போ—றேயத் ததாயென்றன் சிந்தையதாய்த்தெரி யிற்பெரிது—மாயத்ததாகியிதோ வந்துநின்றதென் மன்னுயிரே." எனவும், முயங்கற்குச் செய்யுள்;—

"வேட்ட பொழுதி னவையவை போலுமே—தோட்டார் கதுப்பினு டோள்." எனவும் வரும். "சுரும்புழுகூந்தலுஞ் செவ்வாய்மழலையுஞ் சோதிநுத—லரும்பியவேர்வு மலமருநோக்கு மசைந்தொசியுங்—கரும்புருவச்சிலை யுங்நிலைசோருங் கலையுங்கண்டு—விரும்பினமேமனமே களிகூரின்ப வெள்ளத்தையே." இதுவும் அது. புகழ்தற்குச் செய்யுள்;—"கனமேகருங்குழல் கங்குலன்றேகண் கருவிளையி—னினமேகுவளையு நெய்தலுமல்ல விவர்க்கிடையென்—மனமேவளரிள வஞ்சியன்றேவஞ்ச மாரன்வைத்த—தனமேதனங் கனகத்தடமேருச் சயிலமன்றே." எனவும், உடன்புணராயத்துய்த்தற்குச் செய்யுள்;—"சூளாமணியும்பர்க் காயவன்சூழ்பொழிற் றில்லையன்னுய்க்—காளாயொழிந்ததென் னுருயிராரமிழ் தேயணங்கே—தோளாமணியே பிணையேபலசொல்லி யென்னைதுன்னு—நாளார் மலர்ப்பொழில்வா யெழிலாய நணுககவே." எனவும் வரும். இவற்றுட் தந்ததெய்வந்தருமெனச்சேறலாகிய ஒன்றுந் தெய்வந்தெளிதற்கும் காண்டலும் முயங்கலும் புகழ்தலுமாகிய மூன்றுங் கூடற்கும் ஆயத்துய்த்தலாகிய ஒன்றும் விடுத்தற்கும் உரியவாம்.

இலக்கணவிரியென்ற மிகையானே தந்ததெய்வந் தருமெனச் சென்றபின்னர்த் தலைவன் நெஞ்சொடு வினுதலும் அதன்பின்னர்க் கிள்ளைவாழ்த்தலும் அதன்பின்னர் அவளெதிர்ப்பட்ட இடத்தினை அவளாகக் கூறுதலும் அதன்பின்னர் மன்னனை நினைந்து மின்னிடைமெலிதலும் முந்துறக்காண்டலின்பின்னர்த் தனிநிலைகண்டு தளர்வகன்றுரைத்தலுந் தானீங்கியவழிப் பிறந்தவருத்தமும் வேட்கையும் அவளறியுமாறு தலைவன் கூறுதலும் அதன்பின்னர்க் கூடற்கரிதென வாடியுரைத்தலும் ஆயத்துய்த்தபின்னர் நீங்கற்கருமை நின்று நினைதலும் வரவும் பெறும்.

தலைவன் நெஞ்சொடு வினுதற்குச் செய்யுள்;—"நீடுங் கொல்லோ கொண்ட நேயமென்னுயத் தவரிடையிற்—றேடுங் கொல்லோ வந்து செல்லுங் கொல்லோ வந்தச் செவ்வியின்னங்—கூடுங் கொல்லோ விதிகூட்டுங் கொல்லோ வென்று கொம்பினுள்ளம்—வாடுங் கொல்லோ வறியேன் மலைச்சாரலில் வந்து நின்றே." எனவும், கிள்ளைவாழ்த்தற்குச் செய்யுள்;—"வெள்ளம் வரம்பி னூழி போகியுங்—கிள்ளை வாழிய பலவே யொள்ளிழை—யிரும்பல் கூந்தற் கொடிச்சி—பெருந்தோட் காவல் காட்டி யவ்வே." எனவும் வரும். இஃது ஐங்குறுநூறு. அவளை யெதிர்ப்பட்ட இடத்தினை அவளாகக் கூறுதற்குச் செய்யுள்;—"காம்பிணையாற்களி மாமயிலாற்கதிர் மாமணியால்—வாம்பிணையால்வல்லி யொல்குதலான்மன்னு மம்பலவன்—

பாம்பிணையாக்குழை கொண்டோன்கயிலைப் பயில்புனமுந்—தேம் பிணைவார்குழலா ளெனத்தோன்றுமென் சிந்தனைக்கே.” எனவும், மன்னனை நினைந்து மின்னிடை மெலிதற்குச் செய்யுள்;—“ஆவி யன்னாய்கவ லேலகலேமென் றளித்தொளித்த—வாவியன்னார்மிக்க வாவினராய்க்கெழு மற்கழிவுற்—றாவியன்னார்மன்னி யாடிடஞ் சேர்வர்கொ லம்பலத்தெம்—மாவியன்னான் பயிலுங்கயிலாயத் தரு வரையே.” எனவும் வரும்.

தனிநிலைகண்டு தளர்வகன்றுரைத்தற்குச் செய்யுள்;—“தாதி வர்போதுகொய் யார்தையலாரங்கை கூப்பநின்று—சோதிவரிப்பந் தடியார்சுனைப்புன லாடல்செய்யார்—போதிவர்கற்பக நாடுபுல்லெ ன்னத்தம் பொன்னடிப்பா—யாதிவர் மாதவ மம்பலத்தான்வரை யெய்துதற்கே.” எனவும், முன்னர்த் தானீங்கியவழிப் பிறந்த வருத் தமும் வேட்கையும் அவளறியுமாறு தலைவன் கூறுதற்குச் செய்யுள்;- “நீங்கிற்றெறூஉங் குறுகுங்காற் றண்ணெனுந்—தீயாண்டுப் பெற்றா ளிவள்.” எனவும், கூடற்கரிதென வாடியுரைத்தற்குச் செய்யுள்;— “காவிநின் றேர்தரு கண்டர்வண் டில்லைக்கண் ணார்கமலத்—தேவி யென்றேயையஞ் சென்றதன்றேயறி யச்சிறிது—மாவியன் றன்ன மென் னோக்கிநின் வாய்திற வாவிடிலென்—னாவியன்றே யமிழ்தே யணங்கேயின் றழிகின்றதே.” எனவும் வரும்.

நீங்கற்கருமை நின்று நினைந்திரங்கற்குச் செய்யுள்;—“பொய் யுடையார்க்கரன் போலகலுமகன் றாற்புணரின்—மெய்யுடையார்க் கவ னம்பலம்போல மிகநணுகு—மையுடை வாட்கண் மணியுடைப் பூண்முலை வாணுதல்வான்—பையுடைவா ளரவத் தல்குல்காக்கும் பைம் பூம்புனமே.” எனவரும். (கக௧)

௫௦௪. சார்தல் கேட்டல் சாற்ற லெதிர்மறை
நேர்தல் கூடல் பாங்கிற் கூட்டலென்
றாங்கெழு வகைத்தே பாங்கற் கூட்டம்.

இது நிறுத்தமுறையானே பாங்கற்கூட்டத்தின் வகை இத்து ணைத்தென்கின்றது.

இ - ள். சார்தல் முதலாகப் பாங்கிற்கூட்டல் ஈறாக எழுவ கைத்தாம் பாங்கற்கூட்டம். எ - று.

ஆங்கு அசை. (கக௨)

௫0௫. தலைவன் பாங்கனைச் சார்தலும் பாங்கன்
றலைவனை யுற்றது வினுதலுந் தலைவ
னுற்ற துரைத்தலுங் கற்றறி பாங்கன்
கழறலுங் கிழவோன் கழற்றெதிர் மறுத்தலுங்
கிழவோற் பழித்தலுங் கிழவோன் வேட்கை
தாங்கற் கருமை சாற்றலும் பாங்கன்
றன்மனத் தழுங்கலுந் தலைவனோ டழுங்கலு
மெவ்விடத் தெவ்வியற் றென்றலு மவனஃ
திவ்விடத் திவ்வியற் றென்றலும் பாங்க
னிறைவனைத் தேற்றலுங் குறிவழிச் சேறலு
மிறைவியைக் காண்டலு மிகழ்ந்ததற் கிரங்கலுந்
தலைவனை வியத்தலுந் தலைவியை வியத்தலுந்
தலைவன் றனக்குத் தலைவிநிலை கூறலுந்
தலைவன் சேறலுந் தலைவியைக் காண்டலுங்
கலவியின் மகிழ்தலும் புகழ்தலுந் தலைவியைப்
பாங்கியொடு வருகெனப் பகர்தலும் பாங்கிற்
கூட்டலு மென்றீங் கீட்டுநா லாறுங்
காட்டிய பாங்கற் கூட்டத்து விரியே.

இது பாங்கற்கூட்டத்துவிரி இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ - ள். தலைவன் பாங்கனைச்சார்தல் முதலாகப் பாங்கிற்கூட்டல் ஈறாக இவ்விடத்துத் தொகுத்த இருபத்துநான்கு கிளவியும் மேற்காட்டிய பாங்கற்கூட்டத்து விரியாம். எ - று.

தலைவன் பாங்கனைச்சார்தற்குச் செய்யுள்;—“பூங்கனையார்புனற் றென்புலியூர்புரிந் தம்பலத்து—ளாங்கெனையாண்டுகொண் டாடும்பிரானடித் தாமரைக்கே—பாங்கனையானன்ன பண்பனைக் கண்டிப் பரிசுரைத்தா—லீங்கெனையார் தடுப்பார் மடப்பாவையை யெய்துதற்கே.” எனவும், பாங்கன் தலைவனை உற்றதுவினுதற்குச் செய்யுள்;—“சிறைவான்புனற்றில்லைச் சிற்றம்பலத்துமென் சிந்தையுள்ளு—முறைவானுயர்மதிற் கூடலினுய்ந்தவொண் டீந்தமிழின்—றுறைவாய்நுழைந்தனை யோவன்றியேழிசைச் சூழல்புக்கோ—விறைவா தடவரைத்தோட் கென்கொலாம் புகுந்தெய்தியதே.” எனவும், தலைவன் உற்றதுரைத்தற்குச் செய்யுள்;—“கோம்பிக் கொதுங்கிமே யாமஞ்ஞைகுஞ்சரங் கோளிழைக்கும்—பாம்பைப்

பிடித்துப் படங்கிழித்தாங்கப் பணைமுலைக்கே—தேம்பற்றுடியிடை மான்மடநோக்கிதில் லைச்சிவன்ரு—ளாம்பொற்றடமலர் சூடுமென் னுற்ற லகற்றியதே.” எனவும், கற்றறிபாங்கன் கழறற்குச் செய்யுள்;—“உளமாம்வகைநம்மை யுய்யவந்தாண்டுசென் றும்பருய்யக்—களமாம்விடமமிழ் தாக்கியதில்லைத்தொல் லோன்கயிலை—வளமாம்பொதும்பரின் வஞ்சித்துநின்றொர்வஞ் சிம்மருங்கு—லிளமான் விழித்ததென்றே யின்றெம்மண்ண லிரங்கியதே.” எனவும், கிழவோன் கழற்றெதிர்மறுத்தற்குச் செய்யுள்;—“சேணிற்பொலி செம்பொன் மாளிகைத்தில்லைச்சிற் றம்பலத்து—மாணிக்கக்கூத்தன் வடவான்கயிலை மயிலைமன்னும்—பூணிற்பொலிகொங்கை யாவியை யோவியப் பொற்கொழுந்தைக்—காணிற்கழறலை கண்டிலைமென் றேட் கரும்பிணையே.” எனவும், கிழவோற்பழித்தற்குச் செய்யுள்;—“இளங்கொம்பொருதனி நின்றிருஞ்சாரலி லென்னையிங்ஙு—னுளங்கொண்டுறுதுயர் செய்ததென்றாய்விண் ணுளிருமின்போல்—விளங்குங்கதிர்வடி வேலண்ணலேதென்றன் மீதசையத்—துளங்குஞ் சிறுகொடிக்கோ மதவேழந் துவக்குண்பதே.” எனவும், கிழவோன் வேட்கைதாங்கற்கருமைசாற்றற்குச் செய்யுள்;—“தலைப்படுசால்பினுக் குந்தளரேன்சித்தம் பித்தனென்று—மலைத்தறிவாரில்லை யாரையுந்தேற்றுவ னெத்துணையுங்—கலைச்சிறு திங்கண் மிலைத்தசிற்றம்பல வன்கயிலை—மலைச்சிறுமான் விழியா லழிவுற்று மயங்கினனே.” எனவும், பாங்கன் தன்மனத்தழுங்கற்குச் செய்யுள்;—“யானுமறிவு கொளுத்துகிற்பேனிங்ங னேறனையான்—றானுமறிவுந் தளர்ந்துநிற்பான்செந் தளவரும்புந்—தேனுமினிய குதலைச்செவ்வாயிளஞ் செவ்விநவ்வி—மானுமிவனை மயங்க விவ்வாறு வருத்துவதே.” எனவும், தலைவனோடழுங்கற்குச் செய்யுள்;—“ஆலத்தினாலமிர் தாக்கியகோன்றில்லை யம்பலம்போற்—கோலத்தினுள்பொருட் டாகவமிர்தங் குணங்கெடினுங்—காலத்தினுன்மழை மாறினுமாறுக் கவிகைநின்பொற்—சீலத்தைநீயு நினையா தொழிவதென் றீவினையே.” எனவும், எவ்விடத்தெவ்வியற்றென் றற்குச் செய்யுள்;—“நின்னுடைநீர்மையு நீயுமிவ்வாறு நினைத்தெருட்டு—மென்னுடைநீர்மையிதென்னென்பதேதில்லை யேர்கொண்முக்கண்—மன்னுடைமால்வரை யோமலரோவிசும் போசிலம்பா—வென்னிடம்யாதிய னின்னையின்னேசெய்த வீர்ங்கொடிக்கே.” எனவும், அவன் அஃது இவ்விடத் திவ்வியற்றென்றற்குச் செய்யுள்;—“விழியாற்பிணையாம் விளங்கியலான்மயி லாமிழற்று—மொழியாற்கிளியா முதுவானவர்த முடித்தொகைகள்—கழியாக்கழற் றில்லைக் கூத்தன்கயிலைமுத் தம்மலைத்தேன்—கொழியாத்திகழும்

பொழிற்கெழிலாமெங் குலதெய்வமே." எனவும், பாங்கன் இறைவனைத்தேற்றற்குச் செய்யுள்;—"குயிலைச்சிலம்படிக் கொம்பினைத் தில்லையங் கூத்தப்பிரான்—கயிலைச்சிலம்பிற்பைம் பூம்புனங்காக்குங் கருங்கட்செவ்வாய்—மயிலைச்சிலம்பகண் டியான்போய்வருவன்வண் பூங்கொடிகள்—பயிலச்சிலம்பெதிர்கூப்பப் பண்ணைநண்ணும் பளிக்கறையே." எனவும், குறிவழிச்சேறற்குச் செய்யுள்;—"கொடுங்கால்குலவரை யேழேழ்பொழிலெழில் குன்றுமன்று—நடுங்காதவனை நடுங்கநுடங்கு நடுவுடைய—விடங்காலயிற்கண்ணி மேவுங்கொலாந்தில்லை யீசன்வெற்பிற்—றடங்கார் தருபெருவான் பொழினீழலந் தண்புனத்தே." எனவும், இறைவியைக்காண்டற்குச் செய்யுள்;—"வடிக்கண்ணிவைவஞ்சி யஞ்சுமிடையிது வாய்பவளந்—துடிக்கின்றவாவெற்பன் சொற்பரிசேயான் றொடர்ந்துவிடா—வடிச்சந்தமாமல ரண்ணல்விண்ணோர்வணங் கம்பலம்போற்—படிச்சந்தமுமிதுவே யிவளே யப்பணிமொழியே." எனவும், பாங்கன் இகழ்ந்ததற்கிரங்கற்குச் செய்யுள்;—"பண்ணார்பணிமொழி வண்ணமுந்தண்ணறும் பைங்குவளைக்—கண்ணுலுரைசெய்த காதலுங்காமக் கனல்கொளுத்திப்—புண்ணனெஞ்சமுந் தஞ்சமில்லாதவன்வன் பொறையு—மெண்ணுதருவினையே னிகழ்ந்தே னெம்மிறைவனையே." எனவும், தலைவனை வியத்தற்குச்செய்யுள்;—"குவளைக்களத் தம்பலவன்குரைகழல் போற்கமலத்—தவளைப்பயங்கர மாகநின்றுண்ட வவயவத்தி—னிவளைக்கண்டிங்குநின் றங்குவந்தித்துணை யும்பகர்ந்த—கவளக் களிற்றண்ணலே திண்ணியா னிக்கடலிடத்தே." எனவும், தலைவியைவியத்தற்குச் செய்யுள்;—"துறைமேய் வலம்புரி தோய்ந்து மணலுழுத தோற்ற மாய்வான்—பொறைமலி பூம்புன்னைப் பூவுதிர் நுண்டாது போர்க்குங் காணி—னிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த—வுறைமதி யுய்யாநோ யூர்சுணங்கின் மென்முலையே தீர்க்கும் போலும்." எனவும், தலைவன்றனக்குத் தலைவிநிலைகூறற்குச் செய்யுள்;—"பணந்தாழரவரைச் சிற்றம்பலவர் பைம் பொற்கயிலைப்—புணர்ந்தாங்ககன்ற பொருகரியுன்னிப் புனத்தயலே—மணந்தாழ்பொழிற்கண் வடிக்கண்பரப்பி மடப்பிடிவாய்—நிணந்தாழ் சுடரிலைவேல கண்டே னென்றுநின்றதுவே." எனவும், தலைவன்சேறற்குச் செய்யுள்;—"எயிற்குலமூன்றிருந் தீயெய்தவெய்தவன் றில்லையொத்துக்—குயிற்குலங்கொண்டுதொண் டைக்கனிவாய்க்குளிர் முத்தநிரைத்—தயிற்குலவேல் கமலத்திற்கிடத்தி யனநடக்கு—மயிற்குலங் கண்டதுண்டே லதுவென்னுடை மன்னுயிரே." எனவும், தலைவியைக்காண்டற்குச் செய்யுள்;—"மறக்கும்பரிசறி யாவண்டலாய மறந்துவந்து—சிறக்குங்கமலத் திருநின்றவா

செங்கண் முத்தரும்ப—நிறக்கும்பசலையு மேனியுமாய்நெஞ்சி னீடு யிர்ப்பும்—பிறக்கும் பெருநலனும் மடநாணும் பிணங்கவிட்டே.” எனவும், கலவியின்மகிழ்தற்குச் செய்யுள்;—“வேட்ட பொழுதி னவையவை போலுமே—தோட்டார் கதுப்பினு டோள்.” எனவும் “மெய்வாய்கண்மூக்குச் செவியென்னுநாமங்கண் மேவப்பெற்ற—வைவாயினுநின் றருந்தினரோவருந் தானவர்முன்—னுய்வான்மலைகொண் டொலிநீர்கடைந்தவன் றம்பரென்போன்—மைவாரளக மடந்தைநின்போலு மருந்தினையே.” எனவும், புகழ்தற்குச் செய்யுள்;—“தழல்கண்டதன்ன கலிவெம்மையாறத்தன் றண்ணளியா—னிழல்கண்டசந்திர வாணன்றென்மாறை நிலவுமிழுங்—கழல்கண்டதன்ன கதிர்முத்தமாலிகைக் காரிகைநின்—குழல்கண்டபின் னல்லவோ வறனீருட் குளித்ததுவே.” எனவும், தலைவியைப் பாங்கியொடுவருகெனப் பகர்தற்குச் செய்யுள்:—“முன்னுவிவந்த முருகன்வைவேற்கண் முனைகவர்ந்த—வென்னுவிநல்கு மிதுநினைவேலின்று போயினிய—நன்னுவிவாச நறுங்குழலாய்வரி னுளையிங்ங—னின்னுவியன்னவர் முன்னுகவன்றி நினையலையே.” எனவும், பாங்கிற்கூட்டற்குச்செய்யுள்;—“முற்றும்பழுதற மொய்ம்முலையாக முயங்குமின்பம்—பெற்றும்பெருத பெருநலந்தந்தனிர் பேரளிகள்—சுற்றும்பரிமளச் சோலையிலாயந் தொழவருவி—யெற்றும்பனிவரைச் சீறூர்நலம்பெற வெய்துகவே.” எனவும் வரும். இவற்றுள் முன்னையமூன்றுஞ் சார்தல் கேட்டல் சாற்றலென்னும் மூன்றற்கும், பாங்கன்கழறல் முதலாகக் கிழவோன் வேட்கைதாங்கற் கருமைசாற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட நான்கும் எதிர்மறைக்கும், பாங்கன்றன்மனத்தழுங்கல் முதலாகத் தலைவன்றனக்குத் தலைவி நிலைகூறல் ஈறாகச் சொல்லப்பட்ட பதினொன்றும் நேர்தற்கும், தலைவன்சேறல் முதலாகத் தலைவியைப்புகழ்தல் ஈறாகச் சொல்லப்பட்ட நான்குங் கூடற்கும், தலைவன் தலைவியைப் பாங்கியொடுவருகெனப் பகர்தலும் பாங்கிற் கூட்டலுமாகிய இரண்டுங் கூட்டற்கும் உரியவாம்.

காட்டியவென்ற மிகையானே தலைவனுற்றதுரைத்தலின்பின்னர்ப் பாங்கனை நின்குறையாக இது முடிக்கவேண்டுமென்றலுங் கிழவோன் கழற்றெதிர்மறுத்தலின் பின்னர்ப் பாங்கனை ஆண்டுச் செலல்வேண்டுமென்றலும் பாங்கன் குறிவழிச்சென்றபின்னர்த் தலைவியுருவு வெளிப்பட்டமைகண்டு தலைவன் கூறுதலும் அதன் பின்னர் அவ்விடத்துக்காணுங்கொல்லோவெனத் தலைவன் ஐயுற்றிரங்கலும் பாங்கன் இறைவியைக்கண்டபின்னர் அவளை எளிதிற்காட்

டிய தெய்வத்தை வணங்குதலும் தலைவன் சேறற்குமுன்னர்த் தலைவி தலைவன் வருங்கொல்லோவென நினைத்தலும் கலவியின் மகிழ்தலின் பின்னர்ப் பாங்கனை உண்மகிழ்ந்து உரைத்தலும் வரவும்பெறும்.

பாங்கனை நின்குறையாக இது முடிக்கவேண்டுமென்றற்குச் செய்யுள்;—"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக—நிறுத்த லாற்றினோ நன்றுமற் றில்ல—ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்—கையி லூமன் கண்ணிற் காக்கும்—வெண்ணெ யுணங்கல் போலப்—பரந்தின் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே." எனவரும். இது குறுந்தொகை.

பாங்கனை ஆண்டுச் செலல்வேண்டுமென்றற்குச் செய்யுள்;—"காயா வீன்ற கணவீ நாற்ற—மாயா முன்றி லருவளி துரக்கு—மாகோள் வாழ்நர் சிறுகுடி யாட்டி—வேயோர் மென்றோள் விலக்குநர்—யாரோ வாழிநீ யவ்வயிற் செலினே." எனவரும்.

தலைவியுருவு வெளிப்பட்டமைகண்டு தலைவன் கூறுதற்குச் செய்யுள்;—"விம்முறு துயரமொடு வெந்நோ யாகிய—வெம்முறு துயரந் தீரிய சென்ற—நான்மறை நவிற்றிய நூனெறி மார்பன்—கண்டனன் கொல்லோ தானே தண்டாது—புருவக் கொடுவிற் கோலிப் பூங்கட்—செருவப் பகழியிற் சேர்த்தழி வுறீஇ—யேத் தொழி ஞெடங்கி யேமுறுத் தகன்ற—மடமா னோக்கிற் றடமென் றோளியைத்—தண்டழை ததும்பிய வின்னிழ லொருசிறை—யுடனு டாயத்து நீங்கி—யிடனு நின்ற வேமுறு நிலையே." எனவும், அவ்விடத்துக்காணுங்கொல்லோவெனத் தலைவன் ஐயுற்றிரங்கற்குச் செய்யுள்;—"என்னுறுநோய் தீர்த்தற் கிருபிறப்பி னுன்மறையோன்—றன்னுறுநோய் போலத் தளர்கின்று—னின்னினிய—சுற்றத்திற் றீர்ந்த சுடரிழையைச் செவ்வியாற்—றெற்றெனக் கண்ணுறுங்கொல் சென்று." எனவும்வரும்.

இறைவியை எளிதிற்காட்டிய தெய்வத்தை வணங்குதற்குச் செய்யுள்;—"அளிதே தானே யருண்மிக வுடைத்தே—களிதார் வண்டினங் கலந்துண் டாடு—மொலிதார் மார்பி னோங்கெழிற் குரிசிலைப்—பிரியாத் துயரமொடு பேதுறுத் தகன்ற—கிளியோர் மழலைக் கேழ்கிளர் தாமரை—யார்ந்த சுற்றமொடு தமரி னீக்கித்—தானே தமியள் காட்டிய—வானோர் தெய்வம் வணங்குவல் யானே." எனவரும்.

தலைவி தலைவன்வருங்கொலென நினைத்தற்குச் செய்யுள்;—"புறவார்நறுமுல்லை போனகையார்பொய்த லாடுசிற்றி—னறவாடு சந்தன நாறுதண்சார னயந்தவின்ப—மறவாதநெஞ்சும் வனமுலை தோயு மணிப்புயமு—முறவாடநிற்பர்கொல்லோ வென்னையாளு மொருவர்வந்தே." எனவரும்.

பாங்கனையுண்மகிழ்ந்துரைத்தற்குச் செய்யுள்;—"செய்வளை ரைம்பா னேரிழை மாதரை—மெய்ந்நிலை திரியா மேதகு சுற்ற மொ—டெய்துத லரிதென வின்னண மிரங்கிக்—கையறு நெஞ்ச மொடு கவன்றுநனி பெயர்ந்தவென்—பைத னெஞ்சம் பரிவு நீக் கித்—தெய்வத் தன்ன தெரியிழை மென்றோ—ளெய்தத் தந்த வேந் தலொ டெம்மிடை—நற்பாற் கேண்மை நாடொறு மெய்த—லப் பாற் பிறப்பினும் பெறுகமற் றெமக்கே." எனவரும். (கஙங)

ரு0சு. முன்னுற வுணர்தல் குறையுற வுணர்த
விருவரு முள்வழி யவன்வர வுணர்தலென்
றுருமூன் றென்ப தோழிக் குணர்ச்சி.

இது நிறுத்தமுறையானே மதியுடன்பாட்டின் வகை இத்துணைத்தென்கின்றது

இ - ள். முன்னுறவுணர்தலுங் குறையுறவுணர்தலும் இருவருமுள்வழியவன்வரவுணர்தலுமென மூன்றுவகையாம் மேற்கூறிப் போந்த பாங்கிமதியுடம்பாடு. எ - று. (கஙச)

ரு0எ. நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்
செய்வினை மறைப்புஞ் செலவும் பயில்வுமென்
றிவ்வகை யேழினு மையமுற் றோர்தலு
மவ்வகை தன்னா லையந் தீர்தலு
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருட் சொல்லி னாடலும்
பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுத்தோன்
கண்ணியுந் தழையு மேந்தி நண்ணி
யூர்பெயர் கெடுதியோ டொழிந்தவும் வினவுழி
யாரே யிவர்மனத் தெண்ணம் யாதெனத்
தேர்தலு மெண்ணந் தெளிதலு மாங்கவ
ணிருவரு முள்வழி யொருமையிற் போந்து

கையுறை யேந்திநின் றவ்வகை வினவுழி
யெதிர்மொழி கொடுத்தலு மிறைவனை நகுதலு
மதியினி லவரவர் மனக்கருத் துணர்வுமென்
றீங்கன மியம்பிய விருநான்கு கிளவியும்
பாங்கி மதியுடன் பாட்டது விரியே.

இது மதியுடன்பாட்டின்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். நாற்றம் முதலாகப் பயில்வு ஈறுகச் சொல்லப்பட்ட மூன்றுபுணர்ச்சியை உள்ளுறுத்துவரூஉம் இத்திறம் ஏழானும் எம் பெருமாட்டிக்குப் பண்டைத்தன்மையன்றால் இவ்வேறுபாடு எற்றினானாயிற்றெனத் தோழி தன் உள்ளத்துள்ளே ஐயமுற்று ஆராய்தலும், அவற்றானே ஐயந்தீர்ந்து புணர்ச்சியுண்டென்பதனைத் தெளிதலும், அங்ஙனந் தெளிந்தபின்னல்லது தலைவிமாட்டுச் சொன்னிகழ்த்தாளாதலின் அவ்வாறு தெளிந்தபின்னர்த் தோழி தலைவியுடன் ஆராயுங்காற் றன்மனத்து நிகழ்ந்தனவற்றை மறைத்துக்கூற வேண்டுதலின் மெய்யினானும் பொய்யினானுங் குற்றேவல் தப்பாமற் பலவாய் வேறுபட்ட இருபொருட்பட்டசொற்களைக் கூறி அவ்வாற்றான் ஆராய்தலும், இயற்கைப்புணர்ச்சிப்பின்னர்ப் பேணப்பட்ட தோழியாகிய வாயிலைப் பெற்றுப் பின்னர் இரந்துகுறையுறுதலைவியுறுத்த தலைவன் கண்ணியுந் தழையும் ஏந்திச் செவ்விபார்த்துச் சார்ந்து ஊரும் பெயரும் வேழமுதலியகெடுதியும் வழிமுதலிய ஒழிந்தனவுமாகியவற்றை இவன் என்னின் ஆயதோர் குறையுடையனென்று அவள்கருதுமாறு வினயவிடத்து இவர் யாரெனவும் இவர் மனத்து எண்ணம்யாதெனவுந் தோழி ஆராய்தலும், ஆராய்ந்து அவனகத்தெண்ணத்தினைத் தெளிதலுந், தலைமகன் கிழவியுந்தோழியும் ஒருங்குதலைப்பெய்த செவ்விக்கண் ஒருதலையாகச் சென்று கண்ணியுந் தழையும் ஏந்திநின்று முன்போல ஊர்பெயர்முதலாயின வினய இடத்துத் தோழி அதற்கு எதிர் மொழிகொடுத்தலும், இறைவனை நகுதலும், மதியினின் அவரவர் மனக்கருத்து உணர்வுமென்று இவவாறுகூறிய எட்டுக்கிளவியும் பாங்கிமதியுடன்பாட்டு விரியாம். எ - று.

இதனுள், நாற்றமாவது ஓதியும் நுதலும் முதலியன பேதைப் பருவத்துக்குத்தக நாறாது தலைவன்கூட்டத்தான் மான்மதச்சாந்து முதலியனவும் பலபூக்களும் விரவிநாறுதல். தோற்றமாவது நீண்டும் பிறழ்ந்தும் பிள்ளைப்பருவத்து வெள்ளைநோக்கின்றி யுள்ளொன்று

கொள்ள நோக்குங்கண்ணுந் தந்நிலைதிரிந்து துணைத்துமெல்கிப் பணைத்துக்காட்டுந் தோளும் முலையும் என்றின்னோரன்னவற்றின் பொலிவு. ஒழுக்கமாவது பண்ணையாயத்தோடு முற்றிலான் மணற் கொழித்துச் சோறமைத்தல் முதலாயின முனிந்த குறிப்பினளாய்ப் பெண்டன்மைக்கேற்ப ஒழுகுதலுந் தெய்வந்தொழாமை முதலியன வுமாம். உண்டியாவது பண்டையிற் குறைந்த உண்டி. செய்வினை மறைத்தலாவது முன்போலாது இக்காலத்து நினைவுஞ் செயலுந் தலைவனொடு பட்டனவாகலான் அவை பிறர்க்குப் புலனாகாமை மறைத்தல்; அஃது ஆயத்தொடுகூடாது இடந்தலைப்பாட்டிற்கு ஏது வாக நீங்கிநிற்றலாம். செலவாவது பண்டுபோல வேண்டியவாறு நடவாது சீர்பெறநடந்து ஓரிடத்திற் சேறல். பயில்வாவது செவிலி முலையிடைத் துயில்வேண்டாது வேறோரிடத்துப்பயிறல்.

"நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்—செய்வினை மறைப்பினுஞ் செலவினும் பயில்வினும்—புணர்ச்சி யெதிர்ப்பா டுள் ளுறுத்து வரூஉ—முணர்ச்சி யேழினு முணர்ந்த பின்றை." எனவும், "ஆங்குணர்ந் தல்லது கிழவோ டேஎத்துத்—தான்குறை யுறுத றோ ழிக்கில்லை." எனவும் ஓதுபவாகலின், "இவ்வகை யேழினு மையமுற் றோர்தலு—மவ்வகை தன்னா லையந் தீர்தலும்—மெய்யினும் பொய் யினும் வழிநிலை பிழையாது—பல்வேறு கவர்பொருட் சொல்லி னுட லும்" என்றுகூறினர். பெருநாணும் பேரச்சமும் உடையாள் தலைவி யாதலின் இறந்துபாடு பயப்பன கூறி நாடாமைக்கன்றே "நா ணவு நடுங்கவு நாடா டோழி—காணுங் காலைத் தலைமக டேஎத்து." எனச்சூத்திரம் பிறந்ததாகலின், இங்ஙனங்கூறி நாடாமைக்கு 'மெய் யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது—பல்வேறு கவர்பொருட் சொல்லி னுடல்' என்றார். இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தபின்றைத் தன்னையவள் காணாமைத்தான் அவளைக்காணுவதோர் அணுமைக் கண் நின்றானாக, மற்றையாரெல்லாந் தலைமகட்குச் செய்யும் வழி பாடுந் தோழி விசேடத்தாற் செய்யும் வழிபாடும், எல்லார்க்குந் தலை மகள் செய்யும் அருளிச்செய்கையுந், தோழிக்கு விசேடத்தாற் செய் யும் அருளிச்செய்கையுங் கண்டு இவளேபோலும் இவட்குச் சிறந் தாள் இதுவும் எனக்கொரு சார்பாமென உணர்ந்து தலைவன்முன் பேணினமையால் 'பெட்டவாயில்' என்றார். இயற்கையானுதல் இடந்தலைப்பாட்டானுதல் பாங்கனானுதல் புணர்ந்த தலைவன் பின் னரே தெருண்டுவரைதல் தலை; அல்லாதுவிடின் இரந்து குறை யுறுத்தற்கு உரியனாதலின் 'இரவுவலியுறுத்தோன்' என்றார் "காமப் புணர்ச்சியு மிடந்தலைப் படலும்—பாங்கொடு தழாஅலுந் தோழியிற்

புணர்வுமென்—றாங்குநால் வகையு மடைந்த காலமொடு—முறை யான் மொழிந்திசின் மறையோ ராறே" எனவும் "புணர்ந்த பின்றை யாங்ஙனமொழுகாது—பணிந்த மொழியாற் றோழி தேஎத்—திரந் துகுறை யுறுதலுங் கிழவோன் மேற்றே" எனவும் ஓதுபவாகலின். அங்ஙனம் வினவுவான் ஏதிலார்போல ஊரினை முன்வினயச், சிறிது உறவுதோன்றப் பெயரினைப்பின் வினய், அவ்விரண்டினும் மாற்றம் பெறுதான் ஒன்றுகெடுத்தானாகவும் அதனை அவர் கண் டார்போலவும் வினய, அவற்றினும் மாற்றம் பெறுதான் பிறவாற் றானும் வினவுதலின் இம்முறைவைத்தார். ஒழிந்தனவாவன வழிவி னுதலும் மொழியாமை வினதலும் இடைவினுதலும் பிறவுமாம்.

குறையுறவுணர்தற்கும் இருவருமுள்வழி அவன்வரவுணர்தற் குமுரிய கிளவிகள் ஐந்துமேயன்றி அக்கிளவிநிகழ்தற்கு நிமித்தமா கிய பெட்டவாயில் பெற்றுச்சேறலும் இரவு வலியுறுத்தலும் இருவ ருமுள்வழி ஒருதலையாகச் சேறலும் முதலிய தலைவன்கூற்றுக்களும் அனுவாதமுகத்தான் ஈண்டே நிகழ்தலுங் கொள்க. ஒன்றெனமுடித் தலாற் புனங்கண்டு மகிழ்தலும் புனத்திடைக்கண்டு மகிழ்தலுமாகிய தலைவன் கூற்றுக்களும் ஈண்டேகொள்ளப்படும்.

எதிர்மொழிகொடுத்தன் முதலிய மூன்றும் இருவருமுள்வழி அவன் வந்துழியே தோழி மதியுடம்படுமாற்றான் நிகழ்தலும் பெட் டவாயில்பெற்று இரவுவலியுறுத்த தலைவன் தலைவியுந் தோழியும் ஒருங்குதலைப்பெய்த செவ்விநோக்கியாயினுந் தோழி தனித்துழி யாயினும், ஊர்பெயர் கெடுதியொடு ஒழிந்தவும் வினய்த் தோழியை மதியுடம்படுத்துமாற்றான் நிகழ்தலுங் கொள்க; என்னை? "பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினு—மூரும் பெயருங் கெடுதியும் பிறவு—நீரிற் குறிப்பி னிரம்பக் கூறித்—தோழியைக் குறையுறும் பகுதியும்." எனவும், "இரந்துகுறை பெறாது கிழவியுந் தோழியு— மொருங்கு தலைப்பெய்த செவ்வி நோக்கிப்—பதியும் பெயரும் பிற வும் வினஅய்ப்—புதுவோன் போலப் பொருந்துவ கிளந்து—மதியு டம் படுத்தற்கு முரிய னென்ப." எனவும் வருவன ஓத்தாகலான். இன்னுஞ் சான்றோர் செய்யுட்களானும் உணர்க.

நாற்றமுதலிய ஏழானும் ஐயமுற்றோர்தற்குச் செய்யுள்;— "பூங்கேசமன்றல் புனையாவெழில்வெண் புதுமதிகண்—டாங்கேயி கழ்த லருகியவுண்டி யருஞ்செலவு—தீங்கேகரத்த லொருவயினே யென்றுஞ் சென்றுநிற்ற—றாங்கேவலமல்ல வந்ததென்னேவிந்தத் தையலுக்கே." எனவரும்.

இனி அவை தனித்தனி வருமாறுங் காட்டுதும். நாற்றத்தான் ஐயமுற்றோர்தற்குச் செய்யுள்;—"கங்கைச்சடிலர் மதுராபுரீசர் கடம்பவனத்—தெங்கட்குளதன்றி யெங்குளதோ விவட்காரமும்பூந்—தொங்கற்புதுமணமுந் திருப்பாவை பொற்றோளுமிரு—கொங்கைக்குவடு மளகாடவியுங் குடிகொண்டதே." எனவும், தோற்றத்தான் ஐயமுற்றோர்தற்குச் செய்யுள்;—"தோளிற்குழைவுங் களபாசலந்தரு சோபையும்வை—வாளிற்சிறந்த விழியுங்கண்டாற்சசிவட்டமென்னுங்—கோளிற்றிகழ்குடை யார்கூடல்வாழுங் கொடியிடைக்கு—நாளிற்புதுமை சிறந்தொருகோடி நலந்தருமே." எனவும், ஒழுக்கத்தான் ஐயமுற்றோர்தற்குச் செய்யுள்;—"கந்தாடியகளிற் றார்கடம்பாடவிக் காவின்மின்போல்—வந்தாளொழுக்க வழக்கென்சொல்வேன்வண்ட லாடலும்பூஞ்—சந்தாடுசோலை மணியூசலாடலுந் தண்டரளப்—பந்தாடலு மறந்தா ளென்னபாவம் பலித்ததுவே." எனவும், உண்டியான் ஐயமுற்றோர்தற்குச் செய்யுள்;—"பெருந்தாமரைப்பதம் போற்றிநிற்பார் பிறவிப்பிணிக்கு—மருந்தாகியபெரு மான்மதுரேசர் வரையிலிந்தக்—கருந்தாரைவேற்கண்ணிக் கென்னகண்மாயங் கலந்ததண்ட—ரருந்தா வமுதருந்தப் புகுந்தாலு மருந்திலளே." எனவும், செய்வினைமறைப்பான் ஐயமுற்றோர்தற்குச் செய்யுள்;—"யாமேயுமன்றி யினவாயவெள்ளமு மின்றியிவர்—தாமேபுரியுந் தவமென்கொலோதண் டரளமணி—வாமேகலைப்பங்கர் வாழ்மதுராபுரி வைகைசுற்றும்—பூமேவுசோலையுஞ் செய்குன்றுமாகப் புகுந்துநின்றே." எனவும், செலவுகண்டையமுற்றோர்தற்குச் செய்யுள்;—"கரிக்கும்பகம்பக் கடாசலத்தார்கடம் பாடவிமான்—பரிக்குஞ்சிலம்பு சிலம்புபொற்பாதம் பதுமமலர்—விரிக்குந் தவிசின் மெலநடந்தாலும் மெலிவதராத்—தரிக்குந்திருவுடலுங் கன்றவேநடை தந்ததுவே." எனவும் பயில்வான் ஐயமுற்றோர்தற்குச் செய்யுள்;—"வன்னந்தருமவு லிச்சொக்கநாதர் மதுரையின—வன்னந்தனிநடை கற்பநின்றுடன் னமுதச்செவ்வா—யின்னந்துணைமுலைப் பான்மணம்போயின தில்லையிவ—டன்னந்தனிபயிலக் கற்றவாறென்கொல் சாற்றுவதே." எனவும் வரும்.

அவ்வகைதன்னலையந்தீர்தற்குச் செய்யுள்;—"முதுக்குறைந்தனளே முதுக்குறைந் தனளே—மலைய னொள்வேற் கண்ணி—முலையும் வாரா முதுக்குறைந் தனளே." எனவரும்.

'மெய்யினும் பொய்யினும் வழிநிலைபிழையாது பல்வேறு கவர்பொருட் சொல்லினுட' னுட்பிறைதொழு கென்றற்குச் செய்யுள்;—"மைவார்கருங்கண்ணி செங்கரங்கூப்பு மறந்துமற்றைப்—பொய்வா

னவரிற் புகாதுதன்பொன்னடிக் கேயடியே—னுய்வான்புகவொளிர் தில்லைநின்றோன்சடை மேலதொத்துச்—செவ்வானடைந்த பசுங் கதிர்வெள்ளைச் சிறுபிறைக்கே.'' எனவும், கரந்துரைத்தற்குச் செய் யுள்;—“கோடுயர்தண்பிறை தோய்குன்றமீதுபைங் கொன்றையெ ன்ன—நீடியபூங்குழ னேரிழையாய்நென்ன னின்னையொழிந்— தாடியபூஞ்சுனை வாயளிமூசி யளித்தவண்ணம்—வாடியதன்றி வருந் தியகாரண மற்றில்லையே.'' எனவும், கரவுநாட்டத்திற்குச் செய் யுள்;—“நீலம்பவளம் படரப்பவள நிறந்தரளக்—கோலம்புனைய நுதல்குறுவேர்வெழக் கோமளமே—போலுந்திருநிறம் பொன்னிற மாகப் புனைசுனைநீ—ரேலந்தருகுழலாய் கிடையாதுகொ லெங்க ளுக்கே.'' எனவும், சுனைவியந்துரைத்தற்குச் செய்யுள்;—“பருங் கண்கவர்க்கொலை வேழப்படையோன் படப்படர்தீத்—தருங்கண் ணுதற்றில்லை யம்பலத்தோன்றட மால்வரைவாய்க்—கருங்கண்சி வப்பக் கனிவாய்விளர்ப்பக்கண் ணுரளிபின்—வருங்கண்மலைமலர் சூட்டவற்றோ மற்றவான்சுனையே.'' எனவும் வரும். “செந்நிறமே னிவெண் ணீறணிவோன்றில்லை யம்பலம்போ—லந்நிறமேனி நின் கொங்கை யிலங்கழிகுங்குமமு—மைந்நிறவார்குழன் மாலையுந்தாதும் வளாய்மதஞ்சே—ரிந்நிறமும்பெறில் யானுங்குடைவ னிருஞ்சுனை யே.'' என்பது நாணநாட்டம். “ஆவாவிருவ ரறியாவடிதில்லை யம் பலத்து—மூவாயிரவர் வணங்கநின்றோனையுன் னுரின்முன்னித்— தீவாயுழுவை கிழித்ததந்தோசிறி தேபிழைப்பித்—தாவாமணிவேல் பணிகொண்டவாறின்று ராண்டகையே.'' எனவும் “பண்டிப் புனத்துப் பகலிடத் தேனலுட்—கண்டிக் களிற்றை யறிவன்மற்— றிண்டிக்—கதிரன் பழைய னூர்க் கார்நிலக் கண்ணு—யுதிர முடைத் திதன் கோடு.'' எனவும் வருவன நடுங்கநாட்டம். இன்னோரன்ன காட்டின் இறந்துபாடுபயத்தலான் வழிநிலைபிழைத்தனவாமாதலின் ஈண்டைக்கு ஏலாவென மறுக்க.

பெட்டவாயில்பெற்றுச் சேறற்குச் செய்யுள்;—“எளிதன்றி னிக்கனி வாய்வல்லிபுல்ல லெழின்மதிக்கீற்—றொளிசென்றசெஞ் சடைக் கூத்தப்பிரானையுன் னுரினென்கட்—டெளிசென்றவேற் கண் வருவித்தசெல்லலெல் லாந்தெளிவித்—தளிசென்றபூங்குழற் றோழிக்குவாழி யறிவிப்பனே.'' எனவும், இரவுவலியுறுத்தற்குச் செய்யுள்;—“குவளைக்கருங்கட் கொடியேரிடையிக் கொடிகடைக் க—ணுவளைத்தனதுயி ரென்றதுதன்னொ டுவமையில்லா—தவ ளைத்தன்பால்வைத்த சிற்றம்பலத்தா னருளிலர்போற்—றுவளத்த லைவந்த வின்னலின்னேயினிச் சொல்லுவனே.'' எனவும், ஊர்வி

ஞதற்குச் செய்யுள்;—"ஒருங்கடமூவெயி லொற்றைக்கணைகொள் சிற் றம்பலவன்—கருங்கடமூன்றுகு நால்வாய்க்கரியுரித் தோன்க யிலை—யிருங்கடமூடும் பொழிலெழிற்கொம்பரன் னீர்களின்னே-வருங்கடமூர்பகர்ந்தாற் பழியோ விங்குவாழ்பவர்க்கே." எனவும், பெயர்விஞதற்குச் செய்யுள்;—"தாரென்னவோங்குஞ் சடைமுடி மேற்றனித் திங்கள்வைத்த—காரென்னவாருங் கறைமிடற்றம் பலவன்கயிலை—யூரென்னவென்னவும் வாய்திறவீரொழி வீர்பழி யேற்—பேரென்னவோவுரையீர் விரையீர்ங்குழற் பேதையரே." எனவும்வரும்.

ஊரும் பிறவும் உடன்விஞதற்குச் செய்யுள்;—"அருவி யார்க்கும் பெருவரை நண்ணிக்—கன்றுகால் யாத்த மன்றப் பலவின்—வேர்க்கொண்டு தூங்குங் கொழுஞ்சுளைப் பெரும்பழங்—குழவிச் சேதாமாந்தி யயலது—வேய்பயி லிறும்பிஞ றூறல் பருகும்—பெருங்கல் வேலிச் சிறுகுடி யாதெனச்—சொல்லவுஞ் சொல்லீ ராயிற் கல்லெனக்—கருவி மாமழை வீழ்ந்தென வெழுந்த—செங்கே ழாடிய செழுங்குரற் சிறுதினைக்—கொய்புனங் காவலு நுமதோ—கோடேந் தல்கு னீரோ ளீரே" எனவரும். இது நற்றிணை. கெடுதியுள் வேழம்விஞதற்குச் செய்யுள்;—"இருங்களியாயின் றியானிறுமாப் பவின் பம்பணிவோர்—மருங்களியாவன லாடவல்லோன்றில்லை யான்மலையீங்—கொருங்களியார்ப்ப வுமிழ்மும்மதத்திரு கோட்டொருநீள்—கருங்களியார் மதயானை யுண்டோ வரக் கண்டதுவே." எனவும், மரைவிஞதற்குச் செய்யுள்;—"நறைபரந்த சாந்த மறவெறிந்து நாளா—லுறையெதிர்ந்து வித்தியவூ ழேனற்—பிறையெதிர்ந்த—தாமரைபோல் வாண்முகத்துத் தாழ்குழலீர் காணீரோ—வேமரை போந்தன வீண்டு." எனவும், கலைமான் விஞதற்குச் செய்யுள்;—"கருங்கண்ணனையறி யாமனின்றோன்றில்லைக் கார்ப்பொழில்வாய்-வருங்கண்ணனைய வண்டாடும்வளரிள வல்லியன்னீ—ரிருங்கண்ணனைய கணைபொருபுண்புண ரிப்புனத்தின்—மருங்கண்ணனைய துண்டோ வந்ததீங்கொரு வான்கலையே." எனவும், வன்றி விஞதற்குச் செய்யுள்;—"தங்குறிப்பி னேருந் தலைச்சென்று கண்டக்கா—லெங்குறிப்பி னேமென் றிகழ்ந்திரார்—நுங்குறிப்பின்—வென்றி படர்நெடுங்கண் வேய்த்தோளீர் கூறீரே—வன்றி படர்ந்த வழி." எனவும்வரும். வன்றி பன்றி. மானேடு மனம்விஞதற்குச் செய்யுள்;—"கனம்வந் திறைஞ்சுங் கடம்பாடவியர் கருணையென்னத்—தனம்வந் தரும்புஞ் சரிகுழலீரென் சரத்தொடுமா—னினம்வந்த தோவந்த மான்பிணைதேடி யிளைத்துமற்றென்—மனம்வந்ததோ வுரையீ ருங்கள்காவன் மலிபுனத்தே." எனவரும்.

ஒழிந்தவற்றுள் வழிவினுதற்குச் செய்யுள்;—"சிலம்பணி கொண்டசெஞ் சீறடி பங்கன்றன் சீரடியார்—குலம்பணி கொள்ள வெனைக்கொடுத் தோன்கொண்டு தானணியுங்—கலம்பணி கொண் டிட மம்பலங் கொண்டவன் கார்க்கயிலைச்—சிலம்பணி கொண்ட நுஞ் சீறூர்க் குரைமின்கள் சென்னெறியே." எனவும், மொழியா மைவினுதற்குச் செய்யுள்;—"இரதமுடைய நடமாட் டுடையவ ரெம்முடைய—வரதமுடைய வணிதில்லை யன்ன வரிப்புனத்தார்—விரதமுடையர் விருந்தொடு பேச்சின்மை மீட்டதன்றேற்—சரதமு டையர் மணிவாய் திறக்கிற் சலக்கென்பவே." எனவும், இடைவினு தற்குச் செய்யுள்;—"கலைக்கீழக லல்குற் பாரமதா ரங்கண் ணூர்ந்தி லங்கு—முலைக்கீழ்ச் சிறிதன்றி நிற்றன் முற்றூதன் றிலங்கையர் கோன்—மலைக்கீழ் விழச்செற்ற சிற்றம்பலவர்வண் பூங்கயிலைச்—சிலைக்கீழ்க் கணையன்ன கண்ணீ ரெதுநுங்கள் சிற்றிடையே." எனவும், உரைத்ததுரையாது கருத்தறிவித்தற்குச் செய்யுள்;—"வின் னிறவாணுதன் வேனிறக்கண்மெல் லியலைமல்லற்—றன்னிறமொன்றி விருத்திநின்றேன்றன தம்பலம்போன்—மின்னிறநுண்ணி டைப் பேரெழில்வெண்ணகைப் பைந்தொடியீர்—பொன்னிறவல்கு லுக்காமோ மணிநிறப் பூந்தழையே."எனவும்வரும்.பிறவும் அன்ன.

**யா**ரேயிவர் மனத்தெண்ணம்யாதெனத் தேர்தற்குச் செய் யுள்;—"பல்லிலனுகப் பகலைவென் றேன்றில்லை பாடலர்போ—லெல்லில னுகத்தொ டேனம் வினவிவன் யாவன்கொலாம்—வில் லிலனுகத் தழைகையன் வேட்டைகொண் டாட்டமெய்யோர்—சொல்லிலனு கற்றவா கடவானிச் சுனைப்புனமே." எனவும், எண் ணந்தெளிதற்குச் செய்யுள்;—"ஆழமன் னேவுடைத் திவ்வையர் வார்த்தை யனங்கனைந்து—வீழமுன் னேக்கிய வம்பலத்தான்வெற் பி னிப்புனத்தே—வேழமுன் னுய்க்கலை யாய்ப்பிற வாய்ப்பின்னு மென்றழையாய்—மாழைமென் னேக்கி யிடையாய்க் கழிந்தது வந் துவந்தே." எனவும், இருவருமுள்வழியொருமையிற்றலைவன் கையு றையேந்திச் சேறற்குச் செய்யுள்;—"தண்டா மரைமலர்ப் பொன் னையும் பார்மங்கை தன்னையும்போல்—வண்டார் குழன்மட வார்ம ணந்தார் சென்று வாணன்றஞ்சை—நுண்டா தணிபொங்கர் நீழ லின்கீழ்ந் நுடங்கிடையார்க்—கண்டாதரவை யெல்லாஞ் சொல் லவே நல்ல காலமிதே." எனவும், கையுறையேந்திநின்றவ்வகைவினு தற்குச் செய்யுள்;—"தழைக்கின்ற சந்தனந் தண்ணறுஞ் சாரற் றவழுங்கொண்டன்—மழைக்குன்ற வாணர் மடவியரேநும் மலர்க் கண்களா—லுழைக்கன் றையுமொழி யாவொரு கோடிபைங் கிள்

ளையயு—மழைக்கின்ற வுங்களேயோ புனங்காவல ராக்குவதே.'' எனவும்வரும். தோழி தனித்துழித் தலைவன் குறையுற்று மதியுடம் படுத்தல் வந்துழிக்காண்க. மற்றிவற்றையே ஒருவரைக்கூறும் பன்மைக்கிளவியாக்கி உதாரணமாக்குதலும் ஒன்று.

கையுறையேந்திநின்றவ்வகை வினவுழி எதிர்மொழிகொடுத் தற்குச் செய்யுள்;—"உடுக்குங் கலையின்றி யிங்கொருநாளு மொருவர்வந்து—கெடுக்குங் கலைகண் டறிகில மியாங்கிளர் வானுலகை—யடுக்குங் கலைமதி துஞ்சுமஞ்சார லருவிவெற்பா—தொடுக்குங் கலையினி வேறுமுண்டாயினுஞ் சொல்லுகவே." எனவும், இறைவனை நகுதற்குச் செய்யுள்:—"பின்னே தழைகொண்டு வேழமெய் தாரந்த வேழம்வந்து—பின்னேயிணைபிரி யும்பிணை யானது பேசிலின்னங்—கொன்னே யுகளுங் குறுமுயலாகவுங் கூடுங்கொல்லோ—வென்னே யுலகி லிவரையொப்பாரில்லை யேவினுக்கே." எனவும், மதியினின் அவரவர் மனக்கருத்துணர்தற்குச் செய்யுள்;—"ஏனல் காவ லிவளு மல்லண்—மான்வழி வருகுவ னிவனு மல்ல—னரந்தங் கண்ணி யிவனோ டிவளிடைக்—கரந்த வுள்ளமொடு கருதியது பிறிதே—நம்மு ணுணுநர் போலத் தம்முண்—மதுமறைந் துண்டோர் மகிழ்ச்சி போல—வுள்ளத் துள்ளே மகிழ்ப—சொல்லு மாடுப கண்ணி னானே." எனவும்வரும்.

இவற்றுள் நாற்றம் முதலிய ஏழானும் ஐயமுற்றோர்தலும் அவ்வகைதன்னால் ஐயந்தீர்தலும் மெய்யினும் பொய்யினும் வழிநிலைபிழையாது பல்வேறுகவர்பொருட் சொல்லினுடலும் என்னும் மூன்றும் முன்னுறவுணர்தற்குங், கண்ணியுந்தழையும் ஏந்தி நண்ணி ஊர் பெயர் கெடுதியோடு ஒழிந்தவும் வினவுழி யாரேயிவர்மனத் தெண்ணம்யாதெனத் தேர்தலும் எண்ணந்தெளிதலும் என்னும் இரண்டுங் குறையுறவுணர்தற்குங், கையுறையேந்திநின்று அவ்வகை வினவுழி எதிர்மொழிகொடுத்தலும் இறைவனை நகுதலும் மதியினி னவரவர்மனக்கருத்துணர்வும் என்னும் மூன்றும் இருவருமுள்வழி அவன்வரவுணர்தற்கும் உரியவாம்.

புனங்கண்டு மகிழ்தற்குச் செய்யுள்;—"உவரும்புலவு மொழிக்குங்கழிப்புன்னை யொண்மலர்த்தா—திவருந்துறையன்ன மென்னடையாரித ணேறமுல்லைப்—பவருங்கொடியும் படர்கொழுஞ்சாரற் பசுந்தினையைக்—கவருங்கிளியினுக் கின்றுகைம்மாறொன்று கண்டிலமே." எனவும், புனத்திடைக்கண்டு மகிழ்தற்குச் செய்யுள்;—"தினைக்காவலிந்தத் திருவைவைப்பாரந்தச் செங்கமல—மனைக்கா

ருளரென் றறிந்திலரோவருண் மாரிவெள்ளச்—சுனைக்காவியங் கண்ணி தோய்வாரழகிய சொக்கர்வெற்பில்—வினைக்கானவரறிவிப் படியோமுன் விதித்ததுவே.” எனவும்வரும். (கரு௫)

௫0அ. இரந்துபின் னிற்றல் சேட்படை மடற்கூற்று
மடல்விலக் குடன்படன் மடற்கூற் றொழிதல்
குறைநயப் பித்த னயத்தல் கூட்டல்
கூட லாயங் கூட்டல் வேட்டலென்
றீராறு வகைத்தே யிகுளையிற் கூட்டம்.

இது நிறுத்தமுறையானே பாங்கியிற்கூட்டத்தின் வகை இத் துணைத்தென்கின்றது.

இ-ள். இரந்துபின்னிற்றல் முதலாக வேட்டல் ஈறாகச் சொல்லப்பட்ட பன்னிரண்டுவகையினையுடைத்துப் பாங்கியிற்கூட் டம். எ-று. (கருசு)

௫0௯. தலைவ னுட்கோள் சாற்றலும் பாங்கி
குலமுறை கிளத்தலுந் தலைவன் றலைவி
தன்னை யுயர்த்தலு நன்னுதற் பாங்கி
யறியாள் போன்று வினாதலு மிறையோ
னிறைவி தன்மை யியம்பலும் பாங்கி
தலைவி யருமை சாற்றலுந் தலைவ
னின்றியமை யாமை யியம்பலும் பாங்கி
நின்குறை நீயே சென்றுரை யென்றலும்
பாங்கியைத் தலைவன் பழித்தலும் பாங்கி
பேதைமை யூட்டலுங் காதலன் றலைவி
மூதறி வுடைமை மொழிதலும் பாங்கி
முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறலுந்
தன்னிலை தலைவன் சாற்றலும் பாங்கி
யுலகிய லுரைத்தலுந் தலைமகன் மறுத்தலும்
பாங்கி யஞ்சியச் சுறுத்தலு மாங்கவன்
கையுறை புகழ்தலுந் தையன் மறுத்தலு
மாற்றா நெஞ்சினோ டவன்புலத் தலுமவ
ளாற்றுவித் தகற்றலு மாகுநா லைந்து
மிரந்துகுறை பெறாது வருந்திய கிழவோன்

மடலே பொருளென மதித்தலும் பாங்கிக்
குலகின் மேல்வைத் துரைத்தலு மதனைத்
தன்மேல் வைத்துச் சாற்றலும் பாங்கி
தலைமக ளவயவத் தருமை சாற்றலுந்
தலைமகன் றன்னைத் தானே புகழ்தலு
மலர்முலைப் பாங்கி யருளியல் கிளத்தலுங்
கொண்டுநிலை கூறலு மென்றிவை யேழுந்
தலைவி யிளமைத் தன்மை பாங்கி
தலைவற் குணர்த்தலுந் தலைவன் றலைவி
வருந்திய வண்ண முரைத்தலும் பாங்கி
செவ்வி யருமை செப்பலுந் தலைவன்
செவ்வி யெளிமை செப்பலும் பாங்கி
யென்னை மறைப்பி னெளிதென நகுதலு
மந்நகை பொறாஅ தவன்புலம் பலுமவ
டேற்றலுங் கையுறை யேற்றலுங் கிழவோ
னுற்றலு மென்னு மவ்வொன் பானு
மிறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி
யிறைவிக் கவன்குறை யுணர்த்தலு மிறைவி
யறியாள் போன்று குறியாள் கூறலும்
பாங்கி யிறையோற் கண்டமை பகர்தலும்
பாங்கியைத் தலைவி மறைத்தலும் பாங்கி
யென்னை மறைப்ப தென்னெனத் தழாலுங்
கையுறை புகழ்வுமென் றிவ்விரு மூன்றுந்
தோழி கிழவோன் றுயர்நிலை கிளத்தலு
மறுத்தற் கருமை மாட்டலுந் தலைவன்
குறிப்பு வேறாக நெறிப்படக் கூறலுந்
தலைவியை முனிதலுந் தலைவி பாங்கி
தன்னை முனிதலுந் தன்கைக் கையுறை
யேற்றலு மெனமுறை சாற்றிய வாறு
மிறைவி கையுறை யேற்றமை பாங்கி
யிறைவற் குணர்த்தலுங் குறியிடங் கூறலுங்
குறியிடத் திறைவியைக் கொண்டு சேறலுங்

குறியிடத் துய்த்து நீங்கலு மிறையோ
னிடத்தெதிர்ப் படுதலு மியைதலும் புகழ்தலும்
விடுத்தலும் பாங்கி மெல்லியற் சார்ந்து
கையுறை காட்டலு மையுறை கண்ணியைப்
பாங்கிற் கூட்டலு நீங்கித் தலைவற்
கோம்படை சாற்றலு முலகியன் மேம்பட்
விருந்து விலக்கலும் பெருந்தகை விருந்திறை
விரும்பலு மெனமுறை தெரிந்த பன்மூன்றோ
டற்றமில் சிறப்பினிவ் வறுபத் தொன்றுங்
குற்றமில் பாங்கியிற் கூட்டத்து விரியே.

இது பாங்கியிற்கூட்டத்து விரி இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ - ள். தலைவனுட்கோள்சாற்றல் முதலாகப் பாங்கி யாற்றுவித்தகற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட இருபதும் இரந்துகுறைபெறாது வருந்தியகிழவோன் மடலேபொருளெனமதித்தல் முதலாகக் கொண்டுநிலைகூறல் ஈறாகச் சொல்லப்பட்ட ஏழுந் தலைவியிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல் முதலாகக் கிழவோனுற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஒன்பதும் இறைவன்றனக்குக் குறைநேர்பாங்கி இறைவிக்கவன்குறையுணர்த்தல் முதலாகப் பாங்கிகையுறைபுகழ்தல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறுந் தோழி கிழவோன்றுயர்நிலைகிளத்தல் முதலாகக் கையுறையேற்றல் ஈறாக முறையே சொல்லப்பட்ட ஆறும் இறைவிகையுறையேற்றமை பாங்கி இறைவற்குணர்த்தல் முதலாகத் தலைமகன்விருந்திறைவிரும்பல் ஈறாக ஆராய்ந்த பதின்மூன்றோடு கூட மிகுந்த சிறப்பினையுடைய இவ்வறுபத்தொருகிளவியுந் தீமையில்லாத பாங்கியிற்கூட்டத்து விரியாம். எ - று.

தலைவனுட் கோள்சாற்றற்குச் செய்யுள்;—"மடுக்கோகடலின் விடுதிமிலன்றி மறிதிரைமீன்—படுக்கோபணிலம் பலகுளிக்கோபரன் றில்லைமுன்றிற்—கொடுக்கோவளைமற்று நும்மையர்க்காயகுற்றேவல்செய்கோ—தொடுக்கோபணியீ ரணியீர்மலர்நுஞ் சுரிகுழற்கே." எனவும், பாங்கி குலமுறைகிளத்தற்குச் செய்யுள்;—"தெங்கம்பழங்கமு கின்குலைசாடிக் கதலிசெற்றுக்—கொங்கம்பழனத் தொளிர்குளிர்நாட்டினை நீயுமைகூர்—பங்கம்பலவன் பரங்குன்றிற் குன்றன்ன மாப்பதைப்பச்—சிங்கந்திரிதரு சீறூர்ச்சிறுமியெஞ் செமொழியே." எனவும், தலைவன் தலைவிதன்னை உயர்த்தற்குச் செய்

யுள்;—"மாடஞ்செய்பொன்ன கருங்கிரில்லையிம் மாதர்க்கென் ப்ன—பீடஞ்செய்தாமரை யோன்பெற்றபிள்ளையை யுள்ளலரைக்-கீடஞ்செய்தென்பிறப் புக்கெடத்தில்லைநின் றோன்கயிலைக்—கூடஞ் செய்சாரற் கொடிச்சியென்றே நின்றுகூறுவதே." எனவும், பாங் கியறியாள்போன்றுவினுதற்குச் செய்யுள்;—"விண்ணிறந்தார்நி லம் விண்டவரென்றுமிக் காரிருவர்—கண்ணிறந்தார்தில்லை யம்ப லத்தார்கழுக் குன்றினின்று—தண்ணறுந்தாதிவர் சந்தனச்சோலைப் பந் தாடுகின்ற—ரெண்ணிறந்தா ரவர்யார் கண்ணதோ மன்னநின்ன ருளே." எனவும், இறையோன் இறைவிதன்மை இயம்பற்குச் செய் யுள்;—"குவவினகொங்கை குரும்பைகுழல்கொன்றை கொவ்வை செவ்வாய்—கவவினவாணகை வெண்முத்தங்கண்மலர் செங்கழு நீர்—தவவினைதீர்ப்பவன் றாழ்பொழிற்சிற்றம் பலமனையாட்—குவ வினநாண்மதிபோன் றொளிர்கின்ற தொளிமுகமே." எனவும், பாங் கிதலைவியருமை சாற்றற்குச் செய்யுள்;—"நெருநலு முன்னு ளெல் லையு மொருசிறைப்—புதுவை யாகலிற் கிளத்த ணுணி—நேரிழை வளைத்தோ ணின்றோழி செய்த—வாரஞர் வருத்தங் களையா யோ வென—வெற்குறை யுறுதி ராயிற் சொற்குறை—யெம்பதத் தெளிய ளல்ல ளெமக்கோர்—கட்காண் கடவு ளல்லளோ பெரும—வாய் கோன் மிளகின் மலையங் கொழுங்கொடி—துஞ்சுபுலி வரிப்புறந் தைவரு—மஞ்சுசூழ் மணிவரை மன்னவன் மகளே." எனவும், தலைவன் இன்றியமையாமை இயம்பற்குச் செய்யுள்;—"பொருளா வெனைப்புகுந் தாண்டுபுரந்தரன் மாலயன்பா—லிருளாயிருக்கு மொ ளிநின்றசிற்றம் பலமெனலாஞ்—சுருளார்கருங்குழல் வெண்ண கைச்செவ்வாய்த் துடியிடையீ—ரருளாதொழியி லொழியாதொழி யுமென் னுயிருரே." எனவும், பாங்கி நின்குறைநீயேசென்றுரையெ ன்றற்குச் செய்யுள்;—"அந்தியின்வாயெழி லம்பலத்தெம்பர னம் பொன்வெற்பிற்—பந்தியின்வாய்ப்பல வின்சுளைபைந்தே னொடுங்கடு வன்—மந்தியின்வாய்க்கொடுத் தோம்புஞ்சிலம்ப மனங்கனிய-முந் தியின்வாய்மொழி நீயேமொழிசென்றம் மொய்குழற்கே." எனவும் வரும். பாங்கியைத்தலைவன் பழித்தற்குச் செய்யுள்;—"மாதர்குறை முடிக்க வல்லாயை வல்லையெனக்—காதல் சிறப்பக் கருதியது—மே தகைய—பாம்படுதே ரல்குற் பயம்படுநீர் மானமான்—றேம்படுதேர் மீது செலல்." எனவரும். இது சிற்றகத்தியம். பாங்கி பேதமையூட் டற்குச் செய்யுள்;—"நறுந்தண் டகரம் வகுள மிவற்றை—வெறும் புதல்போல் வேண்டாது வெட்டி—யெறிந்துழுது—செந்தினை வித் துவார் தங்கை பிறர்நோய்க்கு—நொந்தினைய வல்லளோ நோக்கு." எனவரும். காதலன் தலைவிமூதறிவுடைமை மொழிதற்குச் செய்

யுள்;—"அணங்குடைப் பனித்துறைத் தொண்டி யன்ன—மணங்கமழ் பொழிற்குறி நல்கின ளுணங்கிடைப்—பொங்கரி பரந்த வுண்க—ணங்கலுழ் மேனி யசைஇய லெமக்கே." எனவரும். இஃது ஐங்குறுநூறு. பாங்கி முன்னுறுபுணர்ச்சிமுறையுறக்கூறற்குச் செய்யுள்;—"நறுந்தண் கூந்தற் குறுந்தொடி மடந்தை—சிறுமுதுக் குறைவி யாயினள் பெரிதென—நின்னெதிர் கிளத்தலு மஞ்சுவலெனக்கே—னின்னுயி ரன்ன ளாயினுந்—தன்னுறு விழுமங் காத்த லானே." எனவரும். தன்னிலை தலைவன்சாற்றற்குச் செய்யுள்;—"தோளுங் கூந்தலும் பலபா ராட்டி—வாழ்த லொல்லுமோ மற்றே செங்கோற்—குட்டுவன் றொண்டி யன்ன—வெற்கண்டு நயந்துநி நல்காக் காலே." எனவரும். இஃது ஐங்குறுநூறு. பாங்கி உலகியலுரைத்தற்குச் செய்யுள்;—"கோடீ ரெல்வளைக் கொழுமடற் கூந்த-லாய்தொடி மடவரல் வேண்டுதி யாயிற்—றெண்கழிச் சேயிறாஅப் படூஉந்—தண்கடற் சேர்ப்ப வரைந்தனை கொண்மோ." எனவரும். இஃது ஐங்குறுநூறு. தலைமகன் மறுத்தற்குச் செய்யுள்;—"சிலைமென் முகிலன்ன நன்னுதன்மீது செறிகுழலாண்—முலைமேன்முயங்குவ னென்சொன்னவாறு முழுமணியின்—கலைமேலணிதழை யல்குனல்லாய்முன் கவிகொணர்ந்த—மலைமேன்மருந்துவந்தோ தலைமேல் விடமாற்றுவதே." எனவும், பாங்கியஞ்சி அச்சுறுத்தற்குச் செய்யுள்;—"முனிதருமன்னையு மென்னையர்சாலவு மூர்க்கரின்னே—நனிதரும்நிலத் தன்றையகுன்றமுந் தாழ்சடைமேற்—பனிதரு திங்க ளணியம்பலவர் பகைசெகுக்குங்—குனிதருதிண்சிலைக் கோடுசென்றுன்சுடர்க் கொற்றவனே." எனவும், ஆங்கவன் கையுறைபுகழ்தற்குச் செய்யுள்;—"வில்லும்பிறையுந் திறையிடும்வாணுதன் மெல்லியலா—யெல்லுங்குமுத மலருங்கண்டாலிருங் கோங்கரும்பம்—வல்லும்பொருத வனமுலைக்கான மணியிதுபேர்—சொல்லும்பொழுது பிரமனுமாலுந் தொழத்தகுமே." எனவும், தையன்மறுத்தற்குச் செய்யுள்;—"ஆரத்தழையராப் பூண்டம்பலத்தன லாடியன்பர்க்—காரத்தழையன் பருளிநின்றோன்சென்ற மாமலயத்—தாரத்தழையண்ண றந்தாலிவையவ ளல்குற்கண்டா—லாரத்தழைகொடு வந்தாரெனவரு மையுறவே." எனவும், ஆற்றாநெஞ்சினோடவன்புலத்தற்குச் செய்யுள்;—"கடுந்தே ரேறியுங் காலிற் சென்றுங்—கொடுங்கழி மருங்கி னடம்பமலர் கொய்துங்—கைதை தூக்கியு நெய்தல் குற்றும்—புணர்ந்தாம் போல வுணர்ந்த நெஞ்சமொடு—வைகலு மினைய மாகவுஞ் செய்தார்ப்—பசும்பூண் வேந்த ரழிந்த பாசறை—யொளிறுவே லழுவத்துக் களிறுபடப் பொருத—பெரும் புண் ணுறுநர்க்குப் பேஎய் போலப்—பின்னிலை முனியா நம்வயி—

னென்னென நினையுங்கொல் பரதவர் மகளே." எனவும், அவளாற் றுவித்தகற்றற்குச் செய்யுள்;—"யாழார்மொழிமங்கை பங்கத்தி றைவனெறிதிரைநீ—ரேழாயெழுபொழி லாயிருந்தோனின்ற தில் லையன்ன—சூழார்குழலெழிற் றொண்டைச்செவ்வாய்நவ்வி சொல் லறிந்தாற்—றூழாமெதிர்வந்து கோடுஞ்சிலம்ப தருந்தழையே." என வும், இரந்துகுறைபெறாது வருந்தியகிழவோன் மடலேற்பொருளெ ணமதித்தற்குச் செய்யுள்;—"காம முழந்து வருந்தினார்க் கேம— மடலல்ல தில்லை வலி." எனவும்வரும். "தலையாயநண்புடை யார் தளர்ந்தாருயிர் தாங்குதற்கோர்—நிலையாகவின்றுள நின்றிலரேல் வெய்ய நீணெடுங்கண்—வலையால்வளைப்புண்டு வார்குழற்கண்ணி யில் வந்துபட்ட—கலையார் விடுக்கவல்லார் விடுவாரெவர் கைப்பட் டதே." இதுவும் அது. பாங்கிக்குலகின்மேல் வைத்துரைத்தற்குச் செய்யுள்;—"காய்சினவேலன்ன மின்னியல்கண்ணின் வலைகலந் து—வீசினபோதுள்ள மீனிழந்தார்வியன் றென்புலியூ—ரீசன சாந்து—மெருக்குமணிந்தோர் கிழிபிடித்துப்—பாய்சினமாவென வேறுவர்சீறூர் பனைமடலே." எனவரும். "மாவென மடலு மூர்ப பூவெனக்—குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப—மறுகி னார்க்க வும் படுப—பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே." இதுவும் அது.

பிறிதுமாகுப என்றது வரைபாய்தலை.

அம்மடலேற்றினைத் தலைமகன் தன்மேல்வைத்துச்சாற்றற் குச் செய்யுள்;—"கழிகின்றவென்னையு நின்றநின்கார்மயி றன்னை யும்யான்—கிழியொன்றநாடி யெழுதிக்கைக்கொண்டென் பிறவி கெட்டின்—றழிகின்றதாக்கிய தாளம்பலவன் கயிலையந்தேன்— பொழிகின்றசாரனுஞ் சீறூர்த்தெருவிடைப் போதுவனே." என வும், தலைமகளவயவத்தருமை பாங்கிசாற்றற்குச் செய்யுள்;— "அடிச்சந்தமால்கண் டிலாதனகாட்டிவந் தாண்டுகொண்டென்— முடிச்சந்தமாமல ராக்குமுன்னோன்புலி யூர்புரையுங்—கடிச்சந்த யாழ்கற்றமென்மொழிக்கன்னி யனநடைக்குப்—படிச்சந்தமாக்கும் படமுளவோ நும்பரிசகத்தே." எனவும், தலைமகன் தன்னைத்தானே புகழ்தற்குச் செய்யுள்;—"காரார்கொடைத்தடக் கைக்கருமாணிக் கன் கப்பல்வெற்பி—னேராகநீர்கொண்ட நெஞ்சுதந்தாலந்த நெஞ்சு கொண்டே—யோரார்திருவுரு வெல்லாமெழுத வருமெனக்கு—வா ராதிருப்பதையோ மடவீருங்கள் வன்கண்மையே." எனவும், பாங்கி அருளியல்கிளத்தற்குச் செய்யுள்;—"நடனும்வணங்குந்தொல்லோ னெல்லைநான்முகன் மாலறியாக்—கடனுமுருவத் தரன்றில்லைமல் லற்கண் ணார்ந்தபெண்ணை—யுடனும்பெடையொடொண் சேவ

லுமுட்டையுங் கட்டழித்து—மடனும்புனைதரின்யார் கண்ணதோ மன்ன வின்னருளே.” எனவும், பாங்கி கொண்டுநிலைகூறற்குச் செய்யுள்;—“ஊர்வாயொழிவா யுயர்பெண்ணைத்திண்மட னின்குறிப்புச்—சீர்வாய்சிலம்ப திருத்தவிருந்தில மீசர்தில்லைக்—கார்வாய் குழலிக்குன் ஞதரவோதிக்கற் பித்துக்கண்டா—லார்வாய் தரினறிவார் பின்னைச்செய்க வறிந்தனவே.” எனவும்வரும்.

இறந்துபடுவானை இச்சொற் றாங்கிக்கொண்டு நின்றமையிற் கொண்டுநிலையாயிற்று.

தலைவியிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தற்குச் செய்யுள்;—“உருகுதலைச்சென்ற வுள்ளத்துமம்பலத் தும்மொளியே—பெருகுதலைச்சென்று நின்றேன்பெருந்துறைப் பிள்ளைகள்ளார்—முருகுதலைச்சென்ற கூழைமுடியா முலைபொடியா—வொருகுதலைச்சின் மழலைக்கென்னேவைய வோதுவதே.”எனவும், தலைவன்றலைவி வருந்தியவண்ணமுரைத்தற்குச் செய்யுள்;—“அளைதாழரவு மரியும் வெந்தீயு மரசுபிங்ங—னிளைதாயினுங்கொல்லு மென்பதுநீவந் திருஞ்சுரும்பின்—கிளைதாழ்குழல்வஞ்சி கேட்டிலையோவிளங் கிள்ளை மென்சொன்—முளைவாணகைப்பெண் ணரசல்லவோவந்த மொய்குழலே.” எனவும், பாங்கி தலைவிசெவ்வியருமை செப்பற்குச் செய்யுள்;—“கற்றிலகண்டன்ன மென்னடைகண்மலர் நோக்கருளப்—பெற்றிலமென்பிணை பேச்சுப்பெறாகிள்ளை பிள்ளையின்றேன்—றுற்றிலஞற்ற தறிந்திலளாகத் தொளிமிளிரும்—புற்றிலவாளரவன் புலியூரன்ன பூங்கொடியே.” எனவும், தலைவன் செவ்வியெளிமைசெப்பற்குச் செய்யுள்;—“தேன்வந்தவாயிதழ்ச் சேயிழையாயின்ன செவ்விநவ்வி—மான்வந்தவாள்விழி வஞ்சிக்குநீதஞ்சை வாணன்வெற்பில்—யான்வந்தவாசென் றியம்புதியேலவர் யாவரென்று—டான்வந்தவாவுடனே நின்னையாரத் தழீஇக்கொள்ளுமே.”எனவும்,பாங்கி என்னைமறைப்பின் எளிதெனநகுதற்குச் செய்யுள்;—“பண்டாலியலு மிலைவளர்பாலகன் பார்கிழித்துத்—தொண்டாலியலுஞ் சுடர்க்கழலோன்றொல்லைத் தில்லையின்வாய்—வண்டாலியலும் வளர்பூந்துறைவ மறைக்கிலென்னைக்—கண்டாலியலுங் கடனில்லைகொல்லோகருதியதே.” எனவும், அந்நகை பொறாது அவன் புலம்பற்குச் செய்யுள்;—“மத்தகஞ்சேர்தனி நோக்கினன்வாக்கிறந் தூறமுதே—யொத்தகஞ்சேர்ந்தென்னை யுய்யநின்றோன்றில்லை யொத்திலங்கு—முத்தகஞ்சேர்மென் னகைப்பெருந்தோளி முகமதியின்—வித்தகஞ்சேர்மெல்லெ ஞேக்கமன்றோவென் விழுத்துணையே.” எனவும்வரும்.

பெருந்தோளி அண்மைவிளி.

பாங்கி தலைமகனைத்தேற்றற்குச் செய்யுள்;—"எனக்காவிநின்னை வருத்தியமானவ் விலங்கிழைமான்—றனக்காவியானுந் தடமலைநாட தளையவிழ்பூஞ்—சினைக்காவினீகொய்த தேமென்றழையுஞ் சிலம்பிலந்தண்—சுனைக்காவியுங்கருகத் துவளே விறைசோரநின்றே." எனவும், கையுறையேற்றற்குச் செய்யுள்;—"தோலாக்கரி வென்ற தற்குந்துவள்விற்கு மில்லின்றொன்மைக்—கேலாப்பரிசுள வேயன்றியேலே யிருஞ்சிலம்ப—மாலார்க்கரிய மலர்க்கழலம்பலவன்மலையிற்—கோலாப்பிரசமன்னாட் கையநீதந்த கொய்தழையே." எனவும், கிழவோன் ஆற்றற்குச் செய்யுள்;—"உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ—லொல்லை யுணரப் படும்." எனவும்வரும். "மொய்ம்மால்வரையென்ன விம்மாவெழுமென் முகிழ்முலைக்கு—நம்மால்வரைவினை நாடொறுஞ்சொல்லி நலஞ்சிறக்க—வெம்மாலொருபய னேலாதருந்தழை யேற்றசெங்கை—மைம்மான் விழிக்கொரு கைம்மாறுகண்டிலம் வையகத்தே." இதுவும் அது. இறைவன்றனக்குக் குறைநேர்பாங்கி இறைவிக்கவன்குறையுணர்த்தற்குச் செய்யுள்;—"தாதேய்மலர்க்குஞ்சி யஞ்சிறைவண்டுதெண்டேன்பருகித்-தேதேயெனுந்தில்லை யோன்சேயெனச்சின வேலொருவர்—மாதேபுனத்திடை வாளாவருவர்வந் தியாதுஞ்சொல்லார்—யாதேசெயத்தக்கது மதுவார்குழ லேந்திழையே." எனவும், இறைவி அறியாள்போன்று குறியாள்கூறற்குச் செய்யுள்;—"சங்கந்தரு முத்தி யாம்பெறவான்கழி தான்கெழுமிப்—பொங்கும்புனற்கங்கை தாங்கிப்பொலிகலிப் பாறுலவு—துங்கமலிதலை யேந்தலினேந்திழை தொல்லைப்பன்மா—வங்கமலிகலிநீர் தில்லைவானவ னேர்வருமே." எனவும், பாங்கி இறையோற்கண்டமைபகர்தற்குச் செய்யுள்;—"வளையணி முன்கை வாலெயிற் றின்னகை—யிளைய ராடுந் தளையவிழ் கானற்—குறுந்துறை வினவி நின்ற—நெடுந்தே ரண்ணலைக் கண்டிகும் யாமே." எனவும், பாங்கியைத் தலைவிமறைத்தற்குச் செய்யுள்;—"இறவார்குருகினந் தங்குபைங்கானலி லின்றளவும்—பிறவாததொன்று பிறந்ததுவேபெரு நீருலகிற்—சுறவார்கொடியுயர்த் தோன்றொண்டைமான்கப்பல் சூழ்திருநாட்—டுறைவார்தமக்கிதுவுந் தகுமோசொல்லு மொண்ணுதலே." எனவும், பாங்கி என்னைமறைப்பதென்னெனத் தழாற்குச் செய்யுள்;—"மஞ்சறியா மின்னும் வானறியாத மருந்துமற்றுன்—னெஞ்சறியாத நினைவுமுண்டோவெடு நீருலகி—னஞ்சறியாவன்பி னல்லவருட்டினு நாணியசெம்—பஞ்சறியாத பனிமலர்ச்சீறடிப் பைந்தொடியே."

எனவும், பாங்கிகையுறைபுகழ்தற்குச் செய்யுள்;—"தெவ்வரைமெய் யெரி காய்சிலையாண்டென்னை யாண்டுகொண்ட—செவ்வரைமேனி யன் சிற்றம்பலவன் செழுங்கயிலை—யவ்வரைமேலன்றி யில்லை கண்டாயுள்ள வாறருளா—லிவ்வரைமேற்சிலம்பன் னொளிதிற்றந்த வீர்ந்தழையே." எனவும், தோழி கிழவோன்றுயர்நிலைகிளத்தற்குச் செய்யுள்;—"மைத்தழையாநின்ற மாமிடற்றம்பல வன்கழற்கே—மெய்த்தழையாநின்ற வன்பினன்போல விதிர்விதிர்த்துக்—கைத் தழையேந்திக் கடமாவினுய்க்கையில் வில்லின்றியே—பித்தழையா நிற்பரா லென்னபாவம் பெரியவரே." எனவும், மறுத்தற்கருமை மாட்டற்குச் செய்யுள்;-"நீகண்டனையெனின் வாழலைநேரிழை யம் பலத்தான்—சேய்கண்டனையன்சென் றுங்கோரலவன்றன் சீர்ப் பெடையின்—வாய்வண்டனையதோர் நாவற்கனிநனி நல்கக்கண்டு- பேய்கண்டனையதொன் றாகிநின்றானப் பெருந்தகையே." எனவும், தோழி தலைமகன்குறிப்புவேறாக நெறிப்படக்கூறற்குச் செய்யுள்;— "மேவியந்தோலுடுக் குந்தில்லையான்பொடி மெய்யிற்கையி—லோ வியந்தோன்றுங் கிழிநின்னெழிலென் றுரையுளதாற்—றாவியந் தோகையன் றுயென்னபாவஞ்சொல் லாடல்செய்யான்—பாவியந் தோபனைமா மடலேறக்கொல் பாவித்ததே." எனவும், தோழிதலை வியைமுனிதற்குச் செய்யுள்;—"உள்ளப்படுவன வுள்ளியுரைத்தக் கவர்க்குரைத்து—மெள்ளப்படிறு துணிதுணியேலிது வேண்டுவல் யான்—கள்ளப்படிறர்க் கருளாவரன்றில்லை காணலர்போற்—கொ ள்ளப்படாது மறப்பதறிவிலென் கூற்றுக்களே." எனவும், தலைவி பாங்கிதன்னைமுனிதற்குச் செய்யுள்;—"வாளாதுவந்தெனை வந்தன சொல்லி மணிவரைவேய்த்—தோளாய்புலந்து துயர்வதென்னோ தொன்று தொட்டுவந்தி—நாளாகவொன்றி நயந்தநங்கேண்மையி னுளுமுன்சொற்—கேளாதனவுமுண்டோ வென்கொலோ வென் னைக் கேட்கின்றதே." எனவும், தலைவி பாங்கிதன்கைக்கையுறை யேற்றற்குச் செய்யுள்;—"தீதாகிலென்னன்றி நன்றாகிலென்றிண் சிலம்பர்தந்த—போதார்தழையும் புதுநறுங்கண்ணியும் பூங்குவளைத்- தாதார்மலர்க்குழற் றையனல்லாய்வையஞ் சாற்றுவன—யாதாகி லென்வந்து நின்கையதானதின் றென்கையதே." எனவும், இறை விகையுறையேற்றமை பாங்கி இறைவற்குணர்த்தற்குச் செய்யுள்;— "பாசத்தளையறுத் தாண்டுகொண்டோன்றில்லை யம்பலஞ்சூழ்— தேசத்தனசெம்ம னீதந்தனசென் றியான்கொடுத்தேன்—பேசிற் பெருகுஞ் சுருங்குமருங்குல் பெயர்த்துரைத்துப்—பூசிற்றிலளன் றிச் செய்யாதனவில்லை பூந்தழையே." எனவும், குறியிடங்கூறற் குச் செய்யுள்;—"வானுழைவாளம் பலத்தரன்குன்றென்று வட்கி

வெய்யோன்—ருனுழையாவிரு ளாய்ப்புறநாப்பண்வண் டாரகை போற்—றேனுழைநாக மலர்ந்துதிகழ்பளிங் கான்மதியோன்—கானு ழைவாழ்வுபெற்ருங் கெழில்காட்டுமொர் கார்ப்பொழிலே.'' என வும், குறியிடத்து இறைவியைக்கொண்டுசேறற்குச் செய்யுள்;—"புயல்வளருசன்முன் ருடிப்பொன்னேபின்னைப் போய்ப்பொலியு-மயல்வளர்குன்றினின் றேற்றுமருவி திருவுருவிற்—கயல்வளர்வாட் கண்ணி போதருகாதரந் தீர்த்தருளுந்-தயல்வளர்மேனிய னம்பலத் தான்வரைத் தண்புனத்தே.'' எனவும், குறியிடத்துத்துநீங்கற்குச் செய்யுள்;—"நரல்வேயினநின தோட்குடைந்துக்கநன் முத்தஞ்சிந் திப்—பரல்வேயறையுறைக் கும்பஞ்சடிப்பரன் றில்லையன்னுய்—வ ரல்வேய்தருவனிங் கேநிலுங்கேசென்றுன் வார்குழற்கீர்ங்—குரல் வேயளிமுரல் கொங்கார்தடமலர் கொண்டுவந்தே.'' எனவும்வரும். ஒன்றெனமுடித்தலான் நீங்குந்தோழிதலைவற்குணர்த்தலும் வரவும் பெறும். அதற்குச் செய்யுள்;—"பனியேர்நறுமலர்ப் பாயலிற்கண்வ ளர்பாவையொரு—தனியேகிடந்தழுந் தாயுமிங்கில்லைத் தடஞ்சிலம் பா—முனியேல்விடைகொள்வன் முற்றுநின்காவன் முகிணகைச்செ ங்—கனியேயனையசெவ்வாய் நவ்விமான்விழிக் காரிகையே.'' எனவ ரும். இறையோனிடத்தெதிர்ப்படுதற்குச் செய்யுள்;—"படமாகண ப்பள்ளி யிக்குவடாக்கியப் பங்கயக்க—ணெடுமாலெனவென்னை நீநி னைந்தோநெஞ்சத் தாமரையே—யிடமாவிருக்கலுற் றேதில்லைநின் றவனீர்ங்கயிலை—வடமார்முலைமடவாய் வந்துவைகிற்றிவ் வார்பொ ழிற்கே.'' எனவும், இயைதற்குச் செய்யுள்;—"செழுநீர்மதிக்கண் ணிச் சிற்றம்பலவன் திருக்கழலே—கெழுநீர்மையிற்சென்று கிண் கிணிவாய்க்கொள்ளுங் கள்ளகத்த—கழுநீர்மலரிவள் யானதன்கண் மருவிப்பிரியாக்—கொழுநீர்நறப்பருகும் பெருநீர்மை யளிகுலமே.'' எனவும், புகழ்தற்குச் செய்யுள்;—"மயனூர்விதித்தன்ன மாம தில்சூழ்தஞ்சை வாணன்வெற்பிற்—பயனூர்பயோதரப் பாவையன் னீர்பசும் பொற்குழைதோய்—நயனூரவிந்தத்து நஞ்சமும்வாயிதழ் நல்லமுது—மயனூர்படைத்திலரே லடங்காதவ் வரனுக்குமே.'' எனவும், தலைமகளைத் தலைமகன் விடுத்தற்குச் செய்யுள்;—"கொழுந் தாரகைமுகை கொண்டலம்பாசடை விண்மடுவி—லெழுந்தார்ம திக்கமலம்மெழிறந்தென விப்பிறப்பி—லழுந்தாவகையெனை யாண் டவன்சிற்றம் பலமனையாய்—செழுந்தாதவிழ்பொழி லாயத்துச் சேர்க திருத்தகவே.'' எனவும்வரும. இன்னும் அற்றமில்சிறப்பி னென்றதனுனே தலைவிசோர்தலுங்கொள்க. அதற்குச் செய்யுள்;- "பொன்ருதகாதற் பொறையருமாவி புலம்பினைய—வின்ருருமி ன்றி யிருந்தனன்யானிக் குருந்திடையே—குன்ருதவன்பொடு

கூடியும்வாடியுங் கோலங்கொண்டு—சென்றூர்மணிநெடுந் தேரு டன்போனதென் சிந்தையுமே." எனவரும். பாங்கி தலைவியைச் சார்ந்து கையுறைகாட்டற்குச் செய்யுள்;—"பொன்னனையான்றில் லைப் பொங்கரவம்புன் சடைமிடைந்த—மின்னனையானருண் மேவ லர்போன்மெல் விரல்வருந்த—மென்னனையாய்மறி யேபறியேல் வெறி யார்மலர்க—ளின்னனயான்கொணர்ந்தேன் மணந்தாழ்குழற் கேய்வனவே." எனவும், பாங்கி தலைவியைப்பாங்கிற்கூட்டற்குச் செ ய்யுள்;—"அறுகாணிறைமல ரைம்பாணிறையணிந் தேனணியார்—துறுகான்மலர்த்தொத்துத் தோகைதொல்லாயமெல்லப்புகுக—சிறு கான்மருங்குல் வருந்தாவகைமிக வென்சிரத்தி—னுறுகால்பிறர்க்க ரியோன் புலியூரன்ன வொண்ணுதலே." எனவும், பாங்கி தலைவியை நீங்கி ஓம்படைசாற்றற்குச் செய்யுள்;—"பெடைநின்றுகாண வுட னின்றதோகை பெருநடஞ்செய்—புடைநின்றசோலைப் பொதியின் வெற்பாபொற் குழைதொடருங்—கடைநின்றுகுபுனற் கண்ணிக்கு நின்புவி காவலுக்கு—மிடைநின்றபாவிக்கு மேதமுறுவண்ண மெண் ணுகவே." எனவும், விருந்துவிலக்கற்குச் செய்யுள்;—"தழங்கும ருவியெஞ் சீறூர்பெரும விதுமதுவுங்—கிழங்குமருந்தி யிருந்தெம் மொடின்று கிளர்ந்துகுன்றர்—முழங்குங்குரவை யிரவிற்கண்டே குக முத்தன்முத்தி—வழங்கும்பிரானெரி யாடிதென்றில்லை மணி நகர்க்கே." எனவும், விருந்திறைவிரும்பற்குச் செய்யுள்;—"சூதார் வனமுலைத் தோகையன்னீருங்கள் செங்கைதொட்ட—தியாதாயி னுமெனக் கின்னமுதாமெல்லை சாயுமெல்லை—தாதார்மலர்ப்பொ ழிற் றங்கலுமாமிங்ங னுங்கள்வெற்புக்—காதார்நறுங்குழைக் கான வர்வானவர் காவலின்றே." எனவும்வரும்.

இவற்றுள், இயைதலும் அதன்பாற்படும் இடத்தெதிர்ப்படுத லும் புகழ்தலும் விடுத்தலும் விருந்திறைவிரும்பலுமாகிய தலைவன் கூற்றுக்கள் ஐந்தும் இயைதனிமித்தமாகிநிகழுந் தோழிகூற்று முப் பத்துநான்குமாக ஈண்டைக்கு உரிய புணர்தலும் புணர்தனிமித்தமு மாகிய கிளவிகள் முப்பத்தொன்பதுமேயன்றித் தோழிகூற்று நிகழ் தற்குநிமித்தமாகிய ஏனைத் தலைவன்கூற்றுப்பதினெட்டுந் தலைவிகூ ற்று நான்குமாக ஈண்டைக்கு உரியவல்லவாகிய இருபத்திரண்டும் அனுவாதமுகத்தான் ஈண்டேநிகழப்பெறுதலின் இவற்றையும் அவற் றோடு தலைப்பெய்து இவ்வறுபத்தொன்றும் பாங்கியிற்கூட்டத்து விரியென ஒருங்குதொகுத்தோதினர். அற்றேல், ஆசிரியர் தொல் காப்பியனார் தலைவன்கூற்றுந் தலைவிகூற்றும் பாங்கிகூற்றுந் தனித்த னியெடுத்தோதுபவாகலின் இவர்பாங்கிகூற்றோடு ஏனையிருதிறத்

தோர்கூற்றையும் விரவித்தொகுத்தோதியது மாறுகொளக்கூறலாம் பிறவெனின், ஆகாது; இது புடைநூலாகலினென்க. இவ்வாறு வந்துழியெல்லாம் இக்கடாவிடைகளை மத்திமதீபமாக்கி முன்னும் பின்னும் உய்த்துரைத்துக்கொள்க.

தலைவனுட்கோள்சாற்றல் முதலாகப் பாங்கியாற்றுவித்தகற்றல் ஈறாகச்சொல்லப்பட்ட இருபதனுட் தலைவன்கூற்றாயினவெல்லாம் இரந்துபின்னிற்றற்குந் தோழிகூற்றாயினவெல்லாஞ் சேட்படுத்தற்கும், இரந்துகுறைபெறாது வருந்தியகிழவோன் மடலேபொருளெனமதித்தல் முதலாகக் கொண்டுநிலைகூறல் ஈறாகச்சொல்லப்பட்ட ஏழனுட் தலைவன்கூற்றாயினவெல்லாம் மடற்கூற்றிற்குந் தோழிகூற்றாயினவெல்லாம் மடல்விலக்கிற்குந், தலைவியிளமைத்தன்மை பாங்கி தலைவற்குணர்த்தல் முதலாகக் கிழவோனாற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஒன்பதனுட் தோழிகூற்றாயினவெல்லாம் உடன்படற்குந் தலைவன் கூற்றாயினவெல்லாம் மடற்கூற்றொழிதற்கும், இறைவன்றனக்குக்குறைநேர்பாங்கி இறைவிக்கவன்குறையுணர்த்தல் முதலாகப் பாங்கிகையுறைபுகழ்தல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறனுட் பாங்கிகூற்றாயினவெல்லாம் மெலிதாகச்சொல்லிக்குறைநயப்பித்தற்குந் தலைவிகூற்றாயினவெல்லாம் வலிதாகச்சொல்லி மறுத்தற்குந், தோழிகிழவோன்றுயர்நிலைகிளத்தல் முதலாகக் கையுறையேற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறனுட் தோழிகூற்றாயினவெல்லாம் வலிதாகச்சொல்லிக் குறைநயப்பித்தற்குந் தலைவிகூற்றாயினவெல்லாம் மெலிதாகச்சொல்லிக் குறைநயத்தற்கும் இறைவிகையுறையேற்றமை பாங்கி இறைவற்குணர்த்தல் முதலாகத் தலைவன் விருந்திறைவிரும்பல் ஈறாகச் சொல்லப்பட்ட பதின்மூன்றனுட் தோழிகூற்றாயினவெல்லாங் கூட்டற்குந் தலைவன்கூற்றாயினவெல்லாங் கூடற்குங் கூட்டற்கும் வேட்டற்கும் உரியவெனக் கொள்க.

ருகO. கூட்டல் கூடல் பாங்கிற் கூட்டல்
வேட்டலென் றொருநால் வகைத்தே பகற்குறி.

நிறுத்தமுறையானே பகற்குறி கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். கூட்டல் முதலாக வேட்டல் ஈறாக நான்குவகையினையுடைத்துப் பகற்குறி. எ - று. (கரு அ)

ருகக. குறியிடங் கூறன் முதலாப் பெறலரும்
விருந்திறை விரும்ப லீருப் பொருந்தப்
பகர்ந்தபன் னிரண்டும் பகற்குறி விரியே.

இது பகற்குறிவிரி இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ-ள். குறியிடங்கூறல் முதலாக விருந்திறைவிரும்பல் ஈறாக மேற்பாங்கிற்கூட்டத்துள் எடுத்தோதப்பட்ட பன்னிரண்டும் பகற்குறிவிரியாம். எ-று.

உதாரணம் மேற்காட்டியவெனக் கொள்க. (கருகூ)

ருகஉ. இரங்கல் வன்புறை யிற்செறிப் புணர்த்தலென்
றொருங்கு மூவகைத் தொருசார் பகற்குறி.

இஃது ஒருசார் பகற்குறிவகை இத்துணைத்தென்கின்றது.

இ-ள். இரங்கலும் வன்புறையும் இற்செறிப்புணர்த்தலு மென மூன்றுவகையினையுடைத்து ஒருகூற்றுப்பகற்குறி. எ-று.()

ருகரு. கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்
பொழுதுகண் டிரங்கலும் பாங்கி புலம்பலுந்
தலைவ னீடத் தலைவி வருந்தலுந்
தலைவியைப் பாங்கி கழறலுந் தலைவி
முன்னிலைப் புறமொழி மொழிதலு மின்னுயிர்ப்
பாங்கியொடு பகர்தலும் பாங்கியச் சுறுத்தலு
நீங்கற் கருமை தலைவிநினைந் திரங்கலுந்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலுஞ்
சிறைப்புற மாகச் செறிப்பறி வுறுத்தலு
முன்னிலைப் புறமொழி மொழிந்தறி வுறுத்தலு
முன்னின் றுணர்த்தலு முன்னின் றுணர்த்தி
யோம்படை சாற்றலு மேம்படு கிழவோ
றஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தலு
மென்றவீ ரேழு மெல்லுக்குறி விரியே.

இஃது ஒருசார் பகற்குறிவிரி இத்துணைத்தென்கின்றது.

இ-ள். கிழவோன்பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண் டிரங்கல் முதலாக க்கிழவோன்றஞ்சம்பெறாது நெஞ்சொடுகிளத்தல்

ஈறுகச் சொல்லப்பட்ட பதினுன்கும் ஒருசார் பகற்குறிவிரியாம். எ - று.

கிழவோன்பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண்டிரங்கற்குச் செய்யுள்;—“பகலோன்கரந்தனன் காப்பவர்சேயர்பற் றற்றவர்க்குப்—புகலோன்புகுநர்க்குப் போக்கரியோனெவ ரும்புகலத்—தகலோன்பயிறில்லைப் பைம்பொழிற்சேக்கைகண் ணேக்கினவா—லகலோங்கிருங்கழிவாய்க் கொழுமீனுண்ட வன்னங்களே.” எனவும், பாங்கிபுலம்பற்குச் செய்யுள்;—“பொன்னூர்நறுமலர்ப் புன்னையங்கானற் புளினந்தங்கி—யன்னூண்மணந்து மறந்தவர்போல வருக்கன்சென்ற—பின்னுவதன்முன்ன மேசெக்கர்மாலை பிறந்ததினி—யென்னுகுமென்றறியே னிளங்கோதை யிளங்கொடிக்கே.” எனவும், தலைவனீடத் தலைவிவருந்தற்குச் செய்யுள்;—“மூவறநீஇய வருண்முதலோன்றில்லைச் செல்வன்முந்நீர்—நாவறநீஇயவிந் நாணிலந்துஞ்சு நயந்தவின்பச்—சேவறநீஇச்சென்று தான்றுஞ்சும் யான்றுயி லாச்செயிரெங்—காவறநீஇயவற் கோதாதளிய களியன்னமே.” எனவும், தலைவியைப் பாங்கிகழறற்குச் செய்யுள்;—“சிறந்தார்தெரிந்த செழுந்தமிழ்வாணன்றென் மாறைவெற்பர்—துறந்தாரெனையென்று சொல்லுவதேனிந்தத் தொல்லுலகிற்—பிறந்தாரெவர்க்கும் பிரிவுளதால்வெய்ய பேரமர்க்கட்—புறந்தாழ்கரிய குழற்செய்யவாயைய பூங்கொடியே.” எனவும், தலைவி முன்னிலைப்புறமொழிமொழிதற்குச் செய்யுள்;-“யாவரு மறிகிலர் கழறு வோரே—தாயின் முட்டை போல வுட்கிடந்து—சாயி னல்லது பிறிதெவ னுடைத்தே—யாமைப் பார்ப்பி னன்ன—காமங் காதலர் கையற விடினே.” எனவும், தலைவி பாங்கியொடுபகர்தற்குச் செய்யுள்;—“புன்புலத் தமன்ற செறியிலை நெரிஞ்சி—கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்—கினிய செய்தியல் காதல—ரின்னு செய்த னேமே நெஞ்சே.” எனவும், தலைவியைப் பாங்கியஞ்சியச்சுறுத்தற்குச் செய்யுள்;-“மனங்காவலருழை வைத்துமென்கூர்வளை வாய்ப்பசும்பு—ளினங்காவன்மாற்றிய வேனல்கண்டாலன்னை யெப்படியுங்—கனங்காவல்கொண்ட கழையிருஞ்சாரற் கனங்குழைநின்—புனங்காவன்மாற்றுமதன்பின்னர்க்காவலும் பூணும்வந்தே.” எனவும், நீங்கற்கருமை தலைவிநினைந்திரங்கற்குச் செய்யுள்;—“இமையாதவேழமொ ரெட்டுங்குலகிரி யேழுமுற்றுஞ்—சுமையாறவந்தரு ளுந்தொண்டைமான் கப்பற் ருேகையன்னீ—ரமையாதவன்புதந் தார்பிரிந்தாலரி தாற்றுவதென்—றுமையாளறிந்தல்லவோ சிவந்தாடன் ஞெருபக்கமே.” எனவும், தலைவிக்கவன்வரல் பாங்கிசாற்றற்குச் செய்யுள்;—“சே

ணூர்கொடிநெடுந் தேர்மணியோசை செவிப்படுமிவ்—வாணுகமேல் வருகின்றனர்போலுவர் வந்துநம்மைக்—காணுதலமருந் துன்பமுங் காதலுங் காணவிங்ங—னீணுகநீழன் மறைகுவம்போது நிரைவளை யே." எனவும், தோழி சிறைப்புறமாகத் தலைமகட்குச் செறிப்பறிவு றுத்தற்குச் செய்யுள்;—"இயலுங்கலவ மயிலுமென்மானு மினக்கி ளியு—முயலுந்தவங்கள் முடிவதுபோலு முதுமறலி—செயலுங்கம லமுஞ் செங்கழுநீருஞ் செழியர்வெற்றிக்—கயலும்பொருகணல்லா யின்றுநாளைக் கடிபுனைந்தே."எனவும்,தோழி முன்னிலைப்புறமொழி மொழிந்திற்செறிப்புணர்த்தற்குச் செய்யுள்;-"பயில்காலபந்திப் புய லன்னவோதியைப் பைங்கிள்ளைகாள்—மயில்காள்சிறிது மறக்கப் பெறீர்தஞ்சை வாணன்வெற்பிற்—குயில்காளமெங்கு மியம்புதண் சோலையிற் கூடியின்ப—மயில்காளவெங்கதிர்வே லன்பர்சால வயர் ப்பினுமே." எனவும், பாங்கி தலைவன்முன்னின்றிற்செறிப்புணர்த் தற்குச் செய்யுள்;—"மாவரை வெற்ப வணங்கு குரலேனல்—காவ லியற்கை யொழிந்தேம்யாந்—தூவருவி—பூக்கண் கழூஉம் புறவிற் ருற் பொன்விளையும்—பாக்க முதுவெம் மிடம்." எனவும், பாங்கி த லைவன்முன்னின்றிற்செறிப்புணர்த்தி ஓம்படைசாற்றற்குச் செய் யுள்;—"காவைப்பொருவுசெங் கைக்கருமாணிக்கன் கப்பல்வன் னிக்—கோவைப்பொருசெய்ய வேற்கொற்றவாநின் குறைநயந்து— மாவைக்குளிர்நிழ லாக்கியவென்னை மறப்பினுமென்—பூவைக்குநல் லுயிர்நீ யுடம்பேகொண்டு போகின்றதே." எனவும், தலைவன்றஞ்சம் பெருது நெஞ்சொடுகிளத்தற்குச் செய்யுள்;—"ஏவலரேவிழி மாந்த ளிர்மேனியு ரேனலினிக்—காவலரேவனங் காத்தனநாங்க ளியா னைசெம்பொ—னுவலரேபெற நல்குங்கைமேக நறுங்குவளை—மாவ லரேதொடையான் றஞ்சைவாணன் வரையில்வந்தே." என வும் வரும்.

இவற்றுட், கிழவோன்பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கலும் பாங்கிபுலம்பலுந் தலைவனிடத் தலைவி வருந்தலும் முன்னிலைப்புறமொழிமொழிதலும் பாங்கியொடுபகர்தலும் நீங்கற்க ருமை தலைவிநினைந்திரங்கலுங் கிழவோன்றஞ்சம்பெருது நெஞ்சொ டுகிளத்தலுமாகிய ஏழும் இரங்கற்கும், இவற்றுட் கிழவோன்றஞ்சம் பெருது நெஞ்சொடுகிளத்தலொழித்து ஏனைய ஆறும் வரைதல் வேட்கைக்குந், தலைவியைப்பாங்கிகழறலுந் தலைவியைப்பாங்கியஞ்சி யச்சுறுத்தலுந் தலைவிக்கவன்வரல் பாங்கிசாற்றலுமாகிய மூன்றும் வன்புறைக்குஞ், சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தலும் முன்னி லைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தலும் முன்னின்றுணர்த்தலும் முன்

னின்றுணர்த்தியோம்படைசாற்றலுமாகிய நான்கும் இற்செறிப்புணர்த்தற்கும் உரியவெனக் கொள்க. வரைவுகடாதற்குமாம். (கசக)

ருகச. விலக்கல் சேறல் கலக்க மென்றாங்
கிகப்பின் மூ வகைத்தே பகற்குறி யிடையீடு.

இது நிறுத்தமுறையானே பகற்குறியிடையீட்டுவகை இத்துணைத்தென்கின்றது.

இ-ள். விலக்கலுஞ் சேறலுங் கலக்கமுமென மூன்றுவகையினையுடைத்தாம் பகற்குறியிடையீடு. எ-று. (கசஉ)

ருகரு. இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலு
மிறைவியைக் குறிவரல் விலக்கலு மிறைமக
ளாடிட நோக்கி யழிதலும் பாங்கி
யாடிடம் விடுத்துக்கொண் டகறலும் பின்னு
ணெடுந்தகை குறிவயி னீடுசென் றிரங்கலும்
வறுங்கள நாடி மறுகலுங் குறுந்தொடி
வாழூர் நோக்கி மதிமயங் கலுமெனு
மேழும் பகற்குறி யிடையீட்டு விரியே.

இது பகற்குறியிடையீட்டுவிரி இத்துணைத்தென்கின்றது.

இ-ள். இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல் முதலாகக் குறுந்தொடிவாழூர்நோக்கிமதிமயங்கல் ஈறாகச் சொல்லப்பட்ட ஏழும் பகற்குறியிடையீட்டுவிரியாம். எ-று.

இறைவனைப் பாங்கிகுறிவரல்விலக்கற்குச் செய்யுள்;—"வடிவார்வயற்றில்லை யோன்மலையத்துநின் றும்வருதேன்—கடிவார்களிவண்டு நின்றலர்தூற்றப் பெருங்கணியார்—நொடிவார்நமர்க்கினி நோதகயானுமக் கென்னுரைக்கேன்—றடிவார்தினையெமர் காவேம் பெருமவித் தண்புனமே." எனவும், பாங்கி இறைவியைக்குறிவரல் விலக்கற்குச் செய்யுள்;—"அதுநாமறிந்தில மன்னையிப்போதணி நீர்த்துவரைத்—துதிநாவலர்புக ழுந்தொண்டைமான்வெற்பிற் றேண்மெலிவும்—புதுநாண்மதிநுதல் வண்ணமும்பார்த்துப் புகையுயிர்த்தா—ளிதுநாமினியன்னமே வண்டலாடு மிடமல்லவே." எனவும், இறைமகள் ஆடிடநோக்கியழிதற்குச் செய்யுள்;—"பரிவுசெய்தாண்டம் பலத்துப்பயில்வோன் பரங்குன்றின்வா—யருவிசெய்தாழ்பு

னத் தைவனங்கொய்யவு மிவ்வனத்தே—பிரிவுசெய்தாலரி தே கொள்கைபேயொடு மென்னும்பெற்றி—யிருவிசெய்தாளி னிருந் தின்றுகாட்டு மிளங்கிளியே.” எனவும், பாங்கி ஆடிடம்விடுத்துக் கொண்டகறற்குச் செய்யுள்;—“கணியார்கருத்தின்று முற்றிற்றி யாஞ்சென்றுங் கார்ப்புனமே—மணியார்பொழில்காண் மறத்திர் கண்டீர்மன்னு மம்பலத்தோ—னணியார்கயிலை மயில்காளயில்வே லொருவர்வந்தாற்—றுணியாதன துணிந்தா ரென்னுநீர்மைகள் சொல்லுமினே.” எனவும்,பின்னுணெடுந்தகை குறிவயினீடுசென்றி ரங்கற்குச் செய்யுள்;-“பொதுவினிற்றீர்த்தென்னை யாண்டோன்பு லியூரரன்பொருப்பே-யிதுவெனிலென்னென் றிருக்கின்றவாறெம் மிரும்பொழிலே—யெதுநுமக்கெய்திய தென்னுற்றனிரறை யீண் டருவி—மதுவினிற்கைப்புவைத்தா லொத்தவாமற்றிவ் வான்புன மே.” எனவும், தலைமகன் வறுங்களநாடிமறுகற்குச் செய்யுள்;— “தொடைவந்ததண்ணந் துழாய்த்தொண்டைவேந்தன் றுவரைவெற் பி—னிடைவந்தகானவ ரேகென்றபோதி லிருங்கயற்கட்—கடை வந்துகுபுனற் கச்சிளநீர்புக்க கால்களங்ங—னடைவந்ததோ மயில் காளென்னைவாழ்வித்த நன்னுதற்கே.” எனவும், தலைமகன் தலைம கள்வாழுமூர்நோக்கி மதிமயங்கற்குச் செய்யுள்;—“ஆனந்தமாக்கட லாடுசிற்றம்பல மன்னபொன்னின்—றேனுந்துமாமலைச் சீறூரிது செய்ய லாவதில்லை—வானுந்துமாமதி வேண்டியழுமழப் போலு மன்னே—நானுந்தளர்ந்தன னீயுந்தளர்ந்தனை நன்னெஞ்சமே.” எனவும் வரும்.

இவற்றுள் முன்னைய இரண்டும் விலக்கற்கும் பாங்கி ஆடிடம் விடுத்துக்கொண்டகறலாகிய ஒன்றுஞ் சேறற்கும் ஏனையநான்குங் கலக்கத்திற்கும் உரியவாம் என்றவாறு.

உரையிற்கோடலாற், பாங்கி ஆடிடம்விடுத்துக்கொண்டக றற்பின்னர் அவனுருவுவெளிப்பட இரங்கலும் வரப்பெறும். அதற் குச் செய்யுள்;—“அழியுமிரும்புனமும் மழியாமண லாழிதொட்ட- சுழியுமறிந்த விதணமும்பார்த்துத் துணைவிழிநீர்—பொழியவிருந்து புலம்புமென்னுவியும் பாவியெம்மூர்—வழியுமறிந்திங்ஙனே வந்த வாவெம் முழைவள்ளலே.” எனவரும். (கசங)

ருகசா. வேண்டன் மறுத்த லுடன்படல் கூட்டல்
கூடல் பாராட்டல் பாங்கிற் கூட்ட
லுயங்க னீங்கலென் றென்பது வகைத்தே
யியம்பிப் போந்த விரவுக் குறியே.

இது நிறுத்தமுறையானே இரவுக்குறிவகை இத்துணைத் தென்கின்றது.

இ - ள். வேண்டல் முதலாக நீங்கல் ஈருகச் சொல்லப்பட்ட ஒன்பதுவகையினையுடைத்து மேற்சொல்லிப்போந்த இரவுக்குறி. எ - று. (கசச)

ருகஎ. இறையோ னிருட்குறி வேண்டலும் பாங்கி
நெறியின தருமை கூறலு மிறையோ
னெறியின தெளிமை கூறலும் பாங்கி
யவனாட் டணியியல் வினாதலுங் கிழவோ
னவனாட் டணியியல் வினாதலு மவற்குத்
தன்னாட் டணியியல் பாங்கி சாற்றலு
மிறைவிக் கிறையோன் குறியறி வுறுத்தலு
நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தலு
நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத் தலுமவ
ணோர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தலுங்
குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதலு
மிறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தலு
மவட்கொண்டு சேறலுங் குறியுய்த் தகறலும்
வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதலும்
பெருமக ளாற்றின தருமைநினைந் திரங்கலும்
புரவலன் றேற்றலும் புணர்தலும் புகழ்தலு
மிறைமக ளிறைவனைக் குறிவிலக் கலுமவ
னிறைவியை யில்வயின் விடுத்தலு மிறைவியை
யெய்திப் பாங்கி கையுறை காட்டலு
மிற்கொண் டேகலும் பிற்சென் றிறைவனை
வரவு விலக்கலும் பெருமகன் மயங்கலுந்
தோழி தலைமக டுயர்கிளந்து விடுத்தலுந்
திருமகட் புணர்ந்தவன் சேறலு மென்றாங்
கிருபத் தேழு மிரவுக்குறி விரியே.

இஃது இரவுக்குறிவிரி இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ - ள். இறையோனிருட்குறிவேண்டல் முதலாகத் திரும கட்புணர்ந்தவன்சேறல் ஈருகச் சொல்லப்பட்ட இருபத்தேழும் இர வுக்குறிவிரியாம். எ - று.

இறையோனிருட்குறிவேண்டற்குச் செய்யுள்;—"மருந்துநம மல்லற் பிறவிப்பிணிக்கம் பலத்தமிர்தா—யிருந்தனர்குன்றினின் றெங்குமருவிசென் றேர்திகழப்—பொருந்தினமேகம் புதைந்திரு ளுங்கும் புனையிறும்பின்—விருந்தினன்யானுங்கள் சீறூரதனுக்கு வெள்வளையே." எனவும், பாங்கி நெறியினதருமைகூறற்குச் செய் யுள்;—"விசும்பினுக்கேணி நெறியன்னசின்னெறி மென்மழைதூங்—கசும்பினிற்றுன்னி யளைநுழைந்தாலொக்கு மையமெய்யே யிசும்பினிற்சிந்தைக்கு மேறற்கரிதெழி லம்பலத்துப்—பசும்பணிக் கோடு மிலைத்தான்மலையத்தெம்வாழ்பதியே."எனவும்வரும். இசும்பு ஏற்றிழிவு. தலைவன் நெறியினதெளிமைகூறற்குச் செய்யுள்;-"மர வுக்குமெல்லியல்சாயலுள்ளேயுண் டறவிருண்ட-விரவுக்கினிய திரு முகந்தோன்று மெடுத்தவெண்ணைக்—கரவுக்கடியுண்ட மால்கருமா ணிக்கன் கப்பலன்னு—யுருமுக்குநீதந்த காமவெந்தீயுண்டெ னுள் ளத்திலே." எனவும், பாங்கி அவனுட்டணியியல்வினுதற்குச் செய் யுள்;—"வரையென்றெருகா லிருகால்வளைய நிமிர்த்துவட்கா— நிரையன்றழலெழ வெய்துநின்றேன்றில்லை யன்னநின்னூர்—வி ரையென்னமென்னிழ லென்னைவெறியுறு தாதிவர்போ—துரை யென்னையோ சிலம்பா நலம்பாவி யொளிர்வனவே." எனவும், தலை மகன் அவளுட்டணியியல்வினுதற்குச் செய்யுள்;-"செம்மலராபிரந் தூஉய்க்கருமாறிருக் கண்ணணியு—மொய்மலரீர்ங்கழ லம்பலத் தோன்மன்னு தென்மலையத்—தெம்மலர்சூடிநின் றெச்சாந்தணிந் தென்ன நன்னிழல்வா—யம்மலர்வாட்கணல்லா யெல்லிவாய்நும ராடுவதே." எனவும், அவற்குத் தன்னுட்டணியியல் பாங்கிசாற்றற் குச் செய்யுள்;—"பனைவளர்கைமாப் படாத்தம்பலத்தரன் பாதம் விண்ணோர்—புனைவளர்சாரற் பொதியின்மலைப்பொலி சந்தணிந்து- சுனைவளர்காவிகள் சூடிப்பைந்தோகை துயில்பயிலுஞ்—சினைவளர் வேங்கைகள் யாங்கணின்றுடுஞ் செழும்பொழிலே." எனவும், பாங்கி இறைவிக்கிறையோன்குறையறிவுறுத்தற்குச் செய்யுள்;— "மோட்டங்கதிர்முலை பங்குடைத்தில்லைமுன் னேன்கழற்கே— கோட்டந்தருநங் குருமுடிவெற்பன் மழைகுழுமி—நாட்டம்புதைத் தன்ன நள்ளிருளுக நடுங்கச்சிங்கம்—வேட்டந்திரிசரிவாய் வரு வான்சொல்லு மெல்லியலே." எனவும், நேராதிறைவி நெஞ்சொடு கிளத்தற்குச் செய்யுள்;—"செழுங்கார்முழவதிர் சிற்றம்பலத்துப்

பெருந்திருமால்—கொழுங்கான்மலரிடக் கூத்தயர்வோன்கழ லேத் தலர்போன்—முழங்காரரிமுரண் வாரணவேட்டைசெய் மொய்யி ருள்வாய்—வழங்காவதரின் வழங்கென்றுமோவின்றெம் வள்ளலே யே." எனவும், நேரிழை பாங்கியொடுநேர்ந்துரைத்தற்குச் செய் யுள்;—"ஓங்குமொருவிடமுண்டம்பலத்தும்ப ருய்யவன்று—தாங் குமொருவன் றடவரைவாய்த்தழங் கும்மருவி—வீங்குஞ்சுனைப்பு னல் வீழ்ந்தன்றழுங்கப் பிடித்தெடுத்து—வாங்குமவர்க்கறியேன் சிறியேன்சொல்லும் வாசகமே." எனவும், நேர்ந்தமைபாங்கி நெடுந் தகைக்குரைத்தற்குச் செய்யுள்;—"ஏனற்பசுங்கதி ரென்றூழ்க்க ழிய வெழிலியுன்னிக்—கானக்குறவர்கள் கம்பலைசெய்யும்வம் பார்சி லம்பா—யானிற்றையாமத்து நின்னருண்மேனிற்க லுற்றுச்சென் றேன்—றேனக்கொன்றையன் றில்லையுரர்செல்லுஞ் செல்லல்க ளே." எனவும், பாங்கி தலைமகனைக் குறியிடத்துநிறுத்திவந்து தாய் துயிலறிதற்குச் செய்யுள்;—"கூடாரரணெரி கூடக்கொடுஞ்சிலை கொண்டவண்டன்—சேடார்மதின்மல்லற் றில்லையன்ஞய்சிறு கட் பெருவெண்—கோட்டார்கரிகுரு மாமணியூசலைக் கோப்பழித்துத்— தோடார்மதுமலர் நாகத்தைநூக்குநஞ் சூழ்பொழிற்கே." எனவும், பாங்கி தலைவிக்குத் தலைவன்வரவறிவுறுத்தற்குச் செய்யுள்;—"முன் னுமொருவ ரிரும்பொழின்மூன்றிற்கு முற்றுமிற்றூற்—பின்னுமொ ருவர்சிற் றம்பலத்தார்தரும் பேரருள்போற்—றுன்னுமொரின்ப மென் றேகைதந்தோகைக்குச் சொல்லுவபோன்—மன்னுமரவத் தவாய்த் துயில்பேரு மயிலினமே." எனவும், பாங்கி தலைவியைக்கு றியிடத்துக்கொண்டுசேறற்குச் செய்யுள்;—"விண்ணுக்குமேல்வி யன் பாதலக்கீழ்விரி நீருடுத்த—மண்ணுக்குநாப்ப ணயந்துதென் றில்லைநின் றோன்மிடற்றின்—வண்ணக்குவளை மலர்கின்றனசின வாண்மிளிர்நின்—கண்ணுக்குமேற்கண்டுகொண் டுவாழுங் கரு ங்குழலே." எனவும், பாங்கி தலைவியைக்குறியிடத்துய்த்து நீங்கற் குச் செய்யுள்;—"நந்தீவரமென்னு நாரணனுண்மலர்க் கண்ணிற் கெஃகந்—தந்தீவரன்புலி யூரனையாய்தடங் கண்கடந்த—விந்தீவர மிவை காணின்னிருள்சேர் குழற்கெழில்சேர்—சந்தீவரமுறியும் வெ றிவீயுந் தருகுவனே." எனவும், தலைவன் தலைவியைக்குறியிடத்தெ திர்ப்படுதற்குச் செய்யுள்;—"காமரைவென்றகண் ணோன்றில்லைப் பல்கதி ரோனடைத்த—தாமரையில்லி னிதழ்க்கதவந்திறந் தோத மியே—பாமரைமேகலை பற்றிச்சிலம்பொதுக் கிப்பையவே—நாம ரையாமத்தென்றோ வந்துவைகி நயந்ததுவே." எனவும், தலைவி ஆற்றினதருமை நினைந்திரங்கற்குச் செய்யுள்;—"பெயல்கான் மறைத்தலின் விசும்புகா ணலரே—நீர்பரந் தொழுகலி னிலங்கா

ணலரே—யெல்லை சேறலி னிருள்பெரிது பட்டன்று—பல்லோர் துஞ்சும் பானாட் கங்குல்-யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப—வேங்கை கமழுமெஞ் சிறுகுடி—யாங்கறிந் தனையோ நோகோ யானே." எனவும், புரவலன்றேற்றற்குச் செய்யுள்;—"மேகஞ்சிறந்த குழனிழலோடிய வேனெடுங்கண்-மாகஞ்சிறந்த மதிநுதலாய்மல்கு மல்குலுக்கு—மாகஞ்செறிந்த முலைக்குமுன்றோற்ற வடலெயிற்று-நாகங்களென்னை நலிவுசெய்யாவுங்க ணண்பனென்றே." எனவும், புணர்தற்குச் செய்யுள்;—"தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா—லம்மா வரிவை முயக்கு." எனவும் வரும். "அரியார்மதர்விழி யால மன்னீர்சொல் லமுதமன்னீர்—புரியார்தளையவிழ் பூமலர்க்காவிற் புணர்ந்திங்ஙனே—தரியாதவன்பு தயங்கமுயங்குந் தகைபகலும்—பிரியாமலிங்கெவர்க்குந் தெரியாவிஞ்சை பெற்றிலமே." இதுவும் அது. புகழ்தற்குச் செய்யுள்;—"அழுந்தேனரகத் தியானென்றிருப் பவந்தாண்டுகொண்ட—செழுந்தேன்றிகழ்பொழிற் றில்லைப்புறவிற் செறுவகத்த—கொழுந்தேன்மலர்வாய்க் குமுதமிவள்யான் குரூஉச் சுடர்கொண்-டெழுந்தாங்கதுமலர்த்தும் முயர்வானத் திளமதியே." எனவும், தலைவி தலைவனைக்குறிவிலக்கற்குச் செய்யுள்;—"மூரற்க திர்முத்த வார்முலையாவியின் மூழ்கநனி—வாரற்கநீதஞ்சை வாணன் வெற்பாவய மாவழங்கும்—வேரற்கடிய கவலையி னூடு வெயிலவர்க் குஞ்—சாரற்கருமையதா யிருள்கூருநஞ் சாரலிலே." எனவும், தலைமகன்றலைவியை இல்வயின்விடுத்தற்குச் செய்யுள்;-"சுரும்புறுநீலங் கொய் யற்றமிகின்று துயில்பயின்மோ-வரும்பெறற்றோழியொ டாயத்துநாப்ப ணமரரொன்னா—ரிரும்புறுமாமதிள் பொன்னிஞ்சி வெள்ளிப் புரிசையன்றோர்—துரும்புறச்செற்றகொற் றத்தெம்பிரான் றில்லை சூழ்பொழிற்கே." எனவும், பாங்கி இறைவியையெய்திக் கையுறைகாட்டற்குச் செய்யுள்;—"செஞ்சேல்பொருகுழை சேர்க் குங்குவளையுந் தேனிரங்கு—மஞ்சேர்குழற்கணி மவ்வலுங்கொய் தனன் வந்தனன்முன்—னஞ்சேலரிவையஞ் சேலடியேன்விட் டகன்றதற்கு—நெஞ்சேதுபட்டதுநீ யேதுபின்னை நினைந்தனையே." எனவும், பாங்கிதலைவியையிற்கொண்டேகற்குச் செய்யுள்;-"புழைக் கானறுங்குவளைச்செவ்விப்போதும் புயலகன்ற—குழற்கானமவ்வலுங் கொய்தனமாயிற் கொடியவன்னை—யழற்கால்விழிதுயி னீத்துணராமுன் னடைகுவம்யாங்—கழற்கான்மதன்கணைபோல் விழியார்தங் கடிமனைக்கே." எனவும், பாங்கிதலைவனை வரவுவிலக்கற் குச் செய்யுள்;—"நற்பகற்சோம னெரிதருநாட்டத்தன் றில்லையன்ன—விற்பகைத்தோங்கும் புருவத்திவளின்மெய் யேயெளிதே—வெற்பகச்சோலையின் வேய்வளர்தீச்சென்று விண்ணினிறை—கற்ப

கச்சோலைகதுவுங்கன்றுடவிக் கல்லதரே." எனவும், தலைமகன்ம யங்கற்குச் செய்யுள்;—"பைவாயரவரை யம்பலத்தெம்பரன் பைங் கயிலைச்—செவ்வாய்க்கருங்கட் பெரும்பணைத்தோட்சிற் றிடைக் கொடியை-மொய்வார்கமலத்தின் முற்றிழையின்றென்முன் னைத்த வத்தா—லிவ்வாறிருக்குமென்றே நிற்பதென்றுமெ னின்னுயிரே." எனவும், தோழி தலைமகடுயர்கிளந்துவிடுத்தற்குச் செய்யுள்;—"இ டிக்கொத்தொளிரு மிலங்கெயிற்றுளி யிபமருப்பை—யொடிக்கத் திரியு முழுவையஞ்சார லொருதனியே—வடிக்கச்சுடர்வடி வேன் மன்னநீசெல் வழிக்கிரங்குங்—கொடிக்குப்படர்கொம்பு கூடிநின்சா ரற் குறித்தகொம்பே." எனவும், தலைமகட்புணர்ந்தவன்சேறற்குச் செய்யுள்;—"இருங்குன்றனமதி லெம்பதிக்கேக லெளிதுசெம்மை- தருங்குங்குமமுலைத் தையனல்லாய்தஞ்சை வாணன்வெற்பிற்— கருங்குஞ்சரவினம் வெண்சிங்கவேறஞ்சுங் கங்குலிலெம்—மருங் குஞ்சுடர்விளக்கா மடவார்குழை மாணிக்கமே." எனவும் வரும்.

உரையிற்கோடலாற், தலைமகன் நெறியினதெளிமைகூறற் பின் பாங்கியிரவுக்குறிக்குடன்படலும், நேராதிறைவி நெஞ்சொடு கிளத்தற்பின் பாங்கியிரவுக்குறியேற்பித்தலுந், தலைவியைக் குழியி டத்தெதிர்ப்படுதற்பின் சார்தல்பயனுகப் புகழ்தலும் வரப்பெறும். அவற்றிற்குச் செய்யுள் முறையே "கூளிநிறைக்கநின் றம்பலத் தாடி குரைகழற்கீழ்த்—தூளிநிறைத்த சுடர்முடியோயிவ டோண சையா—லாளிநிரைத்த லானைகடேரு மிரவின்வந்து—மீளியு ரைத்தி வினையேனுரைப்பதென் மெல்லியற்கே." எனவும், "மல வன்குரம்பையை மாற்றியம்மான்முதல் வானர்க்கப்பாற்—செல வன்பர்க்கோக்குஞ் சிவன்றில்லைக்கானலிற் சீர்ப்பெடையோ—டல வன்பயில்வது கண்டஞர்கூர்ந்தயில் வேலுரவோன்—செலவந்தி வாய்க்கண்டன னென்னதாங்கொன்மன் சேர்துயிலே." எனவும் "அகிலின்புகைவிம்மி யாய்மலர்வேய்ந்தஞ் சனமெழுதத்—தகிலுந் தனிவடம் பூட்டத்தகாள் சங்கரன்புலியூ—ரிகலுமவரிற் றளருமித் தேம்ப விடைஞெமியப்—புகலுமிகவிங்ஙனே யிறுமாக்கும் புணர்மு லையே." எனவும் வரும்.

இவற்றுள் இறையோனிருட்குறிவேண்டலும் நெறியினதெளி மைகூறலும் அவனுட்டணியியல்வினுதலும் பாங்கியிறைவிக்கிறை யோன்குறையறிவுறுத்தலுமாகிய நான்கும் வேண்டற்கும், பாங்கி நெறியினதருமைகூறலும் இறைமகளிறைவனைக் குறிவிலக்கலும் பாங்கியிறைவனை வரவுவிலக்கலுமாகிய மூன்றும் மறுத்தற்கும்,பாங் கியவனுட்டணியியல்வினுதலும் அவர்க்குத்தன்னுட்டணியியல்சாற்

றலும் நேரிழைபாங்கியொடு நேர்ந்துரைத்தலுமாகிய மூன்றும் உடன்படற்கும், தலைமகனேர்ந்தமைபாங்கி தலைமகற்குணர்த்தலுங் குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதலும் இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தலும் அவட்கொண்டுசேறலுமாகிய நான்குங் கூட்டற்கும், தலைமகளையெதிர்ப்படுதலுந் தேற்றலும் புணர்தலுமாகிய மூன்றுங் கூடற்கும், புகழ்தலுங் கையுறைகாட்டலுமாகிய இரண்டும் பாராட்டற்கும், தலைமகனிறைவியையில்வயின்விடுத்தலும் பாங்கி தலைமகளையிற்கொண்டேகலுமாகிய இரண்டும் பாங்கிற்கூட்டற்கும், நேராதிறைவி நெஞ்சொடுகிளத்தலுந் தலைமகளாற்றினதருமைநினைந்திரங்கலும் பெருமகன்மயங்கலுந் தோழிதலைமகடுயர்கிளந்துவிடுத்தலுமாகிய நான்கும் மயங்கற்கும், பாங்கிகுறியுய்த்தலுந் திருமகட்புணர்ந்தவன் சேறலுமாகிய இரண்டும் நீங்கற்கும் உரியவாமென்க. இவற்றுள் நேராதிறைவி நெஞ்சொடுகிளத்தலும் பெருமகளாற்றினதருமை நினைந்திரங்கலும் இறைமகளிறைவனைக் குறிவிலக்கலுமாகிய மூன்றும் வரைதல்வேட்கைக்கும், பாங்கிநெறியினதருமைகூறலும் இறைவனைவரவுவிலக்கலுந் தலைமகடுயர்கிளந்துவிடுத்தலுமாகிய மூன்றும் வரைவுகடாதற்கும் உரியவாமாறுணர்க. (கசரு)

ருகஅ. அல்லகுறி வருந்தொழிற் கருமை யென்றுங்
கெல்லுக்குறி யிடையீ டிருவகைத் தாகும்.

இது நிறுத்தமுறையானே இரவுக்குறியிடையீட்டுவகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். அல்லகுறியும் வருந்தொழிற்கருமையுமென இரண்டு வகையினையுடைத்து இரவுக்குறியிடையீடு. எ - று.

குறியல்லவென்பது அல்லகுறியென முன்பின்னாகத் தொக்குநின்றது; கடைக்கண்போல. அதுதான் தலைமகனால் நிகழ்த்தப்படும் புள்ளெழுப்பல் முதலியன பிறிதொன்றால் நிகழ்த்தப்படுதலாம்.

ருகக. இறைவிக் கிகுளை யிறைவர வுணர்த்துழித்
தான்குறி மருண்டமை தலைவியவட் குணர்த்தலும்
பாங்கி தலைவன் றீங்கெடுத் தியம்பலும்
புலந்தவன் போதலும் புலந்தபின் வறுங்களந்
தலைவிகண் டிரங்கலுந் தன்றுணைக் குரைத்தலுந்
தலைமக ளவலம் பாங்கி தணித்தலு
மிறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றலு
மிறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றலு

மவள்குறி மருண்டமை யவளவற் கியம்பலு
மவன்மொழிக் கொடுமைசென் றவளவட் கியம்பலு
மென்பிழைப் பன்றென் றிறைமக னோதலுந்
தாயு நாயு மூருந் துஞ் சாமையுங்
காவலர் கடுகலு நிலவுவெளிப் படுதலுங்
கூகை குழறலுங் கோழிகுரற் காட்டலு
மாகிய கிளவி யப்பதி னெட்டு
மிரவுக் குறியிடை யீட்டது விரியே.

இஃது இரவுக்குறியிடையீட்டு விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். இறைவிக்கு இருளை இறைவரவுணர்த்துழித் தான்குறிமருண்டமை தலைவி அவட்குணர்த்தல் முதலாகக் கோழிகுரற் காட்டல் ஈறாகக் கிடந்த கிளவி பதினெட்டும் இரவுக்குறியிடையீட்டின்விரியாம். எ - று.

அனுவாதமுகத்தான் ஈண்டும் இறைவிக்கு இருளை இறைவரவுணர்த்தல் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"மின்னங்கலருஞ் சடைமுடியோன்வியன் றில்லையன்னா—யென்னங்கலமர லெய்தியதோவெழின் முத்தந்தொத்திப்—பொன்னங்கலர்புன்னைச் சேக்கையின்வாய்ப்புலம் புற்றுமுற்று—மன்னம்புலரு மளவுந்துயிலா தழுங்கினவே." எனவரும்.

தான்குறிமருண்டமை தலைவிபாங்கிக்குணர்த்தற்குச் செய்யுள்;—"அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமா பூண்ட—மணியரவ மென்றெழுந்து போந்தேன்—கணிவிரும்பு—புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னணியிழா—யுள்ளுடை நெஞ்சினேன் யான்." எனவும், பாங்கி தலைவன்றீங்கெடுத்தியம்பற்குச் செய்யுள்;—"கொடுமுண் மடற்றாழைக் கூம்பழித்த வெண்பூ—விடையு ளிழுதொப்பத் தோன்றிப்—புடையெல்லாந்—தெய்வங் கமழுந் தெளிகடற் றண்சேர்ப்பன்—செய்தான் றெளியாக் குறி." எனவும், தலைவன்புலந்துபோதற்குச் செய்யுள்;—"நம்போலெளியவ ரில்லைநெஞ்சேயிந்த நானிலத்தில்—வம்போடவென்ற வனமுலைமாதர்க்கு மாளிகையின்—நம்போருகமென் றறிந்தும்வம்பேயெனை நீயலைத்து—வெம்போதகந்திரி கங்குலென்னோவிங்கு மேவியதே." எனவும், புலந்தபின் வறுங்களந்தலைவிகண்டிரங்கற்குச் செய்யுள்;—"நாம்வந்தவேற்கை நரபாலனவலர் பொய்வழுத்துந்—தோம்வந்தடர்வழித் தொண்டையர்கோன்கப்பல் சூழ்துறையிற்—றேம்வந்தலர்புன்னை

காள்கைதைகாணெய்தற் சேர்ப்பர்கங்குற்-ருமவந்தனர்கொலியான் வந்துபோனபின் சாற்றுமினே." எனவும், தலைவிபாங்கியொடுரை த்தற்குச் செய்யுள்;—"வரலிங்கரிய வயங்கிருள்யாமத்து வந்தனர் வேய்—நரலுஞ்சிலம்பர் நவமணியாழி நறவுண்வண்டு—முரலுந்தலை யவிழ் மொய்ம்மலர்க்காந்தளஞ் செம்மலர்க்கை-விரலென் றுகொல் செறித்தார் நெறித்தார்குழன் மெல்லியலே." எனவரும். "நெய்தற் படுவி னிறைகழித் தண்சேர்ப்பன்—கைதைசூழ் கானலிற் கண்ட நாட் போலானுற்—செய்த குறியும்பொய் யாயினவாற் சேயிழை—யையகொ லான்ருர் தொடர்பு." இதுவும் அது. தலைமகளவலம் பாங்கிதணித்தற்குச் செய்யுள்;—"பொய்யாதவர்தங் குறிபிழையார வர் பூண்டவன்பு—மெய்யாதறேறி யழுங்கன்மின்னேபுய வெற்பி ரண்டான்—மையாழிவைய நிலையிட்டவாணன்றென் மாறைவெற் பி—னுய்யானமென்கழுநீர் நறுமாலை யுடைத்தல்லவே." எனவும், இறைவன்மேற் பாங்கி குறிபிழைப்பேற்றற்குச் செய்யுள்;-"காமங் கடவ வுள்ள முளைய—யாம்வந்து காணும் பருவமாயி—னோங்கித் தோன்று முயர்வரைக்—கியாங்கெனப் படுநமதூரே தெய்யோ." எனவும்வரும். இஃதைங்குறுநூறு. இறைவிமேலிறைவன் குறிபி ழைப்பேற்றற்குச் செய்யுள்;—"மழைவர வறியா மஞ்ஞை யாலு— மடுக்க னல்லூ ரசைநடைக் கொடிச்சி—தானெம் மறந்தன ளாயி னு—மியாந்தன் னுள்ளுபு மறந்தறி யேமே." எனவரும். இஃதைங் குறுநூறு. அவள்குறிமருண்டமையவளவற்கியம்பற்குச் செய்யுள்;- "கடுங்காலெறியக் கயத்துகுமாவின் கனியையெல்லா—மொடுங்கா வரவல்கு லுன்குறியாக வுளமகிழ்ந்து—நடுங்காரிருள்வந்து நாண்ம லர்ச்சோலையி னண்ணியபின்—னடுங்காய்களிற்றண்ணலே யெண் ணுமாறு ளவில்லையே." எனவும், அவன்மொழிக்கொடுமை சென்றவளவட்கியம்பற்குச் செய்யுள்;-"வருமிந்தவெல்லையின் வல் லையின்றேவந்து வைகிருண்மாந்—துருமந்தருங்கனி யெல்லாந்தொ லைத்துந் துணைபிரியா—வருமந்தவன்னங்கள் சேக்கைகொள்ளாம லழுங்குவித்துந்—தெருமந்துநின் றுவிட்டே னென்பராலன்பர் சே யிழையே." எனவும், என்பிழைப்பன்றென் றிறைமகளுரைத்தற்குச் செய்யுள்;—"கொன்னூர் துஞ்சினும் யாந்துஞ் சிலமே—யெம்மி லயல தேழி லும்பர்—மயிலடி யிலைய மாக்குர னொச்சி—யணிமிகு மென்கொம் பூழ்த்த—மணிமருள் பூவின் பாடுநனி கேட்டே." எனவும் வரும்.

"உரைபெறவகுத்த" என்றமிகையானே தலைவி விருந்தென வந்த பெருந்தகை நிலைமை கூறலும் வரப்பெறும். அதற்குச் செய்

யுள்;—"கனையிருள்வந்து குறிபிழைத்தார்சிறு காலையினம்—மனையிடைவந்து விருந்தினனென்ன விருந்தென்றன்னைப்—புனையிழை நீசென்று போற்றுகென்றாளன்னை போற்றுகென்ற-நினைவறியாது சென்றே னகன்றாரவர் நீடுயிர்த்தே." எனவரும்.

**தாய்**துஞ்சாமைக்குச் செய்யுள்;-"மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை—புன்றரு பசுங்காய் தின்றதன் றப்பிற்—கொன்பதிற்றொன்பது களிற்றொடவணிறை—பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்—பெண்கொலை புரிந்த நன்னன் போல—வரையா நிரயத்துச் செலியரோ வன்னை—நகைமுக விருந்தினன் வந்தெனப்—பகைமுக வூரிற் றுஞ்சலோ விலளே." எனவும், நாய்துஞ்சாமைக்குச் செய்யுள்;—"தண்ணென்புனல்வையை சூழ்தஞ்சைவாணன் றரியலர்போற்—பெண்ணென்பிறவியும் பேறுடைத்தன்றிப் பெரும்பதிநங்—கண்ணென்பவர்வரக் கங்குலின்ஞாளிக் கணங்குரைத்துத்—துண்ணென்கடுங்குரல்வா யன்னைதுஞ்சினுந் துஞ்சிலவே." எனவும், ஊர்துஞ்சாமைக்குச் செய்யுள்;—"ஓங்கண்ணல் வெம்பக டுந்திவந்தாரை யுடன்றுதும்பைத்—தேங்கண்ணிசூடிச் செருவென்றவாணன்றென் மாறைமின்னே—தாங்கண்ணனையர் தமைப்பிரிந்தோநந் தனிமைகண்டோ—நாங்கண்ணுறங்கினுமோ வுறங்கார்கண் ணகரவரே." எனவும், காவலர்கடுகற்குச் செய்யுள்;-"புயற்கண்ணியதலைப் பூகமென்பாளைப் புதுமதுநீர்—வயற்கண்ணிறைதஞ்சை வாணன்றென்மாறையில் வஞ்சியன்னாள்—கயற்கண்ணிணையஞ்சி நீர்மல்கக்காவலர் கைப்பறையின்-செயற்கண்ணிணையல்லவோ படுகின்றன திண்கடிப்பே." எனவும், நிலவுவெளிப்படுதற்குச் செய்யுள்;—"கருங்கால் வேங்கை வீயுறு துறுக—லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை—யெல்லி வருநர் களவிற்கு—நல்லை யல்லை நெடுவெண் ணிலவே." எனவும், கூகைகுழறற்குச் செய்யுள்;—"நம்பேறுடைமையிருக்கின்றவாகடன் ஞாலத்துள்ளோர்—தம்பேறெனவந்த சந்திரவாணன் றரியலர்போல்—வம்பேறுகொங்கை மயிலியனுமஞ்ச மன்றமராங்—கொம்பேறிநள்ளிருள்வாய்க் குழறாநின்ற கூகைகளே." எனவும், கோழிகுரல்காட்டற்குச் செய்யுள்;—"மன்பதைதாமுய்ய வந்தருள்வாணன்றென் மாறைவெற்பர்—கொன்பதிவேல்வலங் கொண்டுவந்தாற்றங்கள் கோனடைந்தா—னென்பதுதேறி யிடையிருளூரை யெழுப்பும்வெம்முட்—பொன்பதிதாள்வளைவாய்ச் செய்யசூட்டு வன்புள்ளினமே." எனவும் வரும். இவற்றுள் இறைவிக்குளையிறைவரவுணர்த்துழித் தான்குறிமருண்டமை தலைவியவட்குணர்த்தல் முதலாக என்பி

மைப்பன்றென் றிறைவிநோதல் ஈருகக் கிடந்த பதினொன்றும் அல்லகுறிக்குந், தாய்துஞ்சாமை முதலாகக் கோழிகுரல்காட்டல் ஈருகக் கிடந்த ஏழும் வருந்தொழிற்கருமைக்கும் உரியவெனக்கொள்க.

ருஉ०. அச்ச முவர்த்த லாற்ரு மையென
மெச்சிய வரைதல் வேட்கைமூ வகைத்தே.

இது நிறுத்தமுறையானே வரைதல்வேட்கை வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். அச்சமும் உவர்த்தலும் ஆற்ருமையுமென மூன்றுவகையினையுடைத்தாம் வியக்கத்தக்க வரைதல்வேட்கை. எ - று. ()

ருஉக. பருவரல் வினவிய பாங்கிக் கிறைவி
யருமறை செவிலி யறிந்தமை கூறலுந்
தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றலுந்
தலைமக னூர்க்குச் செலவொருப் படுதலும்
பாங்கி யிறைவனைப் பழித்தலும் பூங்கொடி
யிறையோன் றன்னைநொந் தியற்பட மொழிதலுங்
கனவுநலி புரைத்தலுங் கவினழி புரைத்தலுந்
தன்றுயர் தலைவற் குரைத்தல் வேண்டலுந்
துன்புறு பாங்கி சொல்லெனச் சொல்லலு
மலர்பார்த் துற்ற வச்சக் கிளவியு
மாறுபார்த் துற்ற வச்சக் கிளவியுங்
காம மிக்க கழிபடர் கிளவியுந்
தன்னுட் கையா றெய்திடு கிளவியு
நெறிவிலக்கு வித்தலுங் குறிவிலக்கு வித்தலும்
வெறிவிலக்கு வித்தலும் பிறைவிலக்கு வித்தலுங்
குரவரை வரைவெதிர் கொள்ளுவித் தலுமென
வுரைபெற வகுத்த வொன்பதிற் றிரட்டியும்
வரைதல் வேட்கை விரியெனப் படுமே.

இது வரைதல்வேட்கைவிரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். பருவரல்வினவிய பாங்கிக்கு இறைவி அருமறைசெவிலியறிந்தமைகூறல் முதலாகக் குரவரை வரைவெதிர்கொள்ளுவித்தல் ஈருகச் சொற்பெற வகுத்த பதினெட்டுக்கிளவியும் வரைதல் வேட்கைவிரியாம். எ - று.

அனுவாதமுகத்தாற் பாங்கி தலைவியைப்பருவரல்வினவுதலும் வரப்பெறும். அதற்குச்செய்யுள்;—"மீனறியாத விரிகடல்போலும் விழிபசந்து—தூநெறியார்குழற் போதுந்துறந்தனை துங்கமலி—வானறியாத மதிமுகத்தாயின்றை வைகலென்றும்--யானறியாத வருத்தமென்னோ வுனக்கெய்தியதே." எனவரும்.

பருவரல்வினவியபாங்கிக்கிறைவி அருமறைசெவிலியறிந்தமைகூறற்குச் செய்யுள்;—"துறைவன் றுறந்தெனத் துறையிருந் தழுதவென்—மம்மர் வாண்முக நோக்கி யன்னைநின்—னவல முரையென் றனளே கடலென்--பஞ்சாய்ப் பாவை கொண்டு—வண்டலஞ் சிறுமனை சிதைத்ததென் றேனே." எனவும், தலைமகன்வருந் தொழிற்கருமைசாற்றற்குச் செய்யுள்;—"இரும்பிழி மகாரிவ் வழுங்கன் மூதூர்—விழவின் றாயினுந் துஞ்சா தாகு—மல்ல லாவண மறுகுடன் மடியின்—வல்லுரைக் கடுஞ்சொ லன்னை துஞ்சாள்—பிணிகொ ளருஞ்சிறை யன்னை துஞ்சிற்—றுஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவ—ரிலங்குவே லிளைஞர் துஞ்சின் வையெயிற்று—வலம்புரித் தோகை ஞாளி மகுளு—மரவவாய் ஞமலி குரையாது மடியிற்—பகலுரு வுறழ நிலவுகான்று விசும்பி—னகல்வாய் மண்டில நின்று விரியுந்—திங்கள் கல்சேர்பு கனையிருள் மடியி—னில்லெலி வல்சி வல்வாய்க் கூகை—கழுதுவழங் கியாமத் தழிதகக் குழறும்—வளைக்கட் சேவல் வாளாது மடியின்—மனைச்செறி கோழி மாண்குரலியம்பு—மெல்லா மடிந்த காலை யொருநா—ணில்லா நெஞ்சத் தவர்வா ரலரே—அதனால், அரிபெய் புட்டி லார்ப்பப் பரிசிறந்—தாதி போகிய பாய்பரி நன்மா—நொச்சி வேரித் தீத்த னுறந்தைக்—கண்முதிர் புறங்காட் டன்ன—பன்முட் டின்றாற் றோழிநங் களவே." எனவும், தலைமகனூர்க்குச்செலவொருப்படுதற்குச் செய்யுள்;—"அருங்கடி யன்னை காவ னீவிப்—பெருங்கடை யிறந்து மன்றம் போகிப்—பகலே பலருங் காண நாண்விட்—டகல்வயிற் படப்பை யவனூர் வினவிச்—சென்மோ வாழி தோழி பன்னாட்—கருவி வானம் பெய்யா தாயினு—மருவி யார்க்குங் கழைபயி னனந் தலை—வான்றோய் மாமலைக் கிழவனைச்—சான்றோ யல்லலை யென்றன மவற்கே." எனவும், பாங்கியிறைவனைப்பழித்தற்குச் செய்யுள்;—"சுறவார்நறுங்குழைத் தூநகையாய்நந் துணைவருட—னிறவார்குருகினந் தங்குபைங்கானலி லின்னளிசூழ்—நறவார்மலர்ப் புன்னை நன்னிழல்வாய்முன் னயந்தசெவ்வி—மறவாநமைமறந்தாரவர்போலில்லை வன்னெஞ்சரே." எனவும், தலைமகளியற்படமொழிதற்குச் செய்யுள்;—"யாமைதன்பார்ப்பை யிகந்துயிர்காக்கு மிருந்

துறைவன்—றிமைநம்பாற்செயல் சிந்திக்குமோசெவ்வி போயொழிந்த—மாமையும்பார்த்தவன் வாய்மையும்பார்த்து வருந்தன்மன்றற்-பூமயம்பார்த்தளி புல்லுமல்லார்குழற் பூங்கொடியே." எனவும், கனவுநலிபுரைத்தற்குச் செய்யுள்;—"கேட்டிசின் வாழி தோழியல்கற்—பொய்வ லாளன் மெய்யுற மரீஇ—வாய்த்தகைப் பொய்க்கனு மருட்ட வேற்றெழுந்—தமளி தைவந் தனனே குவளை—வண்டுபடு மலரிற் சாஅய்த்—தமியேன் மன்ற வளியள் யானே." எனவும், கவினழிபுரைத்தற்குச் செய்யுள்;—"மின்னேயவர்தந்த வேட்கையைமீட்கும் விரகறிய—முன்னேதவங்கண் முயன்றிலமேமுன்செய்தீவினையா—லென்னேயருங்கவி னெல்லாமெனக்கு மவர்க்குமின்றிக்—கொன்னேபசலை திருந்தவிவ்வாறு குறைக்கின்றதே." எனவும், தன்றுயர்தலைவற்குரைத்தல்வேண்டற்குச் செய்யுள்;—"இன்ன ளாயின ணன்னுத லென்றவர்த்—துன்னச் சென்று செப்புநர்ப்பெறினே—நன்றுமன் வாழி தோழிநம் படப்பை—நீர்வார் பைம்புதற் கலித்த—மாரிப் பீரத் தலர்சில கொண்டே." எனவும், பாங்கிநின்குறைநீயேசென்றுரையென்றற்குச் செய்யுள்;—"தேமாம்பொழிற்றில்லைச் சிற்றம்பலத்துவிண் ணோர்வணங்க—நாமாதரிக்க நடம்பயில்வோனைநண் ணுதவரின்—வாமாண்கலைசெல்ல நின்றூர்கிடந்த நம் மல்லல்கண்டாற்-றுமாவறிகில ராயினென்னுஞ்சொல்லுந் தன்மைகளே." எனவும், தலைமகள் அலர்பார்த்துற்றவச்சக்கிளவிக்குச் செய்யுள்;—"அலராயிரந்தந்து வந்தித்துமாலா யிரங்கரத்தா—லலரார்கழல்வழி பாடுசெய்தாற்கள வில்லொளிக—ளலராவிருக்கும் படைகொடுத்தோன்றில்லை யானருள்போன்—றலராய்விளைகின்றதம்பல்கைமிக்கைய மெய்யருளே." எனவும், தலைமகளாறுபார்த்துற்ற வச்சக்கிளவிக்குச்செய்யுள்;-"தாருறுகொன்றையன் றில்லைச் சடைமுடி யோன்கயிலை—நீருறுகான்யா றளவிலநீந்திவந் தானினது—போருறுவேல்வயப் பொங்குருமஞ்சுக மஞ்சிவருஞ்—சூருறு சோலையின்வாய் வரற்பாற்றன்று தூங்கிருளே." எனவும், காமமிக்ககழிபடர்கிளவிக்குச் செய்யுள்;-"மாதுற்றமேனி வரையுற்றவில்வி தில்லைநகர்சூழ்—போதுற்றபூம்பொழில் காள்கழிகாளெழிற் புள்ளினங்கா—ளேதுற்றழிதியென் னீர்மன்னுமீர்ந்துறை வற்கிவளோர்—தீதுற்றதென்னுக்கென்னீ ரிதுவோநன்மை செப்புமினே." எனவும், தலைவி தன்னுட்கையாறெய்திடுகிளவிக்குச் செய்யுள்;—"விண்டலையாவர்க்கும் வேந்தர்வண்டில்லைமெல் லங்கழிசூழ்—கண்டலையேகரியாக்கன்னிப்புன்னைக் கலந்தகள்வர்க்—கண்டிலையேவரக் கங்குலெல்லாமங்குல் வாய்விளக்கு—மண்டிலமேபணியாய் தமியேற்கொருவாசகமே." எனவும், தலைமகனெறிவிலக்குவித்தற்குச் செய்யுள்;-

"ஒருநாள்வரினு முறுபழிதூற்று முயர்சிலம்பில்—வருநாள்பல வுண்டு மாமலைநாடர் வரநினையும்—பெருநாளொழிய வினிவரிலே தம் பிறக்குமென்று—குருநாண்மலர்க்குழலாய் மொழிசென்று கொற்றவர்க்கே." எனவும், குறிவிலக்குவித்தற்குச் செய்யுள்;— "வளைவாய்ச் சிறுகிளி விளைதினை கடியச்—செல்கின் றேளே யன்னை சேணெனச்—சொல்லி னெவனோ தோழி கொல்லை—நெடுங்கை வன்மான் கடும்பகை யுழந்த—குறுங்கை யிரும்புலிக் கொலைவல் லேற்றைப்—பைங்கட் செந்நாய் படுபதம் பார்க்கு—மாரிரு ணடு நாள் வருதி—சார னாடன் வாரலோ வெனினே." எனவும், வெறி விலக்குவித்தற்குச் செய்யுள்;—"மின்னுதிடித்தென்ன வன்னை கொண்டாள்வெறி விந்தைமங்கை—மன்னுண்மைமன்னிய வாண ன்றென்மாறையில் வஞ்சிவண்டியா—மென்னுவசுண மிறைகொள் ளுநாட னெனக்கருளான்—முன்னுளருளியநோய் தணிப்பானின் று மொய்குழலே." எனவும், பிறர்விலக்குவித்தற்குச் செய்யுள்;— "வருவனசெல்வன தூதுகளேதில வான்புலியூ—ரொருவன தன்பரி னின்பக்கலவிக ளுள்ளுருகத்—தருவனசெய்தென தாவிகொண் டேகியென் னெஞ்சிற்றம்மை—யிருவினகாதல ரேதுசெய்வா னின் றிருக்கின்றதே." எனவும், குரவரைவரைவெதிர்கொள்ளு வித்தற்குச் செய்யுள்;-"போற்றுந்தினைவிளை யும்புனற்சாரற் புகர்மு கத்துச்—சீற்றஞ்சிறந்த களிற்றுருவாய்நம்மைத் தேடிவந்த—கூற் றங்கடிந்தநங் கோமான்வரைவெதிர் கொள்ளும்வண்ணஞ்-சாற்றுந் திறமென்கொலோ தையலாய்நந் தமர்களுக்கே." எனவும்வரும். இவற்றுட் பருவரல்வினவியபாங்கிக்கிறைவி அருமறைசெவிலி யறிந்தமைகூறலும் அலர்பார்த்துற்றவச்சக்கிளவியும் ஆறுபார்த் துற்றவச்சக்கிளவியும் நெறிவிலக்குவித்தலுங் குறிவிலக்குவித்தலும் வெறிவிலக்குவித்தலும் பிறவிலக்குவித்தலுங் குரவரைவரைவெதிர் கொள்ளுவித்தலுமாகிய எட்டும் அச்சத்திற்குந், தலைமகனூர்க்குச் செலவொருப்படுதலும் பாங்கியிறைவனைப்பழித்தலும் பூங்கொடி யிறையோன்றன்னைநொந்தியற்படமொழிதலுங் கவினழிபுரைத் தலும் பாங்கிநின்குறைநீயேசென்றுரையென்றலுமாகிய ஐந்தும் உவர்த்தற்குந், தலைவன்வருந்தொழிற்கருமைசாற்றலுங் கனவுநலிபு ரைத்தலுந் தன்றுயர்தலைவற்குரைத்தல்வேண்டலுங் காமமிக்ககழிப டர்கிளவியுந் தன்னுட்கையாறெய்திடுகிளவியுமாகிய ஐந்தும் ஆற்றா மைக்கும் உரியவாம். (கசக)

ருஉஉ. பொய்த்தன் மறுத்தல் கழறன் மெய்த்தலென் றொருநால் வகைத்தே வரைவு கடாதல்.

இது நிறுத்தமுறையானே வரைவுகடாதல் கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். பொய்த்தல் முதலாக மெய்த்தல் ஈறாக நான்குவகை யினையுடைத்து வரைவுகடாதல். எ - று. (சுரு0)

ருஉ௩. **வி**னவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பலு
மலரறி வுறுத்தலுந் தாயறி வுறுத்தலும்
வெறியச் சுறுத்தலும் பிறர்வரை வுணர்த்தலும்
வரைவெதிர் வுணர்த்தலும் வரையுநா ளுணர்த்தலு
மறிவறி வுறுத்தலுங் குறிபெயர்த் திடுதலும்
பகல்வரு வானை யிரவுவரு கென்றலு
மிரவுவரு வானைப் பகல்வரு கென்றலும்
பகலினு மிரவினும் பயின்றுவரு கென்றலும்
பகலினு மிரவினு மகலிவ ணென்றலு
முரவோ னூடு மூருங் குலனு
மரபும் புகழும் வாய்மையுங் கூறலு
மாறுபார்த் துற்ற வச்சங் கூறலு
மாற்றாத் தன்மை யாற்றக் கூறலுங்
காவன்மிக வுரைத்தலுங் காமமிக வுரைத்தலுங்
கனவுநலி புரைத்தலுங் கவினழி புரைத்தலு
மெனமுறை நாடி யியம்பிய விருபதும்
வரைவு கடாதல் விரியெனப் படுமே.

இது வரைவுகடாதலின்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். வினவியசெவிலிக்கு மறைத்தமைவிளம்பல் முதலாகக் கவினழிபுரைத்தல் ஈறாகச் சொல்லப்பட்ட இருபதும் வரைவுகடாதல்விரியெனப்படும். எ - று.

**வி**னவியசெவிலிக்கு மறைத்தமைவிளம்பற்குச் செய்யுள்;— "சுனையார்பொழிற்றுவ ரைத்தொண்டைமான்கப்பல் சூழ்துறைவா-யினையாள்வருந்துவ தென்னையென்றாளன்னை யாமிருந்து—விளையாடுசிற்றிலை வெண்டலைத்தெண்டிரை வேலையெற்றும்—வளையாலழித்ததென்றா ளென்செய்வாள்பின்னை வாணுதலே." எனவும், அலரறிவுறுத்தற்குச் செய்யுள்;—"சுற்றுஞ்சடைக்கற்றைச் சிற்றம்பலவற் றொழாதுதொல்சீர்—கற்றுமறியல ரிற்சிலம்பாவிடை நைவது

கண்—டெற்றுந்திரையின் னமிர்தையினித்தம ரிற்செறிப்பார்—மற்றுஞ்சிலபல சீறூர்பகர்பெரு வார்த்தைகளே." எனவும், தாயறிவுறுத்தற்குச் செய்யுள்;—"பனித்துண்டஞ்சூடும் படர்சடையம்பலவன்னுலகந்—தனித்துண்டவன்றொழுந் தாளோன்கயிலைப் பயில்சிலம்பா—கனித்தொண்டைவாய்ச்சி கதிர்முலைப்பாரிப்புக் கண்டழிவுற்—றினிக்கண்டிலம்பற்றுச் சிற்றிடைக்கென்றஞ்சு மெம்மனையே." எனவும், வெறியச்சுறுத்தற்குச் செய்யுள்;—"மையுற்றநீலக்கன் மாமங்கைகோன்றஞ்சை வாணன்வெற்பி—னெய்யுற்றவேலன்ப நீதணியாமையி னெஞ்சத்துள்ளே—யையுற்றயர்வுற்றெம் மன்னையும்யாயுமென் னாரணங்கின்—மெய்யுற்றநோய்தணிப்பான் வெறியாடல் விரும்பினரே." எனவும், பிறர்வரைவுணர்த்தற்குச் செய்யுள்;—"மணியக்கணியு மரனஞ்சமஞ்சி மறுகிவிண்ணோர்—பணியக்கருணை தரும்பரன்றில்லையன் னாடிறத்துத்—துணியக்கருதுவ தின்றேதுணிதுறை வாநிறைபொன்—னணியக்கருதுகின்றார் பலர் மேன்மேலயலவரே." எனவும், வரைவெதிருணர்த்தற்குச் செய்யுள்;—"வழியுமதுவன்னை யென்னின்மகிழும்வந் தெந்தையுநின்—மொழியின்வழிநிற்குஞ் சுற்றமுன்னேவய மம்பலத்துக்—குழியும்பரேத்துமெங் கூத்தன்குற்றாலமுற் றும்மறியக்—கெழியும் மனபணைத்தோள் பலவென்னோ கிளக்கின்றதே." எனவும்வரும்.

கெழீஇய கெழியென விகாரமாய்நின்றது. உம்ம உம்மன வென உளப்பாட்டுத்தன்மையாய் நின்றது.

வரையுநாளுணர்த்தற்குச் செய்யுள்;—"மையார்கதலி வனத்துவருக்கைப் பழம்விழுதே—னெய்யாதயின்றிள மந்திகள்சோருமிருஞ்சிலம்பா—மெய்யாவரியதெ னம்பலத்தான்மதி யூர்கொள்வெற்பின்—மொய்யார்வளரிள வேங்கைபொன்மாலையின் முன்னினவே." எனவும், தலைமகளறிவு தலைமகற்கறிவுறுத்தற்குச் செய்யுள்;—"தன்னையுந்தோழியுந் தோளினில்லாவரிச் சங்கையுங்கண்டுன்னையங்கோது முறுபழிநாணி யுளங்கிடந்த—வன்னையுஞ்சேரியுமாயத்துள்ளாரு மயலுமன்றி—யென்னையுங்கூடவெற்பா மறைத்தாளென் னிளங்கொடியே." எனவும்வரும். குறிபெயர்த்திடுதற்குச் செய்யுள்;—"வாமானுகளு மணிவரைச்சாரலில் யாம்வளர்த்த-பூமாதவிது பூஞ்சிலம்பாபுல்ல நீநினையிற்—றேமாலைமென்குழலார்செறியாவருஞ் சேணெறிக்க—ணீமாறிவேறொரு நீழலுண்டாக நினைந்தருளே." எனவரும். இஃதிருவகைக்குறிக்கும் ஏற்குமாறு உணர்க. பகல்வருவானை இரவுவருகென்றற்குச் செய்யுள்;—"களி

றுற்றசெல்லல் களைவயிற்பெண்மரங் கைஞ்ஞெரித்துப்—பிளிறுற்ற வானப் பெருவரைநாட பெடைநடையோ—டொளிறுற்றமேனி யன் சிற்றம்பலநெஞ் சுறுதவர்போல்—வெளிறுற்றவான்பழியாம் பகனீசெய்யு மெய்யருளே." எனவும், இரவுவருவானைப் பகல்வரு கென்றற்குச் செய்யுள்;—"கடந்தொறும்வாரண வல்சியினுடிப்பல் சீய்ங்கங்கு—லிடந்தொறும்பார்க்கு மியவொருநீயெழில் வேலின்வந் தாற்—படந்தொறுந்தீயர வன்னம்பலம்பணி யாரினெம்மைத்— தொடர்ந்தொறுந்துன்பென்பதே யன்பநின்னரு டோன்றுவதே." எனவும், பகலினுமிரவினும் பயின்றுவருகென்றற்குச் செய்யுள்;— "கங்குற்கலைநிறை திங்களுங்காலைக் கமலமுநின்—றுங்கப்புயத்தை வெறுப்பவந்தாலென் சொரிமதத்து—வெங்கைக்களிற்று மருப்பை ப்பறித்ததன் வேரருந்துஞ்—சிங்கத்தடவருவிச் சிலம்பாவின்று சே ரினன்றே." எனவும், பகலினுமிரவினுமகலிவணென்றற்குச் செய் யுள்;—"சுழியாவருபெரு நீர்சென்னிவைத்தென்னைத் தன்றொழும் பிற்—கழியாவருள்வைத்த சிற்றம்பலவன் கரந்தருமான்—விழியா வரும்புரி மென்குழலாடிறத் தையமெய்யே—பழியாம்பகல்வரினீ யிரவேதும் பயனில்லையே." எனவும், உரவோனூரும் ஊருங் குல னும் மரபும் புகழும் வாய்மையுங்கூறற்குச் செய்யுள்;—"குறைவிற் குங்கல்விக்குஞ் செல்விற்குநின்குலத் திற்கும்வந்தோர்—நிறைவிற் குமேதகு நீதிக்குமேற்பினல் லாணியைனயி—னிறைவிற்குலாவரை யேந்திவண்டில்லைய னேழ்பொழிலு—முறைவிற்குலாநுதலாள் வி லையோமெய்ம்மை யோதுநர்க்கே." எனவும், ஆறுபார்த்துற்றவச் சங்கூறற்குச் செய்யுள்;—"பற்றொன்றிலார்பற்றுந் தில்லைப்பரன்ப ரங் குன்றினின்ற—புற்றொன்றரவன் புதல்வனெனநீ புகுந்துநின் றூன்—மற்றுன்றுமாமல ரிட்டுன்னைவாழ்த்திவந் தித்தலன்றி—மற் றொன்றுசிந்திப்பரேல் வல்லளோமங்கை வாழ்வகையே." எனவும், ஆற்றாத்தன்மையாற்றக்கூறற்குச் செய்யுள்;—"எழுங்குலைவாழையி னின்கனிதின்றிள மந்தியந்தண்—செழுங்குலைவாழை நிழலிற்று யில்சிலம் பாழனைமே—லுழுங்கொலைவேற்றிருச் சிற்றம்பலவரை யுன்னலர்போ—லழுங்குலைவேலன்ன கண்ணிக்கென்னோநின் ன ருள்வகையே." எனவும், காவன்மிகவுரைத்தற்குச் செய்யுள்;— "நறைக்கண்மலிகொன்றை யோனின்றுநாடக மாடுதில்லைச்—சி றைக்கண்மலிபுனற் சீர்நகர்காக்குஞ்செவ் வேலிளைஞர்—பறைக்கண் படும்படுந் தோறும்படாமுலைப் பைந்தொடியாள்—கறைக்கண்மலிக திர்வேற் கண்படாது கலங்கினவே." எனவும், காமமிகவுரைத்தற் குச் செய்யுள்;—"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்—சாரனாட செவ்வியை யாகுமதி-யாரஃ தறிந்திசி னோரே சாரற்-சிறுகோட்டுப்

பெரும்பழந் தூங்கியாங்கிவ—ளுயிர்தவச் சிறிது காமமோ பெரிதே.” எனவும், கனவுநலிபுரைத்தற்குச் செய்யுள்;—“அரவுங்களிறு மணங் குழுலாவு மருநெறிநீ—வரவுங்குறியிடை வந்தெதிர்புல்லவும் வல் லிநலம்—பரவும்பணிமொழி யுள்ளம்படுக்கவும் பாயலிடை—விர வுங்கனவை நனவென்றுபாவம் விழித்தனளே.” எனவும்,கவினழிபு ரைத்தற்குச் செய்யுள்;—“வருமந்தமாருதம் வண்டமிழ்நாறு மலைய வெற்பா—தெருமந்தநெஞ்சிற் றிருவனையாடிரு மார்பகலம்—பொ ருமந்தமென்முலை புல்லப்பெறாதுபொன் போர்க்கவென்போ—லரு மந்தவண்ணமெலா மவமேயின் றழிகின்றதே.” எனவும் வரும். இவற்றுள் வினவியசெவிலிக்கு மறைத்தமைவிளம்பல் முதலாகப் பிறர்வரைவுணர்த்தல் ஈறாகச் சொல்லப்பட்ட ஐந்தும் பொய்த்தற் குங், குறிபெயர்த்திடுதல் முதலாகப் பகலினுமிரவினு மகலிவணென் றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஐந்தும் மறுத்தற்கும் உரவோன் நாடும் ஊருங் குலனும் மரபும் புகழும் வாய்மையுங் கூறலாகிய ஒன்றுங் கழறற்கும், வரைவெதிருணர்த்தலும் வரையுநாளுணர்த்தலும் அறி வுறுத்தலும் ஆறுபார்த்துற்றவச்சங்கூறல் முதலாகிய ஆறுமாகிய ஒன்பதும் மெய்த்தற்கும் உரியவாம். (சுருக)

ருஉச. செலவறி வுறுத்தல் செலவுடன் படாமை
செலவுடன் படுத்தல் செலவுடன் படுதல்
சென்றுழிக் கலங்க றேற்றி யாற்றுவித்தல்
வந்துழி நொந்துரை யென்றெழு வகைத்தே
'யொன்றக் கூறிய வொருவழித் தணத்தல்.

இது நிறுத்தமுறையானே ஒருவழித்தணத்தல் கூறுவன்வற் றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ-ள். செலவறிவுறுத்தல் முதலாக வந்துழிநொந்துரை ஈறாக ஏழுவகையினையுடைத்து மேற்சொல்லிப்போந்த ஒருவழித் தணத்தல். எ-று.

ஒருவழித்தணத்தல் நெட்டாறு சேறலன்றி, அணிமைக்கட் பிரிவென்று கோடும்; என்னை? “தாளாணெதிரும் பிரிவினுனும்” என்பவாகலின். (சுருஉ)

ருஉரு. தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றலு
மென்சொற் பாங்கி விலக்கலுந் தலைவ
னீங்கல் வேண்டலும் பாங்கி விடுத்தலுந்

தலைவிக் கவன்செல வுணர்த்தலுந் தலைவி
நெஞ்சொடு புலத்தலுஞ் சென்றோ னீடலிற்
காம மிக்க கழிபடர் கிளவியுங்
கோற்றொடிப் பாங்கி யாற்றுவித் தலுமவன்
வந்தமை யுணர்த்தலும் வந்தோன் றன்னொடு
நொந்து வினாதலும் வெந்திறல் வேலோன்
பாங்கியொடு நொந்து வினாதலும் பாங்கி
யிறைவியை யாற்றுவித் திருந்த வருமை
கூறலு மென்னு மாறிரு கிளவியு
மொருவழித் தணத்தல் விரியெனப் படுமே.

இஃது ஒருவழித்தணத்தலின்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றல் முதலாகப் பாங்கி இறைவியையாற்றுவித்திருந்த அருமைகூறல் ஈறாகச் சொல்லப் பட்ட பன்னிரண்டு கிளவியும் ஒருவழித்தணத்தலின் விரியென்று சொல்லுவர் புலவர். எ - று.

தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றற்குச் செய்யுள்;—"ஒடிக்குங் கரும்பி னுடுக்குலந்தோன்றுமெம் மூர்வயிற்போய்—முடிக்குங்கு றையுண்டு நீயிசைந்தான்முழு முத்தணியுங்—கொடிக்குங்கும்முலை வல்லிக்குநீயிது கூறுசென்று—வடிக்கின்ற வேல்விழியாய் வருகே னிற்றை வைகல்சென்றே." எனவும், மென்சொற்பாங்கிவிலக்கற் குச்செய்யுள்;—"அறையுங்கடலன்ன வன்பினெம்மாவியி னும்ம ரிய—குறையிங்குமக்கு முடிப்பதுண்டேற்கொண்ட காதலுட—னுறையும்பதிக்க ணொருப்பட்டபோதுநின் னுள்ளஞ்செல்ல—வி றையுந்தவிர்க்கில்லை யெம்பிரானின் றெழுந்தருளே." எனவும், தலைவனீங்கல்வேண்டற்குச் செய்யுள்;—"உள்ளந்தடுப்ப வினையே யெனையிங் குறைபதிக்குத்—தள்ளும்பரிசு தலைக்கொண்டதுதணந் தாலும்வந்து—வெள்ளஞ்சுரும்பு விரும்புபைங்கோதை விளங்கிழை யாய்—நள்ளென்பகல்வருவே னொடுங்காவுண் ணடுங்கலையே." என வும், தலைவனைப்பாங்கிவிடுத்தற்குச் செய்யுள்;—"உமையாடலைவ னை யொன்றியவாறிவ ளுன்னையன்றி—யமையாநிலைமை யறிந்த னையேலய லேபுயலின்—சுமையார்தடம்பொழில் சூழும்வெற்பாநின் றுணிவையெய்தி—யெமையாளவெண்ணினையே லின்றுநாளை யெ ழுந்தருளே." எனவும்வரும். "இருகாலுமில்லை வலவனுக்கேனு மெழுபரித்தேர்க்—கொருகாலொழிய வொருகாலமுமில்லை யொண்

சிலம்பா—குருகா லும்வாரிதி யேழுமெண்குன்றமுஞ் சூழ்ந்திரவி—வருகாலமென்றுமொ லன்றுகொனீயும் வருவதுவே." என இரவுநிலையுணர்த்தலும் இதன்பாற்படும். பாங்கிதலைவிக்கவன்செலவுணர்த்தற்குச் செய்யுள்;—"கருநாண்மலர்க்குழற் காரிகையாயொரு காரணத்தா—லொருநாணமைவிட் டுறையவும்வேண்டின ரொன்றியநின்—பெருநாண்மடமை பிணிக்கப்பிணிப்புண்ட பேரறிவின்-மருநாண்மலர்த்தொங்கன் மன்னரென்னோதம் வசமொழிந்தே." எனவும், தலைவிநெஞ்சொடுபுலத்தற்குச்செய்யுள்; "அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்—றேறியார்க் குண்டோ தவறு." எனவும்வரும். "ஒருநாள்பிரிய நினைத்தவர்நம்மை யொழிந்தவெல்லை—வருநாண்மறக்கவும் வல்லரன்றேமறப் பார்நினைவார்—செருநாண்மலர்க்கணைத் திண்சிலைவேள்வந்து சிந்துமெல்லை—யருநாணுடனெங்ஙனுவியுநாமுமின் றூற்றுவதே." இதுவும் அது. சென்றோனீடலிற் காமமிக்ககழிபடர்கிளவிக்குச் செய்யுள்;—"ஆரம்பரந்து திரைபொருநீர்முகின் மின்பரப்பிச்—சீரம்பரத்திற் றிகழ்ந்தொளிதோன்றுந் துறைவர்சென்றூர்—போரும்பரிசு புகன்றனரோபுலி யூர்ப்புனிதன்-சீரம்பர்சுற்றியெற்றிச் சிறந்தார்க்குஞ் செறிகடலே." எனவரும். போதரும்பரிசு போரும்பரிசென விகாரமாய்நின்றது. தலைவியைப் பாங்கியாற்றுவித்தற்குச் செய்யுள்;—"அருகுங்கலவி யளித்தகன் றாரரு ளின்மையெண்ணி—யுருகுந்தனிநெஞ்ச முண்மகிழ்கூரவந் தொண்மதியைப்—பொருபைங்கதலியும் பூகமுங்கன்னலும் பூவுங்கொண்டு—வருகின்றதாலவரூர் மலிநீர்நதி வாணுதலே." எனவரும்.

பாங்கியாற்றுவித்துழித்"தேரூதவன்பினர் சென்றுழிச் சென்றவென் சிந்தைகண்டு—மாரூதுகூட வரநின்றதோவிங்கு வந்தென்வண்ணம்—வேறூனதுகண்டு மீண்டதுவோவன்றி மாண்டதுவோ—வாரூதுமையலுற்றே னறியேன் வந்தடுத்ததுவே." எனத் தலைவி நெஞ்சுநினைந்திரங்கலும், "யாயுங்கடலு மலைப்பவிவ்வூரிலிங் கென்னைவைத்துப்—போயங்குநம்மை மறந்தவர்பாற்சென்று பூண்முலைமேற்—பாயுங்கண்ணீரும் பசலையுமாய்நின்ற பாவிநெஞ்சே—நீயென்சொன்னாய் பின்னவரென்சொன்னா ருன்னினைவறிந்தே." என நெஞ்சொடுகிளத்தலும், "அவிகொண்டவெங்கன லம்புகொண்டெய்தன ரன்றியும்புன்—கவிகொண்டுநின்னைக் கடந்தனரென்று கொல் கன்றினர்தம்—புவிகொண்டவெண்புகழ் போர்ப்பவர் தேர்வழி தூர்ப்பதுநீ—குவிகொண்ட லுண்டுமிழ் தெண்டிரைமோதுங் குரைகடலே." எனக் கடலொடுபுலம்பலும், "மறைவன்தென்மேனி மணந்துயிர்வாடத் தணந்தசைநின்—றிறைவன்கொடுமை யியம்புதனணி

யிரங்கிமெய்யை—நறையுந்தியமலர்த் தூசான்மறைத்திங் நகர்ப்பு றம்போ—நிறையுந்திநீயென்செய்வா யிதுவாகிலென் னீள்வினை யே." என ஆற்றொடுபுலம்பலும், "எங்காதலர்செல்ல வென்னை யிவ்வாறுகண் டேசுமவர்—தங்காதலரைத் தணந்தறியார்கொன் மணந்துறையுஞ்-செங்கானலோதிமங் காள்கருங்கானற் சிறையன் றில்கா-ளுங்காதலர்செல்லினீ ருடன்போமிக் குடம்பைவிட்டே." எனப் புள்ளொடு புலம்பலும், "நன்றேயினியவர் நண்புநமக்கு மவர்க்குமுயி—ரொன்றேநினையி லுறையுமொன்றேயுயர் வெண்ம ணற்றிண்—குன்றேகுலவன்ன மேகுறுகேனங் கொடிநெடுந்தே—ரன்றேவருவலென்று ரிருந்தேன்மெய் வருந்தியுமே." எனக் கை யறுகிளவியும், "முளைக்கும்பிறையை முனியுந்திருநுதன் முத்த ரும்ப—விளைக்கும்பசலை விழியிணைகாட்ட விடாதவண்டர்—கிளைக் குந்தெரிவரு கேதகைநீழற் கிளியிருந்து—வளைக்குஞ்சுழிக்கு மழிக் குமொண்கூடல் வளைக்கைகொண்டே." எனக் கூடலிழைத்தலும், "புறந்தாழ்விரிசினைப் புன்னையங்கானன்மென் பூந்துறைவா—சிறந் தாழ்கருங்கடற் றெய்வமுந்தீதுகொல் சிந்தைமென்றூண்—டுறந்தா விசோர்வதென் னென்றற்றைநாளுற்ற சூள்முழுது—மறந்தாரிருக்க மறவாதவெம்மை வருத்தியதே." எனச் சூளுறவுபொய்யென்றலும், "விடவாயரவை மிதித்துமதித்த விலங்கன்றியே—நடவாவிரவி னடந்தநங்காதலர் நம்மையினிக்—கடவாரெனநினைந் தேனிங்ஙனு னமென் கண்ணுமெய்யு—மடவாரறிவதுண்டோ வுரவோர்செயும் வன்கண்மையே." என மடமைகூறியதும், "மாயக்கலவி மணந்த கன்றார்திரு மார்பகலந்—தோயப்பெறாது சுடுகின்றமேனி—துறந்த வர்தந்—தேயத்துநின்று வருநதிநீரிற் றிளைத்தனமேற்—சாயக்குளி ருமின்றே யவர்சாரற் றழைபடுத்தே." எனத் தன்னுள்ளேசொல் லுதலும் உரையிற்கோடலான் வரப்பெறும்.

பாங்கி தலைமகட்குத் தலைமகன்வந்தமையுணர்த்தற்குச் செய் யுள்;—"சந்தார்வனமுலை தங்கும்பசப்புந் தனிமையுநின்—சிந்தா குலமுஞ் சிதையும்படிசிறை வண்டினஞ்சேர்—கொந்தாரலங்கற் குழலணங்கேதங் குறைமுடித்து—வந்தார்விரைய மணிநெடுந்தேரி னம் மன்னவரே." எனவும், வந்தோன்றன்னொடு பாங்கிநொந்துவி னுதற்குச் செய்யுள்;—"வளருங்கறியறி யாமந்திதின்றுமம் மர்க்கிட மாய்த்—தளருந்தடவரைத் தண்சிலம்பாதன தங்கமெங்கும்—விள ரும்விழுமெழும் விம்முமெலியும்வெண் மாமதிநின்—றளிருஞ்ச டைமுடியோன் புலியூரன்ன வொண்ணுதலே." எனவும், தலைவன் பாங்கியொடுநொந்துவினுதற்குச் செய்யுள்;—"ஐவாயரவுற்ற தன்

ணவின்னுவிட ராற்றியென்போ—லெவ்வாறிருந்தனி ரேல்வளையி ரெதிர்ந் தாரைவென்று—மைவாரணங்கொண்ட வாணன்றென்மா றை மருவலர்போ—லொவ்வா வலரையுங்கொண் டிருவீரு மொருத னியே.'' எனவும், பாங்கி தலைவியையாற்றுவித்திருந்தவருமை தலை மகற்குச் சொல்லற்குச் செய்யுள்;—“இவளாருயிர்புரந் தியானிருந் தேன்செக்க ரிந்துவென்னப்—பவளாடவியிற் பயினித்திலம்பங் கயங்குவியத்—தவளாதபஞ்சொரி தண்டுறைவாதஞ்சை வாணன் றெவ்விற்—றுவளாமலாற்றுவியென் றென்றுநீசொன்ன சொன்னி னைந்தே.'' எனவும் வரும்.

இவற்றுள், தன்பதிக்ககற்சி தலைவன்சாற்றலும் பாங்கிதலை விக்கவன்செலவுணர்த்தலுமாகிய இரண்டுஞ் செலவறிவுறுத்தற்குந், தலைமகனைப்பாங்கிவிலக்கலாகிய ஒன்றுஞ் செலவுடன்படாமைக் கும், நீங்கல்வேண்டலாகிய ஒன்றுஞ் செலவுடன்படுத்தற்குந், பாங்கி விடுத்தலாகிய ஒன்றுஞ் செலவுடன்படுதற்குந், தலைமகனெஞ்சொடு புலத்தலுங் காமமிக்ககழிபடர்கிளவியுமாகிய இரண்டுஞ் சென்றுழிக் கலங்கற்குந், தலைமகளைப் பாங்கியாற்றுவித்தலுந் தலைமகன்வந்தமை தலைமகட்குணர்த்தலுமாகிய இரண்டுந் தேற்றியாற்றுவித்தற்கும், பாங்கி வந்தோன்றன்னொடு நொந்துவினுதன்முதலாகிய மூன்றும் வந்துழிநொந்துரைக்கும் உரியவாம். (கருந)

ருஉசு. பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை
பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்
பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை
வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்
றொருமையிற் கூறிய வொன்பது வகைத்தே
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவே.

இது நிறுத்தமுறையானே வரைவிடைவைத்துப் பொருள்வ யிற்பிரிதல் கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென் கின்றது.

இ-ள். பிரிவறிவுறுத்தல் முதலாக வந்துழிமகிழ்ச்சி ஈறுக ஒன்பதுவகையினையுடைத்தாம் வரைவிடைவைத்துப் பொருள்வ யிற்பிரிதல். எ-று. (கருச)

ருஉஎ. என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக் கென்றலு
நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றலு
நீடே னென்றவ னீங்கலும் பாங்கி

யோடரிக் கண்ணிக் கவன்செல வுணர்த்தலும்
பூங்குழை யிரங்கலும் பாங்கி கொடுஞ்சொற்
சொல்லலுந் தலைவி கொடுஞ்சொற் சொல்லலும்
வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தலும்
பருவங் கண்டு பெருமகள் புலம்பலு
மிகுளைவம் பென்றலு மிறைமகண் மறுத்தலு
மவர்தூ தாகிவந் தடைந்ததிப் பொழுதெனத்
துணைவி சாற்றலும் பிணைவிழி யாற்றலு
மவனவட் புலம்பலு மவன்வருங் காலைப்
பாகன் றன்னொடு மேகந் தன்னொடுஞ்
சோகங் கொண்டவன் சொல்லலும் பாங்கி
வலம்புரி கேட்டவன் வரவறி வுறுத்தலும்
வலம்புரி கிழத்தி வாழ்த்தலும் வந்துழி
நினைத்தமை வினாதலு நினைத்தமை செப்பலு
மனத்தகை யவளை யாற்றுவித் திருந்தமை
பாங்கி கூறலுமென வாங்கெழு மூன்றும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவின்
விரியென விளம்பினர் தெரிபுணர்ந் தோரே.

இது வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிதலின்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். என் பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றல் முதலாகத் தலைமகளையாற்றுவித்திருந்தவருமை பாங்கிகூறல் ஈறாகச் சொல்லப்பட்ட இருபத்தொன்றும் வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிவின் விரியென மொழிந்தனர் ஆய்ந்தறிந்தோர். எ - று.

என் பொருட்பிரிவுணர்த்தேந்திழைக்கென்றற்குச் செய்யுள் ;- "குன்றங்கிடையுங் கடந்துமர்கூறு நிதிகொணர்ந்து—மின்றங்கிடைநும் மையும்வந்துமேவுவ னம்பலஞ்சேர்—மன்றங்கிடைமரு தேகம்பம்வாஞ்சிய மன்னபொன்னைச்—சென்றங்கிடைகொண்டு வாடாவகைசெப்பு தேமொழியே." எனவும், பாங்கி நின்பொருட்பிரிவுரை நீயவட்கென்றற்குச் செய்யுள் ;—"கேழேவரையுமில் லோன்புலியூர்ப்பயில் கிள்ளையன்ன—யாழேர்மொழியா ளிரவரினும்பகற் சேறியென்று—வாழேனெனவிருக் கும்பரிக்கண்ணியை நீவருட்டித்—தாழேனெனவிடைக்கட் சொல்லியேகு தனிவள்

ளலே." எனவும், நீடேனென்றவனீங்கற்குச் செய்யுள்;—"மதிமுற்றியதன்ன வாண்முகத்தாளை வரையவல்லே—நிதிமுற்றிமீள்குவனீடநில்லேனெய்த னீலவுண்க—ணுதிமுற்றியகுழை நுண்ணிடையாயெதிர் கொண்டுநுங்கள்—பதிமுற்றுமங்கலம் பாடநின்றாடப் பரிசிலரே." எனவும், பாங்கி தலைமகட்குத் தலைவன்செலவுணர்த்தற்குச் செய்யுள்;—"நல்லாய்நமக்குற்ற தென்னென்றுரைக்கேனமர்தொடுத்த—வெல்லாநிதியு முடன்விடுப்பானிமை யோரிறைஞ்சு—மல்லார்கழலழல் வண்ணர்வண்டில்லை தொழார்களல்லாற்—செல்லாவழற்கட மின்றுசென்றார்நஞ் சிறந்தவரே." எனவும், தலைமகளிரங்கற்குச் செய்யுள்;—"அருந்தும்விடமணி யாமணிகண்டன் மற் றண்டர்க்கெல்லா—மருந்துமமிழ்தமு மாகுமுன்னோன் றில்லைவாழ்த்தும்வள்ள—திருந்துங்கடநெறி செல்லுமிவ்வாறு சிதைக்குமென்றால்—வருந்துமடநெஞ்சமே யென்னையாமினி வாழ்வகையே." எனவும், பாங்கி கொடுஞ்சொற்சொல்லற்குச் செய்யுள்;—"மதுமலர்ச்சோலையும் வாய்மையுமன்பு மருவிவெங்கான்—கதுமெனப்போக்கு நிதியினருக்குமுன் னிக்கலுழ்ந்தா—ளொதுமலர்நோக்கமொர் மூன்றுடையோன் றில்லை நோக்கலர்போ—லிதுமலர்ப்பாவைக்கென்னோ வந்தவாறென்ப ரேந்திழையே." எனவும், தலைவி கொடுஞ்சொற்சொல்லற்குச் செய்யுள்;—"வந்தாய்பவரையில் லாமயின்முட்டையிளையமந்தி—பந்தாடிரும்பொழிற் பல்வரைநாடன் பண் போவினிதே—கொந்தார்நறுங்கொன்றைக் கூத்தன்றென்றில்லை தொழார்குழுப்போற்—சிந்தாகுலமுற்றுப் பற்றின்றிநையுந் திருவினர்க்கே." எனவும், வருகுவர்மீண்டெனப் பாங்கிவலித்தற்குச் செய்யுள்;—"கானமர்குன்றர் செவியுறவாங்கு கணைதுணையா—மானமர்நோக்கியர் நோக்கெனமானற்றொடைமடக்கும்—வானமர்வெற்பர்வண் டில்லையின்மன்னை வணங்கலர்போற்—றேனமர்சொல்லிசெல்லார் செல்லல் செல்லறிருநுதலே." எனவும், பருவங்கண்டு பெருமகள்புலம்பற்குச் செய்யுள்;—"தார்காலமன்றலங் கொன்றையங்கானந் தடஞ்சிறைவண்—கூர்காலநாரை யுடன்குருகாலக் கொழுங்கயற்க—ணீர்காலவாடக மென்னிறங்காலப் பிறங்குமழைக்—கார்காலம்வந்தது வாரார்கொலின்னமுங் காதலரே." எனவும், இகுளைவம்பென்றற்குச் செய்யுள்;—"கருந்தினையோம்பக் கடவுட்பராவி நமர்கலிப்பச்-சொரிந்தனகொண்மூச் சுரந்ததன்பேரருளாற்றெழும்பிற்—பரிந்தெனையாண்டசிற் றம்பலத்தான்பரங் குன்றிற்றுன்றி—விரிந்தனகாந்தள் வெருவரல் காரென வெள்வளையே." எனவும், இறைமகள்மறுத்தற்குச் செய்யுள்;—"சொல்லியசொல்வழு வாத்தொண்டைவேந்தன் றுவரைவெற்பிற்—புல்லியருஞ்சுரம்

போனவர்வார்த்தையிற் பொய்ம்மையொன் று-மில்லையெனுங்கொடி யேயதுபோக விவையும்பொய்யோ—மல்லிகைமுல்லை செருந்திவிற் பார்சொல்லும் வார்த்தைகளே." எனவும், அவர் தூதாகிவந்தடைந் தது இப்பொழுதெனத் துணைவிசாற்றற்குச் செய்யுள்;—"பருவம டுத்தது வந்திலர்காதல ரென்றும்பைம்பொன்—னுருவமடப்பிடி யேயுயங்கேலுயங் காதவண்ணம்—பொருபகைசெற்றபொற் றேர் வெற்றிவேந்தர் பொருண்முடித்து—வருவதுரைப்பமுன்னே வந்த தாலிந்த மைம்முகிலே." எனவும், தலைமகளாற்றற்குச் செய்யுள்;— "கருங்காலவெண்குரு குங்கண்டல்வாய்விட வஞ்சுங்கொண்டல்— பொருங்காலழிந்து புலம்புநெஞ்சேதண் புறவமயி—லொருங்கால மேக மிடித்துறைகால வறைகழலார்—வருங்காலம்வந்தது போங் காலமில்லைநம் மன்னுயிர்க்கே." எனவும், அவனவட்புலம்பற்குச் செய்யுள்;—"வழிகுழியும்படி தேர்வழிபார்த்தனை வீழ்ந்துவண்டு— கொழுதிமிருங்குழல் சோரக்கிடந்துங் குடங்கையின்மே—லொழு கியவஞ்சன வெள்ளத்துணங்கு மணங்கைமுன்சென்—றெழுகெனு நெஞ்சமென்னே யவரோவெனி னென்சொல்லுமே." எனவும், மீண்டுவருகின்றகாலத்துத் தலைமகன் பாகனொடுசொல்லற்குச் செய் யுள்;—"மொய்யாடகமுடித் தேர்வலவாமுன் மொழிந்ததெல்லாம்- பொய்யானதென்று புலந்துரையாடப் பொருள்விரும்பி—மையார் குழலியை வாழ்வித்தபாவி மனத்தையின்றுன்—கையாகவும்பரிக் காலாகவுமயன் கண்டிலனே." எனவும், தலைமகன் மேகத்தொடு சொல்லற்குச் செய்யுள்;—"கிளைத்துக்கிடந்தெனைக் கேட்குந்தொ றுங்கலுழ் கெண்டையுமுன்—வளைத்துக்கிடந்த வரிமணற்கூடலும் வண்ணமெல்லாம்—விளைத்துக்கிடந்த பசலையுமாயுள்ளம் விம்மிவிம் மி-யிளைத்துக்கிடந்தவர்க்கென் சொலமேகங்கண் முன்செல்வதே." எனவும், பாங்கிவலம்புரிகேட்டு அவன்வரவறிவுறுத்தற்குச் செய் யுள்;—"பொருகின்றசெங்கயல் போல்விழியாய்பண்டு போயநின் கைக்—குருகின்றுவந்திறை கொள்வதுகாணநங் கொண்கர்பொற் றேர்—தருகின்றசங்கந் தருவன்னவாணன் றமிழ்த்தஞ்சைவாய்— வருகின்றதென்றுமுன்னே யோகைகூறும் வலம்புரியே." எனவும், வலம்புரிகிழத்தி வாழ்த்தற்குச் செய்யுள்;—"மால்வண்டெனமன்னி வாணன்றென்மாறைமன் னன்புகழே—போல்வண்டமிழ்மன்னர் போற்றவிளங்குக பொன்கொழிக்குங்-கால்வண்டல்வையைக் கரை மல்குமல்லிகைக் கான்முகையின்—மேல்வண்டிருந்ததுபோற் கரு மாமுக வெண்சங்கமே." எனவும், தலைமகன்வந்துழிப் பாங்கி நினைத் தமைவினுதற்குச் செய்யுள்;—"கடந்தந்தவெங்கைக் களிற்றுவெங் கானங் கடந்துசென்று-தடந்தந்ததாமரைத் தண்புனனாட்டுத் தடங்

கடனீர்—விடந்தந்தமுதந் தருமடனேக்கிவண் மேவமனத்—திடந் தந்தறிவதுண்டோ வொருநாளெம் மிறையவனே." எனவும், தலைமகன் நினைத்தமைசெப்பற்குச் செய்யுள்;-"கோவையைவென்றசெவ் வாய்க்கொடியேபொருள் கூட்டவென்னுந்—தேவையைமேற்கொண்டு தீவினையேன்சென்ற சென்றவிடம்—யாவையுமுங்க ளிளமரக்காவு மிழைத்தகுன்றும்—பாவையுநீயும் பரிமளச்சோலையும் பண்ணையுமே." எனவும், தலைமகளையாற்றுவித்திருந்த அருமை பாங்கி கூறற்குச் செய்யுள்;—"மதிகாட்டியநுதல் வல்லிசிந்தாகுல மாற்றியதுன்—பதிகாட்டியுமொண் பனிவரைகாட்டியும் பாய்திரைநீர்—நதிகாட்டியும்புது நல்விருந்தாக நடந்ததிண்டேர்க்—கதிகாட்டியுமுன் கலந்தசந்தாடவி காட்டியுமே." எனவும்வரும்.

உரையிற்கோடலாற் றலைவன் ஆற்றுவித்திருந்த அருமை வினுதலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"சிமையாடகவரைச் சேணெறிச்சென்றருஞ் செய்பொருளுக்—குமையாளெழிந்தங் குறைந்தவங்நாளிங் குடனிருந்து—மிமையாவிழிக்கின்ற வித்துணைப்போதினு மென்னையன்றி—யமையாவணங்கினணங்கையெவ்வாறிருந் தாற்றினையே." எனவரும்.

இவற்றுள், என்பொருட்பிரிவுணர்த் தேந்திழைக்கென்றலாகிய ஒன்றும் பிரிவறிவுறுத்தற்கும், பாங்கிநின்பொருட்பிரிவுரை நீயவட்கென்றலாகிய ஒன்றும் பிரிவுடன்படாமைக்குந், தலைவனீடேனென்றவனீங்கலாகிய ஒன்றும் பிரிவுடன்படுத்தற்கும், பாங்கியோடரிக்கண்ணிக் கவன்செலவுணர்த்தலாகிய ஒன்றும் பிரிவுடன்படுதற்குந், தலைமகளிரங்கலுங் கொடுஞ்சொற்சொல்லலும் பருவங்கண்டுபுலம்பலும் மறுத்தலுந் தலைமகன் சேணிடைப்புலம்பலுமாகிய ஐந்தும் பிரிவுழிக்கலங்கற்கும், பாங்கி கொடுஞ்சொற்சொல்லலும் வருகுவர்மீண்டெனப் பாங்கிவலித்தலும் பருவமன்றுவம்பென்றலும் அவர்தூதாகிவந்தடைந்த திப்பொழுதென்றலுமாகிய நான்கும் வன்புறுத்தற்குந், தலைமகளாற்றலாகிய ஒன்றும் வன்பொறைக்குந், தலைமகன் மீண்டுவருங்காலைப்பாகனெடுசொல்லலும் மேகமொடுசொல்லலுமாகிய இரண்டும் வருவழிக்கலங்கற்கும், பாங்கிவலம்புரிகேட்டவன்வரவறிவுறுததல் முதலாகிய ஐந்தும் வந்துழிமகிழ்ச்சிக்கும் உரியவாம். (கடுரு)

ருஉஅ. வரைவெனப் படுவ துரவோன் கிழத்தியைக்
குரவர் முதலோர் கொடுப்பவுங் கொடாமையுங்
கரணமொடு புணரக் கடியயர்ந்து கொளலே.

வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிந்த தலைவன் வந்துழி வரையுமன்றே அவ்வரைவாவது இவ்வியல்பிற்றென இஃது அதன் இலக்கணங்கூறுகின்றது.

இ - ள். வரைவென்றுசொல்லப்படுவது தலைமகன் தலைமகளைக் குரவர்முதலோர் கொடுப்பவுங் கொடாதொழியவும் வதுவைச் சடங்கொடு பொருந்த மணஞ்செய்து கோடல். எ - று.

வரைவு கற்பிற்கு ஒருதலையாக வேண்டுதலின் அச்சிறப்புத் தோன்ற வரைவெனப்படுவதென்றுங், குரவரேயன்றி அவரோடு ஒருதன்மையராகிய தாயத்தாருந் தாயொடுபிறந்தாரும் அவரில்லாத வழிச் சான்றோருந் தேவருங் கொடைக்குரிய மரபினராகலிற் குரவர்முதலோரென்றுங், கொடுப்பவென்றுங், "கொடுப்போ ரின்றியுங் கரண முண்டே—புணர்ந்துடன் போகிய காலை யான." என்பவாகலின் கொடாமையுமென்றுங், "கரணம் பிழைக்கின் மரணம் பயக்கும்" என்பார் கரணமொடுபுணர என்றுங் கூறினர். குரவராவாரிவரென்பது "அரச னுபாத்தியாயன் றாய்தந்தை தம்முன்—னிகரில் குரவரிவ ரைவ—ரிவரைத்—தேவரைப் போலத் தொழுதெழுக வென்பவே—யாவருங் கண்ட நெறி." என்பதனான் அறிக. வதுவைச்சடங்கு இவளை நீ இன்னவாறு பாதுகாப்பாயெனவும் இவற்கு இன்னவாறே நீ குற்றேவல்செய்து ஒழுகெனவும் அங்கியங்கடவுள் அறிகரியாக மந்திரவகையாற் கற்பித்தல். "உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவைப்—பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகாற்—றண்பெரும் பந்தர்த் தருமணன் ஞெமிரி—மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்—கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்—கோள்கா ணீங்கிய கொடுவெண் டிங்கட்—கேடில் விழுப்புகழ் நாடலை வந்தென—வுச்சிக் குடத்தர் புத்தகன் மண்டையர்—பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்—முன்னவும் பின்னவு முறைமுறை தரத்தரப்—புதல்வர்ப் பயந்த திதலைய வயிற்று—வாலிள மகளிர் நால்வர் கூடிக்—கற்பின் வழாஅ நற்பல வுதவிப்—பெற்றோற் பெட்கும் பிணையை யாகென—நீரொடு சொரிந்த வீரித ழலரிப்—பல்லிருங் கதுப்பி னெல்லொடு தயங்க—வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்—கல்லென் சும்மையர் ஞெரேலெனப் புகுந்து—பேரிற் கிழத்தி யாகென மாத—ரோரிற் கூட்டிய வுடன்புணர் கங்குற்—கொடும்புறம் வளைஇய கோடிக் கலிங்கத்—தொடுங்கினள் கிடந்தனளோர்புறந் தழீஇ—முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப—வஞ்சின ளுயிர்த்த காலை யாழநின்—னெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென-வின்னகை யிருக்கப் பின்னியான் வினவலிற்—செஞ்

சூட் டொண்குழை வண்காது துயல்வர—வகமலி யுவகையளாகி முகனிகுத்—தொய்யென விறைஞ்சி யோளே மாவின்—மடங் கொண் மதைஇய நோக்கி—னொடுங்கீ ரோதி மாஅ யோளே.” இத னுள், வதுவைக்கேற்ற காணங்கள் நிகழ்ந்தவாறுந் தமர்கொடுத்தவா றும் “பறைபடப் பணில மார்ப்ப விறைகொளத்—தொன்மூ தாலத் துப் பொதியிற் றோன்றிய—நரலூர்க் கோசர் நன்மொழி போல— வாயா கின்றே தோழி யாய்கழற்—செயலை வெள்வேல், விடலை யொடு—தொகுவளை முன்கைநம் மடந்தை நட்பே.” என்பதனுள் வாயாகின்றே எனச் செவிலி நற்றாய்க்குக் கூறினமையானும் விட லையெனப் பாலைத்தலைவன்பெயர் கூறினமையானுங் கொடுப்போ ரின்றிக் கரணம் நிகழ்ந்தவாறுங் காண்க. (கருசு)

ருஉகூ. **வ**ரைவு மலிவே யறத்தொடு நிலையென்
றுரையமை யிரண்டும் வரைவிற் குரிய
கிளவித் தொகையெனக் கிளந்தனர் புலவர்.

இது வரைவின் தொகை இத்துணைப்பகுதித்தென்கின்றது.

இ - ள். வரைவுமலிவும் அறத்தொடுநிலையுமென்கின்ற இரண் டும் வரைவிற்குரிய கிளவியின் தொகையென்று கூறினர் அறி வோர். எ - று. (கருஎ)

ருங௦. **வ**ரைவுமுயல் வுணர்த்தல் வரைவெதி ருணர்த்த
வரைவறிந்து மகிழ்தல் பரவல்கண் டுவத்தலென் [ல்
றொருநால் வகைத்தே வரைவு மலிதல்.

இது நிறுத்தமுறையானே வரைவுமலிவு உணர்த்துவனவற் றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். வரைவுமுயல்வுணர்த்தல் முதலாகப் பரவல்கண்டுவத் தல் ஈறாக நான்குவகையினையுடைத்தாம் வரைவுமலிதல். எ - று.()

ருஙக. **கா**தலன் முலைவிலை விடுத்தமை பாங்கி
காதலிக் குணர்த்தலுங் காதலி நற்றா
யுள்ள மகிழ்ச்சி யுள்ளலும் பாங்கி
தமர்வரை வெதிர்ந்தமை காதலிக் குணர்த்தலு
மவளுவகை யாற்றா துளத்தொடு கிளத்தலுந்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலுந் தலைவி

மணம்பொருட் டாக வணங்கைப் பராகிலை
காட்டலுங் கண்டோன் மகிழ்வுமென் றீட்டிய
விருமூன்று மொன்றும் வரைவுமலி தற்காம்
விரியென விளம்பினர் மெய்யுணர்ந் தோரே.

இது வரைவுமலிதலின்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். காதலன்முலைவிலைவிடுத்தமை பாங்கி காதலிக்குணர்த்தன் முதலாகக் கண்டோன்மகிழ்தல் ஈறாகத் தொகுத்த ஏழுகிளவியும் வரைவுமலிதற்கு உரிய விரியெனக் கூறுவர் அகப்பொருளை உணர்ந்தோர். எ - று.

காதலன்முலைவிலைவிடுத்தமை பாங்கி காதலிக்குணர்த்தற்குச் செய்யுள்;—"என்கடைக்கண்ணினும் யான்பிறவேத்தா வகையிரங்கித்—தன்கடைக்கண்வைத்த தண்டில்லைச்சங்கரன் றாழ்கயிலைக்—கொன்கடைக்கண்டரும் யானைகடிந்தார் கொணர்ந்திறுத்தார்—முன்கடைக்கண்ணிதுகாண் வந்துதோன்று முழுநிதியே." எனவும், காதலிநற்றாயுள்ளமகிழ்ச்சியுள்ளற்குச் செய்யுள்;-"கயமாமலரென்னுங் கன்னியைவண்டென்னுங் காளைபல்புள்—ளியமாமணம்புணரீர்ந்துறைநாட ரெதிர்ந்தவர்மேல்—வயமாநடாத்திய வாணன்றென்மாறை வருகுவரே—னயமாமணவணி கண்டியாயுமின்புறு நம்மினுமே." எனவும், பாங்கி தமர்வரைவெதிர்ந்தமை தலைமகட்குணர்த்தற்குச் செய்யுள்;—"கூர்முண் முண்டகக் கூர்ம்பனி மாமலர்—நூலறு முகத்திற் காலொடு பாறித்—துறைதொறும் பரக்குந் தூமணிச்சேர்ப்பனை—யானுங் காதலே னியாயுநனி வெய்ய—ளெந்தையுங் கொடீஇயர் வேண்டு—மம்பலூரு மவனொடு மொழிமோ." எனவும், தலைமகளுவகையாற்றாதுளத்தொடு கிளத்தற்குச் செய்யுள்;—"இன்னெறியுங் குறியிடையீடு மிலங்கிழையார்—பின்னுளிழைத்த பெருவெறியாட்டும் பிறர்வரைவு—நின்னுகுலமுந் தவிரநெஞ்சேயினி நின்னுயிரை—யன்னார்மணமுரசார்க் கின்றதானம் மருநகர்க்கே." எனவும், தலைவனைப் பாங்கிவாழ்த்தற்குச் செய்யுள்;—"கொண்டல் வெருக்குங் கருங்குழலாண்மனக் கோட்டமுநின்—வண்டணியுந்தை வாட்டமுங்கண்டகண் மாலுமந்த—விண்டலர்தாமரைத் தேவியும்போலிங்ஙன் மேவியது—கண்டனமேயிறைவா விதுவோவின்னங் காண்பதுவே." எனவும், தலைவிமணம்பொருட்டாக வணங்கைப்பராகிலை காட்டற்குச் செய்யுள்;—"அணங்கரவல்குலரிவையராரத் தனமருப்புச்—சுணங்கலர்வேங்கைத் தொடைமலைநாட துளங்குமின்போல்-வணங்கிடைமாதுன் மணம்பொருட்டாக

வளையவிழ்பூங்-கணங்கமழ்சார லணங்கைப்பராநிலை கண்டருளே.'' எனவும், பராநிலைகண்டதலைமகன் மகிழ்தற்குச் செய்யுள்;-"பாணர் சுரும்பு விரும்புதண்சாரற் பனியருவிச்—சேணார்சிலம்பி னுறையுங் கடவுளைத் தேமலர்தூஉய்—வாணுடுகண்ணி மணம்பொருட்டாக வழுத்துமன்பு—காணாய்மடநெஞ்சமே வஞ்சமேநங்கள் காதன்மை யே." எனவும்வரும்.

இவற்றுட், காதலன்முலைவிலைவிடுத்தமை பாங்கி காதலிக்கு ணர்த்தலுந் தலைவிமணம்பொருட்டாக அணங்கைப்பராநிலை பாங்கி தலைமகற்குக்காட்டலுமாகிய இரண்டும் வரைவுமுயல்வுணர்த்தற் கும், பாங்கி தமர்வரைவெதிர்ந்தமை தலைமகட்குணர்த்தலாகிய ஒன் றும் வரைவெதிர்வுணர்த்தற்குந், தலைவி நற்றாயுள்ளமகிழ்ச்சியுள்ள லும் உவகையாற்றாதுளத்தொடுகிளத்தலுந் தலைமகனைப் பாங்கி வாழ்த்தலுமாகிய மூன்றும் வரைவறிந்து மகிழ்தற்குந், தலைமகன ணங்கைப் பராநிலைகண்டுமகிழ்தலாகிய ஒன்றும் பரவல்கண்டுவத் தற்கும் உரியவாம். (கருக)

ருகூஉ. முன்னிலை முன்னிலைப் புறமொழி யென்றாங்
கன்னவிரு வகைத்தே யறத்தொடு நிலையே.

இஃது அறத்தொடுநிலையின் வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். முன்னிலைமொழியும் முன்னிலைப்புறமொழியுமென இருவகையினையுடைத்தாம் அறத்தொடுநிலை. எ - று.

மொழியென்பதனை முன்னுங் கூட்டுக. (கசுo)

ருகூரு. கையறு தோழி கண்ணீர் துடைத்துழிக்
கலுழ்தற் காரணங் கூறலுந் தலைவன்
றெய்வங் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை
யெய்தக் கூறலு மிகந்தமை யியம்பலு
மியற்பழித் துரைத்துழி யியற்பட மொழிதலுந்
தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றலு
மில்வயிற் செறித்தமை சொல்லலுஞ் செவிலி
கனையிரு ளவன்வரக் கண்டமை கூறலு
மெனமுறை யிறைவி யியம்பிய வேழொ
டெறிவளை வேற்றுமைக் கேது வினவினும்
வெறிவிலக் கியவழி வினவினும் பாங்கி

பூவே புனலே களிறே யென்றிவை
யேதுவாகத் தலைப்பா டியம்பலு
மின்னிடை வேற்றுமை கண்டுதாய் வினவுழி
முன்னிலை மொழியான் மொழிதலுஞ் செவிலி
யென்றுட னியம்பிய வெல்லாங் களவிய
னின்றுழி யறத்தொடு நிற்றலின் விரியே.

இஃது அறத்தொடுநிற்றலின் விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். கையறுதோழிகண்ணீர் துடைத்துழிக் கலுழ்தற்காரணங்கூறல் முதலாகச் செவிலிகனையிருளவன் வரக்கண்டமைகூறல் ஈறாகக்கிடந்த தலைவிகூற்றுக்கள் ஏழுஞ், செவிலி தலைமகள் வேற்றுமைக்குக் காரணங்கேட்பினுந் தான்வெறிவிலக்கியவழிக் காரணங் கேட்பினும் பூவும் புனலுங் களிறுமாகிய இவைகாரணமாகப் புணர்ச்சியினை அறிவித்தலாகிய பாங்கிகூற்றுக்கள் மூன்றுந், தலைமகள்வேறுபாடுகண்டு நற்றாய்தன்னைவினயவிடத்து முன்னிலை மொழியானே செவிலிகூறுங்கூற்றுமென்று ஒருங்குகூறப்பட்ட எல்லாக்கிளவியுங் களவொழுக்கம் வெளிப்படாதுநின்ற இடத்து அறத்தொடுநிற்றலின் விரியாம். எ - று.

அனுவாதமுகத்தாற் கையறுதோழி கண்ணீர்துடைத்தலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"வாரணமாவின் மருப்பும்பொருப்பு மலைந்தகொங்கை—பூரணமாகும் பொலங்கொடியேபொற்புநயழியுங்—காரணமாவொன்று கண்டிலமாற்கண் கலுழ்வதென்னோ—தோரணமாமறுகிற் பலர்கண்டலர் தூற்றுதற்கே." எனவுந், தலைமகள்கலுழ்தற் காரணங்கூறற்குச் செய்யுள்;—"பண்டுநமக்குப் பரிந்துமையூட்டிய பங்கயக்கை—யொண்டொடிசோர வுயங்குதனோக்கித் தயங்குமுது—தண்டலைதன்னிற் றலைப்பட்டநாளத் தலைவனைநாங்—கண்டனுகொண்டல்லவோ வென்றுபோலுங் கலுழ்கின்றதே." எனவும், தலைமகன் தெய்வங்காட்டித்தெளிப்பத் தெளிந்தமை எய்தக்கூறற்குச் செய்யுள்;—"கழியார்கருங்கடற் றெய்வமுங் காட்டிக் கலந்தவன்று—மொழியாதனவில்லை முன்றுறைவாய்முன் மொழிந்தவண்ண-மொழியார்நமையொரு நாளுமென்றேகொண்டதுள்ளமுமென்—விழியானதுகலுழ்வா னறியேனின்று மேல்லியலே." எனவும், தலைவனிகந்தமையியம்பற்குச் செய்யுள்;—"யாருமில்லைத் தானே கள்வன்—றானவன் பொய்ப்பின் யானெவன் செய்கோ—தினைத்தா ளன்ன சிறுபசுங் கால—வொழுகுநீ ராரல்

பார்க்குங்—குருகு முண்டுதா மணந்த ஞான்றே." எனவும் வரும். அனுவாதமுகத்தான் அதுகேட்டதோழி இயற்பழித்துரைத்தலும் வரப்பெறும். அதற்குச்செய்யுள்;—"மழவேதுறந்து மறந்தவர்போற் றஞ்சை வாணன்வென்றி—முழவேயமுந்நீர் முழங்கிருங்கானன் முழுதுலகுந்—தொழவேதகுந்தெய்வ நோக்கிச்செல்லேனென்று சொல்லியுநீ-யழவே துறந்தனரே நல்லர்நல்லர்நம் மாடவரே." எனவும், தலைமகளியற்படமொழிதற்குச் செய்யுள்;—"அடம்பமர் நெடுங்கொடி யுள்புதைந் தொளிப்ப—வெண்மணல் விரிக்குந் தண்ணந் துறைவன்—கொடிய னாயினு மாக—வவனே தோழியென் னுயிர் காவலனே." எனவும், தெய்வம்பொறைகொளச் செல்குவமென் றற்குச் செய்யுள்;—"மாதங்கநல்குங்கை வாணன்றென்மாறைவை யைத்துறைவ—ரேதம்பயந்தில ரெங்கட்குநீயெம் மிகந்ததனுற்—கோதம்படாதி கொடுந்தெய்வமேயென்று கூர்பலிதூஉய்ப்—பாதம்ப வநல்லா யிருவேமும் படர்குவமே." எனவும், இல்வயிற்செறித் தமைசொலற்குச் செய்யுள்;—"கொன்னேவெகுண்டு மணிவண்ட லாடக் கொடிமருங்குற்—பொன்னேயினிப்புறம் போகலென்று ளன்னை பூந்தொடிக்கை—மின்னேபசந்தவென் மேனியும்பார்த்துள் ளம் வெய்துயிர்த்தா-ளென்னேவிளைந்ததென்னே யறியாரன்ப ரீங் கொன்றுமே." எனவும், செவிலி கனையிருளவன்வரக்கண்டமைகூ றற்குச் செய்யுள்;—"யாயின்றெனக்கு மணிமுன்றில்வாய்நென்ன லெல்லியல்லி—வாயொன்றுதேனுமிழ் மாதவிப்பந்தரில் வார்கழற் காற்—சேயொன்றிநின்ற திறமறியாமற் செறியிருட்கட்-பேயொன் றுகண்டஞ்சினே னென்றுகூறினள் பெய்வளையே." எனவும்வரும். இவற்றுட் கலுழ்தற்காரணங்கூறலாகிய ஒன்றுமொழித்து ஏனைய வெல்லாம் பாங்கி வினவாதொழியவுந் தலைமகள் அறத்தொடுநி லைக்கு உரியவாமாறு அறிந்துகொள்க.

அனுவாதமுகத்தான் எறிவளைவேற்றுமைக்கேதுவினவலும், வெறிவிலக்கலும், வெறிவிலக்கியவழிவினுதலும் ஈண்டேவரப்பெறு மெனக்கொள்க.

செவிலி தலைமகள்வேற்றுமைகண்டு பாங்கியைவினுதற்குச் செய்யுள்;—"வேயினமென்றோண் மெலிந்தொளிவாடி விழிபிறி தாய்ப்—பாயினமேகலை பண்டையளல்லள் பவளச்செவ்வி—யாயி னவீச னமரர்க்கமரன்சிற் றம்பலத்தான்—சேயினதாட்சியிற் பட் டனளாமித் திருந்திழையே." எனவும், வெறிவிலக்கற்குச் செய் யுள்;—"கடவுட் கற்சுனை யடையவிழ்ந் தமைந்த—பறியாக் குவளை மலரொடு காந்தட்—குருதி யொண்பூ வுருகெழக் கட்டிப்—பெரு

வரை யடுக்கம் பொற்பச் சூர்மக—ளருவி யின்னியத் தாடு நாடன்—மார்புதர வந்த படர்மலி யருநோய்—நின்னணங் கன்மை யறிந்து மாணுது—கார்நறுங் கடம்பின் கண்ணி சூடி—வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்—கடவு ளாயினு மாக-மடவை மன்ற வாழிய முருகே." எனவும், வெறிவிலக்கியவழிச் செவிலி தோழியைவினு தற்குச் செய்யுள்;—"மண்குன்றவந்த கலியினைமாற்றிய வாணன் றஞ்சை—யொண்குன்றமங்கையர் முன்னர்மின்னேயுமை யாண்மக னைப்—பண்குன்றவென்றசொல் வள்ளிதன்கோனைப்பைந் தாரயிலால்-வெண்குன்றெறிந்தசெவ் வேளையிவ்வாறென் விளம்பியதே." எனவும், தோழி பூத்தருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றற்குச் செய்யுள்;—"போருறைதீக்கணை போலுநின்கண்கண்டு போதவஞ்சி—நீருறைநீலமு நீயுநண்பாகென்று நின்மகட்கோர்—தாருறைதோளவர் தந்தனர்வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்—காருறைசோலையில்யாம் விளையாடிய காலையிலே." எனவும், புனறருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றற்குச் செய்யுள்;—"ஒழிதோற்றியசொல்லி யுன்மகளோதிக் குடைந்தகொண்டல்—பொழிதோற்றிரளுந்தி வந்தசெந்நீருந்திப் பொற்பினுக்கோர்—சுழிதோற்றிடும்பகை தீர்க்கின்றபோதொரு தோன்றலுமவ்—வழிதோற்றிவந்தெடுத்தான் றஞ்சைவாணன்றென் வையையிலே." எனவும், களிறுதருபுணர்ச்சியான் அறத்தொடுநிற்றற்குச் செய்யுள்;—"மண்ணலையாமல் வளர்க்கின்றவாணன்றென் மாறைவெற்பி—லண்ணலையாயிழை பாகனென்றஞ்சின மஞ்சனந்தோய்—கண்ணலைநீரிடப் பாகமுமேல்வந்த கைக்களிற்றின்—புண்ணலைநீர்வலப் பாகமுந்தோயப் பொருதவன்றே." எனவும் வரும். இம் மூன்றனுள் ஒன்றூன் அறத்தொடுநிற்க அமையுமெனக் கொள்க.

அனுவாதமுகத்தாற் றலைமகள்வேற்றுமைகண்டு நற்றாய் செவிலியைவினுதலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"குணங்குற்றமென்னுமக் கூறறியாத குதலைமென்சொ—லணங்குற்றமைய லறிந்தனையோவரும் பாமுலைகள்—சுணங்குற்றனவளை தோளுற்ற னவில்லைச் சொற்றளரு—நிணங்குற்றவேற்க ணிறம்பசப்பூர நிரைவளையே." எனவும், செவிலிநற்றாய்க்குமுன்னிலைமொழியான் அறத்தொடுநிற்றற்குச் செய்யுள்;—"இளையாளிவளையென் சொல்லிப்பரவுது மீரெயிறு—முளையாவளவின் முதுக்குறைந்தாண்முடி சாய்த்திமையோர்—வளையாவழுத்தா வருதிருச்சிற்றம் பலத்துமன்னன்—றிளையாவருமருவிக் கயிலைப்பயில் செல்வியையே." எனவும் வரும். நற்றாய்குறிப்பினன்றி அறத்தொடுநிற்கப் பெறாளென்றமையால் அதற்கு உதாரணமின்று. (கசுக)

ருகச. போக்கே கற்பொடு புணர்ந்த கவ்வை
மீட்சியென் றாங்கு விளம்பிய மூன்றும்
வெளிப்படைக் கிளவி வெளிப்படு தொகையே.

இது களவுவெளிப்பாட்டிற்கு உரிய கிளவித்தொகை இத்து ணைத்தென்கின்றது.

இ - ள். போக்கு முதலாக மீட்சி ஈறாகச் சொல்லப்பட்ட மூன்றுங் களவுவெளிப்பாட்டிற்கு உரிய கிளவித்தொகை. எ - று.()

ருகரு. போக்கறி வுறுத்தல் போக்குடன் படாமை
போக்குடன் படுத்தல் போக்குடன் படுதல்
போக்கல் விலக்கல் புகழ்த றேற்றலென்
றியாப்பமை யுடன்போக் கிருநான்கு வகைத்தே.

இது நிறுத்தமுறையானே களவுவெளிப்படைக்கிளவித்தொ கை மூன்றனுட் போக்குவகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். போக்கறிவுறுத்தல் முதலாகத் தேற்றல் ஈறாக எட்டு வகையினையுடைத்தாம் அன்பமைந்த உடன்போக்கு. எ - று. ()

ருகசா. பாங்கி தலைவற் குடன்போக் குணர்த்தலு
மாங்கவன் மறுத்தலு மவளுடன் படுத்தலுந்
தலைவன் போக்குடன் படுதலும் பாங்கி
தலைவிக் குடன்போக் குணர்த்தலுந் தலைவி
நாணழி பிரங்கலுங் கற்புமேம் பாடு
பூண்முலைப் பாங்கி புகறலுந் தலைவி
யொருப்பட் டெழுதலும் விருப்புடைப் பாங்கி
சுரத்திய லுரைத்துழிச் சொல்லலும் பாங்கி
கையடை கொடுத்தலும் வைகிருள் விடுத்தலு
மவன்சுரத் துய்த்தலு மசைவறிந் திருத்தலு
முவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந் துரைத்தலுங்
கண்டோ ரயிர்த்தலுங் காதலின் விலக்கலுந்
தன்பதி யணுமை சாற்றலுந் தலைவன்
றன்பதி யடைந்தமை தலைவிக் குணர்த்தலு
மென்றிவை யொன்பதிற் றிருவகைக் கிளவியு
மொன்றிய வன்பி னுடன்போக்கு விரியே.

இஃது உடன்போக்குவிரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். பாங்கிதலைவற்கு உடன்போக்குணர்த்தல் முதலாகத் தலைவன் தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல் ஈறாகச் சொல்லப்பட்ட கிளவிகள் பதினெட்டும் பொருந்திய அன்பினையுடைய உடன்போக்குவிரியாம். எ - று.

'ஒன்றிய அன்பின்' என்ற இலேசானே தலைவி ஒருப்பட்டெழுந்தவழி அங்ஙனம் ஒருப்பட்டெழுந்தமை பாங்கி தலைவற்குணர்த்தலுங், கண்டோர் தம்பதியணுமைசாற்றியபின்னர்த் தலைவன் தன்பதியணுமை தலைவிக்குச்சாற்றலும், அவட்குத் தன்னகர்காட்டலுந், தலைவன் தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தியபின்னர்த் தலைவியோடு தன்மனைசார்தலும் வரவும்பெறும்.

பாங்கி தலைவற்கு உடன்போக்குணர்த்தற்குச் செய்யுள்;—"மைநீர்நெடுங்கண் மடந்தையுடன்றஞ்சை வாணன்வெற்பா—செந்நீர்விழவணி நின்னகர்க்கேசென்று சேர்ந்தருண்மற்—றிந்நீர்மையன்றியொ ராறுமின்றாலிங்கெம் மையரென்றான்-முந்நீருலகுங்கொள்ளார் விலையாக முலையினுக்கே." எனவும், தலைவன் உடன்போக்கு மறுத்தற்குச் செய்யுள்;—"மெல்லியல்கொங்கை பெரியமின்னேரிடை மெல்லடிபூக்—கல்லியல்வெம்மைக் கடங்கடுந்தீக்கற்று வானமெல்லாஞ்-சொல்லியசீர்ச்சுடர்த் திங்களங்கண்ணித்தொல் லோன்புலியூ—ரல்லியங்கோதைநல்லா யெல்லைசேய்த்தெம்—மகனகரே." எனவும், பாங்கி தலைமகனையுடன்படுத்தற்குச் செய்யுள்;—"பிணையுங்கலையும்வன் பேய்த்தேரினைப்பெரு நீர்நசையா—லணையுமுரம்பு நிரம்பிய வத்தமு மையமெய்யே—யிணையு மளவுமில் லாவிறையோனுறை தில்லைத்தண்பூம்—பணையுந்தடமுமன்றே நின்னொடேகிலெம் பைந்தொடிக்கே." எனவும், தலைவன் போக்குடன்படுதற்குச் செய்யுள்;—"இன்னுதகானு மினிதென்றுநீரிங் கியைந்தவன்பு-மங்நாளளித்த வணங்குமுண்டேயென தாவியன்னார்-மின்னார்திருந்திழை மெய்வருந்தாவகை மெல்லமெல்லப்—பன்னாள்படவுமுடன்கொண்டுசேறும் பணிமொழியே." எனவும், பாங்கிதலைவிக்கு உடன்போக்குணர்த்தற்குச் செய்யுள்;—"குறப்பாவைநின்குழல் வேங்கையம்போதொடு கோங்கம்விராய்—நறப்பாடலம்புனை வார்கிணைவார்தம் பிரான்புலியூர்—மறப்பானடுப்பதொர் தீவினைவந்துநிற் சென்றுசென்று—பிறப்பானடுப்பினும் பின்னுந்துன்னத்தகும் பெற்றியரே." எனவும், தலைவிநாணழிபிரங்கற்குச்செய்யுள்;—"மறவாகைவேலங்கை வாணனைமாறையர் மன்னனைத்தம்—முறவாகவெண்ணி

யுருதவர்போலுயி ரோம்பியென் றுந்—துறவாதநாணந் துறப்பது வேண்டலிற் றெல்லுலகிற்—பிறவாதொழிகைநன்றே யொருகால மும் பெண்பிறப்பே." எனவும், கற்புமேம்பாடு பூண்முலைப்பாங்கி புகறற்குச் செய்யுள்;—"தாயிற்சிறந்தன்று நாண்டையலாருக்கந் நாண்டகைசால்—வேயிற்சிறந்தமென் ரோளிதிண்கற்பின் விழுமி தன்றீங்—கோயிற்சிறந்துசிற் றம்பலத்தாடுமெங் கூத்தப்பிரான்—வாயிற்சிறந்த மதியிற்சிறந்த மதிநுதலே." எனவும், தலைவி ஒருப் பட்டெழுதற்குச் செய்யுள்;—"மற்பாய்விடையோன் மகிழ்புலியூ ரென் னெடும்வளர்ந்த—பொற்பார்திருநாண் பொருப்பாவிருப்புப் புகுந்துநுந்தக்—கற்பார்கடுங்கால் கலக்கிப்பறித்தெறி யக்கழிக—விற்பாற்பிறவற்க வேழையர்வாழி யெழுமையுமே." எனவும், அங் ஙனம் ஒருப்பட்டெழுந்தமை பாங்கி தலைவற்குணர்த்தற்குச் செய் யுள்;—"மின்னேய்மருங்கு னெருங்குபைங்கோதை விளங்கிழை நின்—பின்னேவருதல் கருதியபோதுமென் பிள்ளைக்கிள்ளை—யன் னேமகவன்பு மத்தனையோவென்ற தத்தனைபின்—கொன்னேயரு மந்த கொங்கைகண்ணீரிற் குளித்தனவே." எனவும், பாங்கி சுரத்தி யல்புரைத்துழித் தலைமகள் சொல்லற்குச் செய்யுள்;—"செல்லிற் கொடிய களிற்றண்ணல்வாணன்றென் மாறையன்ன—வில்லிற் கொடிய புருவமின்னேயென் விளம்புதிநீ—சொல்லிற்கொடியநம் மன்னையைப்போலலர் சூழ்ந்திருக்கு—மில்லிற்கொடியகொல்லோ செல்லுநாட்டவ் விருஞ்சுரமே." எனவும், பாங்கி தலைமகளைத் தலை மகற்குக் கையடைகொடுத்தற்குச் செய்யுள்;—"பறந்திருந்தும்பர் பதைப்பப்படரும் புரங்கரப்பச்—சிறந்தெரியாடிதென் றில்லையன் னுடிறத் துச்சிலம்பா—வறந்திருந்துன்னரு ளும்பிறிதாயி னருமறையின்—றிறந்திரிந்தார்கலியும் முற்றும்வற்றுமிச் சேணிலத்தே." எனவும், பாங்கி வைகிருள்விடுத்தற்குச் செய்யுள்;—"ஊருங்கலி கெழு சேரியுந்தாயரு முட்புலம்பித்—தேரும்பழிபுக ழாக்கிவந்தெய் துவை சேயனையாய்—வாரும்பருமணி வம்பும்பொருமுலை வல்லி யுடன்—யாருந்துயில்கொள்ளு நள்ளிருள்யாமத் தெழுந்தருளே." எனவும், தலைவியைத் தலைவன் சுரத்துய்த்தற்குச் செய்யுள்;—"பே ணத் திருத்திய சீறடி மெல்லச்செல் பேரரவம்—பூணத்திருத்திய பொங்கொளியோன்புலி யூர்புரையு—மாணத்திருத்திய வான்பதி சேரு மிருமருங்கும்—காணத்திருத்திய போலுமுன்னுமன்னு கா னங்களே." எனவும், தலைமகன் தலைமகளசைவறிந்திருத்தற்குச் செய்யுள்;—"வரமாவைவேற்படை வாணன்றென்மாறை வணங்க லர்கள்—புரமானவல்லழற் பொங்குவெங்கானிற் பொருந்தியகூ—ரரமாயகல்லுன் னடிமலராற்றல வாதலினுஞ்—சுரமாறுமெல்லை

நல்லா யிருப்பாமிந்தச் சோலையிலே." எனவும், தலைமகன் தலைமகளை உவந்து அலர்சூட்டி உண்மகிழ்ந்துரைத்தற்குச் செய்யுள்;—"அடிமலர்போற்றவும் போற்றிசெய்யாவிவ ளாய்முடிக்கியான்—கடிமலாசூட்டவுங் காட்டியதாற்கள்வர் காய்ந்தெறியுந்—துடிமலர் சிர்க்கெதிர் கூகையிரட்டுஞ் சுரத்திடையோர்—வடிமலர்வேற்படையான் வாணன்மாறையென் மாதவமே." எனவும், கண்டோரயிர்த்தற்குச்செய்யுள்;—"கருவார்புயலென்றுங் கண்டறியாதவிக் கானகத்தே—வருவார்சிலரலர் மற்றிவரியாவர்கொல் வாரிதந்த—திருவாமெனிலிவள் செங்கையிற்பங்கய மில்லைச்செல்வன்—மருவார் துளாவணி மாலெனின்மார்பின் மறுவில்லையே." எனவும்வரும்.

ஒன்றெனமுடித்தலாற் கண்டோர்மகிழ்தலும் இரங்கலும் வரப்பெறுதல் கொள்க. அவற்றிற்குச் செய்யுள்;—"முன்செல்லநாளு முகிணகைவல்லி முருகனிவன்—பின்செல்லவெண்ணும் பிடிநடைகாணவிப் பேருலகிற்—புன்செல்வர்தேடும் பொருள்போலிறுகப் பொதிந்தவன்பை—யென்சொல்லவிங்ஙன் ஞலைந்ததிவ்வாறிவ் விருவர்க்குமே." எனவும், "பேதைப்பருவங் கழிந்திலளின்னமும் பேணியதன்—காதற்கொழுநன் விழுமியகேண்மையைக் காதலித்துப்—போதற்கரிய புகையழற்கானகம் போந்தவிந்த—மாதைப் பயந்த மடந்தையெவ்வாறுயிர் வாழ்ந்தனளே." எனவும் முறையேகாண்க.

கண்டோர் காதலின்விலக்கற்குச்செய்யுள்;—"எம்மூ ரல்ல நூர்நணி யில்லை—வெம்முரட் செல்வன் கதிரு மூழ்த்தனன்—சேர்ந்தனை சென்மோ பூந்தார் மார்ப—விளையண் மெல்லியண் மடந்தை—யரிய சேய பெருங்கலாறே." எனவும், கண்டோர்தம்பதியணுமைசாற்றற்குச் செய்யுள்;—"மின்றங்கிடையொடு நீவியன்றில்லைச்சிற் றம்பலவர்—குன்றங்கடந்துசென் ருனின்றுதோன்றுங் குரூஉக்கமலந்-துன்றங்கிடங்குந் துறைதுறைவள்ளைவெள் ளைநகையார்—சென்றங்கடைதடமும் புடைசூழ்தரு சேணகரே." எனவும், தலைவிக்குத் தலைவன் தன்பதியணுமைசாற்றற்குச் செய்யுள்;-"முன்ஞேனருண்முன்னு முன்னுவினையின் முனகர்துன்னு-மின்னுக்கடறிதிப் போழ்தேகடந்தின்று காண்டுஞ்சென்று—பொன்னுரணிமணி மாளிகைத்தென்புலி யூர்ப்புகழ்வார்—தென்னுவெனவுடையா னடமாடுசிற் றம்பலமே." எனவும், தலைவிக்குத் தன் நகர் காட்டற்குச் செய்யுள்;—"மின்போல்கொடிநெடு வானக்கடலுட் டிரைவிரிப்பப்—பொன்போல்புரிசை வடவரைகாட்டப் பொலிபுலியூர்—மன்போற்பிறையணி மாளிகைசூலத்த வாய்மடவாய்—நின்

போனடையன்னந் துன்னிமுன்றேன்றுநன் னீணகரே." எனவும், தலைவன்றன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தற்குச் செய்யுள்;—"செய்குன்றுவையிவை சீர்மலர்வாவி விசும்பியங்கி—நைகின்றதிங் களெய்ப் பாறும்பொழிலவை ஞாங்கரெங்கும்—பொய்குன்றவே திய ரோதிடமுந்திட மிந்திடமு—மெய்குன்றவார்சிலை யம்பலவற் கிட மேந்திழையே." எனவும், தலைவன்றலைவியொடு தன்னகர்சார் தற்குச் செய்யுள்;—"சங்கமுழங்க மணிமுரசார்ப்பத் தமரெதிர் கொ—ளங்கணலந்திக ழாவணம்போயகன் மாளிகையிற்—பொங்கி லைவேலனும் பூவையுமேயினர் புண்டரிகச்—செங்கைவலந்திகிரித் திருமாலுந் திருவுமொத்தே." எனவும் வரும்.

இவற்றுட் பாங்கி தலைமகட்குடன்போக்குணர்த்தலுந் தலைவிக்குடன்போக்குணர்த்தலுமாகிய இரண்டும் போக்கறிவுறுத்தற்கும், தலைமகன்மறுத்தலுந் தலைவிநாணழிபிரங்கலுமாகிய இரண்டும் போக்குடன்படாமைக்கும், பாங்கிதலைவனையுடன்படுத்தலுந் தலைவிக்குக் கற்புமேம்பாடுகூறலுமாகிய இரண்டும் போக்குடன்படுத்தற்குந், தலைவன்போக்குடன்படுதலுந் தலைவியொருப்பட்டெழுதலும் பாங்கிசுரத்தியலுரைத்துழிச் சொல்லலுமாகிய மூன்றும் போக்குடன்படுதற்கும், பாங்கிகையடைகொடுத்தலும் வைகிருள்விடுத்தலுந் தலைமகன் தலைமகளைச் சுரத்துய்த்தலுமாகிய மூன்றும் போக்கற்குந், தலைவன் தலைவியை அசைவறிந்திருத்தலுங் கண்டோர்காதலின்விலக்கலுமாகிய இரண்டும் விலக்கற்குந், தலைவன் தலைவியை உவந்த தலர்சூட்டி உண்மகிழ்ந்துரைத்தலுங் கண்டோரயிர்த்தலுமாகிய இரண்டும் புகழ்தற்குங், கண்டோர்தம்பதியணுமைசாற்றலுந் தலைவன் தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தலுமாகிய இரண்டுந் தேற்றற்கும் உரியவாம். (கசுச)

ருசுஎ. செவிலி புலம்ப னற்றாய் புலம்பல்
கவர்மனை மருட்சி கண்டோ ரிரக்கஞ்
செவிலிபின் றேடிச் சேறலென் றாங்குக்
கற்பொடு புணர்ந்த கவ்வையை வகைத்தே.

கற்பொடுபுணர்ந்தகவ்வை கூறுவனவற்றுள் இஃது அதன் வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். செவிலிபுலம்பல் முதலாகச் செவிலி பின்றேடிச்சேறல் ஈறாக ஐந்துவகையினையுடைத்தாங் கற்பொடுபுணர்ந்தகவ்வை. எ - று.

மனையெனினும் நற்றாயெனினும் ஒக்கும். (கசுரு)

ருகூஅ. வினவிய பாங்கியி னுணர்ந்த காலை
யினைய லென்போர்க் கெதிரழிந்து மொழிதலுந்
தன்னறி வின்மை தன்னொடு நொந் துரைத்தலுந்
தெய்வம் வாழ்த்தலு மிவ்வொரு மூன்றுஞ்
செவிலி யறத்தொடு நிற்றலிற் கவலையில்
பாங்கி தன்னொடும் பாங்கியர் தம்மொடு
மயலார் தம்மொடும் பயிலிடந் தன்னொடுந்
தாங்கல ளாகிச் சாற்றிய நான்கு
நிமித்தம் போற்றலுஞ் சுரந்தணி வித்தலுந்
தன்மகண் மென்மைத் தன்மைக் கிரங்கலு
மிளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கலு
மச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கலு
மாகிய வைந்தும் போகிய விறைமக
ளாயமுந் தாயு மழுங்கக் கண்டு
காதலி னிரங்குங் கண்டோ ரிரக்கமு
மாற்றாத் தாயைத் தேற்றலு மாற்றிடை
முக்கோற் பகவரை வினுதலு மிக்கோ
ரேதுக் காட்டலு மெயிற்றியொடு புலம்பலுங்
குரவொடு புலம்பலுஞ் சுவடுகண் டிரங்கலுங்
கலந்துடன் வருவோர்க் கண்டுகேட் டலுமவர்
புலம்ப றேற்றலும் புதல்வியைக் காணாது
கவலைகூர் தலுமெனு மிவையொன் பானுமென்
றித்திற மியம்பிய வெழுமூன் றொன்றுங்
கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரியே.

இது கற்பொடுபுணர்ந்தகவ்வையின் விரி இத்துணைத்தென்கின்றது.

இ-ள். வினவியபாங்கியினுணர்ந்தகாலை இனையலென்போர்க்கெதிரழிந்துமொழிதல் முதலாகத் தெய்வம்வாழ்த்தல் ஈறாகச் சொல்லப்பட்ட இவ்வொருமூன்றுஞ், செவிலியறத்தொடுநிற்றலிற் கவலையில் பாங்கிதன்னொடுபுலம்பல் முதலாகப் பயிலிடந்தன்னொடுபுலம்பல் ஈறாகச் சொல்லப்பட்ட நான்கும், நிமித்தம்போற்றல் முதலாக

அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கல் ஈருகச் சொல்லப்பட்ட ஐந்தும், போகியதலைமகள் ஆயத்தாரும் நற்ருயும் இரங்குமாறு கண்டு அன்பினன் இரங்குங் கண்டோரிரக்கமாகிய ஒன்றும், ஆற்ருத்தாயைத்தேற்றல் முதலாகப் புதல்வியைக்காணுது கவலைகூர்தல் ஈருகச் சொல்லப்பட்ட ஒன்பதுமென்று இவ்வாறுகூறிய இருபத்திரண்டு கிளவியுங் கற்பொடுபுணர்ந்த கவ்வையின்விரியாம். எ - று.

அனுவாதமுகத்தாற் செவிலி பாங்கியைவினவலும் பாங்கி செவிலிக்குணர்த்தலுஞ் செவிலி நற்ருய்க்கறத்தொடுநிற்றலும் வரப்பெறும்.

ஒன்றெனமுடித்தலாற் செவிலி நற்ருய்க்கறத்தொடுநிற்றலின் பின்னர் நற்ருய் தன்னுள்ளே இரங்கலும், நற்ருய் பாங்கிதன்னெடு புலம்பலின்பின்னர்த் தோழியழுங்க நற்ருய்புலம்பலும், அயலார்தம்மொடு புலம்பலின்பின்னர்த் தத்தையொடுபுலம்பலும், நிமித்தம் போற்றலின்பின்னர்த் தலைவன் மிகவன்புசெய்கவென்று தெய்வத்திற்குப் பராயதூஉம்,முக்கோற்பகைவரை வினுதலின்பின்னர் மாவிரதியரைவினுதலும், அதன்பின்னர் உய்த்துணர்வோரை உரைமினென்றலுங், குரவொடுபுலம்பினபின்னர்ப் புறவொடுபுலம்பலும் வரவும்பெறும்.

அவற்றுட் செவிலிபாங்கியைவினுதற்குச் செய்யுள்;-"மயிலெனப்போர்ந்திள வல்லியினெல்கிமென் மான்விழித்துக்—குயிலெனப் பேசுமெங் குட்டனெங்குற்றதென் னெஞ்சகத்தே—பயிலெனப் போர்ந்தறி யாதவன்றில்லைப்பல் பூங்குழலா—யயிலென்பேருங் கண்ணு யென்கொலாமின் றயர்கின்றதே." எனவும், பாங்கி செவிலிக்குணர்த்தற்குச் செய்யுள்;—"ஆளரிக்கும்மரி தாய்த்தில்லையாவருக் கும்மெளிதாங்—தாளரிக்குன்றிற்றன் பாவைக்குமேவித் தழறிகழ்வேற்—கோளரிக்குங்நிக ரன்னுரொருவர் குரூஉமலர்த்தார்—வாளரிக்கண்ணிகொண்டாள் வண்டலாயத்தெம் வாணுதலே." எனவும், பாங்கியினுணர்ந்தசெவிலி தேற்றுவார்க்கு எதிரழிந்துமொழிதற்குச் செய்யுள்;—"வடுத்தான்வகிர்மலர் கண்ணிக்குத்தக்கின்று தக்கன்முத்தீக்—கெடுத்தான்கெடலிருல் லோன்றில்லைப்பன்மலர் கேழ்கிளர—மடுத்தான்குடைந்தன் றழுங்கவழுங்கித் தழீஇமகிழ்வுற்—றெடுத்தார்க்கினியனவே யினியாவன வெம்மனைக்கே." எனவும், செவிலி தன்னறிவின்மைதன்னை நொந்துரைத்தற்குச் செய்யுள்;—"முறுவலக்காறந்து வந்தென்முலைமுழு வித்தழுவிச்—சிறுவலக்காரங்கள் செய்தவெல்லாமுழு துஞ்சிதையத்—தெறுவலக்கா

லனைச் செற்றவன்சிற்றம் பலஞ்சிந்தியா—ருறுவலக்கானகந்தான் படர்வானு மொளியிழையே." எனவும் வரும்.

முழுவி, முத்தங்கொண்டு; வலக்காரம், விரகு.

செவிலி தெய்வம்வாழ்த்தற்குச் செய்யுள்;—"வேமாறுசெய் யவென் மெல்லியலாளை விதித்தனைநீ—யாமாறுசெய்தனை யாரணங்கேநின் னருளொழிந்தால்—யாமாறுவண்ண மிதற்கொன்றுமில்லையொ ரேதிலன்பின்—போமாறுசெய்விதநீ வருமாறும் புரந்தருளே." எனவும், செவிலி நற்றாய்க்கு அறத்தொடுநிற்றற்குச் செய்யுள்;—"தொடுப்பார்தொடுத்தலர் தூற்றும்பழிவந்து சூழ்விதியைத்-தடுப்பாரெவரினிச் சாற்றுவதென்கொ நடத்தின்முன்வீழ்ந்—தெடுத்தானொருவ னிருப்பநின்றூர்தம் மிருநிதிக்குக்—கொடுப்பானிசைந்தன மென்றுசென்றாணங் குலக்கொடியே." எனவும், நற்றாய் தன்னுள்ளே இரங்கற்குச் செய்யுள்;—"பூவையுண்டோபுனக் கிள்ளையுண்டோவெண் புதியமணற்—பாவையுண்டோபெற்ற பாவியுண்டோகுன்று பார்த்தழைக்குந்—தேவையுண்டோகற்ற சிற்றிலுண்டோமற்றென் சுற்றமுண்டோ—யாவையுண்டோ மகளே செல்லநீயிவ் வருஞ்சுரமே." எனவும், நற்றாய் பாங்கிதன்னொடு புலம்பற்குச் செய்யுள்;—"முன்னேயிதனை மொழிந்தனையேனுந்தை முந்தைமணம்—பின்னேகுழலி பெறாளல்லளேபிற ழாதெவர்க்குந்-தன்னேயம்வைத்தரு ளுந்தஞ்சைவாணன் றமிழ்ச்சிலம்பிற்—பொன்னேயனையநல்லா யவமேசுரம் போக்கினையே." எனவும், தோழியமுங்க நற்றாய்புலம்பற்குச் செய்யுள்;—"தாயென்செய்தாளென்று தள்ளியென்பாவை தன்பான்மயங்க—மாயஞ்செய்தானொரு வள்ளல்பின்னேயழல் வெஞ்சுரத்துப்—போயென்செய்தாளென் றறிகிலனென்றும் பொறியிலியே—னீயென்செய்வாய்மகளே கண்கணீர்மல்க நின்றுநின்றே." எனவும், நற்றாய் பாங்கியர்தம்மொடுபுலம்பற்குச் செய்யுள்;—"புறந்தாழ்புரிகுழற் பூவைதன்பாவை புனையலங்கற்—சிறந்தானொருவள்ளல் செங்கையதாலெனத் தெய்வந்தொழா—ளறந்தானிலைபெற் றரும்பழிகாக்கு மறிவுநெஞ்சிற் பிறந்தாலருஞ்சுரம் பின்செல்லவேண்டுங்கொல் பேதையரே," எனவும், அயலார்தம்மொடும்புலம்பற்குச் செய்யுள்;—"யாழியன்மென்மொழி வன்மனப்பேதையொ ரேதிலன்பின்—றோழியைநீத்தென்னை முன்னேதுறந்துதன் னூர்கண்முன்னே—வாழியிம்மூதூர் மறுகச்சென்றாளன்றுமால்வணங்க—வாழிதந்தானம் பலம்பணியாரி னருஞ்சுரமே." எனவும், தத்தையொடுபுலம்பற்குச் செய்யுள்;—"கொன்னுனைவேலம் பலவற்றெழாஅரிற் குன்றங்கொடியோ—ளென்னணஞ்சென்றன

ளென்னணஞ்சேரு மெனவயரா—வென்னனைபோயினள் யாண் டையளென்னைப் பருந்தடுமென்—றென்னனைபோக்கன் றிக் கிள்ளை யென்னுள்ளத்தை யீர்கின்றதே.” எனவும், நற்றாய் தலைமகள்பயி லிடந்தன்னொடு புலம்பற்குச் செய்யுள்;—“நன்றேயுமக்கவர் நல்ல தெல்லாஞ்சொல்லி நவ்வியிளங்—கன்றேயருமணிக் கந்துகமேகண் கலந்தழைக்குங்—குன்றேகுவலையங் கொய்தடமேயெதிர் கூஉங்கு யிலே—யென்றேகொலும்மையு மென்னையுங்காணவந் தெய்துவ தே.” எனவும், நிமித்தம்போற்றற்குச் செய்யுள்;—“பணங்களஞ்சா லும் பருவரவார்த்தவன் றில்லையன்ன—மணங்கொளஞ்சாயலு மன்னனுமின்னே வரக்கரைந்தா—லுணங்கலஞ்சாதுண்ண லா மொண்ணிணப்பலி யொக்குவன்மாக்—குணங்களஞ்சாற்பொலியுங் நலசேட்டைக் குலக்கொடியே.” எனவும்,தலைவன் மிக அன்புசெய் கவென்று தெய்வத்திற்குப் பராயதற்குச் செய்யுள்;—“ஈன்று புறந் தந்த வேமமுள்ளான்—வான்றோ யிஞ்சி நன்னகர் புலம்பத்—தனி மணி யிரட்டுந் தாளுடைக் கடிகை—நுழைநுதி நெடுவேற் குறும்ப டை மழவர்—முனையர் தந்து முரம்பின் வீழ்த்த—வில்லேர் வாழ்க் கை விழுத்தொடை மறவர்—வல்லரண் பதுக்கைக் கடவுட் பேண் மார்—நடுகற்பீலி சூட்டித் துடிபடத்—தொப்பிக் கள்ளொடு துரூஉப் பலி கொடுக்கும்-போக்கருங் கவலைய புலவுநா றருஞ்சுரந்-துணிந்து பிறளாயின ளாயினு மணிந்தணிந்—தார்வ நெஞ்சமொ டாய்நல னளைஇத்தன்—மார்புதுணை யாகத் துயிற்றுக தில்ல—துஞ்சா முழவிற் கோவற் கோமா—னெடுந்தேர்க் காரி கொடுங்கா முன்று றைப்—பெண்ணையம் பேரியாற்று நுண்ணறல் கடுக்கு—நெறியிருங் கதுப்பினென் பேதைக்—கறியாத் தேஎத் தாற்றிய துணையே.” எனவும் வரும். இஃது அகம். நற்றாய் சுரந்தணிவித்தற்குச் செய் யுள்;—“பெற்றே னொடுங்கிள்ளை வாட முதுக்குறை பெற்றிமிக்கு— நற்றேன்மொழியழற் கானடந்தாண்முக நானணுகப்—பெற்றேன் பிறவி பெருமறச்செய்தோன் றில்லைத் தேன்பிறங்கு—மற்றேன்ம லரின் மலர்த்திரந்தேன்சுடர் வானவனே.” எனவும், நற்றாய் தன்மகள் மென்மைத்தன்மைக்கு இரங்கற்குச் செய்யுள்;— “தாமேதமக்கொப்பு மற்றில்லவர்தில்லைத் தண்ணணிச்சப்—பூமேன் மிதிக்கிற் பதைத்தடிபொங்குநங் காயெரியுந்—தீமேலயில்போற் செ றிபரற்கானிற் சிலம்படிபா—யாமேநடக்க வருவினையேன்பெற்ற வம்மனைக்கே.” எனவும், நற்றாய் தலைமகள் இளமைத்தன்மைக்கு உளமெலிந்திரங்கற்குச் செய்யுள்;-“வைம்மலர்வாட்படை யூரற்குச் செய்யுங்குற் றேவன்மற்றென்—மைம்மலர்வாட்கண்ணி வல்லள் கொல்லாந்தில்லை யான்மலைவாய்—மொய்ம்மலர்க்காந்தளைப் பாந்

தளென்றெண்ணித் துண் ணென்ளுரளித்துக்—கைம்மலராற்கண் புதைத்துப்பதைக்குமெங் கார்மயிலே." எனவும், நற்ளுய் தலைமகள் அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கற்குச் செய்யுள்;-"நாண்மாதவிம லர் நாறிருங்கூந்த னடந்தவழிக்—கோண்மாகுளிறுங் கொடுங்குரல் கேட்டொறுங் கூர்ங்கணையால்—வாண்மாமுனைவென்ற வாணன் றென்மாறை மணிவரைவேய்த்—தோண்மான் வெருவுங்கொல் லோவென்றென்ளுருயிர் சோர்கின்றதே." எனவும், தலைமகள் ஆய முந் தாயும் அழுங்கக்கண்டு காதலினிரங்குங் கண்டோரிரக்கத்திற் குச் செய்யுள்;—"நொந்துங்கலுழ்ந்துந் துணைவியராற்றலர் நோக் கொடின்சொற்—றந்திங்கெவையுந் தணந்துசென்ளுளெனத் தாள் பணியார்—மைந்துங்கதமுந் தடிந்தருள்வாணன்றென் மாறையன் ளுள்—பந்துங்கழங்குமெல்லாங் கண்டுவாடும் பயந்தவளே." என வும், செவிலி ஆற்ளுத்தாயைத்தேற்றற்குச் செய்யுள்;—"வேயின தோளி மெலியல்விண்ணோர்தக்கன் வேள்வியின்வாய்ப்—பாயின சீர்த்திய னம்பலத்தானைப் பழிச் துமும்மைத்—தீயினதாற்றல் சிரங் கண்ணிழந்து திசைதிசைதாய்-போயினவெல்லையெல்லாம் புக்குநா டுவன் பொன்னினையே." எனவும், முக்கோற்பகவரைவினுதற்குச் செய்யுள்;-"வெதிரேய்கரத்துமென் ளுேலேய்சுவல்வெள்ளை நூலிற் கொண்மூ-வதிரேய்மறையினிவ் வாறுசெல்வீர்தில்லை யம்பலத்துக்- கதிரேய்சடையோன் கரமானெனவொரு மான்மயில்போ—லெதி ரேவருமே சுரமேவெறுப்பவொ ரேந்தலொடே." எனவும், மாவிர தியரைவினுதற்குச் செய்யுள்;-"சுத்தியபொக்கணத் தென்பணிகட் டங்கஞ் சூழ்சடைவெண்-பொத்தியகோலத்தினீர் புலியூரம் பலவர் க்குற்ற-பத்தியர்போலப் பணைத்திறுமாந்தபயோதரத்தோர்—பித்தி தற்பின்வர முன்வருமோவொர் பெருந்தகையே." எனவும், உய்த் துணர்வோரை உரைமினென்றற்குச் செய்யுள்;—"முன்னுங்கடு விட முண்டதென்றில்லை முன்னோனருளா—லின்னுங்கடியிக் கடி மனைக்கேமற் றியாமயர—மன்னுங்கடிமலர்க் கூந்தலைத்தான்பெறு மாறுமுண்டே—லுன்னுங்கடிதின்றி யோதுங்களுன்மறை யுத்த மரே." எனவும், மிக்கோர் ஏதுக்காட்டற்குச் செய்யுள்;—"சுரும்பி வர்சந்துந் தொடுகடன்முந் நும்வெண் சங்குமெங்கும்—விரும்பினர் பாற்சென்று மெய்க்கணியாம்வியன் கங்கையென்னும்—பெரும்பு னல்குடும்பிரான்சிவன்சிற்றம் பலமனைய—கரும்பனமென்மொழி யாருமந்நீர்மையர் காணுநர்க்கே." எனவும், செவிலி எயிற்றி யொடு புலம்பற்குச் செய்யுள்;—"பேதைப்பருவம்பின் சென்றது முன்றி லெனைப்பிரிந்தா—லூதைக்கலமரும் வல்லியொப்பாண் முத்தன்றில்லையன்ளு—ளேதிற்சுரத்தய லாளொடின்றேகினள் கண்

டனையே—போதிற்பொலியுந் தொழிற்புலிப்பற்குரற் பொற்றொடி யே." எனவும், செவிலி குரவொடுபுலம்பற்குச் செய்யுள்;-"பாயும்வி டையோன் புலியூரனையவென் பாவைமுன்னே—காயுங்கடத்திடை யாடிக்கடப்பவுங் கண்டுநின்று—வாயுந்திறவாய் குழையெழில் வீசவண் டோலுறுத்த—நீயுநின்பாவையு நின்றுநிலாவிடு நீள்குர வே." எனவும், புறவொடுபுலம்பற்குச் செய்யுள்;—"புயலன்றலர் சடை யேற்றவன்றில்லைப் பொருப்பரசி—பயலன்றனைப்பணியா தவர்போன்மிகு பாவஞ்செய்தேற்—கயலன்றமியனஞ் சொற்று ணைவெஞ்சுர மாதர்சென்று—வியலன்றெனக்கிற்றில்லை மற்றுவாழி யெழிற்புறவே." எனவும், சுவடுகண்டிரங்கற்குச் செய்யுள்;-"தெள் வன்புனற்சென்னி யோனம்பலஞ்சிந்தி யாரினஞ்சேர்—முள்வன் பரன்முரம் பத்தின்முன்செய்வினை யேனெடுத்த—வொள்வன்ப டைக்கண்ணி சீறடியிங்கிவை யுங்குவையக்—கள்வன்பகட்டுர வோனடியென்று கருதுவனே." எனவும், கலந்துடன்வருவோர்க் கண்டு கேட்டற்குச் செய்யுள்;—"பைந்தார்விடலையு நீயுந்தகவிப் பரிசெதிரே—வந்தார்சிலருள ரோமகளேவண்ட லாடுமெந்தண்— சந்தார்தடமுலை யாயமுந்தாயருந் தான்வளர்த்த—செந்தார்மழலைக் கிளியுமென்போலின்று தேடவைத்தே." எனவும், கலந்துடன்வரு வோர் புலம்பதேற்றற்குச் செய்யுள்;-"மீள்வதுசெல்வதன் றன்னை யிவ்வெங்கடத் தக்கடமாக்—கீள்வதுசெய்த கிழவோனெடுங்கிளர் கெண்டையன்ன—நீள்வதுசெய்தகண் ணுளின்னெடுஞ்சுர நீந்தி யெம்மை—யாள்வதுசெய்தவன் றில்லையினெல்லை யணுகுவரே." எனவும், செவிலி புதல்வியைக்காணாது கவலைகூர்தற்குச் செய் யுள்;—"கல்லார்சுரத்து வருவாரிருவரைக் கண்டவெல்லை—யெல் லாமவரவ ரென்றிருந்தேனவ ரெம்மிருவ—ரல்லாநிலைமை யருவி னையேனிங் கறிந்தபின்னுஞ்—செல்லாதுமீண்டொருகா லிருகாலு மென் சிந்தையுமே." எனவும் வரும்.

இவற்றுள் வினவியபாங்கியினுணர்ந்தகாலை இனையலென் போர்க்கு எதிரழிந்திரங்கல் முதலிய மூன்றுஞ் செவிலிபுலம்பற் குஞ், செவிலியறத்தொடுநிற்றலிற் கவலையில் பாங்கிதன்னொடுபுலம் பல் முதலிய நான்கும் நற்றாய்புலம்பற்கும், நிமித்தம்போற்றல் முத லிய ஐந்தும் மனைமருட்சிக்குங், கண்டோரிரக்கமாகிய ஒன்றுங் கண் டோரிரங்கற்கும், ஆற்றாத்தாயைத்தேற்றல் முதலிய ஒன்பதுஞ் செவிலிபின்றேடிச்சேறற்கும் உரியவாமெனக்கொள்க. (கசுசு)

ருஙகூ. தெளித்தன் மகிழ்ச்சி வினாதல் செப்பலென
வெளிப்பட வுரைத்த மீட்சிநால் வகைத்தே.

மீட்சிகூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். தெளித்தல் முதலாகச் செப்பல் ஈருக நான்குவகையினையுடைத்தாம் மீட்சி. எ - று. (கசஎ)

ருசo. தலைவிசே ணகன்றமை செவிலிதாய்க் குணர்த்த [லுந்
தலைவன் றம்மூர் சார்ந்தமை சாற்றலுந்
தலைவிமுன் செல்வோர் தம்மொடு தம்வரல்
பாங்கியர்க் குணர்த்தி விடுத்தலு மாங்கவர்
பாங்கியர்க் குணர்த்தலும் பாங்கியர் கேட்டு
நற்றாய்க் குணர்த்தலு நற்றாய் கேட்டவ
னுளங்கொள வேலனை வினுதலு மெனவுடன்
விளம்பிய விருமூன்று மீட்சியின் விரியே.

இது மீட்சியின்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல் முதலாக நற்றாய் தலைமகனுளங்கொள வேலனைவினுதல் ஈருகச் சொல்லப்பட்ட ஆறும் மீட்சியின்விரியாம். எ - று.

ஒன்றெனமுடித்தலால் உடன்போய்வரைந்த நெடுந்தகைமீட்சியுரைத்தலும் வரப்பெறும்.

தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தற்குச் செய்யுள்;—"சேடார்மலர்க்குழல் வல்லியையன்னைவெந் தீவினையே—ஞடாவயினில்லை ஞாலத்தகவயி னன்கமலக்—காடார்பழனக் கழனிநன்ஞடு கடந்துதன்னூர்—வாடாவளமனைக் கொண்டுசென்ருனொரு வள்ளலின்றே." எனவும், உடன்போய்வரைந்த நெடுந்தகை மீட்சியுரைத்தற்குச் செய்யுள்;-"அனைத்தாயதன்னக ரான்றபொன் மாளிகைச் சான்றவர்முன்—னெனைத்தாயபல்கிளை யேத்தமணம்புரிந் தின்புறுநாண்—மனைத்தாயர்தந்தைதன் னூர்வண்டலாய மறந்ததெல்லாம்—நினைத்தாணிரைவளை மீண்டானறிந்து நெடுந்தகையே." எனவும், தலைவன்றம்மூர்சார்ந்தமைசாற்றற்குச் செய்யுள்;—"துப்போதுசேயிதழ்த் தூநகையாய்வெஞ் சுரத்திடைநா—மப்போதிருந்த வகன்பொழிலாயத்துன் ருரமுலைக்—கொப்போதியமென் முகைக்கன்னிகாரமிம் முற்றத்துந்—யெப்போதும்வைகு மிளமரக்காவு மிலஞ்சியுமே." எனவும், தலைவி முன்செல்வோர்தம்மொடு

தம்வரல் பாங்கியர்க்குணர்த்தி விடுத்தற்குச் செய்யுள்;—"ஒன்றே யுளங்கொண் டிருபிறப்பெய்தி முத்தீயுமுய்த்து—நன்றேநவில்கின்ற நான்மறையீர்தம்மை நானகன்ற—வன்றேதொடங்கி யலமருமாயத் தரிவையர்க்குச்—சென்றேவருவ துரைமின்கள்யாமத் திருநகர்க்கே." எனவும், முன்செல்வோர் பாங்கியர்க்குணர்த்தற்குச் செய்யுள்;—"நண்போடினியதொர் நல்விருந்தெய்துவிர் நாளையெல்லைத்-தண்போதணிகுழற் றையனல்லீர்செய்ய தண்டமிழ்தோய்—பண்போலினிய பணிமொழிச்செந்தளிர்ப் பைந்தொடிதன்—கண்போலொருவர் கலந்துடன்மீள்வது கண்டனமே." எனவும், பாங்கியர் கேட்டு நற்றாய்க்குணர்த்தற்குச் செய்யுள்;—"மேவியொன்றுரெம்மை மெய்த்துணைபோக விடுத்திருந்த—பாவியென்றுவகை பாக்கியஞ்செய்தனம் பாயரிக்கண்—காவியன்றுளருங் கானகநீந்திநம் மாநகர்வா—யாவியன்றுருடன் வந்தனர்காணென்ப ரந்தணரே." எனவும், நற்றாய் தலைமகளுளங்கொள வேலனைவினுதற்குச் செய்யுள்;—"தென்மாறைநன்னகர் மன்னவன்வாணன் செழுந்தஞ்சைசூழ்—பொன்மாதிரத்துப் புலனுணர்வீர்சுரம் போய்வருவோ—னென்மாதரையென் மனைத்தருமோதன்னை யீன்றநற்றாய்—தன் மாமனையுய்க்குமோ சொல்லுவீரொன்று தானெனக்கே." எனவும் வரும்.

இவற்றுட் தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தலுந் தலைவன் தம்மூர்சார்ந்தமைசாற்றலுமாகிய இரண்டுந் தெளிதற்குந், தலைவி முன்செல்வோர்தம்மொடு தம்வரல் பாங்கியர்க்குணர்த்திவிடுத்தலும் பாங்கியர் நற்றாய்க்குணர்த்தலுமாகிய இரண்டும் மகிழ்ச்சிக்கும், நற்றாய் தலைமகனுளங்கொள வேலனைவினுதலாகிய ஒன்றும் வினுதற்கும், முன்செல்வோர் பாங்கியர்க்குணர்த்தலாகிய ஒன்றுஞ் செப்பற்கும் உரியவாம். (கசுஅ)

ருசக. மடந்தையை யுடன்போய் வரைந்துமீடற்கு
மவண்மனை வரைதற்குந் தன்மனை வரைதற்கு
மியைதலு முரிய செவிலிகூற் றொழித்தே.

இது மேற்கூறியவற்றுள் வரைதற்கும் உரியன இவையென்கின்றது.

இ - ள். மடந்தையையுடன்போய்வரைந்துமீடற்கும் வரையாமல்மீண்டு அவளது மனையின்கண்ணேயாதல் தன்மனையின்கண்ணேயாதல் வரைந்துகோடற்கும் இலக்கணத்தான் உரியவாஞ் செவிலிகூற்றாகிய ஒன்றையும் ஒழித்து அல்லாத ஐந்தும். எ - று. ()

ருசஉ. வினுதல் செப்பன் மேவலென் றிறைவன்
றனுதில் வரைவு தான்மூ வகைத்தே.

தன்மனைவரைதல் கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். வினுதலுஞ் செப்பலும் மேவலுமென மூன்றுவகையினையுடைத்தாந் தலைமகன் மீண்டுவந்து தன்மனையின்கண்ணே வரைதல். எ - று. (கஎ0)

ருசங. பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்
செவிலியை வினுதலுஞ் செவிலிக் கிகுளை
வரைந்தமை யுணர்த்தலும் வரைந்தமை செவிலி
நற்றாய்க் குணர்த்தலு முற்றாங் கிருவருந்
தலைவியில் வந்துழித் தலைவன் பாங்கிக்
கியான்வரைந் தமைநுமர்க் கியம்புசென் றென்றலுந்
தானது முன்னே சாற்றிய துரைத்தலு
மென்னுமிவ் வைந்து மின்னிலை வேலோன்
மன்னிய தன்மனை வரைதலின் விரியே.

இது தன்மனைவரைதல்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். பணிமொழிநற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியைவினுதல் முதலாகப் பாங்கி தானதுமுன்னே சாற்றியதுரைத்தல் ஈறாகச் சொல்லப்பட்ட ஐந்தும் மீண்டதலைமகன் தலைமகளைத் தன்மனையின்கண்ணே வரைந்துகோடலின் விரியாம். எ - று.

பணிமொழிநற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியைவினுதற்குச் செய்யுள்;—"தாமாகமேவினு நம்மனைக்கேவந்து தண்சிலம்பார்—மாமாதினைமணஞ் செய்வதற்கேமரு வார்கமலப்—பூமாதுகேள்வன் புகழ்த்தஞ்சவாணன் பொருப்பிலினி—யாமாறுயிரனையாய் சொல்வமோவவ ரன்னையர்க்கே." எனவும், செவிலிக்கிகுளை வரைந்தமையுணர்த்தற்குச் செய்யுள்;—"என்னுமியம்புவ தியாய்க்கினிநாமன்னை யின்றுதம்மிற்—கொன்னுருநித்திலக் கோதைநம்மாதைக் கொடிநெடுந்தேர்க்—கன்னுடர்மண்கொண்ட வாணன்றென்மாறையிற் காதலர்தா—நன்னுண்புணம்புணர்ந்தா ரென்றுதூதர் நவின்றனரே." எனவும், வரைந்தமை செவிலி நற்றாய்க்குணர்த்தற்குச் செய்யுள்;—"எனைக்கேளிருநின் றியற்றவங்கேமண வின்ப

மெய்தி—யணைக்கேண்மைநண்ணிய வண்ணல்பின்னாகம் மன்னை யின்றிம்—மனைக்கேவருமென வந்துசொன்னார்தஞ்சை வாணன் வெற்பிற்—சுனைக்கேழ்மலர்க்கழுநீர்க் குழலாய்சில தூதர்முன்னே.'' எனவும், உற்றாங்கிருவருந் தலைவியில்வந்துழித் தலைவன்பாங்கிக்கு யான்வரைந்தமை நுமர்க்கியம்புசென்றென்றற்குச் செய்யுள்;—“ஓங்கும்பலவுங் கதலியுஞ்சூழுமெம் மூர்வயிற்போய்ப்—பாங்கொன் றியசெழும் பாவகன்முன்னர்ப் பணிமொழியாய்—வாங்குஞ்சிலைநு தன் மங்கைக்குமங்கல நாண்புனைந்த—தீங்குன்பெருந்தமர் யாவர்க் குநீசென் றியம்புகவே.'' எனவும், தான் அதுமுன்னேசாற்றின னென்றற்குச் செய்யுள்;—“அன்னைக்கியம்பின னண்டகையான் முன் னறிந்துதென்னன்—றன்னைப்பணிந்துகுற் றேவல்செய்யாது சமரெதிர்ந்த—மன்னைப்புறங்கண்ட வாணன்றென்மாறை வரையி லெங்கள்—பொன்னைக்கொணர்ந்துநுங்கேண் முன்னர்நீபொன் புனைந்ததுவே.'' எனவும் வரும்.

இவற்றுள் நற்றாய் மணனயர்வேட்கையிற் செவிலியைவினாத லாகிய ஒன்றும் வினாதற்கும், வரைந்தமை பாங்கிசெவிலிக்குணர்த்த லும் வரைந்தமை செவிலிநற்றாய்க்குணர்த்தலும் பாங்கி தான் அது முன்னே சாற்றியதுரைத்தலுமாகிய மூன்றுஞ் செப்பற்குந், தலைம கன்வரைந்தமை நுமர்க்கியம்புசென்றென்றலாகிய ஒன்றும் மேவு தற்கும், உரியவாம். (௧௭௧)

௫௪௪. ஆதி யொன்றொழித் தல்லன நான்கு
மாதினை யுடன்போய் வரைந்து மீடற்கு
நீதியி னுரிய நினையுங் காலே.

இது மேற்கூறியவற்றுள் வரைந்துமீடற்கு உரியன இவை யென்கின்றது.

இ - ள். நற்றாய் மணனயர்வேட்கையொன்றும் ஒழித்து அல் லாத நான்குந் தலைமகன்புணர்ந்துடன்போய்த் தலைமகளைத் தன் னூரின் வரைந்துமீடற்கும் உரியவாம் ஆராயுங்காலத்து. எ - று. ()

௫௪௫. இருவ ரில்லிற்கு மியைந்த பன்னொன்று
மொருவகை மீண்டு வரைதலின் விரியே.

இஃது ஒருவகைமீண்டுவரைதலின் விரி இத்துணைத்தெனத் தொகுத்துணர்த்துகின்றது.

இ - ள். தலைமகன் தம்மூர்சார்ந்தமையுணர்த்தல் முதலாகப் பாங்கி தானதுமுன்னே சாற்றியதுரைத்தல் ஈறாகச் சொல்லப்பட்ட அவன்மனைவரைதற்குந் தன்மனைவரைதற்கும் உரிய கிளவி பதினொன்றும் உடன்போய்மீண்டுவரைந்துகோடலின் விரியாம் ஒருபடியாக. எ - று.

ஒருபடியென்றது மேற்சூத்திரங்களுட் கவர்ச்சிநீக்குதற்கெனக் கொள்க. (கஎங)

ருசசு. போக்கறி வுறுத்தல் வரவறி வுறுத்த
னீக்க மிரக்கமொடு மீட்சி யென்றாங்
குடன்போக் கிடையீ டொருநான்கு வகைத்தே.

உடன்போக்கிடையீடு கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். போக்கறிவுறுத்தல் முதலாக மீட்சி ஈறாக நான்குவகையினையுடைத்தாம் உடன்போக்கிடையீடு. எ - று. (கஎச)

ருசஎ. நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத்
தன்செல வுணர்த்தி விடுத்தலுந் தன்செல
வீன்றாட் குணர்த்தி விடுத்தலு மீன்றாட்
கந்தணர் மொழிதலு மறத்தொடு நிற்றலிற்
றமர்பின் சேறலைத் தலைவிகண் டுரைத்தலு
மவன்விடுத் தகறலுந் தமரொடுஞ் செல்பவ
ளவன்புற நோக்கிக் கவன்றரற் றலுமெனு
மிருமூன்று முடன்போக் கிடையீட்டு விரியே.

இஃது உடன்போக்கிடையீட்டுவிரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். நீங்குங்கிழத்தி பாங்கியர்தமக்குத் தன்செலவுணர்த்தி விடுத்தல் முதலாகத் தமருடன்செல்பவள் அவன்புறநோக்கிக் கவன்றரற்றல் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறும் உடன்போக்கிடையீட்டுவிரியாம். எ - று.

உரையிற்கோடலால் தமர் பின்சேறலைக்கண்டோர் இரங்கலும் வரப்பெறும்.

நீங்குங்கிழத்தி பாங்கியர்தமக்குத்தன்செலவுணர்த்திவிடுத்தற்குச் செய்யுள்;—"என்னையிரங்குமென் னையத்தவருக்கு மீன்றெடுத்த—வன்னையெனவருந் தன்னையருக்குமிவ் வாண்டகைதன்—பின்னேவளங்கெழு தண்ணறுங்கானகம் போகின்றவா—சொன்னேனுமக்கெமதூர் செல்லுவீரிது சொல்லுமின்றே." எனவும், தலைமகள் தன்செலவு ஈன்றாட்குணர்த்திவிடுத்தற்குச் செய்யுள்;—"தீட்டச்சொல்லாமழு வார்நெல்லைநாதர் சிலம்பிற்கல்லி—நாட்டச்சொல்லிர்முல்லைப் பந்தர்க்குக்கானவ்வி னுவலரா—தூட்டச்சொல்லிர் புனறேடுமென்பூவை யுறங்கத்தொட்டி-லாட்டச்சொல்லீ ரந்தணீர் பெற்றபாவி யளவுஞ்சென்றே." எனவும், நற்றாய்க்கு அந்தணர் மொழிதற்குச் செய்யுள்;—"அன்பேமருவி யருஞ்சிலைபூண்டகை யாண்டகைபி—னின்பேதைசென்றன ணீணிழற்கானிடை நீபுலம்புற்—றென்பேதுறுவ திலங்கிழையாயிங்ங னெய்தியமான்—றன்பேரறிவுக் குயர்வடமீனுந் தகுவதன்றே." எனவும், நற்றாயறத்தொடுநிற்றலிற் றமர்பின்சேறலைத் தலைவிகண்டுரைத்தற்குச் செய்யுள்;—"உவலைப்பதுக்கை முரம்புசெல்லாம லுலகமங்கை—தவலைத்த விர்த்த தமிழ்த்தஞ்சைவாணன் றரியலர்போங்—கவலைக்கடத்துச் சிலைத்திரைகோலிக் கடும்பகழித்—துவலைப்படைக்கட ளோன்றல் பொற்றேர்வங்கஞ் சூழ்கின்றதே." எனவும், தமர் பின்சேறலைக்கண்டோரிரங்கற்குச் செய்யுள்;—"இருகுன்றனைய விளமுலைமானுடனேகுமிவ—னொருகுன்றெனநின் றுடலும்வெங்கூற்ற மடல்குறித்து—வருகின்றவான்றொடர் வேங்கையைப்போலு மறவர்கெட்டே.—னருகொன்றநின்றினியார் தடுப்பாரென் றறிகிலமே." எனவும்,தலைவியைத்தலைவன்விடுத்தகறற்குச்செய்யுள்;-"கொடித்தேர்மறவர் குழாம்வெங்கரிநிரை கூடிலென்கை—வடித்தேரிலங்கெஃகின் வாய்க்குதவாமன்னு மம்பலத்தோ—னடித்தேரலரென்ன் வஞ்சவனின்னைய ரென்னின்மன்னுங்-கடித்தேர்குழன்மங்கை கண்டிடிவ் விண்டோய் கனவரையே." எனவும், தமருடன்செல்பவள் அவன் புறநோக்கிக் கவன்றரற்றற்குச் செய்யுள்;—"ஏமானெனவஞ்சு மேற்காத்தலினவ் விரவிபொற்றேர்—வாமானின்வாழ்வன வாகபன் னாட்டஞ்சை வாணனென்னார்—போமானதரிடத் தென்னையர் தோன்றப் புறங்கொடுத்த—கோமான்மணிநெடுந்தேர் நுகம்பூண்ட குரகதமே." எனவும்வரும். இவற்றுள் முன்னையமூன்றும் போக்கறிவுறுத்தற்கும் பின்னையமூன்றும் வரவறிவுறுத்தல் முதலாகிய மூன்றற்குந் தனித்தனி உரியவெனக்கொள்க. (களரு)

ருசஅ. தன்னூர் வரைதலுந் தன்மனை வரைதலு
மென்னுமிவ் விரண்டொழித் தெவற்றினுங் கிழவோ
னந்தணர் சான்றோர் முன்னிட் டருங்கலந்
தந்தனன் வரைத றகுதி யென்ப.

இஃது இவ்வகைவரைவொழித்து எவ்வகைவரைவின்கண்ணும் நிகழுந்திறங்கூறுகின்றது.

இ - ள். உடன்போய்த் தன்னூரின்கண்ணே வரைதலும் மீண்டுவந்து தன்மனையின்கண்ணே வரைதலுமாகிய இரண்டுமொழித்து அல்லாத எல்லாவரைவின்கண்ணுந் தலைமகன் அந்தணரையுஞ் சான்றோரையும் முன்னிட்டு அருங்கலங்கொடுத்து வரைதல் உலகியற்கையென்று சொல்லுவர்புலவர். எ - று.

இவ்வாறு வரைந்துகொண்டுழிக் கண்டோர்மகிழ்ந்துகூறியதற்குச் செய்யுள்;—"பூரணபொற்குடம் வைக்கமணிமுத்தம் பொன்பொதிந்த—தோரணநீடுக தூரியமார்க்க தொன்மாலயற்குங்—காரணனேரணி கண்ணுதலோன்கடற் றில்லையன்ன—வாரணவும்முலை மன்றலென்றேங்கு மணமுரசே." எனவரும். (கஎசு)

ருசகூ. பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது
மகிழ்வு மூடலு மூட லுணர்த்தலும்
பிரிவும் பிறவு மருவிய தாகும்.

இது நிறுத்தமுறையானே களவென்னுங் கைகோளுணர்த்தி வரைவின்வழித்தாகிய கற்புணர்த்துவான்புகுந்தவற்றுள் இஃது அதன்பொதுவிலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். பொலிவமைந்த சிறப்பினையுடைய கற்பென்றுசொல்லப்படுவது உள்ளமகிழ்ச்சியும் ஊடலும் ஊடலுணர்த்தலும் பிரிவும் பிறவும் பொருந்தியதாம். எ - று.

பிரமமுதலியனவுங் கற்பாதலொக்குமேனுங் கந்தருவம்போல ஒத்தவன்புடையராதல் ஒருதலையன்மையின் அவை கைக்கிளைபெருந்திணைப்பாற் படுதலின் அவைபோலாது சிறந்த அளவிலின்பத்து ஐந்திணைமருங்கிற் கற்பென்பார் 'பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது' என்றார். அஃதாவது, கொண்டானிற்சிறந்த தெய்வமின்றெனவும் அவனை இன்னவாறேவழிபடுகவெனவும் இருமுதுகுரவரானும் அந்தணர்திறத்துஞ் சான்றோர்தேத்தும் ஐயர்பாங்கினும்

அமரர்ச்சுட்டியும் ஒழுகுமொழுக்கமுந் தலைமகனுனுங் கற்பித்தவா றொழுகுதலும் இனித் தலைமகனுங் களவின்கண் ஓரையும் நாளுந் தீதென்றதனைத் துறந்தொழுகினாற்போல ஒழுகாது ஒத்தினுங் கரணத்தினும் யாத்த சிறப்பிலக்கணங்களைக் கற்பித்துக்கொண்டு துறவறத்திற் செல்லுந் துணையும் இல்லறநிகழ்த்தலுமாம். பிறவென்றதனாற் பிரிந்துழிவரும் விகற்பமெல்லாங் கொள்ளப்படும். (களஎ)

ருரு௦. இல்வாழ்க் கையே பரத்தையிற் பிரிவே
யோதற் பிரிவே காவற் பிரிவே
தூதிற் பிரிவே துணைவயிற் பிரிவே
பொருள்வயிற் பிரிவெனப் பொருந்திய வேழும்
வளமலி கற்பிற் கிளவித் தொகையே.

இது கற்பென்னுங் கைகோளின் கிளவித்தொகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். இல்வாழ்க்கைமுதலாகப் பொருள்வயிற்பிரிதல் ஈறாகச் சொல்லப்பட்ட ஏழுங் கற்பென்னுங் கைகோளின் கிளவித்தொகையாம். எ - று. (களஅ)

ருருக. கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி
பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சியென்
றீங்கு நால்வகைத் தில்வாழ்க் கையே.

நிறுத்தமுறையானே இல்வாழ்க்கை கூறுவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். கிழவோன்மகிழ்ச்சி முதலாகச் செவிலிமகிழ்ச்சி ஈறாகச் சொல்லப்பட்ட நாலுவகையினையுடைத்தாம் இல்வாழ்க்கை. எ - று. (களகூ)

ருருஉ. தலைவன் றலைவிமுன் பாங்கியைப் புகழ்தலுந்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலுந் தலைவியை
வரையுநா ளளவும் வருந்தா திருந்தமை
யுரையா யென்றலும் பெருமக ளுரைத்தலுந்
தலைவனைப் பாங்கி வரையுநா ளளவு
நிலைபெற வாற்றிய நிலைமை வினவுதலு
மன்றன் மனைவரு செவிலிக் கிகுளை

யன்புற வுணர்த்தலும் வாழ்க்கைநன் றறைதலு
மணமனைச் சென்று வந்த செவிலி
பொற்றொடி கற்பிய னற்றாய்க் குணர்த்தலு
நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தலு
மன்னவர் காத லறிவித் தலுமென
வின்னவை பத்துமில் வாழ்க்கை விரியே.

இஃது இல்வாழ்க்கைவிரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். தலைவன் தலைவிமுன் பாங்கியைப்புகழ்தல் முதலாக அன்னவர்காதலறிவித்தல் ஈறாகச் சொல்லப்பட்ட பத்தும் இல் வாழ்க்கைவிரியாம். எ - று.

தலைவன் தலைவிமுன் பாங்கியைப்புகழ்தற்குச் செய்யுள்;— "அன்னாண்முதலின் றளவுளவாய வரும்படர்போய்ப்—பொன்னார மளி பொருந்தினம்யாம்பொருந் தாதவர்மு—னின்னாவரும்பிணிக் கின்மருந்தாக விடைநின்றுநீ முன்னாண்முயன்ற முயற்சியிவ்வாறு முடிந்ததுவே." எனவரும்.

ஒன்றெனமுடித்தலாற் தலைவனைப்பாங்கிபுகழ்தலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"பனிநின்றசோலைப் பலவுச்சினைகலை பாய்ந்துகளக்—கனிநின் றுநீளுங் கணமலைநாட கழைக்கரும்பை—நுனிநின்றருந்திய தொக்குமென்றேமின் னுடங்கிடையா—டினி நின்றநாணந் தடுக்கநின்னோடு தொடுத்தவன்பே." எனவரும்.

தலைவனைப் பாங்கி வாழ்த்தற்குச் செய்யுள்;—"தேற்றியவஞ் சினம் பொய்யாவகைநின் றிருப்புயத்தி—லேற்றியதொங்க லிவள் குழற்கேற்றி யிலங்கிழையார்—தூற்றியபோல வருந்தொலையா வென்கண் சோர்புனலு—மாற்றியவெம்பெருமான் வாழிவாழி வளஞ்சிறந்தே." எனவும், வரையுநாளளவும் வருந்தாதிருந்தமை பாங்கி தலைவியைவினாதற்குச் செய்யுள்;—"தினைக்காவன்மாறி மலைக்கும்வெம்போர்வெஞ் சிலைக்குறவர்—மனைக்காவலிற்றனி வைகியநாளும் வரைவிடைவைத்—துனைக்காதலர்விட் டுறைந்தவந் நாளு மொளித்ததெங்கே—சுனைக்காவியன்னகண்ணாய் தொலையா நலந் துய்க்குமன்பே." எனவும், தலைமகள் வருந்தாதிருந்ததற்குக் காரணங்கூறற்குச் செய்யுள்;-"பாங்காயவின்பப் பனிமொழியாயிப் பரிசுநெஞ்சிற்—றாங்காவருநலந் தாங்கரிதோதலை நாளளித்த—பூங் காவியுண்டு புரவலர்தாம்வந் திரவுபக—னீங்காதநெஞ்சமுண் டென்

றஞ்சமாகிய நீயுமுண்டே.'' எனவும்,பாங்கிதலைவனை வரையுநாளளவு நிலைபெறவாற்றிய நிலைமைவினுதற்குச் செய்யுள்;—"முருகவிழுங்கு ழன் மோந்தவளேந்து முலைபுளகித்—துருகமுயங்கி மயங்கியுநீருல வாதவின்பம்—பெருகுவதன்றி யலம்பிறவாபின்னை யானுமக்கிங்—கருகியநாளென்செய்தி ரையனேயிந்த வன்புகொண்டே.'' எனவும், பாங்கி மணமனைச்சென்றசெவிலிக்கு இருவரன்புமுரைத்தற்குச் செய்யுள்;—"சீரியலாவியும் யாக்கையுமென்னச் சிறந்தமையாற்—காரியல்வாட்கண்ணி யெண்ணகலார்கம லங்கலந்த—வேரியுஞ்சந் தும் வியறந்தெனக்கற்பி னிற்பரன்னே—காரியல்கண்டர் வண்டில் லைவணங்குமெங் காவலரே.'' எனவும், பாங்கி செவிலிக்கு இல் வாழ்க்கைநன்றுணர்த்தற்குச் செய்யுள்;—"பானுறடிசிலு மூனூர் கொழுங்குறைப் பாகுமுற்ற—தேனூர்கருனையுந் தீம்புளிப்பாகுநின் சேயிழையா—ளானுதவன்பி னமைத்திமிழ்வாரி யமிழ்தினன்பன்-ருனூறநல்கி யகமகிழ்கூருந் தகுதியளே.'' எனவும், மணமனைச்சென் றுவந்த செவிலி பொற்றொடிகற்பியனற்ருய்க்குணர்த்தற்குச் செய் யுள்;—"அருந்தும்பசியு மடுமணற்சோறு மயர்த்திறைவன்—வருந் தும்பசிக்கு வருந்துமில்வாழ்க்கையும் வேட்கையுடன்—பொருந் தும்விருந்தும் புறந்தருநீர்மையும் போற்றியவன்—றிருந்துந்திறஞ் செயலுங் கற்றவாநின் றிருமகளே.'' எனவும் வரும்.

ஒன்றெனமுடித்தலாற் கற்புப்பயந்த அற்புதமுரைத்தலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—சிற்பந்திகழ்தரு திண்மதிற்றில் லைச்சிற் றம்பலத்துப்—பொற்பந்தியன்ன சடையவன்பூவண மன் னபொன்னின்—கற்பந்திவாய்வட மீனுங்கடக்கும் படிகடந்து—மிற்பந்திவாயன்றி வைகல்செல்லாதவ னீர்ங்களிறே.'' எனவரும்.

செவிலி நற்ருய்க்கு நன்மனைவாழ்க்கையுணர்த்தற்குச் செய் யுள்;—"தொண்டினமேவுஞ் சுடர்க்கழலோன் றில்லைத் தொன்ன கரிற்—கண்டினமேவுமி னியவணின்கொழு நன்செழுமென்—றண்டினமேவுதிண் டோளவன்யானவ டற்பணிவோள்—வண்டின மேவுங் குழலாளயன்மன்னு !மிவ்வயலே.'' எனவும், செவிலி நற் ருய்க்கு இருவர்காதலும் அறிவித்தற்குச் செய்யுள்;—"மன்னவன் றெம்முனை மேற்செல்லுமாயினு மாலரியே—றன்னவன்றேர்புறத் தல்கல்செல்லாது வரகுணனுந்—தென்னவனேத்துசிற் றம்பலத் தான்மற்றைத் தேவர்க்கெல்லா—முன்னவன்மூவலன் ஞளுமற் ருேர்தெய்வ முன்னலளே.'' எனவும் வரும்.

இவற்றுட், தலைவன்தலைவிமுன் பாங்கியைப்புகழ்தலாகிய ஒன்றுங் கிழவோன்மகிழ்ச்சிக்குந், தலைவனைப்பாங்கிவாழ்த்தல் முதலாகச் செவிலிக்கு வாழ்க்கை நன்றறைதல் ஈருகச்சொல்லப்பட்ட ஆறனுட் பெருமகளுரைத்தலாகிய ஒன்றுங் கிழத்திமகிழ்ச்சிக்கும், மற்றவை பாங்கிமகிழ்ச்சிக்கும், செவிலி நற்றாய்க்குத்தலைமகள் கற்பியலுணர்த்தல் முதலாகிய மூன்றுஞ் செவிலிமகிழ்ச்சிக்கும் உரியவாம்.

ருருங. வாயில் வேண்டல் வாயின் மறுத்தல்
வாயினேர் வித்தல் வாயி னேர்தலென்
றாய பரத்தையி னகற்சிநால் வகைத்தே.

பரத்தையிற் பிரிவுணர்த்துவனவற்றுள் இஃது அதன்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். வாயில்வேண்டல் முதலாக வாயினேர்தல் ஈருக நான்குவகையினையுடைத்தாம் பரத்தையிற்பிரிவு. எ - று. (கஅக)

ருருச. காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்
கேது வீதாமிவ் விறைவிக் கென்றலுந்
தனித்துழி யிறைவி துனித்தழு திரங்கலு
மீங்கிது வென்னெனப் பாங்கி வினுதலு
மிறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்தலுந்
தலைவியைப் பாங்கி கழறலுந் தலைவி
செவ்வணி யணிந்து சேடியை விடுப்புழி
யவ்வணி யுழையர்கண் டழுங்கக் கூறலும்
பரத்தையர் கண்டு பழித்தலும் பரத்தைய
ருலகிய னோக்கி விடுத்தலிற் றலைவன்
வரவுகண்டு வந்து வாயில்கண் மொழிதலும்
வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தலு
முதிரா மென்முலை யெதிர்கொண்டு பணிதலும்
புணர்ச்சியு மகிழ்வுமென் றுரைத்தபன் னொன்று
முணர்த்த வுணரு மூடற் குரிய.

இஃது இளையகலாமாகிய ஊடல்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். காதலன்பிரிவுழிக் கண்டோர் புலவிக்கேதுவீதாமிவ் விறைவிக்கென்றல் முதலாகப் புணர்ச்சியின்மகிழ்தல் ஈறாகச் சொல் லப்பட்ட பதினொன்றும் உணர்த்த உணரும் ஊடற்கு உரிய வாம். எ - று.

**கா**தலன்பிரிவுழிக்கண்டோர் புலவிக்கேதுவீதாம் இவ்விறை விக்கென்றற்குச் செய்யுள்;—"பங்கேருகத்தண் பழனநல்லூரன் பவனிவரக்—கொங்கேய்நறுங்குழற் கோதையர்கண்டு குவித்த கையு—மங்கேயவரவ ரன்புக்கருள்செய் தமைத்தகையும்—பொங் கேரிளமுலையாள் புலவாவகை போவதன்றே." எனவும், தனித் துழி இறைவி துனித்தழுதிரங்கற்குச் செய்யுள்;—"அப்புற்றசென் னியன் றில்லையுறாரி னவருறுநோ—யொப்புற்றெழினல மூரன்கவ ரவுள் ளும்புறம்பும்—வெப்புற்றுவெய்துயிர்ப் புற்றுத்தம்மெல் லணை யேதுணையாச்—செப்புற்றகொங்கையர் யாவர்கொலாருயிர் தேய்பவரே." எனவும் வரும்.

ஒன்றெனமுடித்தலாற் "தேவாசுரரிறைஞ் சுங்கழலோன்றில் லை சேரலர்போ—லாவாகனவு மிழந்தேனனவென் றமளியின் மேற்—பூவாரகலம்வந் தூரன்றரப்புலம் பாய்நலம்பாய்—பாவாய்த முவிற்றிலேன் விழித்தே னரும்பாவியனே." எனக் கனவிற்கண்டி ரங்கலுஞ்,"செய்ம்முகநீல மலர்தில்லைச்சிற்றம்பலத்தரற்குக்—கைம் முகங்கூம்பக் கழல்பணியாரிற் கலந்தவர்க்குப்—பொய்ம்முகங்காட் டிக் கரத்தல்பொருத்தமன் றென்றிலையே-நெய்ம்முகமாந்தி யிருண் முகங்கீளு நெடுஞ்சுடரே." எனச் செஞ்சுடர்க்குரைத்ததூஉம்,"பூங் குவளைப்பொலி மாலையுமூரன்பொற் றோளிணையு—மாங்குவளைத்து வைத் தாரேனுங்கொள்கநள் ளாரரணந்-தீங்குவளைத்தவில் லோன் றில்லைச்சிற்றம் பலத்தயல்வா—யோங்குவளைக்கரத்தார்க் கடுத்தோ மன் னுருவரையே." என வாரம்பகர்ந்ததூஉம், "அலையேற்றிய விப்பி வைத்தடுப்பாக வரும்பவிழ்தே—னுலையேற்றியசங்கி னித்தி லம்பெய்தன லொண்டுகிராற்—கலையேற்றியநுதல் நாமடுஞ்சோறி டக் கைக்கமலத்—திலையேற்றவெம்பசியின் றில்லையோ நம்மிறை யவர்க்கே." என அடிசிலமைத்த மடவரலிரங்கலுங், "காவும்பரும ணற் கானலும்போயருங் கங்குலினும்—வாவும்பரிநெடுந் தேர்வரக் காண்கிலம் வாவிதொறு—மேவுங்கருங்கயல் செங்கழுநீரின் மிசை பிறழப்—பூவும்புலவுங் கமழ்புனலூரன் புகற்சிநன்றே." எனத் தலை வன்பிரிந்தமைக்கிரங்கலும் வரப்பெறும்.

ஈங்கிதுவென்னெனப் பாங்கிவினுதற்குச் செய்யுள்;—"எம் மாதிரமும் புரவலர்த்தேடி யிரந்துழல்வோர்—தம்மாதுயரந் தவிர்த்

தருள்வாணன் றமிழ்த்தஞ்சைவாழ்—நம்மாவியன்னவர் நாடொறு நாடொறு நல்கவுநீ—விம்மாவருந்துவதேன் பிரிந்தாரின் விளங்கிழையே." எனவும், இறைமகன்புறத்தொழுக்கிறைமகளுணர்த்தற்குச் செய்யுள்;—"தாராகநல்கினர் காரிகையாய்தஞ்சை வாணன்றன்னைச்—சேராதவரெனத் தீவினையேனையச் செங்கண்வன்கட்—காரான்கழனிக் கரும்பினஞ்சாயக் கதழ்ந்துசெந்நெ—லாராதயவின்பஞ்சா யாருமூர னயலவர்க்கே." எனவும், தலைவியைப்பாங்கிகழறற்குச் செய்யுள்;—"மாலைக்குமுத மலர்தருந்தேனுண்ட வண்டுவரக்—காலைக்கமலங் குவிந்ததுவோவருங் கற்பினுக்கு—மேலக்கருங்குழல் மங்கையர்காதல ரென்செயினுஞ்—சீலத்தியல்புகுன்றார்வருந்தேல் மெய்திருந்திழையே." எனவும் வரும்.

செவ்வணியணிந்து சேடியைவிடுப்புழி அவ்வணியுழையர்கண்டழுங்கக்கூறலுமெனவே, அனுவாதமுகத்தாற் செவ்வணியணிந்து சேடியைவிடுவாயென்றலும் விடுத்தலும் வரப்பெறும். அவற்றுள் விடுவாயென்றற்குச் செய்யுள்;-"பருதிநிறத்துப் பணித்துகிலார்த்துப் பணைமுலைமேற்—குருதிநிறத்துகிர் குங்குமஞ்சேர்த்தியிக் கோலங்கொண்டு—கருதியகற்புக் கடனெறிகூறிநங் காதலர்க்கு—வருதியெனப்பகர்ந்தே விடுசேடியை வாணுதலே." எனவும், விடுத்தற்குச் செய்யுள்;—"அரத்த முடீஇ யணிபழுப்பப் பூசிச்—சிரத்தையாற் செங்கழுநீர் சூட்டிப்—பரத்தை—நினைநோக்கிக் கூறினு நீமொழிய லென்று—மனைநோக்கி மாணை விடும்." எனவும் வரும்.

அவ்வணியுழையர்கண்டழுங்கக்கூறற்குச் செய்யுள்;—"வேளாண்மரபு விளக்கியவாணன்மின் னார்கழல்சூழ்—தாளான்வளங்கெழு தஞ்சையன்னீர்சங்கந் தந்தநன்னீர்த்—தோளாமணியன்னதொல்குலவோடையிற் றோன்றியபூ—வாளாவலர்தொடுப்பார்க்கெங்ஙனேவந்து வாய்த்ததுவே." எனவும், பரத்தையர்கண்டு பழித்தற்குச் செய்யுள்;—"தண்ணந்துறைவன் மனையுறைபாவை தகுதிசொல்லிற்—பண்ணென்றியமொழி யீர்வசையேபணி வார்குவளைக்—கண்ணுங்குழலுங் கருகித்துகிலுங் கனதனமும்—வண்ணஞ்சிவந்து வெளுத்ததுநாணு மடமையுமே." எனவும், வரவுகண்டு வந்து வாயில்கள் மொழிதற்குச் செய்யுள்;—"வில்லைப்பொலிநுதல் வேற்பொலிகண்ணி மெலிவறிந்து—வல்லைப்பொலிவொடு வந்தமையாளின்று வான்வழுத்துந்—தில்லைப்பொலிசிவன் சிற்றம்பலஞ்சிந்தைசெப்பவரின்—மல்லைப்பொலிவய லூரன்மெய்யேதக்க வாய்மையனே." எனவும், தலைமகன்வரவு பாங்கி தலைவிக்குணர்த்தற்குச் செய்யுள்;—"புறத்தாரொழுகி வரினுமிப்போது புகையுயிர்த்த—லறத்தா

றுமன்பு மருளுமன்றேயன்பர் தேர்கடவி—மறத்தாரைவாள்விழி யாய்திருமாளிகை வாசல்வந்துன்—றிறத்தார்வமுற்றுநின்ற ரெதிர் கோடல் சிறப்புடைத்தே." எனவும், தலைவனைத் தலைவி எதிர் கொண்டுபணிதற்குச் செய்யுள்;—"மருவிற்பெருநல மன்னுவதாந் தஞ்சை வாணன்வெற்ப—ரொருவிற்பசலை யுருக்குவதாமெமக் கூடலெவ்வா—றிருவிற்புருவ விளங்கொடியேயெய்து மெய்தலில் லாத்—திருவிற்புனைநறுந்தார் வரைமார்பர் திருமுனின்றே." எனவும் வரும். "உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்—பொய்த்த லறிந்தேன் புலந்து." இதுவும் அது. புணர்ச்சியின்மகிழ்தற்குச் செய்யுள்;—"உள்ளத்துவகை யொருதலைப்பட்ட விருதலைப் பைம்—புள்ளொத்தினிய புதுமலர்க்காவிற் புணர்ந்தவின்ப—வெள் ளக்கடலிடை வீழ்ந்துடனீந்துவர் மெய்மறந்து—வள்ளக்கமல வள வயலூரனு மாதருமே." எனவரும். (கஅ௨)

ருரு. வெள்ளணி யணிந்து விடுப்புழிப் புள்ளணி
மாலைவே லண்ணல் வாயில் வேண்டலுந்
தலைவிநெய் யாடிய திருவை சாற்றலுந்
தலைவன் றன்மனத் துவகை கூர்தலுந்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலுந்
தலைவி யுணர்ந்து தலைவனொடு புலத்தலும்
பாணன் முதலாப் பாங்க னீறாப்
பேணிய வாயில்கள் பெரியோன் விடுத்துழி
மறுத்தலும் விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்
டிறையோன் மகிழ்தலு மிறைமகள் விருந்துகண்
டொளித்த வூடல் வெளிப்பட நோக்கிச்
சீறே லென்றவள் சீறடி தொழலுமிஃ
தெங்கையர் காணி னன்றன் றென்றலு
மங்கவர் யாரையு மறியே னென்றலுங்
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலுந்
தாமக் குழலியைப் பாங்கி தணித்தலுந்
தணியா ளாகத் தலைமக னூடலு
மணிவளைப் பாங்கி யன்பிலை கொடியையென்
றிணர்த்தார் மார்பனை யிகழ்தலும் பிறவு
முணர்த்த வுணரா வூடற் குரிய.

இது முதியகலாமாகிய ஊடல்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். வெள்ளணியணிந்துவிடுப்புழித் தலைவன் வாயில் வேண்டல் முதலாகப் பாங்கி தலைவனை அன்பிலைகொடியையென் றிகழ்தல் ஈறுகச் சொல்லப்பட்டனவும் பிறவும் உணர்த்தவுணராவூ டற்கு உரியவாம். எ - று.

அனுவாதமுகத்தால் வெள்ளணியணிந்துவிடுத்தலும் வரப்பெ றும். அதற்குச் செய்யுள்;—"துதையஞ்சுரும்பறை மல்லிகைவேய்ந் துவெண் சேபுனைந்—திதயங்களிவர நித்திலம்பூண்டெதிர்ந் தாரு டலம்—புதையம்பனைய விழிமடமாதர்பொற் பூண்புதல்வ—னுத யம்புகல வகலமுன்னேடின ரூரனுக்கே." எனவரும்.

வெள்ளணியணிந்துவிடுப்புழிப் புள்ளணிமாலைவேலண்ணல் வாயில்வேண்டற்குச் செய்யுள்;—"என்பாற்குறையை நினைந்தும ருதெதிர் கொள்ளவல்லே—தன்பாற்புலவி தணிசென்றுநீதஞ்சை வாணன்வைய—மன்பாற்பரவும் புகழுடையானரு ளேயனையா—ளுன்பாற்புலவியுறுள் வண்ணவார்குழ லொண்ணுதலே." எனவும், தலைவிநெய்யாடியது இகுளைசாற்றற்குச் செய்யுள்;—"கையார்வரிவ ளைக் காரிகைநீயுங் கடும்பரியு—மையார்விழிவிலை மங்கையரில்ல மறந்துவந்த—தெய்யாதிருந்தில ளய்யாவருமணி யீன்றெடுத்த—மெய்யாறவும்விரவுந் துனியாறவும் வேண்டுமின்றே." எனவும், தலைவன் தன்மனத்துவகைகூர்தற்குச் செய்யுள்;—"செய்யுந்தவமு டை யேன்சென்றுகாண்குவ தென்றுசெவ்வி—மையுண்குவளை மடங்கெழுநோக்கு மனமகிழ்வுங்—கையுங்குழவியுந் தீம்பாலெறிக் குங் கனதனமு—நெய்யும்பசந்து நிலவெழுமேனியு நீர்மையுமே." எனவும், தலைவிக்கவன்வரல் பாங்கிசாற்றற்குச் செய்யுள்;—"மரு வார்குழலி வருந்தியமெய்யு மகவுங்கையும்—பருவார்முனிந்தபயோ தரபாரமும் பச்சுடம்பு—மொருவாதவுள்ளத் துவகையுங்காணநம் மூரர்நின்பொற்-றிருவாசல்வந்துநின்று ரறியேனின் றிருவுளமே." எனவும், தலைவியுணர்ந்துதலைவனெடுபுலத்தற்குச் செய்யுள்;—"ஆம் பால்விரவின தன்பாலறிந்தயி லன்னமன்னீர்—போம்பாலனைய சொற் பூவையர்சேரியிற் புல்லியிங்ஙன்-யாம்பாலனைக்கொண் டினி வைகல்போக்குது மெம்முலையிற்—றீம்பால்படிலவர்செய் குறிமார் பிற் சிதையுமன்றே." எனவும், பாணன்முதலாப் பாங்கனீறுப் பேணியவாயில்கள் பெரியோன்விடுத்துழித் தலைமகள் மறுத்தலுட் பாணன்மறைக்குச் செய்யுள்;-"மைகொண்டகண்டர் வயல்கொண் டதில்லைமல் கூரர்நின்வாய்—மெய்கொண்டவன்பின ரென்பதென்

விள்ளா வருள்பெரியர்—வைகொண்டவூசிகொற் சேரியின்விற் றெய்தில் வண்ணவண்ணப்—பொய்கொண்டுநிற்கலுற்றோ புலையாத் தின்னி போந்ததுவே." எனவும் வரும்.

பிறவென்றதனால் வாயின்மறுக்கப்பட்டபாணன்கூறலுந் தலைமகள் பாணனைச் சொல்லலும் வரப்பெறும். அவற்றிற்குச் செய்யுள்;—"கொல்லாண்டிலங்கு மழுப்படையோன்குளிர் தில்லையன்னாய் —வில்லாண்டிலங்கும் புருவநெரியச்செவ் வாய்துடிப்பக்—கல்லாண் டெடேல்கருங் கண்சிவப்பாற்று கறுப்பதன்று—பல்லாண்டடியே னடிவலங்கொள்வன் பணிமொழியே." எனவும், "வண்புனலூர்வையை சூழ்தஞ்சைவாணனை வாழ்த்தலர்போற்—கண்புனலூருநின் காதல்கண்டேனென் கடைத்தலைக்கே—தண்புனலூரன்வந் தானென்றுசாற்றினை தானமுறுப்—பண்புனலூர்களெல்லாம் பாடியேற்கின்ற பாண்மகனே." எனவும் வரும்.

விறலிவாயின்மறுத்தற்குச் செய்யுள்;—"அயிலுங்கயலு மனையகண்ணஞ்சன மாற்றிவஞ்சத்—துயிலுந்துடைத்தவன் றேசெவிதூர்ந்தது சோர்ந்ததுள்ளம்—மயிலின்புறத்து முருகனைப்போல வருமகிழ்நன்—பயிலும்பரத்தையர் பாடியிற்பாடினி பாடினியே." எனவும், கூத்தர்வாயின்மறைக்குச் செய்யுள்;—"வடிக்கண்ணியரொடும் வந்தனைநீவந் தனைசெயலுன்—னடிக்கும்பழைய நடத்திலொன்றோவிந் நடிமறவா—ரடிக்கண்ணதிர்கழல் வீரியநாமங்கொ ளாரியவிப்—படிக்கண்ணகர்முழுதும் பாடியாடும் பரத்தையரே." எனவும், பாங்கி வாயின்மறைக்குச் செய்யுள்;—"உடைமணிகட்டிச் சிறுதேருருட்டி யுலாத்தருமிந்—நடைமணியைத்தந்த பின்னர்முன்னூன்முகன் மாலறியா—விடைமணிகண்டர்வண் டில்லைமென்றோகையன்னார்கண்முன்னங்—கடையணிவாணகையா யின்றுகண்டனர் காதலரே." எனவும், விருந்தொடுவந்துழிப் பொறுத்தல்கண்டு தலைமகன் மகிழ்தற்குச் செய்யுள்;—"கருந்துன்றுவார்குழற் கன்னியில்வாழ்க்கையுங் கையுஞ்செவ்வாய்—முருந்தொன்றுமூரல் முறுவலுங் காண முகமறியா—விருந்தொன்றுவேறொன்றின் மீளாவருந்துனிபீட்கநல்ல—மருந்தொன் றுவந்திங்ஙனே மனமேவந்து வாய்த்ததுவே." எனவும் வரும். அனுவாதமுகத்தால் விருந்துடன்வந்துழிப் பொறுத்தலும்வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"வண்டார் மகிழ்நன் வருவதுகேட்டு மலர்க்கணம்பு-கொண்டாள்புருவச் சிலைகுனித்தாள்குளிர் வெண்பனிசூழ்—வெண்டாமரைவியர்த் தாளுயிர்த்தாணல் விருந்தயலே—கண்டாள் முகமலர்ந்தாள் புரந்தாளருங் கற்பினையே." எனவரும்.

தலைமகள் விருந்துகண்டொளித்தலூடல் பள்ளியிடத்துவெளிப்படத் தலைமகனோக்கிச் சீறேலென்று அவள்சீறடிதொழுதற்குச் செய்யுள்;—"படர்ந்தகலாமின்ன தென்றுரையாமற் பயிலமளி—கடந்தகலாபங் கலைபுறஞ்சூழக் கதந்தணியத்—தொடர்ந்தகலாத துணையடித்தாமரை சூடுவலிம்—மடந்தைகலாமகலா மலிநீர்கண்கள் மல்கினவே." எனவும் வரும்.

அனுவாதமுகத்தான் ஒளித்தலூடல் வெளிப்படலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"திருத்தியன்போடு திளைக்கின்றசெவ்விச் செருக்கிடையே—கருத்திலங்குற்ற கலாமிங்கறிந்திலங் காதலிபா—னொருத்தியென்றுன்னை யொருவனென்றே யிருந்தேனினிநீ-யிருத்தியென்றேமொழியா விழிந்தாள்பள்ளி யின்னகையே." எனவரும்.

இஃது எங்கையர்காணின் நன்றன்றென்றற்குச் செய்யுள்;—"தொடிவைத்தசெங்கை யலவனுலாவுந் துறைசெயத்தோர்—வடிவொத்தசிந்தை மலிபுனலூர வணங்கியநின்—முடிவைத்தசெங்கையு மென்முலையாக முயங்கவந்தென்—னடிவைத்தசெங்கையு மெங்கையர்காணி லறவுநன்றே." எனவும், நின்னலது அங்கவர்யாரையும் அறியேனென்றற்குச் செய்யுள்;—"மன்னும்புலவியை மாற்றியுந்தேற்றியும் வல்லவண்ண—மின்னநதெளியிலை யென்னையென்னே யென்செய் கேணிதற்கு—முன்னம்படிந்து முழுகுநன்னீர்க்கங்கை முன்றுறைநீத்—தன்னம்படியுங்கொல்லோ வுவராழியி லாரணங்கே." எனவும், காமக்கிழத்தியைக் கண்டமைபகர்தற்குச் செய்யுள்;—"ஐயுறவாய்நம் மகன்கடைக்கண்டுவண் டேருருட்டு—மையுறுவாட்கண் மழவைத்தழுவமற் றுன்மகனே—மெய்யுறவாமிதுன் னில்லேவருகென வெள்கிச்சென்றாள்—கையுறுமான்மறியோன் புலியூரன்ன காரிகையே." எனவும், தலைமகளைப் பாங்கி புலவிதணித்தற்குச் செய்யுள்;—"உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது—மிக்கற்றா னீள விடல்." எனவும் வரும். "மாவாரணமன்ன வாணன்றென்மாறைநம் மன்னனின்னைப்-பாவாய்பணியவும் பார்க்கிலைநீயிடப் பாகமங்கை—தாவாதசங்கரன் கங்கைதன்கொங்கை தழீஇயிதழிப்—பூவார்சடைமுடிமேல் வைத்தபோதும் பொறுத்தனளே." இதுவுமது.

அனுவாதமுகத்தாற் தலைவி புலவி தணியாளாகலும் வரப்பெறும். அதற்குச் செய்யுள்;—"பங்கயமல்லற் பழனநன்னாடும் பதியுமில்லு—மெங்கையர்போல வினியமல்லோமெங்கள் பாற்றொ

டர்பு—செங்கயல்பாயக் கருங்கயமேவிய சேவலன்னஞ்—சங்கய லேதிரி தண்புனலூர தகுவதன்றே.'' எனவரும். தலைமகள் தணி யாளாகத் தலைமகனூடற்குச் செய்யுள்;—''திருந்தேனுயநின்ற சிற் றம்பலவர்தென் னம்பொதியி—லிருந்தேனுயவந் திணைமலர்க்கண் ணினின் னேக்கருளிப்—பெருந்தேனெனநெஞ் சுகப்பிடித்தாண்ட நம் பெண்ணமிழ்தம்—வருந்தேலதுவன் றிதுவோவருவதொர் வஞ் சனையே.''எனவும், பாங்கி அன்பிலைகொடியையென்று இணர்த்தார் மார்பனை இகழ்தற்குச் செய்யுள்;—''நெறியாரலங்கன் மணிமுடியா யென்று நின்னையன்றி—யறியாவிவளிங் கரியளன்றேமண்ணி லாரி டத்துங்—குறியாதவன்புடைக்கொம்பனையாரைக் குறுகியந்தண்—முறியார்களப முலைமுகந்தோறு முயல்கசென்றே.'' எனவும் வரும்.

அனுவாதமுகத்தான் அன்பிலை கொடியையென்றலும் வரப் பெறும் அதற்குச் செய்யுள்;—''வேம்பின் பைங்காயென் றோழி தரி னே—தேம்பூங் கட்டி யென்றனி ரினியே—பாரி பறம்பிற் பனிச்சு னைத் தெண்ணீர்—தைஇத் திங்கட் டண்ணிய தரினும்—வெய்ய வுவர்க்கு மென்றனி—ரைய வற்றா லன்பின் பாலே.'' எனவரும்.

பிறவென்றதனால், மகப்பொறைகூர்ந்தவண்ணமுரைத்தலுந் தலைவன் புதல்வனைக்காண்டலும் பள்ளியினமுழுங்கலும் பரத்தையர் காதற்பரத்தையைப் புகழ்ந்து தம்மை இகழ்தலும் தலைவிபுனலாட லும் பரத்தையரோடு புனலாடியதில்லையென்றவழி உரைத்தலும் பரத்தையைப்பழித்தலுங் காமக்கிழத்திவாயில்வேண்டலும் பாங்கி வாயினேர்வித்தலும் புதல்வன்வாயிலும் புதல்வர்ப்புலத்தலும் மகற் கறிவுறுத்தலும் மகப்பழித்துநெருங்கலும் வரப்பெறும். அவற்றுட் புதுப்புனல்வரவுரைத்தல் முதலிய ஏழற்கும் பரத்தையைப்பழித் தற்குஞ் செய்யுள் முன்னர்க்காட்டினும். மகப்பொறைகூர்ந்தவண் ணமுரைத்தற்குச் செய்யுள்;—''சிலந்தகைபெறு சாலியன்றளிசிறு வற்றரித்த—காலந்தமது கவினிறம்பெற்றன காலமின்னுங்—கோ லந்தருஞ்செங் குமுதமுநீலமுங் குன்றெடுத்த—பாலன்றுயில்கொ ண்ட பாயலுங்காலைப் பதுமமுமே.'' எனவும், தலைவன்புதல்வனைக் காண்டற்குச் செய்யுள்;—''ஆவுங்கனகமு மந்தணர்க்கீந்தங் கமரர்க் கெல்லாம்—பூவும்புகையும் பொழிந்தவியேற்றிப் புதியபண்ணும்— பாவும்புனைந்து பரிசிலர்பாடப் பருவநன்றி—யாவும்பெறவெடுத் தான் குடித்தோன்றலை யேந்தலுமே.'' எனவும், தலைவன்பள்ளியி னமுழுங்கற்குச் செய்யுள்;—''துணையேதுமின்றி நடுங்கும்ன்போலுந் துடிமருங்குற்—பிணையேமடநடைப் பெண்ணமுதேயின்பப் பேரு ததிப்—புணையேயனையபொற் றேளுந்தனமுமிப் பொங்கமளி—

யணையேபொருந்தவரும் புறமோவெமக் காவதின்றே." எனவும், பதங்கம்பழிச்சற்குச் செய்யுள்;—"அறவோர்மொழிந்தவ ரிந்தமன் காத்த வகன்புறவக்—குறவோபதங்கம் விகங்கமன்றே வுதவிக்கு தவி—நறவோடுதண்புன னுடனென்றேயென்க ணல்கியதால்—மறவோமிதற்குள்ள வாசியெந்நாளு மடமயிலே." எனவும், காமக்கிழத்திவாயில்வேண்டற்குச் செய்யுள்;—"வெறுக்கத்தகுவன செய்யினுமூரன் விளங்கிழைநீ—பொறுக்கத்தகாதவெம் போலலையே யெவம் புரவியின்றிச்—சிறுக்கைத்தலங்கொண்டு தேர்கடவாநின்ற சிங்கம்பெற்றுங்—கறுக்கத்தகுவதன்றே சிவப்பூரநின் கண்ணிணையே." எனவும், பாங்கிவாயினேர்வித்தற்குச் செய்யுள்;—"பூவேயனையர் புரிகுழற்பூவையர் பூவையயின்—மாவேயனையர் வரிகழற்காளையர் வாணெடுங்க—ணேவேயனைய விலங்கிழையாய்நின் றிரங்கலென்னே—நீவேயனைய நிரைவளைத்தோளி நிறம்பசந்தே." எனவும், புதல்வற்புலத்தற்குச் செய்யுள்;—"மைவார்குழன்மட மங்கையர்தங்கள் வதுவையுன்னிக்—கைவாரணங்கட வும்பெருமானைக் கலுழ்ந்தழைத்துன்—செவ்வாய்முதல வணிந்தசெஞ்சாந்துஞ் சிதையப்புல்லி—யிவ்வாறுசெய்ததெல்லாம் யாவர்மே லினியேறுவதே." எனவும், மகற்கறிவுறுத்தற்குச் செய்யுள்;—"கொய்யுஞ்சுவற்பரியுங்குலப்பாகுமுட் கோலுமில்லா—வையங்கடவு மழகளிறேவருந் தாமலெங்கை—செய்யும்பெருந்தவ மேகலந்தாருழைத் தீமையுமப்-பொய்யுங்கல்லாதொழி வாய்புனலூரனைப் போலவின்றே." எனவும், மகற்பழித்து நெருங்கற்குச் செய்யுள்;—"வலத்தியல்சூல மதுரேசர்கோயில் வலஞ்செயப்போய்ச்—சலத்தியல்செய்து வருங்களிறே விலைசாற்றிவிற்கு—நலத்தியர்சேரிக்கு நல்விருந்தாவது நாளுமுங்கள்—குலத்தியல்பாயிருந்தா லுன்னையோ நொந்துகூறுவதே." எனவும் வரும். பிறவுமன்ன. (கஅ௩)

ருருசு. ஆயிழை மைந்தனு மாஅற் றுமையும்
வாயி லாக வரவெதிர் கோடலு
மணந்தவன் போயபின் வந்த பாங்கியொ
டிணங்கின மைந்தனை யினிதினிற் புகழ்தலுந்
தலைவனைப் புகழ்தலுஞ் சிலைநுதற் பாங்கி
மனைவியைப் புகழ்தலு மினையவும் பிறவு
மனைவகை மொழிந்த வதன்பாற் படுமே.

இஃது உணர்த்தவுணராவூடற்குரிய ஒழிபு கூறுகின்றது.

இ - ள். ஆயிழைமைந்தனும் ஆற்றுமையும் வாயிலாகத் தலைம கன்வந்துழித் தலைமகளெதிர்கோடல் முதலாகப் பாங்கி மனைவியைப் புகழ்தல் ஈறுகச் சொல்லப்பட்டனவும் பிறவும் அத்தன்மைத்தா கிய உணர்த்தவுணராவூடற்கு உரியவாம். எ - று.

இவற்றை வேறுகூறியது அவைபோலாத ஊடற்சிறுபான் மைநோக்கியென்க.

மகனும் ஆற்றுமையும் வாயிலாகத் தலைமகன்வந்துழித் தலைம களெதிர்கோடற்குச் செய்யுள்;—"வெள்ளம்பரந்தன்ன வேட்கை சென்றுலு மிகப்பெரியோ—ருள்ளஞ்சிறியவர் மேற்செல்லுமோ வொளி கோமளஞ்சேர்-வள்ளங்கமல மலர்த்தஞ்சைவாணன்றென் மாறையன்னப்—புள்ளம்புனல்வய லூரபுன்காமம் புகல்வதன்றே." எனவும், தலைமகனைப்புணர்ந்து நீங்கியபின் வந்தபாங்கியொடு தன்ம கனைப்புகழ்ந்துரைத்தற்குச் செய்யுள்;—"இருமையிலேயும் பயன்க ளெல்லாந்தன்னை யீன்றநமக்-கொருமையிலேவந் துறத்தகைந்தான் மைந்த னெண்சுடர்போல்-வருமயிலேகொண்டு மாதடிந்தானன்ன வாணன்றஞ்சைத்—திருமயிலேயனையாய் புனலூரனைத் தேருடனே." எனவும், தலைவி தலைவனைப்புகழ்தற்குச் செய்யுள்;—"கொண்டானிற்றுன்னிய கேளிர்மற்றில்லைக்குறிப்பினென்று—தண்டா தவர்சொன்ன சால்புகண்டேன்றல மேழ்புரக்கும்—வண்டார்ம ணிப்புயன் வாணன்றென்மாறை மகிழ்நர்முன்னு—ளுண்டாகியப ழங் கேண்மையிந்நாளு மொழிந்திலரே." எனவும், பாங்கி தலைவி யைப்புகழ்தற்குச் செய்யுள்;—"சிறந்தார்புகழ்தருந் தீம்புனலூரன் செய் தீமையெல்லா—மறந்தார்வமெய்தி வணங்குதலாலிவள் வாணன்றஞ்சை—நிறந்தாரகையன்ன நித்திலம்போலுநன் னீள்குலத்திற்—பிறந்தார்நிறைந்தகற்போர் வடிவேபெற்ற பெற்றியளே." எனவும் வரும். (கஅச)

ருருஎ. மூன்று சூத்திரத்து மொழிந்தவை யெல்லா
மான்ற பரத்தையி னகற்சியின் விரியே.

இது பரத்தையிற்பிரிவின்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். காதலன்பிரிவுழிக்கண்டோர் புலவிக்கேதுவீதாமிவ் விறைவிக்கென்றல் முதலாகப் பாங்கிமனைவியைப்புகழ்தல் ஈறுகச் சொல்லப்பட்டனவெல்லாம் பரத்தையிற்பிரிவின்விரியாம். எ - று.

வாயில்வேண்டல் முதலாக நான்குவகைக்கும் ஏற்குமாறு அறிந்துகொள்க. (கஅரு)

ருருஅ. பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை
பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்
பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை
வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்
றொருமையிற் கூறிய வொன்பது வகைய
கல்வி முதலா வெல்லாப் பிரிவும்.

நிறுத்தமுறையானே இது கல்விமுதலிய பிரிவின்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். பிரிவறிவுறுத்தல் முதலாக வந்துழிமகிழ்ச்சி ஈறாகக் கூறப்பட்ட ஒன்பது வகையினையுடையவாங் கல்விமுதலாகிய ஐந்துவகைப்பிரிவும். எ - று.

ஒருமையிற்கூறுதல், ஒருதன்மைபற்றிக் கூறுதல்.

ஒருதன்மைபற்றிக்கூறுதலான் ஒன்பதுவகையவாமெனவே, பலதன்மைபற்றிக்கூறிற் பல்வேறுவகையவாமென்பதூஉம் பெற்றாம். பெறவே, வகைவேறுபாடே விரியாகலின் அவற்றின் விரியும் உடன்கூறினரென்பது. பிரிவறிவுறுத்தல் ஒருதன்மைபற்றிக்கூறுமிடத்து ஒன்றாயினுந், தலைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தலும் அவள் அதனைத் தலைவிக்கறிவுறுத்தலும் எனப் பலதன்மைபற்றிக் கூறுமிடத்துப் பலவாமாறுங் காண்க. ஏனையவற்றிற்கும் ஏற்புழி இவ்வாறே உய்த்துணர்க.

கல்விப்பிரிவு பாங்கிக்குத் தலைவனறிவுறுத்தற்குச் செய்யுள்;- "சீரளவில்லாத் திகழ்தருகல்விச்செம் பொன்வரையி—னூரளவில்லா வளவுஞ்சென்றாரம் பலத்துணின்ற—வோரளவில்லா வொருவனிருங்கழ லுன்னினர்போ—லேரளவில்லா வளவினராகுவ ரேந்திழையே." எனவும், கல்விப்பிரிவு தலைவிக்குப் பாங்கியறிவுறுத்தற்குச் செய்யுள்;—"வீதலுற்றார்தலை மாலையன்றில்லைமிக் கோன்கழற்கே—காதலுற்றார்நன்மை கல்விசெல்வீதரு மென்பதுகொண்—டோதலுற்றாருற் றுணர்தலுற்றார்செல்லன் மல்லழற்கான்—போதலுற்றார்நின் புணர்முலையுற்ற புரவலரே." எனவும், கல்விக்குப்பிரிந்துழிக் கார்ப்பருவங்கண்டு தலைவி வருந்தியதற்குச் செய்யுள்;—"யாணர்க்குழன்மொழி யென்செய்குவேன்கல்வி யெல்லையெல்லாங்—காணப்பிரிந்தவர் காண்கிலராற்கடன் மேய்ந்துதஞ்சை—வாணர்க்கெதிர்ந்தவர் மங்கையர்போலுமென் வல்லுயிரி—னூணற்பமென்னவெண்ணா வருமேக முருமுடனே." எனவும், கார்ப்ப

ருவங்கண்டு வருந்தியதலைவியைத் தோழியாற்றுவித்தற்குச் செய்யுள்;—"திருமாலறியாச் செறிகழற்றில்லைச்சிற் றம்பலத்தெங்—கருமால்விடையுடையோன் கண்டம்போற்கொண்ட லெண்டிசையும்—வருமாலுடன்மன் பொருந்தறிருந்த மணந்தவர்தேர்—பொருமாலயிற்கணல்லா யின்றுதோன்றுநம் பொன்னகர்க்கே." எனவும், காவற்பிரிவு தலைவன் பாங்கிக்கறிவுறுத்தற்குச் செய்யுள்;—"அல்லவைநீக்கி யறப்புறங்காக்கவு மாதுலர்கள்—சொல்லுவகேட்டவர் துன்பந்துடைக்கவுஞ் சூழ்கடற்பா—ரெல்லையினென்றையொன் றின்னுசெயுமிகல் வாட்டுதற்குஞ்—செல்லுவதேகடனு நாடுகாவல் சிறந்தவர்க்கே." எனவும், பாங்கி காவற்பிரிவுடன்படாமைக்குச் செய்யுள்;—"பண்காவல்கொண்ட பணிமொழிச்செங்கைப் பசுங்கிளிக்குன்—கண்காவலென்பதுங் கண்டுஞ்செல்வீர்கொல் கருங்கடல்சூழ்—மண்காவல்கொண்ட மணிநெடுவேன்முடி மன்னவர்க்குப்-பெண்காவல்கொள்கை பெரும்பழிபோலும் பெருந்தகையே." எனவும், காவற்பிரிவு தலைவிக்குப் பாங்கியறிவுறுத்தற்குச் செய்யுள்; "மூப்பாணிளையவன் முன்னவன்பின்னவன் முப்புரங்கள்—வீப்பான்வியன்றில்லை யானருளால்விரி நீருலகங்—காப்பான்பிரியக் கருதுகின்றார்நமர் கார்க்கயற்கட்—பூப்பானலமிளிரும் புரிதாழ்குழற் பூங்கொடியே." எனவும், காவற்குப் பிரிந்துழித் தலைவி கூதிர்ப் பருவங்கண்டு வருந்தியதற்குச் செய்யுள்;—"நிறைசூலெழிலி பொழிந்துகண்மாறிய பின்னைநின்ற—குறைசூழ்புறவு குழைபயன்சோருங் குறுந்துளிகொண்—டறைசூறைவாடை யலைக்குநன்னாளிங் கறிகிலர்கொ—னறைசூழ்மலர்க்குழலாய் நாடுகாவ னயந்தவரே." எனவும், கூதிர்ப்பருவங்கண்டு வருந்தியதலைவியைத் தோழியாற்றுவித்தற்குச் செய்யுள்;—"பணிவார்குழையெழி லோன்றில்லைச்சிற் றம் பலமனைய—மணிவார்குழன்மட மாதேபொலிகநம் மன்னர்முன்னுப்—பணிவார்திறையும் பகைத்தவர்சின்னமுங் கொண்டுவண்டே—ரணிவார்முரசினொ டாலிக்குமாவொ டணுகினரே." எனவும், வினைமுற்றிமீண்டமை பாங்கி தலைவிக்குணர்த்தற்குச் செய்யுள்;—"புங்கம்படவண் டிமிர்நறுங்கோதைப் புரிகுழலா—யங்கம்படர்கொண் டழிவதென்னேயினி யாடினரைப்—பங்கம்படவென்ற பன்மணித்தேர்வெம் பரிகடவிச்—சங்கம்படக முழங்கவந்தார்நந் தலைவரின்றே." எனவும் வரும். இவை இரண்டும் வன்பொறைக் குரியவாம். பிறவும் அன்ன.

தூதிற்பிரிவு தலைவன் பாங்கிக்கறிவுறுத்தற்குச் செய்யுள்;—"மூளாவரும்பழி மூண்டிருவேந்தர்கண் மொய்யமரின்—மாளாவ

கைசென்று மாற்றுதல்வேண்டி மணிவரைவேய்த்—தோளாய்பி ரிந்து வருநாளளவுஞ் சுரும்பிமிர்பூந்—தாளார்மலர்க்குழலாள் வருந் தாவகை சாற்றுகவே." எனவும், பாங்கி பிரிவுடன்படாமைக்குச் செய்யுள்;—"வேயுங்கரும்பும் விரும்பியதோளிந்த மெல்லியலும்—யாயும்பகைகண் டிருக்கவைத்தோவெதிர்ந் தார்முனையிற்—பாயும்பு ரவிப் படையிருவேந்தர் பகைத்தவரைப்—போயுந்தணித்துப் பொருந்திடுமாறு வருந்துவதே." எனவும், தூதிற்பிரிவு தலைவிக்குப் பாங்கியறிவுறுத்தற்குச் செய்யுள்;—"மிகைதணித்தற்கரி தாமிருவேந்தர் வெம் போர்மிடைந்த—பகைதணித்தற்குப் படர்தலுற்றார்நமர் பல்பிறவித்—தொகைதணித்தற்கென்னை யாண்டுகொண்டோன்றில்லைச் சூழ்பொழில்வாய்—முகைதணித்தற்கரிதாம் புரிதாழ்தரு மொய்குழலே." எனவும், தூதிற்பிரிந்துழித் தலைவி முன்பனிப்பருவங் கண்டு வருந்தியதற்குச் செய்யுள்;—"பருந்தார்சுடரிலை வேற்பகை வேந்தர் பகைதணிப்பப்—பிரிந்தார்வருகிலர் பெய்வளையாய்பிர சம் புலந்து—கருந்தாமரையெனச் செந்தாமரைகரு கப்பெருக—வருந் தார்வருந்துற மஞ்சுதெற்கோட வரும்பனியே." எனவும், தூதிற்பிரிந்துழி முன்பனிப்பருவங்கண்டு வருந்தியதலைமகளைத் தோழியாற்றுவித்தற்குச் செய்யுள்;—"சுற்றுங்குழலின் பிணிவிடுப்பான்வந்து தோன்றினர்பார்—முற்றும்பொழிகின்ற முன்பனிநாண்முகி லுங்கடலும்—வற்றும்பருவத்து மண்புரப்பான்றஞ்சை வாணனென்னார்ச்—செற்றும்படையின்வெஃபோர் தணிப்பானன்று சென்றவரே." எனவும் வரும். பிறவுமன்ன. துணைவயிற்பிரிவு தலைமகனுணர்ந்ததோழி அதற்குடன்படாமைக்குச் செய்யுள்;—"கன்னற்சிலைமதன் காதுஞ்செருவிற் கலங்குகின்ற—வின்னற்குதவிசெய் தாலென்னதாகு மிருஞ்செருவின்—மன்னர்க்குதவி செயப்பிரியும் வரி யுங்கழற்காற்—செந்நெற்பழனக் கழனிநல்லூரவெஞ் சேயிழைக்கே." எனவும், துணைவயிற்பிரிவு தலைவிக்குப் பாங்கியறிவுறுத்தற்குச் செய்யுள்;—"போதுகுலாய புனைமுடிவேந்தர்தம் போர்முனைமேன்-மாதுகுலாயமென் னோக்கிசென்றார்நமர் வண்புலியூர்க்—காதுகுலாய குழையெழிலோனைக் கருதலர்போ—லேதுகொலாய் விளைகின்றதின்றென்ன ரிடுமதிலே." எனவும், துணைவயிற்பிரிந்துழித் தலைவி பின்பனிப்பருவங்கண்டு வருந்தியதற்குச் செய்யுள்;- "சுற்றினவீழ்பனி தூங்கத்துவண்டு துயர்கவென்று—பெற்றவளேயெனைப் பெற்றாள்பெடைசிற கின்னொடுக்கிப்—புற்றிலவாளரவன் றில்லைப்புள்ளுந்தம் பிள்ளைதழீஇ—மற்றினஞ்சூழ்ந்து துயிலப்பெறுமிம் மயங்கிருளே." எனவும் வரும். தலைவி பாணனைப் பாசறைவி

வித்தற்குச் செய்யுள்;—"தகைமெலியக்கொங்கை தங்குபைம்பொன் னும்வெஞ் சாயகப்பூந்—தொகைமெலியப்படுந் துன்பமுஞ்சொல்லு தொழுதிறைஞ்சாப்—பகைமெலியத்தங்கு பாசறைமேற்செல்லு பாணன்முல்லை—முகைமெலியப்புனை தொங்கலெங்கேள்வர்தம் முன்புசென்றே." எனவும், தலைவன் பாணனைவினுதற்குச் செய்யுள்;— "தேதாவெனமுரல் செவ்வழியாழ்கொண்டு சேரிவிட்டுப்—போதா தபாணரெப் போதுவந்தீர்புல வுண்பருந்து—மீதாடுபாசறை வாய்வினையேனுக்கு வேனெடுங்கட்—சூதார்வனமுலைத் தோகையென் னுநின்று சொல்லியதே." எனவும், தலைவனுக்குப் பாணன்கூறற்குச் செய்யுள்;—"திருவடிவீழ்ந்தடி யேன்திருவேவிடை யென்று செப்பப்—பருவரலெம்பெரு மாட்டிபகர்ந்தது பற்றலரைப்—பொருதிகல்வென்ற புனைமணித்தேரும் புரவலரும்—வருவதுகண்டிட யாம்பெற்றிலேமென்னும் வாசகமே." எனவரும். இது சொல்லிய கூற்றெனச் சொல்லியதாகலின் பிரிவுழித் தலைவிகலங்கற்பாற்படும். தலைவன் பாசறைப்புலம்பற்குச் செய்யுள்;—"சாந்தங்கமழுந் தடமுலையாணின்ற தன்மையிது—வேந்தன்பகைமுற்றிமீளவெண்ணேன்வெயில் போயொளித்துக்—காந்துங்கடுங்கன லும்பொடிபோர்க்குங் கடைப்பனிநாள்—போந்துங்கிருந்துவிட்டே னென்ன பாவம் புகல்வதுவே." எனவரும். தலைவிபிரிந்துழிக் கனவுகண்டிரங்கற்குச் செய்யுள்;—"வனவேய்பொருதடந் தோள்வடந்தோய்முலை வல்லுப்புல்ல—நனவேயெனவுன்னி நாட்டந்துறந்துநன் ஞானமில்லா—ரெனவேதனிநின் றிரங்கவெங்கானத் திகலுங்கங்குற்கனவேயுனக்குங் கனவெய்துமாலொரு காலத்திலே." எனவும் வரும். இவை ஆறும் பிரிவுழிக் கலங்கற்கு உரியவாம்.

பின்பனிப்பருவங்கண்டு வருந்தியதலைவியைத் தோழியாற்றுவித்தற்குச் செய்யுள்;—"வடுக்கண்டனையகண் மங்கைநல்லாய்தஞ்சை வாணன்வெற்பி—லடுக்கங்குளிர வசைகின்றவாடை யகன்றவர்க்கு—நடுக்கஞ்செய்பின்பனி நாளின்வந்தாரமர் நண்பனுற்ற—விடுக்கண்களையவன்றே யகன்கான மிகந்தவரே." எனவரும். "தூதுந்துணையு மேதுவாகச்—சென்றோனவ்வினை நின்றுநீட்டித்துழிப்-புலந்துபாசறைப் புலம்பவும்பெறுமே." என்பவாகலின், வினை ஓர் யாண்டின்முடியாது நீட்டித்தவழித் தலைவன் தலைமகளுருவு வெளிப்பாடுகண்டு சொல்லியதற்குச் செய்யுள்;—"மைக்குஞ்சரநிரை யாற்றஞ்சைவாணன் மருவலரைக்—கைக்குங்களங்கெழு பாசறையூடு கயலும்வில்லு—மொய்க்குஞ்சுடரிள வம்புலிதானு முயங்கியெல்லாத்—திக்குந்தொழவருமே சுருளோலைத் திருமுக

மே." எனவரும். இது வன்பொறைக்குரித்து. வினைமுடித்ததன் பின் வியன்பதிசேய்த்தென வினுதற்குச் செய்யுள்;—"முன்னிட்ட வாசி நுகம்பூட்டறுமுன்பின் னுக்குதிண்டேர்—பின்னிட்டவோட் டங் கடிந்துநண்பாபொரும் பேரரசர்—வென்னிட்டவேல்வல வா ணன்றென்மாறைசெல் வெண்புரிமின்—றன்னிட்டமேசென்றகா ரென்செய்யாது தனிச்சியையே." எனவும், வினைமுற்றிமீண்ட வன் உருவுவெளிப்பாடுகண்டு கூறியதற்குச் செய்யுள்;—"வரிதரு காஞ்சி மணிநெடுந்தேரும் வயங்கெழுவான்—பரியுமிருங்கட் பகடு மைவாட்படை யுங்குவிந்து—திரியமுனிந்தது தேர்வலவாவகல் வார்செருவிட்—டிரியமுனிந்திறைகொண் டகல்காலையி லெத்திக் குமே." எனவும் வரும். இவையிரண்டும் வருவழிக்கலங்கற்குரிய வாம். பாசறைமுற்றிமீண்டு ஊர்வயின்வந்த தலைமகன் பாகற்குச் சொல்லியதற்குச் செய்யுள்;-"மால்கொண்டவாரண வாணன்றென் மாறை வலவநண்ணூர்—கால்கொண்டவாளமர் கையகல்பாசறைக் கவ்வையினீ—கோல்கொண்டவாறுநின் னேவல்கொண்டியானிக் கொடிநெடுந்தேர்—மேல்கொண்டவாறுநம் மூர்வந்தவாறும் வியப் பெனக்கே." எனவரும். இது வந்துழிமகிழ்ச்சி. பிறவும் அன்ன.

பொருள்வயிற்பிரிவு தலைவன் பாங்கிக்கறிவுறுத்தற்குச் செய் யுள்;—"முனிவருமன்னரு முன்னுவபொன்னுன் முடியுமெனப்— பனிவருங்கண்பர மன்றிருச்சிற்றம் பலமனையாய்—துனிவருநீர் மையி தென்னென்றுதூநீர் தெளித்தளிப்ப—நனிவருநாளிதுவோ வென்றுவந்திக்கு நன்னுதலே." எனவும், பொருள்வயிற்பிரிவு தலை விக்குப் பாங்கி அறிவுறுத்தற்குச் செய்யுள்;-"வறியாரிருமை யறியா ரெனமன்னு மாநிதிக்கு-நெறியாரருஞ்சுரஞ்செல்ல லுற்றார்நமர் நீண் டிருவ—ரறியாவளவுநின் றோன்றில்லைச்சிற்றம் பலமனைய—செறி வார்கருங்குழல் வெண்ணகைச்செவ்வாய்த் திருநுதலே." எனவும் வரும். "திருவூரகத்துநின் றோர்திருப்பாடகத் துள்ளிருந்தோர்— மருவூர்பொழில்வெஃ கணைக்கிடந்தோர்வண் டுலாவுமலர்த்—தரு வூர்பொழிற்றந்தி வெற்பின்மின்னேநந் தனமுழுது—மொருவூர் கலத்திற்சென்றார் தனமாக வுணர்ந்திலரே." இதுவும் அது. பாங்கி தலைவிக்குடன்படுத்தற்குச் செய்யுள்;—"இருங்கற்புடையவ ரின்பு றுமாடவரேகுவது-மருங்கற்புடையவ ராற்றுந்திறனு மணியிழைப் பொன்—மருங்கிற்படர்முலை யாயவர்மீண்டு வருவதுவுங்—கருங் கற்புடைதழு வுங்கடன்ஞாலங் கடனென்றுமே." எனவரும். இஃது ஏனையவற்றிற்கும் ஒக்கும். பொருள்வயிற்பிரிந்துழித் தலைவி இளவேனிற்பருவங்கண்டு வருந்தியதற்குச் செய்யுள்;—

"வாழும்படியொன்று கண்டிலம்வாழியிம் மாம்பொழிற்றேன்—சூழுமுகச்சுற்றும் பற்றினவாற்றெண்டை யங்கனிவா—யாழின் மொழிமங்கை பங்கன்சிற்றம்பல மாதரியாக்—கூழின்மலிமனம் போன் றிருளாநின்ற கோகிலமே." எனவும், இளவேனிற்பருவங் கண்டு வருந்தியதலைவியைத் தோழியாற்றுவித்தற்குச் செய்யுள்;—"வார்த்தனபார மடமயிலேகுயின் மாருதமாந்—தேர்த்தனிவீரன் றிருநாளிதுவந்து சேர்மினென்று—தார்த்தடமேரு வெனும்புயன் வாணன்றஞ் சாபுரிநின்-மூர்த்ததுகேட்டுவந் தார்பொருடேட வகன்றவரே." எனவும், தலைவிக்குத்தோழி நிமித்தங்கூறற்குச் செய்யுள்;—"அரவிசைக்குந்திரு வல்குனல்லாயடை யார்மடியப்—பொரவிசைக்கும்பரி பூண்டுபொற்றேர்நம் புரவலர்தாம்—வரவிசைக்கும் பல்லி வாமந்துடிக்கும் வரிநெடுங்க—ணிரவிசைக்குங்குழலோ டிளவாடையின் றென்செயுமே." எனவும், தலைவன்வரவுணர்த்தற்குச் செய்யுள்;—"குரவலர்பூங்குழ லார்நெடுவீதி குறுகிவண்டு—விரவலர்தூவி மிகமிகவாழ்த்த வியந்துமுன்னின்—றிரவலரேத்த வினவளையார்ப்ப வியமுழங்கப்—புரவலரின்றுவந்தார் திருவே தம்பொருண்முடித்தே." எனவும், தலைவனைப் பாகன்றேற்றற்குச்செய்யுள்;—"திண்காட்டிருஞ்சுரஞ் சேய்த்தெனவேகின் றிருவுளத்துப்-புண்காட்டனைந்து புலம்பாதொழிபொறை காட்டுகின்ற—மண்காட்டுதிண்புயத் தான்வாணன்மாறையின் மன்னவநின்—கண்காட்டு முன்னங் கடிதினின்வாழ்பதி காட்டுவனே." எனவும் வரும். இவை நான்கும் வன்புறைக்கு உரியவாம். பொருள்வயிற்பிரிந்துமீண்ட தலைமகன் சுரத்திடைத் தலைவியைநினைத்தற்குச் செய்யுள்;—"சேணுந்திகழ்மதிற் சிற்றம்பலவன்றெண் ணீர்க்கடனஞ்-சுணுந்திருத்து மொருவன்றிருத்து முலகினெல்லாங்—காணுந்திசைதொறுங் கார்க்கயலுஞ்செங் கனியொடுபைம்—பூணும்புணர்முலையுங் கொண்டு தோன்றுமொர் பூங்கொடியே." எனவரும். இது வருவழிக்கலங்கற்கு உரித்து. தலைமகன் வந்துழித் தலைவிமகிழ்ச்சிக்குச்செய்யுள்;-"பரியுங்கரியும் பரிநெடுந்தேரும் படைநவின்று—விரியுங்கடலன்ன தானையும்வேந்தும்வெம் போர்கடந்து—வரியுங்கழல்முடி மன்னர் நின்றேத்த வரும்பரிசுந்—தெரியுந்தெரியிழையீர் காணவாருமிச் சேணிலத்தே." எனவும், தலைமகளோடிருந்த தலைமகன் கார்ப்பருவங்கண்டு உவந்துசொல்லியதற்குச் செய்யுள்;—"கொத்தலரோதியங் கொம்பரன்னாள்பொங்கு கொங்கைவிம்ம—முத்தலராக முயங்கினம்யாமுழு நீர்விழிபோல்—மைத்தலர்நீல மலர்வயல்சூழ்தஞ்சை வாணன்வண்மைக்—கைத்தலமான வினிப்பொழிவாழிய கார்ப்புயலே." எனவும் வரும். பிறவும் அன்ன. (கஅசு)

ருருகூ. கூறிய வகப்பொரு ளாறிரு வகைத்தாய்ப்
பாட்டுறுப் பாய்வரூஉம் பண்பிற் றென்ப
போக்கரு மரபிற் புல்லிய நெறித்தே.

மேற்கூறியவாற்ருன் அகப்பொருளிலக்கணம் அகத்திணையியலுள்ளும் புறப்பொருளிலக்கணம் புறத்திணையியலுள்ளும் அணியிலக்கணம் அணியியலுள்ளுஞ் செய்யுளிலக்கணஞ் செய்யுளியலுள்ளும் உணர்த்தி அவற்றின் ஒழிபிலக்கணங்களுள் ஒவ்வொன்றற்குச் சிறந்தனவற்றை அவ்வவோத்துக்களுள் உணர்த்தி அந்நான்கற்கும் பொதுவாய் எஞ்சிநின்றனவற்றைப் பாட்டியலுள் உணர்த்துவான் தொடங்கி அவ்வாறு அகத்திணையியலுணர்த்தி அதனொழிபுணர்த்திய புகுந்தவற்றுள் "செய்யுளிடவயிற் புல்லியநெறித்தே." என்பதனன் இச்சூத்திரம் அகப்பொருள் செய்யுளகத்து வருங்கால் இத்துணைப் பகுதிப்பட்டு இவ்வாறு வருமென்பதோர் ஒழிபு கூறுகின்றது. என்னை? பொதுப்படச் "செய்யுளிடவயிற்புல்லியநெறித்தே." என்றதுணையல்லது பன்னிருபகுதிப்பட்டு உறுப்பாய்வருமென்னும் விசேடவிதி ஆண்டுப் பெறப்படாமையின்.

இ - ள். மேற்கூறிப்போந்த அகப்பொருள் செய்யுளகத்து வருங்காற் பன்னிருபகுதியையுடைத்தாய்ச் செய்யுட்கு உறுப்பாய் வந்து விளங்கும் இயல்பினையுடைத்தாம். எ - று.

"ஒழிபெனப் படுவ தகப்பாட் டுறுப்பும்—வழுவு மமைதியுந் தழுவிய தாகும்." என இப்பன்னிரண்டையும் அகப்பாட்டு உறுப்பாக நோக்கி அகத்திணையொழிபாக்கின் அது பொருந்தாது; செய்யுளுறுப்பாக நோக்கியவழி அவை செய்யுளிலக்கணமாவதல்லது அகத்திணையொழிபாகாமையின். (கஅஎ)

ருகூo. திணையே கைகோள் கூற்றே கேட்போ
ரிடனே காலம் பயனே முன்ன
மெய்ப்பா டெச்சம் பொருள்வகை துறையென
வப்பா லாகுமவ் வாறிரு வகையே.

இது மேல் ஆறிருவகையென்ருர் அவை இவையென்கின்றது.

இ - ள். திணைமுதலாகத் துறையீருகக் கிடந்த அப்பகுதிகளாம் மேற்கூறிய பன்னிருவகை. எ - று. (கஅஅ)

ருசுக. முன்னவை யிரண்டுஞ் சொன்னவை யாயவற்
றொன்றவண் வருத லொன்றித் தோன்றும்.

இது நிறுத்தமுறையானே எழுவாயெண்ணுமுறைமைக்கண் நின்ற திணையும் இரண்டாமெண்ணுமுறைமைக்கண் நின்ற கைகோளும் இவ்வியல்பினவாய்ச் செய்யுட்கு உறுப்பாய் வருமென்பதோர் ஒழிபுகூறுகின்றது.

இ - ள். முதற்கணின்ற திணையுங் கைகோளும் மேற்கூறிய இலக்கணத்தனவாகிக், கைக்கிளைமுதலிய ஏழு திணையுள் ஆண்டைக்கு இயைபுடைய யாதானுமொரு திணை செய்யுளகத்து அதற்கு உறுப்பாய்வருதலுங், களவுங் கற்புமாகிய கைகோளிரண்டனுள் ஆண்டைக்கு இயைபுடைய யாதானுமொரு கைகோள் செய்யுளகத்து அதற்குறுப்பாய்வருதலும் பொருந்தித், தோன்றும். எ-று.

முன்னவையிரண்டுஞ் சொன்னவையாகுமென்று ஒழியிற்கூறியது கூறலாமல்லது அகத்திணையொழிபாகாமையின் வருமென்றும், ஒன்றவண்வருமென்னுது வாளாவருமெனின் அவைவரினும் வரும் வாராதொழியினும் ஒழியுமெனப்படுதலான் ஒன்றவண்வருமென்றுங் கூறினர் என்றுணர்க. (கஅக)

ருசுஉ. பார்ப்பான் பாங்கன் றோழி செவிலி
சீர்த்தகு சிறப்பிற் கிழவன் கிழத்தியோ
டளவியன் மரபி னறுவகை யோருங்
களவியற் கிளவிக் குரிய ராகலும்
பாணன் கூத்தன் விறலி பரத்தை
யாணஞ் சான்ற வறிவர் கண்டோர்
பேணுதகு சிறப்பிற் பார்ப்பான் முதலா
முன்னுறக் கிளந்த வறுவரொடு தொகைஇத்
தொன்னெறி மரபிற் கற்பியற் கிளவிக்
குரிய ராகலு முரிய வாகும்.

இது மூன்றாமெண்ணுமுறைமைக்கண் நின்ற கூற்று இருவகைக்கைகோளினும் செய்யுட்கு உறுப்பாய் வருங்கால் அஃது இத்துணைத்தாய்வருமென்பதோர் ஒழிபுகூறுகின்றது.

இ-ள். பார்ப்பான்முதலாகச் சொல்லப்பட்ட கலந்தொழுகும் மரபினையுடைய அறுவகையோருங் களவென்னுங் கைகோள்பற்

றிச் செய்யுளகத்து நிகழுங் கிளவி கூறுதற்கு உரியராகலும் பாணன் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகையோரும் மேற்சொல்லப்பட்ட பார்ப்பான்முதலாகிய அறுவகையாரோடுங் கூடப் பன்னிருவருங் கற்பென்னுங் கைகோள்பற்றிச் செய்யுளகத்து நிகழுங்கிளவி கூறுதற்கு உரியராகலுஞ் சிறந்தனவாம். எ - று.

தொன்னெறிமரபென்றதனாற் பாகனுந் தூதனுங் கூறவும் அமையும் அவர் ஏனையர்போலச் சிறப்பிலராயினும் எனக்கொள்க. பார்ப்பான் நன்றுந் தீதும் ஆராய்ந்து உறுதிகூறும் உயர்குலத்தோனாகிய தோழன். பாங்கன் பெரும்பாலும் தலைவன்வழி நின்றொழுகும் ஒத்தகுலத்தோனாகிய தோழனும் இழிந்தகுலத்தோனாகிய தோழனுமாம். கலந்தொழுகும் மரபென்றதனாற் பார்ப்பாரினும் பாங்கரினுஞ் சிலரே அதற்கு உடன்படுவாரெனவுந் தொன்னெறிமரபிற்கிளவியென்றதனான் அவர் குலந்தோறுங் கிளந்துவருகின்ற நெறியை உடையரென்றுங்கொள்க.

“பெயர்த்தனன் முயங்கயான் வியர்த்தன னென்றனள்.” இது செவிலிகூற்று. “பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு—நனி பசந் தனளென வினவுதி.” என்பதும் அது. “கேளிர்வாழிகேளிர்” இது கிழவன்கூற்று. “விளங்குதொடி முன்கை வளைந்து புறஞ்சுற்றி—நின்மார் படைதலி னினிதா கின்றே.” இது கிழத்திகூற்று. “ஆடற் பயின்றனை யென்னு தென்னுரை—யூடலிற் றெளிதல் வேண்டும்.” இது கூத்தன் கூற்று. பிறவும் அன்ன. (கசுo)

ருசுரு. ஊரு மயலுஞ் சேரி யோரு
நோய்மருங் கறிநருந் தந்தையுந் தன்னையுங்
கொண்டெடுத்து மொழியப் படுவ தல்லது
கூற்றவ ணின்மை யாப்புறத் தோன்றும்.

இஃது எய்தாதது எய்துவிப்பதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். ஊரிலுள்ளாரும் அயன்மனையுள்ளாருஞ் சேரியினுள்ளாரும் நோய்ப்பக்கங் குறிப்பினால் அறிந்தோருந் தந்தையுந் தமயனுமென இவ்வெண்ணப்பட்ட அறுவகையோரும் இருவகைக்கைகோளும்பற்றிச் செய்யுளகத்துக் கூற்றுநிகழ்த்துங்கால் அந்நிகழ்ச்சி கொண்டெடுத்து மொழியப்படுவதல்லது முகத்துரையாக நிகழ்த்தும் நிகழ்ச்சி ஆண்டில்லாமை வலியுறத்தோன்றும். எ - று.

கொண்டெடுத்துமொழிதல் இவர்கூற்றாகப் பிறர்கூறுதல்.

"ஊஉ ரலரெழச் சேரி கல்லென." எனவும்,"எந்தையு நிலனு றப் பெருஅ—நின்னசீறடி சிவப்ப—வென்னில்குறுமக ளியங்குதி யென்னும்." எனவும் வரும்.

**யா**ப்புறத்தோன்றும் என்பதனுன் அகத்திணைக்கண் அவ் வாறு நிகழுமெனவும் புறத்திணைக்கண் அவர் கூறவும்பெறுமென வுங் கொள்க. (ககக)

ருகூச. கிழவோன் றன்னொடுங் கிழத்தி தன்னொடு
நற்றாய் கூறன் முற்றத் தோன்றாது.

**இ**து நற்றாய்கூற்றிற்கு உரிய மரபு விலக்கியல்வகையான் விதிப்பதாயதோர் ஒழிபுகூறுகின்றது.

இ - ள். தலைவனேடுந் தலைவியோடும் இடையிட்டு நற்றாய்கூ றுதல் நிரம்பத்தோன்றாது. எ - று.

**ந**ற்றாயென்று ஒருமைகூறியவதனுற் தலைமகள் தாயே கொள் ளப்படும். இதனுனே தந்தை தன்னை என்பனபோல்வனவற்றுக்கும் இஃதொக்கும். முற்றவென்றதனுற் தானேதலைவனுதலாற் தலை வன்றமர் யாவருங் கூருர் முற்கூறப்பட்டாரல்லாரென்பதுங் கொள்க. முற்றாதென்னுது தோன்றாதென்றதனுற் புறத்திணைக் கண் இவை வரைவின்றி வழக்கினெடுபொருந்துமாற்றாற் கொள் ளப்படுமென்பது. கிழவோன்றன்னொடுங் கிழத்திதன்னொடுங் கூறு ளெனவே அல்லுழிச்சொல்லப்பெறும் நற்றாயென்பதாம். அஃது "ஏமவெங் காம மியைவ தாயின்—மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்—கொம்மையம் பசுங்காய்க் குடுமி விளைந்த—பாக லார்கைப் பறைக்கட் பீலித்—தோகை காவிற் றுள்ளுநாட் டன்ன—வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பிற்—செறிந்த சேரிச் செம்மன் மூதூ— ரறிந்த மாக்கட் டாகுக தில்ல—தோழி மாரும் யானும் புலம்பச்— சூழி யானைச் சுடர்ப்பூ ணன்னள்—பாழி யன்ன கடியுடை வியன கர்ச்—செறிந்த காப்பிகந் தவனெடு போகி—யத்த விருப்பை யார்க ழல் புதுப்பூத்—துய்த்த வாய்துக ணீகலம் பரிப்பக்—கொன்றை யஞ்சினைக் குழற்பழங் கொழுதிய—வன்கை யெண்கின் வயநிரை பார்க்கு—மின்றுணைப் பிரிந்த கொள்கையொ டொராங்குக்— குன்ற வேயிற் றிரண்ட—மென்றோண் மஞ்ஞை சென்ற வாறே." எனவரும். (ககஉ)

ருகூரு. புணர்ந்துடன் போய துணர்ந்த பின்றை
யந்தணர் தெய்வ மயலோ ரறிஞர்

சிந்தைநோ யறிவோர் செவிலி பாங்கியொடு
கண்டோர்க் குரைத்தல் பண்புடைத் தாய்க்குந்
தாயொடு பாங்கி தான்முத லாரோ
டாயிடை யுரைத்தல் சேயிழைச் செவிலிக்கு
முரிய வென்மனா ருணர்ந்திசி னோரே.

இது நற்றாயுஞ் செவிலித்தாயுங் கூற்றுநிகழ்த்துங்கால் அக்கூற்று அவர்க்கு இன்னரோடு இன்னுழியாமென்பதோர் ஒழிபுகூறுகின்றது.

இ - ள். தலைமகள் புணர்ந்துடன்போயவாறு தானறிந்தபின்னர் அந்தணர்முதலாகிய அனைவர்க்குங் கூறுதல் நற்றாய்க்கும் அங்ஙனம் புணர்ந்துடன்போயவாறு தானறிந்தபின்னர் நற்றாய்முதலிய அனைவரோடுங் கூறுதல் தலைமகள் செவிலித்தாய்க்கும் உரிய என்று கூறுவர் அறிந்தோர். எ - று. (கககூ)

ருசுசு. தாயர் பாங்கியர் தலைவன் றலைவியோ
டேயு மென்ப கண்டோர் கூற்றே.

இது கண்டோர் கூற்றுநிகழ்த்துங்கால் அக்கூற்று இனையரோடு நிகழ்த்துவரென்பதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். நற்றாயுஞ் செவிலித்தாயும் அவள் மகளாகிய உயிர்ப்பாங்கியும் ஏனைப்பாங்கியருந் தலைவனுந் தலைவியுமாகிய இவரோடு கண்டோர்கூறுதல் பொருந்துமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

தாயர் பாங்கியர் என்றாற்போல உய்த்துணரக்கூறாது தலைவன் தலைவியெனச் செவ்வனந்தோன்றக் கூறியவதனால் அவ்விருவர்கூட்டத்துமன்றி அவர் தனித்துழிக் கண்டோர்கூற்று இல்லையெனக்கொள்க. (ககூச)

ருசுஎ. தமர்வரி னிடைச்சுரந் தன்னிற் கிழத்தியோ
டமர்தரு கிழவோ னாணையுங் கூறும்.

இதுவுங் கூற்றுவிகற்பங்கூறுவதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். புணர்ந்துடன்போகின்றகாலத்துத் தமர் பின்தொடர்ந்து வருவராயின் அவர்கேட்பச் சுரத்தின்கட் தலைமகளோடு இன்புற்றுச்செல்லுந் தலைவன் அவளோடு ஆணையுங் கூறும். எ-று.

ஆணை ஆக்கினையென்னும் வடமொழிச்சிதைவு. மெல்லிய காமம் நிகழுமிடத்து ஆணைகூறுதல் மரபன்றாயினுங் கூறாக்கால் இராக்கதம்போன்றுகாட்டுதலின் நீதிநூல்வழக்கால் அவ்விடத்துக் கூறவேண்டுதலின் ஆணையுங்கூறுமென்றார்; "இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு—வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்" என்பவாகலின். ஏற்புழிக்கோடலாற் தமர் தலைமகள் தமரென்றேகொள்க.

வரலாறு:—"நீவிளை யாடுக சிறிதே யானே—மழகளி றுரிஞ்சிய பராரை வேங்கை—மணலிடு மருங்கி னிருபுறம் பொருந்தி—யமர்வரி னஞ்சேன் பெயர்க்குவெ—னுமர்வரின் மறைகுவன் மாஅ யோளே." எனவரும்.

உம்மையாற் கிழத்தியொடு வருட்டிக்கூறவும் பெறுமென்பது. "அழிவிலர் முயலு மார்வ மாக்கள்—வழிபடு தெய்வங் கட்கண் டாஅங்—கலமரல் வருத்தந் தீர யாழநின்—னலமென் பணைத் தோ ளெய்தின மாயிற்—பொரிப்பூப் புன்கி னழற்றகை யொண் முறி—சுணங்கணி வன்முலை யணங்குபடத் திமிரி—நிழல்காண் டோறு நெடிது வைகி—மணல்காண் டோறும் வண்ட றைஇ—வருந்தா தேகுமதி வாலெயிற் றோயே—நறுந்தண் பொழில கானங்—குறும்பல் லூரயாஞ் செல்லு மாறே." எனவரும். (கசரு)

ருசஅ. உடன்போய் மீண்ட கொடுங்குழை மடந்தை
பிரிவுழித் தலைவனொடு சுரத்தியல் பேசலும்
பிரிந்துழி நெஞ்சொடும் பிறரொடும் வருந்திச்
சொல்லலு முரியள் சொல்லுங் காலே.

இதுவும் அது.

இ - ள். தலைவனுடன்போய்மீண்டதலைவி தலைவன்பிரிவுழி அவனோடு சுரத்தின் தன்மைகூறலும் பிரிந்தவிடத்துத் தன்னெஞ்சோடும் பிறரோடும் வருத்தமுற்றுச் சொல்லுதலும் உரியளாஞ் சொல்லுமிடத்து. எ - று.

தலைவன்பிரியுங்காலத்து அவனோடு சுரத்தியல்பு கூறற்குச் செய்யுள்;—"நினைக்கினு மரிதரோ வைய வன்றுநாம்—பணைத்தா ளோமைப் படுசினை பயந்த—பொருந்தாப் புகர்நிழ லிருந்தன மாக—நடுக்கஞ் செய்யா நண்ணுவழித் தோன்றி—யொடித்து மிசைக்கோ புலம்பிய சுரனே." எனவரும். இக்கூற்றுப்பகுதிக்கட் காட்டாதோ

ழிந்தனவற்றிற்கு உதாரணம் மேற்காட்டியவற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காண்க. (கசுசு)

ருசுகூ. சாற்று வனைவருந் தலைவன் றலைவியோ
டேற்றன கூறுப விடந்தொறு மிடந்தொறும்.

இது மேல் விதந்தோதப்படாதார்க்கு உரிய மரபு உணர்த்துகின்றது.

இ - ள். மேல் விதந்து ஓதப்படாத பார்ப்பானும் பாங்கனும் பாங்கியும் பாணனுங் கூத்தனும் விறலியும் பரத்தையும் அறிவருமாகிய அனைவருந் தலைவனோடுந் தலைவியோடும் இடந்தொறுமிடந்தொறும் பொருந்துவனவற்றைக் கூறுவர். எ - று. (கசுஎ)

ருஎ0. நோயு மின்பமு மிருவகை நிலையிற்
காமங் கண்ணிய மரபிடை தெரிய
வெட்டன் பகுதியும் விளங்க வொட்டிய
வுறுப்புடை யதுபோ லுணர்வுடை யதுபோன்
மறுத்துரைப் பதுபோ னெஞ்சொடு புணர்த்துஞ்
சொல்லா மரபி னவற்றொடு கெழீஇச்
செய்யா மரபிற் றொழிற்படுத் தடக்கியு
மவரவ ருறுபிணி தமபோற் சேர்த்தியு
மறிவும் புலனும் வேறுபட நிறீஇ
யிருபெயர் மூன்று முரிய வாக
வுவம வாயிற் படுத்தலு முவம
மொன்றிடத் திருவர்க்கு முரியபாற் கிளவி.

இஃது ஒருசார் காமப்பொருண்மைபற்றித் தலைவன்மாட்டுந் தலைவிமாட்டும் நிகழ்வதோர் கூற்றுவழுவமைதி கூறுகின்றது.

இ - ள். துன்பமும் இன்பமுமாகிய இருவகைநிலையினையுமுடைய காமத்தைக்குறித்த மரபு இடையீடுபடுதலாலே நகைமுதலிய மெய்ப்பாடு எட்டனுடைய கூறுபாடுந் தோன்றப், பொருந்திய உறுப்புடையதுபோலவும் உணர்வுடையதுபோலவும் மறுத்துரைப்பதுபோலவுந் தன்னெஞ்சொடு புணர்த்திச் சொல்லியும், வார்த்தை சொல்லாத முறைமையுடையனவாகிய புள்ளும் மாவும் மரனுங் கடலுங் கானலும் முதலியவற்றோடே அவை வார்த்தைசொல்லுவனவாகப் பொருந்தி அவை செய்தல் ஆற்றாதமுறைமையையுடைய

தூதாகச்சொல்லலும் வருதலும் உளபோலக் கூறுமவைபோல் வன தொழில்களை அவற்றின்மேலே ஏற்றிச் சொல்லியும், யாவர் சிலர் யாதொருபிணியுற்றார் அவருற்றபிணியைத் தாமுற்றபிணிபோலச் சேர்த்திச்சொல்லியும், அறிவையும் அறியப்படும் பொருளையுந் தத்தநிலைமையொழிய வேறுபடநிறுத்தி உவமப்பெயரும் உவமிக்கப்படும் பொருட்பெயருமாகிய இருவகைப்பட்டபெயருந் தொழிலும் பண்பும் பயனும் ஆகிய மூவகைப்பட்ட பொருட்கு உரியவாக உவமம் பொருந்துமிடத்து உவமத்தின்வழியிலே படுத்திச்சொல்லுதலுந் தலைமகற்குந் தலைமகட்கும் உரிய இலக்கணத்திற் பக்கக்கூற்றாம். எ - று.

இடைதெரிய என்பதனை "இன்ப—மிடைதெரிந் தின்னுமை நோக்கி மனையா—றடைவொழிந்தா ரான்றமைந் தார்." என்றாற்போலக் கொள்க. தெரியவென்னுஞ் செயவெனெச்சம் ஏதுப்பொருண்மைகுறித்து நின்றது. அவரவரென உயர்திணைப்பன்மையாக்கூறினும் இருதிணையும்பாலுங்கொள்ளப்படும்; "ஒருபாற்கிளவி யேனைப்பாற் கண்ணும்—வருவன தாமே வழக்கென மொழிப." என்பவாகலின். ஒன்றிடத்துவமமென்றதனை உவமமொன்றிடத்தென்று மாற்றுக.

வரலாறு:—"கைகவியாச் சென்று கண்புதையாக் குறுகிப்—பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்தன்—றொடிக்கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ—நாணொடு மிடைந்த கற்பின் வாணுத—லந்தீங் கிளவிக் குறுமகண்—மென்றோள் பெறநசைஇச் சென்றவென் னெஞ்சே." இஃது உவகைபற்றி நெஞ்சினை உறுப்புடையதுபோலக் கூறிய தலைவன்கூற்று. "உள்ளம் பிணிகொண் டோள்வயி னெஞ்சஞ்—செல்ல நீர்கஞ் செல்வா மெனினும்." இஃது இளிவரல்பற்றி நெஞ்சினை உணர்வுடையதுபோலக் கூறிய தலைவன்கூற்று. "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே—நீயெமக் காகா தது." இஃது இளிவரல்பற்றி நெஞ்சினை மறுத்துரைப்பதுபோலக் கூறிய தலைவிகூற்று. "கானலுங் கழறாது கழியுங் கூறாது—தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா—தொருநீ யல்லது றுதியாது மிலனே—யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்த—லகவிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்—தண்டா தூதி வண்டினங் களிசிறந்து—பறவை கிளருந் துறைவனை நீயே—சொல்ல வேண்டுமாலவ" இஃது அழுகைபற்றிச் சொல்லா மரபினவற்றொடுகெழீஇச் செய்யாமரபிற் றொழிற்படுத்திக்கூறிய தலைவிகூற்று. "பாய்திரை பாடோவாப் பரப்புநீர்ப் பனிக்கடற்—றூவறத் துறந்தனன் றுறைவ

னென் றவன்றிற-நோய்தெற வுழப்பார்க ணிமிழ்தியோ வெம்போலக்—காதல்செய் தகன்றாரை யுடையை யோநீ.'' இஃது அவரவருறுபிணி தமபோலச் சேர்த்திக் கூறிய தலைவிகூற்று. "ஒங்கெழிற் கொம்பர் நடுவி தெனப்புல்லுங்—காந்தட் கிவருங் கருவிளம் பூக்கொள்ளு—மாந்தளிர் கையிற் றடவரு மாமயில்—பூம்பொழி லுேக்கிப் புகுவன பின்செல்லுந்—தோளெனச் சென்று துளங்கொளி வேய்தொடு—நீள்கதுப் பிஃதென நீரற லுட்புகும்—வாளொளி முல்லை முகையை முறுவலென்—றுள்வலி மிக்கா னஃதறி கல்லான்.'' இஃது அறிவும் புலனும் வேறுபடநிறீஇ உவமவாயிற்படுத்திக் கூறியது. இதனுள் இடையுங் கையும் முதலாகிய உறுப்புக்களைப்பற்றி உவமவாயிற்படுத்து அறியும் அறிவையும் அறியப்படும் பொருளையும் வேறுபடநிறுத்தி உவமம் பொருந்தியவழிக் கூறியவாறுகாண்க. வேயைத் தோள்போலுமென்னாது தோளென்று தொட்டமையால் அறியப்படும் பொருள் வேறுபட்டது. அதனைத் திரியக்காண்டலால் அறிவுவேறுபட்டது. பித்துங் களியும்போல முலையெனச்சென்று வேயைத்தொடும் என்னாது தோளெனச்சென்று வேயைத் தொடும் என்றமையால் உவமமொன்றியவழி உவமவாயிற்படுத்தது. ஏனையவற்றிற்கு இலக்கியம் வந்துழிக் காண்க. ஈண்டு உரைப்பிற்பெருகும். (கசுஅ)

ருஎக. கனவு முரித்தா லவ்விடத் தான.

இது மேற்கூறிய நிலைமை கனவின்கண்ணும் நிகழுமெனக் கூற்றுவமூவமைதி கூறுகின்றது.

இ - ள். மேற்கூறியவாற்றாற் காமம் இடையீடுபட்டுழிக் கனாக்காண்டலும் உரித்து. எ - று.

"இன்னகை யினைய மாக வெம்வயி—னூட லியாங்குவந் தின்றென யாழநின்—கோடேந்து புருவமொடு குவவுநுத னீவி—நறுங்கதுப் புளரிய நன்ன ரமையத்து—வறுங்கை காட்டிய வாயில் கனவி—னென்றேக் கற்ற வலமரல்—போற்றா யாகலிற் புலத்தியாலெம்மே.'' இது தலைவன் கனாக்கண்டுகூறியது "கேட்டிசின் வாழி தோழி யல்கற்—பொய்வ லாளன் மெய்யுற மரீஇ—வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட வேற்றெழுந்—தமளி தைவந் தனனே குவளை—வண்டுபடு மலரிற் சாஅய்த—தமியோன் மன்ற வளியேனியானே.'' இது தலைவி கனாக்கண்டுகூறியது. (கசுகூ)

ருஎஉ. எம்முறை யோரு மியாரொடு மின்றித்
தம்மொடு தாமே சாற்றியு மமைவர்.

இது கூற்றிற்கு உரியார் அனைவர்க்கும் ஆவதோர் மரபு கூறுகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட தலைமகன் முதலாகிய அனைவருந் தாந் தாங் கூறப்படுவோர் எவரோடுங் கூறாது தம்மொடு தாமே கூறியும் அமைவர். எ - று.

உம்மையால் அங்ஙனம் அமைதல் சிறுபான்மை என்றுணர்க.

ருஎங. இறையோன் கூற்று மிறைவி கூற்று
மறையோன் முதலாம் பதின்மரு முறையான்
மறையோன் கூற்று மறிஞர் கூற்று
மிறையோன் முதலா மெனைவருங் கேட்ப.

இது நான்காமெண்ணுமுறைமைக்கண் நின்ற கேட்போர் இவர் என வரையறுத்து உணர்த்துகின்றது.

இ - ள். தலைவன் கூற்றுந் தலைவி கூற்றும் பார்ப்பான் முதலாகிய பதின்மரும், முறையானே பார்ப்பான்கூற்றும் அறிஞர்கூற்றுந் தலைமகன் முதலாகிய எல்லாருங் கேட்பர். எ - று.

தலைவன் கூற்றுந் தலைவிகூற்றுந் தாங் கேட்டல் விதந்தோதல்வேண்டுவதன்று அவை தங்கூற்றாகலினென்க. முறை என்ற மிகையானே "ஊர்கபாகவொருவினைகழிய" எனத் தலைவன்கூறப் பாகன் கேட்டலுங் கொள்க. (உ0க)

ருஎச. ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியுங்
கரும நிகழ்ச்சி யிடமென மொழிப.

இஃது ஐந்தாமெண்ணுமுறைமைக்கண் நின்ற இடம் இவ்வியல்பிற்றென்கின்றது.

இ - ள். பலவும் ஒருவழிப்பட்டு ஓரிலக்கணத்தான்முடியுங் கருமநிகழ்ச்சி இடமென்றுகூறப்படும். எ - று.

ஒருசெய்யுட்கேட்டால் இஃது இன்ன இடத்து நிகழ்ந்ததென்று அறிதற்கு ஏதுவாகியதோர் உறுப்பினை இடமென்றார் என்

பது. இடமெனினுங் களமெனினும் ஒக்கும். ஒருநெறிப்படுத லென்பது ஒருவழிப்பலவுந்தொகுத்தல். ஓரியலென்பது அவற்றுக் கெல்லாம் இலக்கணமொன்றாதல். எனவே, இயற்கைப்புணர்ச்சி வன்புறை முதலிய கிளவித்தொகைகளே ஈண்டு இடமெனப்பட் டன என்பதாயிற்று. இது வினைசெய்யிடம். நிலமாயின முன்னர்த் திணையெனப்பட்டனவாம். காலம் முன்னர்ச்சொல்லுப. (உ0க)

ருஎரு. இறப்பே நிகழ்வே யெதிர தென்னுந்
திறத்தியன் மருங்கிற் றெரிந்தன ருணரப்
பொருணிகழ் வுரைப்பது கால மாகும்.

இஃது ஆறாமெண்ணுமுறைமைக்கண் நின்ற காலம் இவ்வி யல்பிற்றென்கின்றது.

இ - ள். இறந்தகாலமும் நிகழ்காலமும் எதிர்காலமுமென்னுங் கூறுபாட்டான் நிகழும்பக்கத்தின் ஆராய்ந்து புலனுமாறு செய்யு ளுட் தோன்றப் பொருணிகழ்ச்சியைக் கூறுமது காலமென்னும் உறுப்பாம். எ - று.

பொருணிகழ்ச்சியைக் காலமென்றது என்னை, காலமென வேறுபொருளில்லதுபோல? எனின், அஃது ஈண்டு ஆராய்ச்சியின் று; நியாயநூலாராய்ச்சியென்க. "வில்லோன்காலனகழலே தொடி யோண்—மெல்லடிமேலவுஞ்சிலம்பே." என்னும்பாட்டினுள் வில் லோனுந் தொடியோளும் என்பன பொருளெனப்படும். "வேய்ப யில்பழுவ முன்னியோர்" என்பது அப்பொருணிகழ்ச்சியான் இறந் தகாலமெனப்படும். அப்பாட்டிற்குச்சிறந்தார் அவராகலின் இவரே பொருளாயினரென்பது. "மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே." என்பது நிகழ்காலமும், "பகலும் பெறுவையிவ டட மென்றோளே." என்பது எதிர்காலமுமெனப்படும் அவ்வப்பொரு ணிகழ்ச்சியானென்றுணர்க. புறத்திற்கும் இவ்வாறே இன்றியமை யாதென்பது. பெரும்பொழுது சிறுபொழுது என்பன ஈண்டுத் திணையெனப்பட்டு அடங்கின. என்னை? முதலுங் கருவும் உரிப் பொருளுங் கூட்டத்திணையாகலின். (உ0ரு)

ருஎசு. இதுநனி பயக்கு மிதனா னென்னுந்
தொகைநிலைக் கிளவி பயனெனப் படுமே.

இஃது ஏழாமெண்ணுமுறைமைக்கண் நின்ற பயன் இவ்வியல் பிற்றென்கின்றது.

இ - ள். இது மிகவும்பயக்கும் இதனுனெனத் தொகுத்துச் சொல்லப்படும்பொருள் பயனென்னும் உறுப்பாம். எ - று.

"மாருக் காதலர் மலைமறந் தனரே—யாருக் கட்பனி வரலா ருவே—வேரு மென்ருேள் வளைநெகி ழும்மே—கூருய் தோழி யான் வாழு மாறே" என்னும்பாட்டுத் தோழி தூதுவிடுவாளாதற்ப யன்பட வந்தது. இவ்வாறே எல்லாப்பாட்டும் பயனுறுப்பாக வன்றி வாராவெனக் கொள்க. (உ0ச)

ருஎஎ. இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரியவென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது முன்னம்.

இஃது எட்டாமெண்ணுமுறைமைக்கண் நின்ற முன்னம் இவ் வியல்பிற்ருய் வருமென்கின்றது.

இ - ள். யாதோரிடத்தானும் யாதானுமொருமொழி தோன்றி யக்கால் அம்மொழி சொல்லுதற்கு உரியாருங் கேட்டற்கு உரியா ரும் இன்னுரென்றறியுமாற்ருன் அங்ஙனம் அறிதற்கு ஓரிடநாட் டிக் கூறுவார்க்குங் கேட்பார்க்கும் ஏற்ற உரை செய்யுட்கு ஈடாகச் சொல்லுவது முன்னம். எ - று.

"யாரிவனெங்கூந்தற் கொள்வானிதுவுமோ—ரூராண்மைக் கொத்த படிறுடைத்து" என்றக்கால் இம்மாற்றஞ்சொல்லுகின்ருள் தலைவியெனவுஞ் சொல்லப்பட்டான் தலைமகனெனவும் முன்னத் தான் அறியப்படுதலின் இது முன்னமாயிற்று. பிறவும் அன்ன. ()

ருஎஅ. உய்த்துணர் வின்றித் தலைவரு பொருளின்
மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டதுதா
னகையே யழுகை யிளிவரன் மருட்கை
யச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்
றப்பா லெட்டா மவ்வகை யெட்டு
மெள்ள விளமை பேதைமை மடமே
யிளிவே யிழவே யசைவே வறுமை
மூப்பே பிணியே வருத்த மென்மை
புதுமை பெருமை சிறுமை யாக்க
மணங்கே விலங்கே கள்வர்தம் மிறையே
கல்வி தறுக ணிசைமை கொடையே
யுறுப்பறை குடிகோ ளலைகொலை யவற்ருெடு

செல்வம் புலனே புணர்வுவிளை யாட்டெனப்
புல்லித் தோன்றும் பொருள்வகை யவற்று
னென்று நான்குசெய் துறழவெண் ணான்கா
மென்று கூறுப வியல்புணர்ந் தோரே.

இஃது ஒன்பதாமெண்ணுமுறைமைக்கண் நின்ற மெய்ப்பாடு இவ்வியல்பிற்றாய் இத்துணைப்பகுதிப்பட்டுச் செய்யுட்கு உறுப்பாய் வரும் என்கின்றது.

இ - ள். உய்த்துணர்ச்சியின்றி அவ்விடத்துவந்தபொருளானே சொல்லப்படும்பொருள் தானேவெளிப்பட்டாங்குக் கண்ணீரரும்பன் மெய்ம்மயிர்சிலிர்த்தன் முதலாகிய சத்துவம் படுமாற்றான் வெளிப்படச்செய்வது மெய்ப்பாடென்னும் உறுப்பாம். அம்மெய்ப்பாட்டுறுப்புத்தான் வகையானே நகை முதலாக உவகை ஈறாகக்கிடந்த அப்பகுதியெட்டாம்; அப்பகுதியெட்டும் விரியானே எள்ளல் முதலாக விளையாட்டு ஈறாக இயைபுபடத்தோன்றாநின்ற பொருட்பகுதிகளான் ஒன்றை நான்காகச்செய்துமாற, முப்பத்திரண்டாமென்றுகூறுவர் அவற்றின் தன்மையை அறிந்தோர். எ - று.

கவிப்பொருளுணர்ந்த அதனானே சொல்லப்படும்பொருளுய்த்து வேறுகண்டாங்கறிதலை மெய்ப்பாடென்றார். அது தேவருலகங் கூறினும் அதனைக்கண்டாங்கு அறியச்செய்தல் செய்யுளுறுப்பாமென்றவாறாம். ஆகவே, மெய்ப்பாடு பொருட்பாடாயிற்றென்பது. அது "மையற விளங்கிய மணிமருள் அவ்வாய்தன்—மெய்பெறா மழலையின் விழங்குபூ ணணைத்தர." என்றாற்போல்வது. நகை, சிரிப்பு. அழுகை, அவலம். அது தானே அவலித்தலும் பிறர் அவலங் கண்டு அவலித்தலுமென இருவகைப்பட்டு ஒன்று கருணையெனவும் ஒன்று அவலமெனவும் பெயர்பெற்றுச் சுவை ஒன்பதாதலும் உடையவென்பது. இளிவரல், இழிபு. மருட்கை, வியப்பு. அற்புதமெனினும் அமையும். அச்சம், பயம். பெருமிதம், வீரம். எல்லாரோடும் ஒப்பநில்லாது பேரெல்லையாகி நிற்றலின் அது பெருமிதமெனப்பட்டது. வெகுளி, உருத்திரம். உவகை, காமமுதலியமகிழ்ச்சி. இம்மெய்ப்பாடு எட்டினையுஞ் சுவையெனவுங் குறிப்பெனவும் வழங்கினும் அமையும். இவ்வெட்டின் கிடக்கைமுறைமைக் காரணங்களும் ஓர்ந்துணர்க. ஈண்டு உரைப்பிற்பெருகும். மற்றிவ் வெட்டினோடுஞ் சமநிலைகூட்டி ஒன்பதென்னுமோ நாடகநூலுட் போலவெனின், அதற்கோர் விகாரமின்மையின் ஈண்டுக்கூறிற்றில மென்பது. அதற்குவிகாரமுண்டெனின் முன்னையெட்டினுள்ளுஞ்

சார்த்திக்கொள்ளப்படும். அல்லதூஉம், அஃது உலகியல் நீங்கினு பெற்றியாகலின் ஈண்டு உலகவழக்கினுட் சொல்லற்பாற்றன்றென் பது. சத்துவமுங் குறிப்புஞ் சுவையுமென்னும் மூன்றற்கும் முதற் கண்ணவாகலான் அம்மூன்றனையும் அடக்கிய பொருட்பகுதியைப் 'புல்லித்தோன்றும் பொருள்வகையென்றார்' என்பது. இஃது என் சொல்லியவாறோ எனின், சுவைக்கப்படும்பொருள்பற்றிப் பொறியு ணர்வாகிய சுவையும், அச்சுவைபற்றி உள்ளநிகழ்ச்சியாகிய குறிப் பும், அக்குறிப்புப்பற்றிப் புறத்துட்டோன்றும் மெய்ம்மயிர்சிலிர்த்தல் கண்ணீரரும்பல் முதலிய விறலும் பிறத்தலின் இங்ஙனங்கூறிய முப் பத்திரண்டுசுவைப்பொருளும் அம்மூன்றனையும் உள்ளடக்கி அவை பிறத்தற்கு முறையேகாரணமாய்நிற்கும் என்றவாறுமென்க. விற லெனினுஞ் சத்துவமெனினும் ஒக்கும். எள்ளல், இகழ்ச்சி. இளமை, குழத்தன்மை. பேதைமை, அறிவின்மை. மடம், கொளுத்தக் கொண்டு கொண்டதுவிடாமை. இளிவு, பிறரான் இகழப்பட்டு எளியனுதல். இழவு, தந்தையுந் தாயும் முதலாகிய சுற்றத்தாரையும் இன்பம்பயக்கும் நுகர்ச்சி முதலாயவற்றையும் இழத்தல். அசைவு, பண்டைநிலைமைகெட்டு வேறொருவாறாகி வருந்துதல். வறுமை, போகந்துய்க்கப்பெறாத பற்றுள்ளம். மூப்பு, கிழம். பிணி, நோய். வருத்தம், முயற்சி. மென்மை, மெல்லிதாதற்றன்மை. புதுமை,புதி தாதற்றன்மை; அது காணுதனகண்டவற்றின்மேல் நிகழ்வது. பெருமை, பெரிதாதற்றன்மை; அது பண்டுகண்டபொருள்கள்போ லாது கழியப்பெரியவாயினவற்றின்மேல் நிகழ்வது. சிறுமை, சிறி தாதற்றன்மை. அது கடுகின்கட் பலதுளைபோல இறப்பச் சிறியவா யினவற்றின்மேல் நிகழ்வது. ஆக்கம், ஒன்று ஒன்றாய்த்திரிதல். அணங்கு, அணங்குதற்றொழிலவாகிய பேய் பூதம் பாம்பு நிரயபா லர் சவந்தின்பெண்டிர் உருமிசை இத்தொடக்கத்தன. விலங்கு, யாளி புலி இத்தொடக்கத்தன. கள்வர், பிறருடைமையை அவரை வஞ்சித்துக்கொள்ளும்பொருட்டுத் தீத்தொழில்புரிவார். இறை, அரசனுந் தந்தையும் ஆசானும் முதலியோர். கல்வி, நூன்முதலியனப யிறல். தறுகண், அஞ்சத்தக்கன கண்டுழி அஞ்சாமை. இசைமை, இன்பமும் பொருளும் இறப்பப்பயப்பினும் பழியொடுவருவனசெய் யாமை. கொடை, உயிரும் உடம்பும் உறுப்பும் முதலிய எல்லாப் பொருளுங்கொடுத்தல். உறுப்பறை, கையுங் கண்ணும் முதலிய உறுப்புக்களை அறுத்தல். குடிகோள், தாரமுஞ் சுற்றமுங் குடிப்பி றப்பும் முதலாயவற்றுக்கட் கேடுசூழ்தல். அலை, கோல்கொண்டு அலைத்தல் முதலாயின. கொலை, அறிவும் புகழும் முதலாயவற் றைக் கொன்று உரைத்தல். செல்வம், நுகர்தற்கு உரியனவற்றின்

நுகர்ச்சி. புலன், கல்விப்பயனாகிய அறிவுடைமை. புணர்வு, காமப் புணர்ச்சிமுதலாயின. விளையாட்டு, பதியிகந்து யாறுங் குளனுங் காவும் ஆடிவருதல் முதலாயின. எள்ளல் முதலாக ஆக்கம் ஈறாகக் கிடந்த நானான்கும் ஒன்றிரண்டாகி நாலெட்டாதலுமுடைய. அங்ஙனம் ஆதல்மேற்காட்டும் உதாரணங்களான் உணர்க.

"எள்ளி நகினும்வரூஉம்" எனத் தன்கண் நிகழ்ந்த எள்ளலும், தன்மகள் தன்னைமதியாது இகழ்ந்தாளென்றலின் "நல்லை மன்னென நகூஉப்பெயர்ந் தோளே" எனப் பிறரெள்ளியதும், "நடுங்குதல் காண்மார் நகைகுறித் தனரே" எனத் தன் இளமையும், "நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்" எனப் பிறரிளமையுந், தான்செய்த தவற்றிற்குத் தாய்தன்னைவெகுண்டது தனக்கு நகையாகக்கொண்டமையின் "நகைநீ கொள்ளாய் தோழி" எனத் தன்பேதைமையும், "நகையாகின்றேதோழி—மம்மர்நெஞ்சினன் றொழுது நின்றதுவே"எனப் பிறன்பேதைமையும்,நீயிர் கூறியதனையே மெய்யெனக்கொண்டு மகிழ்ந்து நக்கனம் என்றமையின் "நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே" எனத் தன்மடமும், "நாணகையுடைய நெஞ்சே நம்மொடு—தான்வரு மென்ப தடமென் றோளி" எனப் பிறர்மடமும் பொருளாக நகையும் பரத்தையை நீயெள்ளினையென்று அழுது வருகின்றாளென்று தலைமகற்குச் சொல்லியதாகலின் "எழுதெழில் சிதைய வழுதன ளேங்கி—யடித்தென வுருத்த தித்திப் பல்லூழ்—நொடித்தெனச் சிவந்த மெல்விரற் றிருகுபு—கூர்நுதி மழுங்கிய வெயிற்ற—வூர்முழுது நுவலுநிற் காணிய சென்மே." எனத் தன் இளிவுந், தலைமகள் இளிவந்தொழுகுவது காரணமாகச் "செய்யேன்மன்யானுந் துயருழப்பேன்" என்றமையின் "கயமல ருண்கண்ணாய் காணாய்" என்னும் பாட்டினுட் "தானுற்ற-நோயுரைக்கல்லான் பெயருமற் பன்னாளும்." எனப்பிறன்கட்டோன்றிய இளிவும், (இது கருணைச்சுவைக்குப் பொருளெனப்படும்.) கணவனையிழந்தாள் அவற்குப் பலிக்கொடைகொடுத்தற்கு மெழுகுகின்றாளைக் கண்ணீரே நீராக மெழுகுகின்றாளென்றமையின் "மெழுகு மாப்பிதன்கலுழ் நீரானே" எனத் தன்கட்டோன்றிய இழவுந், தலைவன் பிரிவிற்குத் தோழி படர்கூர்ந்தாளெனச் சொல்லினமையின் "பின்னொடு முடித்த மண்ணா முச்சி" என்னும் பாட்டினுள் "அணங்குறு கற்பொடு மடங்கொளச் சாஅய்—நின்னோய்த் தலையையு மல்லை தெறுவர—வென்னா குவள்கொ லளிய டானென—வென்னழி பிரங்கு நின்னொ டியானும்" எனப் பிறன்கட்டோன்றிய இழவுந், "துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி—

யொளியொ டுருவென்னைக் காட்டி யளியளென்—னெஞ்சாறு கொண்டா ளதற்கொண்டு துஞ்சேன்'' எனத் தன்கட்டோன்றிய அசைவும், அள்ளிலைத்தாளி கொய்யாநின்றான் இதுபொழுதென்று அவலித்துச் சொன்னமையின் "இல்வழங் குமடமயில் பிணிக்குஞ்-சொல்வலை வேட்டுவ னாயினன் முன்னே'' எனப் பிறன்கட்டோன்றிய அசைவும், "இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை—சுவைத்தொறழூஉந்தன் மகத்து முகநோக்கி'' எனத் தன்கட் டோன்றியவறுமையும், "நீரொடு நிறைந்த வீரிதழ் மழைக்கணென்-மனையோ ளெவ்வ நோக்கி நினைஇ—நிற்படர்ந் திசினே நற்போர்க் குமண'' எனப் பிறர்கட்டோன்றிய வறுமையும் பொருளாக அவலமும், இளமைக்காலத்துச் செய்தனசெய்யமாட்டாது இளிவந்தனம் இக்காலத்தென்றமையின் "தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்—றிருமிடைமிடைந்த சிலசொற்—பெருமூ தாளரே மாகிய வெமக்கே'' எனத் தன்கட் டோன்றியமூப்பும், "மூத்துத்தலை யிறைஞ்சிய நின்னொடியானே—போர்த்தொழி றொடங்க நாணுவ லதனான்'' எனப் பிறன்கட்டோன்றிய மூப்பும், மலையைத்துளக்கும் ஆற்றலையுடையாய் காமப்பிணிகூர்ந்தோரை அலைப்பது நினக்குத் தகுவதன்றென இளிவந்து வாடைக்குக்கூறினமையின் "இமயமுந் துளக்கும் பண்பினை—துணையி லாளர் பெண்டிரிஃ தெவனோ'' எனத் தன்கட்டோன்றிய பிணியும், நெஞ்சினைவேறுநிறீஇக் கூறினமையிற் "குரைகடற் றிரையது பறைதபு நாரை—***நோயை நெஞ்சே நோய்ப்பாலோயே'' என்ப் பிறன்கட்டோன்றியபிணியும், பின்னின்ற தலைமகன் கூறியதாகலின் "யான்ற னறிவ லவளறி யலளே'' எனத் தன்கட்டோன்றிய வருத்தமும், அவன் இவ்வாறொழுகுதல் நமக்கிளிவரவாமென்னுங் குறிப்பினாற் கூறிக் குறைநயப்பித்தமையின் "ஒன்று, இரப்பான்போ லிளிவந்துஞ் சொல்லும்'' எனப் பிறன்கட்டோன்றியவருத்தமும், மெலியார் இளிவந்தன கூறுவராயினும் வலியார் மீக்கூறுவராயினும் இவன் அவைசெய்யானென்றமையின் "வலியாரென்று வழிமொழியலன் மெலியாரென்று மீக்கூறலன்'' எனத் தன்கண்ணும் பிறன்கண்ணுந் தோன்றிய மென்மையும் பொருளாக இளிவரலும், ("ஒருகையுடைய தெறிவலோயானு—மிருகைசுமந்துவாழ்வேன்'' என்பது வீரம்பற்றிய இளிவரல். இதுவும் அதன்பாற்படுத்துக.) தன்கருத்து வெளிப்படாது தன்மெய்க்கட்டோன்றிய புதுமையை வியந்தாள்போலத் தோழிக்கு அறத்தொடு நின்றமையின் "மலர்த்தார் மார்ப னின்றோற் கண்டோர்—பலர்தில் வாழி தோழி யவரு—ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி—யோரியா னாகுவ தெவன்கொ-னீர்வார் கண்ணொடு நெகிழ்தோளே

னே." எனத் தன்கட்டோன்றிய புதுமையும், பண்டொருகாலுங் கண்டறியாதபடி ஆடிற்று மயிலென்றமையின் "மந்தி நல்லவை மருள்வன நோக்கக்—கழைவள ரடுக்கத் திகலி யாடுமயில்—விழவுக்கள விறலியிற் றோன்று நாடன்" எனப் பிறபொருட்கட்டோன்றிய புதுமையுங், கருங்கோற் குறிஞ்சிப்பூக்கொண்டு பெருந்தேன் இழைத்தாற்போலவழிமுறையாற் பெருகற்பாலதாகிய நட்பு மற்றவனைக்கண்ணுற்ற ஞான்றே நிலத்தினதகலம்போலவும் விசும்பினோக்கம்போலவுங் கடலினாழம்போலவும் ஒருகாலே பெருகிற்றென்றமையின் "நிலத்தினும் பெரிதே வானினுமுயர்ந்தன்று—நீரினு மாரள வின்றே சாரற்—கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு—பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே." எனத் தன்கட்டோன்றிய பெருமையும், (இது தலைமகன் கருத்தினை நட்பிற்குக் கொள்ளுங்காற் பிறன்கட்டோன்றிய பெருமையுமாம்.) "மைம்மல ரோதி மணிநகைப் பேதைதன்—கொம்மை வரிமுலை யேந்தினு—மம்ம—கடையிற் சிறந்த கருநெடுங்கட் பேதை—யிடையிற் சிறியதொன் றில்." எனப் பிறன்கட்டோன்றிய சிறுமையுந் (தன்கட்டோன்றிய சிறுமை வந்துழிக் காண்க.) நரிவெரூஉத்தலையார் தம்முடம்பு பெற்று வியந்து கூறிய பாட்டாகலின் "எருமை யன்ன கருங்கல் லடைதோறானிற் பரக்கும் யானைய முன்பிற்—கானக நாடனை நீயோ பெரும." எனத் தன்கட்டோன்றிய ஆக்கமும், "உறக்குந் துணையதோராலம்வித் தீண்டி—யிறப்ப நிழற்பயந் தாஅங்கு." எனப் பிறபொருட்கட்டோன்றிய ஆக்கமும், (இனிக் "கிண்கிணி களைந்தகாலொண்கழ றொட்டு.") எனவும், "அன்னா ளொருவன்ற னண்டைகை விட்டென்னைச்—சொல்லுஞ் சொற்கேட்டி சுடரிழாய்" எனவும், முறையே சிறியோன் பெருந்தொழில் செய்ததூஉம் பெரியோன்சிறுதொழில் செய்ததூஉம் பொருளாக வியப்புப்பிறந்ததும் ஈண்டுக்கூறிய சிறுமைபெருமையென்றவற்றின்பாற் படுத்திக்கொள்க. "யானை தாக்கினு மரவுமேற் செலினு—நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினுஞ்—சூர்மகண் மாறா மறப்பூண் வாழ்க்கை" இதனுள் அணங்கும் விலங்கும், "ஒரூஉநீயெங் கூந்தல் கொள்ளல்யாநின்னை—வெரூஉதுங் காணுங் கடை." இதனுட் தலைவனைக் கள்வன்பாற் சார்த்தி உரைத்தமையிற் கள்வரும், "எடுத்து மேனோக்குறின் வாழலே மென்னுங்—கருத்தினாற்கை கூப்பிப் பழகி—யெருத்திறைஞ்சிக்—கால்வண்ண மல்லாற் கடுமான்றேர்க் கோதையை—மேல்வண்ணங் கண்டறியா வேந்து." இதனுள் இறையும் பொருளாக அச்சமும் (இது பிறிதுபொருள்பற்றியேவரும்.) "வல்லார்முற் சொல்வல்ல னென்னைப் பிறர்முன்னர்க்—கல்லாமை

காட்டியவள்." இதனுள், என்னையுங் கல்லாமைகாட்டினளெனத், தன்பெருமிதங் கூறினமையிற் கல்வியும், "அடன்மாமே லாற்றுவே னென்னை மடன்மாமேன்—மன்றம் படர்வித்தவள்." இதனுட் தறு கண்ணுங், "கழியாக் காதல ராயினுஞ் சான்றோர்—பழியொடு வரூஉ மின்பம் வெஃகார்" இதனுட் புகழும், "வையம் புரவுக்கு முள்ளத்தே னென்னை யிரவுக்கு—மின்னு விடும்பைசெய் தாள்." இதனுட் கொடையும் பொருளாகப் பெருமிதமும், (இது தன்கட் டோன்றிய பொருள் பற்றியேவரும்.) "முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று" இதனுள் உறுப்பறையும், நின்மகன் படையழிந்து மாறினனென்று பலர்கூற "மண்டமர்க் குடைந்தன னாயி னுண்டவென்-முலையறுத் திடுவன் யானெனச் சினைஇ." இதனுட் தன்மகன் மறக்குடிக்குக் கேடுசூழ்ந்தானென்று சினங்கொண் டாளாகலிற் குடிகோளும், "வரிவயம் பொருத வயக்களிறு போல-வின்னு மாறாது சினனே." இதனுட் புலியான் அலைக்கப்பட்ட யானை பொருதுபோந்தும் அவ்வலைப்புண்டலை நினைந்து சினங் கொள்ளாநின்ற தென்றமையின் அலையும், "உறுதுப் பஞ்சா துடல் சினன் செருக்கிச்—சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை" இதனுட் சிறுசொற்சொல்லுதல் என்பது புகழ்கொன்றுரைத்தலாத லிற் கொலையும் பொருளாக வெகுளியும், (இவைநான்கும் பிறிது பொருள்பற்றிவரும்.) உரனுடை யுளத்தை செய்பொருண் முற்றி—வளமைய ணுகும் பொருளிது வென்பாய்" இதனுள் வளமையணு கும் மனமகிழ்ச்சி இதுவெனக்கூறினமையிற் செல்வமும், ("நன்க லம்பெற்ற வுவகையர்." என்பதும் அது.) "பெண்டிர் நலம்வெள வித் தண்சாரற் றாதுண்ணும்—வண்டிற் றுறப்பான் மலை." இதனுள் முகைப்பதம்பார்க்கும் வண்டுபோலத் தலைவியரை நகைப்பதம் பார்க்கும் அறிவுடைமை காமத்திற்கு ஏதுவாமாகலிற் புலனும், ("இகலில ரெஃகுடையார் தம்முட் குழீஇ—நகலி னினிதாயிற் காண்பாம்." என்பதும் அது.) "இலவ மலரன்ன வஞ்செந் நாவின்" என்னும் மணிமிடைபவழத்துட் "தொடிக்கண் வடுக்கொளமுயங்கி னள்—வடிப்புறு நரம்பிற் றிவ்விய மொழிந்தே." என்று அவள் இவ்வாறு முயங்கினமையான், "உவவினை வாழிய நெஞ்சே" என் றமையிற் புணர்வுந், "துயிலின்றி யாநீந்தத் தொழுனையம் புன லாடி—மயிலியலார் மருவுண்டு மறந்தமைகு வான் மன்னோ" இத னுள், "ஆருடி விளையாடி—மயிலியலார் மருவுண்டு மறைந்தமைகு வான்மன்" என்றமையின் விளையாட்டுப்பொருளாக உவகையும் பிறந்தமை கண்டுகொள்க. இது பிறன்கட்டோன்றிய இன்பம் பொருளாக வரும். பிறவும் அன்ன.

"பண்ணைத் தோன்றிய வெண்ணான்கு பொருளுங்-கண்ணிய புறனே நானான் கென்ப." எனவும், "நாலிரண் டாகும் பாலுமா ருண்டே." எனவும், ஆசிரியர் தொல்காப்பியனார் மெய்ப்பாட்டியல் தொடங்குதற்கண்ணே ஓதிய இவற்றையொழித்து ஒழிந்தனவற்றிற்கே இவரிலக்கணங்கூறியது என்னையெனின், நன்றுசொன்னாய்! முடியுடைவேந்தருங் குறுநிலமன்னரும் முதலாயினார் நாடகமகளிர் ஆடலும் பாடலுங் கண்டுங்கேட்டுங் காமநுகரும் இன்பவிளையாட்டினுட்டோன்றிய முப்பத்திரண்டு பொருளுங் கருதிய பொருட்பகுதி பதினாறாகி அடங்குமெனவும், அம்முப்பத்திரண்டு மெய்ப்பாடும் பதினாறாதலேயன்றி எட்டாதலுமுண்டெனவும், பிறன்கோட் கூறல் என்னும் உத்திவகையாற் கூறியதல்லது தன்றுணிபுரைத்த தன்மையின் ஈண்டு இவர் கூறிற்றிலரென்க. சுவைக்கப்படும்பொருளும் அதனைநுகர்ந்த பொறியுணர்வும் அது மனத்துட்பட்டவழி உள்ளத்து நிகழுங்குறிப்புங், குறிப்புக்கள் பிறந்த உள்ளத்தாற் கண்ணீரரும்பலும் மெய்ம்மயிர்சிலிர்த்தலும் முதலாக உடம்பின் கண்வரும் வேறுபாடாகிய சத்துவங்களுமாகிய நான்கினையும் சுவையெட்டோடுங்கூட்டி ஒன்று நான்குசெய்து உறழ முப்பத்திரண்டாமெனவுஞ், சுவைப்பொருளும் பொறியும் வேறுவேறுநின்றவழிச் சுவைபிறவாமையானும் அவ்விரண்டுங் கூடியவழிச் சுவைபிறத்தலானும் அச்சுவைப்பொருளும் பொறியுணர்வும் ஆகிய ஈரெண்பகுதியும் எட்டாமெனப்படும் எனவுங், குறிப்புஞ் சத்துவமும் உள்ளநிகழ்ச்சியும் உடம்பின் வேறுபாடுமாகலின் அவ்வுள்ளநிகழ்ச்சியை வெளிப்படுப்பது சத்துவமாகலான் அவ்வீரெண்பகுதியும் எட்டெனப்படுமெனவும், இங்ஙனம் அடக்கிப் பதினாறாகுமெனவுஞ், சுவையுணர்வும் பொருளும் ஒன்றாக அடக்கிச் சுவையுங் குறிப்புஞ் சத்துவமுமென மூன்றாக்கி வெவ்வேறிலக்கணங்கூறி அவற்றை "எண்ணிய மூன்றுமொருங்கு பெறுமென—நுண்ணிதி னுணர்ந்தோர் நுவன்றன ரென்ப" என நாடகநூலின் வழிநூல்செய்த ஆசிரியர் செயிற்றியனார் ஓதுபவாகலின் அவைபதினாறும் வீரம் அச்சம் வியப்பு இழிபு காமம் அவலம் நகை நடுவுநிலை என எட்டாயடங்குமெனவும்,இவற்றின் விகற்பமெல்லாஞ் செயிற்றியம் முதலிய நூல்களான் ஓர்ந்துணர்க. ஈண்டு உரைப்பிற் பெருகுமாதலானென்பது.

ருஎ௧. ஆங்கவை யொருபா லாக வொருபா
லுடைமை யின்புற னடுவுநிலை யருள
றன்மை யடக்கம் வரைத லன்பெனாஅக்
கைம்மிக னலிதல் சூழ்ச்சி வாழ்த்த

ஞண றுஞ்ச லரற்றுக் கனவெனு அ
முனித லினைதல் வெரூஉதன் மடிமை
கருதலா ராய்ச்சி விரைவுயிர்ப் பெனுஅக்
கையா றிடுக்கண் பொச்சாப்புப் பொருமை
வியர்த்த லைய மிகைநடுக் கெனுஅ
விவையு முளவே யவையலங் கடையே.

இது மேற்கூறிவந்த எண்ணான்குமன்றி இவை முப்பத்திரண்டும் அவைபோல மெய்ப்பாடெனப்படும் என்கின்றது.

இ - ள். இளிவரன் முதலாக விளையாட்டு இறுதியாகச் சொல்லப்பட்ட முப்பத்திரண்டும் ஒருகூறாக, இனிச் சொல்லுகின்ற ஒரு கூறு உடைமை முதலாக நடுக்கு ஈறாகக்கிடந்த அம்முப்பத்திரண்டும் ஈண்டு மெய்ப்பாடெனப்படும் ஈண்டு எண்ணப்பட்டவையே ஆண்டு அடங்குவனவும் உள்ளவாகலின் அப்பொருண்மைய அல்லாத இடத்து. எ - று.

உடைமை, செல்வம். செல்வநுகர்ச்சியாயின் உவகைப்பொருளாம். இஃது அன்னதன்றி நுகராதே அச்செல்வந் தன்னை நினைந்து இன்புறுதற்கு ஏதுவாகிய பற்றுள்ளம். அஃதாவது நிதிமேனின்றமரம்போலச் செல்வமுடைமையான்வரும் மெய்வேறுபாடு. இன்புறல், அவ்வுடைமையை நினையுந்தோறும் இடையிட்டுப்பிறக்கும் மனமகிழ்ச்சி. நடுவுநிலை, ஒன்பது சுவையுளொன்றென நாடக நிலையுள் வேண்டப்படுஞ் சமநிலை. அஃதாவது “செஞ்சாந்தெறியினுஞ் செத்தினும் போழினு நெஞ்சோர்ந்தோடாநிலைமை.” அது காமம் வெகுளி மயக்கம் நீங்கினோர்கண்ணே நிகழ்வது. இது சிறுவரவிற்றாகலான் இவற்றொடுகூறினார். அருளல், மக்கள் முதலிய சுற்றத்தாரை அருளுதல். அது “அரிதாயவறனெய்தி யருளியோர்க்களித்தலும்.” என்றாற்போலவருவது. ஆண்டைக் கருணையினை அழுகையென்றமையின் இஃது அதனோடடங்காது. தன்மை, சாதித்தன்மை. அவையாவன பார்ப்பாராயிற் குந்திமிதித்துக் குறுநடைகொண்டு வந்துதோன்றலும், அரசராயின் எடுத்தகழுத்தோடும் அடுத்தமார்போடும் நடந்துசேறலும், இடையராயிற் கோற்கையுங் கொடுமடியுடையும் விளித்தவிளையும் வெண்பல்லுமாகித் தோன்றுதலுமென்று இன்னோரன்ன வழக்குநோக்கிக் கொள்க. அடக்கம், உயர்ந்தோர்முன் அடங்கியொழுகும் ஒழுக்கம். அவை பணிந்தமொழியுந் தணிந்தநடையுந் தானைமடக்கலும் வாய்புதைத்தலும் முதலா

யின. வரைதல், காப்பன காத்துக் கடிவனகடிந்தொழுகும் ஒழுக்கம். அவை பார்ப்பாராயின் முத்தீவேட்டலும் புலவுங்கள்ளும் முதலாயினகடிதலும் என்றின்னோரன்ன கொள்க. வரைதல் தொழிலாகலான் இது தன்மையெனப்படாது. அன்பு, அருட்குமுதலாகி மனத்துநிகழும் நேயம். அஃதுடையார்க்குப் பிறர்கட் துன்பங் கண்டவழிக் கண்ணீர் விழுமாதலின் அவ்வருளானே அன்புடைமை விளங்குமென்பது. இவையெல்லாந் தத்தமனத்தினிகழ்ச்சியை வெளிப்படுப்பனவாதலின் மெய்ப்பாடென்பட்டன. இனி வருகின்றவற்றிற்கும் இஃதொக்கும். கைம்மிகல், ஒழுக்கக்கேடு. அது சாதித்தருமத்தினை நீங்கினமை தன்னுள்ளநிகழ்ச்சியானே பிறரறியுமாற்றால் ஒழுகுதல். நலிதல், பிறர்க்கின்னாசெய்து நெருங்குதல். அது தீவினைமாக்கள்கண்ணிகழும். அவரைக்கண்டு அச்சம் எழுந்ததாயின் அஃது அச்சத்தினுள் அடங்குமாதலின் அஃதன்று இதுவென்பது. சூழ்ச்சி, சுழற்சி; சூழ்வருவானைச் சுழல்வருமென்பவாகலின். அது வெளிப்படுவதோர்குறிப்பு அவன்கட்டோன்றின் அதுவும் மெய்ப்பாடு. அஃதாவது மனத்தடுமாற்றம். வாழ்த்தல், பிறரால் வாழ்த்தப்படுதல். வாழ்த்தல் பிறன்வினையன்றோவெனின் ஒருவனை நீடுவாழ்கவென்று வாழ்த்தல் பிறன்வினையாயினும் அவற்றான் வாழ்விக்கப்படுதலின் அவ்வாறு கூறல் அமையுமென்பது. நாணல், நாணுள்ளம் பிறர்க்கு வெளிப்படநிகழும் நிகழ்ச்சி. துஞ்சல், உறக்கம். அது நடந்துவருகின்றான்கண்ணும் விளங்கித்தோன்றுதலின் அதுவும் மெய்ப்பாடெனப்பட்டது. அரற்றல், அழுகையன்றிப் பலவுஞ்சொல்லித் தன்குறைகூறுதல். அது காடுகெழுசெல்விக்குப் பேய்கூறும் அல்லல்போல வழக்கினுள்ளார்கூறுவன. கனவு, வாய்வெருவுதல். அதனானும் அவனுள்ளத்து நிகழ்கின்றதொன்று உண்டென்றறியப்படும். முனிதல், வெறுத்தல். அஃது அருளுஞ்சினமுமின்றி இடைநிகர்த்தாதல். வாழ்க்கைமுனிந்தானெனவும், "முறையுண் முனியுமவன் செல்லு மூரே." எனவுஞ் சொல்லுபவாகலின். நினைதல், விருப்புற்றுநினைதல். நின்னை மிகவும் நினைத்தேன் என்பது வழக்காகலின். அந்நினைவுள்ளம் பிறர்க்குப்புலனாதலின் மெய்ப்பாடாயிற்று. வெரூஉதல், விலங்கும் புள்ளும்போல வெருவி நிகழும் உள்ளநிகழ்ச்சி. அஃது அஞ்சவேண்டாதன கண்டவழியுங் கடிதிற்பிறந்து மாறுவதோர்வெறி. மடிமை, சோம்பு. கருதல், மறந்ததனைநினைத்தல். ஆராய்ச்சி, ஒருபொருளை நன்றுதீதென்றாராய்தல். விரைவு,இயற்கைவகையானன்றி ஒருபொருட்கண் விரைவுதொழில்பட உள்ளநிகழுங் கருத்து. உயிர்ப்பு, வேண்டியபொருளைப் பெறாதவழிக் கையறவெய்தியகருத்து. அது நெட்டுயிர்ப்புக்கு

முதலாகலின் அதனையும் உயிர்ப்பென்றுரென்பது. கையாறு, அவ் வுயிர்ப்புமின்றி வினையொழிந்தயர்தல். இடுக்கண், மலர்ந்தநோக்க மின்றி மையனேக்கம்பட வரும் இரக்கம். பொச்சாப்பு, அற்றப்படு தல். அஃதாவது பாதுகாத்துச் செல்கின்ற பொருட்கண் யாதானு மோரிகழ்ச்சியான் இடையறவுபடுதல். பொறாமை, அழுக்காறு. அஃதாவது பிறர்செல்வங் கண்டவழி வேண்டாதிருத்தல். வியர்த் தல், பொறாமைமுதலாயினபற்றி மனம்புழுங்குதல். ஐயம், ஒருபொ ருண்மேல் இருபொருட் தன்மைகருதி வரும் மனத்தடுமாற்றம். மி கை, கல்லாமையுஞ் செல்வமும் இளமையும் முதலாகவரும் உள்ள மிகுதி. நடுக்கம், அன்பும் அச்சமும் முதலாயின உடம்பிற் புலப்ப டுமாற்றான் உள்ளநடுங்குதல். புதல்வற்குப் பிணியில்வழியும் எவ னுங்கொலென்று நடுங்குதல் அன்பால் நடுங்குதலாம். அச்சம் என்னுஞ் சுவைபிறந்ததன்பின்னர் அதன்வழித்தோன்றிய நடுக்கம் அச்சத்தாற்றேன்றிய நடுக்கமாமென்றுணர்க. மற்று இவற்றை எண்ணிய மாத்திரையல்லது இலக்கணங்கூறிற்றிலர் சொல்லின் முடியும் இலக்கணத்தவாகலின். உதாரணம் இக்கூறியவாற்றான் வழக்குநோக்கியுஞ் செய்யுணேக்கியுங் கண்டுகொள்க. (உ0எ)

ருஅ0. புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்த
லகுநய மறைத்தல் சிதைவுபிறர்க் கின்மை
கூழை விரித்தல் காதொன்று களைத
லூழணி தைவர லுடைபெயர்த் துடுத்த
லல்கு றைவர லணிந்தவை திருத்த
லில்வலி யுறுத்த லிருகையு மெடுத்தலொடு
பாராட் டெடுத்தல் மடந்தப வுரைத்த
லீரமில் கூற்ற மேற்றலர் நாணல்
கொடுப்பவை கோட லுளப்படத் தொகைஇத்
தெரிந்துடம் படுத றிளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி யுவத்தல்
புறஞ்செயச் சிதைதல் புலம்பித் தோன்றல்
கலங்கி மொழிதல் கையற வுரைத்தலெனக்
காட்சிமுத லாறையுங் கண்ணியொன் றீரிரண்
டாட்சிபெற வருநா லாறுமெய்ப் பாடு
மன்ன பிறவு மகனெந் திணைக்கட்
டுன்னு மென்ப துணிந்திசி னோரே.

இஃது அகத்திணைக்கும் புறத்திணைக்கும் பொதுவாகி வரும் மெய்ப்பாடு எல்லாங்கூறி இனி அகத்தின் ஐந்திணைக்கட் பெரும் பான்மையுங் களவிற்குச்சிறந்து காட்சி முதலிய அவத்தை ஆறினை யும்பற்றி ஒன்றற்கு நான்குநான்காகி வரும் மெய்ப்பாடு இருபத்து நான்கு உளவென்கின்றது.

இ - ள். புகுமுகம்புரிதல் முதலாகக் கையறவுரைத்தல் ஈறாகக் காட்சிமுதலிய ஆறவத்தையினையும்பற்றி ஓரோரவத்தை நான்கு நான்கு பொருந்துதலுளவாக வரும் இருபத்துநான்கு மெய்ப்பாடும் அவைபோல்வனபிறவும் அகனைந்திணைக்கட் பொருந்துமென்று கூறுவர் தெளிந்தோர். எ - று.

ஆட்சிபெற என்றமையான் ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட் டவழிக் கரந்தொழுகும் உள்ளநிகழ்ச்சி பெண்பாலதாகலான் ஈண் டுக்கூறுகின்ற மெய்ப்பாடு தலைமகள்கண்ணே சிறந்தனவென்ப தூஉம், அவற்றுட் புகுமுகம்புரிதல் முதலிய பன்னிரண்டும் புணர்ச் சிநிகழ்வதற்கு முன்னும் பாராட்டெடுத்தல் முதலிய பன்னிரண்டும் புணர்ச்சிநிகழ்ந்தபின்னும் நிகழுமென்பதூஉம், அவைதாம் ஒன்றற் கொன்று நிமித்தமாய்த் தொடர்ந்துவருமென்பதூஉம், அங்ஙனம் ஒன்றன்பின் ஒன்று தொடர்ந்துவருங்கால் உயிர்மெலிவிடத்து இடையறவுபடவும் நிகழுமென்பதூஉங்கொள்க. இன்னும் அதனானே கைக்கிளைபெருந்திணைக்கும் இவை வைத்தமுறையானே வரை யறுத்துக் கூறப்படாது வருதற்கு உரியன வந்துழிக் கொள்ளப் படுமென்பதூஉங் கொள்க.

அவற்றுட் புகுமுகம்புரிதல் ஒருவனும் ஒருத்தியும் எதிர்ப்பட் டவழித் தன்னை அவன் நோக்குதற்கண்விரும்பும் உள்ளநிகழ்ச்சி. புகுதல், தலைமகன் நோக்கியநோக்கெதிர் தான்சென்று புகுதல். முகம் அங்ஙனந் தான்புகுதற்கு இடமாகிய நோக்கு. நோக்கெதிர் நோக்குதலை முகநோக்குதல் என்பவாகலின் நோக்கினை முகமென் றானென்பது. புரிதல், மேவுதல். அஃதாவது தலைமகன் காண்டலைத் தலைமகள் வேட்டலென்றவாறும். மற்றிது தலைமகற்கு உரித்தன் றோ வெனின் அவன் தான்காண்பினல்லது தற்காண்டலை நயவான் அது தலைமையன்றாகலின். அது "யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்—றானோக்கி மெல்ல நகும்." எனவரும். பொறிநுதல் வியர்த்தல் தலைமகன் தன்னைநோக்கியவழி உட்கும் நாணும் ஒருங்கு வந்தடைதலின் வியர்ப்பொறித்த நுதலாளாதல். அது, "பெரும்புழுக் குற்றநின் பிறைநுதற் பொறிவியர்—வுறுவளி யாற்றச் சிறுவரை

நில்லை." எனவரும். இம்மெய்ப்பாடுந் தலைமகற்கு உரித்தன்று; உட்கும் நாணும் அவற்கின்மையின். நகுநயமறைத்தல் அதன்பின்னர்த் தலைமகன்கட் டோன்றிய குறிப்புக்களான் அதற்கு ஏதுவாகிய நயனுடைமை மனத்திற்பிறந்தவழியும் நகாதுநிற்றல். அது "முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை—நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு." எனவரும். இது மடமையாற் றோன்றிய நகையாகலின் இது மறைத்தலுந் தலைமகற்கு உரித்தன்று. எனவே அவற்காயின் நகை தோன்றப்பெறும் என்பதாம். சிதைவுபிறர்க்கின்மை அங்ஙனம் நகுநயமறைத்தவழியும் உள்ளஞ்சிதைந்து நிறையழியுமாகலின் அச்சிதைவு புறத்தார்க்குப் புலனாகாமை நெஞ்சினைநிறுத்தல். அது, "அகமலி யுவகைய ளாகி—முகனிகுத் தொய்யென விறைஞ்சியோளே." எனத் தலைமகன் அறிய மெய்ப்பட்டது என்பது. இதுவுந் தலைமகற்கு உரித்தன்று, தன்சிதைவு உணர்த்தினல்லது மறைக்குந்துணைச் சிதைவின்மையின்; என்னை? "பெருமையு முரனுமாடூஉமேன." என்பவாகலின்.

இனி இவைநான்கும் முறையானே ஒருங்குவந்த செய்யுள் வருமாறு;—"யான்றற் காண்டொறுந் தான்பெரிது மகிழாள்—வாணுதல் வியர்ப்ப நாணின ளிறைஞ்சி—மிகைவெளிப் படாது நகைமுகங் கரந்த—நன்னுத லரிவை தன்மனஞ் சிதைந்ததை—நீயறிந் திலையா னெஞ்சே—யானறிந் தேனது வாயா குதலே." எனவரும். இவை நான்கும் முதல் அவத்தைக்கண்நிகழ்வன.

கூழைவிரித்தல், தன் உள்ளத்து நிகழ்ந்த வேறுபாட்டினை அக்காலத்துத் தலைமகள் நிறையுடையளாதலாற் கரந்தொழுகற்பாலளே; அங்ஙனங் கரக்குங்காற் றன்வயத்ததாகிய உடம்புபற்றிவரும் வேறுபாட்டினைத்தாங்கும்; அங்ஙனந் தாங்குங்கால் உடம்பொடுதொடர்புடையவாகி வேறுபட்ட தலைமயிரினதுமுடி உள்ளநெகிழ்ச்சியானே தன்வயத்ததன்றி நெகிழ்தல். அக்கூழைவிரிதற்கு ஏதுவாயினாள் இவளாகலின் அதனைச் சினைவினையானன்றி முதல்வினையாற்கூறினாரென்பது. காதொன்றுகளைதல், உறுப்பிடைப் பூட்டுறப்புணையாது பெய்துவைத்தனவாதலாற் றோடுமுதலாயின எளிதின்வீழ்வனவாயின. மற்றவை வீழ்தற்கேதுவாகிய நெகிழ்ச்சி நிரம்பத்தோன்றாது இடைநிகர்த்ததாதலின் ஒன்று நிற்ப ஒன்றுவீழ்தல் எனப்பட்டது. இது கூழைபோலாது, ஊறுணர்வுடைய உறுப்பாகலிற் காதின்வேறுபாட்டினைக் கூழைவேறுபாட்டின் பின்வைத்தார்; என்னை? கூழையிற் காது தனக்கு உறவுடைமையின். ஊழணிதைவரல், அக்கூழையுந்தோடும்போலப் பெய்யப்படும் முறைமைய

வாகிய வளைகளை முன்கைமேல் இறுகச்செறித்தலும் விரற்செறியினைத்திருத்தலும் முதலாயின. இவை தோடுபோலச் செறிவில்லன அன்மையின் அவற்றுப்பின்வைத்தார். உடைபெயர்த்துடுத்தல், உடுத்த உடையினைப் பலகாலும் அழித்துடுத்தல். அது கழலூருடிபோலாது செறிவுடைமையின் அவ்வுடைநெகிழ்ச்சியைத் தொடிநெகிழ்ச்சிக்குப் பின்வைத்தார். மற்றுத் "தொடிஞெகிழ்ந்தனவே தோள்சாயினவே" எனப் பிரிவின்கண்வந்த வேறுபாட்டினை ஈண்டுக் கூறுரோவெனின், அவை இன்னதன்பின்னர் இன்னது தோன்றுமென்னும் முறைமைய அல்லவாகலின் ஈண்டுக் கூறுர். அவை "வினையுயிர் மெலிவிடத் தின்மையு முரித்தே." என்பவாகலின் உயிர்மெலிவிடத்து இடையறவுபட நிகழ்ந்தனவாகலானென்பது.

இவற்றிற்குச் செய்யுள்;—"விண்ணுயர் விறல்வரைக்க வாஅனொருவன்—கண்ணி னோக்கிய தல்லது தண்ணென—வுரைத்தலுமில்லை மாதோ வவனே—வரைப்பாற் கடவுளு மல்ல னதற்கே—யோதி முந்துறக் காதொன்று ஞெகிழ—நிழலவிர் மணிப்பூ ணெஞ்சொடு கழலத்—துகிலும் பன்முறை நெகிழ்துநிமிர்ந் தனவே—நீயறிகுவையதன் முதலே—யாதோ தோழியது கூறுமா றெமக்கே." எனவரும். கவாஅன், கள்வன். இவை நான்கும் இரண்டாம் அவத்தைக்கண் நிகழ்வன.

அல்குறைவரல், மேல் உடைபெயர்த்துடுத்தவள் அது பெரிது நெகிழ்ந்து காட்டினதனைப் பாதுகாத்தல். அணிந்தவைதிருத்தல், அங்ஙனம் பாதுகாத்தவள் உடைநெகிழ்ச்சியைப்போற்றிக் கடிசூத்திரம் முதலாயின திருத்தல். இல்வலியுறுத்தல், அங்ஙனந் திருத்தினவள் புணர்ச்சியை வேண்டாதாள்போல வன்மைபடைத்துக்கொண்டு செய்தல். இல்வலியென்பதற்கு இற்பிறத்தலான தன் வலிதோன்றநிற்றல் எனவுஞ் சொல்லுப. இருகையுமெடுத்தல் அங்ஙனம் படைத்துக்கொண்ட வலியானுந் தடுக்கப்படாது நிறையழியிற் கைகள் தாமே முயங்கல்விருப்பத்தான் எழுவனபோல்வதோர் குறிப்பு. இவை நான்கும் மூன்றும் அவத்தைக்கண் நிகழ்வன.

உதாரணம்:—"ஒதியு நுதலு நீவி யான்றன்—மாதர் மென்முலை வருடலிற் கலங்கி—யுள்ளத் துகுநள் போல வல்குலின்—ஞெகிழ்நூற் கலிங்கமொடு புகுமிட னறியாது—மெலிந்தில ளாகி வலிந்துபொய்த் தொடுங்கவும்—யாமெடுத் தணைத்தொறுந் தாமியைந்தெழுதலி—னிம்மை யுலகத் தன்றியு நம்மை—நீளரி நெடுங்கட்

பேதையொடு—கேளிறிந் தனகொலிவள் வேய்மென் றோளே.”
எனவரும்.

பாராட்டெடுத்தல், அங்ஙனம் பன்னிருவகைமெய்ப்பாடும் நிகழ்ந்தவழிப் புணர்ச்சி நிகழுமன்றே! அதன்பின்னர்த் தலைமகனை இயற்படநினையுங் குறிப்பு. பாராட்டென்னுது எடுத்தலென்றதனால் இதனை உள்ளமெடுத்தன்மேற்கொள்க. மடந்தபவுரைத்தல், விளையாடும்பருவத்துநிகழ்ந்த அறிமடம் நீங்கிக் காமப்பொருட்கண்ணே சிறிது அறிவுதோன்றப் பாங்கிக்குச் சிலகூற்றுமொழிகூறல். மடந்தபவுரைத்தற்கு ஏதுவாகிய கருத்து ஈண்டு மெய்ப்பாடெனப்படும். ஈரமில்கூற்றமேற்றலர்நாணல், அங்ஙனம் அறிமடங்கெடச் சொற்பிறந்தவழி இன்றளவுந் தமராற்கூறப்படாத கடுஞ்சொல் உளவாமன்றே! அவற்றை முனியாது ஏற்றுக்கொண்டு புறத்தார்க்கு இது புலனாங்கொல் என்று நாணுதல். கொடுப்பவைகோடல், தலைமகனாற் கொடுக்கப்பட்ட தழையுங் கோதையுந் தாருங் கண்ணியுந் தோண்மாலையும் முதலாயினகொண்டு கையுறைபாராட்டுதல். இவை நான்காம் அவத்தைக்கண் நிகழ்வன.

இவற்றிற்குச் செய்யுள்;—“ஒருநாள் வந்து பலநாள் வருத்து—நின்னே போலு நின்றழை யென்வயி—னிற்பா ராட்டியுஞ் சொற்கொள லின்றியும்—யாயெதிர் கழறலிற் பேரலர் நாணியு—மயல்கூர் மாதர்க்குத் துயர்மருந் தாயினு—நோய்செய் தன்றாற் றூனே—நீதொடக் கருதலி ஞேரிடத் தாளே.” எனவரும்.

தெரிந்துடம்படுதல், அங்ஙனங் கொடுப்பவைகோடல் நிகழ்ந்தவழி அவ்வொழுகலாறு புறத்தார்க்கெல்லாம் ஐயமாகலின் அதன்வழித் தலைமகனைத் தலைமகள் இவ்வொழுகலாறு நிகழ்ந்தவாற்றைப் பட்டாங்குணராதார் தலைமைசெய்தனள் இவளெனவுந் தகாத ஒழுக்கத்தினள் இவளெனவும் பல்லாற்றானும் இவள்கண்ணே ஏதமிட்டுத் துணிந்துந் துணியாதும் உரைப்பாராகலான் அதற்குநாணி இனியாதுகொல்லோ செயற்பாலதென்று ஆராய்ந்து இவ்வொழுகலாற்றினை அறிவிப்பேங்கொல் அறிவியேங்கொல்லெனத் தடுமாறிப் பின் ஒருவகையான் ஆராய்ந்து முழுவதூஉஞ்சொல்லாது தன் குலத்திற்கும் ஒழுக்கத்திற்கும் பெண்டன்மைக்கும் ஏற்றவகையான் வேண்டுவனதெரிந்துகொண்டு இன்னவாறுபட்டதென்று தோழிக்கு உடன்படுதலுந், தோழியாற் செவிலிக்கு உடன்படுதலுமென இன்னோரன்னகுறிப்பினைத் தெரிந்து உடன்படுதல். திளைப்புவினைமறுத்தல், அங்ஙனந் தமர்க்குத் தான் உடன்பட்டதன்பின்னர்த்

நிலைமைகளேடு பகலும் இரவும் பண்டுதிளைத்தவாறு திளைத்தலை அச்சமும் நாணும் மடனுங் காரணமாக மறுத்தல். கரந்திடத்தொழிதல், அக்காலத்து இற்செறிக்கப்படுதலாற் தான் அவனை மறுத்த ஏதத்திற்கு நாணியும் அஞ்சியும் அவற்குவெளிப்படாது ஒழுகுதல். தன் இடத்தே தங்குதலை இடத்தொழிதல் என்றார். கண்டவழியுவத்தல், அங்ஙனங் கரந்தொழுகுங்காலத்து அவனை ஒருஞான்றுகண்டவழிக் கழியுவகைமிதூர்தல். இவைநான்கும் ஐந்தாம் அவத்தைக்கண் நிகழ்வன்.

இவற்றிற்குச் செய்யுள்;—"அறியாய் கொல்லோ நீயே தெறுவர—நோக்குதோறும் பனிக்கு நெஞ்சமொ டிவளே—யாய்க் கறிவுறுலி னின்னெதிர் நாணி—மனைவயிற் பிரியலண் மன்னே யதற்கே—நினைவில ளிவளென வுரைத்தி—புனைதார் மார்ப காண் டியோ வதுவே." எனவரும்.

புறஞ்செயச்சிதைதல், பூவுஞ் சாந்தும் பூணுந் துகிலும் முதலாயினகொண்டு புறத்தேகோலஞ்செய்ய அகத்தேசிதைவுண்டாதல். மேல் நின்றது கண்டவழி உவத்தலாகலானும் இது காணுதவழி நிகழ்கின்றதாகலானும் அதற்கு இனமின்றியும் அதன்வழித்தோன்றியதெனப்படுமாகலின் இஃது அதன் வழித்தாயிற்றென்பது. புலம்பித்தோன்றல்,அங்ஙனம் புனைந்தகோலந் துணையொடுகழியப்பெருமையிற் புல்லென்றழிந்த நெஞ்சினளாகலான் எல்லாச்சுற்றத்தார்க்கும் இடைநின்றேயுந் தனியளென்பது அறிவியாநிற்றல். கலங்கிமொழிதல், கையொடுபட்ட கள்வரைப்போலச் சொல்லுவனவற்றைத் தடுமாற்றந்தோன்றச் சொல்லுதல். அஃதாவது தன்மனத்து நிகழாநின்றன தன்னையறியாமற்சில புலப்படச்சொல்லுதலாயிற்று. கையறவுரைத்தல், கலங்காதுசொல்லுங்காற் செயலறவுதோன்றச் சொல்லுதல். அஃதாவது வன்புறை எதிரழிந்து சொல்லுவனபோல்வன. இவை நான்கும் ஆறும் அவத்தைக்கண் நிகழ்வன. கையறவுரைத்தலை ஈற்று வைத்தார், களவொழுக்கத்தினுள் இதனினூங்கு மெய்ப்பாடு கூறப்படாதென்றற்கு. என்னை? கையறவுரை தோன்றியதற்பின் நிகழ்வன கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் மெய்ப்பாடாவதன்றி நற்காமத்திற்காகாமையின். என்னை? கையறவுரைத்தல் என்பது சொல்லாமரபி னவற்றொடுகெழீஇச் செய்யாமரபிற் தொழிற்படுத்தடக்குதலை எல்லையாகவுடைமையின் அதனினும்பர்த் தோன்றுவன மன்றத்திருந்த சான்றவரறியத் தன்றுணைவன்பெயரும் பெற்றியுங் கூறி அழுதும் அரற்றியும் பொழுதொடுபுலம்

பியும் புள்ளொடுசொல்லியும் நிகழும் மெய்ப்பாடாகலான், அவை நடுவணைந்திணையெனப்பட்ட நற்காமத்திற்கு இலக்கணவகையான் ஏலாவாகலின் என்பது. இக்கருத்தானன்றே அவத்தைபத்தும் பற்றி மெய்ப்பாடு கூறுது 'காட்சிமுதல் ஆறையுங் கண்ணி ஒன்று ஈரிரண்டு ஆட்சிபெறவரும் நாலாறுமெய்ப்பாடும் அகனைந்திணைக் கட்டுன்னும்' என்றதூஉம் எனக்கொள்க.

புறஞ்செயச்சிதைதல் முதலிய நான்கற்குச் செய்யுள்;—"இவளே, யணியினும் பூசினும் பிணியுழந் தசைஇப்—பல்கிளை நாப்ப ணில்கிளை போல—மொழிவகை யறியாள் பொழிக ணீர்து டைத்—தியானே கையற வலமருங்—கூருய் பெருமநிற் றேறு மாறே;" எனவரும்.

இனி, அன்னபிறவாவன புகுமுகம்புரிதற்கட் தலைமகன் நோக்கியவழி ஒருவல்லிப்பொதும்பரானும் மற்றொன்றானுஞ் சார்புபெற்று மறைதலும் அவையில்லாதவழி இடர்ப்படுதலும் என்றாற்போல்வன அடங்குதலும், நகுநயமறைக்குங்கால் இதழ்மொக்குளுட் தோன்றுவது நகையெனப்படாது அதன்பாற்படுதலும், அமர்த்துநோக்காது அலமரநோக்குதலும் நிலங்கிளைத்தலுஞ் சிதைவு பிறர்க்கின்மைக்கண் அடங்குதலும் முதலியனவாம்.

இம்மெய்ப்பாட்டினுட் கைக்கிளைபெருந்திணைக்கு வருவன வருமாறு:—"ஒருக்குநா மாடுங் குரவையு ணம்மை—யருக்கினன் போனேக்கி யல்லனேய் செய்தல்-குரூஉக்கட் கொலையேறு கொண்டேன்யா னென்னுந்—தருக்கன்றோ வாயர் மகன்." எனப் புகுமுகம்புரிதல் கைக்கிளைக்கண்வந்தது. தொன்மையுந் தோலும் முதலிய வனப்புக்களுட் புகுமுகம்புரிதல் முதலாயின பெருந்திணைப்பொருள் பற்றி வருவன வருமாறு அறிந்துகொள்க. மற்ற இவ்விருபத்து நான்கு மெய்ப்பாடுங் கற்பினுள் இம்முறையானே வரல்வேண்டுவ தின்மையின் களவிற்கே விதந்தோதினர். இனி, இங்ஙனமன்றிக் கற்பினுள் வருமாறு;—"இனிதெனக் கணவ னுண்டலி—னுண்ணி தின் மகிழ்ந்தன் றொண்ணுதன் முகனே." என நகுநயமறைத்தல் வந்தது. பிறவும் அன்ன.

இன்னும் அதனானே "இன்பத்தை வெறுத்த றுன்பத்துப் புலம்ப—லெதிர்பெய்து பரித லேத மாய்தல்—பசியட நிற்றல் பசலைபாய்த—லுண்டியிற் குறைத லுடம்புநனி சுருங்கல்—கண்டுயின் மறுத்தல் கனவொடு மயங்கல்—பொய்யாக் கோடன் மெய்யே

யென்ற—லையஞ் செய்த லவன்றம ருவத்த—லறனளித் துரைத்த
லாங்குநெஞ் சழித—லெம்மெய் யாயினு மொப்புமை கோட—
லொப்புவழி யுவத்த லுறுபெயர் கேட்ட—னலத்தக நாடிற் கலக்
கமு மதுவே.” எனவும், “முட்டுவயிற் கழறன் முனிவுமெய்ந் நிறுத்
த—லச்சத்தி னகற லவன்புணர்வு மறுத்த—றூதுமுனி வின்மை
துஞ்சிச் சேர்தல்—காதல் கைம்மிகல் கட்டுரை யின்மையென்—
றாயிரு நான்கே யழிவில் கூட்டம்.” எனவும், “தெய்வ மஞ்சல்
புரையறந் தெளித—லில்லது காய்த லுள்ள துவர்த்தல்—புணர்ந்
துழி யுண்மை பொழுதுமறுப் பாக்க—மருண்மிக வுடைமை யன்பு
தொக நிற்றல்—பிரிவாற் றாமை மறைந்தவை யுரைத்தல்—புறஞ்
சொன் மாணாக் கிளவியொடு தொகைஇச்—சிறந்த பத்துஞ் செப்
பிய பொருளே.” எனவும் ஓதுவன ஒத்தாகலின், முறையே இன்
பத்தைவெறுத்தல் முதலாகக் கலக்கம் ஈறாகக் கிடந்த இருபதும்
புணர்ச்சிக்கு நிமித்தமாகாதனபோன்று காட்டினும் அவற்றை மிக
வும் ஆராய்ந்து உணரிற் புணர்ச்சிநிமித்தமாய மெய்ப்பாடாமென்
றும்,முட்டுவயிற்கழறல் முதலாகக் கட்டுரையின்மை ஈறாகக் கிடந்த
எட்டும் பின்னொருகாலும் அழியாத வரைந்தெய்துங் கூட்டத்திற்கு
ஏதுவாகிய மெய்ப்பாடென்றுந், தெய்வமஞ்சல் முதலாகப் புறஞ்
சொன்மாணாக்கிளவி ஈறாகக் கிடந்த பதினொன்றும் அழிவில்கூட்
டம் நிகழ்ந்தபின்னர்க் கற்பின்கண் நிகழும் மெய்ப்பாடாமென்
றுங் கொள்க.

அவற்றுள், இன்பத்தைவெறுத்தல், யாழுங் குழலும் பூவுஞ்
சாந்தும் முதலாக இன்பத்திற்கு ஏதுவாகிய பொருள்கண்டவழி
அவற்றின்மேல் வெறுப்புத்தோன்றுதல். அது “கல்லாக் கோவல
ரூதும்—வல்வாய்ச் சிறுகுழல் வருத்தாக் காலே.” எனவரும். துன்
பத்துப்புலம்பல், பிரிவாற்றாது துன்புறுங்கால் அவ்வாற்றாமை தலை
மகற்கின்றித் தானே துன்புறுகின்றாளாகச் சொல்லுதல். அது
“நின்னுறு விழுமங் களைந்தோ—டன்னுறு விழும நீந்துமோ
வெனவே.” எனவரும். எதிர்பெய்துபரிதல், உருவெளிப்பாடு. அது
தலைமகனையும் அவன் தேர்முதலாயினவற்றையுந் தன்னெதிர்பெய்
துகொண்டு பரிந்துரைத்தல். அது “வாரா தாயினும் வருவது போ
லச்—செவிமுத லிசைக்கு மரவமொடு—துயின்மறந் தனவாற் றோ
ழியென் கண்ணே.” எனவரும். ஏதமாய்தல், கூட்டத்திற்குவரும்
இடையூறு உண்டென்று பலவும் ஆராய்தல். அது நொதுமலர்
வரையக் கருதுவர்கொல்லெனவும், பிரிந்தோர் மறந்து இனிவாரார்
கொல்லெனவுந் தோன்றும் உள்ளநெகிழ்ச்சி. அது “வாரார் கொல்

லென்ப பருவருங்—தாரார் மார்பநீ தணந்த ஞான்றே" எனவரும். பசியடநிற்றல், பசிவருத்தவும் அதற்குத் தளராது உணவுமறுத்தல். அது "அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்—பாலு முண்ணாள் பழங்கண் கொண்டு—நனிபசந் தனளென வினவுதி" எனவரும். பசலைபாய்தல், பசலைபரத்தல். அது "கன்று முண்ணாது கலத்தினும் படாது—நல்லான் றீம்பா னிலத்துக் காஅங்—கெனக்கு மாகா தென்னைக்கு முதவாது—பசலை யுணீஇய வேண்டுந்—திதலை யல் குலெம் மாமைக் கவினே." எனவரும். உண்டியிற்குறைதல், பசியடநிற்றலேயன்றிச் சிறிது உண்டியூட்டியவழிப் பண்டுபோலாது கழியவுஞ் சிறிது உண்டல். அது "தீம்பா லூட்டினும் வேம்பினுங் கைக்கும்—வாரா யெனினு மார்வமொடு நோக்கு—நின்னிற் சிறந் ததொன் றிலளே—யென்னினும் படாஅ ளென்னிதற் படலே." எனவரும். உடம்புநனிசுருங்கல், அவ்வுண்ணாமை உயிரிற்செல் லாது உடம்பிற்காட்டுதல். அது "தொடிநிலை நெகிழச் சாஅய்த் தோளவர்—கொடுமை கூறிய வாயினுங் கொடுமை—நல்வரை நா டற் கில்லை தோழி—நெஞ்சிற் பிரிந்தது மிலரே—குன்ற நோக்கங் கடிந்தது மிலரே." எனவரும். கண்டுயின்மறுத்தல், இரவும்பகலுந் துஞ்சாமை. அது "புலர்குர லேனற் புழையுடை யொருசிறை—மலர்தார் மார்ப னின்றோற் கண்டோர்—பலர்தில் வாழி தோழி யவரு—ளாரிருட் கங்கு லணையொடு பொருந்தி—யோர்யா னுகுவ தெவன்கொ—னீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளேனே." என வரும். கனவொடுமயங்கல், அரிதினிற் துயிலெய்தியவழித் தலைமக னைக் கனவிற்கண்டு பின்னர் அவனன்மையின் மயங்கும் மயக்கம். அது "அலந்தாங் கமையலே னென்றானைப் பற்றியென்-னலந்தாரா யோவெனத் தொடுப்பேன் போலவுங்—கலந்தாங் கேயென் கவின் பெற முயங்கிப்—புலம்ப லோம்பென வளிப்பான் போலவும்" என வரும். பொய்யாக்கோடல், மெய்யைப் பொய்யாகக்கோடல். அது "கனவினு னெய்திய செல்வத் தனையதே—யைய வெமக்குநின் மார்பு." எனவரும். மெய்யேயென்றல், பொய்யை மெய்யென்று துணிதல். அது "கழங்கா டாயத் தன்றுநய மருவிய—பழங்க ணோட்டமுன் னலிய—வழுங்கின னல்லனோ வயர்ந்தனன் மன்னே." எனவரும். ஐயஞ்செய்தல், அது "தூதவர் விடுத்தார் துறப்பார்கொ னேதக—விருங்குயி லாலு மரோ." எனவரும். அவன்றமரு வத்தல், "ஊர னூரன் போலுந்—தேரும் பாணன் றெருவி னானே." எனவரும். அறனளித்துரைத்தல், அறக்கிழவனையன்பு செய்தல். அது "பாங்கர்ப் பல்லி படுதொறும் பரவிக்—கன்றுபுகு மாலை நின்றோ ளெய்தி" எனவரும். ஆங்குநெஞ்சழிதல், அங்ங

னம் உரைக்குங்கால் நெஞ்சழிந்து உரைத்தல். அது "பழிதபு ஞா யிறே பாடறியா தார்கட்—கழியக் கதழ்வை யெனக்கேட்டு நின் னை—வழிபட் டிரக்குவென் வந்தன னென்னெஞ்—சழியத்துறந் தானைச் சீறுங்கா லென்னை—யொழிய விடாதீமோ வென்று." என வரும். எம்மெய்யாயினுமொப்புமைகோடல், யாதானுமொருபொ ருள் கண்ட இடத்துத் தலைமகனோடு ஒப்புமைகோடல். அது "கணைகழி கல்லாக் கல்பிறங் கதரிடைப்—பணையெருத் தெழிலேற் றின் பின்னர்ப்—பிணையுங் காணிரோ பிரியுமோ வவையே." என வரும். ஒப்புவழியுவத்தல், ஒப்புமையுண்டாகியவழியே உவமை கொண்டு அதனானே உவகைதோன்றுவது. அது "காமரு நோக்க னை யத்தத்தா வென்னுநின்—றேமொழி கேட்ட லினிதுமற் றின் னுதே" எனவரும். உறுபெயர்கேட்டல், தலைமகன் பெருப்புகழ் கேட்டு மகிழ்தல். அது "பலவின் பழத்துட் டங்கு மலைகெழு வெற் பனைப் பாடுகம்வா" எனவரும். கலக்கஞ், சொல்லத்தகாதன சொல் லுதல். அது "பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய—கையுளே மாய்ந்தான் கரந்து." எனவும், "பிறங்கிரு முந்நீர் வெறுமணலாகப்—புறங்காலிற் போக விறைப்பேன் முயலி—னறம்புணை யா கலு முண்டு." எனவும் வரும்.

இங்ஙனம் ஓதிய இருபதுமெய்ப்பாடுந் தலைமகற்கும் ஏற்றவ கையானே கொள்ளப்படும். அவை "எவ்வி யிழந்த வறுமையாழ்ப் பாணர்—பூவில் வறுந்தலை போலப் புல்லென்—றினையல்மதி வாழிய நெஞ்சே மனைமரத்—தெல்லுறு மௌவ னாறும்—பல்லிருங் கூந் தல் யாரளோ நமக்கே." இது துன்பத்துப்புலம்பல் தானே துன் புறுகின்றானைத் தலைமகன் உரைத்தமையின். ஒழிந்தனவுந் தலை மகற்கு உரியவாகிவருவன வந்தவழிக் கண்டுகொள்க. இவ்வெண் ணப்பட்டனவெல்லாம் உள்ளத்து நிகழ்ந்தனவற்றை வெளிப்ப டுப்பனவாகலான் மெய்ப்பாடெனப்பட்டன. மேல்வருவனவற்றிற் கும் இஃதொக்கும்.

முட்டுவயிற்கழறல், தலைக்கூட்டத்திற்கு முட்டுப்பாடாகியவ ழிக் கழறியுரைத்தல். அது "நொச்சி வேலித் தித்த னுறந்தைக்— கன்முது புறங்காட் டன்ன—பன்முட் டின்றாற் றோழிநங் கள வே." எனவரும். முனிவுமெய்ந்நிறுத்தல், தலைமகள் உள்ளத்து வெறுப்பு வெளிப்படநிற்கும் நிலைமை. அது "இன்னுயிர் கழிவ தாயினு நின்மக—ளாய்மல ருண்கட் பசலை—காம நோயெனச் செப்பா தீமே." எனவரும். அச்சத்தினகறல், தலைமகன்கண்வரும் ஏதம் அஞ்சி அவனை நீங்குங்குறிப்பு. அது "மன்றுபா டவிந்து

மணைமடிந் தன்றே—கொன்றோ ரன்ன கொடுமையோ டின்றே—யாமங் கொளவரிற் கனைஇக் காமங்—கடலினு முரைஇக் கரை பொழி யும்மே—யெவன்கொல் வாழி தோழி மயங்கி—யின்னண மாகவு நன்னர் நெஞ்ச—மென்னொடு நின்னொடுஞ் சூழாது கைமிக்-கிறும்புபட் டிருளிய வீட்டருஞ் சிலம்பிற்—குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடிக்—கான நாடன் வரூஉம் யானைக்—கயிற்றுப் புறத்தன்ன கன்மிசைச் சிறுநெறி—மாரி வானந் தலைஇ நீர்வார்—பிட்டருங் கண்ண படுகுழி யியவி—னிருளிடை மிதிப்புழி நோக்கி யவா—தளரடித் தாங்கிய சென்ற தின்றே." எனவரும். அவன்புணர்வுமறுத்தல், இரவுக்குறியும் பகற்குறியும் விலக்குதற்கு எழுந்த உள்ளநிகழ்ச்சி. அது தமரையஞ்சி மறுத்தமையானும் இது வரைவுகடாவுதற்குக் கருத்தாகலானும் திளைப்புவினைமறுத்தலோடு இது வேற்றுமையுடைத்து. இது "நல்வரை நாடநீவரின்—மெல்லி யாமொரு நாள்வா ழலளே." எனவரும். தூதுமுனிவின்மை, புள்ளும்மேகமும் போல்வனகண்டு சொல்லுமின் அவர்க்கென்று தூதிரந்து பன்முறையானுஞ் சொல்லுதல். அது "கானலுங் கழறாது கழியுங் கூறாது—தேனிமிர் நறுமலர்ப் புன்னையு மொழியா—தொருநீ யல்லது பிறிதியாது மிலனே—யிருங்கழி மலர்ந்த கண்போ னெய்தல்—கமழிதழ் நாற்ற மமிழ்தென நசைஇத்—தண்டாதூதிய வண்டினங் களிசிறந்து—பறவை கிளருந் துறைவனை நீயே—சொல்ல வேண்டுமா ரலவ" எனவரும். துஞ்சிச்சேர்தல், மனையகத்துப் பொய்த்துயிலோடுமடிந்து வைகுதல். அது "என்மலைந் தனன்கொ ஞனே தன்மலை—யார நாறுமார் பினன்—மாரி யானையின் வந்துநின் றனனே." எனவரும். காதல் கைம்மிகல், காமங் கையிகழ்ந்தவழி நிகழும் உள்ளநிகழ்ச்சி. அது "உள்ளி னுள்ளம் வேமே யுள்ளா—திருப்பினெம் மளவைத் தன்றே வருத்தி—வான்றோய் வற்றே காமஞ்—சான்றோ ரல்லர் யாமரீஇ யோரே." எனவரும். கட்டுரையின்மை, உரைமறுத்திருத்தல். அது "யான்றனறிவ ருனறி யலளே—யாங்கா குவள் கொனே—பெருமுது செல்வ ரொருமட மகளே." எனவரும்.

தெய்வமஞ்சல், தலைமகற்குத் தொழுகுலமாகிய தெய்வமும் அவற்காசிரியராகிய தாபதரும் இன்னர் என்பது அவனன் உணர்த்தப்பட்டு உணர்ந்த தலைமகள் அத்தெய்வத்தினை அஞ்சியொழுகும் ஒழுக்கம் அவள்கட்டோன்றுதல். அது "சினைவாடச் சிறக்குநின் சினந்தணிந் தீகெனக்—கனைகதிர்க் கனலியைக் காமுற லியையவோ" எனவும், "அச்சாறாக வுணரிய வருபவன்—பொய்ச்சூ

ளஞ்சிப் புலவே ஞருவல்" எனவும் வரும். புரையறந்தெளிதல், தனக்கொத்த இல்லறம் இன்னது என்று தலைமகள் மனத்துப்படு தல். அது "விரியுளைக் கலிமான் றேரொடும் வந்த—விருந்தெதிர் கோடலை மறப்ப லென்றும்" எனவரும. இஃது அவனோடு சொல் லாடாது ஊடியிருப்பேனாயின், விருந்துகொண்டு புகுதரும், அத னால் ஊடலைமறப்பேன் என்றமையின் புரையறந்தெளிதலாயிற்று. இல்லதுகாய்தல், களவின்கட்போலாது தலைமகற்கு இல்லாததனை உண்டாக்கிக்கொண்டு காய்தல். அது "நற்றா ரகலத்துக் கோர்சார் மேவிய—நெட்டிருங் கூந்தற் கடவுள ரெல்லார்க்கு—முட்டுப்பா டாகலு முண்டு." எனவரும். உள்ளதுவர்த்தல், தலைமகனாற்பெற்ற தலையளி உள்ளதேயாயினும், அதனை உண்மையென்றேதெளியாது அருவருத்துநிற்கும் உள்ளநிகழ்ச்சி. அது "கடல்கண்டன்ன கண் ணகன் பரப்பின்." என்னும்பாட்டினுள் "வேப்பு நனையன்ன நெடுங்கண் ணீர்ஞெண்—டிரைதேர் வெண்குரு கஞ்சி யயல—வொ லித்த பகன்றை யிருஞ்சேற் றள்ளற்—றிதலையின் வரிப்ப வோடி விரைபுத—னீர்மலி மண்ணளைச் செறியுமூர" என்புழித் தலைமகன் வாயில்வேண்டச் சென்றானைப் பிறர்கூறும் பழிக்கு வந்தாயென் றமையின் இஃது உள்ளதுவர்த்தலாயிற்று. புணர்ந்துழியுண்மை, முற்கூறிய இல்லதுகாய்தலும் உள்ளதுவர்த்தலுமாகிய விகாரமின் றிப் புணர்ச்சிக்காலத்துச் செய்வன சென்ற உள்ளநிகழ்ச்சி. அது "குளிரும் பருவத்தே யாயினுந் தென்றல்-வளியெறியின் மெய்யிற் கினிதா—மொளியிழா—யூடி யிருப்பினு மூர னறுமேனி—கூட லினிதா மெனக்கு." எனவரும். பொழுது மறுப்பாக்கம், களவின் கட் பகற்குறியும் இரவுக்குறியுமென்ன வரையறுத்தாற்போல்வதோர் வரையறையின்மையின் அப்பொழுதினை மறுத்தலாகிய ஆக்கம். எனவே களவுக்காலத்துப் பொழுது வரைந்துபட்ட இடர்ப்பாட்டி னீங்கிய மனமகிழ்ச்சி ஆக்கமெனப்படும். அது "அயிரை பரந்த வந் தண் பழனத்-தேந்தெழின் மலர்ந்த தூம்புடைத் திரள்கா-லாம்பல் குற்றுநர் நீர்வேட் டாங்கிவ-ளிடைமுலைக் கிடைந்து நடுங்க லானீர்-தொழுதுகாண் பிறையிற் றோன்றி யானுமக்-கரிய மாகிய காலைப்—பெரிய நோன்றனிர் நோகோ யானே."எனவரும். அருண்மிகவுடை மை, களவுக்காலத்துப்போலத் துன்பமிகுதலின்றி அருண் மிகத் தோன்றிய நெஞ்சினனாதல். அது "நின்ற சொல்லி னீடு தோறி னிய—ரென்று மென்றோள் பிரிபறி யலரே" எனவரும். அன்பு தொகநிற்றல்,களவுக்காலத்துப் பிரிந்த அன்பெல்லாம் இல்லறத்து மேற் பெருகிய விருப்பினானே ஒருங்குதொக நிற்றல். அது "எம் போற், புல்லுளைக் குடுமிப் புதல்வற் பயந்து—நெல்லுடை நெடுங்கா

னின்னின்—றுறைவா ளென்ன கடத்தளோ மற்றே," என்புழிப் புதல்வற்பயந்து நின்னின்றுறையுங் கடத்தினம் யாமென்றமையின் இஃது அன்புதொகநிற்றலாயிற்று. பிரிவாற்ருமை, களவிற் பிரிவாற் றுதல் வேண்டுமாறுபோலக் கற்பினுட் பிரிவாற்றுதல் வேண்டா மை. அது "இடனின்றி யிரந்தோர்க்கொன் றீயாமை யிளிவெ னக்—கடனிறந்து செயல் சூழ்ந்த பொருள்பொரு ளாகுமோ—வட மீன்போ ளொழுதேத்த வயங்கிய கற்பினு—டடமென்ருேள் பிரியா மை பொருளாயி னல்லதை." எனவரும். மறைந்தவையுரைத்தல், களவுக்காலத்து நிகழ்ந்தனவற்றைக் கற்புக்காலத்துக் கூறுதல். அது "முயங்கல் விடாஅ லிவையென மயங்கி—யானே மென்னவு மொல்லார் தாமற்—றிவைபா ராட்டிய பருவமு முளவே-யினியே, புதல்வற் றடுத்த பாலொடு தடைஇத்—திதலை யணிந்த தேங்கொண் மென்முலை—நறுஞ்சாந் தணிந்த கேழ்கிள ரகலம்—வீங்க முயங் கல் யாம்வேண் டினமே—தீம்பால் படுத ருமஞ் சினரே" என வரும். புறஞ்சொன்மாணுக்கிளவி, தலைமகற்கு வந்த புறஞ்சொல் லின் பொல்லாங்கு குறித்து எழுந்த கிளவி. அது "களிறுகவர் கம்பலை போல—வலரா கின்றது பலர்வாய்ப் பட்டே." எனவரும். பிறவும் அன்ன.

இன்னும் "நிம்பிரி கொடுமை வியப்பொடு புறமொழி—வன் சொற் பொச்சாப்பு மடிமையொடு குடிமை-யின்புற லேழைமை மறப்போ டொப்புமை-யென்றிவை யின்மை யென்மனர் புலவர்." என்றமையாற் காமக்குறிப்பாகாத இவையெல்லாமின்றி வருதலைத் தலைமகன்கண் நிகழும் மெய்ப்பாடென அவைதம்மை வரையறுத் துக் கூருது அவற்றுக்காகாதன வரையறுத்துக் கூறியவாறுந், தலை மகட்குரிய மெய்ப்பாடாயின வரையறுத்துக்கூறினமையின் அவற் றுக்காகாதன கூறல்வேண்டாதவாறுங் கண்டுகொள்க. ஆகாதனவ ற்றிற்கு உதாரணங் காட்டலாவதில்லை. நிம்பிரி, பொருமைதோன் றுங் குறிப்பு. அவை இந்நாட் சிறிது பொறுத்தாயென்ருற்போல் வன. கொடுமை, கேடுசூழநினையுந் தீவினையுள்ளம். வியப்பு, தலைம கள்பாற் தெய்வத்தன்மை கண்டான்போல் வியந்தொழுகுதல். புறமொழி, புறங்கூற்று. வன்சொல், கண்ணோட்டமின்றிச் சொல் லுஞ்சொற்கள். பொச்சாப்பு, கடைப்பிடியின்றி நெகிழ்ந்திருத் தல். மடிமை, சோம்புள்ளம். குடிமை, இவள் இழிந்தபிறப்பினளெ னத் தன்னை நன்குமதித்தொழுகுதல். இன்புறல், ஒருவர் ஒருவரிற் தாமே இன்புறுகின்ருராக நினைத்தல். ஏழைமை, நுழைந்த உணர் வினரன்றிவரும் வெண்மை. மறப்பு, மறவி. ஒப்புமை, இன்னுளை ஒக்கும் இவளென்று அன்புசெய்தல். எனவுணர்க. (உ0அ)

ருஅக. சொல்லொடுங் குறிப்பொடு முடிபுகொ ளியற்
புல்லிய கிளவி யெச்ச மாகும். [கை

இது பத்தாமெண்ணுமுறைமைக்கண் நின்ற எச்சம் இவ்வியல்பிற்றாய்ச் செய்யுட்கு உறுப்பாய்வருமென்பதோர் ஒழிபுகூறுகின்றது.

இ - ள். கூற்றினானுங் குறிப்பினானும் முடிக்கப்படும் இலக்கணத்தோடு பொருந்திய கிளவி எச்சமென்னும் உறுப்பாம். எ - று.

ஈண்டுச் சொல்லென்றது சொல்லோத்தினுட் சொல் இசை குறிப்பென்ற மூன்றனுட் சொல்லென்றதென உணர்க.

'முடிவுகொளியற்கை' எனவே, செய்யுளின்கண்ணதன்றிப் பின்கொணர்ந்துமுடிக்கப்படுமென்பதும் பெற்றாம்.

உதாரணஞ் சொல்லோத்தினுட் குறிப்பெச்சம் உணர்த்தியவழிக் காட்டினாம். அற்றேல் அஃதாக மாட்டேற்றான் எய்துவியாது இதனை எடுத்தோதி விதந்ததென்னையெனின், ஆண்டு எச்சமென்றதுணையல்லது அகப்பொருளொழிபாய்ச் செய்யுட்கு உறுப்பாமென்னும் விசேடவிதி ஆண்டுப்பெறப்படாமையின் விதந்தோதல் வேண்டுமென்க.

இனிச், "செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த—செங்கோ லம்பிற் செங்கோட் டியானைக்—கழறொடிச் சேஎய குன்றங்-குருதிப் பூவின் குலைக்காந் தட்டே." என இதனையே, செய்யுண்முடிந்தவழியும், இவற்றால் யாங்குறையுடையம் அல்லமென்று தலைமகற்குச் சொன்னாளேற் கூற்றெச்சத்திற்குங், காண்பாயாகிற் காணெனத் தலைமகட்குச் சொன்னானேற் குறிப்பெச்சத்திற்கும் உதாரணமாகக் காட்டினும் அமையும். (உ0க)

ருஅஉ. இன்பமு மிடும்பையும் புணர்வும் பிரிவு
மொழுக்கமு மென்றிவை யிழுக்குநெறி யின்றி
யிதுவா கித்திணைக் குரிப்பொரு ளெனாது
பொதுவாய் நிற்றல் பொருள்வகை யென்ப.

இது பதினொராமெண்ணுமுறைமைக்கண் நின்ற பொருள்வகை இவ்வியல்பிற்றாய்ச் செய்யுட்கு உறுப்பாய்வருமென்பதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். இன்பமுந் துன்பமும் புணர்தலும் பிரிதலும் ஒழுக்கமுமென்னப்பட்ட இவை இழுக்காதவாற்றான் இத்திணைக்கு இது பொருளென்று ஆசிரியன் ஓதிய உரிப்பொருளன்றி அவற்றுக்கெல்லாம் பொதுவாகப் புலவனாற் செய்யப்படுவது பொருட் கூற்றெனப்படும். எ - று.

அது "பிடிக்கை யன்ன பின்னகந் தீண்டித்தன்—றொடிக் கை தைவரத் தோய்ந்தன்று கொல்லோ" என்றாற்போலச் செய்யுள் செய்வான் தான்வகுப்பனவெல்லாங் கோடல். இது பாலைப் பாட்டினுள் வந்ததாயினுங் குறிஞ்சிமுதலாயினவற்றிற்கும் பொதுவாமென்பது. பொதுமை, எல்லா உரிப்பொருட்கும் ஏற்பப் பல் வேறுவகையாற் செய்தல். (உகo)

ருஅங. அவ்வ மாக்களும் விலங்கு மன்றிப்
பிறவவண் வரினுந் திறவதி னாடித்
தத்த மியல்பின் மரபொடு முடியி
னத்திறந் தானே துறையெனப் படுமே.

இது பன்னிரண்டாமெண்ணுமுறைமைக்கண் நின்ற துறை இவ்வியல்பிற்றாய்ச் செய்யுட்குறுப்பாய் வருமென்பதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். ஐவகைநிலத்திற்கு உரியரெனப்படும் பல்வேறுவகைப்பட்ட மக்களும் மாவும் புள்ளும் ஓதிவந்தவாறன்றிப் படைத்துச்செய்யினும் அவ்வத்திணைக்கேற்ற இலக்கணமும் வரலாற்றுமுறைமையும் பிறழாமற் செய்யின் அது மார்க்கமெனப்படும். எ - று.

மார்க்கமெனினுந் துறையெனினும் ஒக்கும்.

"ஊர்க்கா ணிவந்த பொதும்பரு ணீர்க்கால்" என்னுங்கலியுட் "கொழுநிழன் ஞாழன் முதிரிணர் கொண்டு—கழும முடித்துக் கண்கூடு கூழை" என நெய்தற்றலைமகள்போலக் கூறி அவளை மருதநிலத்துக் கண்டான்போல "ஊர்க்கா ணிவந்த பொதும்பருள்" எனவுஞ் சொல்லிப் பின் குறிஞ்சிப்பொருளாகிய புணர்தலுரிப்பொருளான் முடித்தான்; அவ்வாறு மயங்கச்செய்யினுங் குறிஞ்சித்துறைப்பாற்படச் செய்தமையின் அத்துறையுறுப்பான் வந்ததென்பது. இதுவும் மேலைப்பொருள்வகைபோலப் புலவராற் செய்து கொள்ளப்படுவதாகலான் அதற்குப்பின் வைக்கப்பட்டது.

இங்ஙனங் கூறியவாற்றான் உரைப்போர் கேட்போர் உண்மையின்றி, உரைக்குங்கவியே உரைப்பதூஉந் துறையென்னும் உறுப்பாதல் பெற்றாம். "எறிதேனலம்புஞ் சிலம்பினெப்போது மிரந்திவள்பின்—வெறிதேதிரிந்து மெலிந்தனம்யாமுள்ள மெல்லியற்குப்-பிறிதேகொலென்னும் பெருந்தகைதேறப் பெரிதுயிர்த்து—வறிதே முறுவல்செய்தாள் தஞ்சைவாணன் வரையணங்கே." இதனுட் கூற்றிற்கு உரியனல்லாத கவிக்கூற்றும் அதற்கு உரியார்கூற்றின்பாற் படுத்தி அடக்கப்பட்டவாறு காண்க.

"முத்திறப் பொருளுந் தத்தந் திணையொடு—மரபின் வாராது மயங்கலு முரிய." என்றதனான் அடங்குதலின் இச்சூத்திரம் வேண்டாவெனின், அதனான் மயங்குமென்னுந்துணையல்லது அகப்பொருளொழிபாய்ச் செய்யுட்கு உறுப்பாமென்னும் விசேடவிதி ஆண்டுப் பெறப்படாமையின் வேண்டுமென்பதென்க. (உகக)

ருஅச. உவமப் பொருளு மிறைச்சிப் பொருளுந்
திணையுணர் வகையா னணையும் பாட்டினுள்.

இன்னும் ஒருவாற்றான் அகப்பொருளொழிபு உணர்த்துவான்புகுந்தவற்றுள் இது திணையுணர்தற்கருவியாவன சிலபொருள் செய்யுட்கண் வருமாறு கூறுகின்றது.

இ - ள். உவமப்பொருளுங் கருப்பொருட்கு நேயமாகிய இறைச்சிப்பொருளுமென்று இருபகுதிப்பட்ட பொருளுந் திணையுணருங்கூற்றாற் பொருந்துஞ் செய்யுட்கண். எ - று. (உகஉ)

ருஅரு. உள்ளுறை யுவமம் வெளிப்படை யுவமமென
வெள்ளரு முவம மிருவகை யுடைத்தே.

இது மேற்கூறிய உவமப்பொருள் இத்துணைத்தென்கின்றது.

இ - ள். உள்ளுறையுவமமும் வெளிப்படையுவமமும் என முன்னர்க்கூறிய இகழ்தற்பாடில்லாத உவமப்பொருள் இருவகையினையுடைத்தாம். எ - று. (உகங)

ருஅசா. அவற்றுள்,
உள்ளுறை யுவம முய்த்துணர் வகைத்தாய்ப்
புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்.

இது முறையானே உள்ளுறையுவமம் இவ்வியல்பிற்றென்கின்றது.

இ - ள். மேற்கூறிய இரண்டனுள் உள்ளுறையுவமமாவது ஆராய்ந்தறியும் பகுதியினையுடைத்தாய்ப் புள்ளுமுதலிய கருப்பொருள்களே தனக்குத் தோன்றுநிலனாகக்கொண்டு அவற்றானே புலப்படும். எ - று.

எனவே, புள்ளுமுதலியபற்றிவரும் அப்பொருணிகழ்ச்சி பிறிதொன்றற்கு உவமமாகச் செய்தலும், அங்ஙனஞ் செய்யுங்காற் பவளவாயென்றாற்போல உவமையும் உவமிக்கப்படும் பொருளும் புலப்படக் கூறாது உள்ளத்தான் உணருந் திறத்தான் உவமமாத்திரமே கூறலும் உள்ளுறையுவமத்திற்கு இலக்கணமாயிற்றென்பது.

உள்ளுறை, உள்ளுறுத்தல்.

"வீங்குநீர் வீழ்நீலம் பகர்பவர் வயற்கொண்ட—ஞாங்கர் மலர்சூழ்தந் தூர்புகுந்த வரிவண்—டோங்குய ரெழில்யானைக் கனைகடாங் கமழ்நாற்ற—மாங்கவை விருந்தாற்றப் பகலல்கிக் கங்குலான்—வீங்கிறை வடுக்கொள வீழுநர்ப் புணர்ந்தவர்—தேங்கமழ் கதுப்பினு ளரும்பவிழ் நறுமுல்லைப்—பாய்ந்தூதிப் படர்தீர்ந்து பண்டொ மரீஇய—பூம்பொய்கை மறந்துள்ளாப் புனலணி நல்லூர"

இதனுள், வீங்குநீர் பரத்தையர்சேரியாகவும், அதன்கண் வீழ்ந்தநீலங் காமச்செவ்விநிகழ்ந்த பரத்தையராகவும், பகர்பவர் பரத்தையரைத் தேரேற்றிக்கொண்டுவரும் பாணர்முதலிய வாயில்களாகவும், அம்மலரைச்சூழ்ந்த வண்டு தலைவனாகவும், யானையின்கடாத்தை ஆண்டு உறைந்தவண்டுகள் வந்தவண்டிற்கு விருந்தாற்றுதல் பகற்பொழுது புணர்கின்ற சேரிப்பரத்தையர் தமதுநலத்தை அத்தலைவனை நுகர்வித்தலாகவும், கங்குலின் வண்டு முல்லையை ஊதுதல் இற்பரத்தையருடன் இரவுதுயிலுதலாகவும், பண்டு மருவிய பொய்கையை மறத்தல் தலைவியைமறத்தலாகவும் பொருள் தந்து, ஆண்டுப்புலப்படக் கூறிய கருப்பொருள்கள் புலப்படக் கூறாத மருதத்திணைப் பொருட்கு உள்ளுறையுவமமாய்க் கேட்டோனுள்ளத்தே விளங்கி நின்றவாறு காண்க. பிறவும் அன்ன. (உகச)

ருஅஎ. வெளிப்படை யுவமம் வினைபயன் மெய்யுரு
வெளிப்பட நின்று விளங்குவ தாகும்.

இது முறையானே வெளிப்படையுவமம் இவ்வியல்பிற்றென்கின்றது.

இ - ள். வெளிப்படையுவமமாவது தொழிலும் பயனும் வடிவும் வண்ணமுந் தம்மோடு உவமிக்கப்படும் பொருளோடு அடுத்து

உள்ளத்தான் உணரவேண்டாது சொல்லிய சொற்றொடரே பற்றுக் கோடாகத் தாமே புலப்படநின்று விளங்குவதாம். எ - று.

அஃது அங்ஙனமாமாறு அணியியலுட் காண்க. (உகரு)

௫௮௮. இறைச்சி தானே பொருட்புறத் ததுவே.

இது முறையானே இறைச்சிப்பொருள் இவ்வியல்பிற்றென் கின்றது.

இ - ள். கருப்பொருட்கு நேயமாகிய இறைச்சிப்பொருள் தான் கூறவேண்டுவதோர் பொருளின்புறத்தே புலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருட்டன்மையை உடையதாம். எ - று.

"இலங்கு மருவித் திலங்கு மருவித்து—வானி னிலங்கு மருவித்தே தானுற்ற—சூள்பேணான் பொய்த்தான் மலை." சூளைப் பொய்த்தானென்பதே கூறவேண்டும் பொருள். அதன்புறத்தே இங் ஙனம் பொய்த்தான் மலையகத்து நீர்திகழ் வான் என இறைச்சிப் பொருள் தோன்றியவாறு காண்க. "சாரற்—கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு—பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே." இதில் நாட்டிற்கு அடையாகிவந்த குறிஞ்சிப்பூவுந் தேனும் இறைச்சிப் பொருளென்று கொள்க. (உகசு)

௫௮௯. காமஞ் சாலா விளமை யோள்வயி
னேமஞ் சாலா விடும்பை யெய்தி
நன்மையுந் தீமையு மென்றிரு திறத்தாற்
றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே.

இஃது ஒருதலைக்காமப்பொருண்மைத்தாக மேற்கூறிப்போந்த கைக்கிளைக்குச் சிறந்தபொருள் இதுவென்பதோர் ஒழிபு கூறு கின்றது.

இ - ள். காமக்குறிப்பிற்கு அமைதியில்லாத இளமைப்பிரா யத்தாள் ஒருத்திகண்ணே ஒருதலைவன் இவள் எனக்கு மனைக் கிழத்தியாக யான் கோடல்வேண்டுமெனக் கருதி, மருந்துபிறிதில் லாப் பெருந்துயரெய்தி, நன்மையுந் தீமையுமென்கின்ற இரண்டு கூற்றான் மிகப்பெருக்கிய சொற்களைத் தன்னொடும் அவளொடுங்

கூட்டிச்சொல்லி, அச்சொல்லிற்கு எதிர்மொழிபெறாதே பின்னுந் தான்சொல்லி இன்புறுதல் பொருந்தித்தோன்றுங் கைக்கிளைக்குறிப்பு. எ - று.

அவளுந் தமருந் தீங்குசெய்தாராக அவளோடு தீங்கைப்புணர்த்துந், தான் ஏதஞ்செய்யாது தீங்குபட்டானாகத் தன்னோடு நன்மையைப்புணர்த்துமென நிரனிறையாக உரைக்க. இருதிறத்தாற் தருக்கிய எனக் கூட்டுக.

உ-ம். "வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோட்—பேரெழின் மலருண்கட் பிணையெழின் மானோக்கிற்—காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற்—கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரை நுசுப்பினாய்—நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடி வீசினை—யாருயிர் வௌவிக்கொண் டறிந்தியா திறப்பாய்கேள்; உளனாவென் னுயிரையுண் டுயவுநோய் கைம்மிக—விளமையா னுணராதாய் நின்றவ றில்லானுங்—களைநரி னோய்செய்யுங் கவினறிந் தணிந்துதம்—வளமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்; நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் னலியுநோய்—மடமையா னுணராதாய் நின்றவ றில்லானு—மிடைநில்லா தெய்க்குநின் னுருவறிந் தணிந்துதம்—முடைமையாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்; அல்லல்கூர்ந் தழிவுற வணங்காகி யருடருநோய்—சொல்லினு மறியாதாய் நின்றவ றில்லானு—மொல்லையேயுயிர்வௌவு முருவறிந் தணிந்துதஞ்—செல்வத்தாற் போத்தந்த நுமர்தவ றில்லென்பாய்; எனவாங்கு, ஒறுப்பின்யா னொறுப்பது நுமரையான் மற்றிந்நோய்—பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்குழாய்—மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி—நிறுக்குவென் போல்வன்யா னீபடு பழியே." எனவரும். அவளைச் சொல்லுதலே தனக்கு இன்பமாகலிற் 'சொல்லியின்புறல்' என்றார். இது 'புல்லித்தோன்றுங் கைக்கிளை' எனவே, காமஞ்சான்றவிளமையோள்கண் நிகழுங் கைக்கிளை இத்துணைச்சிறப்பின்றாயிற்று; அஃது அசுரம் முதலிய மூன்றுமாம். இயற்கைப்புணர்ச்சிக்குமுன் நிகழுங் காட்சி முதலிய நான்குங் காமஞ்சான்றவிளமையோள்வயிற்கைக்கிளையாமேனும், நற்காமத்திற்கு இன்றியமையாது வருதலின் ஈண்டுக்கூறிய சிறப்புடைக் கைக்கிளையாதற்கு உரிமையுடையவாயின. என்னை? "முன்னைய நான்கு முன்னதற் கென்ப." என்பவாகலின். குறிப்பென்றதனாற் சொல்லியின்புறினுந் தலைவன்குறிப்புநிகழ்ந்தது புறத்தார்க்குப் புலனாகாவென்பதூஉம் அகத்துநிகழ்ச்சி அறியும் மனைவியர்க்காயிற் புலனாமென்பதூஉங் கொள்க. (உகஎ)

ருகூ0. அதுவே,
இறைமையி லோர்க்கு மிழிகுலத் தோர்க்கு
முறைமையி னுரித்தே முன்னுங் காலே.

இஃது அஃது இத்தன்மையோர்க்கு உரித்தென்கின்றது.

இ - ள். மேற்கூறிய கைக்கிளைதான் தலைமைப்பாடில்லாதார்க்கும் இழிகுலத்தார்க்கும் முறைமையான் உரித்தாம் ஆராயுங்காலத்து. எ - று.

முன்னுங்காலை என்றதனுன் இது பயின்றுவாராதெனக் கொள்க. (உகஅ)

ருகூக. ஏறிய் மடற்றிற மிளமை தீர்திறந்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிற
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே.

இது பொருந்தாக்காமம் பொருண்மைத்தாக மேற்கூறிப் போந்த பெருந்திணைக்குப் பொருள் இவையென்பதோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். மடன்மாக்கூறுதலன்றி மடலேறுதலுந் தலைவற்கு இளையளாகாது ஒத்தபருவத்தாளாதலும் இருபத்துநான்காம் மெய்ப்பாட்டின் இகந்து ஏழாம் அவத்தை முதலாகவரும் அறிவழிகுணனுடையளாதலுங் காமமிகுதியானே எதிர்ப்பட்டுழி வலிதிற்புணர்ந்த இன்பத்தோடே கூட்டப்பட்டுக் கந்தருவத்துப்பட்டு வழீஇயிற்ருகச் செப்பிய இந்நான்கும் பெருந்திணைக்கருத்தாம். எ - று.

மடன்மாக்கூறுதல் கைக்கிளையாம். மடற் திறமென்றதனுன் அதன்றிறமாகிய வரைபாய்தலுங்கொள்க. இளமைதீர்திறமென்றதனுற் தலைவன்முதிர்ச்சியும், இருவரும் முதிர்ந்தபருவத்துந் துறவிற் சேறலன்றிக் காமநுகர்தலுங் கொள்க.

உ-ம். “சான்றவிர் வாழியோ சான்றவி ரென்றும்—பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி யறனறிதல்—சான்றவர்க் கெல்லாங் கடனு லிவ்விருந்த-சான்றீ ருமக்கொன் றறிவுறுப்பென் மான்ற-துளியிடை மின்னுப்போற் றோன்றி யொருத்தி—யொளியோ டுருவென்னைக் காட்டி யளியளென்—னெஞ்சாறு கொண்டா ளதற் கொண்டுந் துஞ்சே—னணியலங் காவிரைப் பூவோ டெருக்கின்—

பிணியலங் கண்ணி மிலைந்து மணியார்ப்ப—வோங்கிரும் பெண்ணை மடலூர்ந்தெ னெவ்வநோய்—தாங்குத றேற்ரு விடும்பைக் குயிர்ப் பாக—வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது—பாடுவேன் பாய்மா நிறுத்து; யாமத்து மெல்லையு மெவ்வத் திரையலைப்ப—மாமேலே னென்று மடல்புணையா நீந்துவேன்—றேமொழி மாத ருருஅ துறீஇய—காமக் கடலகப் பட்டு; உய்யா வருநோய்க் குயவாகு மைய—லுறீஇயா ளீத்தவிம் மா; காணுந ரெள்ளக் கலங்கித் தலைவந்தெ—னுணெழின் முற்றி யுடைத்துள் ளழிதரு—மாணிழை மாதரா ளேஎரெனக் காமன—தாணையால் வந்த படை; காமக் கடும்பகையிற் ரேன்றினேற் கேம—மெழினுத லீத்தவிம் மா; அகையெரி யானுதென் ருருயி ரெஞ்சும்—வகையினு ளுள்ளஞ் சுடுதரு மன்னோ—முகையே ரிலங்கெயிற் றின்னகை மாதர்—தகையாற் றலைக்கொண்ட நெஞ்சு; அழன்மன்ற காம வருநோய் நிழன்மன்ற—நேரிழை யீத்தவிம் மா; ஆங்கதை, அறிந்தனி ராயிற் சான்றவிர் தான்றவ—மொரீஇத் துறக்கத்தின் வழீஇ யான்ரே—ருள்ளிடப் பட்ட வரசனைப் பெயர்த்தவ—ருயர்நிலை யுலக முறீஇ யாங்கென்—றுயர்நிலை தீர்த்த னுந்தலைக் கடனே." எனவும், "உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க—முளைத்த முறுவலார்க் கெல்லாம்—விளைத்த—பழங்கள் ளனைத்தாய்ப் படுகளி செய்யு—முழங்கு புனலூரன் மூப்பு." எனவும், "அரும்பிற்கு முண்டோ வலரது நாற்றம்—பெருந்தோள் விறலி பிணங்கல்—சுரும்போ—டதிரும் புனலூரற் காரமுத மன்ரே—முதிரு முலையாண் முயக்கு." எனவும் வருவனவும், "புரிவுண்ட புணர்ச்சியுட் புல்லாரா மாத்திரை-யருகுவித் தொருவரை யகற்றலிற் றெரிவார்கட்—செயனின்ற பண்ணினுட் செவிசுவை கொள்ளாது-நயனின்ற பொருள்கெடப் புரியறு நரம்பினும்-பயனின்று மன்றம்ம காம மிவண்மன்னு—மொண்ணுத லாயத்தாரொராங்குத் திளைப்பினு—முண்ணுனை தோன்ருமை முறுவல்கொண் டடக்கித்தன்—கண்ணினு முகத்தினு நகுபவள் பெண்ணின்றி—யாவருந் தண்குரல் கேட்ப நிரைவெண்பன்—மீயுயர் தோன்ற நகாஅ நக்காங்கே—பூவுயிர்த் தன்ன புகழ்சா லெழிலுண்க—ணுயிதழ் மல்க வழும்; ஓஓ!, அழிதகப் பாராதே யல்லல் குறுகினங்—காண்பாங் கனங்குழை பண்பு; என்று, எல்லீரு மென்செய்தீ ரென்னை நகுதிரோ—நல்ல நகாஅலிர் மற்கொல்லோ யானுற்ற—வல்ல லுறீஇயான் மாய மலர்மார்பு—புல்லிப் புணரப் பெறின்; எல்லாநீ, உற்ற தெவனேமற் றென்றீரே லெற்சிதை—செய்தா னிவனென வுற்ற திதுவென—வெய்த வுரைக்கு முரனகத் துண்டாயிற்—பைதல வாகிப் பசக்குவ மன்னேவென்—

னெய்தன் மலரன்ன கண்; கோடுவாய் கூடாப் பிறையைப் பிறி தொன்று—நாடுவேன் கண்டனென் சிற்றிலுட் கண்டாங்கே—யாடையான் மூஉ யகப்படுப்பென் சூடிய—காணான் றிரிதருங் கொல்லோ மணிமிடற்று—மாண்மலர்க் கொன்றை யவன்; தெள்ளியே மென்றுரைத்துத் தேரா தொருநிலையே—வள்ளியை யாகென நெஞ்சை வலியுறீஇ—யுள்ளி வருகுவர் கொல்லோ வுளைந் தியா—னெள்ளி யிருக்குவென் மற்கொலோ நல்லிருண்—மாந்தர் கடிகொண்ட கங்குற் கனவினாற்—றோன்றின னாகத் தொடுத்தேன் மன் யான்றனைஇப்—பையெனக் காண்கு விழிப்பயான் பற்றிய—கையுளே மாய்ந்தான் கரந்து; கதிர்பகா ஞாயிறே கல்சேர்தி யாயி—னவரை நினைத்து நிறுத்தென்கை நீட்டித்—தருகுவை யாயிற் றவிருமென் னெஞ்சத்—துயிர்திரியா மாட்டிய தீ; மையில் சுடரே மலை சேர்தி யாயிற்—பௌவநீர்த் தோன்றிப் பகல்செய்யு மாத்திரை—கைவிளக் காகக் கதிர்சில தாராயென்—றெய்யில் சிதைத்தானைத் தேர்கு; சிதைத்தானைச் செய்வ தெவன்கொலோ வெம்மை-நயந்து நலஞ்சிதைத் தான்;மன்றப் பனைமேன் மலைமாந் தளிரேநீ—தொன் றிவ் வுலகத்துக் கேட்டு மறிதியோ—மென்றோண் ஞெகிழ்த்தான் றகையல்லால் யான்காணே—னன்றுதி தென்று பிற; நோயெரி யாகச் சுடினுஞ் சுழற்றியென்—னுயித முள்ளே கரப்பன் கரந் தாங்கே—நோயுறு வெந்நீர் தெளிப்பிற் றலைக்கொண்டு-வேவ தளித் திவ் வுலகு; மெலியப் பொறுத்தேன் களைந்தீமின் சான்றீர்—நலிதருங் காமமுங் கௌவையு மென்றிவ்—வலிதி னுயிர்காவாத் தூங்கியாங் கென்னை—நலியும் விழும மிரண்டு; எனப்பாடி, இனைந்து நொந் தழுதன ணினைந்துநீ டுயிர்த்தன—ளெல்லையு மிரவுங் கழிந் தன வென்றெண்ணி யெல்லிரா—நல்கிய கேள்வ னிவன்மன்ற மெல்ல—மணியுட் பரந்தநீர் போலத் துணிபாங்—கலஞ்சிதை யில் லத்துக் காழ்கொண்டு தேற்றக்—கலங்கிய நீர்போற் றெளிந்து நலம் பெற்றா—ணல்லெழின் மார்பனைச் சார்ந்து." எனவும், "ஏஎ யிஃ தொத்த னணிலன் றன்னொடு—மேவேமென் பாரையும் மேவினன் கைப்பற்று—மேவினு மேவாக் கடையு மஃதெல்லா—நீயறிதி யானஃ தறிகல்லேன் பூவமன்ற—மெல்லிணர் செல்லாக் கொடி யன்னாய் நின்னையான்—புல்லினி தாகலிற் புல்லினெ னெல்லா—தமக்கினி தென்று வலிதிற் பிறர்க்கின்னா—செய்வது நன்றாமோ மற்று; சுடர்த்தொடீஇ, போற்றாய் களைநின் முதுக்குறைமை போற் றிக்கேள்—வேட்டார்க் கினிதாயி னல்லது நீர்க்கினிதென்—றுண் பவோ நீருண் பவர்; செய்வ தறிகல்லேன் யாதுசெய் வேன்கொ லோ—ஐவா யரவி னிடைப்பட்டு நைவாரா—மையின் மதியின்

விளங்கு முகத்தாரை—வெளவிக் கொளலு மறனெனக் காண்டன்று; அறனு மதுகண்டற் றாயிற் றிறனின்றிக்—கூறுஞ்சொற் கேளா னலிதரும் பண்டுநாம்—வேறல்ல மென்பதொன் றுண்டா லவனொடு—மாறுண்டோ நெஞ்சே நமக்கு.” எனவும், ஏறியமடற் றிறம் முதலிய நான்கற்கும் முறையே காண்க.

செப்பிய நான்கெனவே, செப்பாதனவாய் அத்துணைக்கந் ருவமாகக் கூறுகின்ற “பின்னர் நான்கும் பெருந்திணை பெறும்.” என்ற பெருந்திணைநான்கு உளதென்று கொள்க. குறிப்பென்றத னால் அந்நான்கும் பெருந்திணைக்குச் சிறந்த என்றும் ஈண்டுக் கூறி யன கைக்கிளைக்குச் சிறந்த என்றுங் கொள்க. (உகக)

ருஅஉ. பாட்டுடைத் தலைவன் கிளவித் தலைவனெனப்
பாட்டினுட் பாடப் படுவோ ரிருவர்.

இஃது அகப்பாட்டிற்கு உரியதோர் ஒழிபு கூறுகின்றது.

இ-ள். பாட்டிற்கு உரிமைபூண்ட தலைவனுங் கிளவிக்கு உரிமைபூண்ட தலைவனும் என அகப்பொருள்பற்றிவரும் பாட்டினுட் பாடப்படுவோர் இருவர். எ-று. (உஉ0)

ருஅங. அவருள்,
உயர்ந்தோன் பாட்டுடை யுரவோ னாகும்.

இஃது அவருள் ஒருவர்க்கு உயர்ச்சிகூறுகின்றது.

இ-ள். மேற்கூறிய இருவருள்ளும் உயர்ந்தோன் பாட்டுடைத்தலைவனும். எ-று.

“கழித்துறை செறியா வாளுடை யெறுழ்தோ—ளிரவுத்துயின் மடிந்த தானை—யுரவுச்சின வேந்தன் பாசறை யோமே.” என்றதனாற் பாட்டுடைத்தலைவன் உயர்ந்தோனாதல் அறிக.

வேந்தன் பாண்டியன். பிறவும் அன்ன. (உஉக)

ருஅச. நிலப்பெயர் வினைப்பெயர் பண்புப் பெயரொடு
குலப்பெய ரியற்பெயர் கூறுப வவர்க்கே.

இது மேற்கூறிய இருவகைத்தலைவர்க்கும் உரிய பெயர் இத்துணைத்தென்கின்றது.

இ - ள். நிலப்பெயர் முதலிய ஐந்துபெயருங் கூறுவர் மேற் சொல்லப்பட்ட தலைமக்கள் இருவர்க்கும். எ - று.

நிலப்பெயர், மலைநாடன் சோணாடன் பாண்டிநாடன் வெற்பன் சேர்ப்பன் என்றாற்போல்வன. வினைப்பெயர், கடம்பெறிந்தான் தூங்கெயிலெறிந்தான் அடியம்பலநின்றான் கோவலன் வேட்டுவன் என்றாற்போல்வன. பண்புப்பெயர், நெடுஞ்சேரலாதான் இளஞ்சேட்சென்னி முதுகுடுமிப்பெருவழுதி தோன்றல் அண்ணல் என்றாற்போல்வன. குலப்பெயர், சோழன் சேரன் பாண்டியன் குறவன் ஆயன் என்றாற்போல்வன. இயற்பெயர், குரவராற்பெற்ற பெயர். (௨௨௨)

ருகரு. அவற்றுள்,
இயற்பெயர் கிளவித் தலைவற் கிசையார்.

இஃது ஒன்றற்கு எய்தியது விலக்குகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட பெயருட் குரவராற் பெற்ற பெயரினைக் கிளவித்தலைவற்குச் சொல்லார் ஆசிரியர். எ-று.(௨௨௩)

ருகசு. இருவரு மொருங்கே வருதலுந் தனித்தனி
வருதலு மிருவரும் வாரா தொழிதலு
முரிய வென்மனா ருணர்ந்திசி னோரே.

இஃது அத்தலைவர்க்கு ஆவதோர் இயல்புகூறுகின்றது.

இ - ள். மேற்சொல்லப்பட்ட தலைமக்கள் இருவருங் கூடவருதலும் அவருள் ஒருவரே வருதலும் அவ்விருவரும் வாராதொழிதலும் உரிய என்றுகூறுவர் அறிந்தோர். எ - று. (௨௨௪)

ருகஎ. அகப்புறப் பாட்டு மிகப்பில வவையே.

இஃது எதிரதுபோற்றி இங்ஙனங் கூறிய இலக்கணம் புறப்பொருட்கும் எய்துவிக்கின்றது; இதன்வழிக் கூறப்படுவது புறத்திணையியலாகலின்.

இ - ள். அகப்பாட்டிற்குச் சொன்ன இலக்கணங்களைக் கடவாது அகப்புறப்பாட்டும். எ - று.

பொருந்துவ பொருந்துமென்பார் 'இகப்பிலவவை' என்றார். என்னை? அனைத்தும் வரவேண்டுமென்னும் யாப்புறவின்மையின்.()

ருகூஅ. கூறிய வல்ல வேறுபிற தோன்றினுங்
கூறிய வற்றொடு கூட்டி மெய்கொளக்
கூறி யுணர்த்தல் குணத்தோர்க் கியல்பே.

இஃது இவ்வகத்திணையியற்கு ஆவதோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். யாங் கூறிய பொருளன்றி வேறுபிறவாற்றாற் தோன்றியவாயினும் அவற்றையும் எடுத்தோதப்பட்ட பொருள்களோடு ஒருவாற்றாற் சார்த்தி உண்மைபுலப்படச் சொல்லிப் பிறர்க்கு உணர்த்துதல் நற்குணங்களையுடையார்க்கு மரபு. எ - று.

வேறுபிறவாவன பெரும்பொருளகத்துப் பல்வேறுவகையாகக் கூறிய அகப்பொருளிலக்கணங்களை. அவையெல்லாம் ஈண்டு உரைப்பிற் பெருகும். அவை ஆங்காங்கே கண்டுகொள்க. ஈண்டுக் கூறிய ஒழிபிலக்கணங்களுள் உதாரணங்காட்டாதவற்றிற்கெல்லாம் மேற்காட்டியவற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் காண்க. (உஉகூ)

முதலாவது அகத்திணையியல் முற்றிற்று.



## உ-வது புறத்திணையியல்.

ருகூகூ. ஆன்ற காட்சியி னகனன் குணர்ந்தோர்
தோன்றக் கூறிய புறனெனப் படுவ
தறம்பொரு ளென்னு மியல்பிற் றாகிப்
புறம்பயி லொழுக்க மென்மனர் புலவர்.

என்பது சூத்திரம். நிறுத்தமுறையானே புறத்திணையிலக்கணம் உணர்த்திற்றாகலான் இவ்வோத்துப் புறத்திணையியலென்னும் பெயர்த்து. மேல் அகத்திணையிலக்கணம் உணர்த்தி அதற்குப் புறனாகிய புறத்திணையிலக்கணம் உணர்த்தினமையின் மேலோத்தினோடு இயைபுடைத்தாயிற்று. இதனுள் இத்தலைச்சூத்திரம் மேற்கூறிய புறப்பொருளாவது இன்னதென அதன் இயல்புகூறுகின்றது.

இ - ள். நிறைந்த அறிவானே அகப்பொருளிலக்கணத்தை ஐயந்திரிபற ஆராய்ந்தறிந்தோர் விளங்கக்கூறிய புறனென்று சிறப்பித்துச்சொல்லப்படுவது மேற்கூறிப்போந்த அறமும் பொருளுமென்றுசொல்லப்படும் இயல்பினையுடைத்தாய்ப் புறம்பேநிகழும் ஒழுக்கமென்றுகூறுவர் அறிந்தோர். எ - று.

அகம்போல ஒத்த அன்புடையார்தாமேயன்றி எல்லாரானுந் துய்த்து உணரப்படுதலானும் இவ்வாறிருந்ததெனப் பிறர்க்குக் கூறப்படுதலானும் இது புறமாயிற்று. எனவே, அறமும்பொருளும் பற்றிப் புறத்தேநிகழும் ஒழுக்கத்திற்குப் புறமென்றது ஓர் ஆகுபெயராம். 'ஆன்ற காட்சியி னகனன் குணர்ந்தோர்—தோன்றக் கூறிய புறனெனப் படுவது' என்றார், குறிஞ்சி முதலியவற்றிற்கு வெட்சி முதலிய புறனுங்கால் அவ்விலக்கணங்கள் ஒருபுடை ஒப்புமைபற்றிச் சார்புடையவாதல் கூறல்வேண்டுதலின். "ஆன்ற சிறப்பி னறம் பொருளின்பமெனு—மூன்றுவகை நுதலிய துலக மவற்று—ளறமு மின்பமு மகலா தாகிப்—புறனெனப் படுவது பொருள்குறித் தன்றே." எனப் பன்னிருபடலத்துள் அறஞ் சார்பாகப் புறம் பொருள் குறித்து வருமென்றது என்னையெனின், அது மயங்கக்கூறலாம்; ஆசிரியர் தொல்காப்பியனார் சார்பாகக் கூறாது வாகைத்திணைக்கட் கட்டினீத்தபால் முதலாகக் காமநீத்தபால் ஈறாக அறத்தையே விதந்துகூறுதலின். (க)

சு௦௦. வெட்சி வஞ்சி யுழிஞை தும்பை
யுட்குவரு சிறப்பின் வாகையொடு காஞ்சி
பாடாண் டிணையு முளப்படத் தொகைஇ
நாடுங் காலை யெழுவகைத் ததுவே.

இது மேற் புறனெனப்பட்ட பொருட்கு வகையும் விரியும் பெயருங் கூறுகின்றது.

இ - ள். வெட்சியும் வஞ்சியும் உழிஞையுந் தும்பையும் அஞ்சுதகவரூஉஞ் சிறப்பினையுடைய வாகையுமாகிய ஐந்திணையுடனே காஞ்சியும் பாடாணுமாகிய இரண்டு திணையுங் கூடத் தொகுதலால் ஆராயுங்காலத்து ஏழுகூற்றநாம் மேற்கூறிப்போந்த புறத்திணைதான். எ - று.

இங்ஙனம் வகுத்தும் விரித்துங் கூறினர் உரிமைவகையால் நிலம்பெறுவனவாகிய குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை என்னும் அகனைந்திணைக்கும் முறையே வெட்சி வஞ்சி உழிஞை தும்பை வாகை என்னும் ஐந்தும் புறனாகலானும், நிலனின்றி அந்நிலத்திடைநிகழும் பெருந்திணையுங் கைக்கிளையுமாகிய அகத்திணை இரண்டற்கும் முறையே காஞ்சி பாடாண் என்னும் இரண்டுதிணையும் புறனாகலானும் என்பது. அகங்கை இரண்டுடையார்க்குப் புறங்

கை நான்காகாது இரண்டாகியவாறுபோல அகத்திணை ஏழென்றார்க்குப் புறத்திணை ஏழென்றலே பொருத்தமுடைத்தென்பார் 'நாடுங்காலையெழுவகைத்து' என்றார். எனவே, அகத்திணைக்குப், புறத்திணை அவ்வநிலத்து மக்கள்வகையாற் பிறந்த செய்கைவேற்றுமையாகலின் ஒன்றற்கொன்று இன்றியமையாதவாறாயிற்று.

இக்குறிகள் காரணக்குறிகளாம் பூக்களாற் போந்தனவாகலின். அற்றேல், "ஆங்ஙன முரைப்பி னவற்றது வகையாற்—பாங்குறக் கிளந்தன ரென்ப வவைதாம்—வெட்சி கரந்தை வஞ்சி காஞ்சி—யுட்குவரு சிறப்பி னுழிஞை நொச்சி—முரண்மிகு சிறப்பிற் றும்பையுள் ளிட்ட—மறனுடை மரபின வேழே யேனை—யவர்கோண் மரபின் வாகையுஞ் சிறந்த—பாடாண் பாட்டொடு பொதுவிய லென்ப—கைக்கிளை யேனைப் பெருந்திணை யென்றாங்—கத்திணை யிரண்டு மகத்திணைப் புறனே." எனப் பன்னிருபடலத்துப் புறத்திணை பன்னிரண்டெனக் கூறுபவாலெனின் "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்—முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப." எனக்கூறிய ஆசிரியர் தொல்காப்பியனார்க்குப் பிற்படக் கிளக்கப்படும் புறத்திணை ஏழென்பதே கருத்தாகலானுங், கரந்தையும் நொச்சியும் முறையே வெட்சிக்கும் உழிஞைக்கும் மறுதலையாய் அவற்றின்பாற் படுமாதலானும், பொதுவியலென்பது "பல்லமர் செய்து படையுட் டப்பிய—நல்லரண் மாக்களெல் லாரும் பெறுதலிற்—றிறப்பட மொழிந்து தெரிய விரித்து—முதற்படவெண்ணிய வெழுதிணைக்கு முரித்தே." என அவர்தாமே கூறுபவாகலானுங், கைக்கிளையும் பெருந்திணையும் புறமாயின் அகத்திணை ஏழென்றது ஐந்தெனல்வேண்டுதலானும்,பிரமம் முதலாகச் சொல்லப்பட்ட மணம் எட்டினுள்ளும் யாழோர்கூட்டமாகிய மணம் ஒன்றனையும் ஒழித்து ஏனைய ஏழும் புறமாதல்வேண்டுதலானும், முனைவனூலிற்குங் கலிமுதலாகிய சான்றோர்செய்யுட்கும் உயர்ந்தோர் வழக்கிற்கும் இயையாமையானும் அங்ஙனங்கூறுதல் பொருந்தாதென மறுக்க. (உ)

கூ0க. வெட்சியு முழிஞையும் வேற்றுவினை யுடைமை
னுட்குவரு கரந்தையு நொச்சியுஞ் சூடுதெ [யி
லவ்வினை மருங்கி னமைந்ததொல் வழக்கே.

இது மேற்கூறியவற்றுட் சிலவற்றிற்கு எய்தியதுவிலக்கிப் பிறிதுவிதி கூறுகின்றது.

இ - ள். வெட்சியும் உழிஞையும் முறையே நிரைகோடலாகிய ஒருதொழிலேயன்றி அதன் மறுதலைத்தொழிலாகிய நிரைமீட்டலும், எயிலழித்தலாகிய ஒருதொழிலேயன்றி அதன் மறுதலைத் தொழிலாகிய எயில்காத்தலுமாகிய வேறுபட்ட தொழில்களை உடைமையின் அவ்வேறுபட்டதொழிற்கண் முறையே அஞ்சுதலுடைய கரந்தையும் நொச்சியுஞ் சூடுதல் அமைதிபெற்ற பழைய நெறியாம். எ - று. (ந)

சுO௨. அவற்றுள்,
வெட்சி தானே குறிஞ்சியது புறனே
யுட்குவரப் பொருபோ ருறுமுறை தொடங்கிய
வேந்துவிடு முனைஞர் வெற்றிப்புலக் களவி
னுதந் தோம்பலு மந்நிரை மீட்டலு
மெனவிரு பாற்றே யஃதென மொழிப.

இது வெட்சித்திணை, குறிஞ்சித்திணைக்குப் புறனென்பதூஉம் அதன் பொருட்டிறனுங் கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய புறத்திணை ஏழனுள் வெட்சித்திணை முற்கூறிய அகத்திணை ஏழனுட் குறிஞ்சித்திணைக்குப் புறனும். அச்சந்தோன்றப் பொரும்போரைத் தனக்குரிய அறநெறியால் எடுத்துக்கொண்ட வேந்தனல் விடப்பட்ட முனைப்புலங்காத்திருக்குந் தண்டத்தலைவர் பகைநிலத்துச்சென்று களவினலே ஆநிரையைக் கைக்கொண்டுபோந்து மீளாமற்பாதுகாத்தலும், நிரைகோட்கேட்ட வேந்தனல் விடுக்கப்பட்ட தண்டத்தலைவர் அந்நிரையினை மீட்டலுமென இரண்டுவகையினையுடைத்தாம் மேற்கூறிய அத்திணை. எ-று.

கவர்ந்தோர்க்கு மறுதலையராகிய மீட்டோர் வருவித்துரைக்கப்பட்டது. அவற்றுள், என்பதனை மேல் இவ்வாறு வருவனவற்றிற்கெல்லாம் உய்த்துரைத்துக்கொள்க.

புறத்திணை பலவற்றுள் 'வெட்சி தானே குறிஞ்சியது புறனே' என இதனைப் பிரித்து ஓதினர், களவொழுக்கமும் மலைசார்ந்த இடனுங் கங்குற்காலமும் அந்நிலத்துப்பூவாகிய வெட்சிசூடலுங் காவலர்கடுகினுந் தாங் கருதியபொருளை இரவின்கண் முடித்துமீடலும் போல்வன ஒத்தலின் என்பது. எனவே, வெட்சித்திணை குறிஞ்சித்திணைக்குப் புறனென்றல் ஆணைகூறலன்றாயிற்று. மன்னுயிர்காக்கும் அன்புடைவேந்தர்க்கு மறத்துறையும் அறமேநிகழ

மாதலின், 'உட்குவரப் பொருபோ ருறுமுறை தொடங்கிய வேந்து.' என்றூர். உறுமுறைதொடங்கலாவது இரு பெருவேந்தர் பொருவது கருதியக்கால், ஒருவர் ஒருவர் நாட்டு வாழும் அந்தணரும் ஆவும் முதலியன தீங்குசெயத் தகாத சாதிகளாதலின் அவற்றை ஆண்டுநின்றும் அகற்றல்வேண்டிப்போதருக எனப் புகறலும், அங்ஙனம் போதருதற்கு அறிவில்லாத ஆவினைக் களவினுற் றாமேகொண்டுவந்து மீளாமற் பாதுகாத்தலும் முதலியனவாம். அஃது "ஆவு மானியற் பார்ப்பன மாக்களும்—பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்—தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்—பொன்போற் புதல்வற் பெறுஅ தீரு—மெம்மம்பு கடிவிடுதுநும்மரண் சேர்மினென—வறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்" எனச் சான்றோர் கூறியவாற்றுன் உணர்க. மேல் ஊர்கொலையுங் கூறுவர், அகநாட்டின்றிப் புறஞ்சிறைப்பாடியில் ஆநிரைகாக்குங் காவலரைக் கொன்றே நிரைகொள்ளவேண்டுதலின். இக்களவொழுக்கந் தீதெனப்படாது அறமேயாமென்பார், 'ஆதந்தோம்பலும்' என்றூர். எனவே, புறப்பொருட்குரிய அறனும் பொருளுங் கூறத்தொடங்கி ஈண்டு அறத்தாற் பொருளீட்டுமாறுங் கூறினுர். 'ஆதந்தோம்பலும் அந்நிரைமீட்டலுமென இருபாற்று' என்னுது "தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்—றன்னவிரு வகைத்தே வெட்சி" எனப் பன்னிருபடலத்துட் கூறியவாறு கூறின் முன்வருகின்ற வஞ்சிமுதலியவற்றின் பொருளாகிய எடுத்துச்செலவு முதலியன வேந்தன்மேல் இயன்றுவருதலானும் வேந்துறுதொழிலேயன்றித் தன்னுறுதொழிலுங் கூறின் வேந்தனது ஆணையைக் கடந்து தன்னுட்டும் பிறனுட்டுங் களவு நிகழ்த்தினுராபவாகலானும் அது மரபன்றென மறுக்க. (௬)

௬௦௩. மண்டமர்க் கிவர்ந்தோன் மருவலர் நிரையினைத்
தண்டத் தலைவரைத் தருகெனப் பணித்தல்
பணிதலைக் கோடல் படையியங் கரவந்
தணியல ரெழுந்தோர் சமரவாய்ப் பறீஇயர்
விரிச்சி யோர்த்தல் வேண்டா வீரம்
வரிச்சிலை மறவர் வழியிடைச் சேற
லொற்றி னுகிய வேயே வேய்ப்புற
முற்றி னுகிய புறத்திறை முற்றிய
வூர்கொலை யாகோள் பூசன் மாற்றே
நோயின் றுய்த்த னுவல்வழித் தோற்றந்

தந்துநிறை பாதீ டுண்டாட் டுறுகொடை
புலனறி சிறப்பொடு பிள்ளை வழக்கே
பெருந்துடி நிலையோ டருந்திறற் கலையூர்
கொற்றவை நிலையொடு வெறியாட் டுளப்படத்
தெருண்டுமுன் வகுத்த கவர்ந்தனர் கோட
லிரண்டுதலை யிட்ட வைந்நான்கு துறைத்தே.

இது மேற்கூறிய வெட்சிப்பகுதி இரண்டனுள் முன்னையது இத்துணைத்துறையுடைத்தென்கின்றது.

இ - ள். மண்டமர்க்கிவர்ந்தோன் மருவலர்நிரையினைத் தண்டத்தலைவரைத் தருகெனப்பணித்தல் முதல், ஈறாகக் கிடந்த வெறியாட்டுங் கூடத் தொகுத்து எண்ணுதலால் ஆராய்ந்து மேல் வகுக்கப்பட்ட கவர்ந்தனர்கோடல் இருபத்திரண்டு துறையினையுடைத்தாம். எ - று.

அகத்திணைக்கட் துறையுட்பகுதிகளெல்லாம் விரித்துரைத்தாங்கு உரையாது புறத்திணைக்கட் துறையுட்பகுதிகளெல்லாம் அத்துறைக்கட் துறுத்துக் கூறுதலிற் துறையாயிற்று. துறுத்தலாவது ஒன்றன்காரணமாயினவற்றையெல்லாம் அவற்றின்காரியமாகிய அதன்கட் செறித்தல். அஃதாவது படைத்தலைவரைத் தருக என்றலும் படையைக்கூய் வருக என்றலும் அவர்வருதலும் முதலிய காரணங்களை அவற்றின் காரியமாகிய நிரையினைத் தண்டத்தலைவரைத் தருகெனப்பணித்தற்கண் அடக்குதல். பிறவும் அன்ன.

அவற்றுட், படையைக்கூய்வருக என்றற்குச் செய்யுள்;-"கடிமனைச் சீறூர்க் கடுங்கட் கறவை—வடிநவில் வேலான் மறித்தோம் பல் வேட்டா—னடிபுனை தோலி னரண்சேர்ந்து மள்ளர்—வருக மன் வாயிற் கடை." எனவரும். ஏனையவற்றிற்கும் வந்துழிக்காண்க. மண்டமர்க்கிவர்ந்தோன் மருவலர்நிரையினைத் தண்டத்தலைவரைத் தருகெனப் பணித்தற்குச் செய்யுள்;—"மண்டு மெரியுண் மரந்தடிந் திட்டற்றாக்—கொண்ட கொடுஞ்சிலையான் கோறெரியக்-கண்டே-யடையார் முனையலற வையிலைவேற் காளை—விடையாயங் கொள் கென்றான் வேந்து." எனவரும். இதனைத் திணைப்பாட்டென்பாரும் உளர். திணைப்பாட்டாயின் அத் திணைக்கட் கூறுந் துறையெல்லாம் அகப்படத்தழீஇ வருதல்வேண்டும். அங்ஙனம் வராது வேந்தன் தண்டத்தலைவரை நிரைகவர்க என ஒருதொழிலே குறித்துவந்தமையிற் துறைப்பாட்டேயாவதல்லது திணைப்பாட்டாகாதென

மறுக்க. மேல் இங்ஙனம் வருவனவற்றிற்கெல்லாம் இக்கடாவிடை உய்த்துரைத்துக்கொள்க. பணிதலைக்கோடற்குச் செய்யுள்;—"அரூஅநிலைச் சாடி யாடுறு தேறன்—மரூஅன் மழைத்தடங் கண்ணி—பொரூஅன்—கடுங்கண் மறவன் கழல்புனைந்தான் காலை—நெடுங்கடைய நேரார் நிரை." எனவரும். பொரூஅனென்பதற்கு அரசனேவுதலாற் பாணித்தலிலனாகியெனப் பொருளுரைத்துக் கொள்க. தன்னுறுதொழிலும் உளதென்று கொண்டார் அதற்கும் இப்பாட்டினையே உதாரணமாக்கிப் பொரூஅனென்பதற்குத் தனிசு பொரூனென்று உரைப்ப. படையியங்கரவத்திற்குச் செய்யுள்;—"நெடிபடு கானத்து நீள்வேன் மறவ—ரடிபடுத் தாரதர் செல்வான்-றுடிபடுத்து—வெட்சி மலைய விரவார் மணிநிரைக்—கட்சியுட் காரி கலுழ்ம்." எனவரும். தணியலரெழுந்தோர் சமரவாய்ப்பரீஇயர் விரிச்சியோர்த்தற்குச் செய்யுள்;—"எழுவணி சீறூ ரிருண்மாலை முன்றிற்—குழுவினங் கைகூப்பி நிற்பத்—தொழுவிற்—குடக்கணு கொண்டுவா வென்றாள் குனிவிற்-றடக்கையாய் வென்றி தரும்." எனவரும். அரசனேவலாற் போந்தோர்க்கு விரிச்சியோர்த்தல் இயல்வதன்றேனும் இன்னதொன்று வினைவாய்க்குமென்று அறிதற் பொருட்டு இயலுமென்பார் சமரவாய்ப்பரீஇயர் விரிச்சியோர்த்த லென்றார். வேண்டாவீரத்திற்குச் செய்யுள்;—"நாளும் புள்ளுங் கேளா வூக்கமொ—டெங்கோ னேயின னுதலின் யாமத்துச்—செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய்—மறிக்குரற் குருதி மன்றுதுகளவிப்ப—விரிச்சி யோர்த்தல் வேண்டா—வெயிற்புறந் தருதும் பகைப்புல நிரையே." எனவரும். வரிச்சிலைமறவர் வழியிடைச் சேறற்குச் செய்யுள்;—"கூற்றினத் தன்னார் கொடுவி விடனேந்திப்—பாற்றினம் பின்படர முன்படர்ந்—தேற்றின—நின்ற நிலைகருதி யேகினார் நீள்கழைய—குன்றங் கொடுவில் லவர்." எனவரும். ஒற்றினாகிய வேய்க்குச் செய்யுள்;—"நிலையு நிரையு நிரைப்புறத்து நின்ற—சிலையுஞ் செருமுனையுள் வைகி—யிலைபுனைந்த—கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோய் சென்றறிந்து—நள்ளிருட்கண் வந்தார் நமர்." எனவரும். ஒற்றினாகியவேய், ஒற்றுவகையான் உணர்த்திய குறளைச்சொல். வேய்ப்புறம் முற்றினாகிய புறத்திறைக்குச் செய்யுள்;—"உய்ந்தொழிவா ரீங்கில்லை யூழிக்கட் டீயேபோன்—முந்தமரு ளேற்றார் முரண்முருங்கத்—தந்தமரின்—ஞெற்றினா ரொற்றி யுரவோர் குறும்பினைச்—சுற்றினார் போகாமற் சூழ்ந்து." எனவரும். வேய்ப்புறமுற்றினாகியபுறத்திறை, வேய்க்கப்பட்ட இடத்தின் புறத்தினைச் சூழ்தலானாகிய புறத்திறை. முற்றிய ஊர்கொலைக்குச் செய்யுள்;—"இகலே துணையா வெரிதவழச் சீறிப்—புகலே யரிதென்

ணூர் புக்குப்—பகலே—தொலேவிலார் வீழத் தொடுகழ லார்ப்பக்—கொலேவிலார் கொண்டார் குறும்பு.” எனவரும். ஆகோடற்குச் செய்யுள்;—“கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனேத்தா—னெடுவரை நீள்வேய் நரலு—நடுவூர்க்-கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற—நிணநிரை வேலார் நிலே.” எனவரும். பூசன்மாற்றிற்குச் செய்யுள்;—“சூழ்ந்த நிரைபெயரச் சுற்றித் தலேக்கொண்டார்—வீழ்ந்தனர் வீழ்ந்தார் விடக்குணிய—தாழ்ந்த—குலவுக் கொடுஞ் சிலேக் கூற்றனேயா ரெய்த—புலவுக் கணேவழியே புள்.” எனவரும். நோயின்றுய்த்தற்குச் செய்யுள்;—“புன்மேய்ந் தசைஇப் புணர்ந்துடன் செல்கென்னும்—வின்மே லசைஇயகை வெல்கழ லான்—றன்மேற்—கடுவரை நீரிற் கடுத்துவரக் கண்டு—நெடுவரை நீழ னிரை.” எனவரும். நுவல்வழித்தோற்றத்திற்குச் செய்யுள்;-“மொய்யண லாநிரை முன்செல்லப் பின்செல்லு—மையணற் காளே மகிழ்துடி—கையணல்—வைத்த வெயிற்றியர் வாட்க ணிடனுட—வுய்த்தன் றுவகை யொருங்கு.” எனவரும். நுவல்வழித் தோற்றந், தமர் கவன்றுரைத்துழி அவர் மகிழ்தற்குக் காரணமான தோற்றரவு. தந்துநிறைக்குச் செய்யுள்;—“தண்டா விருப்பின டன்னே தலேமலேந்த—வண்டார் கமழ்கண்ணி வாழ்கென்று—கண்டா-ளணிநிரை வாண்முறுவ லம்மா வெயிற்றி—மணிநிரை மல்கிய மன்று.” எனவரும். பாதீட்டிற்குச் செய்யுள்;—“ஒள்வாண் மலேந் தார்க்கு மொற்றுய்ந் துரைத்தார்க்கும்—புள்வாய்ப்பச் சொன்ன புலவர்க்கும்—விள்வாரை—மாறிட்ட வென்றி மறவர்தஞ் சீறூரிற்—கூறிட்டார் கொண்ட நிரை.” எனவரும். ஈத்தலும் ஈதலும் போலப் பாத்தலும் பாதலும் ஒன்றுதலிற் பாதீடாயிற்று. உண்டாட்டிற்குச் செய்யுள்;—“இளிகொண்ட தீஞ்சொ லிளமா வெயிற்றி—களிகொண்ட நோக்கங் கவற்றத்—தெளிகொண்ட—வெங்கண் மலிய விளிவதுகொல் லேற்றூர்மேற்—செங்கண் மறவர் சினம்.” எனவரும். உறுகொடைக்குச் செய்யுள்;—“அங்கட் கிணேயன் றுடியன் விறலிபாண்—வெங்கட்கு வீசும் விலேயாகுஞ்—செங்கட்—செருச்சிலேயா மன்னர் செருமுனேயிற் சீறி—வரிச்சிலேயாற் றந்த வளம்.” எனவரும். புலனறிசிறப்பிற்குச் செய்யுள்;—“இறுமுறை யெண்ணு திரவும் பகலுஞ்—செறுமுனேயிற் சென்றறிந்து வந்தார்—பெறுமுறையி—னட்டுக் கனலு மயில்வேலோ யொன்றிரண்—டிட்டுக் கொடுத்த லியல்பு.” எனவரும். புலனறிசிறப்பு, வெம்முனேநிலே உணர்த்தியோர்க்குத் தம்மினும் மிக்க சிறப்புச்செய்தல். பிள்ளேவழக்கிற்குச் செய்யுள்;—“புல்லார் நிரைகருதி யாஞ் செல்லப் புண்ணலம்—பல்லா ரறியப் பகர்ந்தார்க்குச்—சொல்

லாற்—கடஞ்சுட்ட வேண்டா கடுஞ்சுரையா நான்கு—குடஞ்சுட்டினத்தாற் கொடு." எனவரும். பிள்ளைவழக்கு, கரும்பிள்ளை நிமித்தங்கூறியார்க்கு விதந்துகொடுத்தல். பெருந்துடிநிலைக்குச் செய்யுள்;—"முந்தை முதல்வர் துடிய ரிவன்முதல்வ—ரெந்தைக்குத் தந்தை யிவனெனக்கு—வந்த—குடியொடு கோடா மரபினாற் கின்னும்—வடியுறு தீந்தேறல் வாக்கு." எனவரும். கொற்றவைநிலைக்குச் செய்யுள்;—"ஆளி மணிக்கொடிப் பைங்கிளிப் பாய்கலைக்-கூளி மலிபடைக் கொற்றவை—மீளி—யரண்முருங்க வாகோள் கருதி னடையார்—முரண்முருங்கத் தான்முந் துறும்." எனவரும். வெறியாட்டிற்குச் செய்யுள்;—"காணி லரனுங் களிக்குங் கழன்மறவர்-பூணிலங்கு மென்முலைப் போதரிக்கண்—வாணுத—லுன்முருகு மெய்ந்நிறீஇத் தாமம் புறந்திளைப்ப—வேன்முருகற் காடும் வெறி." எனவரும். முருகு, நறுநாற்றம். (ரு)

சு0ச. நிரைகோட் கேட்ட குரைகழ லரசன்
விரைசெலன் மறவரை மீட்கெனப் பணித்தல்
படையியங் கரவம் பறவாப்புட் டெரித
னடைவயிற் சேற னன்குண ருசாஅப்
புறத்திறை யதனொடு திறப்படப் பொருதல்
புண்ணொடு வருதல் போர்க்களத் தொழித
லாளெறி பிள்ளை பிள்ளைத் தெளிவு
பிள்ளை யாட்டொடு கையறு நிலையே
நெடுமொழி கூறல் பிள்ளைப் பெயர்ச்சி
வேத்தியன் மலிபொடு மிகுகுடி நிலையே
யாபெயர்த்துத் தருதலோ டருஞ்சமர் விலக்கல்
நலிவின் றுய்த்த னண்ணுவழித் தோற்ற
நிறைத்தல் பாதீ டுண்டாட்டுக் கொடையொடு
துடிநிலை கொற்றவை நிலையவை யிரண்டுங்
கூட்டுதே லுறுத்த மீட்டனர் கோட
லேலுழுதலைப் பெய்த விருபதிற் றுறைத்தே.

இது முற்கூறிய வெட்சிப்பகுதி இரண்டனுட் பின்னையது இத்துணைத்துறையுடைத்தென்கின்றது.

இ-ள். நிரைகோட்கேட்ட குரைகழலரசன் விரைசெலன் மறவரை மீட்கெனப்பணித்தல் முதலியவற்றொடு துடிநிலையுங்

கொற்றவைநிலையுமாகிய அவ்விரண்டினையுங் கூட்டி எண்ணுதலால் மீட்டனர்கோடல் இருபத்தேழு துறையினையுடைத்தாம். எ - று.

நிரைகோட்கேட்ட குரைகழலரசன் விரைசெலன்மறவரை மீட்கெனப்பணித்தற்குச் செய்யுள்;—"அழுங்கனீர் வையகத் தாருயிரைக் கூற்றம்—விழுங்கியபின் வீடுகொண் டற்றாற்—செழுங்குடிக—டாரார் கரந்தை தலைமலைந்து தாங்கோட—னேரார்கைக் கொண்ட நிரை." எனவரும். செழுங்குடிகள் தாரார் கரந்தை தலைமலைந்து நேரார் கைக்கொண்ட நிரைதாங்கோடல் அழுங்கல் நீர் வையகத்து ஆருயிரைக் கூற்றம்விழுங்கியபின் விடுதல்கொண் டாற்போல அரிதாதலான் விரைந்து மீட்பீராக என்பது குறிப்பெச்சமாகப் பொருளுரைத்துக் கொள்க. படையியங்கரவத்திற்குச் செய்யுள்;—"காலார் கழலார் கடுஞ்சிலையார் கைக்கொண்ட—வேலார் வெருவந்த தோற்றத்தார்—காலன்—கிளர்ந்தாலும் போல்வார் கிளைப்பூசல் கேட்டே—யுளர்ந்தார் நிலைபெயர்வு முண்டு." எனவரும். பறவாப்புட்டெரிதற்குச் செய்யுள்;—"வந்தநீர் காண்மினென் றுபெயர்ப்போர் மாட்டிசைத்த—பைந்தொடியார் கூறும் பறவாப்பு—ளுய்ந்த—நிரையளவைத் தன்றியு நீர்சூழ் கிடக்கை—வரையளவைத் தாவதா மண்." எனவரும். பறவாப்புள் வெளிப்படை. நடைவயிற்சேறற்குச் செய்யுள்;—"சங்குங் கருங்கோடுந் தாழ்பீலிப் பல்லியமு—மெங்கும் பறையோ டெழுந்தார்ப்ப—வெங்க—லழற்சுரந் தாம்படர்ந்தா ரான்சுவட்டின் மீதே—நிழற்க திர்வேன் மின்ன நிரைத்து." எனவரும். நன்குணருசாவிற்குச் செய்யுள்;—"நெடுநிலையா யத்து நிரைசுவ டொற்றிப்—படுமணி யாயம் பகர்ந்தோய்—நெடிது—மனக்குரிய காதல் வயவேந்த னென்று—நினக்குரிய வாக நிரை." எனவரும். புறத்திறைக்குச் செய்யுள்;—"இருநில மருங்கி னெப்பிறப் பாயினு—மருவின் மாலையோ வினிதே யிரவி—னுகோண் மள்ளரு மருள்வரக் கானத்து—நாம்புறத் திறுத்தன மாகத் தாந்தாங்—கன்றுகுரல் கேட்டன போல—நின்றுசெவி யோர்த்தன சென்றுபடு நிரையே." எனவரும். திறப்படப்பொருதற்குச் செய்யுள்;—"புலிக்கணமுஞ் சீயமும் போர்க்களிறும் போல்வார்—வலிச்சினமு மானமுந் தேசு—மொலிக்கு—மருமுனை வெஞ்சுரத் தான்பூசற் கோடிச்—செருமலைந்தார் சீற்றஞ் சிறந்து." எனவரும். புண்ணொடுவருதற்குச் செய்யுள்;—"வெங்குருதி மல்க விழுப்புண் ணுகுதோறு—மிங்குலிகஞ் சோரும் வரையேய்க்கும்—பைங்கண்—ணினம்போக்கி நின்றா ரிகல்வாட்டி வேந்தன்—மனம்போல வந்த மகன்." எனவரும். போர்க்களத்

தொழிதற்குச் செய்யுள்;—"உரைப்பி னதுவியப்போ வொன்னார் கைக்கொண்ட—நிரைப்பி னெடுந்தகை சென்றான்—புரைப்பின்—றுளப்பட்ட வாயெல்லா மொள்வாள் கவரக்—களப்பட்டான் றோன்றான் கரந்து." எனவரும். ஆளெறி பிள்ளைக்குச் செய்யுள்;—"பிள்ளை கடுப்பப் பிணம்பிறங்க வாளெறிந்து—கொள்ளைகொ ளாயந் தலைக்கொண்டா—ரெள்ளிப்—பொருதழிந்து மீளவும் பூங்கழலான் மீளா-னொருதனியே நின்றா னுளன்." எனவரும். ஆளெறிபிள்ளை, ஆளை எறியும் பிள்ளைத்தன்மையன். பிள்ளைத்தெளிவுக்குச்செய்யுள்;-"மேவா ருயிருணங்க மேன்முடித்த பிள்ளையன்—பூவா ளுறை கழியாப் போர்க்களத்து—ளோவான்-றுடியிரட்டி விம்மத் தொடுகழலார் முன்னின்—றடியிரட்டித் திட்டாடு மாட்டு." எனவரும். இது கவந்தம் ஆடியது. பிள்ளையாட்டிற்குச் செய்யுள்;—"மாட்டிய பிள்ளை மறவர் நிறந்திறந்து—கூட்டிய வெஃகங் குடர்மாலை—சூட்டியபின்—மாறிரியச் சீறி நுடங்குவான் கைக்கொண்ட—வேறிரிய விம்முந் துடி." எனவரும். கையறுநிலைக்குச் செய்யுள்;—"நாப்புலவர் சொன்மாலை நண்ணார் படையுழக்கித்—தாப்புலி யொப்பத் தலைக்கொண்டான்—பூப்புனையு—நற்குலத்துட் டோன்றிய நல்லிசையாழ்த் தொல்புலவீர்—கற்கொலோ சோர்ந்திலவெங் கண்." எனவரும். நெடுமொழிகூறற்குச் செய்யுள்;—"ஆளமர் வெள்ளம் பெருகி னதுவிலங்கி—வாளொடு வைகுவேன் யானாக—நாளுங்—கழிமகிழ் வென்றிக் கழல்வெய்யோ யீயப்—பிழிமது வுண்பார் பிறர்." எனவரும். பிள்ளைப்பெயர்ச்சிக்குச் செய்யுள்;—"பிணங்க மருட் பிள்ளை பெயர்ப்பப் பெயரா—தணங்கனுர்செய் தாளெறித னேக்கி—வணங்காச்—சிலையளித்த தோளான் சினவிடலைக் கன்றே—தலையளித்தா னண்ணடையுந் தந்து." எனவரும். பிள்ளை,காரிப்பிள்ளை. வேத்தியன்மலிபிற்குச்செய்யுள்;—"அங்கையு ணெல்லி யதன்பய மாதலாற்—கொங்கலர் தாரான் குடைநிழற்கீழ்த்—தங்கிச்—செயிர்வழங்கும் வாளமருட் சென்றடையார் வேல்வா—யுயிர்வழங்கும் வாழ்க்கை யுறும்." மிகுகுடிநிலைக்குச் செய்யுள்;—"பொய்யகல நாளும் புகழ்விளைத்த லென்வியப்பாம்—வையகம் போர்த்த வயங்கொலிநீர்—கையகலக்—கற்றோன்றி மண்டோன்றாக் காலத்தே வாளோடு—முற்றோன்றி மூத்த குடி." எனவரும். ஆபெயர்த்துத்தருதற்குச் செய்யுள்;—"கடல்புக்கு மண்ணெடுத்த காரேனக் கோட்டின்—மிடல்பெரி தெய்தின மாதோ—தொடலைக்—கரந்தை மறவர்க் கருதார் குழாஅந்—துரந்து நிரைமீட்ட தோள்." எனவரும். அருஞ்சமர்விலக்கற்குச் செய்யுள்;—"ஆனூரெறிந்து நிரையொடு பெயர்ந்த—வெட்சி மறவர் வீழவு முட்காது—

கயிறியல் பாவை போல வயிறிரித்—துளைக்குரற் குணர்ந்த வளைப் புலி போல—முற்படு பூசல் கேட்டனர் பிற்பட—நிணமிசை யிழுக் காது தமர்பிண மிடறி—நிலங்கெடக் கிடந்த கருந்தலை நடுவண்—மாக்கட னெருப்புப் போல நோக்குபு—வெஞ்சிலை விடலை வீழ்ந் தன—னஞ்சுதக் கன்றூற் செஞ்சோற்று நிலையே." எனவரும். நலிவின்றுய்த்தற்குச் செய்யுள்;—"கல்கெழு சீறூர்க் கடைகாண் விருப்பினுன்—மெல்ல நடவா விரையு நிரையன்றோ—தெள் ளறற் கானியாற்றுத் தீநீர் பருகவு—மள்ளர் நடாஅ வகை." என வரும். நண்ணுவழித்தோற்றத்திற்குச் செய்யுள்;—"காட்டகஞ் சென்றுயிர் போற்றூன் கடுஞ்சுரையா—மீட்ட மகனை வினவுமு—ஞேட்டந்து—தன்னெதிர் தோன்றும் புனிற்றூத் தழீஇக் கலுழு—மென்னெதிர்ப் பட்டாயோ வென்று." எனவரும். நிறைத்தற்குச் செய்யுள்;—"கழுவொடு பாகர் கலங்காமல் யாத்துத்—தொழுவி டை யாயந் தொகுமி—னெழுவொழித்தாற்—போமே யிவற்றைநீர் போற்றுமின் புல்லொடுநீர்—தாமேய் புலம்போலத் தந்து." எனவ ரும். பாதிட்டுக்குச் செய்யுள்;—"யாமே பகுத்திடல் வேண்டா வினநிரை—தாமே தமரை யறிந்தனகொ—லேமுற—வன்றீன்ற தம்மை யறிந்துகொள் கன்றேய்ப்பச்—சென்றீண்டு மாங்கவர்பாற் சேர்ந்து." எனவரும். உண்டாட்டுக்குச் செய்யுள்;—"பகைவர் கொண்ட படுமணி யாய—மீட்டிவ ணடைந்த வாட்டிறற் குரி சின்—முழவுத் துயின்மறந்த மூதூ ராங்கண்—விழவுத்தலைக் கொண்ட விளையாட் டாயத்—தூன்சுடு கொழும்புகைக் கருங் கொடி யும்பர்—மீன்சுடு புகையின் விசும்புவாய்த் தன்றே—கைவல் கம்மியர் பல்கூட் டாரமொடு—நெய்பிழி நறுவிரை நிலம்பரந் தன் றே—காவிற் காவிற் கணங்கொள் வண்டெனப்—பூவிலை மகளிர் புலம்படர்ந் தன்றே—சந்தியுஞ் சதுக்கமும் பந்தர் போகிய—வாடு நறவின் சாடி தோறுங்—கொள்வினை மாற்றூக் கொடையொடு-கள் விலை யாட்டியுங் கைதூ வாளே." எனவரும். கொடைக்குச் செய் யுள்;—"கொடைத்தொழி லெல்லாங் குறைவின்றிப் பண்டே—மு டித்தன னன்றிருந்த மூத்தோன்—கொடைக்கு—வரம்பில னென் றே மருண்டாரா கொண்ட—கரந்தையங் கண்ணியா ராண்டு." எனவரும். துடிநிலைக்குச் செய்யுள்;—"நித்திலஞ்செய் பட்டமு நெற்றித் திலதமு—மொத்திலங்க மெய்பூசி யோர்ந்துடீஇத்—தத் தந்—துடியரோ டேர்ப்புறஞ் சூழ்ந்தார் மறவர்—குடிநிலை பாராட்டிக் கொண்டு." எனவரும். கொற்றவைநிலைக்குச் செய்யுள்;—"அரு மைத் தலைத்தரு மாநிரையு ளையை—யெருமைப் பலிகோ ளியைந்

தா—ளரசனும்—வேந்தன்மேற் செல்வான் விறல்வஞ்சி சூடா னென்—றியாந்தன்மேற் சீருமலின் று.” எனவரும். (சு)

சுOரு. **வஞ்சி** தானே முல்லையது புறனே
யெஞ்சா மண்ணசை வேந்தனை வேந்த
னஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே.

இது வஞ்சித்திணை முல்லைத்திணைக்குப் புறனென்பதூஉம் அதன் பொருளுங் கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய புறத்திணை ஏழனுள் வஞ்சித்திணை முற் கூறிய அகத்திணை ஏழனுள் முல்லைத்திணைக்குப் புறனும்; அஃது ஒழியாத மண்ணை நச்சுதலையுடைய வேந்தனை மற்றொரு வேந்தன் ஆண்டு வாழ்வோர்க்கு அஞ்சுதலுண்டாக அந்நாட்டிடத்தே சென்று வேறலைக் குறித்தது. எ - று.

புறத்திணை பலவற்றுள் ‘வஞ்சி தானே முல்லையது புறனே’ என இதனைப் பிரித்து ஓதினர், முதலெனப்பட்ட காடுறையுலகமுங் கார்காலமும் அந்நிலத்திற்கு ஏற்ற கருப்பொருளும் அரசன் பாசறைக்கட் தலைவியைப் பிரிந்திருத்தலும் அவன் தலைவி அவனைப்பிரிந்து மனைவயினிருத்தலுமாகிய உரிப்பொருளும் ஒப்பச்சேறலின் என்பது. எனவே, வஞ்சித்திணை முல்லைத்திணைக்குப் புறனென்றல் ஆணைகூறலன்றாயிற்று. (எ)

சுOசு. **வாடா** வஞ்சி மலைதலு மோடாப்
படையியங் கரவமுங் குடைநாட் கோளும்
வாணாட் கோளும் பேணா ருட்குங்
கொற்றவை நிலையும்-வெற்றிவே லுழவர்
செய்தொழில் கூறிய மற்றதன் பகுதியு
மறிதிரை யுலகம் வணங்கவெஃ குயர்த்த
குரிசிலை வழுத்திய கொற்ற வஞ்சியும்
வேந்தனைப் புகழ்ந்து வேற்றுநா டழிபு
கூர்ந்தமைக் கிரங்கிய கொற்ற வள்ளையும்
பொருமுறை பகையொடு பொருத வீரர்க்குப்
பெரிதருள் சுரந்த பேராண் வஞ்சியு
மருந்திறை யளப்ப வாறிய சினத்தொடு
பெரும்பூண் மன்னவன் பெயர்ந்த பக்கமுந்

திண்ணிய வேந்திற் சிறப்புற் றோர்பெறூஉம்
வண்மை கூறிய மாராய வஞ்சியுஞ்
செறியலர் போர்க்களஞ் சென்றுதன் ணண்மை
நெறியெடுத் தியம்பிய நெடுமொழி வஞ்சியுந்
தொன்னெறி மரபின் வாட்குடித் தோன்றிய
முன்னவ னிலைபுகன் முதுமொழி வஞ்சியுங்
கூடலர் நாட்டுக் கொடிநெடு வியனூ
ருடெரி யூட்டிய வுழபுல வஞ்சியுங்
குறுகல ரருமுனை கொள்ளை சாற்றி
மறுகுறக் கவர்ந்த மழபுல வஞ்சியு
நீட்டவுங் குறுகவு நிவப்பவுந் தூக்கிப்
பாடிய பாணர்க்குப் பயந்தகொடை வஞ்சியு
மடுத்த வேந்தற்கு வழங்குவ வழங்கிக்
குடிக்கருள் சுரந்த குறுவஞ்சி யானு
மட்டோர் தெரியன் மறங்கெழு வேந்தன்
கட்டோர் வகைமை கட்டுரைத்த பக்கமும்
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
வொருவன் றாங்கிய வொருதனி நிலையு
மழியுநர் புறக்கொடை யயில்வா ளோச்சாக்
கழிதறு கண்மைத் தழிஞ்சியு மதாஅன்று
மதிக்குடை வேந்தன் மாற்றலர் வணங்கவும்
பதிப்பெயர் கில்லாப் பாசறை வஞ்சியு
முன்னடை யாதார் வளங்கெழு நாட்டைப்
பின்னுமெரி யூட்டிய பெருவஞ்சி யானு
மிறையவன் வயவர்க் கிருஞ்சோற் றமலை
பெறுமுறை யுதவிய பெருஞ்சோற்று நிலையும்
வெளிகெடப் பகைமுனை யிறுத்த வேந்தன்
ஙளிவிறன் மிகுத்த நல்லிசை வஞ்சியு
மிறுத்தபி னடழி பிரங்கிமறுத் துரைத்த
பக்கமு மெனமுறை தொக்க வையைந்து
நல்லிசைப் புலவர் நாடினர் தெளிந்து
சொல்லிய வஞ்சித் துறையெனப் படுமே.

இது முற்கூறிய வஞ்சித்திணை இத்துணைத்துறையுடைத்தென்கின்றது.

இ - ள். வாடாவஞ்சிமலைதல் முதலாக இறுத்தபின் நாட்டழிபிரங்கி மறுத்துரைத்தபக்கம் ஈருக முறையே தொக்க இருபத்தைந்தும் நல்லிசைப்புலவர் ஆராய்ந்து தெளிந்து சொல்லிய வஞ்சித்துறையென்று கூறப்படும். எ - று.

வாடாவஞ்சிமலைதற்குச் செய்யுள்;—"செங்கண் மழவிடையிற் றண்டிச் சிலைமறவர்—வெங்கண் மகிழ்ந்து விழவயர—வங்குழைய—வஞ்சி வணங்கார் வணக்கிய வண்டார்ப்பக்—குஞ்சி மலைந்தானெங் கோ." எனவரும். ஓடாப்படையியங்கரவத்திற்குச் செய்யுள்;—"பௌவம் பணைமுழங்கப் பற்ருர்மண் பாழாக—வவ்விய வஞ்சி வலம்புனையச்-செவ்வே—லொளிறும் படைநடுவ ணூழித்தீயன்ன—களிறுங் களித்ததிருங் கார்." எனவரும். குடைநாட்கோடற்குச் செய்யுள்;—"முன்னர் முரசிரங்க மூரிக் கடற்ருனை—துன்னருந் துப்பிற் ருெழுதெழா—மன்ன—ருடைநா ளுலந்தனவா லோதநீர் வேலிக்—குடைநா ளிறைவன் கொள." எனவரும். வாணுட்கோடற்குச் செய்யுள்;—"அறிந்தவ ராய்ந்தநா ளாழித்தேர் மன்ன—னெறிந்திலங் கொள்வா ளியக்க—மறிந்திகலிப்—பின்பகலே யன்றியும் பேணு ரகநாட்டு—நன்பகலுங் கூகை நகும்." எனவரும். பின்பகல், இரவு. கொற்றவைநிலைக்குச் செய்யுள்;—"அணங்குடை நோலை பொரிபுழுக்கல் பிண்டி—நிணங்குடர் நெய்த்தோர் நிறைத்துக்—கணம்புகலக்—கையிரீஇ மண்டை கணமோடி காவலர்க்கு—மொய்யிரியத் தான்முந் துறும்." எனவரும். நோலை, எட்கசிவு. வெற்றிவேலுழவர் செய்தொழில்கூறிய மற்றதன்பகுதிக்குச் செய்யுள்;—"தமருட் டலையாத ருர்தாங்கி நிற்ற—லமருள்யாமின்னமென் றெண்ண—லமருண்—முடிகழலின் முந்துறுதன் முல்லைத்தார் வேந்தன்—ருெடிகழலின் மைந்தர் தொழில்." எனவரும். மறிதிரையுலகம் வணங்க எஃகுயர்த்த குரிசிலைவழுத்திய கொற்றவஞ்சிக்குச் செய்யுள்;—"அழலடைந்த மன்றத் தலந்தயரா நின்ருர்—நிழலடைந்தே நின்னையென் றேத்திக்—கழலடையச்—செற்றங்கொண் டாடிச் சிலைத்தெழுந்தார் வீந்தவியக்—கொற்றங்கொண் டெஃகுயர்த்தான் கோ." எனவரும். வேந்தனைப்புகழ்ந்து வேற்றுநாடழிபு கூர்ந்தமைக்கு இரங்கிய கொற்றவள்ளைக்குச் செய்யுள்;—"தாழார மார்பினன் ருமரைக்கண் சேந்தனவாற்—பாழாய்ப் பரிய விளிவதுகொல்—யாழாய்ப்—புடைத்தே னிமிர்கண்ணிப் பூங்கட்

புதல்வர்—நடைத்தே ரொலிகறங்கு நாடு." எனவரும். வள்ளை, உலக்கைப்பாட்டு. பொருமுறைபகையொடு பொருதவீரர்க்குப் பெரி தருள்சுரந்த பேராண்வஞ்சிக்குச் செய்யுள்;—"பலிபெறு நன்னக ரும் பள்ளி யிடனு—மொலிகெழு நான்மறையோ ரில்லு—நலிவொ ரீஇப்—புல்லா ரிரியப் பொருதார் முனைகெடுத்த—வில்லார்க் கருள் சுரந்தான் வேந்து." எனவரும். அருந்திறையளப்ப ஆறியசினத் தொடு பெரும்பூண்மன்னவன் பெயர்ந்தபக்கத்திற்குச் செய்யுள்;—"கூடி முரசிரங்கக் கொய்யுளைமா முன்னுகளப்—பாடி பெயர்த்திட் டான் பல்வேலான்—கோடி—நிதியந் திறையளந்தார் நேராருந் தன்கீழ்—முதியமென் றூறி முரண்." எனவரும். திண்ணியவேந் திற் சிறப்புற்றோர்பெறூஉம் வண்மைகூறிய மாராயவஞ்சிக்குச் செய்யுள்;—"நேராரம் பூண்ட நெடுந்தகை நேர்கழலான்—சேரார் முனைநோக்கிக் கண்சிவப்பப்—போரார்—நறவே கமழ்தெரிய னண் ணு ரெறிந்த—மறவே லிலைமுகந்த மார்பு." எனவரும். செறியலர் போர்க்களஞ் சென்றுதன்னுண்மை நெறியெடுத்தியம்பிய நெடுமொ ழிவஞ்சிக்குச் செய்யுள்;—"இன்ன ரெனவேண்டா வென்னோ டெதிர்சீறி—முன்னர் வருக முரணகலு—மன்னர்-பருந்தார் படை யமருட் பல்லார் புகழ—விருந்தா யடைகுறுவார் விண்." எனவ ரும். தொன்னெறிமரபின் வாட்குடித்தோன்றிய முன்னவனிலை புகல் முதுமொழிவஞ்சிக்குச் செய்யுள்;—"குளிறு முரசங் குணில் பாயக் கூடா—ரொளிறுவாள் வெள்ள முழக்கிக்—களிறெறிந்து— புண்ணொடு வந்தான் புதல்வற்குப் பூங்கழலோய்—தண்ணடை நல்க றகும்." எனவரும். கூடலர்நாட்டுக் கொடிநெடுவியனூர் ஓடெ ரியூட்டிய உழபுலவஞ்சிக்குச் செய்யுள்;—"அயிலன்ன கண்புதைத் தஞ்சி யலறி—மயிலன்னார் மன்றம் படரக்—குயிலகவ—வாடிரிய வண்டிமிருஞ் செம்ம லடையார்நாட்—டோடெரியின் வைகின ஆர்." எனவரும். குறுகலரருமுனை கொள்ளைசாற்றி மறுகுறக்க வர்ந்த மழபுலவஞ்சிக்குச் செய்யுள்;—"களமர் கதிர்மணி காலேகஞ் செம்பொன்—வளமனை பாழாக வாரிக்—கொளன்மலிந்து—கண் ணூர் சிலையார் கவர்ந்தார் கழல்வேந்த—னண்ணூர் கிளையலற நாடு." எனவரும். நீடவுங் குறுகவு நிவப்பவுந் தூக்கிப் பாடிய பாணர்க்குப் பயந்த கொடைவஞ்சிக்குச் செய்யுள்;—"சுற்றிய சுற்ற முடன்மயங் கத் தம்வயி—றெற்றி மடவா ரிரிந்தோட—முற்றிக்—குரிசி லடை யாரைக் கொண்டகூட் டெல்லாம்—பரிசின் முகந்தன பாண்." என வரும். மடுத்தவேந்தற்கு வழங்குவவழங்கிக் குடிக்கருள்சுரந்த குறுவஞ்சிக்குச் செய்யுள்;—"தாட்டாழ் தடக்கைத் தனிமதி வெண் குடையான்—வாட்டானை வெள்ளம் வரவஞ்சி—மீட்டான்—மலை

யா மறமன்னன் மால்வரையே போலுங்—கொலையானை பாய்மா கொடுத்து." எனவரும். மட்டேர்தெரியல் மறங்கெழுவேந்தன் கட்டேர்வகைமை கட்டுரைத்தபக்கத்திற்குச் செய்யுள்;—"அவிழ்மலர்க் கோதையா ராட வொருபா—லிமிழ்முரச மியாழோ டியம்பக்—கவிழ்மணிய—காய்கடா யானை யொருபாற் களித்ததிரு—மாய்கழலான் கட்டே ரகத்து." எனவரும். வருவிசைப்புனலைக் கற்சிறை போல ஒருவன்தாங்கிய ஒருதனிநிலைக்குச் செய்யுள்;—"வீடுணர்ந் தார்க்கும் வியப்பாமா லிந்நின்ற—வாடன் முதியாள் வயிற்றிடங்—கூடார்—பெரும்படை வெள்ள நெரிதரவும் பேரா—விரும்புலி சேர்ந்த விடம்." எனவரும். அழியுநர்புறக்கொடை அயில்வாளோச்சாக் கழிதறுகண்மைத் தழிஞ்சிக்குச் செய்யுள்;—"கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினுந்—தான்படை தீண்டாத் தறுகண்ணன்—வான்படர்தல்—கண்ணியபின் னன்றிக் கறுத்தார் மறந்தொலைத—லெண்ணியபின் னேக்குமோ வெஃகு." எனவரும். தழிஞ்சி, தழுவல். மதிக்குடைவேந்தன் மாற்றலர்வணங்கவும் பதிப்பெயர்கில்லாப் பாசறைவஞ்சிக்குச் செய்யுள்;—"கரும்பொடு காய்நெற் கனையெரி யூட்டிப்—பெரும்புனல் வாய்திறந்த பின்னுஞ்—சுரும்பின்—குரைகைமலிந்த தண்குவளைத் தூமலர்த் தாரான்—பகைமெலியப் பாசறையு ளான்." எனவரும். முன்னடையாதார் வளங்கெழுநாட்டைப் பின்னும் எரியூட்டிய பெருவஞ்சிக்குச் செய்யுள்;—"பீடிலா மன்னர் நடுங்கப் பெரும்புகை—யூடிலாய் வானத் தொளிமறைப்ப—நாடெலாம்—பின்னும் பிறங்கழல் வேய்ந்தனவே பெய்கழற்கான்—மன்னன் கனல மறம்." எனவரும். இறையவன் வயவர்க்கு இருஞ்சோற்றமலை பெறுமுறையருளிய பெருஞ்சோற்றுநிலைக்குச் செய்யுள்;—"இயவர் புகழ வெறிமுரச மார்ப்பக்—குயவரி வேங்கையனைய—வயவர்—பெறுமுறையாற் பிண்டங்கோ ளேவினன் பேணு—றிறுமுறையா லெண்ணி யிறை." எனவரும். வெளிகெடப் பகைமுனை இறுத்தவேந்தன் அளிவிறன்மிகுத்த நல்லிசைவஞ்சிக்குச் செய்யுள்;—"மடங்கலிற் சீறி மலைந்தெழுந்தார் மண்மே—லிடங்கெடச் சென்றிறுத்த பின்னு—நுடங்கெரி போல்—வெல்லப் பெருகும் படையாற்கு வேந்தர்மேற்—செல்லப் பெருகுஞ் சினம்." எனவரும். இறுத்தபின் நாடழிபு இரங்கி மறுத்துரைத்த பக்கத்திற்குச் செய்யுள்;—"குரையழன் மண்டிய கோடியர் மாடஞ்—சுரையோடு பீரஞ் சுமந்த—நிரைதிண்டேர்ப்—பல்லிசை வென்றிப் படைக்கடலான் சென்றிறுப்ப—நல்லிசை கொண்டடையார் நாடு." எனவரும். (அ)

சுஏ0எ. உழிஞை தானே மருதத்துப் புறனே
முழுமுத லரண முற்றலுங் காத்தலு
மெனவிரு வகைய ததுவென மொழிப.

இஃது உழிஞைத்திணை மருதத்திணைக்குப் புறனென்பதூஉம் அதன்பொருட்டிறனுங் கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய புறத்திணை ஏழனுள் உழிஞைத்திணை முற்கூறிய அகத்திணை ஏழனுள் மருதத்திணைக்குப் புறனும்; வேற்றுவேந்தன் குலத்திற்கெல்லாம் எஞ்சாதமுதலாய் வருகின்ற அரணைச் சென்றவேந்தன் வளைந்துகோடலும் இருந்தவேந்தன் காத்துக்கோடலுமென இரண்டுவகையினையுடைத்தாம் அத்திணை யென்று கூறுவர் அறிந்தோர். எ - று.

புறத்திணைபலவற்றுள் 'உழிஞைதானே மருதத்துப்புறனே' என இதனைப் பிரித்தோதினர், இருபெருவேந்தர் தம்முள் மாறுகொண்டவழி எதிர்செலற்காற்றாது போய் மதிலகத்திருந்த வேந்தன்மதில் பெரும்பான்மையும் மருதத்திடத்ததாகலானும், அம்மதிலை முற்றுவோனும் அந்நிலத்திருத்தலானும், ஒருவன் வாயில் வேண்டத் திறவாது அடைத்திருந்த ஒப்புமையானும், உள்ளிருந்தவனும் புறப்பட விரும்புதலானும், மருதம்போல் இதற்கும் பெரும்பொழுது வரைவின்மையானுஞ், சிறுபொழுதும் விடியற்காலமே போர்செய்தற்குக் காலமாதலானும் என்பது. எனவே, உழிஞைத்திணை மருதத்திணைக்குப் புறனென்றல் ஆணைகூறலன்றாயிற்று.(க)

சுஏ0அ. முடிமிசை யுழிஞை சூடி யொன்னார்
கொடிநுடங் கெயில்கொளக் குறித்த வுழிஞையுங்
குடைநாட் கோளொடு வாணாட் கோளுங்
கடைநாட் பௌவத் ததிர்முர சுழிஞையும்
பற்றலர் மதில்கொளப் பரந்தெழு தானையொடு
கொற்றவ னெழுதரு கொற்ற வுழிஞையு
மிகப்படு மூக்கமுதல் வேந்துறு தலினர
ணகப்படு மென்ற வரச வுழிஞையும்
வண்ண மலர்த்தார் மன்னனைச் சேர்வெறி
கண்ணனென் றேத்திய கந்தழி யுழிஞையு
மியங்கர ணழித்தன னிறையுமிது புனைந்தென

வயங்கிண ருழிஞையை வழுத்துமுற் றுழிஞையுங்
காந்தள் வேய்ந்தனன் சேந்தனும் போர்க்கெனின்
வேந்தரி லெவர்பூ விரும்பா ரென்றலு
மறத்துறை மலிந்து மண்டி மாற்றார்
விறற்கொடி மதிலின் புறத்தொருங் கிறுத்தலும்
வாஅண் மறவர் வணங்கார் வைகிய
நீஇண் மதிலி னிலையெடுத் தியம்பலும்
வென்றியொடுநெடும்புகழ் விளக்குமென்றிறைவன்
ெறன்று வந்த தோன்மலி புரைத்தலுங்
கருதார் காக்குங் கடிமதிற் குமரிமே
லொருதா னாகி யுடன்றகுற் றுழிஞையும்
வளையின மொலிப்ப வயிர்கிளர்ந் தார்ப்ப
மிளைபிறக் கொழிய விரைந்த பக்கமொடு
பாடருந் தோற்படை யீடுசான் மறவ
ராடலோ டடைந்த பக்கமு மதாஅன்று
விண்டோ யருமிளை கடந்துகுண் டகழிப்
புறத்துவந் திறுத்தலும் போர்க்கருங் கிடங்கிற்
பற்றல ரொடுபொரூஉம் பாசி நிலையுந்
தொடுகழன் மறவர் துன்னித் துன்ன
ரிடுசூட் டிஞ்சியி னேணி சார்த்தலு
மாடுத லொல்லா வரண்கா வலவ
ரீடற வேணியி னிவரெயிற் பாசியும்
வேஎய் பிணங்கிய மிளைசூ ழரணம்
பாஅய் புள்ளிற் பாய்ந்தமு துழிஞையு
முரணகத் தவிய முதுசினஞ் சிறந்தோ
ரரணகத் தோரை யடலகற் றுழிஞையு
மருமுர ணதனு லமர்வர் வறியாச்
செருமதி லோர்சிறப் புரைத்த பக்கமு
மகத்தோன் காலை யதிர்முர சியம்பப்
புறத்தோன் வஞ்சினம் புகன்முற்று முதிர்வு
மேவலர்க் கடந்து வெலற்கருங் காவலொடு
யானைகைக் கொண்ட யானைகைக் கோளு

முற்றுவிட் டகல மற்றொரு வேந்தன்
வெற்றியம் படைவரூஉம் வேற்றுப்படை வரவு
மெண்ணா ராரெயில் கழுந்த யேரி
னுண்ணா வரகுகொள் ளுழுதுவித் திடுதலும்
புண்ணிய நீரிற் புரையோ ரேத்த
மண்ணுதல் புரிந்த வாண்மங் கலமுங்
கோமக னடிமலர் குறுகலர் புனைய
மாமதிற் குமரியொடு மணந்தமங் கலமுந்
தொடர்ந்தெயில் கொண்டோன் சூழ்மதில் வேந்தன்
மடந்தையை வேண்டிய மகட்பா லிகலுந்
தூவடி வேலவன் றொகுத்த நிதியளந்து
சேவடி வணங்கத் திறைகொண்டு பெயர்தலும்
பேணா மன்னர் பெருமறங் காற்றி
யாணை போக்கி யடிப்பட விருத்தலு
மெம்மதி லுள்ள விகலுடை வேந்தரு
மம்மதி லடியி னடைந்ததொகை நிலையுமென
முரண்டரு புரிசை முற்றினன் கோட
லிரண்டுதலை யிட்டமுப் பதிற்றுத் துறைத்தே.

இது மேற்கூறிய உழிஞைப்பகுதி இரண்டனுள் முன்னையது இத்துணைத்துறையுடைத்தென்கின்றது.

இ - ள். முடிமிசை உழிஞை சூடி ஒன்னார் கொடிநுடங்கெயில்கொளக்குறித்த உழிஞை முதல் எம்மதிலுள்ள இகலுடைவேந்தரும் அம்மதிலடியின் அடைந்ததொகைநிலை ஈறாகச் சொல்லப்பட்ட முப்பத்திரண்டு துறையுடைத்தாம் மாறுபாட்டை விளைக்கும் மதிலைச்சென்ற வேந்தன் முற்றிக்கோடல். எ - று.

முடிமிசை உழிஞைசூடி ஒன்னார் கொடிநுடங்கெயில் கொளக்குறித்த உழிஞைக்குச் செய்யுள்;—“உழிஞை முடிபுனைந் தொன்னுப்போர் மன்னர்—விழுமதில் வெல்களிறும் பாயக்—கழி மகிழ்—வெய்தாரு மெய்தி யிசைநுவலுஞ் சீர்த்தியனே—கொய்தார மார்பினெங் கோ.” எனவரும். குடைநாட்கோடற்குச் செய்யுள்;- “நெய்யணிக செவ்வே னெடுந்தேர் நிலைபுகுக—கொய்யுளைமா கொல்களிறு பண்விடுக—வையகத்து—முற்றக் கடியரண மெல்லா

முரணவிந்த—கொற்றக் குடைநாட் கொள." எனவரும். வாணுட் கோடற்குச் செய்யுள்;—"வாணுட் கொளலும் வழிமொழிந்து வந் தடையாப்—பேணர் பிறைதொடும் பேமதிற்—பூணு—ரணிகொள் வனமுலையா ராடரங்க மேறிப்—பிணிகொள்பே யாடும் பெயர்த்து." எனவரும். கடைநாட்பௌவத்ததிர் முரசுழிஞைக்குச் செய்யுள்;— "கதிரோடை வெல்களிறு பாயக் கலங்கி—யுதிரா மதிலு முள கொ—லதிருமாற்—பூக்கண் மலிதார்ப் புகழ்வெய்யோன் கோயி லுண்—மாக்கண் முரச மழை." எனவரும். பற்றலர்மதில்கொளப் பரந்தெழுதானையொடு கொற்றவனெழுதரு கொற்றவுழிஞைக்குச் செய்யுள்;—"வெள்வாட் கருங்கழற்கால் வெஞ்சுடர்வேற் றண்ண ளியான்—கொள்வான் கொடித்தானை கொண்டெழுந்தா—னள் ளாதா—ரஞ்சுவரும் வாயி லருமிளைக் குண்டகழி—மஞ்சிவரு ஞா யின் மதில்." எனவரும். மிகப்படுமூக்கம் முதல்வேந்துறுதலில் அரண் அகப்படுமென்ற அரசவுழிஞைக்குச் செய்யுள்;—"ஊக்க முரண்மிகுதி யொன்றிய நற்சூழ்ச்சி—யாக்க மவன்க ணகலாவால்- வீக்க—நகப்படா வென்றி நலமிகு தாராற்—ககப்படா வில்லை யரண்." எனவரும். வண்ணமலர்த்தார் மன்னனைச்சேர்வெறி கண்ணனென்றேத்திய கந்தழியுழிஞைக்குச் செய்யுள்;—"அன்றெ றிந் தானு மிவனு லரண்வலித்—தின்றிவன் மாறு யெதிர்வார்யா— ரென்று—மடையார் மணிப்பூ ணடையாதார் மார்பிற்—சுடராழி நின்றெரியச் சோ." எனவரும். இயங்கரண் அழித்தனன் இறை யும் இதுபுனைந்தென வயங்கிணருழிஞையை வழுத்துமுற்றுழி ஞைக்குச் செய்யுள்;—"மயங்காத தார்ப்பெருமை மற்றறிவார் யா ரே—யியங்கரண மூன்று மெரித்தான்—றயங்கிணர்ப்—பூக்கொ ளிதழிப் புரிபுன் சடையானு—மாக்கொ ளுழிஞை மலைந்து." எனவ ரும். காந்தள்வேய்ந்தனன் சேந்தனும்போர்க்கெனின் வேந்தரிலெ வர்பூ விரும்பாரென்றற்குச் செய்யுள்;—"குருகு பெயரிய குன்றெ றிந் தானு—முருகெழு காந்தண் மலைந்தான்—பொருகழற்—கார்க ருதி வார்முரச மார்க்குங் கடற்றானைப்—போர்கருதி யார்மலையார் பூ." எனவரும். மறத்துறைமலிந்து மண்டிமாற்றார் விறற்கொடிம திலின் புறத்தொருங்கிறுத்தற்குச் செய்யுள்;—"புல்லார் புகலொடு போக்கொழியப் பொங்கினனுய்ப்—பல்லார் மருளப் படைபரப்பி- யொல்லார்—நிறத்திறுத்த வாட்டானை நேரார் மதிலின்—புறத்தி றுத்தான் பூங்கழலி னுன்." எனவரும். வாஅண்மறவர் வணங்கார் வைகிய நீஇண்மதிலின் நிலையெடுத்தியம்பற்குச் செய்யுள்;—"மயிற் கணத் தன்னர் மகிழ்தேற லூட்டக்—கயிற்கழலார் கண்கனல் பூப்ப—வெயிற்கண்ணர்—வீயப்போர் செய்தாலும் வென்றி யரி

தரோ—மாயப்போர் மன்னன் மதில்." எனவரும். வென்றியொடு நெடும்புகழ் விளக்குமென் றிறைவன் ஞென்றுவந்த தோன்மலிபு ரைத்தற்குச் செய்யுள்;—"நின்ற புகழொழிய நில்லா வுயிரோம்பி—யின்றுநாம் வைக லிளிவாகு—மென்றெளிரும்—பாண்டி னிரைத் தோற் பணியார் பகையரணம்—வேண்டி லெளிதென்றான் வேந் து." எனவரும். பாண்டில், கண்ணாடி. தோல் ஈண்டு ஆகுபெயர். கருதார்காக்குங் கடிமதிற்குமரிமேல் ஒருதானாகி உடன்றகுற்றுழி ஞைக்குச் செய்யுள்;—"குளிறு முரசினான் கொண்டா னரணங்—களிறுங் கதவிறப் பாய்ந்த—வொளிறு—மயிற்றுப் படைந்த வணி யெழு வெல்லா—மெயிற்றுப் படையா விடந்து." எனவரும். வளை யினமொலிப்ப வயிர்கிளர்ந்தார்ப்ப மிளைபிறக்கொழிய விரைந்தபக் கத்திற்குச் செய்யுள்;—"அந்தரந் தோயு மமையோங் கருமிளை—மைந்தர் மறிய மறங்கடந்து—பைந்தார்—விரைமார்பின் வின்ன ரல வெங்கணை தூவார்—வரைமார்பின் வைகின வாள்." எனவ ரும். வில், வின்னாண். தூவுவார்தூவாரென விகாரம்பெற்று நின் றது. பாடருந்தோற்படை ஈடுசான்மறவர் ஆடலோடடைந்தபக் கத்திற்குச் செய்யுள்;-"நிரைபொறி வாயி னெடுமதிற் சூளி—வரை புகு புள்ளின மான—விரைபடைந்தார்—வேலேந்து தானை விற லோன் விறன்மறவர்—தோலேந்தி யாட றொடர்ந்து." எனவரும். பொறி, நூற்றுவரைக்கொல்லி முதலிய இயந்திரங்கள். விண்டோ யருமிளைகடந்து குண்டகழிப்புறத்துவந்திறுத்தற்குச் செய்யுள்;—"கோள்வாய் முதலைய குண்டகழி நீராக—வாள்வாய் மறவேந்தன் வந்திறுத்தா—னீள்வாயி-லோங்க லரணத் தொளிவளையார் வெய்து யிர்ப்ப—வாங்கொ லரிய வமர்." எனவரும். போக்கருங்கிடங்கிற் பற்றலரொடுபொரூஉம் பாசிநிலைக்குச் செய்யுள்;—"நாவாயுந் தோ ணியு மேல்கொண்டு நள்ளாதா—ரோவார் விலங்கி யுடலவும்—பூவா—ரகழி பரந்தொழுகு மங்குருதிச் சேற்றுப்—பகழிவாய் வீழ்ந்தார் பலர்." எனவரும். பாசிநிலைபோல் ஒழிப்பவும் ஒழியாது பொருதலிற் பாசிநிலையாயிற்று. நாவாய், ஓடம். தோணி, ஒருமரத் தான் இயன்றது. தொடுகழன்மறவர் துன்னித்துன்னார் இடுசூட் டிஞ்சியின் ஏணிசார்த்தற்குச் செய்யுள்;-"கற்பொறியுங் காயுங் கன லுங் கடிகுரங்கும்—விற்பொறியும் வேலும் விலங்கவும்—பொற்பு டைப்-பாணி நடைப்புரவிப் பல்களிற்றான் சார்த்தினா—ரேணி பலவு மெயில்." எனவரும். பாணிநடை, தாளத்திற்கொப்பச் சதிபாய்தல். ஆடுதலொல்லா அரண்காவலவர் ஈடறவேணியின் இவரெயிற்பா சிக்குச் செய்யுள்;—"சுடுமண் ணெடுமதில் சுற்றிப் பிரியார்—கடுமுர ணெஃகங் கழிய—வடுமுர—ணறின ரன்றி யரவு முடும்பும்போ—

லேறினு ரேணி பலர்." எனவரும். எயிலைப் பாசிபோல விடாது பற்றி ஏறுதலின் எயிற்பாசியாயிற்று. அடுதல், ஆடுதலென விகாரமாய் நின்றது. வேளய்பிணங்கிய மிளைசூழரணம் பாஅய்புள்ளிற் பாய்ந்த மூதுழிஞைக்குச் செய்யுள்;—"கோடுயர் வெற்பி னிலங் கண் டிரைகருதுந்—தோடுகொள் புள்ளின் றொகையேய்ப்பக்—கூடார்—முரணகத்துப் பாற முழவுத்தோண் மள்ள—ரரணகத்துப் பாய்ந்திழிந்தா ரார்த்து." எனவரும். முரணகத்தவிய முதுசினஞ்சிறந்தோரை அடலகற்றுழிஞைக்குச் செய்யுள்;—"செங்கண் மறவர் சினஞ்சொரிவாள் சென்றியங்க—வங்கண் விசும்பி னணிதிகழுந்—திங்கண்—முகத்தா ரலற முகிலுரிஞ்சுஞ் சூளி—யகத்தாரை வென்று ரமர்." எனவரும். அருமுரணதனல் அமர்வரவறியாச் செருமதிலோர் சிறப்புரைத்தபக்கத்திற்குச் செய்யுள்;—"அறியார் வயவரகத்திழிந்த பின்னு—நெறியார் நெடுமதிலு ணேரார்—மறியாங்—கிளியொடு நேராங் கிளவியார் வாட்கட்—களியுறு காமங் கலந்து." எனவரும். அகத்தோன்காலை அதிர்முரசியம்பப் புறத்தோன்வஞ் சினம் புகன்முற்றுமுதிர்வுக்குச் செய்யுள்;—"காலை முரச மதிலியம்பக் கண்கனன்று—வேலை விறல்வெய்யோ னோக்குதலு—மாலை—யடுக மடிசிலென் றம்மதிலு ளிட்டார்—தொடுகழலார் மூழை துடுப்பு." எனவரும். மேவலர்க்கடந்து வெலற்கருங்காவலொடு யானைகைக்கொண்ட யானைகைக்கோளுக்குச் செய்யுள்;—"ஏவலிகன்மறவர் வீய விகல்கடந்து—காவலும் யானையுங் கைக்கொண்டான்—மாவலான்—வம்புடை யொள்வாண் மறவர் தொழுதேத்த-வம்புடை ஞாயி லரண்." எனவரும். முற்றுவிட்டகல மற்றொருவேந்தன் வெற்றியம்படைவரூஉம் வேற்றுப்படைவரவுக்குச் செய்யுள்;—"உவனின் றுறுதுயர முய்யாமை நோக்கி—யவனென் றுலகேத்து மாண்மை—யிவனன்றி—மற்றியார் செய்வார் மழைதுஞ்சு நீளரண—முற்றியார் முற்று விட." எனவரும். எண்ணாரெயில் கழுதையேரின் உண்ணுவரகுகொள் உழுதுவித்திடுதற்குச் செய்யுள்;—"எழுதெழின் மாடத் திடமெலா நூறிக்—கழுதையேர் கையொளிவேல் கோலா—வுழுததற்பின்—வெள்வரகு கொள்வித் திடினும் விளியாதாற்—கள்விரவு தாரான் கதம்." எனவரும். புண்ணியநீரிற் புரையோரேத்த மண்ணுதல்புரிந்த வாண்மங்கலத்திற்குச் செய்யுள்;—"தீர்த்தநீர் பூவொடு பெய்து திசைவிளங்கக்—கூர்த்தவாண் மண்ணிக் கொடித்தேரான்—பேர்த்து—மிடியார் பணிதுவைப்ப விம்மதிலுள் வேட்டான்—புடையா ரறையப் புகழ்." எனவரும். கோமகனடிமலர் குறுகலர்புனைய மாமதிற்குமரியொடு மணந்தமங்கலத்திற்குச் செய்யுள்;—"எங்கண் மலர வெயிற்குமரி கூடிய-

மங்கலநாள் யாமு மகிழ்தூங்கக்—கொங்கலர்தார்ச்—செய்சுடர்ப் பூண் மன்னவன் சேவடிக்கீழ் வைகினவே—மொய்சுடர்ப்பூண் மன்னர் முடி." எனவரும். தொடர்ந்தெயில்கொண்டோன் சூழ்ம தில்வேந்தன் மடந்தையை வேண்டி மகட்பாலிகலுக்குச் செய்யுள்;- "அந்தழை யல்குலு மாடமை மென்றோளும்—பைந்தளிர் மேனி யும் பாராட்டித்—தந்தை—புறமதில் வைகும் புலம்பே தருமே— மறமதின் மன்னன் மகள்." எனவரும். தூவடிவேலவன் தொகுத்த நிதியளந்து சேவடிவணங்கத் திறைகொண்டு பெயர்தற்குச் செய் யுள்;—"கோடும் வயிரு மிசைப்பக் குழுமிளை—யூடெரிவேய வு டன்றுலாஅப்—பாடி—யுயர்ந்தோங் கரணகத் தொன்னார் பணியப்- பெயர்ந்தான் பெருந்தகையி னன்." எனவரும். பேணுமன்னர் பெருமறங்காற்றி ஆணைபோக்கி அடிப்படவிருத்தற்குச் செய்யுள்;- "ஒன்றி யவர்நா டொருவழிக் கூக்கேட்ப—வென்றி விளையா விழு மதிலோ—ரென்றும்—பருந்தார் செருமலையப் பாடி பெயரா— திருந்தா னிகன்மறவ ரேறு." எனவரும். எம்மதிலுள்ள இகலு டைவேந்தரும் அம்மதிலடியின் அடைந்த தொகைநிலைக்குச் செய் யுள்;—"நாவல் பெயரிய ஞாலத் தடியடைந்தே—யேவ லெதிரா திகல்புரிந்த—காவலர்—வின்னின்ற தானை விறல்வெய்யோற் கம் மதிலின்—முன்னின் றறிந்தார் முரண்." எனவரும். (கo)

சுoக. எப்புழை ஞாயி லேந்துநிலை யரணங்
காப்போர் நொச்சிப் பூப்புனை புகழ்ச்சியுந்
துன்னெனை வரூஉந் தூசு தாங்கி
விண்விருந் தாக விளிந்தமறப் பாசியு
மருமிளை யொடுகிடங் கழியா திகலி
யுருகெழு மறவ ருடன்றவூர்ச் செருவு
மாழ்ந்துபடு கிடங்கோ டருமிளை காத்து
வீழ்ந்த வேலோர் விறன்மேம் படுத்தலு
மதிதொடு புரிசை வாமான் கடுப்பிற்
கெதிரன்மி னென்னு மிவுளி மறமும்
வாள்வடுப் பட்டும் வடுப்படா தகத்தோர்
தோள்வடுப் படப்பகை தொலைத்தவெயிற் போருந்
துணிவுடை யடுபடைத் தொடுகழன் மறவ
னணிமணி யெயின்மிசை யழிந்த நொச்சியு
மிழிபு மேன்மே லெழுதலு மிகலி

யழிபடை யானெறிந் தழிபடை தாங்கலும்
வெம்முர ணுன்மகள் வேண்டலு மதனுக்
கம்மதி லோர்மறுத் துரைத்தலு மெனமுறை
கூறிய வொன்பதுங் குண்டகழ் மூடுத்த
வீறெயில் காத்தல் விரியெனப் படுமே.

இது முற்கூறிய உழிஞைப்பகுதி இரண்டனுட் பின்னையது இத்துணைத்துறையுடைத்தென்கின்றது.

இ - ள். எப்புழைஞாயிலேந்துநிலையரணங் காப்போர்நொச்சிப் பூப்புனைபுகழ்ச்சிமுதல் வெம்முரணுன்மகள்வேண்டலும் அதனுக்கு அம்மதிலோர் மறுத்துரைத்தல் ஈறாக முறையேகூறிய ஒன்பது துறையும் ஆழ்ந்த அகழியைப்பொருந்தின ஒப்பில்லாத எயில் காத்துக்கோடலின் விரியென்று சொல்லப்படும். எ - று.

எப்புழைஞாயில் ஏந்துநிலையரணங் காப்போர்நொச்சிப் பூப்புனைபுகழ்ச்சிக்குச் செய்யுள்;—"ஆடரவம் பூண்டா னழலுணச் சீறிய—கூடரணங் காப்போர் குழாம்புரையச்—சூடிஞ—ருச்சி மதி வழங்கு மோங்கு மதில்காப்பா—ஞெச்சி நுதிவே லவர்." எனவரும். துண்ணெனவருஉந் தூசுதாங்கி விண்விருந்தாக விளிந்தமறப் பாசிக்குச் செய்யுள்;—"பாயினர் மாயும் வகையாற் பலகாப்பு—மேயின ரேய விகன்மறவ—ராயிஞ—ரொன்றி யவரற வூர்ப்புலத் துத் தார்தாங்கி—வென்றி யமரர் விருந்து." எனவரும். அருமிளையொடுகிடங்கு அழியாதிகலி உருகெழுமறவர் உடன்ற ஊர்ச்செருவுக்குச் செய்யுள்;—"வளையும் வயிரு மொலிப்பவாள் வீசி—மிளையுங் கிடங்குஞ் சிதையத்—தளைபரிந்த-நோனர் படையிரிய நொச்சி விறன்மறவ—ரானு ரமர்விலங்கி யார்ப்பு." எனவரும். ஆழ்ந்துபடு கிடங்கோடு அருமிளைகாத்து வீழ்ந்தவேலோர் விறன்மேம்படுத்தற்குச் செய்யுள்;—"ஈண்டரில் சூழ்ந்த விளையு மெரிமலர்க்—காண்டகு நீள்கிடங்குங் காப்பாராய்—வேண்டார்—மடங்க லனைய—மறவேலோர் தத்த—முடம்பொடு காவ லுயிர்." எனவரும். மதிதொடுபுரிசை வாமான்கடுப்பிற்கு எதிரன்மினென்னும் இவுளிமறத்திற்குச் செய்யுள்;—"தாங்கன்மின் றாங்கன்மின் றானை விறன்மறவி—ரோங்கன் மதிலு ளொருதனிமா—ஞாங்கர்—மயிரணியப் பொங்கி மழைபோன்று மாற்ற—ருயிருணிய வோடி வரும்." எனவரும். வாள்வடுப்பட்டும் வடுப்படாதகத்தோர் தோள்வடுப்படப் பகை தொலைத்த எயிற்போர்க்குச் செய்யுள்;—"மிகத்தாய செங்கு

ருதி மேவரு மார்பி—னுகத்தா முயங்கியக் கண்ணு—மகத்தார்—புறத்திடைப் போதந் தடல்புரிந்தார் பொங்கி—மறத்திடை மான மேல் கொண்டு." எனவரும். துணிவுடையடுபடைத் தொடுகழன்ம றவன் அணிமணியெயின்மிசை அழிந்தநொச்சிக்குச் செய்யுள்;—"அகத்தன வார்கழ ஞேன்ரு ளரணின்—புறத்தன போரெழிற் றிண்டோ—ளுறத்தழீஇத்—தோட்குரிமை பெற்ற துணைவளையார் பாராட்ட—வாட்குரிசில் வானுலகி ஞன்." எனவரும். இழிபு மேன்மேல் எழுதலுமிகலி அழிபடையானெறிந்து அழிபடைதாங் கற்குச் செய்யுள்;-"பரிசை பலகடந்து பற்ரு ரெதிர்ந்தா—ரெரிசெயிகலரணங் கொண்மார்—புரிசை—யகத்தடி யுய்யாமை யஞ்சுடர்வா ளோச்சி—மிகத்தடிந்தார் மேனின் றவர்." எனவரும். வெம்மு ரணுன்மகள் வேண்டலும் அதனுக்கு அம்மதிலோர்மறுத்து உரைத் தபக்கத்திற்குச் செய்யுள்;—"ஒள்வாண் மறவ ருருத்தெழுந் தும்பர் நாட்—கள்வார் நறுங்கோதை காரணமாக்—கொள்வான்—மருங் கெண்ணி வந்தார் மழகளிற்றின் கோடிக்-கருங்கண்ணி வெண்கட் டிற் கால்." எனவரும். (கக)

சுகo. தும்பை தானே நெய்தலது புறனே
மைந்துபொரு ளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப.

இது தும்பைத்திணை நெய்தற்றிணைக்குப் புறனென்பதூஉம் அதன் பொருளுங் கூறுகின்றது.

இ-ள். மேற்கூறிய புறத்திணை ஏழனுட் தும்பைத்திணை முற்கூறிய அகத்திணை ஏழனுள் நெய்தற்றிணைக்குப் புறனும்; அது தனது வலியினை உலகம் மீக்கூறுதலே தனக்குப் பெறும்பொருளாகக் கருதி மேற்சென்ற வேந்தனை அங்ஙனம் மாற்றுவேந்தனும் அவன்கருதிய மைந்தே தான்பெறுபொருளாக எதிர்சென்று தலைமையைத் தீர்க்குஞ் சிறப்பினையுடைத்தென்று சொல்லுவர் ஆசிரியர். எ-று.

புறத்திணை பலவற்றுட் 'தும்பை தானே நெய்தலது புறனே' என இதனைப் பிரித்தோதினர், நெய்தற்கு உரிய பெருமணலுலகம் போலக் காடும் மலையுங் கழனியுமல்லாத களரும் மணலும் பொருகளமாக வேண்டுதலானும், பெரும்பொழுது வரைவின்மையானும், எற்பாடு போர்த்தொழின்முடியுங் காலமாதலானும், இரக்கமுந் தலைமகட்கே பெரும்பான்மை உளதாயவாறுபோலக் கணவனை இழந்

தார்க்கன்றி வீரர்க்கு இரக்கமின்மையானும், அவ்வீரக்குறிப்பின் அருள்பற்றி ஒருவர் ஒருவரை நோக்கிப் போரின்கண் இரங்குபவா கலானும், ஒருவரும் ஒழியாமற் பட்டுழிக் கண்டார் இரங்குபவாகலானும், பிறகாரணங்களானுமென்பது. எனவே, தும்பைத்திணை நெய்தற்றிணைக்குப் புறனென்றல் ஆணைகூறலன்முயிற்று. இதனைமைந்துபொருளாகப் பொருதலின் மண் இடையீடாகப் பொரும்வஞ்சிக்கும் மதில் இடையீடாகப் பொரும் உழிஞைக்கும் பிற்கூறினர். ()

சுகக. கருங்கழல் வேந்தன் செங்களங் கருதிப்
பசுந்துணர்த் தும்பை வெண்பூச் சூடலுஞ்
சூடிய பின்னர்த் தொடுகழல் வயவர்க்கு
நாடுமுதல் கொடுத்த பீடுபெறு மரவமுந்
தாஞ்செருப் புரியாத் தன்மையா லவரை
யோம்படுத் துயர்த்திய தானை மறமும்
பூம்பொழிற் காவல் பூண்டமன் னவனை
யோம்படுத் துரைத்த மற்றதன் பகுதியும்
வண்ணவேற் றானை மறமிகுத் துரையா
வெண்ணல ரழிபினுக் கிரங்கிய பக்கமும்
யானை மறத்தொடு குதிரை மறமு
முன்னெழு வயப்படை தாங்குவல் யானென
மன்னவற் குரைத்த தூசி நிலையும்
வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி யொருவன்
றன்மீண் டெறிந்த மற்றதன் பகுதியு
முறிமலர் நறுந்தார் மொய்கழல் வேந்தன்
செறிமணித் தேர்மறஞ் சிறந்தமை கூறலு
மையல் யானை யெறிந்துமாய்ந் தோர்க்குக்
கைவல்யாழ்ப் பாணர் கடன்முறை கழித்தலு
மிருவர் தலைவர் தபுதிக் கண்ணும்
பொருபடை யகலாப் போர்புரி நிலையுங்
குருதிவே லொருவன் கூழை தாங்கி
யிரிபடைப் பின்னின்ற வெருமை மறமும்
வேற்படை களிற்றொடு போக்கிமெய் வலியி
னேற்றுடன் றடரு மேம வெருமையு
நேரலர் பனிப்ப நெஞ்சிடைக் குளித்த

கூரயில் பறித்துக் கைக்கொண்ட நூழிலு
மாறிரு வேந்தன் வயப்படை யுடைய
வேறிரித் தாடிய நூழி லாட்டு
மின்னவிர் கழலார் வேந்தன் வெஃறோர்
முன்ன ராடிய முன்றேர்க் குரவையு
மன்னரொடு விறலிய ராண்டகை நெடுந்தேர்ப்
பின்ன ராடிய பின்றேர்க் குரவையு
மன்னவ னூரு மறமிகு மணித்தேர்ப்
பின்னு முன்னும் பேயாடு குரவையு
மொளிற்றெஃ கம்பட வீழ்ந்தவொண் மருப்பிற்
களிற்றுடன் கண்படு களிற்றுட னிலையும்
வடிவாள் விதிரா வயவர் மன்னவ
னுடனுட் டயர்ந்த வொள்வா ளமலையு
மிருபாற் படையு மேத்த நெடுந்தகை
பொருபோர்ப் பொலிந்த தானை நிலையுங்
கணையும் வேலுந் துணையுற மொய்த்தலிற்
சென்ற வுயிரி னின்ற யாக்கை
யிருநிலந் தீண்டா வருவரு நிலையு
மருவரை மார்புதம் மலர்முலை குளிப்பத்
தெரிவையர் முயங்கிய சிங்கார நிலையும்
வாள்வாய்த் திட்ட வடுவாழ் யாக்கைக்
கேள்கண்டு கலுழ்ந்த வுவகைக் கலுழ்ச்சியுந்
தம்முடை யிறைவன் விசும்படைந் தானென
வெம்முர ணுயிர் வேள்வி வேட்டலுங்
காய்கதிர் நெடுவேற் கணவனைக் காணிய
வாயிழை சென்ற பக்கமு மதாஅன்
றிருபெரு வேந்தர் தாமுஞ் சுற்றமு
மொருவரு மொழியாத் தொகைநிலை யுளப்படச்
செப்பிய நாலேழ் திறத்தன வெல்லாந்
துப்பமை தும்பைத் துறையெனப் படுமே.

இது முற்கூறிய தும்பைத்திணை இத்துணைத் துறையுடைத்
தென்கின்றது.

இ - ள். கருங்கழல்வேந்தன் செங்களங்கருதிப் பசுந்துணர்த்தும்பை வெண்பூச்சூடல் முதலியனவும் ஈருகக் கிடந்த இருபெருவேந்தர் தாமுஞ்சுற்றமும் ஒருவருமொழியாத் தொகைநிலையுங் கூடச் சொல்லப்பட்ட இருபத்தெட்டுவகையும் வலியமைந்த தும்பைத்திணையின் துறையென்று சொல்லப்படும். எ - று.

கருங்கழல்வேந்தன் செங்களங்கருதிப் பசுந்துணர்த்தும்பை வெண்பூச்சூடற்குச் செய்யுள்;—"கார்கருதி நின்றதிருங் கௌவை விழுப்பணையான்—சோர்குருதி சூழா நிலநனைப்பப்—போர்கருதித்—துப்புடைத் தும்பை மலைந்தான் றுகளறுசீர்—வெப்புடைத் தானையெம் வேந்து." எனவரும். சூடியபின்னர்த் தொடுகழல்வயவர்க்கு நாடுமுதல்கொடுத்த பீடுபெறும் அரவத்திற்குச் செய்யுள்;— "வெல்பொறியு நாடும் விழுப்பொருளுந் தண்ணடையுங்—கொல்களிறு மாவுங் கொடுத்தளித்தான்—பல்புரவி—நன்மணித் திண்டேர் நயவார் தலைபணிப்பப்—பன்மணிப் பூணான் படைக்கு." எனவரும். தாஞ்செருப்புரியாத் தன்மையாலவரை யோம்படுத்துயர்த்திய தானைமறத்திற்குச் செய்யுள்;—"கழுதார் பறந்தலைக் கண்ணுற்றுத் தம்மு—ளிழுதார்வேற் றானை யிகலிற்—பழுதாஞ்—செயிர்காவல் பூண்டொழுகுஞ் செங்கோலார் செல்வ—முயிர்காவ லென்னுமுரை." எனவரும். பூம்பொழிற் காவல் பூண்டமன்னவனை ஓம்படுத்துரைத்த மற்றதன்பகுதிக்குச் செய்யுள்;—"வயிர்மேல் வளைநரல வைவேலும் வாளுஞ்—செயிர்மேற் கனல்விழிப்பச் சீறி—யுயிர்மேற்—பலகழியு மேனும் பரிமான்றேர் மன்னர்க்—குலகழியு மோர்த்துச் செயின்." எனவரும். வண்ணவேற்றானை மறமிகுத்துரையா எண்ணலரழிபினுக்கு இரங்கியபக்கத்திற்குச் செய்யுள்;— "மின்னூர் சினஞ்சொரிவேன் மீளிக் கடற்றானை—யொன்னார் நடுங்க வுலாய்நிமிரி—னென்னுங்கொ-லாழித்தேர் வெல்புரவி யண்ணன் மதயானைப்—பாழித்தோண் மன்னர் படை." எனவரும். யானைமறத்திற்குச் செய்யுள்;—"அடக்கருந் தானை யலங்குதார் மன்னர்—விடக்கு முயிரு மிசையக்—கடற்படையுட்—பேயுமெருவையுங் கூற்றுந்தன் பின்படரக்—காயுங் கழலான் களிறு." எனவரும். குதிரைமறத்திற்குச் செய்யுள்;—"குந்தங் கொடுவிற் குருதிவேல் கூடாதார்—வந்த வகையறியா வாளமருள்—வெந்திற—லார்கழன் மன்ன னலங்குளைமா வெஞ்சிலை—வார்கணையின் முந்திவரும்." எனவரும். முன்னெழுவயப்படை தாங்குவல்யானென மன்னவற்குரைத்த தூசிநிலைக்குச் செய்யுள்;—"உறுசுடர் வாளோ டொருகால் விலங்கிற்—சிறுசுடர்முற் பேரிருளாங் கண்டா—

யெறிசுடர்வேற்—றேங்குலாம் பூந்தெரியற் றேர்வேந்தே நின்னொடு—பாங்கலா மன்னர் படை." எனவரும். வேன்மிகுவேந்தனை மொய்த்தவழியொருவன் தான்மீண்டெறிந்த மற்றதன்பகுதிக்குச் செய்யுள்;—"காலான் மயங்கிக் கதிர்மறைத்த கார்முகில்போல்—வேலான்கை வேல்விட வீழ்ந்தனவே—தோலா—விலைபுனை தண்டா ரிறைவன்மேல் வந்த—மலைபுரை யானை மறிந்து." எனவரும். முறிமலர்நறுந்தார் மொய்கழல்வேந்தன் செறிமணித்தேர்மறஞ் சிறந்தமைகூறற்குச் செய்யுள்;-"செருமலி வெங்களத்துச் செங்குருதி வெள்ள—மருமுர ணாழி தொடர—வருமரோ—கட்டார் கமழ்தெரியற் காவலன் காமர்தே—ரொட்டார் புறத்தின்மேலூர்ந்து." எனவரும். மையல்யானை எறிந்துமாய்ந்தோர்க்குக் கைவல்யாழ்ப்பாணர் கடன்முறைகழித்தற்குச் செய்யுள்;—"தளரியற் றாய்புதல்வர் தாமுண ராமைக்—களரிக் கனன்முழங்க மூட்டி—விளரிப்பண்—கண்ணினார் பாணர் களிறெறிந்து வீழ்ந்தார்க்கு—விண்ணினார் செய்தார் விருந்து." எனவரும். இருவர்தலைவர் தபுதிக்கண்ணும் பொருபடையகலாப் போர்புரிநிலைக்குச் செய்யுள்;—"காய்ந்து கடுங்களிறு கண்கனலக் கைகூடி—வேந்த ரிருவரும் விண்படர—வேந்து—பொருபடை மின்னப் புறங்கொடா பொங்கி—யிருபடையு நீங்கா விகல்." எனவரும். குருதிவேலொருவன் கூழைதாங்கி இரிபடைப்பின்னின்ற எருமைமறத்திற்குச் செய்யுள்;—"கடுங்கண் மறவன் கனல்விழியாச் சீறி—நெடுங்கைப் பிணத்திடையே நின்றா—னடுங்கமரு—ளாள்வெள்ளம் போகவும் போகான்கை வேலூன்றி—வாள்வெள்ளந் தன்மேல் வர." எனவரும். எருமைபோலச் சிறக்கணித்துநிற்றலின் எருமைமறமாயிற்று. வேற்படைகளிற்றொடும் போக்கிமெய்வலியின் ஏற்றுடன்றடரும் ஏமவெருமைக்குச் செய்யுள்;—"மருப்புத்தோ ளாக மதவிடையிற் சீறிச்—செருப்புகன்று செங்கண் மறவ—னெருப்பிமையாக்—கைக்கொண்ட வெஃகங் கடுங்களிற்றின் மேற்போக்கி—மெய்க்கொண்டான் பின்னரு மீட்டு." எனவரும். நேரலர்பணிப்ப நெஞ்சிடைக்குளித்த கூரெயில்பறித்துக் கைக்கொண்டநூழிற்குச் செய்யுள்;—"மொய்யகத்து மன்னர் முரணினி யென்னுங்கொல்—கையகத்துக் கொண்டான் கழல்விடலை—வெய்ய—விடுசுடர் சிந்தி விரையகலம் போழ்ந்த—படுசுட ரெஃகம் பறித்து." எனவரும். நூழில், கொன்றுகுவித்தல். மாறிருவேந்தன் வயப்படையுடைய வேறிரித்தாடிய நூழிலாட்டுக்குச் செய்யுள்;—"ஆடலமர்ந்தா னமர்வெய்யோன் வீழ்குடர்—சூடன் மலிந்த சுழல்கட்பேய்—மீடன்—மறந்தவேன் ஞாட்பின் மலைந்தவர் மார்பந்—திறந்தவேல் கையிற்

றிரித்து." எனவரும். மின்னவிர்கழலார் வேந்தன்வெஃறேர் முன்னராடிய முன்றேர்க்குரவைக்குச் செய்யுள்;—"ஆறு வயவர்முன்னாட வமர்க்களத்து—வானூர்மின் னுகி வழிநடங்கு—நோனக்—கழுமணிப் பைம்பூட் கழல்வெய்யோ னூருங்—குழுமணித் திண்டேர்க் கொடி." எனவரும். அன்னரொடுவிறலிய ராண்டகைநெடுந்தேர்ப் பின்னராடிய பின்றேர்க்குரவைக்குச் செய்யுள்;—"கிளையாய்ந்து பண்ணிய கேள்வியாழ்ப் பாணும்—வளையா வயவரும் பின்னுக்—கொளையாய்ந்—தசைவிளங்கும் பாடலோ டாட வருமே—திசைவிளங்குந் தானையான் றேர்." எனவரும். கேள்வி, சுருதி. மன்னவ னூரும் மறமிகுமணித்தேர்ப் பின்னுமுன்னும் பேயாடுகுரவைக்குச் செய்யுள்;—"முன்னரும் பின்னரு மூரிக் கடற்றானை—மன்ன னெடுந்தேர் மறனேத்தி—யொன்னார்—நிணங்கொள்பேழ் வாய நிழல்போ னுடங்கிக்—கணங்கொள்பே யாடுங் களித்து." எனவரும். ஒளிற்றெஃகம்பட வீழ்ந்தவொண்மருப்பிற் களிற்றுடன்கண்படு களிற்றுடனிலைக்குச் செய்யுள்;—"இறுவரை வீழ வியக்கற் றவிந்த—தறுகட் டகையரிமாப் போன்றான்—சிறுகட்-பெருங்கைக் களிறெறிந்து பின்னதன்கீழ்ப் பட்ட—கருங்கழற் செல்வே லவன்." எனவரும். வடிவாள்விதிரா வயவர்மன்னவன் உடனாட்டயர்ந்த ஒள்வாளமலைக்குச் செய்யுள்;—"வாளை பிறழுங் கயங்கடுப்ப வந்தடையா—ராளமர் வென்றி யடுகளத்துத்—தோள் பெயராக்—காய்ந்தடு துப்பிற் கழன்மறவ ராடினார்—வேந்தொடு வெள்வாள் விதிர்த்து." எனவரும். இருபாற்படையும் ஏத்தநெடுந்தகை பொருபோர்ப்பொலிந்த தானைநிலைக்குச் செய்யுள்;—"நேரார் படையி னிலைமை நெடுந்தகை—யோரா னுறைகழியா னொள்வாளுந்—தேரார்க்கும்—வெம்பரிமா வூர்ந்தார்க்கும் வெல்களிற்றின் மேலார்க்குங்—கம்பமாய் நின்றான் களத்து." எனவரும். கணையும்வேலுந் துணையுறமொய்த்தலிற் சென்றவுயிரின் நின்றயாக்கை இருநிலந்தீண்டா வெருவருநிலைக்குச் செய்யுள்;—"வெங்கண் முரசதிரும் வேலமருள் வில்லுதைப்ப—வெங்கு மருமத்திடைகுளிப்பச்—செங்கட்.—புலவா னெடுந்தகை பூம்பொழிலாகங்—கலவாமற் காத்த கணை." எனவரும். அருவரைமார்புதம் அலர்முலைகுளிப்பத் தெரிவையர்முயங்கிய சிங்காரநிலைக்குச் செய்யுள்;—"எங்கணவ னெங்கணவ னென்பா ரிகல்வாடத்—தங்கணவன் றார்தம் முலைமுகப்ப—வெங்கணைசேர்—புண்ணுடை மார்பம் பொருகளத்துப் புல்லினார்—நுண்ணிடைப்பே ரல்கு லார்." எனவரும். வாள்வாய்த்திட்ட வடுவொழ்யாக்கைக் கேள்கண்டுகலுழ்ந்த உவகைக்கலுழ்ச்சிக்குச் செய்யுள்;—"வெந்தொழிற் கூற்

றழு நாணின்று வெங்களத்து—வந்த மறவர்கை வாடமிப்பப்—பைந்தொடி—யாடரிமா வன்னான் கிடப்ப வகத்துவகை—யோட ரிக்கண் ணீரா யுக." எனவரும். தம்முடையிறைவன் விசும்படைந் தானென வெம்முரணானுயிர்வேள்விவேட்டற்குச் செய்யுள்;—"வான மிறைவன் படர்ந்தென வாடுடுப்பா—மானநெய் யாக மறம் விறகாத்—தேனிமிருங்—கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோன் வாளம—ரொள்ளெரியின் வேட்டா னுயிர்." எனவரும். காய்கதிர் நெடுவேற் கணவனைக்காணிய ஆயிழைசென்றபக்கத்திற்குச் செய்யுள்;—"கற்பின் விழுமிய தில்லைக் கடையிறந்—திற்பிறப்பு நாணு மிடையொழிய—நற்போ—ரணங்கிய வெங்களத் தாருயிரைக் காண்பான்—வணங்கிடை தானே வரும்." எனவரும். இருபெரு வேந்தர் தாமுஞ்சுற்றமும் ஒருவருமொழியாத் தொகைநிலைக்குச் செய்யுள்;—"மண்டமர்த் திண்டோண் மறங்கடைஇ மண்புலம்பக்-கண்டிரள்வேன் மன்னர் களம்பட்டார்—பெண்டிர்—கடிதெழு செந்தீக் கழுமினா ரின்னுங்—கொடிதேகா ணூர்நின்று கூற்று." எனவரும். கண்டிரள்வேல், காம்பு-கண் திரண்டவேல். (கரு)

சுகஉ. **வா**கை தானே பாலையது புறனே
தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்த லென்ப.

இது வாகைத்திணை பாலைத்திணைக்குப் புறனென்பதூஉம் அதன் பொருளுங் கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய புறத்திணை ஏழனுள் வாகைத்திணை முற் கூறிய அகத்திணை ஏழனுட் பாலைத்திணைக்குப் புறனும்; அது கே டில்லாத கோட்பாட்டினையுடைய தத்தமக்குள்ள இயல்பை இரு வேறுபட மிகுதிப்படுத்தல். எ - று.

புறத்திணைபலவற்றுள் 'வாகை தானே பாலையது புறனே' என இதனைப் பிரித்தோதினார், புணர்ச்சியினீங்கி இல்லறம் நிகழ்த் திப் புகழெய்துதற்குப் பிரியுமாறுபோலச் சுற்றத்தொடர்ச்சியினீங்கி அறப்போர்செய்து துறக்கம்பெறுங் கருத்தினாற் சேறலானும், அன்றியும் பாலை இயற்கைவகையானன்றிச் செயற்கைவகையால் நால்வகைநிலமும்பற்றி நிலம்பெறுமாறுபோல முற்கூறிய புறத் திணை நான்கும்பற்றி வாகைத்திணை நிகழ்தலானுமென்பது. என வே, வாகைத்திணை பாலைத்திணைக்குப் புறனென்றல் ஆணைகூற லன்றாயிற்று. (கச)

சூகூ. அலைகடற் றானை யரசட் டிறையோ
னிகல்புனை வாகை சூடலு மிகன்றோர்
வெண்கண்ணி யொடுகெருங் கழல்செங் கச்சினிட
புண்டவிர்ந் தாமெனப் புனைதரு மரவமு
மைவகை மரபி னரச வாகையு
மொய்கழ லான்பதி முரசுநிலை யுரைத்தலு
மன்னனை யுழவனெனு மறக்கள வழியு
மன்னவ னணங்கா ரடுகளம் வேட்டலும்
வென்ற வேந்தன் மீளியந் தேர்முன்
னின்றுபே யாட னிகழ்த்திய குரவையும்
பெய்கழல் வேந்தன் பிறங்கொலித் தேர்ப்பின்
மொய்வளை விறலியர் வயவரோ டாடலு
மறுவகைப் பட்ட பார்ப்பன வாகையு
மிருமூன்று மரபி னேனோர் வாகையும்
புகழொடு பெருமையு நோக்கி யாரையு
மிகழே லென்ற பொருந வாகையு
முக்கால நிகழ்வு முறையுளி யறியுந்
தக்கோ னிலைபுக லறிவன் வாகையு
நாலிரு வழக்கிற் றாபத வாகையுங்
கூதிர் வாடை யென்றிரு பாசறைக்
காதலி னொன்றிக் கண்ணிய நிலைமையுந்
தண்ணளி பெருகத் தரையகம் புரக்கு
மண்ணலியல் புரைத்த வரச முல்லையு
நண்புறு பொருட்டா நடுவுநிலை யரசற்குப்
பண்புறச் சொல்லும் பார்ப்பன முல்லையு
மெட்டுவகை நுதலிய வவைய முல்லையும்
பனியும் வெயிலுங் கூதிரு மயர்வுந்
துனியில் கொள்கையொடு நோன்மை யெய்தித்
தணிவற் றகழ்ந்த கணிவன் முல்லையு
மேதமி லாடவர்க் கன்றி யிகன்மறம்
பேதையர்க் கும்புகன் மூதின் முல்லையு
மருஞ்சமம் வழிவழி யாற்றியே றுண்ட

விருங்குடி மறம்புக லேஹுண் முல்லையு
மில்லும் பதியு மியல்புங் கூறி
வல்லோனை மிகுத்த வல்லாண் முல்லையுந்
தொடுகட லுலகினைத் துளங்கா திறைதன்
கடனெனக் காத்த காவன் முல்லையுந்
தக்கன பிறபிற சாற்றுமக் கூற்றொடு
மிக்ககள மரசுகொள் பேராண் முல்லையும்
வெள்வாள் வேந்தன் வேண்டிய தீயவுங்
கொள்ளாது மறவன் கொதித்தமற முல்லையுங்
குடைபுகழ் முல்லையுங் கண்படை நிலையு
மடல்கெழு மறவ ரவிப்பலி கொடுத்தலும்
வான்றோய் புகழொடு வயங்குமொரு நிலைமைச்
சான்றோர் நெறிபுகல் சால்பு முல்லையு
மலிவய லுழவனை வறுமைதீர் பெருவளம்
பொலிகெனக் கிணைவன் புகழ்ந்த களவழியு
மெய்யில் வையகத்து விழைவினை யறுத்துப்
பொய்யி றத்துவப் பொருளொடு புகறலுங்
கவ்வைநோ யாக்கை கழியுமுன் னுலகத்
தவ்விய னேக்கி யருளொடு நீங்கலு
மென்றவெண் ணன்கு மியம்பிய வாகைக்
கொன்றிய துறையென வுணர்ந்தனர் கொளலே.

இது முற்கூறிய வாகைத்திணை இத்துணைத்துறையுடைத் தென்கின்றது.

இ - ள். அலைகடற்றானை அரசட்டிறையோன் இகல்புனைவாகைசூடல் முதலாய் ஈறாகிய கவ்வைநோயாக்கை கழியுமுன்னுலகத்து அவ்வியனேக்கி அருளொடுநீங்கலுமென்று சொல்லப்பட்ட முப்பத்திரண்டும் மேற்கூறிய வாகைத்திணைக்குப் பொருந்தியதுறையென அறிந்துகொள்க. எ - று.

அலைகடற்றானை அரசட்டிறையோன் இகல்புனைவாகைசூடற்குச் செய்யுள்;—"சூடினான் வாகை சுடர்த்தெரியல் சூடுதலும்—பாடினார் வெல்புகழ் பல்புலவர்—கூடா—ருடல்வே லழுவத் தொளிதிகழும் பைம்பூ—ணடல்வேந்த னட்டார்த் தரசு." எனவரும்.

இகன்றோர் வெண்கண்ணியொடு கருங்கழல் செங்கச்சு இனிப்புண் டவிர்ந்தாமெனப் புனைதரும் அரவத்திற்குச் செய்யுள்;—"அனைய வமரு ளயில்போழ் விழுப்புண்—ணினைய வினிக்கவலை யில்லைப்— புனைக—வழலோ டிமைக்கு மணங்குடைவாண் மைந்தர்—கழ லோடு பூங்கண்ணி கச்சு." எனவரும். ஐவகைமரபின் அரசவா கைக்குச் செய்யுள்;—"காவ லமைந்தான் கடலுலகங் காவலா— லோவ லறியா துயிர்க்குவகை—மேவருஞ்சீ—ரைந்தொழி ழுன் மறை முத்தீ யிருபிறப்பு—வெந்திறற் றண்ணளியெம் வேந்து." எனவரும். ஐந்தொழில், ஓதல் வேட்டல் ஈதல் படைக்கலம்பயி றல் பல்லுயிரோம்பல். மொய்கழலான்பதி முரசுநிலையுரைத்தற்குச் செய்யுள்;—"மதியேர் நெடுங்குடை மன்னர் பணிந்து—புதிய புகழ் மாலை வேய—நிதியம்—வழங்குந் தடக்கையான் வான்றோய் நக ருண்—முழங்கு மதிரு முரசு." எனவரும். மன்னனையுழவனெனும் மறக்களவழிக்குச் செய்யுள்;—"அஞ்சுவருந் தானை யமரென்னு நீள்வயலுள்—வெஞ்சினம் வித்திப் புகழ்விளைக்குஞ்—செஞ்சுடர் வேற்—பைங்கட் பணைத்தாட் பகட்டுழவ னல்கலா—னெங்கட் கடையா விடர்." எனவரும். அன்னவன் அணங்கார் அடுகளம் வேட்டற்குச் செய்யுள்;—"பிடித்தாடி யன்ன பிறழ்பற்பே யாரக்- கொடித்தானை மன்னன் கொடுத்தான்—முடித்தலைத்—தோளொடு வீழ்ந்த தொடிக்கை துடுப்பாக—மூளையஞ் சோற்றை முகந்து." எனவரும். பிடித்தாடி, பலு. வென்றவேந்தன் மீளியந்தேர்முன் நின்றுபேயாடல் நிகழ்த்தியகுரவைக்குச் செய்யுள்;—"உலவா வளஞ்செய்தா னூழிவாழ் கென்று—புலவாய புன்றலைப்பே யா டுங்—கலவா—வரசதிர நூறி யடுகளம் வேட்டான்—முரசதிர வென்றதேர் முன்." எனவரும். பெய்கழல்வேந்தன் பிறங்கொலித் தேர்ப்பின் மொய்வளைவிறலியர் வயவரோடாடற்குச் செய்யுள்;— "வஞ்சமில் கோலானை வாழ்த்தி வயவரு—மஞ்சொல் விறலியரு மாடுபவே—வெஞ்சமத்துக்—குன்றே மழகளிறுங் கூந்தற் பிடியும் போற்—பின்றேர்க் குரவை பிணைந்து." எனவரும். அறுவகைப் பட்ட பார்ப்பனவாகைக்குச் செய்யுள்;—"ஓதங் கரைதவழ்நீர் வேலி யுலகினில்—வேதங் கரைகண்டான் வீற்றிருக்கு—மேதஞ்- சுடுசுடர் தானுகிச் சொல்லவே வீழ்ந்த-விடுசுடர் வேள்வி யகத்து." எனவரும். அறுவகையாவன, ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட் பித்தல் ஈதல் ஏற்றல் என இவை. இருமூன்றுமரபின் ஏனோர்வா கை இரண்டனுள் வாணிகவாகைக்குச் செய்யுள்;—"உழுது பயன் கொண் டொலிநிரை யோம்பிப்—பழுதிலாப் பண்டம் பகர்ந்து— முழுதுணர—வோதி யழல்வழிப்பட் டோம்பாத வீகையா—னாதி

வணிகர்க் கரசு." எனவரும். வேளாண்வாகைக்குச் செய்யுள்;—"மூவரு நெஞ்சமர முற்றி யவரவ—ரேவ லெதிர்கொண்டு மீண்டுரையா—னேவல்—வழுவான் வழிநின்று வண்டார் வயலு—ளுழுவா னுலகிற் குயிர்." எனவரும். புகழொடுபெருமைநோக்கி யாரையுமிகழேலென்ற பொருநவாகைக்குச் செய்யுள்;—"வெள்ளம்போருனை வியந்து விரவாரை—யெள்ளி யுணர்த லியல்பன்று—தெள்ளியா—ராறுமே லாறியபி னன்றித்தங் கைக்கொள்ளார்—நீறுமேற் பூத்த நெருப்பு." எனவரும். முக்காலநிகழ்வு முறையுளியறியுந் தக்கோனிலைபுகல் அறிவன்வாகைக்குச் செய்யுள்;—"இம்மூவுலகி னிருள்கடியு மாய்கதிர்போ—லம்மூன்று முற்ற வறிதலாற்—றம்மி—னுறழா மயங்கி யுறழினு மென்றும்—பிறழா பெரியார் வாய்ச் சொல்." எனவரும். உறழாமயங்கியுறழ்தலாவது, பால்புளித்தலும் பகலிருளலும் நால்வேதநெறிதவறுதலும் முதலியவாம். நாலிருவழக்கிற் தாபதவாகைக்குச் செய்யுள்;—"நீர்பலகான் மூழ்கி நிலத்தசைஇத் தோலுடையாச்—சோர்சடை தாழச் சுடரோம்பி—யூரடையார்—கானகத்த கொண்டு கடவுள் விருந்தோம்பல்—வானகத் துய்க்கும் வழி." எனவரும். கூதிர்வாடையென்றிருபாசறைக் காதலினொன்றிக்கண்ணியநிலைமை இரண்டனுட் கூதிர்ப்பாசறைக்குச் செய்யுள்;—"கவலை மறுகிற் கடுங்கண் மறவ—ருவலைசெய் கூரை யொடுங்கத்—துவலைசெய்—கூதிர் நலியவு முள்ளான் கொடித்தேரான்-மூதின் மடவாண் முயக்கு." எனவரும். உவலை, தழை. வாடைப்பாசறைக்குச் செய்யுள்;—"வாடை நலிய வடிக்கண்ணோடோணசைஇ—யோடை மழகளிற்று னுள்ளான்கொல்—கோடன்—முகையோ டலமர முற்றெரிபோற் பொங்கிப்—பகையோடு பாசறையு ளான்." எனவரும். தண்ணளிபெருகத் தரையகம்புரக்கும் அண்ணலியல்புரைத்த அரசமுல்லைக்குச் செய்யுள்;—"செயிர்க்க ணிகழாது செங்கோ லுயரி—மயிர்க்கண் முரச முழங்க—வுயிர்க்கெல்லா—நாவ லகலிடத்து ஞாயிற் றனையனாய்க்—காவலன் சேறல் கடன்." எனவரும். முயற்சியாற் பெற்ற வென்றியை வாகையெனவும் இயல்பாகப்பெற்ற வென்றியை முல்லையெனவுங் கூறுபவாகலின் இவரும் வாகையென்றும் முல்லையென்றுங் கூறினர். நண்புறுபொருட்டாய் நடுவுநிலையரசற்குப் பண்புறச்சொல்லும் பார்ப்பனமுல்லைக்குச் செய்யுள்;—"ஒல்லெனீர் ஞாலத் துணர்வோ விழுமிதே—நல்லிசை முச்செந்தீ நான்மறையோன்—செல்லலும்—வென்றன்றி மீளா விறல்வேந்தர் வெம்பகை-யென்றன்றி மீண்ட திலர்." எனவரும். எட்டுவகைநுதலிய அவையமுல்லைக்குச் செய்யுள்;—"தொடைவிடை யூழாத் தொடைவிடை துன்

னித்—தொடைவிடை யூழிவை தோலாத்—தொடைவேட்—டழி படை லாற்ற லறிமுறையேன் றெட்டின்—வழிபடர்தல் வல்ல தவை.'' எனவரும். எட்டாவன "குடிப்பிறப்புக் கல்வி குணம் வாய்மை தூய்மை—நடுச்சொல்லு நல்லணி யாக்கங்—கெடுக்கு—மழுக்கா றவாவின்மை யவ்விரண்டோ டெட்டு—மிழுக்கா வவை யின்க ணெட்டு.'' என்பன. பனியும் வெயிலுங் கூதிரும் அயர்வுந் துனியில்கொள்கையொடு நோன்மையெய்தித் தணிவற்றகழ்ந்த கணிவன்முல்லைக்குச் செய்யுள்;—"புரிவின்றி யாக்கைபோற் போற் றுவ போற்றிப்—பரிவின்றிப் பட்டாங் கறியத்—திரிவின்றி—விண்ணிவ் வுலகம் விளக்கும் விளைவெல்லாங்—கண்ணி யுரைப் பான் கணி.'' எனவரும். ஏதமிலாடவர்க் கன்றியிகன்மறம் பேதை யர்க்கும்புகன் மூதின்முல்லைக்குச் செய்யுள்;—"வந்த படைநோ னாள் வாயின் முலைபறித்து—வெந்திற லெஃக மிறைக்கொளீஇ—முந்தை—முதல்வர்கற் றூன்காட்டி மூதின் மடவாள்—புதல்வனைச் செல்கென்றாள் போர்க்கு.'' எனவரும். அருஞ்சமம்வழிவழி ஆற் றியேறுண்ட இருங்குடிமறம்புகல் ஏறாண்முல்லைக்குச் செய்யுள்;—"கன்னின்றா னெந்தை கணவன் களம்பட்டான்—முன்னின்று மொய்யவிந்தா ரென்னையர்—பின்னின்று—கைபோய்க் கணையு தைப்பக் காவலன்றன் மேலோடி—யெய்போற் கிடந்தானென் னேறு.'' எனவரும். இல்லும்பதியும் இயல்புங்கூறி வல்லோனைமி குத்த வல்லாண்முல்லைக்குச் செய்யுள்;—"வின்முன் கணைதெரியும் வேட்டைச் சிறுசிறாஅர்—முன்முன் முயலுகளு முன்றிற்றே—மன் முன்—வரைமார்பின் வேல்குளிப்ப வாளழுவந் தாங்கி—யுரை மாலை சூடினா னூர்.'' எனவரும். தொடுகடலுலகினைத் துளங்கா திறைதன் கடனெனக்காத்த காவன்முல்லைக்குச் செய்யுள்;—"பெ ரும்பூட் சிறுதகைப் பெய்ம்மலர்ப் பைந்தார்க்—கருங்கழல் வெண் குடையான் காவல்—விரும்பா—ளொருநாண் மடியி னுலகின்மே னில்லா—திருநால் வகையா ரியல்பு.'' எனவரும். இருநால்வகை மேற்கூறிய குடிப்பிறப்புமுதலியன. தக்கனபிறபிறர் சாற்றுமக்கூற் றுக்குச் செய்யுள்;—"ஊறின் றுவகையுள் வைக வுயிரோம்பி—யாறிலொன் றூனு தளித்துண்டு—மாறின்றி—வான்காவல் கொண் டான் வழிநின்று வைகலுந்—தான்காவல் கோட றகும்.'' எனவ ரும். மிக்ககளமரசுகொள் பேராண்முல்லைக்குச் செய்யுள்;—"ஏந்து வாட் டானை யிரிய வுறைகழித்துப்—போந்துவாண் மின்னும் பெ ருசமத்து—வேந்த—ரிருங்களி யானை யினமிரிந்தோடக்-கருங்கழ லான் கொண்டான் களம்.'' எனவரும். வெள்வாள்வேந்தன் வேண்டியதியவுங் கொள்ளாமறவன் கொதித்தமறமுல்லைக்குச் செய்

யுள்;—"வின்னவி ேறுளானும் வேண்டிய கொள்கென்னுங்—கன் னவிறிண்டோட் கழலானு—மன்னன்மு—ஞென்று னழல்விழி யா வொள்வாள் வலனேந்தி—நின்று னெடிய மொழிந்து." எனவ ரும். குடைபுகழ்முல்லைக்குச் செய்யுள்;-"வேயுள் விசும்பு விளங்கு கதிர்வட்டந்—தாய புகழான் றனிக்குடைக்குத்—தோய—மெதிர்வ ழங்கு கொண்மூ விடைபொழிந்த சுற்றுக்—கதிர்வழங்கு மாமலை காம்பு." எனவரும். சுற்று, சுற்றுத்தாமம். கண்படைநிலைக்குச் செய் யுள்;—"கொங்கலர்தார் மன்னருங் கூட்டளப்பக் கூற்றணங்கும்— வெங்கதிர்வேற் றண்டெரியல் வேந்தர்க்குப்-பொங்கு—புனலாடை யாளும் புனைகுடைக்கீழ் வைகக்—கனலா துயிலேற்ற கண்." எனவரும். அடல்கெழுமறவர் அவிப்பலிகொடுத்தற்குச்செய்யுள்;- "சிறந்த திதுவெனச் செஞ்சோறு வாய்ப்ப—மறந்தரு வாளமரென் னும்—பிறங்கழலு—ளாருயி ரென்னு மவிவேட்டாராங்கஃதால்— வீரியரெய் தற்பால வீடு." எனவரும். வான்றோய்புகழொடு வயங் குமொருநிலைமைச் சான்றோர்நெறிபுகல் சால்புமுல்லைக்குச் செய் யுள்;—"உறையார் விசும்பி னுவா மதிபோல—நிறையா நிலவுத லன்றிக்—குறையாத—வங்கம்போழ் முந்நீர் வளம்பெறினும் வே றுமோ—சங்கம்போல் வாய்மையார் சால்பு." எனவரும். மலிவய லுழவனை வறுமைதீர்பெருவளம் பொலிகெனக்கிணைவன் புகழ்ந்த களவழிக்குச் செய்யுள்;—"பகடுவாழ் கென்று பனிவயலு ளாமை- யகடுபோ லங்கட் டடாரித்—துகடுடையாக்—குன்றுபோ னெற் போர்க் குரிசில் வளம்பாட—வின்றுபோ மெங்கட் கிடர்." எனவ ரும். மெய்யில்வையகத்து விழைவினையறுத்துப் பொய்யிறத்துவப் பொருளொடுபுகறற்குச் செய்யுள்;—"ஆமினி மூப்பு மகன்ற திள மையுந்—தாமினி நோயுந் தலைவரும்—யாமினி-மெய்யைந்து மீதூர வைகாது மேல்வந்த—வையைந்து மாய்வதறிவு." எனவரும். ஐயைந்தும் ஆய்தல், புருடன் முதல் நிலன் ஈறுகக் கிடந்த இருபத் தைந்து தத்துவங்களை ஆராய்தல். அது, மூலப்பகுதி ஒன்றிற் தோன்றியதன்மையிற் பகுதியேயாமெனவும், அதன்கட் தோன்று வன அதனைநோக்க விகுதியாமெனவுந், தங்கட் தோன்றுவனவற் றை நோக்கப் பகுதியாமெனவும், அவற்றின்கட் தோன்றிய மனமும் ஞானேந்திரியங்களைந்துங் கன்மேந்திரியங்களைந்தும் பூதங்களைந்துந் தங்கட் தோன்றுவன இன்மையின் விகுதியேயாமெனவும்,புருடன் ஒன்றிற் தோன்றுமையானுந் தன்கட் தோன்றுவன இன்மையா னும் அவை இரண்டுமாகானெனவுந் தெரிதல். கவ்வைநோயாக்கை கழியுமுன்னுலகத்து அவ்வியஞேக்கி அருளொடு நீங்கற்குச் செய் யுள்;-"கயக்கிய நோயவாய்க் கையிகந்து நம்மை—யியக்கிய யாக்கை

யிருமுன்—மயக்கிய—பட்படா வைகும் பயன்ஞால நீள்வலே—யுட்படாம் போத லுறும்." எனவரும். (கரு)

சுகச. **கா**ஞ்சி தானே பெருந்திணைப் புறனே
பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றுனு
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே.

இது காஞ்சித்திணை பெருந்திணைக்குப் புறனென்பதூஉம் அதன்பொருளுங் கூறுகின்றது.

இ - ள். இது மேற்கூறிய புறத்திணை ஏழனுட் காஞ்சித்திணை முற்கூறிய அகத்திணை ஏழனுட் பெருந்திணைக்குப் புறனும்; அஃது ஒன்றற்கொன்று உரிமையாதல் அரிய சிறப்பினுல் யாக்கை செல்வம் இளமை முதலிய பலநெறியானும் நிலையாத உலகியற்கையைப் பொருந்திய நெறியினையுடைத்து. எ - று.

புறத்திணை பலவற்றுட் 'காஞ்சி தானே பெருந்திணைப் புறனே' என இதனைப் பிரித்தோதினர், எண்வகைமணத்தினும் நான்குமணம் பெற்ற பெருந்திணைபோல இக்காஞ்சியும் அறமுதலாகிய மும்முதற்பொருளும் அவற்றது நிலையின்மையுமாகிய ஆறனுள்ளும் நிலையின்மை மூன்றற்கும் உரித்தாய் எல்லாத்திணைகட்கும் ஒத்தமரபிற்றுகலானும், "பின்னர் நான்கும் பெருந்திணை பெறும்" என்ற நான்குஞ் சான்ருேர் இகழ்ந்தாற்போல அறமுதலியவற்றது நிலையின்மை உணர்ந்து அவற்றை அவர் இகழ்தலானும், ஏறியமடற்றிறம் முதலிய நான்கும் பொருந்தாக்காமமாயினவாறுபோல உலகியனோக்கி நிலையாமை நற்பொருளன்றுகலானும், உரிப்பொருள் இடமயங்கி வருதலன்றித் தனக்கு நிலமில்லாத பெருந்திணைபோல அறம்பொருளின்பம்பற்றியன்றி வேறு நிலையாமையென்பதோர் பொருளின்றுதலொப்புமையானுமென்பது. எனவே, காஞ்சித்திணை பெருந்திணைக்குப் புறனென்றல் ஆணைகூறலன்றுயிற்று. (கசு)

சுகரு. **வ**ருபடை போனன் மடுத்தெதி ரூன்றக்
கருதிவே லுழவன் காஞ்சி சூடுதலு
மேல்வரு படைவர மிகவு மாற்று
வேல்வ லாடவர் விறன்மிகுத் தெதிர்தலும்
வந்துபுலத் திறுத்தோர் வரம்பு கடவாமைத்
தந்தங் கடவை தழீஇய தழிஞ்சியும்
வடிசுடர் வேலோன் வாட்குடி யவர்க்குப்

படுசுட ரிமைக்கும் படைபல வழங்கலும்
வழங்கலு மறவரவ் வரிசை யேத்தித்
தழங்கொலி முரசிற் சாற்றிய பக்கமுந்
தாங்குவிறன் மறவர் தத்தந் தோள்வலி
வீங்குபடை நாப்பண் விளைத்தபெருங் காஞ்சியு
மருமுனை யிறுத்தோ னறைகூ வியபின்
செருமுனைச் செல்கெனச் செப்புவாள் செலவு
முதுகுடி மறவர் முன்னுறச் சூழக்
கொதியழல் வேலோன் குடைமுனைச் சேறலு
மின்னது பிழைப்பி னிதுவா கியரெனத்
துன்னருஞ் சிறப்பின் வஞ்சினக் காஞ்சியு
நேர்பொரு மள்ளர் நெடுங்குடை வேந்தன்
போரெதிர் பூக்கோ ணிலையு மதாஅன்று
தூசி தாங்கிவீழ் சுழல்விழி மறவ
னேசில்வான் றலைச்சிறப் பியம்புதலைக் காஞ்சியு
மந்தமில் பெருஞ்சிறப் பமர்வீ ழருந்தலை
தந்தவர்க் கீந்த தலைமா ராயமு
முலையு முகனுஞ் சேர்த்திக் கொண்டோன்
றலையொடு முடிந்த நிலையொடு தொகைஇத்
திறங்கொள்வேற் றரசருஞ் சென்னி துளக்க
மறங்க டாவிய வயங்குமறக் காஞ்சியும்
பண்புற வரூஉம் பகுதி நோக்கிப்
புண்கிழித்து முடியு மத்துறைக் கூற்று
மேமச் சுற்ற மின்றிப் புண்ணோற்
பேயோம் படுத்த பேயோம் புதலு
மாஅய களத்தி லவிந்தவா ளுழவர்க்குப்
பேஎ யஞ்சிய பேஎய்க் காஞ்சியும்
வியன்மனை விடலை விழுப்புண் காப்பவுந்
துயன்முலைப் பேஎய்மக டொட்ட காஞ்சியு
மின்னகை மனைவி பேஎய் புண்ணோற்
றுன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சியு
மின்னனென் றிரங்கிய மன்னைக் காஞ்சியு

மன்னன்மற வர்க்குமட் டீந்தகட் காஞ்சியுங்
காதற் கணவனொடு கனைஎரி மூழ்கு
மாதர் மலிபுரைத்த வாஞ்சிக் காஞ்சியு
மன்னுயிர் நீத்த வேலின் மனையோ
ளின்னுயிர் நீத்த வத்துறைப் பகுதியுங்
கறுத்தவா ளுழவனிக் கன்னியைத் தருகென
மறுத்துரை யாடிய மகட்பாற் காஞ்சியு
மன்னவ னிகன்மற மடங்கவே லிறைவன்
முன்னிருந் தருமுனை முரித்தமுன் னிருப்பு
மென்றுமுறை நவின்ற வெழுமூன்று நான்குஞ்
சென்றெதிர் காஞ்சித் திணையது விரியே.

இது முற்கூறிய காஞ்சித்திணை இத்துணைத்துறையுடைத்
தென்கின்றது.

இ - ள். வருபடைநோனன் மடுத்தெதிரூன்றக் கருதிவேலு
ழவன் காஞ்சிசூடுதல் முதல் ஈருகிய மன்னவனிகன்மறம் மடங்க
வேலிறைவன் முன்னிருந்தருமுனை முரித்தமுன்னிருப்புமென
முறையே சொல்லப்பட்ட இருபத்தைந்து துறையுஞ் சென்றெதி
ரூன்றலாகிய காஞ்சித்திணையினது விரியாம். எ - று.

வருபடைநோனன் மடுத்தெதிரூன்றக் கருதிவேலுழவன்
காஞ்சிசூடுதற்குச் செய்யுள்;—"அருவரை பாய்ந்திறுது மென்பார்
பண் டின்றிப்—பெருவரைச் சீறூர் கருதிச்—செருவெய்யோன்—
காஞ்சி மலையக் கடைக்கணித்து நிற்பதோ—தோஞ்செய் மறவர்
தொழில்." எனவரும். மேல்வருபடைவர மிகவுமாற்ரு வேல்வலா
டவர் விறன்மிகுத்தெதிர்தற்குச் செய்யுள்;—"மன்மேல் வருமென
நோக்கான் மலர்மார்பின்—வென்வேன் முகந்தபுண் வெய்துயிர்ப்
பத்—தன்வேல்—பிடிக்கலு மாற்ருப் பெருந்தகை யேவத்—துடிக்
கண் புலையன் ருூடும்." எனவரும். வென், வெற்றி. "வந்துபுலத்
திறுத்தோர் வரம்புகடவாமை தந்தங்கடவை தழீஇயதழிஞ்சிக்குச்
செய்யுள்;—"குலாவுஞ் சிலையார் குறும்புகொள வெஃகி—யுலாவு
முழப்பொழிக வேந்தன்—கலாவு—மினவேங்கை யன்ன விகல்
வெய்யோர் காவல்—புனவேய் நரலும் புழை." எனவரும். வடிசு
டர்வேலோன் வாட்குடியவர்க்குப் படுசுடரிமைக்கும் படைபலவ
ழங்கற்குச் செய்யுள்;—"ஐயங் களைந்திட் டடல்வெங்கூற் றலிப்ப-
வையிலை யெஃக மவைபலவு—மொய்யிடை—யாட்கடி வெல்க

ளிற் றண்ணல் கொடுத்தளித்தான்—வாட்குடி வன்க ணவர்க்கு." எனவரும். வழங்கலுமறவரவ் வரிசையேத்தித் தழங்கொலிமுரசிற் சாற்றியபக்கத்திற்குச் செய்யுள்;—"துன்னருந் துப்பிற் றொடுகழ லார் சூழ்ந்திருப்பத்—தன்னம ரொள்வாளென் கைத்தந்தான்-மன் னற்கு—மண்ணகமோ வைகின்று மாலை நெடுங்குடைக்கீழ்—விண் ணகமும் வேண்டுங்கொல் வேந்து." எனவரும். தாங்குவிறன்ம றவர் தத்தந்தோள்வலி வீங்குபடைநாப்பண் விளைத்தபெருங்காஞ் சிக்குச் செய்யுள்;—"வில்லார் குறும்பிடை வேறுவே றார்த்தெ ழுந்த—கல்லா மறவர் கணைமாரி—யொல்லா—வெருவி மறவேந்தர் வெல்களி றெல்லா—மிருவி வரைபோன்ற வின்று." எனவரும். இருவி, தினைத்தாள். அருமுனையிறுத்தோன் அறைகூவியபின் செருமுனைச்செல்கெனச் செப்புவாள்செலவுக்குச் செய்யுள்;— "உணங்கு புலவறா வொன்னார் குரம்பை—நுணங்கரில் வெம் முனை நோக்கி—யணங்கிய—குந்த மலியும் புரவியான் கூடாதார்— வந்தபின் செல்கென்றான் வாள்." எனவரும். முதுகுடிமறவர் முன்னுறச்சூழக் கொதியழல்வேலோன் குடைமுனைச் சேறற்குச் செய்யுள்;—"தெம்முனை தேயத் திறல்விளங்கு தேர்த்தானை— வெம்முனை வென்றி விறல்வெய்யோன்—றம்முனை—நாட்டிப் பொ றிசெறித்து நண்ணார்மேற் செல்கென்று—கூட்டிநாட் கொண்டான் குடை." எனவரும். இன்னதுபிழைப்பின் இதுவாகியரெனத் துன் னருஞ்சிறப்பின் வஞ்சினக்காஞ்சிக்குச் செய்யுள்;—"இன்று பக லோ னிறவாமு னென்னுரை—வென்று களங்கொள்ளா வேலு யர்ப்பி—னென்று—மரணவியப் பாயு மடையார்மு னிற்பேன்— முரணவிய முன்முன் மொழிந்து." எனவரும். நேர்பொரு மள்ளர் நெடுங்குடைவேந்தன் போரெதிர்பூக்கோள் நிலைக்குச் செய்யுள்;—"பரிதிசெல் வானம் பரந்துருகி யன்ன—குருதியா றுவ துகொல் குன்றூர்—கருதி—மறத்திறத்தின் மாறா மறவருங் கொண்டார்—புறத்திறுத்த வேந்திரியப் பூ." எனவரும். தூசுதாங் கிவீழ் சுழல்விழிமறவன் எசில்வான்றலைச்சிறப்பு இயம்புதலைக்காஞ் சிக்குச் செய்யுள்;—"விட்டிடிலென் வேந்தன் விலையிடிலெ னிவ் வுலகி—னிட்டுரையி னெய்துவ தெய்திற்றா—லொட்டாதார்— போர்தாங்கி மின்னும் புலவா ளுறைகழியாத்—தார்தாங்கி வீழ்ந் தான் றலை." எனவரும். அந்தமில்பெருஞ்சிறப்பமர்வீழருந்தலை தந் தவர்க்கீந்த தலைமாராயத்துக்குச் செய்யுள்;—"உவன்றலை யென் னு முறழ்வின்றி யொன்னா—ரிவன்றலையென் றேத்த வியலு— மவன்றலை—தந்தார்க்கு நல்கல் வியப்போ கிளர்ந்தேத்தி—வந்தார்க் குவந்தீயும் வாழ்வு." எனவரும். முலையுமுகனுஞ் சேர்த்திக்கொண்

டோன் தலையொடுமுடிந்த நிலைக்குச் செய்யுள்;---"கொலையானைக் கூற்றங் கொடிதே கொழுநன்—றலையானு டையலாள் கண்டே— முலையான்—முயங்கினுள் வாண்முகமுஞ் சேர்த்தினு ளாங்கே— யுயங்கினு ளோங்கிற் றுயிர்." எனவரும். திறங்கொள்வேற்றரசருஞ் சென்னிதுளக்க மறங்கடாவிய வயங்குமறக்காஞ்சிக்குச் செய்யுள்;—"கருந்தலையும் வெண்ணிணமுஞ் செந்தடியு மீராப்—பருந்தொ டெருவை படர—வருந்திறல்—வேரூய மன்னர் வியப்பக் கடாயினுன்—மாரு மறவன் மறம்." எனவரும். பண்புறவரூஉம் பகுதிநோக்கிப் புண்கிழித்துமுடியுமத்துறைக்கூற்றுக்குச் செய்யுள்;- "நகையம ராய நடுங்க நடுங்கான்—ஞெகையம ரோட்டிய துப்பிற்-பகையவர்மு—னுங்கிச் சினவுத ஞேனு னுதிவேலாற்—பொங்கிப் பரிந்திட்டான் புண்." எனவரும். ஏமச்சுற்றமின்றிப்புண்ணேற் பேயோம்படுத்த பேயோம்புதற்குச் செய்யுள்;—"ஆயு மடுதிறலார்க் கன்பிலா ரில்போலுங்—தோயுங் கதழ்குருதி தோள்புடைப் பப்—பேயுங்—களம்புகலச் சீறிக் கதிர்வேல்வாய் வீழ்ந்தா—னுளம் புகல வோம்ப லுறும்." எனவரும். ஆஅயகளத்தில் அவிந்தவாளுழவர்க்குப் பேஎயஞ்சிய பேஎய்க்காஞ்சிக்குச் செய்யுள்;—"கொட்கு நிமிருங் குறுகுங் குடர்சூடிப்—பெட்ப நகும்பெயரும் பேய்மக— ளுட்கப்—புனலங் குருதிப் புலால்வாய்க் கிடந்து—கனல விழிப்ப வர்க் கண்டு." எனவரும். வியன்மனைவிடலை விழுப்புண்காப்பவுந் துயன்முலைப்பேஎய்மகள் தொட்டகாஞ்சிக்குச் செய்யுள்;-"கொன்றுருத்த கூர்வே லவற்குறுகிக் கூரிருள்வாய்—நின்றுருத்து நோக்கி நெருப்புமிழாச்-சென்றுருத்தி—யொட்டார் படையிடந்த வூறுப்புணேந்தகலந்—தொட்டாள் பெருகத் துயில்." எனவரும். இன்னகைமனைவி பேஎய்புண்ணேற் துன்னுதல்கடிந்த தொடாக்காஞ்சிக்குச் செய்யுள்;—"ஐயவி சிந்தி நறைபுகைத் தாய்மலர்தூய்க்—கொய்யாக் குறிஞ்சி பலபாடி—மொய்யிணர்ப்—பூப்பெய் தெரிய னெடுந்தகை புண்ணினையாங்—காப்பப்பேய் பேரும் வரும்." எனவரும். இன்னனென்றிரங்கிய மன்னைக்காஞ்சிக்குச் செய்யுள்;—"போர்க்குப் புணைமன் புரையோர்க்குத் தானுவம—னூர்க்கு முலகிற்கு மோருயிர்மன்—யார்க்கு—மறந்திறந்த வாயி லடைத்ததா லண்ண—னிறந்திறந்த நீளிலை வேல்." எனவரும். மன்னன்மறவர்க்கு மட்டீந்தகட்காஞ்சிக்குச் செய்யுள்;—"ஒன்னார் முனையோர்க் கொழிக வினித்துயின்—மன்னன் மறவா மகிழ்தூங்கா-முன்னே—படலைக் குரம்பைப் பழங்கண் முதியாள்—விடலைக்கு வெங்கள் விடும்." எனவரும். காதற்கணவனெடு கனையெரிமூழ்கும் மாதர்மலிபுரைத்த ஆஞ்சிக்காஞ்சிக்குச் செய்யுள்;—"தாங்கிய கேளொடு தானு மெரி

புரீஇப்—பூங்குழை யாயம் புலர்கென்னு—நீங்கா—விலாழிப் பரித்தானை யேதிலார் சீறூர்ப்—புலாழித் தலைக்கொண்ட புண்." எனவரும். மன்னுயிர்நீத்த வேலின்மனையோள் இன்னுயிர்நீத்த அத்துறைப்பகுதிக்குச் செய்யுள்;—"கவ்வைநீர் வேலிக் கடிதேகாண் கற்புடைமை—வெவ்வேல்வாய் வீழ்ந்தான் விறல்வெய்யோ—னவ்வேலே—யம்பிற் பிறழுந் தடங்க ணவன்காதற்—கொம்பிற்கு மாயிற்றே கூற்று." எனவரும். கறுத்தவாளுழவனிக் கன்னியைத்தருகென மறுத்துரையாடிய மகட்பாற்காஞ்சிக்குச் செய்யுள்;—"அளியார் கழல்வேந்த ரம்மா வரிவை—யெளியளென் றெண்ணியுரைப்பிற்—குளியாவோ—பண்போல் கிளவிப் பலவளையாள் வாண்முகத்த—கண்போற் பகழி கடிது." எனவரும். மன்னவனிகல்மறம் மடங்கவேலிறைவன் முன்னிருந்தருமுனை முரித்தமுன்னிருப்புக்குச் செய்யுள்;—"கடிகமழ் வேரிக் கடைதொறுஞ் செல்லக்—கொடிமலி கொல்களி றேவித்—துடிமகிழ—வார்த்திட் டமருளடையாரை யம்முனையிற்—போர்த்திட்டான் பெய்கழலி னன்." எனவரும். (கஎ)

கூகக. பாடாண் டிணையே கைக்கிளைப் புறனே
பாடுதற் குரிய வாடவன் றனது
பாடமை யொழுக்கம் பாடுமந் நெறித்தே.

இது பாடாண்டிணை கைக்கிளைத்திணைக்குப் புறனென்பதூஉம் அதன்பொருளுங் கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய புறத்திணை ஏழனுட் பாடாண்டிணை முற்கூறிய அகத்திணை ஏழனுட் கைக்கிளைத்திணைக்குப் புறனும்; அது தான் பாடுதற்கு உரிய ஆண்மகனது பெருமைபொருந்திய ஒழுக்கத்தைப் பாடுகின்ற அம்முறைமையினையுடைத்து. எ - று.

புறத்திணை பலவற்றுட் 'பாடாண் டிணையே கைக்கிளைப் புறனே' என இதனைப் பிரித்தோதினர், ஒருதலைவன் பரவலும்புகழ்ச்சியும் வேண்ட ஒருபுலவன் வீடுபேறு முதலிய பரிசில்வேண்டலின் அவை தம்மின்வேறாகிய ஒருதலைக்காமமாகிய கைக்கிளையோடொத்தலானென்பது. (கஅ)

கூகஎ. ஒளியு மாற்றலு மோம்பா வீகையு
மளியு மென்றிவை யாய்ந்தினி துரைத்தலுஞ்
சேய்வரல் வருத்தம் வீட வாயில்

காவலர்க் குரைத்த கடைநிலை யானுங்
காவல் கண்ணிய கழலோன் கைதொழு
மூவரி லொருவனை முறையுளி வாழ்த்தலு
மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பிற்
ருவா விழுப்புகழ்ப் பூவை நிலையு
மொருவனை யவனொடு மொழிந்த வானவரொடும்
பொருவினன் புகழ்ந்த மற்றதன் பகுதியு
மண்ணகங் காவன் மன்னவன் முன்ன
ரெண்ணிய பரிசி லிதுவென வுரைத்தலு
மின்னோ ரின்னவை கொடுத்தனர் நீயு
மன்னர்போ லருள்கெனு மியன்மொழி வாழ்த்து
மயலறு சீர்த்தி மான்றோர் மன்ன
னியல்பென மொழியு மத்துறைப் பகுதியு
நெடுந்தேர்த் தானை நீறுபட நடக்குங்
கடுந்தேர் மன்னவன் கண்படை நிலையு
மயில்வேன் மன்னனை யருளிய வெழுகெனத்
துயிலிடை யெடுப்பிய துயிலெடை நிலையுங்
கங்குற் கனைதுயி லெழுந்தோன் முன்னர்
மங்கலங் கூறிய மங்கல நிலையு
மன்னிய சிறப்பின் மங்கல மரபிற்
றுன்னின னென்ற வத்துறைப் பகுதியுந்
துளக்கமி லரசன் வெற்றி காட்டும்
விளக்குநிலை விளம்பிய விளக்கு நிலையு
மடரவிர் பைம்பூ ணரசன் றன்னைச்
சுடரொடு பொரூஉ மத்துறைப் பகுதியு
முவகையொடு வேந்த னொலிமறை யவர்க்குக்
கபிலை யீந்த கபிலை நிலையு
மந்தமில் புகழா னமரரவி முகப்ப
வெந்தீ வேட்ட வேள்வி நிலையு
மண்மிசைக் கொண்மூ மழைவளந் தருமென
விண்மிசைத் தோற்றிய வெள்ளி நிலையுந்
தாட்டாழ் தடக்கைத் தாம மார்ப

ளுட்டுவெள னுரைத்த நாடு வாழ்த்தும்
வாழ்மனை புகீஇ வைகறை முழக்கிய
கேழ்கிளர் கிணைவன் கிளந்த கிணைநிலையுஞ்
செங்களத் தீட்டிய செல்வம்வெண் டுறையாழ்
மங்கலப் பாணர் மறுத்த களவழியுங்
கூற்றிருந் தாலுங் கொலைவேன் மன்னவன்
வீற்றினி திருந்த பெருமங் கலமு
நெடுமதி லெறிந்த நிரைதார் மன்னன்
குடுமி களைந்த புகழ்சாற்று நிலையு
மிகலடு தடந்தோ ளெறிவே லிறைவன்
மகளிரொடு மணந்த மணமங் கலமுங்
கதமிக் கெழுபடைக் காவல் வேந்தன்
புதல்வற் பயந்த பொலிவுமங் கலமும்
வாட்படைத் தானை மன்னவன் பிறந்த
நாட்சிறப் புரைத்த நாண்மங் கலமும்
விரைந்துகொடை பெற்றும் விடைபெறா திரவலன்
பரிந்துகடைக் கூட்டிய பரிசி னிலையும்
வண்புக ழுறைந்தோர்க்கு மன்னவ னுதவிப்
பண்புற விடுத்த பரிசில் விடையு
நிறைவினை முற்றிய நீள்கழ லோன்மனை
யறன்மலி புரைத்த வாள்வினை வேள்வியுங்
கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு
மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்
பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்
சென்றெதிரத் தெரித்த வாற்றுப் படையு
மொழியுமெங் கடுஞ்சொன் முறையுளி நிற்பின்
வழிபயன் படூஉமெனும் வாயுறை வாழ்த்தும்
புரையோர் நாப்பண் வீதல் கடனெனப்
பெரியோர் பேணிய செவியறி வுறுவு
நாற்பெருந் திசையு நன்கினிது கவித்த
கோக்குடை பழிச்சுங் குடைமங் கலமுங்
காய்வார் காயக் கண்கனல் வேந்தன்

வாய்வா ளேத்திய வாண்மங் கலமு
மெண்ணருஞ் சீர்த்தி யிறையோ னெய்தி
மண்ணுதல் புரிந்த மண்ணு மங்கலமு
மறிவோர் வேந்தனுக் காய்ந்திவை செய்கென
வுறுதி கூறிய வோம்படை நிலையும்
வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்து
மூவர் கொடியுளு மொன்றொடு பொரீஇ
மேவர வுரைத்த வியன்கொடி நிலையுஞ்
சோவினை யழித்த துளவணி மாயோன்
மேவரு விறலினை வியந்த கந்தழியு
மெரிசுடர் வேலவர்க் கிளகிய வுள்ளத்
தரிமலர்க் கண்ணிய ராடிய வள்ளியும்
விரும்பிய தரூஉம் விண்ணவர் தம்முழை
யரும்பெறற் புலவரை யாற்றுப் படுத்தலும்
வீற்றதொன் றெய்துகம் வியனிலத் தியாமெனப்
போற்றரு மிறைக்கெதிர் புகழ்ந்தனர் பரவலும்
விடுசுட ரெறிக்கு மேனிவா னவனைப்
படுபயன் கருதிப் பழிச்சினர்ப் பணிதலு
மருமலர்க் கோதை மடவர றலைவனை
விரிமலர்த் தாமம் விழைந்த கைக்கிளையு
மல்லிடை விரும்பா தவன்முயக் கமர்ந்து
செல்பவள் செல்வகை தெரிந்தபெருந் திணையும்
வில்லேர் நுதலி விறலோன் மார்பும்
புல்லேம் யாமெனப் புலந்த புலவியும்
படிமிசை யியங்காப் பணிமொழி மகளிர்
கடவுளை நயந்த கடவுட் பக்கமும்
பூதலத் தரிவையர் பொருவில்வா னவரைக்
காதலித் துரைத்த கடவுட் பக்கமு
மிழையணி மங்கைய ரீறில காமங்
குழவி மருங்கிற் கூறிய பகுதியு
நீங்காக் காதன் மைந்தரு மகளிரும்

பாங்குறக் கூடும் பதிநிலை யுரைத்தலு
மெனமுறை தொகுத்த வேழேழ் துறையும்
வினவிய பாடாண் டிணையது விரியே.

இது முற்கூறிய பாடாண்டிணை இத்துணைத்துறையுடைத்தென்கின்றது.

இ - ள். ஒளியும் ஆற்றலும் ஓம்பாவீகையும் அளியுமென்றிவை ஆய்ந்தினிதுரைத்தல் முதலாக நீங்காக்காதல் மைந்தரும் மகளிரும் பாங்குறக்கூடும் பதிநிலையுரைத்தல் ஈறாக முறையே தொகுத்த நாற்பத்தொன்பது துறையும் மேற்சொல்லப்பட்ட பாடாண்டிணையது விரியாம். எ - று.

ஒளியும் ஆற்றலும் ஓம்பாவீகையும் அளியுமென்றிவை ஆய்ந்தினிதுரைத்தற்குச் செய்யுள்;—"மன்னர் மடங்கன் மறையவர் சொன்மாலை—யன்ன நடையினார்க் காரமுதந்—துன்னும்—பரிசிலர்க்கு வானம் பணிமலர்ப்பூம் பைந்தா—ரெரிசினவேற் றானை யெங் கோ." எனவரும். செய்வரல்வருத்தம்வீட வாயில்காவலர்க்குரைத்த கடைநிலைக்குச் செய்யுள்;—"நாட்டிய வாய்மொழி நாப்புலவர் நல்லிசை—யீட்டிய சொல்லா னிவனென்று—காட்டிய—காயலோங் கெஃகிமைக்குங் கண்ணார் கொடிமதில்—வாயிலோய் வாயி லிசை." எனவரும். காவல்கண்ணிய கழலோன்கைதொழும் மூவரிலொருவனை முறையுளிவாழ்த்தற்குச் செய்யுள்;—"வைய மகளை யடிப்படுத்தாய் வையகத்தா—ருய்ய வுருவம் வெளிப்படுத்தாய்—வெய்ய—வடுந்திற லாழி யரவணை யாயென்று—நெடுந்தகை நின்னையே யாம்." எனவரும். மாயோன்மேய மன்பெருஞ்சிறப்பிற் றாவாவிழுப்புகழ்ப் பூவைநிலைக்குச் செய்யுள்;—"பூவை விரியும் புதுமலரிற் பூங்கழலோ—யாவை விழுமிய யாமுணரே—மேவார்—மறத்தொடு மல்லர் மறங்கடந்த காளை—நிறத்தொடு நேர்தருத லால்." எனவரும். ஒருவனையவனொடும் ஒழிந்த வானவரொடும் பொருவினன்புகழ்ந்த மற்றதன்பகுதிக்குச் செய்யுள்;—"ஏற்றுவல னுயரிய வெரிமரு ளவிர்சடை—மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனுங்—கடல்வளர் புரிவளை புரையு மேனி-யடல்வெந் நாஞ்சிற் பனைக்கொடி யோனு—மண்ணுறு திருமணி புரையு மேனி—விண்ணுயர் புட்கொடி விறல்வெய் யோனு—மணிமயி லுயரிய மாறா வென்றிப்—பிணிமுக வூர்தியொண் சேயோனும்மென—ஞாலங் காக்குங் கால முன்பிற்—றோலா நல்லிசை நால்வ ருள்ளுங்—கூற்றொத் தீயே மாற்றருஞ் சீற்றம்—வலியொத்

தீயே வாலி யோனைப்—புகழொத் தீயே யிகழுந ரடுநனை—முரு கொத் தீயே முன்னியது முடித்தலி—னுங்காங் கவரவ ரொத்த லின்—யாங்கு மரியவு முளவோ நினக்கே.'' எனவரும்.

ஒன்றெனமுடித்தலான் இங்ஙனமன்றிக் "குருந்த மொசித்த ஞான் றுண்டா லதனைக்—கரந்த வடிவெமக்குக் காட்டாய்—மரம் பெறு—போர்பிற் குருகுறங்கும் பூம்புன னீர்நாட—மார்பிற் கிடந்த மறு.'' எனவும், "ஏற்றூர்தி யானு மிகல்வெம்போர் வானவனு— மாற்றனு மாள்வினையு மொத்தொன் றி னெவ்வாரே—கூற்றக் கணிச்சியோன் கண்மூன் றிரண்டேகா—ணுற்றல்சால் வானவன் கண்.'' எனவும், "இந்திரனென்னி லிரண்டேக ணேறூர்ந்த—வந் தரத்தா னென்னிற் பிறையில்லை—யந்தரத்திற்—கோழியா னென் னின் முகனென்றே கோதையை—யாழியா னென்றுணரற் பாற் று.'' எனவுஞ் சிறிது வேறுபட வருவனவெல்லாம் அதன் பாற் படுத்துக.

மண்ணகங்காவல் மன்னவன்முன்னர் எண்ணியபரிசில் இது வெனவுரைத்தற்குச் செய்யுள்;—"வரிசை கருதாது வான்போற் றடக்கைக்—குருசினீ நல்கயாங் கொள்ளும்—பரிசி—லடுகள மார்ப்ப வமரோட்டித் தந்த—படுகளி நால்வாய்ப் பகடு.'' எனவரும். இன்னோரின்னவை கொடுத்தனர்நீயும் அன்னர்போலருள்கெனும் இயன்மொழிவாழ்த்திற்குச் செய்யுள்;—"முல்லைக்குத் தேரு மயி லுக்குப் போர்வையு-மெல்லைநீர் ஞாலத் திசைவிளங்கத்—தொல்லை- யிரவாம லீந்த விறைவர்போ னீயுங்—கரவாம லீகை கடன்.'' என வரும். மயலறுசீர்த்தி மான்றேர்மன்னன் இயல்பெனமொழியும் அத்துறைப்பகுதிக்குச் செய்யுள்;—"ஒள்வா ளமரு ளுயிரோம்பான் றுனீயக்—கொள்வார் நடுவட் கொடையோம்பான்—வெள்வாள்- கழியாமே மன்னர் கதங்காற்றும் வேலோ—னுழியாமே யோம்பு முலகு.'' எனவரும். நெடுந்தேர்த்தானை நீறுபடநடக்குங் கடுந்தேர் மன்னவன் கண்படைநிலைக்குச் செய்யுள்;—"மேலா ரிறையமருண் மின்னார் சினஞ்சொரியும்—வேலான் விறன்முனை வென்றடக் கிக்—கோலாற்—கொடிய வுலகிற் குறுகாம லெங்கோன்—கடிய துயிலேற்ற கண்.'' எனவரும். அயில்வேன்மன்னனை அருளியவெ ழுகெனத் துயிலிடையெடுப்பிய துயிலெடைநிலைக்குச் செய்யுள்;— "அளந்த திறையா ரகலிடத்து மன்னர்—வளந்தரு வேலோய் வணங்கக்—களந்தயங்கப்—பூமலர்மேற் புள்ளொலிக்கும் பொய்கை சூழ் தாமரைத்—தூமலர்க்க ணேற்ற றுயில்.'' எனவரும். கங்குற் கனைதுயில் எழுந்தோன்முன்னர் மங்கலங்கூறிய மங்கலநிலைக்குச்

செய்யுள்;—"விண்வேண்டின் வேறுதன் மங்கலம் வேந்தர்க்கு—மண்வேண்டிற் கைகூப்பன் மங்கலம்—பெண்வேண்டிற்—றுன்னன் மடவார்க்கு மங்கலந் தோலாப்போர்—மன்னன் மலைபுரையு மார்பு." எனவரும். மன்னியசிறப்பின் மங்கலமரபிற் றுன்னினனென்ற அத்துறைப்பகுதிக்குச் செய்யுள்;—"திண்டியுங் கண்டும் பயிற்றியுந் தன்செவியால்—வேண்டியுங் கங்குல் விடிவளவு—மீண்டிய—மங்கலமாய நுகர்ந்தான் மறமன்னர்—வெங்களத்து வேலுயர்த்த வேந்து." எனவரும். துளக்கமிலரசன் வெற்றிகாட்டும் விளக்குநிலைவிளம்பிய விளக்குநிலைக்குச் செய்யுள்;—"வளிதுரந்தக் கண்ணும் வலந்திரியாப் பொங்கி—யொளிசிறந் தோங்கி வரலா—லளிசிறந்து—நன்னெறியே காட்டு நலந்தெரி கோலாற்கு—வென்னெறியே காட்டும் விளக்கு." எனவரும். அடரவிர்பைம்பூண் அரசன்றன்னைச் சுடரொடுபொரூஉம் அத்துறைப்பகுதிக்குச் செய்யுள்;—"வெய்யோன் கதிர்விரிய விண்மே லொளியெல்லா—மையாந் தொடுங்கி மறைந்தாங்கு—வையகத்துக்—கூத்தவை யேத்துங் கொடித்தேரான் கூடியபின்—வேத்தவையுண் மையாக்கும் வேந்து." எனவரும். மையாத்தல், புற்கென்றல். உவகையொடுவேந்தன் ஒலிமறையவர்க்குக் கபிலையீந்த கபிலைநிலைக்குச் செய்யுள்;—"பருக்காழுஞ் செம்பொன்னும் பார்ப்பார் முகப்பக்—குருக்கட் கபிலை கொடுத்தான்—செருக்கோ—டிடிமுரசத் தானை யிகலிரிய வெங்கோன்—கடிமுரசங் காலைச் செய." எனவரும். அந்தமில்புகழான் அமரரவிமுகப்ப வெந்தீவேட்ட வேள்விநிலைக்குச் செய்யுள்;-"கேள்வி மறையோர் கிளைமகிழ்த லென்வியப்பாம்—வேள்வி விறல் வேந்தன் றான்வேட்ப—நீள்விசும்பி—னீர்ந்தா ரிமையோரு மெய்தி யழல்வாயா—லார்ந்தார் முறையா லவி." எனவரும். மண்மிசைக் கொண்மூ மழைவளந்தருமென விண்மிசைத்தோற்றிய வெள்ளிநிலைக்குச் செய்யுள்;—"சூழ்கதிர் வான்விளக்கும் வெள்ளி சுடர்விரியத்—தாழ்புயல் வெள்ளந் தருமரோ—சூழ்புரவித்—தேர்விற்றூர் தாங்கித் திகழ்ந்திலங்கு வேலாய்நின்—மார்பிற்றூர் கோலி மழை." எனவரும். தாட்டாழ்தடக்கைத் தாமமார்பன் நாட்டுவளனுரைத்த நாடுவாழ்த்துக்குச் செய்யுள்;—"எண்ணி னிடரெட்டு மின்றி வயற் செந்நெற்—கண்ணின் மலரக் கருநீலம்—விண்ணின்—வகைத்தாய் வளனுடை வைகின்ற வென்வே—னகைத்தாரான் றான்விரும்பு நாடு." எனவரும். இடரெட்டாவன "விட்டில் கிளிநாவாய் வேற்றரசு தன்னரசு—நட்டம்பெயல் காலோ டெட்டு." என இவை. வாழ்மனைபுகீஇ வைகறைமுழக்கிய கேழ்கிளர்கிணைவன் கிளந்தகிணைநிலைக்குச் செய்யுள்;—"வெள்ளி முளைத்த விடியல் வயலாமை

யள்ளகட் டன்ன வரிக்கிணை—வள்ளியோன்—முன்கடை தட்டிப் பகடுவாழ் கென்னுமு—னென்கடை நீங்கிற் றிடர்.” எனவரும். அரி, அழகு. செங்களத்தீட்டிய செல்வம்வெண்டுறையாழ் மங்கலப்பாணர் மறுத்தகளவழிக்குச் செய்யுள்;—“ஈண்டி யெருவை யிறகுளரும் வெங்களத்து—வேண்டியாங் கொண்ட விறல்வேழம்—வேண்டாள்—வளைகள் வயிரியம்பும் வாட்டானை வேந்தே—விளைகட் பகர்வாள் விலை.” எனவரும். கூற்றிருந்தாலுங் கொலைவேல் மன்னவன் வீற்றினிதிருந்த பெருமங்கலத்திற்குச் செய்யுள்;—“அழலவிர் பைங்க ணரிமா னமளி—நிழலவிர்பூண் மன்னர்நின் றேத்தக்—கழல்புனைந்து—வீமலிதார் மன்னவனாய் வீற்றிருந்தான் வீங்கொலிநீர்ப்—பூமலி நாவற் பொழிற்கு.” எனவரும். நெடுமதி லெறிந்த நிரைதார்மன்னன் குடுமிகளைந்த புகழ்சாற்றுநிலைக்குச் செய்யுள்;—“பூந்தா மரையிற் பொடித்துப் புகல்விசும்பின்—வேந்தனை வென்றான் விறன்முருக—னேந்து—நெடுமதில் கொண்டு நிலமிசையோ ரேத்தக்—குடுமி களைந்தானெங் கோ.” எனவரும். குடுமிகளைதல், மயிர்ச்சிகையைக் கூட்டிமுடித்தல். இகலடுதடந்தோள் எறிவேலிறைவன் மகளிரொடுமணந்த மணமங்கலத்திற்குச் செய்யுள்;—“அணக்கருந் தானையா னல்லியந்தார் தோய்ந்தாள்—மணக்கோல மங்கலம்யாம் பாட—வணக்கருஞ்சீ—ராரெயின் மன்னன் மடமக ளம்பணைத்தோட்-கூரெயிற்றுச் செவ்வாய்க் கொடி.” எனவரும். கதமிக்கெழுபடைக் காவல்வேந்தன் புதல்வற்பயந்த பொலிவுமங்கலத்திற்குச் செய்யுள்;—“கருங்கழல் வெண்குடைக் காவலற்குச் செவ்வாய்ப்—பெருங்கட் புதல்வன் பிறப்பப்—பெரும்பெயர்—விண்ணோர் மகிழ்ந்தார் வியலிடத்தா ரேத்தினா—ரெண்ணா ரவிந்தா ரிகல்.” எனவரும். வாட்படைத்தானை மன்னவன் பிறந்த நாட்சிறப்புரைத்த நாண்மங்கலத்திற்குச் செய்யுள்;—“கரும்பகடுஞ் செம்பொன்னும் வெள்ளணிநாட் பெற்றார்—விரும்பி மகிழ்தல் வியப்போ—சுரும்பிமிர்தார்—வெம்முனை வேந்தரும் வெள்வளையார் தோள்விழைந்து—தம்மதி ருந்திறப்பர் தாழ்.” எனவரும். விரைந்துகொடைபெற்றும் விடைபெறாதிரவலன் பரிந்துகடைக் கூட்டிய பரிசினிலைக்குச் செய்யுள்;—“வெல்புரவி பூண்ட விளங்குமணித்திண்டேர்—நல்கிய பின்னு நனிநீடப்—பல்போர்—விலங்குங் கடற்றானை வேற்றார் முனைபோற்—கலங்கு மளித்தென் கடும்பு.” எனவரும். வண்புகழறைந்தோர்க்கு மன்னவனுதவிப் பண்புறவிடுத்த பரிசில்விடைக்குச் செய்யுள்;—“படைநவின்ற பல்களிறும் பண்ணமைந்த தேரு—நடைநவின்ற பாய்மாவு நல்கிக்—கடையிறந்து—முன்வந்த மன்னர் முடிவணங்குஞ் சேவடியாற்—

பின்வந்தான் பேரருளி னூன்." எனவரும். நிறைவினைமுற்றிய நீள் கழலோன்மனை அறன்மலிபுரைத்த ஆள்வினைவேள்விக்குச் செய்யுள்;—"நின்ற புகழொடு நீடுவாழ் கிவ்வுலகி—லொன்ற வுயிர்க ளிப்ப வோம்பலால்—வென்றமருள்—வாள்வினை நீக்கி வருக விருந்தென்னு—மாள்வினை வேள்வி யவன்." எனவரும். கூத்தரும்பாணரும் பொருநரும்விறலியும் ஆற்றிடைக்காட்சி உறழத் தோன்றிப் பெற்றபெருவளம் பெறூஅர்க்கறிவுறீஇச் சென்றெ திரத்தெரித்த ஆற்றுப்படையுட் கூத்தராற்றுப்படைக்குச் செய்யுள்;—"கொலைவிற் புருவத்துக் கொம்பன்னூர் கூத்தின்—றலைவ தவிராது சேறி—சிலைகுலாங்—காரினை வென்ற கவிகையான் கை வளம்—வாரினை கொண்டு வரற்கு." எனவரும். பாணராற்றுப்படைக்குச் செய்யுள்;—"இன்றொடை நல்லிசையாழ்ப் பாணனீ யெம்மேபோற்—கன்றுடை வேழத்த கான்கடந்து—சென்றடையிற்—காமரு சாயலாள் கேள்வன் கயமலராத்—தாமரை சென்னி தரும்." எனவரும். பொருநராற்றுப்படைக்குச் செய்யுள்;—"தெருவி னலமருந் தெண்கட் டடாரிப்—பொருவில் பொருநசெல் விற்—செருவி—லடுந்தடக்கை நோன்றூ ளமர்வெய்யோ னீயு—நெடுந்தடக்கை யானை நிரை." எனவரும். விறலியாற்றுப்படைக்குச் செய்யுள்;—"சில்வளைக்கைச் செவ்வாய் விறலி செருப்படையான்—பல்புகழ் பாடிப் படர்தியே—னல்லவையோ—ரேத்த விழையணிந் தின்னே வருதியாற்—பூத்த கொடிபோற் பொலிந்து." எனவரும். மொழியுமெங்கடுஞ்சொல் முறையுளிநிற்பின் வழிபயன்படூஉமெனும் வாயுறைவாழ்த்துக்குச் செய்யுள்;—"எஞ்சொல் லெதிர்கொண் டிகழான் வழிநிற்பிற்—குஞ்சரம் வெல்படையான் கொள்ளானோ—வெஞ்சு—மிகலிட மின்றி யெறிமுந்நீர் சூழ்ந்த—வகலிட மங்கை யகம்." எனவரும். புரையோர்நாப்பண் வீதல்கடனெனப் பெரியோர்பேணிய செவியறிவுறுவிற்குச் செய்யுள்;—"அந்தணர் சான்றோ ரருந்தவத்தோர் தம்முன்னோர்—தந்தைதா யென்றிவர்க்குத் தார்வேந்தே—முந்தை—வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி—மொழிநின்று கேட்டன் முறை." என வரும். நாற்பெருந்திசையும் நன்கினிதுகவித்த கோக்குடைபழிச் சுங் குடைமங்கலத்திற்குச் செய்யுள்;—"தன்னிழலா ரெல்லார்க்குந் தண்கதிராந் தற்சேரா—வெந்நிழலா ரெல்லார்க்கும் வெங்கதிரா—மின்னிலைவேல்—மூவா விழுப்புகழ் முல்லைத்தார்ச் செம்பியன்—கோவா வுயர்த்த குடை." எனவரும். கோவாய், அரசுதொழிற்கு அமைந்ததாய். காய்வார்காயக் கண்கனல்வேந்தன் வாய்வாளேத்திய வாண்மங்கலத்திற்குச் செய்யுள்;—"கொங்கவி ழைம்

பான் மடவார் வியன்கோயின்—மங்கலங் கூற மறங்கனல்கட்—செங்கோ—னிலந்திரியச் செல்லு நிரைதண்டார்ச் சேரன்—வலந்திரிய வேந்திய வாள்.'' எனவரும். எண்ணருஞ்சீர்த்தி இறையோனெய்தி மண்ணுதல்புரிந்த மண்ணுமங்கலத்திற்குச் செய்யுள்;—"கொங்கலர் கோதைக் குமரி மடநல்லாண்—மங்கலங் கூற மலிவெய்திக்—கங்கையாள்—பூம்புன லாகங் கெழீஇயினன் போரடுதோள்—வேம்பார் தெரியலெம் வேந்து.'' எனவரும். அறிவோர் வேந்தனுக்கு ஆய்ந்திவைசெய்கென உறுதிகூறிய ஓம்படைநிலைக்குச் செய்யுள்;—"ஒன்றி விரண்டாய்ந்து மூன்றடக்கி நான்கினல்—வென்று களங்கொண்ட வேல்வேந்தே—சென்றுலா—மாழ்கடல்சூழ் வையகத் தைந்துவென் றாறகற்றி—யேழ்கடிந் தின்புற் றிரு.'' எனவரும். ஒன்று, ஞானம்; ஆன்மா என்றுமாம். இரண்டு, காரணகாரியங்கள்; புண்ணியபாவம் என்றுமாம். மூன்று, நட்புப் பகை நொதுமல்; உச்சாகசத்தி பிரபுசத்தி மந்திரசத்தி என்றுமாம். நான்கு, யானை தேர் குதிரை காலாள்; சாமதானபேத தண்டம் என்றுமாம். ஐந்து, செவிமெய்கண்வாய்மூக்கு எனப்பெயரிய பொறிகள். ஆறும் ஏழும் "நாடிய நட்புப் பகைசெலவு நல்லிருக்கை—கூடி னரைப்பிரித்தல் கூட்டலா—நீடிலா—வேட்டங் கடுஞ்சொல் மிகுதண்டஞ் சூதுபொரு—ளீட்டங்கட் காமமிவை யேழ்.'' என முறையே இவையாம். வழிபடுதெய்வ நிற்புறங்காப்பப் பொலிமினென்னும் புறநிலைவாழ்த்திற்குச் செய்யுள்;—"கொடிபடு முத்தலைவேற் கூற்றக் கணிச்சிக்—கடிபடு கொன்றையான் காப்ப—நெடிதுலகிற்—பூமலி நாவற் பொழிலகத்துப் போய்நின்ற—மாமலை போன் மன்னுக நீ.'' எனவரும். மூவர்கொடியுளும் ஒன்றொடுபொரீஇ மேவரவுரைத்த வியன்கொடிநிலைக்குச் செய்யுள்;—"பூங்கணெடுமுடிப் பூவைப்பூ மேனியான்—பாம்புண் பறவைக் கொடிபோல—வோங்குக—பல்யானை மன்னர் பணியப் பனிமலர்த்தார்க்-கொல்யானை மன்னன் கொடி.'' எனவரும். சோவினையழித்த துளவணிமாயோன் மேவருவிறலினை வியந்தகந்தழிக்குச் செய்யுள்;—"மாயவன் மாய மதுவான் மணிநிரையு—ளாயனு வெண்ணலவனருளான்—காயக்—கழலவிழக் கண்கனலக் கைவளையார் சோரச்—சுழலழலுள் வைகின்று சோ.'' எனவரும். எரிசுடர்வேலவர்க்கு இளகியவுள்ளத் தரிமலர்க்கண்ணியர் ஆடியவள்ளிக்குச் செய்யுள்;—"வேண்டுதியா னீயும் விழைவோ விழுமிதே—யீண்டியம் விம்ம வினவளையார்—பூண்டயங்கச்—சூலமோ டாடுஞ் சுடர்ச்சடையோன் காதலற்கு—வேலனோ டாடும் வெறி.'' எனவரும். விரும்பியதருஉம் விண்ணவர்தம்முழை அரும்பெறற்புலவரை ஆற்

றுப்படுத்தற்குச் செய்யுள்;—"வெறிகொ ளறையருவி வேங்கடத்துச் செல்வி—னெறிகொள் படிவத்தோய் நீயும்—பொறிகட்—கிருளியும் ஞாலத் திடரெல்லா நீங்க-வருளீயு மாழி யவன்." எனவரும். வீற்றிதொன்றெய்துகம் வியனிலத்தியாமெனப் போற்றருமிறைக்கெதிர் புகழ்ந்தனர்பரவற்குச் செய்யுள்;—"சூடிய வான்பிறையோய் சூழ்சடலை நீடரங்கத்—தாடி யசையா வடியிரண்டும்—பாடி—யுரவுநீர் ஞாலத் துயப்போக வென்று—பரவுதும் பல்காற் பணிந்து." எனவரும். விடுசுடரெறிக்கும் மேனிவானவனைப் படுபயன்கருதிப் பழிச்சினர்பணிதற்குச் செய்யுள்;—"ஆடலமர்ந்தா னடியடைந்தா ரென்பெரு—ரோடரி யுண்க ணுமையொருபாற்—கூடிய—சீர்சாலு மாகத்தைச் செங்க ணழனாகந்—தாராய்த் தழுவப் பெறும்." எனவரும். மருமலர்க்கோதை மடவரறலைவன் விரிமலர்த்தாமம் விழைந்தகைக்கிளைக்குச் செய்யுள்;—"மங்குன் மனங்கவர மான்மாலை நின்றேற்குப்—பொங்கு மருவிப் புனனாடன்—கங்குல்—வருவான்கொல் வந்தென் வனமுலைமேல் வைகித்—தருவான்கொன் மார்பணிந்த தார்." எனவரும். அல்லிடைவிரும்பாது அவன்முயக்கமர்ந்து செல்பவள்செல்வகை தெரிந்தபெருந்திணைக்குச் செய்யுள்;—"வயங்குளைமான் றென்னன் வரையகலந் தோய-வியங்கா விருளிடைச் செல்வேன்—மயங்காமை—யோடரிக் கண்ணு யுறைகழிவாண் மின்னின்றுன்—மாட மறுகின் மழை." எனவரும். வில்லேர்நுதலி விறலோன்மார்பம் புல்லேம்யாமெனப் புலந்தபுலவிக்குச் செய்யுள்;—"மலைபடு சாந்த மலர்மார்ப யாநின்—பலர்படி செல்வம் படியேம்—புலர்விடியல்—வண்டினங்கூட் டுண்ணும் வயல்சூழ் திருநகருட்—கண்டனங் காண்டற் கினிது." எனவரும். இம்மூன்றும் பாட்டுடைத்தலைவனையே கிளவித்தலைவனாகக் கூறலின் அகமாகாது புறமாயின. படிமிசையியங்காப் பணிமொழி மகளிர் கடவுளைநயந்த கடவுட்பக்கத்திற்குச் செய்யுள்;—"நல்கெணி னுமிசையா னேமென்னுஞ் சேவடிமே—லொல்கெணி னுச்சியா னேமென்னு—மல்கிரு—ளாட லமர்ந்தாற் கரிதா லுமையாளையூட லுணர்த்துவதோ ராறு." எனவரும். பூதலத்தரிவையர் பொருவில்வானவரைக் காதலித்துரைத்த கடவுட்பக்கத்திற்குச் செய்யுள்;—"அரிகொண்ட கண்சிவப்ப வல்லினென் னாகம்—புரிகொண்ட நூல்வடுவாப் புல்லி—வரிவண்டு—பண்ணலங்கூட் டுண்ணும் பனிமலர்ப் பாசூரெ—னுண்ணலங் கூட்டுண்டா னூர்." எனவரும். இழையணிமங்கையர் ஈறிலகாமங் குழவிமருங்கிற் கூறியபகுதிக்குச் செய்யுள்;—"வரிப்பந்து கொண்டொளித்தாய் வாள்வேந்தன் மைந்த—வரிக்கண்ணி வஞ்சி யலற—வெரிக்கதிர்வேற்—செங்

கோல னுங்கோச் சினக்களிற்றின் மேல்வரினு—மெங்கோலந் தீண்ட லினி." எனவரும். நீங்காக்காதன் மைந்தருமகளிரும் பாங் குறக்கூடும் பதிநிலையுரைத்தற்குச் செய்யுள்;—"ஊடிய வூட லகல வுளநெகிழ்ந்து—வாடிய மென்றோள் வளையொலிப்பக்—கூடிய பின்—யாமநீ டாகென்ன யாழ்மொழியார் கைதொழூஉ—மேமநீர்க் கச்சியெம் மூர்." எனவரும். (கக)

கூகஅ. சாற்று தொழிந்தவுஞ் சாற்றிய திணைவயி
னேற்றன பொதுவு மெனவிரு திறனு
மோதிய புறப்பொரு ளொழிபெனப் படுமே.

இது புறப்பொருளொழிபு இவையென்கின்றது.

இ - ள். மேற்கூறாது ஒழிந்தவும் மேற்கூறிப்போந்த திணைக ளினிடத்து இயைவனவாகிய பொதுவுமென்ற இருகூற்றுத்துறை களும் முற்கூறிய புறப்பொருளொழிபென்று சொல்லப்படும். எ-று.

அங்ஙனம் இருவகைத்தாதல் மேற்கூறுந் துறைகளானும் அவற்றிற்குக் காட்டும் உதாரணங்களானும் உய்த்துணர்ந்துகொள்க.

கூகக. வேந்திடை தெரிதல் வேண்டி யேந்துபுகழ்ப்
போந்தை வேம்பே யாரென வரூஉ
மாபெருந் தானையர் மலைந்த பூவுந்
துன்னருஞ் சிறப்பிற் றொடுகழன் மன்னனை
யுன்னஞ் சேர்த்திய வுன்ன நிலையு
மேழக மூரினு மின்ன னென்றவன்
றாழ்வி லூக்கத் தேழக நிலையு
மேந்துபுக ழிறைமக ளிளமை நோக்கான்
வேந்தியல் பூண்ட மற்றதன் பகுதியுந்
துளக்கமில் வயவன் றொடுகழல் புனைதலுங்
களத்திடை வீழ்ந்தோர்க்குக் கற்கண் டிடுதலுங்
கற்கோ ணிலையுங் கன்னீர்ப் படுத்தலு
மற்றவை நிரைத்த வத்துறைப் பகுதியுங்
கன்னாட் டிடுதலுங் கன்முறை பழிச்சலும்
பொன்னா ரிற்கொடு புகுதலு மதாஅன்று
நனிமிகு சுரத்திடைக் கணவனை யிழந்து

தனிமகள் புலம்பிய முதுபாலை யானும்
வாகை வேலவன் வழங்கருஞ் சுரத்திடைத்
தோகையை யிழந்து துளங்குசுர நடையு
மனைவியை யிழந்து மனைவயி னிருந்தோன்
றனிநிலை யுரைத்த தபுதார நிலையு
மிவர்பூண் மொய்ம்ப னிறந்தபின் மனையோ
டவமேற் கொண்ட தாபத நிலையு
மாய்பெருஞ் சிறப்பிற் சிறுவற் பயந்த
தாய்தப வரூஉந் தலைப்பெய னிலையும்
பல்லிதழ் மழைக்கட் பாலகன் மாய்ந்தெனப்
புல்லிய பெருங்கிளைப் பூசன் மயக்கமும்
வேந்தன் மாய்ந்தென வியலிடம் புலம்பிய
வாய்ந்த வத்துறைப் பகுதியு மீமத்து
நல்லோள் கணவனொடு நளியழற் புகீஇச்
சொல்லிடை யிட்ட மாலை நிலையுங்
கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச்
செல்வோர் செப்பிய மூதா னந்தமுங்
கொடியான் கூர்ங்கணை குளிப்பத் தன்றொழின்
முடியா னவிந்த வத்துறைப் பகுதியு
மாடமைத் தோளி விரிச்சியுஞ் சேர்கியும்
வேறுபட வஞ்சி விதும்பா னந்தமுந்
தவப்பெ ரியதோர் வெஞ்சமங் குறுகு
மவற்கி ரங்கிய வத்துறைப் பகுதியுந்
தலைவன்விண் புகவுயிர் தாங்கின னென்றணங்
கலமர லெய்திய வானந்தப் பையுளுங்
கொடித்தேர் மன்னவன் மாய்ந்தெனக் குறைவுற்
றடுத்தோர் புலம்பிய கையறு நிலையொடு
கழிந்தோன் றன்புகழ் காதலித் துரைத்த
மொழிந்த மற்றதன் பகுதியு மதாஅன்
றேதமி லறமுத லியல்பிவை யென்னு
மூதுரை பொருந்திய முதுமொழிக் காஞ்சியு
மாற்றருங் கூற்றம் வருமுனந் தீதொரீஇப்

போற்றுமி னன்றெனப் புகல்பெருங் காஞ்சியு
மேதகு முனிவர் விளம்பிய நெறிமுறை
போதக வென்ற பொருண்மொழிக் காஞ்சியு
நிலமிசை யுலகி னெறிமை கூறிய
புலவ ரெய்தும் புத்தே ணாடுந்
தலைவரும் பொருளைத் தக்காங் குணர்த்தி
நிலையாமை யுரைத்த நீண்முது காஞ்சியு
மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப்
பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்தொடு
துவர்வாய்ப் பேதையைத் தோய்ந்து காதலன்
கவலையி லேமெனக் கழறிய் முல்லையு
மேரா ரகட்டு ரெய்திய காதலன்
வாரா முன்கார் வந்தகார் முல்லையும்
வார்கழற் பகைஞரை வணக்கிய மன்னவன்
றேர்வர வுரைத்த தேஎர் முல்லையு
மாண்டகை யகல வணங்கழி யில்வயி
னாண்டுணை யாவுறாஉ நாஅண் முல்லையும்
புல்வளம் பழித்துப் புரவலற் புகழ்ந்துதம்
மில்வள மிகுத்த வில்லாண் முல்லையும்
வய லுழு பகட்டொடு மணுளனை மனையாள்
பயிலுறப் பொரீஇய பகட்டு முல்லையு
மாலை மார்பன் மடந்தையைப் புணர்த்த
பாலை வாழ்த்திய பாஅன் முல்லையு
மாரமு தத்தினு மன்ப னல்கிய
காரட கினிதெனுங் கற்பு முல்லையு
மேவரு கணவன் றணப்பத் தன்னிறைக்
காவல் கூறலுங் கடிநக ரடைந்தவ
னன்னவன் பெருவள னேத்தலு மாகிய
முன்னதன் பகுதியோ ரிரண்டு மதாஅன்று
கொடுப்போ ரேத்திக் கொடாஅர்ப் பழித்தலும்
விடுத்த லறியா விறல்புரி வாகையுள்
வாணிகன் வென்றியு முழவன் வென்றியுங்

கோணெறி பிழையா மல்ல வென்றியு
மிகல்புரி யேறுெடு கோழியு மெதிர்வன்
றகருடன் யானை தணப்பில்வெண் பூழொடு
சிவல்கிளி பூவை செழும்பரி தேரோ
டிவர்தருஞ் சூதியாழ் பாட லாடல்
பிடியென நின்ற பெரும்பெயர் வென்றியோ
டடைவுறக் கிடந்த வறுபதிற் றிரண்டு
மின்னன பிறவு மெழுவகைத் திணையுட்
டுன்னிய வொழிபெனத் தூக்கினர் கொளலே.

இது முற்கூறிய ஒழிபு இத்துணைத்துறையுடைத்தென்கின்றது.

இ - ள். வேந்திடைதெரிதல் வேண்டியேந்துபுகழ்ப் போந்தைவேம்பே ஆரெனவரூஉம் மாபெருந்தானையர் மலைந்தபூமுதல் ஈறுகிய பிடியெனநின்ற பெரும்பெயர்வென்றியுமெனப் பொருத்தமுறக் கிடந்த அறுபத்திரண்டுதுறையும் இவைபோல்வனபிறவும் வெட்சிமுதலாக மேற்கூறிய எழுவகைத்திணையுள்ளுஞ் செறிந்த ஒழிபென்று ஆராய்ந்துகொள்க. எ - று.

வேந்திடைதெரிதல்வேண்டி ஏந்துபுகழ்ப் போந்தைவேம்பே ஆரெனவரூஉம் மாபெருந்தானையர் மலைந்தபூமூன்றனுட் போந்தைக்குச் செய்யுள்;—"குடையலர் காந்தட்டன் கொல்லிச் சுனைவாய்த்—தொடையவிழ் தண்குவளை சூடான்—புடைதிகழுந்—தேரதிரப் பொங்குந் திருந்துவேல் வானவன்—போரெதிரிற் போந்தையாம் பூ." எனவரும். வேம்புக்குச் செய்யுள்;—"தொடியணிதோ ளாடவர் தும்பை புனையக்—கொடியணிதேர்க் கூட்டணங்கும் போழ்தின்—முடியணியுங்—காத்தல்சால் செங்கோற் கடுமா னெடுவழுதி—யேத்தல்சால் வேம்பி னிணர்." எனவரும். ஆர்க்குச் செய்யுள்;—"கொல்களி றூர்வர் கொலைமலி வாண்மறவர்—வெல்கழல் வீக்குவர் வேலிளையர்—மல்குங்—கலங்க லெர்லிபுனற் காவிரி நாட—னலங்க லமரழுவத் தார்." எனவரும். துன்னருஞ் சிறப்பிற் றொடுகழன்மன்னனை உன்னஞ்சேர்த்திய உன்னநிலைக்குச் செய்யுள்;—"துன்னருந் தானைத் தொடுகழலான் றுப்பெதிர்ந்து—முன்னர் வணங்கார் முரண்முருங்க—மன்னரு—மீடெலாந் தாங்கி யிகலவிந்தார்நியுநின்—கோடெலா முன்னங் குழை." எனவரும். ஏழகமூரினும் இன்னனென்றவன் தாழ்விலூக்கத்து ஏழகநி

லைக்குச் செய்யுள்;—"எம்மனை யாமகிழ வேழக மேற்கொளினுந்—தம்மதி ருழ்வீழ்த் திருக்குமே-தெம்முனையுண்—மாறெடு தோன்றி மறனுங்கா லேழகத்-தாெனாடு நேரா மரசு." எனவரும். ஏந்துபுகழி றைமகன் இளமைநோக்கான் வேந்தியல்பூண்ட மற்றதன்பகுதிக்குச் செய்யுள்;—"வேண்டார் பெரியர் விறல்வேலோன் ருனிளையன்—பூண்டான் பொழில்காவ லென்றுரையா—மீண்டு—மருளன்மின் கோள்கருது மால்வரை யாளிக்—குருளையுங் கொல்களிற்றின் கோடு." எனவரும். துளக்கமில்வயவன் தொடுகழல்புனைதற்குச் செய்யுள்;—"வாளமரின் முன்விலங்கி வான்படர்வார் யார்கொலோ—கேளல்லார் நீக்கிய கிண்கிணிக்காற்—காளை—கலங்கழல் வாயிற் கடுத்தீற்றி யற்ருற்—பொலங்கழல் கான்மேற் புனைவு." எனவரும். களத்திடை வீழ்ந்தோர்க்குக் கற்கண்டிடுதற்குச் செய்யுள்;—"மிகையணங்கு மெய்ந்நிறீஇ மீளி மறவர்—புகையணங்கப் பூமாரி சிந்திப்—பகையணங்கும்—வீளைக் கடுங்கணையான் வேருகி விண்படர்ந்த—காளைக்குக் கண்டமைத்தார் கல்." எனவரும். கற்கோணிலைக்குச் செய்யுள்;—"பூவொடு நீர்தூவிப் பொங்க விரைபுகைத்து—நாவுடை நன்மணி நன்கியம்ப—மேவா-ரழன்மறங் காற்றி யவிந்தாற்கென் றேத்திக்—கழன்மறவர் கைக்கொண்டார் கல்." எனவரும். கன்னீர்ப்படுத்தற்குச் செய்யுள்;—"காடு கனலக் கனலோன் சினஞ்சொரியக்—கூடிய வெம்மை குளிர்கொள்ளப்—பாடி-நயத்தக்க பண்ணி நறுவிரைகொண் டாட்டிக்—கயத்தகத் துய்த்திட்டார் கல்." எனவரும். மற்றவைநிரைத்த அத்துறைப்பகுதிக்குச் செய்யுள்;—"கணனொர்ந் துவப்பக் கடுங்கண் மறவர்—பிணனொர்ந்து பேய்வழங்கு ஞாட்பி—னிணனொர்—விழுக்கினால் வேய்ந்த விறல் வேலோர் கல்லை—யொழுக்கினா ரொன்றொருவர் முன்." எனவரும். கல் நாட்டுதற்குச் செய்யுள்;—"மாலை துயல மணியெறிந்து மட்டு குத்துப்—பீலி யணிந்து பெயர்பொறித்து—-வேலமரு—ளாண்டக நின்ற வமர்வெய்யோற் காகென்று—காண்டக நாட்டினார் கல்." எனவரும். கன்முறைபழிச்சற்குச் செய்யுள்;—"அடும்புகழ் பாடி யழுதழுது நோனு—விடும்பையுள் வைகிற் றிருந்த—கடும்பொடு—கைவண் குரிசிற்கற் கைதொழூஉச் செல்பாண—தெய்வமாய் நின்ருன் றிசைக்கு." எனவரும். கடும்பு, குடும்பம். பொன்னூர் இற்கொடுபுகுதற்குச் செய்யுள்;—"வாட்புலி யூட்டி வடிமணி நின்றியம்பக்—கோட்புலி யன்ன குரிசிற்க—லாட்கடிந்து—விற்கொண்ட வென்றி விறன்மறவ ரெல்லாரு—மிற்கொண்டு புக்காரியைந்து." எனவரும். நணிமிகுசுரத்திடைக் கணவனையிழந்து தனிமகள்புலம்பிய முதுபாலைக்குச் செய்யுள்;—"நீர்மலி கண்ணொடு

நின்றே னிலையிரங்காய்—தார்மலி மார்பன் றகையகலஞ்—சூர்ம களே—வெள்ளில் விளைவுதிரும் வேயோங்கு வெஞ்சுரத்துக்—கொள்ளனீ கோடல் கொடிது.'' எனவரும். வாகைவேலவன் வழங்கருஞ்சுரத்திடைத் தோகையையிழந்து துளங்குசுரநடைக்குச் செய்யுள்;—“உரவெரி வேய்ந்த வுருப்பவிர் கானுள்—வரவெதிரின் வைவேல்வாய் வீழ்வாய்—கரவினற்—பேதையைப் பெண்ணியலைப் பெய்வளையை யென்மார்பிற்—கோதையைக் கொண்டொளித்த கூற்று.'' எனவரும். மனைவியையிழந்து மனைவயினிருந்தோன் தனிநிலையுரைத்த தபுதாரநிலைக்குச் செய்யுள்;—“பைந்தொடி மேலுலக மெய்தப் படருழந்த—மைந்தன் குரிசில் மழைவள்ள—லெந்தை—தபுதாரந் தாழ்ந்த தனிநிலைமை கேளாச்—செவிடா யொழிகென் செவி.'' எனவரும். இவர்பூண்மொய்ம்பன் இறந்தபின்மனையோள் தவமேற்கொண்ட தாபதநிலைக்குச் செய்யுள்;—“கலந்தவனைக் கூற்றங் கரப்பக் கழியா—தலைந்தினையு மவ்வளைத் தோளி—புலந்தவன்—றாரொடு பொங்கி வறிதசைஇத் தான்மிசையுங்—காரடகின் மேல்வைத்தாள் கை.'' எனவரும். ஆய்பெருஞ்சிறப்பிற் சிறுவற்பயந்த தாய்தபவரூஉந் தலைப்பெயனிலைக்குச் செய்யுள்;—“இடம்படு ஞாலத் தியல்போ கொடிதே—தடம்பெருங்கட் பாலக னென்னுங்—கடன்கழித்து—முள்ளெயிற்றுப் பேதையாள் புக்காள் முரணவியா—வள்ளெயிற்றுக் கூற்றத்தின் வாய்.'' எனவரும். பல்லிதழ்மழைக்கட் பாலகன்மாய்ந்தெனப் புல்லியபெருங்கிளைப் பூசன்மயக்கத்திற்குச் செய்யுள்;—“அலர்முலை யஞ்சொ லவளொழிய வில்லிற்—குலமுதலைக் கொண்டொளித்தலன்றி—நிலமுறப்—புல்லிய பல்கிளைப் பூசல் பரியுமோ—கொல்லிய வந்தொழியாக் கூற்று.'' எனவரும். வேந்தன்மாய்ந்தென வியலிடம்புலம்பிய ஆய்ந்த அத்துறைப்பகுதிக்குச் செய்யுள்;—“எண்ணி னிகல்புரிந்தா ரெய்தாத தில்போலுங்—கண்ணெளிர் வேலான் கரந்தபி—னண்ணல்—புகழொடு பூசன் மயங்கிற்றாற் பொங்கு—மகழ்கடல் வேலி யகம்.'' எனவரும். ஈமத்து நல்லோள் கணவனொடு ளளியழற்புகீஇச் சொல்லிடையிட்ட மாலைநிலைக்குச் செய்யுள்;—“சோலையயி லன்னு டன்கணவன் சொல்லியசொல்—மாலை நினையா மனங்கடைஇக்—காலைப்—புகையழல் வேலோன் புணர்ப்பாகி நின்றா—ளகையழ லீமத் தகத்து.'' எனவரும். இதனைப் பாலையென்று பாடமோதுவாரும் உளர்; அது பாடமன்மை உரையாசிரியர் உரையானும் மாலையீடென்னும் வழக்கானும் உணர்க. கணவனொடுமுடிந்த படர்ச்சிநோக்கிச் செல்வோர்செப்பிய மூதானந்தத்துக்குச் செய்யுள்;—“ஒருயி ராக வுணர்க வுடன்கலந்

தார்க்—கீருயி ரென்ப ரிடைதெரியார்—போரில்—விடனேந்து வேலாற்கும் வெள்வளையி னூட்கு—முடனே யுலந்த துயிர்." என வரும். ஆனந்தம், சாக்காடு. மூதானந்தமென்றார், உழுவலன்பு பற்றி இறத்தலின். கொடியான்கூர்ங்கணை குளிப்பத்தன்றேழில் முடியானவிந்த அத்துறைப்பகுதிக்குச் செய்யுள்;—"முந்தத்தான் மாவொடு புக்கு முனையமருட்—சிந்தத்தார் வந்தார் செருவிலங்கிக்—குந்தத்தாற்—செல்கணை மாற்றிக் குரிசில் சிறைநின்றான்—கொல் கணைவாய் வீழ்தல் கொடிது." எனவரும். சிறை, கரை. ஆடமைத்தோளி விரிச்சியுஞ்சோகியும் வேறுபடவஞ்சி விதும்பானந் தத்திற்குச் செய்யுள்;—"வேந்தார்ப்ப வெஞ்சமத்து வேலழுவந் தாங்கினான்—சாந்தா ரகலத்துத் தாழ்வடுப்புண்—டாந்தணியா—மன்னுத சோகி மயங்கின வாய்ப்புள்ளு—மென்னுங்கொல் பேதை யினி." எனவரும். தவப்பெரியதோர் வெஞ்சமங்குறுகும் அவற்கி ரங்கிய அத்துறைப்பகுதிக்குச் செய்யுள்;—"இன்னுத சோகி யிசை யா விரிச்சியு—மன்னு வலமருமென் னுருயிரு—மென்னுங்கொ—ரூக்கார் மறமன்னர் தோலாத் துடிகறங்கப்—புக்கான் விடலையும் போர்க்கு." எனவரும். தலைவன்விண்புக உயிர் தாங்கினனென்ற ணங்கு அலமரலெய்திய ஆனந்தப்பையுளுக்குச் செய்யுள்;-"புகமொழிய வையகத்துப் பூங்கழற் காளை-திகழொளிய மால்விசும்பு சேர—விகழ்வார்முன்—கண்டே கழிகாத வில்லையாற் கைசோர்ந்து—முண்டே யளித்தென் னுயிர்." எனவரும். கொடித்தேர்மன்னவன் மாய்ந்தெனக்குறைவுற்று அடுத்தோர்புலம்பிய கையறுநிலைக்குச் செய்யுள்;—"தாயன்னான் றூர்விலங்கி வீழத் தளர்வோடு—நீயென் னுய் நின்றாயென் னெஞ்சளியை—யியென்றூர்க்—கில்லென்ற றேற்றூ விகல்வெய்யோன் விண்படரப்—புல்லென்ற நாப்புலவர் போன்று." எனவரும். கழிந்தோன்றன்புகழ் காதலித்துரைத்த மொழிந்தமற்றதன்பகுதிக்குச் செய்யுள்;—"நின்று நிலமிசையோ ரேத்த நெடுவிசும்பிற்—சென்று கழிந்தான் செருவெய்யோ—னென்று—மழலுங் கதிர்வே லவன்புகழ் பாடி—யுழலு முலகத் துயிர்" எனவரும். ஏதமிலறமுதல் இயல்பிவையென்னும் மூது ரைபொருந்திய முதுமொழிக்காஞ்சிக்குச் செய்யுள்;—"ஆற்றி னுணரி னருளறமா மாற்றூர்க்குப்—போற்றூர் வழங்கிற் பொருள் பொருளா—மாற்றிப்—புகலா தொழுகும் புரிவளையார் மென்றோ—ளகலா தளித்தொழுக லன்பு." எனவரும். மாற்றருங்கூற்றம் வரு முனந்தீதொரீஇப் போற்றுமினன்றெனப் புகல்பெருங்காஞ்சிக்குச் செய்யுள்;—"ஆயா தறிவயர்ந் தல்லாந் தகலிடத்து—மாயா நிதிய மனைச்செறீஇ—யீயா—திறுகப் பொதியன்மி னின்றோடு நாளைக்—

குறுக வருமரோ கூற்று." எனவரும். மேதகுமுனிவர் விளம்பிய நெறிமுறை போதகவென்ற பொருண்மொழிக்காஞ்சிக்குச் செய்யுள்;—"ஆய பெருமை யவிர்சடையோ ராய்ந்துரைத்த—பாய நெறிமேற் படர்ந்தொடுங்கித்—தீய—விருளொடு வைகா திடம்படு ஞாலத்—தருளொடு வைகி யகல்." எனவரும். நிலமிசையுலகின் நெறிமைகூறிய புலவரெய்தும் புத்தேளுட்டுக்குச் செய்யுள்;—"பொய்யில் புலவர் புரிந்துறையு மேலுலக—மையமொன் றின்றி யறிந்துரைப்பின்—வெய்ய—பகலின் றிரவின்று பற்றின்று துற்றின்—றிகலின் றிளிவரவு மின்று." எனவரும். தலைவரும்பொருளைத் தக்காங்குணர்த்தி நிலையாமையுரைத்த நீள்முதுகாஞ்சிக்குச் செய்யுள்;—"இளமை நிலைதளர மூப்போ டிறைஞ்சி—யுளமை யுணரா தொடுங்கி—வளமை—வியப்போவ வில்லா வியலிடத்து வெஃகா—துயப்போக வெண்ண லுறும்." எனவரும். மலர்தலையுலகத்து மரபுநன்கறியப் பலர்செலச்செல்லாக் காடுவாழ்த்துக்குச் செய்யுள்;—"முன்புறந் தான்காணு மிவ்வுலகை யிவ்வுலகிற்—றன்புறங் கண்டறிவார் தாமில்லை—யன்பி—னழுதார்கண் ணீர்விடுத்த வாறுடிக் கூகை—கழுதார்ந் திரவழங்குங் காடு." எனவரும். துவர்வாய்ப்பேதையைத் தோய்ந்துகாதலன் கவலையிலேமெனக் கழறியமுல்லைக்குச் செய்யுள்;—"ஊதை யுளர வொசிந்து மணங்கமழுங்—கோதைபோன் முல்லைக் கொடிமருங்குற்—பேதை—குவைஇ யிணைந்த குவிமுலை யாகங்—கவைஇக் கவலை யிலம்." எனவரும். ஏராரகட்டு ரெய்தியகாதலன் வாராமுன்கார் வந்த கார்முல்லைக்குச் செய்யுள்;—"புனையும் பொலம்படைப் பொங்குளைமான் றிண்டேர்—துனையுந் துணைபடைத் துன்னார்—முனையு—ளடன்முகந்த தானை யவர்வரா முன்னங்—கடன்முகந்து வந்தன்று கார்." எனவரும். வார்கழற்பகைஞரை வணக்கியமன்னவன் தேர்வரவுரைத்த தேர்முல்லைக்குச் செய்யுள்;—"தீர்ந்து வணங்கித் திறையளப்பத் தெம்முனையு—ளூர்ந்துநங் கேள்வ ருழைவந்தார்—சார்ந்து—பரிகோட்ட மின்றிப் பதவார்ந் துகளுந்—திரிகோட்ட மாவிரியத் தேர்." எனவரும். பரி, செலவு. ஆண்டகையகல அணங்கழியில்வயின் நாண்டுணையாவுறூஉம் நாண்முல்லைக்குச் செய்யுள்;—"கொய்தார மார்பிற் கொழுநன் றணந்தபின்—பெய்வளை யாட்குப் பிறிதில்லை—வெய்ய—வளிமறையு மின்றி வழக்கொழியா வாயி—னளிமனைக்கு நற்றுணை நாண்." எனவரும். வளிமறை, கதவு. புல்வளம்பழித்துப் புரவலற்புகழ்ந்துதம் இல்வளமிகுத்த இல்லாண்முல்லைக்குச் செய்யுள்;—"கல்லெனீர் வேலிக் கணவன் கழல்வாழ்த்தி—யொல்லும் வகையால் விருந்தோம்பிச்—

செல்லுந்த—மிற்செல்வ மன்றி யிரந்தவர்க் கீகலாப்—புற்செல்வம் பூவா புகழ்." எனவரும். வயலுழுபகட்டொடு மனுளனைமனை யாள் பயிலுறப்பொரீஇய பகட்டுமுல்லைக்குச் செய்யுள்;—"உய்த் தல் பொறுத்த லொழிவின் ருலிவயலு—ளெய்த்த லறியா திடை யின்றி—வைத்த—படுநுகம் பூண்ட பகட்டொடு மானு—நெடு மொழியெங்கணவ னேர்." எனவரும். மாலைமார்பன் மடந்தை யைப்புணர்த்த பாலைவாழ்த்திய பான்முல்லைக்குச் செய்யுள்;—"திங் கள் விளங்குந் திகழ்ந்திலங்கு பேரொளி—யங்கண் விசும்பி னகத் துறைக—செங்கட்—குயிலனைய தேமொழிக் கூரெயிற்றுச் செவ் வாய்ப்—பயில்வளையை நல்கிய பால்." எனவரும். ஆரமுதத்தினும் அன்பனல்கிய காரடகினிதெனுங் கற்புமுல்லைக்குச் செய்யுள்;— "நெய்கொ ணிணந்தூ நிறைய வமைத்திட்ட—குய்கொ ளடிசில் பிறர்நுகர்க—வைகலு—மங்குழைக் கீரை யடகு மிசையினு— மெங்கணவ னல்க லினிது." எனவரும். மேவருகணவன் தணப் பத்தன்னிறைக் காவல்கூறற்குச் செய்யுள்;—"மௌவல் விரியு மணங்கமழு மான்மாலைத்—தையன் முதுகுரம்பைத் தான்றமியள்- செவ்வ—னிறைகாக்கு மிவ்வுலகி னிற்பிறந்த நல்லா—ணிறை காப்ப வைகு நிறை." எனவரும். கடிநகரடைந்தவள் அன்னவன் பெருவளனேத்தற்குச் செய்யுள்;—"ஊழிதொ றூழி தொழப்பட் டுலைவின்றி—யாழிசூழ் வையத் தகமலிய—வாழி—கருவரை மார் பினெங் காதல னல்க—வருவிருந் தோம்பு வளம்." எனவரும். கொடுப்போரேத்திக் கொடாஅர்ப்பழித்தற்குச் செய்யுள்;—"சீர்மிகு நல்லிசை பாடிச் செலவயர்துங்—கார்முகி லன்னூர் கடைநோக்கிப்- போர்மிக—மண்கொண்ட வேன்மற மன்னரே யாயினும்—வெண் கொண்ட லன்னுரை விட்டு." எனவரும். வாணிகன்வென்றிக்குச் செய்யுள்;—"காடுங் கடுந்திரை நீர்ச்சுழியுங் கண்ணஞ்சான்—சா டுங் கலனும் பலவியக்கி—நீடும்—பலிசையாற் பண்டம் பகர்வான் பரியான்—கலிகையா னீக்கல் கடன்." எனவரும். உழவன்வென் றிக்குச் செய்யுள்;—"மண்பத னேக்கி மலிவயலும் புன்செய்யுங்— கண்பட வேர்பூட்டிக் காலத்தா—லெண்பதனுந்—தத்துநீ ரார்க்குங் கடல்வேலித் தாயர்போல்—வித்தித் தருவான் விளைவு." எனவ ரும். எண்பதம், நெல்லுவரகு முதலிய எட்டு உணவு. மல்லவென் றிக்குச் செய்யுள்;—"கண்டான் மலைந்தான் கதிர்வானங் காட் டியே—கொண்டான் பதாகை மறமல்லன்—வண்டார்க்கு—மாலை துயலு மருவிய மாமலையே—போலுந் திரடோள் புடைத்து." என வரும். ஏற்றுவென்றிக்குச் செய்யுள்;—"குடைவரை யேந்திய கோவ லனே கொண்டா—னடையவிழ் பூங்கோதை யஞ்சன்—மிடைய

ரவு—மன்றங் கறங்க மயங்கப் பறைபடுத்—தின்று நமர்விட்ட வேறு." எனவரும். கோழிவென்றிக்குச் செய்யுள்;—"பாய்ந்து மெறிந்தும் படிந்தும் பலகாலுங்—காய்ந்தும்வாய்க் கொண்டுங் கடுஞ்சேவ—லாய்ந்து—நிறங்கொண்டு வித்தகர் நேர்விட்ட கோழிப்—புறங்கண்டுந் தான்வருமே போர்க்கு." தகர்வென்றிக்குச் செய்யுள்;—"அருகோடி நீங்கா தணைதலு மின்றித்—திரிகோட்ட மாவிரியச் சீறிப்—பொருகளம்—புக்கு மயங்கப் பொருது புறவாயை—நக்குமா நல்ல தகர்." எனவரும். யானைவென்றிக்குச் செய்யுள்;—"கஞ்சுகம் வாய்ந்த கவளநெடுங் கைக்கொண்ட—குஞ்சரம் வென்ற கொலைவேழந்—துஞ்சா—துழலையும் பாய்ந்திறுத் தோடாது தான்றன்—னிழலையுந் தாய்ச்சுளியு நின்று." எனவரும். கஞ்சுகம், அட்டி மதுரம். பூழ்வென்றிக்குச் செய்யுள்;—"சொல்லுஞ் சுவட்டவர் சொல்லுக சொல்லுங்காற்—சொல்லும் பலவுள சொன்னபின்—வெல்லு—நலம்வர நாடி நடுங்காது நூற்கட்—புலவரா லாய்ந்த மைந்த பூழ்." எனவரும். சொல்லுஞ்சுவட்டவர், குறும்பூழாளிகள். சொல்லும் பலவுள என்பது, தீற்றும் அரிசி மந்திரம், பச்சிலை பிசைந்து தடவும் மந்திரம், செவியுளூறுத்தும் மந்திரம் முதலியவாம். சிவல்வென்றிக்குச் செய்யுள்;-"ஒட்டியா ரெல்லா முணரார் புடைத்தபின்—விட்டோட வேண்டுமோ தண்ணுமை—விட்ட—சுவடேற்கு மாயிற் சுடரிழாய் சோர்ந்து—கவடேற்க வோடுங் களத்து." எனவரும். கிளிவென்றிக்குச் செய்யுள்;—"இலநா முரைப்பதன்க ணெல்வளை நாணப்—பலநாட் பணிபதமுங் கூறிச்-சிலநாளுட்—பொங்கரி யுண்கண்ணாள் பூவைக்கு மாறாகப்—பைங்கிளியைக் கற்பித்தாள் பாட்டு." எனவரும். பூவைவென்றிக்குச் செய்யுள்;—"புரிவொடு நாவினுற் பூவை புணர்த்துப்—பெரிய வரியவை பேசுந்—தெரிவளை—வெள்ளெயிற்றுச் செவ்வாய் வரியுண்கணுள்வளர்த்த—கிள்ளை கிளந்தவைகீண் டிட்டு." எனவரும். குதிரைவென்றிக்குச் செய்யுள்;—"ஐந்து கதியும் பதினெட்டுச் சாரியையுங்—கந்து மறமுங் கறங்குளைமா—முந்துற—மேல்கொண் டவை செலீஇ வென்வேலான் மேம்பட்டான்—வேல்கொண்ட கண்ணை மீட்டு." எனவரும். கதி, தாரை; சாரியை, சுற்றுவரவு. தேர்வென்றிக்குச் செய்யுள்;—"ஒலிமணித் திண்டே ருடையாரை வெல்லுங்—கலின்மணித் திண்டேராற் காளைக்-கலிமாப்-பலவுடன் பூட்டிப் படர்சிறந் தைந்து—செலவொடு மண்டிலஞ் சென்று." எனவரும். சூதுவென்றிக்குச் செய்யுள்;—"கழகத் தியலுங் கவற்றினிலையு—மழகத் திருநுதலா ளாய்ந்து—புழகத்துப்—பாய வகையாற் பணிதம் பலவென்று—ளாய நிலையு மறிந்து." எனவரும்.

பணிதம், ஒட்டம். யாழ்வென்றிக்குச் செய்யுள்;—“பாலை படுமலை பண்ணி யதன்கூட்டங்—கோலஞ்செய் சீறியாழ் கொண்டபின்—மேலைச்—சுவையெலாந் தோன்ற வெழீஇயினுள் சூழ்ந்த—வவை யெலா மாக்கி யணங்கு.” எனவரும். பாடல்வென்றிக்குச் செய்யுள்;—“வண்டுறை கூந்தல் வடிக்கண்ணுள் பாடினுள்—வெண்டுறையுஞ் செந்துறையும் வேற்றுமையாக்—கண்டறியக்—கின்னரம் போலக் கிளையமைந்த தீந்தொடையா—ழந்நரம்பு மச்சுவையு மாய்ந்து.” எனவரும். ஆடல்வென்றிக்குச் செய்யுள்;—“கைகால் புருவங்கண் பாணி நடைதூக்குக்—கொய்பூங்கொம் பன்னுள் குறிக்கொண்டு—பெய்பூப்—படுகளிவண் டார்ப்பப் பயில்வளைநின் ருடுந்—தொடுகழன் மன்னன் றுடி.” எனவரும். பிடிவென்றிக்குச் செய்யுள்;—“குவளை நெடுந்தடங்கட் கூரெயிற்றுச் செவ்வா—யவளொடு மாவை யிகலி—யிவளொடு—பாணியுந் தூக்கு நடையும் பெயராமைப்—பேணிப் பெயர்ந்தாள் பிடி.” எனவரும். பிடிபோலப் பெயர்ந்தாடலிற் பிடிவென்றியாயிற்று.

“காட்சி யையந் துணிவே யுட்கோள்—பயந்தோர்ப் பழிச்சனலம்பா ராட்ட—னயப்புற் றிரங்கல் புணரா விரக்கம்—வெளிப்பட விரத்த லெனவிவ் வொன்பது—மாண்பாற் கூற்றுக் கைக்கிளை யாகும்.” எனக்கூறி, இவற்றிற்கு முறையே உதாரணம்,

“கருந்தடங்கண் வண்டாகச் செவ்வாய் தளிரா—வரும்பிவர் மென்முலை தொத்தாப்—பெரும்பணைத்தோட்—பெண்டகைப் பொலிந்த பூங்கொடி—கண்டேங் காண்டலுங் களித்தவெங் கண்ணே.” எனவும், “தாமரைமேல் வைகிய தையல்கொ ருழ்தளிர்க்—காமருவும் வானேர்கள் காதலிகொ—றேமொழி—மையம ருண்கண் மடந்தைக—ணைய மொழியா தாழுமென் னெஞ்சே.” எனவும், “திருநுதல் வேர்வரும்புந் தேங்கோதை வாடு—மிருநிலஞ் சேவடியுந் தோயு—மரிபரந்த—போகித ழுண்கணு மிமைக்கு—மாகு மற்றிவ ளகலிடத் தணங்கே.” எனவும், “களவை பெருகக் கரந்தென் மனத்திருந்து—செவ்வாய்ப் பெருந்தோட் டிருநுதலா—ளவ்வாயி—லஞ்சொன் மாரிபெய் தவியா—ணெஞ்சம் பொத்தி நிறைசுடு நெருப்பே.” எனவும், “கல்லருவி யாடிக் கருங்களிறு காரதிரு—மல்லலஞ் சாரன் மயிலன்ன—சில்வளைப்—பலவொலிக் கூந்தலைப் பயந்தோர்—நிலவரை மலிய நீடுவா ழியரே.” எனவும்,“அம்மென் கிளவி கிளிபயில வாயிழை—கொம்மை வருமுலை கோங்கரும்ப—விம்மலை—நறும்பூஞ் சார லாங்கட்—குறுஞ்சுனை மலர்ந்தன தடம்பெருங் கண்ணே.” எனவும், “பெருமட நோக்கிற் சிறு

நுதற் செவ்வாய்க்—கருமழைக்கண் வெண்முறுவற் பேதை—திரு முலை—புல்லும் பொறியி லேனுழை—நில்லா தோடுமென் னிறையி னெஞ்சே." எனவும், "இணரார் நறுங்கோதை யெல்வளையாள் கூட்டம்—புணராமற் பூச றரவு—முணராது—தண்டா விழுப்படர் நலியவு—முண்டா லென்னுயி ரோம்புதற் கரிதே." எனவும், "உர வொலி முந்நீ ருலாய்நிமிர்ந் தன்ன—கரவரு காமங் கனல—விர வெதிர—முள்ளெயி றிலங்கு முகிணகை வெள்வளை—நல்காள் வீடு மென் னுயிரே." எனவும்;

"காண்ட னயத்த லுட்கோண் மெலிதன்—மெலிவொடு வை கல் காண்டல் வலித்தல்—பகன்முனி வுரைத்த லிரவுநீடு பருவரல்-கனவி னரற்ற னெஞ்சொடு மெலிதல்—பெண்பாற் கூற்றுக் கைக் கிளை யாகும்." எனக்கூறி, இவற்றிற்கு முறையே உதாரணம்,

"கடைநின்று காம நலியக் கலங்கி—யிடைநின்ற வூரலர் தூற்றப்—புடைநின்ற—வெற்கண் டிலனங் நெடுந்தகை—தற்கண் டனென்யான் கண்ட வாறே." எனவும், "கன்னவி றோளானைக் காண்டலுங் கார்க்குவளை—யன்னவென் கண்ணுக் கமுதமா—மென் னை—மலைமலிந் தன்ன மார்ப—முலைமலிந் தூழ்முறை முயங்குங் காலே." எனவும், "உள்ள முருக வொளிவளையுங் கைநில்லாக்—கள்ளவிழ் தாரானுங் கைக்கணையா—னெள்ளிச்—சிறுபுன் மாலை தலைவரி—னுறுதுய ரவலத் துய்தலோ வரிதே." எனவும், "குரும் பை வரிமுலைமேற் கோல நெடுங்க—ணரும்பிய வெண்முத் துகுப் பக்—கரும்புடைத்தோட்—காதல்செய் காமங் கனற்ற—வேதி லா ளற் கிழந்தனெ னெழிலே." எனவும், "பிறைபுரை வாணுதல் பீர ரும்ப மென்றோ—ளிறைபுனை யெல்வளை யேக—நிறைபுணையா—யாம நெடுங்கட னீந்துவேன்—காம வொள்ளெரி கனன்றகஞ் சுடு மே." எனவும், "வேட்டவை யெய்தி விழைவொழித்தல் பொய் போலு—மீட்டு மிடைமணிப் பூணனைக்—காட்டென்று—மாமை யொளிநிறம் பசப்பத்—தூமலர் நெடுங்கண் டுயி றுறந் தனவே." என வும், "தன்க ணளியவாய் நின்றேற்குத் தார்விடலை—வன்கண் ணனல்கா னெனவாடு—மென்க—ணிடரினும் பெரிதா லெவ்வம்—பட—ரினும் பெரிதாற் பாவியிப் பகலே." எனவும், "பெண்மே னலிவு பிழையென்னுய் பேதுறீஇ—விண்மே லியங்கு மதிவிலங்கி—மண் மே—னினக்கே செய்பகை யெவன்கொ—லெனக்கே பெரியை வாழிய விரவே." எனவும், "அயர்வொடு நின்றே னரும்படர்நோய் தீர—நயவரும் பள்ளிமே னல்கிக்—கயவர்—கனவிடைத் தமி யேன் வைகக்—கனவிடைத் தோன்றிக் கரத்தனீ கொடிதே."

"ரோடவிழ்தார் யானுந் தொடர வவனுமென்—பாடகச் சீறடி யின் மேற்பணிய—நாடகமா—வைகிய கங்கு றலைவரி—னுய்குவே னுலகத் தளியேன் யானே." எனவும், "மல்லாடு தோளா னளிய வாய் மாவிருட்கட்—செல்லா மொழிக செலவென்பாய்—நில்லாய்-புனையிழை யிழந்த பூச—னினையினு நினைதியோ வாழிய நெஞ் சே." "நல்வளை யேக நலந்தொலைவு காட்டிய—செல்லல் வலித் தேனச் செம்மன்முன்—பொல்லா—வம்புரை யோடு மயங்கிய—வம்பற் பெண்டிரு மறிகவெம் மலரே." எனவும்,

"வேட்கைமுந்துறுதல் பின்னிலை முயறல்—பிரிவிடை யாற் றல் வரவெதிர்ந் திருத்தல்—வராமைக் கழித லிரவுத்தலைச் சேற—லில்லவை நகுதல் புலவியுட் புலம்பல்—பொழுதுகண் டிரங்கல் பரத்தை யேசல்—கண்டுகண் சிவத்தல் காதலிற் களித்தல்—கொண் டகம் புகுதல் கூட்டத்துக் குழைத-லூடலு ணெகிழ்த லுரைகேட்டு நயத்தல்—பாடகச் சீறடி பணிந்தபி னிரங்கல்—பள்ளிமிசைத் தொடர்தல் செல்கென விடுத்தலென—வொன்பதிற் றிரட்டியோ டொன்று முளப்படப்—பெண்பாற் கூற்றுப் பெருந்திணைப் பால." எனக்கூறி, இவற்றிற்கு முறையே உதாரணம்,

"எழுதெழின் மார்ப மெனக்குரித் தாகென்—றழுதழுது வைகலு மாற்றேன்—றொழுதிரப்பல்—வல்லிய மன்ன வயவேலோய் வாழ்கென—வல்லியந்தார் நல்க லறம்." எனவும், "மற்கொண்ட திண்டோண் மறவே னெடுந்தகை-தற்கண்டு மாமைத் தகையிழந்த-வெற்காணப்—பெய்களி யானைப் பிணரெருத்திற் கண்டியான்—கைதொழுதேன் றன்கண் டிலன்." எனவும், "ஓடுகோல்வளையு மூரு மலரறைக—தோடவிழ் தாழைதுறைகமழ்க—கோடுடைய—பூங்கானற் சேர்ப்பன் புலம்புகொண் மான்மாலை—நீங்கானென் னெஞ்சத்து நின்று." எனவும், "காம நெடுங்கட னீந்துங்காற் கை புனைந்த—பூமலி சேக்கைப் புணைவேண்டி—நீமலிந்து—செல்லாய் சிலம்பன் வருதற்குச் சிந்தியா—யெல்லாக நெஞ்ச மெதிர்." என வும், "நுடங்கருவி யார்த்திழியு நோக்கருஞ் சார—லிடங்கழி மான்மாலை யெல்லைத்—தடம்பெருங்கட்—டாரார மார்பன் றமியே னுயிர்தளர—வாரான்கொ லாடும் வலம்." எனவும், "பணையா மறைமுழங்கும் பாயருவி நாடன்—பிணையார மார்பம் பிணையத்—துணையாக்—கழிகாம முய்ப்பக் கனையிருட்கட் செல்கேன்—வழி காண மின்னுக வான்." எனவும், "முற்றா முலையார் முயங்க விதழ் குழைந்த—நற்றா ரகல நகைதரலின்—திற்றார்—கலவே மென நோந்துங் காஞ்சிநல் லூர—புலவேம் புலத்த லரிது." எனவும்,

"ஓங்கிய வேலான் பணியவு மொள்ளிழை—தாங்காள் வரைமார்பிற் ருர்பரிந்—தாங்கே—யடும்படர் மூழ்கி யமைமென்ருேள் வாட—நெடும்பெருங்க ணீந்தின நீர்." எனவும், "இறையே யிறந்தன வெல்வளை யுண்க—ணுறையே பொழிதலு மோவா—நிறையைப்—பருகாப் பகல்கரந்த பையுள்கூர் மாலை—யுருகா வுயங்கு முயிர்." எனவும், "யாமுயங்கு மென்முலையால் யாணர் வயலூரன்—றேமுயங்கு பைந்தார் திரைமுயங்க—யாமுயங்க—வெஃவையர் சேரி யிரவுமிவைபொருந்தாக்—கௌவை கருதிற் கடை." எனவும், "கூடிய கொண்கன் குறுகக் கொடிமார்பி—னூடிய சாந்தி னணிதொடர்ந்து-வாடிய—தார்க்குவளை கண்டு தரியா திவண்முகத்த—கார்க்குவளை காலுங் கனல்." எனவும், "காதல் பெருகிக் கழிசெய வக்களியாற்-கோதையுந் தாரு மிடைகுழைய—மாதர்—கலந்தாள் கலந்து கடைக்கண்ணூற் கங்குற்—புலந்தாள் புலரியம் போது." எனவும், "கண்டுகளித்துக் கயலுண்க ணீர்மல்கக்—கொண்டகம் புக்காள் கொடியன்ருள்—வண்டினங்—காலையாழ் செய்யுங் கருவரை நாடனை—மாலையார் மார்பம் பிணித்து." எனவும், "மயங்கி மகிழ்பெருக மால்வரை மார்பிற்—றயங்கு புனலூரன் றண்டார்—முயங்கியும்—பேதை புலம்பப் பிரிதியோ நீயென்னுங்—கோதைசூழ் கொம்பிற் குழைந்து." எனவும், "தெரிவின்றி யூடத் தெரிந்துநங் கேள்வர்—பிரிவின்றி நல்கினும் பேணுய்—திரிவின்றித்—துஞ்சே மெனமொழிதி தூங்கிருண் மான்மாலை—நெஞ்சே யுடையை நிறை." எனவும், "ஆழ விடுமோ வலரொடு வைகினுந்—தாழ்குர லேனற் றலைக்கொண்ட—நூழில்—விரையாற் கமழும் விறன்மலை நாட—னுரையாற் றளிர்க்கு முயிர்." எனவும், "அணிவரும் பூஞ்சிலம் பார்க்கு மடிமேன்—மணிவரை மார்பன் மயங்கிப்—பணியவும்—வற்கென்ற நெஞ்சம் வணங்காய் சிறுவரை—நிற்கென்றி வாழியர் நீ." எனவும், "யானை தொட்டுருங் கொடிபோல யானுன்னைத்—தானை தொடரவும் போதியோ—மானை—மயக்கரிய வுண்கண் மடந்தைதோ ளுள்ளி—யியக்கருஞ் சோலை யிரா." எனவும், "விலங்குநரீங்கில்லை வென்வேலோய் சென்றி—யிலங்கிழை யெவ்வ நலியக்-கலங்கிக்—குறியுள் வருந்தாமைக் குன்றுசூழ் சோலை—நெறியுள் விரிக நிலா." எனவும்;

"செல்செல வழுங்கல் செழும்பட ஹூர்த—றூதிடை யாட றுயரவற் குரைத்தல்—கண்டுகை சோர்தல் பருவ மயங்க—லாண்பாற் கிளவி பெண்பாற் கிளவி—தேங்கமழ் கூந்தற் றெரிவை வெறியாட்—டரிவைக் கவடுணை பாண்வர வுரைத்தல்—பரிபுரச் சீறடிப்

பரத்தை கூறல்—விறலி கேட்பத் தோழி கூறல்—வெள்வளை விறலி தோழிக்கு விளம்பல்—பரத்தை வாயில் பாங்கிகண் டுரைத்தல்—பிறர்மனைத் துயின்றமை விறலி கூறல்—குற்றிசை யேனைக் குறுங் கலி யுளப்பட—வொத்த பண்பி னொன்றுதலை யிட்ட—வீரெண் கிளவியும் பெருந்திணைப் பால." எனக்கூறி, இவற்றிற்கு முறையே உதாரணம்,

"நடுங்கி நறுநுதலா ணன்னலம்பீர் பூப்ப—வொடுங்கி யுயங்க லொழியக்—கடுங்கணை—வில்லே ருழவர் விடரோங்கு மாமலைச்—செல்லே மொழிக செலவு." எனவும், "இன்றிப் படரோ டியானு ழப்ப வைங்கணையான்—வென்றிப் பதாகை யெடுத்தானு—மன்றிற்—றனிமடமா னேக்கி தகைநலம்பா ராட்டிக்—குனிமடன்மாப் பண்ணிமேல் கொண்டு." எனவும், "வள்வாய்ந்து பண்ணுக திண் டேர் வடிக்கண்ணு—ளொள்வாள்போன் மாலை யுயல்வேண்டுங்—கள்வாய்த்த—தாதொடு வண்டிமிருந் தாம வரைமார்ப—தூதொடு வந்தேன் றொழ." எனவும், "உள்ளத் தவலம் பெருக வொளி வேலோ—யெள்ளத் துணிந்த விருண்மாலை—வெள்ளத்துத்—தண் டா ரகலந் தழூஉப்புணையா நீநல்கி—னுண்டாமென் றோழிக் குயிர்." எனவும், "ஆம்ப னுடங்கு மணிவளையு மேகின—கூம்பன் மறந்த கொழுங்கயற்கண்—காம்பி—னெழில்வாய்ந்த தோளி யெவனுங் கொல் கானற்—பொழிலெல்லா மீயும் புலம்பு." எனவும், "பெரும் பணை மென்றோள் பிரிந்தாரெம் முள்ளி—வரும்பருவ மன்றுகொ லாங்கொல்—சுரும்பிமிரும்—பூமலி கொன்றைப் புறவெலாம் பொன்மலரு—மாமயிலு மாலு மலை." எனவும், "பொறிமயி லா லின பொங்க ரெழிலி—சிறுதுவலை சிந்தின சிந்த—நறிய—பவர் முல்லை தோன்றிப் பரியாம லீன்ற—வவர்வருங் காலமீ தன்று." எனவும், "கயற்கூடு வாண்முகத்தாட் கண்ணிய நெஞ்ச—முயற் கூடு முன்னதாக் காணி—னுயற்கூடுங்—காணு மரபிற் கடும்பகலுங் கங்குலு—நாணுளு மேயா நகை." எனவும், "வானத் தியலு மதிய கத்து வைகலுங்—கானத் தியலு முயல்காணுந்—தானத்தி—னொள் வளை யோடவு முள்ளான் மறந்துறையுங்—கள்வனைக் காணுதிவ் வூர்." எனவும், "வெய்ய நெடிதுயிரா வெற்ப னளிநினையா—வைய நணிநீங்க வாடினுண்—மைய—லயன்மனைப் பெண்டிரோ டன்னை சொ லஞ்சி—வியன்மனையு ளாடும் வெறி." எனவும், "அஞ்சொற் பெரும்பணைத்தோ ளாயிழையாய் தாமொடியும்—வஞ்சந் தெரியா மருண்மாலை—யெஞ்சேரிப்—பண்ணியல் யாழொடு பாணனுர் வந் தாரா—லெண்ணிய தென்கொலோ வீங்கு." எனவும், "பலவுரைத்

துக் கூத்தாடிப் பல்வய லூர—னிலவுரைக்கும் பூணவர் சேரிச்—செலவுரைத்து—வெங்கட் களியால் விறலி விழாக்கொள்ள—லெங்கட் கவன்ரு ரெளிது." எனவும், "அரும்பிற்கு முண்டோ வலரது நாற்றம்—பெருந்தோள் விறலி பிணங்கல்—சுரும்போ—டிரும் புனலூரற் காரமிர்த மன்ரே—முதிரு முலையார் முயக்கு." எனவும், "உளைத்தவர் கூறு முரையெல்லா நிற்க—முளைத்த முறுவலார்க் கெல்லாம்—விளைத்த—பழங்க ளனைத்தாய்ப் படுகளி செய்யு-முழங்கு புனலூரன் மூப்பு." எனவும், "மாணலங் கொள்ளு மகிழ்நன் றணக்குமேற்—பேணலம் பெண்மை யொழிகென்பார்—காணக்—கலவ மயிலன்ன காரிகையார் சேரி—வலவ னெடுந்தேர் வரும்." எனவும், "தண்டா ரணியவாந் தையலார் சேரியுள்—வண்டார் வயலூரன் வைகினமை—யுண்டா—லறியே னடியுறை யாயிழையாற் பெற்றேன்—சிறியேன் பெரிய சிறப்பு." எனவும், "கரிய பெருந்தடங்கண் வெள்வளைக்கை யாளை—மரிய கழிகேண் மை மைந்த—தெரியின்—விளிந்தாங் கொழியினும் விட்டகலார் தம்மைத்—தெளிந்தாரிற் றீர்வது தீது." எனவும், "பண்ணவாந் தீஞ்சொற் பவளத் துவர்ச்செவ்வாய்ப்—பெண்ணவாம் பேரல்குற் பெய்வளை—கண்ணவா—நன்னலம் பீர்பூப்ப நல்கார் விடுவதோ—தொன்னல முண்டார் தொடர்பு." எனவும் எடுத்தோதி இவற்றை அகத்திணைப்புறமென்றுகொண்டு பொதுவியலுட்கூறுவாரும் உளர். அங்ஙனம் ஆகாமை மேற்கூறிப்போந்த வெட்சி வஞ்சியென்னுஞ் சூத்திரத்துரையானுணர்க. (௨௧)

இரண்டாவது புறத்திணையியல் முற்றிற்று.



## ௩-வது அணியியல்.

சூ௨௦. அணியெனப் படுவது துணிபுறக் கிளப்பிற்
குணமலங் கார மெனவிரு திறத்தாற்
பொருள்புலப் படுப்ப தென்மனூர் புலவர்.

என்பது சூத்திரம். இவ்வோத்து நிறுத்தமுறையானே அகனும் புறனுமாகிய இருவகைப் பொருளும் உணர்த்தி அவற்றை விளக்கும் அணியிலக்கணம் உணர்த்திற்ருகலான் அணியியலென்னும் பெயர்த்து. மேலோத்திஞெடு இதற்கு இயைபுடைமையும் இதனுனே விளங்கும். இதனுள் இத்தலைச்சூத்திரம் அணி

யாவது இவ்வாற்றான் இவ்வியல்பிற்றுமென அதன் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். அணியென்று சிறப்பித்துச்சொல்லப்படுவது தெளிவுறக் கூறுமிடத்துக் குணமும் அலங்காரமுமாகிய இருவகையாற் பொருளை விளக்கிநிற்பதென்று கூறுவர் அறிவுடையோர். எ - று.

பொருள் முற்கூறிய அகப்பொருளும் புறப்பொருளுமென்று உணர்க. (௧)

சூஉக. பொருட்கிடஞ் செய்யு ளாதலி னதனைத்
தெரிப்பது மதனது திறனெனல் வரையார்.

இது மேலதற்கோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய பொருட்பகுதி இரண்டற்கும் இடஞ் செய்யுளாதலின் அதனை விளக்கிநிற்பதும் அவ்வணியினது இயல் பென்று சொல்லுதலை நீக்கார் கொள்வர். எ - று. (௨)

சூஉஉ. செய்யு ளென்பவை தெரிவுறக் கிளப்பின்
முத்தகங் குளகந் தொகைதொடர் நிலையென
வெத்திறத் தனவு மீரிரண் டாகும்.

செய்யுள் உணர்ந்தே அணியுணரவேண்டுதலின் இஃது ஈண்டு ஒருவாற்றான் அவற்றிற்குப் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

இ - ள். செய்யுளென்று முற்கூறப்பட்டவற்றை விளங்கக் கூறுமிடத்து முத்தகச்செய்யுளுங் குளகச்செய்யுளுந் தொகைநிலைச் செய்யுளுந் தொடர்நிலைச்செய்யுளுமென மேற் செய்யுளியலுட் கூறும் பல்வேறுவகைப்பட்ட செய்யுட்களும் நான்காம். எ - று. ()

சூஉ௩. அவற்றுள்,
முத்தகச் செய்யு டனிநின்று முடியும்.

இது முத்தகச்செய்யுளது இயல்பு கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய நால்வகைச் செய்யுளுள் முத்தகச்செய்யுளென்பது தனியேநின்று பொருள் பயந்து முற்றுப்பெறும். எ - று.

வரலாறு:—"என்னே சிலமடவா ரெய்தற் கெளியவோ—பொன்னே யணபாயன் பொன்னெடுந்தோண்—முன்னே—தன வேயன் ருளுஞ் சயமடந்தை தோளாம்—புனவேய் மிடைந்த பொருப்பு." எனவரும். (௪)

சூ௨௪. குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்.

இது குளகச்செய்யுளது இயல்பு கூறுகின்றது.

இ - ள். குளகச்செய்யுளென்பது பலபாட்டாய் ஒருவினை கொண்டு முடிவது. எ - று.

வினையென்றது ஈண்டு முடிக்குஞ் சொல்லை, வினைப்படுதொகுதியென்ருற்போல. (௫)

சூ௨௫. தொகைநிலைச் செய்யு டோன்றக் கூறி
னொருவ னுரைத்தவும் பல்லோர் பகர்ந்தவும்
பொருளிடங் காலந் தொழிலென நான்கினும்
பாட்டினு மளவினுங் கூட்டிய தாகும்.

இது தொகைநிலைச்செய்யுளது இயல்பு கூறுகின்றது.

இ - ள். தொகைநிலைச்செய்யுளென்பதனை விளங்கக்கூறின் ஒருவனுல் உரைக்கப்பட்டுப் பலபாட்டாய் வருவனவற்றையும் பலரால் உரைக்கப்பட்டுப் பலபாட்டால் வருவனவற்றையும் பொருள் முதலிய நான்கினுனும் பாட்டினுனும் அளவினுனுந் தொகுத்துக் கூறுவதாம். எ - று.

ஒருவனுல் உரைத்தன திருவள்ளுவப்பயன் முதலியன. பலரான் உரைத்தன நெடுந்தொகை முதலியன. இஃது இவ்விருவகைத் தொகைக்கும் பொது இலக்கணம். பொருளாற் தொகுத்தன புறநானூறு முதலியன. இடத்தாற் தொகுத்தன களவழிநாற்பது முதலியன. காலத்தினுற் தொகுத்தன கார்நாற்பது முதலியன. தொழிலாற் தொகுத்தன ஐந்திணைமுதலியன. பாட்டாற் தொகுத்தன கலித்தொகை முதலியன. அளவாற் தொகுத்தன குறுந்தொகைமுதலியன. ஆகுமென்றதனுனே பிறவாற்ருற் பெயர்பெற்று வருவனவுங் கொள்க. (சூ)

சூ௨சூ. பொருளினுஞ் சொல்லினு மிருவகை தொடர்நிலை.

இது தொடர்நிலைச்செய்யுளாமாறு கூறுகின்றது.

இ - ள். பொருளினுற் றொடர்தலுஞ் சொல்லினுற் றொடர்தலுமென இருவகைப்படுந் தொடர்நிலைச்செய்யுள். எ - று.

எனவே, பொருட்டொடர்நிலைச்செய்யுளுஞ் சொற்றொடர்நிலைச்செய்யுளுமெனத் தொடர்நிலைச்செய்யுள் இரண்டுவகைப்படுமென்பதாயிற்று. இரண்டென்னுது வகையென்ற மிகையானே மூன்றுவது பொருளினுனுஞ் சொல்லினுனுந் தொடர்தலும் உண்டெனக் கொள்க. (எ)

சஉஎ. அவற்றுட்,
பெருங்காப் பியமே காப்பிய மென்றாங்
கிரண்டா கியலும் பொருட்டொடர் நிலையே.

இது பொருட்டொடர்நிலை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். மேற்கூறிய இரண்டனுட் பொருட்டொடர்நிலைச் செய்யுள் பெருங்காப்பியமுங் காப்பியமுமென இரண்டுவகைப்படும். எ - று.

கவியாற் பாடப்படுவன எல்லாங் காப்பியமாமேனுந் தொடர்நிலைச்செய்யுளையே காப்பியமென்றது சேற்றுட் டோன்றுவன எல்லாம் பங்கயமாமேனுந் தாமரையினையே பங்கயமென்றாற்போல என்று உணர்க. இயலுமென்ற மிகையானே முற்கூறிய முத்தகம் முதலிய மூன்றும் இதற்கு உறுப்பாய்வருமெனக்கொள்க. (அ)

சஉஅ. பெருங்காப் பியநிலை பேசுங் காலை
வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினென்
றேற்புடைத் தாக முன்வர வியன்று
நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித்
தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய்
மலைகட லுடு வளநகர் பருவ
மிருசுடர்த் தோற்றமென் றினையன புனைந்து
நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல்
பூம்பொழி னுகர்தல் புனல்விளை யாட
றேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல்
புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென்
றின்னன புனைந்த நன்னடைத் தாகி

மந்திரந் தூது செலவிகல் வென்றி
சந்தியிற் றொடர்ந்து சருக்க மிலம்பகம்
பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி
நெருங்கிய சுவையும் பாவமும் விரும்பக்
கற்றோர் புனையும் பெற்றிய தென்ப.

இது பெருங்காப்பியமாமாறு கூறுகின்றது.

இ - ள். பெருங்காப்பியத்தியல்பு கூறுமிடத்து வாழ்த்து முதலிய மூன்றனுட் பொருந்துவதாக ஒன்று முன்வரநடந்து, அறம் முதலிய நான்கினையும் பயக்கும் ஒழுகலாறுடைத்தாய்த், தனக்கு நிகரில்லாத நாயகனையுடைத்தாய், மலை முதலிய இன்னோரன்ன வருணனைகளையுடைத்தாய், நன்மணம்புணர்தல் முதலிய இன்னோரன்ன செய்கைச்சிறப்புப் புகழ்ந்து தொடுக்கப்பட்ட நல்லொழுக்கமுடைத்தாய், மந்திரம் முதலியன சந்திபோலத் தொடர்புபட்டுச், சருக்கம் முதலிய கூற்றின் ஒருதிறத்தாற் பகுக்கப்பட்டு, இடைவிடாத எண்வகைச் சுவையும் மெய்ப்பாடுங் கேட்போர் மதிக்கப் புலவராற் புனையப்படுந்தன்மையினையுடைத்தென்று கூறுவர் ஆசிரியர். எ-று.

பேசுங்காலை என்றதனால் வாழ்த்து முதலிய மூன்றனுள் ஒன்றேயன்றி இரண்டும் மூன்றும் ஒருங்குவரினும் இழுக்கின்றென்பது. இனையனபுனைந்து என்றதனான் வனமும் நதியும் இருசுடர்த்தோற்றமேயன்றி அவற்றின் அத்தமனம் முதலியன புனைதலுங் கொள்க. சந்தியென்பது நாடகத்தின்கண்ணதோர் உறுப்பு. அஃதாவது வித்தல் விளைத்தல் விளைவுதுய்த்தலென்பதாம். (க)

சுஉகூ. கூறிய வுறுப்பிற் சிலகுறைந் தியலினும்
வேறுபா டின்றென விளம்பினர் புலவர்.

இது மேலதற்கோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய உறுப்பிற் சில குறைந்துவரினும் பெருங்காப்பியத்தின் வேறுபாடில்லையெனக் கூறுவர் அறிந்தோர். எ-று.

குறைதலாவது நாற்பொருளிற் குறையாது வருணனைகளிற் சில குறைதலாம். என்னை? நால்வகைப்பொருளிற் குறைபாடுடையது காப்பியமென்றலின். (௧௦)

சுநுo. அறமுத னான்கிற் குறைபா டுடையது
காப்பிய மென்று கருதப் படுமே.

இது காப்பியமாமாறு கூறுகின்றது.

இ - ள். அறம் முதலிய நான்கனுட் சில குறைந்துவருவது காப்பியமென்று கருதப்படும். எ - று. (கக)

கூ௩க. அவைதாம்,
ஒருதிறப் பாட்டினும் பலதிறப் பாட்டினு
முரையும் பாடையும் விரவியும் வருமே.

இது மேலனவற்றிற்கோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய பெருங்காப்பியமுங் காப்பியமும் ஒருவகைச்செய்யுளானும் பலவகைச்செய்யுளானும் உரையும் பாடையும் விரவியும் வரும். எ - று.

உம்மையான் விரவாது வருதலே வலியுடைத்தெனக் கொள்க. (க௨)

கூ௩௨. செய்யுளந் தாதி சொற்றொடர் நிலையே.

இது சொற்றொடர்நிலையாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒருசெய்யுளிறுதி மற்றொருசெய்யுட்கு முதலாகத் தொடுப்பது சொற்றொடர்நிலைச்செய்யுளாம். எ - று.

அவை கலம்பகம் முதலியன. இவற்றுக்கு இலக்கியம் வந்த வந்தவழிக் கண்டு கொள்க. ஈண்டு உரைப்பிற் பெருகும். (க௩)

கூ௩௩. வைதருப் பம்மே கௌட மென்றாங்
கெய்திய குணமோ ரிருவகைப் படுமே.

பொருள்புலப்படுப்பது அணியெனத் தம் மேற்கோள் கூறி அப்பொருட்குச் செய்யுள் இடமாதலின் அதனைப் புலப்படுப்ப தூஉம் அவ்வணிக்கு இயல்பெனக் கோடலின் அச்செய்யுளை ஒரு வாற்றாற் தொகுத்துக்கூறி அணியிலக்கணங் கூறுவான் தொடங்கி அவற்றுள் இது நிறுத்தமுறையானே குணவணி இத்துணைத்தென் கின்றது.

இ - ள். வைதருப்பமுங் கௌடமுமென மேற்கூறிய குண வணி இருவகைப்படும். எ - று.

வைதருப்பங் கௌடம் என்பன ஆகுபெயர்; அவைபோலும் பாக்களை உணர்த்தலின். (கச)

சுநச. நெகிழிசை யின்றிய செறிவி னானும்
பொருள்புலப் படவருந் தெளிவி னானும்
விரவத் தொடுக்குஞ் சமநிலை யானுஞ்
சொல்லினும் பொருளினுஞ் சுவைபடு நெறியா
னல்லன தொகுக்கு மின்பத் தானும்
வெறுத்திசை யில்லா வொழுகிசை யானுங்
குறிப்பி னொருபொரு ணெறிப்படத் தோன்றுஞ்
சிறப்புடை மரபி னுதாரத் தானுங்
கருதிய பொருளைத் தெரிவுற விரித்தற்
குரியசொல் லுடைய வுய்த்தலில் பொருண்மையு
முலகொழுக் கிறவா வுயர்புகழ்க் காந்தமுந்
தொகைமிக வரூஉந் தகைமிகு வலியு
முரிய பொருளன்றி யொப்புடைப் பொருண்மேற்
றருவினை புணர்க்குஞ் சமாதியு மெனமுறை
யாய்ந்தவை தருப்ப மையிரு வகைத்தே.

இது மேற்கூறிய வைதருப்பம் இவ்வியல்பான் இத்துணைத் தாமென்கின்றது.

இ - ள். நெகிழிசையில்லாச் செறிவு முதலாகச் சமாதி ஈறாக முறையே ஆராய்ந்த வைதருப்பம் பத்துக்கூற்றினை உடைத்தாம். எ - று. (கரு)

சுநரு. கௌட மென்பது கருதிய பத்தொடுங்
கூடா தியலுங் கொள்கைய தென்ப.

இது கௌடமாமாறு கூறுகின்றது.

இ - ள். கௌடமென்று சொல்லப்படுவது மேற்கூறிய பத்துக் குண அலங்காரங்களோடுங் கூடாது நடக்கும் ஒழுக்கமுடையது. எ - று.

முற்றும்மையை எச்சமாக்கிச் சிலவற்றோடு கூடியும் இயலு மெனக் கொள்க.

நெகிழிசையில்லாச் செறிவு வருமாறு:—“சிலைவிலங்கு நீள் புருவஞ் சென்றேசிய நோக்கி—முலைவிலங்கிற் றென்று முனி வாண்—மலைவிலங்கு—தார்மாலை மார்ப தனிமை பொறுக்குமோ—கார்மாலை கண்கூடும் போழ்து.” எனவரும். இதன் மறுதலைக் கௌடம் வருமாறு:—“விரவலராய் வாழ்வாரை வெல்வா யொழி வா—யிரவுலவா வேலை யொலியே—வரவொழிவா—யாயர்வா யேயரிவை யாருயிரை யீராவோ—வாயர்வாய் வேயோ வழல்.” எனவரும்.

பொருள்புலப்படுக்குந் தெளிவு வருமாறு:—“பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா—பிற்பகற் றாமே வரும்.” எனவரும். இதன் மறுதலைக் கௌடம் வருமாறு:—“பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற—செய்யாமை செய்யாமை நன்று.” எனவரும்.

விரவத்தொடுக்குஞ் சமநிலை வருமாறு:—“சோகமெவன்கொ லிதழிபொன் றூக்கின சோர்குழலாய்—மேகமுழங்க விரைசூழ்தள வங் கொடியெடுக்க—மாகநெருங்கவண் டானங்களிவண்டு பாட வெங்குந்—தோகைநடஞ்செய வன்பர்திண்டேரினித் தோன்றி யதே.” எனவரும். விரவுதல், வன்மை மென்மை இடைமை தம் முள் விரவுதல். இதன் மறுதலைக் கௌடம் வருமாறு:—“இடர்த் திறத்தைத்துறப் பொற்றொடிநீயிடித் துத்தடித்துச்—சுடர்க்கொடித் திக்கனைத் திற்றடுமொறத் துளிக்குமைக்கார்—மடக்குயிற் கொத்தொ ளிக் கக்களிக்கப்புக்க தோகைவெற்றிக்—கடற்படைக் கொற்றவன் பொற்கொடித்தேரினிக் கண்ணுற்றதே.” எனவரும்.

சொல்லினும் பொருளினுஞ் சுவைபடு நெறியான் நல்லன் தொகுக்கும் இன்பங்களுட் சீரிடையிட்ட வழிமோனை முதலியன வரச் சொல்லினுற் றொடுக்கும் இன்பம் வருமாறு:-“முன்னைத்தஞ் சிற்றின் முழங்கு கடலோத மூழ்கிப் பேர-வன்னைக் குரைப்ப னறி வாய் கடலேயென் றலறிப் பேருந்—தன்மை மடவார் தணந்துகுத்த வெண்முத்தந் தகைசூழ் கானற்—புன்னை யரும்பேய்ப்பப் போவா ரைப் பேதுறுக்கும் புகாரே யெம்மூர்.” எனவரும். இதன் மறுத லைக் கௌடம் வருமாறு:—“துனிவருநீர் துடைப்பவராய்த் துவள் கின்றேன் றுணைவிழிசேர் துயிலை நீக்கி—யினவளைபோன் றின்ன லஞ்சோர்ந் திடருழப்ப விகந்தவர்நாட் டில்லை போலுந்—தனிய வர்க டளர்வெய்தத் தடங்கமலந் தளையவிழ்க்குந் தருண வேனிற்—பனிமதுவின் பசுந்தாது பைம்பொழிலிற் பரப்பிவரும் பருவத் தென்றல்.” எனவரும். பொருளின்பம் வருமாறு:—“மானேர்

நோக்கின் வளைக்கை யாய்ச்சியர்—கான முல்லை சூடார் கதுப்பிற்—பூவைப் புதுமலர் சூடித் தாந்த—மடங்காப் பணைமுலை யிழைவளர் முற்றத்துச்—சுணங்கின் செவ்வி மறைப்பினு மலர்ந்த—பூவைப் புது மலர் பரப்புவர் பூவயி—ஞநிரை வருத்தம் வீட மலையெடுத்து—மாரி காத்த காளை—நீல மேனி நிகர்க்குமா லெனவே." எனவரும். இப்பொருளின்பம் இருவகைநெறிக்கும் ஒக்கும். பொருளின்பமாவது மதுக்காரணமாக மதுகரங்கட்கு வருவதோர் மகிழ்ச்சிபோலப் பொருட்காரணமாக அதுகேட்டார்க்கு வருவதோர் மகிழ்ச்சி. இவ்வாறு தொடுக்குங்காற் கிராமியச்சொல்லும் பொருளும் இடக்கர்ச்சொல்லும் பொருளுந் தீண்டாமற் தொடுத்தல்வேண்டுமெனக் கொள்க.

வெறுத்திசையில்லா ஒழுகிசை வருமாறு:—"இமையவர் கண் மோலி யிணைமலர்த்தாள் சூடச்—சமையந் தொறுநின்ற தையல்—சிமைய—மலைமடந்தை வாச மலர்மடந்தை யெண்ணெண்—கலைமடந்தை நாவலோர் கண்." எனவரும். இதன் மறுதலைக் கௌடம் வருமாறு:—"ஆக்கம் புகழ்பெற்ற தாவி யிவள்பெற்ருள்—பூக்கட் குழற்கார் பொறைபெற்ற—மாக்கடல்சூழ்—மண்பெற்ற வொற்றைக் குடையாய் வரப்பெற்றேங்—கண்பெற்ற வின்று களி." எனவரும்.

குறிப்பிஞெருபொருள் நெறிப்படத்தோன்றுஞ் சிறப்புடை மரபின் உதாரம் வருமாறு:—"செருமான வேற்சென்னி தென்னுறந்தை யார்தம்—பெருமான் முகம்பார்த்த பின்ன—ரொருநாளும்—பூதலத்தோர் தம்மைப் பொருணசையாற் பாராவாங்—காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்." எனவரும். இதனுள், வறுமைதீரக் கொடுப்பனென்பது குறிப்பு. இவ்வுதாரணம் இருவகைநெறிக்கும் ஒக்கும்.

கருதியபொருளைத் தெரிவுறவிரித்தற்கு உரியசொல்லுடைய உய்த்தலில் பொருண்மை வருமாறு:—"இன்றுமையாண் மாசிலா வாண்முகங்கண் டேக்கற்ருே—வன்றி விடவரவை யஞ்சியோ—கொன்றை—யுளராவா ருேடு மொளிர்சடையீர் சென்னி—வளராவா றென்னோ மதி." எனவரும். இதன்மறுதலைக் கௌடம் வருமாறு:—"ஒல்லேங் குவளைப் புலாஅன் மகன்மார்பிற்—புல்லெருக்கங் கண்ணி நறிது." எனவரும்.

உலகொழுக்கிறவா உயர்புகழ்க் காந்தம் வருமாறு:—"ஒருபே ருணர்வுடையே னுண்ணிறையுந் தேய—வருமே துறவென்

பால் வைத்த—வொருபேதை—போதளவு வாசப் புரிகுழல்சூழ் வாண்முகத்துக்—காதளவு நீண்டுலவுங் கண்." எனவரும். இதன் மறுதலைக் கௌடம் வருமாறு:—"ஐயோ வகலல்குல் சூழ்வருதற் காழித்தேர்—வெய்யோற் கனேகநாள் வேண்டுமாற்—கைபரந்து—வண்டிசைக்குங் கூந்தன் மதர்விழிகள் சென்றுலவ—வெண்டிசைக்கும் போதா திடம்." எனவரும்.

தொகைமிகவரூஉந் தகைமிகு வலி வருமாறு:—"செங்கலசக் கொங்கைச் செறிகுறங்கிற் சீறடிப்பேர்ப்—பொங்கரவ வல்குற் பொருகயற்கட்—செங்கனிவாய்க்—காருருவக் கூந்தற் கதிர்வளைக் கைக் காரிகைத்தா—மோருருவென் னுள்ளத்தே யுண்டு." எனவரும். தொகைமிகவரூஉம்வலி, தொகைச்சொற்றொடர்பு உண்டாக வல்லெழுத்து மிகுதற்சிறப்பு உடைத்தாய் வருதல். இதன் மறுதலைக் கௌடம் வருமாறு:—"காணிமிர்த்தாற் கண்பரிப வல்லியோ புல்லாதார்—மானனையார் மங்கலநா ணல்லவோ—தான—மழைத் தடக்கை வார்கழற்கான் மானவேற் கிள்ளி—புழைத்தடக்கை நால் வாய்ப் பொருப்பு." எனவரும்.

உரியபொருளன்றி ஒப்புடைப்பொருண்மேற் தருவினைபுணர்க்குஞ் சமாதி வருமாறு:—"அகலிரு விசும்பிற் பாயிருள் பருகிப்—பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் பரிதி." எனவரும். வினையென்றுரேனுங் கன்னியெயில் குமரிஞாழலென்றுற்போலவருவனவுங் கொள்க. இச்சமாதி இருவகைநெறிக்கும் ஒக்கும்.

மாங்கனியுந் தீம்பாலும் வருக்கைச்சுளையுஞ் சருக்கரையுந் தம்முள் வேறுபட்ட சுவையவாயினுங் கூறல் மதுரமென்றன்றே? அதுபோல எழுத்துச்செறிவுஞ் சொற்செறிவும் பொருட்செறிவுஞ் செறிவென்றே செப்புவதல்லது பிறிதொருவகை பேசிற் பெருகிய அகலமுடைத்தாமாகலின் அவையெல்லாம் உய்த்துணர்ந்து கொள்க. பிறவற்றிற்கும் ஈதொக்கும்.

ஆசிரியர் தொல்காப்பியனார் உவமம் ஒன்றனையுமே அணியாகக் கூறி ஒழிந்தமையின் ஈண்டுக் கூறிய குணமும் மேற்கூறும் உவமையொழிந்த பொருளணியுஞ் சொல்லணியுமாகிய அலங்காரங்கள் இவர் யாண்டுப் பெற்றாரெனின் மேற் பாயிரத்துள் "முன்னோர் நூலின்முடிபுநோக்கி" என்றதனாற் பெரும்பான்மையுந் தொல்காப்பியம் முதலிய தமிழ்நூல்களுள்ளுஞ் சிறுபான்மை அலங்காரம் முதலிய வடநூல்களுள்ளும் பெற்றாரென்க. அற்றேல், வடநூல் முதனூலாயவாறென்னையெனின்; சொல்வேறுபாடன்றிப் பொ

ருள்வேறுபாடின்மையானும், அன்றியுஞ் சங்கீதம் பாகதம் அவப்பிரஞ்சமெனமூன்றுவகைப்படுத்தி, அவற்றுட் சங்கீதம் புத்தேளிர் மொழியெனவும் அவப்பிரஞ்சம் பாமரசாதிகளாகிய இழிசனர் மொழியெனவுங் கூறிப், பாகதம் எல்லாநாட்டும் வழங்கும் மேலோர் மொழியென விளக்கி, அப்பாகதத்தைத் தற்பவந் தற்சமந் தேசியமெனப் பகுத்து, அவற்றுட் தற்பவம் "நிதியந்துஞ்சும்" எனவுந் "தசநான்கெய்திய" எனவும் வடசொற் றிரிந்து ஆவனவென்றுந் தற்சமங் குங்குமம் உலகம் மலயமாருதம் என வடசொல்லும் பிறபாடைச்சொல்லுமாய்ப் பொதுவாய் வருவனவென்றுந் தேசியம் நிலம் நீர் தீ என அவ்வநாட்டுச் சொல்லேயாய்ப் பிறபாடைநோக்காதனவென்றுங் கோடலின் அச்சொல்வேறுபாடும் இன்மையானுமாமென்க. (கசு)

சுாஙசு. பொருளணி சொல்லணி யெனவலங் கார
மிருவகை நெறியா னியலு மென்ப.

நிறுத்தமுறையானே அலங்காரம் உணர்த்துவனவற்றுள் இஃது அஃதித்துணைத்தென்கின்றது.

இ - ள். பொருளானுளதாகிய அணியுஞ் சொல்லானுளதாகிய அணியுமென அலங்காரம் இருதிறத்தியலான் நடக்கும் என்று கூறுவர் ஆசிரியர். எ - று. (கஎ)

சுாஙஎ. தன்மை யுவமை யுருவகந் தீவகம்
பின்வரு நிலையே முன்ன விலக்கே
வேற்றுப்பொருள் வைப்பே வேற்று விபாவனை
யொட்டே யதிசயந் தற்குறிப் பேற்ற
மேது நுட்ப மிலேச நிரனிறை
யார்வ மொழிசுவை தன்மேம் பாட்டுரை
பரியா யம்மே சமாயித முதாத்த
மரிதுண ரவநுதி சிலேடை விசேட
மொப்புமைக் கூட்ட மெய்ப்படு விரோத
மாறுபடு புகழ்நிலை புகழாப் புகழ்ச்சி
நிதரிசனம் புணர்நிலை பரிவருத் தனையே
வாழ்த்தொடு சங்கீ ரணம்பா விகமெனப்
போற்றுமே ழைந்தும் பொருளணி யென்ப.

இது நிறுத்தமுறையானே பொருளணி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். தன்மை முதற் பாவிகம் ஈறாகப் பேணிய முப்பத்தைந்தும் பொருளணியென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

தன்மை இயல்பாகலான் முதற்கண்ணும் உவமைவிகாரமாய் மிக்க வரவிற்றாய்ப் பிறவக்கிரநடையலங்காரங்கட்கு உபகாரமுடைத்தாகலான் அதன்பின்னும் எண்ணப்பட்டன. ஒழிந்தனவும் இவ்வாறு உய்த்துணர்ந்துகொள்க. (கஅ)

௬௩அ. அவற்றுள்,

எவ்வகைப் பொருளு மெய்வகை விளக்குஞ்
சொன்முறை தொடுப்பது தன்மை யதுதான்
பொருள்குணஞ் சாதி தொழிலொடு புலனும்.

இது நிறுத்தமுறையானே தன்மையது பொது இலக்கணமும் அது தோன்றும் நிலைக்களம் இத்துணைத்தென்பதூஉங் கூறுகின்றது.

இ - ள். முற்கூறிய முப்பத்தைந்தனுள் எவ்வகைப்பட்ட பொருளும் உண்மைக்கூறுபாட்டான் விளக்குஞ் சொன்முறையாற் பாடப்படுவது தன்மையென்னும் அலங்காரம். அது பொருள் முதலிய நான்கு நிலைக்களமாகத் தோன்றும். எ - று.

தன்மையெனினுஞ் சொன்னடையெனினும் ஒக்கும்.

பொருட்டன்மை வருமாறு:—"நீல மணிமிடற்ற னீண்ட சடைமுடிய—னூலணிந்த மார்ப னுதல்விழியன்—றோலுடையன்-கைம்மான் மறியன் கனன்மழுவன் கச்சாலை—யெம்மா னிமையோர்க் கிறை." எனவரும். குணத்தன்மை வருமாறு:—"உள்ளங் குளிர்ப்ப வுரோமஞ் சிலிர்த்துரையுந்—தள்ளவிழி நீரரும்பத் தன்ம றந்தாள்—புள்ளலைக்குந்—தேந்தா மரைவயல்சூழ் தில்லைத் திருநடஞ்செய்—பூந்தா மரைதொழுத பொன்." எனவரும். சாதித்தன்மை வருமாறு:—"பத்தித்த கட்ட கறைமிடற்ற பைவிரியுந்—துத்திக் கவைநாத் துளையெயிற்ற—மெய்த்தவத்தோ—ராகத்தா னம்பலத்தா னாரா வமுதணங்கின்—பாகத்தான் சாத்தும் பணி." எனவரும். தொழிற்றன்மை வருமாறு:-"சூழ்ந்து முரன்றணவி வாசந் துதைந்தாடித்—தாழ்ந்து மதுநுகர்ந்து தாதருந்தும்-வீழ்ந்தவிழ்ந்த-

பாசத்தார் நீங்காப் பரஞ்சுடரின் பைங்கொன்றை—வாசத்தார் நீங் காத வண்டு." எனவரும். (கக)

சுகூகூ. பண்புந் தொழிலும் பயனுமென் றிவற்றி
ஞென்றும் பலவும் பொருளொடு பொருள்புணர்த்
தொப்புமை தோன்றச் செப்பி னதுவே
யுவமையா மதன்றிற முணர்ந்தனர் கொளலே.

உவமைகூறுவனவற்றுள் இஃது அதன் பொது இயல்பு கூறுகின்றது.

இ-ள். பண்பு முதலிய மூன்றுங் காரணமாக ஒன்ருகியும் பலவாகியும் வரும் பொருளோடு பொருள் இயையவைத்து ஒப்புமை புலப்படப் பாடின் அஃது உவமையாம். அதன் கூறுபாடுகளெல்லாம் உவமையொன்றனையே விரித்துக்கூறுந் தொல்காப்பியம் முதலிய நூல்களான் அறிந்துகொள்க. எ-று.

"வெளிப்படை யுவமம் வினைபயன் மெய்யுரு—வெளிப்பட நின்று விளங்குவ தாகும்" என அகத்திணையியலுள் நான்கெனக் கூறி ஈண்டு மூன்றென்றல் மலைவாம்பிறவெனின், மெய்யும் உருவும் பண்பினுள் அடங்குதலின் அடக்கித்தொகுத்துக் கூறுதலான் ஆகாதென்க.

பண்புவமை பவளத்தன்னமேனி, வேய்புரைபணைத்தோள், "தெம்முனையிடத்திற் சேயகொ—லம்மா வரிவை யவர்சென்ற நாடே." எனவும், தொழிலுவமை "களிற்றிரை தெரீஇய பார்வலொதுக்கி—ஞெளித்தியங்கு மரபின் வயப்புலி போல" எனவும், பயவுவமை "மாரி யன்ன வண்கைத்—தேர்வே ளாண்மை காணிய சென்மோ." எனவும் வரும்.

என்றிவற்றினெனப் பொதுப்படக் கூறிய அதனாற் பண்பு முதலியனவேயன்றிச் சொற்பொதுமை காரணமாகவும் வரும். அது சிலேடையுவமையென முன்னர்க் கூறப்படும். இன்னும் அவ் விலேசானே பண்பு முதலியன ஒவ்வொன்றேயன்றிக் "கான யானை கைவிடு பசுங்கழை—மீனெறி தூண்டிலி னிவக்கும்." எனப் பண்புந் தொழிலுங் "காந்த ளணிமலர் நறுந்தா தூதும்—தும்பி கையாடு வட்டிற் ருேன்றும்" எனத் தொழிலும் வடிவும் வண்ணமும் விரவியும் வருதல் கொள்க; "விரவியும் வரூஉ மரபின வென்ப." என்பது ஒத்தாகலின். இன்னும் அதனானே "அடை

மரை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட—குடைநிழற் றேன்று நின் செம்மல்" எனப் பலபொருள்விரவி அடையும் போதுங் குடைக்கும் புதல்வற்கும் வடிவான் உவமையாயினுந் தோற்றத் திற்கு அவ்விரண்டும் உவமையாய் ஒருங்குவிரவிவருதலுந், தேமொழியெனத் தேனின்கண் உளதாகிய நாவினிமையும் மொழியின்கணுளதாகிய செவியினிமையும் விரவியுவமித்தலும், "புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி—மூக்கிற் கரியா ருடைத்து." எனவும் "கூழின் மலிமனம் போன்றிருளாநின்ற கோகிலமே." எனவும் பொறியும் புலனும் வேறாயவற்றையும் விரவியுவமித்தலும், இன்னோரன்ன பிறவுங் கொள்க.

'ஒன்றும்பலவும் பொருளொடு பொருள்புணர்த்தல்' "செவ்வானன்னமேனி" என ஒருபொருளோடு ஒருபொருளும் "வானிணிலங்கு பிறையன்ன விளங்குவால் வையெயிற்று" என ஒருபொருளோடு பலபொருளுஞ் "சுறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப" எனப் பலபொருளோடு பலபொருளும் "பெரும்பெயர்க் கரிகாலன் முன்னிலைச் செல்லாப்—பீடின் மன்னர் போல—வோடுவை மன்னல் வாடைநீ யெமக்கே." எனப் பலபொருளோடு ஒருபொருளும் இயையவைத்தலாமென்று உணர்க.

மயிற்றோகைபோலுங் கூந்தலென்பதன்றிக் காக்கைச்சிறகன்ன கருமயிர் எனவும், புலிபோலப் பாய்ந்தானென்பதன்றிப் பூசைபோலப் பாய்ந்தானெனவும் யாதானும் ஒருமுகத்தாற் கூறற்க; "உவமையும் பொருளு மொத்தல் வேண்டும்." என்பவாகலின். அவ்வுவமங் கேட்போருள்ளங்கொண்டு விளங்கத்தோன்றுவதேயாதல் வேண்டுமென்பார் 'ஒப்புமைதோன்ற' என்றார். இங்ஙனஞ் செப்பின் அஃது உவமையெனவே, பவளம்போலுஞ்செய்யவாய் என்னும் அத்தொடர்ச்சொல் முழுவதூஉம் உவமையாமென்பதாயிற்று. ஆயினும் பவளமும் வாயும் ஒத்தபண்பினவேனும் ஏற்ற இழிபுகளால் வாயிற் பவளஞ் சிறந்தமையானும் "உயர்ந்ததன் மேற்றே யுள்ளுங் காலை." என்பவாகலானும் பவளம் உவமையெனவும் வாய் பொருளெனவுஞ் செம்மை அவ்விரண்டனையும் புணர்த்தற்கு ஏதுவாகிய பண்பெனவும் போலுமென்பது அவ்வணியைப் புலப்படுத்துவதோர் உருபெனவும் வேறுவேறு கூறுபடுத்துணர்க. பிறவும் அன்ன.

அதன்றிறனுணர்தலாவது, "சிறப்பே நலனே காதல் வலியோ—டந்நாற் பண்பு நிலைக்கள மென்ப." எனவும், கிழக்கிடு

பொருளோ டைந்து மாகும்." எனவுங் கூறலின் "முரசுமுழங்கு தானை மூவருங் கூடி—யரசவை யிருந்த தோற்றம் போலப்— பாடல் பற்றிய பயனுடை யெழாஅற்—கோடியர் தலைவர்" எனச் சிறப்புப்பற்றியும் "ஓவத் தன்ன விடனுடை வரைப்பின்" என நலம்பற்றியுங் "கண்போல்வா னொருவ னுளன்" எனக் காதல்பற்றியும் "அரிமா னன்ன வணங்குடைத் துப்பிற்—றிருமா வளவன்" என வலிபற்றியும் "அரவுநுங்கு மதியி னுதலொளி கரப்ப" என ஒருபொருளினது இழிபுகூறுவான் உவமத்தான் இழிபுதோன்றுவிக்குமாதலின் கீழ்ப்படுக்கப்படும் பொருள்பற்றியும் உவமம்பிறத்தலின் இவ்வைந்தும் பண்பு முதலிய மூன்றுவமைக்கும் நிலைக்களமாமெனவும் உய்த்துணர்வகைத்தெனப்பட்ட உவமப்போலியாகிய உள்ளுறையுவமமும் ஈண்டே வெளிப்படையுவமத்திற்கு உரிய விதிபெறுமெனவும் இன்னோரன்ன பிற இலக்கணமும் உவமையியலிற் கூறியவாறே உணர்தலும், "பாற்பகை யுழந்த நோயொடு சிவணி—மாற்பழுத் தன்ன மறுகுநீர் மொக்குள்" என இடத்திற்கேற்ற உவமையும் "நிழற்கோபமல்க" எனக் காலத்திற்கேற்ற உவமையுங் "கடலு மலையும் போலக் கரியோய்" எனப் பொருளிற்கேற்ற உவமையும் "புலிநா வன்ன புல்லிதட் டாமரை" எனப் பண்பிற்கேற்ற உவமையுஞ் "சேற்றுவளர் தாமரை பயந்த வொண்கேழ்—நூற்றித ழலரி னிரைகண் டன்ன—வேற்றுமை யில்லா விழுத்துணைப் பிறந்து—வீற்றிருந் தோரை" எனவும் "விலங்கொடு மக்க ளனையர்" எனவுஞ் சாதிக்கேற்ற உவமையுஞ் செம்பருத்தியுங் கரவீரமுங் கூறாது கயிரவம்போலுஞ்செவ்வாய் பவளம்போலுஞ்செவ்வாயெனக் கூறும் மரபிற்கேற்ற உவமையும் பிறவாறும் உணர்தலும் பிறவுமாம்.

உவமையெனினும் உவமானமெனினும், பொருளெனினும் உவமேயமெனினும் ஒக்கும். (உ0)

சுசு0. உற்றபண் பாதியி னுவமஞ் செய்வுழி
மற்றவை வெளிப்பட வகுத்தவிரி யுவமமு
மன்னவை போலா தாங்கவை கரப்பத்
தொன்னெறிப் புலவர் தொகுத்ததொகை யுவமமும்
பொருளுவமை யாகியு முவமைபொரு ளாகியு
மொருதொட ரிடைவரூஉ மிதர விதரமு
மதஞ் ஞன்றி யதனையஃ தொப்ப
திதனுனு மொக்கு மெனுஞ்சமுச் சயமு

மேதகு வுவமையை விலக்கியப் பொருளையே
யோதி முடிக்கு முண்மை யுவமையு
மோதிய பொருடனக் கொப்பதோர் பொருள்பின்
னீதியி னிறீஇய மறுபொரு ளுவமையு
நினைந்துவ மிக்கு நிலையின்மற் றதனைப்
புனைந்துவ மிக்கும் புகழுவமை யானுஞ்
சிந்தித் தொருவன் சேர்ப்பதோ ருவமையை
நிந்தித் துரைக்கு நிந்தை யுவமையு
மறிவுறி னதனுக் கிதுவே யொப்பென
நெறியுறப் புணர்க்கு நியம வுவமையு
மிதுவே யன்றி யிதனுக் கிதுபோன்
றதுவு மாமெனு மநியம வுவமையு
மெய்திய வுவமையு மியைந்திடு பொருளு
மையுற விளம்பு மையநிலை யுவமையு
மிவ்விய லதனு னிதுவன் றிதுவெனச்
செவ்விதிற் றெளிந்த தேற்ற வுவமையு
மாற்ற வுவமை யாற்றினும் பொருளி
னேற்றமின் றென்னு மின்சொ லுவமையு
மூறி லுவமேய முவமையா யுலகியல்
வேறுபட மாட்டிய விபரீத வுவமையு
மரும்பொரு ளதனை யதுபோலு மென்ன
விரும்புமென் னுளமெனும் வேட்கை யுவமையு
மொருபொரு ளதனுக் கொப்பதொன் றன்றிப்
பலபொருள் காட்டும் பலபொரு ளுவமையுங்
கூறுபடு முவமையின் கொள்கைபிறி தாக
வேறுபடுத் திசைக்கும் விகார வுவமையு
மொருபொருண் மீதெழும் வேட்கையான் மயக்க
முறுகுதல் காட்டு மோக வுவமையு
மவனியி னில்லா வன்னதோர் பொருளை
யுவமைசெய் துரைக்கு மபூத வுவமையுஞ்
சொல்லிய வுவமந் தொறுந்தொறும் போலி
புல்லப் புணர்க்கும் பல்வயிற் போலியு

மொருதொட ரதன்க ணுவமைதொறு மின்றி
யொருவயிற் புணர்க்கு மொருவயிற் போலியுங்
கூடா ததனைக் கூடுவ தாக்கிக்
கோடா துவமைசெய் கூடா வுவமமு
மொருதலை யாக வுவ்மையை மறுத்துப்
பொருளையே யுவமைசெய் பொதுநீங் குவமையு
மொருபொருட் குவமை யொருங்குபல வரினவை
வருதொடர் பாயிறூஉ மாலை யுவமையோ
டற்புதஞ் சிலேடை யதிசயம் விரோத
மொப்புமைக் கூட்டந் தற்குறிப் பேற்றம்
விலக்கே யேதுவென விளம்பிய வெட்டு
முளப்படத் தொகைஇ யுரைத்தவெண் ணான்கும்
விளக்கிய வுவமையின் விரியெனப் படுமே.

இஃது உவமைவிரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். மேற்கூறலுற்ற பண்பு முதலிய மூன்றனும் உவமஞ் செய்யுமிடத்து அப்பண்பு முதலிய வெளிப்பட வகுத்த விரியுவமை முதலாக மாலையுவமை ஈறாகக் கிடந்த இருபத்துநான்கோடு அற்புதம் முதலாகக் கூறிய எட்டுங் கூடத் தொகுத்தலான் இங்ஙனங் கூறப்பட்ட முப்பத்திரண்டும் முன் விளக்கிய உவமையலங்காரத்தின் விரியெனப்படும். எ - று.

உற்றபண்பாதியின் உவமஞ்செய்வுழி மற்றவைவெளிப்பட வகுத்த விரியுவமை வருமாறு:—"பால்போலு மின்சொற் பவளம் போற் செந்துவர்வாய்—சேல்போற் பிறழுந் திருநெடுங்கண்—மேலாம்—புயல்போற் கொடைக்கைப் புனனாடன் கொல்லி—யயல்போலும் வாழ்வ தவர்." எனவரும்.

அன்னவைபோலாது ஆங்கவைகரப்பத் தொன்னெறிப்புலவர் தொகுத்த தொகையுவமை வருமாறு:—"தாமரைபோல் வாண் முகத்துத் தண்டரளம் போன்முறுவல்—காமரு வேய்புரைதோட் காரிகையீர்—தேமருவு—பூங்குழலின் வாசப் பொறைசுமந்து நொந்ததோ—பாங்குழலுந் தென்றற் பரிசு." எனவரும். தான்சுட்டியதனைப் பவளம்போலுஞ் செய்யவாயென விரித்துக்கூறாது பவளவாயெனத் தொகுத்துக்கூறியவழி வன்மையினனுஞ் செல்லுமேனுஞ் செலுத்தாது "சுட்டிக் கூறா வுவம மாயிற்—பொருளெதிர் புணர்த்

துப் புணர்த்தன கொளலே." என்பவாகலின் சுட்டியதனோடு புணர்க்கப்படுமென்பது தோன்றத் 'தொன்னெறிப் புலவர் தொகுத்த தொகையுவமம்' என்றார். ஒன்றெனமுடித்தலாற் பண்பு முதலியன விரிந்துந் தொக்கும் நின்றாற்போல உவம உருபுகளும் பவளம்போலும்வாயென விரிந்தும் பவளவாயெனத் தொக்கும் வருமெனக் கொள்க.

பொருளுவமையாகியும் உவமைபொருளாகியும் ஒருதொடரிடைவரூஉம் இதரவிதரவுவமை வருமாறு:—"களிக்குங் கயல் போலு நின்கணின் கண்போற்—களிக்குங் கயலுங் கனிவாய்த்—தளிர்க்கொடியே—தாமரை போன்மலரு நின்முக நின்முகம்போற்—றாமரையுஞ் செவ்வி தரும்." எனவரும்.

அதனனன்றி அதனையஃதொப்பது இதனனுமொக்குமெனுஞ் சமுச்சயவுவமை வருமாறு:—"அளவே வடிவொப்ப தன்றியே பச்சை—யிளவேய் நிறத்தாலு மேய்க்குந்—துளவேய்—கலைக்குமரி போர்துளக்குங் காரவுணர் வீரந்—தொலைக்குமரி யேறுகைப்பாடோள்" எனவரும்.

மேதகுவுவமையை விலக்கியப்பொருளையே ஓதிமுடிக்கும் உண்மையுவமை வருமாறு:—"தாமரை யன்று முகமேயீ தீங்கிவையுங்—காமருவண் டல்லக் கருநெடுங்கண்—டேமருவு—வல்லியெனி னல்ல ளிவளென் மனங்கவரு—மல்லி மலர்க்கோதை யாள்." எனவரும்.

ஓதியபொருடனக்கு ஒப்பதோர்பொருள்பின் நீதியினிறீஇய மறுபொருளுவமை வருமாறு:-"அன்னைபோ லெவ்வுயிருந் தாங்குமனபாயா—நின்னையா ரொப்பார் நிலவேந்த—ரன்னதே—வாரிபுடைசூழ்ந்த வையகத்திற் கில்லையாற்—சூரியனே போலுஞ் சுடர்." எனவரும். "அகர முதல வெழுத்தெல்லா மாதி—பகவன் முதற்றே யுலகு." என்புழி இரண்டுபொருள் வேறுவேறு கூறியதன்றி அகரம் முதல எழுத்தெல்லாம் அதுபோல என்றானும் ஆதி பகவன் முதற்றே உலகு அதுபோல என்றானும் ஒன்றாகத் துணியுமாற்றான் உவமையும் பொருளும் நீதியின் நிறுவாமையின் அது வேறுபடவந்த உவமத்தோற்றமாய் இதன்பாற்படும்; என்னை? "வேறுபட வந்த வுவமத் தோற்றங்—கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்." என்பவாகலின்.

மறுபொருளுவமையெனினும் எடுத்துக்காட்டுவமையெனினும் ஒக்கும்.

நினைந்துவமிக்கும் நிலையின்மற்றதனைப் புனைந்துவமிக்கும் புகழுவமை வருமாறு:—"இறையோன் சடைமுடிமே லெந்நாளுந் தங்கும்—பிறையேர் திருநுதலும் பெற்ற—தறைபுனல்சூழ்—பூவலயந் தாங்கு மரவின் படம்புரையும்—பாவைநின் னல்குற் பரப்பு." எனவரும்.

சிந்தித்தொருவன் சேர்ப்பதோருவமையை நிந்தித்துரைக்கும் நிந்தையுவமை வருமாறு:—"மறுப்பயின்ற வாண்மதியு மம்மதிக்குத் தோற்கு—நிறத்தலரு நேரொக்கு மேனுஞ்—சிறப்புடைத்துத்—தில்லைப் பெருமா னருள்போற் றிருமேனி—முல்லைப்பூங் கோதை முகம்." எனவரும்.

அறிவுறினதனுக்கு இதுவேயொப்பென நெறியுறப்புணர்க்கும் நியமவுவமை வருமாறு:—"தாதொன்று தாமரையே நின்முகமொப்பதுமற்—றியாதொன்று மொவ்வா திளங்கொடியே—மீதுயர்த்த—சேலே பணியப் புலியுயர்த்த செம்பியர்கோன்—வேலே விழிக்கு நிகர்." எனவரும்.

இதுவேயன்றி இதனுக்கிதுபோன்று அதுவுமாமெனும் அநியமவுவமை வருமாறு:—"கௌவை விரிதிரைநீர்க் காவிரிசூழ் நன்னாட்டு—மௌவல் கமழுங் குழன்மடவாய்—செவ்வி—மதுவார் கவிரேநின் வாய்போல்வ தன்றி—யதுபோல்வ துண்டேனு மாம்." எனவரும்.

எய்தியவுவமையும் இயைந்திடுபொருளும் ஐயுறவிளம்பும் ஐயநிலையுவமை வருமாறு:—"தாதளவி வண்டு தடுமாறுந் தாமரை கொல்—மாதர் விழியுலவும் வாண்முகங்கொல்—யாதென்—றிருபாற் கவர்வுற் றிடையூச லாடி—யொருபாற் படாதெ னுளம்." எனவரும். இதனைத் தடுமாறுவமையென்றுங் கூறுப.

இவ்வியலதனுன் இதுவன்றிதுவெனச் செவ்விதிற்றெளிந்த தேற்றவுவமை வருமாறு:—"தாமரை நாண்மலருந் தண்மதியால் வீறழியுங்—காமர் மதியுங் கறைவிரவு—மாமிதனாற்—பொன்னை மயக்கும் பொறிசுணங்கி னுண்முகமே—யென்னை மயக்கு மிது." எனவரும்.

ஆற்றவுவமை ஆற்றினும்பொருளின் ஏற்றமின்றென்னும் இன்சொலுவமை வருமாறு:—"மான்விழி தாங்கு மடக்கொடியே நின்வதன—மான்முழுதுந் தாங்கி வருமதிய—மானு லு—முற்றிழை

நல்லாய் முகமொப்ப தன்றியே—மற்றுயர்ச்சி யுண்டோ மதிக்கு." எனவரும்.

ஊறிலுவமேயம் உவமையாயுலகியல் வேறுபடமாட்டிய விபரீதவுவமை வருமாறு:—"திருமுகம் போன்மலருஞ் செய்ய கமலங்—கருநெடுங்கண் போலுங் கயல்க—ளரிவை—யியல்போலு மஞ்ஞை யிடைபோலுங் கொம்பர்—மயல்போலும் யாம்போம் வழி." எனவரும். "வருமுலை யன்ன வண்முகை யுடைந்து—திருமுக மலர்ந்த தெய்வத் தாமரை" எனவும் வரும். இங்ஙனம் வேறுபடக் கூறினும் வழுவாகாது; என்னை? "பொருளே யுவமஞ் செய்தனர் மொழியினு—மருளறு சிறப்பினஃ துவம மாகும்." என்பவாகலின்.

அரும்பொருளதனை அதுபோலுமென்ன விரும்புமென்னுளமெனும் வேட்கையுவமை வருமாறு:—"நன்றுதீ தென்றுணரா தென்னுடைய நன்னெஞ்சம்—பொன்றதைந்த பொற்சுணங்கிற் பூங்கொடியே—மன்றன்—மடுத்ததைந்த தாமரைநின் வாண்முகத்துக் கொப்பென்—றெடுத்தியம்பல் வேண்டுகின்ற தின்று." எனவரும்.

ஒருபொருளதனுக்கு ஒப்பதொன்றன்றிப் பலபொருள்காட்டும் பலபொருளுவமை வருமாறு:—"வேலுங் கருவிளையு மென்மானுங் காவியுஞ்—சேலும் வடுவகிருஞ் செஞ்சரமும்—போலுமாற்—றேமருவி யுண்டு சிறைவண் டறைகூந்தற்—காமருவு பூங்கோதை கண்." எனவரும்.

கூறுபடுமுவமையின் கொள்கைபிறிதாக வேறுபடுத்திசைக்கும் விகாரவுவமை வருமாறு:—"சீத மதியி னொளியுஞ் செழுங்கமலப்—போதின் புதுமலர்ச்சி யுங்கொண்டு—வேதாத்தன்—கைம்மலரா னன்றிக் கருத்தான் வகுத்தமைத்தான்—மொய்ம்மலர்ப்பூங் கோதை முகம்." எனவரும்.

ஒருபொருண்மீதெழும் வேட்கையான்மயக்கம் முறுகுதல் காட்டும் மோகவுவமை வருமாறு:—"கயல்போலு மென்றுநின் கண்பழிப்பல் கண்ணின்—செயல்போற் பிறழுந் திறத்தாற்—கயல் புகழ்வ—லாரத்தா னேமருங்கு லந்தரள வாண்முறுவ—லீரத்தா லுள்வெதும்பும் யான்." எனவரும்.

அவனியினில்லா அன்னதோர்பொருளை உவமைசெய்துரைக்கும் அபூதவுவமை வருமாறு:—"எல்லாக் கமலத் தெழிலுங்

திரண்டொன்றின்—வில்லேர் புருவத்து வேனெடுங்க—ணல்லார்-முகம்போலு மென்ன முறுவலித்தார் வாழு—மகம்போலு மெந்த ணகம்." எனவரும். விகாரவுவமையோடு இதனிடை வேற்றுமை யென்னையெனின், அது பிறரால் விகாரப்பட்டதாகக் கோடல்; இஃது அன்னதன்றென்க.

சொல்லியவுவமந் தொறுந்தொறும்போலி புல்லப்புணர்க்கும் பல்வயிற்போலி வருமாறு:—"மலர்வாவி போல்வரான் மாதர் கமல—மலர்போலு மாதர் வதன—மலர்கு—ழளிக்குலங்கள் போலு மளக மதனுட்—களிக்குங் கயல்போலுங் கண்." எனவரும்.

ஒருதொடரதன்கண் உவமைதொறுமின்றி ஒருவயிற்புணர்க்கும் ஒருவயிற்போலி வருமாறு:—"நிழற்கோப மல்க நிறைமலர்ப் பூங் காயாச்—சுழற்கலவ மேல்விரித்த தோகை—தழற்குலவுந்—தீம்புகை யூட்டுஞ் செறிகுழலார் போலுங்கார்—யாம்பிரிந்தார்க் கென்னு மினி." எனவரும்.

கூடாததனைக் கூடுவதாக்கிக் கோடாதுவமைசெய் கூடாவுவமை வருமாறு:—"சந்தனத்தின் செந்தழலுந் தண்மதியின் வெவ் விடமும்—வந்தனவே போலு மறுமாற்றம்—பைந்தொடியீர்—வாவிக் கமல மலர்முகங்கண் டேக்கறுவா—ராவிக் கிவையோ வரண்." எனவரும்.

ஒருதலையாக உவமையைமறுத்துப் பொருளையேயுவமைசெய் பொதுநீங்குவமை வருமாறு:—"திருமருவுந் தண்மதிக்குஞ் செந்தா மரையின்—விரைமலர்க்கு மேலாந் தகையாற்—கருநெடுங்கண்—மானே யிருளளகஞ் சூழ்ந்தநின் வாண்முகந்—தானே யுவமை தனக்கு." எனவரும். இது பண்பு தொழில் பயனென்பன பற்றிப் பொருளோடு பொருள் இயையவையாமையின் வழுவாம்பிறவெனின், ஆகாது; முன்னர் ஒத்தபொருளை எடுத்தோதி அவற்றினுஞ்சிறந்தது இதுவென்றதுணையல்லது ஒப்புமைவேண்டாமை இலனுதலின்.

ஒருபொருட்குவமை ஒருங்குபலவரினவை வருதொடர்பாயினூஉம் மாலையுவமை வருமாறு:—"மலயத்து மாதவனே போன்று மவன்பா—லலைகடலே போன்று மதனுட்—குலவு—நிலவலைய மேபோன்று நேரியன்பா னிற்குஞ்—சிலைகெழுதோள் வேந்தர் திரு." எனவரும்.

அற்புதம் முதலிய அலங்காரங்கள் எட்டோடும் உவமையலங்காரங் கூடிவருதல்பற்றி அவற்றை வேறு பிரித்தோதினர். அவ்வற்புதம் முதலியவற்றிற்கு இலக்கணம் மேற்பெறப்படும்.

அவற்றுள் அற்புதவுவமை வருமாறு:—"குழையருகு தாழக் குனிபுருவந் தாங்கி—யுழைய ருயிர்பருகி நீண்ட—விழியுடைத் தாய்—வண்டே திருளளகஞ் சூழ வருமதியொன்—றுண்டே லிவண்முகத்துக் கொப்பு." எனவரும்.

சிலேடைவகை இரண்டனுட் செம்மொழிச்சிலேடையுவமை வருமாறு:—"செந்திருவுந் திங்களும் பூவுந் தலைசிறப்பச்—சந்தத் தொடையோ டணிதழுவிச்—செந்தமிழ்நூல்—கற்றூர் புனையுங் கவிபோன் மனங்கவரு—முற்று முலையாண் முகம்." எனவரும். பிரிமொழிச்சிலேடையுவமை வருமாறு:—"நளிதடத்த வல்லியின் கண்ணெகிழ ஞாலத்—தளவி னிறைகடாஞ் சிந்திக்—களிறிகலுங்-கந்த மலையா நிலவுங் கவடசைய—வந்த மலயா னிலம்." எனவரும். யானைமேற் செல்லுங்கால் நளி, செறிவு; தடம், பெருமை; வல்லி, விலங்கு; கண், மூட்டுவாய்; நெகிழ்த்தல், அறுத்தல்; நிறைகடாம், நிறைந்தமதம்; சிந்தல், பொழிதல்; கந்தந், தறி; மலைதல், சீறுதல்; நிலவுதல், பொருந்துதல்; கவடு, புரோசைக்கயிறு; அசைதல், பரிதல். இனித் தென்றல்மேற் செல்லுங்கால் நளி, பெருமை; தடம்,பொய்கை; அல்லி,பூ; கள்,தேன்; நெகிழ்தல்,சோர்தல்;நிறை, ஒழுக்கம்; சிந்தல், அழித்தல்; கந்தம், விரை; அலைதல், நாறுதல்; நிலவுதல், நெருங்குதல்; கவடு, மரக்கொம்பு; அசைதல்,அலைதல்.

அதிசயவுவமை வருமாறு:—"நின்னுழையே நின்முகங் காண்டு நெடுந்தடந்—தன்னுழையே தன்னையுங் காண்குவ—மென்னு—மிதுவொன்று மேயன்றி வேற்றுமை யுண்டோ-மதுவொன்று செந்தா மரைக்கு." எனவரும்.

விரோதவுவமை வருமாறு:—"செம்மை மரைமலருந் திங்களு நும்முகமுந்—தம்முட் பகைவிளக்குந் தன்மையவே—யெம்முடைய—வைப்பாகுஞ் சென்னி வளம்புகார் போலினியீ—ரொப்பாகு மென்பா ருளர்." எனவரும்.

ஒப்புமைக்கூட்டவுவமை வருமாறு:—"விண்ணின்மேற் காவல் புரிந்துறங்கான் விண்ணவர்கோன்—மண்ணின்மே லன்னை வயவேந்தே—தண்ணளியிற்—சேரா வவுணர் குலங்களையுந் தேவர் கோ—னேரார்மே லத்தகையை நீ." எனவரும்.

தற்குறிப்பேற்றவுவமை வருமாறு:—"உண்ணீர்மை தாங்கி யுயர்ந்த நெறியொழுகி—வெண்ணீர்மை நீங்கி விளங்குமாற்—றண் ணீர்த்—தரம்போலு மென்னத் தருங்கடம்பை மாறன்—கரம் போற் கொடைபயில்வான் கார்." எனவரும்.

விலக்குவமை வருமாறு:—"குழைபொருது நீண்டு குமிழ் மேன் மறியா—வுழைபொருதென் னுள்ளங் கவரா—மழைபோற்-றருநெடுங்கைச் சென்னி தமிழ்நா டனையார்—கருநெடுங்கண் போ லுங் கயல்." எனவரும். கயன்மேற் செல்லுங்கால் குழை, சேறு; குமிழ், நீர்க்குமிழி; உழை, பக்கம். கண்ணின்மேற் செல்லுங்கால் குழை, காதிடுபணி; குமிழ், குமிழம்பூப்போலும் நாசி; உழை,மான்.

ஏதுவுவமை வருமாறு:—"வாளரவின் செம்மணியும் வன்னி யிளம் பாசிலையு—நாளிளைய திங்க ணகைநிலவு—நீளொளியாற்—றேனுலவும் பூங்கொன்றைத் தேவர்கோன் செஞ்சடைமேல்—வானிலவு விற்போல் வரும்." எனவரும். (௨௧)

௬௪௧. மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலு
முதலுஞ் சினையு முரண்கொள வருதலுந்
திணைமாறு படுதலும் பான்மாறு படுதலு
மின்னன பிறவுந் தொன்னெறி மரபாற்
பயப்பா டுள்வழிப் பாங்கென மொழிப.

இது மேலதற்கோர் வழுவமைதி கூறுகின்றது.

இ - ள். உவமேய அடைக்கு உவமான அடை மிகப்புணர்த் தலும் உவமேய அடைக்கு உவமான அடை குறையப்புணர்த்தலும் இழிந்த உவமையோடு உயர்ந்தபொருளை உவமித்தலும் உயர்ந்த உவமையோடு இழிந்தபொருளை உவமித்தலும் முதலுஞ் சினையுந் தம்முண் மாறுபட உவமித்தலும் உயர்திணையும் அஃறிணையுந் தம் முண் மாறுபட உவமித்தலும் ஆண்பாலும் பெண்பாலுந் தம்முண் மாறுபட உவமித்தலும் ஒருமைப்பாலும் பன்மைப்பாலுந் தம்முண் மாறுபட உவமித்தலும் இவைபோல்வன பிற வேறுபாடுகளும் அடிப்பட்ட நெறிமுறைமையாற் பயன்படுதல் உளவாகிய இடத்து வழுவெனக் களையப்படா, இயல்பென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

எனவே, பயப்பாடில்வழிக் களையப்படுமென்பதாம்.

வரலாறு:—"சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெ னப்—பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்—கட்டி லிணக்கு மிழிசின்

னகையது—போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ—ஊர்தர வந்த பொருநரோ—டார்புனை தெரிய னெடுந்தகை போரே." இதனுள் ஆர்புனைதெரியல் நெடுந்தகை போர்த்தொழிலுவமையாகிய போழ்தூண்டூசித்தொழிற்குப் பல அடைபுணர்ப்பினும் அவையனைத்தும் போர்த்தொழில் விரைவையே சிறப்பித்து வந்தமையால் வழுவாகாது இலக்கணமாமெனவும், "அவாப்போ லகன்றத னல்குன்மேற் சான்றோ—ருசாப்போல வுண்டே மருங்கு—லுசாவினைப்—பேதைக் குரைப்பான் பிழைப்பிற் பெருகிற்றே—கோதைக் கொம் பன்னாள் குயம்." எனவும், "ஈர்ங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச்—செம்முது பெண்டிர் காதலஞ் சிறுவன்—குடப்பாற் சில்லுறை போலப்—படைக்குநோ யெல்லாந் தானா யினனே." எனவும், இறப்ப இழிந்தனவற்றோடும் இறப்ப உயர்ந்தனவற்றோடும் உவமிப்பினும் அவை தத்தம் உவமேயங்களைச் சிறப்பித்து வந்தமையால் வழுவாகாது இலக்கணமாமெனவும், "நெருப்பி னன்ன சிறுகட் பன்றி" எனவும் "அடைமரை யாயிதழ்ப் போதுபோற் கொண்ட—குடைநிழற் றோன்றுநின் செம்மலைக் காணூஉ" எனவும் முதற்பொருளோடு சினைப்பொருளுஞ் சினைப்பொருளோடு முதற்பொருளுந் தம்முண் மயங்க உவமிப்பினும் அவை தத்தம் உவமேயங்களைச் சிறப்பித்து வந்தமையால் வழுவாகாது இலக்கணமாமெனவும், "கல்விசேர் மாந்தரி னிறைஞ்சிக் காய்த்தவே." எனவும் "மல்லன் மலையனைய மாதவரை வைதுரைக்கும்" எனவும், உயர்திணையோடு அஃறிணையும் அஃறிணையோடு உயர்திணையும் மயங்க உவமிப்பினும் அவை தத்தம் உவமேயங்களைச் சிறப்பித்து வந்தமையான் வழுவாகாது இலக்கணமாமெனவும், "கலங்கவிழ்த்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்—புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்" எனவும் "களவுடன் படுநரிற் கவிழ்ந்து நிலங்கிளையா—நாணிநின் றோணிலை கண்டு" எனவும், ஆண்பாலோடு பெண்பாலும் உயர்திணைப்பன்மைப்பாலோடு அத்திணையொருமைப்பாலும் மயங்க உவமிப்பினும் அவை தத்தம் உவமேயங்களைச் சிறப்பித்து வந்தமையால் வழுவாகாது இலக்கணமாமெனவுங் கொள்க.

உவமேய அடைக்கு உவமான அடை குறையப்புணர்ப்பினும் பயப்பாடுடைத்தாய் வந்தன வந்துழிக் காண்க.

"நீலப் புருவங் குனிய விழிமதர்ப்ப—மாலைக் குழல்சூழ்ந்த நின்வதனம்—போலுங்—கயல்பாய வாசங் கவருங் களிவண்—டயல்பாயு மம்போ ருகம்." இதனுள் உவமேய அடைக்கு உவமா

னம் மிக்கதனுல் வருவதோர் பயப்பாடின்மையின் வழுவாமெ னவும், "நாட்டந் தடுமொறச் செவ்வாய் நலந்திகழத்—தீட்டரிய பாவை திருமுகங்—காட்டுமொற்—கெண்டைமீ தாட நறுஞ்சே யிதழ்மிளிர—வண்டுசூழ் செந்தா மரை." இதனுள் உவமேய அடைக்கு உவமான அடைகுறையப் புணர்த்ததனுல் வருவதோர் பயப்பாடின்மையின் வழுவாமெனவும், "மன்னவர்க்கு நாய்போல் வனப்புடையர் வாள்வயவர்—மின்மினியும் வெஞ்சுடரோன் போல் விளங்கு—மன்னப்—பெடைபோலுஞ் சந்திரன் பைந்தடங்கள் போலு—மிடைமாசொன் றில்லா விசும்பு." இதனுள் இறப்ப இழிந்த நாயோடுந் தடத்தோடும் இறப்ப உயர்ந்த சுடரோனேடும் அன்னப்பெடையாகிய பெண்பாலோடும் முறையே உயர்ந்த வயவ ரையும் விசும்பினையும் இழிந்த மின்மினியையும் ஆண்பாலாகிய சந் திரனையும் உவமித்ததனுல் வருவதோர் பயப்பாடின்மையின் வழு வாமெனவுங் கொள்க. "பெருமையுஞ் சிறுமையு மெய்ப்பா டெட் டன்—வழிமருங் கறியத் தோன்று மென்ப." என்பவாகலின், இங் ஙனம் பெருமைபற்றியுஞ் சிறுமைபற்றியும் உவமிக்குங்கால் நகை முதலிய மெய்ப்பாடு எட்டும்பற்றித் தோன்றுதல் கொள்க.

"அவாப்போ லகன்றத னல்குன்மேற் சான்றோர்—சூசாப் போல வுண்டே மருங்குல்." என்பது பெருமைபற்றியுஞ் சிறுமை பற்றியும் உவகைபிறந்தது. "கலங்கவிழ்த்த நாய்கன்போற் களை துணை பிறிதின்றி" என்பது துன்பப்பெருக்கஞ் சொல்லி அவ லம்பிறந்தது. "பெருஞ்செல்வ ரில்லத்து நல்கூர்ந்தார் போல— வருஞ்செல்லும் பேருமென் னெஞ்சு." என்பது பெருக்கம்பற்றி இளிவரல் பிறந்தது. பிறவும் அன்ன.

இன்னபிறவாவன மேற்கூறிய ஐயவுவமையும் பொதுநீங்குவ மையும் பண்பு முதலியன பற்றிப் பொருளோடு பொருள் இயைய வைத்தலின்மையின் வழுவாமாயினும் அவற்றுள் ஐயவுவமை தாம ரைகொல் முகங்கொல் என்புழித் தாமரைக்கும் முகத்திற்கும் ஒப்பு மைகருதாது ஐயந்தோன்றுமையின் அதுவும் பொருளோடு பொ ருள் இயையவைத்தலேயாமென அமைத்துக்கோடலும், பொதுநீங் குவமை "நின்வாண்முகந்—தானே யுவமை தனக்கு." என்புழி முன்னர் ஒத்தபொருளை எடுத்தோதி அவற்றினுஞ் சிறந்தது இது வென்றதுணையேயல்லது ஒப்புமைவேண்டாது கூறியதன்மையின் இதுவும் பொருளோடு பொருள் இயையவைத்தலேயாமென அமைத்துக்கோடலும், மேற்கூறும் உருவகத்துள் உவமவுருவகம் "வதனமதியம் உதயமதியமே ஒக்கும்" என்புழி முன்னர் உருவகஞ்

செய்த மதியினைப் பின்னரும் உவமித்தல் புனருத்தியாகிய வழுவா மாயினும் முன் இயல்பாகிய விளக்கமுங் குளிர்ச்சியும் நோக்கி வதனமதியமென்று உருவகஞ்செய்து பின்னும் மதுநுகர்ந்தாள் முகத்துச் செயற்கையால் உளவாகிய மதர்ப்புஞ் செம்மையும் நோக்கி உதயமதியம் ஒக்குமென விசேடித்தமையின் வழுவின்றென அமைத்துக் கோடலும் முதலியவெனக் கொள்க. பிறவும் அன்ன. (உஉ)

கூசஉ. போல மறுப்ப வொப்பக் காய்ப்ப
நேர வியப்ப நளிய நந்தக்
கடுப்ப வேய்ப்ப மருளப் புரைய
வொட்ட வொடுங்க வோட நிகர்ப்ப
வன்ன வாங்கு மான விறப்ப
வென்ன வுறழத் தகைய நோக்க
வெள்ள விழையப் புல்லப் பொருவக்
கள்ள மதிப்ப வெல்ல வீழவென்
றீரெட்டு மெட்டு மிருநான்கு முறையே
தத்த மரபிற் சாற்றுமூன் றுவமைக்கு
மொத்த வுருபா முரைத்தமுத் திறத்தினு
மொன்ற நடுங்க வேர வேற்ப
வென்ற நாட மாற்றப் பொற்ப
வார வமர வனைய வற்றே
டெதிர வேய வியைய விகலத்
துணைப்ப மலையத் தூக்கே செத்தொடு
கெழுதேர் நகைமிகு சிவணிக ரின்னவு
மின்னன பிறவு மெய்துத லுரிய.

இது மேற்கூறிய உவமைகளை வரையறைவகையானும் அஃதின்மையானும் புலப்படுத்தும் உருபுகள் இவையென்கின்றது.

இ-ள். போலவென்பது முதலிய பதினாறும் அன்னவென்பது முதலிய எட்டும் எள்ளவென்பது முதலிய எட்டும் முறையே தம்முடைய தம்முடைய வரலாற்றுமுறைமையானே முற்கூறிய உருவுபற்றியும் வடிவுபற்றியும் வரும் பண்புந் தொழிலும் பயனுமாகிய மூன்று உவமைக்கும் பொருந்திய உருபுகளாம் இங்ஙனங் கூறிய மூவகை உவமத்தின்கண்ணும் ஒன்றவென்பது முதல் இன்

ணவென்பது ஈருகக் கிடந்த இருபத்தாறும் இவைபோல்வன பிற வும் உருபாதற்குப் பொருந்துதலுரியவாம். எ - று.

இங்ஙனம் வரையறுத்தற்கடப்பாடல்லது வேறு காரணம் இன்றென்பார் தத்தமரபிற் சாற்றுமென்றும் இவையும் இவை போல்வன பிறவும் உருபாமிடத்து வினையெச்சநீர்மையவாயும் பெயரெச்சநீர்மையவாயும் முற்றுநீர்மையவாயும் இடைச்சொன் னீர்மையவாயும் வருமென்பார் உருபென்மொழியாது உருபா மென்றுங் கூறினர்.

**வரலாறு**:—"தன்சொ லுணர்ந்தோர் மேனி—பொன்போலச் செய்யு மூர்கிழ வோனே." எனவும், "மணிநிற மறுத்த மலர்ப்பூங் காயா" எனவும், "ஒண்செங் காந்த ளொக்கு நின்னிறம்" எனவும், "கணைக்கா னெய்தல் காய்த்திய கண்ணியம்" எனவும், "கார்விரி கொன்றைப் பொன்னேர் புதுமலர்" எனவும், "தண்டளிர் வியப் பத் தகைபெறு மேனி" எனவும் வண்ணம்பற்றியும்; "நீர்வார் நீபமலர் கடுப்ப" எனவும், "மோட்டிரும் பாறை யீட்டுவட் டேய்ப்ப" எனவும், "வேய்மருள் பணைத்தோ ணெகிழ" எனவும், "உரல்புரை பாவடி" எனவும், "முத்துடை வான்கோ டொட்டிய முலைமிசை" எனவும், "பாம்புரு வொடுங்க வாங்கிய நுசுப்பின்" எனவும், "செந்தீ யோட்டிய வெஞ்சுடர்ப் பரிதி" எனவும், "கண் ணொடு நிகர்க்குங் கழிப்பூங் குவளை" எனவும், வடிவுபற்றியும்வரும் பண்புவமையும்; "எரியகைந் தன்ன தாமரைப் பழனத்து" எனவும், "கயநா டியானையின் முகனமர்ந் தாங்கு" எனவும், "புலவுநுனைப் பகழியுஞ் சிலையு மானச்—செவ்வரிக் கயலொடு பச்சிறாப் பிறழும்" எனவும், "புலிவிறப்ப வொலிதோற்றி" எனவும், "புலியென்னக் கலிசிறந் துராஅய்" எனவும், "செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக் கை" எனவும், "பொருகளிற் றெருத்திற் புலித்தகைப் பாய்த்துள்" எனவும், "மானேக்க நோக்கு மடநடை யாயத்தார்" எனவும், வருந் தொழிலுவமையும், "எழிலி வான மெள்ளினன் றருஉங்— கவிகை வண்கைக் கடுமான் றோன்றல்" எனவும், "மழைவிழை தடக்கை வயவா ளெழிலி" எனவும், "புத்தே ளுலகிற் பொன்மரம் புல்ல" எனவும், "விண்பொரு புகழ்விறல் வஞ்சி" எனவும், "கார் கள்ள வுற்ற பேரிசை யுதவி" எனவும், "இருநிதி மதிக்கும் பெரு வள் ளீகை" எனவும், "வீங்குசுரை நல்லான் வென்ற வீகை" என வும், "விரிபுனற் பேர்யாறு வீழ யாவதும்—வரையாது சுரக்கு முரைசா றோன்றல்" எனவும் வரும் பயனுவமையும் வந்தவாறு காண்க. நளிய நந்த என்பன வந்துழிக் காண்க.

ஒத்த என்ற மிகையானே இங்ஙனம் வரையறைகூறியவற்றுள் "கடல்போ ரேன்றல் காடிறந் தோரே" என வடிவுவமத்தின்கண்ணும் "ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல" எனத் தொழிலுவமத்தின்கண்ணும் "அழல்போல் வெங்கதிர் பைதறத் தெறுதலின்" எனப் பயவுவமத்தின்கண்ணும் போலுமென்பதூஉம், "பொன்னுரை கடுக்குந் திதலையர்" என உருவுவமத்தின்கண்ணுங் "கார்மழை முழக்கிசை கடுக்கும்" என வினையுவமத்தின்கண்ணும் "விண்ணதி ரிமிழிசை கடுப்ப" எனப் பயவுவமத்தின்கண்ணுங் கடுப்ப என்பதூஉஞ், "செவ்வானன்னமேனி" என உருவுவமத்தின்கண்ணும் "இலங்குபிறையன்ன விளங்குவால் வையெயிற்று" என வடிவுவமத்தின்கண்ணும் "மாரியன்னவண்கை" எனப் பயவுவமத்தின்கண்ணும் அன்ன என்பதூஉங் கூறியவாறன்றிச் சிறுபான்மை பிறழ்ந்துவருதலுங் கொள்க. ஏனையவும் பிறழ்ந்துவருவன உளவேற் காண்க.

"குன்றியுங் கோபமு மொன்றிய வுடுக்கை" என உருவுபற்றியும் "வேயொன்று தோளொருபால் வெற்பொன்று தோளொருபால்" என வடிவுபற்றியும் வரும் பண்புவமத்தின்கண்ணும் "வேலொன்று கண்ணார்மேல் வேட்கைநோய் தீராமோ—கோலொன்று கண்ணொன்று கொண்டு." என வினையுவமத்தின்கண்ணும் "மழையொன்று வண்டடக்கை வள்ளியோர்ப் பாடி" எனப் பயவுவமத்தின்கண்ணும் ஒன்ற என்பதூஉம், "படங்கெழு நாக நடுங்கு மல்குல்" என வடிவுபற்றிய பண்புவமத்தின்கண் நடுங்க என்பதூஉம், "முத்தேர் முறுவலாய்" என உருவுபற்றிய பண்புவமத்தின்கண் ஏர என்பதூஉம், "வாயென்றபவழம்" என உருவுபற்றிய பண்புவமத்தின்கண் என்ற என்பதூஉம், "வேயொடு நாடிய தோள்" என வடிவுபற்றிய பண்புவமத்தின்கண் நாட என்பதூஉம், "மணிமாற்றியமாமேனி" என உருவுபற்றிய பண்புவமைக்கண் மாற்ற என்பதூஉம், "மதியம் பொறப்ப மலர்ந்த வாண்முகம்" என வடிவுபற்றிய பண்புவமத்தின்கண் பொறப்ப என்பதூஉம் வந்தன. இவற்றுள் ஒழிந்த உவமைபற்றிவந்தனவுங் காட்டாதொழிந்த உருபுகளும் வந்துழிக் காண்க.

இன்னபிறவாவன;-சீர், இற்று, ஐந்தாம்வேற்றுமையுருபாகிய இன்முதலியனவாம். "பொற்கலத் தூட்டிப் புறந்தரினு நாய்பிறரெச்சிற் கிமையாது பார்த்திருக்கு—மச்சீர்—பெருமை யுடைத்தாக் கொளினுங்கீழ் செய்யுங்—கருமங்கள் வேறு படும்." எனச் சீர்வந்தது. பிறவும் வந்துழிக் காண்க.

"உவமைச் சொல்லே வரம்பிகந் தனவே." என்பவாகலின் எடுத்தோதியொழியாது இன்னபிறவும் என்றார். (௨௩)

சூசரு. உவமையும் பொருளும் வேற்றுமை யொழிவித்
தொன்றெனை மாட்டினஃ துருவக மாகும்.

நிறுத்தமுறையானே உருவக அலங்காரங் கூறுவனவற்றுள் இஃது அதன் பொது இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். உவமானப்பொருளையும் உவமேயப்பொருளையும் வேறுபாடொழிவித்து ஒன்றென்பதோர் உணர்வுதோன்ற ஒற்றுமைகொளுத்தின் அது மேற்கூறிய உருவகமென்னும் அலங்காரமாம். எ - று. (௨௪)

சூசச. மாட்டேற் றுரைதொகூஉந் தொகையுரு வகமு
மீட்டது விரிந்த விரியுரு வகமுஞ்
சொற்றது தொகுத்துந் தொகாதுமொரு தொடரி
னுற்றுவரு தொகைவிரி யுருவகத் தானும்
பலபொரு ளுருவகப் படுப்பினப் பலவு
மியைவன புணர்க்கு மியைபுரு வகமும்
வேட்டன வுருவகம் வேறுவே றியற்றி
யீட்டுதல் புரிந்த வியைபிலுரு வகமு
மூக்குபொரு ளுறுப்பெலா முருவகஞ் செயிற்சில
நீக்கின செயும்விய னிலையுரு வகமு
மோர்ந்தடை யுருபிற் றுற்றதை யவற்றாற்
றேர்ந்துரு பிக்குஞ் சிறப்புரு வகமு
முருவகஞ் செய்ததற் குறுமர பிவையென
விரியக் காட்டும் விரூபகத் தானும்
பாங்கின துருவகப் படுத்தியது பாங்கிலாத்
தீங்குதரல் பிறிதினெனச் செயுஞ்சமா தானமு
முருவகஞ் செய்ததைப் பெயர்த்தும்வே றொன்று
வுருவகஞ் செயுமுரு வகவுருவகமு
மொட்டிய வுறுப்பினொன் றுருவக மாகக்
கட்டுரை செயுமே காங்கவுரு வகமு
மெண்ணிய வவயவ மெவையுமுரு வகமாக்
கண்ணுதல் செயுமனே காங்கவுரு வகமு

முற்ற வுறுப்புறுப் புடையதெவ் வகையினு
முற்றவுரு வகஞ்செயு முற்றுரு வகமு
மூக்கிய வுறுப்பே யுருவக மாக
வாக்குதல் செயுமவ யவவுரு வகமு
மூற்றமா ரங்கியே யுருவக மாக
வாற்றல்சா லவயவி யுருவக மவற்ரோ
டுவமை யேது வேற்றுமை விலக்கே
யவநுதி சிலேடையென் றவையு முளப்பட
வுளம்புகு நெறியா லுரைத்தமூ வேழும்
விளம்பிய வுருவக விரியெனப் படுமே.

இஃது உருவகவிரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். மாட்டேற்றுரைதொகூஉந் தொகையுருவகம் முதலாக ஊற்றமாரங்கியே உருவகமாக ஆற்றல்சால் அவயவியுருவகம் ஈருகக் கிடந்த பதினைந்தோடு உவமை முதலாகச் சிலேடை ஈருகக் கிடந்த ஆறுங் கூடத்தொகுதலான் உள்ளங்கொள்ளும் முறைமையாற் சொல்லப்பட்ட இருபத்தொன்றும் மேற்கூறிய உருவக அலங்காரத்தின் விரியென்றுசொல்லப்படும். எ - று.

மாட்டேற்றுரைதொகூஉந் தொகையுருவகம் வருமாறு:—"அங்கை மலரு மடித்தளிருங் கண்வண்டுங்—கொங்கை முகிழுங் குழற்காருந்—தங்கியதோர்—மாதர்க் கொடியுளதான் மண்பா லதற் கெழுந்த—காதற் குளதோ கரை." எனவரும். மீட்டதுவிரிந்த விரியுருவகம் வருமாறு:—"கொங்கை முகையாக மென்மருங்குல் கொம்பாக—வங்கை மலரா வடிதளிராத்—திங்க—ளளிநின்ற மூரலணங்கா மெனக்கு—வெளிநின்ற வேனிற் திரு." எனவரும். இவ்விரண்டும் எல்லாவற்றிற்கும்பொது.

சொற்றதுதொகுத்துந் தொகாதுமொருதொடரின் உற்றுவரு தொகைவிரியுருவகம் வருமாறு:—"வையந் தகளியா வார்கடலே நெய்யாக—வெய்ய கதிரோன் விளக்காகச்—செய்ய—சுடராழி யானடிக்கே சூட்டுவன்சொன் மாலை—யிடராழி நீங்குகவே யென்று." எனவரும்.

பலபொருளுருவகப் படுப்பினப்பலவும் இயைவனபுணர்க்கும் இயைபுருவகம் வருமாறு:—"செவ்வாய்த் தளிரு நகைமுகிழுங்

கண்மலரு—மைவா ரளக மதுகரமுஞ்—செவ்வி—யுடைத்தாந் திரு முகமென் னுள்ளத்து வைத்தார்—துடைத்தாரே யன்றே துயர்." எனவரும். இதனுட் தளிர்முதலியன தம்முள் இயைபுடைமையின் இப்பெயர்த்தாயிற்று.

வேட்டனவுருவகம் வேறுவேறியற்றி ஈட்டுதெல்புரிந்த இயை பிலுருவகம் வருமாறு:—"தேனக் கலர்கொன்றை பொன்னுகச் செஞ்சடையே—கூனற் பவளக்கொடியாகத்—தான—மழையாகக் கோடு மதியாகத் தோன்றும்—புழையார் தடக்கைப் பொருப்பு." எனவரும்.

ஊக்குபொருளுறுப்பெலாம் உருவகஞ்செயிற்சில நீக்கின செய்யும் வியனிலையுருவகம் வருமாறு:—"செவ்வாய் நகையரும்பச் செங்கைத் தளிர்விளங்க—மைவா ணெடுங்கண் மதர்த்துலவச்—செவ்வி—நறவலருஞ் சோலைவாய் நின்றதே நண்பா—குறவர் மட மகளாங் கொம்பு." எனவரும்.

ஓர்ந்தடையுருபிற் றுற்றதையவற்றூற் தேர்ந்துருபிக்குஞ் சிறப் புருவகம் வருமாறு:—"விரிகடல்சூழ் மேதினி நான்முகன்மீ கா னுச்—சுரநதிபா யுச்சி தொடுத்த—வரிதிருத்தாள்—கூம்பாக வெப் பொருளுங் கொண்டு பெருநாவா—யாம்பொலிவிற் றுயினதா ழுதுஞ் செவ்வி யியல்பாய் மலரு—மரிவை வதலன்று."எனவரும்.

உருவகஞ்செய்ததற்கு உறுமரபிவையென விரியக்காட்டும் விருபகம் வருமாறு:—"தண்மதிக்குத் தோலாது தாழ்தடத்துள் வைகாது—முண்மருவு தாண்மேன் முகிழாது—நண்ணி—யிருபொ ழும் புயம்." எனவரும்.

பாங்கினதுருவகப் படுத்தியதுபாங்கிலாத் தீங்குதரல்பிறிதி னெனச் செய்யுஞ் சமாதானவுருவகம் வருமாறு:—"கைகாந்தள் வாய்குமுதங் கண்ணெய்தல் காரிகையீர்—மெய்வார் தளிர்கொங்கை மென்கோங்க—மிவ்வனைத்தும்—வன்மைசேர்ந் தாவி வருத்துவது மாதவமொன்—றின்மையே யன்றே வெமக்கு." எனவரும்.

உருவகஞ்செய்ததைப் பெயர்த்தும்வேறென்று உருவகஞ் செய்யும் உருவகவுருவகம் வருமாறு:—"கன்னிதன் கொங்கைக் குவடாங் கடாக்களிற்றைப்—பொன்னெடுந்தோட் குன்றே புனை கந்தா—மன்னவநின்—ஞகத் தடஞ்சே வகமாக யானணைப்பல்—சோகித் தருளே றுவண்டு." எனவரும்.

ஒட்டியவுறுப்பினென்று உருவகமாகக் கட்டுரைசெய்யும் ஏகாங்கவுருவகம் வருமாறு:—"காதலனைத் தாவென் றுலவுங் கரு நெடுங்க—ணேதிலனு லென்னென்னு மின்மொழித்தேன்—மாதர்-மருண்ட மனமகிழ்ச்சி வாண்முகத்து வந்த—விரண்டினுக்கு மென் செய்கோ யான்." எனவரும்.

எண்ணியவவயவம் எவையுமுருவகமாக் கண்ணுதல்செய்யும் அனேகாங்கவுருவகம் வருமாறு:—"கைத்தளிராற் கொங்கை முகிழ் தாங்கிக் கண்ணென்னு—மைத்தடஞ்சேன் மைந்தர் மனங்கலங்க—வைத்ததோர்—மின்னுளதான் மேக மிசையுளதான் மற்றிதுவு—மென்னுளதா நண்பா வினி." எனவரும்.

உற்றவுறுப்புறுப்பு உடையதெவ்வகையினும் முற்றவுருவகஞ் செயும் முற்றுருவகம் வருமாறு:—"விழியே களிவண்டு மென்ன கையே தாது—மொழியே முருகுலாந் தேறல்—பொழிகின்ற—தே மருவு கோதைத் தெரிவை திருமுகமே—தாமரையென் னுள்ளத் தடத்து." எனவரும். எவ்வகையினும் என்றதனானே அவயவ வவயவியேயன்றிப், "பவழவாய்ச்செறுவுதன்னு ணித்திலம்பயில வித்திக்—குழவிநாறெழுந்துகாளைக் கொழுங்கதிரீன்றுபின்னுட்—கிழவுதான்விளைக்கும்பைங்கூழ் கேட்டிரேற்பிணிசெய்பன்மா—வுழ விர்காண்மேயுஞ்சீல வேலியுய்த்திடுமினென்றான்." என இதனுட் பிணிசெய்பன்மா மேயாமற்பொருட்டெனக் கருமத்தினையுஞ் சீல வேலியெனக் கருவியையும் ஒருங்கு உருவகஞ்செய்தலும் முற்றுரு வகமெனவும், "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா—ரிறைவ னடி சேரா தார்." எனவும் "உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்—வரனென்னும் வைப்புக்கோர் வித்து." எனவும் முறை யே கருமமாகக் கருவியாக ஒன்றனை உருவகஞ்செய்து ஒன் றனை வாளாது கூறுதல் ஏகதேசவுருவகமெனவும் பெயர்பெ றுதல் கொள்க.

ஊக்கியவுறுப்பே உருவகமாக ஆக்குதல்செய்யும் அவயவவுரு வகம் வருமாறு:—"புருவச் சிலைகுனித்துக் கண்ணம்பென் னுள்ள-முருவத் துரந்தா ரொருவ—ருருவி—பொருங்கற் சிலம்பிற் புனை யல்குற் றேர்மேன்—மருங்குற் கொடிநுடங்க வந்து." எனவரும்.

ஊற்றமாரங்கியே உருவகமாக ஆற்றல்சால் அவயவியுருவகம் வருமாறு:—"வார்புருவங் கூத்தாட வாய்மழலை சோர்ந்தசைய—வேர்வரும்பச் சேந்து விழிமதர்ப்ப—வூர—லளிக்குந் தெரிவை வதனம் புயத்தாற்—களிக்குந் தவமுடையேன் கண்." எனவரும்.

உவமையுருவகம் வருமாறு:—"மதுமகிழ்ந்த மாதர் வதன மதிய—முதய மதியமே யொக்கு—மதிதளர்வேன்—வெம்மை தணிய மதராக மேமிகுக்குஞ்—செம்மை யொளியாற் றிகழ்ந்து." எனவரும். ஏதுவுருவகம் வருமாறு:—"மாற்றத்தாற் கிள்ளை நடை யான் மடவன்னந்—தோற்றத்தாற் றண்ணென் சுடர்விளக்கம்—போற்று—மியலான் மயிலெம்மை யிந்நீர்மை யாக்கு—மயலார் மதர்நெடுங்கண் மான்." எனவரும். வேற்றுமையுருவகம் வருமாறு:—"வையம் புரக்குமான் மன்னவநின் கைக்காரும்—பொய் யின்றி வானிற் பொழிகாருங்—கையா—மிருகார்க்கு மில்லைப் பருவ மிடிக்கு—மொருகார் பருவ முடைத்து."எனவரும். விலக்கு ருவகம் வருமாறு:—"வல்லி வதன மதிக்கு மதித்தன்மை—யில்லை யுளதே லிரவன்றி—யெல்லை—விளக்கு மொளிவளர்த்து வெம்மை யா னெம்மைத்—துளக்கு மியல்புடைத்தோ சொல்." எனவரும். அவநுதியுருவகம் வருமாறு:—"பொங்களக மல்லப் புயலே யிவை யிவையுங்—கொங்கை யிணையல்லக் கோங்கரும்பே—மங்கைநின்-மையரிக்கண் ணல்ல மதர்வண் டிவையிவையுங்—கையல்லக் காந் தண் மலர்." எனவரும். சிலேடையுருவகம் வருமாறு:—"உண் ணெகிழ்ந்த செவ்வித்தாய்ப் பொற்றேட் டொளிவளரத்—தண்ண ளிசூழ்ந் தின்பந் தரமலர்ந்து—கண்ணெகிழ்ந்து—காதல் கரையி றப்ப வாவி கடவாது—மாதர் வதனும் புயம்."எனவரும். (௨௫)

சூ௪௫. உருவக முவமை யெனவிரு திறத்தவு
நிரம்ப வுணர்த்தும் வரம்புதமக் கின்மையிற்
கூறிய நெறியின் வேறுபட வருபவை
தேறினர் கோட றெள்ளியோர் கடனே.

இது மேலனவற்றிற்கோர் புறனடை கூறுகின்றது.

இ-ள். உருவகமும் உவமையுமென்னும் இரண்டுதிறத்து அலங்காரமும் ஒழிவின்றியுணர்த்தும் வரையறை தமக்கின்மையாற் சொல்லப்பட்டநெறியின் வேறுபட வருவனவற்றை அறிந்து அவற்றின்பாற்சார்த்திக் கோடல் அறிவுடையோரது கடன்.எ-று.

ஈண்டு உருவகம்முற்கூறியது அதிகாரத்தாலெனக் கொள்க.

"ஏரி யிரண்டுஞ் சிறகா வெயில்வயிறுக்—காருடைய பீலி கடிகாவா—நீர்வண்ண—னத்தியூர் வாயா வணிமயிலே போன் றதே—பொற்றோன் கச்சிப் பொலிவு." என்பது இயைபுருவகத் தின்பாற் படுமெனவும், "மழலைவாய் நவ்வி மதர்நெடுங்கண் மஞ்

ஞை—குழலின் பொறைசுமந்த கொம்பர்—சுழல்கலவந்—தாங்கிய வன்னந் தடங்கொங்கை யாரமுதர்—தேங்கொள் கமலத் திரு.” என்பது சிறப்புருவகத்தின்பாற் படுமெனவும், “வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க—சொல்லே ருழவர் பகை.” என்பது ஏதுவுருவகத்தின்பாற் படுமென்வும், “மலையிற் பயிலா மடமஞ் ஞை வாரி—யலையிற் பயிலா வமுதம்—விலையிட்—டளவாத நித் தில மாராத தேறல்—வளவாண் மதர்நெடுங்கண் மான்.” என்பது விலக்குருவகத்தின்பாற் படுமெனவும், “நல்லார்கட் பட்ட வறு மையி னின்னுதே—கல்லார்கட் பட்ட திரு.” என்பது தேற்ற வுவமையின்பாற் படுமெனவும், “முத்துக்கோத் தன்ன முறுவல் முறுவலே—யொத்தரும்பு முல்லைக் கொடிமருங்குன்—மற்றதன் மேல்—விண்ணளிக்குங் கார்போன் விரைக்கூந்தன் மெல்லியலார்-தண்ணளிக்கு முண்டோ தரம்.” என்னுமிவ்வொப்புமையுவமை வி காரவுவமத்தின்பாற் படுமெனவும், “அடிநோக்கி ஞழ்கடல் வண்ண னவன்றன்—படிநோக்கிற் கூபங்கொன்றைத் தாரான்—முடிநோக் கித்—தேர்வளவ ஞத றெளிந்தேன்றன் சென்னிமே—லாரலங்கற் ரூன்றிற்றுக் கண்டு.” என்பது பலவயிற்போலியுவமையின்பாற் படுமெனவும், “ஈர்ந்து நிலந்தோயு மிரும்பிடித் தடக்கையிற்—சேர்ந் துடன் செறிந்த குறங்கிற் குறங்கென—மால்வரை யொழுகிய வா ழை வாழைப்—பூவெனப் பொலிந்த வோதி யோதியி—னளிச்சினை வேங்கை நாண்மலர் நாண்மலர்—களிச்சுரும் பரற்றுஞ் சுணங்கு சுணங்குபிதிர்ந்—தியாணர்க் கோங்கின் விரைமுகை முகையெனப்-பூணகத் தொடுங்கிய வெம்முலை வெம்முலை—யெனவண் டோட்டுப் பெண்ணை—வளர்த்த நுங்கின் செறிதரு மெயிற்றின.” என்னும் இச்சந்தானவுவமை மாலையுவமையின்பாற் படுமெனவும், “பாரி பாரி யென்றுபல வேத்தி—யொருவர்ப் புகழ்வர் செந்நாப் புலவர்—பாரி யொருவனு மல்லன்—மாரியு முண்டீண் டுலகுபுரப் பதுவே.” என் பது விலக்குவமையின்பாற் படுமெனவும் அமைத்துக்கொள்க. இன் னும் பிறவாற்ருன் வருவனவுளவேல் அவற்றையும் அவையுமாறு அறிந்து அமைத்துக்கொள்க.

“அடுக்கிய தோற்றம் விடுத்த பண்பே.” என்பவாகலின், இவற்றுள் ஒப்புவமை “முத்துக்கோத் தன்ன முறுவல் முறுவலே-யொத்தரும்பு முல்லைக் கொடிமருங்குல்” என உவமைக்குவமை யாய் அடுக்கிவருதல் வரையப்படுமெனின், படாது; “வெண்டிங் கள் போன்றுளது வெண்சங்கம் வெண்சங்கின்—வண்டியங்கு தா ழை வளர்கோடு” என்ருற்போலாது பயப்பாடுண்மையினென்பது.

* *

உருவகமும் உவமையும் ஓரினமாக்கிப் புறனடைப்படுத்தமை யான் உருவகத்திற்கு ஓதிய இலக்கணம் உவமையும் உவமைக்கு ஓதிய இலக்கணம் உருவகமும் பெறுதலுங் கொள்க. "மன்றற் குழலா ருயிர்மேன் மதன்கடவுந்—தென்றற் கரிதடுக்குந் திண்கணை ய—மின்றவரைக்—கங்குற் கடலிற் கரையேற்று நீள்புணையாம்—பொங்குநீர் நாடன் புயம்." என்பது உவமைபோல அற்புதம் அடுத்துவந்த உருவகம். பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க.

இனிப் பண்புபற்றி உவமிக்குங்காற், "கலப மாமயி லெருத் திற் கடிமல ரவிழ்ந்தன காயா—வுலக மன்னவன் திருநா ளொளி முடி யணிந்துநின் றவர்போற்—பலவும் பூத்தன கோங்கம் பைந்து கின் முடியணிந் தவர்பி—னுலவு காஞ்சுகி யவர்போற் பூத்தன மரவ மங் கொருங்கே." என்றாற்போலன்றிக் "கருங்கால் வேங்கை வீயுகு துறுக—லிரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை—யெல்லி வருநர் களவிற்கு—நல்லை யல்லை நெடுவெண் ணிலவே." என வேறுபடவருதலும் அமைத்துக்கொள்க. பிறவும் அன்ன. ()

சாசகா. குணந்தொழில் சாதி பொருள்குறித் தொருசொ
லொருவயி னின்று பலவயிற் பொருடரிற்
றீவக மாகு மதுவே செய்யுளின்
மூவிடத் தியலு மென்மனார் புலவர்.

இது நிறுத்தமுறையானே தீவகமாமாறு கூறுகின்றது.

இ - ள். குணமுதலிய நான்கனுள் யாதானுமொன்றனைக்கு றித்து ஒருசொல் ஓரிடத்தினின்று பலவிடத்துநின்ற சொற்க ளோடு பொருந்தி அப்பொருளைவிளக்குமாயின் மேற்கூறிய தீவக மென்னும் அலங்காரமாம். இது செய்யுளின்கண் முதலிடைகடை யென்னும் மூன்றிடத்தும் புலப்படுமென்று கூறுவர் ஆசிரியர்.எ-று.

எனவே, முதனிலைத்தீவகம் இடைநிலைத்தீவகங் கடைநிலைத்தீ வகமென மூன்றும். அவை குணந்தொழில் சாதி பொருளென்ப னவற்றோடு உறழப் பன்னிரண்டாம். அவற்றுட் குணமுதனிலைத் தீவகம் வருமாறு:—"சேந்தன வேந்தன் திருநெடுங்கண் டெவ் வேந்த—ரேந்து தடந்தோ ளிழிகுருதி—பாய்ந்த—திசையனைத்தும் வீரச் சிலைபொழிந்த வம்பு—மிசையனைத்தும் புட்குலமும் வீழ்ந்து." எனவரும். தொழின்முதனிலைத்தீவகம் வருமாறு:—"சரியும் புனை சங்குந் தண்டளிர்ப்பொன் மேனி—வரியுந் தன்தடஞ்சூழ் வம்புந்—

திருமான—வாரந் தழுவுந் தடந்தோ ளகளங்கன்—கோரந் தொழுத கொடிக்கு.'' எனவரும். சாதிமுதனிலைத்தீவகம் வருமாறு:—"தென்ற லனங்கன் றுணையாஞ் சிலகொம்பர்—மன்றற் றலைமக ளும் வான்பொருண்மேற்—சென்றவர்க்குச்—சாற்றவிடுந் தூதாகுந் தங்கும் பெரும்புலவி—மாற்ற வருவிருந்து மாம்.'' எனவரும். பொருண்முதனிலைத்தீவகம் வருமாறு:—"முருகவேள் சூர்மா முத றடிந்தான் வள்ளி—புரிகுழன்மேன் மாலை புனைந்தான்—சரண ளித்து—மேலாய வானோர் வியன்சேனை தாங்கினன்—வேலா னிடைகிழித்தான் வெற்பு.'' எனவரும். குணவிடைநிலைத்தீவகம் வருமாறு:—"எடுத்த நிரைகொணு வென்றலுமே வென்றி—வடித் திலங்கு வைவாளை வாங்கத்—துடித்தனவே—தண்ணார மார்புந் தடந்தோளும் வேல்விழியு—மெண்ணாத மன்னர்க் கிடம்.'' எனவ ரும். தொழிலிடைநிலைத்தீவகம் வருமாறு:—"எடுக்குஞ் சிலைநின் னெதிர்ந்தவருங் கேளும்—வடுக்கொண் டிரந்துணிய வாளி—தொ டுக்குங்—குடையுந் திருவருளுங் கோடாத செங்கோ—னடையும் பெரும்புலவர் நா.'' எனவரும். சாதியிடைநிலைத்தீவகம் வருமாறு:-"கரமருவு பொற்றொடியாங் காலிற் கழலாம்—பொருவில் புயவ லைய மாகு—மரவரைமே—னுணு மரற்கு நலகமணிசேர் தாழ்கு ழையாம்—பூணும் புனைமாலை யாம்.'' எனவரும். பொருளிடைநி லைத்தீவகம் வருமாறு:—"மானமருங் கண்ணுண் மணிவயிற்றில் வந்துதித்தான்—தானவரை யென்றுந் தலையழித்தான்—யானை முக—னேட்டினன் வெங்கலியை யுள்ளத் தினிதமர்ந்து—வீட் டினு னம்மேல் வினை.'' எனவரும். தொழிற்கடைநிலைத்தீவகம் வருமாறு:—"துறவுளவாச் சான்றோ ரிளிவரவுந் தூய—பிறவுளவா லுனளா வூனும்—பறைகறங்கக்—கொண்டா னிருப்பக் கொடுங்கு ழையா டெய்வமுமொன்—றுண்டாக வைக்கற்பாற் றன்று.'' என வரும். பொருட்கடைநிலைத்தீவகம் வருமாறு:—"புறத்தன வூரன நீரன மாவின்—திறத்தன கொற்சேரி யவ்வே—யறத்தின்—மகனை முறைசெய்தான் மாவஞ்சி யாட்டி—முகனை முறைசெய்த கண்.'' எனவரும். ஏனைய வந்துழிக்காண்க.

ஈண்டுக் கூறியகுணமுங் காலமும் புணர்ந்துநின்றமையிற் தொழிலன்றோவெனின் இவ்வாறே குணமுந் தொழிலுந் தோன்றுங் காற் காலம் புணர்ந்துநிற்றல் ஒக்குமேனுங் குணம் பொருளது புடை பெயர்ச்சியாய் நீங்கிநிற்குந் தொழில்போலாது பொருட்குப் பண் பாய்த் தனக்கு வேறுபண்பின்றி அப்பொருளை நீங்காதுநிற்குஞ் சிறப்பாற் குணத்தீவகமென்றார். (உஎ)

௬௪௭. மாலை விருத்த மொருபொருள் சிலேடை
யுவமையுரு வகத்தொடு மொன்றுமா றதுவே.

இது மேலதற்கோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். மாலை முதல் உருவகம் ஈறாகக் கிடந்த ஆறனோடும் பொருந்தும் மேற்கூறிய தீவக அலங்காரம். எ - று.

"மனைக்கு விளக்கு மடவாண் மடவா—டனக்குத் தகைசால் புதல்வர்—மனக்கினிய—காதற் புதல்வர்க்குக் கல்வியே கல்வி தனக்—கோதிற் புகழ்சா லுணர்வு." இது மாலாதீவகம். "வரிவண்டு நாணு மதுமல ரம்பாப்—பொருவெஞ் சிலைக்குப் பொலிவும்—பிரிவின்—விளர்க்கு நிறமுடையார் தம்மேன் மெலிவும்—வளர்க்கு மலயா நிலம்." இது விருத்தாதீவகம். ஒருபொருள் இரண்டுகுணஞ் செய்தமையின் அப்பெயர்த்தாயிற்று. "வியன்ஞாலஞ் சூழ்திசைக ளெல்லாம் விழுங்கு—மயலாத் துணைநீத் தகன்றா—ருயிர்பருகும்-விண்கவரும் வேரிப் பொழில்புதைக்கு மென்மயில்கள்—கண்கவரு மீதெழுந்த கார்." இஃது ஒருபொருட்டீவகம். ஒருபொருட்டிறமே கொண்டுமுடிதலின் இவ்வொருபொருட்டீவகம் பொருட்டீவகத்தின் வேறாயிற்று. "மான்மருவி யாளரிகள் சேர்ந்து மருண்டுள்ளந்—தான்மறுக நீண்ட தகைமையவாய்க்—கானின்—வழியு மொருதனிநாம் வைத்தகன்ற மாதர்—விழியுந் தருமான் மெலிவு." இது சிலேடைத்தீவகம். "முன்னங் குடைபோன் முடிநா யகமணி போன்—மன்னுந் திலகம்போல் வாளிரவி—பொன்னகலந்—தங்குங் கவுத்துவம்போ லுந்தித் தடமலர்போ—லங்க ணுலகளந்தார்க் காம்." இஃது உவமானதீவகம். "கானற் கயலாம் வயலிற் கமலமா-மேனற் கருவிளையா மின்புறவின்—மானுங்—கடத்துமேல் வேடர் கடுஞ்சரமா நீங்கிக்—கடத்துமேன் மெல்லியலாள் கண்." இஃது ரூபகதீவகம். பிறவும் அன்ன. நீங்கிக் கடத்துமேலென்பதற்கு நெஞ்சமே இவளைத் தனியேயிருத்திப் பிரிந்து விட்டுப்போவோமாயின் எனப் பொருளுரைத்துக் கொள்க. (உஅ)

௬௪௮. முன்வரு சொல்லும் பொருளும் பலவயிற்
பின்னும் வருமெனிற் பின்வரு நிலையே.

இது நிறுத்தமுறையானே பின்வருநிலையென்னும் அலங்காரங் கூறுகின்றது.

இ-ள். ஒருசெய்யுளுள் முன்னர்வந்த சொல்லே பின்னர்ப் பல இடத்துவரினும் முன்னர்வந்த பொருளே பின்னர்ப் பல இடத்துவரினும் அது பின்வருநிலையென்னும் அலங்காரமாம். எ-று.

"மால்கரி காத்தளித்த மாலுடைய மாலைசூழ்—மால்வரைத் தோ ளாதரித்த மாலையார்—மாலிருள்சூழ்—மாலையின் மால்கட லார்ப்ப மதன்றொடுக்கு—மாலையின் வாளி மலர்." இது சொற்பின் வருநிலை. மால், மயக்கம். மால், அரி. மாலை, தொடையல். மால், பெருமை. மாலை, இயல்பு. மாலிருள், மயங்கியவிருள். மாலை, அந்தி. மால்கடல், கருங்கடல். மாலை, இடையறுமை. "அவிழ்ந்தன தோன்றி யலர்ந்தன காயா—நெகிழ்ந்தன நேர்முகை முல்லை—மகிழ்ந்துடன்—விண்டன கொன்றை விரிந்த கருவிளை—கொண் டன காந்தள் குலை." இது பொருட்பின்வருநிலை. என்னை? இவ்வ னைத்தும் மலர்தற்பொருளவாகலின்.

வருவதென்னது வருமெனினென்ற மிகையானே முன்னர் வந்த சொல்லும் பொருளும் பின்னர்ப் பலவயின் ஒருங்குவருமா யின் அது சொற்பொருட்பின்வருநிலையெனப் பெயர்பெறுதலுங் கொள்க. வரலாறு:—"வைகலும் வைகல் வரக்கண்டு மஃதுண ரார்—வைகலும் வைகலை வைகுமென் றின்புறுவார்—வைகலும் வைகற்றம் வாணுண்மேல் வைகுதல்—வைகலை வைத்துணரா தார்." எனவரும்.

இன்னும் இவ்விலேசானே பிற அலங்காரங்களோடு கூடி வருதலுங் கொள்க. "செங்கமல நாட்டஞ் செழுந்தா மரைவத னம்—பங்கயஞ் செவ்வாய் பதுமம்போற்—செங்கரங்க—ளம்போ ருகந்தா ளரவிந்த மாரனுர்—தம்போ ருகந்தா டனம்." இஃது உவமானப்பொருட்பின்வருநிலை. ஏனையவற்றேடு வருவன வந் துழிக் காண்க. (௨௧)

சாசக. முன்னத்தின் மறுப்பின் முன்ன விலக்கது
மூவகைக் காலமு மேவிய தாகிப்
பொருள்குணங் காரணங் காரியம் புணரும்.

நிறுத்தமுறையானே முன்னவிலக்கலங்காரங் கூறுவனவற் றுள் இஃது அதன் பொது இலக்கணமும் அதன் திறனுங் கூறுகின்றது.

இ - ள். ஒருபொருளைக் குறிப்பினுன் விலக்கின் முன்னவிலக்கென்னும் அலங்காரமாம். அவ்வலங்காரந்தான் மூவகைக்காலத்தோடும் பொருந்திப் பொருள் முதலிய நான்கனோடுங் கூடி நடக்கும். எ - று.

பொருட்பொலிவுஞ் செய்யுட்சிறப்பும் நோக்கிக் குறிப்பினை எடுத்தோதினுரேனும் மறுப்பதென்னுது மறுப்பினென்ற மிகையான் அதன் மறுதலையாகிய வெளிப்படையான் மறுப்பதூஉங் கொள்க.

வரலாறு:—"பாலன் றனதுருவா யேழுலகுண் டாலிலையின்—மேலன்று நீதுயின்ருய் மெய்யென்ப—ராலன்று—வேலைசூழ் நீரதோ விண்ணதோ மண்ணதோ—சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்." இஃது இறந்தவினைவிலக்கு. "மாதர் நுழைமருங்குனோவ மணிக்குழைசேர்—காதின் மிகைநீலங் கைபுனைவீர்—மீதுலவு—நீணீல வாட்க ணிமிர்கடையே செய்யாவோ—நாணீலஞ் செய்யு நலம்." இது நிகழ்வினைவிலக்கு. "முல்லைக் கொடிநடுங்க மொய்காந்தள் கைகுலைப்ப—வெல்லை யினவண் டெழுந்திரங்க—மெல்லியன்மேற்—றீவாய் நெடுவாடை வந்தாற் செயலறியேன்—போவா யொழிவாய் பொருட்கு." இஃது எதிர்வினைவிலக்கு. எல்லை, ஒளி. "கண்ணு மனமுங் கவர்ந்தவ ளாடிடமென்—றண்ணலருளு மடையாளந்—தண்ணழலின்—சுற்றெல்லை கொண்டிலவுஞ் சோதித் திரளல்லான்-மற்றில்லைக் காணும் வடிவு." இது பொருள்விலக்கு. அடையாளத்தண்ணிழல் அடையாளந்தண்ணிழலென மெலிந்துநின்றது. "மாதர் துவரிதழ்வாய் வந்தெ னுயிர்கவருஞ்—சீத முறுவல் செயலழிக்கு—மீதுலவி—நீண்ட மதர்விழியென் னெஞ்சங் கிழித்துலவும்—யாண்டையதோ மென்மை யிவர்க்கு." இது குணவிலக்கு. "மதரரிக் கண்சிவப்ப வார்புருவங் கோட—வதரந் துடிப்ப வணிசேர்—நுதல்வியர்ப்ப—நின்பா னிகழ்வனகண் டஞ்சாதே யென்னெஞ்ச—மென்பாற் றவறின்மை யால்." இது காரணவிலக்கு. "மன்னவர் சேயா மயிலகவி யாடலும்—பொன் மலருங் கொன்றையும் பூந்தளவின்—மென்மலரு—மின்னுயிரா நீண்முகிலு மெய்யென்று கொள்வதே—லென்னுயிரோ வின்னுமுளது." இது காரியவிலக்கு. (கூO)

சுருO. வன்சொல் வாழ்த்துத் தலைமை யிகழ்ச்சி
துணைசெயன் முயற்சி பரவச முபாயங்
கையற லுடன்படல் வெகுளி யிரங்க

லைய மென்ற வவைபதின் மூன்றொடும்
வேற்றுப்பொருள் சிலேடை யேதுவு முளப்பட
மேற்கூ றியவதன் விரியீ ரெட்டே.

இஃது அதன்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். வன்சொற் சொல்லி விலக்குவதூஉம் வாழ்த்தி வைத்து விலக்குவதூஉந் தன்பாற் தலைமைதோன்றக் கூறி விலக்குவதூஉம் விலக்குவதற்கு ஏதுவை இகழ்ந்து விலக்குவதூஉந் துணை செய்வாரைப்போலக் கூறி விலக்குவதூஉம் முயற்சிதோன்றக்கூறி விலக்குவதூஉந் தன்வசமல்லாமை தோன்றக்கூறி விலக்குவதூஉம் ஒருபாயங் காரணமாகக் கூறி விலக்குவதூஉம் வேண்டிய பொருண்மேல் முயலும் ஒழுக்கமின்மைதோன்றக் கூறி விலக்குவதூஉம் உடன்பட்டார்போல விலக்குவதூஉம் வெகுளிதோன்றக் கூறி விலக்குவதூஉம் இரங்கல் தோன்றக்கூறி விலக்குவதூஉம் ஐயுற்றதனை விலக்குவதூஉமென்று சொல்லப்பட்ட பதின்மூன்றொடும் வேற்றுப்பொருள்விலக்குஞ் சிலேடைவிலக்கும் ஏதுவிலக்குமாகிய மூவகைவிலக்கும் உளப்பட முற்கூறிய முன்னவிலக்கென்னும் அலங்காரத்தின் விரி பதினாறும். எ - று.

**வ**ரலாறு:—"மெய்யே பொருண்மேற் பிரிதியேல் வேறொருத்தையலை நாடத் தகுநினக்கு—நெய்யிலைவேல்—வள்ளல் பிரிவற்றம் பார்த்தெங்கள் வாழ்நாளைக்—கொள்ள வுழலுமாங் கூற்று." எனவும், (வள்ளல், அண்மைவிளி.) "செல்லு நெறியனைத்துஞ் சேம நெறியாக—மல்க நிதியம் வளஞ்சுரக்க—வெல்லு—மடற்றேர் விடலை யகன்றுறைவ தியாங்கவ்—விடத்தே பிறக்கவே யாம்." எனவும்,(அகன்றுறைவது எவ்விடத்தே சொலல்வேண்டும் யாங்கள் அவ்விடத்தே பிறப்பேமாக என்றாள், இறக்குங்காலத்து உண்டாகிய நினைவு பிறந்தகாலத்துக் கூடுமென்பதை நோக்கி.) "பொய்ம்மை நெறிதீர் பொருளு மிகப்பயக்கு—மெய்ம்முயிர்க்கும் யாது மிடரில்லை—வெம்மைதீர்ந்—தேக வினிய நெறியணிய வென்றாலும்—போக லொழிவாய் பொருட்கு." எனவும், "ஆசை பெரிதுடையே மாருயிர்மே லேபொருண்மே—லாசை சிறிது மடைவிலமாற்—றேசு—வழுவா நெறியின் வருபொருண்மே லண்ண—லெழுவா யொழிவா யினி." எனவும், "விளைபொருண்மே லண்ணல் விரும் பினையே லீண்டெங்—கிளையழுகை கேட்பதற்கு முன்னம்—விளை தேன்—புடையூறு பூந்தார்ப் புனைகழலோய் போக்கிற்—கிடையூறு வாராம லேகு." எனவும், "மல்லணிந்த தோளாயீ தென்கொலோ

வான்பொருண்மேற்—செல்க விரைந்தென் றுளந்தெளிந்து—சொல்லுதற்கே—யேன்று முயல்வலியா னேகனீ யென்றிடையே-தோன்றுகின்ற தென்வாயிற் சொல்." எனவும், "செல்க திருவுள மேல் யானறியேன் றேங்கமழ்தார்—மல்லகலந் தங்கு மதர்விழியின்—மெல்லிமைக—ணுக்கு விலக்குமென நோமிவ டன்காதல்-போக்கி யகல்வாய் பொருட்கு." எனவும், "இன்னுயிர் காத்தளிப்பாய் நீயே யிளவேனின்—மன்னவனுங் கூற்றுவனும் வந்தணைந்தா-லன்னோர்—தமக்கெம்மைத் தோன்றாத் தகைமையதோர் விஞ்சை—யெமக்கின் றருள்புரிந்தே யேகு." எனவும், "வாய்த்த பொருள்விளைத்த தொன்றில்லை மாதவமே—லார்த்த வறிவில்லை யம்பலத்துக்—கூத்துடையான்—சீலம் வறிதேயுஞ் சிந்தியேன் சென்றொழிந்த—காலம் வறிதே கழிந்து." எனவும், "அப்போ தடுப்பதறியே னருள்செய்த—திப்போ திவளு மிசைகின்றா—டப்பிற்—பொருளோ புகழோ தரப்போதிர் மாலை—யிருளோ நிலவோ வெழும்." எனவும், "வண்ணங் கரிய வளைசரிய வாய்புலர—வெண்ணந்தளர்வே மெதிர்நின்று—கண்ணின்றிப்—போதல் புரிந்து பொருள்காதல் செய்வீரால்—யாதும் பயமிலேம் யாம்." எனவும், "ஊசறொழிலிழக்கு மொப்பு மயிலிழக்கும்—வாசஞ் சுனையிழக்கும் வள்ளலே—தேசு—பொழிலிழக்கு நாளையிப் பூங்குழலி நீங்க—வெழிலிழக்கு மந்தோ விவண்." எனவும், "மின்னோ பொழிலின் விளையாடுமிவ்வுருவம்—பொன்னோ வெனுஞ்சுணங்கிற் பொற்கொடியோ—வென்னோ—திசையுலவுங் கண்ணுந் திரண்முலையுந் தோளு—மிசையிருளுந் தாங்குமோ மின்." எனவும், "தண்கவிகை யாலுலகந் தாங்குஞ் சயதுங்கன்—வெண்கவிகைக் குள்ளடங்கா வேந்தில்லை—யுண்டோ—மதியத் துடனிரவி வந்தடையும் வானிற்—பொதியப்படாத பொருள்." எனவும், "அம்போ ருகஞ்செற் றமுத மயமாகி-வம்பார் முறுவ லொளிவளர்க்க—விம்பர்—முகைமதுவார் கோதை முகமுண் டெலகின்—மிகைமதியும் வேண்டுமா வேறு." எனவும், "பூதலத்து ளெல்லாப் பொருளும் வறியராய்க்—காதலித்தோர் தாமே கவர்தலா—னீதி—யடுத்துயர்ந்த கீர்த்தி யனபாயா யார்க்குங்—கொடுத்தியெனக் கொள்கின் றிலம்." எனவும் முறையே காண்க. பிறவும் அன்ன.

வேற்றுப்பொருள்வைப்பு முதலிய அலங்காரங்கள் மூன்றோடு முன்னவிலக்கலங்காரங் கூடி வருதல்பற்றி இவற்றை வேறு பிரித்தோதினர். (நக)

௬௫௧. முன்னொன்று தொடங்கி மற்றது முடித்தற்குப்
பின்ன ரொருபொரு ளுலகறி பெற்றியி [பது
னேற்றிவைத் துரைப்பது வேற்றுப்பொருள் வைப்
முழுவதுஞ் சேற லொருவழிச் சேறன்
முரணித் தோன்றல் சிலேடையின் முடித்தல்
கூடா வியற்கை கூடு மியற்கை
யிருமை யியற்கை விபரீதப் படுதலென்
றினைய வோரெட் டியல்பின தென்ப.

நிறுத்தமுறையானே இது வேற்றுப்பொருள்வைப்பின் பொதுவிதியும் அதன் விரியுங்கூறுகின்றது.

இ - ள். முன் ஒருபொருட்டிறந்தொடங்கிப் பின்னர் அதனை முடித்தற்கு ஆற்றலுடைய பிறிதொருபொருளை உலகறியும் இயல்பான் ஏறிட்டுவைத்து மொழிவது வேற்றுப்பொருள்வைப்பென்னும் அலங்காரமாம். அவ்வேற்றுப்பொருள்வைப்பு ஒருதிறம் உரைத்தால் அத்திறம் எல்லாவற்றின்மேலும் முற்றச்செல்லவைத்தலும் அவ்வாறின்றிச் சிலவற்றின்மேற் செல்லவைத்தலுந் தம்முள் மாறுபட்டுத்தோன்றவைத்தலும் முன்னர் வைத்தபொருளையும் பின்னரதனையும் ஒருசொற்றொடர்பான் முடியவைத்தலுங் கூடாத இயல்பைக் கூடுவதாக வைத்தலுங் கூடுமியல்பைக் கூடுவதாகவைத்தலுங் கூடாத இயல்பையுங் கூடுமியல்பையுங் கூடுவதாக ஒருங்கு வைத்தலும் நல்வினைப்பயன் தீதாகவுந் தீவினைப்பயன் நன்றாகவும் வைத்தலுமென்று சொல்லப்பட்ட இத்தன்மையவாகிய எண்வகைத் திறத்தினையுடைத்தாம். எ - று.

வரலாறு:—"புறந்தந் திருளிரியப் பொன்னேமி யுய்த்துச்—சிறந்த வொளிவளர்க்குந் தேரோன்—மறைந்தான்—புறவாழி சூழ்ந்த புவனத்தே தோன்றி—யிறவாது வாழ்கின்றார் யார்." எனவும், "எண்ணும் பயன்றூக்கா தியார்க்கும் வரையாது—மண்ணுலகில் வாம னருள்வளர்க்குந்—தண்ணறுந்தேன்—பூத்தளிக்குந் தாரோய் புகழாளர்க் கெவ்வுயிருங்—காத்தளிக்கை யன்றோ கடன்." எனவும், "வெய்ய குரற்றோன்றி வெஞ்சினவே றுட்கொளினும்—பெய்யு மழைமுகிலைப் பேணுவரால்—வையத்—திருள்பொழியுங் குற்றம் பலவெனினும் யார்க்கும்—பொருள்பொழிவார் மேற்றே புகழ்." எனவும், "எற்றே கொடிமுல்லை தன்னை வளர்த்தெடுத்த—முற்றிழையாள் வாட முறுவலிக்கு—முற்று—முடியாப் பரவை

முழங்குலகத் தென்றுங்—கொடியார்க்கு முண்டோ குணம்.” எனவும், “ஆர வடமு மதிசீத சந்தனமு—மீர நிலவு மெரிவிரவும்—பாரிற்—றுதிவகையான் மேம்பட்ட துப்புரவுந் தத்தம்—விதிவகையால் வேறு படும்.” எனவும், “பொய்யுரையார் நண்பர் புனைதேர் நெறிநோக்கிக்—கைவளைசோர்ந் தாவி கரைந்துகுவார்—மெய்வெதும்பப்—பூத்தகையுஞ் செங்காந்தட் பொங்கொலிநீர் ஞாலத்துத்—தீத்தகையார்க் கீதோ செயல்.” எனவும், “கோவலர்வாய் வேய்ங்குழலே யன்றிக் குரைகடலுங்—கூவித் தமியோரைக் கொல்லுமாற்—பாவாய்—பெரியோரும் பேணாது செய்வரே போலுஞ்—சிறியோர் பிறர்க்கியற்றுந் தீங்கு.” எனவும், “தலையிழந்தா னெவ்வுயிருந் தந்தான் பிதாவைக்—கொலைபுரிந்தான் குற்றங் கடிந்தா—னுலகிற்—றனிமுதன்மை பூண்டுயர்ந்தோர் வேண்டுவரேற் றப்பா—வினையும் விபரீத மாம்.” எனவும் முறையே காண்க. (௯.௨)

௬௫௨. கூற்றினுங் குறிப்பினு மொப்புடை யிருபொருள்
வேற்றுமைப் படவரின் வேற்றுமை யதுவே
குணம்பொருள் சாதி தொழிலொடு புணரும்.

இது நிறுத்தமுறையானே வேற்றுமையென்னும் அலங்காரத்தின் பொது இலக்கணமும் அதன் திறனுங் கூறுகின்றது.

இ - ள். கூற்றினானுதல் குறிப்பினானுதல் ஒப்புடையவாயிருப்பன இரண்டுபொருள் தம்முள் வேறுபாடுதோன்ற வந்தால் அது வேற்றுமையென்னும் அலங்காரமாம்; அவ்வேறுபாடு குணம் முதலியவற்றாற் கூடும். எ - று.

வேற்றுமைப்படவரினெனப் பொதுப்படக் கூறியவதனான் அவை ஒருபொருளான் வேற்றுமைசெய்தலும் இருபொருளானே வேற்றுமைசெய்தலும் அவ்வாறன்றி மிகுதிகுறைவுகளான் வேற்றுமைசெய்தலுங் கொள்க.

வரலாறு:—“அனைத்துலகுஞ் சூழ்போ யரும்பொருள் கைக்கொண்—டினைத்தளவை யென்றற் கரிதாம்—பனிக்கடன்—மன்னவநின் சேனைபோன் மற்றது நீர்வடிவிற்—றென்னு மிதுவொன்றே வேறு.” இஃது ஒருபொருளான் வேற்றுமைசெய்தது. “சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச் சிந்தையுளே—நின்றளவி லின்ப நிறைப்பவற்று—ளொன்று—மலரிவருங் கூந்தலார் மாதர்நோக்கொன்று—மலரிவருங் கூத்தன்றன் வாக்கு.” இஃது இருபொரு

ளான் வேற்றுமைசெய்தது. மலரி, ஊர். "மலிதேரான் கச்சியு மாக டலுந் தம்மு—ளொலியும் பெருமையு மொக்கு—மலிதேரான்—கச்சி படுவ கடல்படா கச்சி—கடல்படுவ தெல்லாம் படும்." இது சமனன்றி மிகுதிகுறைவான் வேற்றுமைசெய்தது. இவை கூற்று. "கார்க்குலமும் பாய்திரையுங் காட்டுங் கடல்படையும்—போர்க்களி றும் பாய்மாவும் பொங்குமா—லேற்ற—கலமுடைத்து முந்நீர் கதி ராழித் திண்டேர்—பலவுடைத்து வேந்தன் படை." இஃது இரு பொருளான் வேற்றுமைசெய்தது. ஒருபொருளான் வேற்றுமை செய்வது வந்துழிக் காண்க. "பதுமங் களிக்கு மளியுடைத்துப் பாவை—வதன மதர்நோக் குடைத்துப்—புதையிருள்சூ—ழப்போ தியல்பழியு மம்போருகம் வதன—மெப்போது நீங்கா வியல்பு." இது சமனன்றி மிகுதிகுறைவான் வேற்றுமைசெய்தது. இவை குறிப்பு. பிறவும் அன்ன.

இனிக் குணவேற்றுமை வருமாறு;—"சுற்றுவிற் காமனுஞ் சோழர் பெருமானுங்—கொற்றப்போர்க் கிள்ளியுங் கேழொவ்வார்-பொற்றொடியா—யாழி யுடையான் மகன்மாயன் சேயனே—கோ ழியுடையான் மகன்." எனவரும். பொருள்வேற்றுமைவருமாறு:—"ஓங்க லிடைவந் துயர்ந்தோர் தொழவிளங்கி—யேங்கொலிநீர் ஞாலத் திருள்கடியு—மாங்கவற்றுள்—மின்னேர் தனியாழி வெங் கதிரொன் றேனையது—தன்னே ரிறந்த தமிழ்." எனவரும். சாதி வேற்றுமைவருமாறு:—"வெங்கதிர்க்குஞ் செந்தீ விரிசுடர்க்கு நீங் காது—பொங்கு மதியொளிக்கும் போகாது—தங்கும்—வளமை யான் வந்த மனமயக்க மாந்தர்க்—கிளமையான் வந்த விருள்." எனவரும். தொழில்வேற்றுமை வருமாறு:—"புனனுடர் கோமா னும் பூந்துழாய் மாலும்—வினைவகையான் வேறு படுப—புனனுட-னேற்றெறிந்து மாற்றலர்பா லெய்தியபார் மாயவ—னேற்றிரந்து கொண்டமையா னின்று." எனவரும். பிறவும் அன்ன.

உரையிற்கோடலான் இவ்வேற்றுமைவிலக்கியல் சிலேடை யின் மேலவும் பெறுமெனக் கொள்க. வரலாறு:—"தம்மாற் பயன் றூக்கா தியாவரையுந் தாங்கினுங்—கைம்மாறுங் கால முடைத்தன் றே—யெம்மாவி—யன்னவனை யாழி யனபா யனைமலராண்—மன்னவனை மானுமோ வான்." என விலக்கியல்வேற்றுமைக்கும், "ஏறடர்த்து வின்முருக்கி யெவ்வுலகுங் கைக்கொண்டு—மாறடர்த்த வாழி வலவனைக்—காரெழுதற்—கெஞ்சினு ரில்லெனினு மாய னிகனெடுமால்—வஞ்சியா னீர்நாட்டார் மன்." எனச் சிலேடை வேற்றுமைக்கும் வரும். (ருரு)

௬௫௩. உலகறி காரண மொழித்தொன் றுரைப்புழி
வேறொரு காரண மியல்பு குறிப்பின்
வெளிப்பட வுரைப்பினது விபாவனை யாகும்.

இது நிறுத்தமுறையானே விபாவனையலங்காரங் கூறுகின்றது.

இ - ள். ஒன்றன்வினை உரைக்குங்கால் அவ்வினைக்குப் பலரும் அறியவருங் காரணத்தையொழித்துப் பிறிதொருகாரணத்தினை இயல்பினானாக குறிப்பினானாக வெளிப்பட உரைப்பது விபாவனையென்னும் அலங்காரமாம். எ - று.

வரலாறு:—"தீயின்றி வேந்தமியோர் சிந்தை செழுந்தேறல்-வாயின்றி மஞ்ஞை மகிழ்தூங்கும்—வாயிலா—ரன்றிச் சிலரூட றிர்ந்தா ரமரின்றிக்—கன்றிச் சிலைவளைக்குங் கார்." இது வேறொரு காரணவிபாவனை. "கடையாமே கூர்த்த கருநெடுங்கண் பேடிப்—படையாமே யேய்ந்ததனம் பாவாய்—கடைஞெமியக்—கோட்டாமே கோடும் புருவங் குலிகச்சே—ரூட்டாமே சேந்த வடி." இஃது இயல்புவிபாவனை. "பாயாத வேங்கை மலரப் படுமதமாப்—பூவாத புண்டரிக மென்றஞ்சி—மேவிப்—பிடிதழுவி நின்றதிருங் கானிற் பிழையால்—வடிதழுவும் வேலாய் வரவு." இது குறிப்பு விபாவனை. இதனுட்குறிப்புப் பூத்தவேங்கையைப் புலியெனக்குறித்தல். பிறவும் அன்ன.

விபாவனையென்றது ஆகுமென்றதனால் வினையெதிர்மறுத்துப் பொருள்புலப்படுப்பினும் பொதுவகையாற் காரணம்விலக்கிக் காரியம்புலப்படுப்பினும் இவ்வியல்பலங்காரமாமெனக் கொள்க. "பூட்டாத விற்குனித்துப் பொங்கு முகிலெங்குந்—தீட்டாத வம்பு சிதறுமா—லீட்டமாய்க்—காணாத கண்பரப்புந் தோகை கடும்பழிக்கு—நாணா தயர்த்தார் நமர்." எனவும், "காரண மின்றி மலயா நிலங்கன லு—மீர மதிவெதும்பற் கென்னிமித்தங்—காரிகையார்க்-கியாமே தளர வியல்பாக நீண்டனகண்—டாமே திரண்ட தனம்." எனவும் முறையேகாண்க. (௩௪)

௬௫௪. கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற்
கொத்ததொன் றுரைப்ப தொட்டா மதுவே
யடையும் பொருளு மயல்பட மொழிதலு
மடைபொது வாக்கி யாங்கன மொழிதலும்

விரவித் தொடுத்தலும் விபரீதப் படுத்தலு
மெனநால் வகையினு மியலு மென்ப.

நிறுத்தமுறையானே இஃது ஒட்டென்னும் அலங்காரத்தின் பொதுவிதியும் அதன் விரியுங் கூறுகின்றது.

இ-ள். கவி தன்னாற் கருதப்பட்ட பொருளைமறைத்து அதனை வெளிப்படுத்தற்கு ஒத்தபிறிதொன்றினைச் சொல்லின் அஃது ஒட்டென்னும் அலங்காரமாம்; அவ்வலங்காரங் கூறுகின்ற பொருளும் அதன் அடையும் வேறுபடத்தொடுப்பதும், அடைபொதுவாய்ப் பொருள் வேறுபடத்தொடுப்பதும், அடைவிரவிப் பொருள் வேறுபட மொழிவதும், அடை விபரீதப்பட்டுப் பொருள் வேறுபடமொழிதலுமென நான்குவகையான் நடக்கும். எ-று.

'ஒத்ததொன்றுரைப்பின்' எனப் பொதுப்படக்கூறியவதனுல் இஃது அகத்திணைபற்றிவருங்காற் புள் முதலிய கருப்பொருள் நிலனுகப்புலப்படுத்தலும் புறத்திணைபற்றிவருங்கால் யாதானும் ஒத்த தொன்று நிலனுகப் புலப்படுத்தலுங் கொள்க.

ஒட்டெனினும் உள்ளுறையுவமமெனினும் உவமப்போலியெனினும் பிறிதுமொழிதலெனினும் நுவலாநுவற்சியெனினும் ஒக்கும்.

வரலாறு:—"வெறிகொ ளினச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்-குறைபடுதேன் வேட்டுங் குறுகும்—நிறைமதுச்சேர்ந்—துண்டாடுந் தன்முகத்தே செவ்வி யுடையதோர்—வண்டா மரைபிரிந்த வண்டு." இது கருப்பொருளிலதாகப் புலப்பட்டு அடையும்பொருளும் மயல்படவந்தது. "உண்ணிலவு நீர்மைத்தா யோவாப் பயன்சுரந்து—தண்ணளி தாங்கு மலர்முகத்துக்—கண்ணெகிழ்ந்து—நீங்கவரிய நிழலுடைத்தாய் நின்றெமக்கே—யோங்கியதோர் சோலையுளது." இஃது அடைபொதுவாய்ப் பொருள்வேறுபடவந்தது. "தண்ணளிசேர்ந் தின்சொன் மருவுந் தகைமைத்தா—யெண்ணிய வெப்பொருளு மெந்நாளு—மண்ணுலகில்—வந்து நமக்களித்து வாழு முகிலொன்று—தந்ததான் முன்னைத் தவம்." இஃது அடைவிரவிப் பொருள்வேறுபடவந்தது. "கடைகொ ளுலகியற்கை காலத்தின் நீங்கா—லடைய வறிதாயிற் றன்றே—யடைவோர்க்—கருமை யுடைத்தன்றி யந்தேன் சுவைத்தாய்க்—கருமை விரவாக் கடல்." இஃது அடைவிபரீதப்பட்டுப் பொருள்வேறுபட வந்தது. பிறவும் அன்ன.

உள்ளுறையுவமமும் ஒட்டும் உய்த்துணரக்கூறும் இலக்கணத் தனவாகலின் ஒன்றும்பிறவெனின், அவ்வாற்றான் ஒன்றுமேயாயி னும் புள் முதலிய கருப்பொருள் நிலனாகப் புலப்படுஞ் சிறப்பிலக்க ணத்தான் உள்ளுறையுவமும் யாதானும் ஒத்ததொன்று நிலனாகப் புலப்படும் பொது இலக்கணத்தான் ஒட்டும் வேறுமென்றே கோ டும். அஃதே அமைக. அன்றியுஞ் சேற்றுட் தோன்றுவன எல்லாம் பங்கயமெனப் பெயர்பெறாது வேறுவேறு பெயர்பெறுமாறுபோல உள்ளுறையுவமையெனவும் ஒட்டெனவும் வேறுவேறு பெயர்பெற் றவென்றலும் ஒன்று. (ருரு)

சுருரு. மனப்படு மொருபொருள் வனப்புவிதந் துரைப்பு
யுலகுவரம் பிறவா நிலைமைத் தாகி [ழி
யான்றோர் வியப்பத் தோன்றுவ ததிசயம்
பொருள்குணந் தொழிலையந் துணிவே திரிவெனத்
தெருளுறத் தோன்றும் விரியின ததுவே.

இது நிறுத்தமுறையானே அதிசய அலங்காரத்தின் பொதுவி தியும் அதன் விரியுங் கூறுகின்றது.

இ - ள். கவியாற் கருதப்பட்ட ஒருபொருளது வனப்பு மிகுத்துச்சொல்லுங்கால் உலகநடையிறவாத தன்மைத்தாகி உயர்ந் தோர் வியப்பத் தோன்றுவது அதிசயமென்னும் அலங்காரமாம். பொருளதிசயம் முதலிய தெளிவுபெறத் தோன்றும் அறுகூற்று விரி யினையுடைத்தாம் அவ்வலங்காரம். எ - று.

பொருளதிசயம் வருமாறு:—"பண்டு புரமெரிப்ப மேன்மேற் படர்ந்தின்று—மண்ட முகடு நெருப்பறா—தொண்டளிர்க்கை— வல்லி தழுவக் குழைந்த வடமேரு-வில்லி நுதன்மேல் விழி." என வரும். நெருப்பு, இடி. குண அதிசயம் வருமாறு:—"மாலை நிலவொ ளிப்ப மாத ரிழைபுனைந்த—நீல மணிக ணிலவுமிழ—மேல்விரும் பிச்—செல்லு மவள்குறித்த செல்வன்பாற் சேர்தற்கு—வல்லிரு ளா கின்றே மறுகு." எனவரும். தொழிலதிசயம் வருமாறு:— "ஆளுங் கரியும் பரியுஞ் சொரிகுருதி—தோளுந் தலையுஞ் சுழித்தெ றிந்து—நீள்குடையும்—வள்வார் முரசு மறிதிரைமேற் கொண் டொழுக—வெள்வா ளுறைகழித்தான் வேந்து." எனவரும். ஐய வதிசயம் வருமாறு:—"உள்ளம் புகுந்தே யுலாவு மொருகாலென்— னுள்ள முழுது முடன்பருகு—மொள்ளிழைநின்—கள்ளம் பெரு கும் விழிபெரிய வோகவல்வே—னுள்ளம் பெரிதோ வுரை." என

வரும். துணிவதிசயம் வருமாறு:—"பொங்கிச் செறிந்து புடைதி ரண்டு மீதிரண்டு—செங்கலசக் கொங்கை திகழுமா—லெங்கள் கோன்—றில்லையே யன்னூர் திகழல்குற் றேரின்மே—லில்லையே யுண்டே யிடை." எனவரும். திருவதிசயம் வருமாறு:—"திங்கள் சொரிநிலவு சேர்வெள்ளி வள்ளத்துப்—பைங்கிள்ளை பாலென்று வாய்மடுக்கு—மங்கயலே—காந்தர் முயக்கொழிந்தார் கைவறிதே நீட்டுவரா—லேந்திழையார் பூந்துகிலா மென்று." எனவரும். பிற வும் அன்ன. (ரு௬)

சூருகூ. பெயர்பொரு ளல்பொரு ளௌவிரு பொருளினு
மியல்பின் விளைதிற னன்றிப் பிறிதொன்று
தான்குறித் தேற்றறற் குறிப்பேற்ற மதுவே
யன்ன போலெனு மவைமுத லாகிய
சொன்னிலை விளக்குந் தோற்றமு முடைத்தே.

இது நிறுத்தமுறையானே தற்குறிப்பேற்றமென்னும் அலங் காரமாமாறும் அதன் ஒழிபுங் கூறுகின்றது.

இ - ள். இயங்குதிணையும் நிலத்திணையுமாகிய இருகூற்றுப் பொருளின்கண்ணும் இயல்பினுன் நிகழுந்தன்மையொழியக் கவி தன்னுற் பிறிதொன்றைக் கருதி அவற்றுக்கண் ஏற்றிச்சொல்லு வது தற்குறிப்பேற்ற அலங்காரமாம் அவ்வலங்காரம் அன்ன போல் என்பன முதலிய உவமச்சொற்புணர்த்து விளங்குந் தோற்ற மும் உடைத்து. எ - று.

உதாரணம்:—"மண்படுதோட் கிள்ளி மதயானை மாற்றரசர்—வெண்குடையைத் தேய்த்த வெகுளியால்—விண்படர்ந்து—பாயுங் கொ லென்று பனிமதியம் போல்வதூஉந்—தேயுந் தெளிவிசும்பி னின்று." எனவும், "வேனில் வெயிற்குலர்ந்த மெய்வறுமை கண்டி ரங்கி—வானின் வளஞ்சுரந்த வண்புயற்குத்—தானுடைய—தாது மே தக்க மதுவுந் தடஞ்சினையாற்—போதுமீ தேந்தும் பொழில்." எனவும் முறையேகாண்க. பிறவும் அன்ன.

"சான்ரேூர் வருந்திய வருத்தமு நுமது—வான்ரேூய் வன்ன குடிமையு நோக்கி" என அன்னவென்பதூங், "காமருதேர் வெய் யவ னெங்குங் கரம்பரப்பித்—தேமருவு சோலை மலர்திறக்குந்—தாமரையின்—ருேக்க விதழ்விரித்துப் பார்க்குந் தொலைந்திருள் போய்ப்—புக்க புரைதிளைப்பான் போல்." எனப் போலென்பதூஉம் வந்தன. ஏனையவும் வந்துழிக்காண்க. (ரு௭)

௬௫௭. **யா**தன் றிறத்தினு மிதனினிது விளைந்ததென்
றேதுவிதந் துரைப்ப தேது வதுதான்
காரக ஞாபக மெனவிரண் டவற்றுண்
முதல்வனும் பொருளுங் கருமமுங் கருவியு
மேற்பது நீக்கமு மெனவிவை காரக
மவையல பிறவென் றறிவது ஞாபகம்.

நிறுத்தமுறையானே ஏதுவலங்காரங் கூறுவனவற்றுள் இஃது அதன் பொது இயல்பும் வகையும் விரியுங் கூறுகின்றது.

இ - ள். யாதானுமொரு பொருட்டிறத்து இதனான் இது நிகழ்ந்ததென்று காரணமிகுத்துச் சொல்லுவது ஏதுவென்னும் அலங்காரமாம். அது காரகவேதுவென்றும் ஞாபகவேதுவென்றும் இரண்டாம். அவற்றுட் கருத்தாவுஞ் செயப்படுபொருளுங் கருமமுங் கருவியும் ஏற்பதும் நீக்கமுமென்று சொல்லப்பட்ட இவை ஆறுங் காரகவேதுவாம். அவ்வாறும் அல்லாத பிறகாரணங்களால் உய்த்துணரத் தோன்றுவது ஞாபகவேதுவாம். எ - று.

நிலமும் பொழுதும் இத்துணைச் சிறப்பின்மையின் எடுத்தோதாராயினரேனும் அவையுங் காரகவேதுவாதல் கொள்க.

வரலாறு:—"எல்லைநீர் வையகத் தெண்ணிறந்த வெவ்வுயிர்க்குஞ்—சொல்லரிய பேரின்பந் தோற்றியதான்—முல்லைசேர்—தாதலைத்து வண்கொன்றைத் தாரலைத்து வண்டார்க்கப்—பூதலத்து வீழ்ந்த புயல்." என ஆக்கம்பற்றியுங் "கனிகொள் பொழிலருவி கைகலந்து சந்தின்—பனிவிரவிப் பாற்கதிர்க டோய்ந்து—தனியிருந்தோர்—சிந்தை யுடனே யுயிருணக்குந் தென்மலயந்—தந்த தமிழ்மா ருதம்." என அழிவுபற்றியும் வந்த இவையிரண்டுங் கருத்தாக்காரகவேது. "மலையி னலைகடலின் வாளரவின் வெய்ய—தலையிற்பயின்ற தவத்தாற்—றலைமைசே—ரம்மாதர் புல்லு மபயன் புயம்புணர்தற்—கெம்மா தவம்புரிந்தேம் யாம்." இது கருமகாரகவேது. "கரடத்தான் மாரியுங் கண்ணால் வெயிலு—நிரைவயிரக் கோட்டா னிலவுஞ்—சொரியுமா—னீளார்த் தொடையதுல னேரார் கலிங்கத்து—வாளாற் கவர்ந்த வளம்." இது கருவிக்காரகவேது. பிறவும் வந்துழிக் காண்க. "காதலன்மே லூடல் கரையிறத்தல் காட்டுமான்—மாதர் நுதல்வெயர்ப்ப வாய்துடிப்ப—மீது—மருங்குவளை வின்முரிய வாளிடுகை நீண்ட—கருங்குவளை சேந்த கருத்து." இது ஞாபகவேது. பிறவும் அன்ன. (௩௮)

சுருஅ. அபாவந் தானு மதன்பாற் படுமஃ
தென்று மபாவமு மின்மைய தபாவமு
மொன்றினென் றபாவமு முள்ளத னபாவமு
மழிவுபாட் டபாவமு மெனவைந் தாகும்

இது மேலதற்கோர் ஒழிபு கூறுகின்றது.

இ - ள். ஒன்றினது இன்மையும் அவ்வேதுவின் திறத்ததாம்; அஃது எக்காலத்துமில்லாமையும், இல்லாமையதில்லாமையும், ஒன்றினதின்மையும் அதன்கண் அஃதின்மையும், ஓரிடத்தும் ஒருகாலத்துமுள்ள பொருள் பிறிதோரிடத்தும் பிறிதோர்காலத்தும் இல்லாமையும், முன்னுள்ளதழிவுபட்டில்லாமையுமென ஐவகைப்படும். எ - று.

உதாரணம்:—என்றுமபாவவேது வருமாறு:—"யாண்டு மோழிதிறம்பார் சான்றவ ரெம்மருங்கு—மீண்டு மயில்க ளினமினமாய்-மூண்டெழுந்த—காலையே கார்முழங்கு மென்றயரேல் காதலர் தேர்—மாலையே நம்பால் வரும்." எனவரும். இன்மையதபாவவேது வருமாறு:—"காரார் கொடிமுல்லை நின்குழன்மேற் கைபுனைய—வாராமை யில்லை வயவேந்தர்—போர்கடந்த—வாளையேய் கண்ணி நுதன்மேன் வரும்பசலை—நாளையே நீங்கு நமக்கு." எனவரும். ஒன்றினென்றபாவம் வருமாறு:—"பொய்ம்மை யுடன்புணரார் மேலவர் பொய்ம்மையு—மெய்ம்மைசூழ் மேலாரை மேவாவா—மிம்முறையாற்—பூவலருந் தாரார் பிரிந்தாற் பொலங்குழையார்—காவலர்சொற் போற்றல் கடன்." எனவரும். உள்ளதனபாவம் வருமாறு:—"கரவொடு நின்றார் கடிமனையிற் கையேற்—றிரவொடு நிற்பித்த வென்னை—யரவொடு—மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க—மாட்டாமை பூண்ட மனம்." எனவரும். அழிவுபாட்டபாவம் வருமாறு:—"கழிந்த திளமை களிமயக்கந் தீர்ந்த—தொழிந்தது காதன்மே லூக்கஞ்—சுழிந்து—கருநெறிசேர் கூந்தலார் காதனைத் தீர்ந்த—தொருநெறியே சேர்ந்த துளம்." எனவரும். பிறவும் அன்ன. (௩க)

சுருக. தூர காரியமு மொருங்குடன் றோற்றமுங்
காரிய முந்துறாஉங் காரண நிலையு
முத்தமு மயுத்தமு முந்தையோ டியலும்.

இதுவும் அது.

இ - ள். ஒருவழிக் காரணம் நிகழப் பிறிதொருவழிக் காரியம் நிகழ்தலுங் காரணகாரியங்கள் ஒருங்குநிகழ்தலுங் காரணத்தின் முன்னர்க் காரியம் நிகழ்தலுங் காரணத்திற்கேற்ற காரியம் நிகழ்தலுங் காரணத்திற்கேலாக் காரியம் நிகழ்தலுமாகிய இவ்வனைத்தும் முன்னையலங்காரத்தோடு ஒத்துநடக்கும். எ - று.

தூரகாரியம் வருமாறு:—"வேறொரு மாதர்மேல் வேந்த னக நுதியா—லூறுவர விம்மா துயிர்வாடும்—வேறே—யிருவரே மெய் வடிவி லேந்திழை நல்லா—ரொருவரே தம்மி லுயிர்." எனவரும். ஒருங்குடன்றோற்றம் வருமாறு:—"விரிந்த மதிநிலவின் மேம்பாடும் வேட்கை—புரிந்த சிலைமதவேள் போரும்—பிரிந்தோர்—நிறைத ளர்வு மொப்ப நிகழ்ந்தனவா லாவி—பொறைதளரும் புன்மாலைப் போது." எனவரும். காரியமுந்துறூஉங் காரணநிலை வருமாறு:— "தம்புரவு பூண்டோர் பிரியத் தனியிருந்த—வம்புலவு கோதை யர்க்கு மாரவே—ளம்பு—பொருமென்று மெல்லாகம் புண்கூர்ந்த மாலை—வருமென் றிருண்ட மனம்." எனவரும். உத்தம் வருமாறு:—"பொன்னி வளநாடன் கைவேல் பொழிநிலவான்—முன்ன ரசைந்து முகுளிக்குந்—தன்னேர்—பொரவந்த வேந்தர் புனைகடகச் செங்கை—யரவிந்த நூறு யிரம்." எனவரும். அயுத்தம் வருமாறு:—"இகன்மதமால் யானை யனபாய னெங்கோன்—முகமதியின் மூர னிலவா—லகமலர்வ—செங்கயற்க ணல்லார் திரு மருவு வாள்வதன—பங்கயங்கள் சாலப் பல." எனவரும்.

முடியுமென்றது இபலுமென்றதனாற் பிறவாற்றான் வருவன வுங்கொள்க. "மாத ருமைவாய் மழலை மொழியானே—வோது மறையி னெலியானே—யாதானே—கோல மிருதிறனுக் கொண் டார் திருமிடற்றி—னல மமிர்தான வாறு." இஃது ஐயம். பிறவும் வந்துழிக் காண்க. (சுo)

சுசுo. தெரிபுவேறு கிளவாது குறிப்பினுந் தொழிலினு
மரிதுணர் வினைத்திற நுட்ப மாகும்.

இது நிறுத்தமுறையானே நுட்பமென்னும் அலங்காரமாமாறு கூறுகின்றது.

இ - ள். தெரிந்து வேறுபடக்கிளவாது குறிப்பினானுதல் தொழிலினானுதல் அரிதாக நோக்கியுணருந் தொழிற்றன்மையையுடையது நுட்பமென்னும் அலங்காரமாம். எ - று.

உதாரணம்:—"காதலன் மெல்லுயிர்க்குக் காவல் புரிந்ததாற்-பேதைய ராயம் பிரியாத—மாதர்—படரிருள்கால் சீக்கும் பகலோனை நோக்கிக்—குடதிசையை நோக்குங் குறிப்பு." எனவும், "பாடல் பயிலும் பணிமொழிதன் மென்பணைத்தோள்—கூட லவாவாற் குறிப்புணர்த்து—மாடவற்கு—மென்றீங் தொடையாழின் மெல்ல வேதைவந்தா—ளின்றீங் குறிஞ்சி யிசை." எனவும் முறையே காண்க. பிறவும் அன்ன. (சுக)

சுசுக. குறிப்புவெளிப் படுக்குஞ் சத்துவம் பிறிதின்
மறைத்துரை யாட லிலேச மாகும்.

நிறுத்தமுறையானே இஃது இலேசமென்னும் அலங்காரம் உணர்த்துகின்றது.

இ-ள். கருதியது வெளிப்படுக்குஞ் சத்துவங்களைப் பிறிதொன்றினான் நிகழ்ந்தனவாக மறைத்துச் சொல்லுவது இலேசமென்னும் அலங்காரமாம். எ-று.

சத்துவமென்பன வெண்பளிங்கிற் செந்நூல் கோத்தால் அதன்செம்மை புறம்பொழிந்து தோன்றினாற்போலக் கருதியது புலனாக்குங் குணங்கள். அவை சொற்றளர்வு மெய்விதிர்ப்பு கண்ணீர் நெகிழ்ச்சி மெய்வெதும்பல் மெய்ம்மயிரரும்பல் முதலாயின.

வரலாறு:—"கல்லுயர்தோட் கிள்ளி பரிதொழுது கண்பனி சோர்—மெல்லியலார் தோழியர்முன் வேறொன்று—சொல்லுவ ராற்—பொங்கும் படைபரப்ப மீதெழுந்த பூந்துகள்சேர்—தெங் கண் கலுழ்ந்தனவா லென்று." எனவும், "மதுப்பொழிதார் மன்னவனை மால்கரிமேற் கண்ட—விதிர்ப்பு மயிரரும்பு மெய்யும்—புதைத் தாள்—வளவா ரணநெடுங்கை நுண்டுவலை வாய்ந்த—விளவாடை சேர்ந்த தென." எனவும்வரும். பிறவும் வந்துழிக் காண்க. (சுஉ)

சுசுஉ. புகழ்வது போலப் பழித்திறம் புனைதலும்
பழிப்பது போலப் புகழ்புலப் படுத்தலு
மவையு மன்னவென் றறைநரு முளரே.

இது பிறர்மதம்பற்றி மேலதற்கோர் ஒழிபு கூறுகின்றது.

இ-ள். ஒன்றனைப் புகழ்ந்தாற்போலப் பழித்துரைத்தலும் பழித்தாற்போலப் புகழ்ந்துரைத்தலுமென்னும் இவ்விரண்டும் அவ்

விலேசத்தின்பாற்படுமென்று கூறுவாரும் உளர், ஒருசார் தொல்லாசிரியர். எ - று.

புகழ்வதுபோலப் பழித்தல் வருமாறு:—"மேய கலவி விளைபொழுது நம்மெல்லென்—சாய றளராமற் றூங்கினன்—சேயிழையாய்—போர்வேட்ட மேன்மைப் புகழாளன் யாம்விரும்புந்—தார்வேட்ட தோள்விடலை தான்." எனவரும். பழித்ததுபோலப் புகழ்தல் வருமாறு:—"ஆடன் மயிலியலி யன்ப னணியாகங்—கூடுங்கான் மெல்லென் குறிப்பறியா—னூட—லிளிவந்த செய்கை யிரவாளன் யார்க்கும்—விளிவந்த வேட்கை யிலன்." எனவரும்.(சங)

சுசுங. நிரனிறை முன்னர் நிகழ்த்தியாங் கியலும்.

இது நிறுத்தமுறையானே நிரனிறையலங்காரமாமாறு மாட்டெறிந்து உணர்த்துகின்றது.

இ - ள். நிரனிறையது இலக்கணம் ஆண்டுச் சொல்லதிகாரத்துக் கூறினாற்போல நடக்கும் ஈண்டும். எ - று.

ஆண்டுச் சொல்லதிகாரத்துக் கூறியவாறு "பெயரும் வினையுமாஞ் சொல்லையும் பொருளையும்—வேறு நிரனிறீஇ முறையினுமெதிரினு—நேரும் பொருள்கோ ணிரனிறை நெறியே."என்பதாம்.

வரலாறு:—"காரிகையார் மென்மொழியா னேக்காற் கதிர்முலையால்—வார்புருவத் தாலிடையால் வாய்த்தளிரா—னேர்தொலைந்த—கொல்லி வடிநெடுவேல் கோங்கரும்பு வாங்குசிலை—வல்லி கனியென் மனம்." எனவும், "மயில்களிக்கும் வண்டார்க்கும் வார்தளவம் பூக்குங்—குயிலொளிக்குங் கோபம் பரக்கும்—வெயிலொளிக்குங்—கானங் குழைகொள்ளுங் காந்த டுடுப்பெடுக்கும்—வானம் பொழியு மழை." எனவும் வரும். இதன் றிறத்தனவெல்லாஞ் சொல்லோத்தினுட் கண்டுகொள்க. (சச)

சுசுச. ஆர்வமொழி மிகுப்ப தார்வ மொழியே.

இது நிறுத்தமுறையானே ஆர்வமொழியலங்காரமாமாறு கூறுகின்றது.

இ - ள். உண்ணிகழ்ந்த ஆர்வமொழியாற் தோன்றச் சொல்லுவது ஆர்வமொழியென்னும் அலங்காரமாம். எ - று.

உண்ணிகழ்தல் மேல்வரும் அதிகாரத்தாற் பெற்ரும்.

வரலாறு:—"சொல்ல மொழிதளர்ந்து சோருந் துணைமலர்த் தோள்—புல்ல விருதாள் புடைபெயரா—மெல்ல—நினைவோ மெ ணின்னெஞ் சிடம்பெரு தெம்பால்—வனைதாராய் வந்ததற்கு மாறு." எனவரும்.

மாறு, ஒப்பு. (௪௫)

சுசு௫. உண்ணிகழ் தன்மை புறத்துத் தோன்ற
வெண்வகை மெய்ப்பாட்டி னியல்வது சுவையது
வீர மச்ச மிழிப்பொடு வியப்பே
காம மவல முருத்திர நகையென
வியம்பிப் போந்த விருநான்கு வகைத்தே.

இது நிறுத்தமுறையானே சுவையென்னும் அலங்காரத்தினது இயல்பும் அதன் திறனுங் கூறுகின்றது.

இ - ள். உண்ணிகழ்தன்மை புறத்துப்புலனாய் விளங்க எண்வ கைப்பட்ட மெய்ப்பாட்டானும் இயல்வது சுவையென்னும் அலங் காரம்; அது வீரம் முதலியவாகக் கூறிய எண்வகைத்தாம். எ-று.

'மெய்ப்பாட்டினியல்வதுசுவையே' என்பது பொன்னினி யன்றகுடம் என்றாற்போலக் கொள்க; சுவை வேறின்மையின்.

வீரச்சுவைவருமாறு:—"சேர்ந்த புறவி னிறைதன் றிருமே னி—யீர்ந்திட் டுயர்துலைதா னேறினு—னேர்ந்த—கொடைவீர மோமெய் நிறைகுறையா வன்கட்-புடைவீர மோசென்னி பண்பு." எனவரும். அச்சச்சுவை வருமாறு:—"கைஞ்ஞெரித்து வெய்து யிர்த்துக் காறளர்ந்து மெய்பனிப்ப—மையரிக்கண் ணீர்ததும்ப வாய் புலர்ந்தா—டையல்—சினவேல் விடலையாற் கையிழந்த செங்கட்-புனவேழ மேல்வந்த போது." எனவரும். இழிப்புச்சுவை வரு மாறு:—"உடைதலையு மூளையு மூன்றடியு மென்புங்—குடருங் கொ ழுங்குருதி யீர்ப்ப—மிடைபேய்—பெருநடஞ்செய் பெற்றித்தே கொற்றப்போர்க் கிள்ளி—கருநடரைக் கொன்ற களம்." எனவரும். வியப்புச்சுவை வருமாறு:—"முத்தரும்பிச் செம்பொன் முறிது தைந்து பைந்துகிரின்—றொத்தலர்ந்து பல்கலனுஞ் சூழ்ந்தொளி ருங்—கொத்தினதாம்—பொன்னேர் மணிகொழிக்கும் பூங்கா விரி நாடன்—றன்னேர் பொழியுந் தரு." எனவரும். காமச்சுவை வரு மாறு:—"திங்க ணுதல்வியர்க்கும் வாய்துடிக்குங் கண்சிவக்கு—மங்

கைத் தளிர்நடுங்குஞ் சொல்லசையுங்—கொங்கை—பொருகாலு மூடிப் புடைபெயருங் காலு—மிருகாலு மொக்கு மிவர்க்கு." எனவரும். அவலச்சுவை வருமாறு:—"கழல்சேர்ந்த தாழ்விடலை காதலிமெய் தீண்டு—மழல்சேர்ந்து தன்னெஞ் சயர்ந்தான்—குழல்சேர்ந்த—தாமந் தரியா தசையுந் திருமேனி—யீமந் தரிக்குமோ வென்று." எனவரும். உருத்திரச்சுவை வருமாறு:—"கைபிசையா வாய்மடியாக் கண்சிவவா வெய்துயிரா—மெய்பனியா வேரா வெகுண்டெழுந்தான்—வெய்யபோர்த்—தார்வேய்ந்த தோளான் மகளைத் தருகென்று—போர்வேந்தன் றூதிசைத்த போது." எனவரும். நகைச்சுவை வருமாறு:—"நாண்போலுந் தம்மனையிற் றூன்சேற லிந்நின்ற—பாண்போலும் வெவ்வழலிற் பாய்வதூஉங்-காண்டோழி—கைத்தலங் கண்ணுக் களவுகாண் பானொருவன்--பொய்த்தலைமுன் னீட்டியது போன்று." எனவரும். இதன்றிறத்து வருவன பிறவற்றிற்கு உதாரணம் அகத்திணையியலுட் காண்க. (௬௬)

௬௬௬. தான்றற் புகழ்வது தன்மேம் பாட்டுரை.

இது நிறுத்தமுறையானே தன்மேம்பாட்டுரை அலங்காரங் கூறுகின்றது.

இ - ள். ஒருவன் தன்னைத் தானே மேம்பாடுதோன்ற உரைப்பது தன்மேம்பாட்டுரையென்னும் அலங்காரமாம். எ - று.

இஃது அகத்திணைப்பொருள்பற்றி வருங்காற் தலைமகன் தன்னைத்தானே புகழ்தலெனவும் புறப்பொருள்பற்றி வருங்கால் நெடுமொழிகூறலெனவும் பெயர்பெற்று வருமெனக் கொள்க.

வரலாறு:—"எஞ்சினா ரில்லை யெனக்கெதிரா யின்னுயிர் கொண்—டஞ்சினா ரஞ்சாது போயகல்க—வெஞ்சமத்துப்—பேராதவராகத் தன்றிப் பிறர்முதுகிற்—சாராவென் கையிற் சரம்." எனவரும். (௬௭)

௬௬௭. கருதியது கிளவா தப்பொரு டோன்றப்
பிறிதொன்று கிளப்பது பரியா யம்மே.

இது நிறுத்தமுறையானே பரியாய அலங்காரமாமாறு கூறுகின்றது.

இ - ள். தான் கருதியதனைக் கிளவாது அப்பொருள் தோன்றப் பிறிதொன்றனைச் சொல்லுவது பரியாயமென்னும் அலங்காரமாம். எ - று.

வரலாறு:—"மின்னிகரா மாதே விரைச்சாந் துடன்புணர்ந் து—நின்னிகரா மாதவிக்க ணின்றருணீ—தன்னிகராஞ்—செந்தீ வரமலருஞ் செங்காந்தட் போதுடனே—யிந்தீ வரங்கொணர்வல் யான்." எனவரும். பிறவும் அன்ன. (௬௮)

௬௬௮. முந்துதா முயல்வுறு தொழிற்பயன் பிறிதொன்று
தந்து முடிப்பது சமாயித மாகும்.

இது நிறுத்தமுறையானே சமாயித அலங்காரமாமாறு கூறுகின்றது.

இ - ள். முன்பு தம்மான் முயலப்பட்ட தொழிலதுபயன் அத்தொழிலானன்றிப் பிறிதொன்றான் நிகழ்ந்ததாகச் சொல்லுவது சமாயிதமென்னும் அலங்காரமாம். எ - று.

வரலாறு:—"அருவியங் குன்ற மரக்கன் பெயர்ப்ப—வெருவிய வெற்பரையன் பாவை—பெருமா—னணியாக மாரத் தழுவினு டான்முன்—றணியாத வூட றணிந்து." எனவரும். பிறவும் அன்ன.

௬௬௯. வியத்தகு செல்வமு மேம்படு முள்ளமு
முயர்ச்சிபுனைந் துரைப்ப துதாத்த மாகும்.

இது நிறுத்தமுறையானே உதாத்த அலங்காரமாமாறு கூறுகின்றது.

இ - ள். வியக்கத்தக்க செல்வத்தும் மேம்பட்ட உள்ளத்தும் உயர்ச்சியை மிகுத்துச் சொல்லுவது உதாத்தமென்னும் அலங்காரமாம். எ - று.

செல்வமிகுதிவருமாறு:—"கன்றும் வயவேந்தர் செல்வம் பலகவர்ந்து—மென்றும் வறியோ ரினங்கவர்ந்து—மொன்று—மரிவரிதாய் நிற்கு மளவினதா லம்ம—செறிகதிர்வேற் சென்னி திரு." எனவரும். உள்ளமிகுதி வருமாறு:—"மண்ணகன்று தன்கிளையி னீங்கி வனம்புகுந்து—பண்ணுந் தவத்திசைந்த பார்த்தன்ற—னெண்ணிறந்த—மீதண்டர் கோன்குலையும் வெய்யோர் குலந்தொலைத்தான்—கோதண்ட மேதுணையாக் கொண்டு." எனவரும் பிறவும் அன்ன. (௬௰)

௬௭௦. சிறப்பினும் பொருளினுங் குணத்தினு முண்மை
மறுத்துப்பிறி துரைப்ப தவநுதி யாகும்.

இது நிறுத்தமுறையானே அவநுதியலங்காரமாமாறு கூறுகின்றது.

இ - ள். சிறப்பினானும் பொருளினானுங் குணத்தினானும் ஆகிய உண்மையை மறுத்து அதற்கு மறுதலையாகிய பிறிதொன்றாக உரைப்பது அவநுதியென்னும் அலங்காரமாம். எ - று.

சிறப்பவநுதி வருமாறு:—"நறைகமழ்தார் வேட்டார் நலனணியு நாணு—நிறையு நிலைதளரா நீர்மை—யறநெறிசூழ்—செங்கோல னல்லன் கொடுங்கோலன் றெவ்வடுபோர்-வெங்கோப மால்யானை வேந்து." எனவரும். பொருளநுவதி வருமாறு:—"நிலனும் விசும்பா நிமிர்காலாந் தீயா—மலர்கதிராம் வான்மதியா மன்றி—மலர்கொன்றை—யொண்ணறுந் தாரா னொருவ னுயிர்க்குயிரா—யெண்ணிறந்த வெப்பொருளு மாம்." எனவரும். குணவவநுதி வருமாறு:—"மனுப்புவிமேல் வாழ மறைவளர்க்கு மாரப்—பனித்தொடையற் பார்த்திபர்கோ னெங்கோன்—றனிக்கவிகை—தண்மை நிழற்றன்று தற்றொழுத பேதையர்க்கு—வெம்மை நிழற்றாய் விடும்." எனவரும். பிறவும் அன்ன.

அவநுதியென்றது ஆகுமென்றதனாற் பிற அலங்காரங்களோடு கூடிவருவனவுங் கொள்க. உ-ம். "நறவேந்து கொங்கை நலங்கவர்ந்து நல்கா—மறவேந்தன் வஞ்சியா னல்லன்—றுறையின்—விலங்காமை நின்று வியன்றமிழ்நா டைந்தின்—குலங்காவல் பூண்டொழுகுங் கோ." இது வினைபற்றிய சிலேடை அவநுதி. பிறவற்றின்கண் வருவனவும் வந்துழிக் காண்க. (௬க)

௬௭௧. ஒருவகைச் சொற்றொடர் பலபொருட் பெற்றி
தெரிவுதர வருவது சிலேடை யதுதான்
செம்மொழி பிரிமொழி யெனவிரு திறப்படும்.

இது நிறுத்தமுறையானே சிலேடையலங்காரமாமாறு உணர்த்துகின்றது.

இ - ள். ஒருவகையான் நின்ற தொடர்ச்சொற் பலபொருள்களது தன்மை தெரிய வருவது சிலேடையலங்காரமாம். அவ்வலங்காரந்தான் ஒருவகையானின்று பலபொருள்படுஞ் செம்மொழிச் சிலேடையும் ஒருவகையானின்றசொல்லைப் பிரித்துத் தொகைவேறுபடுத்துப் பலபொருள்கொள்ளப்படும் பிரிமொழிச்சிலேடையுமென இரண்டுகூறுபடும். எ - று.

தானென்ற மிகையானே தொடர்ச்சொல்லேயன்றி ஒரு சொல்லே பலபொருட்பெற்றி தெரிதர வரினும் அவ்வலங்காரமா மெனக் கொள்க.

செம்மொழிச்சிலேடைவருமாறு:—"செங்கரங்க ளானிரவு நீக்குந் திறம்பயின்று—பங்கய மாதர் நலம்பயிலப்—பொங்குதயத்-தோராழி வெய்யோ னுயர்ந்த நெறியொழுகு—நீராழி சூழ்ந்த நிலத்து." எனவரும். ஆதித்தன்மேற் செல்லுங்காற் கரம், கதிர்; இரவு, இருள்; மாதர், காதல்; நலம், அழகு; பயிறல், உண்டாதல்; பொங்குதல், மேனோக்கிவளர்தல்; உதயம், தோற்றம்; ஆழி, தேர்க்கால்; வெய்யோன், ஆதித்தன்; நெறி, வழி. இனிச் சோழன் மேற் செல்லுங்காற் கரம், கை; இரவு, இரத்தல்; மாதர், திருமடந்தை; நலம், செல்வம்; பயிறல், பெருகுதல்; பொங்குதல், மேம்படுதல்; உதயம், பொருள்வருவாய்; ஆழி, சக்கரம்; வெய்யோன், விருப்பமுடையோன்; நெறி, ஒழுக்கம். பிரிமொழிச்சிலேடை வருமாறு:—"தள்ளா விடத்தேர் தடந்தா மரையடைய—வெள்ளா வரிமா னிடர்மிகுப்ப—வுள்வாழ்தேஞ்—சிந்துந் தகைமைத்தே யெங்கோன் திருவுள்ள-நந்துந் தொழில்புரிந்தார் நாடு." எனவரும். சோழனைப் பகையாதார்நாட்டின்மேற் செல்லுங்காற் தள்ளாவிடம், தவருதநிலம்; ஏர், உழுமெருது; தடம், வாவி; தாமரை, பங்கயம்; எள்ளாமை, இகழாமை; அரி, நெற்சூடு; மானிடர், உழவர்; உள் வாழ்தேம், உள்ளேயுண்டாகியதேன்; சிந்தல், பொழிதல்; நந்தல், ஆக்கம். பகைத்தார்நாட்டின்மேற் செல்லுங்காற் தள்ளா விடத்தேர், அசையாத விடத்தேர்மரம்; தடம், மலே; தாமரை, தாவுமரை; அரிமான், சிங்கப்போத்து; இடர், துன்பம்; உள்வாழ்தேம், மனம்பொருந்தியநாடு; சிந்தல், அழித்தல்; நந்தல், கேடு. (௬௨)

சுஎஉ. ஒருவினை பலவினை முரண்வினை நியம
நியம விலக்கு விரோத மவிரோத
மெனவெழு வகையினு மியலு மென்ப.

இதுவும் மேலதற்கு ஒருசார் எய்தியதோரியல்பு வகுத்துக் கூறுகின்றது.

இ-ள். ஒருவினையான்வருஞ்சிலேடையும் பலவினையான்வருஞ்சிலேடையும் மாறுபட்டவினையான்வருஞ்சிலேடையுஞ் சிலேடித்தவற்றைநியமஞ்செய்யுஞ்சிலேடையும் அந்நியமத்தைவிலக்குஞ் சிலேடையும் முன்னர்ச்சிலேடித்தவற்றைப் பின்னர்விரோதிப்பச்

சிலேடித்தலும் முன்னர்ச்சிலேடித்தவற்றைப் பின்னரும் விரோதியாமற்சிலேடித்தலுமென ஏழுகூறுபாட்டானும் நடக்கும் அவ்வலங்காரம். எ - று.

ஒருவினைச்சிலேடை வருமாறு:—"அம்பொற் பணைமுகத்துத் திண்கோட் டணிநாகம்—வம்புற்ற வோடை மலர்ந்திலங்க—வும்பர்—நவம்புரியும் வானதியு நாண்மதியு நண்ணத்—தவம்புரிவார்க் கின்பந் தரும்." எனவரும். பிள்ளையார்மேற்செல்லுங்காற் பொன், பொலிவு; பணை, பருத்தல்; முகம், வதனம்; கோடு, கொம்பு; நாகம், யானை; வம்பு, கச்சு; உறுதல், கட்டுதல்; ஓடை, பட்டம். மலைமேற்செல்லுங்காற் பொன், கனகம்; பணை, மூங்கில்; முகம், பக்கம்; கோடு, சிகரம்; நாகம், மலை; வம்பு, மணம்; உறுதல், உண்டாதல்; ஓடை, வாவி. பலவினைச்சிலேடை வருமாறு:—"தவிர்வின் மதுவுண் களிதளிர்ப்ப நீண்டு—செவிமருவிச் செங்நீர்மை தாங்கிக்—குயிலிசையு—மின்னுயிரா நுண்ணிடையார் மென்னோக்கு மேவலா-ரின்னுயிரை யீர்கின் றன." எனவரும். குயிற்குரன்மேற் செல்லுங்கால் மது, நறவு; மருவி, புக்கு; செங்நீர்மை, கோடாத்தன்மை; மேவலார், பிரிந்தோர். கண்ணின்மேற் செல்லுங்கால் மது, கள். செவிமருவி, செவியளவுஞ்சென்று; செங்நீர்மை,சிவந்தகுளிர்ச்சி; மேவலார்,புணருந்தலைவர். முரண்வினைச்சிலேடை வருமாறு:—"மாலை மருவி மதிதிரிய மாமணஞ்செய்—காலைத் துணைமேவ லார் கடிய—வேலைமேன்—மிக்கார் கலியடங்கா தார்க்கும் வியன்பொழில்கள்—புக்கார் கலியடங்கும் புள்." எனவரும். பிரிந்தார்மேற் செல்லுங்கால் மாலை, மயக்கம்; மதி, கருத்து; திரிதல், வேறுபடுதல்; மணம், வாசம்; துணைமேவலார், துணைவரைப்பிரிந்தார்; கடிதல், அஞ்சுதல். புணர்ந்தோர்மேற்செல்லுங்கால் மாலை, அந்தி; மதி, திங்கள்; திரிதல், உலாவுதல்; மணம், கூட்டம்; துணைமேவலார், துணைவரைப்பொருந்தினர்; கடிதல், விளங்கல். நியமச்சிலேடை வருமாறு:—"வெண்ணீர்மை தாங்குவன முத்தே வெறியவாய்க்—கண்ணீர்மை சோர்வ கடிபொழிலே—பண்ணீர்மை—மென்கோலயாழே யிரங்குவன வேல்வேந்தே—நின்கோ னுலாவு நிலத்து." எனவரும். வெண்ணீர்மை, வெண்ணிறநீர்மையும் அறியாமையும்; வெறி, வாசமும் பித்தும்; கண்ணீர்மை, கள்ளாகியநீர்மையும் கண்ணினதுநீர்மையும்; இரங்கல், இசைத்தலும் புலம்பலும். நியமவிலக்குச்சிலேடை வருமாறு:—"சிறைபயில்வ புட்குலமே தீம்புனலுமன்ன—விறைவநீ காத்தளிக்கு மெல்லை—முறையிற்—கொடியன மாளிகையின் குன்றமே யன்றிக்—கடியவிழ்பூங் காவு முள."

எனவரும். சிறை, சிறகுங் கரையுஞ் சிறைப்படுத்தலும்; கொடி, பதாகையும் வல்லியுங் கொடுமையும். விரோதச்சிலேடை வருமாறு:—"விச்சா தரனென்னு மந்தரத்து மேவானு—லச்சுத னென்னுமம் மாயனலன்—நிச்ச—நிறைவான் கலையா னகளங்க னீதி—யிறையா னநகனெங் கோ." எனவரும். விச்சாதரன், தேவனும் விஞ்சையைத்தாங்கியசோழனும்; அந்தரம், ஆகாயமுங் கேடும்; அச்சுதன், மாலுங் கேடில்லாதசோழனும்; மாயம், கறுப்பும் வஞ்சனையும்; கலையான், கலையையுடையசந்திரனுங் கல்வியையுடைய சோழனும்; களங்கம், மாசும் பாவமும்; இறையோன், சிவனுஞ் சோழனும்; அநகன், மலையில்லாதோனும் பாவமில்லாதோனும். இதனை நகன் அநகனெனப் பிரித்துக்கொள்க. அவிரோதச்சிலேடை வருமாறு:—"சோதி யிரவி கரத்தா னிரவொழிக்கு—மாதிடத்தான் மன்மதனை மாறழிக்கு—மீதா—மனகமதி தோற்றிக் குமுத மளிக்குந்—தனத னிருநிதிக்கோன் றான்." எனவரும். சோதி, ஒளியும் புகழும்; இரவி, சூரியனுஞ் சோழனும்; கரம், கதிருங் கையும்; இரவு, இருளும் இரத்தலும்; மாதிடத்தான், சிவனும் மிக்க திட்பத்தையுடையசோழனும்; மன்மதன், காமனும் மன்னரதுவலியும்; மதி, சந்திரனும் அறிவும்; குமுதம், ஆம்பலும் மகிழ்ச்சியும்; தனதன், குபேரனுந் தனத்தையுடையசோழனும்; இருநிதி, சங்கநிதிபதுமநிதியும் மிக்கபொருளும்.

இயலுமென்றதனன் இவ்வாறன்றிப் பிறவேறுபாட்டான் வருவனவுங் கொள்க. அவை வந்துழிக்காண்க. (௫௩)

௬௭௩. குணந்தொழின் முதலிய குறைபடு தன்மையின்
மேம்பட வொருபொருள் விளம்புதல் விசேடம். [illegible]

இது நிறுத்தமுறையானே விசேடங்கூறுகின்றது.

இ - ள். குணமுந் தொழிலும் பொருளுஞ் சாதியும் உறுப்பும் முதலாயின குறைபடுதல் காரணமாக ஒருபொருட்கு மேம்பாடு தோன்ற உரைப்பது விசேடமென்னும் அலங்காரமாம். எ - று.

குணக்குறைவிசேடம் வருமாறு:—"கோட்டந் திருப்புருவங் கொள்ளா வவர்செங்கோல்—கோட்டம் புரிந்த கொடைச்சென்னி—நாட்டஞ்—சிவந்தன வில்லைத் திருந்தார் கலிங்கஞ்—சிவந்தன செந்தீத் தெற." எனவரும். தொழிற்குறைவிசேடம் வருமாறு:—"எங்கா முகில்பொழியா நாளும் புனறேங்கும்—பூங்கா விரிநாடன் போர்மதமா—நீங்கா—வளைபட்ட காலணிகள் மாறெதிர்ந்தார்க் கந்

நாட்—டளைபட்ட தாட்டா மரை." எனவரும். சாதிக்குறைவிசேடம் வருமாறு:—"மேய நிரைபுரந்து வெண்ணெய் தொடுண்ட—வாயனூர் மாறேற்ற மார்புரிந்தார்—தூய—பெருந்திருவும் பின்னுங் கொடுத்துடைந்தார் விண்மேற்—புரந்தரனும் வானோரும் போல்." எனவரும். தொடுண்டல், தோண்டியுண்டல்; போல், ஒப்பில் போலி. பொருட்குறைவிசேடம் வருமாறு:—"தொல்லை மறைதேர் துணைவன்பால் யாண்டுவரை—யெல்லை யிருநாழி நெற்கொண்டோர்—மெல்லியலா—ளோங்குலகில் வாழு முயிரனைத்து மூட்டுமோ—லெங்கொலிநீர்க் காஞ்சி யிடை." எனவரும். உறுப்புக்குறைவிசேடம் வருமாறு:—"யானை யிரதம் பரியா ளிவையில்லைத்—தானு மனங்கன் றனுக்கரும்பு—தேனோர்—மலரைந்தால் வென்று வடுப்படுத்தான் மார—னுலகங்கள் மூன்று மொருங்கு." எனவரும். பிறவும் வந்துழிக் கண்டுகொள்க. (ருச)

சஎச. கருதிய குணத்தின் மிகுபொரு ளுடன்வைத்
தொருபொரு ளுரைப்ப தொப்புமைக் கூட்டம்
புகழினும் பழிப்பினும் புலப்படு மதுவே.

இது நிறுத்தமுறையானே ஒப்புமைக்கூட்ட அலங்காரத்தினது பொது இயல்பும் அதன் திறனுங் கூறுகின்றது.

இ - ள். ஒருபொருளைச்சொல்லுமிடத்துத் தான்கருதிய குணம் முதலாயினவற்றான் மிக்க பொருளைக் கூடவைத்துச்சொல்லுவது ஒப்புமைக்கூட்டமென்னும் அலங்காரமாம்; அது புகழ்தற்கண்ணும் பழித்தற்கண்ணுந் தோன்றும். எ - று.

புகழொப்புமைக்கூட்டம் வருமாறு:-"பூண்டாங்கு கொங்கை பொரவே குழைபொருப்புந்—தூண்டாத தெய்வச் சுடர்விளக்கு—நாண்டாங்கு—வண்மைசால் சான்றவருங் காஞ்சி வளம்பதியு—முண்மையா லுண்டிவ் வுலகு." எனவரும். பழிப்பொப்புமைக்கூட்டம் வருமாறு:—"கொள்பொருள் வெஃகிக் குடியலைக்கும் வேந்தனு—முள்பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரு—மில்லிருந் தெல்லை கடப்பாளு மிம்மூவர்—வல்லே மழையருக்குங் கோள்." எனவரும். பிறவும் அன்ன. (ருரு)

சஎரு. மாறுபடு சொற்பொருள் மாறுபாட் டியற்கை
விளைவுதர வுரைப்பது விரோத மாகும்.

இது நிறுத்தமுறையானே விரோத அலங்காரங் கூறுகின்றது.

இ - ள். மாறுபட்ட சொல்லானும் பொருளானும் மாறுபாட்டுத்தன்மை விளைவுதோன்ற உரைப்பது விரோதமென்னும் அலங்காரமாம். எ - று.

**சொ**ல்விரோதம் வருமாறு:—"சோலை பயிலுங் குயின்மழலை சோர்ந்தடங்க—வாலு மயிலினங்க ளார்த்தெழுந்த—ஞாலங்—குளிர்ந்த முகில்கறுத்த கோபஞ் சிவந்த—விளர்த்த துணைபிரிந்தார் மெய்." எனவரும். பொருள்விரோதம் வருமாறு:—"காலையு மாலையுங் கைகூப்பிக் காரெழுதான்—மேலை வினையெலாங் கீழவாங்—கோலக்-கருமான்றோல் வெண்ணீற்றுச் செம்மேனிப் பைந்தார்ப்—பெருமானைச் சிற்றம் பலத்து."எனவரும். பிறவும் அன்ன.

இயற்கையென்ற மிகையானே சிலேடைபற்றியும் வருமெனக்கொள்க.

**வ**ரலாறு:—"இனமா ணிகல வெளியவே யேனும்—வனமேவு புண்டரிகம் வாட்டும்—வனமார்—கரியுருவங் கொண்டு மரிசிதறிக் காயும்—விரிமலர்மென் கூந்தல் விழி." எனவரும். வனம், நீருங் காடும்; புண்டரீகம், தாமரையும் புலியும்; வனம், வண்ணமுங் காடும்; கரி, கரியும் யானையும்; அரி, செவ்வரியும் சிங்கமும்; சிதறல், பரத்தலும் உடைத்தலும். (௫௬)

௬௭௬. கருதிய பொருண்மறைத் தாங்கது பழித்தற்கு
வேறொன்று புகழ்வது மாறுபடு புகழ்நிலை.

இது நிறுத்தமுறையானே மாறுபடுபுகழ்நிலையலங்காரங் கூறுகின்றது.

இ - ள். கவி தான்கருதிய பொருளை மறைத்து அதனைப்பழித்தற்கு வேறொன்றனைப் புகழ்வது மாறுபடுபுகழ்நிலையென்னும் அலங்காரமாம். எ - று.

**வ**ரலாறு:—"இரவறியா யாவரையும் பின்செல்லா நல்ல—தருநிழலுந் தண்ணீரும் புல்லு—மொருவர்—படைத்தனவுங் கொள்ளாவிப் புள்ளிமான் பார்மேற்—றுடைத்தனவே யன்றோ துயர்." எனவரும். "போதுந் தளிரும் புனைந்து மணம்புணர்ந்து—சூதப் பணைதழுவித் தோன்றுமால்—மாதே—பலமா தவங்கள் பயின்றதோ பண்டிக்—குலமா தவியின் கொடி." என்றாற்போல்வனவும் அது. (௫௭)

சுஎஎ. பழிப்பது போலும் பான்மையின் மேன்மை
புலப்பட மொழிவது புகழாப் புகழ்ச்சி.

இது நிறுத்தமுறையானே புகழாப்புகழ்ச்சி அலங்காரங் கூறு கின்றது.

இ - ள். பழித்தல்போலும் பாகுபாட்டான் ஒன்றற்கு மேம் பாடுதோன்ற உரைப்பது புகழாப்புகழ்ச்சியென்னும் அலங்கார மாம். எ - று.

வரலாறு:—"போர்வேலின் வென்றதூஉம் பல்புகழாற் போர்த்ததூஉந்—தார்மேவு திண்புயத்தாற் றாங்குவதூஉ—நீர்நா டன்—றேரடிக்கூர் வெம்படையாற் காப்பதூஉஞ் செங்கண்மா—லோரடிக்கீழ் வைத்த வுலகு." எனவரும். தேரடி, சக்கரம். "நினை வரிய பல்புகழார் நின்குலத்துத் தொல்லோ—ரனைவரையும் புல் லினு ளன்றே—மனுநூல்—புணர்ந்த நெறியொழுகும் பூழியர்கோ யிந் நாண்—மணந்த மரைமலர்மேன் மாது." இதுவும் அது.

மேற்கூறிய இலேசத்தின்பாற்படும் பழிப்பதுபோலும் புகழ் புலப்படுத்தலோடு இப்புகழாப்புகழ்ச்சிக்கும்,புகழ்வதுபோலப் பழித் திறம்புனைதலோடு மேற்கூறிய மாறுபடுபுகழ்நிலைக்கும் வேற்றுமை யாதோவெனின்; பழிப்பதுபோலப் புகழ்புலப்படுத்தல் ஒன்றனை யேபழித்தாற்போலப்புகழ்வது. புகழ்வதுபோலப்பழித்திறம்புனை தல் ஒன்றனையேபுகழ்ந்தாற்போலப் பழிப்பது. இவை அன்ன வன்றி முறையே ஒன்றனைப்பழிப்பது வேறொன்றற்குப் புகழாய்த் தோன்றுதலும் ஒன்றனைப் புகழ வேறொன்றற்குப் பழிப்பாய்த் தோன்றுதலுமாமென்றுணர்க. (ருஅ)

சுஎஅ. ஒருவகை நிகழ்வதற் கொத்தபயன் பிறிதிற்குப்
புகழ்மை தீமை யென்றிவை புலப்பட
நிகழ்வ தாயி னிதரிசன மதுவே.

இது நிறுத்தமுறையானே நிதரிசன அலங்காரங் கூறுகின்றது.

இ - ள். ஒருவகையான் நிகழ்வதொன்றற்குப் பொருந்திய தொரு பயனைப் பிறிதொன்றற்கு நன்மைபுலப்பட நிகழ்வதாதல் தீமைபுலப்படநிகழ்வதாதல் செய்து அதனைச் சொல்லுவது நிதரி சனமென்னும் அலங்காரமாம். எ - று.

நன்மைபுலப்படவரும் நிதரிசன அலங்காரம் வருமாறு:—"பிறர்செல்வங் கண்டாற் பெரியோர் மகிழ்வுஞ்—சிறியோர் பொருத திறமு—மறிவுறீஇச்—செங்கமல மெய்மலர்ந்த தேங்குமுத மெய்யசைந்த—பொங்கொளியோன் வீறெய்தும் போது." எனவரும். தீமைபுலப்படவரும் நிதரிசன அலங்காரம் வருமாறு:—"பெரியோ ருழையும் பிழைசிறிதுண் டாயி—னிருநிலத்தில் யாருமறித—றெரிவிக்குந்—தேக்குங் கடலுலகில் யாவர்க்குந் தெள்ளமுதம்—வாக்கு மதிமேன் மறு." எனவரும். (ருக)

சுஎக. வினைபண் பெனுமிவை யிருபொருட் கொன்றே
புணர மொழிவது புணர்நிலை யாகும்.

இது நிறுத்தமுறையானே புணர்நிலையலங்காரங் கூறுகின்றது.

இ-ள். வினையானும் பண்பானும் இரண்டுபொருளுக்கு ஒன்றேபொருந்தச்சொல்வது புணர்நிலையென்னும் அலங்காரமாம்.எ-று.

ஒன்றேமொழிவது என்றொழியாது புணரமொழிவதென்ற மிகையானே இவ்வலங்காரம் ஒரு வினையொடுச்சொற் பொருள்படவே வருதல்கொள்க.

அவற்றுள் வினைப்புணர்நிலையலங்காரம் வருமாறு:—"வேண்டுருவங் கொண்டு கருகி வெளிபரந்து—நீண்ட முகிலுடனே நீர்பொழிந்த—வாண்டகையோர்—மேவல் விரும்பும் பெருநசையான் மெல்லாவி—காவல் புரிந்திருந்தோர் கண்."எனவரும். பண்புப்புணர்நிலையலங்காரம் வருமாறு:—"பூங்காவிற் புள்ளொடுங்கும் புன்மாலைப் போதுடனே—நீங்காத வெம்மையவாய் நீண்டனவாற்—றூங்காதல்—வைக்குந் துணைவர் வருமவதி பார்த்தாவி—யுய்க்குந் தமியோ ருயிர்ப்பு." எனவரும். (சுo)

சுஅo. பொருள்பரி மாறுதல் பரிவருத் தனையே.

இது நிறுத்தமுறையானே பரிவருத்தனையலங்காரங் கூறுகின்றது.

இ-ள். பொருள் ஒன்றற்கு ஒன்று கொடுத்து ஒன்று கொண்டனவாகச் சொல்லுவது பரிவருத்தனையென்னும் அலங்காரமாம். எ-று.

**வ**ரலாறு:—"காமனை வென்றோன் சடைமதியுங் கங்கையுந்-தாம நிழலொன்று தாங்கொடுத்து—நாமப்—பருவா ளரவின் பண மணிக டோறு—முருவா யிரம்பெற் றுள." எனவரும். (சுக)

சுஅக. இன்னார்க் கின்ன தியைக வென்றுதா
முன்னியது கிளத்தல் வாழ்த்தென மொழிப.

**இ**து நிறுத்தமுறையானே வாழ்த்தலங்காரங் கூறுகின்றது.

**இ**-ள். இன்னதன்மையையுடையார்க்கு இன்னது நிகழ்க வென்று கவிகள் தாங்கருதியதனை விரிப்பது வாழ்த்தென்னும் அலங்காரமாம். எ - று.

**வ**ரலாறு:—"மூவாத் தமிழ்பயந்த முன்னூன் முனிவாழி—யாவாழி வாழி யருமறையோர்—காவிரிநாட்—டண்ண லனபாயன் வாழி யவன்குடைக்கீழ்—மண்ணுலகில் வாழி மழை." எனவரும். பிறவும் அன்ன. (சுஉ)

சுஅஉ. மொழியப் பட்ட வணிபல தம்முட்
டழுவ வுரைப்பது சங்கீ ரணமே.

**இ**து நிறுத்தமுறையானே சங்கீரண அலங்காரங் கூறுகின்றது.

**இ**-ள். மேற்சொல்லப்பட்ட அலங்காரங்கள் பலவுந் தம்முட் பொருந்த உரைப்பது சங்கீரணமென்னும் அலங்காரமாம். எ-று.

**எ**னவே, உறுப்பனைத்துங் கூடிய கலவைபோல்வதோர் தன்மைத்தாய் ஒன்றற்கு மிகுதிதோன்றாமல் உரைப்பதாமென்பதாயிற்று. ஆகவே, இரண்டு அணி தம்முட் கூடிவருவனவாக மேற்கூறியனவெல்லாஞ் சங்கீரணமெனப்படா; என்னை? சந்தனத்தோடு கருப்பூரம் விரவினும் சந்தனத்தோடு மான்மதம் விரவினும் சந்தனமுங்கருப்பூரமுஞ் சந்தனமுமான்மதமுமென்பதல்லது கலவையெனப்படாதவாறுபோல என்றுணர்க.

உ-ம். "தண்டுறைநீர் நின்ற தவத்தா லளிமருவு—புண்டரிக நின்வதனம் போன்றதா—லுண்டே—பயின்றா ருயிர்பருகும் பான்மொழியாய் பார்மேன்—முயன்றான் முடியாப் பொருள்." இதனுட் தண்டுறைநீர்நின்றதவமெனத் தற்குறிப்பேற்றமுந் தவத்தாலெனக் கருமக்காரகவேதுவும் அளிமருவுமெனச் சிலேடையும் புண்டரிகம்

நின்வதனம்போலுமென உவமையும் உண்டேமுயன்ருன்முடியாப் பொருளென வேற்றுப்பொருள்வைப்பும் உயிர்பருகும்பான்மொழி யாயெனச் சுவையும் விரவிவந்தவாறு காண்க. பிறவும் அன்ன. ()

சூஅங. **பா**விக மென்பது காப்பியப் பண்பே.

இது நிறுத்தமுறையானே பாவிக அலங்காரம் உணர்த்து கின்றது.

இ - ள். பாவிகமென்று சொல்லப்படுவது பொருட்டொடர் நிலைச் செய்யுட்டிறத்துக் கவியாற் கருதிச்செய்யப்படுவதோர் குண மாம். எ - று.

அஃதாவது அத்தொடர்நிலைச்செய்யுண்முழுவதும் நோக்கிக் கொள்ளப்படுவது.

**வ**ரலாறு;—"பிறனில் விழைவோர் கிளையொடுங் கெடுப— பொறையிற் சிறந்த கவச மில்லை—வாய்மையிற் கடியதோர் வாளி யில்லை." எனவரும். இதனுள் என்பன போல்வன தோன்றக்கிடந் தவாறு காண்க. (சூச)

சூஅச. **சொ**ல்லணி யென்பது சொல்லுங் காலை
மடக்குமதன் வழிப்படூஉஞ் சித்தி ரமுமென
நடக்கு மென்மனூர் நயனுணர்ந் தோரே.

இது நிறுத்தமுறையானே பொருளணி உணர்த்திச் சொல் லணியுணர்த்துவான் புகுந்தவற்றுள் இஃது அஃது இத்துணைத் தென்கின்றது.

இ - ள். சொல்லானுளதாகிய அணியென்று கூறப்படுவது கூறுமிடத்து மடக்கும் அதன்பாற்படுஞ் சித்திரமுமென இரு வகைத்தாய்நடக்குமென்று கூறுவர் அதன் இயல்பையுணர்ந் தோர். எ - று. (சூரு)

சூஅரு. **எ**ழுத்தின் கூட்ட மிடைபிறி தின்றிப்
பெயர்த்துமொரு பொருடரின் மடக்கெனும் பெயர்
தோரடி முதலா நான்கடி காறுஞ் [த்தஃ
சேரு மென்ப தெளிந்திசி னோரே.

இது மேற்கூறிய இருவகைப்பகுதியுள் மடக்கினது பொது இயல்பும் அதன்வகையுங் கூறுகின்றது.

இ - ள். எழுத்துக்களதுதொகுதி பிறவெழுத்தானுஞ் சொல்லானும் இடையிடாது தாமே பெயர்த்தும் வேறுபொருளை விளக்குமாயின் அது மடக்கென்னும் பெயரையுடைத்தாம்; அம்மடக்கு நான்கடிச்செய்யுளுள்ளே நடக்குங்கால் ஓரடிக்கண்ணும் இரண்டடிக்கண்ணும் மூன்றடிக்கண்ணும் நான்கடிக்கண்ணும் பொருந்தி நடக்கும். எ - று.

எழுத்துக்களதுதொகுதியெனவே, இரண்டுமுதலிய எல்லா எழுத்துமாமெனவும், மடக்கென்னுது பெயர்த்தென்ற மிகையானே இடைபிறிதின்றி வருதலேயன்றி உளதாயும் வருமெனவும், நான்கடிச்செய்யுளென்பது ஆற்றலாற் போந்ததெனவுங் கொள்க. ஓரடிக்கண்வருவன முதல் அடிக்கண்வருதலும் இரண்டாம் அடிக்கண்வருதலும் மூன்றும் அடிக்கண்வருதலும் நான்காம் அடிக்கண்வருதலுமெனவாம். அவை முன்னர்க் காட்டுதும். (சுசு)

சுஅசு. ஆதி யிடைகடை யாதியோ டிடைகடை
யிடையொடு கடைமுழு தெனவெழு வகைத்தே.

இஃது அவ்வாற்றான் அத்துணைத்தாமென்றதனையே இவ்வாற்றான் இத்துணைத்தாமென்கின்றது.

இ - ள். முற்கூறிய மடக்கு ஆதிமடக்கும் இடைமடக்குங் கடைமடக்கும் ஆதியோடிடைமடக்கும் ஆதியொடுகடைமடக்கும் இடையொடுகடைமடக்கும் முழுவதுமடக்குமென ஏழுவகைப்படும். எ - று. (சுஎ)

சுஅஎ. ஓரடி யொழிந்தன தேருங் காலை
யிணைமுதல் விகற்ப மேழு நான்கு
மடைவுறு பெற்றியி னறியத் தோன்றும்.

இதுவும் அதனையே விரித்துணர்த்துகின்றது.

இ - ள். ஓரடிமடக்கொழிந்தன ஆராயுங்காலத்து மேற்செய்யுளியலுட் கூறப்படும் இணைமுதலிய விகற்பத்தொடை ஏழும் நான்குமாகிய பதினொன்றும்போல விளங்கத் தோன்றும். எ - று.

அடைவுறுபெற்றியின் அறியத்தோன்றலாவது இருசீர்த்தொடை ஆறும் முச்சீர்த்தொடை நான்கும் நாற்சீர்த்தொடை ஒன்றுமாகிய தொடைவிகற்பம் பதினொன்றும்போல முதலடியும் இரண்டாம் அடியும் முதலடியும் மூன்றாம் அடியும் முதலடியும் நான்காம் அடியும் மூன்றாம் அடியும் நான்காம் அடியும் இரண்டாம் அடியும் நான்காம் அடியும் இரண்டாம் அடியும் மூன்றாம் அடியும் மடக்கிவரும் ஈரடிமடக்கு ஆறும், ஈற்றடியொழித்து ஏனைமூன்றடியும் இரண்டாம் அடியொழித்து ஏனைமூன்றடியும் மூன்றாம் அடியொழித்து ஏனைமூன்றடியும் முதலடியொழித்து ஏனைமூன்றடியும் மடக்கிவரும் மூவடிமடக்குநான்கும், நான்கடியும் மடக்கிவரும் முற்றுமடக்கு ஒன்றுமென வருதலாம். நாற்சீரடியுள் ஓதுமதனை நான்கடிச்செய்யுட்கண் ஓதினார், ஒப்பின்முடித்தலென்பதனான். எனவே, இங்ஙனங் கூறிய மூவகையாகிய மடக்குப் பதினொன்றும் மேற்கூறிய ஓரடிமடக்கு நான்குமாகிய பதினைந்தும் ஆதி இடை கடையென்பனவற்றோடு கூட்டி யுறழ நாற்றைந்து வகைப்படும். அவையே இடையிடாது வருவனவும் இடையிட்டு வருவனவும் இடையிட்டும் இடையிடாதும் வருவனவுமென்று கூறப்படும் மூன்று வகையோடுங் கூட்டியுறழ முந்நூற்றொருபத்தைந்துவகையவாம். ஆகவே, மடக்கெனத் தொகையானொன்றும் அடியான் வகைநான்கும் அவற்றின்பகுதியாகிய விரியான் மடக்கு முந்நூற்றொருபத்தைந்துமாமென உய்த்துணர்க.

அவற்றுள், முதலடியாதிமடக்கு வருமாறு:—"துறைவா துறைவார் பொழிற்றுணைவர் நீங்க—வுறைவார்க்கு முண்டாங் கொல் சேவல்—சிறைவாங்கிப்—பேடைக் குருகாரப் புல்லும் பிறங்கிருள்வாய்—வாடைக் குருகா மனம்." எனவரும். இரண்டாமடியாதிமடக்கு வருமாறு:—"கனிவா யிவள்புலம்பக் காவலநீ நீங்கி—லினியா ரினியா ரெமக்குப்—பனிநா—ளிருவராய்த் தாங்கு முயிரின்றி யெங்குண்—டொருவராய்த் தாங்கு முயிர்." எனவரும். மூன்றாமடியாதிமடக்கு வருமாறு:—"தேங்கானன் முத்தலைக்குந் தில்லைப் பெருந்தகைக்—கோங்கரத் துட்பொருளா மொண்சுடர்க்கு—நீங்கா—மருளா மருளா தரித்துரைக்கு மாற்றம்—பொருளாம் புனைமாலை யாம்." எனவரும். ஈற்றடியாதிமடக்கு வருமாறு:—"இவளளவு தீயுமிழ்வ தென்கொலோ தோயுங்—கவளமதமான் கடாமுந்—திவளு—மலையார் புனலருவி நீயணுகா நாளின்—மலையா மலையா நிலம்." எனவரும். ஒழிந்த ஓரடிமடக்கு வந்துழிக் காண்க.

முதலீரடியாதிமடக்கு வருமாறு:—"நினையா நினையா நிறை போ யகலா—வினையா வினையா மியல்மா—னனையாள்—குரவா ளுங் கூந்தற் குமுதவாய்க் கொம்பிற்—புரவாள நீபிரிந்த போது." எனவரும். முதலொடுமூன்றாமடியாதிமடக்கு வருமாறு:—"அடையா ரடையா ரரணழித்தற் கின்ன-லிடையாடு நெஞ்சமே யேழை—யுடையேர்—மயிலா மயிலா மதர்நெடுங்கண் மாற்றங்—குயிலா மென் றெண்ணல் குழைந்து." எனவரும். முதலொடுநான்காமடியாதிமடக்கு வருமாறு:—"மானவா மானவா நோக்கின் மதுகரஞ் சூழ்—கானவாங் கூந்தலெங் காரிகைக்குத்—தேனே—பொழியா ரந் தார்மேலு நின்புயத்தின் மேலுங்—கழியா கழியா தரவு." எனவரும். ஈற்றீரடியாதிமடக்கு வருமாறு:—"மாத ருயிர்தாங்க வள்ளல் வருநெறியிற்—பேதுறவு செய்யும் பெரும்பாந்தள்—யாதும்—வரையா வரையா மெனுமா மதமா—விரையா விரையா வெழும்." எனவரும். இரண்டாமடியோடீற்றடியாதிமடக்கு வருமாறு:—"மழையார் கொடைத்தடக்கை வாளபய னெங்கோன்—விழையார் விழையார்மெல் லாடை—குழையார்—தழையா முணவுங் கனியா மினமு—முழையா முழையா முறை." எனவரும். இடையீரடியாதிமடக்கு வருமாறு:—"குரவார் குழலார் குவிமென் முலைநாம்—விரவா விரவாமென் றென்ற—லுரவா—வரவா வரவா மெனநினையாய் வையம்—புரவாளர்க் கீதோ புகழ்." எனவரும். ஒழிந்த ஈரடிமடக்கு வந்துழிக் காண்க.

ஈற்றடியொழிந்த மூவடியாதிமடக்கு வருமாறு:—"இறைவா விறைவால் வளைகாத் திருந்தியா—ருறைவா ருறைவார் புயலா—னறைவாய்ந்த—வண்டளவு வண்டளவு நாளின் மயிலாலக்—கண்டளவி னீர்பொழியுங் கண்." எனவரும். இரண்டாமடியொழிந்த மூவடியாதிமடக்கு வருமாறு:—"கொடியார் கொடியார் மதிண் மூன்று கொன்ற—படியார் பணைத்தடக்கை நால்வாய்க்—கடியா—ருரியா ருரியா ரெனையாள வோதற்—கரியார் கரியார் களம்." எனவரும். மூன்றாமடியொழிந்த மூவடியாதிமடக்கு வருமாறு:—"மலையு மலையு மகிழ்ந்துறையும் வேயுங்—கலையுங் கலையுங் கடவுந்—தொலைவி—லமரி யெமக்கரணு மென்னுமவர் முன்னிற்—குமரி குமரிமேல் கொண்டு." எனவரும். முதலடியொழிந்த மூவடியாதிமடக்கு வருமாறு:—"பாலையாழ் தன்னிற் பதிற்றிரட்டி வெய்தன்றே—மாலைவாய் மாலைவா யின்னிசை—மேலுரை—மேவலர் மேவலர் மெல்லாவி வாட்டாவோ—காவலர் காவலராங் கால்." எனவரும். ஒழிந்தமூவடிமடக்கு வந்துழிக்காண்க.

முற்றுதிமடக்கு வருமாறு:—"வரைய வரைய சுரஞ்சென் றார் மாற்றம்—புரைய புரையவெனப் பொன்னே—யுரையல்—நனைய நனைய தொடைநம்மை வேய்வர்—வினையர் வினையர் விரைந்து." எனவரும். முற்றிடைமடக்கு வருமாறு:—"மனமேங் குழைய குழையவாய் மாந்த—ரினநீங் கரிய கரிய—புனைவதனத்—துள்வாவி வாவிக் கயலொக்கு மென்னுள்ளங்—கள்வாள வாள வாங் கண்." எனவரும். முற்றிறுதிமடக்கு வருமாறு:—"மாலை யருளாது வஞ்சியான் வஞ்சியான்—மேலை யமரர் கடைவேலை—வேலை—வளையார் திரைமேல் வருமன்ன மன்ன—விளையா ளிவளை வளை." எனவரும். முற்றுதியிடைமடக்கு வருமாறு:—"கொண் டல் கொண்டலர் பொழிலெறும் பண்ணையாய் பண்ணையா யத் துள்ளார்—வண்டல் வண்டலர் தாதுகொண் டியற்றலின் வருமணன் மணன்முன்றிற்—கண்டல் கண்டவர் மகிழ்செய வோதிமங் கலந்துறை துறைவெள்ள—மண்டல் மண்டல முழுதுடன் வளை தரு வளைதரு மணிவேலை." எனவரும். முற்றுதியிறுதிமடக்கு வருமாறு:—"நிரையா நிரையா மணிபோனிறை கோடல் கோடல்—வரையா வரையா விருள்முன்வரு மாலை மாலை—விரையா விரையா வெழுமின்னெளிர் மேக மேக—முரையா வுரையா ரினுமொல்லல முல்லை முல்லை." எனவரும். முற்றிடையிறுதிமடக்கு வருமாறு:—"வருகம் புளினம் புளினம்பயில் வேலை வேலை—யொருகா லுலவா வுலவாவரு மோத மோத—வருகே தகைகே தகைசேர்தரு மன்ன மன்ன—பெருகா தனவே தனவேரசை மாதர் மாதர்." எனவரும். முற்றுமுற்றுமடக்கு வருமாறு:—"களைகளைய முளரியரு கடைகடைய மகளிர்கதிர் மணியு மணியும்—வளைவளைய கரதலமு மடைமடைய மதுமலரு மலைய மலைய—விளையிளையர் கிளைவிரவி யரியரியின் மிசைகுவளை மலரு மலருங்—கிளைகிளைகொ ளிசையளிகள் மகிழ்மகிழ்செய் கெழுதகைய மருத மருதம்." எனவரும். இவை யெல்லாம் இடையிடாது வந்தன.

முற்றுதிமடக்கு வருமாறு:—"தோடு கொண்டளி முரன்றெழக் குடைபவர் குழல்சோர்—தோடு கொண்டதே மலர்சுமந் தகில் கமழ்ந் தவர்தந்—தோடு நைந்தசெஞ் சாந்தணி திரண்முலை யிடைதோய்ந்—தோடு தண்புன னித்திலந் துறைதொறுஞ் சொரியும்." எனவரும். முற்றிடைமடக்கு வருமாறு:—"பரவி நாடொறும் படியவாம் பல்புகழ் பரப்பு—மிரவி சீறிய படியவாம் பரியெரி கவர—விரவி மான்பயில் படியவாம் வேய்தலை பிணங்கு—மருவி வாரணம் படியவாம் புலர்பணை மருதம்." எனவரும். முற்றிறுதிம

டக்கு வருமாறு:—"சொன்ன நாளிது சுரும்பிமி ரிதழிபொன் கால—மின்னு வாள்விட வில்வளைத் தூன்றிய கால—வின்ன கார் முகி லினமிருண் டெழுதரு கால—மன்னர் வாரலர் தான்வரு மயின்மருங் கால." எனவரும். இவை இடையிட்டுவந்தன ஒழிந் தனவந்துழிக் காண்க.

முற்றிடையிறுதிமடக்கு வருமாறு:—"வாமான மான மழை போன்மத மான மான—நாமான மான நகமாழக மான மான—தீமான மானர் புகுதாத்திற மான மான—காமான மான கலின் கான் கனன் மானமான." இஃது இடையிட்டும் இடையிடாதும் வந்தது. ஒழிந்தன வந்துழிக் காண்க.

"வருமறை பலமுறை வசையறப் பணிந்தே மதியொடு சடைமுடி மருவுமப் பணிந்தே—யருநட நவில்வது மழகுபெற்ற மன்றே யருளொடு கடவுவ தணிகொள்பெற்ற மன்றே—திருவடி மலர்வன திகழொளிச் சிலம்பே தெளிவுட னுறைவது திரும றைச் சிலம்பே—யிருவினை கடிபவ ரடைபதத் தன்றே யிமை யவர் புகலவ னெனநினைத் தன்றே." இஃது அடிதோறுந் தனித் தனியே வந்த இறுதிமுற்றுமடக்கு. "அனைய காவலர் காவலர் கா வல—ரினைய மாலைய மாலைய மாலைய—வெனைய வாவிய வாவிய வாவிய—வினைய மாதர மாதர மாதரம்." இது நான்கடியும் முதற் சீரொழித்து மடக்கிய முற்றுமடக்கு. இங்ஙனம் வரும் வேறுபா டுகளும் அறிந்துகொள்க. (சுஅ)

சுஅஅ. அடிமுழுது மடக்குவ தாங்கதன் சிறப்பே.

இது மேற்கூறிய மடக்கிற் சிறப்புடையது இதுவென்கின்றது.

இ - ள். அடிமுழுதும் மடக்குவது மேற்கூறிய மடக்கினுட் சிறப்புடைத்தெனப்படும். எ - று.

அடிமுழுதுமெனப் பொதுப்படக் கூறினரேனும் இரண்டடி மடக்குவதும் மூன்றடிமடக்குவதும் நான்கடிமடக்குவதுமென மூன்றுவகைப்படும்.

அவற்றுள், ஈரடிமடக்கு வருமாறு:—"விரைமேவு மதமாய விடர்கூடு கடுநாக—விரைமேவு மதமாய விடர்கூடு கடுநாக—வரை மேவு நெறியூடு தனிவாரன் மலைவாண—நிரைமேவும் வளைசோர விவளாவி நிலைசோரும்." இது முதலீரடிமடக்கியது. "கடன்மேவு கழிகாதன் மிகநாளு மகிழ்வார்க—ளுடன்மேவு நிறைசோர மெலி

வாடன் னுயிர்சோர்வு—கடன்மேவு கழிகாதன் மிகநாளு மகிழ் வார்க—ளுடன்மேவு பெடைகூடி மறுகாது முறையாகொல்.'' இது முதலடியும் மூன்ருமடியும் மடக்கியது. "மறைநுவல் கங்கை தாங் கினுர்—நிறைதவ மங்கை காந்தனுர்—குறையென வண்டர் வேண் டவே—மறைநுவல் கங்கை தாங்கினுர்.'' இது முதலடியும் ஈற்ற டியும் மடக்கியது. "கொல்லியம் பொருநனைக் கூடார் கோநக—ரில் லெரி மேவுத லியம்ப வேண்டுமோ—வல்லியந் தாமரை வனங்க ளாயின—வல்லியந் தாமரை வனங்க ளாயின.'' இது கடையீர டியும் மடக்கியது. "நலத்தகை பெறவிரு சரண மோதுநங்—குலத் தகை பணிகொளே காம்ப ரத்தனே—நலத்தகை மகளொரு பாக நண்ணுமே—குலத்தகை பணிகொளேகாம்ப ரத்தனே.'' இஃதி ரண்டாமடியும் ஈற்றடியும் மடக்கியது. "கருமாலை தொறுகாதல் கழியாது தொழுதாலு—முருமாய மதனுக மடுமாறு புரிவார்முன்— னுருமாய மதநாக மடுமாறு புரிவார்முன்—வருமாய வினைதீர வொ ருநாளு மருளார் கொல்.'' இஃது இடையீரடிமடக்கியது.

மூவடிமடக்குவருமாறு:—"காமரம்பயி னீரமதுகரங்—காம ரம்பயி னீரமதுகரங்—காமரம்பயி னீரமதுகர—நாமரந்தை யுறநி னையார்நமர்.'' இஃது ஈற்றடியொழித்து ஏனைமூன்றடியும் மடக்கி யது. "கடியவாயின காமருவண்டின—மடியவாயகன் ருருழைவா ரலர்—கடியவாயின காமருவண்டினங்—கடியவாயின காமருவண் டினம்.'' இஃது இரண்டாமடியொழித்து ஏனைமூன்றடியும் மடக் கியது. "கோவளர்ப்பன கோனகரங்களே—கோவளர்ப்பன கோ னகரங்களே—மேவளக்கர் வியன்றிரைவேலைசூழ்—கோவளர்ப் பன கோனகரங்களே.'' இது மூன்ருமடியொழித்து ஏனைமூன்ற டியும் மடக்கியது. "வரியவாங்குழன் மாதரிளங்கொடி—யரியவாங் கயத் தானவனங்களே—யரியவாங்கயத் தானவனங்களே—யரிய வாங்கயத் தானவனங்களே.'' இது முதலடியொழித்து ஏனைமூன் றடியும் மடக்கியது.

நான்கடிமடக்கு வருமாறு:—"வானகந்தரு மிசையவாயின- வானகந்தரு மிசையவாயின—வானகந்தரு மிசையவாயின—வான கந்தரு மிசையவாயின.'' எனவரும். இந்நான்கடிமடக்கினை ஏகபா தமென்றுங் கூறுவர்.

அதன்சிறப்பென்னுது ஆங்கதன்சிறப்பென்ற மிகையானே ஒருசொல்லானே நான்கடிமுழுவதும் மடக்குஞ் சொன்மடக்கும் இரண்டடியாகமடக்கும் பாதமடக்கும் இடையிடாதுவந்த அந்தாதி மடக்கும் இடையிட்டுவந்த அந்தாதிமடக்கும் வரவும்பெறும்.

அவற்றுட், சொன்மடக்கு வருமாறு:—"உமாதர னுமாதர-னுமாதர னுமாதர-னுமாதர னுமாதர-னுமாதர னுமாதரன்." எனவரும். பாதமடக்கு வருமாறு:—"பணிபவனந்தன தாகமன்னுவார்—பணிபவனந்தன தாகமன்னுவா—ரணியெனமேயது மன்பராகமே-யணியெனமேயது மன்பராகமே." எனவும், "கலைநிலாவரு மாலை மணங்கொள்வான்—மலையமாருத மாறலமாதர்கண்—கலைநிலாவரு மாலைமணங்கொள்வான்—மலையமாருத மாறலமாதர்கண்."எனவும், "ஓதநின்றுல வாவரும்வேலைவாய்—மாதரங்க மலைக்கு நிகரவே—யோதநின்றுல வாவரும்வேலைவாய்—மாதரங்க மலைக்கு நிகரவே." எனவும் வரும். பிறவும் வந்துழிக் காண்க.

அந்தாதிமடக்கு வருமாறு:—"மாலையாகவெய் தனங்கவேள் பயிறருமாலை—மாலைவேட்டவர் மனங்கொலோ வவன்றுழாய் மாலை—மாலையோவுடைத் ததுநினைந் தெழுதருமாலை—மாலையாவுடை யவரைவந் திடர்செயுமாலை." எனவும், "கயலேர் பெறவருங் கடிபுனற் காவிரி—காவிரி மலருகக் கரைபொரு மரவ—மரவம் பூஞ்சினை வண்டொடு சிலம்புஞ்—சிலம்புசூழ் தளிரடி திருமனைக் கயலே." எனவும் வரும். பிறவும் அன்ன.

சாஅகூ. ஒரெழுத்து மடக்கலு முரித்தென மொழிப.

இஃது ஒரெழுத்தானும் மடக்குவருமென அதன் வேறுபாடு உணர்த்துதனுதலிற்று.

இ - ள். எழுத்தின்கூட்டம் இடைபிறிதின்றிச் சீரானும் அடியானும் மடக்குதலேயன்றிப் பெயர்த்தும் வேறுபொருடரின் ஒரெழுத்தான் மடக்குவதும் அம்மடக்கிற்கு உரிமையுடைத்தென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

உதாரணம்:—"நாநாநாதங் கூடிசைநாடுந் தொழிலோவாய்—தாதாதாரம் மாகவிரைத்தண் மலர்மீதே—வாவாவார்தண் சோலையில்வாழும் வரிவண்டே—யாயாயாளிற் சேர்த்துவதன்பற் கிசையாயால்." எனவரும்.

ஒரெழுத்துமடக்கலுமென்ற உம்மையான் ஒரெழுத்தும் ஈரெழுத்தும் மூவெழுத்தும் நான்கெழுத்தும் உயிராயும் மெய்வருக்கமாயும் இனவருக்கமாயும் வரும். அவ்வாறு வருங்கால் உயிராயும் உயிர்மெய்யாயும் வரும். இவையெல்லாம் ஓரோர்செய்யுண்முழுவதூஉம் வருமெனக்கொள்க.

அவற்றுள், ஒருயிரான்வருவனவற்றிற்குச் செய்யுள்;—"அமல லகல மகல லபய—கமல பவன மவள—தமல—மடர வளக சலச வதன—மடர மதன நட." எனவும், "தாயாயா ளாராயா டாமாரு தாராயா—யாமாரா வாளுடா மாதாமா தாவாவா—யாவா கா காலாரு காவாகா காளுநா—மாலாரு மாநாதா வா." எனவும் வரும். ஏனைய வந்துழிக்காண்க. இவை ஒருயிர் ஓரலகாயே வந்தன.

மெய்வருக்கத்தான் வருவனவற்றிற்குச் செய்யுள்;—"காக்கைக்கா காகூகை கூகைக்கா காகாக்கை—கோக்குக்கூ காக்கைக்குக் கொக்கொக்கக்—காக்கைக்குக்—கைக்கைகை காக்கக்காக் கைக்கிக்குக் கூகைக்கே—கொக்குக்குக் காக்கைக்கை கோ." எனவும், "தத்தித்தா தூதுதி தாதூதித் தத்துதி—துத்தித் துதைதி துதைத்ததா—தூதுதி—தித்தித்த தித்தித்த தாதெது தித்தித்த—தெத்தாதோ தித்தித்த தாது." எனவும், "நின்னைநா னென்னென்னே நின்னைநா னென்னுன்னே—நின்னைநா நின்னெனே நின்னுனி—னின்னுனு—நாநாநா நின்னுநா னூனநீ னந்நானே—நீநா னெனநீ நினை." எனவும் வரும். ஏனைய வந்துழிக்காண்க.

ஈரெழுத்தான் வருவதற்குச் செய்யுள்;—"மன்னுமான் மான்முன்ன மானமு மீனமா—மின்னமா னேமுன்னு மானினி—மென்மென—மின்னுமா மென்னினு மன்னமு மென்மன—மன்னுமா மானுமான் மான்." எனவரும். மூன்றெழுத்தான் வருவதற்குச் செய்யுள்;—"மின்னுவான் முன்னு மெனினு மினிவேனின்—மன்னுவினைவே னெனைவினவா—முன்னுன—வானவனை மீனவனை மான வினைவென்வேன—மானைவனை மானுமோ வான்." எனவரும். நான்கெழுத்தான்வருவதற்குச் செய்யுள்;—"யானக வென்னே யினையநா வாக்கின—கானக யானை யனையானைக்—கோனவனைக்—கொன்னயன வேனக்க கோகனகக் கைக்கன்னி—கன்னிக் கனியனைய வாய்." எனவரும். ஏனைய வந்துழிக் காண்க.

இனம் மூவகைப்படும், வல்லினமும் மெல்லினமும் இடையினமுமென. அவைவருமாறு:—"துடித்தடித்துத் தோற்றத் துடுப்பெடுத்த கோட—டுருடுத்த தொடைகடுக்கை பொற்போற்—பொடித்துத்—தொடிபடைத்த தோடுடுத்த தோகைகூத் தாடக்—கடிபடைத்துக் காட்டிற்றுக் காடு." எனவும், "மானமே நண்ணு மனமென் மனமென்னு—மானமான் மன்னு நனிநாணும்—மீனமா—மாநான் மினன்மின்னி முன்முனே நண்ணினு—மானு மணிமேனி

மான்." எனவும், "யாழியல் வாய வியலளவா லாயவொலி—யே ழிய லொல்லாவா லேழையுரை—வாழி—யுழையே வியலா வயில் விழியை யையோ—விழையே லொளியா விருள்." எனவும் வரும்.

"நுமது புனலி னளியி லரிவை—யமுத விதழி னிகலுங்—குமுத—மருவி நறவு பருக வளரு—முருவ முடைய துரை." என ஒற்றெழுத்தின்றி வருதலுங்கொள்க.

இங்ஙனங் கூறிய மடக்கின் வேறுபாடுகளெல்லாம் விரிந்த நூலுள்ளும் முன்னோர் கூறிய இலக்கியங்களுள்ளும் ஆராய்ந்து அமைத்துக்கொள்க. (எ0)

௬௯0. கோமூத் திரியே கூட சதுக்க
மாலை மாற்றே மாத்திரைச் சுருக்க
மாத்திரை வருத்தன மெழுத்து வருத்தன
மொற்றுப் பெயர்த்தல் வினவுத் தரமே
நாக பந்த முரச பந்தந்
திரிபாதி திரிபங்கி பிறிதுபடு பாட்டுக்
காதை கரப்பே கரந்துறைச் செய்யுள்
சக்கரஞ் சுழிகுளஞ் சருப்பதோ பத்திர
மக்கரச் சுதக நிரோட்ட மென்ன
முறைபெற வகுத்த மிறைக்கவி யிருபது
மறிவுறக் கிளந்த வவற்றின் பால.

நிறுத்தமுறையானே இது மிறைக்கவியின் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

இ-ள். கோமூத்திரி முதல் நிரோட்டகம் ஈறாகச் சொல்லப் பட்ட இத்தன்மையவாய் முறைமைப்படப் பகுத்த மிறைக்கவி இருபதும் முன்னர் எடுத்தோதப்பட்ட அம்மடக்கின் பகுதியன வாம். எ-று.

மிறைக்கவியெனினுஞ் சித்திரகவியெனினும் ஒக்கும்.

அவற்றுட், கோமூத்திரியென்பது நான்கடிச்செய்யுளை இரண் டிரண்டு வரியாக எழுதி மேலுங் கீழும் ஒன்றிடைவிட்டு வாசிக்க அப்பாட்டேயாவது.

வரலாறு;—"பருவமாக விதோகன மாலையே—மருவுமாசை விடாகன மாலையே—பொருவிலாவுழை மேவன கானமே—வெரு விலாயிழை பூவணி காலமே." எனவரும்.

கூடசதுக்கமென்பது ஈற்றடியெழுத்து ஏனைமூன்றடியினுங் கரந்துநிற்பச் சொற்சேர்த்துப்பாடுவது. வரலாறு:—"புகைத்தகைச் சொற்படைக் கைக்கதக் கட்பிறைப் பற்கறுத்த-பகைத்திறச் சொற் கெடச் செற்றகச் சிப்பதித் துர்க்கைபொற்புத்—தகைத்ததித் தித்த துத் தத்தசொற் றத்தைபத் தித்திறத்தே—திகைத்தசித் தத்தைத் துடைத்தபிற் பற்றுக் கெடக்கற்பதே." எனவரும்.

மாலைமாற்றென்பது ஒருபாட்டை ஈற்றை முதலாக வாசித்தாலும் அப்பாட்டேயாவது. வரலாறு:—"நீவாத மாதவா தாமோக ராகமோா—தாவாத மாதவா நீ." எனவரும்.

மாத்திரைச்சுருக்கமென்பது ஒருசொல் ஒருமாத்திரை குறையப் பிறிதொருசொல்லாய்ப் பிறிதொரு பொருள்வரப் பாடுவது. வரலாறு:—"நேரிழையார் கூந்தலினோர் புள்ளிபெற நீண்மரமா—நீர்நிலையோர் புள்ளி பெறநெருப்பாஞ்—சீரளவு—காட்டொன் றொழிப்ப விசையாங் கவினளவு—மீட்டொன் றொழிப்ப மிடறு." எனவரும்.

மாத்திரைவருத்தனமென்பது இதனையே மறுதலைப்படப் பாடுவது. அது வந்துழிக்காண்க.

எழுத்துவருத்தனமென்பது ஓரெழுத்தான் ஒருமொழியாய்ப் பொருள்பயந்து பின்னோரெழுத்தேற்றப் பிறிதொரு மொழியாய்ப் பொருள்பயந்து அவ்வாறே முறையானே ஏற்ற ஏற்ற ஒவ்வொரு மொழியாய்ப் பொருள்பயப்பப் பாடுவது. "ஏந்திய சங்கமு முன்னொளடுத்ததுவும்—பூந்துகிலு மாலுந்தி பூத்ததுவும்—வாய்ந்த—வலை வி லெழுத்தடைவே யோரொன்றாய்ச் சேர்க்கத்—தலைமலைபொன் றாமரையென் றாம்." எனவரும்.

ஒற்றுப்பெயர்த்தலென்பது ஒருமொழியுந் தொடர்மொழியுமாய்ப் பொருள்படுமவற்றை அப்பொருளொழிய வேறுபொருள் பட வைத்துப் பாடுவது. வரலாறு;—"வண்புயலைக் கீழ்ப்படுத்து வானத் தருமலைந்து—மண்குளிருஞ் சாயை வளர்க்குமாங்—தண்க விகைக்—கொங்கா ரலங்கற் குலதீபன் கொய்பொழில்சூழ்—கங்கா புரமா ளிகை." எனவரும்.

வினாவுத்தரமென்பது ஒருசொற்றொடரைப் பிரித்துப் பதந்தோறும் வினாயதற்கு உத்தரமாகப் பதப்பொருளுரைத்துக் கடைக்கால் வினாயதற்கு உத்தரமாக அத்தொடர்முழுதும் ஒருபொருளாக்கி உரைப்பது. வரலாறு;—"பூமகள்யார் போவானை யேவுவானென்னுரைக்கு—நாமம் பொருசரத்திற் கென்னென்பர்—தாமழகின்—பேரென் பிறைசூடும் பெம்மா னுவந்துறையுஞ்—சேர்வென் திருவேகம் பம்." எனவரும்.

நாகபந்தமென்பது இரண்டு பாம்பாக மாறியெழுதி ஒரு நேரிசைவெண்பாவும் இன்னிசைவெண்பாவுமெழுதிச் சந்திகளினின்ற எழுத்தை மற்றையிடங்களிலும் உறுப்பாய்நிற்கப் பாடுவது. வரலாறு;—"அருளின் திருவுருவே யம்பலத்தா யும்பர்—தெருளின் மருவாச்சீர்ச் சீரே—பொருவிலா—வொன்றே யுமையா ளுடனே யுருத்தரு—குன்றே தெருள வருள்." எனவும், "மருவி னவருளத்தே வாழ்சுடராய் நஞ்சு—பெருகொளியான் மேயபெருஞ் சோதித்—திருநிலா—வானஞ் சுருங்கு மிகுசுடரே சித்த—மயரு மளவை யொழி." எனவும் வரும். "வாலுளிரு மூன்றுந் தலையி லிரண்டெழுத்து—மூலைக ணான்கும் வயிறிரண்டு—மைவைந்தாய்—நாலெட்டு நாலைந்தே ழாகி நடைபெறுமே—சேலிட்ட கண்ணரவின் சீர்." இதன்வழியே எழுதிக் கண்டுகொள்க.

முரசபந்தமென்பது ஓரடியொருவரியாய் நான்கு வரியெழுதி மேலிரண்டுவரியுந் தம்முட் கோமூத்திரியாகவுங் கீழிரண்டுவரியுந் தம்முட் கோமூத்திரியாகவுஞ் சிறுவார் போக்கியும் மேலில்வரி இரண்டாம்வரியினும் மூன்றாம்வரியினும் நான்காம்வரியினுங் கீழுற்று மீண்டு மேனோக்கி அவ்வாறே வந்துங் கீழ்நோக்கி அவ்வாறே சிறுவார் போக்கியுங் கீழில்வரியினும் அவ்வாறே மேனோக்கி மேலில்வரியுற்றுக் கத்திரிகைமாறாய்ப் பெருவார் போக்கியும் அவ்வரியேயாகப்பாடுவது. வரலாறு;-"கானவாரண மரியவாயினதோ—தானவாரண மரியவாயினதோ—மானவாரண மரியவாயினதோ—கானவாரண மரியவாயினதோ." எனவரும்.

திரிபாகியென்பது மூன்றெழுத்துக் கூட ஒருமொழியாய் அதன்முதலெழுத்துங் கடையெழுத்துங் கூட மற்றொருமொழியாய் இடையெழுத்துங் கடையெழுத்துங்கூட மற்றொருமொழியாய்ப் பொருள்வேறுபடப் பாடுவது. வரலாறு;—"மூன்றெழுத்துமெங்கோன் முதலீ றொருவள்ள—லேன்றுலகங் காப்ப திடைக

டையா—-மேன் றுரைப்பிற்—பூமாரி பெய்துலகம் போற்றிப் புகழ்ந் தேத்துங்—காமாரி காரிமா ரி.'' எனவரும்.

திரிபங்கியென்பது ஒருசெய்யுளுறுப்பமைந்து ஒருபொருள் பயந்ததனையே மூன்றாகப்பிரித்தெழுத வெவ்வேறே தொடையும் பயனிலையும் பொருளும் பயப்பப் பாடுவது. வரலாறு;—''ஆதரந்தீ ரன்னை போலினியாயம்பி காபதியே—மாதர்பங்காவன்னி சேர்ச டையாய்வம்பு நீண்முடியா—யேதமுய்ந்தோரின்னல் சூழ்வினைதீ ரெம்பி ரானினியா—ரோதுமொன்றே யுன்னுவா ரமுதே யும்பர் நாயகனே.''இதனையே ''ஆதரந்தீர்—மாதர்பங்கா-வேதமுய்ந்தோ—-ரோதுமொன்றே.'' எனவும், ''அன்னைபோலினியாய்—வன்னிசேர் சடையா —யின்னல்சூழ்வினைதீ—ருன்னுவாரமுதே.'' எனவும், ''அம்பிகாபதியே-வம்புநீண்முடியா--யெம்பிரானினியா—ரும்பர்நா யகனே.'' என்வும் மூன்றாகப்பிரித்து அவ்வாறாதல் கண்டுகொள்க.

பிறிதுபடுபாட்டென்பது ஒருசெய்யுளைத் தொடையும் அடியும் வேறுபட உரைப்பச் சொல்லும் பொருளும் வேறுபடாது வேறொ ருசெய்யுளாகப் பாடுவது. வரலாறு;—''தெரிவருங்காதலிற் சேர்ந் தோர்விழையும் பரிசுகொண்டு—வரியளிபாட மருவருவல்லி யிடை யுடைத்தாய்த்—திரிதருகாமர் மயிலியலாயநண் ணுத்தேமொழி— யரிவைதன்னேரெனலா மியற்றைய யாமாடிடமே.'' எனவரும் ஐஞ்சீர் நான்கடிக் கொச்சகக் கலித்துறையே ''தெரிவருங் காதலிற் சேர்ந்தோர் விழையும்—பரிசு கொண்டு வரியளி பாட—மருவரு வல்லியிடை யுடைத்தாய்த் திரிதருங்—காமர் மயிலிய லாய நண் ணுர்—தேமொழி யரிவைதன் னேரென—லாமியற் றைய யாமா டிடமே.'' என ஈற்றயலடி முச்சீராய் ஏனையடி நாற்சீராய் நேரிசை யாசிரியப்பாவாயினவாறு கண்டுகொள்க.

காதைகரப்பென்பது ஒருசெய்யுள் முடிய எழுதி அதன் ஈற் றுமொழியுள் முதலெழுத்துத் தொடங்கி ஓரோரெழுத்து இடை யிட்டு வாசிக்கப் பிறிதொருசெய்யுளாகப் பாடுவது. வரலாறு;— ''தாயேயா நோவவா வீரு வெமதுநீ—பின்னை வெருவா வருவதொ ரத்தப—வெம்புகல் வேறிருத்தி வைத்திசி னிச்சைகவர்—தாவா வருங்கலனீ யே.'' எனவரும். இதனுட் ''கருவார்கச்சித்—திருவே கம்பத்—தொருவாவென்னீ—மருவா நோயே.'' எனப் பிறிதொரு செய்யுட் போந்தவாறு கண்டுகொள்க.

கரந்துறைச்செய்யுளென்பது ஒருசெய்யுட்குப் பிறிதோர்செய் யுட் சொற் புகுதாது எழுத்துப்பொறுக்கிக்கொள்ளலாம்படி பாடு

வது. வரலாறு;—"அகலல்குற் றேரே யதர மமுதம்—பகர்தற் கரி திடையும் பார்க்கின்—முகமதிய—முத்தென்ன லாமுறுவன் மாதர் முழுநீல—மைத்தடங்கண் வெவ்வேறு வாள்." எனவரும். இத னுட் போந்தசெய்யுள்;—"அகர முதல வெழுத்தெல்லா மாதி—பக வன் முதற்றே யுலகு." எனக் காண்க.

சக்கரம் நான்காரச்சக்கரமும் ஆறாரச்சக்கரமும் எட்டாரச் சக்கரமுமென மூன்றுவகைப்படும். அவற்றுள் நான்காரச்சக்கரம் இரண்டுவகைப்படும். வரலாறு;—"மேரு சாபமு மேவுமே—மேவு மேயுண வாலமே—மேல வானவ னுயமே—மேய நானடி சாரு மே." இது குறட்டின் நடுவே மே என்னும் எழுத்து நின்று ஆரன் மேல் ஒவ்வோரெழுத்தாக நான்கெழுத்து நின்று சூட்டின்மேற் பன்னிரண்டு எழுத்துநின்று செய்யுண்முடிந்தவாறு காண்க. "மாத வா போதி வரதா வருளமலா—பாதமே யோது சுரரைநீ—தீத கல—மாயா நெறியளிப்பா யின்றன் பகலாச்சீர்த்—தாயே யலகில் லா டாம்." இதன் வேறுபாடும் அறிந்துகொள்க. ஆறாரச்சக்கரம் வருமாறு;-"தண்மலர்வில்லிதன் போரானதஞ்ச நமக்களித்த-கண் மலர்க்காவிக் கெதிராவனவென்று கையளந்த—பண்மலர்யாழ்ப யில்வா ரார்வுசேர்பதி நாகைமிக்க-தண்மையகத்துப் பதுமத்தமாதர் தடங்கண்களே." இஃது ஆரன்மேல் ஒன்பதொன்பதெழுத்தாய் நடுவு ரகரமாய்ச் சூழ்ந்த குறட்டிற் போதிவானவன் என்னும் பெயர் நின்று சூட்டின்மேல் இருபத்துநான்கெழுத்தாய் முற்றுப்பெற்றுச் செய்யுண்முடிந்தவாறுகாண்க. எட்டாரச்சக்கரம் வருமாறு;-"மலர் மலி சோலை யகனலங் கதிர்க்க—மடமயி லியற்றக மாதிரம் புதைத் து—வளைந்துபுகன் மேக வல்லிருண் மூழ்க—வரியளி துதைந்த கதுப்பினி தடைச்சி—மன்னுமா மடமொழி வடிவாள் வளவன்— கன்னித் துறைவன் கனகச் சிலம்பே." எனவரும். இது ஆரன் மேல் அவ்வாறெழுத்தாய் நடுவே ககரம் நின்று குறட்டின்மேல் அறமேதனமாவது என்னுஞ் சொன்னின்று சூட்டின்மேல் முப் பத்திரண்டெழுத்தாய் முற்றுப்பெற்றுச் செய்யுள் முடிந்தவாறு காண்க.

சுழிகுளமென்பது ஒருசெய்யுளை எவ்வெட்டெழுத்தாக நால டியும் நான்குவரியெழுதி மேனின்று கீழிழிந்துங் கீழ்நின்று மேலே றியும் முடிய உச்சரித்தாலும் அவ்வரி நான்குமேயாய் அச்செய்யுட் டானே முற்றுப்பெறுவது. வரலாறு;-"கவிமுதியார் பாவே—விலை யருமாநற்பா—முயல்வதுறுநர்—திருவழிந்துமாயா." எனவரும்.

சருப்பதோபத்திரமென்பது ஒருநிரை எவ்வெட்டாக அறுபத்துநான்கு அறைகீறி ஓரடி எவ்வெட்டெழுத்தாக நான்கடி யாஞெரு செய்யுட்பாடி அதனை மேனின்று கீழிழிய நான்கடியும் எழுதி அதனைக் கீழ்நின்று மேலேற நான்கடியும் எழுதி மேனின்று கீழிழியவுங் கீழ்நின்று மேலேறவும் விலங்கி முதல்தொடங்கி இறுதியாகவும் இறுதிதொடங்கிமுதலாகவும் மாலைமாற்ருகவும் நான்குமுகத்தாலும் வாசிக்க அச்செய்யுளேயாவது. வரலாறு;—"மாவாநீதா தாநீவாமா—வாயாவாமே மேவாயாவா—நீவாராமா மாராவாநீ—தாமேமாரா ராமாமேதா." எனவரும். இஃது அவ்வாறுதல் கண்டுகொள்க.

அக்கரச்சுதகமென்பது ஒருபொருள்பயப்பதோர் சொற்கூறி அச்சொல்லின் ஓரோரெழுத்தாக நீக்க வேறுவேறு பொருள் பயப்பது. வரலாறு;—"பொற்றூணின் வந்தசுடர் பொய்கை பயந்த வண்ணல்—சிற்ருயன் முன்வணிதை யாகி யளித்த செம்மல்—மற்றியார்கொ லென்னில் மலர்தூவி வணங்கி நாளுங்—கற்ருேர் பரவுங் கனகாரி நகாரி காரி." எனவரும்.

நிரோட்டகமென்பது இதழ்முயற்சியாற் பிறக்கும் மெய்யும் உயிரும் உயிர்மெய்யும் வாராமற்பாடுவது. வரலாறு;—"சீலத்தான் ஞானத்தாற் றேற்றத்தாற் சென்றகன்ற—காலத்தா ஞராத காதலான்—ஞாலத்தா—லிச்சிக்கச் சாலச் செறிந்தடியேற் கேயினிதாங்—கச்சிக்கச் சாலைக் கனி." எனவரும். இதனையுச்சரித்து அவ்வாறுதல் காண்க.

தன்னினமுடித்தலென்பதனுற் சதுரங்கவிகற்பமுந் தேர்க்கவி கடகபந்தம் முதலாயவற்றின் வேறுபாடுங் கொள்க. (எக)

சுகூக. பிரிபொருட் சொற்றொடர் மாறுபடு பொருண்மொ
மொழிந்தது மொழிவே கவர்படு பொருண்மொழி [ழி
நிரனிறை வழுவே சொல்வழு யதிவழுச்
செய்யுள் வழுவே சந்தி வழுவென
வெய்திய வொன்பதோ டிடனே காலங்
கலையே யுலக நியாய மாகம
மெனமலை விருமூன்றும் வரைந்தனர் புலவர்.

இது மேற்கூறிய அணிபெறுஞ் செய்யுட்குப் பொருந்தாத குற்றமாவன இவையென்று தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். பிரிபொருட்சொற்றொடரும் மாறுபட்டபொருண்மொழியும் மொழிந்ததுமொழிதலுங் கவர்படுபொருண்மொழியும் நிரனிறைவழுவுஞ் சொல்வழுவும் யதிவழுவுஞ் செய்யுள்வழுவுஞ் சந்திவழுவுமென்று சொல்லப்பட்ட வழு ஒன்பதனோடு இடமலைவுங் காலமலைவுங் கலைமலைவும் உலகமலைவும் நியாயமலைவும் ஆகமமலைவுமென்னும் மலைவு ஆறும் உள்ளிட்ட பதினைந்தும் அவ்வணிபெறுஞ் செய்யுட்கு ஆகாதென்று களைந்தனர் புலவர். எ - று.

ஒன்பதும் அறுமாகப் பிரித்தோதினர் முன்னரொன்பதும் பெரும்பான்மைகுற்றமாகச் சிறுபான்மை ஒரோவிடத்துக் குணமாதலும் பின்னராறும் ஒருதலையாகவே குற்றமாய்ப் புகழ்ச்சியிடத்தும் புனைந்துரையாகப் புணர்க்கவல்ல புலவராற் சிறுபான்மை மொழியப்படுதலுமாம் என்றற்கு. அஃதேல், இக்குற்றஞ் செய்யுளோக்கி வருவனவாகலின் செய்யுளியலுட் கூறாது ஈண்டுக்கூறியதென்னையெனின், நன்றுசொன்னாய்! செய்யுளென்பது சட்டகம்; அலங்காரமென்பன அச்சட்டகத்தைப் பொலிவுசெய்வனவாகலான் அச்செய்யுட்குப் பொலிவு உணர்த்திப் பொலிவழிவும் ஈண்டே கூறப்பட்டன. அன்றியும், பொருளைவிளக்குவது அணிக்கு இலக்கணமாகக்கூறி, மீட்டும் அப்பொருளுக்கு இடமாகிய செய்யுளை விளக்குவதும் அதற்கு இலக்கணமாகக் கூறினமையான் ஈண்டுக் கூறினரெனினும் அமையும். ஆதலான் அப்பொலிவிற்கு வழாநிலை தனித்தனியே எடுத்துக் கூறி அதன் ஒழிபாகிய வழுவும் வழுவமைதியுந் தொகுத்துக் கூறினரென்பதூஉமாயிற்று. (எஉ)

சாகூஉ. மேற்கோ ளேது வெடுத்துக்காட் டெனமூன்று
சாற்றுப வவற்றின் பாற்படு வழுநிலை
நிரம்ப வுணர்த்த வரம்பில வாகும்.

இது பிறன்கோட் கூறி மறுக்கின்றது.

இ - ள். மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டுமெனவும் மூன்று சொல்லுவர் ஆசிரியர். அவற்றின் பகுதிக்கண்ணவாய் வரும் வழுநிலையை ஈண்டு முற்ற உணர்த்த அளவின்றிப் பெருகும். எ-று.

எனவே, ஈண்டு அவற்றை உணர்த்திலமென மறுத்ததாயிற்று. அவை நியாயநூலாராய்ச்சியின்பாற் படுவனவாதலானும், மதங்கடோறும் வேறுபட்டு நிற்றலானும், இன்பத்தை உரைக்கும் வரையறையுடையதாய அணியிலக்கணத்திற் பிறிதுபடுதலானும் அவற்றை வேண்டிற்றிலமென்க. (எங)

௬௯௩. அவற்றுட்,
பிரிபொருட் சொற்றொடர் செய்யுண் முழுவது
மொருபொருள் பயவா தொரீஇத்தோன்று மதுவே
களிப்பினும் பித்தினுங் கடிவரை யின்றே.

இது நிறுத்தமுறையானே பிரிபொருட்சொற்றொடரும் அதன் அமைதியுங் கூறுகின்றது.

இ-ள். இதனுள் மேற்கூறிய பதினைந்தனுட் பிரிபொருட் சொற்றொடரென்று சொல்லப்படுவது ஒருசெய்யுளின்சொற்கள் முழுவதும் ஒருபொருளாக உரைக்கப்படாது பிரிந்துதோன்றவருவதாம். அதுதானே கள்ளுண்டு களித்தார் கூற்றின்கண்ணும் பித்தினான் மயங்கினார் கூற்றின்கண்ணும் வழுவெனநீக்கும் நிலைமையின்று. எ-று.

பிரிபொருட்சொற்றொடர், ஒன்றுப்பொருளுடைச்செய்யுள்.

வரலாறு;—“கொண்டன் மிசைமுழங்கக் கோபம் பரந்தனவாற்—றெண்டிரைநீ ரெல்லாந் திருமுனியே—யுண்டுமிழ்ந்தான்—வஞ்சியார் கோமான் வரவொழிக மற்றிவளோர்—பஞ்சியார் செஞ்சீறடி.” எனவும், “காம னுருவங் கரந்தோன்யான் காங்கேயன்—வீம னெதிரே விலங்குமே—தாமரைமேல்—மால்பொழிய வந்தாரருந்த மதுவுடனே—பால்பொழியு மிவ்வூர்ப் பனை.” எனவும் முறையே அவ்வாறுதல் கண்டுகொள்க. பித்தினான்மயங்கிக்கூறுதல் வந்துழிக் காண்க.

வரைவின்றென்னாது கடிவரையின்றென்றதனாற் பிள்ளைத் தன்மையான் மொழியினும் அமையும். அதுவும் வந்துழிக்காண்க.

அவற்றுளென்பதனை இப்பொருண்மையதிகாரம் முற்றுமளவும் உய்த்துரைக்க. (எ௪)

௬௯௪. மாறுபடு பொருண்மொழி முன்மொழிந் ததற்கு
மாறுபடத் தோன்றி வருமொழித் தாமது
காமமு மச்சமுங் கைம்மிகி னுரித்தே.

இதுவும் அது.

இ-ள். மாறுபடுபொருண்மொழியென்பது முன்மொழிந்த சொற்பொருளோடு மாறுபட்ட பொருடோன்றிய மொழியினையு

டைத்தாய்வரும். அதுவே காமங் கைம்மிகுந்தார் கூற்றின்கண்ணும் அச்சங் கைம்மிகுந்தார் கூற்றின்கண்ணும் வழுவாகாது அமைவுடைத்து. எ - று.

**வ**ரலாறு;—"மின்னார் மணிப்பைம்பூண் வேந்தே நினக்குலகி—லின்னா தவர்யாரு மின்மையா—லொன்னார்—குலமுழுதுங் கூற்றங் கொளவெகுண்டு நீயே—தலமுழுதுந் தாங்க றகும்." எனவும், "என்னோ டிகல்புரியப் பஞ்சவர்க ளஞ்சாரோ—மின்னனைய பாஞ்சா லியைவிடே—னன்னோ—மிகல்புரியுங் கூற்றனைய வீமனெதிர்நின்—றிகல்புரிய வாற்றுவலோ யான்." எனவும் முறையே காண்க. ஏனைய வந்துழிக்காண்க. (எ௫)

௬௬௫. மொழிந்தது மொழிதல் கூறியது கூறி
வேறுபட வொருபொருள் விளக்கா தாகும்
விரைவினுஞ் சிறப்பினும் வரைவின் றதுவே.

இதுவும் அது.

இ - ள். மொழிந்ததுமொழிதலென்பது முன்கூறியதனை மீட்டுங் கூறி அதனால் வேறுபட ஒருபொருளை விளக்காதாகும். அதுவே விரைவின்கண்ணுஞ் சிறப்பின்கண்ணுங் கடியப்படாது. எ-று.

**வ**ரலாறு;—"அங்க மிலாத வனங்க னமர்புரியும்—வெங்கணையுங் காக்குங்கொல் வேல்வேந்தே—தங்கோ—னிலையார்த் தொடைதந்தோ னேரிழைக்காய் முன்னோர்—மலையாற் கடல்கடைந்த மால்." எனவும், "ஒருவ ரொருவர் வடநாட் டரசர்—வருவர் வருவர்வர வஞ்சித்—தெருமந்து—தீத்தீத்தீ யென்றயர்வர் சென்னி படைவீரர்—போய்க்கலிங்கர் நாடழித்த போழ்து." எனவும் முறையே காண்க. ஏனையது வந்துழிக்காண்க. (எ௬)

௬௬௬. ஒருபொரு ணிய வுரைக்க வுறுசொல்
லிருபொருட் கியைவது கவர்படு பொருண்மொழி
வழுப்பட் லில்வழி வரைவின் றதுவே.

இதுவும் அது.

இ - ள். ஒருபொருளைத் தெரிவுற உணர்த்துதற்குப் பொருந்தியசொல் அதனை ஐயுறும்படி பலபொருள்மேலும் நிற்பது கவர்படுபொருண்மொழியாம். அதுவே வழுவில்லாத இடத்துப் பொதுப்பட உரைப்பினும் நீக்குதலின்று. எ - று.

வரலாறு;—"புயலே புறம்பொதிந்து பூந்தா தொழுக்கி—மய லே கடவுளர்க்கு வாய்த்துச்—செயலை—யெரிமருவு பூந்துணர்த் தாய் யாவருமூ டாடா—ரரிமருவுஞ் சோலை யகம்." எனவும், "வா னவர்க டாழ்ந்து பணிகேட்ப மாருகத்—தானவர்கள் சுற்றந் தடிந் தொடித்து—மேன்மை—யரியே யனைத்துலகுங் காக்குங் கடவு—ளெரியே மறையோர்க் கிறை." எனவும் முறையேகாண்க. (எஎ)

சூ௬எ. ஒருநிரல் முன்வைத் ததன்பின் வைக்கு
நிரனிறை பிறழ்வது நிரனிறை வழுவஃ
துய்த்துணர வருவழி யுடன்பா டுடைத்தே.

இதுவும் அது.

இ - ள். ஒருநிரல் முன்னெண்ணி வைத்து அதன்பின் வைக் கும் நிரல் மாறுபடவைப்பது நிரனிறைவழுவாம். அதுவே அந்நிர னிறை உய்த்துணரத்தோன்றுவதாயின் அமைவுடைத்து. எ - று.

வரலாறு;—"தெற்குங் குடக்கும் வடக்குங் குணக்குமே—நிற்குந் திறத்துலகை நீடளிக்கும்—பொற்பினா—ரீரெண் கலையோன் வருண னிரவியமன்—யாரும் புகழியல்பி னார்." எனவும், "குட பால் வடபால் குணபாறென் பாலென்—றடைவே திசைநான் கவற்று—ளிடையிரண்டு—நன்மைபுரி வோர்நயந்து நோக்குப வே னைய—வன்மை புரிவோர்க்கே யாம்." எனவும் முறையே காண்க.()

சூ௬அ. சொல்வழு வென்பது சொல்லிலக் கணத்தொடு
புல்லா வாகிப் புகர்படு மொழியது
வழக்கா றுயின் வரைவின் றாகும்.

இதுவும் அது.

இ - ள். சொல்வழுவென்று சொல்லப்படுவது சொல்லிலக்க ணத்தோடு மாறுபட்டு வழுவிவருஞ்சொற்களைப் புணர்ப்பதாம் அது வே உலகத்து அடிப்பட்டுவழங்குஞ் சொற்களாயின் வழுவென்று நீக்குதலின்று. எ - று.

வரலாறு;—"யாவகைய தாயார்க்கு மெந்தைக்கு மெங்க ளுக்கு—மாவி யவளே யனைவேமுங்—கோவே—நுனக்கபய மீந்த நுழைமருங்குன் மாதர்—தனக்கிடரொன் றில்லாமற் றுங்கு." என

வும், "யாவ ரறிவா ரிவரொருவ ரிக்குறிஞ்சிக்—காவலரோ விஞ் சையர்தங் காவலரோ—பாவா—யருமருந்தா ரன்ஞ ரகன்புனம் விட் டேகார்—தெருமரந் துழலுந் திறம்." எனவும் முறையே காண்க. (எகூ)

சூகூசு. யதிவழு வென்ப தோசை யறுவழி
நெறிபட வாரா நிலைமைய ததுவே
வகையுளி யாயின் வழுவின் றாகும்.

இதுவும் அது.

இ-ள். யதிவழுவென்று சொல்லப்படுவது ஓசைகொண்டு தளையறுக்குமிடத்து அறுத்தற்கரிதாய் வேறுபடவருந் தன்மைய தாம். அதுவே வகையுளியாகப் பிரித்துக் கூறுமிடத்துக் குற்றமில்லையாம். எ-று.

வரலாறு;—"மாடு பயிலும் வரையாளி மால்யானைக்—கோடு புய்த் துண்டுழலுங் கொள்கைத்தாங்--காடு—அரிதா மியல்பிற்றரை யிருட்கண் வாரல்—பெரிதாகு மைய பிழை." எனவும், "மேவி வாழ் வார்மே லருள்நீங்கா தாகுமலர்த்—தேவிநீங் காள்செம் பொற் றோளிணைகள்—கோவினனி—சென்னிவிடா மாலினடி வேலினுதி நீலநிறக்—கன்னிவிடா ளீகைவிடா கை." எனவும் முறையே காண்க. (அ0)

எ00. செய்யுள் வழுவே யாப்பிலக் கணத்தோ
டெய்த லில்லா வியல்பின ததுவே
யாரிடத் துள்ளு மவைபோல் பவற்றுளு
நேரு மென்மனுர் நெறியுணர்ந் தோரே.

இதுவும் அது.

இ-ள். செய்யுள்வழுவென்று சொல்லப்படுவது செய்யுளிலக்கணத்தோடு பொருந்தாத இயல்பினையுடைத்தாம். அதுவே ஆரிடத்துள்ளும் ஆரிடப்போலியுள்ளும் பொருந்துமென்று கூறுவர் இலக்கணங்களையறிந்தோர். எ-று.

ஆரிடமென்பன இருடிகளாற்சொல்லப்படுவன. அவற்றின் போலியாவன சாவவுங் கெடவும் வாழவும் பாடவும் மனத்தது பாடவும் வல்லாராற் பாடப்படுவன.

**வ**ரலாறு;—“ஆதரந் துயர்தர வயர்தருங் கொடிக்குப்—பூத லம் புகழ்புனை வளவன் ருதகி—தாங்கரும்பா லன்றித் தகையுமோ தாரணங்கன்—பூங்கரும்பால் வந்தடர்ந்த போர்.” எனவும், “ஏரி யிரண்டுஞ் சிறகா வெயில்வயிருக்—காருடைய பீலி கடிகாவா—வத்தியூர் வாயா வணிமயிலே போன்றதே—பொற்றேரான் கச்சிப் புறம்.” எனவும், “கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க—வொண்செங் குருதியு ளோஒ கிடப்பதே—கெண்டிக்—கெழுதகைமை யில்லேன் கிளர்ந்தூடிப் பண்ணு—எழுதகண் ணீர்துடைத்த கை.” எனவும் முறையேகாண்க. (அக)

எ0க. சந்தி வழூவே யெழுத்திலக் கணத்துச்
சந்தியொடு மருவாத் தன்மைய ததுவே
யிரண்டாம் வேற்றுமைக் கெதிர்மறுத்து வருமே.

இதுவும் அது.

இ - ள். சந்திவழூவென்று சொல்லப்படுவது எழுத்திலக்கணத்திற் கூறிய சந்தியோடு மாறுபட்ட இயல்பினையுடைத்தாம். அதுவே இரண்டாம்வேற்றுமைப்புணர்ச்சிக்கண் அவ்வாறு மாறுபட்டு வரும். எ - று.

**வ**ரலாறு;—“என்பூ டுருவ வினையேன் மனங்கலக்கும்—பொன்பூண் சுமந்த புணர்முலையாள்—மின்பூ—ணுடங்கிடைக்குக் காவலாய் நோக்கங் கவரும்—படங்கிடக்கு மல்குற் பரப்பு.” எனவும், “இரவி துணைத்தா ளிகல்வேந்தர் சென்னி—விரவு மலர்பொழியு மேவார்—வரைசிறிய—மின்பொழியுஞ் செவ்வேல் வெறியேன் மனங்கவரப்—பொன்பொழியுஞ் செங்கைப் புயல்.” எனவும் முறையே காண்க. (அஉ)

எ0உ. இடமலை யாறு நாடே யவற்றி
ஞென்றன் பொருள்பிறி தொன்றினுள வாகச்
சென்றிட வுரைப்ப திடமலை வென்ப.

நிறுத்தமுறையானே வழூவுஞ் சிறுபான்மை வழூவமைதியுங்கூறி எஞ்சிநின்ற மலைவாறனையுங் கூறுவான்புகுந்து அவற்றுள் இஃது இடமாவதின்னதென்பதூஉம் அதன் மலைவுங்கூறுகின்றது.

இ - ள். இடமென்றுசொல்லப்படுவது மலையும் ஆறும் நாடுமாம். அவற்றுள் ஒன்றற்குரியன பிறிதொன்றினுளவாகப் பொருந்த உரைப்பது இடமலைவென்று சொல்லுவர் புலவர். எ - று.

மலையென்பது இமயம் பொதியம் முதலாயின; யாறு, கங்கை காவிரி முதலாயின. நாடு, பதினெண்பாடைக்கும் உரிய நிலங்கள்.

வரலாறு;—"தென்மலையின் மான்மதமுஞ் சாமரையுங் காமருசீர்ப்—பொன்மலையிற் சந்தனமு மாரமும்—பன்முறையும்—பொன்னி வளநாடன் முன்றிற் பொதுளுமே—மன்னர் திறைகொணர வந்து." எனவும், "தண்பொருனைச் செங்கனக மாதங் கிரித்தரளம்—வண்கலிங்கர் தந்த வயப்புரவி—பண்பு—மருவும் யவனத்து மால்யானை சென்னி—பொருநர்க்கு வீசும் பொருள்." எனவும், மலையிடமலைவும் ஆற்றிடமலைவும் நாட்டிடமலைவும் முறையே காண்க.

மாதங்கிரியென்பது ஓராறு. (அ௩)

எ0௩. காலம் பொழுது பருவமென் றிவற்றி
ஞென்றற் குரியன வன்றி யொன்றற்
குரியன வாக வுரைப்பதகன் மலைவே.

இதுவும் அது.

இ - ள். காலமென்றுசொல்லப்படுவது சிறுபொழுதும் பெரும்பொழுதுமாம். அவற்றுள் ஒருகாலத்திற்கு உரிய பூவும் புள்ளுந் தொழிலும் பிறிதொருகாலத்திற்கு உளவாகக் கூறுவது காலமலைவாம். எ - று.

வரலாறு;—"செங்கமலம் வாய்குவியத் தேங்குமுதங் கண்மலர—வெங்குநெடு வான்மீ னிமைப்பப்—பொங்குதயத்—தோராழித் தேரோ னுகந்தான் மலர்ந்ததே—நீராழி சூழ்ந்த நிலம்." எனவரும் பொழுதின்மலைவுங், "காதலர் வாரார் களிக்கு மயிலகவத்—தாதவிழ் பூங்குருத்தின் றண்பனையின்—மீதே—தளவோ முகைநெகிழத் தண்கொன்றை பூப்ப—விளவேனில் வந்த திது." எனவரும் பருவமலைவும் முறையேகாண்க. (அச)

எ0ச. கலையெனப் படுமவை காண்டக விரிப்பிற்
காமமும் பொருளு மேமுறத் தழுவி

மறுவறக் கிளந்த வறுபத்து நான்கவை
மலைய வுரைப்பன் கலைமலை வாகும்.

இதுவும் அது.

இ - ள். கலையென்று சொல்லப்படுவனவற்றை விளங்க விரித்துரைக்குமிடத்து இன்பமும் பொருளும் பொருத்தமுறத் தழுவிக் குற்றமறச் சொல்லப்பட்ட அறுபத்துநான்குமாம்; அவை தம்முள் மயங்க உரைப்பன கலைமலைவாம். எ - று.

வரலாறு;—"ஐந்தா நரம்பாம் பகைவிரவா தாறுகி—வந்த கிளைகொள்ள நான்காய—முந்தை—யிணைகொண்ட யாழெழூஉ மேந்திழைதன் ஞவித்—துணைவன் புகழே தொடுத்து." இதனுள் நின்ற நரம்பிற்கு ஐந்தாவது கிளையாதலால் அதனைப் பகையென்றும் ஆருவது பகையாதலால் அதனைக் கிளையென்றும் நான்காவது நட்பாதலால் அதனை இணையென்றும் எட்டாவதன் பெயர்கொடுத்துச் சொன்னமையாற் கலைமலைவாயிற்று. (அரு)

எ0ரு. உலகெனப் படுவதீண் டொழுக்கின் மேற்றவ்
வொழுக்கநெறி பிறழ வுரைப்பததன் மலைவே.

இதுவும் அது.

இ - ள். உலகென்று சொல்லப்படுவது பலபொருள் உணர்த்துமேனும் ஈண்டு ஒழுக்கத்தின்மேலிடத்தாம்; அவ்வுலகத்தின் ஒழுக்கநெறியை மாறுபட உரைப்பது உலகமலைவாம். எ - று.

வரலாறு;—"அலைகட லேழுந்தூர்த் தந்தரத்தி னூடே—மலையனைய மால்யானை யோட்டிக்—கலவாரை—நீறுக்கி வையநெடுங்குடையின் கீழ்வைத்தான்—மாறுச்சீர் மாநிலத்தார் மன்." எனவரும். இதனுள் ஒருநில வேந்தனை ஏழுகடலுந் தூர்த்தானுகவும் ஆகாயத்தே தன்யானையை ஒட்டிப் பகைவரை வென்றானுகவும் உலகொழுக்கோடு மாறுபடக் கூறினமையான் உலகமலைவாயிற்று. (அசு)

எ0சு. நியாய மென்பது நெறியுறக் கிளப்பி
னளவையிற் றெளிக்கும் விளைபொருட் டிறமவை
மாறுபட வுரைப்ப ததன்மலை வென்ப.

இதுவும் அது.

இ - ள். நியாயமென்று சொல்லப்படுவது இலக்கணவகையாற் கூறுங்காற் காண்டல் முதலாகிய அளவைகளாற் தெளிவித்து உரைக்கப்படும் பொருள்களது முடிவின் கூறுபாடாம்; அவற்றை அவ்வவர் கூறியவாறு கூறாது மாறுபடக் கூறுவது அதன்மலை வென்று சொல்லுவர் புலவர். எ - று.

அளவைகளாற் தெளிவித்து உரைக்கப்படும் பொருள்களாவன அறுவகைப்பட்ட சமயங்களின் முடிவாகிய பொருள்களின் தோற்றமும் நிலையும் அழிவும் இன்னவகையவென்று கூறுதல்.

வரலாறு;—"ஆய பொருள்கள் கணந்தோ றழியுமெனத்—தூய வசோகின் முனியுரைத்த—தாய்வன்றே—காதலர்நீங்க வெழுங்காம வெங்கனல்வாய்—மாத ருயிர்தாங்கு மாறு." இதனுட் தோன்றும் பொருள்களெல்லாங் கணந்தோறும் அழியுமென்று போதியின்முனி உரைத்தானெனற்பாலதனை அசோகின்முனி உரைத்தானென்றமையான் நியாயமலைவாயிற்று. ஒழிந்தனவும் வந்துழிக் காண்க. (அஎ)

எoஎ. ஆகம மென்பது மனுமுத லாகி
யறனொடு புணர்ந்த திறனறி நூலவை
தம்மு ளுரைக்கு மொழுக்க நெறியி
னிழுக்க வுரைப்ப தாகம மலைவே.

இதுவும் அது.

இ - ள். ஆகமமென்று சொல்லப்படுவது மனுமுதலாக அறத்தோடுகூடிய திறங்களை அறியும் பதினெண்வகை நூல்களாம்; அந்நூல்களிற் கூறப்படும் அறநெறிகளை அம்முறைமையாற் கூறாது பிறழக்கூறுவது ஆகமமலைவாம். எ - று.

வரலாறு;—"தெய்வம் விருந்தொக்க றென்புலத்தார் தாமென்னு—மைவகையுந் தம்பொருள்கொண் டாற்றுவார்—மையிலா—முக்கோலுங் கற்றேய் முழுமடியுந் தாங்கியே—தக்கோ ரெனப்படுவார் தாம்." இதனுள் இல்லறத்தார்க்கு உரிய அறத்தைத் துறவறத்தார்க்கு உரியனவாகச் சொல்லுதலான் ஆகமமலைவாயிற்று. (அஅ)

எoஅ. கூறிய நெறியி னறுவகை மலைவு
நாடக வழக்கி னீட்டுதற் குரிய.

இது மேற்கூறிய மலைவு ஆறனையும் இன்னுழியாமென் கின்றது.

இ - ள். இடம் முதலாக ஆகமம் ஈறாக இங்ஙனங் கூறிய முறைமையான் வரும் அறுவகைமலைவும் நாடகவழக்கினிடத்துச் சொல்லுதற்கு உரியனவாம். எ - று.

ஈண்டு நாடகவழக்கென்றது இல்பொருளாய்ப் புகழ்ச்சியிடத் துப் புனைந்துரைவகையாற் கூறுதலாம்; எனவே, அவ்வாறு புகழ்ச் சியிடத்து நீக்கப்படா, அலங்காரமாயே வருமென்பதாம்.

அவைவருமாறு;—"மரகதச் சோதியுடன் மாணிக்கச் சோ தி—யிருமருங்குஞ் சேர்த்தரிவை யெம்மா—னுருவ—மலைக்கு மகில்சுமந் தாரத்து வான்கோ—டலைத்து வரும்பொன்னி யாறு." இதனுட் பிறநாட்டிற்கும் பிறமலைக்கும் உரிய மரகதமும் மாணிக்க மும் அகிலுஞ் சந்தனமுங் காவிரி அலைத்துவருமென்றமையான் இடமலைவாய்ப் புகழ்ச்சியிடத்து அலங்காரமாயிற்று. "மண்டபத்து மாணிக்கச் சோதியான் வாவிவாய்ப்—புண்டரிக மாலைப் பொழுதல ருந்—தண்டரளத்—தாமஞ் சொரியுந் தகைநிலவான் மெல்லாம் பற்—பூமலருங் காலைப் பொழுது." இதனுட் காலைமலருங் கமலம் மாலைமலர்வதாகவும் மாலைமலருங் குமுதங் காலைமலர்வதாகவுங் கூறினமையாற் காலமலைவாய்ப் புகழ்ச்சியிடத்து அலங்காரமா யிற்று. "வஞ்சியர்கோன் வஞ்சி மதவேழ வார்மதத்தால்—வெஞ்சு டர்சூழ் வேனில் வெயின்மறைப்ப—வஞ்சத்—தளவரும்பப் பூங் கொன்றைத் தண்கொம் பரும்பக்—களிமயில்க ளார்த்திலகுங் காடு." இதனுட் கார்க்கு உரியன வேனிற்குப் புணர்த்தமையாற் காலமலைவாய்ப் புகழ்ச்சியிடத்து அலங்காரமாயிற்று. "கூடம் விர விக் குறைநிலத்தா னத்தியன்ற—பாட லமிழ்தம் பருகினு—னாடு கின்ற—வூசலயற் றோன்றி யொளியிழைக்கு நாணழித்தா—னுசில் வடிவே லவன்." இதனுட் கூடமென்பது ஆறும் நரம்பாகிய பகை நரம்பு. அதனோடுகூடிக் குறைநிலத்தானத்து இயன்றதனைப் பாடல் அமிழ்தமெனக் கலைமலைவாய் ஊசலூர்ந்து ஆடிப்பாடுகின்ற தலைம களயற் றோன்றிய தலைமகனது தோற்றம் அவட்கு நாண்பயந்த மையாற் பாடல்பிறழ்ந்தும் அவற்கு இன்பம் பயத்தலாற் புகழ்ச்சி யிடத்து அலங்காரமாயிற்று. "கடனுன்கும் வந்தலைக்குங் காலா ளுந் தேரு—மடல்செய் திருதுணியா மன்றே—யுடலொன்றி— யந்தரமே யேகுவன் காண்மினோ யானியற்று—மிந்திர ஞால மிது." இதனுட் கலைமலைவாய்ப் பொருள்வந்து இந்திரஞாலமெ

னப் புகழ்ச்சியிடத்து அலங்காரமாயிற்று. இது சம்பிரதமெனினும் அமையும். "வானாகி மண்ணாய் மறிகடலாய் மாருதமாய்த்—தேனாகிப் பாலாந் திருமாலே—யானையர்—வெண்ணெய் விழுங்க நிறையுமோ மேலொருநாண்—மண்ணை யுமிழ்ந்த வயிறு." இதனுள் எல்லாப்பொருளுமாயினாயென்றும் வெண்ணெய்யை விழுங்கினாயென்றும் மண்ணை உமிழ்ந்தாயென்றும் நியாயமலைவாய்ப் புகழ்ச்சியிடத்து அலங்காரமாயிற்று. "காய்கதி ரோனுக்குக் கன்னனையீன்றுங்கன்னி—யாகியபின் மூவரையு மீன்றளித்த-தோகை—தலைமைசேர் கற்பினாற் றாள்வணங்கு முன்னாண்—மலையெடுத்துக் கார்காத்த மால்." இதனுட் கதிரோற்குக் கருணனைப் பயந்தபின்னருங் கன்னியாயினாளென்றும் பின்னர் மூவர்க்கும் மூவரைப் பயந்துங் கற்புடைமையால் மால்வணங்கினனென்றும் ஆகமமலைவாய்ப் புகழ்ச்சியிடத்து அலங்காரமாயிற்று எனவும் வரும். பிறவும் அன்ன.

இவையெல்லாம் புனைந்துரையாய் அலங்காரமாமாறு பொருட்டொடர்நிலைச் செய்யுளுட் கண்டுகொள்க. (அகூ)

எ0கூ. மெய்பெற விதித்த செய்யுட் டிறனு
மெய்திய நெறியு மீரைங் குணனு
மையெழு வகையி னறிவுறு மணியு
மடியினுஞ் சொல்லினு மெழுத்தினு மியன்று
முடிய வந்த மூவகை மடக்குங்
கோமூத் திரிமுதற் குன்றா மரபி
னேமுறக் கிளந்த மிறைக்கவி யிருபது
மிவ்வகை யியற்றுதல் குற்ற மிவ்வகை
யெய்த வியம்புத லியல்பென மொழிந்த
வைவகை முத்திறத் தாங்கவை யுளப்பட
மொழிந்த நெறியி னொழிந்தவுங் கோட
லான்ற காட்சிச் சான்றோர் கடனே.

இஃது இவ்வோத்துட் கூறிய இலக்கணங்களையெல்லாந் தொகுத்துப் பிறவாறு வருவனவுந் தழீஇக்கொள்கவெனப் புறனடை கூறுகின்றது.

இ - ள். பொருள்பெற எடுத்தோதப்பட்ட அணியிலக்கணங்களெல்லாந் தொகுத்துக் கூறுமிடத்து, முத்தகங் குளகந் தொகை தொடர்நிலையெனுஞ் செய்யுட்பகுதியும், அச்செய்யுட்கு வைத

ருப்பங் கௌடமெனப் பொருந்திய நெறியும், அவற்ளுெடு தொடர்ந்த செறிவு முதலாகச் சமாதி ஈருகச் சொல்லப்பட்ட குணங்கள் பத்துந், தன்மை முதலாகப் பாவிகம் ஈருகக் கிடந்த முப்பத்தைந்து அலங்காரமும், அடியினுனுஞ் சொல்லினுனும் எழுத்தினுனுங் கூறி முடிபுபெற வந்த மூவகை மடக்கலங்காரமுங், கோமூத்திரி முதலாகக் குறைபாடில்லாத இலக்கணத்திற் பிழைப்பின்றி வந்த மிறைக்கவியலங்காரம் இருபதும், இவ்வாறு கூறுதல் வழுவும் மலேவுமாமென்றும் அவற்றை இவ்வாறு பொருந்தக்கூறுதல் வழக்கென்றுஞ் சொல்லப்பட்ட பதினைந்து வேறுபாடும் உள்ளிட்டுக் கூறப்பட்டனவாம். இங்ஙனங் கூறிய நெறியிஞெழிந்து வருவனவற்றையுங் கொள்ளுதல் நிரம்பிய அறிவினையுடைய சான்ருேர்க்கு முறைமையாம். எ - று.

முற்கூறுவதாய எழுத்துமடக்கைப் பிற்கூறியதென்னையெனின், அடிமடக்குஞ் சொன்மடக்கும் எழுத்தின்கூட்டமென்பது அறிவித்தற்கும் ஓரெழுத்தானும் ஓரினத்தானும் வருவனவும் அப்பாற்படுமென்பது அறிவித்தற்குங் கோமூத்திரி முதலாகிய மிறைக்கவியும் ஆராயுங்காற் பெரும்பான்மையும் எழுத்தின்மடக்கின்பாற்படுமென்பது அறிவித்தற்குமெனக் கொள்க. முன்ஞேர்நூலுட் கோமூத்திரியும் மாலேமாற்றுஞ் சுழிகுளமுஞ் சருப்பதோபத்திரமுமாகிய நான்குமே மிறைக்கவியெனக் கூறப்படுதலான் இவர்மிறைக்கவி இருபதென்றல் மலேவாம்பிறவெனின், ஆகாது; ஒன்றின்முடித்தறன்னினமுடித்தலென்பதனுனும் "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்—திரிபுவே றுடையது புடைநூ லாகும்." என்பதனுனுமென்க. (கூ0)

மூன்ருவது அணியியல்முற்றிற்று.



## ச - வது செய்யுளியல்.

எக0. செய்யு ளென்பது தெரிவுறக் கிளப்பின்
முன்னர்க் கூறிய முறைமைத் தாகி
யெழுத்தசை சீர்தளே யடிதொடை யென்ற
மூவிரண் டுறுப்பு மேவரச் சிவணிப்
பாவு மினமு மெனவிரு பாற்றே.

என்பதுசூத்திரம். இவ்வோத்துச் செய்யுளது இயல்புணர்த்திற்ருகலாற் செய்யுளியலென்னும் பெயர்த்து. மேல் நிறுத்தமுறை

யானே அகத்திணையியலும் புறத்திணையியலும் அணியியலும் உணர்த்தி அங்ஙனம் உணர்த்திய பொருண்மையெல்லாவற்றிற்கும் இஃது இடமாதல்பற்றி அவற்றின்பிற் கூறினமையான் மேலோத்திேைனாடு இயைபுடைத்தாயிற்று. இதனுள் இத்தலைச்சூத்திரஞ் செய்யுட்குப் பொதுவிதியும் அஃது இத்துணையுறுப்பிற்றாய் இத்துணைத் தாமென்பதூஉங் கூறுகின்றது.

இ - ள். மேல் அகத்திணையோத்தினுட் "செய்யு ளிடவயிற் புல்லிய நெறித்தே." எனத் தோற்றுவாய்செய்த செய்யுளென்று சிறப்பித்துச் சொல்லப்படுவதனை விளங்கக் கூறுமிடத்து மேற் சொல்லோத்தினுட் "பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல-சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்—வல்லோ ரணிபெறச் செய்வது செய்யுள்." எனக் கூறிய இயல்பிற்றாகி எழுத்து முதலிய அறுவகையுறுப்பினையும் பொருத்தமுறத் தழுவிப் பாவும் பாவினமுமென இருபகுதியையுடைத்தாம். எ - று.

'மூவிரண்டுறுப்புமேவரச்சிவணி' எனவே மேவரச்சிவணாதனவும் உளவென்பதூஉம் பெற்றாம். அவை எழுத்தோத்தினுட் கூறிய மாத்திரைவகையும் அகத்தோத்தினுட்கூறிய திணை முதலிய பன்னிருவகையும் இவ்வோத்துட் கூறப்படும் வண்ணமும் அம்மை முதலிய வனப்பெட்டும் அவைபோல்வன பிறவுமாமென்று உணர்க. (க)

எகக. எழுதப் படுதலி னெழுத்தே யவ்வெழுத்
தசைத்திசை கோடலி னசையே யசையியைந்து
சீர்கொள நிற்றலிற் சீரே சீரிரண்டு
தட்டு நிற்றலிற் றளையே யத்தளை
யடுத்து நடத்தலி னடியே யடியிரண்டு
தொடுத்துமன் சேறலிற் றொடையே யத்தொடை
பாவி நடத்தலிற் பாவே பாவொத்
தினமாய் வழங்கலி னினமெனப் படுமே.

இது மேற்கூறிய எழுத்து முதலிய எட்டற்குங் காரணக்குறி கூறுமுகத்தாற் பொது இலக்கணமும் அவற்றின் கிடக்கை முறைமையுங் கூறுகின்றது.

இதற்குப்பொருள் கூறுகின்றிலம்; பெரும்பான்மையுஞ் சூத்திரத்தானே பொருள் விளங்கக்கிடத்தலின்.

மன்னென்றமிகையானே ஓரடிக்கண்ணவாகிய தொடைவி கற்பமுங் கொள்க. (உ)

எகஉ. அவற்றுள்,
எழுத்துமேற் கிளந்த வியல்பிற் ருகும்.

இது நிறுத்தமுறையானே எழுத்தாமாறு மாட்டேற்ருன் எய் துவிக்கின்றது.

இ - ள். மேற்கூறிய செய்யுளுறுப்பு ஆறனுள் முதலுறுப்பா கிய எழுத்து மேல் எழுத்தோத்தினுட் கூறிப்போந்த இயல்பினையு டைத்தாம். எ - று.

மேற்கூறிப்போந்த இயல்பென்னையெனின், அகரம் முதல் ஔகாரம் இறுவாய் பன்னீரெழுத்தினையும் உயிரென்றும், அவற் றுள் அ இ உ எ ஒ என்னும் ஐந்தினையும் ஓரளபிசைக்குங் குற்றெ ழுத்தென்றும், ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்னும் ஏழனையும் ஈரளபி சைக்கும் நெட்டெழுத்தென்றுங், ககரம் முதல் னகரம் இறுவாய் பதினெண்ணெழுத்தினையும் அரையளபிசைக்கும் மெய்யென்றும், அவற்றுட் க ச ட த ப ற என்னும் ஆறனையும் வல்லெழுத்தென் றும், ங ஞ ண ந ம ன என்னும் ஆறனையும் மெல்லெழுத்தென்றும், ய ர ல வ ழ ள என்னும் ஆறனையும் இடையெழுத்தென்றும், நாகி யாது எஃகியாது வரகியாது கொக்கியாது குரங்கியாது தெள்கியாது என யகரம்வரக் குற்றுகரங்கெட்டு ஆண்டுத் தோன்றும் இகரமுங் கேண்மியா சென்மியா என்னும் உரையசையிடைச்சொல்லிகரமுந் தன் அளவிற் சுருங்கி அரையளபிசைக்கும் புணர்மொழிக்குற்றியலி கரமும் ஒருமொழிக்குற்றியலிகரமு மென்றும், நாகு எஃகு வரகு கொக்கு குரங்கு தெள்கு என ஈரெழுத்தொருமொழியிறுதிக்கண் ணும் ஐவகைத் தொடர்மொழியிறுதிக்கண்ணும் நின்ற வல்லெழுத் தையூர்ந்துவரும் உகரந் தன் அளவிற் சுருங்கிஅரையளபிசைக்குங் குற்றுகரமென்றும், எஃகு கஃசு கஃடு கஃது கஃபு கஃறு எனக் குற்றெழுத்தின்முன்னர்த்தாய் உயிரோடுகூடிய வல்லெழுத்தாறன் மிசைத்தாய ஆய்தம் அரையளபிசைத்துவரும் ஆய்தவெழுத்தென் றும், அகரம் முதலிய உயிருங் ககரம் முதலியமெய்யுங் கூடி ஓரள பும் ஈரளபுமாயே ஒலிக்கும் பன்னிருபதினெட்டு இருநூற்றொரு பத்தாறனையும் உயிர்மெய்யென்றும், வாஅகை ஈஇகை ஊஉகம் பேஎகன் தைஇயல் தோஒரை மௌவல் எனவும் "இலாஅஅர்க்கில் லதமர்" எனவும் நெட்டெழுத்தேழுந் தமக்கினமொத்தகுற்றெழுத்

துக்களோடும் இகரவுகரங்களோடுங் கூடி மூன்றுமாத்திரையும் ஒ ரோவழி நான்குமாத்திரையுமாய் மொழிமுதலிடைகடையென்னும் மூன்றிடத்தும் அளபெடுக்கும் உயிரளபெடை ஏழென்றும், அரங்ங் கம் முரஞ்ஞ்சு முரண்ண்டு பருந்ந்து அரும்ம்பு முரன்ன்று குரவ்வ் வை அரைய்ய்யர் குரல்ல்கள் திரள்ள்கள் வரஃஃகு எனக் குறிலி ணைக்கீழும் மங்ங்கலம் மஞ்ஞ்சு மண்ண்ணு பந்ந்து அம்ம்பு மின்ன் னு தெவ்வ்வர் வெய்ய்யர் செல்ல்க கொள்ள்க எஃஃகு எனக் குறிற் கீழும் ஙஞணநமனவயலளவாய்தமென்னும் பதினேரொற்றுந் தம் மொடு தாஞ்சார்ந்து ஒருமாத்திரையாய் மொழியிடைகடையென் னும் இரண்டிடத்தும் அளபெடுக்கும் ஒற்றளபெடை பதினென் றென்றும், ஐப்பசி இடையன் திணை எனவும் ஔவை எனவும் தம்மைச்சுட்டுதற்கண்ணும் அளபெடுத்தற்கண்ணும் அல்லாதவழி வந்த ஐகார ஔகாரங்கள் முறையே முதலிடைகடையென்னும் மூன்றிடத்தும் மொழிமுதற்கண்ணுந் தம் அளவிற் சுருங்கி ஓரளபி சைக்கும் ஐகார ஔகாரக் குறுக்கங்களென்றும், போன்ம் மருண்ம் வாழும்வளவன் என லகரளகரங்கள் திரிந்த னகரணகரங்களின் முன்னும் வருமொழிவகாரமிசையும் நின்ற மகரந் தன் அளவிற் சுருங்கிக் கால்மாத்திரையாயிசைக்கும் மகரக்குறுக்கமாமென்றுங் கூறியவாறும் என்க. (ந)

எகரு. நேர்நிரை யெனவசை யோரிரண் டாகும்.

இது நிறுத்தமுறையானே அசைவகை இத்துணைத்தென் கின்றது.

இ - ள். நேரசையென்றும் நிரையசையென்றும் மேற்கூறிய அசை இரண்டுவகையினையுடைத்தாம். எ - று.

எகச. நெடிலுங் குறிலுந் தனித்துமொற் றடுத்து
நடைபெறு நேரசை நான்கு நீங்காக்
குறிலிணை குறினெடிற் றனித்துமொற் றடுத்து
நெறிவரு நிரையசை நான்கு மாகும்.

இது முற்கூறிய அசைகளாமாறும் அவற்றதெண்ணுங் கூறு கின்றது.

இ - ள். நெட்டெழுத்துத் தனித்துங் குற்றெழுத்துத் தனித் தும் நெட்டெழுத்தொற்றடுத்துங் குற்றெழுத்தொற்றடுத்தும் நடத் தலைப்பெறும் நேரசை நான்கும், விட்டிசையாது குறிலிரண்டுதனித்

துங் குறினெடிலிரண்டுதெனித்துங் குறிலிரண்டொற்றடுத்துங் குறினெடிலிரண்டொற்றடுத்தும் முறையானே வரும் நிரையசை நான்குமாம். எ - று.

**வ**ழக்கின்கண் நேரசை நான்கிற்கும் உதாரணம். ஆ ழி வெள் வேல் எனவும், நிரையசை நான்கிற்கும் உதாரணம் வெறி சுறா நிறம் விளாம் எனவும், செய்யுட்கண் நேரசைநான்கிற்கும் உதாரணம் "போது சாந்தம் பொற்ப வேந்தி—யாதி நாதற் சேர்வோர்—சோதி வானந் துன்னு வோரே." எனவும், நிரையசைநான்கிற்கும் உதாரணம் "அணிநிழ லசோகமர்ந் தருணெறி நடாத்திய—மணிதிகழ் விரொளி வரதனைப்—பணிபவர் பவநணி பரிசறுப் பவரே." எனவும் வரும். "தனிநிலை யொற்றிவை தாமல கிலவே—யளபெடை யல்லாக் காலை யான." என்பவாகலின் நேரசை ஓரலகும் நிரையசை இரண்டலகும் பெறுமென்பதூஉம் பெற்றாம். (ரு)

எகரு. இயற்சீ ருரிச்சீர் பொதுச்சீ ரென்று
மயக்கற வகுத்த சீர்மூன் றாகும்.

இது நிறுத்தமுறையானே சீர்வகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். இயற்சீரும் உரிச்சீரும் பொதுச்சீருமென்று ஐயமற வகுக்கப்பட்ட சீர் மூன்றுவகைப்படும். எ - று. (சா)

எகசா. ஈரசை கூடிய சீரியற் சீரஃ
தீரிரண் டாமவை யகவற் கிசைதலு
மூவசை கூடிய சீருரிச் சீரது
நாலிரண் டாகி நடைபெறு மவற்று
ணேரிறு நான்கும் வெள்ளை யல்லன
பாவினுள் வஞ்சியின் பாற்பட் டிடுதலும்
நாலசை யானு மோரசை யானுஞ்
சீர்பெற நடப்பது பொதுச்சீ ராங்க
தெண்ணிரண் டிரண்டா யியறலு நெறியே.

இது முற்கூறிய சீர்களாமாறும் அவற்றெண்ணும் அவை செய்யுட்கு உரியவாமாறுங் கூறுகின்றது.

இ - ள். இரண்டு அசையான் வருஞ்சீர் இயற்சீரெனப்படும், அது நேர்நேராயும் நிரைநேராயும் நிரைநிரையாயும் நேர்நிரையாயுந் தம்மிற்கூடி நான்காம், அங்ஙனம் ஆகிய நான்குசீரும் ஆசிரியவுரிச்சீ

ராதலும்; மூவசையான் வருஞ்சீர் உரிச்சீரெனப்படும், அது நேர்நேர்நேராயும் நிரைநேர்நேராயும் நிரைநிரைநேராயும் நேர்நிரைநேராயும் நேர்நேர்நிரையாயும் நிரைநேர்நிரையாயும் நிரைநிரைநிரையாயும் நேர்நிரைநிரையாயும் தம்மிற்கூடி எட்டாகிநடக்கும், அவ்வெட்டனுள் நேரீற்றுரிச்சீர் நான்கும் வெண்பாவுரிச்சீராதலும் நிரையீற்றுரிச்சீர் நான்கும் வஞ்சியுரிச்சீராதலும்; நாலசையானும் ஓரசையானுஞ் சீராந்தன்மைதோன்ற நடப்பது பொதுச்சீரெனப்படும், அது நேர்நேர்நேர்நேராயும் நிரைநேர்நேர்நேராயும் நிரைநிரைநேர்நேராயும் நேர்நிரைநேர்நேராயும் நேர்நேர்நிரைநேராயும் நிரைநேர்நிரைநேராயும் நிரைநிரைநிரைநேராயும் நேர்நிரைநிரைநேராயும் நேர்நேர்நேர்நிரையாயும் நிரைநேர்நேர்நிரையாயும் நிரைநிரைநேர்நிரையாயும் நேர்நிரைநேர்நிரையாயும் நேர்நேர்நிரைநிரையாயும் நிரைநேர்நிரைநிரையாயும் நிரைநிரைநிரைநிரையாயும் நேர்நிரைநிரைநிரையாயும் தம்மிற்கூடிப் பதினறுசீராய்நடத்தலும் நேராயும் நிரையாயும் இரண்டுசீராய்நடத்தலும் முறை. எ - று.

சீர்பெறவென்ற மிகையானே வெண்பாவினுள் நாலசைச்சீர் வாரா, ஆசிரியத்துள்ளுங் குற்றுகரம்வந்துழியன்றி வாரா, கலியுள்ளும் பெரும்பான்மையுங் குற்றுகரம்வந்துழியன்றி வாரா, வஞ்சியுட் குற்றுகரம்வாராதேயும் வரப்பெறும், வஞ்சியுள் இரண்டு நாலசைச்சீர் ஓரடியுள் அருகிக் கண்ணுற்று நிற்கவும்பெறும், அல்லனவற்றுட் பெரும்பான்மையும் ஓரடியுள் ஒன்றன்றி வாரா, இரண்டுவரினுங் கண்ணுற்றுநில்லா, பாவின்றுணைப் பாவினத்துள்ளும் பயின்றுவாரா, நிரையீற்றுப் பொதுச்சீரெட்டும் வஞ்சியுளல்லது வாராவெனவுங் கொள்க. ஈரசைச்சீர் எல்லாச்செய்யுளுள்ளும் பயின்று இனிதுநடத்தலின் இயற்சீரென்றும், மூவசைச்சீர் எல்லாச்செய்யுளுள்ளும் வருமெனினும் வெண்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்கும் உரிமைபூண்டுநிற்றலின் உரிச்சீரென்றும், ஏனைய பொதுவாய்நிற்றலிற் பொதுச்சீரென்றும் ஆயின.

**வ**ழக்கின்கண் ஆசிரியவுரிச்சீர்க்கு உதாரணம் தேமா புளிமா கருவிளம் கூவிளம் எனவும், வெண்பாவுரிச்சீர்க்கு உதாரணம் தேமாங்காய் புளிமாங்காய் கருவிளங்காய் கூவிளங்காய் எனவும், வஞ்சியுரிச்சீர்க்கு உதாரணம் தேமாங்கனி புளிமாங்கனி கருவிளங்கனி கூவிளங்கனி எனவும், நாலசைச்சீர்க்கு உதாரணம் தேமாந்தண்பூ புளிமாந்தண்பூ கருவிளந்தண்பூ கூவிளந்தண்பூ தேமாநறும்பூ புளிமாநறும்பூ கருவிளநறும்பூ கூவிளநறும்பூ தேமாந்தண்ணிழல் புளிமாந்தண்ணிழல் கருவிளந்தண்ணிழல் கூவிளந்தண்ணி

ழல் தேமாநறுநிழல் புளிமாநறுநிழல் கருவிளநறுநிழல் கூவிளநறு நிழல் எனவும், ஓரசைச்சீர்க்கு உதாரணம் நாள் மலர் எனவும், செய்யுட்கண் ஆசிரியவுரிச்சீர்க்கு உதாரணம் "குன்றக் குறவன் காதன் மடமகள்—வரையர மகளிர் புரையுஞ் சாயல—ளைய ளரும்பிய முலையள்—செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே." எனவும், வெண்பாவுரிச்சீர்க்கு உதாரணம் "பொன்னார மார்பிற் புனைகழற் காற் கிள்ளிபே—ருன்னேனென் றாழுலக்கைபற்றினேற்—கென் னே—மனனொடு வாயெல்லா மல்குநீர்க் கோழிப்—புனனாடன் பேரே வரும்." எனவும், வஞ்சியுரிச்சீர்க்கு உதாரணம் "பூந்தாமரைப் போதலமரத்—தேம்புனலிடை மீன்றிரிதரும்—வளவயலிடைக் களவயின்மகிழ்—வினைக்கம்பலை மனைச்சிலம்பவு—மனைச்சிலம்பிய மணமுரசொலி—வயற்கம்பலைக் கயலார்ப்பவு—நாளு, மகிழு மகிழ் தூஉங் கூரன்—புகழ்த லானாப் பெருவண் மையனே." எனவும், நாலசைச்சீர்க்கு உதாரணம் "அங்கண்வானத் தமரரசரும்—வெங்களியானை வேல்வேந்தரும்—வடிவார்கூந்தன் மங்கையருங்—கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்சச்—சிங்கஞ்சுமந்த மணியணைமிசைக்—கொங்கவிரசோகின் குளிர்நிழற்கீழ்ச்—செழுநீர்ப்பவளத் திரள்காம்பின்—முழுமதிபுரையு முக்குடைநீழல்—வெங்கண்வினைப்பகை விளிவெய்தப்—பொன்புனைநெடுமதில் புடைவளைப்ப—வனந்தசதுட்டய மவையெய்த—னனந்தலையுலகுட னவைநீங்க—மந்தமாருத மருங்கசைப்ப—வந்தரதுந்துபி நின்றியம்ப—விலங்குசாமரை யெழுந்தலமர—நலங்கிளர்பூமழை நணிசொரிதர—வினிதிருந், தருணெறி நடாத்திய வாதிதன்—திருவடி பரவுதுஞ் சித்திபெறற் பொருட்டே." எனவும், ஓரசைச்சீர்க்கு உதாரணம் "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி—வாலெயி றூறிய நீர்." எனவும், "நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்—நெஞ்சத் தவல மிலர்." எனவும் வரும். பிறவும் அன்ன. (எ)

எகஎ. தன்சீர் தனதோ டொன்றலு முறழ்தலு
மென்றிரண் டாகு மியம்பிய தளையே.

இது நிறுத்தமுறையானே தளைவகை இத்துணைத்தென்கின்றது.

இ-ள். தன்சீரிறுதி தன்வருஞ்சீர்முதலசையோடு ஒன்றுதலும் ஒன்றாமையுமென இருவகைப்படும் மேற்கூறிய தளை. எ-று.

எகஅ. நேர்நே ரொன்ற னிரைநிரை யொன்றலென்
றாயிரு தளையு மகவற் கிசைதலும்

வெண்சீ ரொன்ற லியற்சீர் விகற்பமென்
றவ்விரு தளையும் வெள்ளைக் கமைதலு
நிரையீற் றுரிச்சீ ரொன்றலு முறழ்தலும்
வரையாது வருதல் வஞ்சிக்கு வருதலும்
வெண்சீர் விகற்பங் கலித்தளை யாதலும்
பண்பினின் வழாஅப் பாங்கின வென்ப.

இது முற்கூறிய தளைகளாமாறும் அவற்றதெண்ணும் அவை செய்யுட்கு உரியவாமாறுங் கூறுகின்றது.

(இ) - ள். நேரீற்றியற்சீர்முன் நேர்வந்தொன்றுவதாகிய நேரொன்றாசிரியத்தளையும் நிரையீற்றியற்சீர் முன் னிரைவந்தொன்றுவதாகிய நிரையொன்றாசிரியத்தளையுமென அவ்விரண்டுதளையும் ஆசிரியப்பாவுக்கு உரித்தாதலும், வெண்பாவுரிச்சீர்முன் நேர்வந்தொன்றுவதாகிய வெண்சீர்வெண்டளையும் நேரீற்றியற்சீர்முன் நிரையும் நிரையீற்றியற்சீர்முன் நேரும் வந்து உறழ்தலாகிய இயற்சீர்வெண்டளையுமென அவ்விரண்டுதளையும் வெண்பாவிற்கு உரியவாதலும், நிரையீற்றுரிர்ச்சீர்முன் நிரைவந்தொன்றுதலாகிய ஒன்றியவஞ்சித்தளையும் நேர்வந்து உறழ்தலாகிய ஒன்றாதவஞ்சித்தளையுங் கடியப்படாதுவருதல் வஞ்சிப்பாவிற்கு உரியவாதலும், வெண்சீர்முன் நிரைவந்து விகற்பித்தல் கலித்தளைக்கு உரித்தாதலுந் தத்தம் இயல்பினின்றுந் தவறாதமுறையான் வருமென்றுகூறுவர் ஆசிரியர். எ-று.

'பண்பினின்வழாஅ' என்ற மிகையானே, தன்சீரோடு வேற்றுச்சீர் ஒன்றியும் ஒன்றாதும் வருவனவுஞ் சிறப்பிலவேனுந் தந்தளையாமெனவும், நேரீற்றுப்பொதுச்சீரெட்டும் நேரீற்றுரிச்சீர் போலக் கொண்டு வருஞ்சீர் முதலசையோடு ஒன்றியது வெண்சீர் வெண்டளையாகவும் ஒன்றாதது கலித்தளையாகவும் வழங்கப்படுமென்றும், நிரையீற்றுப்பொதுச்சீரெட்டும் நிரையீற்றுரிச்சீர்போலக் கொண்டு வருஞ்சீர் முதலசையோடு ஒன்றினும் ஒன்றாதுவிடினும் வஞ்சித்தளையாகவும் வழங்கப்படுமென்றும், ஓரசைச்சீர் இயற்சீரே போலக் கொண்டு வருஞ்சீர் முதலசையோடு நேராயொன்றியது நேரொன்றாசிரியத்தளையாகவும் நிரையாயொன்றியது நிரையொன்றாசிரியத்தளையாகவும் ஒன்றாதது இயற்சீர்வெண்டளையாகவும் வழங்கப்படுமெனவுங் கொள்க.

நேரொன்றாசிரியத்தளையான் வந்த செய்யுள்;—"உள்ளார் கொல்லோ தோழி முள்ளுடை—யலங்குகுலை யீந்தின் சிலம்பி

பொதி செங்காய்—துகில்பொதி பவள மேய்க்கு—மகில்படு கள்ளி யங் காடிறந் தோரே." எனவும், நிரையொன்றாசிரியத்தளையான் வந்த செய்யுள்;—"திருமழை தலைஇய விருணிற விசும்பின்—விண் ணதி ரிமிழிசை கடுப்பப்—பண்ணமைமங் தவர்தேர் சென்ற வாறே." எனவும், வெண்சீர்வெண்டளையானும் இயற்சீர்வெண்டளையானும் வந்த செய்யுள்; "சிலைவிலங்கு நீள்புருவஞ் சென்றொசிய நோக்கி—முலைவிலங்கிற் றென்று முனிவாண்—மலைவிலங்கு—தார்மாலை மார்ப தனிமை பொறுக்குமோ—கார்மாலை கண்கூடும் போழ்து." எனவும், ஒன்றியவஞ்சித்தளையானும் ஒன்றாதவஞ்சித்தளையானும் வந்த செய்யுள்;—"மந்தாநிலம் வந்தசைப்ப—வெண்சாமரை புடை பெயர்தரச்—செந்தாமரை நாண்மலர்மிசை—யெனவாங், கினிதி னொதுங்கிய விறைவனை—மனமொழி மெய்களின் வணங்குது மகிழ்ந்தே." எனவும், கலித்தளையான்வந்த செய்யுள்;—"செல்வப் போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி—முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போ—யெல்லைநீர் வியன்கொ ண்மூவிடைநுழையு மதியம்போன்—மல்லலோங் கெழில்யானை மரு மம்பாய்ந் தொளித்ததே." எனவும், நாலசைச்சீர் உரிச்சீரேபோலத் தளைவகையெய்திய செய்யுள்;—"அங்கண்வானத் தமரரசரும்—வெங்களியானை வேல்வேந்தரும்—வடிவார்கூந்தன் மங்கையருங்-கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்சச்—சிங்கஞ்சுமந்த மணியணைமி சைக்—கொங்கவிரசோகின் குளிர்நிழற்கீழ்ச்—செழுநீர்ப்பவளத் திரள்காம்பின்—முழுமதிபுரைய முக்குடைநீழல்—வெங்கண்வி னைப்பகை விளிவெய்தப்—பொன்புனைநெடுமதில் புடைவளைப்ப—வனந்தசதுட்டய மவையெய்த—நனந்தலையுலகுட னவைநீங்க—மந்தமாருத மருங்கசைப்ப—வந்தரதுந்துபி நின்றியம்ப—விலங்கு சாமரை யெழுந்தலமர—நலங்கிளர்பூமழை நனிசொரிதர—வினிதி ருந், தருணெறி நடாத்திய வாதிதன்—திருவடி பரவுதுஞ் சித்திபெ றற் பொருட்டே." எனவும், நிரையசைச்சீர் இயற்சீரேபோலநின்று வருஞ்சீர் முதலசையோடு ஒன்றாமையின் இயற்சீர்வெண்டளையா யும் நேரசைச்சீர் இயற்சீரேபோலநின்று வருஞ்சீர் முதலசையோடு ஒன்றினமையின் ஆசிரியத்தளையாயும் வந்த செய்யுள்;—"உரிமை யின்கண் ணின்மையா—லரிமதர் மழைக் கண்ணாள்—செருமதி செய் தீமையாற்—பெரும கொன்ற வென்பவே." எனவும் வரும். பிறவும் அன்ன. (அ)

எகக. குறளடி சிந்தடி யளவடி நெடிலடி
கழிநெடி லடியென வடியைந் தாகும்.

இது நிறுத்தமுறையானே அடிவகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். குறளடியுஞ் சிந்தடியும் அளவடியும் நெடிலடியுங் கழிநெடிலடியுமென முற்கூறிய அடி ஐந்துவகைப்படும். எ - று. ()

எ௨0. குறளொரு பந்த மிருதளை சிந்தா
முத்தளை யளவடி நாற்றளை நெடிலடி
யைந்தளை முதலா வெழுதளை காறும்
வந்தவும் பிறவுங் கழிநெடி லென்ப.

இது முற்கூறிய அடிகளாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒருதளையான் வந்த அடியினைக் குறளடியென்றும், இருதளையான்வந்த அடியினைச் சிந்தடியென்றும், முத்தளையான் வந்த அடியினை அளவடியென்றும், நாற்றளையான் வந்த அடியினை நெடிலடியென்றும், ஐந்தளையான் வந்த அடியினையும் அறுதளை யான் வந்த அடியினையும் எழுதளையான்வந்த அடியினையும் இவற் றின்மிக்கதளையான் வந்த சிறப்பிலடியினையுங் கழிநெடிலடியென் றுங் கூறுவர் ஆசிரியர். எ - று.

"இரண்டு முதலா வெட்ட ளகத்—திரண்ட சீரா னடிமுடி வுடைய—விறந்தன வந்து நிறைந்தடி முடியினுஞ்—சிறந்த வல்ல செய்யு ளுள்ளே." என்றார் பிறருமெனக் கொள்க.

குறளடியான் வந்த செய்யுள்;—"திரைத்த சாலிகை—நிரைத்த போனிரைந்—திரைப்ப தேன்களே—விரைக்கொண் மாலையாய்." எனவும், சிந்தடியான் வந்த செய்யுள்;—"இருது வேற்று மை யின்மையாற்—சுருதி மேற்றுறக் கத்திஞே—டரிது வேற்று மை யாகவே—கருது வேற்றடக் கையிஞய்." எனவும், அளவடி யான் வந்த செய்யுள்;—"தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா—மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியு—மாம்பழக் கனிகளு மதுத் தண் டீட்டமுந்—தாம்பழுத் துளசில தவள மாடமே." எனவும், நெடிலடியான் வந்த செய்யுள்;—"வென்றான் வினையின் ருெகை யாகி விரிந்து தன்க—ணொன்றாய்ப் பரந்த வுணர்வின்ஞெழி யாது முற்றுஞ்—சென்றான் றிகழுஞ் சுடர்சூழொளி மூர்த்தி யாகி—நின்றா னடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்றார்." எனவும், ஐந்த ளையான் வந்த கழிநெடிலடிக்குச் செய்யுள்;—"இரைக்கு மஞ்சி றைப் பறவைக ளெனப்பெயர்ந் தினவண்டு புடைசூழ—நுரைக்க

ளென்னுமக் குழம்புக டிகழ்ந்தெழ நுடங்கிய விலையத்தாற்—றி ரைக் கரங்களிற் செழுமலைச் சந்தனத் திரள்களைக் கரைமேல் வைத்—தரைக்கு மற்றிது குணகடற் றிரையொடும் பொருதல தவி யாதே." எனவும், அறுதலையான் வந்த கழிநெடிலடிக்குச் செய் யுள்;—"கணிகொண் டலர்ந்த நறவேங்கை யோடு கமழ்கின்ற காந்த ளிதழா—லணிகொண் டலர்ந்த வனமாலை சூடி யகிலாவி குஞ்சி கமழ—மணிகுண் டலங்க ளிருபாலும் வந்து வரையாக மீது திவ ளத்—துணிகொண் டிலங்கு சுடர்வேலி னோடு வருவா னிதென் கொ றுணிவே." எனவும், எழுதலையான் வந்த கழிநெடிலடிக்குச் செய்யுள்;—"மூவடிவி னுலிரண்டு சூழ்சுடரு நாண முழுதுலக மூடி யின முளைவயிர நாற்றித்—தூவடிவி னுலிலங்கு வெண்குடையி னீழற் சுடரோயுன் னடிபோற்றிச் சொல்லுவதொன் றுண்டாற்— சேவடிக டாமரையின் சேயிதழ்க ளுண்டச் சிவந்தனவோ சேவ டியின் செங்கதிர்கள் பாயப்—பூவடிவு கொண்டனவோ பொங்கொ ளிகள் சூழ்ந்து புலங்கொளா வாலெமக்கெம் புண்ணியர்தங் கோ வே." எனவும், எண்டலையான் வந்த கழிநெடிலடிக்குச் செய்யுள்;- "இடங்கை வெஞ்சிலை வலங்கை வாளியி னெதிர்ந்த தாரையை யிலங்கு மாழியின் விலங்கியோண்—முடங்கு வாலுளை மடங்கன் மீமிசை முனிந்து சென்றுடன் முரண்ட ராசனை முருக்கியோள்— வடங்கொண் மென்முலை நுடங்கு நுண்ணிடை மடந்தை சுந்தரி வளங்கொள் பூண்முலை மகிழ்ந்தகோன்—றடங்கொ டாமரை யிடங் கொள் சேவடி தலைக்கு வைப்பவர் தமக்கு வெந்துயர் தவிர்க்குமே." எனவும், ஒன்பதிற்றுத்தலையான் வந்த கழிநெடிலடிக்குச் செய் யுள்;—"கொங்கு தங்கு கோதை யோதி மாத ரோடு கூடி நீடு மோ டை நெற்றி—வெங்கண் யானை வேந்தர் போந்து வேத கீத நாத வென்று நின்று தாழ—வங்க பூர்வ மாதி யாய வாதி நூலி னீதி யோது மாதி யாய—செங்கண் மாலை காலை மாலை சேர்நர் சேர்வர் சோதி சேர்ந்த சித்தி தானே." எனவும் வரும். பிறவும் வந்துழிக் கண்டுகொள்க. (கக)

எ௨க. வெண்பா வகவல் கலிநே ரடியு
மொண்பா வஞ்சி குறள்சிந் தடியும்
பாவின மெல்லாப் பாதமும் பெறுமே.

இது மேற்கூறிய அடிகள் செய்யுட்கு உரியவாமாறு கூறு கின்றது.

இ - ள். வெண்பாவும் ஆசிரியப்பாவுங் கலிப்பாவும் அளவடியும், ஒள்ளிய வஞ்சிப்பாக் குறளடியுஞ் சிந்தடியும், பாவினம் எல்லா அடியும் பெற்று நடக்கும். எ - று.

நேரடியெனினும் அளவடியெனினும் ஒக்கும்.

அளவடியான் வந்த வெண்பாவிற்குச் செய்யுள்;—"வளம் பட வேண்டாதார் யார்யாரு மில்லை—யளந்தன போக மவரவ ராற்றான்—விளங்காய் திரட்டினா ரில்லைக் களங்கனியைக்—காரெனச் செய்தாரு மில்." எனவும், அளவடியான் வந்த ஆசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த—செங்கோ லம்பின் செங்கோட் டியானைக்—கழறொடிச் சேஎய் குன்றங்-குருதிப் பூவின் குலைக்காந் தட்டே." எனவும், அளவடியான் வந்த கலிப்பாவிற்குச் செய்யுள்;—"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்—பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்—புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்—பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்—வருவர்கொல் வயங்கிழாய் வலிப்பல்யான் கேளினி; (இது தரவு) அடிதாங்கு மளவன்றி யழலன்ன வெம்மையாற்—கடியவே கனங்குழாய் காடென்றா ரக்காட்டுட்—டொடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்—பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவு முரைத்தனரே; இன்பத்தி னிகந்தொரீஇ யிலைதீந்த வுலவையாற்—றுன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு—ளன்புகொண் மடப்பெடை யசைஇய வருத்தத்தை—மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே; கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்—றுன்னரூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு—ளின்னிழ லின்மையால் வருந்திய மடப்பிணைக்குத்—தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்தனரே;—(இவை மூன்றுந் தாழிசை) எனவாங்கு; (தனிச்சொல்) இனைநல முடைய கானஞ் சென்றோர்—புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்—பல்லியும் பாங்கொத் திசைத்தன—நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே." (இது சுரிதகம்) எனவும், குறளடியான் வந்த வஞ்சிப்பாவிற்குச் செய்யுள்;—"சுறமறிவன துறையெல்லா—மிறவீன்பன வில்லெல்லா—மீன்றிரிவன கிடங்கெல்லாந்—தேன்றாழ்வன பொழிலெல்லா—மெனவாங்கு, தண்பணை தழீஇய விருக்கை—மண்கெழு நெடுமதின் மன்ன னூரே." எனவும், சிந்தடியான் வந்த வஞ்சிப்பாவிற்குச் செய்யுள்;—"தொன்னலத்தின் புலம்பலைப்பத் தொடித்தோண்மேற்—பன்னலத்த கலந்தொலையப் பரிவெஃதி—யென்னலத்தகை யிதுவென்ன வெழில்காட்டிச்—

சொன்னலத்தகைப் பொருள்கருத்தினிற் சிறந்தாங்கெனப்—பெரிதுங், கலங்கஞ ரெய்தி விடுப்பவுஞ்—சிலம்பிடைச் செலவுஞ் சேணிவந் தற்றே." எனவும் வரும். எல்லா அடியானும் வந்த பாவினங்கட்குச் செய்யுள்;—"திரைத்தசாலிகை" முதலியவாக முற்காட்டியவே கொள்க. பிறவும் அன்ன.

ஒன்பாவென்ற மிகையானே வெண்பாவின் ஈற்றடியும் நேரிசையாசிரியப்பாவின் ஈற்றயலடியுங் கலிவெண்பாவின் ஈற்றடியுஞ் சிந்தடியாயும் இணைக்குறளாசிரியப்பாவின் இடையடி குறளடியாயுஞ் சிந்தடியாயும் வரப்பெறுமெனக் கொள்க. (கஉ)

எஉஉ. மோனை யெதுகை முரணியை பளபெடை
யானவவ் வைந்து மவற்றொ டொத்துறாஉம்
பாத விணையே பொழிப்போ டொரூஉத்தொடை
கூழை கதுவாய் மேலதூஉங் கீழதூஉஞ்
சீரிய முற்றொடு சிவணு மையேழுந்
தொடையு மத்தொடையின் விகற்பமு மாகும்.

இது நிறுத்தமுறையானே தொடைவகையும் அத்தொடைவிகற்பவகையும் இத்துணையவென்கின்றது.

இ - ள். அடிமோனையும் அடியெதுகையும் அடிமுரணும் அடியியைபும் அடியளபெடையுமாகிய அவ்வைந்தும், அத்தொடைகளையொத்து ஓரடிக்கண்ணே வரும் இணைமோனையும் பொழிப்புமோனையும் ஒரூஉமோனையுங் கூழைமோனையும் மேற்கதுவாய்மோனையுங் கீழ்க்கதுவாய்மோனையும் முற்றுமோனையும், இணையெதுகையும் பொழிப்பெதுகையும் ஒரூஉவெதுகையுங் கூழையெதுகையும் மேற்கதுவாயெதுகையுங் கீழ்க்கதுவாயெதுகையும் முற்றெதுகையும், இணைமுரணும் பொழிப்புமுரணும் ஒரூஉமுரணுங் கூழைமுரணும் மேற்கதுவாய்முரணுங் கீழ்க்கதுவாய்முரணும் முற்றுமுரணும், இணையியைபும் பொழிப்பியைபும் ஒரூஉவியைபுங் கூழையியைபும் மேற்கதுவாயியைபுங் கீழ்க்கதுவாயியைபும் முற்றியைபும், இணையளபெடையும் பொழிப்பளபெடையும் ஒரூஉவளபெடையுங் கூழையளபெடையும் மேற்கதுவாயளபெடையுங் கீழ்க்கதுவாயளபெடையும் முற்றளபெடையுமாகிய இவற்றொடு பொருந்தும் முப்பத்தைந்தும் முற்கூறிய தொடையும் அத்தொடைவிகற்பமுமாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று. (கங)

எ௨௩. முதலெழுத் தொன்றின் மோனையு மேனை
யிரண்டா மெழுத்தோ டியையி னெதுகையு
மொழியினும் பொருளினு முரணின் முரணு
மிறுவா யொப்பி னியைபுத் தொடையு
மளபெடுத் தொன்றி னடியள பெடையு
மிருசீர் மிசைவரத் தொடுப்பி னிணையு
முதலொடு மூன்றுஞ் சீர்த்தொடை பொழிப்புஞ்
சீரிரண் டிடைவிடத் தொடுப்பி னொரூஉவு
மூவொரு சீரு முதல்வரத் தொடுப்பிற்
கூழையு முதலயற் சீரொழித் தல்லன
மேல்வரத் தொடுப்பின் மேற்கது வாயு
மீற்றயற் சீரொழித் தெல்லாந் தொடுப்பிற்
கீழ்க்கது வாயுங் கிளந்த வீரிரண்டு
சீர்தொறுந் தொடுப்பின் முற்று மாகும்.

இது முற்கூறிய தொடையுந் தொடைவிகற்பமுமாமாறு கூறுகின்றது.

இ - ள். அடிதொறும் முதலெழுத்து ஒன்றிவரத்தொடுப்பின் அடிமோனைத்தொடையும், அடிதொறும் ஒழிந்த இரண்டாமெழுத்து ஒன்றிவரத்தொடுப்பின் அடியெதுகைத்தொடையும், மொழியானும் பொருளானும் மறுதலைப்படத் தொடுப்பின் அடிமுரண்டொடையும், அடிதொறும் ஈற்றெழுத்து ஒன்றிவரத் தொடுப்பின் அடியியைபுத்தொடையும், அடிதொறும் அளபெடுத்து ஒன்றிவரத் தொடுப்பின் அடியளபெடைத்தொடையும், முதலிருசீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத் தொடுப்பின் இணைத்தொடையும், முதற்சீர்க்கண்ணும் மூன்றுஞ்சீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத் தொடுப்பிற் பொழிப்புத்தொடையும், நடுவிருசீர்க்கண்ணுமின்றி முதற்சீர்க்கண்ணும் நான்காஞ்சீர்க்கண்ணும் மோனைமுதலாயின வரத் தொடுப்பின் ஒரூஉத்தொடையும், இறுதிச்சீர்க்கணின்றி ஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத் தொடுப்பிற் கூழைத்தொடையும், முதலயற்சீர்க்கணின்றி ஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத் தொடுப்பின் மேற்கதுவாய்த்தொடையும், ஈற்றயற்சீர்க்கணின்றி ஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத் தொடுப்பிற் கீழ்க்கதுவாய்த்தொடையுஞ், சொல்லப்

பட்ட நான்குசீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத்தொடுப்பின் முற்றுத்தொடையுமாம். எ - று.

ஏனையென்றமிகையானே இரண்டாமெழுத்து ஒன்றிவரினும் முதலெழுத்தெல்லாந் தம்முள் ஒத்த அளவினவாய் வந்து கட்டென்பதற்குப் பட்டென்பதல்லது பாட்டென்பது எதுகையாகாதெனவுங், காட்டென்பதற்குப் பாட்டென்பதல்லது பட்டென்பது எதுகையாகாதெனவும், முதனிலை முதலிய உயிரளபெடை மூன்றுங் குறிலிணைக்கீழுங் குறிற்கீழும் வரும் ஒற்றளபெடை இரண்டுந் தம்முள் ஒன்றிவரத்தொடுப்பது சிறப்புடைத்தெனவுங் கொள்க. 'ஈரிரண்டு' எனவே இணைமோனை முதலிய எல்லாம் அளவடிக்கண்ணே வழங்கப்படுமென்பதூஉம் 'இறுவாயொப்பின் இயைபுத்தொடை' எனவே அதன்விகற்பமாகிய இணையியைபுத்தொடை முதலிய ஏழும் ஈற்றுச்சீரே முதற்சீராகக் கொண்டு வழங்கப்படுமென்பதூஉம் பெற்றாம்.

அடிமோனைத்தொடைக்குச் செய்யுள்;—"மாவும் புள்ளும் வதுவையிற் படர—மாநீர் விரிந்த பூவுங் கூம்ப—மாலை தொடுத்த கோதையுங் கமழ—மாலை வந்த வாடையின்—மாயோ ளின்னுயிர் புறத்திறுத் தற்றே." எனவும், அடியெதுகைத்தொடைக்குச் செய்யுள்;—"வடியோர்க ணீர்மல்க வான்பொருட்கட் சென்றார்—கடியார் கனங்குழாய் காணார்கொல் காட்டு—ளிடியின் முழக்கஞ்சி யீர்ங்கவுள் வேழம்—பிடியின் புறத்தசைத்த கை." எனவும், பொருட்சொன்முரண்டொடைக்குச் செய்யுள்;—"இருள்பரந் தன்ன மாநீர் மருங்கி—னிலவு குவித்தன்ன வெண்மண லொருசிறை—யிரும்பி னன்ன கருங்கோட்டுப் புன்னை—பொன்னி னன்ன நுண்டாதிறைக்குஞ்—சிறுகுடிப் பரதவர் மடமகள்—பெருமதர் மழைக் கணு முடையவா லணங்கே." எனவும்; அடியியைபுத்தொடைக்குச் செய்யுள்;—"இன்னகைத் துவர்வாய்க் கிளவியு மணங்கே—நன்மா மேனிச் சுணங்குமா ரணங்கே—யாடமைத் தோளிக் கூடலு மணங்கே—யரிமதர் மழைக்கணு மணங்கே—திருநுதற் பொறித்த திலதமு மணங்கே." எனவும், அடியளபெடைத்தொடைக்குச் செய்யுள்;—"ஆஅ வளிய வலவன்றன் பார்ப்பினோ—டீஇ ரிரைகொண் டீரளைப் பள்ளியுட்—டூஉந் திரையலைப்பத் துஞ்சா திறைவன் றோண்—மேஎ வலைப்பட்ட நம்போ னறுநுதா—லோஒ வுழக்குந் துயர்." எனவும், இணைமோனை முதலிய மோனைவிகற்பம் ஏழும் வந்த செய்யுள்;—"அணிமல ரசோகின் றளிர்நலங் கவற்றி—யரிற் குரற் கிண்கிணி யரற்றுஞ் சீறடி—யம்பொற் கொடிஞ்சி நெடுந்தே

ரகற்றி—யகன்ற வல்கு லந்நுண் மருங்கு—லரும்பிய கொங்கை யவ்வளை யமைத்தோ—ளவிர்மதி யனைய திருநுத லரிவை—யயில்வே லனுக்கி யம்பலைத் தமர்த்த—கருங்கய னெடுங்க ணோக்க மென்—றிருந்திய சிந்தையைத் திறைகொண் டனவே." எனவும். இணையெதுகை முதலிய எதுகைவிகற்பம் ஏழும் வந்த செய்யுள்;—"பொன்னி னன்ன பொறிசுணங் கேந்திப்—பன்னருங் கோங்கி னன்னலங் கவற்றி—மின்னவி ரொளிவடந் தாங்கி மன்னிய—நன்னிற மென்முலை மின்னிடை வருந்தி—யென்னையு மிடுக்கண் டுன்னுவித் தின்னடை—யன்ன மென்பெடை போலப் பன்மலர்க்—கன்னியம் புன்னை யின்னிழ றுன்னிய—மயிலேய் சாயல் வாணுத—லயில்வே லுண்கணெம் மறிவுதொலைத் தனவே" எனவும், இணைமுரண் முதலிய முரண்விகற்பம் ஏழும் வந்த செய்யுள்;-"சீறடிப் பேரக லல்கு லொல்குபு—சுருங்கிய நுசுப்பிற் பெருகுவடந் தாங்கிக்—குவிந்துசுணங் கரும்பிய கொங்கை விரிந்து—சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைதன்—வெள்வளைத் தோளுஞ் சேயரிக் கருங்கணு—மிருக்கையு நிலையு மேந்தெழி லியக்கமுந்—துவர்வாய்த் தீஞ்சொலு முவந்தனை முனியா—தென்று மின்னண மாகுமதி—பொன்றிகழ் நெடுவேற் போர்வல் லோயே." எனவும், இணையியையு முதலிய இயைபுவிகற்பம் ஏழும் வந்த செய்யுள்;—"மொய்த்துடன் றவழு முகிலே பொழிலே—மற்றத னயலே முற்றுறழ் மணலே—நிழலே யினியத னயலது கடலே—மாதர் நகிலே வல்லே யியலே—வில்லே நுதலே வேற்கண் கயலே—பல்லே தளவம் பாலே சொல்லே—புயலே குழலே மயிலே யியலே—யதனு, லிவ்வயி னிவ்வுரு வியங்கலி—னெவ்வயி னோரு மிழப்பதந் நிறையே." எனவும், இணையளபெடை முதலிய அளபெடைவிகற்பம் ஏழும் வந்த செய்யுள்;—"தாஅட் டாஅ மரைமல ருழக்கிப்—பூஉக் குவளைப் போஒ தருந்திக்—காஅய்ச் செந்நெற் கறித்துப் போஒய்—மாஅத் தாஅண் மோஒட் டெருமை—தேஎம் புனலிடைச் சேஎர் பாஅன்—மீஇ னுஅர்ந் துகளுஞ் சீஇ—ரேஎ ரூஅர் நீஇ னீஇ—ரூரன் செய்த கேண்மை—யாய்வளைத் தோளிக் கலரா னுதே." எனவும் வரும். பிறவும் அன்ன.

இரும்பும்பொன்னும் மாறுபாடுடைமையிற் பொருண்முரணியற்றெனவுங் குடியுங்கண்ணும் ஆகாது சிறுமை பெருமை என்னுஞ் சொல்லே மாறுகோடலிற் சொன்முரணியற்றெனவுங்கொள்க. ()

எஉச. செந்தொடை யிரட்டையோ டந்தாதி யெனவும்
வந்த வகையான் வழங்கவும் பெறுமே.

இஃது இவ்வகையானுந் தொடையாமென்கின்றது.

இ - ள். செந்தொடையெனவும் இரட்டைத்தொடையென வும் அந்தாதித்தொடையெனவும் வந்த கூற்ருல் நடக்கவும்பெறும் முற்கூறிய தொடை. எ - று. (கரு)

எஉரு. சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற்
சொல்லி நிறுத்தசெந் தொடையுநே ரடியின்
முழுவது மொருசொல் வரினஃ திரட்டையு
மடியுஞ் சீரு மசையு மெழுத்து
முடிவு முதலாச் செய்யுண் மொழியி
னந்தா தித் தொடையுமென் றறிதல் வேண்டும்.

இது செந்தொடை முதலிய மூன்றுமாமாறு கூறுகின்றது.

இ - ள். முற்கூறிய தொடைகளோடு வேறுபட்டு நடப்பின் மேற்கூறிப்போந்த செந்தொடையும், நாற்சீரோரடியின் முழுவதும் ஒருசொல்லேவரத் தொடுப்பின் அஃது இரட்டைத்தொடையும், அடியுஞ் சீரும் அசையும் எழுத்துமாகிய இறுதி மற்றையடிக்கு ஆதியாகச் செய்யுட்செய்யின் அந்தாதித்தொடையுமென்று அறிதலை விரும்பும் ஆசிரியன். எ - று.

சொல்லிநிறுத்த என்ற மிகையானே அசையினுஞ் சீரினும் இசையினுமெல்லாம் இசையாது வருவது சிறப்புடைச் செந்தொடையெனவும், இரட்டைத்தொடை ஈற்றெழுத்தொன்று குறையினும் இழுக்காதெனவுங் கொள்க.

செந்தொடைக்குச் செய்யுள்;—"பூத்த வேங்கை வியன் சினை யேறி—மயிலின மகவு நாட—னன்னுதற் கொடிச்சி மனத்த கத் தோனே." எனவும், இரட்டைத்தொடைக்குச் செய்யுள்;— "ஒக்குமே யொக்குமே யொக்குமே யொக்கும்—விளக்கினுட் சீறெரி யொக்குமே யொக்குங்—குளக்கொட்டிப் பூவி னிறம்." எனவும், அந்தாதித்தொடைக்குச் செய்யுள்;—"உலகுடன் விளக்கு மொளி கிள ரவிர்மதி—மதிநல னழிக்கும் வளங்கெழு முக்குடை—முக் குடை நீழற் பொற்புடை யாசன—மாசனத் திருந்த திருந்தொளி யறிவனை—யறிவசே ருள்ளமோ டருந்தவம் புரிந்து—துன்னிய மாந்தரஃ தென்ப—பன்னருஞ் சிறப்பின் விண்மிசை யுலகே." எனவும் வரும். பிறவும் அன்ன. (கசு)

எ௨௬. வெண்பா வாசிரியங் கலியே வஞ்சியெனப்
பண்பாய்ந் துரைத்த பாநான் காகும்.

இது நிறுத்தமுறையானே முற்கூறிய பாவகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். வெண்பாவும் ஆசிரியப்பாவுங் கலிப்பாவும் வஞ்சிப்பாவுமெனத் தத்தந் தன்மையாற்றெரிந்து சொல்லப்பட்ட பா நான்குவகைப்படும். எ - று. (கஎ)

எ௨எ. தாழிசை துறையே விருத்த மென்றிவை
பாவினம் பாவொடு பாற்பட் டியலும்.

இது நிறுத்தமுறையானே முற்கூறிய பாவினவகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். தாழிசையுந் துறையும் விருத்தமுமென்று இம்மூன்றும் பாவினமெனப்படும்; அவை பாவினோடு கூடி அப்பெயர் பெற்று நடக்கும். எ - று.

அங்ஙனம் வழங்குமாறுவெண்டாழிசை வெண்டுறைவெளிவிருத்தம் எனவும், ஆசிரியத்தாழிசை ஆசிரியத்துறை ஆசிரியவிருத்தம் எனவும், கலித்தாழிசை கலித்துறை கலிவிருத்தம் எனவும், வஞ்சித்தாழிசை வஞ்சித்துறை வஞ்சிவிருத்தம் எனவுங் கொள்க. (கஅ)

எ௨அ. செப்ப லிசையன வெண்பா மற்றவை
யந்தடி சிந்தடி யாகலு மவ்வடி
யந்த மசைச்சீ ராகவும் பெறுமே.

இது நிறுத்தமுறையானே வெண்பாவாமாறு பொதுவகையான் உணர்த்துகின்றது.

இ - ள். செப்பலோசையைத் தமக்கு ஓசையாக உடையனவாம் எல்லாவெண்பாவும்; அவ்வெண்பாக்களின் ஈற்றடி முச்சீராதலும் அவ்வீற்றடியின் இறுதி அசைச்சீரான் இறுதலும் பெறும். எ-று.

"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி—வாலெயி றூறிய நீர்." என நேரசைச்சீரானும் "நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்—நெஞ்சத் தவல மிலர்." என நிரையசைச்சீரானும் இறுத

லேயன்றி உம்மையாற் "கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை-சொல்லா நலத்தது சால்பு." எனக் குற்றுகர ஈற்று நேர்பசைச்சீரான் இறுதலும் "அகர முதல வெழுத்தெல்லா மாதி—பகவன் முதற்றே யுலகு." எனக் குற்றுகர ஈற்று நிரைபசைச்சீரான் இறுதலும் "இனமலர்க் கோதா யிலங்குநீர்ச் சேர்ப்பன்—புனமலர்த் தாரகலம் புல்லு." என முற்றுகர ஈற்று நேர்நேரியற்சீரான் இறுதலும் "மஞ்சுசூழ் சோலை மலைநாட முத்தாலு—மஞ்சொன் மடவார்க் கருளு." என முற்றுகர ஈற்று நிரைநேரியற்சீரான் இறுதலுங் கொள்க.

மற்றென்ற மிகையானே ஏந்திசைச்செப்பலுந் தூங்கிசைச் செப்பலும் ஒழுகிசைச்செப்பலுமெனச் செப்பலோசை மூன்றுவகைப்படும்; "வெண்சீர் வெண்டளை யான்வரும் யாப்பை—யேந்திசைச் செப்ப லென்மனார் புலவர்." எனவும், "இயற்சீர் வெண்டளை யான்வரும் யாப்பைத்—தூங்கிசைச் செப்ப லென்மனார் புலவர்." எனவும், "வெண்சீ ரொன்றலு மியற்சீர் விகற்பமு—மொன்றிய பாட்டே யொழுகிசைச் செப்பல்." எனவுங் கூறுபவாகலின்.

இவற்றிற்குச்செய்யுள்;—"யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்—சாந்துணையுங் கல்லாத வாறு." எனவும், "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி—வாலெயி றூறிய நீர்." எனவும், "கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி—யெல்லா வுயிருந் தொழும்." எனவும் முறையே காண்க.

இவ்வோசையைத் தூக்கென்று ஓர் உறுப்பாக்கி வேறுகூறுவாரும் உளர். மேல் இவ்வாறு வருவனவற்றிற்கும் இவ்வுரை உய்த்துரைக்க. (கக)

எஉகூ. குறளே நேரிசை யின்னிசை பஃறொடை
சிந்திய லெனவஃ தைந்தென மொழிப.

இது மேற் பொதுவகையாற் கூறிய வெண்பாவகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். குறள்வெண்பாவும் நேரிசைவெண்பாவும் இன்னிசைவெண்பாவும் பஃறொடைவெண்பாவுஞ் சிந்தியல்வெண்பாவுமென்று முற்கூறிய வெண்பா ஐந்துவகைப்படுமென்று கூறுவர் ஆசிரியர். எ - று. (உ0)

எஙo. ஈரடி யான்வரிற் குறளஃ திரண்டாயச்
சீரிய வான்றனிச் சொல்லிடை சிவணி

யிருவிகற் பானு மொருவிகற் பானுஞ்
செப்ப லோசையிற் சிதையா தாகி
யத்திறம் வரினே ரிசையடி நான்கா
யொன்றும் பலவும் விகற்பாய்த் தனிச்சொ
லின்றி நடப்பி னின்னிசை யடிபல
துன்னிற் பஃறொடை நேரிசை யின்னிசை
யன்னவாய் மூன்றடி யான்வரிற் சிந்தியல்
வெண்பா வாதலும் விதியெனப் படுமே.

இது முற்கூறிய வெண்பாக்களாமாறு கூறுகின்றது.

இ-ள். ஈரடியான்வரிற் குறள்வெண்பாவாதலும், அக்குறட்பா இரண்டாய்த் தொடைக்கேற்ற தனிச்சொல் இடைக்கட் பொருந்தி முதலிரண்டடியும் ஒருவிகற்பத்தானுங் கடையிரண்டடியும் ஒருவிகற்பத்தானும் நான்கடியும் ஒருவிகற்பத்தானுஞ் செப்பலோசையின் வழுவாது அவ்வாறுவரின் நேரிசைவெண்பாவாதலும், நான்கடியாய் ஒருவிகற்பத்தானும் பலவிகற்பத்தானுந் தனிச்சொலின்றி வரின் இன்னிசைவெண்பாவாதலும், மேல் வெண்பாவிற்கு நான்கடியுரிமை கூறினமையின் நான்கடியின்மிக்கு ஒருவிகற்பாயும் பலவிகற்பாயும் அடிபலவாய்வரிற் பஃறொடைவெண்பாவாதலும், நேரிசைவெண்பாவேபோல இரண்டாம் அடியிறுதி தனிச்சொற்பெற்று இருவிகற்பாயும் ஒருவிகற்பாயும் மூன்றடியாய் வரின் நேரிசைச்சிந்தியல்வெண்பாவாதலும், இன்னிசைவெண்பாவேபோல ஒருவிகற்பாயும் பலவிகற்பாயுந் தனிச்சொலின்றி மூன்றடியாய் வரின் இன்னிசைச்சிந்தியல்வெண்பாவாதலும் இலக்கணமெனப் படும். எ-று.

மேல் வெண்பாச் செப்பலோசைத்தாய் வருமெனக்கூறி ஈண்டுஞ் செப்பலோசையிற் சிதையாதென்றது ஒருசார் பிறபாக்களை உதாரணவாய்பாட்டான் ஓசையூட்டுமிடத்துத் தத்தம் ஓசையிற் சிறிது வழுவிவருவன உளவாயினும் வெண்பாவிற்குச் செப்பலோசை சிறிதும் வழுவலாகாதென்று யாப்புறுத்தற்பொருட்டாகவுஞ், செப்பலோசையிற் சிறிது வழுவிவந்த நேரிசை இன்னிசைவெண்பாக்களை ஒருபுடையொப்புமைநோக்கி வெண்டுறைப்பாற்படுத்துஞ் செப்பலோசை சிறிது வழுவிவந்த பஃறொடைவெண்பாக்களை ஒருபுடையொப்புமைநோக்கி வெண்கலிப்பாற்படுத்தும் வழங்கினும் இழுக்காதென்பது அறிவித்தற்குமெனக் கொள்க.

'சீரியவான்றனிச்சொல்' என்ற மிகையானே முதற் குறட்பாவினோடு தனிச்சொல் இடைவேறுபட்டு விட்டிசைப்பின் ஒற்றுமைப்படாத உலோகங்களை ஒற்றுமைப்படப் பற்றாசிட்டு விளக்கினாற்போல முதற்குறட்பாவின் இறுதிக்கண் ஒன்றும் இரண்டும் அசைகூட்டி உச்சரிக்கப்பட்டு இரண்டுவிகற்பத்தானும் ஒருவிகற்பத்தானும் வருவன உள ஒருசார் ஆசிடைநேரிசைவெண்பாவாமெனவும், நேரிசைவெண்பாவேபோல இரண்டாம் அடியினிறுதி தனிச்சொற்பெற்று மூன்றுவிகற்பத்தான் வருவனவும் மூன்றாம் அடியினிறுதி தனிச்சொற்பெற்று இரண்டுவிகற்பத்தான் வருவனவும் அடிதோறுந் தனிச்சொற்பெற்று வருவனவும் பிறவாற்றான் நேரிசைவெண்பாவிற்குச் சிறிது வேறுபட்டு நான்கடியாய் வருவனவுமெல்லாம் இன்னிசைவெண்பாவாமெனவுங் கொள்க.

இருவிகற்பத்தான் வந்த குறள்வெண்பாவிற்குச் செய்யுள்;—"உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்—கச்சாணியன்ன ருடைத்து." எனவும், ஒருவிகற்பத்தான் வந்த குறள்வெண்பாவிற்குச் செய்யுள்;—"உடையார்முன் னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்—கடையரே கல்லா தவர்" எனவும், இருவிகற்பத்தான் வந்த நேரிசைவெண்பாவிற்குச் செய்யுள்—"தடமண்டு தாமரையின் றாதா டலவ—னிடமண்டிச் செல்வதனைக் கண்டு—பெடைஞெண்டு—பூழிக் கதவடைக்கும் புத்தூரே பொய்கடிந்—தூழி நடாயின னூர்." எனவும், ஒருவிகற்பத்தான் வந்த நேரிசைவெண்பாவிற்குச் செய்யுள்;—"அரிய வரைகீண்டு காட்டுவார் யாரே—பெரிய வரைவயிரங் கொண்டு—தெரியிற்—கரிய வரைநிலையார் காய்ந்தாலென் செய்வர்—பெரிய வரைவயிரங் கொண்டு." எனவும், ஈரசையான் ஆசிட்டு இருவிகற்பத்தான் வந்த ஆசிடைநேரிசைவெண்பாவிற்குச் செய்யுள்;—"தாமரையின் றாதாடித் தண்டுவலைச் சேறளைந்து—தாமரையி னற்றமே தானாறுந்—தாமரைபோற்—கண்ணன் முகத்தான் கரதலத்தான் சேவடியெங்—கண்ணார்வஞ் செய்யுங் கருத்து." என்வும், ஓரசையான் ஆசிட்டு இருவிகற்பத்தான் வந்த ஆசிடைநேரிசைவெண்பாவிற்குச் செய்யுள்;—"கருமமு முள்படா போகமுந் துவ்வா—தருமமுந் தக்கார்க்கே செய்யா—வொருநிலையே—முட்டின்று மூன்று முடியுமே லஃதென்ப—பட்டினம் பெற்ற கலம்." எனவும், ஈரசையான் ஆசிட்டு ஒருவிகற்பத்தான் வந்த ஆசிடைநேரிசைவெண்பாவிற்குச் செய்யுள்;—"வஞ்சியே னென்றவன்றன் னூருரைத்தான் யானுமவன்—வஞ்சியா னென்பதனால் வாய்நேர்ந்தேன்—வஞ்சியான்—

வஞ்சியேன் வஞ்சியே னென்றுரைத்தும் வஞ்சித்தான்-வஞ்சியாய் வஞ்சியார் கோ." எனவும், ஓரசையான் ஆசிட்டு ஒருவிகற்பத்தான் வந்த ஆசிடைநேரிசைவெண்பாவிற்குச் செய்யுள்;—"யாத்த வறி வின ராண்டிளைய ராயினுங்—காத்தோம்பித் தம்மை யடக்குப—மூத்தொறூஉங்—தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோற்—போத்தரூர் புல்லறிவி னூர்." எனவும், ஒருவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பாவிற்குச் செய்யுள்;—"வைகலும் வைகல் வரக் கண்டு மஃ துணரார்—வைகலும் வைகலை வைகுமென் றி ன்புறுவர்-வைகலும் வைகற்றம் வாழ்நாண்மேல் வைகுதல்—வைகலை வைத்து ணரா தார்." எனவும், இருவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பா விற்குச் செய்யுள்;—"இன் றுகொ லன் றுகொ லென் றுகொ லென் னூது—பின்றையே நின்றது கூற்றமென் றெண்ணி—யொருவுமின் றீயவை யொல்லும் வகையான்—மருவுமின் மாண்டா ரறம்." என வும், பலவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பாவிற்குச் செய் யுள்;—"கடற்குட்டம் போழ்வர் கலவர் படைக்குட்டம்—பாய்மா வுடையா னுடற்கிற்குந் தோமி—றவக்குட்டந் தன்னுடையா னீந்து மவைக்குட்டங்—கற்றான் கடந்து விடும்." எனவும், இரண் டாம் அடியிறுதி தனிச்சொற்பெற்று மூன்றுவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பாவிற்குச் செய்யுள்;—"அங்கண் விசும்பி னகனி லாப் பாரிக்குந்—திங்களுஞ் சான்றோரு மொப்பர்மற்—றிங்கண்—மறுவாற்றுஞ் சான்றோரஃ தாற்றார் தெருமந்து— தேய்வ ரொரு மா சுறின்." எனவும், மூன்றாம் அடியினிறுதி தனிச்சொற்பெற்று இருவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பாவிற்குச் செய்யுள்;—"வளம்பட வேண்டாதார் யார்யாரு மில்லை—யளந்தன போக மவ ரவ ராற்றான்—விளங்காய் திரட்டினா ரில்லைக் களங்கனியைக் கா ரெனச் செய்தாரு மில்."எனவும், அடிதொறுந் தனிச்சொற்பெற்று மூன்றுவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பாவிற்குச் செய் யுள்;—"இன்னுமை வேண்டி னிரவெழுக விந்நிலத்து—மன்னுதல் வேண்டி னிசைநடுக—தன்னோடு—செல்வது வேண்டி னறஞ் செய்க வெல்வது—வேண்டின் வெகுளி விடல்." எனவும், ஐந்த டியான் வந்த ஒருவிகற்பப் பஃறொடைவெண்பாவிற்குச் செய் யுள்;—"சேற்றுக்கா னீலஞ் செருவென்ற வேந்தன்வேல்—கூற்று றழ் மொய்ம்பிற் பகழி பொருகயற்—றோற்றந் தொழில்வடிவு தம் முட் டடுமாற்றம்—வேற்றுமை யின்றியே யொத்தன மாவடா—ராற்றுக்கா லாட்டியர் கண்." எனவும், ஆறடியான் வந்த பலவிகற் பப்பஃறொடைவெண்பாவிற்குச் செய்யுள்;—"பன்மாடக் கூடன் மதுரை நெடுந்தெருவி—லென்னோடு நின்றா ரிருவ ரவருள்ளும்—

பொன்னோடை நன்றென்று ணல்லளே பொன்னோடைக்—கியா னைநன் றென்றாளு மந்நிலையள் யானை—யெருத்தத் திருந்த விலங் கிலைவேற் றென்னன்—றிருத்தார்நன் றென்றேன் றியேன்.'' எனவும், ஏழடியான்வந்த பலவிகற்பப்பஃறொடைவெண்பாவிற் குச் செய்யுள்;—"வையக மெல்லாங் கழனியா வையகத்துச்— செய்யகமே நாற்றிசையிற் றேயங்கள்—செய்யகத்து—வான்கரும் பே தொண்டை வளநாடு வான்கரும்பின்—சாறேயக் நாட்டுத் தலையூர்கள் சாறட்ட—கட்டியே கச்சிப் புறமெல்லாங் கட்டியுட்— டானேற்ற மாய சருக்கரை மாமணியே—யானேற்றான் கச்சி யகம்.'' எனவும், இருவிகற்பத்தான் வந்த நேரிசைச்சிந்தியல்வெண் பாவிற்குச் செய்யுள்;—"நற்கொற்ற வாயி னறுங்குவளைத் தார் கொண்டு—சுற்றும்வண் டார்ப்பப் புடைத்தாளே—பொற்றேரான்- பாலைநல் வாயின் மகள்.'' எனவும், ஒருவிகற்பத்தான் வந்த நேரி சைச்சிந்தியல்வெண்பாவிற்குச் செய்யுள்;—"அறிந்தானை யேத்தி யறிவாங் கறிந்து—செறிந்தார்க்குச் செவ்வனு ரைப்பட்—சிறந் தார்—சிறந்தமை யாராய்ந்து கொண்டு.'' எனவும், ஒருவிகற்பத் தான்வந்த இன்னிசைச்சிந்தியல்வெண்பாவிற்குச் செய்யுள்;—"நறு நீல நெய்தலுங் கொட்டியுந் தீண்டிப்—பிறநாட்டுப் பெண்டிர் முடி நாறும் பாரி—யறநாட்டுப் பெண்டி ரடி.'' எனவும், இருவிகற்பத் தான் வந்த இன்னிசைச்சிந்தியல்வெண்பாவிற்குச் செய்யுள்;—"சு ரையாழ வம்மி மிதப்ப வரையனைய—யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப—கானக நாடன் சுனை.'' எனவும், மூன்றுவிகற்பத்தான் வந்த இன்னிசைச்சிந்தியல்வெண்பாவிற்குச் செய்யுள்,—"முல்லை முறுவலித்துக் காட்டின மெல்லவே—சேயிதழ்க் காந்த டுடுப் பீன்ற போயினர்—திண்டேர் வரவுரைக்குங் கார்.'' எனவும் வரும். பிறவும் வந்துழிக் கண்டுகொள்க.

இனிச் செப்பலோசையிற் சிதையாது நேரும் நிரையும் நேர் பும் நிரைபுமாகிய சீர்களை இறுதியாகவுடைய சிந்தடியான் முடியும் வெண்பாக்களை ஓசையூட்டுமாறு:—"பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி வாலெயி றூறிய நீர்.'' இதனைக் "கூவிளங் கூவிளந் தே மா கருவிளங்—கூவிளங் கூவிள நாள்.'' எனவும், "நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்—நெஞ்சத் தவல மிலர்.'' இதனைக் "கூவிளந் தேமா புளிமா கருவிளங்காய்—தேமா புளிமா மலர்.'' எனவும், "கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை—சொல்லா நலத்தது சால்பு.'' இதனைத் "தேமா கருவிளந் தேமா புளிமாங்காய்—தேமா கருவிளங் காசு.'' எனவும், "அகர முதல வெழுத்தெல்லா மாதி—

பகவன் முதற்றே யுலகு." இதனைப் "புளிமா புளிமா புளிமாங்காய் தேமா—புளிமா புளிமா பிறப்பு." எனவும் முறையே அலகிட்டு ஓசையூட்டி அவ்வாறுதல் காண்க. பிறவும் அன்ன. (உக)

எருக. அடியொரு மூன்றுவந் தந்தடி சிந்தாய்
விடினது வெள்ளொத் தாழிசை யாதலு
மூன்றடி முதலா வேழடி காறும்வந்
தீற்றடி சிலசில சீர்குன் றினுமவை
வேற்றொலி விரவினும் வெண்டுறை யாதலு
மொருமூன் றொருநான் கடியடி தோறுந்
தனிச்சொற் றழுவி நடப்பது வெள்ளை
விருத்த மெனப்பெயர் வேண்டலும் விதியே.

இது மேற்கூறிய வெண்பாவிற்கு இனமாகிய தாழிசை துறை விருத்தங்களாமாறு கூறுகின்றது.

இ - ள். மூன்றடியான் நடந்து ஈற்றடி மூச்சீரடியாய் முடியின் அது வெள்ளொத்தாழிசையாதலும், மூன்றடி முதலாக ஏழடியளவும் நடந்து ஈற்றடியுட் சில அடிகள் சிலசீர் குறையினும் அவ்வாறு வருங்கால் முன்பிற் சில அடி ஓரோசையாய்ப் பின்பிற் சில அடி மற்றோரோசையாய் வேற்றொலி விரவிவரினும் வெண்டுறையாதலும், மூன்றடியும் நான்கடியுமாய் அடிகடோறும் ஒருசொல்லே இறுதிக்கட் தனிச்சொல்லாகப் பொருந்தி நடப்பது வெளிவிருத்தமெனப் பெயர்பெறுதலும் இலக்கணமாம். எ - று.

உரையிற்கோடலான் வெள்ளொத்தாழிசை முச்சீரான் இறுங்கால் வெண்பாவேபோலக் காசு பிறப்பு நாள் மலரென்னும் வாய்பாட்டான் இறுமெனவும், முதலடி இரண்டும் அளவடியான் வருமெனவுஞ், சிந்தியல்வெண்பா ஒருபொருண்மேல் மூன்று அடுக்கிவரின் அவையும் வெள்ளொத்தாழிசையாமெனவும், ஒருசார் வெண்டுறையின் ஈற்றடி ஒன்று ஒருசீர் குறைந்துவருவனவும் உளவெனவும், வெளிவிருத்தந் தனிச்சொற் பெற்றுவருங்கால் அளவடியினுட்பட்டு அடங்காது வரல்வேண்டுமெனவுங் கொள்க.

சீர் வரையறுத்திலாமையால் வெண்டுறை எனைத்துச்சீரானும் அடியாய் வருமென்க.

வெள்ளொத்தாழிசைக்குச் செய்யுள்;—"நண்பி தென்று தீய சொல்லார்—முன்பு நின்று முனிவு செய்யா—ரன்பு வேண்டு

பவர்.'' எனவும், ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவந்த வெள்ளொத் தாழிசைக்குச் செய்யுள்;—"அன்று யறங்கொ ணலங்கிளர் சேட் சென்னி—யொன்று ருடைபுறம் போல நலங்கவர்ந்து—துன் னுன் றுறந்து விடல்.'' "ஏடி யறங்கொ ணலங்கிளர் சேட்சென் னி—கூடா ருடைபுறம் போல நலங்கவர்ந்து—நேடான் றுறந்து விடல்.'' "பாவா யறங்கொ ணலங்கிளர் சேட்சென்னி—மேவா ருடைபுறம் போல நலங்கவர்ந்து—காவான் றுறந்து விடல்.'' எனவும், மூன்றடியான் வந்த ஓரொலிவெண்டுறைக்குச் செய்யுள்;— "தாளாள ரல்லாதார் தாம்பல ராயக்கா லென்னுமென்னும்—யாளி யைக் கண்டஞ்சி யானைதன் கோடிரண்டும்—பீலிபோற் சாய்த்து விடும்பிளிற்றி யாங்கே.'' எனவும், நான்கடியான் வந்த ஓரொலி வெண்டுறைக்குச் செய்யுள்;—"குழலிசைய வண்டினங்கள் கோழி லைய செங்காந்தட் குலைமேற் பாய—வழலெரியின் மூழ்கினவா லந்தோ வளியவென் றயல்வாழ் மந்தி—கலுழ்வனபோ னெஞ்ச யர்ந்து கல்லருவி தூஉ—நிழல்வரை நன்னாட னீப்பனோ வல்லன்.'' எனவும், ஏழடியான் வந்த வேற்றொலிவெண்டுறைக்குச் செய் யுள்;—"முழங்குதிரைக் கொற்கைவேந்தன் முழுதுலக மேவல் செய முறைசெய் கோமான்—வழங்குதிறல் வாண்மாறன் மாச்செ ழியன் றுக்கரிய வைவேல் பாடிக்—கலந்துநின் றூரெலாங் கரு தலா காவண—மிலங்குவா ளிரண்டினு விருகைவீ சிப்பெயர்ந்— தலங்கன்மா லையவிழ்ந் தாடவா டும்மிவள்—பொலங்கொள்பூந் தடங்கட்கே புரிந்துநின் றூரெலாம்—விலங்கியுள் ளந்தப விளிந் துவே றுபவே.'' எனவும், ஈற்றடி ஒன்று ஒருசீர் குறைந்துவந்த ஓரொலிவெண்டுறைக்குச் செய்யுள்;—"வெறியுறு கமழ்கண்ணி வேந்தர்கட் காயினு—முறவுற வருவழி யுரைப்பன வுரைப்பன் மற்—செறிவுறு தகையினர் சிறந்தன ரிவர்நமக்—கறிவுறு தொழில ரென் றல்லவை சொல்லன்மின்-பிறபிற நிகழ்வன பின்.'' எனவும், மூன்றடியான் வந்த வெளிவிருத்தத்திற்குச் செய்யுள்;—"கொண் டன் முழங்கினவாற் கோபம் பரந்தனவா லென்செய்கோயான்— வண்டு வரிபாட வார்தளவம் பூத்தனவா லென்செய்கோயா— னெண்டிசையுந் தோகை யிருந்தகவி யேங்கினவா லென்செய்கோ யான்.'' எனவும், நான்கடியான்வந்த வெளிவிருத்தத்திற்குச் செய் யுள்;—"ஆவா வென்றே யஞ்சின ராழ்ந்தா ரொருசாரார்—கூகூ வென்றே கூவிளி கொண்டா ரொருசாரார்—மாமா வென்றே மாய்ந்தனர் நீந்தா ரொருசாரா—ரேகீர் நாகீ ரென்செய்து மென்றா ரொருசாரார்.'' எனவும் வரும். பிறவும் வந்துழிக்காண்க. (உஉ)

எ௲உ. அகவ லிசையன வகவன் மற்றவை
ஏஓ ஈஆய் எனஐயென் றிறுமே.

இது நிறுத்தமுறையானே ஆசிரியப்பாவாமாறு பொதுவகை யான் உணர்த்துகின்றது.

இ-ள். அகவலோசையைத் தமக்கு ஓசையாக உடையன வாம் எல்லா ஆசிரியப்பாவும், அவை ஏயென்றும் ஓவென்றும் ஈயென்றும் ஆயென்றும் எனவென்றும் ஐயென்றும் இறும். எ-று.

மற்றென்ற மிகையானே ஏந்திசையகவலுந் தூங்கிசையகவலும் ஒழுகிசையகவலுமென அகவலோசை மூன்றுவகைப்படும்; "நேர்நே ரியற்றளை யான்வரு மகவலு—நிரைநிரை யியற்றளையான் வரு மகவலு—மாவிரு தளையுமொத் தாகிய வகவலு—மேந்த றூங்க லொழுக லென்றிவை—யாய்ந்த நிரனிறை யாகு மென்ப." என்பவாகலின்.

இவற்றிற்குச் செய்யுள்;—"போதுசாந்தம் *** துன்னுவோரே." எனவும், "அணிநிழல் *** பவநனி பரிசறுப் பவரே." எனவும், "குன்றக்குறவன் *** சுணங்கே." எனவும், முறையே காண்க. "பாடுநனிகேட்டே." என ஏயுங், "குவளை யுண்க ணிவள் வயிற் பிரிந்து-பெருந்தோள் கதுப்பொடு விருப்பினை நீவி—யிரங்கு மென் றழுங்கல் வேண்டா—செழுந்தே ரோட்டிய வென்றியொடு சென்றீ." என ஈயும், "முள்ளி நீடிய முதுநீ ரடைகரை—புள்ளிக் களவ னும்ப லதுக்குந்—தண்டுறை யூர னளிப்பவு—முண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்" என ஆயும், "அலந்த மஞ்ஞை யாமங் கூவப்—புலந்தது மாதோ புரவலற் கிரவென." என எனவும், "நின்றன நின்று தன்றுணை யொருசிறைப்—பூந்தண் சிலம்பன் றேந்தழை யிவையெனக்—காட்டவுங் காண்டல் செல்லாள் கோட்டுப்—பூண்முலை நோக்கி யிறைஞ்சி—வாண்முக வெருத்தங் கோட்டினண் மடந்தை." என ஐயும் ஈறாயவாறு காண்க. பிறவும் வந்துழிக் கண்டுகொள்க. (௨௩)

எ௲௩. நேரிசை யிணைக்குற ணிலைமண் டிலமே
யடிமறி மண்டில மெனநான் ககவல்.

இது மேற் பொதுவகையாற் கூறிய ஆசிரியப்பாவகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். நேரிசையாசிரியப்பாவும் இணைக்குறளாசிரியப்பாவும் நிலைமண்டிலவாசிரியப்பாவும் அடிமறிமண்டிலவாசிரியப்பாவுமென நான்குவகைப்படும் ஆசிரியப்பா. எ - று. (௨௪)

எ௪எ. அந்த வடியி னயலடி சிந்தடி
வந்திடி னேரிசை யாசிரிய மாதலு
மளவடி யந்தமு மாதியு மாகிக்
குறளடி சிந்தடி யென்று விரண்டு
மிடைவர நிற்பி னிணைக்குற ளாதலு
மொத்த வடித்தா யுலையா மரபொடு
நிற்பி னிலைமண் டிலமா குதலு
மனப்படு மடிமுத லிடையீ றுயி
னடிமறி மண்டில வாசிரிய மாதலு
நடைதெரி புலவர் நாடினர் கொளலே.

இது முற்கூறிய ஆசிரியப்பாக்களாமாறு கூறுகின்றது.

இ - ள். ஈற்றடியின் அயலடி முச்சீரடியாக நடப்பின் அது நேரிசையாசிரியப்பா ஆதலையும், ஈறும் முதலும் நாற்சீரடியாய் இரு சீரடியும் முச்சீரடியுமாகிய இரண்டடியும் இடையிடையே வந்துநிலைபெறின் அஃது இணைக்குறளாசிரியப்பா ஆதலையுஞ், சீர் தம்மில் அளவொத்த அடியினையுடைத்தாய்க் கெடாத தன்மையொடு நிற்பின் அது நிலைமண்டிலவாசிரியப்பா ஆதலையும், யாதானும் ஓரடியை முதலடியாக இடையடியாக ஈற்றடியாகக் கூறினும் ஓசையும் பொருளுஞ் சிதையாமல்வரின் அஃது அடிமறிமண்டிலவாசிரியப்பா ஆதலையும் இலக்கணநெறியை அறியும் அறிவுடையோர் ஆராய்ந்து கொள்க. எ - று.

'குறளடி சிந்தடி யென்று விரண்டு—மிடைவர நிற்பி னிணைக்குறள்' என்றாரேனும், உரையிற்கோடலாற் சிந்தடி இணைதலும் இணைக்குறளாமெனக் கொள்க.

நேரிசையாசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"நிலத்தினும் பெரிதே வானினு முயர்ந்தன்று—நீரினு மாரள வின்றே சாரற்—கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு—பெருந்தே னிழைக்கு நாடனொடு நட்பே." எனவும், ஈற்றயலடியிரண்டுஞ் சிந்தடியான் வந்த இணைக்குறளாசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"நீரின் றண்மையுந் தீயின் வெம்மையுஞ்—சாரச் சார்ந்து தீரத் தீருஞ்—சார னாடன் கேண்

மை—சாரச் சாரச் சார்ந்து—தீரத் தீரத் தீர்பொல் லாதே." எனவும், இருசீரடியும் முச்சீரடியும் இடையிடை வந்த இணைக்குறளாசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே—பெரியகட் பெறினே—யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே—சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே—பெருஞ் சோற் றானு நனிபல கலத்தன் மன்னே—யென்பொடு தடிபடு—வழியெல் லாமெமக் கீயு மன்னே—யம்பொடு வேனுழை—வழியெல் லாந்தா னிற்கு மன்னே—நரந்த நாறுந் தன்கையாற்—புலவு நாறு மென்றலை தைவரு மன்னே—யருங்கலை யிரும்பாண ரகன் மண்டைத் துளையுரீஇ—யிரப்போர் கையுளும் போகிப்—புரப்போர் புன்கண் பார்வை சோர—வஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்-சென்றுவீழ்ந் தன்றவன் றிருநிறத் திலங்கிய வேலே—யரசா கெந்தை யாண்டுளன் கொல்லோ—வினிப், பாடுநரு மில்லைப்—பாடுநர்க் கொன்றீ குநரு மில்லைப்—பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்—சூடாது வைகியாங்குப் பிறர்க்கொன்—றீயாது வீயு முயிர்தவப் பலவே." எனவும், நிலைமண்டிலவாசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்—சார ஞட செவ்வியை யாகுமதி—யாரஃ தறிந்திசி னோரே சாரற்—சிறுகோட் டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவ—ளுயிர் தவச்சிறிது காமமோ பெரிதே." எனவும், அடிமறிமண்டிலவாசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"சூரல் பம்பிய சிறுகான் யாறே—சூரர மகளி ராரணங் கினரே—வார லெனினே யானஞ் சுவலே—சார ஞட நீவர லாறே." எனவும் வரும். (உரு)

எகூரு. மூன்றடி யொத்து முடிவன வாய்விடி
னொன்ற வகவற் றாழிசை யாத லு
மெருத்தடி குன்றியு மிடையிடை குன்றியு
மிவற்றோ டிடைமடக் காகியு நான்கடி
யவற்று ளடப்பி னதன்றுறை யாத லுங்
கழிநெடி லடிநான் கொத்திறி னகவல்
விருத்த மாத லும் விதியெனப் படுமே.

இது மேற் கூறிய ஆசிரியப்பாவிற்கு இனமாகிய தாழிசை துறைவிருத்தங்களாமாறு கூறுகின்றது.

இ - ள். மூன்றடியாய்ச் சீர் தம்முள் அளவொத்து முடியுமாயின் அஃது இலக்கணத்தான் நிறைந்த ஆசிரியத்தாழிசையாதலும்

ஈற்றயலடி குறைந்தும் இடையிடைகுறைந்தும் ஈற்றயலடி குறைந்து இடைமடக்காகியும் இடையிடைகுறைந்து இடைமடக்காகியும் நான்கடியான் வரின் அவை ஆசிரியத்துறையாதலுங் கழிநெடிலடி நான்காய்த் தம்மில் அளவொத்து முடியின் அவை ஆசிரியவிருத்தமாதலும் இலக்கணமாம். எ - று.

ஆன்ற என்ற மிகையானே ஆசிரியத்தாழிசை தனியே வரப் பெறுமாயினும் ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவருவது சிறப்புடைத்தெனக் கொள்க. சீர்வரையறுத்திலாமையால் ஆசிரியத்தாழிசையும் ஆசிரியத்துறையும் எனைத்துச்சீரானும் அடியாய் வருதல் பெற்றும்.

ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசைக்குச் செய்யுள்;—"கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவ—னின்றுநம் மானுள் வருமே லவன்வாயிற்—கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி." "பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவ—னீங்குநம் மானுள் வருமே லவன்வாயி—லாம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி." "கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவ—னெல்லி நம் மானுள்வருமே லவன்வாயின்—முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி." எனவும், தனியேவந்த ஆசிரியத்தாழிசைக்குச் செய்யுள்;-"வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை—பான்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை—நீனிற வண்ணநின் னிறைகழ றொழுதனம்." எனவும்,எருத்தடிகுறைந்த ஆசிரியத்துறைக்குச் செய்யுள்;—"கரைபொரு கான்யாற்றங் கல்லதரெம் முள்ளி வருவிராயி—னரையிருள் யாமத் தடுபுலியேறு நும்மஞ்சி யகன்றுபோக—நரையுரு மேறு நுங் கைவேலஞ்சு நும்மை—வரையர மங்கையர் வௌவுத லஞ்சுதும் வாரலையோ." எனவும், இடையிடைகுறைந்துவந்த ஆசிரியத்துறைக்குச் செய்யுள்;—"கொன்றூர்ந் தமைந்த குருமுகத் தெழினிறக் குருதிக் கோட்டின விருந்தாட் பெருங்கைக் குன்றுமென வன்றுமெனக் குமுறுகின்றன கொடுந்தொழில் வேழம்—வென்றூர்ந்தமைந்த விளங்கொளி யிளம்பிறை துளங்குவா ளிலங்கெயிற் றழலுளைப் பரூஉத்தா ளதிரும் வானென வெதிருங் கூற்றெனச் சுழலாகின்றன சுழிக்கண்யாளி—சென்றூர்ந்தமைந்த சிறுநுதிவள்ளுகிர்ப் பொறியெருத் தெறுழ்வலிப் புலவுநாறழல்வாய்ப் புனலாமெனக் கனலாமெனப் புகையாகின்றன புலிமா னேற்றை—யென்றுங் கிவையிவை யியங்கலினெந்திறத் தினிவரல்வேண்டலந் தனிவரலெனத்தலை விலக்கலினிறுவரை மிசையெறிகுறும்பிடை யிதுவென் னெனவது நோனுர்கரவிர விடைக்களவுளமது கற்றோரது கற்பன்

றே.'' எனவும், எருத்தடிகுறைந்து இடைமடக்காய்வந்த ஆசிரியத் துறைக்குச் செய்யுள்;—"வண்டுளர் பூந்தார் வளங்கெழு செம்பூட் சேஎய் வடிவேபோலத்—தண்டளிர்ப் பிண்டித் தழையேந்தி மாவி னவித் தணந்தோன்யாரே—தண்டளிர்ப் பிண்டித் தழையேந்தி வந் துநம்—பண்டைப் பதிவினவிப் பாங்கு படமொழிந்து படர்ந்தோ னன்றே.'' எனவும், இடையிடைகுறைந்து இடைமடக்காய்வந்த ஆசிரியத்துறைக்குச் செய்யுள்;—"இரங்கு குயின்முழவா வின்னி சை யாழ்தேனு—வரங்க மணிபொழிலா வாடும்போலு மிளவே னி—லரங்க மணிபொழிலா வாடுமாயின்—மரங்கொன் மணந்த கன்றூர் நெஞ்சமென் செய்த திளவேனில்.'' எனவும், அறுசீர்க்க ழிநெடிலடியான் வந்த ஆசிரியவிருத்தத்திற்குச் செய்யுள்;—"வி டஞ்சூ ழரவி னிடைநுடங்க விறல்வாள் வீசி விரையார்வேங்—கடஞ்சூழ் நாடன் காளிங்கன் கதிர்வேல் பாடு மாதங்கி—வடஞ் சேர் கொங்கை மலைதாந்தாம் வடிக்கணீல மலர் தாந்தாங்—தடந் தோ ளிரண்டும் வேய்தாந்தா மென்னுந் தன்கைத் தண்ணுமை யே.'' எனவும் வரும். ஒழிந்த கழிநெடிலடியான்வந்த ஆசிரியவி ருத்தங்கட்குச் செய்யுள் கழிநெடிலடிக்கு முன்னர்க் காட்டியவே கொள்க. பிறவும் வந்துழிக் காண்க. (உசு)

எ௩௬. துள்ள லிசையன கலியே மற்றவை
வெள்ளையு மகவலு மாய்விளைந் திறுமே.

இது நிறுத்தமுறையானே கலிப்பாவாமாறு பொதுவகையான் உணர்த்துகின்றது.

இ-ள். துள்ளலோசையைத் தமக்கு ஓசையாக உடையன வாம் எல்லாக்கலிப்பாவும்; அக்கலிப்பாக்கள் வெள்ளைச்சுரிதகத்தாற் றான் ஆசிரியச்சுரிதகத்தாற்றான் முற்றுப்பெற்று முடியும். எ-று.

மற்றென்ற மிகையானே ஏந்திசைத்துள்ளலும் அகவற்றுள்ள லும் பிரிந்திசைத்துள்ளலுமெனத் துள்ளலோசை மூன்று வகைப்ப டும்; "ஏந்திசைத் துள்ளல் கலித்தளை யியையின்—வெண்டளை தன் றளை யென்றிரண் டியையி—னேன்றிய வகவற் றுள்ளலென் றோ துப—தன்றளை பிறதளை யென்றிவை யனைத்தும்—பொருந்தி வரி னே பிரிந்திசைத் துள்ளல்.'' எனக் கூறுபவாகலின்.

இவற்றிற்குச் செய்யுள்;—"முருகவிழ்தா மரைமலர்மேன் மு டியிமையோர் புடைவரவே—வருசினனூர் தருமறைநூல் வழிபி ழையா மனமுடையா—ரிருவினைபோய் விழமுனியா வெதிரியகா

தியையறியா—நிருமலரா யருவினராய் நிலவுவர்சோ தியினிடை யே.'' எனவும், செல்வப்போர் * * * ஒளித்ததே.'' எனவும், "குடநிலைத் தண்புறவிற் கோவல ரெடுத்தார்ப்பத்—தடநிலைப் பெருந்தொழுவிற்றகையேறு மரம்பாய்ந்து—வீங்குபிணிக் கயிற்றொரீஇத் தாங்குவனத்தேறப்போய்க்—கலையினொடு முயலிரியக் கடிமுல்லை முறுவலிப்ப, வெனவாங், கானொடு புல்லிப் பெரும்புதன் முனையுங்—கானுடைத் தவர்தேர் சென்ற வாறே.'' எனவும் முறையே காண்க.

விளங்கென்ற மிகையானே ஒருசார்கொச்சகக்கலிப்பாக் கலியடியானே இறுதலுங் கொள்க. இருவகைச் சுரிதகத்தானுங் கலியானும் இறுமாறு இனிக்காட்டுங் கலிப்பாக்களுட் கண்டுகொள்க.()

எநஎ. ஒத்தா ழிசைக்கலி வெண்கலிப் பாவே
கொச்சகக் கலியொடு கலிமூன் றாகும்.

இது மேற் பொதுவகையாற் கூறிய கலிப்பாவகை இத்துணைத்தென்கின்றது.

இ - ள். ஒத்தாழிசைக்கலியும் வெண்கலியுங் கொச்சகக்கலியுமென முற்கூறிய கலிப்பா மூன்றுவகைப்படும். எ - று. (உஅ)

எநஅ. தரவொன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொ லிடைநடந்து சுரிதகந் தழுவி
நிகழ்வது நேரிசை யொத்தா ழிசையு
மாங்கத னிடையே யளவடி சிந்தடி
பாங்கமை குறளடி படுநீர்த் திரைபோ
லோய்ந்தோய்ந் துற்றிடு மாயி னன்ன
தம்போ தரங்க வொத்தா ழிசையு
மசையடி மிசைத்தா யராக மவற்றொடு
மிசைவுறின் வண்ணக வொத்தா ழிசையும்
வேற்றுத்தளை தட்டும் வெண்பா வியைந்து
மீற்றடி முச்சீ ராயிறின் முறையே
வெண்கலிப் பாவுங் கலிவெண் பாவுந்
தரவே தரவிணை தாழிசை சிலபல
மரபா னியன்றவு மயங்கிவந் தனவு
மவ்வப் பெயரா னமைந்தகொச் சகமு
மாகு மென்ப வறிந்திசி னோரே.

இது மேற்கூறிய கலிப்பாக்களாமாறு கூறுகின்றது.

இ - ள். முன்னொரு தரவுவந்து அதன்பின்பு மூன்று தாழிசைவந்து அவற்றின்பின்னர்த் தனிச்சொல் வந்து அதன்பின்னர்ச் சுரிதகவுறுப்புவந்து நடப்பது நேரிசையொத்தாழிசைக்கலிப்பாவாமென்றும், நேரிசையொத்தாழிசைக்கலிப்பாவினுட் தாழிசைக்குந் தனிச்சொற்கும் இடையே நாற்சீரடியும் முச்சீரடியும் முறையான் அமைந்த இருசீரடியுமாகிய அசையடிகள் தோன்றிய நீர்த்தரங்கங் கரைசாரக் கரைசார ஒருகாலைக்கொருகாற் சுருங்கி வருமாறுபோலக் குறைந்துகுறைந்து வருமாயின் அத்தன்மையது அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவாமென்றும், அவ்வம்போதரங்கவுறுப்பிற்கு மேலிடத்தாய்த் தரவு தாழிசை தனிச்சொற் சுரிதகமென்னும் நான்கு உறுப்போடுங்கூட அராகவுறுப்புவந்து இயையுமாயின் அது வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவாமென்றும், வேற்றுத்தளைதட்டு வேற்றோசைதழுவியும் வெண்டளைதட்டு வெள்ளோசைதழுவியும் ஈற்றடி முச்சீரான்முடியுமாயின் முறையே வெண்கலிப்பாவாமென்றுங் கலிவெண்பாவாமென்றும், ஒருதரவே வந்துந் தரவு இரண்டு இணைந்துவந்துஞ் சிலதாழிசைவந்தும் பலதாழிசைவந்தும் முறையானே நிகழ்வனவுந் தரவு தாழிசை அராகம் அம்போதரங்கந் தனிச்சொற் சுரிதகமென்னும் ஆறுறுப்புந் தம்முண் மயங்கியும் வெண்பாவினோடும் ஆசிரியத்தினோடும் மயங்கியும் வந்தனவும் முறையே தரவுகொச்சகந் தரவிணைக்கொச்சகஞ் சிஃறாழிசைக்கொச்சகம் பஃறாழிசைக்கொச்சகம் மயங்கிசைக்கொச்சகமென்னும் பெயர்களான் அமைதிபெற்ற கொச்சகக்கலிப்பாவாமென்றுங் கூறுவர் அறிந்தோர். எ - று.

பாங்கமைகுறளடி என்ற மிகையானே அசையடிதான் அளவடி ஈரடியானிரண்டும் ஓரடியானொன்றும் முச்சீரானெட்டும் இருசீராற்பதினாறுமாய் வருவது சிறப்புடைத்தெனவும், இவைநான்கும் எட்டுமாய்ச் சுருங்கிவரவும்பெறும் எனவும், அங்ஙனம் வருதல் சிறப்பின்றெனவும், வேற்றுத்தளைதட்டு வேற்றோசைதழுவிவருவது வெண்கலிப்பாவெனவே, தன்றளைதட்டுத் தன்னோசை தழுவி வருவது கலிவெண்பாவென்பது தானேபோதருமெனவும், மரபென்றமிகையானே தனிச்சொல்லுஞ் சுரிதகமும் ஒருசார் கொச்சகத்து இடையிடை வரப்பெறுமெனவுங் கொள்க.

அசையடி யெனினும் அம்போதரங்கமெனினும் ஒக்கும்.

வெண்டளைதட்டு வெள்ளோசைதழுவி வருங் கலிவெண் பாப் பன்னீரடியின் மிக்கே வருமெனக் கொள்க.

வெள்ளைச்சுரிதகத்தாலிற்ற நேரிசையொத்தாழிசைக்கலிப்பா விற்குச் செய்யுள்;—"முத்தொடு மணிதயங்கு முக்குடைக்கீழ் முனை வனே—யெத்திசையும் பல்லுயிர்க ளின்புற வினிதிருந்து—பத் துறு திசையனைத்தும் பகைபசி பிணிநீங்க—வுத்தமர்க டொழு தேத்த வொளிர்வரைபோற் செலவினுய்." இது தரவு; "எள்ள னைத்து மிடரின்றி யெழின்மாண்ட பொன்னெயி-லுள்ளிருந்த வுன் னையே யுறுதுணையென் றடைந்தோரை—வெள்ளில்சேர் வியன் காட்டுளுறைகென்றல் விழுமிதோ." "குணங்களின் வரம்பிகந்து கூடிய பன்னிரண்டு—கணங்களும்வந் தடியேத்தக் காதலித்துன் னடைந்தோரைப்—பிணம்பிறங்கு பெருங்காட்டு ளுறைகென்றல் பெருமையோ." "விடத்தகைய வினைநீக்கி வெள்வளைக்கைச் செந் துவர்வாய்—மடத்தகைய மயிலனையார் வணங்கநின் னடைந்தோ ரைத்—தடத்தகைய காடுறைத லென்பதுநின் றகுதியோ." இவை மூன்றுந் தாழிசை; "எனவாங்கு" தனிச்சொல்; "அனைத்துணையை யாயினு மாகமற் றுன்கட்—டினைத்துணையுந் தீயவை யின்மையிற் சேர்ந்து—வினைத்தொகையை வீட்டுக வென்று." இது சுரிதகம்; எனவரும். ஆசிரியச்சுரிதகத்தாலிற்ற நேரிசையொத்தாழிசைக்கலிப் பாவிற்குச் செய்யுள்;—"வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றுய்த்திரிந்து—தோணெடுந் தகைதுறந்து துன்பங்கூர் பசப்பின வாய்ப்—பூணெடுங்கு முலைகண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ." இது தரவு. "சூருடைய கடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவாற்-பீருடைய நலந்தொலையப் பிரிவாரோ பெரியவரே." "சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய வென்பவா—ணுடைய நலந்தொலைய நடப்பாரோ நலமிலரே." "சிலம்படைந்த வெங்கானஞ் சீரிலவே யென்பவாற்—புலம்படைந்த நலந்தொலையப் போவாரோ பொருளி லரே." இவைமூன்றுந் தாழிசை; "எனவாங்கு" தனிச்சொல்; "அருளொனு மிலராய்ப் பொருள்வயிற் பிரிவோர்—பன்னெடுங் காலமும் வாழியர்—பொன்னெடுந் தேரொடுந் தானையிற் பொலிந் தே." இது சுரிதகம்; எனவரும்.

எட்டும் பதினாறுங் குறையாதுவந்த அம்போதரங்கவொத்தா ழிசைக்கலிப்பாவிற்குச் செய்யுள் வந்துழிக்காண்க.

எட்டும் பதினாறுங் குறைந்து நான்கும் எட்டுமாய் வந்த அம் போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவிற்குச் செய்யுள்;—"கெடலரு

மாமுனிவர் கிளர்ந்துடன் றெழுதேத்தக்—கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய—வழலவிர் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்—தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க—வார்புன விழிகுருதி யகலிட முடனனைப்பக்-கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்.” இது தரவு; “முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைபனிப்பப்—புரைதொடித் திரடிண்டோட் போர் மலைந்த மறமல்ல—ரடியொடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்—பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ.” “கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க—வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு—மாணாதா ருடம்பொடு மறம்பிதிர வெதிர்கலங்கிச்—சேணுய ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ.” “படுமணி யினநிரைகள் பரந்துட னிரிந்தோடக்—கடுமுரணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு—வெரினொடு மருப்பொசிய வீழ்ந்துநிறம் வேறுக—வெருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ.” இவைமூன்றுந் தாழிசை; “இலங்கொளி மரகத வெழின்மிகு வியன்கடல்—வலம்புரித் தடக்கை மாஅல் நின்னிறம்.” “விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்-பொருகளி றட்டோய் புரையு நின்னுடை.” இவை நாற்சீர் ஈரடி இரண்டு அம்போதரங்கம்; இவை இரண்டும் பேரெண். “கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை—தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை—யொலியிய லுவண மோங்கிய கொடியினை—வலிமிகு சகட மாற்றிய வடியினை.” இவை நாற்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம்; இவை நான்கும் அளவெண். “போரவுணர்க் கடந்தோய் நீஇ—புணர்மருதம் பிளந்தோய் நீஇ—நீரகல மளந்தோய் நீஇ—நிழறிகழும் படையோய் நீஇ.” இவை முச்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம்; இவை இடையெண்; “ஊழிநீஇ, யுலகுநீஇ, யுருவுநீஇ, யருவுநீஇ,யாழிநீஇ, யருளுநீஇ, யறமுநீஇ, மறமுநீஇ.” இவை இருசீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்; இவை சிற்றெண்; “எனவாங்கு” தனிச்சொல்; “அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்—றொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்—கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்—புயலுறழ் தடக்கைச் செவ்வே லச்சுதன்—றொன்றுபுரி கடலுலக முழுதுட—ஞென்றுபுரிதிகிரி யுருட்டுவோ னெனவே.” இது சுரிதகம்; எனவரும்.

ஆறுறுப்புங் குறையாது வந்த வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவிற்குச் செய்யுள்;—“விளங்குமணிப் பசும்பொன்னின் விசித்தமைத்துக் கதிர்கான்று—துளங்குமணிக் கனைகழற்காற் றுறுமலர் நறும்பைந்தார்ப்—பரூஉத்தடக்கை மதயானைப் பகட்டெழி லெ

ரிகுஞ்சிக்—குரூஉக்கொண்ட மணிப்பூணோய் குறையிரந்து முன்னாட்கண்—மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கு மல்லார்க்குந்—தாயாகித் தலையளிக்குந் தண்டுறை யூரகேள்." இது தரவு; "காட்சியாற் கலப்பெய்தி யெத்திறத்துங் கதிர்ப்பாகி—மாட்சியாற் பிரியாத மரபொத்தாய் கரவினாற்—பிணிநலம் பிரிவெய்திப் பெருந்தடந் தோள் வனப்பழிய—வணிநலந் தனியேவந் தருளுவது மருளாமோ." "அன்பினா லமிர்தளைஇ யறிவினாற் பிறிதின்றிப்—பொன்புனை பூணகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்—பெருவரைத்தோளருளுதற் கிருளிடைத் தமியையாய்க்-கதிர்வளைத்தோள் கதிர்ப்பிக்குங் காதலுங் காதலோ." "பாங்கனையே வாயிலாப் பல்காலும் வந்தொழுகுந்—தேங்காத கரவினையுந் தெளியாத விருளிடைக்கட்—குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் றமியையாய்த்—தடமலர்த்தா ரருளுநின் றகுதியுந் தகுதியோ." இவை மூன்றுந் தாழிசை; "தாதுறுமுறிசெறி தடமலரிடையிடை தழலெனவிரிவன பொழில்." "போதுறுநறுவிரை புதுமலர்தெரிதரு கருநெய்தல் விரிவன கழி." "தீதுறுதிறமறு கெனநனி முனிவன துணையொடு பிணைவன துறை." "மூதுறுதொழிலொடு குழிகெழுமொலிகலி கடிதொடர்புடையது கடல்." இந்நான்கும் அராகம்; "கொடுந்திற லுடையன சுறவேறு கோட்பதனா—லிடுங்கழி யிராவருதல் வேண்டாமென் றுரைத்திலமோ." "கருநிறத் துறுதொழிற் கராம்பெரி துடைமையா—னிருணிறத் தொருகானி விராவார லென்றிலமோ." இவை நாற்சீர் இரண்டடி இரண்டு அம்போதரங்கம்; "நாணொடு கழிந்தன்றாற் பெண்ணரசி நலத்தகையே-துஞ்சலு மொழிந்தன்றாற் றொடித்தோளி தடங்கண்ணே—யரற்றொடு கழிந்தன்றா லாரிருளு மாயிழைக்கே—நயப்பொடு கழிந்தன்றா னனவினு நன்னுதற்கே." இவை நாற்சீர் ஓரடி நான்கு அம்போதரங்கம்; "அத்திறத்தா லசைந்தனதோ-ளலர்தற்கு மெலிந்தனகண்—பொய்த்துரையாற் புலர்ந்ததுமுகம்-பொன்னிறத்தாற் போர்த்தனமுலை—யழலினா லசைந்தது நகை-யணியினா லொசிந்ததிடை—குழலினா னிமிர்ந்ததுமுடி-குறையினாற் கோடிற்றுநிறை." இவை முச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்; "உட்கொண்ட தகைத்தொருபா—லுலகறிந்த வலத்தொருபால்—கட்கொண்ட றுளித்தொருபால்—கழிவெய்தும் படிற்றொருபால்—பரிவுறூஉந் தகைத்தொருபால்—படர்வுறூஉம் பசப்பொருபால்—இரவுறூஉந் துயரொருபாலிளிவந்த வெளிற்றொருபால்—மெலிவுவந் தலைத்தொருபால்—விளர்ப்புவந் தடர்த்தொருபால்—பொலிவுசென் றகன்றொருபால்—பொறைவந்து கூர்ந்தொருபால்-காதலிற் கதிர்ப்பொருபால்—கட்படாத் துயரொருபா—லேதில

சென்றணைந்தொருபா—லியனுணிற் செறிவொருபால்.'' இவை இரு சீர் ஓரடிப் பதினாறு அம்போதரங்கம்; "எனவாங்கு'' தனிச்சொல்; "இன்னதிவ் வழக்க மித்திற மிவணல—மென்னவு முன்னாட் டின்று யாகிக்—கலந்தவ ணிலைமை யாயினு நலந்தகக்—கிளையொடு கெழீஇய தளையவிழ் கோதையைக்—கற்பொடு காணிய யாமே—பொற்பொடு பொலிகநும் புணர்ச்சி தானே.'' இது சுரிதகம்; எனவரும்.

வேற்றுத்தளைதட்டு வந்த வெண்கலிப்பாவிற்குச் செய்யுள்;— "ஏர்மலர் நறுங்கோதை யெருத்தலைப்ப விறைஞ்சித்தன்—வார்மலர்த் தடங்கண்ணார் வலைப்பட்டு வருந்தியவென்—றூர்வரை யகன்மார்பன் றனிமையை யறியுங்கொல்—சீர்மலி கொடியிடை சிறந்து.'' எனவும், கலித்தளைதட்டுவந்த கலிவெண்பாவிற்குச் செய்யுள்;- "வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்—கோளார்ந்த பூணுகங் குழைபுரளக் கோட்டெருத்தின்—மாலைதாழ் கூந்தலார் வரன்முறையால் வந்தேத்தச்—சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ் சொன்முறையால்—மனையறமுந் துறவறமும் மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்—வினையறுக்கும் வகைதெரிந்து வீடொடுகட் டிவையுரைத்த—தொன்மைசான் மிகுகுணத்துத் துறவரைசைத் தொழுதேத்த—நன்மைசால் வீடெய்து மாறு.'' எனவும், வெண்டளை தட்டுவந்த கலிவெண்பாவிற்குச் செய்யுள்;— "சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினு மாடு—மணற்சிற்றில் காலிற் சிதையா வடைச்சிய—கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி—நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நா—ளன்னையும் யானு மிருந்தேமா வில்லிலே—யுண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை—யடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழா—யுண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்—தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை—வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்—டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா—வன்னை யலறிப் படர்தரத் தன்னையா—னுண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்—தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக்—கடைக்கணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டஞ்—செய்தானக் கள்வன் மகன்.'' எனவும் வரும்.

தனிச்சொல்லின்றிக் கலியடியானேயிற்ற தரவுகொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள்;—"செல்வப்போர்க் கதக்கண்ணன் * * * ஒளித்ததே.'' எனவும், தனிச்சொற்பெற்றுச் சுரிதகத்தாலிற்ற தரவு கொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள்;—"குடநிலைத்தண்புறவிற் *** சென்றவாறே.'' எனவும் வரும்.

இடையிடை தனிச்சொற்பெற்றுச் சுரிதகத்தாலிற்ற தரவிணைக்கொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள்;—"வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய—கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்குங் காவலனுங்—கொடிபடு வரைமாடக் கூடலார் கோமானே." இது ரதவு; "எனவாங்கு" தனிச்சொல்; "துணைவளைத்தோ ளிவண்மெலியத் தொன்னலந் தொலைப்புண்டாங்—கிணைமலர்த்தா ரருளுமேலிதுவிதற்கோர் மாறென்று—துணைமலர்த் தடங்கண்ணார் துணையாகக் கருதாரே." இது தரவு; "அதனால்" தனிச்சொல்; "செவ்வாய்ப் பேதை யிவடிறத்—தெவ்வா றுங்கொலிஃ தெண்ணியவாறே." இது சுரிதகம்; எனவரும்.

இடையிடை தனிச்சொற்பெற்று வந்த சிஃறாழிசைக்கொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள்;—"பரூஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின் மிசைத்தோன்றிக்—குரூஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க் குடைமன்னர் புடைசூழப்—படைப்பரிமான் றேரினொடும் பரந்துலவு மறுகினிடைக்—கொடித்தானை யிடைப்பொலிந்தான் கூடலார் கோமானே." இது தரவு; "ஆங்கொருசார், உச்சியார்க்கிறைவனா யுலகெலாங் காத்தளிக்கும்—பச்சையார் மணிப்பைம்பூட் புரந்தரனாப் பாவித்தார்—வச்சிரங்கைக் காணாத காரணத்தான் மயங்கினரே." "ஆங்கொருசார், அக்கால மணிநிரைகாத் தருவரையாற் பனிதவிர்த்து—வக்கிரனை வடிவழித்த மாயவனாப் பாவித்தார்—சக்கரங்கைக் காணாத காரணத்தாற் சமழ்த்தனரே." ஆங்கொருசார், மால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்து மயங்காச்செங் கோல் கொண்ட சேவலங் கொடியவனாப் பாவித்தார்—வேல்கண்ட தின்மையால் விம்மிதராய் நின்றனரே." இவை மூன்றுந் தாழிசை; "அதாஅன்று, கொடித்தே ரண்ணல் கொற்கைக் கோமா—னின்புக ழொருவன் செம்பூட் சேஎ—யென்றுநனி யறிந்தனர் பலரே தானு—மைவரு ளொருவனென் றறியலாகா—மைவரை யானை மடங்கா வென்றி—மன்னவன் வாழியென் றேத்தத்—தென்னவன் வாழி திருவொடும் பொலிந்தே." இது சுரிதகம்; எனவரும்.

தனிச்சொல் இடைவந்த பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பாவிற்குச் செய்யுள்;—"தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்—குண்மதியு முடனிறையு முடன்றளர முன்னாட்கட்—கண்மதியோர்ப் பிவையின்றிக் காரிகையி னிறைகவர்ந்து—பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறிதாமோ." இது தரவு; "இளநலமிவள்வாட விரும்பொருட்குப் பிரிவாயேற்—றளநல முகைவெண்

பற் ருழ்குழ றளர்வாளோ." "தகைநல மிவள்வாடத் தரும்பொ ருட்குப் பிரிவாயேல்—வகைநல மிவள்வாடி வருந்தியில் லிருப்பா ளோ." "அணிநல மிவள்வாட வரும்பொருட்குப் பிரிவாயேல்— மணிநல மிவள்மேனி மாசொடு மடிவாளோ." "நாம்பிரியே மினி யென்று நன்னுதலைப் பிரிவாயே—லோம்பிரியே மெனவுரைத்த வுயர்மொழியும் பழுதாமோ." "குன்றளித்த திரடோளாய் கொய் புனத்துக் கூடியஞான்— றன்றளித்த வருண்மொழியா லருளுவது மருளாமோ." "சில்பகலு மூடியக்காற் சிலம்பொலிச்சீ றடிப்பர வி—பல்பகலுந் தலையளித்த பனிமொழியும் பழுதாமோ." இவை ஆறுந் தாழிசை. "எனவாங்கு" தனிச்சொல். "அரும்பெற லிவளி னுந் தரும்பொரு ளதனினும்—பெரும்பெற லரியன வெறுக்கையு மற்றே—அதனால், விழுமிய தறிமதி வாழி—கெழுமிய காதலிற் றரும்பொருள் சிறிதே." இது சுரிதகம்.

கலிக்கு ஓதப்பட்ட ஆறுறுப்பும் மிக்குங் குறைந்தும் பிறழ்ந் தும் வந்துமயங்கிய மயங்கிசைக்கொச்சகக்கலிப்பாவிற்குச் செய் யுள்;—"மணிகிளர் நெடுமுடி மாயவனுந் தம்முனும்போன்—றணிகி ளர் நெடுங்கடலுங் கானலுந் தோன்றுமால்—நுரைநிவந் தவை யன்ன நொய்ப்பறைய சிறையன்ன—மிரைநயந் திறைகூரு மே மஞ்சா றுறைவகேள்." "மலையென மழையென மஞ்செனத் திரை பொங்கிக்—கனலெனக் காற்றெனக் கடிதுவந் திசைப்பினும்—விழு மியோர் வெகுளிபோல் வேலாழி யிறக்கலா—தெழுமுந்நீர் பெ யர்ந்தோடு மேமஞ்சா றுறைவகேள்." இவை இரண்டுந் தரவு. "கொடிபுரையு நுழைநுசுப்பிற் குழைக்கமர்ந்த திருமுகத்தோ— டொடிநெகிழ்ந்த தோள்கண்டுந் துறவலனே யென்றியால்." "கண் கவரு மணிப்பைம்பூட் கயில்கவைய சிறுபுறத்தோ—டெண்பனிநீ ருகக்கண்டுந் திரியலனே யென்றியால்." "நீர்பூத்த நிரையிதழ்க்க ணின்றுசிந்த புருவத்தோள்—பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே யென்றியால்." "கனைகுரல்யாற் றிருகரைபோற் கைநில்லா துண் ணெகிழ்ந்து—நினையுமென் னிலைகண்டு நீங்கலனே யென்றியால்." "வீழ்சுடரி னெய்யேபோல் விழுமநோய் பொறுக்கல்லாத்—தாழு மென் னிலைகண்டுந் தாங்கலனே யென்றியால்." "கலங்கவிழ்த்த நாய் கன்போற் களைதுணை பிறிதின்றிப்—புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்." இவை ஆறுந் தாழிசை. "அதனால்" தனிச்சொல். "அடும்பம விறும்பி னெடும்பணை மிசைதொறுங்— கொடும்புற மடலிடை யொடுங்கின குருகு." "செறிதரு செருவிடை யெறிதொழி லிளையவர்—நெறிதரு புரவியின் மறிதருந் திமில்."

"அரசுடை நிரைபடை விரைசெறி முரசென—நுரைதரு திரை யொடு கரைபொருங் கடல்." "அலங்கொளி ரவிர்சுட ரிலங்கொளி மறைதொறுங்—கலந்தெறி காலொடு புலம்பின பொழில்." இவை நான்கும் அராகம். "விடாஅது கழலுமென் வெள்வளையுந் தவிர்ப் பாய்மன்—கெடாஅது பெருகுமென் கேண்மையு நிறுப்பாயோ." "ஒல்லாது கழலுமென் ஞெளிவளையுஞ் செறிப்பாய்மன்—னில்லா து பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ." "தாங்காது கழலுமென் றகைவளையுந் தவிர்ப் பாய்மன்—னீங்காது பெருகுமென் னெஞ் சமு நிறுப்பாயோ." "மறவாத வன்பினேன் மனநிற்கு மாறுரை யாய்—துறவாத தமருடையேன் றுயர்தீரு மாறுரையாய்." "காத லார் மார்பின்றிக் காமக்கு மருந்துரையா—யேதிலார் தலைசாய யா னுய்யுமாறுரையாய்." "இணைபிரிந்தார் மார்பின்றி யின்பக்கு மருந் துரையாய்-துணைபிரிந்த தமருடையேன் றுயர்தீரு மாறுரையாய்." இவை ஆறுந் தாழிசை; "எனவாங்கு" தனிச்சொல்; "பகைபோன் றது துறை-பரிவாயின குறி-நகையிழந் ததுமுக—நனிநாணிற் றுளந்-- தகையிழந் ததுதோ—டலைசிறந்தது துயர்—புகைபரந்ததுமெய்— பொறையாயிற் றென்னுயிர்." இவை இருசீர் ஓரடி எட்டம்போத ரங்கம்; "அதனால்" தனிச்சொல்; "இனையது நினையாலனையது பொழுதா—னினையல் வாழி தோழி தொலையாப்—பனியொடு கழிக வுண்கண்—ணென்னொடு கழிகவித் துன்னிய நோயே." இது சுரிதகம்; என வரும்.

சுரிதகம் இடையிடைவந்த கொச்சகச்செய்யுளும் வெண்பாவி னோடும் ஆசிரியத்தினோடும் மயங்கிவந்த மயங்கிசைக்கொச்சகச் செய்யுளும் வந்துழிக் காண்க. (உக)

எ௱௬௯. அடியெனைத் தாகியு மொத்துவந் தளவினிற்
கடையடி மிகுவது கலித்தா ழிசையு
நெடிலடி நான்காய் நெறிப்பட நிகழ்வது
கலித்துறை யாதலுங் கலிப்பா விருத்த
மளவடி நான்கின தாதலும் விதியே.

இது மேற்கூறிய கலிப்பாவிற்கு இனமாகிய தாழிசை துறை விருத்தங்களாமாறு கூறுகின்றது.

இ - ள். அடிகள் பலவாயுஞ் சிலவாயுந் தம்முள் அளவொத்து வந்து ஈற்றடி மிக்குவருவது கலித்தாழிசையாதலும் ஐஞ்சீரடி நான் காய் ஒழுங்குபட நடப்பது கலித்துறையாதலும் நாற்சீரடி நான்கு உடையது கலிவிருத்தமாதலும் இலக்கணமாம். எ - று.

நெறிப்பட என்றதனனே கலித்தாழிசை தம்முள் அளவொவ்வாதும் வருமெனவுந், தனியேவரப்பெறுமாயினும் ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவருவது சிறப்புடைத்தெனவுங், கலித்துறை கட்டளைக்கலித்துறையுங் கலிநிலைக்கலித்துறையுமென்று இருவகைத்தாய் அவற்றுள் நேரசைமுதலாகிய கட்டளைக்கலித்துறை ஓரடிக்கு எழுத்துப் பதினாறும் நிரையசைமுதலாகிய கட்டளைக்கலித்துறை ஓரடிக்கு எழுத்துப் பதினேழுமாய் வருமெனவுங் கொள்க. சீர்வரையறுத்திலாமையாற் கலித்தாழிசை எனைத்துச்சீரானும் அடியாய் வரப்பெறுமென்பதூஉம் பெற்றாம்.

இரண்டடியாய் ஈற்றடிமிக்கு ஒருபொருண்மேல் மூன்றடுக்கி வந்த சிறப்புடைக் கலித்தாழிசைக்குச் செய்யுள்;—"கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம்—பொய்தற் சிறுகுடில் வாரனீயைய நலம்வேண்டின்." "ஆய்தினை காத்து மருவி யடுக்கத்தெம்—மாசில் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்." "மென்றினை காத்து மிகுபூங் கமழ்கானற்—குன்றச் சிறுகுடில் வாரனீ யைய நலம் வேண்டின்." எனவரும்.

பல அடியாய் ஈற்றடிமிக்கு ஏனையடிமூன்றுந் தம்மில் அளவொத்துத் தனியேவந்த கலித்தாழிசைக்குச் செய்யுள்;—"வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறி யெங்—கேள்வரும் போழ்தி னெழாஅல்வாழி வெண்டிங்காள்—கேள்வரும் போழ்தி னெழாதாய்க் குருலியரோ—நீள்வரி நாகத் தெயிறே வாழி வெண்டிங்காள்" எனவரும்.

பல அடியாய் ஈற்றடிமிக்கு இரண்டாம் அடி குறைந்து முதலடியும் மூன்றாம் அடியுந் தம்முள் அளவொத்துத் தனியேவந்த கலித்தாழிசைக்குச்செய்யுள்;—"பூண்ட பறையறையப் பூத மருள—நீண்ட சடையா னாடுமே—நீண்ட சடையா னாடு மென்ப—மாண்ட சாயன் மலைமகள் காணவே காணவே." எனவரும்.

நேரசைமுதலாகிய கட்டளைக்கலித்துறைக்குச் செய்யுள்;—"தேனார்கமழ்தொங்கன் மீனவன்கேட்பத்தெண் ணீரருவிக்—கானார்மலயத் தருந்தவன்சொன்னகன் னித்தமிழ்நூல்—யானாடாத் துகின் றேனென்றெனக்கே நகைதருமா—லானவறிவி னவர்கட் கென்னாங்கொலென் னாதரவே." எனவும், நிரையசைமுதலாகிய கட்டளைக்கலித்துறைக்குச் செய்யுள்;—"அடிவரையின்றி யள

வொத்துமந்தடி நீண்டிசைப்பிற்—கடிதலில்லாக்கலித் தாழிசையாகுங் கலித்துறையே—நெடிலடிநான்காய் நிகழ்வதுநேரடி யீரிரண்டாய்—விடினதுவாகும் விருத்தந்திருத்தகு மெல்லியலே." எனவும், கலிநிலைக்கலித்துறைக்குச் செய்யுள்; "யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித்—தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்—றேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேற்—கானும் புள்ளுங் கைதையு மெல்லாங் கரியன்றே." எனவும், கலிவிருத்தத்திற்குச் செய்யுள்;—"வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலினுய்தலி னெஞ்சுட ராழியி னுன்றமர்—வாய்தலி னின்றனர் வந்தென மன்னன்முன்—னீதலை சென்றுரை நீள்கடை காப்போய்." எனவும் வரும். பிறவும் அன்ன. (௩௦)

எசo. தூங்க லிசையன வஞ்சி மற்றவை
யாய்ந்த தனிச்சொலோ டகவலி னிறுமே.

இது நிறுத்தமுறையானே வஞ்சிப்பாவிற்கு ஓசையும் ஈறுமாமாறு கூறுகின்றது.

இ - ள். தூங்கலோசையைத் தமக்கு ஓசையாக உடையனவாம் மேற்கூறிய குறளடிவஞ்சிப்பாவுஞ் சிந்தடிவஞ்சிப்பாவும்; அவ்விருவகை வஞ்சிப்பாவும் ஆராய்ந்த தனிச்சொல்லோடு புணர்ந்து ஆசிரியச்சுரிதகத்தான் இறும். எ - று.

மற்றென்ற மிகையானே ஏந்திசைத்தூங்கலும் அகவற்றூங்கலும் பிரிந்திசைத்தூங்கலுமெனத் தூங்கலோசை மூன்றுவகைப்படும்;-"ஒன்றிய வஞ்சித் தளையே வரினு—மொன்றாத வஞ்சித் தளையே வரினு—மென்றிவை யிரண்டும் பிறவு மயங்கினு—மேந்த லகவல் பிரிந்திசைத் தூங்கலென்—றாய்ந்த நிரனிறை யாகுமென்ப." எனக் கூறுபவாகலின்.

இவற்றிற்குச் செய்யுள்;—"வினைத்திண்பகை விழச்செற்றவன்—வனப்பங்கய மலர்த்தாளிணை—நினைத்தன்பொடு தொழுதேத்தினர்—நாளு, மயலா நாற்கதி மருவார்—பெயரா மேற்கதி பெறுகுவர் விரைந்தே." எனவும், "வானோர்தொழ வண்டாமரைத்—தேனார்மலர் மேல்வந்தரு—ளானவருள் கூறறிவனைக்—காணார், மலர்கொண் டேத்தி வணங்குநர்—பலர்புகழ் முத்தி பெறுகுவர் விரைந்தே." எனவும், "மந்தானிலம் * * * மகிழ்ந்தே." எனவும் முறையே காண்க. தனிச்சொற்பெற்று ஆசிரியச்சுரிதகத்தாலிற்ற

குறளடிவஞ்சிப்பாவிற்குச் செய்யுள்;—“சுறமறிவன துறையெல்லாம் * * * மன்னனூரே.” எனவும், தனிச்சொற்பெற்று ஆசிரியச்சுரிதகத்தாலிற்ற சிந்தடிவஞ்சிப்பாவிற்குச் செய்யுள்;—“தொன்னலத்தின் * * * தற்றே.” எனவும் வரும். (௩௧)

எ௪௧. குறளடி நான்மையிற் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை யாதலு
மாங்கவை தனிவரி னதன்றுறை யாதலும்
பாங்கமை சிந்தடி நான்காய் நடப்பது
வஞ்சி விருத்த மாதலு மரபே.

இது மேற்கூறிய வஞ்சிப்பாவிற்கு இனமாகிய தாழிசை துறை விருத்தங்களாமாறு கூறுகின்றது.

இ - ள். இருசீரானாகிய நாலடியுடைய செய்யுள் ஒருபொருண்மேல் மூன்றாய்வருவன வஞ்சித்தாழிசையாதலும் இருசீரடி நான்காய்த் தனியே வருவது வஞ்சித்துறையாதலும் முறையமைந்த முச்சீரடி நான்காய் நடப்பது வஞ்சிவிருத்தமாதலும் இலக்கணமாம். எ - று.

வஞ்சித்தாழிசைக்குச் செய்யுள்;—“மடப்பிடியை மதவேழந்—தடக்கையான் வெயின்மறைக்கு—மிடைச்சுர மிறந்தார்க்கே—நடக்குமென் மனனேகாண்.” “பேடையை யிரும்போத்துத்-தோகையான் வெயின்மறைக்குங்—காடக மிறந்தார்க்கே—யோடுமென் மனனேகாண்.” “இரும்பிடியை யிகல்வேழம்—பெருங்கையான் வெயின்மறைக்கு—மருஞ்சுர மிறந்தார்க்கே—விரும்புமென் மனனேகாண்.” எனவும், வஞ்சித்துறைக்குச் செய்யுள்;—“மைசிறந்தன மணிவரைக்—கைசிறந்தன காந்தளும்—பொய்சிறந்தனர் காதலர்—மெய்சிறந்திலர் விளங்கிழாய்.” எனவும், வஞ்சிவிருத்தத்திற்குச் செய்யுள்;—“சோலை யார்ந்த சுரத்திடைக்—காலை யார்கழலார்ப்பவும்—மாலை மார்பன் வருமாயி—னீல வுண்கணிவள் வாழுமே.” எனவும் வரும். (௩௨)

எ௪௨. தளைசீர் வண்ணந் தாங்கெட வரினே
குறுகிய விகரமுங் குற்றிய லுகரமு
மளபெடை யாவியு மலகியல் பிலாமையு
மைகான் குறுகிற் குறிலியல் பெய்தலு

மாய்தமு மொற்று மளபெழூஉ நிற்புழி
வேறல கெய்தும் விதியின வாதலு
மொற்றள பெழாவழிப் பெற்றவல கின்மையும்
பெற்றியென் றுரைப்பர் கற்றுணர்ந் தோரே.

நிறுத்தமுறையானே எழுத்து முதலிய அறுவகை உறுப்பிலக்கணமும் பாவும் பாவினமுமாகிய இருவகைச்செய்யுளிலக்கணமும் உணர்த்தி அவற்றின் ஒழிபிலக்கணம் உணர்த்துவான் புகுந்தவற்றுள் இஃது ஒருசார் எழுத்துக்கட்கு ஆவதோர் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். தளையுஞ் சீரும் ஓசையும் மேற்கூறிய இலக்கணத்தோடு மாறுகொள்ள வருவழிக் குற்றியலிகரமுங் குற்றியலுகரமும் உயிரளபெடையும் அலகுகாரியம் பெறுமையும், ஐகாரங் குறுகிய இடத்துக் குற்றெழுத்தேபோலக்கொண்டு அலகிடப்படுதலும், ஆய்தமும் ஒற்றும் அளபெடுத்துநிற்புழி ஓரலகுபெறுந் தன்மையவாதலும், ஒற்றுக்கள் அளபெழாவழி முற்கூறிய அலகுபெறுமையும் இலக்கணமென்று கூறுவர் கற்றோர். எ - று.

ஒற்று அளபெழாவழிப் பெற்ற அலகில எனவே அவ்வொற்றின்பாற்படும் ஆய்தமும் அளபெழாவழி அலகுபெறுமையும் பெற்றாம்.

"குழலினி தியாழினி தென்பர்தம் மக்கண்—மழலைச்சொற் கேளா தவர்." எனவும்,"அருளல்ல தியாதெனிற் கொல்லாமைகோறல்—பொருளல்ல தவ்வூன் றினல்."எனவும்வரும். இவற்றுட் குற்றியலிகரம் வந்து முறையே ஆசிரியத்தளையுங் கலித்தளையுந் தட்டு வெள்ளையுட் பிறதளை விரவாவென்னும் இலக்கணத்தோடு மாறுபட்டு வெண்பா அழிய நிற்றலின் ஈண்டுக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தான் அலகுபெறாவென்று களைய வேண்டலையாம். "சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்கா ஞளைப்—பெறுநன்றி மன்னும் பெரிதென்—றுறுநன்றி—தானவாய்ச் செய்வதூஉந் தானமன் றென்பவே—வானவா முள்ளத் தவர்." இதனுள் இன்றிவர்க்கியாஞ் செய்தக்காலென்புழிக் குற்றியலிகரம் வந்து வஞ்சியுரிச்சீராய் வெள்ளையுள் நிரையீற்றுரிச்சீர் விரவாவென்னும் இலக்கணத்தோடு மாறுபட்டு வெண்பா அழிய நிற்றலின் ஈண்டுக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தான் அலகுபெறாதென்று களைய வேண்சீராம். "கொன்றுகோடுநீடு குருதிபாயவுஞ்—சென்றுகோடுநீடு செழுமலைபொருவன—வென்றுகோடுநீடு விறல்வேழ—மென்றுமூடு

நீடு பிடியுளபோலு—மதனு, விண்டிடை யிரவிவ ணெறிவரின்—வண்டுண் கோதை யுயிர்வா ழலளே.” என இக்குறளடிவஞ்சிப்பாவினுட் குற்றுகரம்வந்து ஆறசைச்சீரும் ஐயசைச்சீருமாயின அவ்வாறு வருகவென்னும் ஒத்திலாமையால் ஆண்டுக் குற்றுகரங்களை இவ்விலக்கணத்தால் அலகுபெறாவென்று களையச் சீர்சிதையாதாம். “இடைநுடங்க வீர்ங்கோதை பின்றாழ வாட்கண்—புடைபெயரப் போழ்வாய் திறந்து—கடைகடையி—னுப்போஒ வெனவுரைத்து மீள்வா ளொளிமுறுவற்—கொப்போநீர் வேலி யுலகு.” இதனுள் உப்போஒ வென்புழிப் பண்டமாற்றின்கண் அளபெடைவந்து கலித்தளைதட்டு வெண்பா அழியவந்தமையான் ஈண்டு உயிரளபெடையை இவ்விலக்கணத்தான் அலகுபெறாதென்று நெட்டெழுத்தேபோலக் கொண்டு அலகிடத் தளைசிதையாதாம். “பிண்ணாக்கோஒ வென்னும் பிணாவின் முகத்திரண்டு—கண்ணாக் குடையன போறக் கட்டுரைக்கும்—பிண்ணாக்குக்—கொள்ளீரோ வென்பாடன் கூரெயிறு காளையரை—யுள்ளீர்வபோல வுள.” எனவும், “பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள்—சொல்லுக்குத் தோற்றின்னந் தோற்றிலவா—னெல்லுக்கு—நூறோஒநூ றென்பா ளுடங்கிடைக்கு மென்முலைக்கு—மாறோமா லன்றளந்த மண்.” எனவும், “களிச்சாத்தாஅஅ வென்றியான் கண்காண நின்று—விளித்தாலும் வாரான் விரைந்து.” எனவும் வரும் இவற்றுட் பண்டமாற்றின்கண்ணும் விளித்தற்கண்ணும் அளபெடைகள் வந்து வெண்பாவினுள் நாலசைச்சீராய் வண்ணம் அறுக்குங்காற் “செப்பலிசையன வெண்பா” என்னும் இலக்கணத்தோடு மாறுகொண்டு செப்பலோசை அழியநிற்குமாகலின் ஆண்டு உயிரளபெடைகளை இவ்விலக்கணத்தால் அலகுபெறாவென்று களைய வண்ணஞ் சிதையாதாம்.

இயல்பென்ற மிகையானே அலகிடும் இடத்துக் குற்றிகரக் குற்றுகரங்கள் ஒற்றியல்பினவாயும் உயிரளபெடை நெட்டெழுத்தியல்பிற்றாயும் நிற்றல்கொள்க.

இனி எதிர்மறுத்தலென்னும் இலக்கணத்தாற் சீருந் தளையுந் திருந்தின் அலகுபெறுமென்பதாயிற்று. அங்ஙனம் அலகுபெறும் இடத்துத் தளை சீர் வண்ணமென முறைபிறழக் கூறியவதனாற் குற்றிகரக் குற்றுகரங்கள் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகுபெறுமெனக்கொள்க.

உயிரளபெடை அலகுபெறுமாறு மேற்பெறப்படும். குற்றிகரக் குற்றுகரங்கள் குற்றெழுத்தின்பயத்தவாய் அலகுபெறுமாறு;-

நீ "வந்து பேரி னுயிர்வாழும் வாராக்கான்—முந்தியாய் பெய்த வளை கழலு—முந்தியாங்—கோளானே கண்டனங் கோல்குறியா யின்னு மோர்—நாளானே நாம்புணரு மாறு." இதனுள் வந்துநீயென்புழியும் முந்தியாயென்புழியுங் காண்க. "நடைக்குதிரை யேறி நறுந்தார் வழுதி—யடைப்பையாய் கோறு வெனலு—மடைப்பையான்—சுள்ளற் சிறுகோல் கொடுத்தான் றனைப்பெறினுஞ்—செல்லா தியாங் காண் டலை." எனவும், "கெண்டையை வென்ற கிளரொளி யுண்க ணுள்—பண்டைய ளல்லள் படி." எனவும், "அன்னையையா னேவ தெவன்மா ணணியிழாய்—புன்னையையா னேவன் புலந்து." எனவும் வரும் இவற்றுள் ஐகாரக்குறுக்கங் குற்றெழுத்தேபோல நின்று குறிலோடும் நெடிலோடுங் கூடி நிரையசையாயினவாறு காண்க. "எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்—வெஃஃகு வார்க்கில்லை வீடு."எனவும், "கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு—பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ—மின்ன் னுழைமருங்குல் மே தகு சாயலா—ளென்ன் பிறமகளா மாறு." எனவும் ஆய்தமும் ஒற்றும் அளபெழுந்து ஓரலகுபெற்றவாறு காண்க. "உணர்ந்தார்க்கு ணர்வரி யோன்றில்லைச்சிற்றம் பலத்தொருத்தன்—குணந்தான்வெளிப்பட்ட கொவ்வைச்செவ்வாயிக் கொடியிடைதோள்—புணர்ந் தாற்புணருந் தொறும்பெரும்போகம் பின்னும்புதிதாய்—மணந்தாழ் புரிகுழலா ளல்குல்போல வளர்கின்றதே." என இவ்வாறு ஈரொற் றுடனிலையாய் நிற்பினும் அளபெழாமையிற் குற்றெழுத்தின்பயத்த வாய் அலகுபெறுமை காண்க. "ஈரொற் றுயினு மூவொற் றுயி னு—மோரொற் றியல வென்மனூர் புலவர்." என்றார்பிறருமெனக் கொள்க.

ஒற்றளபெழாவழி அலகுபெறுதென்னுது பெற்றவலகு என்ற மிகையானே ஒற்றளபெழினும் மற்றேரெழுத்தினெடு கூடி நிரையசையாகாவெனக் கொள்க. (௩௩)

எசஙு. விட்டிசைத் தன்றி முதற்கட் டனிக்குறி
னேரா காமையு நெட்டெழுத் தளபெழி
னேர்நே ராதலுங் குறினெடி லளபெழி
னிரைநே ராதலு நெறியெனப் படுமே.

இது நிறுத்தமுறையானே ஒருசார் அசைகட்கு ஆவதோர் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். மேற் பொதுவகையாற் தனிக்குறில் நேரசையா மென்றாராயினும் விட்டிசைத்துநின்ற இடத்தல்லது மொழிமுதற் கண் நின்ற குற்றெழுத்து நேரசையாகாமையும் நெட்டெழுத்து அள பெடுத்துவருமெனின் அவ்விரண்டும் நேர்நேராதலுங் குற்றெழுத் தோடு புணர்ந்த நெட்டெழுத்து அளபெழுந்தால் அவ்விரண்டும் நிரைநேராதலும் முறையெனப்படும். எ - று.

எனப்படுமென்ற மிகையானே விட்டிசைத்துவருவது குறிப் பின்கண்ணும் ஏவற்கண்ணுந் தற்சுட்டின்கண்ணும் வினாவின்கண் ணுஞ் சுட்டின்கண்ணுமெனவும், விட்டிசைத்து நின்ற இடத்து மற் றொன்றினோடு கூடி நிரையசையாகாதெனவுங் கொள்க.

"உண்ணா னொளிநிறா னோங்கு புகழ்செய்யான்—றுன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே—வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ—விழந்தானென் றெண்ணப் படும்." இதனுள் அஆ என்புழி அருளின்கட்குறிப்பின் விட்டிசைத்து வந்த குற்றெ ழுத்து மொழிமுதற்கண் நேரசையாயினவாறு காண்க. "வெறிக மழ் தண்புறவின் வீங்கி யுகளு—மறிமுலை யுண்ணாமை வேண் டிற்—பறிமுன்கை—அஉ வறியா வறிவினிடை மகனே— நொஅலைய னின்னாட்டை நீ" எனத் தற்சுட்டின்கண்ணும் ஏவற் கண்ணும், "அஅவனும் இஇவனும் உஉவனுங் கூடியக்கால்—எஎவ னை வெல்லா ரிகல்." எனச் சுட்டின்கண்ணும் வினாவின்கண்ணும் விட்டிசைத்துவந்த குற்றெழுத்துக்களும் அன்ன.

விட்டிசையாதவழி மொழிமுதற்கட் தனிக்குறில் குறிலோடும் நெடிலோடுங் கூடி நிரையசையாமென்பதாயிற்று. "யரல வழள விடையினமா மேனை—மரபு பிழையாத வைப்பு." எனவும், "அம ருந்து தானை யதிதியர்தங் கோவே—துமருந்து தூயனவே கொண் டு" எனவும் வரும். இவற்றுட் தற்சுட்டின்கண்ணும் ஏவற்கண்ணுங் குற்றெழுத்தினோடு கூடி நிரையசையாயினவாறு காண்க.

இனி நெட்டெழுத்தளபெழின் நேர்நேராதற்குங் குறினெடி லளபெழின் நிரைநேராதற்குஞ் செய்யுள்;—"ஏஎர் சிதைய வழாஅ லெழாஅநின்—சேயரி சிந்திய கண்." எனவரும்.

உரையிற்கோடலான் பின்புநின்ற குற்றெழுத்தினோடு கூடி நிரையசையாகாதெனக்கொள்க. "தனிநிலை யளபெடை நேர்நே ரியற்றே." "இறுதிநிலை யளபெடை நிரைநே ரியற்றே." என்றார் பிறருமெனக் கொள்க. இன்னும் அதனானே "தூஉஉத் தீம்புகைத்

தொல்விசும்பு" எனவும், பேஎஎத்துக்கொல் எனவும், "இலாஅஅர்க் கில்லை தமர்" எனவும், "செறூஅஅய்வாழியநெஞ்சு." எனவும் சிறு பான்மை நேர்நேர்நேராதலும் நிரைநேர்நேராதலுங் கொள்க. (௯௪)

எ௪௪. நிரைநடு வாகிய வஞ்சி யுரிச்சீர்
கலியினு டகவலிற் கடிதலுங் கலிவயி
னேரீற் றியற்சீர் நிலவுத லின்மையு
மேனைய வெல்லா மெவ்வகைச் சீரொடுந்
தாமயங் குதலுந் தளையொடு மயங்கலும்
வெள்ளையு ணிரையீற் றுரிச்சீர் விரவா
சொல்லிய வெள்ளையுட் பிறதளை தொடரா
வென்றலு மொன்றிய விலக்கண மென்ப.

இஃது ஒருசார் சீர்தளைகட்காவதோர் இலக்கணங் கூறு கின்றது.

இ - ள். நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் இரண்டுங் கலிப்பாவி னுள்ளும் ஆசிரியப்பாவினுள்ளும் வாராவென வரைதலும், நேர்நே ரும் நிரைநேருமாகிய நேரீற்றியற்சீர் இரண்டுங் கலிப்பாவினுள் வருதலின்மையும், ஒழிந்தசீரெல்லாம் எவ்வகைப்பட்ட சீரோடும் விரவி எல்லாப்பாவினுள்ளும் பாவினத்துள்ளும் வருதலுந், தத்தந் தளையோடு பிறதளைவிரவி எல்லாப்பாவினுள்ளும் பாவினத்துள்ளும் வருதலும், எல்லாச்சீரும் எல்லாத்தளையும் எல்லாப்பாவினுள்ளும் பாவினத்துள்ளும் புக்கு மயங்குமெனப்பட்டனவேனும் வெண்பா வினுள் வஞ்சியுரிச்சீர் வந்து மயங்கா வரைந்தோதிய வெண்பாவி னுட் தனக்கோதியதளையேயன்றி வேற்றுத்தளை வந்துவிரவா வென்று சொல்லுதலும் பொருந்திய இலக்கணமாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

தாமென்ற மிகையானே நேரீற்றியற்சீர் வெண்கலியுள்ளுங் கொச்சகக்கலியுள்ளும் வருதலும் நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் கொச்சகத்து அருகிவருதலுங் கொள்க. விலக்கின வாராமையும் விதித்தன வருதலும் மேற்காட்டிய செய்யுளகத்தும் பிற சான்றோர் செய்யுளகத்துங் கண்டுகொள்க.

"குலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி—நிலா வணங்கு வெண்மணன்மே னின்று—புலாலுணங்கல்—கொள்ளும் புட் காக்கின்ற கோவின்மையோ நீபிற—ருள்ளம்புக் காப்பதுரை."

என்றற் தொடக்கத்து ஒருசார்வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர் வந்ததேனுந் திருவள்ளுவப்பயனும் நாலடிநானூறும் முதலாகிய கீழ்க்கணக்கினுள்ளும் முத்தொள்ளாயிரம் முதலாகிய பிற சான்றோர்செய்யுளுள்ளும் வஞ்சியுரிச்சீர் வந்திலாமையானும் வேற்றுத்தளை வெண்பாவினுள் விரவுகவென ஓத்திலாமையானும் இத்தொடக்கத்தன குற்றமல்லது குணமாகாவென்பதே தொல்லாசிரியர் துணிவு. அதுவே இந்நூலுடையார்க்கும் உடன்பாடு. (நடு)

எசடு. இயற்சீர் வெள்ளடி வஞ்சி யடியிவை
மயக்கப் படுதலும் வெண்சீர் வெள்ளடி
கலியடி யொரோவழி யகவலுட் கலத்தலும்
வெள்ளடி யகவல் கலியுளு மகவலுங்
கலியு மொரோவழி வெண்பா வடியும்
வஞ்சியுண் மயங்கி வருதலு மைஞ்சீ
ரடிகலி யகவலோ டருகிவந் தடுத்தலுங்
கடிநிலை யின்றே கருதுங் காலை.

இது நிறுத்தமுறையானே அடிமயங்குமாறு கூறுகின்றது.

இ - ள். ஆசிரியப்பாவினுள் இயற்சீர்வெண்டளையான் வந்த வெண்பாவடியும் வஞ்சியடியும் வந்து மயங்குதலும் அவ்விருவகை அடியுமேயன்றி வெண்சீர்வெண்டளையான் வந்த வெண்பாவடியுங் கலியடியும் ஒரோவழி வந்துமயங்குதலுங் கலிப்பாவினுள் வெண்பா வடியும் அகவலடியும் வந்துமயங்குதலும் வஞ்சிப்பாவினுள் அகவலடியுங் கலியடியும் வந்துமயங்குதலும் அவ்விருவகையடியுமேயன்றி ஒரோவழி வெண்பாவடி வந்து மயங்குதலும் ஒருசார் கலிப்பாவினுள்ளும் ஆசிரியப்பாவினுள்ளும் ஐஞ்சீரடியும் அருகிவந்து அடுத்தலும் நீக்குநிலைமையின்று ஆராயுமிடத்து. எ - று.

இயற்சீர்வெள்ளடி மயங்கிய ஆசிரியப்பாவிற்குச் செய்யுள்;— "எறும்பி யளையிற் குறும்பல் சுனைய—வுலக்க லன்ன பாறை யேறிக்—கொடுவி லெயினர் பகழி மாய்க்குங்—கவலைத் தென்பவவர் தேர்சென்ற வாறே—யதுமற் றவலங் கொள்ளாது—நொதுமலர்க் கலுழுமிவ் வழுங்க லூரே." எனவரும். "எறும்பி யளையிற் குறும்பல் சுனைய—குறுந்தொடி யாஞ்செல் சுரம்." என்று உச்சரித்து வெள்ளடியர்மாறு கண்டுகொள்க. வஞ்சியடி மயங்கிய ஆசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"இருங்கடற் றனையொடு பெருநிலங் கவைஇ-

யுடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்—தாமே யாண்ட வேமங் காவல—ரிடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்—காடுபதி யாகப் போகித் தத்த—நாடுபிறர் கொள்ளச் சென்றுமாய்ந் தோரே—அத னு, னீயுங் கேண்மதி யத்தை வீயா—துடம்பொடு நின்ற வுயிரு மில்லை—மடங்க லுண்மை மாயமோ வன்றே—கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு—வெள்ளில் போகிய வியலு ளாங்க—ணுப்பிலாஅவிப், புழுக்கல்கைக் கொண்டு பிறக்கு நோக்கா—திழி பிறப்பினோ னீயப்பெற்று—நிலங்கல னாக விலங்குபலி மிசையு—மின்னு வைகல் வாரா முன்னே—செய்திநீ முன்னிய வினையே—முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே." எனவரும். இதனுள் 'உப்பிலாஅவிப் புழுக்கல்' எனவும், 'கைக்கொண்டு பிறக்குநோக்கா திழிபிறப்பினோ னீயப்பெற்று' எனவும் வஞ்சியடி மயங்கிவந்தவாறு காண்க. வெண்சீர்வெள்ளடிமயங்கிய ஆசிரியத்திற்குச் செய்யுள்;--"அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப்—பூசல் வாயாப் புலம்புமனைக் கலங்கி--யேதின் மாக்களு நோவர் தோழி—யொன்று நோவா ரில்லைத்—தெண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே." எனவரும். இதனுள்"அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப்—பொங்கிய பூசல் பெரிது." என்று உச்சரித்து வெள்ளடியாமாறு காண்க. கலியடி மயங்கிய ஆசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"குருகு வெண் டாளி கோடுபுய்த் துண்டென—மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது—மருள்பிடி திரிதருஞ் சுர—லருளா னுகுத லாயிழை கொடிதே." எனவரும். இதனுள் "மாவழங்கு பெருங் காட்டு மழகளிறு காணாது—தீவழங்கு சுழல்விழிக்கட் சீயஞ்சென் றுழலுமே." என்று உச்சரித்துக் கலியடியாமாறு காண்க. வெண் பாவடியும் ஆசிரியவடியும் மயங்கிய கலிப்பாவிற்குச் செய்யுள் "காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவாள்" என்னும் குறிஞ்சிக்க லியானுணர்க. இம்மயங்கிசைக்கொச்சகத்துள் வெண்பாவடியும் ஆசிரியவடியும் மயங்கிவந்தவாறு கண்டுகொள்க. "நேரிழை மகளி ருணங்குணாக் கவரும்" என ஆசிரியவடியும் 'வயலாமைப் புழுக் குண்டு வறளடும்பின் மலர்மலைந்து' எனக் கலியடியுங் 'கோழி யெ றிந்த கொடுங்காற் கனங்குழை' என வெள்ளடியும் பட்டினப்பாலை யென்னும் வஞ்சிநெடும்பாட்டினுள் மயங்கிவந்தவாறு காண்க. ஐஞ் சீரடியான்வந்த கலிப்பாவிற்குச் செய்யுள்;—"அணிகிளர் பொறிய விர் துத்திமா நாகத் தெருத்தேறித்—துணியிரும் பனிமுந்நீர் தொட் டுழந்து மலைந்தனையே." எனவும், ஐஞ்சீரடியான்வந்த ஆசிரியப்பா விற்குச் செய்யுள்;—"உமணர்ச் சேர்ந்து கழிந்த மருங்கி னகன்று றை—யூர்பாழ்த் தன்ன வோமையம் பெருங்காட்--டின்னு வென்றி

ராயி—னினியவோ பெரும தமியோர்க்கு மனையே." எனவரும். பிறவும் அன்ன. (௩௯)

எ௪௯. ஈரடி வெண்பாச் சிறுமை மூவடி
யாசிரி யத்தொடும் வஞ்சி யெஞ்சிய
தொருநான் காகு மிழிபே பெருமை
முந்நான் காயிர மாயிர முடிவில
தென்று வரூஉ மியல்பின தென்ப.

இது நான்குபாவிற்குஞ் சிறுமைபெருமைக்கு எல்லையாகிய அடிவரையறை உணர்த்துகின்றது.

இ - ள். இரண்டடி வெண்பாவிற்குச் சிற்றெல்லையென்றும் மூன்றடி ஆசிரியப்பாவிற்கும் வஞ்சிப்பாவிற்குஞ் சிற்றெல்லையென்றும் ஒழிந்த கலிப்பாவிற்கு நான்கடி சிற்றெல்லையென்றும் இவற்றிற்கு முறையே பன்னிரண்டடி வெண்பாவிற்கும் ஆயிரமடி ஆசிரியத்திற்கும் வஞ்சிக்கும் பேரெல்லையென்றும் அடி வரையறையில்லதென்று சொல்ல வருகின்ற தன்மையையுடைத்துக் கலிப்பாவிற்கென்றுங் கூறுவர் ஆசிரியர். எ - று.

"புடைப்போர் குறிப்பினை நீக்கிப் பெருமை—வரைத்தித் துணையென வைத்துவரை யில்லென்—றுரைத்தனர் மாதோ வுணர்ந்திசி னோரே." என்பவாகவும், ஈண்டுப் பெருமைக்கெல்லை கூறியவாறென்னையெனின், அங்ஙனங் கூறிய காக்கைபாடினியார் பொதுமையே கூறியொழிந்தமையான் இவர் அஃதொழித்து "ஆசிரியப் பாவி னளவிற் கெல்லை—யாயிர மாகு மிழிபுமூன் றடியே." எனவும், "ஆசிரிய நடைத்தே வஞ்சி யென்ப" எனவும், "நெடுவெண் பாட்டே முந்நான் கடித்தே" எனவும், "கலிவெண் பாட்டே கைக்கிளைச் செய்யுள்—செவியறி வாயுறை புறநிலை யெனவிவை—தொகைநிலை வகையா னளவில வென்ப." எனவும், "முடிபொரு ளில்லா தடியள விலவே." எனவும் ஆசிரியர் தொல்காப்பியனார் பொதுவுஞ் சிறப்பும் உடன்கூறினமையான் அக்கருத்தேபற்றிக் கூறியவாறென்று உணர்க.

ஈரடியான்வந்த வெண்பாவிற்குச் செய்யுள்;—"அறத்தா றிதுவென வேண்டா சிவிகை—பொறுத்தானோ டூர்ந்தா னிடை." எனவும், மூன்றடியான்வந்த ஆசிரியப்பாவிற்குச் செய்யுள்;—"முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே—மலைய னொள்வேற் கண்ணி—முலையும் வாரா முதுக்குறைந் தனளே." எனவும், மூன்றடி

யான் வந்த வஞ்சிப்பாவிற்குச் செய்யுள்;—"செங்கண்மேதி கரும் புழக்கி—யங்கணீலத் தலரருந்திப்—பொழிற்காஞ்சிநீழற் றுயிலுஞ் செழுநீர்—நல்வயற் கழனி யூரன்—புகழ்த லானுப் பெருவண் மை யனே." எனவும், நான்கடியான்வந்த கலிப்பாவிற்குச் செய்யுள்;— "செல்வப்போர் * * * ஒளித்ததே." எனவும் வரும்.

வாளா ஆசிரியமென்னது ஆசிரியத்தொடுமெனப் பிரித்தோதி மையான் ஆசிரியஞ் சுரிதகமாய்வருமிடத்து இரண்டடியானும் வரு மென்றும் வஞ்சியை முற்கூறினமையான் வஞ்சிப்பா இரண்டடி யானும் வருமென்றுங் காண்க.

இரண்டடியாய்ச் சுருங்கிவந்த வஞ்சிக்குச் செய்யுள்;—"பூந் தண்சினைமலர் மல்கியபொழிற்பிண்டி—வேந்தன்புகழ்பர வாதவர் வினைவெல்லா—ரதனு, லறிவன தடியிணை பரவப்—பெறுகுவர் யாவரும் பிறவா நெறியே." எனவரும். ஏனைப்பெருமைக்குச் செய்யுள் வந்துழிக் காண்க. (௩௭)

எ௬௭. வண்ணக மம்போ தரங்கவொத் தாழிசை
நண்ணிய தரவி னடியிரு மூன்று
மேனைய தரவடி யிழிபொரு மூன்றும்
பேணிய பெருமை பெரும்பொருண் முடிபு
மிரண்டடி யிழிபு மிரட்டிமூன் றுக்கமு
மொன்றிய தாழிசை யுறுதலு முறுங்காற்
றரவிற் சுருங்க றகுதியென் றுரைத்தலு
மளவடி முதலா வனைத்தடி யானும்
வருவது வண்ணகம் வருங்காற் சிறுமை
நாலடி பெருமை நாலிரண் டாகி
நடத்தலு நெறியென நாட்டினர் புலவர்.

இது கலியுறுப்பாகிய தரவுதாழிசைகட்கு அடிவரையறையும் அராகத்திற்குச் சீர்வரையறையும் அடிவரையறையுங் கூறுகின்றது.

இ - ள். வண்ணகவொத்தாழிசைக்கலியும் அம்போதரங்க வொத்தாழிசைக்கலியும் பொருந்திய தரவுறுப்பிற்குப் பெருக்கச்சு ருக்கமின்றி அடிவரையறை ஆறும்,ஒழிந்த கலிப்பாவின் தரவடிக்கு வரையறைச் சுருக்கம் மூன்றும் பெருக்கம் பொருண்முடிவுந், தாழி சைக்கு வரையறை சிறுமை இரண்டடியும் பெருமை நான்கடியும் மூன்றடியும் பொருந்துதலும், பொருந்துமிடத்து முன்னர்நின்ற

தரவடியிற் றாழிசையடி சுருங்கிவருதல் இயல்பென்று சொல்லுத லும், வண்ணகவுறுப்பு அளவடியானும் நெடிலடியானுங் கழிநெடி லடியானும் வரப்பெறும், அப்படிவருங்கால் அராகவடிக்கு வரை யறை சிற்றெல்லைநான்கும் பேரெல்லை எட்டுமோய்நடத்தலும் இலக் கணமாக அமைத்தனர் அறிவுடையோர். எ - று.

அராகமெனினும் வண்ணகமெனினும் ஒக்கும். வண்ணக வுறுப்பிற்குச் சீர்விதந்தோதினமையின் ஓதாத தரவு தாழிசைகட் குச் சீர்வரையறை பொதுவகையாற் கலிக்கோதிய அளவடியே கொள்க. ஈண்டோதாத அம்போதரங்கவுறுப்பிற்குச் சீர்வரையறை யும் எல்லைவரையறையும் அவ்வுறுப்புடைக்கலிக்கோதிய விதியா னே பெற்றும். எனவே, தனிச்சொல்லுறுப்பு எவ்வகைச்சீரானும் வரப்பெறூஉமென்பதூஉஞ், சொல்லென்றமையான் எல்லையின் றென்பதூஉம், ஏனை யிருவகைச் சுரிதகவுறுப்பிற்குச் சீர்வரையறை யும் எல்லைவரையறையுந் தத்தம் விதியானே வரப்பெறுமென்ப தூஉம் பெறப்பட்டது. 'ஏனையதரவடியிழிபொருமூன்று' என்று ரேனுந் தரவுகொச்சகஞ் சிறுமை நான்கடியானேவரும்; "எஞ்சிய தொருநான் காகுமிழிபு" என முற் கூறினமையின்.

இவற்றிற்கு இலக்கியம் மேற்காட்டிய கலிப்பாவினுள்ளும் பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க. (ரு அ)

எசஅ. **வருக்கமு** நெடிலு மினமும் வரினுந்
திறப்படு மெதுகையு மோனையு மாதலு
முயிரும் யரலழ வாசு மிடையிட்டு
மிரண்டடி மூன்று மெழுத்தொன்றி வரினு
மெதுகை யாதலு மிரணத் தொடைக்குங்
கடையே கடையிணை பின்கடைக் கூழை
யிடைப்புணர் பிசைதலு மிசையு மென்ப.

இஃது ஒருசார் தொடைகட்கு எய்தியதோர் இலக்கணங் கூறு கின்றது.

இ - ள். வருக்கவெழுத்தும் நெடிலெழுத்தும் இனவெழுத் தும் எதுகையும் மோனையுமாய் வந்தாலுங் கூறுபடவரும் வருக்க வெதுகையும் வருக்கமோனையும் நெடிலெதுகையும் நெடின்மோனை யும் இனவெதுகையும் இனமோனையுமாதலும், உயிரும் யரலழ என் னும் ஒற்றுக்களிடையே ஆசிட்டும் இடையிட்டும் இரண்டடியும்

மூன்றாமெழுத்துத் தம்முள் ஒன்றிவரினும் எதுகையாதலும், முரண் டொடைக்குங் கடைமுரணுங் கடையிணைமுரணும் பின்முரணுங் கடைக்கூழைமுரணும் இடைப்புணர்முரணும் பொருந்துதலும் பொருந்துமென்றுகூறுவர் ஆசிரியர். எ - று.

முரண்டொடையெனினும் இரணத்தொடையெனினும் ஒக்கும்.

வருக்க எதுகைக்குச் செய்யுள்;—"நீடிணர்க் கொம்பர்க் குயிலாலத் தாதுதிப்-பாடும்வண் டஞ்சி யகலும் பருவத்துத்—தோடார் தொடிநெகிழ்த்தா ருள்ளார் படலொல்லாப்—பாடமை சேக்கையுட் கண்." எனவும், வருக்கமோனைக்குச் செய்யுள்;—"பகலே, பல்பூங் கானற் கிள்ளை யோப்பியும்—பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்—பின்னுப்பிணி யவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்—பீர்ங்கப் பெய்து தேம்படத் திருகிப்—புனையீ ரோதி செய்குறி நசைஇப்—பூந்தார் மராஅப் புனத்துட் டோன்றாப்—பெருவரை யடுக்கத் தொருவேலேந்திப்—பேயு மறியா மாவழங்கு பெருங்காட்டுப்—பைங்கணுழுவைப் படுபகை வெரீஇப்—பொங்குசினந் தணியாப் பூணுதலொருத்தல்—போகாது வழங்கு மாரிரு ணடுநாட்—பவ்வத் தன்ன பாயிரு ணீந்தி—யிப்பொழுது வருகுவை யாயி—னற்றூர் மார்ப நீண்டலெங் கதுப்பே." எனவும், நெடிலெதுகைக்குச் செய்யுள்;—"ஆவாவென்றே யஞ்சினராழ்ந்தா ரொருசாரார்—கூகூவென்றே கூவிளிகொண்டா ரொருசாரார்—மாமாவென்றே மாய்ந்தனர்நீந்தா ரொருசாரா—ரேகீர்நாகீ ரென்செய்துமென்றா ரொருசாரார்." எனவும், நெடின்மோனைக்குச் செய்யுள்;—"ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லா—மோதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை." எனவும் வரும். இனவெதுகை மூன்றுவகைப்படும், வல்லினவெதுகையும் மெல்லினவெதுகையும் இடையினவெதுகையுமென. அவற்றுள், வல்லினவெதுகைக்குச் செய்யுள்;—"தக்கார் தகவில ரென்பதவரவ—ரெச்சத்தாற் காணப் படும்." எனவும், மெல்லினவெதுகைக்குச் செய்யுள்;—"அன்பீனு மார்வ முடைமை யதுவீனு—நண்பென்னு நாடாச் சிறப்பு." எனவும், இடையினவெதுகைக்குச் செய்யுள்;—"எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்—பொய்யா விளக்கே விளக்கு." எனவும் வரும். இனமோனையும் மூன்றுவகைப்படும், வல்லினமோனையும் மெல்லினமோனையும் இடையினமோனையுமென. அவற்றுள், வல்லினமோனைக்குச் செய்யுள்;—"கயலே ருண்கண் கலுழ நாளுஞ்—சுடர்புரை திருநுதல் பசலை பாயத்—திருந்திழை யமைத்தோ ளரும்பட ருழப்பப்—போகல்

வாழிய ரைய பூத்த—கொழுங்கொடி யணிமலர் தயங்கப்—பெருந் தண் வாடை வரூஉம் பொழுதே." எனவரும். மெல்லின மோனையும் இடையினமோனையும் வந்துழிக்கண்டுகொள்க. உயிரெதுகைக்குச் செய்யுள்;—"துளியொடு மயங்கிய தூங்கிரு ணடுநா—ளணிகிளர் தாரோ யருஞ்சுர நீந்தி—வடியமை யெஃகம் வலவயி னேந்தித்—தனியே வருதி நீயெனின்—மையிருங் கூந்தலுய்தலோ வரிதே." எனவும், யகர ஆசிடையெதுகைக்குச் செய்யுள்;—"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகி னெற்றிப்—பூமாண்ட தீந்தேன் றொடைகீறி வருக்கை போழ்ந்து—தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்து—மேமாங் கதமென் றிசையாற் றிசை போயதுண்டே." எனவும், ரகர ஆசிடையெதுகைக்குச் செய்யுள்;—"மாக்கொடியானையு மௌவற்பந்தருங்—கார்க்கொடி முல்லையுங் கமழ்ந்துமல்லிகைப்—பூக்கொடிப்பொதும்பருங் கானஞாழலுந்—தூக்கொடிகமழ்ந்துதாந் துறக்கமொத்ததே." எனவும், லகர ஆசிடையெதுகைக்குச் செய்யுள்;—"ஆவே றுருவின வாயினு மாபயந்த—பால்வே றுருவின வல்லவாம்—பால்போ—லொரு தன்மைத் தாகு மறநெறி யாபோ—லுருவு பலகொள லீங்கு." எனவும், ழகர ஆசிடையெதுகைக்குச் செய்யுள்;—"அந்தரத் துள்ளே யகங்கை புறங்கையா—மந்தரமே போலு மனைவாழ்க்கை—யந்தரத்து—வாழ்கின்றே மென்று மகிழன்மின் வாழ்நாளும்—போகின்ற பூளையே போன்று." எனவும் வரும். "ஆர்கலியுலகத்து மக்கட்கெல்லா—மோதலிற்சிறந்தன் றொழுக்க முடைமை." இது ரகரவொற்று ஆசிடையிட்ட வல்லினவெதுகை. பிறவும் வந்துழிக் காண்க.

இடையிட்டெதுகைக்குச் செய்யுள்;—"தோடா ரெல்வளை நெகிழ நாளு—நெய்த லுண்கண் பைதல் கலுழ—வாடா வவ்வரி புதைஇப் பசலையும்—வைக றோறும் பைபயப் பெருக—நீடா வரி ரென நீண்மணங் கொண்டார்—கேளார் கொல்லோ காதலர் தோழி—வாடாப் பௌவ மறமுகந் தெழிலி—பருவஞ் செய்யாது வலனேர்பு வளைஇ—யோடா மலையன் வேலிற்—கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே." எனவரும்.

இரண்டடியெதுகைக்குச் செய்யுள்;—"துவைக்குந் துளிமுந்நீர்க் கொற்கை மகளி—ரவைப்பதம் பல்லிற் கழகொவ்வா முத்த—மணங்கமழ்தா ரச்சுதன் மண்காக்கும் வேலி—னணங்கு மமிர்தமு மந்நலார் பாடல்." எனவரும். ஒன்றென முடித்தலான் இரண்டடி மோனையும் வரும். அதற்குச் செய்யுள்;—"ஆகங்கண்டகத் தாலற்

றவாடவ—ராகங்கண்டகத் தாலற்றவன்பினர்—பாகங்கொண்டு பயோதரஞ்சேர்த்தினர்—பாகங்கொண்டு பயோதரநல்கினர்.” எனவரும்.

மூன்றுமெழுத்தொன்றெதுகைக்குச் செய்யுள்;—“பவழமும் பொன்னுங் குவைஇய முத்தின்—றிகழரும் பின்றன புன்னை.” எனவரும். இங்ஙனம் ஒருசாருயிரெதுகைமுதலாயினவருதல் உள வாயினும் பெரியதோர் சிறப்பிலவெனக் கொள்க.

திறப்படவென்ற மிகையானே தலையாகெதுகை இடையாகெதுகை கடையாகெதுகையென்றுந் தலையாகுமோனை இடையாகுமோனை கடையாகுமோனையென்றும் வேண்டலும் ஒன்று; “சீர் முழு தொன்றிற் றலையா கெதுகை—யோரெழுத் தொன்றி னிடை கடை பிறவே.” என்பவாகலின். மோனைக்கும் இஃதொக்கும்.

தலையாகெதுகைக்குச் செய்யுள்;—“சிலைவிலங்கு நீள்புருவஞ் சென்றொசிய *** போழ்து.” எனவும், இடையாகெதுகைக்குச் செய்யுள்;—“அகர முதல வெழுத்தெல்லா மாதி—பகவன் முதற் றே யுலகு.” எனவும், கடையாகெதுகைக்குச் செய்யுள்;—“தக்கார் தகவில ரென்ப தவரவ—ரெச்சத்தாற் காணப் படும்.” எனவும், தலையாகுமோனைக்குச் செய்யுள்;—“பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்—பற்றுக பற்று விடற்கு.” எனவும், இடையாகுமோனைக்குச் செய்யுள்;—“மாவும் புள்ளும் வதிவயிற் படர—மாநீர் விரிந்த பூவுங் கூம்ப—மாலை தொடுத்த கோதையுங்கமழ—மாலை வந்த வாடை—மாயோ ளின்னுயிர்ப் புறுத்திறுத் தற்றே.” எனவும், கடையாகுமோனைக்குச்செய்யுள்;—“பகலே, பல்பூங் கானற் கிள்ளை யோப்பியும்—பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்—பின்னுப்பிணி யவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்—பீர்ங்கப் பெய்து தேம் படத் திருகிப் *** தீண்டவெங் கதுப்பே.” எனவும் வரும்.

இன்னும் அதனானே விட்டிசைவல்லொற்றெதுகையென்றும் விட்டிசைமோனையென்றுங் கோடலும் ஒன்று. விட்டிசைவல்லொற்றெதுகைக்குச் செய்யுள்;—“பற்றிப் பலகாலும் பான்மறி யுண்ணுமை *** நொஅலைய நின்னூட்டை நீ.” எனவும், விட்டிசைமோனைக்குச் செய்யுள்;—“அஅவனும் இஇவனும் உஉவனுங் கூடியக்கால்—எஎவனை வெல்லா ரிகல்.” எனவும் வரும். இவை வல்லொற்று அடுத்தாற்போல விட்டிசைத்துக் குற்றெழுத்தினோடு புணர்ந்தமையான் விட்டிசைவல்லொற்றெதுகையும் இரண்டடிக்

கண்ணும் முதலெழுத்து விட்டிசைத்துவந்தமையால் விட்டிசை மோனையுமாயின. இவை இங்ஙனம்வரினுஞ் சிறப்பிலவெனக் கொள்க.

இன்னும் அதனானே, பாவினங்கள் எல்லாத்தொடையானும் வரப்பெறுமேனும் பெரும்பான்மையுந் தலையாகுமோனையிற் றீர்ந்துந் தலையாகெதுகையிற் றீர்ந்தும் வாராவென்பதூஉஞ், செந்தொடையொழிந்த எல்லாத்தொடைக்கும் இனவெழுத்துவரத் தொடுப்பதும் வழியெதுகைவரத் தொடுப்பதும் வழிமுரண்வரத்தொடுப்பதுஞ் சிறப்புடைத்தென்பதூஉம், இனவெழுத்துப்பெற்று மோனைமுதலாகிய தொடையுந் தொடைவிகற்பமும் போலாமை வேறுபடத்தொடுப்பது மருட்செந்தொடையாமென்பதூஉங் கண்டு கொள்க.

இன எழுத்தாவன அகர ஆகார ஐகார ஔகாரங்களும் இகர ஈகார எகர ஏகாரங்களும் உகர ஊகார ஒகர ஓகாரங்களும் ஞகர நகரங்களும் மகரவகரங்களுஞ் சகரதகரங்களுந் தம்முள் இனமாம். இவற்றை அனுவென்பாரும் உளர். "அகரமொ டாகார மைகார மௌகா—னிகரமொ டீகார மெஏ—உகரமொ—டோகார மொஓ ஞந மவ தச்சகர—மாகாதவல்ல வனு." என்பவாகலின்.

இனவெழுத்துப் பெற்ற மருட்செந்தொடைக்குச் செய்யுள்;- "ஈத்துவக்கு மின்ப மறியார் கொல்தாமுடைமை—வைத்திழக்கும் வன்க ணவர்." எனவும், "அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்—சிறுகை யளாவிய கூழ்." எனவும் வரும். பிறவும் அன்ன.

**வ**ழியெதுகைக்குச் செய்யுள்;—"மண்டலம் பண்டுண்ட திண்டேர் வரகுணன் றெண்டியின்வாய்க்—கண்டலந் தண்டுறைக் கண்டதொன் றுண்டு கனமகர—குண்டலங் கெண்டை யிரண்டொடுந் தொண்டையுங் கொண்டோர் திங்கண்—மண்டலம் வண்டலம் பக்கொண்ட ருழ வருகின்றதே." எனவும், "கொங்குதங்கு கோதையோதி மாதரோடு கூடிநீடு மோடைநெற்றி—வெங்கண்யானை வேந்தர்போந்து வேதகீத நாதவென்று நின்றுதாழ—வங்கபூர்வ மாதியாய வாதிநூலி னீதியோது மாதியாய—செங்கண்மாலை காலை மாலை சென்றுசேர்வர் சோதிசேர்ந்த சித்திதானே." எனவும் வரும். இதனை வடநூலார் அனுப்பிராசமென்ப. வழிமுரணுக்குச் செய்யுள்;—"செய்யவாய்ப் பசும்பொனோலைச் சீறடிப் பரவையல்கு—லையநுண் மருங்குனேவ வடிக்கொண்ட குவவுக்கொங்கை—வெய்யவாய்த் தண்ணெனீலம் விரிந்தென விலங்கிநீண்ட—மையவா

மழைக்கட்கூந்தன் மகளிரை வருகவென்றான்." எனவும், "ஒரு மால்வரைநின் றிருசுடரோட்டிமுந் நீர்க்கிடந்த—பெருமானில முஞ் சிறுவிலைத்தாயுண்டு பேதையர்கண்—பொருமாதவித்தொங்க லெங்கோன்புரவலன் பூம்பொதியிற்—கருமாநிறவெண்பற் செவ்வாய்ப்பசும்பொற் கனங்குழைக்கே." எனவும், கடைமுரண்டொடைக்குச் செய்யுள்;—"கயன்மலைப் பன்ன கண்ணிணை கரிதே—தடமுலைத் திவளுந் தனிவடம் வெளிதே—நூலி னுண்ணிடை சிறிதே—யாடமைத் தோளிக் கல்குலோ பெரிதே." எனவும் வரும். இஃது அடிதொறுங் கடைச்சீர்க்கண் மறுதலைப்படத் தொடுத்தமையாற் கடைமுரணாயிற்று. கடையிணை முரண்டொடைக்குச் செய்யுள்;—"மீன்றேர்ந் தருந்திய கருங்கால் வெண்குருகு—தேனார் ஞாழல் விரிசினைக் குழூஉந்—தண்ணந் துறைவன் றவிர்ப்பவுந் தவிரான்—றேரோ காணலங் காண்டும்—பீரேர் வண்ணமெஞ் சிறு நுதற் பெரிதே." எனவரும். இஃது அடிதொறுங் கடையிருசீரும் மறுதலைப்படத் தொடுத்தமையாற் கடையிணைமுரணாயிற்று. பின் முரண்டொடைக்குச் செய்யுள்;—"சார லோங்கிய தடந்தாட்டாழை—கொய்ம்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து—தமிய மிருந்தனமாக நின்றுதன்—னயனுடைப் பணிமொழி நன்குபல பயிற்றி—வீங்குதொடிப் பணைத்தோ ணெகிழத்—துறந்தோ னல்லனெம் மேனியோ றிதே." எனவரும். இது கடைச்சீரும் இரண்டாஞ்சீரும் மறுதலைப்படத்தொடுத்தமையாற் பின்முரணாயிற்று. கடைக்கூழை முரண்டொடைக்குச் செய்யுள்;—"காவியங் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி—பூவிரி சுரிமென் கூந்தலுட்—வேய்புரை தோளு மணங்குமா லெமக்கே." எனவரும். இது முதலடிநான்குசீரினும் முதற்சீரொழித்து ஒழிந்தமூன்றுசீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுத்தமையாற் கடைக்கூழைமுரணாயிற்று. இடைப்புணர்முரண்டொடைக்குச் செய்யுள்;—"போதுவிரி குறிஞ்சி நெடுந்தண் மால்வரைக்—கோதையிற் றாழ்ந்த வோங்குவெள் ளருவி—காந்தளஞ் செங்குலைப் பைங்கூ தாளி—வேரல் விரிமலர் முகையொடு விரைஇப்—பெருமலைச் சீறூ ரிழிதரு நலங்கவர்ந்—தின்னா வாயின வினியோர் நாட்டே." எனவரும். இஃதிடையிருசீர்க்கண்ணும் முரணத்தொடுத்தமையான் இடைப்புணர்முரணாயிற்று.

இரணத்தொடைக்குமென்ற உம்மையால் ஒழிந்ததொடைக்குங் கடைமோனை கடையிணைமோனை பின்மோனை கடைக்கூழைமோனை இடைப்புணர்மோனை எனவும், கடையியைபு கடையிணையியைபு பின்னியைபு கடைக்கூழையியைபு இடைப்புணரியைபு

எனவும், கடையெதுகை கடையிணையெதுகை பின்னெதுகை கடைக்கூழையெதுகை இடைப்புணரெதுகை எனவும், கடையளபெடை கடையிணையளபெடை பின்னளபெடை கடைக்கூழையளபெடை இடைப்புணரளபெடை எனவும் இவ்வாறுகோடலும் ஒன்று. இவற்றிற்கு இலக்கியம் வந்துழிக்காண்க. (௩௧)

எசஉ. **வழிபடு தெய்வ நிற்புறங் காப்பப்**
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்து
மொருதலைக் காம முற்றகைக் கிளையும்
வேம்புங் கடுவும் போல்வன வெஞ்சொற்
றாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் திறூஉம்
வாயுறை வாழ்த்தும் பொங்குத லின்றிப்
புரையோர் நாப்ப ணவிலுதல் கடனெனச்
செவியறி வுறுத்துஞ் செவியறி வுறூஉவு
மாகிய பொருண்மையி னமைந்தநால் வகைமேல்
வெள்ளை முதலா வாசிரிய மிறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா வாகும்.

இது மருட்பாவாமாறு கூறுகின்றது.

இ - ள். நினக்குத் தொழுகுலமாகிய தெய்வம் நின்னைப் பாது காப்பக் குற்றந்தீர்ந்த செல்வத்தோடு புதல்வரைப் பயந்து, புதல்வரும் அப்பெற்றியராகி, எல்லீரும் நீடுவாழ்வீரென்று தெய்வத்தைப் புறநிறுத்தி வாழ்த்தும் புறநிலைவாழ்த்தும், ஒருதலைக்காமத்தைப் பொருந்திய கைக்கிளையும், முற்பருவத்துக் கைத்துந் துவர்த்தும் பிற்பருவத்து உறுதிபயக்கும் வேம்புங் கடுவும்போல வெய்யவாய சொல்லினைத் தடையின்றிப் பிற்பயக்குமெனக் கருதிப் பாதுகாத்துக் கிளக்குங் கிளப்பினான் மெய்யாக அறிவுறுத்தும் வாயுறை வாழ்த்தும், வியப்பின்றிப் பெரியோர்நடுவண் அடங்கிவாழ்தல் கடப்பாடெனச் சொல்லிச் செவிக்கு அறிவுறுத்துஞ் செவியறிவுறூஉவுமாகிய பொருட்டன்மையின் அமைதிபெற்ற நான்குகூற்றின்கண் வெண்பா முதலாக ஆசிரியம் இறுதியாகக் கொள்ளும்படி தொடுப்பது மருட்பாவாம். எ - று.

வெள்ளைமுதலாக ஆசிரியமிறுதியாகத் தொடுப்பவென்றது கொள்ளவென்றதனானே கைக்கிளைப்பொருண்மேல் இறுதிக்கண்வரும் ஆசிரிய அடி இரண்டாய்வந்து ஈற்றயலடி முச்சீரான்வருமென்றும், வெண்பா அடியும் ஆசிரிய அடியும் ஒத்துவருவதனைச் சமனிலைமருட்பாவென்றும் ஒவ்வாதுவருவதனை வியனிலைமருட்பாவென்றும் வழங்கப்படுமெனக் கொள்க.

இன்னுமதனானே புறநிலைவாழ்த்துஞ் செவியறிவுறூஉவும் வாயுறைவாழ்த்தும் இவ்வாறன்றி வெண்பாவேயாயும் ஆசிரியமேயாயும் வரப்பெறுமெனவுங் கலியும்வஞ்சியுமாய் வரப்பெறாதெனவுங் கைக்கிளையெல்லாப்பாவுமாய் வரப்பெறுமெனவுங் கொள்க. மருட்பாவென்னும் யாப்புறவில்லை.

புறநிலைவாழ்த்துமருட்பாவிற்குச் செய்யுள்;—“தென்ற லிடைபோழ்ந்த தேனார் நறுமுல்லை—முன்றின் முகைவிரியு முத்தநீர்த் தண்கோளூர்க்—குன்றமர்ந்த கொல்லேற்றா னிற்காப்ப-வென்றுந், தீரா நண்பிற் றேவர்—சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே.” எனவும், கைக்கிளைமருட்பாவிற்குச் செய்யுள்;—“திருநுதல் வேர்வரும்புந் தேங்கோதை வாடு—மிருநிலஞ் சேவடியுந் தோயு—மரிபரந்த—போகித ழுண்கணு மிமைக்கு—மாகு மற்றிவ ளகலிடத் தணங்கே.” எனவும், வாயுறைவாழ்த்துமருட்பாவிற்குச் செய்யுள்;—“பலமுறை யோம்பப் படுவன கேண்மின்—சொலன்முறைக்கட் டோன்றிச் சுடர்மணித்தே ரூர்ந்து—நிலமுறையி னுண்டநிகரிலார் மாட்டுஞ்—சிலமுறை யல்லது செல்வங்க ணில்லா—விலங்கு மெறிபடையும் வீரமு மன்புங்—கலந்ததங் கல்வியுந் தோற்றமு மேனைப்—பொலஞ்செய் புனைகலனே டிவ்வாறி னாலும்—விலங்கிவருங் கூற்றை விலக்கலு மாகா—தனைத்தாத னியிருங் காண்டிர் நினைத்தக்க—கூறிய வெம்மொழி பிழையாது—தேறிநீ ரொழுகிற் சென்றுபயன் றருமே.” எனவரும். செவியறிவுறூஉமருட்பாவிற்குச் செய்யுள்;—“பல்யானை மன்னர் முருங்க வமருழந்து—கொல்யானைத் தேரொடுங் கோட்டந்து நல்ல—தலையாலங் கானம் பொலியத் தொலையாப்—படுகளம் பாடுக் காற்றிப் பகைஞ—ரடுகளம் வேட்டோன் மருக வடுதிற—லாழி நிமிர்தோட் பெருவழுதி யென்னொன்று—மீர முடையையா யென்வாய்ச் சொற்கேட்டி—யுடைய வுழவரை நெஞ்சனுங்கக் கொண்டு—வருங்காலுழவர்க்கு வேளாண்மை செய்யன்—மழவ ரிழைக்கும் வரைக்காணிதியீட்டங்—காட்டு மமைச்சரை யாற்றத் தெளிய—லமைத்தவரும்பொரு ளாறன்றி வெளவ-லினத்தைப் பெரும்பொரு ளாசை

யாற் சென்று—மன்ற மறுக வகழாதி யென்று—மறப்புற மாக மது ரையா ரோம்பு—மறப்புற மாசைப்பட் டேற்க வறத்தா—லவை யார் கொடுநாத் திருத்தி நவையாக—நட்டார் குழிசி சிதையாதி யொட்டார்—செவிபுதைக்குந் தீய கடுஞ்சொற் கவியுடைத்தாய்க்-- கற்றூர்க் கினனுகிக் கல்லார்க் கடிந்தொழுகிச்—செற்றூர்ச் செறுத்து நிற் சேர்ந்தாரை யாக்குதி—யற்ற மறைக்கு மறிவனுய் மற்று—மி வையிவை வீயா தொழுகி னிலையாப்—பொருகட லாடை நில மக—ளொருகுடை நீழற் றுஞ்சுவண் மன்னே.” எனவும் வரும். பிறவும் அன்ன. (௬௦)

எ௬௦. ஒழுகிய லோசையி னொத்தடி யிரண்டாய்
விழுமிய பொருடரும் வெண்செந் துறையு
மந்தடி குறைநவுஞ் செந்துறைச் சிதைவுஞ்
சந்தழி குறளுமாந் தாழிசைக் குறளுங்
குறட்பா வினமாங் கூறுங் காலே.

இது குறள்வெண்பாவிற்கு இனமாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒழுகலோசையினையுடைய தம்மில் அளவொத்த இரண்டடியாகச் சீரிய பொருளையுடைத்தாய்வரும் வெண்செந்து றையும், இறுதியடி குறைந்துவருவனவும் ஒழுகிய ஓசையும் விழு மிய பொருளுமின்றி வரும் வெண்செந்துறையுஞ், செப்பலோசை யிற் சிதைந்துவருங் குறள்வெண்பாவுமாகிய முக்கூற்றுக் குறட் டாழிசையும் மேற்கூறிய குறட்பாவிற்கு இனமாஞ் சொல்லுமி டத்து. எ - று.

சீர்வரையறுத்திலாமையால் எனைத்துச்சீரானும் அடியாய்வ ரப்பெறும்.

வரலாறு;—வெண்செந்துறைக்குச் செய்யுள்;—“ஆர்கலி யுல கத்து மக்கட் கெல்லா—மோதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை.” எனவும், ஈற்றடிகுறைந்த குறட்டாழிசைக்குச் செய்யுள்;—“நண் ணுவார்வினை நையநாடொறு நற்றவர்க்கரை சாயஞானநற்—கண் ணினனடி யேயடை வார்கள் கற்றவரே.” எனவும் வரும். இதற் கும் அதிகாரத்தான் இரண்டடியே கொள்க. செந்துறைச்சிதைவு குறட்டாழிசைக்குச் செய்யுள்;—“அறுவர்க் கறுவரைப் பெற்றுங் கவுந்தி—மறுவறு பத்தினி போல்வை யினீரே.” எனவும், சந்தழி குறட்டாழிசைக்குச் செய்யுள்;—“வண்டார்பூங் கோதை வரிவ

ளைக்கைத் திருநுதலாள்—பண்டைய ளல்லள் படி.'' எனவும் வரும். பிறவும் அன்ன. (சுக)

எ௫க. அடிமுதற் பொருளுற வருவது கூனஃ
திறுதியும் வஞ்சியு ளியலு மென்ப.

மேற்கூறப்பட்ட செய்யுட்கெல்லாம் இன்னுமொருவாற்ரு ருவதோர் இலக்கணம் எய்துவிப்பான்புகுந்தவற்றுள் இஃது கூறு மாறுகூறுகின்றது.

இ-ள். அடிமுதற்கட் செய்யுட் பொருள்படத் தனியே வந்து நிற்பது கூனும்; அக்கூன் வஞ்சியுள் இறுதிக்கண்ணும் வந்து நிற்குமென்று கூறுவர் புலவர். எ-று.

கூன்போறலிற் கூனுயிற்று. எனவே, தனிநிற்றல்பெற்ரும். இதனைத் தனிச்சொல்லென்பாரும் உளர்.

வரலாறு;—"உதுக்காண், சுரந்தானு வண்கைச் சுவர்னமாப் பூதன்—பரந்தானுப் பல்புகழ் பாடி—யிரந்தார்மாட்—டின்மை யகல்வது போல விருணீங்க—மின்னு மளித்தோ மழை." என்னும் வெண்பாவினுள் உதுக்காணெனவும், "அவரே, கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை—வாடா வள்ளியங் காடிறந் தோரே—யானே, தோடா ரெல்வளை நெகிழ வேங்கிப்—பாடமை சேக் கையுட் படர்கூர்ந் திசினே—யன்ன ளளிய ளென்னுது மாமழை—யின்னும் பெய்ய முழங்கி—மின்னுந் தோழியென் னின்னுயிர் குறித் தே." என்னும் ஆசிரியத்துள் அவரே எனவும் யானே எனவும், "உலகினுட், பெருந்தகையார் பெருந்தகைமை பிறழாவே பிற ழினு—மிருந்தகைய விறுவரையி லெரிபோலச் சுடர்விடுமே—சிறு தகையார் சிறுதகைமை சிறப்பின்றும் பிறழ்வின்றி—யுறுதகைமை யுலகிற்கோ ரொப்பாகித் தோன்ருதே." என்னுங் கலியுள் உலகி னுள் எனவும், "உலகே, முற்கொடுத்தார் பிற்கொளவும்—பிற்கொ டுத்தார் முற்கொளவு-முறுதிவழி யொழுகு மென்ப—அதனுல், நற் றிற நாடுத னன்மை—பற்றற யாவையும் பரிவறத் துறந்தே." என் னும் வஞ்சியுள் உலகே எனவும் அடிமுதற்கண்ணும், "மாவழங்க லின் மயக்குற்றன, வழி" என்னும் வஞ்சியடியுள் வழி என இறு திக்கண்ணும் வந்தவாறு காண்க.

இறுதியுமென்ற உம்மையாற் "கலங்கழாலிற், றுறை, கலக் குற்றன" என்னும் வஞ்சியடியின் இடைக்கட் துறை எனவருத லுங் கொள்க. பொதுப்படக் கூறியவதனுற் சீரானும் அசையானு

மன்றிச் "சிறுகுடியீரே சிறுகுடியீரே" என அடியானுங் கூன்வருதல் கொள்க. பிறவும் அன்ன. (சஉ)

எடுஉ. அசையுஞ் சீரு மடியு மெல்லா
மிசைய வருபொரு ளியைபு நோக்கா
தோசையே குறிக்கொண் டொடுங்கவும் விரியவு
மலகிடல் வகையுளி யாகு மென்ப.

இது வகையுளியாமாறு கூறுகின்றது.

இ - ள். அசையுஞ் சீரும் அடியுமாகிய எல்லாவற்றின்கண்ணும் பொருந்தவருகின்ற பொருளியைபைக் குறியாது ஓசையினையே குறித்துக் கூம்பவுங் கூம்பாது அலரவும் அலகிட்டு வண்ணம் அறுத்தல் வகையுளியாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

உ-ம். "கடியார்பூங் கோதை கடாயினான் றிண்டேர்—சிறியார்தஞ் சிற்றில் சிதைத்து." இதனுட், கடியாரென்றும் பூங்கோதையென்றுங் கடாயினனென்றும் இவ்வாறு அலகிட ஆசிரியத்தளையுங் கலித்தளையுந் தட்டுச் செப்பலோசை சிதைதலிற் கடியார்பூவென்றுங் கோதையென்றும் அலகிட ஓசைசிதையாதாம். "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்—நிலமிசை நீடுவாழ் வார்." இதனுள் நிலமிசையென்றும் நீடுவாழென்றும் வாரென்றும் அலகிட மாறுபடாதாம். "பாடுநர்க்கு மாடுநர்க்கும் பண்டுதாங் கண்டவர்க்கு—மூடுநர்க்குங் கூடுநர்க்கு மொத்ததா—னீடுநீர்—நல்வய லூரனறுஞ்சாந் தணியகலம்—புல்லலி னூட லினிது." இதனுள், டுகர நகரம் பிரிந்திசைத்தனவாயினும் இரண்டடியும் நாலசைச்சீராய்ச் செப்பலோசை சிதைதலின் டுகரநகரங்களைக் கூட்டி நிரையசையாக அலகிடச் சிதையாதாம். இவ்வாறே பிறவும் அலகிட்டுக்கொள்க.

எடுங. வாழ்த்து மெய்வாழ்த் திருபுற வாழ்த்தெனப்
போற்றல் வேண்டும் வசையுமவ் வகைத்தே.

இது வாழ்த்தும் வசையுமாமாறு கூறுகின்றது.

இ - ள். வாழ்த்து மெய்வாழ்த்தும் இருபுறவாழ்த்துமென இருவகைத்தாகப் பாதுகாத்தறிதலை விரும்பும் ஆசிரியன்; வசையும் அவ்விருவகையினையுடைத்தாம். எ - று.

வரலாறு;—"கார்நறு நீலங் கடிகயத்துள் வைகலு—நீர்நிலை நின்ற பயன்கொல்லோ—கூர்நுனைவேல்—வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியாற்—கொண்டிருக்கப் பெற்ற குணம்." என மெய் வாழ்த்தும், "பண்டு மொருகாற்றன் பைந்தொடியைக் கோட்பட்டு—வெங்கடம் வில்லேற்றிக் கொண்டுழந்தான்—றென்கழந்தைப்--பூமாண் டிருமகளுக் கின்றும் புலம்புமால்—வாமான்றேர் வையையார் கோ." என இருபுறவாழ்த்துந், "தந்தை யிலேச்சுமடன் றாய் தொழுனி தான்பார்ப்பா—னெந்தைக்கிஃ தெங்ஙனம் பட்டது கொல்—முந்தை—யவியுணவி ஞர்தெரியி னுவதாங் கொல்லோ—கவிகண்ண ஞர்தம் பிறப்பு." என மெய்வசையும், "படையொடு போகாது நின்றெறிந்தா னென்றுங்—கொடையொடு நல்லார்கட்டாழ்ந்தான்—படையொடு—பாடி வழங்குந் தெருவெல்லாந் தான் சென்று—கோடி வழங்கு மகன்." என இருபுறவசையும் வந்தவாறு காண்க. (சச)

எருச. அம்மை யழகு தொன்மை தோலே
விருந்தே யியைபே புலனே யிழையெனப்
பொருந்திய வெட்டும் வனப்பவை யெட்டனு
ளம்மை தானே யடிநிமிர் பின்றிச்
சின்மென் மொழியாற் சீர்புனைந் தியாத்தலுஞ்
செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பி
னவ்வகை தானே யழகெனப் படுதலுந்
தொன்மை தானே சொல்லுங் காலை
யுரையொடு புணர்ந்த பழைமைமேற் றாகலு
மிழுமென் மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியா லடிநிமிர்ந் தொழுகினு
மன்னவை யிரண்டுந் தோலென வறைதலும்
விருந்து தானே பொருந்தக் கூறின்
புதுவது புனைந்தயாப் பின்மேற் றாகலு
ஞணநம னயரல வழள வென்னும்
புள்ளி யிறுதி யியைபெனப் புகறலுந்
தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றிற்
புலனெனப் படுதலும் புலனன் குணர்ந்தோ
ரொற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது

குறளடி முதலா வைந்தடி காறு
மோங்கிய சொல்லா லாங்ஙன மொழியி
னிழையெனப் படுதலு மெய்து மென்ப.

இது வனப்பாமாறு கூறுகின்றது.

இ - ள். அம்மை முதலாகப் பொருந்திய எட்டும் வனப்பாம்; அவ்வெட்டனுள் அம்மையாவது சிலவடியாகிச் சிலவாய மெல்லியவாய சொற்களால் ஒள்ளிய பொருண்மேல் இனிது தொடுக்கப்படுதலையுஞ், செய்யுட்கு உரிய சொற்களால் ஓசை இனியவாகத் தொடுப்பின் அவ்வகைப்பட்டசெய்யுள் அழகென்று சொல்லப்படுதலையுந்,தொன்மையாவது கூறுமிடத்துப் பழைமைத்தாகி நிகழ்ந்த பெற்றியுரைக்கப்படும் இராகவசரிதம் பாண்டவசரிதம் முதலியவற்றின் மேற்றாதலையும், இழுமென்னும் மெல்லியவாய சொற்களால் விழுமியவாய்க் கிடப்பனவும் எல்லாச்சொற்களோடும் பலவடியுடையவாய்க் கிடப்பனவுமென்று இத்தன்மையவாகிய இருதிறத்தினையுந் தோலென்று சொல்லுதலையும், விருந்தாவது பொருந்தக்கூறுமிடத்து இப்பொழுது உள்ளாரைப் பாடுவனவற்றின்மேற்றாதலையும், ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள என்னும் பதினொரு புள்ளியும் ஈறாக வந்த செய்யுட்களை இயைபென்று சொல்லுதலையும், வழக்கச்சொல்லினானே பொருள்தோன்றத் தொடுக்கப்பட்டு ஆராயவேண்டாமற் பொருள் தோன்றுவதனைப் புலனென்று சொல்லப்படுதலையும், இலக்கணங்களை அறிந்தோர் ஒற்றொடுபுணர்ந்த வல்லெழுத்து யாதுந் தீண்டாது செய்யுளியலுடையார் எழுத்தெண்ணி அடிவகுக்கப்பட்ட குறளடி முதலாகப் பதினேழ் நிலத்து ஐந்தடியும் முறையானே உடையவாய் ஓங்கிய சொற்களால் அவ்வாறு மொழியின் இழையென்று சொல்லப்படுதலையும் பொருந்துமென்று கூறுவர் புலவர். எ - று.

வரலாறு;—"அறிவினு ளருகுவ துண்டோ பிறிதினோய்—தன்னோய்போற் போற்றாக் கடை." என அம்மையுந், "துணியிரும் பரப்பகங் குறைய வாங்கி—யணிகிள ரடுக்கன் முற்றிய வெழிலி—காலொடு மயங்கிய கனையிரு ணடுநாள்—யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப—நெடுவரை மருங்கிற் பாம்பென விழிதருங்—கடுவரற் கலுழி நீந்தி—வல்லியம் வழங்குங் கல்லதர் நெறியே." என அழகுஞ், "செறிதொடி யுவகை கேளாய் செஞ்சுடர்த் தெறுகதிர்ச் செல்வன்"என்பதூஉம் இராமாயணம் பாரதம்போல்வனவுமாகியதொன்மையும், "பாயிரும் பரப்பகம் புதையப் பாம்பி—ஞயிர மணிவிளக்

கழலுஞ் சேக்கைத்—துனிதரு வெள்ளந் துயில்புடை பெயர்க்கு—மொளியோன் காஞ்சி யெளிதெனக் கூறி—னிம்மை யில்லை மறுமை யில்லை—நன்மை யில்லைத் தீமை யில்லைச்—செய்வோ ரில்லைச் செய்பொரு ளில்லை—யறிவோர் யாரஃ திறுவழி யிறுகென.” என இழுமெனமொழியால் விழுமியது நுவன்ற தோலும், (இதுமார்க் கண்டேயனார்காஞ்சி.) “திருமழை தலைஇய விருணிற விசும்பின்—விண்ணதி ரிமிழிசை கடுப்பப்—பண்ணமைந் தவர்தேர் சென்ற வாறே.” எனப் பரந்தமொழியால் அடிநிமிர்ந்தொழுகிய தோலும்,(இது கூத்தராற்றுப்படை)“பார்க்கடன் முகந்த பருவக் கொண்மூ—வார்ச் செறி முரசின் முழங்கி யொன்னார்—மலைமுற் றின்றே வயங்குதுளி சிதறிச்—சென்றவ டிருமுகங் காணக் கடுந்தே—ரின் றுபுகக் கடவு மதி பாக வுதுக்காண்—மாவொடு புணர்ந்த மாஅல் போல—லிரும் பிடி யுழைய தாகப்—பெருங்காடு மடுத்த காமர் களிறே.” எனப் புலனும், “போந்து போந்து சார்ந்து சார்ந்து—தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து—வண்டு சூழ விண்டு வீங்கி—நீர்வாய்க் கொண்டு நீண்ட நீல—மூர்வா யூதை வீச வூர்வாய்—மதியேர் வண்டோ டொல்கி மாலை—நன்மணங் கமழும் பன்னெல் லூர—வமையேர் மென்றோ ளாயரி நெடுங்க—ணிணையீ ரோதி யேந்திள வனமுலை—யிறும்பமன் மலரிடை யெழுந்த மாவி—னறுந்தழை துயல்வருஉஞ் செறிந்தேந் தல்கு—லணிநடை யசைஇய வரியமை சிலம்பின்—மணிமருள் வளர்குழல் வளரிளம் பிறைநுத—லொளிநிலவு வயங்கி ழையுருவுடை மகளிரொடு—நளிமுழவு முழங்கிய வணிநிலவு மணி நக—ரிருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை—கலனளவு கலனளவு கலனளவு கலனளவு —பெருமணம் புணர்ந்தனை யென் பவஃ—தொருநீ மறைப்ப தொழிகுவ தன்றே.” என இழையும் வந் தவாறு காண்க. ஈண்டுக் காட்டாதொழிந்தனவும் வந்துழிக் காண்க.

செய்யுளியலுடையார் எழுத்தெண்ணி அடிவகுத்தவாறென் னையெனின், நாற்சீரடிதன்னையே நான்கெழுத்து முதலாக ஆறெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியுங் குறளடியென்றும், ஏழெழுத்துமுதலாக ஒன்பதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியுஞ் சிந்தடியென்றும், பத்தெழுத்து முதலாகப் பதினன்கெழுத்தின்காறும் உயர்ந்த ஐந்தடியும் அளவடியென்றும், பதினைந்தெழுத்து முதலாகப் பதினேழெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியும் நெடிலடியென்றும், பதினெட்டெழுத்து முதலாக இருபதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியுங் கழிநெடிலடியென்றும், இருபதெழுத்தின் மிக்க நாற்சீரடிப்பாவில்லையென்றுங் கூறியவாறுமென்க. எண்ணு

மாறு "குற்றிகரக் குற்றுகர மென்றிரண்டு மாய்தமு—மொற்று மெனவொரு நான்ககற்றிக்—கற்றோ—ருயிரு முயிர்மெய்யு மோதி ஞர் கொள்ளச்—செயிர்தீர்ந்த செய்யு ளடிக்கு." இதனுனறிக. ()

எருரு. எழுத்த லிசையென வசைசீ ராக
நிறைக்கப் படுதல் குறிப்பிசை யென்ப.

இது குறிப்பிசையாமாறு கூறுகின்றது.

இ - ள். எழுத்தோசையல்லாத முற்கு வீளை இலதை அனுக ரணம் முதலியன செய்யுளகத்துவந்தால் அவற்றையும் அசையுஞ் சீருமாக அலகிட்டுத் தளையும் அடியுந் தொடையும் பிழையாமற் கொண்டு நிரப்புதலைக் குறிப்பிசையென்று கூறுவர் ஆசிரியர். எ-று.

"மன்றலங் கொன்றை மலர்வேய்ந்து மஃஃறற—வென்று திரியுமிடைமகனே—சென்று—மறியாட்டை யுண்ணுமல் வண்கை யால் வல்லே—யறியாயோ வண்ணுக்கு மாறு." எனவரும். ஒழிந் தனவும் இடைக்காடனுர்பாடிய ஆசிரியமுறியுட் கண்டுகொள்க. ()

எருசு. ஒப்பெனப் படுவ தோதிய செய்யுளுட்
டப்பினு மொருபுடை சார்த்திமற் றவற்றையுஞ்
செப்பிய பாவொடு சேர்த்தனர் கொளலே.

இஃது ஒப்பாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒப்பென்று சொல்லப்படுவது மேற் சீருந்தளையும் முதலியன வரையறுக்கப்பட்ட செய்யுளுட்சில சொன்னபெற்றி யிற் றிரிந்து மிக்குங் குறைந்தும் வந்தாலும் ஒருபுடையொப்புமை நோக்கிச் சார்த்தி அங்ஙனந் தவறியசெய்யுட்களையும் இலக்கணநெ றியால் முன்னேதிய செய்யுட்களின்பாற் படுத்திக்கொள்க. எ - று.

உ-ம். "கோழியுங் கூவின குக்கில் குரலியம்புந்—தாழியு ணீலத் தடங்கணீர் போதுமினோ—வாழிசூழ் வையத் தறிவ னடியேத் திக்—கூழை நனையக் குடைந்து குளிர்புன—லூழியு மன்னுவா மென்றேலோ ரெம்பாவாய்." நாற்சீர்நாலடியான் வருவது கலிவி ருத்தமென்று வரையறுத்துக் கூறினர். இஃது ஐந்தடியான் வந்த தாயினும் ஒருபுடையொப்புமைநோக்கிக் கலிவிருத்தத்தின்பாற் படுத்துக. இதனைத் தரவுகொச்சகமெனினும் இழுக்காது. பிறவும் புராணகவிஞராற் பாடப்பட்ட இலக்கியங்கள் மிக்குங் குறைந்தும்

வரினும் இவ்விலக்கணத்தால் ஒன்றன்பாற்படுத்தி வழங்கப்படுதல் கொள்க. (சஎ)

எருஎ. வண்ணந் தானே நாலைந் தவைதாம்
பாஅ வண்ணந் தாஅ வண்ணம்
வல்லிசை வண்ண மெல்லிசை வண்ண
மியைபு வண்ண மளபெடை வண்ண
நெடுஞ்சீர் வண்ணங் குறுஞ்சீர் வண்ணஞ்
சித்திர வண்ண நலிபு வண்ண
மகப்பாட்டு வண்ணம் புறப்பாட்டு வண்ண
மொழுகு வண்ண முருஉ வண்ண
மெண்ணு வண்ண மகைப்பு வண்ணந்
தூங்கல் வண்ண மேந்தல் வண்ண
முருட்டு வண்ண முடுகு வண்ணமென்
றாங்கென மொழிப வறிந்திசி னோரே.

இது வண்ணம் இத்துணையவென்பதும் அவற்றின் பெயருமாமாறு கூறுகின்றது.

இ - ள். வண்ணம் இருபதாம் அவைதாம் பாஅவண்ணம் முதலாக முடுகுவண்ணம் ஈறாகக் கிடந்தன வென்று கூறுவர் புலவர். எ - று.

அவற்றுட் பாஅவண்ணஞ் சொற்சீரடியாகி நூலின்கட் பயின்றுவரும். "அவற்றுட், பாஅ வண்ணஞ்—சொற்சீர்த் தாகி நூற்பாற் பயிலும்" என்பவாகலின். வரலாறு;—"அஇ உஅம் மூன்றுஞ் சுட்டு" "கொல்லே யையம்" "எல்லே யியக்கம்" எனவரும்.

தாஅவண்ணம் இடையிட்டெதுகையான்வரும். "தாஅவண்ண, மிடையிட்டு வந்த வெதுகைத் தாகும்." என்பவாகலின். வரலாறு;—"தோடாரெல்வளை" எனவரும்.

வல்லிசைவண்ணம் வல்லெழுத்துமிக்கு வருவது. "வல்லிசை வண்ணம் வல்லெழுத்துப் பயிலும்." என்பவாகலின். வரலாறு;—"பட்டொட்டி யன்ன தொடர்முடிப் புன்னைக்கீழ்க்—கட்டிட்டுக் கண்ணி கொடுப்பவர் தாழம்பூத்—தொட்டிட்டுக் கொள்ளுந் துறைச்சேர்ப்ப நின்னொடு—விட்டொட்டி யுள்ளம் விடாஅது நிலையுமென—விட்டொட்டி நீங்காதோ வெட்டு." எனவரும்.

மெல்லிசைவண்ணம் மெல்லெழுத்துமிக்கு வருவது. "மெல்லிசைவண்ண மெல்லெழுத்து மிகுமே." என்பவாகலின். வரலாறு;—"பொன்னி னன்ன புன்னை நுண் டாது—மணியி னன்னநெய்தலங் கானம்." எனவரும்.

இயைபுவண்ணம் இடையெழுத்து மிக்குவருவது. "இயைபு வண்ண மிடையெழுத்து மிகுமே." என்பவாகலின் வரலாறு;—"வால்வெள் ளருவி வரைமிசை யிழியக்—கோள்வல் லுழுவை விடரிடை யியைபு." எனவரும்.

அளபெடைவண்ணம் அளபெடைபயின்றுவருவது. "அளபெடைவண்ணம் அளபெடை யியலும்." என்பவாகலின். வரலாறு;—"தாஅட் டாமரை மலருழக்கி" எனவரும்.

நெடுஞ்சீர்வண்ணம் நெட்டெழுத்துப் பயின்றுவருவது. "நெடுஞ்சீர் வண்ண நெட்டெழுத்துப் பயிலும்." என்பவாகலின். வரலாறு;—"நீரூர் வானி யாறே காடே—நீலூர் காயா மருவி யாங்கே." எனவரும்.

குறுஞ்சீர்வண்ணங் குற்றெழுத்துப் பயின்றுவருவது. "குறுஞ்சீர் வண்ணங் குற்றெழுத்துப் பயிலும்." என்பவாகலின். வரலாறு;—"உறுபுய லெழிலி தொகுபெயல் பொழியச்—சிறுகொடியவரை நெறிதளை யவிழ." என்வரும்.

சித்திரவண்ணம் நெட்டெழுத்துங் குற்றெழுத்துமாய் வரும். "சித்திர வண்ண, நெடியவுங்குறியவு மொத்துடன் வருமே." என்பவாகலின். வரலாறு;—"ஒரூர் வாழினுஞ் சேரி வாரார்—சேரி வரினு மாயமுங் காவார்." எனவரும்.

நலிபுவண்ணம் ஆய்தம் பயின்று வரும், "நலிபு வண்ண மாய்தம் பயிலும்" என்பவாகலின். வரலாறு;—"அஃகாமை செல்வத்துக் கியாதெனின் வெஃகாமை—வேண்டும் பிறன்கைப் பொருள்." எனவரும்.

அகப்பாட்டுவண்ணம் முடியாத்தன்மையான் முடித்தன் மேலதாம். "அகப்பாட்டுவண்ண, முடியாத் தன்மையான் முடித்தன் மேற்றே." என்பவாகலின். வரலாறு;—"பன்மீ னுணங்கற் படுபுள் ளெழுப்பியும்—புன்னை நுண் டாது நம்மொடு தொகுத்தும்—பன்னாள் வந்தும் பணிமொழி பயிற்றியு—மணந்ததற் கொவ்வான் றணந்துபுற மாறி—யினைய னாகி யீங்குறத் துறந்தோன்—பொய்த லாயத்

துப் பொலந்தொடி மகளிரொடு—கோடியர் ஒவ்ண்மண லேறி—யோடுகலன் காணுந் துறைவன் ரோழி." எனவரும்.

புறப்பாட்டுவண்ணம் முடிந்ததுபோன்று முடியாதாகிவரும். "புறப்பாட்டுவண்ண, முடிந்தது போன்று முடியா தாகும்." என்ப வாகலின். வரலாறு:—"நிலவுமண லகன்றுறை வலவ னேவலி—னெரிமணிப் புள்ளின மொய்ப்ப நெருநலும்—வந்தன்று கொண்கன் றேரே யின்றும்—வருகுவ தாயி னென்றுபு துதைந்த—புன்னைத் தாதுகு தண்பொழி லகத்து—மெல்ல மேவர மென்முலை ஞெமுங்கப்—புல்லி னெவனோ மெல்லிய னீயே—நல்காது விடுகுவை யாயின் வைகலும்—படர்மலி யுள்ளமொடு மடன்மா வேறி—யுறுதுய ருலகுட னறியச்—சிறுகுடிப் பாக்கத்துப் பெரும்பழி தருமே." எனவரும்.

ஒழுகுவண்ணம் ஓசையான் ஒழுகிநடக்கும். "ஒழுகு வண்ண மோசையி னொழுகும்." என்பவாகலின். வரலாறு;—"அம்ம வாழி தோழி காதலர்க்—கின்னே பரிக்கு மின்னல் வாடையொடு—புன்கண் மாலை யன்பின்று நலிய—வுய்யல ளிவளென வுணரச் சொல்லிச்—செல்லுநர்ப் பெறினோ செய்ய வல்லா—வின்னளி யிறந்த மன்னவர்—பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே." எனவரும்.

ஒரூஉவண்ணம் நீங்கின தொடையாகிக் கிடக்கும். "ஒரூஉ வண்ண மொரீஇத் தொடுக்கும்." என்பவாகலின். அது செந்தொடை. வரலாறு;—"தொடிநெகிழ்ந் தனவே கண்சேந்தனவே—யாஞ்சென் றுரைப்பின் மரபின் றெவனோ—சொல்லாய் வாழி தோழி வரைமிசை—முள்ளாற் பொதுளிய வலங்கு குலைவெதிர்—பொங்குவா ளிளம்பிறை துவைப்ப—மணிநிலா விரியுங் குன்றுகிழ வோற்கே." எனவரும்.

எண்ணுவண்ணம் எண்ணுப்பயின்றுவரும். "எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும்" என்பவாகலின். வரலாறு;—"நிலநீர் வளிவிசும் பென்ற நான்கி—னளப் பரியை நாள்கோ டிங்கள்—ஞாயிறு கனையழ லைந்தொருங்கு புணர்ந்த—விளக்கத் தனையை *** வாலிய ரோவிவ் வுலகமோ டுடனே." எனவரும்.

அகைப்புவண்ணம் அறுத்தறுத்துப் பயிலும். "அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்." என்பவாகலின். வரலாறு;—"தொடுத்த வேம்பின் மிசைந்து துதைந்த—போந்தை யடைய வசைந்த வாரம்." எனவரும்.

தூங்கல்வண்ணம் வஞ்சியுரிச்சீர்பயின்றுவரும். "தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்" என்பவாகலின். வரலாறு;—"வசையில் புகழ் வயங்குவெண்மீன்—றிசைதிரிந்து தெற்கேகினும்." எனவரும்.

ஏந்தல்வண்ணஞ் சொல்லிய சொல்லினனே சொல்லப்பட்டது சிறக்கவரும். "ஏந்தல் வண்ணஞ், சொல்லிய சொல்லிற் சொல்லியது சிறக்கும்" என்பவாகலின். வரலாறு;—"கூடுவார் கூடல்கள் கூடலெனப் படா—கூடலுட் கூடலே கூடலாங்—கூட—லரும்பிய முல்லை யரும்பவிழ் மாலைப்—பிரிவிற் பிரிவே பிரிவு." எனவரும்.

உருட்டுவண்ணம் அராகந்தொடுக்கும். "உருட்டு வண்ணமராகந் தொடுக்கும்." என்பவாகலின். வரலாறு;—"தாதுறு முறிசெறி தடமல ரிடையிடை—தழலென விரிவன பொழில்" எனவரும்.

முடுகுவண்ணம் நாற்சீரடியின்மிக்கு ஓரடி அராகத்தோடொக்கும். "முடுகு வண்ண, மடியிறந் தோடி யதனோ ரற்றே" என்பவாகலின். வரலாறு;—"நெறியறி செறிகுறி புரிதிரி பரியா வறிவனை முந்துறீஇத்—தகைவகை" எனவரும்.

இவ்வாறன்றி இன்னும் ஒருவாற்றான் குறில் நெடில் வல்லினம் மெல்லினம் இடையினம் எனநிறுத்தி அகவல் ஒழுகிசை வல்லிசை மெல்லிசை என்பனவற்றோடு உறழ இருபதாம். அவற்றைத் தூங்கிசை ஏந்திசை அடுக்கிசை பிரிந்திசை மயங்கிசை என்பனவற்றோடு உறழ நூறாம். அவற்றைக் குறிலகவற்றூங்கிசைவண்ணம் நெடிலகவற்றூங்கிசைவண்ணமென வண்ணம் நூறென்பாரும் உளர். அவ்வேறுபாடும் உணர்க. (௨அ)

௫௫அ. உரைக்கப் படும்பொருட் கொத்தவை யெல்லாம்
புகழ்ச்சியின் மிக்க புனைந்துரை யவைதாம்
பெரிதினைச் சுருக்கலுஞ் சிறிதினைப் பெருக்கலு
மென்னிரண் டாகு மென்மனார் புலவர்.

இது புனைந்துரையாமாறு கூறுகின்றது.

இ - ள். புலவனாற்கூறப்படும் பொருட்குப் பொருந்திய புனைந்துரையெல்லாம் புகழ்ச்சியான்மிக்க புனைந்துரையாம். அப்புனைந்துரைதான் பெரிதொன்றனைச் சுருக்கிச்சொல்லுதலுஞ் சிறிதொன்ற

னைப் பெருக்கிச்சொல்லுதலுமென இரண்டுவகைப்படுமென்று கூறு வர் அறிவுடையோர். எ - று.

**வ**ரலாறு;—"அடையார்பூங் கோதையாட் கல்குலுந் தோன் றும்—புடையார் வனமுலையுந் தோன்று—மிடையாதுங்—கண்டு கொள்ளா தாயினுங் காரிகை நீர்மையாட்—குண்டாக வேண்டு நுசுப்பு." இது பெரியதனைச் சுருக்கிச்சொல்லியது. "அவாப்போ லகன்றதன் னல்குன்மேற் சான்றோ—ருசாப்போல வுண்டே மருங்கு—லுசாவினைப்—பேதைக் குரைப்பான் பிழைப்பிற் பெருகி னவே—கோதைக்கொம் பன்னாள் குயம்." இது சிறியதனைப் பெ ருக்கிச்சொல்லியது. பிறவும் அன்ன. (௪௯)

எ௫௯. நிறுவிய பொருளுக் கிறுதியைத் தருவ
தறிய வேண்டா வானந்த மதுதா
னியற்பெயர் சார்த்தி யெழுத்தள பெழினே
யியற்பா டில்லா வெழுத்தா னந்தமு
மப்பெயர் மருங்கின் மங்கல மல்லாத்
தொழிற்சொற் புணர்ப்பிற் சொல்லா னந்தமு
மெனவிரண் டாகு மிவைபுண ராமல்
நினைவதை யாப்பென நிகழ்த்துவர் புலவர்.

இஃது ஆனந்தமென்பதூஉம் அதன் பகுதியுங் கூறுகின்றது.

இ - ள். நிலைபெற்ற பொருளுக்கழிவினைப் பயப்பது ஆராயத் தகாத ஆனந்தமாம்; அவ்வானந்தந்தான் இயற்பெயர்ப்பால் அளபெ டைகூறின் பொருத்தமில்லாத எழுத்தானந்தமும் அவ்வியற்பெ யர்ப்பால் மங்கலம் ஒழிந்த தொழிற்சொல்லைச் செப்பிற் சொல்லா னந்தமுமென இரண்டுவகைப்படும்; இவ்விருவகையானந்தமும் படாமல் நினைந்து சொல்லுஞ் செய்யுளைச் செய்யுளென்றுசொல் லுவர் அறிவுடையோர். எ - று.

உ-ம். "ஆழி யிழைப்பப் பகல்போ மிரவெல்லாந்—தோழி துணையாத் துயர்தீர்வன்—றோழி—நறுமாலை தாவு திரையவோஒ வென்னுஞ்—செறுமாலை சென்றடையும் போழ்து." இதனுட் திரை யவோஒ என்புழி இயற்பெயர் சார்த்தி அளபெடுத்தமையால் அஃது எழுத்தானந்தமாம். "என்னிற் பொலிந்த திவ்ண்முக மென் றெண்ணித்—தன்னிற் குறைபடுவான் றண்மதிய—மின்னி—விரிந் திலங்கும் வெண்குடைக்கீழ்ச் செங்கோல் விசய—னெரிந்திலங்

கும் வேலி னெழும்." இதனுள் விசயனென்னும் பாட்டுடைத் தலைவன்பால் எரிந்தென்னுஞ் சொற்புணர்ந்தமையால் இது சொல் லானந்தமாம். இவ்விருவகையானந்தமுமன்றிப் பிறவாறு உளவே னுங் காண்க. (ருo)

எகூo. ஓரடி யானும் பலவடி யானு
மொரோவழி யியலு முரைத்தவச் செய்யுள்
அவைதாம், பாட்டுரை நூலே மந்திரம் பிசியே
முதுசொ லங்கதம் வாழ்த்தொடு பிறவு
மாகு மென்ப வறிந்திசி னோரே.

இஃது அடியின்றியும் ஓரடியானும் நடைபெறுஞ் செய்யுட்க ளும் உளவென்பதூஉம் அவை இவையென்பதூஉங் கூறுகின்றது.

இதற்குப் பொருளுரைத்திலஞ் சூத்திரத்தானே பொருள்வி ளங்கலின்.

பிசி, பொய். அங்கதம், வசை. இவற்றுக்கு உதாரணம் வந்து ழிக் காண்க. (ருக)

நான்காவது செய்யுளியல்முற்றிற்று.



## ரு-வது பாட்டியல்.

எகூக. எஞ்சிய விலக்கண மெல்லாஞ் சொல்லின்
மாத்திரை முதலா யாத்தினி தமைத்த
பாட்டி னியலு நூலி னியலு
முரையி னியலும் பிசியி னியலு
முதுசொல் லியலு மந்திர வியலுங்
குறிப்புரை யியலொடு திறப்படு மரபும்
வருணத் தியலும் புலவ ரியலு
மவையி னியலு மகலக் கவியைக்
கொடுப்போ ரியலுங் கொள்வோ ரியலோ
டடுத்த வீரேழும் பிறவுமா மென்ப.

என்பது சூத்திரம். நிறுத்தமுறையானே அகத்திணையிலக்க ணமும் புறத்திணையிலக்கணமும் அணியிலக்கணமுஞ் செய்யுளிலக்

கணமும் உணர்த்தி அந்நான்கிற்கும் பொதுவாய் எஞ்சிநின்ற அக லக்கவியிலக்கணமும் அளவியற்படாத ஏனை அறுவகைச்செய்யுளி லக்கணமும் உணர்த்தினமையான் இவ்வோத்துப் பாட்டியலென் னும்பெயர்த்து. இதனான் மேலோத்தினோடு இயைபுடைமையும் வி ளங்கும். அற்றேல் மரபிலக்கணமும் வருணத்திலக்கணமும் புலவ ரிலக்கணமும் அவையிலக்கணமும் அதனைப் பாடுவோரிலக்கணமும் அதனைக் கொள்வோரிலக்கணமும் பிறவும் உணர்த்துமாறென்னை யெனின், அது பாட்டின்கண்ணவாகிய இலக்கணம் உணர்த்தித் தன்னோடியையின்மைநீக்கித் தலைமைபற்றியபெயராம், வெண்கு டைப்பெருவிறல்வழுதிபோலவென்க. அற்றேல் இவ்வியலோடு செய்யுளியற்கு வேற்றுமையென்னையெனின், அது செய்தல் செய் யுளெனநின்று செய்யுட்செய்தலிலக்கணமாயிற்று, பாய்தல் பாய்த் துள் விக்கல் விக்குள் என்றாற்போல என்க. இதனுள் இத்தலைச் சூத்திரம் என்னுதலிற்றோவெனின், எஞ்சிய இலக்கணங்களிவை யென அவையின் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

இ - ள். இவ்வதிகாரத்துள்ளும் முன்னின்ற இரண்டதிகாரத் துள்ளுங் கூறுதொழிந்த இலக்கணங்களெல்லாவற்றையுஞ் சொல் லுமிடத்து மாத்திரையென்னும் உறுப்பு ஆதியாக யாப்புறுத்த பாட் டின்கண்ணவாகிய இலக்கணமும் நூலின்கண்ணவாகிய இலக்கண மும் உரையின்கண்ணவாகிய இலக்கணமும் பிசியின்கண்ணவாகிய இலக்கணமும் முதுசொற்கண்ணவாகிய இலக்கணமும் மந்திரவாய் மைக்கண்ணவாகிய இலக்கணமுங் குறிப்புமொழிக்கண்ணவாகிய இலக்கணத்துடனே வழக்கிடத்துஞ் செய்யுளிடத்தும் நடக்கும் இருவகைமரபின் இலக்கணமும் நான்குவருணத்தவர் இலக்கண மும் நாற்புலவர் இலக்கணமும் அவையிலக்கணமும் அகலக்கவி யைச்செய்துகொடுப்போர் இலக்கணமும் அதனைக்கொள்வோர் இலக்கணமுமாகிய பதினன்கனோடும் ஏற்பனபிறவுமாமென்று கூ றுவர் ஆசிரியர். எ - று.

பாட்டுமுற்கூறப்பட்டது ஆசிரிய அடியான் இற்ற சூத்திரஞ் செய்யுளாதலானுங் குறிப்புமொழி பாட்டின்கண்ணவாகலானும் மேலோத்தினோடு இயைபுடைமையானுமென்க. 'மாத்திரைமுதலா வாச்தினிதமைத்த பாட்டு' என்றதனாற் போந்தது அளவியற் செய்யுள் எல்லாவுறுப்பும் பெறுமென்றும் ஏனைச்செய்யுள் அவ் வாறு பெறாது குறையப்பெறுமென்றுங் கூறியவாறாம். 'குறிப்பு ரையியலொடு' என ஒடுக்கொடுத்தது பாட்டு முதலிய ஏழும் பட லத்தொழிபெனவும் ஏனைய பிண்டத்தொழிபெனவும் அறிதற்கெ

ணக்கொள்க. 'மாத்திரைமுதலாயாத்தினிதமைத்தபாட்டு' என்றது அனுவாதம். முதலாகவென்பது முதலாவெனச் செய்யுண்முடிபெய்தி நின்றது. ஆசிரியரென வெளிப்படாத எழுவாய் சொல்லெச்சமாக இயைந்தது. பிற இலக்கணங்களாவன நான்குபாவிற்கும் வருணவுரிமையும் நிலவுரிமையும் நிறவுரிமையும் நாளுரிமையும் இராசியுரிமையுங் கோளுரிமையும் அக்கோள்கட்கு உரிய பூவுஞ் சாந்துங் கலையும் மணியும் அகலக்கவியைக்கொள்ளும் ஓரையுமென்றவாறு. (க)

எசூஉ. அவற்றுட்,

பாட்டெனப் படுவது பைந்தமிழ் நாட்டகத்
தியாப்புறச் செய்பா வுறுப்பெழுந் திசைக்கும்.

இது நிறுத்தமுறையானே முதற்கண் நின்ற பாட்டு இவ்வியல் பிற்றென்கின்றது.

இ - ள். முற்கூறிய எழுவகைச்செய்யுளுட் பாட்டென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது மூவேந்தரது குளிர்ந்த தமிழ்நாட்டெல்லைக்கண் தொன்றுதொட்டு வழங்கும் யாப்புறச்செய் பாவென்னும் உறுப்பான் மிக்கொலிக்கும். எ - று.

எனவே, ஏனையறுவகைச்செய்யுளும் அடிவரையின்றிப் பாவுறுப்பாக இசைக்கப்படா என்பதூஉம் பெற்றாம். பெறவே, பாவென்பது பாவின்வேறாய்நின்று உறுப்பாமாறென்னையெனின், அது சேட்புலத்தொருவன் எழுத்துஞ் சொல்லுந் தெரியாமற் பாடம் ஓதுங்கால் அவன்பாடுகின்றசெய்யுளை விகற்பித்து இன்னதென்று உணர்த்தற்கேதுவாகிப் பரந்துபட்டுச் செல்வதோர் ஓசையே பாவெனநின்று பாவென்பதற்கு உறுப்பான்வந்த பெயராயிற்று. பாட்டென்பது, ஆடல் ஆட்டென்றாற்போலப் பாடல் பாட்டென நின்று ஆகுபெயரான் அத்தொழிலுறுகின்ற ஓசைமேல் நின்று அது பாட்டாயிற்று. அன்றிப் பாவினையுடையது பாட்டெனக் குறிப்புவினைமுற்றென்பதூஉமாம். (உ)

எசூங. ஆசு மதுரஞ் சித்திர மகலமென்
றோசை யெழும்பாட் டொருநால் வகைத்தே.

இஃது அப்பாட்டின் பெயரும் முறையுந் தொகையுங் கூறுகின்றது.

இ - ள். பாவுறுப்பு மேற்கொண்டொலிக்கும் பாட்டு ஆசுகவி யென்றும் மதுரகவியென்றுஞ் சித்திரகவியென்றும் வித்தாரகவி யென்றும் நான்கு கூற்றினையுடைத்து. எ - று. (௩)

எசுச. எழுத்துச் சொற்பொரு ளணியாப் பிவையின்
விழுத்தக வொருவன் விளம்பிய வுள்ளுறை
யப்பொழு துரைப்ப தாசு கவியே.

இது நிறுத்தமுறையானே ஆசுகவியிலக்கணங் கூறுகின்றது.

இ - ள். ஒருபுலவன் இவ்வெழுத்தானுதல் இச்சொல்லானு தல் இப்பொருளானுதல் இவ்வணியானுதல் இப்பாட்டானுதல் இவ் வெழுத்தாதி இவ்வெழுத்தந்தம் இச்சொல்லாதி இச்சொல்லந்தமா கப் பாடுவாயென்று கூற அப்பொழுதே அவன் கருத்துக்கு ஒப்பப் பாடுவது ஆசுகவியாம். எ - று. (௪)

எசுரு. சொல்லும் பொருளுஞ் சுவைபட நிறீஇச்
செல்வுழித் தொடையும் விகற்பமுஞ் செறீஇ
யுள்ளத் துள்ளே கொள்ளு மமுதெனத்
தன்மை யுவமை பின்வரு பெற்றியி
னுருவக முதலுற் றோசை பொலியப்
பாடுதன் மதுர கவியெனப் படுமே.

இது நிறுத்தமுறையானே மதுரகவியிலக்கணங் கூறுகின்றது.

இ - ள். சொல்லிலக்கணத்தினும் பொருளிலக்கணத்தினுஞ் சிதையாமல் மெய்ப்பாடுதோன்றக் கூறி அடிசேர்ந்து நடக்குமி டத்து முதற்றொடையும் விகற்பத்தொடையும் நெருங்கி உய்த்து ணர்வோர் மனத்தகத்து ஊறும் அமுதம்போலத் தன்மையும் உவ மையும் பொருளும் வேற்றுமையின்றி ஒன்றெனமாட்டிக் கூறும் உருவகம் முதலிய அணிகளான் அலங்கரிக்கப்பட்டுக் கேட்போர் செவிக்கு இனிய ஓசைமேற்பட்டுத் தோன்றப் பாடுவது மதுரகவி யாம். எ - று. (௫)

எசுசு. சித்திர கவிமேற் செப்பிய தாகும்.

இது நிறுத்தமுறையானே சித்திரகவியிலக்கணம் மாட்டேற் றான் எய்துவிக்கின்றது.

இ - ள். சித்திரகவியாவது மேற்சொல்லணியிற் கூறிய சித்திரகவியே ஈண்டுக்கூறுஞ் சித்திரகவியாம். எ - று.

அது மடக்கும் அதன்வழிப்படூஉஞ் சித்திரமுமாமென்றவாறு.

எகூஎ. வித்தார கவியை விளம்புங் காலை
யத்திறந் தொடர்நிலை யடிபல நடக்குந்
தனிப்பா வென்னத் தானிரண் டாகும்.

இது வித்தாரகவியின் பாகுபாடு கூறுகின்றது.

இ - ள். வித்தாரகவியைச் சொல்லுமிடத்துத் தொடர்நிலைப் பாட்டென்றும் பலவடியான் நடக்குந் தனிப்பாட்டென்றும் இரண்டுகூறாம். எ - று.

என்னவென்பதனைத் தொடர்நிலையென்பதனோடும் அத்திறமென்பதனை இரண்டென்பதனோடும் பிரித்துக் கூட்டுக.

ஈண்டுக்கூறிய அகலக்கவிக்கு இலக்கணம் ஆசிரியர் தொல்காப்பியனார் கூறாராயினார் என்னையெனின், அவர் "வழக்குஞ் செய்யுளு மாயிரு முதலி—னெழுத்துஞ் சொல்லும் பொருளு நாடி" எனக் கூறிப்புகுதலானும், "முன்னிலை சுட்டிய வொருமைக் கிளவி—பன்மையொடு முடியினும் வரைநிலை யின்றே—யாற்றுப்படை மருங்கிற் போற்றல் வேண்டும்." என அகலக்கவியைச் சொன்முடிபு கூறுமுகத்தாற் கூறுதலானும், புறத்திணைக்கண் "தாவி னல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்—சூத ரேத்திய துயிலெடை நிலையுங்—கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு—மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்—பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்—சென்றுபய னெதிரச் சொன்ன பக்கமுஞ்—சிறந்த நாளணி செற்ற நீக்கிப்—பிறந்த நாள்வயிற் பெருமங் கலமுஞ்—சிறந்த சீர்த்தி மண்ணு மங்கலமு—நடைமிகுத் தேத்திய குடைநிழன் மரபு—மாணார்ச் சுட்டிய வாண்மங் கலமு—மன்னெயி லழித்த மண்ணுமங் கலமும்—பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலையும்—பெற்ற பின்னரும் பெருவள னேத்தி—நடைவயிற் றோன்று மிருவகை விடையு—மச்சமு முவகையு மெச்சமி மின்றி—நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமுங்—காலங் கண்ணிய வோம்படையுளப்பட—ஞாலத்து வரூஉ நடக்கையது குறிப்பிற்—கால மூன்றொடு கண்ணிய வருமே." என அகலக்கவியை விதந்துகூறுதலானுஞ், செய்யுளோத்தின் "அகன்றுபொருள் கிடப்பினு மணுகிய

நிலையினு—மியன்றுபொருண் முடியத் தந்தன ருணர்த்தன்—மாட் டென மொழிப பாட்டியல் வழக்கின்." என்றதனுற் பொருட்டொ டர்நிலைச்செய்யுளும் "மாட்டு மெச்சமு நாட்ட மின்றி—யுடனிலை மொழியினுந் தொடர்நிலை பெறுமே." என்றதனுற் சொற்றெடர் நிலைச்செய்யுளும் பெறப்படூஉமென்க. அவற்றைப் பின்னுள்ளோர் பலரும் பாட்டியலென விரித்துக்கூறினுராகலான் இந்நூலுடையா ரும் அகலக்கவிக்கு இலக்கணங்கூறினுரென உணர்க. (எ)

எசூஅ. அவற்றுட்,
தொடர்நிலை விகற்பங் கடையில வென்ப.

இது முதற்கண் நின்ற தொடர்நிலைச்செய்யுட்கு ஆவதோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். தொடர்நிலை தனிநிலையென்னும் இரண்டனுட் தொ டர்நிலைச்செய்யுட்களின் வேறுபாடுகளைக் கூறுமிடத்து முடிவுடைய வல்லவென்று கூறுவர் ஆசிரியர். எ - று. (அ)

எசூகூ. விரித்தபா மகட்கும் வேட்கு மிறைக்கும்
பொருத்தமீ ரைந்தும் போற்றல் வேண்டும்.

இது மேல்வகுத்துக்கொண்ட அகலக்கவிக்கு இன்றியமை யாச் சிறப்புக் கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிப்போந்த துறைப்பொருளை விரித்துக் கூறும் பாமடந்தைக்கும் அப்பாமகளை மணம்புணருந் தலைவனுக்கும் பொ ருத்தம் பத்துஞ் சிதையாமற் பாதுகாத்துச் சொல்லுதலை விரும்பும் ஆசிரியன். எ - று. (கூ)

எஎ0. மங்கலஞ் சொற்பால் வருண முண்டி
தானமக் கரநா டப்பாக் கதிகண
மான வீரைந்து மம்முதற் சீர்க்குப்
பொருத்த மென்னத் தெரித்தனர் புலவர்.

இது வித்தாரகவிக்கு வேண்டுவன இவையெனத் தொகுத் துக் கூறுகின்றது.

இ - ள். மங்கலமுஞ் சொல்லும் பாலும் வருணமும் உண்டி யுந் தானமும் எழுத்தும் நாளும் தவருதகதியுங் கணமுமாகிய பத்

தும் அகலக்கவிக்கு முதற்கணின்ற சீர்க்குப் பார்க்கும் பொருத்தமெனத் தெரிந்துகூறுவர் புலவர். எ - று.

ஆகுபெயரான் மங்கலச்சொல்லை மங்கலமென்ருர். (கO)

எஎக. சீர்பொன் பூமணி திங்கள் பரிதி
கார்திரு வெழுத்துக் கங்கை யானை
கடனிலை மாவுல கஞ்சொன் னீர்தே
ரமுதம் புகழ்நில மாரணங் கடவுள்
திகிரி பிறவுஞ் செப்புமங் கலமே.

இது நிறுத்தமுறையானே முதற்கணின்ற மங்கலமொழி இவையென்கின்றது.

இ - ள். சீர் முதலாகத் திகிரி ஈருக நின்ற இருபத்துநான்கு சொல்லும் அவைபோல்வன பிறவும் அகலக்கவிக்கு முதற்கணிற்கும் மங்கலச்சொற்களாம். எ - று.

பிற என்றதனுல் வாழி மாலை சங்கு தார் விசும்பு கவி கயல் சுடர் முரசு கவரி தோகை நன்று தாமரை விளக்கு மலர் பழனம் இடபம் என்பனவும் செல்வஞ் சீர்த்தி கீர்த்தி ஞாயிறு புயல் புனல் வேழங் களிறு பரி மதியம் தீபம் முதலிய பரியாயச்சொற்களுங் கொள்க. (கக)

எஎஉ. விழுப்பொரு டோன்றல் வேறுபல் பொருளி
னெழுக்கல் வகையுளி யுறுத லீறு
திரித லின்றிச் செய்வது சொல்லே.

இது நிறுத்தமுறையானே இரண்டாம் எண்ணுமுறைமைக்கண் நின்ற சொற்பொருத்தமாமாறு கூறுகின்றது.

இ - ள். முதற்கண் எடுத்த மங்கலச்சொல் விழுமியபொருள் தன்கட் தோன்றநிற்றலுடனே பல்வேறுபொருள்படக் கூறுதலும் வகையுளியுறுதலும் ஈறுதிரிதலுமாகிய குற்றம் மூன்றும் இன்றிப் புலவராற்செய்வது சொற்பொருத்தமாம். எ - று.

ஏற்புழிக்கோடலான் மங்கலச்சொல்லை இடைக்கண்வைப்புழி ஈறுதிரிதலுமுண்டென்றவாறு. (கஉ)

எஎங. ஆடூஉக் குறினெடி லாகு மகடூஉப்
பேடொற் றுய்தம் பெண்ணுண் புகழ்ச்சிக்
கவ்வெழுத்து மயங்கினு மமையு மென்ப.

இது நிறுத்தமுறையானே பாற்பொருத்தமாமாறு கூறு கின்றது.

இ - ள். குற்றெழுத்தைந்தும் ஆண்பாலாம்; நெட்டெழுத்தே ழும் பெண்பாலாம்; ஒற்றும் ஆய்தமும் பேடாம். ஆண்பாலைக் கூறு மிடத்து ஆண்பாலெழுத்துக்களாம்; பெண்பாலைக் கூறுமிடத்துப் பெண்பாலெழுத்துக்களாம்; மயங்கினுமாம். எ - று.

ஒற்றும் ஆய்தமும் முதலாகாவெனினும் பாலுரிமை கூறுமு கத்தான் உரிமைகூறினர். மேலும் இவ்வாறு பின்னுள்ளோர் கூறி யவாறே கூறினும் பயனில்கூற்றென விலக்கற்பாலவல்லவென்று உய்த்துணர்ந்துகொள்க. (கங)

எஎச. பன்னீ ருயிரு முன்னொற் றாறு
மன்னிய வந்தணர் வருண மாகும்.

இது நிறுத்தமுறையானே வருணப்பொருத்தங் கூறுவனவற் றுள் மறையோர்வருணத்திற்கு உரிய எழுத்துக்கள் இவையென் கின்றது.

இ - ள். பன்னிரண்டு உயிருங் க ங ச ஞ ட ண என்னும் ஆறொற்றும் மறையோர்வருணத்திற்கு உரிய எழுத்தாம். எ - று.

ஒற்றெனப் பொதுப்படக்கூறினாரேனும் உயிரோடுகூடிய மெய்யென்றே கோடும். மேல்வருவனவற்றிற்கும் ஈதொக்கும்.(கச)

எஎரு. தநபம யரவெனச் சாற்றிய வாறு
மனமகி ழரசர் வருண மாகும்.

இஃது அரசர்வருணங் கூறுகின்றது.

இ - ள். த ந ப ம ய ர என்னும் ஆறும் அரசர்க்கு உரிய. எ - று. (கரு)

எஎசா. வலறன வென்னு நான்கு புள்ளியு
மிவர்தரு வணிகர்க் கெய்து மென்ப.

இது வணிகர்வருணங் கூறுகின்றது.

இ - ள். வ ல ற ன என்னும் நான்குமெய்யும் பொருட்கண் விரும்பும் வணிகர்க்கு உரிய எழுத்துக்களாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று. (கசு)

எஎஎ. ழளவெனு மிரண்டும் வளமையர்க் காகும்.

இது நான்காம் வருணத்திற்கு உரிய எழுத்துக்கள் இவையென்கின்றது.

இ - ள். ழ ள என்னும் இரண்டெழுத்துஞ் சூத்திரவருணத்திற்கு உரிய எழுத்துக்களாம். எ - று. (கஎ)

எஎஅ. பன்னீ ருயிரு முன்னயன் படைத்தனன்
மன்னிய வரனரி மயிலோன் புனிதன்
ஞாயிறு திங்கள் நடுவன் வருண
னேயு நிதிக்கோ னிரண்டிரண் டாகப்
படைத்தன ரீரொன் பானொற் றையுமே.

இது மேற்கூறிய உயிரொற்றுக்களுக்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். பன்னிரண்டு உயிரினையும் பிரமன் உண்டாக்கினன்; பதினெட்டுமெய்யினையும் இரண்டிரண்டாக முறையே எக்காலத்தும் எப்பொருட்கண்ணும் உளனென நிலைபெற்ற அரனும் அரியும் முருகனும் இந்திரனும் ஆதித்தனுஞ் சந்திரனும் இயமனும் வருணனுங் குபேரனுமாகிய ஒன்பதின்மரும் படைத்தனர். எ - று. (கஅ)

எஎகூ. கசதப நமவ வேழொடு மகர
மிகர முகர மெகர நான்கு
மமுத வெழுத்தென் றறைந்தனர் புலவர்.

இது நிறுத்தமுறையானே உண்டிகூறுவனவற்றுள் அமுத உண்டி இவையென்கின்றது.

இ - ள். க ச த ப ந ம வ என்னும் ஏழொடும் அகரமும் இகரமும் உகரமும் எகரமுமென்னும் நான்குயிரும் முன்மொழிக்காம் அமுதவெழுத்துக்களென்று கூறினர் புலவர். எ - று. (கக)

எஅ0. யரலள வென்னு மெழுத்தினை யூர்ந்த
வாவு மோவு மஃகாற் புள்ளியு
மாய்தமு மஃகான் குறுக்கமு மளபு
மெய்தா நஞ்சென் றிகழ்ந்தனர் புலவர்.

இது நச்செழுத்து இவையென விலக்குகின்றது.

இ - ள். யரலள என்னும் ஒற்றினையூர்ந்த ஆகாரமும் ஓகாரமும் அவ்வொற்றுக்களும் ஆய்தமும் மகரக்குறுக்கமும் அளபெடையும் நச்செழுத்தாம்; இவை ஆதிமொழிக்கு ஆகாதனவென்று கூறுவர் புலவர். எ - று.

எய்தாவென்ற மிகையான் எடுத்த மங்கலமொழிக்கண் இவ்வெழுத்துக்கள் வரின் அவை குற்றமுடையவல்ல எனக்கொள்க. ()

எஅக. இத்திறந் தசாங்கத் தயற்கு மியையும்.

இது மேற்கூறியதற்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். அமுதவெழுத்தும் நச்செழுத்தும் முதன்மொழிக்கேயன்றித் தசாங்கத்தயலினும் வருதலும் வாராமையும் பொருந்தும். எ - று.

இச்சூத்திரம் பருந்தின்வீழ்வு. (உக)

எஅஉ. மலைநதி நாடூர் வனைதா ரிவுளி
கொலைமத களிறு கொடிமுர சாணை
யிவையே தசாங்க மென்மனார் புலவர்.

இது தசாங்கமாவன இவையென அவற்றின் பெயரும் முறையுங் கூறுகின்றது.

இ - ள். மலையும் நதியும் நாடும் ஊரும் புனைதாருங் குதிரையுங் கோறற்றொழிலுற்ற மதவேழமுங் கொடியும் முரசும் ஆக்கினையுமாகிய இவைபத்துந் தசாங்கமென்று கூறுவர் புலவர். எ - று.

இச்சூத்திரம் பொருளியைபுபற்றிக் கூறினர், சார்புநூலாகலான். (உஉ)

எஅஙூ. குற்றெழுத் தைந்து மொத்தநெட் டெழுத்தொடு
மையௌ வென்னு மாயீ ரெழுத்தை

இஉ என்னு மிரண்டொடுஞ் சேர்த்திப்
பால குமார விராச விருத்த
மரண மென்ன வகுத்திறை வன்பெயர்
முதலெழுத் தினைமுதற் பொருத்தம தாக
முதற்சீ ரிடத்து முதற்க ணின்ற
வெழுத்தொடு தாக்கி யிடமுதன் மூன்றும்
விழுத்தகு மூப்பு மரணமும் விலக்கே.

இது தானப்பொருத்தமாமாறு கூறுகின்றது.

இ - ள். குற்றெழுத்துக்கள் ஐந்துந் தமக்கு இனமொத்த நெட்டெழுத்துக்களோடும் ஐகார ஔகாரமென்று கூறப்படும் அவ்விரண்டெழுத்தை இகர உகரமென்னும் இரண்டெழுத்தோடுஞ்சேர்த்திப் பாலப்பொருத்தங் குமாரப்பொருத்தம் இராசப்பொருத்தம் விருத்தப்பொருத்தம் மரணப்பொருத்தமென வகுத்து இறைவன் பெயர் முதலெழுத்தினைப் பாலப்பொருத்தமாகக்கொண்டு முதன்மொழி முதலெழுத்தை நேரிட்டுப்பார்க்க முதற்கணின்ற மூன்றும் நன்மைதரும் பொருத்தம் உடையன; பின்னின்ற விருத்தப்பொருத்தமும் மரணப்பொருத்தமும் விலக்கப்படும். எ - று.

"நட்பர ணெதிபகை மரண மைந்தனு—ளொப்புடைக் குறிக்கோ ளொருமூன் றாகும்." என்றார் மாமூலர். (உரு)

எஅச. எண்ணின் மூன்றைந் தேழொன் பான்முத
னண்ணு மக்கர நாலா றெட்டுறு.

இஃது எழுத்துப்பொருத்தமாமாறு கூறுகின்றது.

இ - ள். முதற்சீரெழுத்தினை எண்ணுமிடத்து வியனிலையாகிய மூன்றெழுத்தும் ஐந்தெழுத்தும் ஏழெழுத்தும் ஒன்பதெழுத்தும் பொருத்தமுடையனவாம்; சமனிலையாகிய நான்கெழுத்தும் ஆறெழுத்தும் எட்டெழுத்தும் பொருந்தா. எ - று.

எண்ணினென்ற மிகையானே உலகம் அமுதம் ஆரணம் எழுத்து எனப் பிறழ்ந்துவருமேனும் மங்கலத்தான் அமைவுடைய என்க. (உச)

எஅரு. ஆவி முதனுன் கார லப்பான்
மேவிய வைந்தும் வியன்பூ ராடம்.

நிறுத்தமுறையானே நாட்பொருத்தங் கூறுவான் தொடங்கினவற்றுள் இஃது உயிருள் முதலொன்பதெழுத்திற்கும் நாளுரிமை கூறுகின்றது.

இ-ள். உயிருள் அ ஆ இ ஈ என்னும் நான்கெழுத்துங் கார்த்திகைநாளாம்; உ ஊ எ ஏ ஐ என்னும் அப்பால் ஐந்தெழுத்தும் பூராடநாளாம். எ - று. (உரு)

எஅசு. மற்றைய மூன்று முத்திரா டம்மே.

இதுமுதற் பதினொருசூத்திரங்காறுஞ் சூத்திரத்தாற் பொருள் விளங்கக் கிடந்தன. (உசு)

எஅஎ. ககர வருக்கத் தொருநான்கு மிரண்டுந்
திகழ்திரு வோணந் திருவா திரையாம்
பிற்பான் மூன்று மூன்றும் பேசிற்
பொற்புறு புனர்தம் பூசமாகும். (உஎ)

எஅஅ. சகர வருக்கந் தனின்முத னான்கும்
புகலுங் காலைப் புருட நாண்மே
லைந்து மூன்றச் சுவினி பரணி. (உஅ)

எஅகூ. உற்ற ஞகரத் தொருமூன் றினையு
மற்றை யவிட்ட மாமெனப் பகர்வர். (உகூ)

எகூ0. மன்னிய தகரத் திரண்டேழ் மூன்று
தன்னியற் சோதி விசாகஞ் சதயம். (ந0)

எகூக. ஆங்குறு நகரத் தாறு மூன்றுமூன்
றோங்கும் பனைதுளங் கொளிபுரட் டாதி.

பனையென்பது அனுடம். துளங்கொளியென்பது கேட்டை. (நக)

எகூஉ. நற்பக ரத்தி னன்கிரண் டாறு
முற்படு முத்திரந் தொட்டு மூன்றே. (நஉ)

எகூந. ஆறு மூன்றுமூன் றுமக ரத்திற்
றேறு மகங்கட் செவியொண் பூரம்.

கட்செவி, ஆயிலியம். (நந)

எகூச. உற்ற யாவொன்று முத்திரட் டாதி
யூயோ விரண்டு மேயு மூலம். (௲ச)

எகூரு. எடுத்த வகரத் திருநான் கிற்கு
மடுத்த ரோகணி மான்றலை யாகும்.

மான்றலை, மிருகசீரிடம். (௲ரு)

எகூசு. இறைவன் பெயர்முத லெழுத்தை நோக்கி
யுறுநா ளினைமூ வொன்ப தாக்கி
யொன்றுமூன் றைந்தே ழொருமுத் திறத்தினு
மொன்றா வண்ண முரைமுதற் சீர்க்கே.

இது நாட்பொருத்தங்கொள்ளுமாறு எதிர்மறைமுகத்தான் உணர்த்துகின்றது.

இ - ள். பாட்டுடைத்தலைவன்பெயரின் முதலெழுத்திற்கு உரியநாள் தொடங்கி உறுகின்ற இருபத்தேழு நாளினையும் ஒன்பதொன்பதாகப் பகுத்துச் சென்மம் அநுசென்மம் உபசென்மமென்று கூறப்பட்ட முப்பகுதியினும் ஒன்று மூன்று ஐந்து எழு எண்ணின்வந்த நாட்கள் பொருத்தமுடையவல்லவெனக்கொண்டு இரண்டு நான்கு ஆறு எட்டு இவைகளின் நின்றநாட்களைப் பொருத்தமுடையவாக முதற்சீரையெடுத்துச் சொல்லுவர். எ - று.

பிறநூன்முடிபுதானுடன்படுதலென்னும் நியாயநூல்வழக்கால் இறைவன்பெயர்நாட்கு மூன்றாம்பரியாயத்தினின்ற மூன்று ஐந்து எழு பொருத்தமுடையவென்று கோடலுஞ் சென்மநாள் தொடங்கிப் பொருத்தங்கோடலுங் கொள்க. (௲சு)

எகூஎ. எட்டா மிராசியும் வைநா சிகமும்
விட்டு முதற்சீர் விளம்புதன் மரபே.

இஃது அம்முதற்சீர்க்கு எய்தாதது எய்துவிக்கின்றது.

இ - ள். இறைவன்பெயர்நாட் தொடங்கி எட்டாம் இராசிக்கண்ணுற்ற இரண்டேகால்நாளும் எண்பத்தெட்டாங் கால் பொருந்திய வைநாசிகநாளுந் தள்ளிப் பொருத்தமுடைய நாள்களைக் கொண்டு இறைவன்பெயர்க்கு முதற்சீர் எடுத்துக்கூறல் மரபு. எ-று.

உம்மையை எச்சப்படுத்திக் கணநாளின்விலக்கியன ஒழித்துக் கூறப்படுமென்பதூஉங் கொள்க.

இச்சூத்திரம் பருந்தின்வீழ்வு. (ந௫எ)

எகூஅ. ஈறில் வன்மை குறிலிமை யோர்க்காங்
கூறு நெடின்முத னான்கு மென்மை
யந்த மொன்றொழித் தல்லன மக்கண்
முந்துங் கதியிவை முதன்மொழிக் காகும்.

இது நிறுத்தமுறையானே கதிகூறுவனவற்றுள் முதன்மொழிக்குப் பொருத்தமுடைய கதிகளாமாறு கூறுகின்றது.

இ - ள். நகரவொற்றல்லாத ஏனைவல்லொற்றைந்தும் ஔவும் குற்றுயிரல்லாத ஏனை நாற்குற்றுயிருந் தேவர் கதியின் கூறும்; ஆ ஈ ஊ ஏ என்னும் நான்கெழுத்தும் ணகரவொற்றல்லாத ஏனை ஐந்துமெல்லொற்றும் மக்கட்கதிக்கு உரிய எழுத்துக்களாம்; இவ்விருகதியும் முதன்மொழிக்குப் பொருந்தும். எ - று. (ந௫அ)

எகூகூ. ஓஐ யரல ழறவெனு மேழுந்
தொக்க விலங்கின் சூழ்கதி யேனைய
நரகர் கதியிவை நவையெனப் புகல்வர்.

இது விலக்கப்படுங் கதியாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒகரம் ஓகாரமும் யகர ரகர லகர ழகர றகரமுமாகிய ஏழெழுத்தும் பலவாகிய விலங்கின்கதியைக் கூறும் எழுத்துக்களாம். ஒழிந்த ஐகார ஔகாரமும் வகர ளகர னகரமுமென்னும் ஐந்தெழுத்துக்களும் நரகர் கதிக்கு ஓதிய எழுத்துக்களாம். இவ்விரு கதியையுங் குற்றமுடைய கதியென முதன்மொழிக்கு ஆகாவென்று கூறுவர் புலவர். எ - று.

தொக்க என்ற மிகையானே எடுத்த மங்கலச்சொல்லின் முதலெழுத்தாமாயிற் குற்றமுடையவல்ல என்றவாறு. (ந௫கூ)

அ00. ஆதியு மிடையு மிறுதியு முற்று
மோதிய நேரு நிரையு முற்றிடின்
நீர்தீ மாக நிகரில் சுவர்க்க
மாமதி பரிதி வாயு பூகண
மாமுற் றுதி யாமுதற் சீர்க்கே.

இது நிறுத்தமுறையானே கணப்பொருத்தமாமாறு கூறுகின்றது.

இ - ள். ஆதியினும் இடையினும் இறுதியினும் முற்றினும் மேற் செய்யுளியலுட் கூறிய நேரசையும் நிரையசையுமாய் வரின் ஆதிநேர் நீர்க்கணமெனவும் இடைநேர் தீக்கணமெனவும் இறுதி நேர் ஆகாயகணமெனவும் முற்றுநேர் சுவர்க்ககணமெனவும் ஆதி நிரை சந்திரகணமெனவும் இடைநிரை சூரியகணமெனவும் இறுதிநிரை வாயுகணமெனவும் முற்றுநிரை பூகணமெனவும் ஆகும்; இவற்றுள் முற்றுநேரும் முற்றுநிரையும் ஆதிநேரும் ஆதிநிரையும் முதற் சீர்க்குப் பொருத்தமுடையனவாம். எ - று.

“நீரது கணமே சீர்சிறப் பெய்துந்—தீயின் கணமே நோயது சேரு—மந்தர கணமே வாணா ளகற்று—மிந்திர கணமே பெருக்கஞ் செய்யுஞ்—சந்திர கணமே வாழ்நாள் தரூஉஞ்—சூரிய கணமே வீரியம் போக்கு—மாருத கணமே சீர்சிறப் பகற்று—நிலக்கணந்தானே மலர்த்திரு விளங்கும்.” என்றார்மாமூலர். “நேரசை யாகவு நிரையசை யாகவுஞ்—சீர்பெற வெடுத்தல் சில்லிடத் துளவே.” என்றார் இந்திரகாளியார். இது சிறப்பின்மையின் ஈண்டுத் தொக்கினரெனக் கொள்க.

ஓதிய என்ற மிகையானே கணநாட்பொருத்தமுங் கொள்க. அவையாமாறு;—“வருண கணமே சதய மென்ப—சந்திர கணமே மிருக சீரிட—மந்தர கணமே புனர்பூச மாகும்—வாயு கணமே சோதி யாகுஞ்—சூரிய கணமே பூச மென்ப—தீக்கணந் தானே கார்த்திகை யென்ப—யமான கணமே பரணி யென்ப—பூமி கணமே கேட்டை யாகும்” எனக் கணநாட்கூறி “நிலையே செல்வஞ் சூலை நலகீக்கல்—கொலைபிணி நன்மை யின்பங் கூறே.” என இந்திரகாளியர் பலமுங் கூறியவாறு அறிந்துகொள்க. (சo)

அoக. தானமு நாளுங் கணமுந் தவறு
வூனமுற் றிடினடை யுறுதலு முறுங்காற்
பரியா யச்சொற் பகர்தலு மங்கலக்
குரியமற் றதுநடு வுறுமிறு தியினும்.

இது மங்கலச்சொற்கு ஒரோவழி வேண்டுஞ் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். தானப்பொருத்தமும் நாட்பொருத்தமுங் கணப்பொருத்தமுங் குற்றம்வரல் ஆகா; தலைவன் இயற்பெயரைக் குறித்து

ங்மகலச்சொற்குக் குற்றப்பாடுளதாயின் அம்மங்கலச்சொற்கு அடைகொடுத்துக் கூறுதலும் பரியாயச்சொற்கூறுதலும் உரியனவாம்; அம்மங்கலச்சொல் முதற்கணன்றி நடுவினும் இறுதியினும் நிற்கவும்பெறும். எ - று.

மங்கலத்திற்கென்பது மங்கலக்கென விகாரப்பட்டுநின்றது. ஆகுபெயரான் மங்கலச்சொல்லை மங்கலமென்றார்.

இங்ஙனம் இவ்வாறு கூறுதலானும் மேற்கூறப்பட்டதனானும் மங்கலத்தைக் குறித்துச் சொற்பொருத்தமும் உண்டிப்பொருத்தமும் எழுத்துப்பொருத்தமும் வேறுபடினும் அமையுமெனவும், தானத்தினையும் நாளினையுங் கணத்தினையுங் குறித்து மங்கலச்சொல் வேறுபடினும் அமையுமெனவுங் கொள்க. (சக)

அ0உ. நேரீற் றியற்சீர் வெண்சீர் முன்னு
நிரையீற் றியற்சீர் கனிச்சீர்ப் பின்னுந்
தேருங் காலைச் சிறப்புறு மவையே
யயன்றிருக் கோக்கரு டன்கண மென்னப்
பயின்றிடு மியற்சீர்ப் பரிசுரைத் திடவே.

இஃது ஆசிரியவுரிச்சீர்க்குக் கணப்பொருத்தம் மாட்டேற்றான் எய்துவித்தலேயன்றி வேறுகணமுங் கூறுகின்றது.

இ - ள். நேரசையிறுதியாகிய தேமாபுளிமாவென்னும் இயற்சீரிரண்டும் வெண்பாவுரிச்சீரின் முன் நின்ற தேமாங்காய் புளிமாங்காய்போல முறையே சுவர்க்ககணமுஞ் சந்திரகணமுமாமெனவும், நிரையசையிறுதியாகிய கருவிளங் கூவிளமென்னும் இயற்சீரிரண்டும் வஞ்சியுரிச்சீரிற் பின் நின்ற கருவிளங்கனி கூவிளங்கனிபோல நிலக்கணமும் நீர்க்கணமுமாமெனவுஞ் சிறப்புப்பெற்றுநடக்கும். அன்றியும் அவை பிரமகணமும் இலக்குமிகணமுஞ் சுரபிகணமுங் கருடகணமுமென உரிமைகூறப்பட்டு அகலக்கவிமுதற்கட் பயின்றுநடக்கும். எ - று.

பாட்டியல்செய்தோர் பலராகலான் ஒருசாரார் மூவசைச்சீரே வருமெனக் கூறுதலானும் ஒருசாரார் ஈரசைச்சீர் உடன்கொண்டு கூறுதலானும் ஈரசைச்சீரும் இலக்கியத்திற் பயின்றுவருதலானும் இவ்வாசிரியர் இருதிறனும் நேர்ந்தாரென்பதாம். (சஉ)

அ0௩. உற்ற தசாங்கத் தினையொரு சீரான்
முற்ற வுரைத்தன் முறைபிரித் திசைப்பின்

பிழையாம் புணர்மொழிப் பெயரீற் றின்றேகின
வழுவா காவென வகுத்தனர் புலவர்.

இது தசாங்கத்தினைப் புணர்க்குந் திறத்தாவதோர் சிறப்புக் கூறுகின்றது.

இ - ள். பாட்டுடைத்தலைவற்குப் பொருந்திய தசாங்கங்களை ஒருசீராலே முடிவுபெறப்பாடுவது இலக்கணமாம்; பிரித்து வேறு சொன்முடிபு கொடுத்துக் கூறல் குற்றமாம்; பிரித்தவழிப் புணர்மொழிப் பெயரிறுதிக்கட் தொகைச்சொற்கொடுத்து நச்செழுத்தகற்றிக் கூறிற் குற்றமாகா. எ - று. (௩௩)

அ௦௪. கூறிய விலக்கணங் குறைபா டின்றித்
தேறிய மூவசைச் சீர்முத லாக
வகலக் கவிதா னமையு மென்ப.

இஃது அகலக்கவிக்காவதோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். கூறப்பட்ட பத்துவகைப்பொருத்த இலக்கணத்திற் குறைவின்றிப் பலவாற்றானுந் தெளிந்த மூவசைச்சீர் முதலாக அகலக்கவி பாடப்படும். எ - று.

தேறிய என்றதனல் உண்டியின் விலக்கிய நச்செழுத்துங் கதியின் விலக்கிய எழுத்தும் எடுத்த மங்கலச்சொல்லின்வரின் அமுதமாய் அமைவுடைத்தெனவுங் கொள்க. அவை முறையே சீர் சொல் யானை எனவும் எழுத்து பொன் கார் சொல் அமிர்தம் என ம்வு வருவன. இன்னும் அதனனே மங்கலத்திற்கு அடைகொடுத்த அடைசொல்லின் முதனின்ற எழுத்தேபற்றி எழுத்திலக்கணங் கொள்க.

இவ்வாறு கூறிய இலக்கணங்களாற் போந்தபொருள் மங்கல முஞ் சொல்லுஞ் சொல் நோக்கியுங், கணஞ் சீர் நோக்கியும், பால் முதலிய ஏழும் எழுத்தை நோக்கியுங் கூறினரென்பது.

இத்துணையும் அகலக்கவிமுதற்சீர்க்கு வேண்டும் பொருத்த இலக்கணங்கூறி இனி அகலக்கவியிலக்கணங் கூறுகின்றூர். (௩௪)

அ௦௫. பிள்ளைக் கவிமேற் கொள்ளுங் கலம்பகம்
பன்மணி மாலை மும்மணிக் கோவை
யகப்பொருட் கோவை தொகைப்படு செய்யு
ளிணைமணி மாலை யிரட்டைமணி மாலை

மும்மணி மாலை நான்மணி மாலை
யிருபா விருபஃ தொருபா வொருபஃ
தொலியந் தாதி மலிபுக ழின்னிசை
வருக்க மாலை திருத்தகு கைக்கிளை
மங்கல வள்ளை மற்றை யிரட்டை
நற்கீர்த்தி நேரிசை மெய்க்கீர்த்தி மாலை
காப்பு மாலை வேனின் மாலை
பல்சந்த மாலை யங்க மாலை
வசந்த மாலை நவமணி மாலை
பரணி தசாங்கப் பத்திரு பகுதிய
பதிற்றந் தாதி நூற்றந் தாதி
யட்ட மங்கல மலங்கார பஞ்சக
மூசல் சின்னப் பூவொரு பொருண்மேற்
பேசுஞ் சதகம் பிறவெண் ணூலுங்
கூறுத லைந்திணைக் கோவை யுற்ற
நாழிகை வெண்பா நானூற் பதனோ
டியாழின் மொழிவிழி யிணைமுலைப் பத்து
வில்வாள் வேல்கோல் வேழங் குதிரை
நாடூர் கொடையை நயந்த விருத்த
மாப்பெரும் புலவர்சொல் காப்பிய மென்னப்
பெயர்பெறுந் தொடர்நிலை பிறவு மன்ன.

இஃது அகலக்கவி இரண்டனுட் தொடர்நிலைச்செய்யுள் பெறும் பெயர்வேற்றுமை கூறுகின்றது.

இ - ள். பிள்ளைக்கவி முதலாகக் காப்பியம் ஈறாகச் சொல்லப்பட்ட ஐம்பத்தைந்தும் அவற்றுட் தொகைபெறவகுத்த அகலக்கவி வேறுபாடும் அவைபோல்வன பிறவுமெல்லாந் தொடர்நிலைச்செய்யுளாம். எ - று. (சரு)

அ0சா. கடுங்கோலை நீக்கிக் கடவுட் காப்புச்
செங்கீரை தால்சப் பாணி முத்தம்
வாரானை முதல வகுத்திடு மம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதே ரென்னப்
பெறுமுறை யாண்பாற் பிள்ளைப் பாட்டே.

இது பிள்ளைக்கவிக்கு இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். கடிய கொலைத்தொழிலை அகற்றி அருணீர்மைதோன்றக் கடவுளைப் புகழ்ந்துகூறி அக்கடவுள் காக்கவெனக் கூறுங் காப்பு முதலாகச் சிறுதேர் ஈறாக முறையான்வகுத்த பத்துநிலமும் பெறும் ஆண்பாற்பிள்ளைக்கவி. எ - று.

செங்கீரை, தலையெடுத்து முகமசைத்தல். சிறுபறைமுழக்கலையுஞ் சிற்றில்சிதைத்தலையுஞ் சிறுதேருருட்டலையுஞ் சிறுபறை சிற்றில் சிறுதேரென்முர், பெயரொடு தொழிற்கு ஒற்றுமையான். (சசு)

அ0எ. அவற்றுட்,
பின்னைய மூன்றும் பேதையர்க் காகா
வாடுங் கழங்கம் மானை யூசல்
பாடுங் கவியாற் பகுத்து வகுப்புட
னகவல் விருத்தத் தாற்கிளை யளவாம்.

இது பெண்பாற்பிள்ளைக்கவிக்கு எய்தியதன்மேற் சில வேறுபாடும் பொது இலக்கணமுங் கூறுகின்றது.

இ - ள். அப்பருவம் பத்தினுள்ளும் பிற்கூறப்படுஞ் சிறுபறை முழக்கலுஞ் சிற்றில்சிதைத்தலுஞ் சிறுதேருருட்டலும் பெண்பாற்கு ஆகா; கழங்கு அம்மானை ஊசல் பாடுங் கவிகளாற் பாடப்பட்டு வகுப்பானும் அகவல்விருத்தத்தானுஞ் சுற்றமுறப் பாடப்படும். எ - று. (சஎ)

அ0அ. மங்கலம் பொலியுஞ் செங்கண் மாலே
சங்கு சக்கரந் தரித்த லானுங்
காவற் கடவு ளாத லானும்
பூவினட் புணர்த லானுமுன் கூறிக்
கங்கையும் பிறையுங் கடுக்கையும் புனையுமை
பங்கனென் றிறைவனைப் பகர்ந்து முறையே
முழுதுல கீன்ற பழுதறு மிமயப்
பருப்பதச் செல்வியை விருப்புற வுரைத்து
நாமகள் கொழுநன் மாமுகி லூர்தி
யொற்றைக் கொம்பன் வெற்றி வேல
னெழுவர் மங்கைய ரிந்திரை வாணி

யுருத்திர ரருக்கர் மருத்துவர் வசுக்கள்
பூப்புனை யூர்தியிற் பொலிவோ ரனைவருங்
காப்ப தாகக் காப்புக் கூறல்.

இது பருவம் பத்தினுள்ளும் முதற்பருவமாகிய காப்பினுக்கு உரைக்கப்படுங் கடவுளர்பெயரும் முறையுங் கூறுகின்றது.

இ - ள். சுபங்களெல்லாம் பொலியுஞ் சிவந்த கண்ணையுடைய மாயோன் சங்கத்தினையுஞ் சக்கரத்தினையுங் கைக்கோடலானுங் காத்தற்றொழிலுரிமை பூணுதலானும் பூமடந்தையைப் புணர்தலானும் முன்னர்க்கூறி, உலகம் பொலிதற்கு ஏதுவாகிய கங்கையாற்றினையும் நிறைநீர்வான்பிறைமதியினையுங் கார்ப்பருவத்திற் பொலியுங் கொன்றைமாலையினையுஞ் சூடிய உமையோர்பாகனென்று இமையோர்நாதனைப் புகழ்ந்துகூறி, உலகமுழுதீன்ற பனிவரைச்செல்வியை விருப்பம் மேன்மேற் கிளைப்பக் கூறி, நாமடந்தைகேள்வனாகிய அயனைப் புகழ்ந்துகூறிக் கறுத்த மேகவாகனனை அதன்பின் புகழ்ந்துகூறி, ஒற்றைக்கொம்பனைப் புகழ்ந்துகூறி, வீரத்தன்மையைப் பொருந்திய வேலனைப் புகழ்ந்துகூறிச், சத்தமாதர்களைப் புகழ்ந்துகூறித், திருவினைப் புகழ்ந்துகூறி, வாணியைப் புகழ்ந்துகூறிப், பதினொருகோடி உருத்திரரையும் பன்னிரண்டுகோடி ஆதித்தரையும் இரண்டுகோடி மருத்துவரையும் எட்டுக்கோடி வசுக்களையும் புட்பகவிமானத்தினையுடைய சந்திரனையுங் குபேரனையும் அனைவோரென்றதனாற் காரி முதலிய தேவரையும் பிள்ளையைப் பாதுகாத்தற்பொருட்டுக் காப்புக்கூறுக. எ - று.

இரட்டுறமொழிந்ததனாற் 'பூப்புனையூர்தியிற் பொலிவோர்' என்றது பிரயோகவிபாகத்தான் இருவரையுங் கொள்ளக்கிடந்த தொடர்மொழி. (சஅ)

அ0கூ. மூன்று முதல்மூ வேழு திங்களி
னொற்றை பெற்ற முற்றுறு மதியின்
கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே.

இது பிள்ளைக்கவிகொள்ளுங் காலங்கூறுகின்றது.

இ - ள். பிறந்து மூன்றாந்திங்கள் முதல் இருபத்தொரு திங்கள்காறும் ஒற்றித்த திங்களில் நிறைமதிப்பக்கத்திற் பிள்ளைக்கவியை விரும்பிக்கொள்ளுக. எ - று. (சகூ)

அக0. மூன்றைந் தேழா மாண்டினு மாகும்.

இது மேலதற்கோர் புறனடை.

இ - ள். மூன்றும் ஆண்டினும் ஐந்தாம் ஆண்டினும் ஏழாம் ஆண்டினும் அப்பிள்ளைக்கவியைக் கொள்ளவும் பெறும். எ - று. ()

அகக. ஒன்பது பதினொன் றென்பது காப்பே.

இது பாடும் வரையறை கூறுகின்றது.

இ - ள். பிள்ளைக்கவியைப் பாடுங்கால் ஒன்பதுபாட்டானும் பதினொருபாட்டானுங் காப்புப் பாடுக. எ - று.

நிலங்கள் பத்துந் தம்மில் ஒப்பக்கொண்டு பாடுமிடத்து ஒற்றைபடப் பாடுதல் சிறப்புடைத்து. இரட்டிக்கப் பாடுமிடத்தும் ஓசைபெயர்த்துப் பாடுக.

உரையிற்கோடலாற் காப்பு முதற்கண் எடுத்த அகவல்விருத்தம் நான்கடிக்கும் எழுத்தொப்பப் பாடுதல் வேண்டுமெனக் கொள்க; "முதற்க ணெடுத்த வகவல் விருத்த—மெழுத்தின் ஒரு குதி யெண்ணினர் கொளலே." என்பவாகலின். (௫க)

அகஉ, ஒருபோகு வெண்பாக் கலித்துறை யுறமுன்
வருபுய மதங்கம் மானை காலஞ்
சம்பிர தங்கார் தவங்குற மறம்பாண்
களிசித் திரங்கல் கைக்கிளை தூது
வண்டு தழைமேற் கொண்டெழு மூசன்
மடக்கு மருட்பா வஞ்சி விருத்த
மகவல் கலியின மகவல் விருத்தம்
வஞ்சி வஞ்சித்துறை வெண்டுறை மருவி
யிடையிடை வெண்பாக் கலித்துறை நடைபெற்
றந்தாதி மண்டலித் தாங்கலம் பகமே.

இது நிறுத்தமுறையானே கலம்பகமாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒருபோகுவெண்பாவுங் கலித்துறையும் முதற்கவியுறுப்பாக முற்கூறப்பட்டுக், கலவையின் புயவகுப்பு முதல் ஊசல் ஈறாகிய பதினெட்டுப் பொருட்கூற்றுறுப்புக்களும் இயையுமாறு பிற் கூறப்பட்டு, மடக்கும் மருட்பாவும் ஆசிரியப்பாவுங் கலிப்பாவும் வஞ்சிப்பாவும் ஆசிரியவிருத்தமுங் கலிவிருத்தமுங் கலித்தாழிசை

யும் வஞ்சிவிருத்தமும் வஞ்சித்துறையும் வெண்டுறையுமாகிய கவிக் கூறுகளுமுடைத்தாய் இடையிடை வெண்பாக் கலித்துறை பாடப்பட்டு அந்தாதித்தொடை முற்றும் உற இறுதியும் முதலும் மண்டலித்துப் பாடுவது கலம்பகமாம். எ - று.

மண்டலித்துப்பாடுவது அந்தாதித்தொடையாற் கூறுவனவற்றிற்கு எல்லாம் ஒக்கும். மேற்கொண்டெழும் என்றதனால் காலத்தான் மருவிய பிச்சியார் கொற்றியார் முதலியவுங் கொள்க. (௫௨)

அகங. அதுவே,

இமையவர்க் கொருநூ றிழிபைந் தையர்க்
கமைதரு மரசர்க் காகுந் தொண்ணூ
றமைச்சருக் கெழுபான் வணிகருக் கைம்பா
னமைத்தனர் பின்னவர் தமக்கா றைந்தே.

இது மேலதற்குப் பாட்டுவரையறை கூறுகின்றது.

இ - ள். மேற்கூறப்பட்ட கலம்பகந்தான் தேவர்க்கு நூறும், அந்தணர்க்குத் தொண்ணூற்றைந்தும், அரசர்க்குத் தொண்ணூறும், அமைச்சருக்கு எழுபதும், வணிகர்க்கு ஐம்பதும், வேளாளர்க்கு முப்பதுமாகப் பாடுகவென அமைத்தனர் புலவர். எ - று.

அமைதருமென்றதனால் அந்தணரைத் தேவர்க்கொப்பவுங் குறுநிலமன்னரை அரசர்க்கொப்பவும் பாடுதலுங் கொள்க. (௫௩)

அகச. அவற்றுள்,

ஒருபோ கம்மானை யூச லின்றி
வருவது பன்மணி மாலை யாகும்.

இது பன்மணிமாலை இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். அக்கலம்பகந்தானே ஒருபோகும் அம்மானையும் ஊசலுமின்றி ஏனையுறுப்புக்களெல்லாம் வரப் பாடுவது பன்மணிமாலை. எ - று. (௫௪)

அகரு. அகவல் வெண்பா வசையெண் கலித்துறை
தொகைமுப் பதுபெறச் சொற்றொடர் நிலையிற்
கூறுதல் மும்மணிக் கோவை யாகும்.

இது மும்மணிக்கோவை இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். ஆசிரியப்பாவும், வெண்பாவும், நேரசையும் நிரையசையுங்கொண்டு எழுத்தெண்ணிப்பாடுங் கலித்துறையும் முறைமுறை தொகை முப்பதுபெற அடுக்கி அந்தாதித்தொடையாற் பாடுவது மும்மணிக்கோவையாம். எ - று. (ருரு)

அகசு. முதற்பொருள் கருப்பொரு ளுரிப்பொருண் முகந்து
களவு கற்பெனும் வரைவுடைத் தாகி
நலனுறு கலித்துறை நானூ றாக
வாறிரண் டுறுப்பு மூறின்றி விளங்கக்
கூறுவ தகப்பொருட் கோவை யாகும்.

இஃது அகப்பொருட்கோவை இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். இருவகைப்பட்ட முதற்பொருளும் பதினன்குவகைப்பட்ட கருப்பொருளும் பத்துவகைப்பட்ட உரிப்பொருளும் பொருந்திக், கைக்கிளை முதலுற்ற அன்புடைக்காமப் பகுதியவாங் களவொழுக்கத்திணையுங் கற்பொழுக்கத்திணையுங் கூறுதலே எல்லையாகக்கொண்டு, நன்மையுற்ற கட்டளைக்கலித்துறை நானூறாகத், திணை முதலாகத் துறை ஈறாகக் கூறப்பட்ட பன்னிரண்டு அகப்பாட்டுறுப்பும் வழுவின்றித் தோன்றப் பாடுவது அகப்பொருட்கோவையாம். எ - று. (ருசு)

அகஎ. நெடுந்தொகை குறுந்தொகை கலித்தொகையென்னப்
படுந்தொகைச் செய்யுள் பற்பல வாகும்.

இது தொகைநிலைச்செய்யுள் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். அளவான் நெடுந்தொகையெனவுங் குறுந்தொகையெனவும், பாட்டாற் கலித்தொகையெனவுங் கூறப்படுந் தொகைநிலைச்செய்யுள் மிகப்பலவாம். எ - று.

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ—றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்—கற்றறிந்தோ ரேத்துங் கலியே யகம்புறமென்—றித்திறத்த வெட்டுத் தொகை."

பற்பல என்றதனுல் வள்ளுவர்முப்பால் நாலடி நான்மணிக்கடிகை திரிகடுகஞ் சிறுபஞ்சமூலம் ஏலாதி முதலாயினவெல்லாம் ஆமென்றறிக. (ருஎ)

அகஅ. வெண்பா வகவல் வெண்பாக் கலித்துறை
பண்பா னீரைம் பஃதந் தாதி
யியலின் வகுப்ப திணைமணி மாலை.

இஃது இணைமணிமாலை இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். வெண்பாவும் அகவலும் வெண்பாவுங் கலித்துறையுமாக இரண்டிரண்டாக இணைத்து வெண்பாவகவலிணைமணிமாலை வெண்பாக்கலித்துறையிணைமணிமாலையென நூறுநூறு அந்தாதித் தொடையாக வரப்பாடுவது இணைமணிமாலையாம். எ - று. (ருஅ)

அகக. இருபது வெண்பாக் கலித்துறை யியையின்
வருவ திரட்டை மணிமாலை யாகும்.

இஃது இரட்டைமணிமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். முறையானே வெண்பாவுங் கலித்துறையும் இருபது அந்தாதித்தொடையான் வருவது இரட்டைமணிமாலையாம். எ-று.

அஉ0. வெண்பாக் கலித்துறை யகவலந் தாதிப்
பண்பான் முப்பது பகரின் மும்மணி
மாலை யென்று வகுத்தனர் புலவர்.

இது மும்மணிமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். வெண்பாவுங் கலித்துறையும் அகவலும் அந்தாதியாக முப்பதுபாடின் அதனை மும்மணிமாலையென்று கூறுவர் புலவர். எ - று. (சு0)

அஉக. வெண்பாக் கலித்துறை விருத்த மகவல்
பின்பேசு மந்தா தியினூற் பதுபெறி
னான்மணி மாலை யாமென நவில்வர்.

இது நான்மணிமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். வெண்பாவுங் கலித்துறையும் அகவலும் பின்னும் முன்னும் ஒன்றிய விருத்தமும் மேற்கூறிய வந்தாதியான் நாற்பது பாடின் நான்மணிமாலையாமென்று கூறுவர் புலவர். எ - று. (சுக)

அஉஉ. ஒருபது வெண்பா ஒருபஃ தகவ
லிருபது வரினிரு பாவிரு பஃதே.

இஃது இருபாவிருபஃதாமாறு கூறுகின்றது.

இ - ள். பத்துவெண்பாவும் பத்தகவலும் அந்தாதித்தொடையாக இருபது இணைந்துவரின் இருபாவிருபஃது. எ - று. (௬௨)

அ௨௩. அகவல் வெண்பாக் கலித்துறை யதுகொண்
டொருபா வொருபஃ துறினப் பெயராம்.

இஃது ஒருபாவொருபஃதாமாறு கூறுகின்றது.

பொருள் வெளிப்படை. (௬௩)

அ௨௪. ஈண்டிய வண்ணமீ ரெண்கலை முப்பா
னுண்ட தொலியந் தாதி யாகும்.

இஃது ஒலியந்தாதியாமாறு கூறுகின்றது.

இ - ள். பலசந்தங் கூடிய பதினாறு கலைவகுப்பானுய முப்பதெண்ணுன் ஆளப்பட்டது ஒலியந்தாதியாம். எ - று. (௬௪)

அ௨௫. இறைவன் பெயரூ ரிணையின் னிசையான்
முறையிற் றொண்ணூ றெழுபா னைம்பா
னறையி னப்பெய ராகு மென்ப.

இது பெயரின்னிசையும் ஊரின்னிசையுமாமாறு கூறுகின்றது.

இ - ள். பாட்டுடைத்தலைவன் பெயரினையும் ஊரினையுஞ்சார இன்னிசைவெண்பாவாற் தொண்ணூறு எழுபது ஐம்பது பாடிற் பெயரின்னிசைவெண்பாவென்றும் ஊரின்னிசைவெண்பாவென்றும் வழங்கப்படும். எ - று. (௬௫)

அ௨௬. வருக்கத் தினைச்சொலல் வருக்க மாலை.

இது வருக்கமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். மொழிக்கு முதலாம் வருக்க எழுத்தினுக்கு ஒவ்வொரு கவிகூறல் வருக்கமாலையாம். எ - று.

கூறுதல் அவ்வெழுத்தை முதலாகக்கொண்டு கூறுதலென்று உணர்க. உயிரானுங் க ச த ந ப ம வ என்னும் உயிரோடுகூடிய

மெய் ஏழானுமாக எட்டு ஆசிரியப்பா வந்தால் அவை வருக்கமா லையெனவுங் கூறுவாரும் உளர். (சுசு)

அஉஎ. ஒருதலைக் காம மோரைந்து விருத்தங்
கருத வுரைத்தல் கைக்கிளை யாகும்.

இது கைக்கிளையாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒருதலைக்காமத்தினை ஐந்து விருத்தத்தாற் பெறக்கூறுதல் கைக்கிளைச்செய்யுளாம். எ - று. (சுஎ)

அஉஅ. ஒன்பது வெண்பா வகுப்பா லுயர்குல
மங்கையைப் பாடுதல் மங்கல வள்ளை.

இது மங்கலவள்ளையாமாறு கூறுகின்றது.

இ - ள். உயர்ந்தகுலத்து உதித்த மடவரலை வெண்பா ஒன்பதனுல் வகுப்புறப்பாடுதல் மங்கலவள்ளையாம். எ-று (சுஅ)

அஉகூ. வெண்பா விருத்தம் வியப்புற விருபஃ
தெண்பட வுரைப்பது மிரட்டைமணி மாலை.

இது வேருெருவகையான் இரட்டைமணிமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். வெண்பா பத்தும் விருத்தம் பத்தும் அந்தாதித்தொடையாற் பாடுதலும் இரட்டைமணிமாலையாம். எ - று.

உம்மை இறந்ததுதழீஇய எச்சவும்மை. மாலையென்பதனுல் அந்தாதியென்பது பெற்ரும். (சுகூ)

அகூ0. இன்னிசை போல விறைவன் பெயரூர்
தன்னி னியல்வது தானே ரிசையே.

இது நேரிசையாமாறு மாட்டேற்ருனே அறிவிக்கின்றது.

இ - ள். இன்னிசைவெண்பாவேபோலப் பாட்டுடைத்தலைவன் பெயரூரைச் சார்ந்துவரத் தொண்ணூறும் எழுபதும் ஐம்பதும் பாடின் அவற்றைப் பெயர்நேரிசையென்றும் ஊர்நேரிசையென்றும் வழங்கப்படும். எ - று. (எ0)

அஙக. சொற்சீ ரடியாற் றொழிற்படு புகழை
வேந்தர்பாற் கூறின் மெய்க்கீர்த்தி யாகும்.

இது மெய்க்கீர்த்தியாமாறு கூறுகின்றது.

இ - ள். சொற்சீரடியாலே காரியப்புகழை மன்னரிடத்துக் கூறுதல் மெய்க்கீர்த்தியென்னும் பெயரினைப்பெறும். எ - று. (எக)

அஙஉ. காப்புமூன் றைந்தேழ் காப்புமா லையாம்.

இது காப்புமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். காத்றலாக மூன்றுகவியானும் ஐந்துகவியானும் எழு கவியானும் பாடுவது காப்புமாலையாம். எ - று. (எஉ)

அஙங. வேனிலைப் பாடுதல் வேனின் மாலை.

இது வேனின்மாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். இளவேனிலையும் முதிர்வேனிலையுஞ் சிறப்பித்துப் பாடுதல் வேனின்மாலையாம். எ - று. (எங)

அஙச. பத்து முதலாப் பப்பத் தீறு
வைத்த வண்ண வகைபத் தாகப்
பல்சந்த மாலை பகரப் படுமே.

இது பல்சந்தமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். பத்துக்கலிமுதலாக முதலாக நூறுகவி ஈறாக வைக்கப்பட்ட சந்தம் பத்துப்பத்தாகப் பல்சந்தமாலை கூறப்படும். எ-று.

அஙரு. மிக்க வுறுப்பை வெண்பா விருத்தந்
தொக்கவொடு முறையாற் றொடர்வுறப் பாடுத
லங்க மாலை யாமெனப் பகர்வர்.

இஃது அங்கமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். ஆண்மகனுக்கும் பெண்மகளுக்கும் எடுத்துக்கூறும் மிக்க அவயவங்களைத் தொக்க அவயவங்களோடும் வெண்பாவால் வெளிவிருத்தத்தாற் கூடியமுறையால் அந்தாதியுறப் பாடுதல் அங்க மாலையெனக் கூறுவர். எ - று.

முறை, பாதாதிகேசங் கேசாதிபாதம் பிறழாமற் கூறல். தொக்க உறுப்பு உள்ளங்கால் உகிர் விரல். (எரு)

அஙகூ. வசந்த வருணனை வசந்த மாலை.

இது வசந்தமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். தென்றலை வருணித்து அந்தாதியாகப் பாடுதல் வசந்தமாலையாம். எ - று. (எசு)

அஙஎ. வெண்பா முதலா வேறோ றொன்பது
நண்பாக் கூற னவமணி மாலை.

இது நவமணிமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். வெண்பா முதலாக வேறுபட்ட பாவும் பாவினமும் ஒன்பதுற அந்தாதியாகப்பாடுதல் நவமணிமாலையாம். எ - று. (எஎ)

அஙஅ. ஆனை யாயிர மமரிடை வென்ற
மானவ னுக்கு வகுப்பது பரணி.

இது பரணிகொள்வோன் பெருமை கூறுகின்றது.

இ - ள். போரிடை ஆயிரங் களிற்றியானை பட வென்ற வீரத்தன்மையுள்ளோனுக்குப் பாடப்படுவது பரணி. எ - று. (எஅ)

அஙகூ. கடவுள் வாழ்த்துக் கடைதிறப் புரைத்தல்
கடும்பாலை கூறல் கொடுங்காளி கோட்டங்
கடிகண முரைத்தல் காளிக் கதிசொல
லடுபேய்க் கவள்சொல லதனுற் றலைவன்
வண்புக ழுரைத்த லெண்புறத் திணையுற
வீட்ட லடுகளம் வேட்ட லிவைமே
லளவடி முதலா வடியிரண் டாக
வுளமகிழ் பரணி யுரைக்கப் படுமே.

இது பரணி இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். கடவுள்வாழ்த்து முதற் களம்விரும்பல் ஈறாகச் சொல்லப்பட்ட பொருண்மேல் அளவடி முதலாக எனைத்துச் சீரா

னும் இரண்டடியாகக் கேட்டோர் உள்ளம் மகிழ்ச்சிகூரப் பெரும் புலவரால் உரைக்கப்படும் பரணி. எ - று.

புறத்திணையுற ஈட்டலென்றதனாற் பாட்டுடைத்தலைமகனைச் சிறப்பித்தலும் அவன் எடுத்துச்செலவுமுறைமையும் மேற்புறத்திணையிற் கூறிய முறையே செருமுடித்தலுங் கூழட்டலும் முதலாயினவெல்லாஞ் சொல்லப்படும். (எகூ)

அச௦. நேரிசை வெண்பா வானிரு பன்பெறு
தசாங்கத் தினைச்சொல றசாங்கப் பத்தாம்.

இது தசாங்கப்பத்தாமாறு கூறுகின்றது.

இ - ள். நேரிசைவெண்பாவாற் சிறப்புத்தோன்ற அரசன் படைத்த முற்கூறிய தசாங்கத்தினைப் பத்துக் கவியாற் கூறுதல் தசாங்கப்பத்தாம். எ - று. (அ௦)

அசக. வெண்பாப் பத்துக் கலித்துறை பத்துப்
பண்புற மொழிதல் பதிற்றந் தாதி.

இது பதிற்றந்தாதியாமாறு கூறுகின்றது.

இ - ள். பத்துவெண்பா பத்துக்கலித்துறை பொருட்டன்மை தோன்றப் பாடுதல் பதிற்றந்தாதியாம். எ - று. (அக)

அசஉ. நூறு வெண்பா நூறு கலித்துறை
கூறுத னூற்றந் தாதிக் கோளே.

இது நூற்றந்தாதி இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். வெண்பா நூறு கலித்துறை நூறு அந்தாதித்தொடையாற் கூறுதல் நூற்றந்தாதியிலக்கணக்கொள்கையாம். எ-று.

அசங. கடவுள் காக்க வெனக்கவி யிருநான்
கடைவுற வகவல் விருத்த மதனல்
வகுப்ப தட்ட மங்கல மாகும்.

இஃது அட்டமங்கலமாமாறு கூறுகின்றது.

இ - ள். கடவுளைப்பாடி அக்கடவுள் காக்கவெனக் கவி எட்டாற் பொருளுற அகவல்விருத்தமதனாற் பாடப்படுவது அட்டமங்கலமாம். எ - று. (அங)

அசச. வெள்ளை கலித்துறை யகவல் விருத்த
மெள்ளலில் வண்ண மிவையோ ரைந்து
மலங்கார பஞ்சக மாகு மென்ப.

இஃது அலங்காரபஞ்சகத்தின் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். வெண்பாவுங் கலித்துறையும் அகவலும் விருத்தமும் இகழ்தலாகாச் சந்தவிருத்தமுமாகிய இவை ஓரைந்தினையும் அந்தாதியாகப் பாடுதல் அலங்காரபஞ்சகமாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று. (அச)

அசரு. அகவல் விருத்தங் கலித்தா ழிசையாற்
பொலிதரு கிளையொடும் புகலுவ தூசல்.

இஃது ஊசலாமாறு கூறுகின்றது.

இ - ள். ஆசிரியவிருத்தத்தானுதல் கலித்தாழிசையானுதல் சுற்றத்தாரோடும் பொலிவதாகக் கூறுதல் ஊசலாம். எ - று. (அரு)

அசசு. மிக்க நேரிசை வெண்பா வதனாற்
றக்க தசாங்கந் தன்னை நூறு
தொண்ணூ றெழுப தைம்பது முப்பஃ
தெண்ணப் பாடிற் சின்னப் பூவே.

இது சின்னப்பூவினது இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். சிறந்த நேரிசைவெண்பாவினாற் தகுதிபெற்ற தசாங்கத்தினை நூறு தொண்ணூறு எழுபது ஐம்பது முப்பது என்னும் எண்படப்பாடின் அது சின்னப்பூவாம். எ - று.

அரசனது சின்னங்களை விரித்துக்கூறுதலாற் சின்னப்பூவாயிற்று. (அசு)

அசஎ. விளையு மொருபொருண் மேலொரு நூறு
தழைய வுரைத்தல் சதக மென்ப.

இது சதகமாமாறு கூறுகின்றது.

இ - ள். கற்றுவல்லோரால் விரும்பும் அகப்பொருளொன்றின்மேலாதல் புறப்பொருளொன்றின்மேலாதல் கற்பித்து நூறு கவிபாடுதலே சதகமாம். எ - று. (அஎ)

அசஅ. ஊரையும் பெயரையு முவந்தெண் ணூலே
சீரிதிற் பாடலெண் செய்யு ளாகும்.

இஃது எண்செய்யுளாமாறு கூறுகின்றது.

இ - ள். பாட்டுடைத்தலைவன் ஊரினையும் பெயரினையும் உவந்து எண்ணூலே பத்துமுதல் ஆயிரமளவும் பொருட்சிறப்பினூலே பாடுதல் அவ்வவ்வெண்ணாற் பெயர்பெற்றுநடக்கும் எண் செய்யுளாம். எ - று.

அவை முத்தொள்ளாயிரம் அரும்பைத்தொள்ளாயிரம் முதலியன.

சீரிதினென்றதனாற் செய்யுட்கிழமைப்பொருள்பற்றிப் பாரியது பாட்டு கபிலரது பாட்டெனச் செய்தோன்பெயர்பற்றி வருவனவுங் கொள்க. (அஅ)

அசகூ. உரிப்பொரு டோன்ற வோரைந் திணையுந்
தெரிப்ப தைந்திணைச் செய்யு ளாகும்.

இஃது ஐந்திணைச்செய்யுள் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். புணர்தல் முதலிய ஐந்து ஒழுக்கமும் விளங்குங் குறிஞ்சி முதலிய ஐந்து திணையினையுந் தெரித்துக்கூறுதல் ஐந்திணைச்செய்யுளாம். எ - று. (அகூ)

அருo. தேவ ரரசர் திறனே ரிசையான்
மேவுங் கடிகையின் மேற்சென் றதனை
நாலெட் டுறச்சொல னாழிகை வெண்பா.

இது நாழிகைவெண்பாவாமாறு கூறுகின்றது.

இ - ள். தேவரிடத்தும் அரசரிடத்தும் நிகழுங் காரியங் கடிகையளவிற் தோன்றி நடப்பதாக முப்பத்திரண்டு வெண்பாக் கூறல் நாழிகைவெண்பாவாம். எ - று. (கூo)

அருக. கால மிடம்பொருள் கருதி நாற்பான்
சால வுரைத்த னாற் பதுவே.

இது நாற்பதாமாறு கூறுகின்றது.

இ - ள். காலமும் இடமும் பொருளும்பற்றி நாற்பது வெண்பாப் பொருந்தவுரைத்தல் நானாற்பதாம். எ - று.

காலம்பற்றி வருவது கார்நாற்பது. இடம்பற்றி வருவது களவழிநாற்பது. பொருள்பற்றி வருவன இன்னாநாற்பது இனியா நாற்பதாம். இன்னலாக்குதலை இன்னாவென்றும் இனிமையாக்குதலை இனியாவென்றுங் கூறினர். (கக)

அருஉ. பணைமுலை நயனத் தினைப்பப் பத்தா
வணைவுறப் புகற லப்பத் தாகும்.

இது பயோதரப்பத்தும் நயனப்பத்துமாமாறு கூறுகின்றது.

பொருள் வெளிப்படை. (கஉ)

அருங. வில்வாள் வேல்செங் கோன்மத மாபரி
நாடூர் கொடையை நயந்த பப்பத்து
விருத்த மொன்பதும் விளங்குமப் பெயரான்.

இது வின்முதலிய ஒன்பதுவகை விருத்தமாமாறு கூறுகின்றது.

இ - ள். வில்லினையும் வாளினையும் வேலினையுஞ் செங்கோலினையும் யானையினையுங் குதிரையினையும் நாட்டினையும் ஊரினையுங் கொடையினையும் பப்பத்தாகக்கூறும் ஒன்பதுவகை விருத்தமும் அவ்வப்பெயரான் விளங்கும். எ - று.

என்றது வில்விருத்தம் வாள்விருத்தம் வேல்விருத்தம் செங்கோல்விருத்தம் யானைவிருத்தம் குதிரைவிருத்தம் நாட்டுவிருத்தம் ஊர்விருத்தம் கொடைவிருத்தம் எனப் பெயர்பெற்று வழங்குவனவாமென்றவாறு. (கங)

அருச. காப்பிய மிரண்டு மேற்புகன் றனவே.

இது காப்பியத்தின் இலக்கணம் மாட்டேற்றான் உணர்த்துகின்றது.

இ - ள். பெருங்காப்பியத்தினுக்குங் காப்பியத்தினுக்கும் மேல் அணியியலுட்கூறிப்போந்த இலக்கணமே ஈண்டைக்கும் உரிய இலக்கணமாம். எ - று. (கச)

அ௫௫. வளமட லுலாமட லுலாவனு ராக
மாலைமெய்க் கீர்த்தி புகழ்ச்சி மாலை
நாம மாலை தாரகை மாலை
யுற்பவ மாலை தானை மாலை
வரலாற்று வஞ்சி செருக்கள வஞ்சி
பலபொருள் வஞ்சி நிலைபெறு குழமகன்
பாதாதி கேசங் கேசாதி பாத
மூவாத்தொழில் கூத்தர் முதலோர் தம்மை
யாற்றுப் படுத்தலா தாகு மிருதிணை
போற்றுமஞ் சரியெனப் புலவர் நிலைபெறச்
சாற்றப் படுமத் தனிநிலைச் செய்யுள்.

தனிநிலைச்செய்யுள் கூறுவான் தொடங்கியவற்றுள் இஃது அது பெறும் பெயர்வேற்றுமையான் அதன்விரி இத்துணைத்தென்கின்றது.

இ - ள். வளமடல் முதல் மஞ்சரி ஈறுகச் சொல்லப்பட்ட இருபத்திரண்டும் அதன்விரியாம். எ - று. (௬௫)

அ௫௬. அறம்பொருள் வீடெனு மம்மூக் கூற்றின்
றிறங்கடிந் தரிவையர் திறத்துறு மின்பம்
பயனெனக் கலிவெண் பாவாற் றலைவன்
பெயரெது கையினிற் பேசுதல் வளமடல்.

இது வளமடல் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். அறனும் பொருளும் வீடுமென்று கூறும் அம்மூன்று கூறுபாட்டின் பயனை எள்ளி மங்கையரைச் சேர்தலான் உளவாகிய மெல்லிய காமவின்பத்தினையே பயனெனக்கொண்டு தனிச்சொலின்றி இன்னிசைக்கலிவெண்பாவாற் தலைவன் இயற்பெயர் எதுகையின் அப்பொருண் முற்றப் பாடுதல் இன்பமடலாம். எ-று.

அ௫எ. கனவி னொருத்தியைக் கண்டு புணர்ந்தோ
னனவி னவள்பொருட் டாக நானே
யூர்வேன் மடலென் றுரைப்ப துலாமடல்.

இஃது உலாமடல் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். சாக்கிரத்துநின்று நழுவிய சொப்பனத்தின் ஒரு பெண்ணைக்கண்டு கலவியின்பம் நுகர்ந்தோன் விழித்தபின் அவள் பொருட்டாக மடலூர்வேனென்று கலிவெண்பாவாற் சாற்றுதல் உலாமடலாம். எ - று.

கலிவெண்பாவென்பது அதிகாரத்தான் வருவித்துரைக்கப் பட்டது. (கூஎ)

அருஅ. குழமக னைக்கலி வெண்பாக் கொண்டு
விழைதொல் குடிமுதல் விளங்க வுரைத்தாங்
கிழைபுனை நல்லா ரிவர்மணி மறுகின்
மற்றவன் பவனி வரவேழ் பருவ
முற்றமா னார்தொழப் போந்த துலாவாம்.

இஃது உலா இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். இளமைப்பருவமுற்ற தலைவனைக் குலத்தானுங் குடிப்பிறப்பானும் மங்கலங்களானும் பரம்பரையானும் இன்னா னென்பது தோன்றக்கூறி, அணிகலன்களான் அலங்கரித்துக் கொண்டு முதன்மையெய்திய மானார் நெருங்கிய அழகிய வீதியி டத்து அன்னோன் பவனிவரப், பேதை முதலிய எழ்பருவ மானார் கண்டுதொழ உலாவந்தது உலாவாம். எ - று.

"சுடர்த்தொடியார் வீதியிலே தோன்றுதலும்." என்றார் பிறரும். (கூஅ)

அருகூ. ஐந்து முதலே ழாண்டும் பேதை. (கூகூ)

அகூ0. எட்டு முதனான் காண்டும் பெதும்பை. (க00)

அகூக. ஆறிரண் டொன்றே யாகு மங்கை. (க0க)

அகூஉ. பதினான் காதிபத் தொன்பான் காறு
மெதிர்தரு மடந்தைமே லாறு மரிவை. (க0உ)

அகூங. ஆறு தலையிட்ட விருபதின் மேலோ
ராறுந் தெரிவையெண் ணைந்துபே ரிளம்பெண்ணென்
றேழும் பருவத் தோர்க்குரைத் தனரே.

இவ்வைந்துசூத்திரமும் வெளிப்படை. (க0ங)

அகூச. கனவி னொருத்தியைக் கண்டுகேட் டுண்டுயிர்த்
தினிதிற் புணர்ந்ததை யின்னுயிர்ப் பாங்கற்கு
நனவி னுரைத்த லனுராக மாலை.

இஃது அனுராகமாலையாமாறு கூறுகின்றது.

பொருள்வெளிப்படை. இவைமூன்றும் நேரிசைக் கலிவெண்பாவென்று அறிக. (கலச)

அகூரு. சொற்சீ ரடியாற் றொழிற்படு கீர்த்தியைப்
பொற்புற மொழிதன்மெய்க் கீர்த்தி மாலை.

இது மெய்க்கீர்த்திமாலையின் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். சொற்சீரடியென்னுங் கட்டுரைச்செய்யுளாற் குலமுறையிற்செய்த கீர்த்தியை அழகுற மொழிதல் மெய்க்கீர்த்திமாலையாம். எ - று. (கலரு)

அகூகூ. மயக்க வடிபெறு வஞ்சிப் பாவால்
வியத்தகு நல்லார் விழுச்சீ ருரைத்தல்
புகழ்ச்சி மாலை புருடர்க் குரைப்பி
னாம மாலை யாமென நவில்வர்.

இது புகழ்ச்சிமாலையும் நாமமாலையுமாமாறு கூறுகின்றது.

இ - ள். அகவலடியுங் கலியடியும் வந்து மயங்கிய வஞ்சிப்பாவால் வியக்கத்தகும் நல்லாரது விழுமிய சிறப்பைக்கூறுதல் புகழ்ச்சிமாலையாம்; அவ்வஞ்சிப்பாவால் ஆண்மகனைப் புகழ்ந்துபாடுதல் நாமமாலையாமென்று கூறுவர் புலவர். எ - று. (கலகூ)

அகூஎ. வகுப்பாற் கற்புடை மகளிர்க் குள்ள
தகைத்திறங் கூறுத றாரகை மாலை.

இது தாரகை மாலை இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். வகுப்பினால் அருந்ததிக்கற்பின் மகளிர்க்குள்ள இயற்கைக்குணங்களைக் கூறுதல் தாரகைமாலையாம். எ - று. (கலஎ)

அகூஅ. அரிபிறப் பொருபது மகவல் விருத்தத்
துரியிற் புகற லுற்பவ மாலை.

இஃது உற்பவமாலையாமாறு கூறுகின்றது.

இ - ள். மாயன்பிறப்புப் பத்தினையும் அகவல்விருத்தத்தாற் கூறல் உற்பவமாலையாம். எ - று. (௧௦௮)

அசுகூ. ஆசற வுணர்ந்த வரசர் பாவாற்
றூசிப் படையைச் சொல்வது தானை
மாலை யாகும் வரலாற்று வஞ்சி
ஞாலமேற் றானை நடப்பது சொல்லின்
செருக்களங் கூறிற் செருக்கள வஞ்சி
விரித்தொரு பொருளை விளம்பினப் பெயராம்.

இது தானைமாலையும் வரலாற்றுவஞ்சியுஞ் செருக்களவஞ்சி யும் பொருள்வஞ்சியுமாமாறு கூறுகின்றது.

இ - ள். அகவலோசையிற் பிறழாது உயர்ந்த அரசர்க்கு உரிய ஆசிரியப்பாவால் முன்னரெடுத்துச்செல்லுங் கொடிப்படையைச் சொல்வது தானைமாலையாகும்; போர்க்களத்திற் செல்லும் படையெழுச்சியைக் கூறின் வரலாற்றுவஞ்சியாம்; செருக்களத்தினைக் கூறிற் செருக்களவஞ்சியென்னும் பெயர்பெறும்; ஏனைப் புறத்திணைக்கட்டுறுத்திக் கூறுந் துறைப்பொருளை விரித்துக்கூறின் அத்துறைப்பெயர்பெறும். எ - று. (௧௦௯)

அஎ௦. கலிவெண் பாவாற் கையினிற் கண்டு
குழமக னைச்சொலிற் குழமக னாகும்.

இது குழமகனாமாறு கூறுகின்றது.

இ - ள். கலிவெண்பாவினான் மங்கைமார் தங் கையிற்கண்ட இளமைத்தன்மையுடைய குழமகனைப் புகழ்ந்துபாடிற் குழமகனாம். எ - று. (௧௧௦)

அஎக. அடிமுதன் முடியள வாக வின்சொற்
படர்வுறு கலிவெண் பாவாற் கூறல்
பாதாதி கேசங் கேசாதி பாத
மோதினப் பெயரா னுரைக்கப் படுமே.

இது பாதாதிகேசமுங் கேசாதிபாதமுமாமாறு கூறுகின்றது.

இ - ள். கலிவெண்பாவாற் பாதமுதல் முடியளவுங் கூறல் பாதாதிகேசமாம்; முடிமுதல் அடியளவுங் கூறல் கேசாதிபாதமா மென்று கூறப்படும். எ - று. (கககக)

அளஅ. நிலமெழி லுயர நேர்ந்த வயது
குலமள விலக்கண மும்மதங் கோட
லடுத்திடிற் கோறல்கண் டரசனை யறித
லெடுத்தல் வஞ்சி யானைத் தொழிலாம்.

இஃது யானைத்தொழிலாமாறு கூறுகின்றது.

இ - ள். கிரிசரம் நதிசரம் வனசரமாகிய நிலம், அவயவங்களின் அழகு, எழுமுழவுயரம், தருணவயது, பிறந்தநிலத்தான் வீரம் பெறுங் குலநன்மை, ஒன்பதுமுழநீளமும் முப்பத்திரண்டு முழச்சுற்றும் உடைத்தாய இலக்கணம், மும்மதங்கோடல், அடுத்தபொழுதிற்கோறல், அரசனைக்கண்டறிதல் இவையிற்றை வஞ்சிப்பாவாற் றொடுத்துப்பாடுதல் யானைத்தொழிலாம். எ - று. (கக௨)

களங. அரசர் பாவா லாற்றுப் படைமே
லுரைசெய் தவையென் றோர்ந்தனர் கொளலே.

இஃது ஆற்றுப்படையிலக்கணம் மாட்டேற்றான் உணர்த்துகின்றது.

இ - ள். ஆற்றுப்படையாவது மேலே புறத்திணையின்கட் "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியு—மாற்றிடைக் காட்சி யுறழத் தோன்றிப்—பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்—சென்றுபய னெதிரச்" சொன்ன ஆற்றுப்படையெனக் கூறிய பொருண்மேல் ஆசிரியப்பாவாற் சொல்லைச்சேர்த்துப் பாடப்படுவ தென்று ஆராய்ந்து கொள்க. எ - று.

ஓர்ந்துகொள்கவென முற்றெச்சமாக்கிக்கொள்க. (ககங)

அளச. பயிறருங் கலிவெண் பாவி னாலே
யுயர்திணைப் பொருளையு மஃறிணைப் பொருளையுஞ்
சந்தியின் விடுத்தன் முந்துறு தூதெனப்
பாட்டியற் புலவர் நாட்டினர் தெளிந்தே.

இது தூதிலக்கணங் கூறுகின்றது.

இ - ள். அகலக்கவியிற் பயின்றுவருங் கலிவெண்பாவினுலே பாணன் முதலாகப் பாங்கன் ஈருக விடுக்கும் உயர்திணையிருபாலினையுங், கேளாமரபினவற்றைக் கேட்பனவாகக் கூறிவிடுக்கும் அன்னமுங் கிளியும் வண்டும் மயிலுங் குயிலும் முதலாயின அஃறிணைப் பொருளையும், இளையகலாம் முதியகலாம் இவற்றின் துனிநீங்கற்கு வாயிலாக விடுத்தல் முன்னர் உடன்படுத்துந் தூதெனப் பாட்டிலக்கணத்தை உணர்ந்த புலவர் ஆராய்ந்துகூறினர். எ - று.

இத்துணையும் அகலக்கவியிலக்கணங் கூறினர். (கக௪)

அ௭௫. அகப்பொருள் கூறு மாசிரி யத்துட்
புகப்பெறு வஞ்சி யடிபொரு ளன்றி
மிகக்கலி வாரா மேவும் வஞ்சி
தொகைப்பெறு தனித்துச் சொல்லப் படுமே.

இஃது மேற்கூறப்பட்ட அகலக்கவிகளிற் சிலவற்றிற்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி கூறுகின்றது.

இ - ள். அகப்பொருளைக்கூறும் ஆசிரியப்பாவினுள் வஞ்சியடி உறலாகா; அவ்வகப்பொருளினன்றி ஏனைப்பொருண்மேற் பெரும்பான்மையுங் கலி வாரா; வஞ்சிப்பாத் தொகைபெற்று நிற்கப் பெறு, தனித்துச்சொல்லப்படும். எ - று. (கக௫)

அ௭௬. பொருளிடங் காலந் தொழிலுறுப் பெல்லை
செய்தோன் செய்வித் தோன்பெய ராலே
யெய்து மகலக் கவிக்கிரும் பெயரே.

இஃது அகலக்கவியுட் சிலவற்றிற்குப் பெயராமாறு விதந்து கூறுகின்றது.

இ - ள். பொருளானும் இடத்தானுந் தொழிலானும் உறுப்பானும் அளவானுஞ் செய்தோன்பெயரானுஞ் செய்வித்தோன்பெயரானும் அகலக்கவி பெயர்பெறும். எ - று.

பொருள்பற்றி வந்தன ஆசாரக்கோவைமுதலியன; இடம்பற்றி வந்தன மதுரைக்காஞ்சி பட்டினப்பாலை என்பன; காலம்பற்றி வந்தன வேனில்விருத்தம் வசந்தமாலை என்பன; தொழில்பற்றி வந்தன யானைத்தொழில் ஊசல் முதலியன; உறுப்புப்பற்றி வந்தன பயோதரப்பத்து நயனப்பத்து முதலியன; எல்லைபற்றி வந்தன பா

தாதிகேசங் கேசாதிபாதம் முதலியன; செய்தோன்பெயர்பற்றி வந்தன அகத்தியந் தொல்காப்பியம் முதலியன; செய்வித்தோன் பெயரான் வந்தன பாண்டிக்கோவை முதலியன. பிறவும் அன்ன.(கக௬)

அ௭௭. மறையோர் மன்னர் வணிகர் சூத்திரர்க்கு
முறையான் வெள்ளை முதனான் கெய்தும்.

இது செய்யுளியலுட் கூறிய வெண்பா முதலிய நான்கு பாவிற்கும் வருண உரிமை கூறுகின்றது.

இ - ள். அந்தணர் முதலிய நான்குவருணத்தார்க்கும் முறையானே வெண்பா அந்தணர்க்கு உரிய பாவென்றும் அகவல் அரசர்க்கு உரிய பாவென்றுங் கலிப்பா வணிகர்க்கு உரிய பாவென்றும் வஞ்சிப்பா சூத்திரர்க்கு உரிய பாவென்றும் பெயர்பெற்று நடக்கும். எ - று. (கக௭)

அ௭அ. முல்லை குறிஞ்சி மருத நெய்தல்
வெள்ளை முதற்பா வினுக்குரி யனவே.

இது நான்குபாவிற்குந் திணையுரிமை கூறுகின்றது.

இ - ள். முல்லைத்திணைக்கு வெண்பாவுங் குறிஞ்சித்திணைக்கு ஆசிரியப்பாவும் மருதத்திணைக்குக் கலிப்பாவும் நெய்தற்றிணைக்கு வஞ்சிப்பாவும் உரியவாம். எ - று.

குறிஞ்சித்திணை முற்கூறப்பெறாத முறையலகூற்றானே பாலைத்திணைக்கு மருட்பா உரித்தாதல் கொள்க. (கக அ)

அ௭௯. வெண்மை செம்மை கருமை பொன்மை
யுண்மை நிறம்பா வொருநான் கினுக்கே.

இது நான்குபாவிற்கும் நிறவுரிமை கூறுகின்றது.

இ - ள். வெண்பா முதல் நான்குபாவிற்கும் முறையானே வெண்மையுஞ் செம்மையுங் கருமையும் பொன்மையும் உரியவாம். எ - று. (கக௯)

அ௮௦. கார்த்திகை முதலாக் கட்செவி காறுஞ்
சீர்த்தகு வெண்பாச் சிறந்த நாளே.

இது நான்குபாவிற்கும் நாளுரிமை கூறுவனவற்றுள் வெண்பாவுக்கு உரிய நாள் இவையென்கின்றது.

இ - ள். கார்த்திகை முதலாக ஆயிலியம் ஈறாக ஏழுநாளுஞ் சிறப்புடைய வெண்பாவுக்குச் சிறந்தநாளாம். எ - று. (கஉ0)

அஅக. மகமுதல் விசாக வரையக வற்கும்
பனைமுதற் புள்வரை பகர்ந்திடு கலிக்குஞ்
சதய முதற்சோ றளவும் வஞ்சிக்கு
முரிய வென்ப வுணர்ந்திசி னோரே.

இஃது ஏனைய மூன்றுபாவிற்கும் நாளுரிமை கூறுகின்றது.

இ - ள். மகம் முதல் விசாகம் வரை ஏழுநாளும் அரசர்பாவுக்கும் அனுடம் முதல் அவிட்டங்காறும் ஏழுநாளுங் கலிப்பாவுக்குஞ் சதயம் முதற் பரணிவரை ஆறுநாளும் வஞ்சிப்பாவுக்கும் உரிய நாளாம். எ - று. (கஉக)

அஅஉ. கற்கடக் ந்தேண் மீன மூன்று
முற்படு பாவி னிற்படு மிராசி
மேடமுஞ் சிங்கமும் வேணுவு மகவற்
பாடுறு மிதுனமுந் துலையுங் கும்பமுங்
கலிக்குரித் தாகு மிடபமுங் கன்னியு
மொலிப்படு மகரமும் வஞ்சிக் குரிய.

இது நான்குபாவுக்கும் இராசியுரிமை கூறுகின்றது.

பொருள் வெளிப்படை.

நாளும் இராசியுங் கூறியமுறையாற் பாட்டுடைத்தலைவன் பெயர்க்குப் பொருத்தமுடையன கொண்டு பாடுகவென்பது பயன்.

அஅங. திங்கள் வியாழஞ் செங்கதிர் செவ்வாய்
புந்திகன் மந்தன் புகர்பெறும் பாந்தள்
வெள்ளை முதனன் கினுக்கு மிரண்டிரண்
டெள்ளா வகையாற் கொள்ளுங் கோளே.

இது நான்குபாவிற்குங் கோளுரிமை கூறுகின்றது.

இ - ள். சந்திரனும் பிரகஸ்பதியும் வெண்பாவுக்கு உரியோர்; ஆதித்தனுஞ் செவ்வாயும் ஆசிரியப்பாவுக்கு உரியோர்; புதனுஞ் சனியுங் கலிப்பாவிற்கு உரியோர்; சுக்கிரனும் பாம்பும் வஞ்சிப்பாவுக்கு உரியோர். எ - று.

இதுவும் உரிமையறிந்து கூறுகவென்பது பயன். (க௨௩)

அ௮௪. பூவுஞ் சாந்துங் கலையு மணியும்
பாவுறு நிறமெனப் பாத்தனர் கொளலே.

இது நான்குபாவிற்கும் உரிய கோள்களின் பூவுஞ் சாந்துங் கலையுங் கலனும் இப்பண்பின என்கின்றது.

இ - ள். சூடுவன பூவும் பூசுவன சாந்தும் உடுப்பன கலையும் அலங்கரிப்பன அணியும் வெள்ளையுஞ் சிவப்புங் கருமையும் பொன்மைநிறமுமாம். எ - று. (க௨௪)

அ௮௫. தலைவன் பேரூர் சாதித் தெதுகையி
னிலையுற லனுவி னிறுத்தல் சிறப்பே.

இது மேற்கூறிப்போந்த கவிக்கு ஓர்சிறப்புக் கூறுகின்றது.

இ - ள். பாட்டுடைத்தலைவன் இயற்பெயரையும் ஊர்ப்பெயரையும் உகந்து எதுகையினிலையுறல் அனுவெழுத்தினிலையுறலாகப் பாடுதல் சிறப்பு. எ - று. (க௨௫)

அ௮௬. தெளிந்த வழக்கொடு சிறந்த பொருள்படூஉ
மின்ப மொரீஇவட வெழுத்தே மிக்கு
முதிர்சொற் புணர்க்கா தெதிர்சொற் புணர்த்து
மாலுறச் செய்தல் வழுவா மென்பர்.

இது மேலனவற்றிற்கெல்லாம் வழு இவையென்கின்றது.

இ - ள். பலரானும் உடன்பட்ட வழக்கோடு நூற்பயன் பயக்கும் இன்பத்தினைவிட்டு மறுதலையாற் புணர்த்தலும் வடவெழுத்தே மிகப்புணர்த்தலும் பழையோர் கூறிய இலக்கணச்சொற்களைவிட்டுக் காலத்தாற் கூறும் வழூஉச்சொற்புணர்த்தலும் வினையின்றி மயங்கக் கூறுதலுஞ் செய்யுட்கு வழுவென்று கூறுவர் புலவர். எ - று.

என்னை? "ஆதி முதல்வ ேனாதி வகுத்த—வறுவகை மரபி னனந் தம்மே—லெழுவகைப் பட்டசொல் வழுவு மொரீஇ— இயம்பா வேழும் யாப்பினு மிழுக்காது—பாடுக வென்று கூறினர் புலவர்." என்பது வருணர்பாட்டியலாகலின். (கஉசு)

அஅஎ. உறுபுக ழாக்கிய வுரவோர் கூறிய
வறுவகை யானுறு மானந் தந்தா
மியனெறி திரிந்த வெழுத்தா னந்தமுஞ்
சொன்முறை வழீஇய சொல்லா னந்தமும்
புகழ்ச்சிநிலை திரிந்த பொருளா னந்தமும்
யாப்புநிலை திரிந்த யாப்பா னந்தமுந்
தூக்குநிலை திரிந்த தூக்கா னந்தமுந்
தொடையிய றிரிந்த தொடையா னந்தமு
நடையறி புலவர் நவையிவை யென்ப.

இஃது இயற்பெயர்க்கண் விலக்கப்படும் ஆனந்தம் இவை யென்கின்றது.

இ - ள். நிலவுலகிற் பெரிய புகழுடம்பு நிலையுதலுறத் தேவருலகிற் தேவருடம்போடு கூடிய அறிவுடையோர் கூறிய அறுவகைப் பட்ட ஆனந்தமாவன எழுத்தியலிற் திரிந்த எழுத்தானந்தமுஞ் சொல்லியலிற் திரிந்த சொல்லானந்தமும் புகழ்வகையாய்த் திரிந்த பொருளானந்தமும் யாப்பென்னும் உறுப்பிற் திரிந்த யாப்பானந்தமுந் தூக்கென்னும் உறுப்பிற்றிரிந்த தூக்கானந்தமுந் தொடையுறுப்பிற் திரிந்த தொடையானந்தமுமாம். இலக்கியநடையும் இலக்கணநடையும் ஆராய்ந்த புலவர் அவ்வானந்தக்களிப்பிற் பெயர்சார்ந்து வாராமல் நீக்குதலை விரும்புப. எ - று.

அதிகாரத்தான் இயற்பெயர் வருவிக்கப்பட்டது. என்னை? "இயற்பெயர் சார்த்தி யெழுத்தள பெழினே—யியற்பா டில்லா வெழுத்தா னந்தம்." "இயற்பெயர் மருங்கின் மங்கல மொழியத்—தொழிற்சொற் புணர்ப்பினது சொல்லா னந்தம்." "புகழ்ச்சிப் பொருளை யூறுபடக் கிளப்பினும்—புகழ்ச்சிக் கிளவியது பொருந்தக் கூறினு—மூவர் காட்சியி னூனந் தோன்றினு—மிவைபல பிறவு மின்னவை யின்வரி—னவமொழி யாக்கும் பொருளா னந்தம்." "முதற்றொடை மயங்கின மொழியரி றரத்திருப்—பெயரிடைப் படுத்த வழியிரு பாட்டினுள்—வாய்ப்ப நோக்கி வல்லோர் கூறிய—தியாப் பானந்தமென் றியம்பல் வேண்டும்." "பாவகை யொருவனைப் பாடுங்

காலேத்—தொடைவகை யிடையின் வந்தபெயர் தோற்றி—யேங் கினு மெழுத்துப் பிரிந்தி சைப்பினுங்—தூங்கினுஞ் சுழலினுந் தூக் கா னந்தம்." "அளபெடை மருங்கின் பாடுவோன் பெயரொடு— பிறப்பின் வழாஅத் தொடைவரத் தொடுப்பின்—தொடையா னந்த மெனத் துணிதல் வேண்டும்." என ஆசிரியர் அகத்தியனார் ஆனந்த வோத்துட் கூறுதலான் அறிக.

எழுத்தானந்தத்திற்குச் செய்யுள்;—"ஆழி யிழைப்பப் பகல் போ மிரவெல்லாங்—தோழி துணையாத் துயர்தீர்வன்—றோழி— நறுமாலே தாவு திரையவோஒ வென்னுஞ்—செறுமாலே சென்றடை யும் போழ்து." இதனுட் திரையவோஒ என்னும் இயற்பெயர் மருங் கின் எழுத்து அளபெழுந்து எழுத்தானந்தமாயிற்று. சொல்லானந் தத்திற்குச் செய்யுள்;—"என்னிற் பொலிந்த திவள்முக மென்றெ ண்ணித்—தன்னிற் குறைபடுவான் றண்மதிய—மின்னி—விரிந்தி லங்கும் வெண்குடைக்கீழ்ச் செங்கோல் விசய—னெரிந்திலங்கும் வேல்கொண் டெழும்." இதனுள் விசயன் எரிந்தென இயற்பெயர் மருங்கின் அமங்கலமான தொழிற்சொல் வந்து சொல்லானந்தமா யிற்று. பொருளானந்தத்திற்குச் செய்யுள்;—"முரணில் பொதிய முதற்புத்தேள் வாழி—பரண கபிலரும் வாழி—யரணிலா—வான ந்த வேட்கையான் வேட்கோக் குயக்கோடன்—றானந்தஞ் சேர்க சுவா கா." இதனுட் புகழ்ச்சிப்பொருளை ஊறுபடக்கூறிப் பொரு ளானந்தமாயிற்று. ஏனையவும் வந்துழிக் காண்க. (௧௨௭)

அஅஅ. அவையடக் கியலே யரிறபத் தெரியின்
வல்லோன் கூறினும் வகுத்தனர் கொண்மினென்
றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே.

இது செய்யுட்செய்யும் புலவர்க்கு வேண்டுவதாயதோர் ஒழிபு அவையடக்கங் கூறுகின்றது.

இ - ள். அவையடக்கங்கூறும் இலக்கணத்தைக் குற்றமற ஆராய்ந்துகூறிற் கற்றுவல்லோன் நாற்பொருளையும் அறிந்துகூறு மாயினும் அவையினுள்ளார்க்குத் தான்குறைபாடுடையனாக நீயிர் குற்றங்களைந்து ஆக்கிக்கொள்வீரென்று வழிபடுசொல்லாற் கூறு வதாம். எ - று.

உதாரணம்:—"கற்பாலுமிழ்ந்த மணியுங்கழு வாதுவிட்டா— னற்பாலழியு நகைவெண்மதி போனிறைந்த—சொற்பாலுமிழ்ந்த மறுவும்மதி யாற்கழூஉவிப்—பொற்பா விழைத்துக் கொளற்பாலர் புலமைமிக்கார்." எனவும், "சுருக்கமில்கேள்வித் துகடீர்புலவர்முன்

யான்மொழிந்த—பருப்பொருடானும் விழுப்பொருளாம்பனி மாவி மயப்—பொருப்பகஞ்சேர்ந்தபோல் லாக்கருங்காக்கையும் பொன் னிறமா—யிருக்குமென் றிவ்வா றுரைக்குமன்றோவிவ் விருநிலமே." எனவுங் கூறியவாற்றான் உணர்க.

இச்சூத்திரஞ் சீயநோக்காய்நின்றது.

இத்துணையும் அளவியற்படச் செய்யுளியலுட் கூறிப்போந்த செய்யுளின்கட் கிடக்கும் இலக்கணங்களைத் தொகுத்தும் வகுத்தும் விரித்துங் கூறி அளவியற்படாச் செய்யுளிலக்கணங் கூறுகின்றார். என்னை? "எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியி—னடிவரை யில் லன வாறென மொழிப." "அவைதா, நூலி னான வுரையி னான—நொடியொடு புணர்ந்த பிசியி னான—வேது நுதலிய முதுமொழி யான—மறைமொழி கிளந்த மந்திரத் தான—கூற்றிடை வைத்த குறிப்பி னான." என ஆசிரியர் தொல்காப்பியனார் எடுத்தோதலா னென்று உணர்க. (கஉஅ)

அஅகூ. **பா**யிரம் பொதுச்சிறப் பெனவிரு பாற்றே.

இது நூன்முகமென்று சொல்லப்பட்ட பாயிரம் இத்துணைத் தென்கின்றது.

இ - ள். பாயிரமாவது எல்லாநூன்முகத்து உரைக்கப்படும் பொதுப்பாயிரமுந் தன்னூற்கு இன்றியமையாச் சிறப்புப்பாயிரமு மென இரண்டுபகுதியினையுடைத்து. எ - று.

இதன்விரி எழுத்தோத்தினுட் கூறியவாற்றான் உணர்க. ()

அகூ0. நூலெனப் படுவது நுவலுங் காலை
முதலு முடிவு மாறுகோ ளின்றித்
தொகையினும் வகையினும் பொருண்மை காட்டி
யுண்ணின் றகன்ற வுரையொடு பொருந்தி
யீரைங் குற்றமு மின்றி நேரிதி
னெண்ணான் குத்தி யண்ணுத லுடைத்தா
யொருபொரு ளுதலிய சூத்திரத் தானு
மினமொழி கிளந்த வோத்தி னானும்
பொதுமொழி கிளந்த படலத் தானு
மூன்றுறுப் படக்கிய பிண்டத் தானுந்
தோன்று மென்னச் சொல்லினர் புலவர்.

நிறுத்தமுறையானே நூலின் இலக்கணங் கூறுவான்புகுந் தவற்றுள் இஃது அதன் பொது இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். நூலென்று சிறப்பித்துச் சொல்லப்படுவதனைக் கூறு மிடத்து, முதல் தொடங்கி முடிவளவும் மாறுகோளுறக் கிடத் தலின்றித், தொகையானும் வகையானும் பொருட்டன்மையை விளக்கித், தன்கண்ணின்றும் அகன்ற உரைக்கூறுபாடுகளோடு பொருந்திப் பத்துவகைக் குற்றமும் இலதாய், நேர்மையான முப் பத்திரண்டு தந்திரவுத்தியோடும் அணுகுதலுடைத்தாய், ஒரு பொருள்குறித்துவருஞ் சூத்திரத்தானும் இனப்பொருளையுணர்த்தும் இயலானும் பலபொருட்கும்பொதுவாகிய இலக்கணங்களைக்கூறும் படலத்தானும் படலமும் ஒத்துஞ் சூத்திரமுமாகிய மூன்றுறுப்பி னையும் அடக்கிய பிண்டத்தானும் விளங்கித் தோன்றுமென்று கூறுவர் ஆசிரியர். எ - று. (கசுO)

அசுக. அவற்றுட், சூத்திரந்தானே
யாடி நிழலி னறியத் தோன்றி
நாடுத லின்றிப் பொருணனி விளங்க
யாப்பினுட் டோன்ற யாத்தமைப் பதுவே.

இது சூத்திரத்தின் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். ஒருபொருணுதலிய சூத்திரமாவது கண்ணாடி சிறி தாயினும் பெரியபொருள் முழுதினையுந் தோற்றுவித்தல்போலச் சில்வகை எழுத்தாயினுந் தன்கண் அகன்றபொருள் சொல்லான் விளங்கத் தோன்றி உய்த்துணர்ச்சியின்றித் தொடர்மொழிப்பொ ருள்படத் தொகைவகைவிரியென்னும் இலக்கணத்துள் ஒன்றுப யப்பத் தொடர்ச்சிகொண்டு செய்யப்படுவது. எ - று. (கசுக)

அசுஉ. யாற்ற தொழுக்கே தேரைப் பாய்வே
சீய நோக்கே பருந்தின் வீழ்வென்
றுவகை நான்கே கிடக்கை முறையே.

இது மேற்கூறிய சூத்திரத்தின் கிடக்கைமுறை கூறுகின்றது.

இ - ள். நிறுத்தமுறையே கூறுதலும் இடைவிட்டுக்கூறுதலும் முன்னும் பின்னும் பொருளெய்தக் கூறுதலும் நடுக்கொண்டு கூறு தலுமென நான்கு கூற்றே சூத்திரத்தின்கிடக்கைமுறைமை. எ - று.

அ௯௩. உரையெடுத் ததன்முன் யாப்பினுஞ் சூத்திரம்
புரைதப வுடம்படக் காண்டிகை புணர்ப்பினும்
விளம்பலும் விலக்கலு முறையோர் வகையொடு
புரைதப நாடிப் புணர்க்கவும் பட்டுச்
சில்வகை யெழுத்தின் செய்யுட் டாகிச்
சொல்லுங் காலை யுரையகத் தடக்கி
நுண்மையொடு புணர்ந்த வண்மைத் தாகித்
துளக்க லாகாத் துணைமை யெய்தி
யளக்க லாகா வரும்பொருட் டாதல்
சூத்திரத் தழகென யாத்தனர் புலவர்.

இது மேற்கூறிய சூத்திரத்திற்கு ஓர் சிறப்புக்கூறுகின்றது.

இ - ள். சூத்திரத்திற்கு முன் உளவாகிச் சுவைபடநின்ற கட்டுரையைச் சூத்திரமாகக்கொண்டு செய்தலும் காண்டிகையுரையைக் குற்றமற்ற சூத்திரமாகச் செய்தலுங் கருத்துப்பொருளாய்க் கிடந்ததனை எடுத்துக் கூறலும் எய்தியதனை விலக்கிக் கூறுதலும் நால்வகையுரையான் ஒருந் திறத்துடனே குற்றமற நாடிப் புணர்க்கப் படுதலுஞ் சில்வகைப்பட்ட எழுத்துக்களாற் சுருங்கச் செய்தலுடைத்தாகி ஆசிரியன் முதலியோர் கூற்றுவகையான் உரைக்குமிடத்து முறைபிறழாமல் அடக்கிச்சொல்லுதலுற்று நுண்ணியபொருளோடு புணர்ந்ததனுன் உபகாரமுடைத்தாகிப் பிறராற் பெயர்க்கப்படாத நிலைமைத்தாய் அளவுபடாத அரும்பொருளினையுடைத்தாதல் சூத்திரத்திற்குச் சிறந்த வனப்பாமென்று வகுத்துக்கூறுவர் புலவர். எ - று.

சூத்திரத்திற்குமுன் உரையெடுத்து யாப்பினுமென மாறிக் கூட்டுக. யாப்பினும் புணர்ப்பினும் என்பன அழகென்பதனோடு புணர்க்கப்பட்டுச் செய்யுட்டாகி அடக்கி ஆகி எய்தி என்பன ஆதலென்பதனோடு முடிந்தன. உடம்படவென்பது எல்லாரும் உடன்படச்செய்தலென்க. ஈண்டுக் கூறிய செய்யுளென்பது செய்தற்றொழின்மேல் நின்றது. தொழிற்பெயராமென்க. (௧௩௩)

அ௯௪. நேரின மணியை நிரல்பட வைத்தாங்
கோரினப் பொருளை யொருவழி வைப்ப
தோத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

இஃது இயலின் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். இனமொழிகிளந்த ஓத்தாவது சிதர்ந்துகிடப்பனவற்றைப் பல ஓத்தாகச் செய்யாது ஒத்தமணிகளை ஒருகோவையுறச் செய்தாற்போல ஓரினப்பொருளையெல்லாம் ஓரிடத்தே தொகுத்துக் கூறுவது ஓத்தாம். எ - று.

நேரினமணியெனவே ஒருசாதியாயினுந் தம்மின் ஒத்தன வென்பதாம். (கநுச)

அகூடு. ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரி னதுபடல மாகும்.

இது படலத்தின் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். ஒருநெறியனவன்றிப் பல்வேறுவகையவாம் எழுத்திலக்கணத்தினையுஞ் சொல்லிலக்கணத்தினையும் பொருளிலக்கணத்தினையும் பொருளென்பதோர் முறைமைபற்றி இயைபுநோக்கிப் பொதுவகையாற் தொகுத்துக்கூறுவது படலமாம். எ - று.

படலமெனினும் அதிகாரமெனினும் ஒக்கும். (கநுடு)

அகூசு. மூன்றுறுப் படக்கிய தன்மைத் தாயிற்
றோன்றுமொழிப் புலவர தது பிண்ட மென்ப.

இது பிண்டத்தின் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். சூத்திரமும் ஓத்தும் படலமும் என்னும் மூன்றுறுப்பினையும் அகப்படுத்தி நிற்குந் தன்மையுடைத்தாயின் அதனை உலகினின்று விளங்கும் மொழியைக்கூறும் புலவர் பிண்டமென்று கூறுவர். எ - று.

உறுப்படக்கியபிண்டமெனவே பிண்டமென்பது ஓர் முதலென்பதாம். அப்பிண்டமும் இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னும் முத்தமிழையுங் கூறும் அகத்தியத்திற்குறுப்பாதலாற் பிண்டமென்பது முதலாமாறென்னையெனின், "முதலிவை சினையிவை யெனவே றுளவில—வுரைப்போர் குறிப்பி னவற்றே பிண்டமும்." என்றதனாற் சொல்லுவான் கருத்தொடுபட்டு முதலென்றார். எனவே படலமென்பது இரண்டுறுப்படக்கியதெனவும் இயலென்பது ஒருறுப்பு அடக்கியதெனவுமாயின. (கநுசு)

அகூஎ. ஈரைங் குற்றமு நேரிதி னுடிற்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்

குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
பொருளில மொழிதன் மயங்கக் கூறல்
கேட்டோர்க் கின்னா யாப்பிற் றாதல்
பழித்த மொழியா னிழுக்கங் கூறல்
தன்னா னொருபொருள் கருதிக் கூற
லென்ன வகையினு மனங்கோ ளின்மை
யன்ன பிறவு மவற்றுவிரி யாகும்.

இஃது ஈரைங்குற்றமாவன இவையென்கின்றது.

இ - ள். பத்துவகைக் குற்றத்தினையும் நேர்மையான் ஆராயுமிடத்து முன்னர்க் கூறிய பொருளைப் பின்னர்க் கூறுதலும் முன்னர்க்கூறியதற்குப் பின்னர் மாறுபடக் கூறுதலுங் குறைபாடுறக் கூறுதலும் ஒருபொருட்கு இலக்கணங்கூறுமிடத்துப் பொருட்குச் சிறப்பிலக்கணந்தோன்றக் கூறாது ஏனைப்பொருட்கண்ணுஞ் செல்லும் பொது இலக்கணத்தாற்கூறுதலும் கூறும்பொருள்பெறாமற் கூறுதலுந் தெளிவுறாமற் கவர்படுமொழியால் மயங்கக்கூறுதலுங் கேட்டோர்க்கு இன்னாப்பொருளாய்த் தொடர்ச்சியின்றிக் கூறுதலும் பழிப்புடையசொல்லான் இழிபுதோன்றக் கூறுதலும் வரலாற்றுமுறைமையோடு படாது செய்வோன் தானொருபொருளைக் கற்பித்துக் கூறுதலும் எவ்வகையானுங் கேட்போர் மனங்கொள்ளாதிருக்கக் கூறுதலும் இவைபோல்வன பிறவுமாம். எ - று.

வடநூலார் கூறிய அவ்வியாத்தி அதிவியாத்தி அசம்பவமென்னும் தூடணங்களும் இவற்றுள்ளே அடங்குமாறு அறிந்து அடக்கிக்கொள்க. (கஙஎ)

அகூஅ. ஒத்த காட்சியி னுத்திவகை விரிப்பி
னுதலி யறித லதிகார முறையே
தொகுத்துக் கூறல் வகுத்துமெய் ந்நிறுத்தன்
மொழிந்த பொருளோ டொன்ற வவ்வயின்
மொழியா ததனை முட்டின்று முடித்தல்
வாரா ததனால் வந்தது முடித்தல்
வந்தது கொண்டு வாராத துணர்த்தல்
முந்து மொழிந்ததன் றலைதடு மாற்றே
யொப்பக் கூற லொருதலை மொழியே

தன்கோட் கூறன் முறைபிற ழாக்ம
பிறனுடம் பட்டது தானுடம் படுத
லிறந்தது காத்த லெதிரது போற்றன்
மொழிவா மென்றல் கூறிற் றென்ற
ஞன்குறி யிடுத லொருதலை யின்மை
முடிந்தது காட்ட லாணை கூறல்
பல்பொருட் கேற்பி னல்லது கோட
லெருகுத்த மொழியான் வகுத்தனர் கோடன்
மறுதலை சிதைத்துத் தன்றுணி புரைத்தல்
பிறன்கோட் கூற லறியா துடம்படல்
பொருளிடை யிடுத லெதிர்பொரு ளுணர்த்தல்
சொல்லி னெச்சஞ் சொல்லியாங் குணர்த்த
றந்துபுணர்ந் துரைத்தன் ஞாபகங் கூற
லுய்த்துக்கொண் டுணர்த்தலொடு மெய்ப்பட நாடிச்
சொல்லிய வல்ல பிறவவண் வரினுஞ்
சொல்லிய வகையாற் சுருங்க நாடி
மனத்தி னெண்ணு மாசறத் தெரிந்துகொண்
டினத்திற் சேர்த்தி யுணர்த்தல் வேண்டு
நுனித்தகு புலவர் கூறிய நூலே.

இஃது எண்ணான்கு உத்தியின் பெயரும் இயலுங் கூறுகின்றது.

இ - ள். சாத்துவிககுணமுற்ற அறிவினாலே தெளிந்தோர் கண்ட உத்திவசனத்தின் வேறுபாடுகளை விரித்துக் கூறப்புகின் கருதியதறிதல் முதலாக உய்த்துக்கொண்டுணர்த்தல் ஈறாகச் சொல்லப்பட்ட முப்பத்திரண்டனோடும் அவைபோல்வன பிறவும் நூலின் கண்ணவைகளைக் கூறிய திறத்தான் இலக்கணங்களெல்லாம் அகப்பட ஆராய்ந்து மனத்தினாலே எண்ணுங் குற்றம் நீங்க ஆராய்ந்து அப்பொருளை எடுத்துக்கொண்டு கூறியவற்றிற்கு இனமாகவுஞ் சேர்வித்து அறிவித்தலை விரும்புக நூன்முடிபு அறிந்து அதனான் மேதக்க அறிவுடையோர் செய்த நூற்கண். எ - று.

உத்தியினையும் உத்திக்கு இனமாதலையும் ஈண்டு எடுத்துக்காட்டப்புகின் அவை விரிந்துகிடத்தலான் அவை நுண்ணுணர்வான்

ஆராய்ந்து இந்நூற்கண்ணுந் தொல்காப்பியம் முதலிய பெருநூற் கண்ணும் ஆங்காங்கு உணர்க. (௧௬அ)

அ௯௯. முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்.

இது நூலின்வகை கூறுகின்றது.

இ - ள். கூறிய இலக்கணங்களையெய்திய அந்நூல் முதனூலென்றும் வழிநூலென்றுஞ் சார்புநூலென்றும் மூன்றாய்வழங்கப் படும். எ - று.

முதல் வழி சார்பென்பன ஆகுபெயர். கூறிய இலக்கணங்களாவன சூத்திரமும் ஒத்தும் படலமும் பிண்டமுமாம். அவையிற்றினை அடக்கியு வேறுபிண்டம் இவைகளின் இலக்கணமென்றே கோடும். (௧௬௯)

௯00. அவற்றுள்,
　　வினையி னீங்கி விளங்கிய வறிவின்
　　முனைவன் கண்டது முதனூ லாகும்.

இது முதனூலின் இலக்கணம் உணர்த்துகின்றது.

இ - ள். முதல்வழிசார்பென்ற மூன்றனுள் அநாதியே அவிச்சைகாரணமாக வரும் இருவினைப்பந்திப்பினின்று நீங்கி, இறைவனது அருளாற் தன்னையறிவதாக அறியும் பரஞானத்தான் உளதாய சீவன்முத்திபெற்றோனாற் செய்யப்படுவது முதனூலாம். எ - று.

என்றது யோகமுயற்சியின்றலைநிற்க மெய்யுணர்வு பிறந்து யானெனதென்னுஞ் செருக்குகளற்று இருவினைப்பயனினுஞ் சமஞ் செய்கோல்போலப் புடைபெயர்ச்சியின்றி ஒருநிலையின்மேனோக்கியவழி இறைவனருள் வதிய அதனான் விரிந்த மெய்ஞ்ஞ்ஞானம் விளங்குதலாம். முனைவன்போன்று நிற்றலின் முனைவனென்றார்; அஃது உபசாரவழக்கு. அவர்கள் மக்களுயிர்க்கு உறுதிபயப்ப அருளாற் கூறியவாறுமென்க. இறைவனருளால் அறிவுவிளங்கு மென்பதென்னை? "காட்டாதனவெல்லாங் காட்டிச்சிவங்காட்டித் தாட்டாமரைகாட்டித் தன்கருணைத்தேன்காட்டி" எனத் தென்னவன்பிரமராயரும் "மயரறமதிநல னருளினனெவனவன்" எனக் குருகூரரும் பொருண்மொழிக்காஞ்சி கூறியவாற்றான் அறிக. ()

௬௦௧. வழியெனப் படுவ ததன்வழித் தாகித்
தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்த்
ததர்ப்பட யாத்தலோ டனைமர பினவே.

இது வழிநூலின் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். வழிநூலென்று சிறப்பித்துச் சொல்லப்படுவன முதனூலிற்கூறிய பொருளோடு வேறுபடாமற் பின் தோன்றுவனவாகி முதனூலின் எழுத்திலக்கணமுஞ் சொல்லிலக்கணமும் மயங்கக்கூறினாற்போற் கூறாது "மயங்காமரபினெழுத்துமுறைகாட்டி" என வேறோரதிகாரமாகத் தொகுத்துக்கூறுதலும் விரித்தசூத்திரப் பொருளைத் தொகைமரபாற் தொகுத்துக்கூறுதலும், "வினைநிலையுரைத்தலும் வினாவிற் கேற்றலும்—பெயர்கொள வருதலும் பெயர்ப்பய னிலையே." என ஆசிரியர் அகத்தியனார் தொகுத்துக்கூறிய பொருளைப் "பொருண்மை சுட்டல் வியங்கோள் வருதல்—வினைநிலை யுரைத்தல் வினாவிற் கேற்றல்—பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்—றன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே."என விரித்துக்கூறுதலும், "எழுத்தெனப் படுப—வகரமுத, னகரவிறுவாய் முப்பஃ தென்ப—சார்ந்துவரன் மரபின் மூன்றலங் கடையே." எனத் தொகையும் விரியுமாகக் கூறுதலும், வடசொல்லாற் கூறிய அறநூற்பொருளைத் தமிழ்மொழியாற் கூறுதலும், மொழிபெயர்த்தலொழித்து ஏனையிலக்கணம்பெற முதனூற்சூத்திரயாப்போடு சேர்த்துக்கூறுதலுமாகிய அவ்விலக்கணங்களையுடையனவாம். எ-று.

மொழிபெயர்த்தல் ஆசாரக்கோவையும் அதர்ப்படயாத்தல் திருவள்ளுவப்பயனும் முதலியன. (௧௬௪௧)

௬௦௨. இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

இது புடைநூலின் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். முதனூற்கும் வழிநூற்கும் ஒருமருங்கு ஒப்ப எடுத்துக்கொண்டு முடிவொன்றாய்க் கூறுமாறு வேறுபாடுடையது சார்புநூலாம். எ - று.

புடைநூலெனினுஞ் சார்புநூலெனினும் ஒக்கும். திரிபாவது படலத்தின் இலக்கணம் ஓத்திற் கிடக்கவும் படலத்தின் இலக்கணங்களைத் தொகுத்து ஒரு சூத்திரத்திற்கிடக்கவும் ஓத்தின் இலக்கணம் ஒருசூத்திரத்திற் கிடக்கவும் ஒருபடலத்திற் கூறும் இலக்க

ணம் மற்றொரு படலத்தின் இயைபுநோக்கிக் கிடக்கவும் படலத்து ஒழிபோடு பிண்டத்து ஒழிபு சேர்ந்துகிடக்கவுங் காலவேறுபாட்டாற் பெறுவனவுஞ் சின்னாட் பல்பிணிச் சிற்றறிவினோர்க்கு அறிவுறுத்தற்பொருட்டுத் தொகைவகைவிரிபடச் செய்தலாமென்று உணர்க.

அவற்றுட் படலத்தின் இலக்கணம் ஒத்திற்கிடத்தலாவது ஆசிரியர் தொல்காப்பியனார் எழுத்ததிகாரத்திற் கூறிய பொதுவகையாற் புணரும் இயல்பும் விரிந்த சூத்திரப் பொருளவன்றித் தொக்குப் புணரும் இயல்புங் குற்றியலுகர ஈற்றுச் சொற்கள் நின்று புணரும் இயல்பும் இந்நூலுள் உயிரீற்றுப்புணரியலுட் கூறப்படுதலும், அவர் சொல்லதிகாரத்திற் கூறிய கிளவியாக்கமும் வேற்றுமையியலும் வேற்றுமைமயங்கியலும் விளிமரபும் இதன்கட் பெயரியலுட் கூறப்படுதலும்,பொருளதிகாரத்திற் களவியலுங் கற்பியலும் பொருளியலும் மெய்ப்பாட்டியலும் அகத்திணையியலுட் கூறப்படுதலுமாமென்று உணர்க.

படலத்தின் இலக்கணங்களை ஒருசூத்திரத்திற் தொகுத்தலாவது எழுத்ததிகாரத்தின் "எண்பெயர்முறைபிறப்பு" எனவுஞ் சொல்லதிகாரத்திற் "தனிமொழிதொடர்மொழி" எனவும் பொருளதிகாரத்திற் "போக்கரு மரபிற் பொருளெனப் படுவது" எனவுங் கூறலாமென்று உணர்க.

ஓத்தின் இலக்கணம் ஒரு சூத்திரத்திற் கிடத்தலாவது "மொழிக்காரணமாம்" எனவும் "எழுத்தே தனித்து மிணைந்துந் தொடர்ந்தும்" எனவும் "மெய்யுயிர் முதலீ ரேழிரு பதங்கள்" எனவும் "பெயரெனப் படுபவை தெரியுங் காலை" எனவும் "வினையெனப் படுவது வேற்றுமை கொள்ளாது" எனவும் "வேற்றுமை வினைசாரியையொப் புருபுகள்"எனவும்"குறிப்பும் பண்பு மிசையுந் தோற்றி" எனவும் "அதுவே, கைக்கிளையைந்திணை" எனவும் "வெட்சிவஞ்சியுழிஞைதும்பை" எனவும் "அணியெனப்படுவது" எனவுஞ் "செய்யுளென்பது" எனவும் "எஞ்சியவிலக்கணம்" எனவும் கூறப்படுதலாமென்று உணர்க.

ஒருபடலத்திற் கூறும் இலக்கணம் மற்றோர் படலத்திற்கூறலாவது செய்யுளியலுட் கூறவேண்டும் ஒற்றளபெடையை எழுத்தியலுட் கூறலாமென்று உணர்க.

படலத்தொழிபோடு பிண்டத்தொழிபு சேர்தலாவது இவ்வோத்துட் கூறப்படும் பாட்டினியல் முதலிய ஏழும் படலத்தொழி

பெனவும் மரபுமுதலிய ஏழும் பிண்டத்தொழிபெனவுஞ் சேர்ந்து நிற்றலாமென்று உணர்க.

**கா**லவேறுபாட்டாற் பெறுதலாவது அகரத்தோடுகூடிச் சகரம் மொழிக்கு முதலாம் எனக்கூறுதலுஞ், "சொல்வரைந் தறியப் பிரித்தனர் காட்டல்" என ஆசிரியர் தொல்காப்பியனார் பாதீடிட்ட சொல்லை விகுதிப் புணர்ச்சியென விரித்துக்கூறுதலும், அவர் உவமமொன்றனையே கூறியொழிய இவர் குணவணியென்றும் பொருளணியென்றுஞ் சொல்லணியென்றும் மொழிபெயர்த்துக் கூறுதலுமாமென்று உணர்க. முதனூல் வழிநூல் சார்புநூல் இலக்கணங் கூறுதலான் முதனூலில் வழிநூல் சார்புநூற்கு இலக்கணம் பெருமையும் வழிநூலிற் சார்புநூற்கு இலக்கணம் பெருமையும் அறிக. (கசஉ)

கூ0ங. **பா**ட்டிடை வைத்த குறிப்பி னானும்
பாவின் றெழுந்த கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்
றுரைவகை நடையே நான்கென மொழிப.

**இ**து மேல் நிறுத்தமுறையானே உரைச்செய்யுளாமாறும் அதன்பகுதியுங் கூறுகின்றது.

**இ** - ள். ஒருபாட்டின் இடையிடைகொண்டுநிற்குங் கருத்தான் வருவன உரையெனப்படும். என்னை? பாட்டுறுவது சிறுபான்மையாகலின். அவை தகடூர்யாத்திரைபோல்வன. மற்றுப்பிறபாடை விரவி வருவனவோவெனின், அவற்றுளுந் தமிழுரையாயின ஈண்டு அடங்கும். பிறபாடைக்கு ஈண்டு ஆராய்ச்சியின்று. பாவின்றெழுந்தகிளவி பாட்டின்றிச் சூத்திரத்திற்குப் பொருளெழுதுவனபோல்வன. சூத்திரம் பாட்டெனப்படாவோவெனின்? படா; பாட்டும் உரையும் நூலுமென வேறோதினமையின். இதனாற் போந்தது சொற்சீரடியான் இற்ற சூத்திரம் உரைச்செய்யுளென்பதாம். பொருளொடுபுணராப்பொய்மொழி பொருளின்றிப் பொய்படத்தொடர்ந்து சொல்லுவன. பொருளொடுபுணர்ந்த நகைமொழி பொய்யெனப்படாது மெய்யொடுபட்டு நகுதற்கு ஏதுவாகுந் தொடர்நிலை. இந்நான்கும் உரைச்செய்யுளென்று கூறுவர் புலவர். எ - று.

**வ**கையென்றதனான் இவ்வுரைப்பகுதி பிறவும் உள. அவை மேற் பாயிரத்துட் "பொழிப்பே யகல நுட்ப மெச்சமெனப்—

பழிப்பில் சூத்திரம் பன்ன னுன்கே." என்பதனுற் பெறப்பட்டன. (௧௪௩)

௬௦௪. ஒப்பொடு புணர்ந்த வுவமத் தானுந்
தோன்றுவது கிளந்த துணிவி னானு
மென்றிரு வகைத்தே பிசிவரு நிலையே.

இது பிசியாமாறு கூறுகின்றது.

இ - ள். ஒப்புமையோடு பொருந்திவரும் உவமைப்பொருளானும் ஒன்றுசொல ஒன்றுதோன்றுதல் துணிவுடையவாகச் சொல்லுஞ் சொல்லானுமென இருகூறுபாடுடைத்து பிசிதோன்றும் நிலை. எ - று.

ஒப்பொடுபுணர்ந்த உவமம் "பிறைகவ்வி மலைநடக்கும்" என்பது யானையெனவும் "முத்துப்போற் பூத்து முதிரிற் களாவண்ண—நெய்த்தோர் குருதி நிறங்கொண்டு வித்துதிர்த்து." என்பது கமுகெனவும் வரும். தோன்றுவதுகிளந்த துணிவென்பது "நீராடான் பார்ப்பா னிறஞ்செய்யா னீராடி—னூராடு நாட்டிற்காக் கை." இது நெருப்பென்றவது.

பிசி நிகிர்தம் என்பன ஒருபொருட்கிளவி. (௧௪௪)

௬௦௫. நுண்மை யுஞ்சுருக் கமுமொளி யுடைமையு
மென்மையு மென்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉ
மேது நுதலிய முதுமொழி யென்ப.

இது முதுமொழியாமாறு கூறுகின்றது.

இ - ள். நுண்ணியபொருளுடைமையும் எழுத்தானுஞ் சொல்லானுஞ் சுருக்கமுடைமையும் எல்லாச்சமயத்தாரானுங் கூறும் பொருள்களிற் தான் சென்று விளங்குதலுடைமையும் அறிவோர்க்குப் பிரவேசிக்க எளிதாதலுடைமையுமென்று கூறப்படும் இந்நான்குந் தோன்ற எப்பொருளுந் தன்னகத்து அடங்கத் தான் மேற்பட்டுப் பிரதிக்கினை மாத்திரத்தாற் கருதிய பொருளை முற்றுவிக்க அவாய்நிலைதோன்றியவழித் தோன்றுங் காரகமாக வருந் திட்டாந்தம் உபநயம் நிகமனமென்னும் வாக்கியங்களை உட்கொண்டு வராநிற்கும் ஏதுப்பொருளைக் கருதியனவே முதுமொழிச்செய்யுளென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

இவற்றின் விகற்பமெல்லாம் அளவைநூன்முகத்தான் ஆராய்ந்தறிக.

அளவையும் பொருட்கூற்ருகலான் ஆசிரியர் தொல்காப்பியனுர் பொருளதிகாரத்திற் படலத்தொழிபாக அடக்கிக்கூறினுர். மூன்ரும்வேற்றுமைக்கும் ஐந்தாம்வேற்றுமைக்கும் ஆசிரியர் அகத்தியனுர் ஏதுப்பொருள் கூறினமையான் "அதர்ப்படயாத்தல்" என்பதனுன் இந்நூலுடையாரும் ஆசிரியர் தொல்காப்பியனுர் ஓதிய பாடமே இந்நூற்கும் பாடமாகக்கொண்டு கூறினுர். இவ்வாறு வருவனவற்றிற்கெல்லாம் இஃதொக்கும்.

மொழியானன்றி மனத்தானுணரும் நுண்ணியபொருளாகலின் நுண்மையென்ருர். தான்சிறிதாய்ப் பாலிற்புரையொத்துக் கலந்துநிற்குந் தன்மையிற் சுருக்கமென்ருர். சொல்லாற் பொருள் விளங்குமாறின்றிப் பொருளாற்றலாற் பலரும் உடம்படத் தோன்றுதலின் ஒளியுடைமையென்ருர். இயல்பாற் பொருட்டன்மையுணராநிற்போர்க்கு மெலிதாதற்றன்மையின் மென்மையென்ருர். இச்சூத்திரத்திற்கு இவ்வாறு பொருள்கூருக்காற் குன்றக்கூறலென்னுங் குற்றந் தங்கி முதனூலின்வழித்தன்றென்பதாம், அதனுல் இவ்வாறு பொருள்கூறல்வேண்டுமென்க. (கசரு)

க௦சு. நிறைமொழி மாந்த ராணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திர மென்ப.

இது மந்திரச்செய்யுளாமாறு கூறுகின்றது.

இ - ள். அருளிக்கூறினும் வெகுண்டுகூறினும் அவ்வப் பயங்களைப் பயக்கும் நிறைந்த மொழியையுடைய குரவர் தாம் அனுபவத்தான் அறிந்த பொருளைப் பிறர்க்கு உணர்த்தலாகாமையான் அவர்க்குப் பயப்பாடு நோக்கி ஆக்கினையான் மறைந்த பொருளைக் கூறப்பட்ட சொற்களே மந்திரச்செய்யுள். எ - று.

செய்தலினுற் சொல்லுஞ் செய்யுளாதல் பெற்ரும். சொல்லெனவே ஓரெழுத்தொருமொழியும் ஈரெழுத்தொருமொழியுந் தொடர்மொழியுங் கொள்க. அவை மந்திரமொழி வல்லுநர்வாய்க் கேட்டு உணர்க.

இச்சூத்திரமும் மேலைச்சூத்திரமும் ஆசிரியன்கூற்று. (கசசு)

௯0எ. எழுத்தொடுஞ் சொல்லொடும் புணரா தாகிப்
பொருட்புறத் ததுவே குறிப்புமொழி யென்ப.

இது குறிப்புமொழியாமாறு கூறுமுகத்தான் எய்தாதது எய்துவிக்கின்றது; சொல்லாற்பொருளுணர்த்தலேயன்றிப் பொருளானுஞ் சொற்பெறப்படுமென்றலின்.

இ - ள். எழுத்தினேடுஞ் சொல்லினேடும் புணராதாகிப் பொருட்கண் அபினயத்திற் கிடப்பனவே குறிப்புச்சொல்லாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

உதாரணம்:—"வருகோவைச் சூடி வளைகோவை சாத்தி—யொருகோவை யேறியுயர் கோவை—தருகோவைக்—கைக்கோவை யாய்ந்துரைத்தார் காண்பார்க்குக் காணுதார்க்—கிக்கோவை யாய்ந்துரைத்தா ரீங்கு." கோவென்பது பலபொருளொருசொல்லாய் நீரையுந் திசையையும் இடபத்தையுஞ் சுவர்க்கத்தையுங் கூற்றுமொழியையுங் குறிப்புமொழியையும் உணர்த்துமாகலான் 'உயர் கோவை தருகோவைக் கைக்கோவை யாய்ந்துரைத்தார் காண்பார்க்கு' என்பதற்குப் பொருள் மேலானசீர்பாதத்தை வேண்டினவர்களுக்குக் கொடுக்கின்ற உபதேசமாகிய சம்பிரதாயவாக்கின் பொருளை அறியவேண்டுமென்று கருதும் முனிவர்க்குப் பாகம்பிறந்தது கண்டு போதமுத்திரையான் உணர்த்தக் கருதி அபிநயமென்னுங் கைவேறு பாட்டாற் காட்டவுங் காணவும் படுங் குறிப்புமொழிகளை ஆராய்ந்து சேர்த்துக்காட்டிய இறைவனென்பது காண்க.

பாடமுங் கூற்றும் ஆசிரியன்கண்ணவாகலான் பரந்துபட்ட நூலிற் சிதர்ந்துகிடக்கின்ற பொருளை ஆசிரியர் தொல்காப்பியனர் கருத்துக்கு ஒப்பத் தொகுத்து அடைவாக முன்னுரையிற்பெருமல் அரிதாகநின்ற பொருளை எளிதாக அறியுமாறு தேடிவைத்ததொகுதி, தானம்வெளித்தோன்றிப் பயன்படுமாறுபோல, இந்நூலுடையார் கண்டு கூறினர். இவ்வாறு பொருள்கூறுதல் ஆசிரியர்கருத்துக்கு ஒப்பென்பது செய்யுட்கோவையுரையான் உணர்க. இக்கருத்தே பற்றியன்றே தென்னவன்பிரமராயரும் "வாக்குமனங்கழியநின்ற மறை" என்ருர். நக்கீரனரும் "எஞ்சிய பொருள்களை யேமுற நாடித்—திங்கள் போலத் திசைவிளக் கும்மே." எனக் கூறிய திருமுகத்திற்கு ஏற்ப "ஒருகை மார்பொடு விளங்க" எனக் குறிப்புமொழியுட்கொண்டுகூறியவாற்ருனும், "கடுத்துவர்த்த தேனுங் கடும்பிணி தீர்த் தின்பங்—கொடுத்ததுபோல் யானுரைத்த கோவை—யெடுத்

துணர்ந்தோர்—பொய்ப்பொருள்யா வுந்தெளிந்து போக்கியபின் ருங்காணு—மெய்ப்பொருளா னெய்துவார் வீடு." என்பதனானும் பிறவாற்ருனும் அறிக. "குடத்தலையர் செவ்வாயிற் கொம்பெழுந் தார் கையி—னடக்கிய மூக்கி னவர்." என்பதனுட் குஞ்சரமென் பது குறிப்புமொழியெனக் காட்டின் ஆகாது, அது பாட்டிடை வைத்த குறிப்பாய் அடங்குதலின். இத்துணையும் படலத்தொழிபு கூறி இனிப் பிண்டத்தொழிபு கூறுகின்ருர். (கசஎ)

கூ௦அ. வழக்கு மரபுஞ் செய்யுண் மரபுமென்
றிழுக்கின் மரபோ ரிருவகைத் தாகும்.

இது மரபு இத்துணைத்தென்பதூஉம் அவை இவையென்ப தூஉங் கூறுகின்றது.

இ - ள். வழக்கிடத்து உளவாகிய மரபுஞ் செய்யுளிடத்து உளவாகிய மரபுமென மரபு இலக்கணம் இருவகையினையுடைத்து. எ - று. (கசஅ)

கூ௦கூ. அவற்றுள்,
வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான.

இது வழக்காமாறு கூறுகின்றது.

இ - ள். முற்கூறிய இரண்டனுள் வழக்கென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது உயர்ந்தோரிடத்தாம்; தோன்றுதல் அவரிடத்தாகலான். எ - று.

உயர்ந்தோராவார் அகத்தியனும் மார்க்கண்டேயனுருந் தலைச்சங்கத்தாரும் முதலியோர். (சுசகூ)

கூக௦. பார்ப்பும் பறழுங் குட்டியுங் குருளையுங்
கன்றும் பிள்ளையு மகவு மறியுங்
குழவியு மென்றிவை யிளமைப் பெயரே.

இது வழக்குமரபு உணர்த்துவனவற்றுள் இளமைக்குரியன இவையென்கின்றது.

இ - ள். பார்ப்புமுதற் குழவி ஈருக ஒன்பதும் இருதிணையினும் இளமைத்தன்மை உணர்த்தும் பெயர்களாம். எ - று.

அவை உணர்த்துமாறு;—பார்ப்பும் பிள்ளையும் பறப்பனவற்றுள்ளுந் தவழ்சாதியுள்ளும், பறழ் குட்டி என்பன மூங்கா வெருகு எலி அணில் என்பனவற்றுள்ளுங், குருளை குட்டி பறழ் என்பன முயல் பன்றி நாய் நரியுள்ளும், பிள்ளை என்பது நாயல்லாத ஏனையவற்றுள்ளும்,மறி குட்டி என்பன யாடு குதிரை நவ்வி புல்வாய் கோடுவாழ்விலங்கினுள்ளும், மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும் அக்கோடுவாழ்விலங்கினுள்ளுங், கன்றென்பது யானை குதிரை கழுதை கடமை மான் எருமை மரை கவரி ஒட்டகம் கராம் இவற்றுள்ளுங், குழவியென்பது குஞ்சரம் எருமை கடமை மரை குரங்கு முசு சிதல் எறும்பி இவற்றுள்ளும்,பின்னின்ற சிதல் எறும்பி இவற்றின் கிளைப்பிறப்பினுள்ளுங், குழவி மக பிள்ளை என்பன மக்களுள்ளும், பிள்ளை குழவி கன்று போத்தென்பன ஓரறிவுயிருள்ளும் இளமைப் பெயர்க்கு உரியனவாதல் ஓர்ந்துணர்க.

ஓரறிவுயிரிற் பைங்கூழும் பசும்புல்லும் இவ்விளமைப்பெயர் எய்தாவென்பதாம். இவையெல்லாஞ் சொற்பற்றிவந்த மரபாகலிற் சொல்லோத்திற் கூறிய மரபுள் அடங்காவென்க. (கஙo)

கூகக. சொல்லிய மரபி னிளமை தானே
சொல்லுங் காலை யவையல விலவே.

இது மேலதற்கோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். கூறப்பட்ட மரபிலக்கணம் எய்திநின்ற இளமைப் பெயரைச் சொல்லுமிடத்து அப்பெயர்களேயன்றி வேறுசில பெயர்களில்லை. எ - று. (கஙக)

கூகஉ. ஒன்றறி வதுவே யுற்றறி வதுவே
யிரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே
யைந்தறி வதுவே யவற்றொடு செவியே
யாறறி வதுவே யவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே.

இஃது உயர்ந்த ஒழுக்கமும் அல்லவாகிய ஒழுக்கமும் நிகழ்தற்கு ஏதுவாகிய அறிவின் திறங் கூறுகின்றது.

இ - ள். ஓரறிவாவது தன்னின் வேறாய பிறிதொன்று மெய்யுறலான் வன்மை மென்மை முதலியன அறிதலாம்; இரண்டறிவாவது அதனோடு நாவாற் சுவையை அறிதலாம்; மூன்றறிவாவது அவ்விரண்டறிவுடனே மூக்காற் கந்தத்தினை அறிதலாம்; நான்கறிவாவது அம்மூவகையறிவுடனே கண்ணால் உருவத்தினை அறிதலாம்; ஐந்தறிவாவது அந்நால்வகையறிவுடனே செவியாற் சத்தத்தினை அறிதலாம்; ஆறறிவாவது ஐவகை இந்திரியங்கள் அறியும் அறிவானன்றி ஞாபக ஏதுக்களான் நுண்ணியபொருள்களை மனத்தான் உணர்தலாமென்று நேர்மையான் எல்லாப்பொருள் மரபினையும் உணர்ந்தோர் இவ்வாறு பிறழாமற்கூறுகவென்று காட்டினர். எ-று.

கூகங. புல்லு மரனு முரளு நந்துஞ்
சிதலு மெறும்பு ஞெண்டுந் தும்பியு
மாவு மக்களு மேவுமவ் வறிவே.

இது மேற்கூறிய ஓரறிவுமுதல் ஆறறிவளவும் உறும் உயிர்கள் இவையெனத் தொகுத்து உணர்த்துகின்றது.

இ - ள். புல்லும் மரனும் ஓரறிவுயிரெனவும், முரளும் நந்தும் ஈரறிவுயிரெனவுஞ், சிதலும் எறும்பும் மூவறிவுயிரெனவும், ஞெண்டுந் தும்பியும் நான்கறிவுயிரெனவும், மாவும் மக்களும் ஐயறிவுயிரெனவும், அவ்வகையிரண்டில் மக்கள் ஆறறிவுயிரெனவும் வழங்கப்படும். எ - று. (கூ௫)

கூகச. அக்கிளைப் பிறப்புமவ் வறிவுறு மென்ப.

இது மேலனவற்றிற்கோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். மேற்கூறிய அறுவகை அறிவுறும் உயிர்கட்கு உரிய கிளைப்பிறப்பும் அவ்வவறிவுபெறுமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

கூகரு. ஒருசார் விலங்கு மதுவென மொழிப.

இஃது ஒருசார் மாவிற்கு எய்துஞ் சிறப்புக் கூறுகின்றது.

இ - ள். மக்கள் யாக்கையிற் பிறந்து ஆறறிவு உற்ற உயிர்கள் வினைவயத்தான் விலங்காய்ப் பிறந்துழியும் முன்னை ஆறறிவு உறுதலும் ஒரோவழி உண்டென்றுகூறுவர் ஆசிரியர். எ - று. (கரு௫)

கூகசூ. ஏறு மேற்றையு மொருத்தலுங் களிறுஞ்
சேவுஞ் சேவலு மிரலையுங் கலையு

மோத்தையுந் தகரு முதளு மும்பலும்
போத்துங் கண்டியுங் கடுவனும் பிறவும்
யாத்த வாண்பாற் பெயரென மொழிப.

இஃது அஃறிணையிடத்து ஆண்பாற்கு உரிய மரபுபெயர் இவையெனத் தொகுத்துணர்த்துகின்றது.

இ - ள். ஏறென்பது முதற் கடுவனென்பது ஈறுகக் கிடந்த பதினைந்தும் அவைபோல்வன பிறவும் அஃறிணையாண்பாற்கு உரியபெயர்களாமென்று கூறுவர் ஆசிரியர். எ - று.

அவை உணர்த்துமாறு;—களிறென்பது வேழத்தாணினையும் பன்றியாணினையும், ஒருத்தலென்பது யானை பன்றி புல்வாய் புலி மான் கவரி கராம் எருமை இவையிற்றிணுணினையும், ஏறென்பது பன்றி புல்வாய் உழை கவரி எருமை மரை பெற்றஞ் சுறு இவையிற்றிணுணினையும், போத்தென்பது பெற்றம் எருமை புலி மரை புல்வாய் மயில் எழாஅல் நீர்வாழ்சாதியுள் அறுவகைப்பிறப்பு இவையிற்றிணுணினையும், இரலையுங் கலையும் புல்வாய் முசு இவையிற்றிணுணினையும், மோத்தையுந் தகரும் உதளும் உம்பலும் யாட்டிணுணினையுங், கண்டியென்பது எருமையேற்றினையுங், கடுவனென்பது குரங்கினேற்றினையும் பூனையேற்றினையுஞ், சேவலென்பது மயிலல்லாத சிறகோடுகூடிய பறவையாணினையும், ஏற்றையென்பதும் ஆணென்பதும் எல்லா ஆணினையும் உணர்த்தலாம். (கருசு)

கூகஎ. பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணு
மூடு நாகுங் கடமையு மளகு
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவு
மந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே.

இது பெண்ணிற்கு உரிய மரபுபெயர் இவையெனத் தொகுத்துணர்த்துகின்றது.

இ - ள். பேடை முதலாகப் பிடி ஈறுகச் சொல்லப்பட்ட பதின்மூன்றும் பெண்ணினை உணர்த்தும் பெயர்களாம். எ - று.

அவை உணர்த்துமாறு:—பேடைபெட்டையென்பன ஒட்டகங் குதிரை மரை இவையிற்றின்பெண்ணினையும் புள்ளின்பெண்ணினையும், அளகென்பது கோழி கூகை மயில் இவையிற்றின்பெண்ணினையும், பிணையென்பது புல்வாய் உழை கவரி இவையிற்றின்

பெண்ணினையும், பிணவென்பதும் பிணவலென்பதும் பன்றி புல்வாய் நாய் இவையிற்றின்பெண்ணினையும்,பெண்ணென்பதும் பிணாவென்பதும் மக்களுட் பெண்பாலினையும், பிடியென்பது யானைப் பெண்ணினையும், நாகென்பது எருமை மரை பெற்றம் இவையிற்றின்பெண்ணினையும் நீர்வாழ்சாதியுள் நந்தின்பெண்ணினையும், மூடு கடமையென்பன யாட்டின்பெண்ணினையும், பாட்டியென்பது பன்றி நாய் நரி இவையிற்றின் பெண்ணினையும், மந்தியென்பது குரங்கு முசு ஊகம் இவையிற்றின் பெண்ணினையும் உணர்த்தலாம்.

அந்தஞ்சான்ற என்பதாற் கோட்டானென்பதுந் தத்தையென்பதும் ஏனமென்பதும் முறையே பொதுவாய்க் கூகையினையுங் கிளியினையும் பன்றியினையும் உணர்த்துதல் கொள்க. (கருஎ)

கூகஅ. புறக்கா ழனவே புல்லென மொழிப. (கருஅ)

கூகக. அகக்கா ழனவே மரமென மொழிப. (கருகூ)

கூ௨0. தோடே மடலே யோலை யென்றா
வேடே யிதழே பாளை யென்றா
வீர்க்கே குலையென நேர்ந்தன பிறவும்
புல்லொடு வருமெனச் சொல்லினர் புலவர். (கசூ0)

கூ௨க. இலையே முறியே தளிரே தோடே
சினையே குழையே பூவே யரும்பே
நனையுள் ளுறுத்த வனையவை யெல்லா
மரனொடு வரூஉங் கிளவி யென்ப. (கசூக)

கூ௨௨. காயே பழமே தோலே செதிளே
வீழோ டென்றாங் கவையு மன்ன.

இவ்வைந்து சூத்திரத்திற்கும் பொருள் வெளிப்படை. (கசூ௨)

கூ௨ந. தலைமைக் குணச்சொலுந் தத்தமக் குரியதோர்
நிலைமைக் கேற்ப நிகழ்த்துக வென்ப.

இது நூன்மரபு நூலிலக்கணத்திற் பெறப்பட்டமையின் எஞ்சிநின்ற செய்யுண்மரபு கூறுகின்றது.

இ - ள். அரசருரிமைப்பண்பு உணர்த்துஞ் சொற்களை அவரவர்க்கு ஏற்பச் செய்யுளகத்துக் கூறுகவென்று சொல்வர் ஆசிரியர். எ - று.

தானைத்தலைவரையும் அரசனால் ஏவல்பெற்றோரையும் வரிசைபெற்றோரையும் குறுநிலமன்னரையும் மணிமுடிகவித்த மதிவெண்குடைமன்னரெனப் புகழ்தலுஞ் செய்யுண்மரபென்பதாம்.

"உண்டற் குரிய வல்லாப் பொருளை—யுண்டன போலக் கூறலு மரபு." என்பது உரையிற்கொள்க. (கசூஙூ)

கூஉச. நூலே கரக முக்கோன் மணையே
யாயுங் காலை யந்தணர்க் குரிய.

இது நிறுத்தமுறையானே வருணத்தின் மரபியல் கூறுகின்றது.

பொருள் வெளிப்படை. (கசூசூ)

கூஉரு. படையுங் குடையுங் கொடியு முரசு
நடைநவில் புரவியுங் களிறுந் தேருந்
தாரு முடியு நேர்வன பிறவுந்
தெரிவுகொள் செங்கோ லரசர்க் குரிய.

இதுவும் அது. (கசூரு)

கூஉசூ. வைசிகன் பெறுமே வாணிக வாழ்க்கை.

இதுவும் அது. (கசூசூ)

கூஉஎ. வேளாண் மாந்தர்க் குழுதூ ணல்ல
திலையென மொழிப பிறவகை நிகழ்ச்சி.

இதுவும் அது. (கசூஎ)

கூஉஅ. அந்த ணாளர்க் கரசுவரை வின்றே.

இஃது அந்தணர்க்கு உரியதோர் சிறப்புரிமை கூறுகின்றது.

இ - ள். அழகிய நட்பத்தினையுடைய வேதியர்க்கு அரசரிமையெய்திநிற்றல் கடிதலின்று. எ - று.

அந்தணர் வேதாந்தத்தை அண்ணினோரென்றுமாம். (கசூஅ)

கூஉகூ. கவியே கமகன் வாதி வாக்கியெனப்
புவிமேற் சொல்லும் புலவர் நால்வர். (கசூகூ)

கூ௲௦. ஆசு மதுரஞ் சித்திர மகலம்
பாவகை பாடுவோன் கவியெனப் படுமே.

இவைபொருள் வெளிப்படை. (கஎ௦)

கூ௲க. நிறைந்த கல்வியா னிறைந்த வறிவா
னறைந்த வொருபொரு ளதனை விரிக்க
வல்லவன் கமகன் சொல்லுங் காலை.

இது கமகன் இயல்பு கூறுகின்றது.

இ - ள். நிறைந்த கல்விப்பயிற்சியானும் அக்கல்விப்பயிற்சியாற் றெளிந்த அறிவானும் முன்னர்க் கற்றுவல்லோர் கூறிய பொருளை ஞாபகத்தானுஞ் செம்பொருணடையானும் நேரிட்டு எந்நூற்பொருளினையும் விரித்துச்சொல்ல வல்லோன் கமகன். எ - று. ()

கூ௲உ. ஏதுவு மேற்கோளு மெடுத்துக் காட்டித்
தன்கோ ணிறீஇப் பிறர்கோண் மறுக்கும்
வன்புடை யோனே வாதி யாவான்.

இவை வாதியிலக்கணங் கூறுகின்றது.

இ - ள். ஏதுவும் ஏதுவினுற் சாதிக்கும் பொருளுமாகிய அவ்விரண்டற்குந் திட்டாந்தமாகிய எடுத்துக்காட்டு முதலியன கொண்டு தன்கோட்பாட்டினை நிறுவிப் பிறர்கோட்பாட்டினை மறுக்கும் உரனுடையோனே வாதியாவான். எ - று. (கஎஉ)

கூ௲௩. அறம்பொரு ளின்பம் வீடென நான்குந்
திறம்பா திவரச் செஞ்சொற் கொண்டரு
ளேக்கி யுரைப்போன் வாக்கி யாவான்.

இது வாக்கியிலக்கணங் கூறுகின்றது.

இ - ள். அறமும் பொருளும் இன்பமும் இவற்றின் நிலையின்மையான் எய்தும் வீடுமென்றுசொல்லப்பட்ட நாற்பொருளினையும், மிகுதி குறைவு உறுமற், கேட்போர் விரும்பச், செஞ்சொல் இலக்கணச்சொல் குறிப்புச்சொல்லென்னும் மூன்றனுட்,செஞ்சொல் மிகுதிதோன்ற, உலகந் தவஞ்செய்து வீடுபெற, உயிர்கண்மாட்டுக் கருணைகொண்டு கூறுவோன் வாக்கியாவன். எ - று.

சிந்தையும் மொழியுஞ் செல்லாநிலைமைத்தாகிய வீடு கூறுமா றென்னையெனின், கேள்வி விமரிசம் பாவனையென்னும் வீட்டிற்கு ஏதுவாகிய உபாயங்களைக் கூறவே வீடுங்கூறினாரென்பது.(கஎங)

கூகூச. ஒருவன் பாவே றொருவற் குரைத்து
வருமவன் சோர கவிமற் றொருவன்
பாவிசைக் கொப்ப மேவி யுரைப்போன்
சாத்துக் கவியெனப் பாத்தனர் புலவர். (கஎச)

கூகூரு. முன்னோர் பாடிய யாப்பினுட் கிடந்த
சின்மொழி கொண்டு செய்யுள் செய்யுந்
தன்மையன் பிள்ளைக் கவிபின் மொழியாற்
கரைவோன் வெள்ளைக் கவியா மென்க.

இவை இரண்டுசூத்திரமும் பொருள் விளங்கக் கிடந்தன.

புலவரியல் முற்றும். (கஎரு)

கூகூசு. ஆறுட் பகைசெற் றருங்கலை யோர்ந்து
பாரிற் கீர்த்தி படைத்தோர் வைகுத
னல்லவை யடக்கம் வாய்மை நடுநிலை
சொல்லு நன்மை யுடையோர் தொகைஇ
வல்லார் மொழியினும் வல்லுந ராக்கிக்
கேட்போ ருறைபவை நிறையவை யாகும்.

இது நல்லவை நிறையவை இரண்டின் இயல்புங் கூறுகின்றது.

இ - ள். காமங் குரோதம் உலோபம் மோகம் மதம் மாச்சரியம் என்னும் உட்பகையாறினையும் அடக்கி, அரிதாகிய அறுபத்து நாலு கலைகளையும் ஐயந்திரிபற ஆராய்ந்து, அதனாற் புவியின்கட் பிறத்தற்பயனாகப் புகழ்பெற்றோர் இருக்கலுறும் அவை நன்மையுடைய அவையாம். கல்விநிறை அடக்கமும் வாய்மையும் நடுநின்று சொல்லும் நன்மையுமுடையோர் குழிஇ, மாட்டாதார் கவியரங்கேற்று, அவர்கள் குற்றத்தை நினையாது குணமேற்கொண்டு, அவர்களை வல்லமையுடையராக்கி வினவிக்கேட்போர் உறையும் அவை நிறையவையாம். எ - று.

எனவே, இதனெதிர்மறைமுகத்தாற் குறைந்தகல்வியும் நிறைந்த அழுக்காறும் உடையோர் அவை குறையவையுந் தீயவையு மென்பது பெற்ரும். (களசு)

கூஙள. அகரமு மிகரமு முகரமு மெகரமு
மொகரமு மினத்தோ டுதிக்குமை யெளவு
முதயந் தொடங்கியோ ராரு ருக
விதமுறுங் கடிகை யெண்ணுநண் பகலின்
முதலொரு மூன்றுநன் முகூர்த்த மாக
வகலக் கவிபுனைந் தின்புறல் கடனே.

இது நிறுத்தமுறையானே பிறவெனப்பட்ட ஓரையாமாறு கூறுகின்றது.

இ - ள். அகரமும் இகரமும் உகரமும் எகரமும் ஒகரமுந் தத்தம் இனவெழுத்துக்களோடு சேர்த்தி, ஐகாரம் இகரத்தோடும் ஔகாரம் உகரத்தோடுஞ் சார்த்தி, ஐவகையாக்கி, ஆதித்தன் உதயந் தொடங்கி நண்பகலின் இன்பமுறும் நாழிகை ஓராருருக வகுத்தவற்றுள் முதனின்ற ஓரை மூன்றின் அகலக்கவியைப் புனைந்து இன்பமுறல் முறைமை. எ - று.

ஏனையிரண்டோரையும் ஆகாவென்பதாம். (களஎ)

கூஙஅ. கற்கப் படுவோர் கடப்பா டெய்தி
நற்கவி நான்கொடு முத்தமிழ் நடைதெரிந்
திருபான் வயது தொடங்கி யெழுபான்
வயதி னேரு மாட்சிமை யுள்ளோ
னகலக் கவிசொலு மாற்ற லோனே.

இது கவிப்புலவர்க்காவதோர் சிறப்புக் கூறுகின்றது.

இ - ள். கற்கப்படும் ஆசிரியருக்கு ஓதிய குலமுதல் எண்வகை முறையும் எய்தி, ஆசு மதுரஞ் சித்திரம் வித்தாரமென்று சொல்லும் நல்ல கவிநான்கும் பாடுந் தன்மையுடனே இயற்றமிழ் இசைத்தமிழ் நாடகத்தமிழென்னும் முத்தமிழ்வழக்கினைமுற்ற உணர்ந்து, இருபதுமுதல் எழுபது வயதின் மிகாதிருக்கும் பெருந்தன்மையுள்ளோனே அகலக்கவியைப் பாடும் உரவோன். எ - று.

'கற்கப் படுவோர் கடப்பா டெய்தி' என்றதனாற் கூறுதொழிந்த நற்குணங்களெல்லாம் உளரென்பதாம். (கஎ௲)

கூ௬கூ. செயிர்தீர் புலவன் செய்த செய்யுளை
யுயர்தரு மன்றி னொளிமணி விளக்கொடு
மங்கலம் பொலிய மறையோர் வாழ்த்தத்
தொங்கல் கமழத் தூரிய மியம்ப
வஞ்சொன் மாதர் செஞ்சொல்வாழ்த் தெடுக்க
வெண்டுகில் புனைந்து வேறு தவிசிட்
டெண்டிசை பரவத் தண்டமிழ் கொண்டு
தண்ணடை மதாணி தமனியங் களிறு
பண்ணமை யிரதம் பாய்பரி யுதவி
யேழடி பின்போய் மீள்வது மூவர்
வாழ்தமிழ் நாடர்க்கு வகுத்தனர் புலவர்.

இஃது அகலக்கவியைக் கொள்வோர் இலக்கணங் கூறுகின்றது.

இ - ள். கற்கப்படா ஆசிரியனுக்கு ஓதிய குற்றத்தினீங்கிக் கற்கப்படும் ஆசிரியனுக்கு ஓதிய நற்குணங்களுடனே இவ்வோத்திற் கூறிய நற்குணங்களை எய்திய புலவனாற் செய்யப்பட்ட செய்யுளை, நல்லவை நிறையவையின்கண், ஒளிகிளரும் அழகிய விளக்கத்தினோடும் ஏனை எழுவகைமங்கலங்களும் பொலிய, நான்மறையோர் ஆசிகூற, நாலவிட்ட பூமாலைகள் நறுநாற்றத்தைச் செய்யப், பலவகை வாத்தியத்தொகுதிகள் ஒலிக்க,இனிய சொல்லையுடைய மடவார்கள் செவ்விய சொற்களான் வாழ்த்தப், பாமகளை மணம்புணருந் திறத்தான் வெண்டுகிலும் வெண்மலர்மாலையும் வெண்முத்துமாலையும் அலங்கரித்துக்கொண்டு விசித்திரத் தவிசின் இருந்து, பாமகளைப் புணர்த்தும் புலவனுக்கும் அவ்வாறு வேறோர் தவிசிட்டு, எட்டுத் திசையினுள்ளாருந் துதிக்கக் குளிர்ந்த பாமாலை சூடி, மருதநிலத்துளவாகிய வளம்மாறுத ஊரும் பெரிய ஆபரணமும் பொன்னும் மதவேழமும் உறுப்பானமைவுபெற்ற தேருஞ் செறுநர்மேற் தாவுங் குதிரையும் பாடிய புலவற்குப் பரிசிலாகக் கொடுத்து, ஏழடி புலவன்பின்போய் மீளுதல் நாவலந்தண்பொழில்வரைப்பின் மூவேந்தரும் வாழ்வுபெற்ற வடவேங்கடந்தென்குமரியெல்லைக்கண் உளவாகிய தமிழ்நாட்டகத்தின் அகலக்கவியைக் கொள்வோர்க்கு வகுத்த உரிமைத்திறமாமென்று கூறுவர் புலவர். எ - று.

"படைநவின்ற பாய்மாவும் பண்ணமைந்த தேரு—நடைந வின்ற வெல்பரியு நல்கிக்—கடையிறந்து—முன்வந்த மன்னர் முடி யுரிஞ்சுஞ் சேவடியாற்—பின்வந்தான் பேரருளி னான்." எனப் பிற ருங் கூறினர்.

மூவருமென்னும் உம்மை விகாரத்தாற் றொக்கது. (களக)

கூச௦. முன்மொழிக் கென்று மொழிந்தவும் பெயர்ப்பா
னன்மை தரூஉ நயனு மாராய்ந்
தொண்மையிற் புலவ னுரைத்த கவியை
வண்மையிற் புனைந்தோர் வான்புக ழுருவான்
மாமதி பரிதி யாமெனச் சிறந்து
மன்னிவீற் றிருப்ப ரிந்நிலத் துயர்ந்தே.

இது மேற்கூறிய இலக்கணங்களானமைந்த அகலக்கவியைக் கொண்டோர் பெறும் பயன்கூறுகின்றது.

இ - ள். முன்மொழிக்கு இன்றியமையாப் பொருத்தம்பத்தும் இயற்பெயரிடத்து நன்மையைப் பயக்கும் எழுத்துஞ் சொல்லும் பொருளும் உணர்ந்து நுட்பத்தாற் புலவனுரைத்த அகலக்கவியைக் கொடைமுதலிய வரிசைசெய்து புனைந்தோர் பெரியபுகழானும் உரு வத்தானும் முறையே நிறைமதியும் இளஞாயிறும் இவனுமெனச் சிறப்புற்று இவ்வுலகிற் புகழுடம்பான் நிலைபெற்றுத் தலைமையெய்தி யிருப்பார். எ - று.

"உருவும்புகழுமாகுவிர்நீர்" என்றார் பிறரும். "நிலவரை நீள் புக ழாற்றிற் புலவரைப்—போற்றாது புத்தே ளுலகு." என வள்ளு வனார் கூறியவாற்றானும் "புலவர் பாடும்புக ழுடையோர் விசும் பின்-வலவ னேவா வான வூர்தி-யெய்துப வென்பதஞ் செய்வினை முடித்தே." என இருமைப்பயனுங் கூறியவாற்றானும் ஓர்ந்துணர்க.

கூசக. பன்முகங் கொண்டு பரந்த பொருளைச்
சொன்முகத் தானவை துணைமை யெய்தக்
கூறற் கரிய வாயினுங் கூறிய
பொருளொடு மினத்தொடுந் தெருளுற வமைத்துச்
சொல்ல வல்லுந ரெல்லையின் விளங்கிக்
கலைமக ளொடுந்திரு நிலைபெற வாழ்வர்
மலைமக ளொருபான் மணந்தா னெனவே.

இஃது இவ்வதிகாரத்திற்கோர் புறனடை கூறுகின்றது.

இ - ள். பலவாகிய முகத்தான் விரிந்த பொருளிலக்கணங்களையெல்லாஞ் சொற்கருவியான் அவை முற்றச் சொல்லத்தொடங்கின் முடிவுகூடா; ஆயினுங் கூறப்பட்ட பொருளிலக்கணத்தோடும் அவற்றிற்கு இயைபுபடநின்ற ஏனையிலக்கணத்தோடும் அமைத்துக், கேட்போருள்ளத்து உண்மையுறக் கூறவல்லோர், புடவியிடைப் பகலோன்போல விளங்கித், தம்மைப்பிரியா உரிமையுற்ற கலைமடந்தையோடுந் திருமடந்தை அவ்வாறு வதிய, மலையரசன் மகளாகிய உமாதேவியைத் தனதொருகூற்றின்கண்ணே கலந்து உலகுக்கு இன்பம்பயக்கும் இறைவனைப்போல நெடுங்காலம் இனிதுவாழ்வார். எ - று. (கஅக)

ஐந்தாவது பாட்டியல் முற்றிற்று.



மூன்றாவது

பொருளதிகாரம் முற்றிற்று.



# இலக்கணவிளக்கம் முற்றுப்பெற்றது.



திருச்சிற்றம்பலம்.

# பதிகம்.



பொன்மலை நின்று தென்மலையுற்ற
வகத்திய முனிவன் சகத்தவர்க் காகச்
செந்தமி ழிலக்கண முந்துநூல் கிளப்பப்
பல்கா லுன்னித் தொல்காப் பியமுனி
யியற்றமிழ் முதலினின் றெடுத்துரைத் திடவத
னுட்பங் கண்டு தட்பங் கூரா
தைந்திய லுந்தம் புந்தியின் வேறுகொண்
டுரைத்த புலவர் வரைத்த வுரையான்
முதலு முடிவுஞ் சிதர்தரப் பலவாய்க்
கிடந்த வியலைத் தொடர்ந்தொரு வழிப்பட
வீட்டலா னிலக்கண விளக்க மென்ன
நாட்டினன் வைத்திய நாத தேசிக
னன்னவன் றவத்தி னுலவ தரித்த
முன்னவன் பாயிர மொழிந்துசொல் லணிபுந்
தற்பவ முதன்மூன் றிற்பட நாடிப்
பகர்ந்தன னிளவல்பன் னூலு மாராய்ந்
துகந்துதொல் காப்பியத் துண்மை தோன்ற
வைந்திய லுந்தன் புந்திசான் றுகத்
தந்தைமுன் னுரைத்தநூ றுன்முடி பெய்த
வந்த ஞானூர்ச் சந்திர மௌலி
யருளுட் கொண்டு மருண்மன நீங்கிப்
புலங்கொளப் பாட்டிய லிலங்க வுரைத்தனன்
வாய்மைதரு தியாக ராய தேசிகனே.

இது தொன்னூற்பொருளை இந்நூலுறச்செய்த கருத்தன் வழிமுறைதெரித்துக் கிழமையின்முற்றிய பரிசும் பகர்ந்தது.

இ-ள். மேருவரைநின்று பொதியவரையுற்ற அகத்தியமகாமுனி தமிழ்நாட்டுள்ளோர்க்கு உறுதிபயப்ப இயலிசைநாடகமென்னுஞ் செவ்விய தமிழிலக்கணங்களை முதனூற்பிறவிதோன்றக்கூற; அந்நூலைப் பலகாலும் ஆராய்ந்து பழைய காப்பியக்குடியின்வைகு

தலாற் றொல்காப்பியனென்னுங் காரணபெயருந் திரணதூமாக்கினி யெனத் தந்தையாகிய சமதக்கினியார் இட்ட இயற்பெயருமுடைய இருடி முதனூலினின்றும் இயற்றமிழிலக்கணத்தை எடுத்துக் கொண்டு "மயங்கா மரபி னெழுத்து முறை காட்டி" உரைக்க; அந் நூலிற் கூறிய அறிவின்முதிர்ச்சி நோக்கிக் குளிர்ந்த நலத்தை விரும் பாமல் எழுத்துஞ் சொல்லும் பொருளும் அணியும் யாப்புமென் னும் ஐந்திலக்கணங்களையும் முறைபிறழ்ந்தும் முடிபொவ்வாதும் பயப்பாடின்றியும் பரிசுபெறாதும் மயங்கியும் வழுவியும் ஆசிரியர்க ருத்துக்கொப்பக் கூறாது வேறாக இலக்கணங்கொண்டு கூறிய புல வர் பலராகையான் அவரவர் வரம்புறக் கூறிய உரைத்திறனும் பலவாக, முதலொடு முடிவுஞ் சிந்திப் பலவாகிக் கிடந்த இலக்க ணங்களையெல்லாந் தொடர்ந்து ஒருதிரண்மையுறக், கேட்போர்க்கு இனிமையுற, இலக்கணங்களைத் தீபமொப்ப விளக்குதலான் இலக்க ணவிளக்கமென்று பெயர்விளங்க, வைத்தியநாததேசிகன் இந்நூலு ரைத்து உரையிட்டு நிலைநிறுத்தினான். அத்தன்மையுடையோன் அரியதவத்தினாற் திருவவதாரஞ்செய்த மூத்தபுதல்வனான சதாசிவ தேசிகன் இந்நூற்குச் சிறப்புப்பாயிரங் கூறிச் சொல்லணி இலக்க ணமுந் தற்பவந் தற்சமந் தேசியமாகிய மூவகைச்சொற்களிற்பட ஆராய்ந்து கூறினான். அவற்குப் பின்னர் அவதரித்தோன், தமிழ் நூல் பலவும் ஆராய்ந்து உயர்ந்து, அந்நூல்களிற் கூறிய பொருளி னுக்கு வேறுறாமற், தொல்காப்பியநூலிற்கூறிய மெய்ம்மைவிளங்க, ஐந்திலக்கணங்களையுந் தனது மதியே கரியாகத், தந்தை முன்செய்த இலக்கணவிளக்கநூல் முற்றுப்பெறத், தன்னிடைவந்து இரந் தோர்க்கு அறிவின்முதிர்ச்சியைப் பயக்குந் "திருவாரூரி னரியணை யதன்மேற் பரிவுட னமர்ந்து—வளர்ந்திட வெண்ணி யிளம்பிறை முடித்தோன்" திருவருளை உட்கொண்டு, மனத்திடத்துள்ள மயக் கம் நீங்கிக், கேட்குநர்க்கு "அறிவினூறு மமுதென நிறையப்" பாட் டியலிலக்கணத்தை விளங்கச்செய்தான் கிரியையொழுக்கமும் ஞா னவொழுக்கமும் உணர்த்தி என்கண் அவிச்சைநீங்க இன்பமாகிய விடுபேற்றின் உபாயத்தினை எனக்கு அருளாநிற்குந் தியாகராசதேசி கனென்னும் இயற்பெயரையுடைய குரவன். எ - று.

இப்பதிகச்செய்யுள் செய்தான் வைத்தியநாததேசிகன் மகன் பாட்டியல் பகர்ந்த தியாகராசதேசிகன் மாணாக்கனாகியபுதல்வன் வைத்தியநாததேசிகனென்றறிக.

---

உ

# சூத்திரவகராதி.

# பிழை திருத்தம்.

☞ பிழைதிருத்தங்கள் தம்மிலே தாமே புலப்படுவனவற்றை ஈண்டுக்காட்டிலம். அவற்றை ஆங்காங்குக் குறித்துக்கொள்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| ௧௬ | ௨௭ | கப்பட்டுஞ் | கட்படுஞ | ௧௬௫ | ௧௪ | சிறுபான்மை | சிறுபான்மையும் |
| ௩௬ | ௧௮ | எள்ளு | எள்ளு | ௧௭௨ | ௨௦ | படும்பொ | படுபொ |
| ௩௭ | ௨ | வருண | வருந | ௧௮௦ | ௮ | தானது | தனது |
| ௫௮ | ௩௧ | ஏவல் | ஏவும் | ,, | ௧௯ | பாணர் | பரணர் |
| ௬௨ | ௩௩ | விழி | விளி | ௧௮௧ | ௧௭ | ஞயினன் | ஞயின் |
| ௬௩ | ௧௭ | ஆவாம்பல | ஆபல | ௧௯௪ | ௫ | குறிப்பின் | குறிப்பின |
| ௬௪ | ௧௩ | முறைய | முறையல | ௧௯௭ | ௩௨ | மொழிந்த | ஒழிந்த |
| ௬௭ | ௯ | எல்லார் | எல்லா | ௧௯௮ | ௧ | ஏவல் | ஏவும் |
| ௭௧ | ௨௯ | நீழ்கழன் | நீள்கழன் | ௨௦௮ | ௧௩ | உணத்து | உணர்த்து |
| ௭௫ | ௧ | பாயும் | பாய் | ௨௧௩ | ௨௯ | நீலிய | நிலீய |
| ௮௦ | ௭ | மகற் | மகப் | ௨௧௮ | ௨௦ | ணபாயுகும் | ணப்பாயும் |
| ௮௮ | ௨௮ | மறைவு | பறைவு | ௨௨௩ | ௩௪ | பகலை | பசலை |
| ௯௦ | ௩ | பெருது | பெற்றும் பெருது | ௨௩௪ | ௧௪ | யன் | யவன் |
| ,, | ௩௨ | சீழகம் | சீழ்கம் | ௨௪௧ | ௪ | மியாய் | மியா |
| ௯௨ | ௧௪ | அத்து | அற்று | ,, | ௧௯ | மாள வி | மாளவீ |
| ௯௪ | ௨௪ | முழவு | முளவு | ௨௪௨ | ௫ | னென்ஞ | னெணவா |
| ,, | ௨௬ | மாய்காய் | காய் | ௨௪௪ | ௪ | கொண்ட | கொண்டே |
| ௧௦௦ | ௨௮ | காட்டு | கரட்டு | ௨௪௫ | ௯ | டுத்தலும் | டுத்தும் |
| ௧௦௭ | ௨௨ | யென்று | யொன்று | ௨௪௮ | ௫ | பாவும் | பரவும் |
| ௧௦௮ | ௧௮ | மென | மேல் | ௨௪௯ | ௧ | ஏவு | மேவு |
| ௧௧௨ | ௧௩ | ஆணமாக் | ஆண்மரக் | ,, | ௨௧ | மார்த்த | மராத்த |
| ௧௧௩ | ௬ | துவிதி | விதி | ,, | ௩௧ | முறமை | முறைமை |
| ௧௨௨ | ௨௫ | தட்ட | தட்டநீள் | ௨௫௨ | ௧௯ | மரும்பெ | மருப்பெரு |
| ௧௨௯ | ௧௯ | விண | விண் | ௨௬௨ | ௬ | உருபென் | உருவென் |
| ,, | ,, | வெள | வெள் | ,, | ,, | உருபின் | உருவின் |
| ௧௪௭ | ௧௬ | வேதின் | வேதின | ௨௬௭ | ௬ | எபதும் | என்பதும் |
| ,, | ௧௯ | ளுயிர் | ளுயர் | ௨௭௦ | ௨௧ | பாவை யிர் | பாவைமீர் |
| ௧௪௮ | ௧௦ | குழவி | குளவி | ௨௭௨ | ௧௦ | கரசி | காசி |
| ௧௫௦ | ௯ | பய | அச்சம்பய | ௨௭௭ | ௪ | கொருள | பொருள |
| ௧௫௨ | ௮ | சற்சரை | சர்ச்சரை | ௨௮௦ | ௨ | காமற் | காமைப் |
| ௧௫௫ | ௪ | கொண்டது. | கொண்ட. | | | | |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| ௨௮௪ | ௭ | கரு | கருங் | ௪௪௫ | ௬ | குழறனும் | குளறனும் |
| ௨௯௫ | ௨௭ | பாட்டு | பாடு | ,, | ௩௨ | தடர்வழி | தடாவழி |
| ௩௦௬ | ௨௩ | பது | பதனால் | ௪௪௭ | ௨௬ | குழ | குள |
| ௩௧௬ | ௧௩ | வறு | யறு | ,, | ௩௦ | குழறு | குளறு |
| ௩௧௭ | ௫ | படாத | பட்ட | ௪௪௮ | ௨௪ | பிறை | பிற |
| ௩௧௯ | ௫ | வென்னை | லென்னை | ௪௪௯ | ௧௫ | வலம்புரி | வலஞ்சுரி |
| ,, | ,, | மறத் | மறைத் | ,, | ௧௯ | குழறும் | குளறும் |
| ,, | ௯ | உவந்த | வும்வந்த | ,, | ௨௪ | கண்முதிர் | கன்முதிர் |
| ௩௨௪ | ௧௪ | ருங் | கருங் | ௪௫௧ | ௧௪ | பிறர் | பிற |
| ௩௨௭ | ௫ | செய்தது | சேய்த்து | ௪௫௩ | ௨௧ | டுத்தன் | டுப்பன் |
| ௩௩௨ | ௩ | தொளா | தோளா | ௪௫௫ | ௧௫ | அறி | அறிவறி |
| ,, | ௨௫ | பம்மிய | பம்பிய | ௪௫௯ | ௮ | றென்று | றன்று |
| ௩௩௯ | ௫ | பதார்த்த | பத | ௪௬௯ | ௧௩ | பாதம்ப | பாதம்பர |
| ௩௪௨ | ௩ | துரீஇ | துடீஇ | ௪௭௫ | ௧ | நன்னீ | நந்நீ |
| ௩௪௫ | ௧௨ | பாடு | படு | ,, | ௧௧ | மகட்கு | மகற்கு |
| ,, | ௧௯ | இறுதி | அறுதி | ,, | ௨௧ | உவந்த | உவந் |
| ,, | ௨௩ | நிலையா | நிலைய | ௪௭௭ | ௧௫ | பகைவர் | பகவர் |
| ௩௪௯ | ௧௩ | நாவாய் | நாவாய்ப் | ௪௮௧ | ௨௧ | ளின்னெ | ளிந்நெ |
| ௩௫௧ | ௩௭ | வாய | வாய் | ௪௮௭ | ௪ | போகின்ற | பேர்கின்ற |
| ௩௫௭ | ௨௫ | தத்து | தது | ,, | ௮ | னாவுலரா | நாவுலரா |
| ,, | ௩௫ | வெல்லா | வெள்ளா | ௫௦௨ | ௨௨ | ரளவில் | சீரளவில் |
| ௩௫௮ | ௧௪ | னோக்கி | னோக்கின் | ௫௦௬ | ௧௫ | கவ்வை | கைவ |
| ௩௫௯ | ௬ | நிலக் | நிலைக் | ௫௨௦ | ௨௨ | விழங்கு | விளங்கு |
| ,, | ௨௮ | வழி நிலை | வழிநிலை | ,, | ,, | பூணணை | பூணனை |
| ௩௬௧ | ௧௩ | தோர்க்கு | தோற்கு | ௫௨௨ | ௩௦ | தன்க | தன்கண்க |
| ௩௬௩ | ௧௮ | ய்த்தோடு | ய்தொடு | ௫௨௪ | ௩௨ | எடுத்து | எருத்து |
| ௩௭௫ | ௨௭ | முதல்வற் | முதல்வர்க் | ௫௩௯ | ௨ | கணைஇக் | கனைஇக் |
| ௨௯௭ | ௭ | தொட்ட ளக | தோட்ட கள | ௫௪௨ | ௧௯ | றொடீச் சேள | றொடிச் சேளய் |
| ௩௯௮ | ௨ | தழானும் | தழாஅனும் | ௫௪௫ | ௧௫ | முல்லைப் | முல்லை |
| ௩௯௯ | ௮ | னூலொத் | னூலொத் | ௫௪௮ | ௧௯ | இகந்து | நிகழ்ந்து |
| ௪௦௦ | ௩௩ | தலைமகன் | தலைமகள் | ௫௪௯ | ௫ | னென்று | நின்று |
| ௪௧௬ | ௮ | விஞய | விஞய் | ,, | ௨௩ | யருவித் | யருகுவித் |
| ௪௨௧ | ௨௮ | வளி | வழி | ௫௫௨ | ௧௨ | தலைவர்க் | தலைவற் |
| ௪௨௫ | ௩௬ | தங்கை | நங்கை | ௫௫௩ | ௧௧ | கணங்களை | கணங்கள் |
| ௪௪௧ | ௩௫ | தென்றோ | தென்னோ | ௫௫௫ | ௧௦ | யேனை | யேனைய |
| | | | | ,, | ௧௧ | யவர்கா | வாகொ |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். | பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| ௫௫௬ | ௧௧ | வெற்றி | வேற்று | ௭௨௦ | ௨௨ | யான்வரு | பினவா |
| ௫௬௮ | ௨௩ | ஓடெரி | ஊடெரி | ௭௨௭ | ௧௬ | வதுவைய் | வதிவயி |
| ௫௮௭ | ௩௭ | வழிப்பட் | வழிபட் | ,, | ௧௭ | வாடையின் | வாடை |
| ௫௯௯ | ௨௧ | றலைவனை | றலைவன் | ,, | ௩௧ | ரிரை | ரிரையுங் |
| ,, | ௨௫ | மார்பும் | மார்பம் | ௭௨௮ | ௨௦ | முற்றுறழ் | முத்துறழ் |
| ௬௧௯ | ௩௩ | துணையா | துணையா | ,, | ௨௮ | சேளர் | சோழர் |
| ௬௨௦ | ௭ | வெவ்வை | விவ்வை | ௭௨௯ | ௩௦ | யறிவ | யறிவு |
| ,, | ௮ | மிவை | மிமை | ௭௩௧ | ௩௨ | டாயச் | டாய்ச் |
| ௬௩௨ | ௨௨ | வேற்று | வேற்றுமை | ௭௪௦ | ௨௧ | பம்மிய | பம்பிய |
| ௬௪௦ | ௧௬ | போன்று அது | போன்றது | ௭௫௬ | ௧ | விண்டி | விண்டி |
| | | | | ௭௫௭ | ௧ | நீவந்து | வந்துநீ |
| ௬௪௨ | ௧௭ | மறு | மானும் | ௭௬௩ | ௬ | தோதி | தோதின |
| ௬௫௨ | ௧௯ | ழுதுஞ்செவ்வியியல்பாய்மலரு மரிவைவத | ௨௩ம்வரியிற்சேர்க்க | ௭௬௬ | ௨௭ | வரி | ரிவ |
| | | | | ௭௬௭ | ௨௭ | வெங்கது | லெங்கது |
| | | | | ,, | ௩௧ | அலைய | அலையணி |
| | | | | ௭௬௮ | ௩௩ | சென்று | சேர்நர் |
| | | | | ௭௬௯ | ௪ | மாநிற | மாவிழி |
| ௬௬௯ | ௫ | திரு | திரி | ௭௭௫ | ௫ | கழந்தை | களந்தை |
| ,, | ௧௭ | நிலத்தி | நிலைத்தி | ௭௭௭ | ௫ | இழுமென | இழுமென் |
| ,, | ௩௨ | திளைப்பா | கிளைப்பா | ௭௭௮ | ௨௧ | திரிந்து | திரிந்தும் |
| ௬௭௧ | ௨௪ | வென்னை | தென்னை | ௭௭௯ | ௧௦ | முரூஉ | மொரூஉ |
| ௬௭௭ | ௨௪ | மரிவரி | மறிவரி | ௭௮௦ | ௨௧ | மொத்து | நேர்ந்து |
| ௬௯௬ | ௧௫ | திரிபாதி | திரிபாகி | ௭௮௧ | ௮ | மேவர | மேவி |
| ,, | ௧௮ | ரோட்ட | ரோட்டக | ௭௯௭ | ௧௭ | ஒகரம் | ஒகர |
| ௬௯௭ | ௩ | விலாயி | வலாயி | ௮௦௪ | ௨௬ | போகு | போகும் |
| ௭௦௦ | ௯ | நாணடி | ஞணடி | ௮௧௦ | ௨௫ | வெண்பாவால் | |
| ,, | ௨௦ | ரகர | ரகரஆகார | | | | |
| ௭௦௭ | ௪ | காவா | காவாநீர்வண்ண | ௮௧௧ | ௧௯ | காளிக்கதி | காளிக்கிதி |
| | | | | ௮௧௩ | ௨௪ | விளையு | விழையு |
| ,, | ௫ | வத்தி | ணத்தி | ௮௩௨ | ௫ | தலையின் | தலையன் |
| ௭௧௧ | ௩௪ | ஞால | சால | ௮௪௫ | ௨௩ | நுட்பத்தி | தட்பத்தி |
| ,, | ௩௫ | ஞால | சால் | | | | |

